# ஐந்தாம் உலகத்
# தமிழ் மாநாடு - கருத்தரங்கு
# ஆய்வுக் கட்டுரைகள்

மதுரை — தமிழ்நாடு — இந்தியா
சனவரி — 1981

தொகுதி — 3





பதிப்பாசிரியர்
மு. அருணாசலம்



உலகத் தமிழாராய்ச்சி மன்றம்
சென்னை




தமிழக அரசின் நிதி உதவியுடன்
உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தாரால்
வெளியிடப்பட்டது

முதற் பதிப்பு
நவம்பர் 1981





அச்சிட்டோர் : கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ் பிரஸ்
திருவான்மியூர், சென்னை-600 041

# முன்னுரை

இந்த ஆண்டின் தொடக்கத்தில் சனவரி 4 முதல் 10 வரை மதுரை மாநகரில் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு நடைபெற்றது. இன்றைய தமிழக முதல்வர் மாண்புமிகு **உயர்திரு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்** விரும்பியதற்கிணங்க 1980இல் மேற்காப்பிரிக்க நாடான செனகாலில் நடைபெற வேண்டிய இம்மாநாடு 1981இல் மதுரையில் நடைபெற்றது. இம் மாநாட்டைச் செனகாலில் நடத்தவிருந்த அந்நாட்டு முன்னாள் குடியரசுத்தலைவர் டாக்டர் லியொபோல்டு செங்கார் அவர்கள் நம் தமிழக முதல்வர் அவர்களின் விருப்பத்திற்கு இணங்கியதன் விளைவாக இம்மாநாடு மதுரையில் நடைபெற்றது.

இம் மாநாட்டை நடத்தத் திட்டமிட்ட நம் தமிழக முதல்வர் அவர்கள் இதனை நடத்தித்தரும் பொறுப்பை இதற்கு முன்பு 1965 மலேசியாவிலும், 1968 சென்னையிலும், 1971 பாரீசிலும் முறையே முதல் மூன்று உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்குகளைச் சிறப்பாக நடத்திமுடித்த காலஞ்சென்ற உயர்திரு. ஏ. சுப்பையா அவர்களின் தலைமையின் கீழமைந்த உலகத் தமிழாராய்ச்சி மன்றத்திடம் ஒப்படைத்தார். திரு. ஏ. சுப்பையா அவர்களும் 85 வயதான நிலையிலும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு மாநாட்டைச் சிறப்புற நடத்தினர்.

இம் மாநாட்டில் 40 நாடுகளிலிருந்து 800 பேராளர்கள் கலந்து கொண்டனர். 280 ஆய்வுக்கட்டுரைகள் படிக்கப்பெற்றன. அவற்றைப் பதிப்பிக்கும் பொறுப்பு இலக்கிய வரலாற்றுப் பேரறிஞர் திரு. மு. அருணசலம் அவர்களிடம் ஒப்படைக்கப் பெற்றது. அவர்களும் அதனைச் சிறப்பாகச் செய்து மூன்று தொகுதிகளை உருவாக்கித் தந்துள்ளனர். முதலிரண்டு தொகுதிகள் ஆங்கிலக் கட்டுரைகளடங்கியவை. இம் மூன்றும் தொகுதியில் கருத்தரங்கில் படிக்கப் பெற்ற 67 தமிழ்க் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. பின்னிரண்டு தொகுதிகளைப் பதிப்பிப்பதில் சிறந்த நூலாசிரியரான திரு. சோமலெ அவர்கள் துணைநின்றார்கள். தொகுதிகள் முழுவதையும் பிழைதிருத்தியதில் உதவியவர் திரு. ஜே. மோகன் ஆவார்.

மூவாயிரம் பக்கங்கள் கொண்ட மூன்று தொகுதிகளை ஓராண்டுக் காலத்திற்குள் அழகாக அச்சிட்டுக் கொடுத்தவர்கள் சென்னை கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ் பிரஸ் நிறுவனத்தார்.

மாநாடு-கருத்தரங்கு செம்மையாக நடைபெறப் பெருந்துணையாக இருந்தது தமிழக அரசு. தமிழக முதல்வர் மாண்புமிகு **உயர்திரு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்**, மாண்புமிகு நாவலர் டாக்டர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், மாண்புமிகு இராம. வீரப்பன், மாண்புமிகு செ. அரங்கநாயகம் உள்ளிட்ட

தமிழக அமைச்சர் பெருமக்கள், அரசு முன்னாள் தலைமைச்செயலர் திரு. வி. கார்த்தி கேயன் ஐ.ஏ.எஸ்., இந்நாள் அரசுத்தலைமைச் செயலர் திரு. கா. திரவியம் ஐ.ஏ.எஸ்., கல்வித்துறைச் செயலர் திரு. சி. இராமதாஸ் ஐ. ஏ. எஸ்., நிதித்துறைச் செயலர் திரு. வெங்கடேசன் ஐ. ஏ. எஸ். உள்ளிட்ட பல்வேறு அரசுத்துறை அதிகாரிகள், உயர்திரு. ஜஸ்டிஸ் டாக்டர் எஸ். மகாராசன் அவர்கள் தலைமையில் அமைந்த கருத் தரங்கச் செயற்குழு உறுப்பினர்கள், மாநாட்டுச் சிறப்பதிகாரி திரு. சிவகுருநாதன் தலைமையிலமைந்த அலுவலர்கள், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், அதன் துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம், பதிவாளராயிருந்த டாக்டர் ஞானம் தலைமையில் அமைந்த பேராசிரியர்கள், பல்கலைக்கழக அலுவலர், திரு. பி. முருகன், மதுரை மாவட்ட ஆட்சித்தலைவராக இருந்த திரு. பூரணலிங்கம் ஐ.ஏ.எஸ். முதலான மாவட்ட அரசு அதிகாரிகள், கருத்தரங்க அறைக்கூட்டங்களை நடத்திய தலைமை இணைப்பாளர் டாக்டர் எம். இஸ்ரேல் முதலான இணைப்பாளர்கள், கருத்தரங்க அலுவலகத்தைச் சார்ந்த திரு. வி. சின்னசாமி, திரு. என். வி. வேணு கோபால் முதலியோர், மதுரையில் கருத்தரங்க வரவேற்பு அலுவலகத்தில் தொண் டாற்றிய திரு. எம். பாலசுப்பிரமணியம், திரு. சிவ. சிவராமலிங்கம் முதலிய அன்பர்கள் முதலானோரின் கூட்டுமுயற்சியின் பயன்தான் ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு கருத்தரங்கு ஆகும்.

**இரா. முத்துக்குமாரசாமி**
செயலாளர்-பொருளாளர்

சென்னை
*14—11—1981*

S7/1

# பொருளடக்கம்

57/1

57/1

# வழக்கும் செய்யுளும்

டாக்டர் **க. ஆறுமுகம்**
தமிழ்ப் பேராசிரியர், தில்லிப் பல்கலைக் கழகம்

**தொல்காப்பியரின் ஆய்வு மூலங்கள்**

தமிழ் மொழியியல்பை முறைப்படி ஆய்ந்த முதல் அறிஞர் தொல்காப்பியர் பேச்சு மொழியை வழக்கு எனவும், பாட்டு மொழியைச் செய்யுள் எனவும் குறிப்பிடுவர். தமிழ் மொழியின் இவ்விரு நிலைகளையே அவர் தமது எழுத்துச் சொற்பொருளாய்வுக்கு மூலமாகக் கொண்டார்.

வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி

என்பார் பனம்பாரனார்.

**வழக்கு ;—உயர்ந்தோர் பேசும் மொழி**

மக்களிலும் உயர்ந்தோர் வழங்கும் பேச்சு மொழியையே ''வழக்கு'' எனத் தொல்காப்பியர் கொண்டமை அறிகிறோம்.

வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான[1]

தாழ்ந்தோர் அல்லது இழிந்தோர் வழங்கும் மொழி வழக்குகளை இழிவழக்கென்பர் இலக்கண அறிஞர். தொல்காப்பியர் கூறும் இலக்கணம் உயர்ந்தோர் பேசும் உயர் வழக்கிற்கேயன்றி இழிந்தோர் பேசும் இழிவழக்கிற் கன்று என்பது தொல்காப்பிய உரையாசிரியர்களின் கருத்தாகும். ஈண்டு உயர்ந்தோர் என்பன மொழியறிவில் உயர்ந்தோரையும் அங்ஙனம் அல்லாதோரையும் சுட்டுவனவாகும். இவ்வாறே உயர் வழக்கு என்பனவும் அவர் வழங்கும் மொழியின் செம்மையையும் அஃதன்மையையும் குறிப்பன என உணரலாம். வழுவின்றிச் சிதைவின்றித் திரிபின்றி மொழியை வழங்குவோரையே உயர்ந்தோர் எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார் என்பதும் அறியத்தக்கது.

**இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ற வழக்கு**

வழக்கு என்பது இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப வழங்கப் பெறும் மொழியியக்கமாகும். ஓரிடத்தில் வழங்கும் சொல் பிறிதோரிடத்து வழங்காமையும், ஒரு காலத்து வழங்கும் மொழி பிறிதொரு காலத்து வழங்காமையும் காண்கிறோம். எழுத்தும் சொல்லும் கூறும் பொருளும் இவ்வாறே இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப வழங்குவதேயாகும். இவ்வுண்மைகளைத் தொல்காப்பிய உரையில் பேராசிரியர் வற்புறுத்தல் காணலாம்.[2] சேரி மொழி எனத் தொல்

காப்பியர் குறிப்பிடுவது இங்ஙனம் இடத்திற்கு இடம் மாறுபடும் மொழிவழக்கையே என்று தோன்றுகிறது. சேரி மொழி என்பது பாடி மாற்றங்கள் எனப் பேராசிரியர் உரைப்பதும் இக்கருத்தை வலியுறுத்தும். பண்டைக் காலத்தில் ஒன்றாகச் சேர்ந்திருந்த ஒரு குலத்தாரின் வீட்டுத் தொகுதிக்கும் சேரி என்று பெயர். சேரி, பாடி என்பன ஒருபொருட் பன்மொழிகள். பார்ப்பனச் சேரி, ஆயர்பாடி என்னும் வழக்குகளைக் காண்க.

தமிழ்நாட்டின் பல இடத்தும் இளம்பருவத்து மகளைப் ''பெண்மகள்'' என்பதே மரபாயினும், கொற்கை சூழ்ந்த மாறோக்க நாட்டினர் ''பெண்மகன்'' என வழங்கிய அரிய வழக்கையும் தொல்காப்பியர் எடுத்துக்காட்டி இலக்கணம் வகுக்கிறார்.[3] இங்ஙனமே மாறுபட்ட சில சொல்வழக்குகளை எடுத்துக்காட்டி அவை வழங்கும் இடம் அறிக எனவும் அவர் கூறுவார். ஊன் குறை என்பதே பெருவழக்காயினும் ஊனக்குறை என வழங்கும் இடமும் உண்டென்பார் அவர்.[4] இத்தகைய சேரிமொழிகள் அல்லது பாடிமாற்றங்கள் பலவற்றைத் தொல் காப்பியர் தமது நூலில் எடுத்துக்காட்டுவார்.[5] தமிழ் நாட்டில் பல்வேறு இடத்துப் பல்வேறினத்தார் பேசிய மொழி வழக்குகளையெல்லாம் தொல்காப்பியர் தமது இலக்கண நூலுக்குரிய ஆய்வு மூலங்களாகக் கொண்டமை இவற்றால் நன்கு அறியலாம்.

**உரைநடை—பிறிதொரு மொழி நிலை**

செய்யுள் நடையைக் காணுமுன் பேச்சு நடைக்கும், பாட்டு நடைக்கும் இடையே எழுந்த மற்றொரு நடையும் காணலாம். அதுதான் உரைநடை என்பது. இவ்விடைப்பட்ட நடையாகிய உரைநடையும் தொல்காப்பியர் காலத்திலேயே இருந்தமை அறிகிறோம். பேச்சு எனினும் உரை எனினும் ஒக்கும். எனவே பேச்சு நடையும் உரைநடையும் ஒன்றே எனலாம். ஒலிவடிவத்தில் அமைந்த பேச்சு நடை அல்லது உரைநடை வரிவடிவம் பெற்று எழுத்துநடை யாகும் பொழுதும் உரைநடை என்னும் பெயராலேயே வழங்கியது போலும். ஒரு காலத்தில் உரை என்பது பேச்சையே குறித்திருக்கும். பின்னர் அச்சொல் பேச்சுமொழி எழுத்துமொழி இரண்டையும் குறித்தது போலும். இறுதியில் அச்சொல் எழுத்துமொழியையே குறிப்ப தாயிற்று. இன்று உரைநடை (உரைப்பது அல்லது பேசுவது போன்ற நடை) என்பது பேச்சு மொழியின் எழுத்து வடிவத்தையே குறிப்பதை அனைவரும் அறிவர்.

**உரை என்பது பேச்சு நடையும் எழுத்து நடையும்**

தொல்காப்பியர் காலத்திலேயே உரை என்பது பேச்சுமொழி எழுத்து மொழி இரண்டையும் குறித்தமை அறிகிறோம்.

''உரையிடத் தியலும் உடனிலை யறிதல்''

என்னும் நூற்பாவில் உரை என்பதற்கு வழக்கு என்றே உரை எழுதுகிறார் சேனாவரையர்.[6] வழக்கு என்பது ஈண்டுப் பேச்சு வழக்கே யாகும்.

''உரைநடை வகையே நான்கென மொழிப''

என்னும் தொல்காப்பிய நூற்பாப் பகுதியில் உரை என்பது எழுத்துநடையையே

குறிப்பதாகும். எனவே தொல்காப்பியத்துள் உரை என்பது பேச்சுமொழி எழுத்துமொழி இரண்டையும் குறித்தல் காண்கிறோம். பெரும்பாலும் பேசுவது போலவே எழுதின ராதலின் பேச்சும் எழுத்தும் உரை என்னும் சொல்லால் வழங்கப்பெற்றன போலும்.

### உரை என்பது செய்யுள் விளக்கம்

உரை என்பது பேச்சு, எழுத்து இரண்டையும் குறித்ததுடன் பிறிதொரு பேச்சுமொழியில் விளக்கம் கூறுதலும் எழுதுதலும் ஆகிய மொழிநடையும் உரை என வழங்கியது.

சூத்தி ரப்பொரு ளன்றியும் யாப்புற
வின்றி யமையா தியைபவை யெல்லாம்
ஒன்ற உரைப்பது உரையெனப் படுமே.[7]

எனவே உரை என்பது பேச்சு, எழுத்து, சூத்திரம் அல்லது செய்யுட்குக் கூறும் விளக்கம் என்னும் மூன்று பொருளையும் குறித்து வந்தமை தெளிவாகும். பேச்சு மொழி, எழுத்துமொழி, பாட்டுமொழி என மொழிநிலைகள் இங்ஙனம் மூன்றாயின.

### உரை நடை வழக்கா செய்யுளா ?

எழுத்துமொழியாகிய உரைநடை பேச்சுநடையாகிய வழக்கிற்குரியதா, பாட்டு நடையாகிய செய்யுட்குரியதா என்பது ஆய்ந்து காண்டற்குரியது. உரை நடை பேச்சுநடையினின்றும் அதாவது ஒலிவடிவினின்றும் தோன்றியது. பேச்சு நடை மாறாமல் எழுத்துநடையில் வரிவடிவில் அமைவது. ஆதலின் உரைநடை பேச்சுநடையாகிய வழக்கையே சார்ந்தது எனலாம். எனினும் உரைநடை நாளா வட்டத்தில் வளர்ச்சி பெற்றுச் செய்யுள் நடைக்குரிய எதுகை மோனை முதலிய ஒலிநயங்களையும், உவமை முதலான கற்பனை நலங்களையும் பெறத் தொடங்கியது. இந்நிலையில் அது செய்யுளைச் சார்ந்தது எனக் கூறவும் தோன்றுகிறது. எனவே வழக்கு செய்யுள் இரண்டற்கும் இடைப்பட்ட உரைநடை அவ்விரண்டையும் சார்ந்து நடுநிலை எய்தி நிற்கிறது. உரை என்னும் சொல்லை வழக்கு என்னும் பொருளில் அவர் ஆளுவதும், உரைநடையின் வகைகளைச் செய்யுளியலில் அவர் கூறுவதும் உரைநடையின் இவ்விரு வகைச் சார்பையும் முறையே காட்டுவனவென உணரலாம்.

### செய்யுள் : வழக்கை ஒட்டியதே செய்யுள்

பேச்சு மொழியே பாட்டுமொழிக்கும் உரிய மொழியாதலின், பேச்சி னின்றும் பாட்டு பெரிதும் வேறுபட்டு விலகிச் செல்லாது, செல்லக் கூடாது என்பது தொல்காப்பியர் கருத்து. இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப வழங்கும் மொழிவழக்கை ஒட்டியே உயர்ந்தோர் மொழிநடை அமையும். ஆதலின் அவ் வழக்கினைப் பின்பற்றியே சான்றோர்தம் செய்யுளும் அமைதல் வேண்டும். வழக்கழிய வருவன செய்யுட்கண் வாரா. தொல்காப்பியர்தம் சொல்லிலக்கண மும் பொருளிலக்கணமும் வழக்கொடு புணர்ந்தனவே. வழக்கொடு பொருந் தாதன செய்யுட்கண் வரப்பெறா.[8] எனவே பேச்சுமொழியாகிய வழக்கிலக்கணமே

பாட்டுமொழியாகிய செய்யுட்கும் உரிய இலக்கணமாதல் தெளிவு. இக்கருத்துப் பற்றியே தொல்காப்பிய இயல்கள் இருபத்தேழில் இருபத்தைந்தியல்கள் செய் யுட்கும் உரிய வழக்கிலக்கணமே கூறுவன எனவும், செய்யுளியல் ஒன்று மட்டும் செய்யுளிலக்கணம் கூறுவதெனவும், இறுதி மரபியல் இரண்டற்கும் பொதுவாகிய மரபிலக்கணம் கூறுவதெனவும் பேராசிரியர் கருதுவார்.[9]

**உரைநடைச் செய்யுள்**

வழக்கின்கண் காணும் மொழிநடைகளைக் கொண்டே செய்யுள் அமைதல் காண்கிறோம். பேச்சு வழக்கில் உள்ள உரைநடை எழுத்து வழக்காகிப் பின் அதுவே செய்யுளாகி வழங்குதலை முன்னரும் கூறினோம். பாட்டிடை வைத்த குறிப்பு முதலாக உரைநடை வகை நான்கெனத் தொல்காப்பியர் செய்யுளியலுட் கூறுவார். இது வழக்கிற் குரிய உரைநடை செய்யுட்குரியதாயினமையை அறிவிக் கும் எனலாம். இங்ஙனமே முதுமொழி, மறைமொழி, குறிப்பு மொழி, சின்மென் மொழி, இழுமென் மொழி, பரந்த மொழி, சேரி மொழி, ஓங்கிய மொழி, முதலான வழக்கிற்குரிய மொழிநடைகள் செய்யுள் நடையில் ஒன்றிச் செய்யு ளான்மை அறிகிறோம்.[10]

**வழக்கினின்றும் செய்யுள் வேறுபடல்**

பாட்டு மொழியாகிய செய்யுள் பேச்சு மொழியாகிய வழக்கையே பின் பற்றிச் செல்லும் பண்புடையது. ஆயினும் அஃது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலிய ஒலிநயக் கட்டுப்பாடுகள் பலவற்றை உடையது. அக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கியே நடப்பது. அக்கட்டுப்பாடுகளுக்கு இழுக்கு நேராமல் காக்கும் கடப்பாடுடையது. இழுக்கு நேரும் எனத் தோன்றின், தான் பின்பற்ற வேண்டிய வழக்கு நெறியைக் கைவிட்டு அதனின்றும் வேறுபட்டு விலகி நிற்கும். அங்ஙனம் வேறுபட்டேனும் ஒலிநயக் கட்டுப்பாடுகளைப் பாது காத்து நிற்கும். இவ்வடிப்படையிலேயே எழுத்தும் சொல்லும் தொல்காப்பி யரால் ஆராயப்பெற்றுள்ளன. ஆய்ந்து அவற்றுள் வழக்கும் செய்யுளும் வேறு படும் இடங்கள் சுட்டப்பெற்றுள்ளன.

வழக்கிற்கே யுரிய மொழியியல்புகள் சில உள. செய்யுட்கே உரியனவும் சில உள. இவை தவிர ஏனைய மொழியியல்புகள் வழக்கு செய்யுள் இரண்டற்கும் பொதுவாக உள்ளவை. பொதுவியல்புகளே மிகுதி. வழக்கெனவோ, செய்யு ளெனவோ தொல்காப்பியர் சுட்டாது செல்லுமிடங்கள் யாவும் இரண்டற்கும் உரிய பொதுவியல்புகள் எனலாம். சுட்டிச் செல்வன சிறப்பியல்புகளாகும்.

**வழக்கிலும் செய்யுளிலும் ஒலியியல்புகள்**

சொற்களில் உள்ள எழுத்தொலிகள் வழக்கிலும் செய்யுளிலும் பெறும் திரிபுகளைத் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் குறிப்பிடுகின்றார். மக்களின் பேச்சுக்கு ஏற்பவும், புலவர்களின் செய்யுட்கு ஏற்பவும் எழுத்தொலிகள் நீண்டும் குறுகியும் மிக்கும் உறழ்ந்தும் ஒலித்தல் உண்டு.

**வழக்கில் காணும் ஒலி நீட்டம்**

ஏதாவதொரு நினைவில் ஊன்றியிருக்கும் ஒருவரின் நிலைமை மாற்றி நம் பக்கமாகத் திருப்புவதற்குப் பழங்காலப் பேச்சு வழக்கில் ''அம்மா'' என்னும்

அசைச்சொல்லைப் பயன்படுத்தினர். பேச்சு அல்லது உரையிடத்து வழங்கும் இவ்வசைச்சொல்லை ''உரையசை'' என்பர் இலக்கண அறிஞர். அம்ம சாத்தா, அம்ம வாழி தோழி என வரும். இவ்வுரையசை சில இடத்தில் அம்மா சாத்தா என நீண்டு ஒலித்தலும் உண்டு என்பர் தொல்காப்பியர்.[11]

இங்ஙனமே மூன்று என்னும் சொல் பிற பெயர்களுடன் சேரும்பொழுது முவ்வகல், முவ்வழக்கு என முதல் எழுத்துக் குறுகுதலே பொதுவான பழைய இலக்கண மரபு. ஆயினும் உழக்கு என்னும் சொல்லுடன் வரும்பொழுது மட்டும் அக்குறுக்கம் மூவுழக்கு என நீண்டு முடிதலும் வழக்கு மொழியில் காணும் இயல்பு என்பார் தொல்காப்பியர்.[12]

சேய்மையில் உள்ள அஃறிணை அல்லது உயர்திணைப் பொருளை அழைக்குங்கால் அப்பொருள் நிற்கும் சேய்மையின் அளவுக்கேற்ப அப்பொருள் களைக் குறிக்கும் சொற்களின் ஈற்றொலியை நீட்டி ஒலித்தல் பேச்சு வழக்கில் காணும் மரபாகும். நம்பீஇஇ, சாத்தாஅஅஅ, அம்மாஅஅஅ என வரும். இவை எழுத்தொலிகளின் நீட்சியாயினும் அந்நீட்டம் விளிப்பொருள் தந்து சொல் நிலை எய்துதலின் இதனைத் தொல்காப்பியர் சொல்லதிகாரத்துள் கூறினார் போலும். இவ்வொலி நீட்டங்கள் பெரும்பான்மையும் வழக்கிற்கு உரியவாய்ச் சிறுபான்மை செய்யுட்கண் வரும் ஆதலின் இவற்றை வழக்கிலக்கணமாகவே அவர் கூறுகிறார் எனலாம்.

**செய்யுளில் காணும் ஒலி நீட்டம்**

செய்யுட்கே உரிய சில ஒலி நீட்டங்களும் காண்கிறோம். வழக்கினின்றும் செய்யுள் வேறுபடுதற்கு அதற்குரிய இசையமைப்பே முதற் காரணமாகும். அவ் விசை குறையுமிடத்து உயிரும் மெய்யும் ஆண்டு வேண்டுமளவு நீண்டு ஒலித்து அவ்விசைக் குறைவை நிறைவு செய்யும்.[13] இதனை அளபெடை என்பர் இலக்கண அறிஞர். அ இ உ ஆகிய சுட்டெழுத்துக்களும் ஆயிடை, ஆயிரு திணை என நீண்டொலித்தலும் செய்யுட்குரிய இசையை நிறைத்து இன்பம் தருதற்பொருட்டே எனலாம். பல சில என்னும் சொற்களின் அகர ஈறும் பலாஅம் சிலாஅம் எனச் செய்யுளில் நீண்டொலித்து இசையின்பம் தருதல் அறியத்தக்கது.[14] இவையனைத்தும் வழக்கு மொழியிலன்றிச் செய்யுள் மொழி யிலேயே தொல்காப்பியர் கண்டு கூறும் ஒலி நீட்சிகள் ஆகும்.

**ஒலிக் குறுக்கம்**

எழுத்தொலிகளின் குறுக்கமும் வழக்கிலும் செய்யுளிலும் வருவன. தம் காலத் தமிழ் மொழியின் இவ்விருவகை நிலைகளிலும் வழங்கிய ஒலிக்குறுக்கங் களை ஆய்ந்து குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர்

**வழக்கில் காணும் ஒலிக்குறுக்கங்கள்**

வழக்கில் காணும் ஒலிக்குறுக்கங்களை மருவின் பாத்தி – மருமுடிபின் பகுதிகள் என்பார் தொல்காப்பியர். சொற்களின் இயல்பான ஒலி வழக்கின்கண் நாளடைவில் குறுகி ஒலிக்கும் இயல்பே மரூஉ என்பது. இதனை இயல்பு வழக்கு என்பர் பிற்கால இலக்கண நூலார்.

| இயல்பான தொடர் | மரூஉத்தொடர் |
|---|---|
| 1. ஒல்லென ஒலித்தது | ஒல்லொலித்தது |
| 2. கரியன் சாத்தன் | கருஞ்சாத்தன் |
| 3. கொன்ற யானை | கொல்யானை |
| 4. ஒன்று ஒன்று | ஒரொன்று[15] |

இவை யனைத்தும் பேச்சு மொழியாகிய வழக்கில் குறைந்து வரும் மரூஉ மொழிகள். இங்ஙனம் குறுகுதற்கு மனிதனின் முயற்சிச் சுருக்கமே காரணம் என்பர் மொழி நூலார். இவற்றுள் கருஞ்சாத்தன், கொல்யானை என்பவற்றை முறையே பண்புத்தொகை, வினைத்தொகை எனவும் வழங்குவர். குறுக்கம் தொகை என்பன ஒரு பொருட் பன்மொழிகள். இங்ஙனமே உகரக் குறுக்கம், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம் முதலியனவும் வழக்கின்கண் குறுகி ஒலித்தவை செய்யுட்கண்ணும் அவ்வாறே ஒலிப்பன ஆயின எனலாம்.

**செய்யுட்குரிய ஒலிக் குறுக்கங்கள்**

செய்யுட்கே உரியது மகர ஒலியின் குறுக்கம். போலும் என்னும் வழக்குச் சொல் செய்யுளில் சில இடத்துப் ''போன்ம்'' என்றாகும். செய்யுட்குரிய ஓசை வரையறையிற் பட்டு அடங்குதற் பொருட்டே இக்குறுக்கம் நிகழ்ந்த தாதல் வேண்டும். ''லு'' என்னும் உயிர்மெய் லகரமாகக் குறுகி னகரமாகத் திரிந்ததுடன் மகரம் ஆண்டு முழு ஒலியும் பெற இயலாது தன் மாத்திரை யளவினும் குறுகிக் கால் மாத்திரை பெறுவதாயிற்று.[16]

**வழக்கில் பிற ஒலி மிகல்**

சில சொல் அல்லது சொற்றொடர்களிடையே அவற்றின் வேறான ஓர் ஒலி மிகுதலும் வழக்கின்கண் காணும் ஒலியியல்பாகும். ஓர் ஒலியுடன் பிற ஒலி ஒட்டுதற்கு வரும் இவ்வழக்கினை ''ஒட்டுதற்கு ஒழுகிய வழக்கு'' என்பார் தொல்காப்பியர்.[17] பலாவை இன் என்னும் பிற ஒலியை இடையில் சேர்த்துப் பலாவினை எனவும், ஊன் குறை என்னும் தொடர் மொழியின் இடையே அக்கு ஒலி சேர்த்து ஊனக்குறை எனவும், முன்னில் என வருதற்குரிய தொடர் மொழியின் இடையே றகர ஒலி சேர்த்து முன்றில் எனவும் ஒலிக்கும் முறைகளைத் தொல்காப்பியர் தம் காலப் பேச்சு வழக்கில் கண்டு கூறுகிறார்.[18]

**செய்யுட்கே உரிய ஒலி மிகுதி**

செய்யுட்கே உரிய ஒலி மிகுதியும் உண்டு. விண் கொண்டான் என்னும் தொடரின் இடையே அத்து என்னும் பிற ஒலி சேர்த்து விண்ணத்துக் கொண்டான் என ஒலித்தலும், வில்லும் திங்களும், கிழவனும் போன்ம் என உம் சேர்த்தும், கல்கெழு கானவர், வளங்கெழு திருநகர் எனக்கெழு சேர்த்தும் ஒலித்தலும் தொல்காப்பியர் தம் காலச் செய்யுளில் கண்டு கூறுதல் அறியத்தக்கது.[19]

இன்னும் இத்தகைய ஒலித்திரிபுகள் வழக்கிலும் செய்யுளிலும் பலப்பல வற்றைக் கண்டு தொல்காப்பியர் தமது நூலில் அவற்றை எடுத்துக்காட்டுதல் ஆராய்தற்குரியதாகும்.[20]

**சொற்கள் தொடர்களில் இயங்கும் நெறி**

எழுத்துக்கள் சொற்களின் இடையே நின்று ஒலிக்கும் நெறிகளில் வழக்கும் செய்யுளும் சிற்சில இடங்களில் வேறுபடுமாறு கண்டோம். அவ்வாறே சொற்களும் தொடர்களின் இடையே நின்று இயங்கும் நெறிகளிலும் வழக்கும் செய்யுளும் வேறுபடு மாற்றைத் தொல்காப்பியர் தம்கால வழக்கிலும் செய்யுளிலும் கண்டு கூறுதல் ஆராய்ந்து அறிதற்குரியது.

**ஒலிநயக் கட்டுப்பாடு**

அசை, சீர், தளை, தொடை, அடி முதலான ஒலிநயக் கட்டுப்பாடுகளை உடையது செய்யுள். அக்கட்டுப்பாடு வழுவுமிடத்து வழக்கு நெறியை ஒரு சிறிது மாற்றி அமைத்தேனும் அவை வழுவாமல் பார்த்துக்கொள்வர் செய்யுள் செய்யும் சான்றோர். இத்தகைய இடங்களில் வழக்கு நெறிக்கு மாறாகச் சொல்லின் வடிவத்தை மாற்றியும், சொற்கள் தொடரும் முறையைத் திரித்தும் செய்யுட்குரிய ஒலிநயத்தைப் பாதுகாப்பர் கவிஞர்.

தண்டையின் இனக்கிளி கடிவோள்
பண்டையள் அல்லள் மானோக் கினளே.

என்னும் பாடற்பகுதியில் பண்டை என்னும் சொல்லின் எதுகை ஒலிநயத்திற்கு ஏற்ப, தட்டை என்னும் சொல்லின் வடிவத்தைத் தண்டை என மாற்றி அமைத்துக் கவிதையின் ஓசையை இனிமையாக்குகின்றார் கவிஞர். இதனை மெலிக்கும்வழி மெலித்தல் என்னும் செய்யுள் விகாரம் என்பர் இலக்கண அறிஞர். வலிக்கும் வழி வலித்தல் முதலாக வரும் அறுவகைச் செய்யுள் விகாரமும், முதற்குறை முதலான மூவகைச் செய்யுள் விகாரமும் செய்யுட்குரிய ஓசை நயத்தைப் பாது காக்கும் பொருட்டு எழுந்தனவேயாகும்.[21]

கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா.

வழக்கில் அடை சினை முதல் என்ற மூன்றும் மயங்காமல் செஞ்செவிச் சேவல் என வரும் தொடர், கவிசெந்தாழி என்னும் தொடரின் எதுகைக்கு ஏற்பச் செவிசெஞ்சேவல் எனச் சொற்றொடர் முறை மாறி நின்று ஒலிநயத்தைப் பாதுகாத்தவாறு காண்க.

**நாகரிக மேம்பாடு**

சில பொருள்களை அல்லது செயல்களை ஒளிவு மறைவின்றி அவற்றிற்கு உரிய சொல்லாலேயே வழங்குவர் பொது மக்கள். ஆயின் அறிஞர் சிலர் அப் பொருள்களை அச்சொற்களால் வழங்குதல் நாகரிகமன்று எனக்கருதி அப்பொருள் பயக்கும் தகுதிவாய்ந்த பிறசொற்களால் வழங்குவர். அறிஞர்பால் காணும் இம்மொழிநிலையைத் தகுதி வழக்கென்பர் இலக்கண அறிஞர். வழக்கும் செய்யுளும் என்னும் இருவகை மொழிநிலைகள் சொல்லிலக்கணத்துள் வழக்கும் தகுதியும் ஆயின. தகுதி என்னும் இது செய்யுள் போன்ற ஒரு வகை மொழி நிலையே யாகும். செத்தார், சுடுகாடு, ஓலை எனப் பொதுமக்கள் வழங்கும் வழக்குச் சொற்களையே தாமும் வழங்கத் தயங்கி, துஞ்சினார், நன்காடு, திருமுகம் என அறிஞர் சிலர் வழங்குதல் நாகரிகம் பற்றிய வேறுபாடு எனலாம்.

**கவிதையின்பம்**

வழக்கு மொழியினும் கவிதை மொழி கற்போர்க்கு இன்பம் பயப்பது. வழக்கில் காணும் மொழியமைப்பினின்றும் செய்யுள் வேறுபட்டியங்குவதற்கு இதுவும் ஒரு காரணமாகும். அடைமொழி தொடரும் நெறியில் வழக்கும் செய்யுளும் வேறுபடுமாற்றைத் தொல்காப்பியர் தம்கால மொழிநிலைகளை ஆய்ந்து கூறுகிறார். ஒரு பொருளை அதன் இனத்தினின்றும் வேறுபடுத்திக் கூறுதற்பொருட்டு அடைமொழி சேர்த்துக் கூறுதலே வழக்கில் காணும் மொழி அமைப்பாகும். வெண்டாமரையின் வேறுபடுத்திச் செம்மை அடை கொடுத்துச் செந்தாமரை என்றல் வழக்கு மொழி. வேறுபடுத்தற்கு இனமில்லாத ஞாயிற்றை அதற்கே உரிய செம்மையை அடைமொழியாக்கிச் செஞ்ஞாயிறு என்றல் கவிதை யின்பம் பயக்கும் செய்யுள் மொழியாகும்.[22]

**எதிர்பார்ப்பு நிலை**

ஒன்றைத் தொடங்கி, அதுபற்றித் தெரிந்து கொள்ளப் பிறர் துடிக்கும் செய்தியை உடனே கூறாமல் மறைத்து அவர்தம் ஆவலைப் பெருக்கி அச் செய்தியை எப்பொழுது கூறுவார் என எதிர்பார்க்க வைப்பதும் கவிதையின் இன்பத்துள் ஒன்றாகும். செய்தவனைக் கூறாமல் அவன் செய்த செயலை முற் கூறுதலும், காரணத்தை முற்கூறாமல் பிற்கூறுதலும் வழக்கு நெறிக்கு மாறா யினும் கற்போர்தம் ஆவலைத் தூண்டும் கவிதைக் கலையாகும். அவனணங்கு நோய் செய்தான் எனச் சுட்டுப்பெயரை முற்கூறுதல் வழக்கிற்குரியதன்று செய்யுட்கே உரிய மொழிநிலையாகும்.[23] ஒருவர் எதிர்பார்ப்பதை உடனே கூறுதற்பொருட்டு வழக்கில் காணும் எழுவாய் பயனிலை செயப்படு பொருள் முறையே வரும் இலக்கண நெறியை மாற்றிக் கூறுதலும் செய்யுளில் காணலாம். சீதையைக் கண்டுவந்தானா என்பதைத் தெரிந்துகொள்ளத் துடித்துக்கொண்டி ருக்கும் இராமனிடம், ''கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்'' என அனுமன் கூறுவது காண்க. கற்பினுக் கணியைக் கண்களால் கண்டனென் என முறையே வரவேண்டிய சொற்கள் கவிதையில் மாறி நின்று கற்போர்க்கு இன்பம் பயத்தலும் கருத்துக்கு வலியூட்டுதலும் அறியத்தக்கது.

**பொருளிலக்கண மரபு**

தொல்காப்பியரின் பொருளிலக்கணம் தனிச் சிறப்புடையது. அவர்தம் பொருளாராய்ச்சிக்கும் ஆய்வுமூலம் வழக்கும் செய்யுளுமே யாகும். பொருளதி கார ஆய்வுக்குரிய செய்யுள் சிறிது வேறுபாடுடையது. இச்செய்யுளை நாடக வழக்கென்பர் அவர். நாடக வழக்கென்பது உள்ளதைப் புனைந்து கூறும் புலவர் மரபு. நாடக வழக்கும் உலகியல் வழக்கும் கலந்து பாடும் பாட்டு மரபே புலனெறி வழக்கென்பது. புலனெறி வழக்கே அகம் புறம் என்னும் இருவகைப் பொருளையும் பாடும் புலவர் மரபாகும்.[24]

எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் வழக்குத் தமிழையும், பெரும் பாலும் புனைந்துரை கலவாத செய்யுள் தமிழையும் ஆய்ந்து எழுதப்பெற்றவை எனத் தோன்றுகின்றன. பொருளிலக்கணம் உலகியலில் காணும் அகப்புற வழக்கங்களையும், புலவர்தம் செய்யுளில் புனைந்துரையாகக் கூறப்படும் அகப் புற வழக்கங்களையும் ஆய்ந்து எழுதப்பெற்றது எனலாம்.

வழக்கும் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி

எனப் பாயிரம் கூறினும் எழுத்தும் சொல்லும் வழக்கினும் செய்யுளினும் இயங்கும் மொழியை மூலமாகக் கொண்டு ஆயப்பெற்றன. பொருள், வழக்கினும் செய்யுளினும் காணும் ஒழுக்கத்தை மூலமாகக் கொண்டு ஆயப்பெற்றது என்னும் வேறுபாடு போற்றி உணரத்தக்கது. எனவே எழுத்துச் சொல்லாய்வு வேறு; பொருளாய்வு வேறு. முன்னது மொழியாராய்ச்சி; பின்னது ஒழுக்க ஆராய்ச்சி. இவ் வேறுபாட்டை உணர்த்தவே பாயிரத்துள்,

வழக்கும் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி

எனப் பொதுப்படக் கூறினும்,

நாடக வழக்கும் உலகியல் வழக்கும்
பாடல் சான்ற புலனெறி வழக்கும்

எனப் பொருளிலக்கண ஆய்வுமூலம் சிறப்பாகக் கூறினார் தொல்காப்பியர் எனலாம்.

**உலக ஒழுக்கமே பொருளிலக்கணம்**

அகம் புறம் என்னும் இருவகைப் பொருளிலும் உலகத்தார் ஒழுகலாற்றையே புலவர் புனைந்துரைத்தலின் எழுத்துச் சொல்லிலக்கணங்களுள் வழக்கும் செய்யுளும் சிற்சில இடங்களில் வேறுபடுமாறு போன்று ஈண்டு வேறு படுதல் இல்லை. ஈண்டு வழக்கினின்றும் செய்யுள் வேறுபடுவது புலவர்தம் புனைந்துரையாலேயே என்பது அறியத்தக்கது. புலவர் பாடும் புலனெறி வழக்கினின்றும் நாடக வழக்காகிய செய்யுள் வழக்கைக் கழித்துக் காணின் எஞ்சி நிற்பது உலகியல் வழக்கேயாகும்.

உலகியல் ஒழுக்கமே புலவர் புனைந்துரையுடன் பாடும் புலனெறி வழக்காயினமைக்குச் சான்றுகள் பலவுள.

**ஊர்க்கண் காமம்**

ஊரின்கண் பேதை முதலான எழு பருவ மகளிரும் நிகழ்த்தும் காமப் பகுதியாகிய உலகியல் ஒழுக்கமே புலவர் பாடும் புலனெறி வழக்கிற்கு உரித்தாயிற்று. இதனை

ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான (பொருள் 83)

என்பார் தொல்காப்பியர்.

**குடைநிழல் மரபு**

உலக ஒழுக்கத்தைப் புலவர் மிக உயர்த்திப் புகழ்ந்து பாடுதலும் உண்டு என்பது

நடைமிகுத் தேத்திய குடைநிழல் மரபு [25]

என்னும் தொல்காப்பியப் பகுதியானும் அதன் உரையானும் உணரலாம்.

2

### தோழி கூற்று

தோழிக்குரிய கூற்று வகையுள் உலகுரைத்தொழித்தல் என்றே ஒரு துறை வருகிறது. ஈண்டு உலகு என்பது உலகத்தாரின் ஒழுக்கம். உலகத்தார் வரைந்து கொள்வது போன்று வரைந்து கொள்க எனக் கூறித் தலைவனை நீக்கி நிறுத்துவாள் தோழி. ஈண்டு உலகத்தார் வரைந்து கொள்ளும் மரபே இலக்கியக் காதலர்களுக்கும் உரியதாகக் கூறப்பட்டுள்ளமை காண்க.[26]

### இலக்கணம்

வழக்கையும் செய்யுளையும் ஆய்ந்து அவற்றிற்குரிய விதிகளை அமைப்பதுதான் இலக்கணம். பேச்சு வழக்குப் பெரும்பான்மையும் இலக்கண நெறிக்குக் கட்டுப்பட்டு இயங்குதலையும், செய்யுள் வழக்கு சிற்சில இடங்களில் இலக்கண முறைகளுக்குக் கட்டுப்படாமல் விலகுதலையும் தொல்காப்பியத்தாலும், உரையாசிரியர்கள் தரும் எடுத்துக்காட்டுக்களாலும் அறியலாம்.

### வழக்கும் இலக்கண நெறிக்குக் கட்டுப்படாமை

வழக்கும் சிலபோது இலக்கண நெறிக்குக் கட்டுப்படாமல் செல்லுதல் உண்டு. தனக்குக் கட்டுப்படாது செல்லும் அவ்வழக்கையும் இலக்கணம் எடுத்துக் கூறும்; ஆயின் ஏற்றுக்கொள்ளாது.

### ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி

ஒருவனை அவன் என்றும், ஒருத்தியை அவள் என்றும், ஒரு பொருளை அது என்றும், தன்னை யான் என்றும், முன்னிலையான் அல்லது முன்னிலையாளை நீ என்றும் ஒருமையால் கூறுதலே மரபு. அங்ஙனமன்றி ஒருவன் அல்லது ஒருத்தி அல்லது ஒரு பொருளை அவர் என்றும், தன்னை யாம் என்றும், முன்னிற்கும் ஒருவன் அல்லது ஒருத்தியை நீர் என்றும் பன்மைச் சொல்லால் உயர்த்திக்கூறல் வழக்கில் காணப்படுகிறது. இலக்கணம் அவற்றை எடுத்துக்கூறும்; ஆயின் ஏற்றுக்கொள்ளாது.

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கினாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல. (சொல். 27)

வழக்கில் பயன்படுத்தும் உயர்வுப் பன்மைகளைத் தொல்காப்பியர் காலம் வரை இலக்கண நூலார் ஏற்றுக்கொள்ளாமை அறிஞர் உணரத்தக்கது.

### செயப்படு பொருளைச் செய்தது போலக் கூறல்

நெய் விற்கப்படும் என்று செயப்படு பொருளை அதற்குரிய படு விகுதி சேர்ந்த வினையாலேயே கூறுதல்தான் இலக்கண நெறியாகும். அங்ஙன மன்றி நெய் விற்கும் என விற்போனாகிய வினைமுதலுக்குரிய வினையால் கூறுதல் இலக்கண நெறிக்கு மாறுபட்ட வழுவாகும். நெய் விற்கும், பால் விற்கும், கண்ணாடி உடைந்தது என இங்ஙனம் செயப்படுபொருளைச் செய்தவன் போலக் கூறுதல் வழக்கில் பெரிதும் காணப்படுகிறது. இவ்வழக்கினை,

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே (சொல். 246)

எனத் தொல்காப்பியர் எடுத்துக்காட்டுகிறார். ஆயின் அவ்வழக்கை இலக்கண நூலார் ஏற்றுக்கொண்டதாகத் தோன்றவில்லை. ''வழக்கியல் மரபெனவே இலக்கணமன்று என்றவாறாம்'' என்பது சேனாவரையம்.

**அறக்கழிவுடையன**

இங்ஙனமே செய்யுள் உலக வழக்கும் நாடக வழக்கும் கலந்ததேயாகும். நாடக வழக்கென்பது புனைந்துரை. செய்யுள் ஒரு பொருளை மிகுதியாகப் புனைந்து கூறுதலையும் இலக்கணம் ஏற்றுக்கொள்ளும்.

நடைமிகுத் தேத்திய குடைநிழல் மரபு

என்னும் தொல்காப்பியப் பகுதிக்கு ''உலக ஒழுக்கத்தை இறப்ப உயர்த்துப் புகழ்ந்து கூறப்பட்ட குடைநிழல் இலக்கணம்'' என்பார் நச்சினார்க்கினியர்.[27]

உலக வழக்கை இறப்ப உயர்த்திக்கூறுதலையும் ஏற்றுக்கொள்ளும் இலக்கணம் உலக ஒழுக்கத்திற்கு, உயர்ந்தோர் ஒழுக்கத்திற்கு மாறுபட்ட ஒழுக் கத்தை ஏற்றுக் கொள்ளாது. அகப்பொருளாயினும் சரி, புறப்பொருளாயினும் சரி, உயர்ந்தோரது அற ஒழுக்கமாகிய மரபு பற்றி வரும் வழக்கினையே பொருளிலக்கணம் பின்பற்றுவதாகும். அங்ஙனமன்றி உயர்ந்தோர் ஒழுகும் அறத்திற்கு அழிவு தருவன அகப்புறப் பொருள்களுக்குப் பயன் தருவனவாயினும் அவற்றை வழக்கென்று கொண்டு வழங்குதல் பழியுடைத்தாகும் என்பர் இளம் பூரணர்.[28]

**மரபு**

தான் வழங்கும் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்பத் திரிந்து வழங்கும் மொழியியல்பே வழக்கு என்பது. அவ்வழக்கினை ஏற்றுச் சான்றோர் இயற்றும் பாட்டே செய்யுள் என்பது. வழக்கு செய்யுள் ஆகிய மொழி நிலைகள் இரண்டின் இயல்புகளையும் வரையறுத்துக் கூறுவதே இலக்கணம் என்பது. வழக்கு, செய்யுள், அவைபற்றிக் கூறும் இலக்கணம் இம்மூன்றினுக்கும் அடிப்படையாய் வேர் போன்று அமைந்ததே மரபு என்பதாம்.

**மரபின் தொன்மை, சிறப்பு, நிலைபேறு**

மரபு என்பது ஒரு மொழியின், அம்மொழி பேசுவோரின் அடிப்படை இயல்புகள் எனலாம். இவ்வடிப்படை இயல்புகள் பண்டு தொட்டு ஒரு நிலையாய் இயங்கி வருவன. எவ்விடத்தும் எக்காலத்தும் மாறாதன, சிறப்புடையன, அழி யாதன.

(அ) மயங்கா மரபு
(ஆ) தொல்லியல் மருங்கின் மரீஇய மரபு
(இ) பண்டியல் மருங்கின் மரீஇய மரபு
(ஈ) தொன்னெறி மரபு

(உ) சிறப்புடை மரபு
(ஊ) மரபு நிலைதிரியா மாட்சி
(எ) மலர்தலை உலகத்து மரபு
(ஏ) நிலைக்குரி மரபு
(ஐ) கெடலரு மரபு
(ஒ) நாட்டிய(ல்) மரபு
(ஓ) முன்னை மரபு

என்றெல்லாம் தொல்காப்பியர் சிறப்பித்துக் கூறுதலின் மரபின் தொன்மையும், சிறப்பும், நிலைபேறும் அறியலாம்.[29] (மரீஇய மரபு என்பதனுள் மரீஇய என்பது வழங்கி வந்துள்ள என்னும் பொருள் தரும்).

**மரபு பற்றிய ஒழுங்கு முறைகள்**

உலகப் பொருள்கள் அனைத்தும் ஐம்பூதக் கலவையே. அப்பொருள் களை ஐம்பூதப் பெயர்களால் வழங்காமல் உயர்திணை அஃறிணைச் சொற் களாகவும், ஐம்பாற் சொற்களாகவும் வழங்கும் வழக்கிற்குக் காரணம் தொன்று தொட்டு அங்ஙனம் கூறிவரும் வரலாற்று முறையாகிய மரபேயாகும்.[30]

செவியால் கேட்கும் கிளி என்னும் ஓசை, கண்ணால் பார்க்கும் அழகிய பச்சை நிறப் பறவையை நம் மனத்திற்கு உணர்த்துவது மரபுபற்றியதே யாகும். ஏனைய ஒலிகளும் தனித்தனிப் பொருளை உணர்த்துதலும் இங்ஙனமே.[31]

னகர ஒலி ஆண்பாலை உணர்த்துவதும், ளகர ஒலி பெண்பாலை உணர்த்துவதும், ஆண்பாற் பெயரும் பெண்பாற் பெயரும் பிற பாற் பெயர்களும் அவ்வப்பாலின் வினை கொண்டு முடிதலும் தொன்று தொட்டு வரும் மரபு பற்றிய ஒழுங்கு முறைகளேயாகும். இவற்றைப் ''பாலறி மரபு'' என்று தொல்காப்பியம் சுட்டுவதும் காண்க.[32] இங்ஙனம் மொழி பற்றியும், அம்மொழி உணர்த்தும் பொருள் பற்றியும் உள்ள அடிப்படை மரபுகள் பலவற்றைத் தொல் காப்பியம் எடுத்துக் காட்டி அவற்றின் நிலைபேற்றை வற்புறுத்துவதாகும். இவ்வடிப்படை மரபு எவ்விடத்தும் எக்காலத்தும் திரிதலின்றி ஒரே பெற்றித்தாக நிற்பது. இம்மரபு நிலை திரியின் சொல்லும் அஃதுணர்த்தும் பொருளும் வெவ் வேறாகி மொழிக் குழப்பமும் பொருட்குழப்பமுந்தான் உண்டாகும்.

**மரபின் நிலை திரியாமை**

மொழி தோன்றிய காலந்தொட்டு வழங்கிவரும் மரபினை ''வரலாற்று முறை'' என்பர் தொல்காப்பிய உரையாளர்.[33] எனவே உயர்ந்தோர் பேசும் மொழி வழக்கும், சான்றோர் பாடும் செய்யுள் நெறியும் வரலாற்று முறையாகிய மரபினையே அடிப்படையாகக் கொண்டவை. வழக்கும் செய்யுளும் இடத் திற்கும் காலத்திற்கும் ஏற்பத் திரிந்து வழங்குவனவாயினும் அவற்றின் திரிபு வரலாற்று முறைமையாகிய மரபு என்னும் அடிப்படை ஒழுங்கினைத் திரித்தல் கூடாது.

தொன்றுதொட்டு வழங்கி வரும் மரபு எழுநிலை மாடத்தின் அடிப்படை போன்றது. மாடங்களின் சுவர்களையும் பிறவற்றையும் நம் கண்ணும் கருத்தும் விரும்பும் வகையில் இடிக்கலாம், எடுக்கலாம், ஒட்டலாம், உயர்த்தலாம், பிற வாறும் திரித்து அழகுபடுத்தலாம். ஆயின் அம்மாடங்களின் அடிப்படையை இடித்தோ உடைத்தோ நொறுக்கி மாற்ற எண்ணினால் மாடங்களின் நிலை என்னாகும்? மாடங்கள் வீழ்ந்து நொறுங்கிச் சின்னாபின்ன மாகுமல்லவா? மொழியின் அடிப்படை மரபு திரிந்தாலும், மொழியின் கதி இதுதானே?

மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான. *(பொருள். 636)*
மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும் *(பொருள். 637)*

என்னும் தொல்காப்பிய விதிகள் இதைத்தானே வற்புறுத்துகின்றன?

**மரபு வாழ மற்றவை வாழும்**

மரபென்னும் அடிப்படை நிலை கலங்காமல் ''வழக்குஞ் செய்யுளுமாகிய மொழிநிலைகள் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப மாறலாம், வளரலாம், வாழலாம். மரபை மாற்றாமல், தாம் மாறி வளர்வதும் வாழ்வதும் மொழி நிலைகளின் மாண்பாகும்.

மரபுநிலை திரியா மாட்சிய வாகி
விரவும் பொருளும் விரவும் என்ப *(பொருள். 48)*

என்பது வழக்குஞ் செய்யுளும் வாழத் தொல்காப்பியர் கூறும் வாழ்வியல்.

மரபு நிலை திரியாமல், அதனைத் திரிக்காமல் வழக்கையும் செய்யுளை யும் ஆய்ந்து அவற்றின் இயல்புகளை எடுத்தோதுவதே இலக்கணத்திற்கும் உரிய மாட்சிமையாகும்.

மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூல்தாம் இருவகை இயல
முதலும் வழியுமென நுதலிய நெறியின் *(பொருள். 639)*

முதனூலும் வழிநூலும் தாம் கூறும் பொருளில், கருத்தில், பிறவற்றில் மாறலாம், மாறுபடலாம். ஆயின், அவற்றைக் கூறுதற்குரிய சொல் மரபு, பொருண்மரபு ஆகிய மரபுநிலையைத் திரித்தலோ, அந்நிலையினின்றும் தாம் திரிதலோ கூடாது. சொற்பொருள் மரபு, நிலைதிரியாமையே அவற்றின் மாட்சியாகும். வழக்கும் செய்யுளும் ஆய்ந்தோதும் இலக்கண நூலுக்குக் கூறிய இவ்வெச்சரிக்கை பிற எல்லா நூலுக்கும் பொருந்துவதாகும்.

**மேற்கோள்**

*1.* தொல் பொருள் சூ. *638*. *2.* தொல் பொருள் சூ. *392, 648* பேரா. *3.* சொல் சூ. *114* சேனா. *4.* எழுத்து சூ. *271*. *5.* எழுத்து

சூ. 247, 213; சொல் சூ. 238, 239. 6. சொல் சூ. 458 சேனா. 7. பொருள் சூ. 658 பேரா. 9. பொருள் சூ. 556 பேரா. 10. பொருள். சூ. 489, 490, 491, 547, 549, 550, 553, 554. 11. எழுத்து சூ. 213. 12. எழுத்து சூ. 457. 13. எழுத்து சூ. 6, 33. 14. எழுத்து சூ. 214. 15. எழுத்து சூ. 112, 482. 16. எழுத்து சூ. 13, 51, 52. 17. எழுத்து சூ. 133. 18 தொல் எழுத்து சூ. 133, 271, 356. 19. தொல் எழுத்து சூ. 306, 481. 20. தொல் எழுத்து சூ. 238, 313, 235, 289, 259, சொல் சூ. 108, 195, 211, 212. 21. தொல் சொல் சூ. 403, 453; நன்னூல் சூ. 155, 156. 23. சொல் சூசூ. 38, 39, 40. 24. பொருள் சூ. 56 இளம்; 53 நச்சி. 25. பொருள் சூ. 91 நச்சி. 26. பொருள் சூ. 112. 27. பொருள் சூ. 91 நச்சி. 28. பொருள் சூ. 214 இளம். 29. பாயிரம்; எழுத்து சூ. 356; சொல் சூ. 90, 110, 427; பொருள் சூ. 48, 639, 77, 216, 368, 238, 243, 298. 30. பொருள் சூ. 644 பேரா. 31. பொருள் சூ. 646 பேரா. 32. சொல் சூ. 211. 33. பொருள் சூசூ. 45, 79 நச்சி; 292, 645 பேரா.

---

குறிப்பு: உரைகளைக் குறிப்பிடாத இடங்களிலெல்லாம் சூத்திர எண்கள் தொல்காப்பியத்துள் இளம்பூரணர் கொண்ட சூத்திர எண்களையே குறிக்கும்.

# இலக்கியங் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பல்

வித்துவான் F. X. C. நடராசா,
53, மத்திய வீதி,
மட்டக்களப்பு. இலங்கை.

சான்றோரால் ஆக்கப்பட்ட இலக்கிய நூல்களிலும் உலகவழக்கிலும் நின்ற எழுத்தானுஞ் சொல்லானுஞ் சொற்றொடரானுமாகிய இலக்கியத்தை நோக்கி அதற்கு இலக்கணங் கூறுதல் மரபுடைத்து. இலக்கணத்தாற் காரியப்படுவதே இலக்கியம் என்றார் நச்சினார்க்கினியர்.

இலக்கியங் கண்டு அதன் தன்மையாகிய இலக்கணத்தைக் கூறுவதே இலக்கணமாகலின் இலக்கியம் முந்தியது என்பர் சிலர். இலக்கண அமைதியாய் நிலைபெறுவதே இலக்கியம் என்பாரும் உளர். தொன்னைக்கு நெய் ஆதாரம். நெய்க்குத் தொன்னை ஆதாரம். தாலபீச நியாயமும் அதுவே. ஆகவே முந்தியது பிந்தியது என்ற வாதம் வேண்டற்க.

எனினும் இலக்கியம் கண்டுதான் இலக்கணம் விரித்தல் இயல்பு. மரபும் வழக்கும் நோக்கி இலக்கியம் முதலில் நடைபெறுமெனவே அவைதாம் முதலில் இலக்கணமாகின்றன.

மரபு முந்தியது; வழக்குப் பிந்தியது. வழக்கின் முதிர்ச்சியே மரபு. வழக்கு முதிர்ந்து செம்மை, அழகு, உண்மை பெற்றால் மரபாகும். மரபு என்பது ''தொன்று தொட்டு வந்த வழக்கு'' என்றார் அரசன்சண்முகனார். மரபு பழைமையுடையது. தொன்னெறி முறைமையுடையது.

மரபு, இயல், விதி, இலக்கணம், நியதி, முறைமை, தன்மை. வழக்கு இவையெல்லாம் ஒருபொருட் பன்மொழி; இலக்கணத்தைக் குறிப்பன. இலட்சணம் என்பதன் திரிபே இலக்கணம் என்பர்.

தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி....
புலந்தொகுத்தோனே போக்கறு பனுவல்

என்றார் பனம்பாரனார்.

எனவே இலக்கிய இலக்கணங்களுக்கு முந்தியது பிந்தியது என்ற வாதம் வேண்டற்பால தன்று. எள்ளு இலக்கியம். எண்ணெய் இலக்கணம். இலக்கியம்

இன்றி இலக்கணம் இல்லை. எள்ளின்றுகில் எண்ணெயுமில்லை. இலக்கியத்தில் இருந்தே இலக்கணம் சொல்லப்படும்.

**1. முத்தமிழ் இலக்கணம்**

நாம் பேசும் மொழி தமிழ். அது முத்தமிழ் எனப்படும். முத்தமிழுக்கும் இலக்கணம் வரையறுக்கப்பட்டுள்ளது.

இயற்றமிழ்: எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.

இசைத்தமிழ்: சுருதி, சுரம், வண்ணம்.

நாடகத்தமிழ்: தாளம், பாவனை, அலங்காரம், இரசம்.

இவ்வகையாக முத்தமிழுக்கும் பன்னிருவகை இலக்கணம் சொல்லப் பட்டிருக்கின்றது. இயற்றமிழுக்குரியார் அவ்வியற்றமிழுக்குரிய ஐவகை இலக் கணத்தினை மாத்திரம் கற்பர். ஆகவே தான் தமிழுக்கு ஐந்து வகை இலக்கணம் உண்டு என்று பொதுவகையாற் கூறுவர். பலர் அகத்தியர் தொல்காப்பியர் தொடங்கி விசாகப்பெருமாளையர் ஈறுக வந்த தமிழறிஞர்கள் பலர் இயற்றமிழ் இலக்கண நூல்கள் செய்துள்ளார்கள். ஐவகை இலக்கணத்தையும் சேர்த்தும் பிரித்தும் எழுதியுள்ளனர்.

இலக்கண ஆசிரியர் யாவரும் பொதுவாக விதிகளைச் சூத்திரப்பா நூற்பா என்பர். இலக்கண நூல்கள் பாவகையால் யாக்கப்பட்டமையால் அவற்றுக்கு உரைவகுத்தாரும் பலராவர். இவர்களும் தம்முள் முரண்பட்டுள்ளனர்.

இலக்கணத்தால் ஏற்படும் அறிவு விருத்தியை அறியாதார் இலக்கணம் வேண்டாம் என்பர்.

மொழியினைச் செம்மைப்படுத்துவதே இலக்கணம். பிழையறப் பேச, எழுத, விளங்க உதவுஞ் சிறந்த கருவியே மொழியாம். கருத்துப்பரிமாற வேறு சாதனங்கள் இருப்பினும் அதற்குச் சிறந்த சாதனமாக இருப்பது மொழியே. ''உயர்ந்தோர் வழக்கத்தையுஞ் செய்யுள் வழக்கத்தையும் அறிந்து விதிப்படி எழுதுவதற்கும் பேசுவதற்குங் கருவியாகிய நூலாம் இலக்கண நூல்'' என்றனர் நாவலர் பெருமான்.

எழுத்தொடு சொல்லும் சொல்லொடு பொருளும் தெரியாவிடின் எந்த நூலினையும் படித்து விளங்க முடியாது.

''எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்''

என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமது நன்னெறியிற் கூறியுள்ளார். இங்கு எழுத்தென்பது இலக்கண நூலினை.

அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் சந்திரவாணன்கோவை அரங்கேற்றம் நடந்த ஞான்று ''முப்பழச் சேற்றினமுத வயல்'' என்ற தொடரினைக் கேட்ட அம்மைச்சி கவிராயருக்குக் ''கண்தான் கெட்டது, மதியுங் கெட்டதோ?'' என்ற

குறிப்பைக் கூறக் கவிராயர் ''கொம்பை வெட்டிக் கால் கொடும்'' என்று கூறவே ''முப்பழச்சாற்றினமுதவயல்'' என்று பாடமாயிற்று.

நன்னூலார் மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களில் நகரத்தைச் சேர்த்துள்ளார். வீரமாமுனிவர் தமது தொன்னூல் விளக்கத்தில் அதனைச் சேர்த்தாரல்லர். ஆறுமுகநாவலரும் இலக்கணச் சுருக்கத்தில் நீக்கிவிட்டார்.

எகரம் மெய்களின் மேலேறி எந்த ஒரு தனிப்பதத்தின் இடையில் வந்துள்ள தாகத் தெரியவில்லை. அவ்வாறு வருமேல் அது விட்டிசைக்குமன்றோ. ஆகவே அது இடையில் வாராது. ஆயினும் அமரிக்கா என்பதனை அமெரிக்கா என்று எழுதுகின்றனர் பலர். அமேரிக்கா என்றெழுதினும் ஒப்புடைத்து.

ர, ழ என்ற இரு எழுத்துக்களும் தனிக்குறிற்கீழ் ஒற்றாகாதென்று தொல்காப்பியம் நன்னூல் என்ற நூல்களில் விதந்தோதப்பட்டிருக்கிறது. இதன் படி கர்மம், தர்மம், என்பன கருமம் தருமம் என்றே எழுதப்படல் வேண்டும். இலக்கியத்தில் ர, ழ தனிக்குறிலணைவதைக் கண்டிலம்.

### 2. குற்றியலிகரம்

தொல்காப்பியர் நன்னூலார் என்ற இலக்கண நூலாசிரியர் குற்றியலி கரம் பற்றிக் கூறியுள்ளார்கள். இது விடயம் பற்றி மேலும் தெளிவு வேண்டும்·

ட, ர, ல போன்ற உயிர்மெய் எழுத்துக்கள் சொற்களின் முதனிலையாக அமையா என்பது தமிழ் விதி. வடசொற்கள், திசைச்சொற்கள் அவ்வித ஒலி களுடன் பிறக்கின்றன. அவ்வகை வருஞ் சொற்களுக்கு முன்னர் அவற்றைத் தமிழ்மயமாக்குவதற்கு இகரம் கொடுப்பது பெரு வழக்கு.

ராமன் – இராமன், லாபம் – இலாபம், டம்பம் – இடம்பம்

இவ்வகைச் சொற்களில் இகரத்தை முதலில் வைத்து எழுதினும் வேறு சொற்களுடன் தொடர்ந்து வரும் போது இகரம் எழுதப்படுவதில்லை. அவலட்ச ணம், நவரசம், சீராமன் என்பன உதாரணம். காரணம், தொடரே பிறமொழி, தமிழ் அன்று. இஃது எவ்வாறாயினும் முதனிலை எழுத்தாக இடப்பட்ட ''இ'' குற்றெழுத்துக்குரிய மாத்திரையோடு உச்சரிக்கப் படுவதில்லை. ஆகவே இவற்றை யும் குற்றியலிகரம் எனக் கொள்ளுதல் வேண்டும்.

வல்லினமெய்யெழுத்துக்களில் ஏறி நின்ற இகரம் இனமெல்லெழுத்துக் களை அடுத்து வரும் போது இகரம் முற்றாக உச்சரிக்கப்படுவதில்லை.

அங்கி, கஞ்சி, வண்டி, தந்தி, தம்பி, பன்றி என்ற சொற்களை மீண்டும் மீண்டும் உச்சரித்தால் இகரம் குறுகி நிற்பதை உணரலாம்.

இவ்வாறு மொழிக்கு முதலிலும் கடையிலும் குற்றியலிகரம் உச்சரிப்பதில் இருப்பதுபோல் சொற்கள் புணரும் போது இடையிலும் குறுகிய இகரம் உச்சரிக்கப்படுவதைக் காண்டல் கூடும்: பேரியாழ், பண்ணியாழ், சிறியிலை, பேரியாறு, பாணியாழ்.

குற்றியலிகர வகையில் பின்வருஞ் சொற்களையும் நோக்குக.

பட்டினம், பண்ணியாரம்.

3. **விகுதிகள்**

இனி, நன்னூலார் கூறிய விகுதிகள் பற்றிச் சில சிக்கல்கள். நூலிற் சொல்லிய விகுதிகள் பற்றியன்று; அவற்றின் பிரயோகத்தால் எழுந்த சிக்கல் களே இவை.

ஏம் என்பது ஒரு விகுதி. இஃது எதிர்மறை வினைமுற்றுக்களிலே அதிகம் பயின்று வரும். ஏன் என்பது ஒருமை விகுதி. ஏம் என்பது பன்மை விகுதி:

காணேன் மாட்டேன் அல்லேன் அறியேன்
காணேம் மாட்டேம் அல்லேம் அறியேம்

என்பன அவ்வகையின எனினும் இக்காலத்தில் இவற்றினை,

காணோம் மாட்டோம் அல்லோம் அறியோம்

என எழுதி வருகிறார்கள்.

''நாமார்க்குங் குடியல்லேம் நமனை அஞ்சேம்''

என்றிருக்கற்பாலதை அல்லோம், அஞ்சோம் என்றே சொல்கிறார்கள் ஓம் விகுதி உடன்பாட்டிற்கே உரியது. எதிர்மறையில் இந்த ஓம் விகுதி பண்டைய நூல்களிற் காண்பதற்கில்லை. ஏம் விகுதியைச் சங்க நூல்களிற் பரக்கக் காண்டல் கூடும். அப்பிரயோகங்கள் சிலவற்றை இங்கே காட்டுதும்.

''வேண்டேம் பெரும நின்பரத்தை'' ஐங்குறுநூறு செய். 48
''அறியேமல்லே மறிந்தன மாதோ'' ,, 240
''உயவற் பெண்டிரே மல்லேம்'' புறநானூறு 246
''கேளே மல்லேங் கேட்டனம் பெரும'' குறுந்தொகை 244
''எற்றென்றுங் காணேம்'' சிலம்பு குன்றக்குரவை செய். 4
''நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேம்'' சிலம்பு கானல்வரி செய். 32
''நாமார்க்குங் குடியல்லேம் நமனையஞ்சேம்'' அப்பர் தேவாரம்

ஆன்றோர் நூல்களில் இவ்வாறு பிரயோகமிருக்கின்றமை கண்ட மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் வெளியிடப்பட்ட ''தமிழ்ச்சொல்லகராதி'' 'ஏம்' என்பதற்கு

''தன்மையிடத்துப் பன்மையிலாவது ஒருமைச் சிறப்பிலாவது எதிர்மறைப் பொருளிலே வரும் ஒரு தெரிநிலைவினை விகுதி'' உம்: படியேம், ஆடேம், வரேம்

என்று கூறியுள்ளது. சென்னை அகராதியில் ஒன்றும் காணேம்.

இஃதிவ்வாறிருக்க இக்காலத்து அறிஞர் சிலர் வேண்டோம், காணோம், அல்லோம், படியோம் என்று ''ஏம்'' என்பதனை ''ஓம்'' என்றாக்கி ஒலிப்பதை நாம் கேட்கும் போது வேதனைப்படுகிறோம்.

இ, ஐ, அம் எனும் (தொழிற் பெயர்) விகுதிகள் மூன்றும் வினைமுதற் பொருளையும், செயற்படு பொருளையும், கருவிப் பொருளையும் உணர்த்தும் என்பர். இவற்றில் செயற்படு பொருளில் வரும் 'அம்' ஈற்றிற்குத் ''தொல்காப்பியம்'' என்ற உதாரணம் விசாகப்பெருமாளையர் ஆறுமுகநாவலர் நன்னூற் பதிப்பு களிற் காணப்படுகின்றன. ஆயினும் நாவலர் தமது இலக்கணச்சுருக்கத்தில் ''தேட்டம்'' என்ற சொல்லினை உதாரணமாகக் காட்டியுள்ளார். தேட்டம்

என்ற உதாரணமே பொருத்தமானது. தொல்காப்பியம் என்ற உதாரணம் பொருந்தாது என்பது தெளிவு.

விகுதிகள் என்ற பான்மையில் பன்மை விகுதியாகிய ''கள்'' உயர் திணையிலும் அஃறிணையிலும் வரும். அஃறிணைச் சொற்களுடன் வரும்போது இடர்ப்பாடு தோன்றுகிறது.

| | | |
|---|---|---|
| புள் | : | புட்கள் |
| நாள் | : | நாட்கள், நாள்கள் |
| சொல் | : | சொற்கள் |
| நூல் | : | நூற்கள், நூல்கள் |
| பொருள் | : | பொருட்கள், பொருள்கள் |

இப்பிரயோகங்களில் நாட்கள், நூற்கள், பொருட்கள் தவறுடையன என்பது என் கருத்து. இதனை வலியுறுத்தற்குப் புணர்ச்சிக்குரிய விதிகளை நாம் அறிதல் வேண்டும். இவ் உதாரணங்களிலே சில சொற்கள் குற்றெழுத்தினை முதலாக உடையன. மற்றுஞ்சில நெட்டெழுத்தை முதலாகவுடையன. புணர்ச்சி விதிகளை வகுத்த இலக்கண நூலார் இவற்றைப் பெரிது நோக்கியே விதி கூறி யுள்ளார்கள். அவ்வகையிற் சில சொற்களைத் தருவாம்.

| குறிலையடுத்தவை | நெடிலையடுத்தவை |
|---|---|
| கல் | கால் |
| சொல் | சூல் |
| நெல் | நூல் |
| பல் | பால் |
| புல் | தோல் |
| வில் | வேல் |
| புள் | தோள் |
| தெள் | தேள் |

இவற்றுக்கு முறையே ''கள்'' என்ற பலவின்பால் விகுதிகளைச் சேர்த்தால் அவை பின்வருமாறு மாறுதலடையும்.

| | | | | |
|---|---|---|---|---|
| கல் | — கற்கள் | கால் | — கால்கள் | — காற்கள்அல்ல |
| சொல் | — சொற்கள் | சூல் | — சூல்கள் | — சூற்கள் அல்ல |
| நெல் | — நெற்கள் | நூல் | — நூல்கள் | — நூற்கள் அல்ல |
| பல் | — பற்கள் | பால் | — பால்கள் | — பாற்கள் அல்ல |
| வில் | — விற்கள் | வேல் | — வேல்கள் | — வேற்கள் அல்ல |
| தெள் | தெட்கள் | தேள் | — தேள்கள் | — தேட்கள் அல்ல |

இவ்வுதாரணங்களிலிருந்து பெறக்கூடிய முடிவு என்ன? குற்றெழுத்துக்குப் பின்னர் வருகின்ற லகர ளகர மெய்யீற்றுச் சொற்கள் ''கள்'' என்ற பன்மை விகுதி பெறும்போது திரிந்து புணர்கின்றன என்றும் நெட்டெழுத்துக்குப் பின்னர் வருகின்ற ல, ள, ண, ன மெய்யீற்றுச் சொற்கள் அவ்வாறு திரியாது இயல்பாகப்

புணரும் என்றும் விதி ஏற்படலாயிற்று, பின்வரும் உதாரணங்களையும் நோக்குக. நெட்டெழுத்தை முதலிலான சொற்களே விதந்தோதப்படுகின்றன:

| | | | |
|---|---|---|---|
| ஆல் | — | ஆல்கள் | ஆற்கள் அல்ல |
| ஆண் | — | ஆண்கள் | ஆட்கள் அல்ல |
| ஆள் | — | ஆள்கள் | ஆட்கள் அல்ல |
| ஆன் | — | ஆன்கள் | ஆற்கள் அல்ல |
| சாண் | — | சாண்கள் | சாட்கள் அல்ல |
| தோல் | — | தோல்கள் | தோற்கள் அல்ல |
| கோல் | — | கோல்கள் | கோற்கள் அல்ல |
| தோள் | — | தோள்கள் | தோட்கள் அல்ல |
| கோள் | — | கோள்கள் | கோட்கள் அல்ல |
| மான் | — | மான்கள் | மாற்கள் அல்ல |

இனி, உயிர்த்தொடர்ச் சொற்களை நோக்குவாம்.

| | | | |
|---|---|---|---|
| உரல் | — | உரல்கள் | உரற்கள் அல்ல |
| விரல் | — | விரல்கள் | விரற்கள் அல்ல |
| கடல் | — | கடல்கள் | கடற்கள் அல்ல |
| முகில் | — | முகில்கள் | முகிற்கள் அல்ல |
| முயல் | — | முயல்கள் | முயற்கள் அல்ல |
| கயல் | — | கயல்கள் | கயற்கள் அல்ல |
| பொருள் | — | பொருள்கள் | பொருட்கள் அல்ல |
| பாடல் | — | பாடல்கள் | பாடற்கள் அல்ல |
| சுருள் | — | சுருள்கள் | சுருட்கள் அல்ல |

இவ்வகை உதாரணங்கள் மூலம் நாம் கண்ட முடிபு என்ன? குற்றெழுத்தோடு வரும் லகரமும் ளகரமும் றகர டகரமாகப் பன்மையில் மாறும் என்பதும் மற்றும் நெடில், உயிருடன் வரும் ல, ள, ண, ன, மெய்கள் இயல்பாக நின்று புணரும் என்பதும் பெற்றும். ஆகவே, நாள்கள்: கலித்தொகை: 75:11 உரை பாரதம்: குருகுலச்சருக்கம், செய், 2, கல்லாடம், உரை 95. ஆள்கள்: உவின்ஸ்லோ அகராதி, பக் 200 ''ஆள்களை ஒதுக்க'' பொருள்கள்: (பச்சை: கலியாணவரிசைப் பொருள்கள்).

சீவகசிந்தாமணி: செய். 828 உரை, மதுரைக்காஞ்சி: 626 உரை அடிக்குறிப்பு, பெருங்கதை: 18.73 உரை. பாரதம்: இந்திரப்பிரத்தச்சருக்கம். செய். 28 என்று நூல்களில் எழுதப் பெற்றிருக்கின்ற பான்மை தேற்றமுடைத்து.

**4. பெயரிடை நிலை**

இனி, பெயர்ப்பகுபத இடைநிலை. இக்கட்டுரையின் தலையங்கத்தைக் கொண்ட சூத்திரம். இங்கு பெயர்ப்பகுபத இடைநிலைகளாள ஞ், ந், என்பன சாரியைகளா, உடம்படுமெய்யா என்று ஆராய்தல் வேண்டும்.

ஐங்குறுநூறு செய்யுள் 180 — ''வலைவர் தந்த கொழுமீன் வல்சி'' என்று வருகின்றது. இங்கு வலைவர் என்பதற்கு ''வலைஞர்'' என்று குறிப்பு எழுதப் பட்டுள்ளது. இங்கு வலை + அர் = வலைவர் என்று வகர உடம்படுமெய் பெற்றுப் புணர்ந்துள்ளது. பின்னர் விட்டிசைத்தலை நீக்க ஞகரம் வந்துள்ளது. எனவே வகர உடம்படு மெய்யினிடத்தே ஞகரம் வந்திருந்து அமைதி செய் கின்றது. ஆகவே ஞகரமும் உடம்படு மெய்யாகின்றது. வலைச்சி என்பதனைப் பகுத்தால் வலை — அச்சி என்று பிரித்தல் வேண்டும். அச்சி பெண்பால் விகுதி. ஆகவே ''ச்'' என்பதும் பெயரிடை நிலையன்று. இதே போல் பொருநன். இங்கு ''ந'' என்பதுவும் உடம்படு மெய்.

## 5. புணர்ச்சி

தமிழ் மொழியினை மொழிநூல் வல்லார் ஒட்டு மொழி என்பர். தமிழில் உள்ள சொற்கள் பொதுவாகப் பகுதி விகுதி என்ற உறுப்புக்கள் சேர்ந்தே பிறக்கின்றன. தனித்தனிச் சொற்களும் பின்னர் ஒன்று சேர்கின்றன. இப்படி ஒன்றுசேர்த்தலையே புணர்ச்சி என்பர். புணர்ச்சியையும் பொருட்புணர்ச்சி எழுத்துப்புணர்ச்சி என இருவகைப்படுத்திப் பின்னர் பொருட்புணர்ச்சி வேற்றுமை அல்வழி என்று பிரித்தும், எழுந்துப்புணர்ச்சியை இயல்பும் விகாரமும் என்று பிரிப்பர்.

புணர்ச்சிக்குக் காரணம் என்ன? சொற்புணர்ச்சி தமிழ் மொழியின் அடிப்படைக் கொள்கை. சொற்புணர்ச்சி, அ. நேரிய பொருளைத் தந்து, ஆ. விட்டிசைத்தலை நீக்கி, இ. இன்னிசையைத் தந்து, எங்கள் மொழி வளத்தைப் புலப்படுத்தித் தெளிவு படுத்துகின்றது.

| | | |
|---|---|---|
| வேல்+பிடி | அ. | வேல்பிடி — இயல்பு: வேலைப்பிடி |
| | ஆ. | வேற்பிடி — விகாரம்: வேலினதுபிடி |
| புளி+பழம் | அ. | புளியம்பழம்: இயல்பு. அம்சாரியை புளிய மரத்தின் பழம் |
| | ஆ. | புளிப்பழம்: விகாரம். புளிப்பான எந்தப் பழமும் |
| கால்+கட்டை | அ. | கால்கட்டை: இயல்பு. உறுப்பான கால் கட்டையானது |
| | ஆ. | காற்கட்டை: விகாரம். தூரத்தைக் குறிப்பது |
| மக்கள்+தலை | அ. | மக்கள்தலை: இயல்பு. உயிருள்ள மக்களின் தலை |
| | ஆ. | மக்கட்டலை; விகாரம். உயிரிழந்த மக்களின் தலை |
| வாய்+பாடு | அ. | வாய்பாடு: இயல்பு: பலவிதவாய்பாடுகள் |
| | ஆ. | வாய்ப்பாடு: விகாரம்: சாப்பாடு |

கருமை+கோழி அ. கருங்கோழி: விகாரம்; கருங்கோழி இனத்தைச் சார்ந்தது.
ஆ. கரியகோழி: விகாரம்: கறுப்பு நிறமான கோழி.

மேற்போந்த உதாரணங்கள் புணர்ச்சி மூலம் பொருள் வேற்றுமையடை தலைப் புலப்படுத்துகின்றன.

வாழைபழம், கிரைகறி என்றால் ஏதோ உப்பில்லாப் பண்டம் போல் விட்டிசைக்கின்றன. இந்த விட்டிசைத்தலை நீக்க வேண்டுமாயின் வாழைப்பழம், கிரைக்கறி என்று புணர்த்தி எழுதுதல் வேண்டும். எனவே புணர்ச்சி விட்டிசைத் தலை நீக்கும்.

அடுத்தது இன்னிசை. நாக்கினை அசைத்து இலகுவாகவும் இன்னிசை யாகவும் உச்சரிப்பதற்காகச் சொற்களிலும் சந்தியிலும் சில மாற்றங்கள் இயல் பாகவே நடைபெற்றுவந்திருக்கின்றன. ஆதியில் நாலு என்ற எண்ணுப் பெயர் காலகதியில் நான்கு என்றாகி இன்னிசை பயக்கின்றது. மண்கட்டி எனற்பாலது மண்ணாங்கட்டியாக மாறியது. இக்காலத்திற் பெண் ஆசிரியரை யாவரும் பொதுவாக ஆசிரியை என்கின்றனர். இச்சொல்லுக்கு இரண்டாம் வேற்றுமை உருபாகிய ஐ என்பதனைச் சேர்த்தால் ஆசிரியையை என்று வரும். உருபேற்ற இச்சொல்லை இலகுவாக இன்னிசையாக உச்சரிக்க முடியவில்லை. மாற்றமும் கிடைக்குமாறில்லை. ஆகவே இச் சொற்பிரயோகம் தவறுடைத்து.

சக்கரவர்த்தி இராசகோபாலாசாரியரின் ''சக்கரவர்த்தித்திருமகன்'' என்ற நூல் வெளிவந்த காலத்தில் நூற்பெயரில் ''த்'' மிகுந்து தோன்றியதற்குப் பலர் எதிர்ப்பு எழுதினர். பாரதத்தில் வாரணாவதச்சருக்கம் என்ற பிரிவில் ஐம்பத்துநாலாம் செய்யுளின் முதலடியில் ''சிலைக்குருவிறற் குருகுலக் குமரருக்கு'' என்று வருகிறது. இங்கு குருகுல குமரர் என்றிருக்கற்பாலது சந்தவின்ப நோக்கிக் ககரம் மிக்கது. ஆகவே இன்னிசை நோக்கியே சக்கரவர்த்தித்திருமகன் என்று நூற்பெயராயிற்று எனலாம்.

இதுவரை வந்த இலக்கண நூல்களிலே பெயரும் பெயரும் புணர்தல் முறையே விதந்தோதப்பட்டுள்ளது. பெயரும் வினையும் புணரும் போது பெயருக் கும் பெயருக்குமுரிய புணர்ச்சி செல்லாச்சரக்காகுமன்றோ? தமிழ்ப் பேச்சு என் பதில் ''ப்'' மிகுந்தது. தமிழ் பேசும் மக்கள் என்பதில் ''ப்'' மிகவில்லை. இவ்வாறு எல்லாவிடத்தும் நடைபெறும்.

**அ–உடம்படு மெய்**

நிலைமொழியீற்றிலும் வருமொழி முதலிலும் நின்ற உயிர்களை உடம் படுத்தும் மெய். விட்டிசைத்தலை நீக்கவும், இன்னிசை பயக்கவும் உடம்படுமெய் தோன்றும். உடம்படுமெய்யினைப் பற்றிக் கூற வந்த தொல்காப்பியர்[1] அவை

1. எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே
உடம்படு மெய்யி னுருவு கொளல் வரையார் (தொல். எழுத்து: சூ. 140)

எவையென்றும் எங்கெங்கு வரும் என்றும் கூறினரல்லர். ய, வ மாத்திரமல்ல, வேறு எழுத்துக்களும் உடம்படுமெய்யாக வரும் என்பதும் அவை எங்கும் வாய்ப்பான இடமெல்லாம் வரும் என்பதும் தொல்காப்பியர் கருத்து. ஏனெனில் நிறைமொழி மாந்தர் அவர், மறை மொழி வல்லார்.

நன்னூலார் உடம்படுமெய்கள் ய, வ என்பன என்றும் ''இ ஈ ஐ வழி யவ்வும், ஏனை உயிர்வழி வவ்வும், ஏ முன் னிருமையும்'' என்று வரையறை செய்தனர். நன்னூலார் சிறிது விரித்துக் கூறினரெனினும் மேலும் நிதானித்துக் கூற வேண்டியவை உண்டு என்று உணர்ந்ததனுற் போலும் உடம்படுமெய்யில் ஆழ்ந்த விடயங்கள் இருக்கின்றன என்பதனை உணர்ந்து மெல்லச் சுட்டிக் காட்டினர் போலும்.

நன்னூலார் கூற்றிற்கு அப்பாலும் விடயங்கள் இருக்கின்றன என்பதனைப் பின்வரும் உதாரணங்கள் தெளிவுபடுத்தும்.

அ — ஈறு: சுகயீனம், விருப்பயீனம், சங்கையீனம் சங்கயீனம்.

ஆ— ஈறு: மாயிருஞாலம்,[1] ஆயிடை,[2] ஆயிருதிணை,[3] மியாயிக,[4] சும்மாயிரு,[5] வாளாயிருப்போமோ,[6] ஆயிற்று, ஆயினள்.

இ — ஈறு: முனிவர், அறிவர், அறிஞர், கணிவன்.[7]

ஈ — ஈறு: நீவிர்,[8] நீவிர்கள்.[9]

ஊ — ஈறு: கூயினன், மூயினர்.[10]

ஏ — ஈறு: சேயடி — சேவடி, ஏயெலாம் — ஏவெலாம்

ஐ — ஈறு: ஐவர், இறைவன், தலைவர், பகைவர், ஐவைந்து, ஐயைந்து, குறைவு மில்லை, குறையுமில்லை, கைவாறு, எனைவர்.[11] கிணைவன்[12] கிணையன், கொலைவன்[13] கொலையன்.

ஓ — ஈறு: கோயில் கோவில், போயினன், போயிலை (புகையிலை), ோயினர்.[14]

---

1. மணிமேகலை: 14: 32.
2. தொல். சிறப்புப்பாயிரம்.
3. தொல் சொல். சூத். 1
4. நன்னூல் சூத். 440, தொல். சொல்சூத். 274.
5. உயர்தரக்கட்டுரை இலக்கணம், ஞா. தேவநேயன்: பக். 209.
6. ''நாவலர் பெருமான்'' சுத்தானந்த பாரதியார்: பக்கம் 46.
7. புறப்பொருள்வெண்பாமாலை, 8: 20.
8. கந்தபுராணம், 1.7: 8.
9. ,, 2.6: 16.
10. ,, 3.16:18.
11. பெருங்கதை. வத்தவ. 3.22
12. புறப்பொருள் வெண். 8: 32.
13. புறநானூறு 152.
14. கந்தபுராணம். 1.14:81.

உடம்படுமெய்களாக ஓதப்பட்ட யகர வகரங்கள் எல்லா உயிரீறுகளிலும் வருமென்பதனை மேற்போந்த உதாரணங்கள் விளக்குகின்றன. அன்றியும் உயிரெழுத்துக்களிற் பல இருவிதமாக அஃதாவது எடுத்தல் படுத்தல் ஒலியுடையன என்றும் புலப்படுத்துகின்றன. அவ்வித ஒலிமாற்றத்திற்கிசைய யகரமோ வகரமோ உடம்படுமெய்யாக வருகின்றன என்பதே தெளிவு.

இனி, தொல்காப்பியனர் ''வரையாரென்றதனுன் உடம்படுமெய் கோடல் ஒருதலையன்று'' என்று கருத்துப்படச் சூத்திரித்துள்ளார்.

அன்புள்ள + ஐயா — அன்புள்ளஐயா; அன்புள்ளவையா அல்ல.
இராம + இராவண + யுத்தம் — இராமராவணயுத்தம்; இராமவிராவணயுத்தம் அல்ல. (இவை வடமொழித் தொடர்கள்.)
தேறின + இலாபம் — தேறினலாபம்; தேறினவிலாபம் அல்ல.
மேலும், யகர வகரமொழிந்த வேறு உடம்படுமெய்களும் வந்துறுவதைக் காண்கிறோம். ஞகரமும் நகரமும் என்றார் கால்டுவெல்.
இளையர் — இளைஞர், இளைநர்.
கலையர் — கலைஞர்
வல்லுநர், வாழ்நர் என்பன போன்ற பிரயோகங்களும் இதனை வலியுறுத்துகின்றன.

அன்றி, வல்லுநர் வாழ்நர் போன்றவற்றில் வந்த நகரம் சாரியை என்பர். சாரியை என்பதற்கு இருபொருள் கூறப்படுகின்றது.

வேருகி நின்ற இருமொழியுந் தம்மிற் சார்தற் பொருட் கியைந்து நின்றது என்றவாறு (தொல். எழுத்து. சூத். 118 உரை)
சாரியை — பற்றுசு போல் விகுதி பதவுருபுகளிடை நின்று புணர்த்துவது (பிரயோகவிவேக. உரை. தத்திதப்படலம். சூ. 2 உரை)

சாரியை விகுதிப்புணர்ச்சி, பதப்புணர்ச்சி, உருபுப்புணர்ச்சி என்ற மூன்று புணர்ச்சிகளில் வந்தடையும் என்பர். நன்னூலார் மொழிநூல் வல்லார் உடம்படுமெய்யினையும் சாரியையும் ஒன்றென நினைக்கின்றனர் போலும்.

வேறோர் எழுத்தும் உடம்படுமெய் போல் வருகின்றது. அதுதான் ரகரமாகும். வாரும், தாரும் என்பதில் வரும் ரகரத்தை உடம்படுமெய் என்று கொள்வதிற் தவறில்லைப்போலும். கோ, கா என்ற வினையடிகள் உம் பெற்றுவரும் போது கோரும், காரும் (பேச்சுவழக்கு) என்றே வருகின்றன.

உடம்படுமெய் உயிரீறு இல்லாத இடங்களிலும் வந்துண்டு. இதனை மெய்யீற்று உடம்படு மெய் என்பர்,[1] நச்சினர்க்கினியர்.

---

1. நீத்தல்விண்ணப்பம் (திருவாசகம்) 44-ஆம் செய்யுளில்வரும் ''முழுதும் விழுதனையேனை'' என்பதிலுள்ள ''வ'' மெய்யீற்று உடம்படுமெய் என்பர், நா. கதிரைவேற்பிள்ளை. இங்கு இழுது என்பது விழுது என்ருயிற்று. ஆயினும் தமிழ் நாட்டில் இழுது, விழுது என்றே எங்கும் பேச்சுவழக்கில் உள்ளது.

கள்ளன் — கள்வன்[1]
செல்லுழி — செல்வுழி[2]
பயிலுழி — பயில்வுழி
விண் + அத்து — விண்வத்து[3]
வரலாறு — வரல்வாறு

மேலேயுள்ள உதாரணங்களில் வந்த வகரத்தை உரையாசிரியர் பலர் பலவிதமாகக் கூறியுள்ளனர். முடிபு இல்லே.

**ஆ. வடமொழிப் புணர்ச்சி**

இங்கு எடுத்துக் கூறும் விடயம் வடமொழிப் புணர்ச்சியன்று. வட மொழிப்புணர்ச்சி போற் புணர்ந்த தமிழ்ச் சொற்கள்,

விடு + ஊசி — விடுசி
மணம் + ஆளன் — மணுளன்
கடு + ஊழியம் — கடுழியம்
மரம் + அடி — மராடி
முழு + ஆள் — முழாள்

இவை தமிழ்ச் சொற்கள். தமிழ்ச் சொற்களும் சங்கத மொழிச் சொற்களும் புணர்ந்த வடமொழிப்புணர்ச்சி வருமாறு,

இடை + அந்தரம் — இடையாந்தரம்
ஈறு + அந்தம் — ஈருந்தம்
நடு + அந்தரம் — நடுவாந்தரம்
நாள் + அந்தம் — நாளாந்தம்
சின்ன + பின்னம் — சின்னுபின்னம்
சடை + முடி — சடாமுடி
சடை + அடவி — சடாடவி
போட்டி + போட்டி — போட்டாபோட்டி
வேளே + வேளே — வேளாவேளே
மீன் + அட்சி — மீனுட்சி

**6. செய்யும் என்றும் வினைமுற்று**

இயற்கைப் பொருளே இற்றெனக் கிளத்தல் என்ற தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்திற்கு உதாரணமாக

வளி உளரும்
உயிர் உணரும்

என்பவை தரப்பட்டுள்ளன. இதற்குக் குறிப்புரை எழுதியவர்கள், இவ்வுதார ணங்களேச் செய்யுமென்னும் வாய்பாட்டுத் தெரிநிலே வினைமுற்றுக்கள் என்றனர். உண்மையில் இவை போன்றவைதாம் செய்யுமென்னும் வாய்பாட்டு உதாரணங் கள். மற்றையவை ஒவ்வா. பல்லோர் படர்க்கை முன்னிலே தன்மை இவற்றில்

1. தேவாரம்: உள்ளங்கவர் கள்வன்.
2. நாலடியார்: 8
3. இடையில் வந்த வகரத்தை எழுத்துப்பேறு என்கிறுர். உ. வே. சாமி நாதையர். நடவாதான் என்பதிலுள்ள தகரம் எழுத்துப்பேறு என்கிறுர் நாவலர்.

இவ்வகை வினைமுற்று வாரா. ஆண்பாலிலும் பெண்பாலிலும் வருமென்பர் சிலர். அவன் உண்ணும், அவள் உண்ணும் என்ற இரு உதாரணங்களுக்காக இலக்கணங் கூறுதல் மரபன்று. இவ்வுதாரணங்கள் எந்த இலக்கியத்தில் உள்ளன என்பதும் அறியேம். ஆகவே இவை தள்ளற் பாலன.

பசு பால் கறக்கும்
கோழி கூவும்
கோழி முட்டையிடும்
பாம்பு கடிக்கும்
சிங்கம் கருச்சிக்கும்
சூரியன் உதிக்கும்
தெய்வம் நின்று அறுக்கும்
குயில் கூவும்
காகம் கரையும்

என்பவை போன்றவையே உண்மையில் செய்யுமென்னும் வினை முற்றுக்குரிய உதாரணங்கள் என்று நாம் தெளிவோமாக. மற்றை ''உம்'' ஈற்று வினைமுற்றுக் கள் சாதாரண எதிர்கால வினைமுற்றுக்கள் எனக் கொள்ளல் பொருத்தமுடைத்து.

**7. இனைத்தென அறிந்த சினை**

''கல்லாதான் சொற்காமுறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று'' என்பது திருக்குறள்.

இங்கு சொல்ல விரும்புவது குறள் விளக்கமன்று. சொற்றொடர்ப் பிரயோகம். பரிமேலழகர் தமது விருத்தியுரையில் ''இனைத்தென வறிந்த சினை'' யாகலின் தொகையொடு முற்றும்மை கொடுத்தார் என்கின்றார். ''இனைத்தென வறிந்த சினை'' என்பது தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்தொடர். அச்சூத்திர மாவது:

''இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியினும்மை வேண்டும்''

இத்தனைதான் என்று அறிந்த சினைப் பெயர்களின் தொகையினைக் கூறும் எண்ணுப் பெயருக்கு உம் இடைச் சொல் கொடுபடல் வேண்டும் என்பதே சூத்திரப் பொருள். இயங்கு திணைப் பொருள்களுக்கு கண், காது, கால் இவை சினைப் பெயர்கள். இத்தனை என்றுந் தெரியும். இவற்றின் தொகை இரண்டு. இரண்டு கண்ணுஞ் சிவந்தன என்று சொல்லுதல் சாலாது. ஏனெனில் இன்னும் வேறு கண்களுள, அவை இன்னுஞ் சிவக்கவில்லை என்ற பொருளையுந்தரும் என்பதனால் என்க. ஆகவே, கண்ணிரண்டுஞ் சிவந்தன என்பதே முறையானது. இங்கு இனைத்தென அறிந்த சினை கண். தொகை இரண்டு. தொகையில் உம் கொடுக்கப் பட்டுள்ளது. ஆகவேதான் முலையிரண்டுமில்லாதாள் என்றார் வள்ளுவர்.

இச்சூத்திரத்துக்குப் பொருள்கண்ட உரையாசிரியர்கள் பரிமேலழகரைப் போல் மிகவுந் தெளிவுபடுத்தினரல்லர். எனினும் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் இருவரும் தந்த உதாரணங்கள் சிறப்புடையன. இளம்பூரணர் நல்லதோர்

விளக்கமுந் தந்துள்ளார். மற்றையோர் காட்டிய உதாரணங்கள் யாவும் முற்றுமைப் பொருள் பயப்பனவேயன்றி சூத்திரப் பொருளை நிதானமாக உணர்த்துவனஅல்ல என்பது உய்த்துணரற்பாற்று.

இதே சூத்திரத்தை மேற்கோள் காட்டி இதற்கு உதாரணங் காட்டிய மொழி நூல் ஆசிரியராகிய மு. வரதராசன் பின்வரும் உதாரணங்களைத் தந்துள்ளார்.

1. ஐந்து விரலும் சிவந்தன
2. மூவேந்தரும் போற்றினர்.

முதலாவது உதாரணம் உண்மையில் பின்வருமாறு அமைதல் வேண்டும்.

விரலைந்துஞ் சிவந்தன.

இரண்டாவது உதாரணம் இச்சூத்திரத்துக்குரியதன்று. இவ்வுதாரணம் நன்னூலாரின் 399ம் சூத்திரத்திற்குரியது. முற்றும்மைப் பொருளது.

**8. மொழிப்பொருளை நீக்கும் நகரம்**

வடமொழிச் சொற்களின் எதிர்மறைப் பொருளைத் தரும் வகையில் அவற்றின் முன்னிற்கும் ''ந'' என்பதுபற்றி இலக்கண ஆசிரியர்களோ அகராதி விற்பன்னர்களோ சிந்தித்ததாகத் தெரியவில்லை. இந்த ''ந'' என்ற எழுத்துப் பலருக்கு மலையிடருக அமைந்துவிட்டது.

''நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வரும் நகரம்'' என்கிறது நேமிநாதம்.
''சொன்னமொழிப் பொருள் நீக்கு நகரம்'' என்கிறது வீரசோழியம்.
''அ அந் ந நி கு வி வருமொழிப் பொருளையின்மை
பிறிது மறையினு ளொன்ருக்கும்''

என்ருர் இலக்கணக்கொத்து ஆசிரியர்.

இவ்விதிகளை மற்றும் இலக்கண ஆசிரியர் போற்றிஞரல்லர். மொழிப் பொருளை அ, அந் எதிர்மறையாக்கும் என்கிறது, சென்னை அகராதி. ''ந'' என்ற எழுத்தே இவ்வினையைச் செய்கின்றது என்றே கொள்ளற்பாலது.

ந — அங்கன் — அநங்கன்
ந — ஏகம் — அநேகம்
ந — சுத்தம் — அசுத்தம்
ந — நீதி — அநீதி

இவ்வாறு எழுதுதலே முறை என்பது கருத்து. வீரசோழியமும் இதே கருத்தை வலியுறுத்துகின்றது.

நபுஞ்சகம், நாத்திகன், நமித்திரன் போன்ற சொற்களில் வேண்டிய மாற்றம் பெருது ''ந'' முன்னின்று பொருளை மாற்றியுள்ளது. புணர்ச்சி கட்டாயமானதல்ல என்பதனையும் இது உணர்த்துகின்றது.

வீரமாமுனிவர் தந்த இலக்கணநூலாகிய தொன்னூல் விளக்கம் என்ற நூலில் கோடாகோடி, நீதாநீதி, தேசாதேசம் முதலிய உதாரணங்களைத் தந்து

இவை இலக்கணமின்றியே புணர்ந்தன என்பர். இக்கூற்று தவறுடைத்து. இவ்வகையில் வருஞ் சொற்றொடர்களும் மேற்போந்த நேமிநாத வீரசோழியச் சூத்திரங்களின் பாற்படுமென்று கூறுதல் பொருத்தமுடைத்து.

கோடி + ந + கோடி – கோடா கோடி
நீதி + ந + நீதி – நீதாநீதி
தேச + ந – தேசம் + தேசாதேசம்

நேமிநாதம் வீரசோழியம் சூத்திரங்களைத் தெளிவுபடுத்திக் கொண்டால் இது விளங்குமன்றோ?

இதுவரை இலக்கியங்கண்டு அதற்கு இலக்கணம் இயம்பும் வகையில் இலக்கணத்தில் எடுத்தோதப்பட்டவையும் எடுத்தோதிய முறையில் முறைபிறழ்ந்தவையும் எடுத்தோதப்பட வேண்டியவையும் வகுத்துக் காட்டப்படலாயின. இவை போன்றவை இன்னும் பல.

இனி, வருவன இலக்கணம் பற்றியவை. இலக்கணமே வேண்டாம் என்பர் சிலர். இலக்கணம் ஓரளவிருந்தாற் போதுமென்பர் சிலர். புத்திலக்கணம் வேண்டுமென்பர் மற்றுஞ் சிலர்.

இலக்கணமே வேண்டாம் என்பார் இந்த உலக வாழ்க்கையே வேண்டாமென்று சொல்லித் தற்கொலை செய்பவர்களை ஒப்பர். உலகத்திலுள்ள அத்தனைப் பொருள்களிலும் இலக்கணம், இலட்சணம், குணுகுணம், தன்மை என்ற நியதி இருப்பதை நாம் காண்கிறோம். அவ்வாறிருக்க நாம் பேசுகின்ற மொழிக்கு மாத்திரம் இலக்கணம் தேவையில்லை என்பது பொருந்துமாறில்லை. சட்டந் தெரிந்தாற்றான் அதன் தேவை விளங்கும். சட்டந் தெரியாதவருக்குச் சட்டத்தின் தேவை விளங்காது. இலக்கணத்தை நன்கு கற்றுத் தேறிய ஒருவரே அதனைப் பற்றிய அபிப்பிராயம் கூறவல்லார் என்பது வெள்ளிடைமலை.

ஓரளவுண்டாற் போதும் என்பாரைப் போல் ஓரளவு இலக்கணம் என்கின்றனர். இஃதோர் போலி ஒப்பீடு. ஆங்கிலம் படிக்கின்றவர்கள் Functional Grammar படித்தாற் போதும் என்பர். தமிழ் மொழியில் இலக்கணச் சுருக்கம் என்று ஒன்றுண்டு. அஃது இலக்கணத்தைச் சுருக்கமாக விளக்குவது. இலக்கணச் சுருக்கங்கள் பல மிகவும் விரிவான விதிகளை விதந்தோதாது வாழ்க்கைக்கு உதவும் வகையில் தமிழை உணர்த்துவன. தமிழை முறைப்படி கற்றுத் தேறவும் அதனை மற்றையோருக்கு நன்கு உணர்த்தவும் விரும்புவோர் முறைப்படி சுருக்கம் கற்று நன்னூல் தேறிப் பின்னர் தொல்காப்பியம் படித்தல் வேண்டும்.

புதுப்புது ''இலக்கியங்கள்'' ''கவிதைகள்'' கதைகள் – சிறியனவும், பெரியனவும், விமரிசனங்கள், மொழிபெயர்ப்புகள் என்ற வகையில் நூல்கள் இக்காலம் தோன்றி வருகின்றன. அவற்றிற்கு இலக்கணம் வகுக்க வேண்டுமென்று பெருங்கூக்குரல் போடுகின்றார்கள்.

கவிதை பாடுகின்றார்கள். Blank Verse என்று ஆங்கிலத்திற் சொல்லப்படுவன தமிழில் வெறுங்கவிதைகள் எனப்படும். வெறுமை ஈண்டைக்குச்

''சும்மா'' என்று பொருளல்ல. ஆங்கிலத்தில் Blank என்பதைத் தமிழிற் புலப்படுத்துஞ் சொல் வெறுமை. இக்கவிதைகளில் எதுகை மோனை இல்லாமையைக் குறிக்கும். தாங்கள் பாடுங்கவிதைகள் எதுகை மோனை இல்லாதவை எனச் சொல்லி அவற்றிற்குத் தேடியலையும் கவிதையரையும் நாம் பார்க்கிறோம்.

எதுகை மோனை இல்லாத செய்யுள்கள் பண்டைக்காலப் புலவர் பாடாமல் இல்லை. நிறையப் பாடியுள்ளார்கள். இவ்வகைப் பாடல்களைச் செந்தொடை என்பர்.

''வரன் முறையான் முந்திய மோனை முதலா முழுதும்
ஒவ்வாது விட்டாற் செந்தொடை நாமம் பெறும்''

என்று கூறி அசை சீர் முதலியன செம்மையனவாக ஆராய்ந்து கொண்டு அடி பொருந்தத் தொடுக்கப்படும் பாவிலே யாண்டும் தவருது வந்து நிற்கும் முறையிலே முந்தி நிற்கின்ற மோனை எதுகை முதலாக ஒன்றும் வந்து பொருந்தாமல் ஒழியுமாயின் அத்தொடை செந்தொடை என்னும் பெயர் பெறும் என்று விரித்துள்ளனர். இதுபற்றிய விரிவினை யாப்பருங்கலவிருத்தி தொல்காப்பியம் செய்யுளியல் என்பவற்றிற் பார்த்தல் கூடும்.

இவ்வாறு பண்டைக்காலந் தொட்டு வந்தடைந்த செந்தொடைச் செய்யுள்களை நாம் கண்டு அனுபவித்துள்ளோம். ஆங்கிலவாணியினைப் பின்பற்றிக் கவிதை புனைவோர் இருக்கும் மரபை அறிந்து அதனை விருத்தி செய்தல் நலனுகும். ஆங்கிலமொழியும் இப்புதுமுறைக் கவிதைகளைப் பதினரும் நூற்ருண்டளவில் இத்தாலியில் இருந்து இறக்குமதி செய்ததென்பர்.

இப்புதுமுறைக்கவிதைக்கு இலக்கணம் வகுக்கப்பட வேண்டுமென்று கவிஞர் கூறுகின்றனர். இக்கவிதைகளை இயற்றும் ஆற்றல் படைத்த அவர்களே இலக்கணத்தையும் வகுக்கலாமே. ஆங்கிலத்தில் இதற்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. சேக்ஸ்பியர் அந்த இலக்கண முறையைத் தழுவியே தமது நாடகங்களை எழுதினர் என்பர். மில்டன் கூட தமது நூல்களை இவ்வகைக் கவிதைகளிற் பாடியுள்ளார். ஆனுல் அவர்கள் இலக்கணத்துக்கு அடிமைகளாகாமல் அவ்விலக்கண அடிப்படையில் நின்று இலக்கியங்கள் ஆகியுள்ளனர்.

புதுமுறைக் கவிதையில் தமிழ் மொழியில் நாடகவிலக்கியம் புனைந்த பெருமை மனேன்மணிய ஆசிரியராகிய சுந்தரம்பிள்ளையினைச் சாரும். இவருக்குப் பின்னர் பாரதியார் வசனகவிதை பல பாடினர் என்பர். இசைப்பாடல்கள் பலவும் செய்யுள்களும் பாடினர் என்று கூறுதல் பொருத்தமுடைத்து. பாரதிதாசன், சுப்பிரமணியயோகி, வேந்தனர், கண்ணதாசன், கம்பதாசன், சுவாமி விபுலானந்தர் போன்றவர்களும் புதுக்கவிதை பாடியுள்ளனர். இவர்கள் யாவரும் நல்லறிஞர். இவர்களைப் போன்ற நல்லறிஞர் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிருர்கள். ஆகவே இவ்வழியில் உழைக்கின்ற பெரியார்கள் புதுக்கவிதைகளின் இலக்கணத்தை ஆராய்ந்து அதனை எழுதித் தமிழ் கூறும் நல்லுலகத்துக்கு அளிப்பாராயின் போற்றுதற்குரியவராவர்.

இனி, இக்கால வசனநடைக்கு வருவோம். வசனநடை கைவந்த வல்லாளர் ஆறுமுக நாவலர். இவருக்குப் பின் வசனநடையைச் சிறப்பாகவும் சீராகவும் எழுதி வந்தவர் பலர்.

தமிழில் வசனநடைக்கு இலக்கணம் எழுதப்படவில்லை. சொற்றொடர் இலக்கணமே எழுதப்பட்டிருக்கிறது. அவ்விலக்கணத்தின் விளைவே வசனமாகும். ஆகவே வசன இலக்கணம் வேண்டற்பாற்றன்று.

வசனமும் ஒருவகைப் பத்திய வடிவமே என்பர். ஆகவே எதுகை மோனை உள்ள வசனங்கள் எழுதித் தமிழ் மொழியினை அலங்கரித்தவர் பலர். சேதுப்பிள்ளை, அண்ணாதுரை போன்றோர் அவ்வாறு எழுதியவர்கள்.

தமிழ் மொழியில் வசனநடை சென்ற இருநூறு ஆண்டுகளில் மிகவும் வேகமாய் வளர்ந்து விட்டது. இதனாற் பழைய செய்யுள் நூல்களைப் படிப்பார் தொகை குன்றிவிட்டது. இவ்வாறு படிப்பதாயின் அந்நூல்கள் யாவும் சொல் சொல்லாகப் பிரித்தும் குறியீடுகள் இட்டும் படிப்பிக்கப்பட வேண்டியனவாகின் றன. வசன கவிதையில் நாட்டம் ஏற்பட்டமைக்கு இதுவும் காரணமாகும். இவ் வாறு புதிய வசனநடையில் ஆயிரக்கணக்கான புத்தகங்கள் வெளிவந்து கொண்டே இருக்கின்றன.

இவ்வாறு வெளிவரும் புத்தகங்களின் வசனநடை கோணல் கோணலாக வளர அவ்வகை வசனநடையினைப் பலரும் பலவாறாகப் பிரித்துக்காட்ட முற் படுகின்றனர்.

| | | |
|---|---|---|
| பண்டிதத்தமிழ் | முழக்கத்தமிழ் | ஆங்கிலமொழித்தமிழ் |
| பத்திரிகைத் தமிழ் | சூறுவளித்தமிழ் | ஆட்சித் தமிழ் |
| எதுகை மோனைத் தமிழ் | துள்ளல் தமிழ் | கிறித்தவர் தமிழ் |
| முற்போக்குத் தமிழ் | தூங்கல் தமிழ் | இசுலாமியர் தமிழ் |
| நற்போக்குத் தமிழ் | ஏட்டுத்தமிழ் | மறுமலர்ச்சித் தமிழ் |
| சோலைத் தமிழ் | நாட்டுத்தமிழ் | மேடைத்தமிழ் |
| சாலைத்தமிழ் | வடமொழித் தமிழ் | |

என்றின்னும் பலவகையாகின்றது இன்றைய வசனநடை.

இவையொரு புறமிருக்கட்டும். கருத்தைச் சிறப்பான முறையில் தெரி விப்பதே மொழி. வசனநடைக்குக் கருத்து வெளிப்பாடே ஆதாரம். அதனை விட்டுச் சும்மா சொற்களை அடுக்கிச் சொல்வது வசனநடையாகாது. பொருள் பயப்பதே சொற்றொடரின் நோக்கமாகும். பொருள் தாராச் சொற்றொடர் எழுதுவாரும் உளர். ''ஆற்றிற் கெட்ட கழுதைப் பாக்கம் ஊரிலிருந்த குயவனுக் குப்பாரம்'' என்பது ஒரு வசனம். இதற்கு எவ்விதப் பொருளுமில்லை.[1] இது போன்ற வசனம் எழுதுவார் இக்காலத்திற்பலர்.

> தேசிய இலக்கியம் என்பது ஒருவகைப் போராட்டம்;
> நன்றியுரையென்பது ஒரு பழைய உளுத்துப் போன சம்பிரதாயம்;
> யதார்த்த ரீதியான தத்துவார்த்தக் கண்ணோட்டத்தின் முனைப்புகளின்

1. இது சரியன்று. இக்கருத்தை இளம்பூரணர் கூறுகிறார். இது சுவையான கதைப் பொருளுடையது.
—பதிப்பாசிரியர்.

ஆழ்ந்த முற்போக்கு வித்துவ உணர்ச்சிகளோடு கூடிய வெளிப்பாடு களின் பிரதிபலிப்பான சகோதரத்துவ அங்கலாய்ப்புகளின் மேல்வாரி யான எச்சசொச்ச அடிப்படையின் உள்ளார்த்தங்களை விமரிசன உத்தி களால் அறுபதுகளின் காலகட்டத்தில் சமத்துவ ரீதியாக அடிநிலைமக்களின் சுயபண்பாட்டுப் பிரக்ஞையின் சித்தாந்தங்கள் காரணிகளாயின.

இவ்வகை வசனங்களுக்கோ இவற்றிலுள்ள சொற்களுக்கோ பொருளில்லை. இவ்வாறு எழுந்த அருத்தமில்லாத சொற்களைக் கொண்டு வசனங்களாக்கும் பெருமகார்க்கு நாம் கூறக் கூடியதென்ன? விட்டுவிடுதல் சாலச்சிறந்தது.

தமிழ் மொழி இலக்கணத்தின் சிறப்பு என்னவெனிற், திணை, பால், எண், இடம் என்ற பகுப்பே எனலாம். தமிழில் உள்ள மாதிரி உலகத்தின் வழங்கும் ஏதாவது ஒரு மொழியிலும் இந்த வகைப் பாகுபாடு இல்லை. ஆகவே சொற்களை உருவாக்கும் போது நாம் இந்தவகைப் பாகுபாடுகளைப் பிரயோகித்துப் பார்த்தல் வேண்டும். மொழிபெயர்ப்புக் காரணமாகப் பல புதுச் சொற்கள் பரவிக்கொண்டே வருகின்றன. அவற்றுட் சிலவற்றை இங்கு இலக்கணவகை யான் ஆராய்தல் தவறுடைத்தன்று.[1]

முதலில் ஒன்றியம். இதன் ஆங்கிலம் union. ஒன்றியம் என்ற சொல் பெயர்ச்சொல்லாக அமைகின்றது. அவ்வாறுயின் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற வகையில் இது எவ்வகைப்பெயர். காரணப்பெயர் இடுகுறிப்பெயரிலடங்குமா? ஒன்றிலும் அமைவதாகக் காணேம். ஆகவே, இச்சொற்பிரயோகம் பிழைபாடானது.

தாபனம் என்ற சொல்லுக்குத் தனித்தமிழ் கண்டு பிடிக்கப்போய் முடிவு கட்டின சொல் நிறுவனம். தாபி என்பதற்குத் தனித்தமிழ் வினையடி ''நிறுவு'' எனக் கொண்டு அங்கு தாபனம் என்ற சொல்லிலுள்ள அனம் விகுதியைச் சேர்த்து உண்டாக்கிய சொல் நிறுவனமாகும். ஆகவே இச்சொல் அனுலோமன் வகையைச் சாருகின்றது. தூக்கணம், கட்டணம், துரப்பணம், இலக்கணம் என்ற தூய தமிழ்ச் சொற்கள் போல் ''நிறுவனம்'' என்று அணம் விகுதியைக் கொடுத்தல் சாலச் சிறந்தது.

ஆங்கிலத்தில் personality என்ற ஒரு சொல். இதற்குத் தமிழ்ச் சொல் தேடினர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. ஆளுமை என்ற சொல்லை உருவாக்கினர். ஆள் + மை என்பது ஆண்மை என்று ஏலவே புணர்ந்துள்ளது. ''ஆண்மைதரும் கல்வியே கல்வி'' என்றார் சுவாமி விவேகானந்தர். ஆகவே ஆளுமை என்பது ஆண்மையாகாதோ என்பது கேள்வியாகும்.

காப்புறுதி என்றொரு சொற்றொடர். காப்பு உறுதி எனப்பிரிபடும். பாதுகாப்பு உறுதியானது என்பதே பொருள். ஆயுள் காப்புறுதி என்றால் ஆயுள் பாதுகாக்கப்படுவது உறுதி என்பது சொல்லொடு பொருளாகும். அது போல் நெருப்புக்காப்புறுதி, பயிர்க்காப்புறுதி என்றெல்லாம் வருகின்றனவே. insurance,

---

1. இதன் பின்வரும் பகுதிகள் காலபோக்கிற்கு ஒத்தனவாகா, 'புதியன புகுதல் வழுவன்று' என்ற இலக்கண விதி இங்குச் சிந்திக்கத் தக்கது. —ஆசிரியர்.

assurance என்ற ஆங்கிலப் பதத்திற்கு நேரிய மொழி பெயர்ப்பு இது. ஆங்கிலத்தில் insurance என்ற சொல் assure against loss என்ற பொருளைத் தரும் சொற்றொடரின் சுருக்கமேயாம். ஆனால் காப்புறுதி என்ற சொல் அவ்வாறு பொருள் பயக்கவில்லை.

Acceleration என்றோர் ஆங்கிலச் சொல். இதற்கு ஆர்முடுக்குதல் என்று மொழி பெயர்த்துள்ளார்கள். இங்கு ''ஆர்'' என்ற உபசர்க்கம் ஆரோசை என்பதிலுள்ள ஆர் போலிருக்கிறதாம். இங்கு ஓசை பெயர்ச்சொல். முடுக்குதல் வினைப்பெயர். இதனை விரித்தால் ஆர்முடுக்கினான், ஆர்முடுக்குகிறான் என்றெல்லாம் வரும். இவ்வாறு வந்தால் கருத்தென்னாமோ?

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கொலைக்களக்காதை என்று ஒரு பிரிவு வைத்துள்ளார். இன்றுள்ளார் கொல்களம் என்று வினைத்தொகையாக்குகின்றனர். Slaughter House என்பதற்குக் கொல்களம் என்பர்!

மாண்புமிகு என்பது இக்காலத்து அமைச்சர்களுக்கு அடைமொழி. இது வினைத்தொகையாய் நிற்கின்றது. வினைத்தொகை நிலைபெறான பொருளுடன்தான் வரும். அமைச்சர் தொழிலைத் துறந்த பின்னரும் இவர்கள் மாண்புமிகு என்ற அடைமொழியைப் பெறுவார்களா? எனவே மாண்புமிக்க என்று அடைமொழி கொடுத்தலே செந்தமிழ்ப் பண்பாடாகும்.

காரணி என்றால் உமாதேவியார் என்பது பொருள். இக்காலத்தில் இச்சொல்லை இலங்கையில் உள்ளார் புத்தம் புதிய சொல்லெனக் கூறிக் காரணம், ஏது என்ற பொருளிற் பயன்படுத்தி வருகின்றனர். புதுச்சொல்லாயின் அது பழைய சொல்லினைப் போலிருத்தலாகாது என்பது மொழிவல்லார் கருத்து. ஆங்கில மொழியில் நாடோறும் சொற்கள் ஆக்கப்பட்டு வருகின்றன. அச்சொற்கள் முன்னைய சொற்களைப் போலிருப்பதில்லை. பழைய சொற்களுக்குப் புதுக்கருத்தும் அவர்கள் கொடுப்பதில்லை. இவ்வகையில் காரணி என்ற சொல்லினை ஆராய்ந்து பார்த்தல் அது தவறுடைத்து என்பது புலனாகும்.

இதுவரை, இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பல் என்ற வகையில் இலக்கணத்திற் சேர்க்கப்பட வேண்டியவை பற்றியும் புத்திலக்கணமாக விதிக்கப்பட வேண்டியவை பற்றியும் புதியனபுகுத்தல் வகையில் வந்தடைந்துள்ள புதுச்சொற்கள் பற்றியும் ஆராய்ந்தாம். அறிஞர்கள் ஆற்றல் வாய்ந்தவர்கள் இக்கட்டுரைக் குறிப்புகளை மனதில் வைத்துச் சேர்க்கப்பட வேண்டியவற்றை ஏற்றும் நீக்க வேண்டியவற்றை அகற்றியும் செந்தமிழ் வளர்ச்சியடைய ஆவன புரிவாராக.

# நாடகக் கலையும் சோழப் பெருமன்னர் கால இந்துக் கோயில்களும்

**கலாநிதி செல்லத்துரை குணசிங்கம்**
வரலாற்றுத்துறை, பேராதனைப் பல்கலைக் கழகம், இலங்கை

சோழப் பெருமன்னர் காலத்தில் இந்துக் கோயில்கள் அமைப்பிலும் தொழிற்பாட்டிலும் உச்சம் பெற்று விளங்கியபொழுது இசைக் கலையையும் நடனக் கலையையும் போன்று, அக்கோயில்களை மையமாகக் கொண்டு வளர்ந்த இன்னெரு கலை நாடகக் கலையாகும். இந் நாடகக்கலை, கோயில்களிற் பெற்றிருந்த செல்வாக்கினை அறிவதற்குப் போதிய தகவல்கள் கிடைக்கவில்லை. ஆயினும், கிடைக்கின்ற சில தகவல்களைக் கொண்டு கோயில்களில் இக்கலை எவ்வாறு பேணப்பட்டது, எத்தகைய ஆதரவைப் பெற்றது, இதன் வளர்ச்சியிற் கோயில்கள் பெற்ற பங்கு என்ன என்பன போன்ற அம்சங்களை விளக்க முயலலாம். இக்கால நாடகக்கலை பற்றி அறிவதற்குக் கிடைக்கும் செய்திகளை முதலில் நோக்கலாம்.

1. தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருவதிகை என்ற இடத்திலிருந்து கிடைக்கின்ற உத்தம சோழனின் பதினன்காம் ஆண்டுக்குரிய சாசனம் நாடகசாலை ஒன்று பற்றிக் கூறும்.[1]

2. நானுவித நாடகசாலையைப் பராமரிப்பதற்காகவும் நடனமாதர்களுக்குப் பாடல் இசைக்கவிருந்த பாடகர்களை ஆதரிப்பதற்காகவும் தானங்கள் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டமை பற்றிக் குலோத்துங்க சோழனின் நாற்பத்தாறும் ஆண்டுக்குரியதுவும் திருவாவடுதுறையிலிருந்து கிடைப்பதுமான சாசனமொன்று குறிப்பிடும்.[2]

3. இரண்டாம் ராஜேந்திரனின் ஆறும் ஆட்சியாண்டுக்குரிய தஞ்சாவூர்ச் சாசனமொன்றில், தஞ்சாவூர்ப் பெரிய கோயிலில் வைகாசித் திருவிழாவின்போது, ராஜராஜேசுவர நாடகம் நடிப்பதற்கு நடிகர்குழு ஒன்றுக்குத் தானமாக நூற்றிருபது கலம் நெல் வழங்கப்பட்ட செய்தி காணப்படும்.[3]

4. திருநல்லமுடையார் கோயிலில் வைகாசி விசாகம், மாசி மகம் ஆகிய விழாக்களில் ஐந்து அங்கங்களுடைய நாடகம் ஒன்று அரங்கேற்றப்படுவதற்காகச் சிறிகாந்தன் அரங்கன் என்பவனின் பிள்ளைகளுக்கும் அபிமானமேரு நாடகப் பேரரையனுகிய சிறிகாந்தன் கம்பன் என்பவனுக்கும் நிலங்கள் தானமாக வழங்கப்பட்டன என முதலாம் ராசாதிராசனின் காலத்துக்குரிய சாசனம் ஒன்று கூறுகின்றது. இச்சாசனம் தொடர்ந்து, சிறிகாந்தன் அரங்கன் என்பவனின் பிள்ளைகளுக்கும் அபிமானமேரு நாடகப் பேரரையனுக்கும் அவர்களோடு சேர்ந்து நடித்தவர்களுக்கும் திருவிழாக் கொற்றுக இருபது கலம் நெல் கொடுக்கப்பட்ட

தெனவும், நாடகத்திற் பங்கு கொண்டோர் வேடம் போடுவதற்காக ஒரு நாழி எண்ணெயும் ஒரு நாழி அரிசியும் கொடுக்கப்பட்டன எனவும் கூறும்.[4]

5. முதலாம் குலோத்துங்க சோழன் காலத்திற் சைவமடம் ஒன்றின் தலைவராக இருந்த வீரைப்பரசமய கோளரிமாமுனி என்பவர் பூம்புலியூர் நாடகம் ஒன்றை எழுதி நிலத்தானம் பெற்றார் எனத் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள கூடலூர் தாலுகாவைச் சேர்ந்த திருப்பாதிரிப் புலியூரிலிருந்து கிடைக்கும் குலோத்துங்க சோழனின் நாற்பத்தோராம் ஆண்டுக்குரிய சாசனம் ஒன்று கூறுகின்றது:[5]

ஸ்ரீ குலோத்துங்க சோழ தெவர்க்கு யாண்டு 41;

1. திரு வாழுங் கரைஞாழற் சினைமருவும்
..........[1] சாசனந்தென் மருதம் பாகைக்
கருவாழ வருங்கமலா லயற்குக்
கன்னிவள புராணம் பாடிப்
பரிசிலொடு நாடகமும் செய்தாற்கு(ச் சிறப்பா)ப்
பாலையூரி விருபூவும் விளையும் (பாரில்)
ஒருமா நன்நில ..........[2] கிளையினெடு
மூழிதொறும் இறையிலியை உரைத்தானே.

2. மாங்கொல்லை யிலிரண்டு மாவொருமா முக்காணி
யோங்கு மறப்பெருஞ் செல்வி யொருகாணி
பூவமர்க் காணியினிற் பூம்புலியூர் நாடகம் செய்
நாவலன் பெற்ற நலம்.

பரசமய கோளரிமாமுனி, கோயிற் கடவுளின்மீது கன்னிவனப் புராணம் பாடிப் பரிசு பெற்றதாக மேற்படி சாசனம் கூறுவதால், அவர் இயற்றியதாக அதே சாசனம் குறிப்பிடும் பூம்புலியூர் நாடகம் சமயத் தொடர்பான விடயங்களைக் கொண்டதாக அமைந்துக் கோயில்களில் நடிக்கப்பட்டிருக்கலாம்.

இவ்வாறு கிடைக்கும் நாடகக் கலை பற்றிய குறிப்புக்கள் சிலவற்றைக் கொண்டு இக்காலமளவில் இக்கலை எவ்வாறு கோயில்களிற் பேணப்பட்டதென அறியலாம். முன்னர்க் குறிப்பிட்ட குலோத்துங்க சோழன் சாசனம் நானுவித நாடகசாலை ஒன்று பற்றிக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. ஒன்றுக்கு மேற்பட்ட அமைப்புடைய நாடகசாலைகள் இருந்தமையையே இத் தொடர் விளக்குகின்றது. இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட நாடகசாலைகள் இருந்தமை பற்றியறியக் கிடைக்கும் குறிப்பு, சோழர் காலத்துக்குரிய ஆயிரக்கணக்கான சாசனங்களுள் ஒன்றில் மட்டுமே கிடைத்துள்ளது. ஒரு குறிப்பினை மாத்திரம் கொண்டு பலவகையான நாடகசாலைகள் பற்றிய கருத்தை வலியுறுத்துவது கடினமாகும். இச்சந்தர்ப்பத்தில், இக்காலத்துக்கு முற்பட்ட காலத்துச் சில தகவல்களை இங்குப் பயன் படுத்தலாம். நாடகக் கலை முற்பட்ட காலங்களிலும் சிறப்புப் பெற்றிருந்தது. இந்திய நாடகக் கலையின் தோற்றத்தினைச் சிலர் இருக்குவேதத் தோத்திரப் பாடல்களிற் காணப்படும் சம்பாஷணைச் செய்யுட்களுடன் தொடர்பு படுத்தி,

---

1, 2: இவ்விடங்கள் சாசனத்துள் தெளிவில்லை; சிதைவு.

நாடகக் கலையின் ஆதித் தன்மையைக் காட்ட முயன்றுள்ளனர்.[6] இந்திய நாடகக் கலையின் தோற்றம் எப்போது என்பது பிரசினைக்குரியதாக இருந்தாலும் சோழர்காலத்துக்கு முன்பிருந்தே இந்தியாவின் பல பாகங்களிலும் நாடக நூல்கள் இயற்றப்பட்டு அக்கலை வளர்க்கப்பட்டு வந்தமைக்குச் சான்றுண்டு.[7] தமிழ் நாட்டில் பல்லவர் காலத்திலே மகேந்திர வர்மன் மத்தவிலாசப் பிரஹசனம் என்ற நாடகநூலை இயற்றி நாடகக் கலையை வளர்த்தான் என அறியலாம். நாடகக் கலை முற்பட்ட காலத்திலிருந்தே இந்தியாவில் சிறப்புற்று வளர்ந்த கலையாதலால் அக்கலை அரங்கேற்றப்படுவதற்கான இடங்கள் பற்றிய கருத்தும் வளர்ச்சி பெற்றிருக்கலாம். இதற்கு உதாரணமாக, மானஸாரம் என்ற நாடக சாஸ்திர நூலைக் கொள்ளலாம். இந்நூலில் நாடகக் கலையின் பல்வேறு அம்சங் களும் அக்கலை அரங்கேற்றப்படுவதற்கான இடங்களின் அமைப்பு விதிகளும் கூறப்பட்டுள்ளன.[8] சோழர் காலத்துக்கு முன் எழுந்த மானஸார நூலில் கூறப் பட்டுள்ள நாடக அரங்கின் அமைப்பு விதிகளைச் சோழ நாட்டினரோ பிறரோ தாமும் நாடக அரங்குகளை அமைக்கும்போது பின்பற்றியிருக்கலாம். இதனுல், முன்னர்க் குறிப்பிட்ட திருவாவடுதுறைச் சாசனம் குறிப்பிடும் ''நானுவித நாடக சாலை'' என்பது மானஸாரத்திற் கூறப்பட்ட நாடக அரங்கு விதிகளைப் பின்பற்றி அமைக்கப்பட்ட பலவகை அமைப்புக்களையுடைய நாடக அரங்குகளைக் குறித்திருக் கலாம். மேலே கூறிய இக்கலை பற்றிய சாசனச் செய்திகள் எல்லாம் கோயில் நிறுவனத்தையும் இக்கலையையும் தொடர்பு படுத்துவனவாகக் காணப்படுவதால், கோயில்களில் இக்கலை மேடை யேற்றப்படுவதற்கான முக்கியத்துவம் இக்காலத்திற் பெரிதும் உணரப்பட்டு, அதற்காகப் பல்வேறு விதமான அமைப்புக்களையுடைய நாடகசாலைகள் அமைக்கப்பட்டிருக்கலாம்.

கோயில்களில் எப்போதும் இல்லாது முக்கியமான சமய விழாக்களில் மாத்திரமே நாடகங்கள் நடிக்கப்பட்டன. அதாவது, மேற்கண்ட சாசனங் களிலிருந்து மாசி மகம், வைகாசி விசாகம், வைகாசி விழா ஆகிய நாட்களில் நாடகங்கள் நடிக்கப்பெற்றன என அறியலாம். இது சம்பந்தமாக விசய நகரப் பேரரசுக் காலத்தில் தமிழ் நாட்டுக்கோயில் ஒன்றில் நடைபெற்ற திருவிழாவின் இரவு நிகழ்ச்சியை நேரில் அவதானித்த பியஸ் என்ற வெளிநாட்டு ஆசிரியர் அவ்விழா நிகழ்ச்சி பற்றிக் கூறியவற்றில் ஒரு பகுதியை நோக்கலாம்:

> ''விழா நாட்கள் எல்லாவற்றிலும் இடம் பெற்ற கலை நிகழ்ச்சி களும் விருந்துமே மிக்க கவர்ச்சிகரமானவை. விழாவின் ஒவ்வொரு நாளும் பேரரசில் உள்ள சாமந்தர்கள் அரசனை வணங்கிக் கௌரவித் தனர். நடனமாதர் அரசன் முன்னிலையில் ஆடினர். இராக் காலங் களில் அமைக்கப்பட்ட விளக்குகளின் பிரகாசத்தினுலே இரவு, பகல் போலக் காட்சி தந்தது. மிக்க நளினமான நாடகங்களும் பிற நிகழ்ச்சிகளும் நடைபெற்றன...''[9]

விசய நகரக் கால விழா நிகழ்ச்சிகள் பற்றிச் சமகாலத்தைச் சேர்ந்த வேறு ஆசிரியர்களும் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளமையால் பியஸின் மேற்படி வருணனையை நம்பத்தக்க செய்தியாகக் கொள்ளலாம். இவ்வாறு சமயச்சார் புடைய விசேட நாட்களில் நாடகங்கள் கோயில்களிலே நடிக்கப்பட்டமையினுல் அந்நாடகங்கள் கூறும் பொருள் சமயச் சார்புடையதாக இருந்ததெனலாம். இக்காலக் கோயில் நிறுவனத்தை மையமாகக் கொண்டு வளர்ந்த பிற நுண்கலை

களான இசைக்கலையிலும் நடனக் கலையிலும் நாடகக் கலை ஒரு விதத்திற் சிறப்பான முக்கியத்துவத்தைப் பெற்றிருந்தது. இதனைச் சோழர் காலத்துக் கோயில்களில் கொண்டாடப்பட்ட சமய விழாக்களின் துணைகொண்டு விளக்கலாம்.

பல்லவர் காலப் பக்தியியக்கத்தின் பெருவிளைவாகச் சோழப் பெருமன்னர் காலத்தில் சமயக்கருத்துக்கள் முக்கியத்துவம் அடைந்தபோது மக்களின் அன்றூட வாழ்வோடு மிக நெருங்கிய தொடர்புடையனவாக இக்கால இந்துக் கோயில்கள் காணப்பட்டன. பல வழிகளிலும் மக்கள் மனத்தைக் கவர்ந்த நிறுவனங்களாக இக்காலக் கோயில்கள் விளங்கியமையும் அந் நிறுவனங்களுக்குத் தனித்தன்மை அளிக்கின்றது. இதனைத் தொடர்ந்து இக்கோயில்கள் மக்களுக்குச் சிறந்த பொழுது போக்கு இடங்களாகவும் விளங்கின. இதனைப்போலும் சோழர் காலத்துக்கு முன்பிருந்த ஆட்சியாளரும் பிறரும் கற்பாறைகளையும் செப்பேடுகளையும் தமது பிரசாரத்துக்குரிய இடங்களாக்கிக் கொண்டபோது சோழர்காலப் பெருமன்னரும் பிறரும் கோயிற் சுவர்களைப் பிரசாரமேடைகளாக்கினர். இக்காலச் சாசனங்களிலிருந்து, கோயில்களிற் பெருந்தொகையான சமயவிழாக்கள் நடத்தப்பட்டமையை அறியலாம்.[10] தற்காலத்தில் நடைபெறுவதுபோன்று சோழர் காலத்திலும் கோயில்களில் சமய விழாக்கள் நடைபெற்றபோது அவை புராணக் கதைகளை மையமாகக் கொண்டே நடைபெற்றன. அதுவும், சமயம் மக்கள் வாழ்விற் பெரும் செல்வாக்கை ஏற்படுத்திய சோழர் காலத்தில் புராணக் கதைகள் பெருமதிப்புப் பெற்றன எனலாம். சோழர் காலச் சமய விழாக்களில் இடம்பெற்ற புராணக் கதைகளுக்குச் சான்றாகச் சமகாலச் சாசனச் செய்திகள் கிடைக்காமையாலே தற்காலச் சமய விழாக்களில் இடம்பெறும் புராணக் கதைகளில் இரண்டொன்றை உதாரணங்களாகக் காட்டலாம்.

சுசீந்திரம் கோயிலில் மார்கழி மாதத்தில் நடைபெறும் கொடியேற்று விழாவின் ஆறும் நாளில், 'திருமுலைப்பால்' என்ற நிகழ்ச்சி இடம்பெறும். அன்று காலையில் சிவ பார்வதி திருமேனிகள் ஊர்வலத்தில் எடுத்துச் செல்லப்பட்டு, ஊர்வலம் நாடகசாலைக்கு வந்ததும் ''திருமுலைப்பால்'' என்ற நாடகம் நடிக்கப்படும். இந்நாடகம் திருஞானசம்பந்தர் திருவருள் பெற்ற வரலாற்றைச் சித்திரிக்கும். இதே நாளின் இரவில் இந்து மதத்தவருக்கும் சமண மதத்தவருக்கும் நடைபெற்ற போட்டி பற்றிய அம்சம் சிறப்பு நிகழ்ச்சியாக அமையும். அதாவது, திருஞானசம்பந்தர் சமணருடன் போட்டியிட்டு சமணரை வாதில் வெற்றி கொண்ட நிகழ்ச்சியையும் சமணரின் தோல்வியால் அவர்கள் கழுவேறிய சம்பவத்தையும் இவ்விழாவில் நடித்துக் காட்டுவர். அதுபோன்று மகாசிவராத்திரி விழாவில், உலகத்தை அழிவிலிருந்து விடுவிக்கக் கருதிப் பார்வதி சிவனை வேண்டிய நிகழ்ச்சியைக் காட்டுவர்.[11] இவ்வாறே, சோழர் காலத்திலும் சமய விழாக்கள் முக்கியம் பெற்றுப் புராணக் கதைகள் அவற்றில் சித்திரிக்கப்பட்டபோது நாடகக் கலையின் தேவை பெரிதும் உணரப்பட்டு அக்கலை கோயில்களில் வளர்ச்சி பெற்றிருக்கலாம். குறுகிய காலப்பகுதியில் அதிகமான விடயங்களை வெளிக்கொணருவதற்கு நாடகக் கலை சிறந்த சாதனமாகும், இந்த இடத்தில் நாடகக் கலை பற்றிச் சுத்தானந்த பாரதியார் கூறிய கருத்தைக் காணலாம்.

''வருந்திக் கற்றலைவிடக் கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் அரிய பயனைப் பெறலாம். நல்ல நாடகங்கள் ஒரு சமுதாயத்தை

உயர்த்தும்; நாகரிகத்தை முன்னேற்றும்; இரு விகார உலகைக் கண் முன்னே காட்டும்; புலன்களின் வழியே அறிவைப் புகட்டும்; சிறந்த கல்விப் பயனை அளிக்கும். அடிமைத்தனம், காமம், வெகுளி, மயக்கம், சிறுமை, பொறுமை, ஆணவம், வஞ்சகம், குடி, களவு, சூது ஆகிய தீமைகளின் கொடுமையைக் கண்முன்னே காட்டும்; வாய்மை; தூய்மை, அன்பு, அருள், வீரம், அறம், தெய்வபக்தி ஆகிய நல்லியல்பு களை ஊக்கும்; உலகின் முக்குணப் போராட்டங்களை மேடைமேல், திரைமுன்பே காட்சிப்படங்களாக விளக்கும்; நாடகம் என்பது நடிக்கும் வேதம்; இறையன்பு, நாட்டன்பு, சமுதாயச் சீர்திருத்தம், இலக்கியப்பயிற்சி, காவியம், ஓவியம், பாட்டு, நடனம் ஆகிய கலை வளர்ச்சி, சன்மார்க்கவுணர்ச்சி இவையெல்லாம் திறமையுள்ள பாத்திரர் நடிக்கும் நாடகத்தால் உண்டாகும். ஒரு பொது நல இயக்கத்தைப் பொது ஜனங்களிடையே பரப்பி வெற்றிபெறச் செய்வதற்கு நாடகம் சிறந்த சாதனமாகும்.''[12]

ஆகவே, சமயக் கருத்துக்கள் வலுப்பெற்றிருந்த சோழர் காலத்தில், மக்கள் மனத்தில் அக்கருத்துக்களை மேலும் வளர்ப்பதற்கும் பக்தியையூட்டு வதற்கும் கோயில்களில் விழாக்கள் நடைபெற்ற காலங்களிற் புராணக் கதைகள் நாடகங்களாக நடித்துக் காட்டப்பட்டன எனலாம். இந்த விதத்தில் நாடகக் கலையின் வளர்ச்சிக்குரிய இடமாக இந்துக் கோயில்களே காணப்பட்டன.

முன்பு கூறியதுபோன்று, இக்காலத்துக்குரிய நாடகக்கலை பற்றியறியக் கிடைக்கும் தகவல்கள் நாடகங்களையும் கோயில்களையும் தொடர்புபடுத்துவன வாகவே உள்ளன. அரசர்கூட நாடகங்கள் நடிக்கப்படுவதற்காக நடவடிக்கை களை மேற்கொண்டபோது அந்நாடகங்கள் கோயில்களில் நடிக்கப்படுவதற்கே அவர்கள் ஒழுங்கு செய்தனர். இரண்டாம் ராசேந்திரன், இராசராசேசுவர நாடகம் தஞ்சாவூர்க் கோயிலிலே தொடர்ந்து நடிக்கப்படுவதற்கு ஒழுங்குசெய்த போது அந் நாடகத்திற் சம்பந்தப்பட்டவர்களுக்கு அரசின் திறைச் சேரியிலிருந்தே ஊதியம் அளித்தமையைக் காணலாம்:

''இவனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் காணியாகப் பங்கு ஒன்றுக்கும் ராஜகேஸரியோடொக்கும் ஆடவல்லானென்னும் மரக் காலால் நித்த நெல்லுத் தூணியாக நூற்றிருபதின்கல நெல்லும் ஆட்டாண்டு தொறும் தேவர் பண்டாரத்தேபெறச் சந்திராதித் தவற் வெட்டித்து...''[13]

அரசன் தன்னுடைய திறைச்சேரியிலிருந்து நடிகர்களுக்கு ஊதியம் கொடுத்த போதும், கோயிலிலேயே நாடகத்தை நடிப்பதற்கு ஒழுங்கு செய்தான் என அறியும்போதும், இக்கால அரசரும் கோயில் நிறுவனங்களில் நடிக்கப்பட்ட நாடகங் களுக்கு ஆதரவளித்தனர் எனலாம். அதாவது, காலத்துக்கேற்ற கருத்துக்களை மக்களுக்குப் புகட்டுவதற்குச் சிறந்த சாதனமாக விளங்கிய நாடகங்கள் ஆடப் படுவதற்குக் கோயில்களே ஏற்ற இடங்கள் என இக்கால மன்னரும் உணர்ந் தனர். நாட்டில் நாடகக் கலையிற் பிரியமுள்ள கலைஞர் தம் ஆற்றலை வெளிக் காட்டுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்கும் ஒரு நிறுவனமாக இக்காலக் கோயில் நிறுவனம் விளங்கியது. இவ்விதத்தில், ஏற்கெனவே நாடகக் கலையிற் பயிற்சி

பெற்றிருந்தோர் தம் பயிற்சியினை வெளிப்படுத்தவும் வேறு சிலர் இக்கலையில் விருப்புக் கொண்டு தம்மை அதில் ஈடுபடுத்திக் கொள்ளவும் இந்துக் கோயில் நிறுவனம் உதவியது என்ற வகையிலும் இந் நிறுவனம் இக்கலையின் வளர்ச்சிக்குத் தொண்டாற்றியது.

1. *Archaeological Survey of South India* Annual Report (ARE), 1921-22, No. 398 of 1921.
2. *Ibid.*, 152 of 1925.
3. *South Indian Inscriptions* (SII), II, Part III, No. 68.
4. *ARE for* 1965-67 Int. viii No. 437 of 1965.
5. *SII*, VII, Nos. 752, 753.
6. S. R. Krishnamoorthy, *A Study on the Cultural Developments in the Chola Period*, thesis approved for Ph. D. degree, Annamalai University (Annamalainagar, 1966), p. 77.
7. R. C. Majumdar and A. Pusalkar, *The Classical Age*, The History and Culture of the Indian People, (Bombay, 1954), pp. 308-11.
8. S. R. Krishnamoorthy, *op. cit.*, p. 82.
9. T. V. Mahalingam, *Administration and Social Life under Vijayanagar*, Madras University Historical Series – No. 15, (Madras, 1940), p. 339; Robert Sewell, *A Forgotten Empire* (*Vijayanagar*), A Contribution to the History of India (London, 1924), pp. 272-79.

10.

| சமய விழாக்கள் | ஆதாரம் |
|---|---|
| மார்கழித் திருவாதிரை | *496* of *1929-30*; *1914-15*, para *21*; *1912-13*, para *32*; *65* of *1914*; *76* of *1914*. |
| மாசி விழா | *436* of *1965-66* |
| ஏகாதசி நாள் | *629* of *1905* |
| கும்பமாத விழா | *273* of *1910* |
| ராஜராஜதேவர் திருநாள் | *274* of *1910* |
| மாசிமகம் | *334* of *1904* |
| சிவராத்திரி நாள் | *155* of *1914* |
| சிறிபலி விழா | *625* of *1920* |
| வைகாசித் திருவிழா | *245* of *1914* |
| ஞாயிறு விழா | *297* of *1917* |
| சித்திரைத் திருவிழா | *309* of *1917*; *29* of *1918*; *412* of *1904* |
| திருவாதிரை விழா | *54* of *1918* |
| பூசம் விழா | *242* of *1928* |
| வைகாசித் திருவாதிரை | *65* of *1914* |
| மாசி ஷஷ்டி | *73* of *1920* |
| பங்குனி மாத விழா | *33* of *1917* |
| ஏகாதசி நாட்கள் | *629* of *1905* |

11. K. K. Piilai, *The Sucindram Temple*. Kalakshetra Publications, Madras, 1953, pp. 205-40.
12. சுத்தானந்த பாரதியார், நாடகக்கலை, அன்பு நிலையம், (திருச்சி, *1941*), பக். *8-9*.
10. SII, Vol. 2, Part 3, No. 68, p. 306.

# சமூக நாடகங்கள்

டாக்டர் ஆறு. அழகப்பன்
தமிழ் இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

**உலகப் பொதுக்கலை**

கலைகளில் சில உலகத்திற்குப் பொதுவானவை; ஓவியம், சிற்பம், நாடகம் முதலான கலைகள் ஒரு நாட்டிற்கு மட்டும் உரிய கலைகளாக இல்லாமல் உலகம் முழுவதற்கு முரிய கலைகளாக விளங்கி வருகின்றன. இக்கலைகளில் நாடகக்கலை பிற கலைகளுக்கு இல்லாத ஒரு வனப்பையும் வலிவையும் பெற்றுள்ளது. நாடகக் கலை கண்டு களிக்கவும் கேட்டு உணரவும் கூடிய ஒப்பற்ற கலையாக விளங்குகின்றது. இக்கலையைப் போற்றியவர்கள், விரும்பியவர்கள், ஆராய்ந்தவர்கள் இக்கலையைப் பற்றிச் சொன்ன புகழுரைகளைச் சிறிது எண்ணினுல் அனைத்துத் தரப்பினரையும் நாடகக்கலை ஈர்த்துள்ள சிறப்புத் தெரியவரும்.

'நாடகமே பொதுமக்களின் புத்தகமாகும்' — வில்மட்.

'நாடகசபைகள் பாமர மக்களின் பல்கலைக் கழகம்' — கவியரசி சரோஜினி தேவி,

'இங்கிலாந்தில் மாதா கோவில்களைப் போன்று நாடக அரங்கங்கள் மிகமிக முக்கியமானவை — பெர்ஞட் ஷா.

அரிச்சந்திரன் என்ற நாடகம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. எத்தனை தரம் அதைப் பார்த்தாலும் எனக்குச் சலிப்பு ஏற்படாது — — காந்தியடிகள்.

'ஒரு நாட்டின் நலம் பெரிதும் நாடகத்தைப் பொறுத்திருக்கிறது' — திரு. வி. க.

'நாட்டிலுள்ள குறைபாடுகளை மனம் புண்படாத வகையில் எடுத்துக் காட்டிச் சீர் திருத்த வல்லதும் மனிதனிடம் இயற்கையாக அமைந்து கிடக்கும் உணர்ச்சியையும் மனித இயல்புகளையும் திருப்ப வல்லதும் நாடகக்கலை' — டாக்டர் மு. வரதராசன்.

'மக்களை உடனடியாகச் செயலில் இறங்கச் செய்வது நாடகக்கலைதான்' — கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன்.

'நாடகத்தின் மூலம் நன்மையான காரியங்களைச் செய்யலாம்' — இராஜாஜி.

'நாடகம் கலைக்கரசு, நாட்டின் நாகரிகக் கண்ணுடி; மக்களின் பல்கலைக் கழகம்; உணர்ச்சியைத் தூண்டி உள்ளத்தில் புதைந்து கிடக்கும் அன்பையும், அறிவையும் வெளிப்படுத்தி மக்களைப் பண்படுத்தும் சிறப்பான கலை. கண், காது, மனம் மூன்றையும் தன்பால் இழுத்து வைத்துக் கொள்ளும் ஒரு புதுமைக்கலை — நாடகக்கலை.' — அவ்வை தி. க. சண்முகம்.

'இயல் இசை என்னும் இரண்டு பிரிவுகள் கேட்போருக்கு இன்பம் தருவன. நாடகம் கேள்வியின்பத்தோடு காட்சியின்பமும் பயப்பதாகும். எனவே நாடகமே மிக்க பயனுள்ளதாக அறிவுடையோர் கருதுவர். நாடகத்தில் இயல் இசை ஆகிய இரண்டும் கலந்துள்ளன. நாடகத்திலேயே முத்தமிழையும் ஒருங்கே காணலாம்' – டாக்டர் ரா. இராசமாணிக்கம்.

'மக்களின் சக்தியைத் திரட்டி அறிவு விலாசத்தைப் பெருக்க நாடகக் கலையைப் போன்ற சீரிய சாதனம் வேறெதுவும் கிடையாது' – கல்கி.

'நாடகமேடை ஒரு கல்விக் கூடம் என்று பெருமையாகக் கூறுபவர்களும் உண்டு. சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்ப நாடகம் சிறந்த சாதனம்'
– மணிக்கொடி கு. ஸ்ரீனிவாசன்.

இவ்வாறு பலதுறைப்பட்ட அறிஞர், நாடகக் கலையைப் பற்றிக் கருத்துக்கள் வெளிப்படுத்தியிருப்பதனைக் கொண்டே அக்கலை அனைவரும் விரும்பும் ஒரு கலையாகத் திகழ்கிறது என்பதனை உணரலாம்.

பொதுவாக நாடகங்களை அவற்றின் முடிவையொட்டி இரண்டு பெரும் பிரிவுகளாகப் பகுக்கின்றனர்.

1. இன்பியல் நாடகம்
2. துன்பியல் நாடகம்

இவ்வகைகள் பொதுவாகக் காப்பியம், நாவல், சிறுகதை முதலிய இலக்கியப் பிரிவுகளில் இருந்தாலும், மேலைநாட்டார் நாடக இலக்கியங்களுக்கே இப்பிரிவு களைக் கொள்ளுகின்றனர். இவ்விரு பிரிவுகளில் துன்பியல் நாடகத்தையே பொது வாக மேலை நாட்டார் மிகுதியும் போற்றியிருக்கின்றனர். ஷேக்ஸ்பியரின் துன்பியல் நாடகங்களை மிகச் சிறந்தவையெனத் திறனிகள் பாராட்டுவர். இந்திய மக்கள் இன்ப முடிவையே பெரிதும் விரும்புகின்றவர்களாதலால் இங்கு முகிழ்த்த நாடகங்கள் அனைத்தும் இன்பியல் முடிவாகவே இருந்து வந்திருக்கின்றன. அண் மைக் காலத்தில் இம்மரபு மாறி வருவதனைப் பல மேடை நாடகங்கள், நாடக இலக்கியங்கள் வாயிலாக நாம் உணருகிறோம்.

மேற்குறிப்பிட்டவாறு இரு பிரிவுகள் கொள்ளப்பட்டாலும் நாடகங் களின் கதையமைப்பு கால அமைப்பு, கருத்தமைப்பு இவைகளைக் கொண்டு பல்வேறு வகைகளாக நாடகங்களைப் பிரிக்கின்றனர்.

மேடை நாடக வாழ்வுக்குத் தம் வாழ்நாள் முழுவதையும் உரிமையாக்கிய அவ்வை சண்முகம் அவர்கள் மேடை நாடகங்களைப் பின்வருமாறு வகைப்படுத்து கின்றார்:

'தமிழ் நாடகங்களைப் பல்வேறு வகைகளாகப் பிரிக்கலாம். புராண நாடகம், இதிகாச நாடகம், வரலாற்று நாடகம். கற்பனை நாடகம், பக்தி நாடகம், இலட்சிய நாடகம், சமுதாய நாடகம், சமுதாயச் சீர்திருத்த நாடகம், தேசிய நாடகம், நகைச்சுவை நாடகம் என நாடகங்களை இவ்வாறு பலவகைப் படுத்திப் பார்க்க வேண்டும். இந்த நாடகங்களோடு பிரசார நாடகம் என்னும் ஒரு பிரிவையும் சேர்த்துக் கொள்ளலாம்.'

சிவலீலா, கந்தலீலா, கிருஷ்ணலீலா, சக்திலீலா, இராமாயணம், மகா பாரதம், தசாவதாரம், சாவித்திரி, சதி அனுசூயா முதலியவை புராண இதிகாச நாடகங்கள்.

இமயத்தில் நாம், தஞ்சை நாயக்கர் தாழ்வு, இராஜராஜசோழன், வீரபாண்டியக் கட்டபொம்மன் முதலியவை வரலாற்று நாடகங்கள்.

மனோகரன், இரண்டு நண்பர்கள், லீலாவதி சுலோசனா, வேதாள உலகம் — இவற்றையெல்லாம் கற்பனை நாடகமாகக் கொள்ளலாம்.

இராமதாஸ், பிரகலாதன், துருவன், சிறுத்தொண்டர், மார்க்கண்டேயர், நந்தனார் முதலிய நாடகங்கள் பக்தி நாடகங்கள் என்னும் பிரிவில் சேர்ந்தவை.

தான் போற்றி வரும் குறிப்பிட்ட ஓர் இலட்சியத்திற்காக இறுதிவரையில் போராடி, வேற்றி பெறும் அரிச்சந்திரன் போன்ற நாடகங்கள் இலட்சிய நாடகம் என்ற வகையில் அடங்குவன.

டம்பாச்சாரி, இராஜாம்பாள், இராஜேந்திரன், மோகன சுந்தரம், மேனகா, பம்பாய் மெயில், வித்தியாசாகரர், நாலுவேலி நிலம், மல்லியம் மங்களம், உயிரோவியம் முதலியவை சமுதாய நாடகங்கள்.

அந்தமான் கைதி, முள்ளில் ரோஜா, பைத்தியக்காரன், இழந்த காதல், இரத்தக் கண்ணீர், மனிதன், வாழ்வில் இன்பம், பெண் முதலியவை சமுதாயச் சீர்திருத்த நாடகங்கள்.

சபாபதி, பிரசிடெண்ட் பஞ்சாட்சரம் முதலியவை நகைச்சுவை நாடகங்கள்.

பதிபக்தி, ஐம்பதும் அறுபதும், விலாங்கு மனிதன் போன்றவை பிரசார நாடகங்கள் — என்ற வகைகளை அவ்வை சண்முகனார் குறிப்பிடுகின்றார்.

**சமூக நாடகங்களின் தோற்றம்**

நாடக வகையில் அதிகமாகத் தோன்றக் கூடிய களங்களை உடையவை சமூக நாடகங்களே எனலாம். நல்லவையும் கெட்டவையும் கொண்ட அமைப்பு உடையது சமூக நாடகமாகும். நானாவித மனிதர்கள் — எத்தனையோ ஆயிரக்கணக்கான சம்பவங்கள் அவர்கள் அன்றாட வாழ்க்கையில் ஏற்படுகின்றன. அச்சம்பவங்கள் ஒரு நாடக ஆசிரியருக்குக் கருவாக அமையச் சமூக நாடகங்கள் எண்ணிக்கையில் தோன்றுவதில் மிகுதியாகின்றன.

இதிகாச, புராண நாடகங்கள் தங்களுடைய செல்வாக்கை இழக்கத் தொடங்கிய வேளையில் சமூக நாடகங்கள் தோன்றின எனலாம். தோன்றிய ஒன்று வளர்ச்சியடைய வேண்டும் என்றால் அதற்குப் படிப்பவர் அல்லது பார்ப்பவர் ஆதரவு வேண்டுமல்லவா? சமூக நாடகத்திற்கு இந்தப் பேறு கிடைத்தது. சமூக நாடகங்களின் கருக்கள் காலத்தைக் காட்டும் கண்ணாடியாக இருந்தமையால் பார்ப்பவர்களுக்கு நாடகக் கருவில் காலபேதம்இல்லை. இதனை சிவாஜி

கணேசன் ஜஹாங்கீர் நாடகம் நடித்த பொழுது பார்த்து மகிழ்ந்தவர்களை விட 'வியட்நாம் வீடு' நாடகம் நடித்த பொழுது பார்த்து மகிழ்ந்த கூட்டம் மிகுதி யாகும். சமூக நாடகங்களில் பொழுது போக்கு அங்கங்கள் மட்டுமல்லாமல் பார்ப்பவர்களது வாழ்வில் நடந்த அல்லது நடந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சிகள் நிரம்ப இடம் பெறுவதால் சமூக நாடகங்கள் வேரூன்றி வளர ஆரம்பித்தன.

**முதல் சமூக நாடகம்**

சமூகச் சீர்திருத்தத்தைச் சமூக நாடகங்களின் மூலம் உண்டாக்கலாம் என்று அறிஞர்கள் நினைத்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஒரு சில சமூக நாடகங்கள் தோன்றின. முதல் சமூக நாடகமாக 1857இல் வெளிவந்த சைதை காசி விசுவநாத முதலியாரின் 'டம்பாச்சாரி விலாச' த்தைக் கூறலாம். இந் நாடகம் 1857இல் மேடையில் ஏற்றப்பட்டதாகும். சென்னை சிந்தாதிரிப் பேட்டையில் வாழ்ந்த ஓர் ஊதாரியின் உண்மை வாழ்க்கையை மையமாக வைத்து எழுதப்பட்டது இந்நாடகம். அடுத்து 1868ஆம் ஆண்டு காசி விசுவநாத முதலியாரால் 'தாசில்தார்' நாடகம் எழுதப்பெற்றது. கையூட்டு வாங்கி அலுவலகத்திற்கு முரணாக ஆட்சி செய்யும் ஒரு தாசில்தாரைப் பற்றிய கதை இது. தாசில்தார் செய்த வினைகளுக்கு அவரே பலியாகின்றார். 1893இல் நாராயணசாமி பிள்ளையால் 'மங்கள வல்லி' நாடகம் எழுதப்பெற்றது. கல்வி யறிவற்ற மாமி, நாத்தி, மருகிகள் செய்யும் தவறுகளைக் குடும்பத் தலைவர்கள் கவனியாமல் இருப்பதை இந்நாடகம் சுட்டிக் காட்டுகின்றது. 1887இல் திண்டி வனம் ராமசாமி ராஜு என்பவரால் 'பிரதாப சந்திர விலாசம்' என்ற நாடகம் எழுதப்பட்டது. இந்நாடகம் அக்காலச் சமுதாயத்தில் விரும்பப்பட்ட பரத் தையர் ஒழுக்கத்தைக் கண்டிக்கிறது. 1900இல் விவேகசிந்தாமணி என்ற பத்திரிகையில் 'காந்திமதி' என்ற பெயருடைய நாடகம் திருமணத்தில் தாய் தந்தையர் குறுக்கீட்டைக் கண்டிப்பதாக எழுதப் பெற்றுள்ளது.

பொதுவாகச் சமூக நாடகங்கள் சமூகத்தில் கண்டவற்றை அப்படியே சுட்டிக்காட்டி எழுதப்பெற்ற நிலையிலிருந்து மாறித் தீயவற்றைச் சுட்டிக்காட்ட முனைந்தன. பின்னர் அவற்றின் போக்கு நல்லதையும் தீயதையும் சுட்டிக்காட்டிடும் வகையில் அமைந்தது. இவ்வகையில் அவற்றின் போக்கு இருந்தமையால் மற்ற நாடகங்களுக்கு இல்லாத களங்கள் சமூக நாடகங்களுக்கு இருந்தமையால் சமூக நாடகங்களின் வளர்ச்சி மிக்க வேகமாக இருந்தது.

**சமூக நாடகங்களின் இன்றைய நிலை**

சமூக நாடகங்களின் இன்றைய நிலை என்ன என்பதற்கு ஆய்வுக்களங் களாக கீழ்க் கண்டவற்றைச் சொல்லலாம்.

1. மேடை
2. வானொலி
3. ஒளிக்காட்சி
4. கல்விக் கூடங்கள்
5. வார, மாத இதழ்கள், பதிப்பகங்கள்

**மேடை நாடகங்கள்**

சமூக நாடகங்களின் வளர்ச்சிக்குரிய கூறுகளாக விளங்கும் இக்களங்களில் நாடக மேடைகள் உள்ள இடங்கள் முழுவதும் சமூக நாடகங்கள், புராண,

வரலாற்று நாடகங்களை விட வெகு வேகமாக வளர்ந்து வருகின்றன எனலாம். சென்னையில் நூற்றுக்கணக்கான சபாக்கள் உள்ளன; பல நாடக மேடைகள் இருக்கின்றன; நாடகக் குழுக்களும் எண்ணிக்கையில் அதிகமாக உள்ளன. இவ் வமைப்புக்கள் இன்று சமூக நாடகங்களின் காவலர்களாக விளங்கி வருகின்றன. சென்னையில் கடந்த இரண்டு மாதங்களாக நடைபெற்று வரும் நாடகங்கள் வருமாறு: திடீர் மனைவி, சுபமுகூர்த்தப் பத்திரிகை, மகாபாரதத்தில் மங்காத்தா, ஏலேலோ ஐலேசா, சத்தியபீடம், கபாலி விஜயன், கரைக்கு அலைகள் சொந்த மில்லை, திராசுத் தட்டுகள், 61 வயதினிலே, சக்கைபோடு ராஜா, யாரைத் தான் சொல்லுவதோ, மனிதர்கள் மாறலாம், வானவேடிக்கை, கண்ணில் நீர் எதற்கு?, ஒரு புல்லாங்குழல் அடுப்பு ஊதுகிறது, ஊரார் சிரிப்பார்கள், ஒரு மனைவி உருவாகிறாள், கீழ்வானம் சிவக்கிறது, வாய்ப்பந்தல், இதயம் ஓர் இமயம், இராமானுஜர், எங்கிருந்தோ வந்தாள், யார் தருவார் இந்த அரியாசனம், ஸ்கைலாப் சம்பந்தி, மனம் ஒரு ஊஞ்சல், டைரக்டர் சார் ஒரு யு. கே. ஜி., அலாவுதீன் அண்ட் 100 வாட்ஸ் பல்ப், யோகம் வந்தாச்சு, இப்படியும் சிலதுகள், என்வீடு, என் கணவன், என் குழந்தை, அடிமைகள், டென்னன்ட், காமென்ட்ஸ், நல்ல மனம் வாழ்க, அந்தப்புரம், ஆண்டாள் அவள் ஆண்டாள், நன்றி மீண்டும் வருக, சுருதி மாறுத கீதம், செக்குமாடுகள், ஒரு இடம் நிரந்தரம், துப்பறியும் சாம்பு, அந்தரங்கம் புனிதமடைகிறது. சப்த ஸ்வரங்கள், மீண்டும் முதல் அத்தியாயம், நாங்க எந்த ஜாதி, சொந்தங்கள் வாழ்க, கல்யாணத்தில் கலாட்டா, கரைமீன், அடையாளம், புதுமயக்கம், தாம்பத்தியம் ஒரு சங்கீதம், சுஜாதா, கடல் நிலா, நகரில் நாரதர், ஐம்பது சிரிக்கிறது 25 அழுகிறது, முகமது பின் துக்ளக், தனிக்குடித்தனம், எனக்கென்ன மனக்கவலை, தனி மனிதனுக்கு உணவில்லை, வாஷிங்க்டனில் திருமணம், சிரித்துக் கொண்டே இருக்கிறோம்.

இப்பேரெண்ணிக்கை எவ்வாறு தமிழில் நாடகம் வளரும் நிலையைச் சுட்டிக்காட்டும். நாடகத் தலைப்புக்கள், கருக்கள், மேடை இலக்கணங்கள் நாடகக்கலைக்கு முரண்பாடாக இருந்தாலும் நாடகக்கலை நலிந்துவிடாமல் இச்சமூக நாடகங்கள் காப்பாற்றி வருகின்றன. இந்நாடகங்கள், பார்ப்பவர்களுக்குப் புத்திமதி அதிகமாகச் சொல்ல வேண்டும், அல்லது திருத்த வேண்டும் என்ற இலட்சியக் கொள்கையுடைய டி. கே. எஸ். நாடகக் குழு நாடகங்கள், கலை வாணர் நாடகங்கள், கே. பாலச்சந்தர் நாடகங்கள் போல இல்லாமல், கணிசமான நாடகங்கள் பொழுதுபோக்குக் கூறுகள் நிறைந்த நாடகங்களாகவே உள்ளன. கலை, கலைக்காகவா, வாழ்க்கைக்காகவா என்ற விவாதத்திற்கு இந்நாடகங்களை எடுத்துக் கொண்டால் பல ஒதுக்கி வைக்கக் கூடியவையாகவே அமையலாம்.

**வானொலி நாடகங்கள்**

வானொலி அமைப்புப் பல சமூக நாடகங்களை உருவாக்கவும் பரப்பவும் பயன்பட்டு வரும் நல்ல சாதனமாகும். தமிழக வானொலி நிலையங்கள் மட்டுமன்றி, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை வானொலி நிலையங்களும் நாடகங்களைப் பரப்பி வருகின்றன. சமூகத்தைக் கருவாகக் கொண்டு வானொலியில் ஓரங்க நாடகங்கள், நாவல் நாடகங்கள், தொடர் நாடகங்கள், கவிதை நாடகங்கள், மொழிபெயர்ப்பு நாடகங்கள், விளம்பர நாடகங்கள், மேடை நாடகங்கள் என்ற வகையில் நாட்

கங்கள் ஒலிபரப்பப் படுகின்றன. 1939இல் முதல் வானொலி நாடகமாக ஸ்ரீகிருஷ்ண துலாபாரம் ஒலிபரப்பாகத் தொடங்கியது.

**ஓரங்க நாடகங்கள்**

வானொலி நாடகத்தின் நேர அளவு குறைந்தது கால்மணி நேரம்; மிகுதி ஒன்றரை மணி நேரம், இக்கால அளவில் அரங்கேற்றப் பட்டுள்ள நாட கங்கள் பல்லாயிரக்கணக்கான நாடகங்களாகும். வானொலிக்கு நாடகங்கள் நூற்றுக்கணக்கான எண்ணிக்கையில் எழுதிய நாடக ஆசிரியர்களும் உண்டு. குடும்பக்கட்டுப்பாடு, சிக்கனம், சேமிப்பு, கள்ளுண்ணுமை, சூது விலக்கல் போன்ற கருத்துக்களை மையமாக வைத்து ஒலிபரப்பான ஓரங்க நாடகங்கள் மிகுதி.

**நாவல் நாடகங்கள்**

அரைமணி அளவிற்கு மேற்பட்ட கால அளவுடைய நாடகங்கள் நீண்ட கதையமைப்பும், வாழும் கதைக் கருவும் உடையன; ஆதலின் இத்தகைய நாட கங்களுக்கு நாவல்கள் களமாயின. சமூகக் கதைகளான விந்தனின் பாலும் பாவையும், அகிலனின் நெஞ்சின் அலைகள், சித்திரப்பாவை, நா. பார்த்தசாரதி யின் சமுதாய விதி முதலிய நாவல்கள் மேடை வடிவம் பெற்று ஒலிப்பரப்பாகி யிருக்கின்றன.

வார, மாத இதழ்களில் வரும் தொடர் கதைகளைப் போல வானொலியில் தொடர் நாடகங்களாக ஒலிபரப்பான சமூக நாடகங்கள் பல உண்டு; தொடர் நாடகங்களில் நாற்பது வாரங்கள் நடந்த நாடகங்கள் உண்டு. அதிலும் இந் நாடகத்தை ஓர் ஆசிரியர் எழுதாமல் பல ஆசிரியர்கள் எழுதும் புதுமையைப் புகுத்தியிருக்கின்றனர். அவ்வாறு ஒலிபரப்பான நாடகங்கள் ஜனதா நகர் சங்கம், காப்புக் கட்டிச் சத்திரம், துபாஷ் வீடு, வி. பி. கோவில் தெரு முதலியன.

வானொலியில் சமூகக் கருவினைக் கொண்ட கவிதை நாடகங்கள், மொழி பெயர்ப்பு நாடகங்கள், மேடை நாடகங்கள் குறைந்த அளவே எனலாம்.

**ஒளிக்காட்சி நாடகங்கள்**

வானொலி செய்து வரும் காதுக்கு விருந்தான நாடகத் தொண்டினைப் போல அண்மையில் ஒளிக்காட்சி நிலையமும் கண்களுக்கும் விருந்தாகப் பல நாடகங் களைக் காட்டி வருகின்றது. சமூகக் கருத்துக்கள் கொண்ட நாடகங்கள் பல ஒளிக்காட்சியிலும் நடிக்கப்பட்டு வருகின்றன.

**கல்விக்கூடங்களில் நாடகங்கள்**

கல்விக் கூடங்களில் சமூக நாடகங்களின் கதி என்ன என்று நோக்கும் பொழுது மாமூலாக மூன்று நாடகங்கள் இடம் பெற்று வந்தன. அவை மனோன் மணீயம், சாகுந்தலம், மண்ணியல் சிறுதேர்; இந்நாடகங்களை அகற்றிப் புதிய படைப்புக்களை, சமூக நாடகங்களை இடம் பெறச் செய்ய முயன்றவர்களில் கல்லூரி ஆசிரியர்களாக இருந்தவர்களுக்கு வெற்றியும், மற்றவர்களுக்குத் தோல் வியும் ஏற்பட்டுள்ளன. அப்படி இருந்தும் ஒரு சில தமிழ்ப் பேராசிரியர்களின் சமூக நாடகங்களே இடம் பெற்றுள்ளன. கல்லூரிக் கலை அரங்கங்கள் பல ஓரங்க

நாடகங்களையும் சில அங்கங்களைக் கொண்ட காதல், கேலிப்படைப்புக்களையும் உருவாக்கும் மேடையாக உள்ளன.

கல்லூரியில் பயிலும் மாணவர்களுக்குப் பாடத்திட்ட அமைப்பில் நாடகப் பிரிவில் நல்ல பல சமூக நாடகப் படைப்புக்களைக் கட்டாயமாக இடம் பெறச் செய்துவிட்டால் சமூக நாடகங்களும் வளரும்; சமூகத்திற்குச் சொல்ல நினைக்கும் கருத்துக்கள் படிப்போருக்குப் பசுமரத்தாணியாகப் பதியும்.

**வெளியீடுகளில் நாடகங்கள்**

வார மாத இதழ்கள் பொதுவாக நாடகங்களுக்கு அதிகமாகக் கை கொடுத்து உதவவில்லை. வார இதழ்கள் மூலம் கோமதி சுவாமிநாதன், மெரினு போன்றவர்கள் பிரபல நாடக ஆசிரியர்களானார்கள். ஒரே வாரத்திலே படித்து முடிக்கும் அங்கத நாடகங்களை வார மாத இதழ்கள் ஆதரித்தன; நீண்ட தொடர் நாடகங்களைச் சரித்திர நாவல்கள் போல் வரவேற்கவில்லை.

படிக்கும் பல சமூக நாடகங்களைப் பதிப்பகங்கள் போற்றி வெளியிட்டிருக்கின்றன. கவிதை நாடகங்களைப் போல அவை நடைமுறைச் செலாவணியில் இல்லை என்றாலும் நல்ல நாடகங்களை வெளியிட்ட பதிப்பகங்களின் தமிழ்த் தொண்டு போற்றற்குரியதாகும்.

படிக்கவும் நடிக்கவும் கூடிய பல சமூக நாடகங்கள் பதிப்பகங்களால் நமக்குக் கிடைத்திருக்கின்றன. சில சமூக நாடக ஆசிரியர்களும் அவர்கள் எழுதிய சமூக நாடகங்களும்:

| நாடக ஆசிரியர் | நாடகங்கள் |
|---|---|
| அகிலன் | புயல், வாழ்வில் வசந்தம் |
| அறிஞர் அண்ணாதுரை | ஓர் இரவு, வேலைக்காரி, நீதி தேவன் மயக்கம் |
| கு. அழகிரிசாமி | வாழ்வில் வசந்தம் |
| பி. எஸ். இராமையா | பிரசிடெண்ட் பஞ்சாட்சரம், மல்லியம் மங்களம், போலீஸ்காரன் மகள், பூ விலங்கு |
| பா. ஆதிமூலம் | மனிதன் |
| கலைஞர் மு. கருணாநிதி | இரத்தக்கண்ணீர், தூக்குமேடை, காகிதப்பூ |
| கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் | ஐம்பதும் அறுபதும், விலாங்கு மனிதன் |
| எஸ். டி. சுந்தரம் | மனிதனும் மிருகமும் |
| கே. சுந்தரம் | வியட்நாம் வீடு |
| கோமதி சுவாமிநாதன் | கலாட்டா கல்யாணம், புயலும் தென்றலும், மிஸ்டர் வேம்பு, ஆசைக்கு அளவில்லை |
| கோமல் சுவாமிநாதன் | புதியபாதை, தில்லைநாயகம், மின்னல் கோலம் |
| சோ | யாரிடமும் சொல்லாதே, ஏன் கூடாது. சம்பவாமி யுகே யுகே |

| | |
|---|---|
| நா. சோமசுந்தரம் | இன்ஸ்பெக்டர் |
| எம். எஸ். சோலைமலை | நீதிபதி, சந்திப்பு, உரிமைக்குரல் |
| திருவாரூர் கே. தங்கராசு | ரத்தக்கண்ணீர் |
| நாரண துரைக்கண்ணன் | உயிரோவியம், சதுரங்கம், பந்தபாசம் |
| கே. எம். நாராயணசாமி | நீதியா பாசமா, திலகம் |
| ப. நீலகண்டன் | முள்ளில் ரோஜா, நாம் இருவர் |
| நா. பாண்டுரங்கன் | சுமைதாங்கி |
| பாலசுப்பிரமணியம் | தேன்கூடு |
| கே. பாலச்சந்தர் | சதுரங்கம், மேஜர் சந்திரகாந்த், நீர்க் குமிழி, சர்வர் சுந்தரம், எதிர் நீச்சல், |
| பாலமுருகன் | நீதியின் நிழல், சிரித்த முகம், நீதி பிழைத் தது, மாசற்ற மனம் |
| முழக்கம் பாலு | குலவிளக்கு, காதலுக்குக் கண் இல்லை |
| மாயாவி | மறுமலர்ச்சி, தெய்வமாகி நின்றார், பாசத் திரை |
| டி. கே. முத்துசாமி | குமாஸ்தாவின் பெண் |
| அரு. இராமநாதன் | வானவில் |
| பூர்ணம் விசுவநாதன் | அண்டர் செகரட்டரி |
| ஏ. கே. வில்வம் | கைதி |
| தி. ஜானகிராமன் | நாலுவேலி நிலம், வடிவேலு வாத்தியார் |

இவைகளில் மேடையேறிய பல நாடகங்களும் உள்ளன. சமூகத்தின் கோணல்களையும் நெறிகளையும் நல்லவை கெட்டவைகளையும் சாதிச் சழக்குகளையும் இந்நாடகங்கள் பிரதி பலிக்கின்றன.

### சமூக நாடக ஆசிரியர்களும், நடிகர்களும்

மேடையிலும், எழுத்து வடிவிலும் சமூகக் கருத்துக்களைச் சொன்ன நாடக ஆசிரியர்கள், நடிகர்கள், பலப்பலர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்களின் படைப்புக்களும் மேடைத் தொண்டும் என்றும் நினைக்கத்தக்கன. தெ. பொ. கிருஷ்ணசாமி பாவலர் 'கதரின் வெற்றி' என்ற தேசிய சமுதாய நாடகத்தை எழுதினர். திரு, எம். கந்தசாமி முதலியார் பல சமூக நாவல்களை நாடகமாக்கி நடித்துக் காட்டினர். பம்மல் சம்பந்த முதலியார் அவர்கள் புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு இன்பியல் முடிவில் நிறைவுபெற்ற ஒரே போக்கினை மாற்றி, மேலைநாடுகளின் அமைப்பு முறையைத் தழுவித் தமிழகப் பின்னணி கொடுத்து இன்பியலும் துன்பவியலுமாகப் பல சமூக நாடகங்களைப் படைத்தார். கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் சமுதாயத்தில் நீண்டகாலமாக ஊறிக் கிடந்த தீண்டாமையையும் மூடநம்பிக்கையையும் மனித முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டைகளாக எண்ணினர். கல்வி ஒன்றே அறியாமையை ஒழிக்கக் கூடியது என்பதை நினைத்துத் தம் நாடகங்கள் வாயிலாகத் தம் கருத்தைப் பரப்பினர். அறிஞர் அண்ணதுரையின் பல நாடகங்கள் சமூகத்தில் புரை யோடிக் கிடக்கும் ஊழல்களைக் கிளறிச் சீழ்ப்பிடித்த புண்களை அறுத்துக் காட்டுவனவாக உள்ளன. இவ்வாறு மேடை நாடகங்களை வளர்த்த இந்நாடக வாணர்களைப் போலவே

படிக்கும் பல சமூக நாடக இலக்கியங்களை உருவாக்கியவர்களும் உண்டு. சாதி சமய வேறுபாடற்ற ஒரு மனித சமுதாயத்தைக் காண அரு. இராமநாதன் 'வானவில்' என்னும் நாடகத்தை எழுதினர். டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தியின் பொன்மலர், தெளிந்த நீரோடை முதலிய நாடகங்கள் சாதி வேறுபாடு, செல்வச் செருக்கு, கலப்பு மணம்முதலியவைகளை மையமாக வைத்துப் பின்னப்பட்டுள்ளன. டாக்டர் ஏ. என். பெருமாளின் படைப்பான 'பால்மதி' யில் சிற்றன்னையின் கொடுமை, அலுவலகங்களில் நடக்கும் சீர்கேடுகள், உண்மையாக உழைக்கும் அலுவலர்கள் அடையும் இன்னல்கள் முதலியன சித்தரிக்கப்பட்டுள்ளன. டாக்டர் கோராவின் சிபாரிசம், பிஞ்சுப்பழம், யார் குற்றம்? ஆகிய நாடகங்கள் பல நல்ல சமூகக் கூறுகளை விளக்கிக் காட்டும் படைப்புக்களாக விளங்குகின்றன. சிபாரிசு செய்யும் பண்பு, சமூக முன்னேற்றத்திற்கு ஒவ்வாதது என்பதைச் 'சிபாரிசம்' என்ற நாடகம் எடுத்துக்காட்டுகின்றது. அரசியல் வாதிகளின் அறியாமையைப் 'பிஞ்சுப்பழம்' என்ற நாடகமும், வரதட்சணைக் கொடுமையை 'யார் குற்றம்' என்ற நாடகமும் விளக்குகின்றன. டாக்டர் தா. வே. வீராசாமியின் 'பொன்குஞ்சு' என்ற நாடகம் தன்னைப் போலப் பிறரையும் நேசிக்க வேண்டும் என்பதனை விளக்குகின்றது. காவிரி நாடனின் 'அக்கினி சாட்சி' என்ற நாடகம் போலிக் கவுரவத்தால் ஏற்படும் சங்கடங்களை விளக்கி மனிதன் பணத்தைத் தேடிக் குறுக்கு வழியில் போகும் குறுகிய போக்கை உணரச் செய்கிறது. இவ்வாறு படிக்கும் சமூக நாடகங்கள் நூற்றுக் கணக்கில் இக்காலத்தில் தோன்றிக் கொண்டிருக்கின்றன. இத்தகைய சமூக நாடகங்களின் வாழ்வு அல்லது வயது எத்துணைக் காலம் என்பது சிந்திக்கத்தக்கது.

நவாப் இராசமாணிக்கம் போன்றோர் இராமாயணம், தசாவதாரம், போன்ற இதிகாச நாடகங்களை அரங்கேற்றி அனுபவித்த சிரமங்கள் சமூக நாடகங்களில் இல்லை. ஆதலால் மேடையிலும் ஒளி, ஒலி நிகழ்ச்சிகளிலும் சமூக நாடகங்கள் வளர்ந்து வருகின்றன. சமூக நாடகங்கள் மேடைக் கலையாக மாறும் பொழுது பொருட் சிக்கனம், நடிகர்கள் எண்ணிக்கைச் சுருக்கம், காட்சி அமைப்புக்களில் எளிமை இவைகளைப் பெறுவதால் எண்ணற்ற சமூக நாடகங்கள் உருவாகி வருகின்றன.

**நிறைவு**

எனவே, சமூக மேடை நாடகங்கள் எதிர்காலத்தில் மேலும் வளர்வதற்கான கூறுகள் உள்ளன. சமூக இலக்கிய நாடகங்கள், மண்ணியல் சிறுதேர், மனோன்மணீயம் போன்ற செறிவான அமைப்பிற்கு வராவிட்டாலும் தோன்றிக் கொண்டிருக்கும் எண்ணற்ற நாடகங்கள் ஒதுக்கப்படக் கூடிய தன்மையில் இல்லை. சமூக நாடகங்களின் கருக்கள் சங்க இலக்கிய ஐந்திணைக்கு அப்பாற்பட்டனவாக இருந்தாலும் சமூகத்தை அவைகள் நன்கு படம் பிடித்துக் காட்டுவதால் பார்ப்போர், படிப்போர் இவர்களிடம் மதிப்பினை அடையாமல் இல்லை.

தமிழ் நாடக வளர்ச்சியில் சமூக நாடகங்கள் நிறைவினைத் தருகின்றன.

| நூலாசிரியர் | நூற்பெயர் | வெளியீடு |
| --- | --- | --- |
| டாக்டர் ஆறு. அழகப்பன் | தமிழ்நாடகம் பரிணும வளர்ச்சி | அண்ணுமலைப் பல்கலைக் கழகம் ஆய்வுக்கட்டுரை, 1977 |
| ,, ,, | நாடகவிருந்து | நாடகநிலையம், சென்னை — 5, 1972 |
| சகஸ்ரநாமம் எஸ். வி. | நாடகக்கலையின் வரலாறு | மதுரைப் பல்கலைக்கழகம் 1975 |
| சண்முகம் தி. க. | நாடகக்கலை | அ. ப. கழகம் 1959 |
| சம்பந்த முதலியார் ப. | நாடகமேடை நினைவுகள் — 11 | 1933 |
| டாக்டர் ஏ. என். பெருமாள் | தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் | அணியகம், சென்னை, 1977 |
| ,, ,, | தமிழ் நாடகம்-ஓர் ஆய்வு | தமிழ்ப் பதிப்பகம், சென்னை — 20, 1979 |

# கூத்துத் தமிழ்
# அன்றும்—இன்றும்

கலைமாமணி புத்தனேரி ரா. சுப்ரமணியம்

**தமிழ் நாடகத் தொன்மை**

கலையே நாட்டின் கருவூலம். நாகரிகத்தின் அளவுகோல், காலத்தின் கண்ணாடி. கலையே மனித வாழ்வின் இனிய இளவேனில்.

கலை என்ற சொல்லுக்கு ஆடை என்ற பொருளும் உண்டு. எனவே ஒவ்வொருவருக்கும் ஆடையைப் போலவே இன்றியமையாதது கலை என்று சொல்வதும் பொருந்தும்.

இயல், இசை, கூத்து மூன்றும் கலைகளில் மிகவும் சிறந்தவை. இவற்றை முத்தமிழ் எனப் போற்றுகிறோம்.

இயலையும் இசையையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ளது கூத்து. எனவே, கூத்துத் தமிழில் முத்தமிழின் சுவையும் பயனும் தோய்ந்துள்ளன.

மனித இனம் முதன் முதலில் தோன்றிய மண்ணகம் தென்குமரி நாடென்றும், இலெமூரியாக் கண்டமே என்பதும் ஆராய்ச்சியாளரின் கருத்து. எனவே, முதன்முதலில் இயல் இசை நாடகம் தோன்றிய நாடு தமிழ்நாடுதான்.

மிகவும் தொன்மை வாய்ந்தது என்று கருதப்படும் மற்றொரு நாடு எகிப்து. அந்த எகிப்து நாட்டின் பிரமிட்டுகளிலிருந்தும் சவக் கல்லறையிலிருந்தும் 55 நாடகங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்று மாஸ்பரோ (Maspbro) என்ற ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார்.*

அத்தகைய எகிப்திய நாடகங்களுக்கும் முன்பாகவே தமிழில் நாடகங்கள் விளங்கியிருக்க வேண்டும்.

> 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல்சான்ற புலனெறி வழக்கும்...''
>
> (தொல்-அகத்-56)

என்ற தொல்காப்பிய நூற்பாவை எடுத்துக் காட்டாத நாடக ஆராய்ச்சியே கிடையாது.

---

* இந்திய மேலைநாட்டு நாடக மேடைக் கலைகள் – பக்கம் 2

தொல்காப்பியர் காலத்தின் தொன்மையைப் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. தொல்காப்பியர் காலத்தின் மேல் எல்லை கி.மு. 5,320 எனச் சுட்டிக்காட்டியுள்ளார் அறிஞர் திரு. க. வெள்ளைவாரணனுர். (தொல்காப்பிய வரலாறு பக்கம் 105 அண்ணமலை பல்கலைக்கழக வெளியீடு) அத்தகைய தொல்காப்பியரே ''நாடக வழக்கு'' என்று குறிப்பிடுகின்ற படியால், அவருக்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாடக மரபு புகழ் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை. 'நாடக நூல்கள் பெருவரவினவாகி அவற்றிலுள்ள வழக்கு நன்கு உரைப்பட்ட பின்னரே, இச்சூத்திரம் இயற்றப்பட்டிருக்க வேண்டும்' என்று ஆராய்ச்சி அறிஞர் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களே ஏற்றுக்கொண்டார் என்றுல், தமிழ்நாடகத்தின் தொன்மைக்கு வேறு என்ன சான்று வேண்டும்?

தொல்காப்பியம் போன்ற செம்மையான நூல் ஒரு மொழியிலே தோன்றியுள்ளதென்றுல் அதற்கு ஆதாரமான கலைகள் நாடெங்கும் எத்துணை வளம் பெற்றிருக்க வேண்டும் என்பது உய்த்துணரத் தக்கது.

கதை தழுவிய கூத்தே நாடகமாகப் புகழ்பெற்றுள்ளது. ஆடல் பாடல் என்றும், ஆட்டபாட்டம் என்றும் வழங்குகின்ற கூத்து, நாட்டிலே நடிக்கப்பட்ட அன்றி, ஏட்டிலே வடிக்கப்படக்கூடிய வாய்ப்பும் வசதியும் பழங்காலத்தில் கிடையா. அச்சுக் கலை மிக விந்தையாக வளர்ந்துள்ள இந்தக் காலத்தில் நடைபெறும் மேடை நாடகங்களிலேயே எத்தனையோ இன்னும் நூல் வடிவம் பெறுமல் இருக்கின்றன. சென்ற நூற்றுண்டிலும் இந்த நூற்றுண்டிலும் நாட்டிலே நடைபெற்ற எண்ணற்ற மேடை நாடகங்களின் கையெழுத்துப் பிரதிகள்கூட இப்போதே நமக்குக் கிடைக்கவில்லை. இன்னும் சில நூற்றுண்டுகளுக்குப் பின் இவைகளில் எத்தனை எதிர்கால மக்களின் கரங்களில் தவழப் போகின்றன என்பது கேள்விக்குறியாகவே உள்ளது.

இந்த நிலையில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன், எழுத்துப் பிரதி எடுக்கும் எந்த வசதியுமில்லாத தமிழகத்தில் நடைபெற்ற நாடகங்கள் நூல் வடிவில் கிடைக்காமல் போனதில் வியப்பு ஏதும் இருக்க முடியாது.

**மறைந்தனவா? மறைக்கப்பட்டனவா?**

ஏட்டில் எழுதாமலே ஏராளமான கூத்து வகைகள் நாட்டிலே நடைபெற்று இருக்கவும் கூடும். ஏட்டில் எழுதப்பெற்ற எண்ணற்ற நூல்கள் மறைந்திருக்கவும்கூடும். மறைந்துபோன தமிழ் நூல்கள் என்ற நூலில், அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் குறிப்பிடும் 314 நூல்களில் பல இசை நாடக நூல்கள் எனத் தெரிகிறது.

தென்குமரிக் கண்டம் கடலுள் மூழ்கியபோது, இசை நாடக நூல்களும் மறைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இயற்கையின் சீற்றத்தால் அழிந்த நூல்கள் மட்டுமின்றித் திட்டமிட்டு அழிக்கப்பட்ட நூல்களும் உண்டு என்பதையும் நம்பத்தான் வேண்டும்.

''பண்டைத் தமிழ் மொழிக்கண் இயற்றப்பட்ட நாடகக் காப்பியங்களும், அக்காப்பிய இலக்கணம் கூறும் நாடகத் தமிழ் நூல்களும் சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்குநல்லார் காலத்திலேயே ஐயகோ, இறந்துபோயின! அவை இங்ஙனம் இறந்துபட்டது எதனுல் எனில் கூறுதும். இசை நாடகங்களை அருவெறுப்பவரான பௌத்த சமண சமயத்தவர்கள் வடநாட்டினின்றும் பெருந் திரளாகப் போந்து, இத்தமிழ் நாடெங்கணும் குடிபுகுந்து, கி.பி. இரண்டாம் நூற்ருண்டு முதல் அவர்தம் கோட்பாடுகளில் சிக்குண்ட தமிழாசிரியர்களும் அவர்போல் அவற்றை அருவெறுத்துவிடவே, அந்நூல்களெல்லாம் அழிந்துபடலாயின'' என மறைமலையடிகளார் குறிப்பிட்டுள்ளது ஆராயத்தக்கது.

கடைச்சங்க காலத்தை அடுத்த களப்பிரர் காலத்தில் (கி.பி. 250 முதல் 550 வரை) இசைத்தமிழ் நாடகத் தமிழ் நூல்களும், பொருள் இலக்கண நூல்களும், சமய நூல்களும், திட்டமிட்டு அழிக்கப்பட்டன என அழுத்தமாகக் கூறியுள்ளார் அறிஞர் மு. அருணசலம். (தமிழ் இலக்கிய வரலாறு-10 ஆம் நூற்ருண்டு - பக்கம் 27 - 28 - முன்னுரை)

''பாடகம் சாராமை பாத்திலார் தான்விழையும்
நாடகம் சாராமை நாடுங்கால் - நாடகம்
சேர்ந்தாற் பகைபழி தீச்சொல்லே சாக்காடே
தீர்ந்தாற்போல் தீரா வரும்''

என்ற ஏலாதி 25-ம் பாடலின் கருத்தைக் கவனித்தால், பாடலையும் ஆடலையும் கேட்டலும் காண்டலும் மக்களிடையே பகையும் பழியும் கடுஞ்சொல்லும் சாவும் விளைவிக்கும் என்ற சமணரின் கொள்கை தெளிவாகும். ஆயினும் சீவகசிந்தாமணி எனும் சமணக் காவியத்தில் கலைகளைப் பற்றிச் சிறப்பாக விளக்கப்பட்டுள்ள செய்தியும் கவனிக்கத்தக்கது.

தொல்காப்பியம், கூத்தநூல், திருக்குறள், பட்டினப்பாலை, பெரும்பாணுற்றுப் படை, பரிபாடல் திரட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, பெருங்கதை, திருவாசகம், திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு முதலான பல நூல்களில் நாடகத்தைப் பற்றிய குறிப்புகள் வருகின்ற சிறப்பைப் பிற்சேர்க்கையில் காணலாம்.

**பழங்காலக் கூத்து வகைகள்**

சங்க காலத்தில் வள்ளிக்கூத்து, வாலசரிதை நாடகம், வேலன் வெறியாடல், முதலான நாட்டிய நாடக வகைகள் குறிப்பிடப்படுகின்றன. பாணர் என்ற இசைவாணர்களும், கூத்தர் பொருநர் என்ற நாடகக் கலைஞர்களும், விறலியர் என்ற பெண் கலைஞர்களும், மன்று என்ற கலைமன்றங்களில் தத்தம் நிகழ்ச்சிகளை நடத்திய சான்றுகள் உள்ளன.

கூத்தராற்றுப் படை, பொருநராற்றுப் படை, பெரும்பாணுற்றுப் படை, சிறுபாணுற்றுப் படை முதலான இலக்கியங்களின் பெயர்களிலேயே கலையின் சாயல் மிளிர்கின்றது. கலைவல்லாருக்குப் பரிசில்கள் வழங்கிய சிறப்புக்களைப் புறநானூறு போன்ற இலக்கியங்கள் பேசுகின்றன. இவ்வாறு உய்த்துணரப்

பெற்ற ஏராளமான செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. ஆயினும் நாடகம் பற்றியும் கூத்து வகைகளைப் பற்றியும் விரிவாக விளக்குவது சிலப்பதிகாரமும் அதற்கு அடியார்க்கு நல்லார் வழங்கிய விரிவான உரையுமே யாகும்.

ஆடலாசிரியன், பாடலாசிரியன், இசையாசிரியன், ஆடல் அரசி, ஆடல் அரங்கு, அரங்கின் அமைப்பு, திரைகள், அவற்றில் ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்துவரல் எழினி முதலான வகைகள், ஒப்பனை முறை இப்படிப் பல வகையான நாடக நுணுக்கங்களைத் துல்லியமாகக் கூறுவதுடன், பாத்திரப் படைப்பும் சிறப்பாக உள்ளமையால்தான் சிலப்பதிகாரம் நாடகக் காப்பியம் எனப் புகழப்படுகின்றது.

அகக்கூத்து, புறக்கூத்து, சாந்திக் கூத்து, விநோதக் கூத்து, வசைக் கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல், பொதுவியல் முதலான பாகுபாடுகளை எல்லாம் சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். பழங்காலத்தில் மரப்பாவைக் கூத்து, தோற்பாவைக் கூத்து, நிழற்பாவைக் கூத்து முதலான வகைகளும் உண்டு.

பலவகையான கோலம் கொண்டு, மாதவி ஆடிய பதினோராடலும், பல்சுவை நாட்டிய நாடகப் பான்மையுடன் விளங்கிய சிறப்பு புலனாகிறது. அல்லியம், கொடுகொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை ஆகிய பதினொரு கூத்து வகைகள் ஆடப்பெற்ற முறைகளைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. ஆயினும் அவற்றை அதே முறையில் இப்போது ஆடிக்காட்டுவார் இலர். பறையூர்க் கூத்தச் சாக்கையன் என்பான் கொடுகொட்டி என்ற ஆடலைச் சேரன் செங்குட்டுவன் முன்னிலையில் ஆடினான் என்பது சிலப்பதிகாரச் செய்தி.

'ஆடு கூத்தர் அணி' என மணிமேகலை குறிப்பிடுவதும் கவனிக்கத் தக்கது. சிந்தாமணியிலும் இசை நாடகப் பண்புகள் சித்திரிக்கப்பட்டுள்ளன.

**பல்லவர் காலம்**

அங்கதம் என்னும் நகைச்சுவை நாடகங்கள் இப்போது ஏராளமாக நடைபெறுகின்றன. இவற்றுக்கு முன்னோடியோ என்றுசொல்லத்தக்கது மகேந்திரப் பல்லவ மன்னன் இயற்றிய 'மத்தவிலாசம்' என்னும் நகைச்சுவைக் கூத்து. பரிவாதினி என்னும் வீணை வாசிப்பதில் மகேந்திரப் பல்லவன் வல்லவன் எனப் படுவதால், இசையும் கூத்தும் பல்லவர் காலத்தில் வளர்ச்சி பெற்றன என்று உணரலாம். மகேந்திரவர்மன் திருநாவுக்கரசரைப் போற்றியவனாதலால், அவன் காலத்தில் தமிழ்க் கலைகள் ஆக்கம் பெற்றிருந்தன என்பதில் ஐயமில்லை.

'கோயில் நாடகக் குழுக்களும் வருக' என்ற ஒரு தொடர் எட்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த பெருங்கதையில் வருகிறது. ஒன்பதாம் நூற்றுண்டில் யாமளேந்திரர் எழுதிய இந்திர காளியமும், அறிவனார் செய்த பஞ்சமரபும், நாடகத் தமிழ் வகையைச் சேர்ந்தன என்பது அடியார்க்கு நல்லாரின் கருத்து.

**சோழர் காலம்**

பின்னர், இயல் இசை நாடகம் சிற்பம் ஓவியம் முதலிய கலைகள் பேணி வளர்க்கப்பட்டது சோழர்களின் பொற்காலத்தில்தான். 'இராச ராச நாடகம்' முதலாவது இராசராச சோழர் காலத்தில் நடிக்கப்பட்டதாக பந்தணைநல்லூர் பசுபதீஸ்வரர் கோவில் கல்வெட்டுக் கூறுகிறது. (AR. of S.I. EPIGRAPHY-1931)

இவர் காலத்தில் பூரட்டாதி விழாவின்போது திருமூல நாயனர் நாடகம், நடந்ததாகவும் கல்வெட்டுச் செய்தியுண்டு. (S.I.I.Vol. IV Pt.V)

இராஜ இராஜேஸ்வரம் என்னும் தஞ்சைப் பெரிய கோவிலில், வைகாசித் திருவிழாவில் இராஜ ராஜேஸ்வரம் நாடகம் நடத்துவதற்காகச் சாந்திக் கூத்தன் திருவளர் திருமுது குன்றன் ஆன விஜயராஜேந்திர ஆச்சாரியனுக்கு இராஜேந்திரச் சோழன் கி.பி. 1056இல் மான்யம் வழங்கினன் என்று சாசனம் விவரமாகக் கூறுகின்றது.

வீரத் தலைவன் பரசமய கோளரி மாமுனி வழங்கிய பூம்புலியூர் நாடகம் கி. பி. 1119இல் நடைபெற்றதாகவும் ஆதாரம் உள்ளது. நானுவித நாடகசாலை ஒன்று விளங்கியதாக முதலாவது குலோத்துங்கச் சோழன் கல்வெட்டு பதிக்கப் பட்டுள்ளது.

திருவிடை மருதூர் மகாலிங்க சுவாமி கோவில் சாசனத்தில் (S.I.I. Vol. 5 of 718) திருவெள்ளறைச் சாக்கை என்னும் ஆடலாசிரியனும் காமரச, வல்லி கார்க்கோடகேசுவரர் கோவில் சாசனத்தில் (65–1914) சாக்கை மாராயன் விக்கிரமச் சோழதேவன் என்னும் ஆடலாசிரியனும் மான்யம் பெற்றதாகக் குறிப்பிடப்படுகின்றனர். விக்கிரமாதித்தன் திருமுதுகுன்றன் என்னும் விருதராஜ பயங்கர ஆச்சாரியன் (90 of. 1931) குமரன் சீகண்டன் (120 of. 1925) பரசிவப் பொன்னன் என்னும் கலாவிநோதப் பேரரையன் (255 of. 1925) முதலான ஆடலாசிரியர் பெயர்களும் சாசனங்களில் காணப்படுகின்றன.

கம்பராமாயணம், வில்லிபாரதம், பெரிய புராணம், திருவிளையாடல் புராணம், அரிச்சந்திர புராணம், நைடதம் முதலானவை நாடக நூல்கள் அல்ல வாயினும், நாடகப் பண்பு நிறைந்த கதைச் சுவையும் பாத்திரப் படைப்பும் சிறப்பாக, அவற்றில் உள்ளன. ஆகையினல் இவற்றை ஆதாரமாகக் கொண்டு பிற்காலத்தில் விலாச நாடகங்கள் பல தெருக்கூத்து வகையாகச் சிறப்புப் பெறக் காரணமாகியுள்ளன.

13ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த தஞ்சைவாணன் கோவை என்னும் இன்சுவைக் காவியத்தை நாடகத் தமிழ் என்றே கூறலாம் என உரையா சிரியர் சொக்கப்ப நாவலர் குறிப்பாக உணர்த்துகின்ருர். 12ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த கலிங்கத்துப் பரணி போன்ற பரணி இலக்கியங்கள் எல்லாம் பாத்திரப் படைப்பில் சிறப்புமிக்க நாடகப் பண்பு வாய்ந்தவையே ஆகும்.

இருண்டு கிடந்த தமிழ்க் கலை இலக்கிய வரலாற்றில் இசை பற்றியும் நாடகம் பற்றியும் ஒளி விளக்கு ஏற்றிய அடியார்க்கு நல்லார் வாழ்ந்த காலம்

12ஆம் நூற்றுண்டு. எனவே, இதனை நாடகத் தமிழின் பொற்காலம் எனக் கூற வேண்டும். பரதம் ஒரு தமிழ் நூல் என்ற உண்மையைத் தெளிவாக்கியவர் அடியார்க்கு நல்லார் (திரு மு. அருணசலம் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு — 12ஆம் நூற்றுண்டு — பக்கம் 587).

**சோழருக்குப் பிற்காலம்**

சோழ மன்னர்களுக்குப் பிற்காலத்தில் நாடகக் குழுக்கள் போதிய ஆதர வற்று மறையத் தொடங்கின. ''14ஆவது நூற்றுண்டில் மாலிக்காப்பூர் படை யெடுப்பிற்குப் பின் நேர்ந்த நாட்டுக் குழப்பங்களினுல், பழந்தமிழ் நாடகம் தன் செல்வாக்கை இழந்து, பின் விஜயநகர ஆட்சியின்போது சிறிது தலையெடுத் தது''என்று டாக்டர் மா. இராசமாணிக்கனுர் குறிப்பிட்டுள்ளார்.

குறத்தி குறிசொல்லும் காட்சி கலம்பகத்தின் உறுப்பான குறம் என்பதில் இடம் பெறுகிறது. பின்னர் குறம் என்ற இசைநாடகப் பிரபந்தம் 17ஆவது நூற்றுண்டில் தோன்றியது. ஆடலும் பாடலும் குறத்தி ஒருத்தியே தனி நடிப் பாக நடத்தும் பான்மையில் உள்ள இசை நாடகம் மீனுட்சியம்மை குறம் போன்ற நூல்கள். இதற்கு அடுத்த கட்டமாகப் பல பாத்திரங்கள் கொண்ட குறவஞ்சி நாடகம் பிறந்தது. அறுபதுக்கு மேற்பட்ட குறவஞ்சி நாடகங்கள் உள்ளன. அவற்றில் பாபவிநாச முதலியார் இயற்றிய கும்பேசர் குறவஞ்சி கி.பி. 1676இல் மராட்டிய மன்னர் ஏகோஜி காலத்தில் தோன்றியது. குறவஞ்சி நாடகங்களில் மிகவும் புகழ்பெற்ற திருக்குற்றுலக் குறவஞ்சி திரிகூடராசப்ப கவிராயரால் இயற்றப்பட்டுச் சிறந்த மேடைக் கலையாக வளர்ச்சி பெற்றது.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய சரேபேந்திர பூபாலக் குறவஞ்சி, விராலிமலைக் குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி, கவிகுஞ்சரபாரதி இயற்றிய அழகர் குறவஞ்சி, திருமலையாண்டவர் குறவஞ்சி, தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை இயற்றிய வருணுபுரிக் குறவஞ்சி, சொக்கலிங்கம் தீட்டிய சிக்கல் நவநீத ஈசுவரர் குறவஞ்சி முதலான பல குறவஞ்சி நாடகங்கள் சிறப் பானவை (இவை இந்த நூற்றுண்டில் தமிழிசை விழாக்களில் மறுமலர்ச்சி பெற்று அரங்கேற்றப்பட்டுள்ளன.) பெத்தலேம் குறவஞ்சி என்ற கிறிஸ்துவ மதக் குறவஞ்சி ஒன்றும் பிற்காலத்தில் தோன்றியுள்ளது. எல்லாக் குறவஞ்சிகளும் அடிப்படைக் கதையமைப்பு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.

**பள்ளு வகை**

பன்னிரு பாட்டியலில் கூறப்படும் உழத்திப் பாட்டு முதலான வகைகளின் சாயலாக அமைந்த பள்ளு என்னும் இசை நாடகம் பள்ளர் பள்ளியர் எனும் உழவர்குல மக்களின் நாடகமாகப் புகழ்பெற்றுள்ளது. சந்தப் பாவினங்கள் பல வற்றின் அழகிய மாலை போன்று விளங்கும் பள்ளு இலக்கியம் படிக்கவும் நடிக்கவும் உகந்ததாகும். 'நெல்லு வகையை எண்ணினுலும் பள்ளு வகை எண்ண முடியாது' என்ற பழமொழி உண்டு. பள்ளு வகைகள் பலவற்றில் முக்கூடற் பள்ளு, (கி. பி. 1680) மிகச் சிறந்த படைப்பாகும்.

**நொண்டி நாடகம்**

சிந்து வகைகளில் நொண்டிச் சிந்து புகழ்பெற்றது. நொண்டி நாடகத்தின் கதாநாயகன் பாடிய சிந்துவகைதான் நொண்டிச் சிந்து எனப்படும். திருடன் ஒருவன் தன் காதலியின் பொருட்டு, ஊருக்குள் பொருளைக் கொள்ளையிட்டதனுல் பிடிபட்டு, மாறு கால் மாறுகை வாங்கப்படும் தண்டனையை அனுபவிக்கிருன். பின் இறைவனைத் தொழுது ஊன நிலை மாறி, நன்னிலை பெறுகிருன். அவனே, தன் கதையைச் சொல்லி ஆடிப் பாடி நடிப்பது போன்ற இசைக்கூத்து நொண்டி நாடகம். நொண்டி நாடகங்கள் பலவாயினும் எல்லாவற்றிலும் கதைக் கரு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். 18 ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் முத்தாலங்குறிச்சி கந்தசாமிப் புலவர் இயற்றிய திருச்செந்தூர் நொண்டி நாடகம் கவிச் சுவையும் நாடகப் பண்பும் நிறைந்தது. இதேபோன்று திருக்கச்சூர் நொண்டி நாடகம், திருமலை நொண்டி நாடகம், பழனி நொண்டி நாடகம், சீதக்காதி நொண்டி நாடகம் எனப் பல நூல்கள் உள்ளன.

குளுவன், சிங்கன் சிங்கி, ஆகிய மூன்று பாத்திரங்களே கொண்ட குளுவ நாடகம் சுவையான பாடல்களுடன், ஆடிப்பாட மிகவும் ஏற்றதாக உள்ளது. சின்ன மகிபன் குளுவ நாடகம் போன்ற சில கூத்து வகைகள் உண்டு.

**கீர்த்தனை நாடகங்கள்**

சீர்காழி அருணுசலக் கவிராயர் படைத்த இராம நாடகம் முழு வடிவான கீர்த்தனை நாடகமாக விளங்குகின்றது. செஞ்சொற் கவியின்பம் செறிந்த இந்த நாடகத்தை, இவர் கி.பி. 1772-ல் திருவரங்கத்தில் அரங்கேற்றினுர் என்பது வரலாறு. இராம நாடகத்தின் பாடல்கள் இசை நடன மேடைகளில் பெரும் புகழ்பெற்றுள்ளவை. அசோமுகி நாடகம் என்னும் மற்ருெரு நாடகத்தையும் இவர் இயற்றியுள்ளார். கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தன் சரித்திரக் கீர்த்தனைகளும் நாடகப் பான்மையில் உள்ளவையே. இவை நாடகங்களில் மட்டுமன்றிப் பெரும்பாலும் கதாகாலட்சேபக் கலையாகவும் பயன்படுகின்றன.

பாரதக் கதையை, பாரத விலாசம் என்ற பெயரில் இராமச்சந்திரக் கவிராயர் நாடகமாக்கியுள்ளார். இவர் சகுந்தலை விலாசம், இரங்கூன் சண்டை நாடகம், தாருகா விலாசம் முதலானவற்றையும் இயற்றினுர். இவருடைய படைப்புகளில் சொற்சுவையும் பொருட்சுவையும் செறிவாக உள்ளன.

தஞ்சையில் மகாராட்டிர மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் 18 ஆம் நூற்ருண்டில், சாங்கிலி நாடக சபை போன்ற மராத்திய நாடகக் குழுக்களும், பார்ஸி நாடகக் குழுக்களும் தமிழகத்தில் முகாமிட்டு, காட்சிப் புதுமைகள் வாய்ந்த நாடகங்களாக மக்களைக் கவர்ந்தன. இந்தக் குழுக்களின் பாணியி லேயே பிற்காலத்தில் நவாப் கோவிந்தசாமி ராவ் முதலான வித்தகர்கள் தமிழில் நாடகங்கள் நடத்த முன்வந்தனர்.

**விலாச நாடகங்கள்**

விலாசம், வாசகப்பா, யட்சகானம் முதலான பலவகை இசைநாடகங்கள் 19ஆம் நூற்ருண்டில் நூற்றுக்கணக்கில் நடைபெறலாயின. நாடக வளர்ச்

சியில் ஒரு புது வேகம் ஏற்பட்டது இந்த நூற்றுண்டில்தான். உரைநடை நாடகங்கள் தோன்றிய நற்காலமும் இதுதான். திருமலைவாயல் அப்பாவுப் பிள்ளை இயற்றிய அரிச்சந்திர விலாசம், விலாச நாடகங்களில் மிகவும் சிறந்தது. தெருக்கூத்துக் கலைஞர்கள் பலர் இதனை நடத்திப் புகழ்பெற்றனர். பிரகலாத விலாசம், மார்க்கண்டேய விலாசம், குசேல விலாசம், நாலுமந்திரி விலாசம், மதன சுந்தரப் பிரசாத சந்தன விலாசம், மோகினி விலாசம், பாண்டிய தேவி விலாசம் முதலான புராண நாடகங்கள் மட்டுமின்றி, டம்பாச்சாரி விலாசம், அப்பர் பர்மா முதலான சமூக நாடகங்களும் தெருக்கூத்து வகையாகவும், மேடைக் கலை வகையாகவும் புகழ்பெற்றுள்ளன. கி. பி. 1857இல் சைதை காசி விசுவநாத முதலியார் இயற்றிய டம்பாச்சாரி விலாசம் முழு நீள நகைச்சுவை நாடகமாக 20 ஆம் நூற்றுண்டில் தொடர்ந்து நடைபெற்றுள்ளது. சமுதாயச் சீர்திருத்த நாடகங்களுக்கு இதுதான் முன்னேடி என்று சொல்ல வேண்டும்.

வல்லாள மகாராஜ யட்சகானம், நீலி யட்சகானம், சாரங்கதர யட்ச கானம் முதலான யட்சகான நாடகங்கள் சிறந்த பாடல் வளமுடையவை.

தமிழகத்தில் தெருக்கூத்து நாடகங்கள் புகழ்பெற்றது போலவே, இலங்கை யிலும் தென்மோடிக்கூத்து, வடமோடிக் கூத்து, விலாசம் ஆகிய மூன்று வகை களில் பாட்டும் ஆட்டமும் கலந்த நாட்டுக் கூத்து மக்களின் கலையாக வளர்ந் துள்ளது.

**புராண இதிகாச நாடகங்கள்**

புருரவ சக்கரவர்த்தி, சிவத்தொண்டர், சுபத்திரை கல்யாணம், இரணிய சம்ஹாரம், உத்தரராமாயணம், காத்தவராயன், குசலவ நாடகம், சவ்வருண நாடகம், ஜமதக்னி நாடகம், தக்க நாடகம், திரௌபதி துகிலுரிதல், துளசி தாசர், மன்மத நாடகம், மயில்ராவணன், பராங்குசநாடகம், பாரிஜாதி நாடகம், சுக்ரீவ விஜயம், சோழவிலாசம், இந்திர சபா, பத்மினி சபா, வள்ளி யம்மை நாடகம், ரத்னுவளி நாடக அலங்காரம் முதலிய ஏராளமான நாடகச் சுவடிகள் சென்னையில் அரசு கீழ்த்திசைக் கையெழுத்து நூலகம், தமிழ்நாடு ஆவணக்காப்பகம், மறைமலையடிகள் நூல் நிலையம், திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையம், தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம், முதலான நூலகங்களில் காணப்படுகின்றன. ''19ஆம் நூற்றுண்டில் தமிழ் நாடகங்கள்'' என்ற தலைப்பில் பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனர் எழுதிய நெடுங் கட்டுரையில் நாடக விவரங்கள் தெளிவாகக் காணப்படுகின்றன. (புதுச்சேரி கல்விக் கழகக் கட்டுரைத் திரட்டு - பக்கம் 102-131)

பெரும்பாலும் இந்து சமயப் புராண இதிகாச நாடகங்கள் செல்வாக்குப் பெற்றதோடு, ஞானசௌந்தரி, ஞானத்தச்சன், ஊதாரிப் பிள்ளை முதலான பல கிறிஸ்துவ நாடகங்களும், அலி பாதுஷா, அப்பாஸ் முதலான இஸ்லாமிய நாடகங்களும் மேடைப் புகழ் பெற்றன.

**மறுமலர்ச்சி நாடகங்கள்**

19 ஆம் நூற்றுண்டின் இறுதியில்தான் மேலை நாட்டு நாடக முறையைப் பின்பற்றிய காட்சிப் பகுப்புடைய நாடகங்கள் தோன்றலாயின. இவ்வகையில்

குறிப்பிடத்தக்க முயற்சியை மேற்கொண்டவர் பரிதிமாற் கலைஞன் என்னும் வி. கே. சூரியநாராயண சாஸ்திரியார். இவர் இயற்றிய கலாவதி, ரூபாவதி ஆகிய உரையாடல் நாடகங்களும், மான விஜயம் எனும் அகவல் கவிதை நாடகமும் சரியான வடிவம் உடையவை. 'நாடக இயல்' எனும் நாடக இலக்கண நூலையும் இவர் இயற்றியுள்ளார்.

1891இல் மனோன்மணீயம் என்னும் காவிய நாடகத்தைப் படைத்து நாடகத் துறையில் புதுமலர்ச்சி ஏற்படுத்தியவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை.

**சங்கரதாஸ் சுவாமிகள்**

தமிழ் நாடக மேதை சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகப் பணியும் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிக் காலத்திலேயே தொடங்கிவிட்டது. 1900 ஆம் ஆண்டிலேயே ராஜபார்ட் ஜி. என். முனுசாமி நாயுடு போன்ற புகழ் பெற்ற நடிகர்கள் யாழ்ப்பாணத்தில் வண்ணை இந்து விநோத சபையின் சார்பில் நாடகங்கள் நடத்தியபோது சங்கரதாஸ் சுவாமிகள் ஆசிரியராக விளங்கினுர் என்பது குறிப்பிடத் தக்கது.

பின்னர் அபிமன்னன் சுந்தரி, பவளக்கொடி, சீமந்தினி, சதி அனுசூயா, பிரகலாதன், சிறுத்தொண்டர், வள்ளி திருமணம், சத்தியவான் சாவித்திரி, சதி சுலோசனு முதலான பல புராண நாடகங்களுக்கு அற்புதமான உரையாடல்களும் சந்தக் களஞ்சியங்களான பாடல்களும் அமைத்து, கட்டுக் கோப்புடன் மேடையில் அரங்கேற்றிய பெருமை சங்கரதாஸ் சுவாமிகளுக்கே உரியது. தொழில் முறை நாடகக் குழுக்கள் பலவற்றின் உயிரோட்டமாக விளங்கி நாடகக் கலையை வளர்த்த மேதை சங்கரதாஸ் சுவாமிகள்.

**பம்மல் சம்பந்த முதலியார்**

ஏகை சிவசண்முகம் பிள்ளை, 'சந்தச் சரபக்கவி' உடுமலை முத்துச்சாமி கவிராயர் முதலானோரின் நாடகப் பணியும் வரலாற்றில் அழுத்தமாகப் பதிந்துள்ளது.

1911இல் சுகுண விலாச சபையைத் தோற்றுவித்துப் பின் தம் வாழ்நாள் முழுவதும் நாடகக் கலைக்கே காணிக்கையாக்கி, எண்பதுக்கு மேற்பட்ட நாடக நூல்களை இயற்றி, அரங்கேற்றித் தாமும் நடித்துச் சிறந்த பணியாற்றியவர் நாடகத் தந்தை பம்மல் சம்பந்த முதலியார் என்பதை அனைவரும் அறிவர். அவரது தனிச் சிறப்புக்குச் சான்ருக விளங்குபவை சபாபதி, மனோகரா முதலான இணையற்ற நாடகங்களாகும். பயில்முறை (அமெச்சூர்) நாடகக் குழுக்கள் பல தோன்றுவதற்கு வழிகாட்டியதோடு, தொழில்முறை நாடகக் குழுக்களுக்கும் தூண்டுகோலாக இருந்தவர் பம்மல் சம்பந்தனர். டாக்டர் சி. பி. ராமசாமி அய்யர், எஸ். சத்தியமூர்த்தி முதலான அரசியல் மேதைகள் பலரையும் நடிகராக்கி நாடகக் கலைஞர்களின் தரத்தை உயர்த்தியவரும் இவரே.

**தொழில்முறை நாடக வளர்ச்சி**

ராஜா பர்த்ருஹரி, கதரின் வெற்றி, தேசியக்கொடி, பதிபக்தி, பம்பாய் மெயில், முதலான நாடகங்களால் பெருமைபெற்று, முதன்முறையாக லண்டன் மாநகருக்கும் பாலமனோகரா சபா என்ற தமது நாடகக் குழுவை அழைத்துச்

சென்று, தமிழ் நாடக ஒளியைப் பரப்பியவர் சதாவதானம் தெ. பொ. கிருஷ்ண சாமிப் பாவலர்.

தொழில் முறை நாடக சபையினர் பலருக்கு ஆசிரியராக, இயக்குநராக இருந்து இராஜாம்பாள், இராஜேந்திரன், மேனகா, சந்திரகாந்தா முதலான நாடகங்கள் வெற்றிபெறச் செய்தவர் எம். கந்தசாமி முதலியார்.

கண்ணை மூடித் திறப்பதற்குள் காட்சி மாறும் விந்தைகளைச் செய்து காட்டி, தசாவதாரம், ஆண்டாள், பகவத் கீதை முதலான மாபெரும் நாட கங்களைப் படைத்துப் புகழின் சிகரம் கண்டவர் சி. கன்னையா.

பாகவதர்களின் நாடகக் குழு, பாலாமணி அம்மையார் நாடகக் குழு, மதுராம்பிகா நாடக சபா, ஆரிய கான சபா, மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி, அல்லி பரமேஸ்வரயர் கம்பெனி, மங்கள கான சபா, நவாப் ராஜமாணிக்கம் குழு, டி. கே. எஸ். நாடகக் குழு, சக்தி நாடக சபா, கே. ஆர். ஆர். கிருஷ்ணன் நாடக சபா, என். எஸ். கே. நாடக சபா, சேவாஸ்டேஜ், எம். ஜி. ஆர். நாடக மன்றம், எஸ். எஸ். ஆர். நாடக மன்றம், சிவாஜி நாடக மன்றம், நேஷனல் தியேட்டர்ஸ், ஹெரான் தியேட்டர்ஸ் முதலான தொழில்முறை நாடக மன்றங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவையாகும். இந்தப் பட்டியல் மிகப் பெரிது.

சங்கரதாஸ் சுவாமிகளை வழிகாட்டியாகக் கொண்டு புராண நாடகங் களிலும் தமிழ் மணம் கமழச் செய்த பெருமை டி. கே. எஸ். குழுவினருக்குண்டு. இவர்களது அவ்வையார், சிவலீலா, தமிழ்ச் செல்வம், அமைச்சர் மதுரகவி போன்றவற்றைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். ஆர். எஸ். மனோகரின் நேஷனல் தியேட்டர்ஸ் இலங்கேஸ்வரன், சூரபத்மன் முதலான புராண நாடகங்களைப் புதிய கண்ணோட்டத்தில் கதையமைத்து நடத்தியுள்ளார். இந்த முறையைப் பின்பற்றி ஆசார்ய ராவணா, சனீஸ்வரர் முதலான நாடகங்களை ஹெரான் ராமசாமி நடத்தி வந்துள்ளார்.

டி. கே. எஸ். சகோதரர்களின் இமயத்தில் நாம் (ரா. வே.) இராஜராஜ சோழன் (அரு. ராமநாதன்), சிவகாமியின் சபதம் (புத்தனேரி சுப்பிரமணியம்), தேசபக்தர் சிதம்பரனார் (சேலம் சித்தராசன்) முதலானவைகளும் சிவாஜி நாடக மன்றத்தின் வீரபாண்டியக் கட்டபொம்மன் (சக்தி கிருஷ்ணசாமி) நாடகமும், எஸ். டி. சுந்தரத்தின் வீரசுதந்திரமும் வரலாற்று நாடகங்களில் குறிப்பிடத் தக்கவை.

**பாட்டு முழக்கம்**

கால நிலைக்கு ஏற்ற இனிய பாடல்களால் மக்களைக் கவர்ந்தவை 'ஸ்பெஷல்' நாடகங்கள் என்னும் சிறப்புக் கலைவடிவங்கள். நாடகங்களின் தலைப்புக்கள் புராண நாடகங்களாக இருந்தாலும், அவற்றின் தரமான பாடல் களுடன் காலத்திற்கேற்ற புதுமையான பொதுப் பாடல்களைப் பாடி மெய்சிலிர்க்கச் செய்த கலைஞர்கள் பலர். எஸ். ஜி. கிட்டப்பா, கே. பி. சுந்தராம்பாள், எஸ். வி. சுப்பையா பாகவதர், எஸ். எஸ். விசுவநாத தாஸ், டி. ஆர். மகாலிங்கம்,

எம். கே. தியாகராஜ பாகவதர், எம். எம். மாரியப்பா, உடையப்பா, என். என். கண்ணப்பா முதலானோர் குறிப்பிடத்தக்கவர்களில் சிலர். தொன்றுதொட்டுத் தரமான இசையைப் பேணி வளர்த்து வந்தவை மேடை நாடகங்களே என்றால் அது மிகையாகாது.

**நாட்டிய நாடகங்கள்**

குறவஞ்சி நாடகங்கள் மட்டுமின்றிப் பலவகைப் புதுமையான நாட்டிய நாடகங்கள் இருபதாம் நூற்றாண்டில் மலர்ந்துள்ளன. நடனக் கலை மேதை கே. என். தண்டாயுதபாணி பிள்ளை இயக்கிய சிலப்பதிகாரம், திருவிளையாடல், சந்திரகாந்தாவின் சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வி, அனார்கலி, ஜெயலலிதாவின் காவிரி தந்த கலைச் செல்வி, அ. மல்லிகையின் சித்திரப்பாவை, பத்மா சுப்பிரமணியத்தின் கிருஷ்ணாய துப்யம் நம, கம்ப இராமாயணம், வைஜயந்திமாலாவின் சங்கத் தமிழ்மாலை, கலாட்சேத்திராவின் கண்ணப்ப நாயனார், ராஜசுலோசனாவின் சீனிவாச கல்யாணம், பஸ்மாசுர மோகினி, நடராஜ் சகுந்தலாவின் திருவள்ளுவர், பத்மினியின் கண்ணகி, லதாவின் சாகுந்தலம் முதலானவை புதிய படைப்புக்களாக மக்களின் பேராதரவைப் பெற்றுள்ளன. இவைகளில் சில இந்தக் கட்டுரையாளர் இயற்றியவை.

கவிதை நாடகங்களில் பேராசிரியர் சுந்தரனாரின் மனோன்மணீயம், பரிதிமாற் கலைஞரின் மானவிஜயம், முத்துசாமி அய்யரின் விசுவநாதம், பாரதியாரின் பாஞ்சாலி சபதம், பாரதிதாசனின் புரட்சிக்கவி, சுத்தானந்த பாரதியின் காலத்தேர், புலவர் பழனியின் அனிச்ச அடி, ஏ. என். பெருமாளின் பனிமொழி முதலானவை குறிப்பிடத்தக்க சிறப்புப் பெற்றவை. தஞ்சைவாணனின் 'களம் கண்ட கவிஞன்' கவிதை நாடகத்தை, சிவாஜி கணேசன் மேடையேற்றினார். கவிதை நாடகங்கள் பல வானொலியில் ஒலிபரப்பப்பட்டுள்ளன. மற்றவகை நாடகங்களையும் வளர்த்துவரும் பெருமையில் வானொலிக்கும் தொலைக் காட்சிக்கும் சிறப்பான பங்குண்டு.

**சமூக நாடகங்களின் எழுச்சி**

1857இல் டம்பாச்சாரி விலாசத்தோடு தொடங்கிய சமூகச் சீர்திருத்த நாடக முறை, எம். கந்தசாமி முதலியார், நாடகமாக்கிய இராஜாம்பாள், சந்திரகாந்தா, ராஜேந்திரா, வடுவூர் கே. துரைசாமி அய்யங்காரின் மேனகா, கிருஷ்ணசாமிப் பாவலரின் பதிபக்தி, பம்பாய் மெயில், டி. கே. முத்துசாமியின் குமாஸ்தாவின் பெண் முதலிய நாடகங்களாக வளர்ச்சி பெற்றது.

அறிஞர் அண்ணாவின் வேலைக்காரி, ஓர் இரவு இரண்டும் சமூகச் சீர்திருத்த நாடகங்களில் ஒரு திருப்பு முனையாக அமைந்து, திரு. கே. ஆர். ராமசாமியால் வெற்றிகரமாக நடத்தப்பட்டன.

கு. சா. கிருஷ்ணமூர்த்தியின் அந்தமான் கைதி, நாரண துரைக்கண்ணனின் உயிரோவியம், ப. நீலகண்டனின் முள்ளில் ரோஜா, பா. ஆதிமூலம், நா. சோமசுந்தரம் ஆகியோரின் மனிதன், ஸ்ரீதரின் ரத்தபாசம் முதலானவை சமுதாய நாடகங்களில் டி. கே. எஸ். முத்திரையோடு சிறப்பான இடம் பெற்றன.

என். எஸ். கே. நாடக சபாவின் பைத்தியக்காரன் (எஸ். வி. சகஸ்ர நாமம்) ஐம்பதும் அறுபதும், விலாங்கு மனிதன் முதலானவை அழுத்தமான சீர்திருத்தக் கருத்தோவியங்களாக விளங்கின.

திருவாரூர் கே. தங்கராசுவின் ரத்தக்கண்ணீர் சமுதாயச் சீர்கேடுகளைக் குத்திக் காட்டும் ஈட்டியாக விளங்கியது. புரட்சி நடிகர் எம். ஜி. ஆர். நாடக மன்றத்தின் இன்பக்கனவு (ரவீந்தர்), சுமைதாங்கி (நா. பாண்டுரங்கன்) முதலா னவை இலட்சிய நாடகங்கள். கலைஞர் மு. கருணாநிதியின் தூக்கு மேடை, மணிமகுடம், வெள்ளிக்கிழமை முதலானவை துடிப்புமிக்க உரையாடல் தெறிப் பவை.

சேவா ஸ்டேஜ் நடத்திய நாலு வேலி நிலம், வடிவேலு வாத்தியார், (தி. ஜானகிராமன்), பிரசிடெண்ட் பஞ்சாட்சரம் (பி. எஸ். ராமய்யா) முதலா னவை சமுதாயக் கோணல்களைச் சாடும் வலுவான படைப்புக்கள்.

கே. பாலச்சந்தர் படைத்த சதுரங்கம், மேஜர் சந்திரகாந்த், நீர்க்குமிழி, சர்வர் சுந்தரம், எதிர்நீச்சல் முதலான நாடகங்கள் அனைத்தும் இதயத்தைத் தொடும் கட்டுக்கோப்புடைய கலைவடிவங்கள்.

சமுதாயச் சீர்கேடுகளை அங்கதச் சுவையோடு குத்திக்காட்டிக் கலகலப் பூட்டுபவை ‘சோ’வின் சம்பவாமி யுகே யுகே, யாரிடமும் சொல்லாதே போன்ற நாடகங்கள்.

கோமல் சுவாமிநாதனின் சொர்க்க பூமி, யுத்த காண்டம், தண்ணீர். தண்ணீர் முதலானவை ஆழமான சிந்தனையைத் தூண்டும் நாடகச் சுடர்கள்.

என். எஸ். என் தியேட்டரின் ஊஞ்சல், கல்தூண் முதலானவை தரமான சமூகச் சிந்தனைகள்.

பூர்ணம் விசுவநாதனின் அண்டர் செக்ரடரி நகைச்சுவை விருந்து.

‘விசு’வின் பாரத மாதர்க்கு ஜே, குடும்பம் ஒரு கதம்பம் முதலானவை முழுக்க முழுக்க நையாண்டிச் சமூகச் சித்திரங்கள்.

வெங்கட், மௌலி, மெரினா, பாலமுருகன், ஏ. எல். நாராயணன், சுஜாதா, திலகம் நாராயணசாமி, இரா. பழனிசாமி, தூயவன் முதலான பலரது நாடகங்கள் மேடைப் புகழ் பெற்றுள்ளன.

மேலே குறிப்பிடப்பட்ட நாடக ஆசிரியர்களில் சிலர் தம் நாடகங்களில் தாமும் நடித்தும் பெருமை பெற்றுள்ளனர்.

தமிழ் நாடகக் கலை வளர்ச்சியில் தனிப்பெருமை பெற்றுள்ளது இந்த இருபதாம் நூற்றாண்டுதான். பல புதுமைகளைக் கண்டுள்ளபோதிலும், வங்காளத் தில் உள்ளது போலத் தொடர்ந்து நாள்தோறும் நாடகம் நடத்தும் குழுக்களோ கொட்டகைகளோ தமிழகத்தில் இல்லாதது ஒரு பெருங்குறையாகவே உள்ளது.

நூற்றுக்கணக்கான நாடகங்கள் இந்த நூற்றுண்டில் அரங்கேற்றப்பட்டும் அவைகளில் பெரும்பாலானவை இன்னும் நூல் வடிவம் பெறுமல் இருப்பது மற்றெரு குறையாகும்.

அத்தனை நாடகங்களையும் நூல் வடிவில் கொண்டுவரும் தனி முயற்சி தொடங்கினுல்தான், நாடக வரலாற்றுக்குத் தரமான ஆதார இலக்கியங்கள் கிடைக்கும்.

சிறந்த நாடகங்களை நூல் வடிவில் கொடுப்பதற்குத் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் நிதி உதவி செய்து வருவதை நாடகாசிரியர்கள் நன்கு பயன்படுத்த முன்வந்தால் இதற்காகப் பெரும்அளவு நிதி ஒதுக்கீடு செய்வதற்கும் அரசு முன்வரக் கூடும்.

தொன்றுதொட்டு வளர்ந்து வந்துள்ள தமிழ் நாடகக் கலை இன்று செழிப்பான நிலையைத் தொட்டுப் பார்க்கிறது என்பது உண்மை. இன்னும் தரமான நாடகங்கள் பல தோன்ற வேண்டும். தமிழ் நாடகங்களுக்கு ஆங்கிலம் போன்ற பிற மொழிப் பெயரிடும் போக்கும், அவசியமற்ற பிற மொழி உரையாடலை வாரி இறைக்கும் போக்கும் மாற வேண்டும்.

அழுத்தமான கதையம்சம் உள்ள நாடகங்கள் மிகவும் அரிதாகி விட்டன. கதைக்கு முதன்மை கொடுக்காமல் நாடக நோக்கம் என்ன என்பதைப் புரியாமல், புரிய வைக்காமல், வெறும் பொழுதுபோக்காக, கதையோடு ஒட்டாத அரசியல் துணுக்கு நெடியுடன், பொருளற்ற நகைச்சுவை வெடியுடன் பல நாடகங்கள் நடத்தப்படுகின்றன. இந்த நிலையும் மாற வேண்டும்.

நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் மேனகா முதற்கொண்டு இன்றுவரை எத்தனையோ நாடகக் கதைகள் திரைப்படங்களாக மறுவடிவம் பெற்றுள்ளன. திரைக் கலைக்கு நாடகம் தாய்க் கலையாக விளங்கி வந்திருக்கிறது. எனவே, திரைப்படத்தை மனக்கண்ணில் உருவகப்படுத்திக் கொண்டு அந்த ஆவலோடு மேடையேறிய நாடகங்களும் பல உண்டு. நாடகப் பண்புக்கு-கட்டுக்கோப்புக்கு இடையூறு நேராமல் எத்தகைய புதுமைகளையும் மேடையிலே நிறைவேற்றும் உறுதி நாடகக் கலைஞர்களுக்கு ஏற்பட வேண்டும்.

நகராட்சி மன்றங்களின் மூலம் நாடக அரங்குகள் அமைக்கும் திட்டத்தைத் தமிழக அரசு அறிவித்துள்ளது. இதன் பயனுக முக்கிய நகரங்களில் சிறந்த அரங்குகள் ஏற்பட்டால், கட்டுக்கோப்பான நாடகப் புதுமைகளை நிரந்தரமாகச் செய்துகாட்டும் ஊக்கம் நாடகக் குழுக்களுக்கு உண்டாகும். புதிய நாடகப் பயிற்சிப் பண்ணைகளும் தோன்றும். நாடக இலக்கியமும் செழிப்பாக வளர வழி கிடைக்கும்.

தொன்மை வாய்ந்த தமிழ் நாடகக் கலை பன்மடங்கு வளர்ச்சி பெற்று உலக நாடக வரலாற்றில் தனி இடம் பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் கலை உலகம் முனைந்து செயல்பட வேண்டும்.

வளர்க நாடகக் கலை!

# பழைய இலக்கியங்களில் நாடகம்-கூத்து பற்றிய குறிப்புக்கள் சில

**தொல்காப்பியம் :**

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாமிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்
– (அக. – 53)

வாடா வள்ளி வயவர் ஏத்திய
(பொருள் – 60)

வெறியறி சிறப்பின் செவ்வாய் வேலின்
வெறியாட் டயர்ந்த காந்தளும்
(பொருள் – 60)

**பட்டினப்பாலை :**

பாடல் சேர்ந்தும் நாடகம் நயந்தும்.

**பெரும்பாணாற்றுப் படை :**

நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த
விசு வீங் கின்னியம் கடுப்ப.

வாடா வள்ளியின் வளம்பல தரூஉம்
நாடு பல கழிந்த பின்றை (370-371)

**மலைபடுகடாம் :**

வான்தோய் மீமிசை அயருங் குரவை
– (322)

**மதுரைக் காஞ்சி :**

மன்றுதொறும் நின்ற குரவை (615)

முழவுமிகு மகலாங்கண்
விழவுநின்ற வியன்மறுகில் துணங்கை (327-329)

**நற்றிணை :**

பெருமலை
வாங்கமைப் பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றில் குரவையும் கண்டே (276)

**புறநானூறு :**

குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றில் குரவை யயரும் (129)

தெண்கடல் திரை மிசைப் பாய்ந்து
திண்டியில் வன்பரதவர்
வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர் தூங்குந்து (24)

ஆடினிர் பாடினிர் செலினே
நாடும் குன்று மொருங்கீயும்மே (109)

பாடுநர்க் கீந்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீந்த பேரன் பின்னே. (221)

**பதிற்றுப் பத்து :**

பிணம் பிறங் கழுவந்துத் துணங்கை யாடி (45)

முழாவிமிழ் துணங்கைக்குத்
தழூஉப் புணையாக (52)

மன்பதை பெயர அரசு களத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்ருடு துணங்கை (77)

**நெடுநல்வாடை :**

ஆடல் மகளிர் பாடல் கொள (67)

**கூத்து நூல் :**

மோனத்து இருந்த முன்னேன் கூத்தில்
உடுக்கையில் பிறந்தது ஓசையின் சுரவே
ஓசையில் பிறந்தது இசையின் உயிர்ப்பே
இசையில் பிறந்தது ஆட்டத்து இயல்பே
ஆட்டம் பிறந்தது கூத்தினது அமைவே
கூத்தில் பிறந்தது நாட்டியக் கோப்பே
நாட்டியம் பிறந்தது நாடக வகையே.
பன்னிருகூத்தும்
பற்பல கூத்தும்
பன்னீ ரெட்டுடனும்
பாவையின் கூத்தும்.

**திவாகர நிகண்டு :**

நடமே நாடகம் கண்ணுன் நட்டம்
படிதம் ஆடல் தாண்டவம் பரதம்
ஆலுதல் தூங்கல் வாணி குரவை
நிலயம் நிருத்தம் கூத்தெனப்படுமே.

**பிங்கல நிகண்டு :**

இசைத் தமிழ் இயற்றமிழ்
நாடகத் தமிழென
வகைப்படச் சாற்றினர்
வகையுணர்ந்தோரோ.

**திருவாசகம் :**

நகவே தகும் எம்பிரான் என்னை
நீசெய்த நாடகமே!
நாடகத்தால் உன்அடியார் போல்நடித்து...

**நச்சிஞர்க்கினியர் :**

இசை நாடகங்கள் இன்பத்தை விளக்கும்.

**பேராசிரியர் உரை :**

கண்டார்க்கு இன்பம் செய்தலின்
நாடகம் என்றார்.

**பரிபாடல் திரட்டு :**

தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்

**குறள் :**

கூத்தாட் டவை குழாத் தற்றே

**சிலப்பதிகாரம் :**

நாடக மடந்தையர் ஆடரங்கு

நாடகம் ஏத்தும் நாடகக் கணிகையோடு...

நாடக முருப்பசி...
வால சரிதை நாடகங்களும்...

நாடக மகளிர் ஈரைம் பதின்மரும்...
நாடக மகளிரும் நயத்தகு மாந்தரும்.

**மணிமேகலை:**

ஆடற் கூத்திெனெடு அவிநயம் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்
பாடல் சால் சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப.

நன்மணம் பிறந்த நாடகக் கணிகை

நாடக மடந்தையர் நலங்கெழு வீதி.

**சீவக சிந்தாமணி :**

நாடகம் இயற்றுகின்றுர்

நாடகம் நாங்களுற்றது.

பண்கனியப் பருகிப் பயன்நாடகம்
கண்கனியக் கவர்ந்து உண்டு

கிளைநரம் பிசையும் கூத்தும்
கேழ்த்து எழுந்து.
இன்னிசைக் கூத்து நோக்கி
இருந்தனன் திலகம் அன்னுன்...

கடியரங் கனிந்து மூதூர்க்
கடற் கிளந்தனைய தொப்ப
நடைபெறு புலவர் ஈண்டி
நாடகம் நயந்து காண்பான்...

யாழும் குழலும் மணிமுழவும்
அரங்க மெல்லாம் பரந்திசைப்பத்
தோழன் விண்ணுேன் அவண்தோன்றி
வயங்கக் கூத்து வயங்கிய...

இந்திர குமரன் போல
இறைமகன் இருந்து காண
சுந்தர மகளிர் அன்னுர்
நாடகம் இயற்றுகின்றுர்.

# இலக்கிய இலக்கண உரை வேறுபாடுகள்

மயில்வாகனம் சற்குணம்

உலகம் போற்றும் உயர்தனிச்செம்மொழிகள் எல்லாவற்றிலும் இலக்கியம் தோன்றும் போது அவை செய்யுள் வடிவத்திலேதான் முதலில் தோன்றியவைகளாகத் தெரிகின்றன. அதே பான்மையிலேதான் தமிழ் மொழியிலும் செய்யுள் நூல்களே முதலில் உருவாகியிருக்கின்றன. சங்ககாலப் பழைமை வாய்ந்த பல தமிழ் இலக்கியங்கள் எம்மிடையே இருந்தாலும் அவற்றிலே சிலவற்றிற்குப் பலரும், பலவற்றிற்குச் சிலரும் உரையெழுதியுள்ளனர். பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகியவற்றிற்கு நச்சினர்க்கினியரும், சிலப்பதிகாரத்துக்கு அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார், ந. மு. வேங்கடசாமி நாட்டார் போன்றோரும் உரை எழுதியிருக்கிறார்கள். திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், பரிதியார், காலிங்கர், பரிமேலழகர் முதலிய பத்துப்பேர் உரை எழுதியிருக்கிறார்கள்.

இலக்கண நூல்களுக்கு உரையெழுதிய உரையாசிரியராகிய இளம்பூரணர், சேனவரையர், பேராசிரியர், மயிலைநாதர், சங்கரநமசிவாயர் முதலானோரும் சில இலக்கிய பாடல்களுக்கு உரை எழுதியுள்ளனர்.

நூல்கள் தோன்றிய காலத்தில் உரையும் விளக்கமும் இன்றி மூலநூல்களே அனைவரும் கற்று மகிழும் இயல்பினவாய் இருந்தன. பேராசிரியர் தொல்காப்பியம் மரபியலின் 98-ம் சூத்திரவுரையில் ''உரையின்றிச் சூத்திரந்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டு என்பதாம்'' என்றும், மரபியல் 101-ம் சூத்திரவுரையில் ''உதாரணங் காட்டல் வேண்டாமையை உணர்ந்து உரை நடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து நூல்கள் என்பது கருத்து'' என்றும் கூறிய கருத்துக்கள் சிந்திக்கத்தக்கன. இத்தகைய காலங் கடந்த பின்னர் நூல்களுக்கு உரை எழுத வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. எனவே, உரையினது பொது இலக்கணங் கூற முற்பட்ட நன்னூலார் அதனைப் பதினன்கு வகையாகக் கொண்டு இலக்கணங் கூறினர். அதாவது;

பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை உதாரணம் வினவிடை விசேடம்
வரிவதி காரந் துணிபு பயனே
டாசிரிய வசனமென் றீரே ழுரையே (சூ. 21)

என்று கூறிச் சென்றார். யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் சூத்திரப் பொருள் உரைக்கும் போது அவை பல திறத்தானும் உரைக்கப்படும் என்று கூறி அதிலே பதின்மூன்று திறம் பற்றியும் எடுத்து விளக்கிச் சென்றுள்ளார். இந்தப் பதின்மூன்று திறத்தோடு கருத்துரைத்தல் என்ற ஒன்றை மட்டும் கூட்டி உரையாவன பதினன்கு வகைப்படும் என்று வீரசோழியத்துக்கு உரையெழுதிய பெருந்தேவனு

ரும் கூறியுள்ளார் (அலங்காரப் படலம் 38). நன்னூலார் கூறிய பதினன்கு உரை வகைக்கும் பெருந்தேவனர் யாப்பருங்கல விருத்தியுரையைத் தழுவிக் கூறிய உரைவகைக்கும் இடையே மிக்க ஒற்றுமை உண்டு.

1. பாடம் என்ற வகையிலே மூலபாடம் ஒருபுறமிருக்க உரையாசிரியர் தமக்கு வேண்டியவாறு செய்யுளின் மூலத்தை மாற்றிப் பொருள் கொள்ளும் போதும், அதற்கேற்ப மூலமும் உரையும் தம்முள் மாறுபடுகின்ற தன்மையை நாம் உணர்தல் கூடும். ஔவையார் அருளிச் செய்த கொன்றைவேந்தனின் காப்புச் செய்யுள் நல்லூர் ஆறுமுகநாவலர் அவர்களால் பின்வருமாறு எடுத்தா ளப்பட்டுள்ளது.

'கொன்றை வேந்தன் செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோ மியாமே'

இதற்குத் திருந்திய உரையெழுதிய நாவலர் பெருமான் 'கொன்றைப்பூ மாலையைச் சூடிய சிவபெருமானுக்குக் குமாரராகிய விநாயகக் கடவுளுடைய பாதங்கள் இரண்டையும் எந்நாளும் துதி செய்து வணங்குவோம் நாங்கள் என்றவாறு. ஏகாரம் —ஈற்றசை' என்று கூறியுள்ளார்.

இப்பாடத்தையும் உரையையுமே ந. மு. வேங்கடசாமி நாட்டாரும் பின் பற்றியுள்ளார். ஜூனியர் மூன்றும் வகுப்புக்கு 2-ம் பகுதியாக வெளிவந்த 'பால நீதிச் செய்யுள் நூற்றிரட்டு' நூலிலே கொன்றைவேந்தனும் வெற்றிவேற்கையும் இடம் பெற்றுள்ளன. அங்கு கொன்றைவேந்தனின் காப்புச் செய்யுள் அடிக் குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ளது. அஃதாவது: 'கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை என்றும் பாடம் உண்டு. இப்படிப் பாடங்கொண்டால் இது சிவ பெருமான் வணக்கமாகிவிடும்' என்று எழுதப்பட்டுள்ளது. தொல்காப்பியம் செய்யுளியலுக்கு உரையெழுதிய இளம்பூரணரால் இப்பாடல்,

'கொன்றை வேய்ந்த செல்வன் அடியை
என்றும் ஏத்தித் தொழுவோம் நாமே'

என மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது (செய்யுள். 174). தொல்காப்பியம் செய்யுளியலுக்கு உரை எழுதிய பேராசிரியர் இக்காப்புச் செய்யுளைக் கீழ்வருமாறு மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

'கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
யென்று மேத்தித் தொழுவோம் யாமே' (செய்யுள். 149)

இப்பாடத்தையே யாப்பருங்கல விருத்தியுரைகாரரும் பின்பற்றியுள்ளார். எனவே பிற்காலத்து உரையாசிரியர்களால் 'கொன்றை வேந்தன் செல்வன்' என்று கொண்ட பாடம் முற்காலத்து உரையாசிரியர்களால் 'கொன்றை வேய்ந்த செல்வன்' என்று கொள்ளப்பட்டுள்ளது. இக்காப்புச் செய்யுளை எப்படிப் பாடங் கொண்ட போதும் சிவபெருமானையே குறிக்கும் என்பதில் எவ்விதத் தவறும் இருப்பதாகத் தெரியவில்லை. காப்புச் செய்யுள் விநாயகக் கடவுளைத் தான் குறிக்க வேண்டும் எனக் கொண்டதாலே 'கொன்றை வேந்தன் செல்வன்' எனக் கொள்ளவேண்டிய இடர்ப்பாடு பிற்கால உரையாசிரியர்களுக்கு ஏற்பட்டு

மூலமும் உரையும் வேறுபடக் காரணமாயிற்று.' கொன்றை வேய்ந்த இறைவனின் திருக்குமாரராகிய செல்வனும் விநாயகக் கடவுளுடைய பாதாரவிந்தங்களை எந்நாளும் தொழுதிறைஞ்சுவோம்' எனக் கொண்டு காப்புச் செய்யுளை விநாயகக் கடவுளுக்குரியதாக்கியுள்ளனர். இது போலத்தான் ஆத்திசூடியின் காப்புச் செய்யுளிலும் விநாயகக் கடவுளை வருவித்து உரை கூறியுள்ளார். ஆத்திசூடி அமர்ந்த தேவன் சிவபெருமானாய் இருந்தாலென்ன? ஆத்திமாலையைச் சூடியவ ராகிய இறைவன் விரும்பிய விநாயகக் கடவுள் என ஏன் பொருள் கொள்ள வேண்டும்? இறைவனுக்கு இளமை அழகு முதலிய நலன்கள் கொண்ட முருகப் பெருமானின் விருப்பமில்லையா? அன்றேல் சிவபெருமானுக்குத் துதி கூறி நூல் இயற்றும் முறை தமிழிலக்கிய வரலாற்று வழக்கத்தில் இல்லையா? ஐங்குறுநூறு, குறுந்தொகை, புறநானூறு, கலித்தொகை, பெரியபுராணம், திருமந்திரம் என்பன சிவபெருமானுக்கு முதலில் வணக்கங் கூறியுள்ளன. எனவேதான் நூற்பெயர் கொன்றைவேந்தன், ஆத்திசூடி எனப் பெயர் பெறலாயின.

2. நல்லூர் ஆறுமுகநாவலர் (1861) பரிமேலழகர் உரையுடன் திருக்குறள் மூலத்தைப் பரிசோதித்து வெளியிட்டார். அப்பதிப்பிலே நூற்றுப்பத்தாம் குறளுக்குப் பரிமேலழகரால் எழுதப்பட்ட உரையிலே செய்ந்நன்றி கோறலுக்கு அடிக்குறிப்பாகப் புறநானூறு 34ஆம் செய்யுளாகிய

'ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்குங்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வருவாய் மருங்கிற் கழுவாயு முளவே'

என்னும் செய்யுளை எடுத்தாண்டுள்ளார்.

1894-ல் புறநானூற்றைப் பதிப்பித்து வெளியிட்ட டாக்டர் உ. வே. சாமிநாதையர் இச் செய்யுளை

'ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென'

என்று பதிப்பித்துள்ளார். நாவலர் பெருமான் 'குரவர்த் தப்பிய' எனப் பாடங் கொண்டதை சாமிநாதையர் 'பார்ப்பார்த் தப்பிய' என்று பாடங் கொண்டது மாத்திரமன்றிப் பிரதி பேதமும் காட்டவில்லை.

நாவலர் பெருமானின் திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் வெளி வந்தபோது சாமிநாதையருக்கு (1861–1855) ஆறு வயது. அவர் புறநானூற்றைப் பதிப்பிக்கும் போது (1894–1855) 39 வயது. இந்த 33 வருட இடைக்காலத்தில் நாவலர் பதிப்பித்த திருக்குறளை அவர் படித்திராமலா இருந்திருப்பார்? படித் திருந்தாலோ அல்லது பார்த்திருந்தாலோ நாவலர் பெருமானின் பாடபேதத்தை அவர் ஏன் சுட்டிக் காட்ட விரும்பவில்லை? புறநானூற்றுக்கு விளக்கவுரை எழுதிய சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளையும், தெளிவுரை எழுதிய

புலியூர்க்கேசிகனும் ஆறுமுகநாவலரைப் பின்பற்றியே இப்புறநானூற்றுப் பாடலைப் பதிப்பித்துள்ளனர். ஆனல், துரைசாமிப்பிள்ளை தனது விளக்க வுரையில் இம்மாற்றத்தை மறவாமல் எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

> 'குரவர்த் தப்பிய என்பது பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும் எனத் திருத்தப்பட்டிருக்கிறது. இத்திருத்தம் பரிமேலழகர் காலத்திலேயே செய்யப்பட்டுள்ளது என்பது திருக்குறளுரையாற் காணப்படுகிறது'

என்று கூறியுள்ளார்.

நாவலர் பதிப்பித்த பரிமேலழகர் உரையும் செய்ந்நன்றி கோறலின் கொடுமை கூறப்பட்ட போது பெரிய அறங்களைச் செய்தலாவது ஆன்முலை அறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல் என்றே கூறியுள்ளது. ஆனல், சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகவெளியீட்டிலும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் வெளியீடாகிய திருக்குறள் உரைக்கொத்திலும் தருமபுர ஆதீன வெளியீட்டுத் திருக்குறள் உரை வளத்திலும் பெரிய அறங்களைச் சிதைத்தல் பற்றிக் கூறப்பட்டபோது 'ஆன்முலை யறுத்தல், மகளிர் கருவினைச் சிதைத்தலோடு குரவர்த் தபுதல் முதலிய பாதகங் களைச் செய்தல்' என்றே பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. திருக்குறள் தண்டபாணி விருத்தியுரையும் இதனையே பின்பற்றியுள்ளது. எனவே, ஔவை துரைசாமிப் பிள்ளையின் கருத்துப்படி குரவர்த் தப்பிய என்பது பார்ப்பார்த் தப்பிய என்று திருத்தம் செய்யப்பட்டது பரிமேலழகர் காலத்திலாயின் பின்பு பார்ப்பார்த் தபுதல் குரவர்த் தபுதலாக மாற்றப்பட்டது எக்காலத்தில் என்பது கேள்வியாகின் றது. எனவே 'குரவர்' என்பது மூலபாடமா 'பார்ப்பார்' என்பது மூலபாடமா என்பது மேலும் எம்மைச் சிந்திக்கத் தூண்டுகின்றது. குரவர்—தாய் தந்தையர், பார்ப்பார்—பிராமணர் என்ற கருத்திலே உரையாசிரியர்கள் உரை கூறிச் சென் றுள்ளனர்.

புலியூர்க்கேசிகன் 'குரவர்' என்பதற்கு நல்லறிவைத் தந்த ஆசான் எனக் கூறியுள்ளார். ஆசாரக்கோவையின் 17ம் பாடல் கீழ்வருமாறு அமைந்து காணப்படுகின்றது.

> 'அரசர் உவாத்தியாயன் தாய்தந்தை தம்முன்
> நிகரில் குரவர் இவ்வைவர் இவரிவரைத்
> தேவரைப் போலத் தொழுதெழுக'

என்று கூறிச் சென்றதைத் தொடர்ந்து சிவகசிந்தாமணியின் 252ஆம் பாடலிற் குரவரைப் பேணலுக்கு நச்சினர்க்கினியரும் மேற்குறிப்பிட்ட ஐவரையுமே குறித் துச் சென்றுள்ளார். எனவே குரவர் என்போர் அரசன், நல்லாசிரியன், தாய், தந்தை, தமையன் என்ற ஐவருமே என்ருகிறது. பாடலின் மோனைப் பொருத்தம் நோக்கிச் செய்யுளடியும்

> 'குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்
> வருவாய் மருங்கிற் கழுவாயு முளவே'

எனக் கூறப்பட்டிருப்பதே பொருத்தமாகிறது.

1819ம் ஆண்டு தாம் பதிப்பித்த திருக்குறளில் (13 அதிகாரங்கள்) எல்லிஸ் என்பாரும் மேற்கூறிய திருக்குறளின் கீழ் 'குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' என்றே இப்புறநானூற்றுப்பாடலைப் பதிப்பித்துள்ளார். தருமபுர ஆதீன வெளியீடான திருக்குறள் உரை வளத்தில் பரிமேலழகர் உரை 'குரவர்த் தப்பிய' எனப் பதிப்பிக்கப்பட்டிருந்தாலும் அதன் அடிக்குறிப்பில் புறநானூற்றுச் செய்யுளைப் பார்ப்பார்த் தப்பிய என்று பதிப்பித்துள்ளனர். எனினும் குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும் என்பது முன்னைய பாடம் போலும் என்று குறித்துச் செல்ல மறக்கவில்லை. எனவே இதனையும் பாடபேத உரைபாடொன்றாகக் கொள்ள இடமுண்டு.

3. தேன்சொட்டும் திருவாசகம் தந்த மணிவாசகப்பெருமான் கீர்த்தித் திருவகவலின் பதினேழாம் அடியைக் 'கேவேடராகிக் கெளிறது படுத்தும்' என்று கூறிச் சென்றுள்ளார். இதற்குக் கருத்துரை வழங்கிய திருவாசகவுரையாசிரியர் பலரும் 'வலைஞர்' வடிவங் கொண்டு வலைவீசிக் கெளிற்று மீனை அகப்படுத்தியும்' என்று உரை கூறிச் சென்றுள்ளனர். மணிவாசகப் பெருமான் இறைவன் திருவிளை யாடலில் ஒன்றான வலைவீசிய செய்தியைத் திருவம்மானையில்–(2) 'அலைகடல்வாய் மீன்விசிறும் பேராசை வாரியன்' என்றும், திருவார்த்தையில் [3) 'வான்மீன் விசி றும் வகையறிவார்' என்றும், திருப்படையாட்சியில்[1] 'மீன்வலை வீசிய கானவன்' என்றும் கூறியுள்ளார். திருவம்மானையில் 'அலைகடல்வாய் மீன்வீசிய' செய்திக்குக் குறிப்புரை எழுதிய மேலைப்புலோலி மகாவித்துவான் நா. கதிரைவேற்பிள்ளை அலைகடல்வாய் வீசிய மீனை 'மகரமீன்' என்றார். சங்கநூற்செல்வர் சு. அருளம் பலவனார் திருவம்மானைச் செய்யுளடிக்குக் 'கெளிற்று மீனைப் பிடிக்கும் பொருட்டு வலைவீசிய' என்றும் திருவார்த்தைச் செய்யுளடிக்கு 'நந்தியாகிய பெரிய கெளிற்று மீனை வலைவீசிப் பிடித்த' என்றும் திருப்படையாட்சிச் செய்யுளடிக்கு 'நந்தியாகிய கெளிற்று மீனின் பொருட்டு வலைவீசிய கேவேடனாகிய இறைவன்' என்றும் கெளிற்று மீனை வருவித்துப் பொருளுரைத்துள்ளார். பண்டிதமணி க. சு. நவ நீதகிருஷ்ண பாரதியும் திருவார்த்தைச் செய்யுளடியிலும் கெளிற்று மீனை வரு வித்தே உரையெழுதியுள்ளார். ஆனால் சுவாமி சித்பவானந்தர் திருவார்த்தைச் செய்யுளடிக்கு மட்டும் 'பெரிய சுறாமீன்' என்று உரை கூறியுள்ளார். திருவாசகத் துக்கு விரிவுரை எழுதிய மறைமலையடிகள் கெளிற்றுமீன் என்று உரை கூறினாலும் 'இறைவன் வலைஞனாய்ச் சென்று படுத்தது சுறவு மீன் என்று திருவிளையாடற் புராணம் கூறுமாயினும், அடிகள் அதனைக் கெளிற்று மீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கொள்ளற் பாலதாம் என்க' என்று கூறி அமைதி காணுகின்றார். இதனை அருளம்பலவனாரும் வழிமொழிந்துள்ளார்.

கெளிறுமீன் பற்றிய சொல்லாட்சி புறநானூறு 18, 384-ம் செய்யுள் களிலும், ஐங்குறு நூறு 47, 167ம் செய்யுள்களிலும், பெருங்கதை வத்தவகாண் டம் பிரச்சோதனன் தூதுவிட்ட பகுதியின் 101ம் செய்யுளடியிலும் வந்துள்ளது. உ. வே. சாமிநாதையர் ஐங்குறுநூற்றின் அரும்பதவகராதியிலே கெடிறு என்பது ஒரு சாதி மீன் என்றும், இது முள்ளையுடையது என்றும் கூறியுள்ளார்.[2] இவர் பெருங்கதையைப் பதிப்பித்து வெளியிட்ட போது கெடிறு என்பது கெளி றென்றும் வழங்கும் என்று அடிக்குறிப்பு எழுதியுள்ளார்.[3] யாழ்ப்பாணம் ஆரிய பாஷா விருத்திச்சங்க மூன்றும் வெளியீடான ஐங்குறுநூறு மூலமும் உரையும்

நூலிலே 'கடற்கரையின் கண்ணுள்ளவாகிய சிறுவெண்காக்கை கரிய கழியிலுள்ள கூட்டமாகிய கெடிற்று மீனை நிறைய உண்ணும் என்றும், இது கெழுறு என்று வழங்கும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரைத் தமிழ்ப் பேரகராதி கெடிறு — ஒருவகைக் கடல்மீன் என்றும், கெளிறு — ஒருவகைச் சேற்று மீன் என்றும், கெளுத்தி என்று கூறியுள்ளது. தமிழ் லெக்ஸிகன் 8'' நீளமுள்ளது கெளிற்று மீன் என்றும், 18'' நீளமுள்ள மீன் விசேடம் என்றும், இது நன்னீரில் வாழும் என்றும் கூறியுள்ளது.

எனவே மணிவாசகப்பெருமான் இறைவன் 'கேவேடராகிக் கெளிறது படுத்தும்' என்று கூறிச்சென்றாலும் இறைவன் வலைஞன் வேடங்கொண்டு பிடித்தது இந்தச் சிறிய மீன் அல்ல என்பது இதனாற் புலனாகின்றது. அன்றியும் இந்தச் சிறிய வகை மீனின் ஆர்ப்பாட்டத்தைப் பொறுக்க முடியாமல் இதனைப் பிடிப்பவனுக்குத் தன் மகளைக் கொடுக்கும் போட்டியொன்று வந்திருக்காதல்லவா? இறைவன் திருவிளையாடல்களில் ஒன்றான வலைவீசிய செய்தி கல்லாடத்திலே,

'.............. சிறுகுடிப் பரதவ னாகிப்
பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி
நெடுங்கடல் கலக்கு மொருமீன் படுத்த
நிறையரு ளையகன் .........(16) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருவிளையாடற் புராணத்தைப் பரஞ்சோதி முனிவரும், பெரும்பற்றப் புலியூர் நம்பியும் பாடியிருக்கிறார்கள்.[4] வலைவீசின திருவிளையாடல் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்தில் ஐம்பத்தேழாவதாகவும், பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்தில் இருபத்திரண்டாவதாகவும் இடம் பெற்றுள்ளது. இரண்டு புராணங்களிலும் கூறப்பட்ட கதை ஒன்று தான். நந்தியெம்பெருமான் சுறாமீனாகச் சபிக்கப்பட்டு இறுதியில் அம்மீனை இறைவன் பிடித்து இறைவியைத் திருமணஞ் செய்து கொண்டார். இச்செய்தி மட்டக்களப்பு கடலாச்சியம்மன் காவியத்திலும், கடல்நாச்சியம்மன் குளுத்தியிலும்[5] இடம் பெற்றிருக்கிறது. எனினும் திருவிளையாடற் புராணத்திற் கூறப்பெற்ற கதைக்கும் மேற்கூறப்பட்ட காவியத்திலும் குளுத்தியிலும் கூறப்பட்ட கதைக்கும் இடையே கதை வேறுபாடுண்டு. அங்கு நந்தியெம்பெருமான் சுறா மீனாகவும் முருகப் பெருமான் மூங்கைப் பிள்ளையாகவும் செல்லச் சாபம் பெறுகின்றனர். ஆனால் இங்கு இறைவன் இறைவிக்குப் பிரணவப் பொருளுரைத்த போது இறைவியின் தலையிற் சூடியிருந்த பூக்களிலே தேன் குடிக்கும் வண்டாகவிருந்து பிரணவப் பொருளை ஒளிந்திருந்து கேட்டதால் முருகப்பெருமான் சுறா மீனாகச் செல்லச் சாபம் பெறுகிறார்.

இறைவன் திருவிளையாடற்கதை வேறுபட்டுச் சென்றாலும் வலைவீசின திருவிளையாடலிற் பிடிப்பட்டது சுறவுமீன் என்பதைப் பெரும்பாலானோர் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். எனவே மணிவாசகப் பெருமான் கீர்த்தித் திருவகவலிற் 'கேவேடராகிக் கெளிறது படுத்தும்' என்று மோனைக்குச் சரியாகச் செய்யுளை இயற்றினாலும் கெளிறு என்ற பதத்துக்குத் திருவாசகத்துக்கு உரை எழுதியோர் இறைவனாற் பிடிக்கப்பட்டது சுறவு மீன் என்றே கருத்துரைத்திருக்க வேண்டும். எனவே இதனைக் கருத்திற் கொண்டு திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி

பெயர்த்த ஜி. யு. போப்பையர் இதனை "Becoming a fisherman, He caught the Shark" என்று மொழிபெயர்த்தார். இவ்வாறு மொழிபெயர்த்ததுமாத்திர மன்றிக் கெளிறு என்ற பதத்துக்கு (கேடிறு) n. a Large Fish என்றும் Comp. Sanskrit–KHALICA என்றும் அரும்பதம் முதலியவற்றின் அகராதியிற் குறித்துச் சென்றுள்ளார்.

கீர்த்தித் திருவகவலில் வந்த ஒரேயொரு அடி உரையாசிரியர்கள் பலரை யும் திணற வைத்திருப்பதை இதனுல் அறிந்து கொள்ள முடிகின்றதல்லவா? இந்த அடியிலுள்ள கெளிறு என்பதைக் களிறு என்பதன் திரிபு என உரையாசிரியர்கள் கொண்டிருந்தால் இவ்வித இடர்ப்பாட்டுக்கு அவர்கள் சென்றிருக்க மாட்டார்கள். ஏனெனிற் களிறு ஆண்சுரு என்ற பொருளேயும் பெற்றுள்ளது. எனவே அப் பொருளிலே மணிவாசகப்பெருமான் களிறு என்று சொலற்பாலதைக் கெளிறு என்று சொல்லியிருக்கலாம். திருவாசகத்தில் வழக்கத்தில் உள்ள இவ்வகைத் திரிபுச் சொற்கள் அநேகம் வந்துள்ளன. ஆகவே கீர்த்தித்திருவகவலிற் கூறப் பட்டது களிறு என்பதே. அது ஆண்சுருவைக் குறித்து வருவதால் திருவிளேயாடற் புராணத்திற் கூறப்பட்டதும் அதுவேயாகும்.

4. ''சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலேயென்ப
கானக நாடன் சுனே''

என்னும் சிந்தியல் வெண்பாவினே[6] இளம்பூரணரும் சேனுவரையரும் நச்சினுர்க்கினி யரும் சுண்ணப்பொருள் கோளுக்கு உதாரணமாக எடுத்துக்காட்டியுள்ளனர். பொருள்கொள்ளும் முறைமையைத் தொல்காப்பியர் மொழிபுணரும் இயல்பு என்று கூறி அதனே நான்காக வகுத்தார். (சொல். 404). அவை நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று எனப் பெயர்பெற்றது. இறையனுர் அகப் பொருள் உரையாசிரியர் அதனே ஐந்தாகவும்[7] வீரசோழியத்துக்கு உரையெழுதிய பெருந்தேவனுர் காட்டிய மேற்கோட் சூத்திரம் ஒன்றின் மூலம் பொருள்கோள் ஏழாக வகுக்கப்பட்டிருந்தமையை அறிய முடிகிறது.[8] இவ்வாறு நால்வகைச் சொற்களாலும் செய்யும் செய்யுள்கொள்ளும் பொருள் கோளின் பெயரும் தொகை யும் உணர்த்த வந்த தொல்காப்பியர் அதனே நான்கு என்று கூற அது ஐந்து ஏழு என்று வளர்த்துச் சென்று நன்னூலார் காலத்தில் எட்டு என நின்றது. நன்னூலார் காலத்தைத் தொடர்ந்துசென்ற பொருள்கோள் ஒன்பதாகவும் வளர்ந்திருக்கிறது. இது பற்றி மயிலேநாதர் சுட்டியிருந்த போதும்[9] அவர் சுட்டியது நேமிநாதரையே என்பது நேமிநாதத்தால் தெளிவாகின்றது. நேமிநாதருக்கு முற்பட்ட யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரோ பொருள்கோளே ஒன்பது என்றே கொண்டிருக்கிருர்.

நன்னூலார் கூறியவற்றில் தொல்காப்பியர் கூறியவை அடங்குமாயினும் 'சுண்ணப் பொருள்கோள்' அடக்கப்படவில்லே. இதனே வீரசோழிய மேற்கோட் பாடலாசிரியர் ஏற்றுள்ளனர். தொல்காப்பியர் சுண்ணப் பொருள்கோள் கூற வந்தவிடத்து,

'சுண்ணந் தானே
பட்டாங் கமைந்த வீரடி யெண்சீர்
ஒட்டுவழி யறிந்து துணிந்தன ரியற்றல்' (சொல். எச்ச. 10)

என்று கூறிச் சென்றுள்ளார். இளம்பூரணர், பேராசிரியர், நச்சினுர்க்கினியர் ஆகியோர் இந்தச் சூத்திரத்துக்கு உரைகூறிய போது மேற்கோளாகக் காட்டிய பாடலே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றது. தெய்வச்சிலையார், குணவீரபண்டிதர், யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் முதலியோரும் சுண்ணப் பொருள் கோளுக்கு இப்பாடலையே மேற்கோளாகக் கொண்டுள்ளனர்.

நன்னூலார் சுண்ணப் பொருள் கோளை எடுத்தாளாமையால் நன்னூல் உரையாசிரியர் எல்லாம் இப்பாடலை மொழிமாற்றுப் பொருள்கோளுக்கே மேற்கோளாகக் காட்டியுள்ளனர். மொழிமாற்றுப் பொருள்கோள் தொல்காப் பியரால் சுட்டப்பட்டதால் சேனுவரையர், 'நிரனிறையும் சுண்ணமும் மொழி மாற்றுத லொக்குமாயினும், நிரனிற்றலும் அளவடி யெண்சீரை சுண்ணமாகத் துணித்தலுமாகிய வேறுபாடுடைமையால் அவற்றைப் பிரித்து அவ்வேறுபாட்டாற் பெயர் கொடுத்து வேறிலக்கணமில்லாத மொழிமாற்றை மொழிமாற்றென்ருர்' எனக் கூறிச் சென்ருர். (404).

நன்னூலுக்கு உரையெழுதியோர் 'சுரையாழ அம்மிமிதப்ப' என்னும் இப்பாடலை தழாத்தொடராகிய அல்வழிப்புணர்ச்சிக்கு உதாரணமாகவும் காட்டி யுள்ளனர்.[10] எனவேதான் 'சுரையாழ அம்மிமிதப்ப' என்பது சுரைமிதப்ப அம்மி ஆழ எனக் கூட்டப்படுதலால் சுரை என்பது ஆழ என்பதையும் அம்மி என்பது மிதப்ப என்பதையும் தழுவாமையால் இப்படி வருகின்றவைகளெல்லாந் தழாத் தொடராகிய அல்வழிப்புணர்ச்சியாம்[11] என்று திருத்தணிகை விசாகப்பெரு மாளையர் முதலியோர் கூறிச்செல்ல சங்கரநமச்சிவாயர் 'சுரையாழ வம்மி மிதப்ப' என்பதனுள் மொழிமாற்றுய்ச் சுரைமிதப்பவெனத் தழுவுதொடராக வருவழி இயல்பாக முடியும் எழுவாய்ப்புணர்ச்சி சுரையாழவெனத் தழாத்தொடராய் உடம்படுமெய் தோன்றி முடிந்தது என்ருர்.[12]

தொல்காப்பியர் எடுத்தாண்ட சுண்ணப் பொருள்கோளுக்குத் தொல் காப்பிய உரையாசிரியர்களும், நன்னூலார் காட்டிய மொழிமாற்றுப் பொருள் கோளுக்கு நன்னூல் உரையாசிரியர்களும் இப்பாடலை மேற்கோளாக எடுத்துக் காட்டியதால் இவை இரண்டையும் இணைத்து 'சுண்ணமொழிமாற்றுப் பொருள் கோள்' என யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும், குணவீரபண்டிதரும், குண சாகரரும் கொண்டனர். அவ்வாறு கொண்டதாலே சுண்ணமொழிமாற்றுப் பொருள் கோளுக்கு இப்பாடலை மேற்கோளாகக் காட்டியுள்ளனர்.[13] எனவேதான் மயிலைநாதர் இதனை மறுத்தெழுதினர். 'இதனைச் சுண்ணமொழிமாற்றென்று ஈரடியிடத்தே கொள்ளின் ஏனைய அடிகளுள்ளும் ஏனைப்பாக்களுள்ளும் வரப் பெருதாம் என மறுக்க' என்று கூறிச்சென்ருர்.[14] தொல்காப்பியர் கூற்றுப்படி 'சுண்ணம் இயல்பாக அமைந்த ஈரடிக்கண் உளவாகிய எண்சீரைத் துணித்து இயையும்வழி அறிந்து கூட்டி இயற்றப்படுவதாம்' என்று சேனுவரையரும் நச்சி ஞர்க்கினியரும் கூறியதால் இவ்வாறு மயிலைநாதர் கூறினர் போலும். ஆனல், சங்கரநமச்சிவாயர் செய்த விருத்தியுரையில் இதற்கு அமைதி கூறப்பட்டுள்ளது. நன்னூலார் மொழி மாற்றுப் பற்றிக் கூற வந்த போது,

'ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே' (பொது. 413).

என்று கூறியதால் மொழிமாற்றுப் பொருள்கோள் ஏற்ற பயனிலைகளுக்குப் பொருந்தத் தக்கதாகச் சொற்களை மாற்றி ஏலாத பயனிலைகளுக்குத் தனித்தனி கூட்டி ஓர் அடிக்குள்ளே சொல்வது என்பது பொருளாகிறது. எனவே 'சுரை யாழ வம்மி மிதப்ப' என்னும் பாடலைக் 'காடுகள் சூழ்ந்த நாட்டையும் அரசனது மலைச்சுனையானது சுரைக்காய் மிதக்க, அம்மி அமிழ, மலை போன்ற யானைக்கு கால் நிலைக்கத் தக்க ஆழமும், முயலுக்கு நீந்தத்தக்க தன்மையுமாகும்' என்று கருத்துப்படப் பொருள் கொண்டனர். ஆனால் இதனை மொழிமாற்றுக் கன்றிக் கொண்டுகூட்டுக்கு உதாரணம் காட்டியோரும் உண்டு எனச் சங்கர நமச்சிவாயர், இராமானுசக்கவிராயர், சிவஞானமுனிவர் முதலியோர் கூறியிருந்த போதும் அவ்வாறு கூறியவர் யார் என்பதைக் காட்டினரல்லர்.

எனவே இப்பாடலைச் சுண்ணப்பொருளாக்கிச் சுண்ணம் போலச் சிதர்த் துக் கிடத்தாமலும், மொழிமாற்றுப் பொருள்கோளுக்காக்கி மொழியை மாற் றாமலும் சொல் கிடந்தவாறே பொருள் கூறிச் சென்றால் பொருள் சிறக்கும் போலத் தெரிகிறது. கானகநாடன் உண்மைவழி நிற்பவன், சொன்ன சொல் தவறாதவன் எனக் கொண்டு அவ்வாறன்றி அவன் சொல் தவறினால் அவன் நாட்டுச்சுனையில் சுரை ஆழும், அம்மி மிதக்கும், யானைநீந்தும், முயல் நடக்கும் என்பன போன்ற மாறுபாடான நிகழ்ச்சிகள் நிகழ்தல் கூடும் என்று தலைவிக்குத் தோழி கூறி ஆற்றியதாகக் கொள்ளுதல் சால்புடைத்தன்றோ? இப்பொருளினை வலியுறுத்துவது போன்று பழமொழிநானூற்றின்

உரைசான்ற சான்றோர் ஒடுங்கி உறைய
நிரையுள்ளார் அல்லார் நிமிர்ந்து பெருகல்
வரைதாழ் இலங்கருவி வெற்ப அதுவே
சுரையாழ அம்மி மிதப்பு

என்னும் 125ம் பாடல் அமைந்து கிடக்கின்ற பான்மையினைக் கண்டு களிக்கலாம். சீவகசிந்தாமணியின் 495-ம் பாடலும் இதனை மேலும் வலியுறுத்துகின்றது. ஆகவே செய்யுளின் சொல் கிடந்தவாறு பொருள் கொள்ளுதலே சீர்மையும் நேர்மையும் உடையதாகும்.*

5. திருமுருகாற்றுப்படையின் ஈற்றடி 'பழமுதிர் சோலை மலைகிழவோனே, என்று முடிகிறது. இதில் உள்ள 'பழமுதிர்சோலை' என்ற சொற்றொடர் உரை யாசிரியர்களை, பழம்முதிர்சோலை, பழம் உதிர்சோலை என்று பிரித்துப் பொருள் கூறவைத்துள்ளது. நச்சினார்க்கினியர் பழம் முதிர் சோலை என்ற கருத்துப்படவே பழம் முற்றின சோலை என்று கூறிச்சென்றுள்ளார். இதனைப்பின் பற்றியே பின் வந்த அனைவரும் உரைகூறியுள்ளனர். வை. மு. கோபாலகிருட்டினமாசாரியர், பெ. வே. சோமசுந்தரம், பட்டுச்சாமி ஓதுவார், பண்டிதமணி அருளம்பலவனார் ஆகியோர் இவர்களிற் சிலராவர். பத்துப்பாட்டு மூலத்தையும் நச்சினார்க்கினியர் உரையையும் (1889) பதிப்பித்து வெளியிட்ட உ. வே. சாமிநாதையர் அவர் களுக்கும் இது உடன்பாடாகவே காணப்படுகிறது. ஏனெனிற் பலவேறு இடங் களிற் கருத்து வேறுபாடு தோன்றியவிடத்து எதிர்த்துக் குறிப்புரை எழுதும் வழக்கத்தைக் கொண்ட இவர் இங்கு அடிக் குறிப்பு அல்லது வேறுரை பற்றிய செய்திகள் ஒன்றையும் காட்டவில்லை. மேலே கூறிய உரையாசிரியர்கள் பழமுதிர்

* இம்முறையே பொருள் செய்வதுதான் சரி என்று 1943ஆம் ஆண்டு சென்னைக் கலைமகள் இதழ் ஒன்றில் ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது—ப-ரி.

சோலை என்ற தொடரைப் பழம் முற்றிய சோலை எனக் கொண்டிருப்பதால் இதற்கு நன்னூல் 219-ம் சூத்திரத்தை ஆதாரமாகக் கொண்டனர் போலும். அச்சூத்திரத்தின் பொருள் பலருக்கு மயக்கத்தை அளித்துள்ளது. நன்னூல் உரை யாசிரியர் காட்டிய உதாரணங்களும் மேலும் மயக்கத்தை அளித்துள்ளன. ஆங்கு அவர்கள் வருமொழி பெயர்ச் சொல் வினைச்சொல் வேறுபாடின்றி உதாரணங் காட்டியுள்ளனர். வருமொழியில் வினைச் சொல் வரும்பொழுது மகரம் கெடா தென்ற உண்மையை மறந்தனர். சுந்தரர் தேவாரத்தில் 'வங்கம் மலிகின்ற' (7-80-5) என்று மகரம் கெடாதே வந்துள்ளது.* ஏனெனில் மலிகின்ற என்பது வினைச்சொல். இதே போல் பழம் முதிர் என்பது பழமுதிர் என்று புணராது, பழம் முதிர் என்றே புணரும். ஆனல், பழமுதிர் என்றே செய்யுளில் வந்துள்ளது. ஆகவே இதனைப் பழம் உதிர் என்று பிரித்தலே சாலவும் பொருத்த முடைத்து.

பழமுதிர்சோலை என்ற தொடரைப் பழம் உதிர் சோலை என்று பிரித்துப் பொருள் உரைத்தோர் நற்கனிகள் உதிரப்பட்ட சோலை உடைய மலை எனக் கொண்டனர். இவ்வாறு பிரித்துப் பொருள் கொள்ளுவதற்கு நன்னூல் 204-ம் சூத்திரம் ஆதாரமாயிருக்க வேண்டும். நிலைமொழியின் இறுதியில் நின்ற மெய் யெழுத்தின் மேல் முதலில் உள்ள உயிரெழுத்து வந்து ஒன்றுவது இயல்பாம் என்ற விதிக்கிணங்கப் பழம் உதிர் சோலை என்பது பழமுதிர்சோலை என்றுகியது எனக் கொண்டிருக்கிறுர்கள். பொதுவாக வினைச்சொல்லில் மகரம் கெடாமல் வருவதே இயல்பு. பழம் உதிர்கின்ற சோலையானபடியால் இங்கு மகரம் கெடு வதற்கு நியதில்லை. பழமுதிர்சோலையைப் பழம் முதிர்கின்ற சோலை அல்லது முற்றின சோலை எனப் பொருள் கொள்ளுமிடத்துப் பொருள் சிறக்கவில்லை. அலராகி மலராகிப் பிஞ்சாகிக் காயாகிக் கனியாகுவதே இயல்பு. காய் முற்று வதே அன்றிக் கனி முற்றுவதன்று. கனி முற்றியதாகக் கொண்டால் அக்கனி அழுகியதென்ற பொருளைத் தந்துவிடும். எனவே பழமுதிர்சோலை பழங்கள் அழுகி ஒழுகி விழும் தன்மையுடையது என்றுல் அச்சோலைக்கும் பெருமை இல்லை. அவ்வாறு கொள்ளும் உரைக்கும் சிறப்பில்லை. எனவே, பழமரங்கள் பல்கிப் பெருகிப் பறவைகளுக்கும் மற்றும் பிராணிகளுக்கும் தப்பி முதிர்ந்து, சோலை யெங்கணும் விழுந்து கிடக்கும் தன்மையுடையது எனப் பொருள் கொள்ளுவதிலே சோலைக்கும் பெருமை. உரைக்கும் சிறப்பு. இதனை ஆங்குச் செல்வோர் கண்ணுரக் காண்டல் கூடும். பருவத்தில் பழுத்த பழங்களை உதிர்த்து உலகுக்கு ஊட்டுவதே பழம் உதிர் சோலையின் தியாகமாகும் என்றே சுவாமி சித்பவானந் தரும் வியாக்கியானஞ் செய்துள்ளார். (ஸ்ரீ பகவத்கீதை — 18 : 7)

திருமுருகாற்றுப்படைக்கு உரை எழுதிய பலரும் நச்சினுர்க்கினியரைப் பின்பற்றி பழம் முதிர்ந்த சோலை என்று பொருள் கூறிச் செல்ல ஒரே ஒரு உரை யாசிரியர் மாத்திரம் சரியாக முறையாகப் பொருத்தமாகப் பழம் உதிர்கின்ற சோலை என்று பொருள் கொண்டமை போற்றுதற்குரியது. ஆனல், இவ்வுரை யாசிரியர் பெயர் தெரிய வந்திலது. இவரைப் பழைய உரைகாரர் என்று கூறிப் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை இவ்வுரையினைப் பதிப்பித்து வெளியிட் டுள்ளார்.[15]

'வைகுறு விடியல் மருதம் எற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்'

* இங்ஙனம் வந்துள்ளமை, இசை யோசை கெடாதிருப்பதற்காகவே.—ப-ர்.

என்பது தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரம்.[16] இதிலே வரும் ஏற்பாடு என்னும் சொல்லே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. 'ஏற்பாடு' என்பதை உரையாசிரியர் எற்படுபொழுது என்றும், நச்சினர்க்கினியர் எற்படு காலம் என்றும் கொண்டுள்ளனர். தொல்காப்பியர் காலத்திலே பொழுதுகள் பெரும்பொழுது சிறுபொழுது எனப் பகுக்கப்பட்டுள்ளன. திணைகளுக்கு ஏற்ப உரிப்பொருளுக்கமைய முல்லைக்கு மாலையும் குறிஞ்சிக்கு யாமமும், மருதத்துக்கு வைகுறுவிடியலும், நெய்தலுக்கு எற்படு காலமும், பாலைக்கு நண்பகலும் என ஐந்து சிறு பொழுதே கொள்ளப்பட்டன. பெரும்பொழுது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறுகக் கூறப்பட்டதால் சிறுபொழுதை யும் ஆறுகக் கொள்வதற்கு உரையாசிரியர்கள் முயன்றிருக்கிருர்கள். ஆனல், தொல்காப்பியர் கொண்ட சிறுபொழுது ஐந்தே. வைகுறுவிடியல் எனக் கூறப் பட்டிருப்பதால் வைகறையும் விடியலும் எனக் கொண்டு மருதத்துக்கு இரண்டு சிறு பொழுதைக் கொடுத்து இடர்ப்பட்டுள்ளனர். வைகுறுவிடியல் என்றிருப்ப தால் அது வினைத்தொகையாகி ஒரு சொன்னீர்மைப்படுகிறது. அவ்வாறு ஒரு சொன்னீர்மைப்படுவதால் வைகறை என்ற சிறுபொழுதொன்றனை மாத்திரம் அது குறிக்க நிற்கிறது. வைகுறுவும் விடியலும் என்று உம்மைத்தொகையாக்க நியதியுமில்லை. இலக்கணமுமில்லை. வைகறை விடியல் என்று தொல்காப்பியரே கூறவில்லை. அவ்வாறு கூறியிருந்தால் வைகறை வேறு விடியல் வேறு எனப் பொருள் பட்டிருக்கும். அவ்வாறு கொள்ளின் நாடகவழக்கிற்குப் பொருந்த மில்லாமற் போயிருக்கும்.

சங்கநூல்களிலொன்ருகிய குறுந்தொகையின்

'காலையும் பகலுங் கையறு மாலையும்
ஊர்துஞ் சியாமமும் விடியலும்' என்னும் 32-ம் பாடலும்

சிறுபொழுதை ஐந்தென்று கொள்ளுவதற்கே இடந்தருகிறது. தொல்காப்பியர் காலத்துக்கு அடுத்து வாழ்ந்த இறையனர் செய்த களவியலுக்கு உரை எழுதிய நக்கீரனரும் சிறுபொழுதை ஐந்தென்றே கொண்டுள்ளார்.[17] நாற்கவிராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கமும் சிறுபொழுதை ஐந்தென்றே கூறியுள்ளது.[18] இவர்களைப் பின்பற்றியே துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும் பிரபுங்கலீலை யிற் சிறுபொழுதை ஐந்தென்று கொண்டார் போலும் (11.4). இறையனர் களவியல் உரையில் நக்கீரனர் மருதத்துக்கு வைகறையை மட்டும் கூறியது போல நம்பி அகப் பொருளும் மருதத்துக்கு வைகறை என்ற சிறுபொழுதொன்றை மட்டுமே கூறியுள்ளது. நெய்தலுக்கு எற்படுகாலை என்று வினைத்தொகை கொடுத்து ஒரு சொன்னீர்மைப்படுத்திக் காலை என்ற சிறுபொழுதையே குறித்துச் சென்றுள்ளது.

சிறுபொழுதினை ஆறெனக் கொண்டோர் 'வைகுறு விடியல்' என்ற சொற் ருெடரை வைகறை விடியல் எனத் திருத்தி மருதத்துக்கு இரண்டு சிறுபொழுதைக் கொடுத்து உரை கூறியுள்ளனர். இளம்பூரணரும் விடியல் என்றே பாடங் கொண்டு வைகறை என்பது இரவின் பிற்கூறு என்றும் விடியல் என்பது பகலின் முற்கூறு என்றும் உரை கூறிச் சென்றுள்ளார். இந்த உரையைத் தழுவியே நச்சினர்க்கினியரும் உரை கூறிச் சென்றவராகக் காணப்படுகிருர். இலக்கண

விளக்க நூலாசிரியரும் நச்சினர்க்கினியரையே பின்பற்றியுள்ளார். அடியார்க்கு நல்லாரும் சிறுபொழுதை ஆறென்றே கொண்டுள்ளார்.[19] ஆனல் இவர் சிறு பொழுதை ஆறெனக் கொண்ட போதும் மருதத்துக்கு வைகறைப் பொழுதை மட்டும் காட்டி விடியல் என்று வேறு காட்டா தொழிந்ததோடு நெய்தலுக்கு முல்லைக்குரிய மாலைப் பொழுதையே காட்டியுள்ளார்.[20]

இளம்பூரணர் நச்சினர்க்கினியர் முதலியோர் எற்பாடு என்பதைப் பகற் பொழுதின் பிற்கூறு எனக் கொண்டுள்ளனர். நம்பியகப் பொருளின் பழைய உரையாசிரியரும் எற்படுகாலையை ஆதித்தன் படுகிற பொழுது என்றே கொண் டுள்ளார். நச்சினர்க்கினியர் இங்கு படுதலை மறைதல் எனக் கொண்ட போதும் 'இலமென் கிளவிக்குப் படுவரு காலை' என்னும் தொல்காப்பிய எழுத்ததிகாரச் சூத்திரத்திலும் (புள்ளிமயங். 21) 'இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை' என்னும் தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்திலும் படுதல் என்பதற்கு உண்டாதல் என்றே உரை கூறிச் சென்றுள்ளார். அது போலவே திருமுருகாற்றுப் படையின்

முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தலூதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காமரு சுனைமலர்

என்னும் 73-75-ம் அடிகளுக்கு உரை எழுதிய போது அவர் 'எல்பட' என்பதற்கு 'ஞாயிறு தோன்றின காலத்தே' என்றே உரை கூறிச்சென்றுள்ளார். எனவே நச்சினர்க்கினியரும் எல்படுதல் என்பது சூரியன் உதிக்கின்ற பொழுது என்பதற்கு உடன்பட்டார் என்பது இதனல் விளங்குகின்றதல்லவா?

நம்பியகப் பொருளில் சிறுபொழுதின் வைப்பு முறை,

'மாலை யாமம் வைகறை யெற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்'

என்று பொழுதுகள் ஏற்படுகின்ற ஒழுங்குகளின் பிரகாரமே[21] ஒன்றன்பின் ஒன்ருகச் சொல்லப்பட்டுள்ளது. ஆனல், தொல்காப்பியர் திணைகளுக்குச் சிறுபொழுது கூறினரேயன்றிச் சிறுபொழுதுகள் எவையென்று தொகைப்படுத்திக் கூறினரல்லர். நம்பியகப் பொருளுக்குப் பிற்காலத்தில் உரை எழுதிய யாழ்ப்பாணத்து ச. வைத் தியலிங்கம்பிள்ளையும்,[22] திருத்திய புதுக்கிய உரை எழுதிய சுன்ஞகம் அ. குமார சுவாமிப்புலவரும், திருக்கோணமலை த. கனகசுந்தரம்பிள்ளையும்[23] சிவஞானமுனி வரின் தொல்காப்பியச் சூத்திரவிருத்தியைப் பின்பற்றி[24] எற்படு என்பது காலை என்பதை நன்கு புலப்படுத்த வந்த அடைமொழி என்றும், எற்படுகாலை சூரியன் தோன்றும் காலை என்றும் கூறிச் சென்றுள்ளனர்.

சொல்லொடு பொருளை நோக்கினும் எல்படுதல் என்பது எற்பாடு என நிற்கும். படுதல் என்பதும் பாடு என்பதும் வினையடியாகிய படு என்பதில் இருந்து தோன்றியதே. படுதல், பாடு என்ற இரண்டும் ஒரே வினையடியிற் பிறந்த தொழிற் பெயர். படுதல் என்பது தொழில் நிகழ்ச்சியைக் குறிப்பது. பாடு என்பது படுதலாகிய தொழிலைக் குறிப்பது. படு என்ற வினையடிக்கு அகராதியில் முதற் தந்த பொருள் உண்டாதல் என்பதாகும். பொதுவாக அகராதிகள் ஒரு

சொல்லுக்குக் கருத்து எழுதும் போது அச் சொல் ஏற்பட்ட காலத்தில் இருந்து வந்த பொருளை முதலிற் கூறிப் பின்னர் வழக்கத்தில் வந்த பொருட் திரிபுகளைக் கூறிச் செல்லும். சென்னை அகராதியும் (லெக்ஸிகன்) அவ்வாறே கூறிப் பின்னர் ஏற்பட்ட பொருள்திரிபாகிய அழிதல், மறைதல் என்னும் பொருள்களைப் பதினுன் காவதாகவும் பதினைந்தாவதாகவும் கூறிச் செல்லுகின்றது. ஆகவே, படுதல் என்பது தோன்றுதல் என்ற கருத்தையே அதிகம் வலியுறுத்துகின்றது. கூடலூர்க் கிழார் 'கடற்படுதிரை.' (குறுந். 166) என்ற இடத்திலும் இளங்கோவடிகள் 'பாய்திரை வேலிப் படுபொருள்' (சிலம்பு. 2. 18: 50) என்ற இடத்திலும், கொங்குவேளிர் 'பைங்கண் எருமைப் படுகன் றேம்பி' (பெருங்கதை. 1.14:142) என்ற இடத்திலும், அப்பர் சுவாமிகள் 'விறகிற் தீயினன் பாலிற் படுநெய் போல்' (தேவாரம். 5. 204: 10) என்ற இடத்திலும் 'படு' என்ற சொல்லைப் பாவித்து அங்கெல்லாம் உண்டாதல் தோன்றுதல் என்ற கருத்திலே யாவரும் பிரயோகித் திருப்பதை அவதானிக்கலாம். எனவே 'எற்படு' என்பது சூரியன் தோன்றுதலை அல்லது நாள்வெயிற் காலத்தையே குறிக்கும் என்ற மாதவச் சிவஞான சுவாமி களின் கருத்தே பொருத்தமானதாகும் என நாம் அமைதியுறலாம். உண்மையில் இச்சொற் பிரயோகம் 'எல்படு' என்று இருக்கற்பாலது செய்யுளாதலின் 'எற்படு' என வந்தது போலும்.

இதுவரை இலக்கிய இலக்கண உரையாசிரியர்கள் தம்முள் வேறுபட்ட இடங்களில் சிலவே சுட்டியும் சுருக்கியும் காட்டப்பட்டன. பாடபேதமாகக் கொன்றை வேய்ந்த செல்வன், குரவர் தப்பியஎன்பனவும், கருத்துரை வேறு பாடாக கெளிறது படுத்த, சுரையாழ அம்மி மிதப்ப, பழமுதிர்சோலை, எற்படு காலை என்பனவும் ஆராயப்பட்டுத் தெளிவான விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. மற்றைய தொகுத்துரை, உதாரணம், வினு, விடை போன்ற உரைவிகற்பங்களை யெல்லாம் எடுத்துக்காட்ட முடியுமாயினும் ஆய்வுக் கட்டுரையின் விரிவு கருதி அவையெல்லாம் ஒருசேர இங்கு ஆராயப்படவில்லை. இந்த வழி நின்று நல்ல றிஞர் சிலர் ஆய்வுகளை நடாத்தியு மிருக்கிறுர்கள். சுன்னுகம் அ. குமாரசுவாமிப் புலவர் திருவாதவூரர்புராணம், கம்பராமாயணம் பாலகாண்டம் முதலியவற் றிற்குப் புத்துரை எழுதிப் பதிப்பித்த போது பல பாடபேதங்களை எடுத்துக் காட்டியுள்ளார்.[25] அது போலவே பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை குறுந் தொகையின் 113ம் பாடலில் வரும் 'எருமண்' என்னும் சொல் பற்றியும்[26] நற்றிணை, புறநானூறு, கம்பராமாயணம் போன்ற நூல்களில் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் எடுத்தாண்ட பாடபேதங்களைப் பற்றியும்[27] கூறிச் சென்றிருக்கிறுர்கள். இவற்றினை ஏற்றுக் கொண்ட தமிழுலகம் இச்சிறிய கட்டுரை யில் என்னுல் எடுத்தாளப்பட்ட கருத்துகளை ஏற்று மேலும் இத்துறையில் ஆய்வு களை நடாத்திச் செல்லும் என நம்புகின்றேன்.

**அடிக் குறிப்புகள்**

1. (அ) அருளம்பலவனுர், சு. திருவாசக ஆராய்ச்சியுரை (முதலாம் பாகம்) ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், யாழ்ப்பாணம், 1966, பக். 37.

(ஆ) நவநீதகிருஷ்ணபாரதியார் க. சு. திருவாசகம் ஆராய்ச்சிப்பேருரை, பத்மா பதிப்பகம், தெல்லிப்பழை, கபீர் அச்சகம், சென்னை, 1954, பக். 77.

(இ) சித்பவானந்தர் ஸ்ரீமத் சுவாமி, திருவாசகம், தபோவன அச்சகம், திருப்பராய்த் துறை, 1968, பக். 151.

(ஈ) சுப்பிரமணியபிள்ளை. கா. திருவாசகம் மூலமும்உரையும், திருமகள் விலாச அச்சகம், 1959, பக். 21.

2. சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) ஐங்குறு நூறும் பழைய உரையும், கணேச அச்சுக்கூடம், சென்னபட்டணம், (2ம் பதிப்பு) 1920, பக். 170.

3. சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) பெருங்கதை, கேசரி அச்சுக் கூடம், சென்னை, (2-ம் பதிப்பு) 1935, பக். 806.

4. (அ) ஆறுமுகநாவலர் (பதிப்பாசிரியர்) பரஞ்சோதிமுனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம், வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னப்பட்டணம், (2-ம் பதிப்பு), 1929, பக். 281.

(ஆ) சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) பெரும்பற்றப்புலியூர்நம்பி இயற்றிய திருவிளையாடற்புராணம், கபீர் அச்சகம், (3-ம் பதிப்பு) 1972, பக். 82.

5. கணபதிப்பிள்ளை, சி. (பதிப்பாசிரியர்) மகாமாரித்தேவி திவ்வியகரணி, விவேகானந்த அச்சகம், யாழ்ப்பாணம், 1971, பக். 56, 163.

6. இச்சிந்தியல் வெண்பாவினை இன்னிசைச் சிந்தியல் வெண்பாவுக்கு மேற் கோளாகக் குணசாகரர் கொண்டுள்ளார். (யாப்பருங்கலக்காரிகை, கழகவெளி யீடு, 1962, பக். 74) சுன்னுகம் குமாரசுவாமிப் புலவரும் இதற்கு உடன்பட்டவ ராகவே காணப்படுகிறுர். (யாப்பருங்கலக்காரிகை, திருமகள் அழுத்தகம், சுன் னுகம் (3-ம் பதிப்பு) 1938, பக். 75) இதனைக்,

'கரையாடக் கெண்டை கயத்தாட மஞ்ஞை
சுரையாழ வம்மி மிதப்ப — வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

என்று முதலடி கொடுத்து நேரிசை வெண்பாவாக வீரமாமுனிவர் கொண்டுள் ளார். (தொன்னூல் விளக்கம் மூலமும் உரையும், சூத். 307, ஜி. மெக்கன்ஜி காபன் அய்யர் பதிப்பு, அர்ச். சூசையப்பர் அச்சுக்கூடம், சென்னை, (2-ம் பதிப்பு) 1891, பக். 224)

7. கோவிந்தராஜமுதலியார், கா. ர. (பதிப்பாசிரியர்) களவியல் என்னும் இறையனுரகப் பொருள் மூலமும் நக்கீரனுர் உரையும், பி. என். பிரஸ், மதராஸ், 1939, பக். 244.

8. 4ம் அடிக்குறிப்பு நூல், பக். 99.

9. சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) நன்னூல் மூலமும் மயிலைநாதர் உரையும், வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை, 1918, பக். 280.

10. (அ) கோபாலகிருஷ்ணக்கோன், இ. மா. (பதிப்பாசிரியர்) நன்னூல் மூலமும் இராமானுசக் கவிராயர் இயற்றிய விருத்தியுரையும், எக்ஸ்செல்ஸியர் பவர் பிரஸ், மதுரை, 1940, பக். 114.

(ஆ) பவானந்தம்பிள்ளை, ச. (பதிப்பாசிரியர்) நன்னூல், மாக்மில்லன் அன் கம்பெனி, சென்னை, 1922, பக். 52.

(இ) ஆறுமுகநாவலர் (பதிப்பாசிரியர்) நன்னூற்காண்டிகையுரை, வித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னபட்டணம், (18-ம்பதிப்பு) 1949, பக். 101.

11. விசாகப்பெருமாளையர் இயற்றிய நன்னூற் காண்டிகையுரை (புதுக்கிய பதிப்பு) மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், சென்னை, 1900, பக். 83.

12. சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயருரையும், லா ஜர்னல் அச்சுக்கூடம், சென்னை, (2ம் பதிப்பு) 1935, பக். 108.

13. (அ) யாப்பருங்கலவிருத்தி (பகுதி-2) பக். 370.
(ஆ) நேமிநாதம் உரையுடன், பாரி அச்சகம், சென்னை, 1964, பக். 127.
(இ) யாப்பருங்கலக்காரிகையும் அமிதசாகரர் இயற்றிய உரையும், அப்பர் அச்சகம், சென்னை, 1962, பக். 182.

14. 9-ம் அடிக்குறிப்பு நூல், பக். 280.

15. வையாபுரிப்பிள்ளை. எஸ். (பதிப்பாசிரியர்) திருமுருகாற்றுப்படை, மதுரைச்சங்க முத்திராசாலை, மதுரை, 1943, பக். 37.

16. தொல். பொருள். அகம். 08., (இச்சூத்திரத்தை நச்சினார்க்கினியர் கொண்ட முறை இவ்வாறிருந்த போதும் இளம்பூரணர் இதனை இரண்டாகப் பிரித்துக் கொண்டதுடன் வைகறை விடியல் என்று சூத்திரத்தைத் திருத்திப் பதிப்பித்துப் பொருள் கொண்டுள்ளார்.)

17. 7-ம் அடிக்குறிப்பு நூல், பக். 21.

18. (அ) அகப்பொருள்விளக்கம் மூலமும் உரையும், தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை, (2-ம் பதிப்பு) 1926, பக். 10.
(ஆ) அகப்பொருள் விளக்கம் பழைய உரையுடன், கழக வெளியீடு, ஸ்ரீ பாரதி அச்சகம், சென்னை, 1943, பக். 15.

19. சாமிநாதையர், உ. வே. (பதிப்பாசிரியர்) சிலப்பதிகாரமூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், கேசரி அச்சுக்கூடம், சென்னை, (3-ம் பதிப்பு) 1927, பக். 14.

20. முற்குறிப்பு நூல், பக். 16.

21. அகப்பொருள் விளக்கம். சூத். 12.

22. வைத்தியலிங்கம்பிள்ளை, ச. (பதிப்பாசிரியர்) அகப்பொருள்விளக்க மூலமும் உரையும், வியவஹரதரஞ்சினி அச்சகம், சென்னை, 1878, பக். 05.

23. அகப்பொருள் விளக்கம், திருமகள் அச்சியந்திரசாலை, சுன்னுகம், (2ம் பதிப்பு) 1932, பக். 5.

24. ஆறுமுகநாவலர் (பதிப்பாசிரியர்) சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, வித்தியாநுபாலன அச்சகம்; சென்னை (6ம் பதிப்பு) 1956, பக். 56.

25. முத்துக்குமாரசுவாமிப்பிள்ளை, கு. குமாரசுவாமிப்புலவர் வரலாறு, ஸ்ரீ சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம், 1970, பக். 134-138.

26. வையாபுரிப்பிள்ளை, எஸ். இலக்கியதீபம், மாருதி பிரஸ், சென்னை, (3-ம் பதிப்பு) 1964, பக். 117-121.

27. திம்மப்பஅந்தணணர், ரா. 'உரைநலம்', கோபாலகிருஷ்ணமாசாரியர் மலர்மாலை, கபீர் அச்சகம் சென்னை, 1942, பக். 3:28.

# திருக்குறள் வெளிப்படை

**டாக்டர் வ. சுப. மாணிக்கம்**
துணைவேந்தர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

திருக்குறள் காலத்தால் ஈராயிரம் ஆண்டுப் பழமைப்பட்டது என்றாலும் கருத்தாற் பழமையுடையதா? ஆம், ஓரளவு கருத்தாலும் பழமை வாடை கொண்டது. நால்வகை மதில்பற்றிக் கூறும் அரண் அதிகாரச் செய்திகளும் போர்குறித்த களச் செய்திகளும் வழக்கு விழுந்தன என்றே ஒப்பவேண்டும்.

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் (774)

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு (775)

என வரும் வேல்மறப்போர் இன்றில்லை. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் (758) என்ற மறக்காட்சியும் இன்றில்லை.

**பழமை எவ்வளவு**

காலங்கடந்த அறநூல் என்று போற்றினுலும், திருக்குறளில் பொச்சாப்பு, ஒருவந்தம், புத்தேளிர், மாண்ட, முதுக்குறைவு, உஞற்றுதல் போன்ற சொற்பழமைகள் உண்டு; அருங்கேடன், நன்னீரை, நிறைநீர, எனல் போன்ற இலக்கண வீழ்ச்சிகள் உண்டு; யாருள்ளித் தும்மினீர், இருட்டறையில் ஏதில் பிணம் தழுவல், சிவிகை பொறுத்தான், அவிசொரிந்து ஆயிரம் வேட்டல் போன்ற மரபு மறைவுகள் உண்டு. இவ்வாறு எடுத்துக்காட்டினும், இரண்டாயிரம் ஆண்டுத் தொன்மை வாய்ந்த திருக்குறளில் பழமைகளும், வீழ்ச்சிகளும் ஓரிரு விழுக்காட்டிற்கு மேல் இல்லை என்பதையும் ஒப்பவேண்டும். இதற்குக் காரணம் வள்ளுவர் காலத் தமிழ்மொழி வழக்காயினும் செய்யுளாயினும் செந்தமிழாக இருந்த நிலையாகும். அதனுலன்றே தொல்காப்பியமும் சங்கப் பனுவல்களும் இன்றும் விளங்குவனவாக உள? அவை பிறப்பாற் காலப்பழமை படிந்தனவேயன்றி மொழிநடையால் இன்றும் சாலப்புதுமை தவழ்வன. இடைக்காலத்துத் தோன்றிய மயக்குநடைத் தமிழ் நூல்களோடு ஒப்புநோக்கின், இவ்வுண்மை வெளிப்படையாகும். பழமையான பிறமொழி உலக இலக்கியங்களோடு ஒத்திடினும், நம் தொன்மை இலக்கியங்களின் புதுமைப் பெருவாழ்வு புலப்படும். உலகிற் சிறந்த தொல்லிலக்கியங்கள் தம்மொழியைச் சாகடித்தன; நம் தொன்னூல்களோ எனின், கம்பர் உணர்ந்து பாடியது போலத் தமிழ் மொழியை என்றுமுள மொழியாக்கின.

**உரைப் பொடிகள்**

திருக்குறளுக்குப் பலவுரைகள் வந்துள்ளன; காலந்தோறும் புதுவுரைகள் புறப்படுகின்றன. சில குறட்பாக்களுக்கு உரைவேற்றுமைகள் பல்கியுள. பாட

பாட்டாலும், புணர்ச்சிமுறையாலும், கொள்கைப்பிடிப்பாலும், தொகையாலும் இலக்கணத்தன்மையாலும், சொற்பொருளாலும், காலவிடையீட்டாலும், புலமை மிகையாலும், புலமைக்குறையாலும், நயப்பாட்டாலும், பொருள் வேற்றுமைகள் எழுந்துள.

இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள. (223)

என்ற குறளுக்கு எழுந்த உரைகளை நோக்கின் நயவுணர்வு தவிரப் பொருளுணர்வில் வேறுபாடில்லை என்பது வெளிப்படை. வேற்றுமை யுரைகளாகப் பரந்து காணப்படும் இடங்களையெல்லாம் உராய்ந்து பார்ப்பின் அவ் வேற்றுமைகளிற் பல காரமிலாப் பொடிபோல உரைப்பொடிகளாக வறிதுபடுவதைக் காணலாம்.

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று (82)

அறனுக்கம் வேண்டாதான் என்பான் பிறனுக்கம்
பேணு தழுக்கறுப் பான். (163)

சாவா மருந்தாகிய அமிழ்தமானாலும் தனித்து உண்ணக்கூடாது என்ற கருத்தும் ஒருவன் தனித்துண்ணுதலே சாவா மருந்து ஆகும் என்ற கருத்தும் பெரிய வேற்றுமைகளா? அறனும் ஆக்கமும் என்ற உம்மைத் தொகையும் அறத்தினல் ஆகிய ஆக்கம் என்ற மூன்றும் வேற்றுமைத் தொகையும் என்ன பொருள் வேற்றுமையைச் செய்து விட்டன?

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். (605)

இக்குறளில் காமக் கலன் என்பதற்கு விரும்பியேறும் மரக்கலம் எனவும் விரும்பிப் பூணும் அணிகலம் எனவும் பொருள் வேற்றுமை உண்டு. இவை கல்லும் பல்லும் போல முரண்பட்ட வேற்றுமைகள் அல்லவே! இவ்வுரைகள் மூலப்பொருளை மறையா.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. (338)

குடம்பை என்ற சொல்லுக்குப் பொருள் முட்டை என்பார் பரிமேலழகர்; கூடு என்பார் மணக்குடவர். இவற்றையெல்லாம் உரைக்கிளைகள் என்று கொள்ள வேண்டுமேயன்றி மூலத்தை மறைக்கும் உரைத்திரைகள் அல்லது உரை மூடிகள் என்று பெரிது படுத்தலாகாது.

**கருத்துப் பூசல்கள்**

திருக்குறளின் ஆசிரியர், காலம், அமைப்புப்பற்றித் தோன்றிய, தோன்றி வளர்ந்துவரும் ஆய்வுப் பூசல்கள் எண்ணிறந்தன. திருக்குறள் ஒருவர் செய்த தனிநூலா, தொகுப்பு நூலா எனவும், பாயிரம் எனப்படும் முதல் நான்கு அதிகாரங்களும் திருக்குறளுக்கு உரியனவா எனவும், காமத்துப்பாலை வள்ளுவர் எழுதினாரா எனவும், அதிகாரத் தலைப்புக்களும், அதிகார வைப்பு முறையும்,

அதிகாரத்துள் குறள் வைப்பு முறையும் செய்தவர் யார் எனவும், கருத்தோட்டங்கள் உள. கடவுள், தெய்வம், வினை, உயிர், இம்மை, மறுமை, நரகம், வீடு, பிறப்பு, இறப்பு, துறவு, ஊழ் முதலான கொள்கைகள் பற்றியும் சாதி, வேள்வி என்றின்ன ஆரிய வேதநாகரிகக் கலப்புப் பற்றியும், பிறப்பொழுக்கம், அந்தணர், பார்ப்பான், எழுபிறப்பு, அடியளந்தான், இந்திரன், அறுதொழிலோர் நூல், ஆதிபகவன், மலர்மிசை யேகினுன் என்றிவற்றின் பொருள் பற்றியும் கருத்துப் பின்னல்கள் உள.

சொற்பழமை, இலக்கண வீழ்ச்சி, மரபுமாற்றம், உரைப்பன்மை, உரை வேற்றுமை, உரைப்பொடிகள், கொள்கைப்பூசல்கள், கருத்து மோதல்கள், கருத்துப் பிறழ்வுகள் என்றுங்குப் பல சிக்கல்கள் திருக்குறட்கு வந்துகொண்டிருக்கின்றன எனவும், இந்த இருட்டிரைகளை அகற்றி எல்லாரும் ஒப்ப விளக்கந் தந்தாலல்லது திருக்குறளில் தெளிவுபிறவாது எனவும் கண்டாங்கும் பட்டாங்கும் கற்ருரும் ஆய்வாளரும் மொழியாளரும் குறைபரப்பி வருகின்றனர். இவற்றைத் தெளிவிக்கவேண்டும், வள்ளுவர் நெஞ்சம் நேர்முகமாகத் தெரியவேண்டும், உரைவேற்றுமை குறையவேண்டும் என்ற வேணவா எனக்கும் நிரம்பவுண்டு. இந்நோக்கில் ஆராய்ச்சிகள் நெறிப்படல் வேண்டும் என்ற ஆராவிருப்பம் குறளன்பர்க் கெல்லாம் வேண்டும் எனினும், அழுந்திய ஆழமான ஓர் உண்மையை வலியுறுத்துவதற்காகவே இக்கட்டுரையை எழுதுகின்றேன். சிலர் நினைப்பதுபோல் கருத்துப்போர்கள் பலவிருப்பினும் மேலும் வளரினுங்கூட, அவையெல்லாம் திருக்குறளின் அடிப்படையறங்களையும் செயலுக்குரிய வாழ்க்கை வள்ளுவங்களையும் தில்லைமறைபோலத் திரையிட்டு மறைக்கவில்லை; குறள்யாப்பு என்ற ஈரடிப் பாத்தியில் அறநெறிப் பயிர்கள் வெற்றிக் கொடிபோல வெளிப்படையாகவே இயல்புக் கண்ணுளர்க்கும் காட்சி தந்துகொண்டிருக்கின்றன. திருக்குறளில் வள்ளுவரின் எண்ணங்கள் வெளிப்படை; அவற்றைக் கற்பதற்கும் கேட்பதற்கும் இயல்பான வழக்குத் தமிழறிவு போதும். இதனுல் உரைகளும் விளக்கங்களும் வேண்டா என்பது கருத்தன்று. அவை நம் புலமையையும் அறிவையும் பெருக்குவன. இதுவே அவற்றின் பெரும் பயன். அவை செயலைத் தூண்டா; செயலார்வத்தைப் பெருக்கா; நெஞ்சினை நேரடியாக இயக்கா; வாழ்வினை உணர்ச்சிப்படுத்தா; உள்ளத்துள் ஊடுருவிப்பாயா.

### குறள் வெளிப்படை

திருவள்ளுவர் தம் நூலின் விளக்கத்துக்குப் பிற்கால உரைகளை எதிர் பார்த்தோ கட்டுரைகளை எதிர்பார்த்தோ எழுதவில்லை. தம் நூல் தானே விளங்கும், விளங்க வேண்டும் என்ற வெளிப்படை நடையிற்ருன் யாத்துள்ளார். மூலக்குறள்களைப் பன்முறை படிக்கப் படிக்க வள்ளுவர் நெஞ்சுக்கும் நம் நெஞ்சுக்கும் உணர்ச்சித் தொடர்பு நெருங்குவதை உணர்கின்ருேம்; குறட்சொற்கள் உயிர் நடைபெற்று நம் உள்ளத்திற் பாய்வதை உணர்கின்ருேம்; உரைகள், விளக்கங்கள் என்னும் தீண்டாமைகளைக் கடந்து குறள்வடிவாக இருக்கும் திருவள்ளுவரின் நெஞ்சத்தினை நம் செயல் நெஞ்சத்தால் தீண்டுகின்ருேம். மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் என்பதுபோல மூலக்குறளைத் தீண்டல் வாழ்வின்பம் ஆகும்.

உரையின்றி, விளக்கமின்றித் திருக்குறளின் மூலங்களை அறிந்துகொள்ள இயலாது என்ற ஒரு பெருந்தவறுன கருத்து எப்படியோ மக்களுலகிற் பரவிக் கிடக்கின்றது. இது உரையின் குறையன்று, விளக்கத்தின் குறையன்று; கல்வி முறையின் குறையாகும். காலிருப்பினும் செருப்பின்றி நடக்கவியலாது என்ற கருத்து இன்று இல்லையா? நடக்கக்கூடாது என்ற கருத்துக்கூட இன்று பரவக் காண்கின்றோமே!

திருக்குறள் தோன்றிய காலத்து உரையும் உடன் தோன்றவில்லை. ஆயிரம் ஆண்டுகள் கழித்துத்தான் உரை பெருக்கெடுத்தது. மூலத்தைக் கற்கும் முறை வேறு; உரைகளைக் கற்கும் முறை வேறு; மூலத்தின் பயன்வேறு; உரையின் பயன்வேறு: மூலத்தைக் கற்கும்போது வள்ளுவரை நினைக்கின்றோம்; உரைகளைக் கற்கும்போது உரையாசிரியர்களை நினைக்கின்றோம். குறள்மூலத்தின் பயன் செயல்; குறளுரையின் பயன் விளக்கம். ஆதலின் வாழ்வு வேண்டின், செயலியக்கம் வேண்டின், வள்ளுவர்தம் உறவு வேண்டின், திருக்குறள் மூலங்களோடுதான் நமக்கு முதலுறவு வேண்டும். மூலக்குறள்கள் உரைகளைக் காட்டிலும் ஏன், உரைக்குரையைக் காட்டிலும் வெளிப்படை.

1. தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (7)
2. நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. (108)
3. சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். (200)
4. எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. (299)
5. எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு. (467)
6. எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். (666)
7. கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. (1101)

இவை போலும் நூற்றுக்கணக்கான குறட்பாக்கள் தம் கருத்துக்களை இருட்படை செய்யாமல் ஒளிப்படுத்தி நிற்கின்றன. இவற்றின் பொருளை அறிதற்கும் மேற்கொள்ளற்கும் உரைகள் வேண்டுமா? எழுத்தறிவில்லாருங்கூட கேள்வியளவில் இவற்றின் கருத்துக்களை உணர்ந்து கொள்ளமாட்டார்களா? 'கற்றிலனுயினும் கேட்க'எனவும் 'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்' எனவும் அறிவுப்பறை யறைந்த வள்ளுவர் கல்லாரும் கேட்டு விளங்கிக் கொள்ளுமாறுதானே தம் அறநூலை வெளிப்படை நடையில் இயல்பாக எளிதாக யாத்திருப்பார்? ஆதலின் வாழ்வும் உணர்ச்சியும் செயலும் வளமும் விரும்பும் தமிழ்மக்கள் திருக்குறளை உரைகளினின்றும் விடுதலைப்படுத்தி மூலக்குறள்களை நேரே தீண்டுவார்களாக. நீரை உறிஞ்சிவழிக் குடிப்பதைக் காட்டிலும் வாய் வைத்துக் குடிப்பதனால் வருஞ்சுவை பெருஞ்சுவையல்லவா?

# மதுரைக் கலம்பகமும் மக்காக் கலம்பகமும் ஒப்பு உறழ்வு - ஓர் ஆய்வு

டாக்டர் எம். எம். உவைஸ்,
பேராசிரியர்: இஸ்லாமியத் தமிழ் இலக்கியம், மதுரை-காமராசர் பல்கலைக் கழகம்,

காப்பியங்கள் பேரிலக்கியங்கள் எனவும் ஏனைய பிரபந்தங்கள் சிற்றிலக்கியங்கள் எனவும் வழங்கப்படுகின்றன. பிரபந்தங்கள் தொண்ணூற்றுறு வகை என்பர். இத்தகைய சிற்றிலக்கியப் பிரபந்தங்களுள் ஒன்று கலம்பகம் எனப்படும். கலம்பகம் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டிலே தோன்றத் தலைப்பட்டது. கலம்பகம் ஒரு தனித்தன்மை வாய்ந்த பிரபந்தம். பல்வேறு வகையான பாடல்களாக வெவ்வேறு சந்தங்களில் பாடக் கூடியனவாகக் கலம்பகச் செய்யுட்கள் அமைந்துள்ளன. பாடலுக்குப் பாடல் இசையும் வேறுபடுகிறது. முதல் பாடலின் இறுதி அடுத்து வரும் பாடலின் முதலாகவரும் அந்தாதித் தொடரைக் கலம்பகத்தில் ஒரு தலைவனைப் பற்றியே கலம்பகம் பாடப்பட்டதாயினும் பொருளமைப்பில் காணலாம். கலம்பகப் பாடல்கள் ஒன்றோடொன்று தொடர்புடையனவாக அமைவதில்லை. இதனுல் படிப்பவரின் ஆர்வம் பேணப்படுகிறது.

கலம்பகத்தில் பல்வேறு பொருள்கள் விவரிக்கப்படுகின்றன. அதனுலேயே அதற்கு அப்பெயர் வந்தது என்பர் சிலர். பல்வேறு வகையான மலர்களினுலான மாலை எனப் பொருள்படும் கதம்பம் என்னும் வடமொழிச் சொற்றொடரிலிருந்து கலம்பகம் பெறப்பட்டுள்ளது என்பர் மற்றும் சிலர். இன்னொரு சாரார் கலம்பகம் என்னும் சொற்றொடரைக் கலம், பகம் எனப் பிரித்து கலம் என்றுல் பன்னிரண்டு; பகம் என்றுல் அதன் அரை; இரண்டும் சேர்ந்து பதினெட்டு; எனவே பதினெட்டு உறுப்புக்களைக் கொண்டதனுல் அது அப்பெயர் பெற்றது என்பர். இக்கூற்றுப் பொருந்தாது என மறுப்பர் பிறிதொரு சாரார். வேறொரு சாராரின் கூற்றுக்கிணங்கக் கலம்பகம் என்னும் சொற்றொடரை 'கலப்பு', 'அகம்' என இரண்டு சொற்களாகப் பிரித்து உறுப்புக்களினதும் பாவகைகளினதும் கலப்பினுல் ஏற்பட்டது என்று வாதாடுவர். வித்துவான் அருணுசல தேசிகர் அவர்கள் இது பொருத்தமில்லாக் கூற்று என்று கூறியுள்ளார். சிலம்பு, அதிகாரம் என்னும் இருசொற்களும் சேர்ந்து சிலப்பதிகாரம் எனவரும். ஆனுல் சிலம்பு, அதிகாரம் என்னும் இருசொற்களும் சிலம்பதிகாரம் என வராது என்பதைச் சுட்டிக்காட்டி, கலப்பு, அகம் என்னும் இரு சொற்களும் கலம்பகம் என வராது என்பதை எடுத்துக்காட்டி உள்ளார். இவற்றை எல்லாம் நோக்கும் பொழுது பல்வகைப்பாக்களாலும் பல்வகைப் பொருள்களாலும் பல்வகைச் சுவைகளாலும் விரவி வரும் ஒரு வகையான பிரபந்தத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட பதமே கலம்பகம் எனக் கூறலாம்.

இலக்கணவிளக்கப் பாட்டியலில்[1] கலம்பகம் அமையுமாறு விளக்கப்பட்டுள்ளது. ஒருபோகு என்னும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவும் பின்பு வெண்பாவும் மூன்ருவதாகக் கட்டளைக் கலித்துறையும் முதலுறுப்பாக வரும். பின்னர் ஏனைய பதினெட்டு உறுப்புக்களும் பயின்று வரும். மடக்கு, மருட்பா, வஞ்சிப்பா, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், அகவல், கலிப்பாவின் இனம், ஆசிரிய விருத்தம், வெண்டுறை முதலிய செய்யுட்கள் கலம்பகத்தில் விரவி வரும். வெண்பாப் பாட்டியலிலும்[2] கலம்பகம் இதே அடிப்படையிலே வரையறை செய்யப்பட்டுள்ளது. ஆனல் பன்னிரு பாட்டியலில்[3] பன்னிரண்டு உறுப்புக்களே கலம்பகத்தில் வரும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இலக்கண விளக்கப்பாட்டியலையும் வெண்பாப் பாட்டியலையும் விடக் காலத்தால் முந்தியது பன்னிரு பாட்டியலேயாகும். இலக்கண விளக்கப்பாட்டியலிலும் — வெண்பாப் பாட்டியலிலும் குறிப்பிடப்படாத புறம் என்னும் உறுப்பு பன்னிரு பாட்டியலில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். காலத்தால் மிக முற்பட்ட நந்திக் கலம்பகத்திலோ முதலுறுப்பைத் தவிர்த்து பத்து உறுப்புக்களே இடம் பெற்றிருப்பதைக் காணலாம். நந்திக் கலம்பகத்திலும் புறம் என்னும் உறுப்பு இடம் பெற்றிருப்பது ஈண்டு நோக்கற்பாலது.

கலம்பகத்தில் இடம்பெறும் செய்யுட்களின் எண்ணிக்கை கலம்பகத்தில் பாடப்பெறும் தலைவரின் தரத்தைப் பொறுத்து நிர்ணயிக்கப்படும். தேவர்க்கு நூறு பாடல்களும் அந்தணர்க்கு தொண்ணூற்றைந்து பாடல்களும் அரசர்க்குத் தொண்ணூறு பாடல்களும் மந்திரிக்கு எழுபது பாடல்களும் வணிகருக்கு ஐம்பது பாடல்களும் வேளாளர்க்கு முப்பது பாடல்களும் பாடப்படுவது மரபாகும்.

கலம்பகம் புதிதாகப் புனையப்படுவதால் தொல்காப்பியர் தம் இலக்கணத்தின்படி இது ‘விருந்து’ என்னும் பகுதியின் பாற்படும்.

இங்ஙனம் தோன்றிய இரண்டு கலம்பகங்களையே நாம் இன்று ஆய்வுக்கு எடுத்துக்கொண்டோம். ஒன்று குமரகுருபர சுவாமிகள் இயற்றிய மதுரைக் கலம்பகம். மற்றது செய்கு அப்துல் சாதிறு நெய்னர் லெப்பை ஆலிம் புலவர் இயற்றிய மக்காக் கலம்பகம். மதுரைக் கலம்பகம் என்பது மதுரையைக் குறித்த கலம்பகம் என விரியும். மதுரை பாண்டிய நாட்டின் தலைநகர். மீனுட்சியும் சொக்கநாதரும் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கும் சிறந்த தலம். பெயர் கேட்டவர்க்கே முத்தி நல்கும் தன்மை வாய்ந்த திருத்தலம். பாண்டியன் காடு கெடுத்து நாடாக்கி இவ்வூரைச் சாந்தி செய்ய முற்பட்டபோது சோமசுந்தரக் கடவுள் தம் சடையில் இருந்த சந்திரனின் நிலவாகிய அமுதத்தை விடுக்க அவ்வமுதம் சென்று பரந்து இனிமையாகச் சாந்தி செய்தது. மதுரமயம் ஆக்கியதால் அதற்கு மதுரை எனப் பெயர் அமைந்தது. மக்காக் கலம்பகம் என்பது மக்காவைக் குறித்த கலம்பகம் என விரியும். மக்கா அறபுநாட்டில் அமைந்துள்ளது. அந்நகர் ‘நகரங்களின் தாய்’ என அல்குர்ஆனிலே அமைக்கப்பட்டுள்ளது. அந்நகரிலே தான் முகமது நபி அவர்கள் பிறந்தார்கள். அங்கேதான் புனித ‘கருபா’ அமைந்துள்ளது. முஸ்லிம் மக்கள் தமது அன்ருடத் தொழுகைகளை நிறைவேற்ற எந்தத் திசையை நோக்கி நிற்கிருர்களோ அந்தத் திசைக்கு அடையாளமாக அமைந்துள்ள புனித ஆலயம் கருபாவாகும். புனித மக்காப் பயணத்தை

மேற்கொள்பவர் மக்கா சென்று ஏழுமுறை சுற்றி வருவதும் இப்புனித கருபா வையே. தன்னை அடைந்து இஸ்லாமிய முறைப்படி ஒழுகியவர்களுக்கு முத்தி அளிக்கும் பேறு பெற்ற தலம் மக்கா. முகமது நபி அவர்கள் பிறந்த அந்நகரத்திலிருந்து மதீனு சென்றமையே 'ஹிஜ்றத்' என அழைக்கப்படுகிறது. மதுரைக் கலம்பகத்தில் சொக்கநாதர் பாட்டுடைத் தலைவராக அமைவது போல் மக்காக் கலம்பகத்தில் முகமது நபி அவர்கள் பாட்டுடைத் தலைவராக அமைந்துள்ளார்.

மதுரைக் கலம்பகத்திலே 1. புயலகுப்பு, 2. தவம், . வண்டுவிடுதூது, 4. அம்மானை, 5. பாண், 6. மதங்கியார், 7. கைக்கிளை, 8. சித்து, 9. ஊசல், 10. களி, 11. மடக்கு, 12. ஊர், 13. மறம், 14. காலம்., 15. தழை விருப்புரைத்தல், 16. இரங்கல், 17. சம்பிரதம், 18. மேகவிடுதூது ஆகிய பதினெட்டு உறுப்புக்களும் பிற்காலத்தில் மருவிய பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார் முதலிய பொருள்களும் பிறபொருள்களும் கலந்து வந்துள்ளன. அகம், புறம் என்னும் பல்வகைப் பொருள்களும் இடம் பெற்றுள்ளன.

மக்காக் கலம்பகத்திலே பதினெட்டு உறுப்புக்கள் தந்துள்ளன. 'களி', 'ஊர்' என்னும் உறுப்புக்கள் விடப்பட்டுள்ளன. காற்று, குறம் என்னும் உறுப்புக்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

மதுரைக் கலம்பகத்தில் காப்புச் செய்யுள் ஒன்றையும் சேர்த்து எல்லாமாக நூற்றி மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன. மக்காக்கலம்பகத்தில் காப்புச் செய்யுட்களாகச் செந்துறை வெள்ளை ஒன்றும் நேரிசை வெண்பா ஒன்றும் கட்டளைக் கலித்துறை மூன்றும் சேர்ந்து எல்லாமாக நூறுபாக்கள் இடம் பெற்றுள்ளன. இரண்டு கலம்பகங்களிலும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்னும் ஒரு போகுடன் நூல் ஆரம்பமாகிறது. நூல் ஆரம்பமாவதற்கு முன்னுள்ள செய்யுட்களைச் சில புலவர்கள் தற்சிறப்புப் பாயிரத்துக்குள் அடக்குவர். இரண்டு கலம்பகங்களிலும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாக்களில் தரவு, தாழிசை, அராகம் தாழிசை அம்போதரங்கள், தனிச்சொல், சுரிதகம் இடம் பெற்றுள்ளன. மதுரைக் கலம்பகத்தில் உள்ள மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவில் முச்சீர், இருசீர், அம்போதரங்களே இடம் பெற்றுள்ளன. மக்காக் கலம்பகத்தில் உள்ள மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவில் பேரெண் ஈரடி, அளவெண் நான்கடி, இடையெண் எட்டடி, சிற்றென் பதினுறடி அம்போதரங்கங்கள் இடம் பெற்றுள்ளன. ஒரு தரவு வந்தும், இரண்டு தரவு வந்தும், தாழிசை, சில வந்தும், தாழிசை பல வந்தும், தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புக்களும் தம்முன் மயங்கியும், வெண்பாவினேடும் ஆசிரியத்தோடும் மயங்கியும் வருவன எல்லாம் கொச்சகக் கலிப்பா என்று வழங்கப்படும். தம்முள் மயங்கியும் பிறவற்றினேடு மயங்கியும் வருவன எல்லாம் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்றும் வழங்கப் பெறும். இங்கே இரண்டு கலம்பகங்களிலும் கலிக்குரிய ஆறு உறுப்புக்களும் மிக்கும் குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும், மயங்கியும் வந்தமையான் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா எனப்பட்டது.

மதுரைக் கலம்பகம் குமர குருபர சுவாமிகளால் பாடப்பெற்றது. முன் நூறு ஆண்டுகளுக்கு முன் பாடப்பெற்றது. மக்காக் கலம்பகத்தை இயற்றியவர்

செய்கு அப்துல் காதிறு லெப்பை ஆலிம் புலவர். நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னர் பாடப்பெற்றது.

மதுரைக் கலம்பகத்தில் உள்ள காப்புச் செய்யுள் கட்டளைக் கலித்துறை யாக அமைந்துள்ளது. யானைமுகக் கடவுளிடத்தில் 'தந்தையாகிய பரமசிவன் மீது பாடப்படும் இக்கலம்பக நூலுக்குச் சிறந்த முறையில் தமிழ்மொழி தந்து அருள்க என்று மூத்தபுதல்வனிடத்தில் கேட்பது பொருத்தமற்றதும் வேண்டப் பெருததுமாகும்' என்று கூறுவதாக இக்காப்புச் செய்யுள் அமைந்துள்ளது. காப்புச் செய்யுட்களின் எண்ணிக்கையும் அமைப்பும் கலம்பகத்துக்குக் கலம்பகம் வேறுபடுகின்றது.

மக்காக் கலம்பகத்தில் உள்ள காப்புச் செய்யுள் செந்துறை வெள்ளையுடன்[4] ஆரம்பமாகிறது. இங்கே இஸ்லாத்தின் மூலமந்திரமான கலிமாவின் தாத்பரியம் தொகுத்து உரைக்கப்படுகிறது. முஸ்லிம்கள் கலிமாவை வாயால் மொழிதல் வேண்டும். உள்ளத்தால் நினைக்க வேண்டும். செயன்முறைப்படுத்த வேண்டும். நேரிசை வெண்பாவாகவும் கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களாகவும் உள்ள ஏனைய நான்கு செய்யுட்களாலும் ஏனைய இஸ்லாமியப் பெரியார்கள் போற்றப் பட்டு அவர்களின் துணை கோரப்பட்டுள்ளது.

இனி இரண்டு கலம்பகங்களிலும் இடம் பெற்றுள்ள 'புயவகுப்பு' என்னும் உறுப்பைப் பார்ப்போம். மதுரைக்கலம்பகத்தில் உள்ள புயவகுப்பு முப்பத்திரு சீராகிய வண்ண விருத்தமாக அமைந்துள்ளது. இந்த வண்ண விருத்தத்திலே[5] சவுந்தர பாண்டியருடைய பெரிய அழகிய தோள்கள் (1) பேய்கள் ஆடுகின்ற துணங்கை என்னும் கூத்துக்கு இசைந்திருந்தன; (2) தேவாரத் திருபதிகத்தின் அருமையை அறிந்து ஒரு பொற்றுளத்தைக் கொடுக்கத் தொடங்கின; (3) அரி மர்த்தன பாண்டியரது பிரம்பின் அடியைப் பார்த்ததினுல் மிக நடுங்கி அஞ்சின; (4) முருகக் கடவுளின் மழலைச் சொற்கள் பொருந்திய வாயில் ஊறும் நீர் மேலே துளிக்க அதனுள் ஈரமாயின என வருணிக்கப்பட்டுள்ளன.

மக்காக் கலம்பகத்திலுள்ள 'புயம்' சந்தவிருந்தமாக அமைந்துள்ளது. இந்தச் சந்த விருதத்தடுலே[6] முகம்மதெனு நாமோதயக்குரிசில் எளிவார் திருப் புயங்கள் (1) பார முத்திரையின் அழகே பழுத்திருந்தன; (2) பிரபலமே படைத் தெழுந்தன; (3) பொறை புலன வீறே பரித்துனிய திறமே பெறச்சிறந்தன; (4) அமையாது உயர்ச்சி கொண்டன; (5) நற்கதிரின் வடிவாள் எடுத் யர்ந்தன (6) மாஞர் மனக்கன் உல வயவாகை பெற்றலர்ந்தன (7) தவமேசீல மற்றுமுள நல்லான் மிகத்திரண்டன. இரண்டு பாடல்லிலுமுள்ள சந்தங்களின் ஓசை மாற் றத்தை இங்கே காணலாம்.

மூன்று மங்கையர் அம்மானை பாடும்பொழுது பிரபந்தத் தலைவனது தன்மையைப்பற்றி உரையாடுவது அம்மானை என்னும் கலம்பக உறுப்பின் இலக் கணம்மாகு. கலம்பகத்தில் வரும் அம்மானைப் பாடல் பெரும்பாலும் கலித்தாழிசை யாகவே அமையும். நான்கடிகளைக் கொண்ட இவ்வம்மானைப் பாடலில் ஈற்றடி என் சீராய் மிக்கு வந்துள்ளது. ஏனைய மூன்று அடிகளும் நாற்சீர்களாகவே வரும். ஒரு பெண் பாட்டுடைத் தலைவனின் பெருமையைக் கூற மற்றவள் முதல்

பெண் கூறிய தன்மையில் சிறு குற்றத்தைக் கூற மூன்றும் பெண் அந்த கருத்துக் குரிய சொற்றொடரை சிலேடையாக மாற்றி அப்பாட்டுடைத் தலைவனின் பெருமையை இன்னும் அதிகரிக்குமாறு பாட்டிசைக்கிறாள். மதுரைக் கலம்பகத்தில் உள்ள அம்மானைப்பாடலில்[7] முதல் பெண்' சிவப்பெருமான் தம் வெற்றியைப் புலப்படுத்தும் பேச்சைக்கூறி ஒரு சித்தனின் உடம்பில் உறுப்புக்களைத் தனித்தனி துணித்து அவனை வென்றுவிட்டார் அம்மானை' என்றாள். அதனைச் செவிமடுத்த மற்றவள் 'அவ்வாறு வெற்றிமொழி பேசிப் பகைவருடைய உடம்பைத் துணிந்து வென்றவரேயாமாயின் காணுதற்குரிய அவரது உடம்பு ஒன்று இரண்டு துண்டாவது ஏன் அம்மானை?' எனக் கேட்டாள். மூன்றுமவள், உடம்பு ஒன்று இரு கூறானாலும் தலைவராகிய அப்பெருமானுக்குத் தழும்பு இல்லை அம்மானை' என்று பதிலிறுத்தாள். இரண்டாவது பெண் குறையாகக் கூறியதை மூன்றாவது பெண் இயற்கையானது என்று கூறி நிலைநிறுத்தி அம்மானை விளையாடினர்.

இதே பாணியில்தான் மக்காக்கலம்பகத்தில் உள்ள அம்மானைப்[8] பாடலும் அமைந்துள்ளது. ஒரு பெண் 'முகம்மது நபி அவர்கள் ஆகாயத்திலே உள்ள பூரணச் சந்திரன்' என வருணிக்கிறார். இந்த வருணனையைக் கேட்ட இரண்டாம் பெண் 'அவ்வாறு அவர்கள் ஆகாயத்திலே உள்ள பூரணசந்திரனேயாமாகில் ஆகாயத்திலே சஞ்சரிக்கின்ற மேகங்கள் முழுமதியை மறைக்குமே' என்ற ஐயத்தை எழுப்புகிறாள். இவ்வாறு ஐயம் எழுப்பப்பட்டதைக் கேட்டுக்கொண்டிருந்த மூன்றும் பெண், இரண்டாம் பெண் குறிப்பிட்ட 'மறை' என்னும் சொல்லுக்குச் சிலேடையாகப் பொருள் கொடுத்து வேதம் என்று பொருள்படும் மறைதான் எல்லோருக்கும் மாண்பு தருவது' என்று கூறி முடிக்கிறாள்.

இன்னொரு செய்யுளை எடுத்துக்கொள்வோம். மதுரைக் கலம்பகத்தில் உள்ள இச்செய்யுள் 'உருவெளிப்பாடு' பற்றிக் கூறுகிறது. தலைவியைப் பிரிந்து சென்று மீண்டும் வருகிற தலைமகன் இடைவழியில் அவளது உருவெளிப்பாட்டைப் பாலை நிலத்தே கண்டு வியந்து பாகனோடு கூறியதாக அமைந்துள்ளது. தலைவன் கூற்றாக அமைந்துள்ளது இப்பாடல்.[9] மக்காக் கலம்பகத்திலும் இத்தகைய ஒரு பாடல்[10] உள்ளது. அப் பாடலிலும் உருவெளித்தோற்றம் குறிப்பிடப்படுகிறது. 'உருவெளித் தோற்றத்தின் உண்மை கூறுவதாக' அது அமைந்துள்ளது. ஆனால் மக்காக் கலம்பகத்தில் உள்ள உருவெளித்தோற்றத்தின் உண்மை தலைவி கூற்றாக அமைந்துள்ளது. ஏனெனில் மக்காக் கலம்பகத்தில் உள்ள எந்தப் பாடலுமே தலைவன் கூற்றாக அமையவில்லை. எல்லாம் தலைவி கூற்றுக்களாகவே அமைந்துள்ளன. தலைவன் கூற்றாக வந்தால் இஸ்லாமிய வரம்பை மீறவேண்டிய நிர்ப்பந்தம் ஆசிரியருக்கு ஏற்படும் என்பதனாலேயே இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

பாட்டுடைத் தலைவராக உள்ளவரை தலைவியாகவும் ஆன்மாக்கள் தலைவனாகவும் இருப்பது ஒருமுறை. மற்றது பாட்டுடைத்தலைவராக உள்ளவர் தலைவனாகவும் ஆன்மாக்கள் தலைவியாகவும் இருப்பது. திருக்கோவையாரிலே அடையப்படும் பரம்பொருளான சிவன் தலைவியாகவும் அடையவிழையும் உயிர்கள் தலைவனாகவும் இருந்து பாடப்படுவனபோல் அமைந்துள்ளது. ஆனால் திருவாசகத்திலே அடையப்படும் பரம்பொருளான சிவன் தலைவனாகவும் அடைய விழையும் உயிர்கள் தலைவியாகவும் இருந்து பாடப்படுவனபோல் அமைந்துள்ளது. எனவே

முன்னவை தலைவி கூற்றுக்களாகவும் பின்னவை தலைவன் கூற்றுக்களாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். ஒன்றில் அடையவிழையும் இன்பம் தலைவனதாக உள்ளது. மற்றதில் அடைய விழையும் இன்பம் தலைவியதாக உள்ளது. முஸ்லீம் புலவர்கள் யாத்த கலம்பகங்களிலும் அகப்பொருள் நூல்களிலும் அடையவிழையும் இன்பம் தலைவனுகவே உள்ளது. வெளியிடப்படும் கருத்துக்கள் இஸ்லாத்துக்கு முரணுனவையாக இருக்கக்கூடாது என்பதற்காகவே இந்த உத்தி பின்பற்றப்பட்டுள்ளது எனலாம்.

மதுரைக் கலம்பகத்தில் இடம்பெறுத சில யாப்பு வகைகள் மக்காக் கலம்பகத்தில் இடம் பெற்றுள்ளன. குமரகுருபர சுவாமிகளிலும் பார்க்க ஆலிம் புலவர் காலத்தால் பிந்தியவராக இருந்தமையினுலேயே இத்தகைய ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கலாம். பின்னையவர் வாழ்ந்த காலத்தில் பல்வேறு வகையான யாப்பு வகைகள் நடைமுறையில் வந்தன. பல்வேறு சுவைகளுடன் ஓசை நயமும் முக்கிய இடத்தைப் பெறலாயது. அக்காலத்தில் ஒரு கவிஞனின் திறமையைக் கணிக்கும் அளவுகோலாக அமைந்தது அந்தக் கவிஞன் தனது நூலில் பயன்படுத்தும் பல்வேறு யாப்பு வகைகளில் தங்கி இருந்தமையே எனலாம். இந்தக் கண்ணுேட்டத்தில் பார்க்கும்பொழுது குமரகுருபர சுவாமிகளைவிட அதிகமான யாப்பு வகைகளை ஆலிம் புலவர் அவர்கள் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

மக்காக் கலம்பகத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள அத்தகைய புதுவிதமான யாப்பு வகைகளில் ஒன்று சவலை வெண்பா என்பதாகும். தனிச்சொல் இன்றி இரண்டு குறள் வெண்பாக்களை இணைத்துச் செய்யும் வெண்பா சவலை வெண்பா எனப்படும்.

முதலாமடியும் மூன்ருமடியும் நாற்சீராய், இரண்டும் நான்கும் முச்சீராய் தனிச்சொல்லின்றி ஒரு விகற்பத்தான் வரும் வெண்பா சவலை வெண்பா எனப்படும்.

> நனிஇரு குறளாய் நான்கடி உடைத்தாய்த்
> தனிவர வில்லது சவலைவெண் பாட்டே

என முன்னேர் கூறிப்போந்த சூத்திரத்தை அடிப்படையாக வைத்தே சவலை வெண்பாவுக்கு வழுவமைதி கண்டுள்ளனர். இத்தகைய சவலை வெண்பாக்களை முன்னுள்ளோரும் பாடிப் போந்துள்ளனர்[12].

வெண்பாவில் இன்னெரு வகை சிந்தியல் வெண்பா. வெண்பாவின் பொது இலக்கணம் பொருந்தி மூன்றடிகளால் வரப்பெறுவது சிந்தியல் வெண்பாவாகும். இன்னிசைச் சிந்தியல் வெண்பா ஒரு விகற்பத்தாலும் வரும், பல விகற்பத்தாலும் வரும். ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா ஒன்று[13] மக்காக் கலம்பகத்தில் வந்துள்ளது.

அதே போன்று இரண்டா மடியினிறுதி தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தாலும் ஒரு விகற்பத்தாலும் மூன்றடியான் நேரிசை வெண்பாவே போல வருவன நேரிசைச் சிந்தியல் வெண்பா எனப்படும். இதற்கும் உரிய உதாரணத்தை மக்காக்

கலம்பகத்திலிருந்து பெறலாம்.[14] இது இருவிகற்பத்தால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பாவாக அமைந்துள்ளது.

வெளிவிருத்தம் என்பது மற்றொருவகைச் செய்யுள். மூன்றடியானும் நான்கடியானும் முற்றுப்பெற்று அடிதோறும் ஒரு சொல்லே இறுதிக்கண் தனிச் சொல்லாய் வருவது வெளிவிருத்தம் எனப்படும். தனிச்சொல் ஐந்தாவது சீராக வரும்.

மூன்றடி யானும் முடிந்தடி தோறு முடிவிடத்தும்
தான்றனிச் சொற்பெறுந் தண்டா விருத்தம்...

என்பதே இதற்குரிய சூத்திரம். இங்கே 'மூன்றடியானும்' என வந்திருப்பதால், இந்த உம்மையால் நான்கு அடியானும் வரப்பெறும் எனக் கொள்ளலாம். இவ்வாறு நான்கடியானும் முற்றுப்பெற்று அடிதோறும் 'என்செய்வே னியான்' என்னும் ஒரு சொல்லே இறுதிக்கண் தனிச்சொல்லாய் வரும் வெளிவிருத்தம் ஒன்று மக்காக் கலம்பகத்தில்[15] வந்துள்ளது.

வெண்டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும்

என்பது வெள்ளொத்தாழிசை அல்லது வெண்டாழிசைக்குரிய வரைவிலக்கணம். மூன்றடியான் ஈற்றடி வெண்பாவே போல முச்சீரடியான் இறுவது வெள்ளொத் தாழிசை ஆகும். வெள்ளொத்தாழிசைக்குரிய ஓர் உதாரணம்[16] மக்காக் கலம்பகத்தில் வந்துள்ளது.

இனி, மதுரைக் கலம்பகத்திலும் மக்காக் கலம்பகத்திலும் இடம் பெற்றுள்ள இயற்கை வருணனைகளைப் பார்ப்போம். மதுரைக் கலம்பகத்தில் மதுரையும், மக்காக்கலம்பகத்தில் மக்காவும் பெருமளவில் வருணிக்கப்பட்டுள்ள மையைக் காணலாம்.

மதுரையை வருணிக்கப்போந்த குமரகுருபர சுவாமிகள் அதனைக் கடல் என்றே வருணிக்க ஆரம்பிக்கிறார். 'தமிழ்க்கூடற் றிருநகரம்'[17] என ஆரம்பிக் கிறார். இதே கருத்துப் பல இடங்களில் வந்துள்ளது.[18] அறம், பொருள், இன்பம் வீடு என்னும் நால்வகைப் பேறுகளையும் ஒருசேர மெய்யடியார்க்குத் தந்தருளுகிற நகரம் என்றும்[19] மதுரை வருணிக்கப்பட்டுள்ளது. மதுரையின் மற்றொரு சிறப்பு அதன் உயர்ச்சியான தோற்றம். அதன் உயர்ச்சி எத்தகையது எனின் 'இளம் பிறையும் தேய்ந்து தன் வடிவத்தின் வளைவு மாறும்படியாகவே உயர்ந்துள்ள அழகிய மதுரைத் திருநகரம்' அது.[20] உயர்ச்சி மேலும் விதந்தோதப்படுகிறது.[21] கூடலில் உள்ள பொற்றாமரைக்குளமும்[22] நீண்ட நான்மாடக் கூடல் ஆக அது காட்சி அளிக்கும் விதமும்[23] அதன் அழியாத வீடுகளும்[24] அதன் அருளும்[25] பெருமையும்[26] அன்பும் இன்பமும்[27] வருணிக்கப்படுள்ளதையும் காணலாம்.

மதுரை என்றே இந்நகர் பல இடங்களில் வருணிக்கப்பட்டுள்ளது. அதனை மூதூர்[28] என்றும் புகழை உடைய நகர்[29] என்றும் செந்தமிழ் வழங்கும் மதுரை[30] என்றும் அழகிய மருதநிலம் அந்நகரைச் சூழ்ந்திருக்கிறது[31] என்றும் கடம்ப

வனம் உள்ள நகர்[32] என்றும் செந்தமிழ்ப்பாடல் மிகுந்து வழங்குகின்ற மதுரை[33] என்றும் திருவாலவாய்[34] என்றும் ஆசிரியர் வருணித்துள்ளார்.

இனி, மக்காநகர் மக்காக் கலம்பகத்தில் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது என்பதைப் பார்ப்போம். அறபுப் பாலைவனத்தில் அமைந்துள்ளதெனினும், மக்கா நகர் வளம்மிக்க நகராக வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். மக்காநகரிலே உயர்ந்த மாடங்கள்[35] உண்டென்றும் அழகிய வாவிகள் பல அங்கு இருந்தன என்றும்[36] பூஞ்சோலைகள் நிறைந்திருந்தன[37] என்றும் பல்வேறு விதமான எழில் நயத்துடன், அந்நகர் திகழ்ந்தது[38] என்றும் மக்காக் கலம்பகத்தில் வருணிக்கப் பட்டுள்ளது.

மக்காக்கலம்பகத்திற்குரிய ஒரு சிறப்பியல்பும் உண்டு. இச்சிறப்பியல்பு மக்காக் கலம்பகத்துக்கு மாத்திரம் உரித்தானதொன்றன்று. இஸ்லாமிய அடிப் படையிலே தோன்றிய தமிழ் இலக்கியத்துக்கே இது சிறப்பியல்பாக அமைந் துள்ளது. இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள அறபு- பாரசிகச் சொற்களைத்தான் இங்கு குறிப்பிடுகிறேன். மக்காக் கலம்பக ஆசிரியர் செய்கு அப்துல் காதிர் நெய்னர் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் தமது நூலிலே அறபுச்சொற்களை அருமையாகவே உபயோகிக்கின்ருர். பல்வேறு யாப்புக்களில், சிறப்பாக மடக்கு அணி ஏற்படும் வண்ணம், தமிழ்ச் சொற்களை உபயோகிப்பதே சிக்கலான ஒரு நிலையை ஏற்படுத்துகிறது. அத்தகைய சிக்கலான நிலையில் அறபுச் சொற்களையும் சேர்த்துப் பயன்படுத்துதல் எவ்வளவு கடுமையான காரியம் என்பது சொல்லாமலே விளங்கும். இத்தகைய ஒரு சாதனையை மக்காக் கலம்பகத்தில் ஆசிரியர் நிலைநிறுத்தி உள்ளமையைக் காண லாம்.

மக்காக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவர் முகமது நபி அவர்களாத லால் அவர்களுடைய பெயர்கள் முகமது, அகுமது, மகுமூது, தாசீம், தாஹரி, காசிம், யாசின், ஹாஷீம் எனப் பலவாருகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. நபிகள் பெருமானுர் அவர்களுக்குப்பின் ஆட்சிபுரிந்த அபூபக்கர் அவர்கள், உமறு அவர்கள், உதுமான் அவர்கள், அலி அவர்கள் தற்சிறப்புப் பாயிரத்திலே குறிப்பிடப்பட் டுள்ளனர். அவர்களைத் தொடர்ந்து அலி அவர்களின் புதல்வர்களான அசன் அவர்களும் உசைன் அவர்களும் போற்றப்பட்டுள்ளனர். வானவர் தலைவர் ஜிபுறீல் அவர்களின் (1) பெயரும் ஓரிடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இறை நேசச் செல்வர்களைக் குறிப்பிட 'ஒலி' என்னும் அறபுச் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. 'ஒல்' என்பது 'வலி' என்றும் உபயோகிக்கப்படும். நபிகள் நாயகம் முகம்மது அவர்களின் மூதாதையரான அதுனன் (18) என்பவரின் பெயர் இங்கு இடம் பெற்றுள்ளது. நபிகளாரின் கோத்திரம் கூட 'குறைஷி' (32) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

நபிகள் நாயகத்தின் நெருங்கிய தோழர்களை அழைக்க அறபுமொழியில் 'அசுகாபி' (85) என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இ அசுகாபிகள் என்றே உபயோகிக்கப்பட்டுள்ளது. இங்கு உபயோகிக்கப்பட்டுள்ள மற்ருெரு அறபுச்சொல் 'அசறு' (25) என்பதாகும். இந்தச் சொல் முஸ்லீம் மக்கள் பிற்பகலில் நிறை

வேற்றும் தொழுகையைக் குறிக்கவே உபயோகிக்கப்படுகிறது. அகில உலகங் களேயும் அறபுமொழியில் 'ஆலம்' என அழைப்போம், இந்த ஆலம்' (26) என்னும் சொல்லும் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. 'இறசூல்' என்ருல் தமிழ்ப்படுத்தப்பட்ட 'றசூல்' என்பதாகும். இதன் பொருள் தூதர் என்பதாகும். இறைவனின் தூதரையே இச்சொல் குறிக்கிறது. 'இறசூல்' என்னும் சொல் மூன்று இடங்களிலே (23, 30, 42) தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இஸ்லாமிய மூல மந்திரம் 'கலிமா' என அழைக்கப்படுகிறது.

'அல்லாஹ்' ஒருவனே அவன் தூதர் முகமது அவர்கள்' என்பதே 'கலிமா' என்னும் மூலமந்திரத்தின் அடிப்படைக் கருத்தாகும். இதனே முஸ்லிம்கள் வாயால் மொழிதல் வேண்டும், இதைப்பற்றிச் சிந்தித்தல் வேண் டும், இதற்கிணங்க ஒழுகுதல் வேண்டும். ஒரு பாடலில் (6) இச்சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. முஸ்லிம் அல்லாத தன்மையைக் குறிக்கும் அறபுச்சொல் 'குப்ர்' என்பதாகும். இந்தக் 'குப்ர்' என்ற அறபுச் சொல்லுக்கு 'அர்' என்னும் உயர்திணைப் பலர்பால் விகுதியைச் சேர்த்து 'குபிரர்' என முஸ்லிம் அல்லாத வர்கள் அழைக்கப்பட்டனர். இதே கருத்திலேதான் மக்காக் கலம்பகத்திலும் (23) பயன்படுத்தப்பட்டுள்ளது. 'சலலாத்' என்னும் அறபுச்சொல்லின் கருத்து நபி களாரின் பேரில் புகழ்பாடுவதாகும். இதே கருத்தில் தான் இந்த அறபுச்சொல் இங்கு (99) ஆளப்பட்டுள்ளது.

தமிழிலே சரியாக மொழிபெயர்க்க முடியாத மற்ருெரு அறபுச்சொல் 'நபி' என்பதாகும். தீர்க்கதரிசி என்பதோ Prophet என்பதோ 'நபி' என்னும் அறபுச்சொல் குறிக்கும் பதார்த்தத்தைக் குறிக்காது. எனவே 'நபி' என்னும் அறபுச்சொல் முஸ்லிம்கள் பேசும் எல்லா மொழிகளிலும் அவ்வாறே பயன்படுத் தப்பட்டு வருகிறது. இஸ்லாமாய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கிய நூல்களிலே மிக அதிகமான தடவைகள் பயன்படுத்தப்பட்டுள்ள சொல் இந்த அறபுச்சொல் எனின் அது மிகையாகாது. மக்காக் கலம்பகத்தில் கூட 'நபி' என்னும் இவ்வறபுச்சொல் பல தடவைகள் (தற்சிறப்புப்பாயிரம், 2; 8; 9; 15; 19; 25; 86) உபயோகிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

இஸ்லாத்தைக் குறிக்கும் 'தீன்' என்னும் அறபுச்சொல்லும் மக்காக் கலம்பகத்திலே இரண்டு தடவைகள் (1, 56) மாத்திரம் உபயோகிக்கப்பட் டுள்ளது. மக்காக் கலம்பகத்தில் இடம் பெற்றுள்ள தமிழுக்குப் புறம்பான மற்ருெரு சொல் 'ஜின்' என்பதாகும். இது, ஆங்கிலத்தில் genii என வழங்குகிறது. இச்சொல் பூதம் போன்ற கணங்களேக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது(1).

மக்காக் கலம்பகத்திலே இடம் பெற்றுள்ள மற்ருெரு சொல் 'பவுசு'(81) என்பதாகும். சொகுசான வாழ்க்கை என்ற பொருளிலே இச்சொல் ஆளப் பட்டுள்ளமையைக் காணலாம்.

அறபுநாட்டில், மக்கா நகரில் உள்ள இரண்டு திருத்தலங்களும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ள ஒன்று புனித கஃபா (31, 75) மற்றது 'சம்சம்' (45) முன்னேயது புனித ஆலயம், மற்றது அதன் அருகே உள்ள புனிதக் கிணறு.

இவ்வாறு பார்க்கும் பொழுது மதுரைக் கலம்பகமும் மக்காக் கலம்பகமும் பலவகைகளில் ஒத்திருக்கின்றன, சிற்சில சந்தர்ப்பங்களில் வேறுபடுகின்றன. எனினும் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய கலம்பகங்களுக்கு முன்மாதிரியாக அமைந்தவை மதுரைக் கலம்பகம் போன்றவையே எனக் கூறின் அது மிகை யாகாது.

## குறிப்புக்கள்

1. ஒருபோகு வெண்பாக் கலித்துறை யுறமுன்
வருபுய மதங்கம் மானே காலக்
சம்பிர தங்கார் தவங்குற மறம்பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழுமூசல்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்தம்
அகவல் கலியின மகவல் விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்டுறை மருவி
இடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்று
அந்தாதி மண்டலித் தாங்கலம் பகமே. (இலக்கண விளக்கம்: 812)

2. வைக்கும் புயம்தவம் வண்டம்மனே பாண்மதங்கு
கைக்கிளைசித் தூசல் களிமடக்கூர் — மிக்கமறம்
காலந் தழையிரங்கல் சம்பிரதங் கார்தூது
கோலுங் கலம்பகத்தின் கூறு.
கூறு மொருபோகு வெண்பாக் கலித்துறைகள்
மாறின் முதலுறுப்பா மன்விருத்தம் — வேறகவல்
வஞ்சித் துறைவிருத்தம் வான்றுறை வெண்மருட்பா
எஞ்சாக் கலியினங்கொண் டீட்டு (வெண்பாப்பாட்டியல்:10-11)

3. சொல்லிய கலம்பகம் சொல்லில் ஒருபோகு
முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே
அம்மனை ஊசல் யமகம் களிமறம்
சித்துக் காலம் மதங்கு வண்டே
கொண்டல் மருள்சம் பிரதம் வெண்டுறை
தவசு வஞ்சித் துறையே இன்னிசை
புறமேய் அகவல் விருத்தம் எனவரும்
செய்யுட் கலந்துடன் எய்திய அந்தம்
ஆதி யாக வரும்என மொழிப

(பன்னிருபாட்டியல் : 45)

4. வல்லான் முற்றும் உணர்ந்தான் தன்னைச்
சொல்லால் உளத்தால் செயலால் தொழுவாம்.

5. வரியளி பொதுளிய விதழியொ டமரர்
மடந்தையர் நீல வனம்புக் கிருந்தன

மதியக டுடைபட நெடுமுக டடைய
நிமிர்ந்தபொன் மேரு வணங்கப் பொலிந்தன
மழகதிர் வெயில்விட வொளிவிடு சுடர்வ
லயங்கொடு லோக மடங்கச் சுமந்தன
மதுகையொ டடுதிறன் முறைமுறை துதிசெய்
தணங்கவ ராடு துணங்கைக் கிணங்கின.

பொருசம ரிடையெதிர் பிளிறுமொர் களிறு
பிளந்தொரு போர்வை புறஞ்சுற் றிநின்றன
புகையெழ வழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொ ராடை மருங்குற் கணிந்தன
புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீர மொடுங்கத் துரந்தன
புகலியர் குரிசில்ப ணுெடுதமி ழுருமை
யறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன.

உருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண னுெதுங்கத் திரிந்தன
உருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துளி மேலிடு வெண்பிட் டுகந்தன
உறுதியொ டவண்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடை மணுந்திச் சொரிந்தன
உருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன.

தருசுவை யமுதெழ மதுரம தொழுகு
பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியன் மலைமகள் வரிவளை முழுகு
தழும்பழ காக வழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடுமிள மதலையின் மழலை
ததும்பிய வூற லசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே.

மக்காக் கலம்பகம் 6:
கருவிலுறை கருவெளவு மாராய்வ தற்கரிய
வொருவனருள் பெருகிவளர் மாராய மிக்குளது
கதிவழிய ரனைவரிலு மேபார முத்திரையின் – அழகே பழுத்திருந்தன

ககனவெளி யுலவியொளி கால்வீசி நட்பினொடு
சமுகமதி னினியகவி மாவோதி யுட்புகுத
கதிர்நிலவின் மதிபிளவு மேலாய் முகத்தபிர – பலமேபடைத்தெழுந்தன

பெருகுபுன னிலவலைய மேவான மற்றுமுள
வுயிர்களருள் பெறவினைகள் சேரா தகற்றியுயர்

பிரியமொடு பொறைபுவனவிறே பரித்தினிய - திறமே பெறச் சிறந்தன
பிதிரொளிவி னுயர்வரைகள் மாறூ டெதிர்த்துவிறல்
அணியதிக நிறமகிமை மாமேரு வெட்கவெழில்
பிறமுமணி வயிரமென வேமீளி பெற்றளவில் – அமையா துயர்ச்சி
கொண்டன

பொருகரியி லிரைகளிடை வாதாடுகற்கியிடை
மணியிரத கவிதையிட சேனுதி கத்தரிடை
புரவலர்கள் முடிகளிடை யூடாடு நற்கதிரின் – வடிவா ளெடுத்துயர்ந்தன

புதியநறை மதுவினெடு தேனுர் முறுக்கவிழ
மகரமுறை வெடியுமிக வாய்வீச வெற்றியொடு
புகழுமளியெனவளர மானுர் மனக்கனுல – வயவாகைபெற் றலர்ந்தன

வரிசையொடு பொறைமகிமை யானேர்மை யுற்றகொடை
நிறைநடுவு நிலைமைதய வாதார மிக்ககுண
மனவுறவு நியதிதவ மேசில மற்றுமுள – நலவான்மிகத் திரண்டன

மதிதவழு மொழுகுமெழின் மேன்மாட மொய்த்தமறு
கிடையரச ருலவிவரு பேரூர மக்கநகர்
மருவுபதி முகம்மதென நாமோ தயக்குரிசி – லொளிவார் திருப்புயங்களே.

7. மதுரைக் கலம்பகம் 13 :
இருவருக்குங் காண்பரிய வீசர்மது ரேசனுர்
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகி
லருமையுடம் பொன்றிருகூ ருவதே னம்மானை
ஆறுலும் காயமில்லை யையரவர்க் கம்மானை.

8. மக்காக் கலம்பகம் 43 :
நாடணிந்த மக்கா நகர்வாழ் மகுமூதர்
மோடணிந்த காய முழுமதிகா ணம்மானை
மோடணிந்த காய முழுமதியே யாமாகில்
மாடணிந்தா மேக மறையுமே யம்மானை
மறையல்லோ வெல்லார்க்கு மாண்புதரு மம்மானை.

9. மதுரைக் கலம்பகம் 84 :
வரும்புண்ட ரீக மிரண்டாலொர் கல்லுமென் வன்னெஞ்சமா
மிரும்புங் குழைந்த மதுரைப் பிரான்வெற்பி லேழ்பரியோன்
விரும்புந் தடமணித் தேர்வல வாவெஞ் சுரமிதன்றே
கரும்புங் கனியு மிள நீரும் பாரெங்குங் கண்களிலே.

10. மக்காக் கலம்பகம் 75 :
நோக்கிய திசைக ளெல்லாம் நுண்மையி னுருவக் கோட்டித்
தாக்கிய மறதி யாதோ தவத்துலாங் கஃபா மக்கா
வாக்கிய நாத னுமே லறிவுமெய் யறிவே யாமேல்
பாக்கிய மாகு மேலிப் பான்மையார் பெறுவார் மாதோ

11. மக்காக் கலம்பகம் 17 :
உண்டென்று கண்டதெல்லா முண்மைப் பெரும்பொருளே
இன்றென்று கண்டதெல்லாம் மிப்புவியே
மன்றென்று மோங்கு மாமக்கா முகம்மதர்
அன்றின்று மாகி யது.

12. அட்டாலும் பால்சுவையிற் குன்றுது அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (மூதுரை)

13. மக்காக் கலம்பகம் 59 :
மனுவா யமைந்தது மற்றும் பொருளில்
அணுவா யமைந்தது மல்லால்
அனுபோக மக்கத் தவர்.

14. மக்காக் கலம்பகம் 54 :
மதியாது நின்றேநீ வன்பித்தா லென்னை
விதியாது கொள்வாய் விருப்பின் — முதிர்தென்றல்
ஆல்மக்கா முகம்ம தவர்பால்.

15. மக்காக் கலம்பகம் 37 :
அறிவளர் மக்கத்தார் அருளிலரே யாகுவரேல்
என்செய் வேனியான்
நறிய மணமேனி நயனமிசை காட்டாரேல்
என்செய் வேனியான்
குறிய வுருச்சாயல் குளிரிடத்துச் சேர்த்திலரேல்
என்செய் வேனியான்
நெறியுதவும் பூம்பாத நீள்சென்னிக் கீய்ந்திலரேல்
என்செய் வேனியான்.

16. மக்காக் கலம்பகம் 40 :
உருகு நெஞ்ச மொழிய விடார்
பெருகு காதல் பிரியல் செய்யார்
அருளின் மக்கத் தவர்.

17. 'செம்பொன் மதிற் றமிழ்க் கூடல்' — மதுரைக் கலம்பகம்: 1

18. 'மும்மைத் தமிழ்க் கூடல்' — மதுரைக் கலம்பகம்: 36
'தடமலர்ப் பொய்கைத் தண்டமிழ்க் கூடல்' — மதுரைக் கலம்பகம்: 47
'தேத்தந்த கொன்றையான் தெய்வத்தமிழ்க்கூடல்'-மதுரைக்கலம்பகம்:48
'பைந்தமிழ் தேர் கூடல்' — மதுரைக் கலம்பகம் 54
'சங்கு மொய்க்குஞ் சங்கத் தமிழ்க்கூடல்' — மதுரைக் கலம்பகம் 70
'வடகலை யலபல கலையொடு தமிழ்வள ருங்கூடல்-மதுரைக் கலம்பகம் 78.

'அமரரும் மருளுந் தெளிதமிழ்க் கூடல்' — மதுரைக் கலம்பகம் 92
'மேதகைய பலகலை போர்த் தறம்பொருந் தமிழ்க்கடல்' —
மதுரைக் கலம்பகம் 95

19. 'பொருளுன் கொருங்கின்ற பொன்மாடக் கடல்-மதுரைக் கலம்பகம் 2
'அறந்தந்த பொன்மலி கூடல்' ,, ,, 16
20. ' வாலசந்திரனும்
கனி மார்த்திட லேறி மிர்ந்திடு கூடலம் பதியே ,, 43
21. 'கூடலம்பதி' — மதுரைக் கலம்பகம் 22
'வண்பதிக் கூடலே' — மதுரைக் கலம்பகம் 2225
' விண்மீனைமுகந்
தள்ளுங் கொடிமதிற் பொற்கூடல் — மதுரைக் கலம்பகம் 37
'திருந்து தானத் தடமதிற் கூடல்' — மதுரைக் கலம்பகம் 38
'தோரண மாடக்கூடல்' — மதுரைக்கலம்பகம் — 46
22. ' பங்கயப்பூந்
தடங் கொண்ட கூடல்' — மதுரைக் கலம்பகம் 33
23. 'நீடு நான்மாடக்கூடல் — ,, 51
24. 'கொன்னியல் குமரி மாடக் கூடல்' — ,, 60
25. 'அருட் கடல்' — ,, 56
26. 'பீடார் கூடல்' — ,, 59
27. 'அன்போ டன்பும் அளித்தருள் கூடல் — ,, 86
28. 'மதுரை மூதூர்' — ,, 7
29. 'ஒண் மதுரை' — ,, 10
30. 'தமிழ் மதுரை' — ,, 11
'மும்மைத் தமிழ் மதுரை' — ,, 23
'தமிழ் மதுரை' . — ,, 35
31. ' கன்னற்செந்நெல்
வயல்வண்ணப் பண்ணை மதுரை' — ,, 12
''செல்லிட்ட பொழின்மதுரை' — ,, 77
32. 'வெறிசேர் கடம்பவன மதுரை' — ,, 15
'மருவிய கடம்பவன மதுரை' — ,, 30
33. 'பாமிக்குப் பயின் மதுரை' — ,, 90
34. 'செய்யான்செய் சிரக்கறையாந் திருவாலவாய் — ,, 18
35. 'நிழலொழுகு மாட நிறை மக்கா' — மக்காக் கலம்பகம் 26
மதிதவழு மொழுகுமெழின் மேன்மாட மொய்த்தமறு ,,
கிடையரச குலவிவரு பேரூர் மக்கநகர் ,,
'ஓங்கு மா மக்கா' . ,, 17
'நலிய மனுதின மோங்கு நகர் மக்கா' ,, 87
'அணி நிழலே யோங்கு மக மக்கா' ,, 90
36. 'இன்னமுத முண்டனங்களிசை பாடக்
குருகினங்க ளிரங்கி யேங்கப்
'குற்றமற்ற பொன்னு மணிகொழிக்கு மலர் வாவிமக்கா,, 39

வாவியுண்டு கமலமுண்டு கனியுலாக்
குளிருஞ்சோலை யுண்டுவானர் குலவுமதிலு முண்டுசீர்
பெற்றசம்ச முண்டுவரிசை யணியுமிடங் களுண்டுநற்
பெருமைநாய ஞெளிவளர்ந்த முத்திம ஊயுமுண்டுவாழ்
வுற்றமனுட ரோதும் வேத வுபரியுண்டு மாதவ
ருரிமையுண்ட மக்கநகர் — மக்காக் கலம்பகம் 45

37. 'மஞ்சேர் பொழின் மக்கம்' ,, 16
'கள்ளார் நறுஞ் சோலைக் காமக்கா' ,, 46
'மலருலாப் பொழின் மக்கம்' ,, 48
'மஞ்சே சூழ்பொழில் மக்கம் ,, 53
'கந்த மென்பொழிற் கன்னி மக்கா' ,, 57
'கஞ்சமலர்ந்தே சிந்தளி செந்தேன்
கங்குடையுஞ்சீர் கதி மக்கா ,, 58
' இடியேறு கடிசோலைக் —
கதி மக்காப் பதி' — மக்காக் கலம்பகம் 59
'தார்க்கா குலந்தாவு செம்முகக்
கார்க்கா விருட் கங்குலின் குழாஞ்
சீர்கா வுரும் திருமக்கா ' ,, 74
'அரிதாங் கயமலர் தாமரைப் பெரிதா
மணிப்பிதிர் செஞ்சுடர்
மிக்காலகழ் மக்கா' ,, 77
'தேன்பிலிற்றுந் தண்பூந் திருவனஞ் சூழ்ந்தென்றும்
கான்பிலிற்று மக்கா கனநகர்' ,, 97

38. 'சீர்பதி மக்கா' ,, 8
'அணியேந்து மக்கா' ,, 9
'தருவனைய மக்கா' ,, 10
'கொழுஞ்சுடர் மணிநகர்' ,, 12
'முற்றுமெழின் மொய்த்தபுகழ் மக்க நகர்' ,, 19
'எள்ளற்ற மக்கம்' ,, 23
'ஏத்து முத்த மக்கநகரம்' ,, 24
'மேரா வெழும்புரிசை யழகொழுகு மக்கநகர் ,, 25
'செய்தாங்கு மக்கநகர்'
' தேங்கனியு நற்கஃபாச்
'சிராகு மக்கா!' 31
சீமானணிமக்கம்' ,, 33

,, 36

'மாண்பாகு மக்கா' ,, 43

'நாடணிந்த மக்கா' ,, 84

'தண்ணலந் திகழு மக்க மாநகர்' ,, 84

'மிகவரிசைபெருகு மக்கா நகர் ,, 92

'மிகவரிசை பெருகு மக்காநகர்'

'ஏடுங்கதிர்மதி செய்யமக்கம்' ,, 93

'அகிலமதிக புகழினிதிகண்ணனைய மக்கம்

'மிக்கார்

விழைவுற்ற மக்கா' ,, 95

' போக

மாதரத்தின் மக்கா நகர்' ,, 96

# தமிழ் யாப்பிலக்கண மரபில் ஓசை

நா. சுப்பிரமணியம், எம்.ஏ.
துணைவிரிவுரையாளர், தமிழ்த்துறை, யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம்
திருநெல்வேலி, இலங்கை

இலக்கியக் கட்டமைப்பின் ஆக்கக் கூறுகளிலொன்ருன செய்யுள், பாட்டு, கவிதை ஆகிய பெயர்களாற் சுட்டப்படும் வடிவமைப்புக்கு விளக்கம் தரும் இலக்கண முயற்சி யாப்பிலக்கணம் என வழங்கப்படுகின்றது. கட்டு அல்லது அமைப்பு என்ற பொருள் தரும் 'யாப்பு' என்ற சொல் இலக்கியக் கட்டமைப்புக் குரிய பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் ஆகிய பலவற்றுக்கும் பொதுவான இலக்கணச் சுட்டாக வழங்கியது என்பது தொல் காப்பியச் செய்யுளியலிற் புலனுகும். காலகதியிற் பொருள் சுருங்கும் நியதிக் குட்பட்டு 'பாட்டு' வடிவமொன்றையே குறிப்பாக அமைத்து விட்டமையினை கி. பி. பத்தாம் நூற்ருண்டைச் சார்ந்த யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை ஆகியவற்றிற் 'பாட்டு' வடிவ இலக்கணமே கூறப்பட்டுள்ளமையினின்று தெளிய லாம். செய்யுள் என்ற சொல்லும் இவ்வாறே பொருள் சுருங்கும் நியதிக்குட் பட்டதாகும்

பாட்டு என்ற சொல் பாடப்படுவது என்ற பொருளுடையது. இதன் அடி 'பா' என்பதாகும்.

''பா என்பது, சேட்புலத்திலிருந்த காலத்தும் ஒருவன்
எழுத்தும் சொல்லும் தெரியாமற் பாடமோதுங்கால்
அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன
செய்யுளென்று உணர்த்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச்
செல்வதோர் ஓசை''.

என்பர் பேராசிரியர்.[1] இந்த ஓசைப்பண்பே இலக்கியக் கட்டமைப்பின் இன்னெரு ஆக்கக்கூருன உரைநடையில் இருந்து பாட்டை வேறுபடுத்தும் எல்லைக் கோடாகும். கருத்தை மட்டும் வெளிப்படுத்தும் தொடர்புச் சாதனம் என்ற வகையில் மட்டும் அமையும் உரைநடைக்கும், செவிப்புலச்சுவை மட்டுமே தரும் இசைக்கும் இடைப்பட்டதொரு செம்பாகமான தளத்தில் பாட்டு அல்லது கவிதை அமைகின்றது. இதில் பொருளும் இசைப் பண்பும் சமநிலை பெற்றிருக்கும். இசைப்பண்பு மிகுந்து பொருட் செறிவு குன்றினுல் அது இசைப்பாட்டு ஆகிவிடும். இசைப்பண்பு குன்றிப் பொருட்செறிவு மிகுந்தால் உரைநடைச் சாயலைப் பெற்று விடும். இவ்விருநிலைக்கும் இடைப்பட்ட நிலையிலான கவிதை உள்ளமைப்பிலே பொருளையும் புறவடிவிலே ஓசையையும் கொண்டது. இப்புறவடிவமைப்பினை — ஓசையை — அலகிட்டுணரும் தேவைக் கேற்பவே யாப்பிலக்கண நூலார் உறுப்பியல்

என்ற வகையிலே எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய அங்கக் கூறு களுக்கான விளக்கம் தந்தனர். செய்யுளியலிலே ஓசையினடிப்படையிலேயே 'பா' வகைகளை வேறுபடுத்திக்காட்டினர். இவ்விரு இயல்களிலும் கூறியதோடு திருப்தி யடையாமல் 'வண்ணம்' என்ற ஒலிநய அமைப்புக்கள் பற்றி ஒழிபியலிலே விளக் கினர். இவ்வாறு யாப்பியல் முழுவதும் ஓசை பற்றிய விளக்கம் தருவதொன்றுகவே அமைகின்றது. யாப்பியலில் ஓசையின் அமைதிக்கு ஏற்பவே எழுத்து, சொல், ஆகிய இலக்கணக்கூறுகளின் ஒலிப்பண்பும் பொருட்பண்பும் தீர்மானிக்கப்படு கின்றன.

> ''எழுத்திற்கு மாத்திரை கோடலும் அசைத்தலும்
> சீர்செய்தலும், தளையறுத்தலும் ஓசை பற்றியல்லது
> எழுத்துப்பற்றியன்று''.

என்பர் சிவஞானமுனிவர்.[2]

> ''ஈண்டு மாத்திரையென்பது முன்பு எழுத்ததிகாரத்தில் கூறிய மாத்திரைகளைக் குறிப்பதன்று. அங்கு இரண்டு மாத்திரையும் ஒரு மாத் திரையும் எனக் கூறப்பட்ட நெட்டெழுத்துக்களும், குற்றெழுத்துக்களும், அரை மாத்திரை எனக் கூறப்பட்ட ஒற்றெழுத்துக்களும் தத்தம் மாத்திரையின் இகந்து, செய்யுளில் இகந்த வரும் ஓசையையேயாகும், என்பது நச்சினர்க்கினியர் கருத்து. செய்யுளியலில் எழுத்துக்கள் தத்தம் மாத்திரையினின்று இகந்து ஓசைதருமாறு இருத்தலுமுண்டு. எழுத் துக்கள் தத்தம் மாத்திரையின் இகவாது நிற்பச் செய்யுளோசை இருத் தலுமுண்டு. முன்னைய நிலையை அளபெடை வந்த செய்யுட்களிற் காண லாம். பின்னைய நிலையை அளபெடையின்றி வந்த செய்யுட்களில் காணலாம். எனவே செய்யுளில் எழுத்துக்கள் பலவும் சேர்ந்து தரும் ஓசையையே ஈண்டும் மாத்திரை என்ருர் என்றல் தகும். பேராசிரியரும் செய்யுள் முழு வதையும் படிக்குமிடத்து அதன்கண் விரவிக் கிடக்கும் ஓசையே மாத் திரை எனப்படும் என்பர்.''

என பண்டித வித்துவான் கு. சுந்தரமூர்த்தியவர்கள்,[3] எழுத்திலக்கணத்தின் கூறுகிய மாத்திரை யாப்பியலில் ஓசைக்கேற்ப விளங்கிக் கொள்ளப்படுவதை உரையாசிரியர்களின் கருத்தைத் தழுவி எடுத்துக்காட்டினர். சொல்லிலக்க ணத்தில் உருபுமயக்கம், வினையெச்சம் ஆகிய கூறுகள் தொடர்பாகக் கூறப்பட்ட இலக்கண மரபுரீதியான கருத்துக்கள் பல யாப்பியலில் 'ஓசை' சிதையாமையை நோக்காகக் கொண்டமையை பண்டிதர் கா. வீரகத்தியவர்கள் ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.[5]

பத்தொன்பதாம் நூற்றுண்டுவரை தமிழிலக்கியத்தின் பிரதான ஊடக மாகத் திகழ்ந்த 'பாட்டு' வடிவத்தின் அடிப்படையான இந்த ஓசை, தமிழிலக் கியப் பரப்பிலும் யாப்பிலக்கணக் கணிப்பிலும் பயின்றுள்ள முறைமை தொடர் பாகத் தனியானதோர் ஆய்வு முயற்சிக்கு இடமுண்டு. அத்தகைய ஆய்வு மேற் கொள்ளப்படும் பொழுது கவனத்துக்கு வரக்கூடிய அம்சங்கள் தொடர்பாகச் சில கருத்துக்களை இனி அவதானிக்கலாம்.

எழுத்து வழக்குடைய எல்லா மொழிகளிலும் உரைநடையை விட 'பாட்டு' வடிவமே பழைமையான தென்பது ஆய்வாளர் கருத்தாகும். தமிழ் மொழியும் இதற்கு விலக்கல்ல எனத் தக்கவகையில் காலவெள்ளத்தால் அழிந்தன போக எஞ்சியுள்ளவையாக எமக்கு இன்று கிடைக்கும் பழந்தமிழ் நூல்கள் பாட்டுக்களே. இவற்றை மட்டும் ஆதாரமாகக் கொள்ளலாமா என்பது தனி ஆய்வுக்குரியது. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்ற தொகுதிகளாக எமக்குக் கிடைக்கும் பாட்டுக்களின் பல வகைகள், அவற்றை அடுத்து எழுந்திருக்கலாம் என்று கொள் ளத்தக்க தொல்காப்பியத்திலே கூறப்பட்ட இலக்கணத்தின்படி ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியனவாகக் கொள்ளப்படுகின்றன. தொல்காப்பியர் தமக்கு முற்பட்ட இலக்கணநூலார் கருத்துக்கள் பலவற்றையும் தழுவிவந்துள்ளமை தெளிவு. அவ்விலக்கணநூல்கள் பற்றி அறிய முடியாத இன்றைய நிலையில் தொல் காப்பியர் ஆதாரம் ஒன்றிலேயே காலூன்றி நிற்க வேண்டியுள்ளது.

தொல்காப்பியர் பாக்களை நான்கு முக்கிய வகைகளாகக் குறிப்பிட்டு விளக்குகிறார். இந்த நான்கு வகைப் பாக்களில் மூன்றனுக்கு ஓசை அடிப்படை யைச் சுட்டியுள்ளார்.

''அகவலென்ப தாசிரியம்மே'' (தொல். செய். 81)
''துள்ளலோசை கலியென மொழிப'' (தொல். செய். 83)
''தூங்கலோசை வஞ்சியா கும்'' (தொல். செய். 84)

என ஆசிரியம், கலி, வஞ்சிக்கு ஓசை கூறியவர் வெண்பாவுக்கு நேரடியாக ஓசை சுட்டவில்லை. ''அஃதான்றென்ப வெண்பா யாப்பே'' என்று (செய். 82) அகவ லின்று வேறுபடுத்திமட்டும் காட்டுகிறார். பேராசிரியரும் அவரைத் தழுவி நச்சி னார்க்கினியரும் ''செப்பிக்கூறும் ஓசை'' — செப்பலோசை — வெண்பாவெனப்படும், என விளக்கம் தருகின்றனர். சங்கயாப்பு, காக்கைபாடினியம் அவிநயம், யாப்பருங் கலம், காரிகை முதலியவற்றிலேயே வெண்பாவுக்குரியதாக செப்பலோசை கூறப் பட்டமையைக் கருத்திற் கொண்டு பொருத்தம் நோக்கிப் பேராசிரியரும் நச்சினார்க் கினியரும் இவ்வாறு கொண்டனர் எனக் கருதலாம். டாக்டர் ந. வீ. செயராமன் அவர்கள் செப்பலோசை என்ற கருத்தை மறுத்து 'அஃதான்று' எனத் தொல்காப் பியர் சுட்டியது வெள்ளோசையை' என்பர்.[5]

அகவுதல் என்பது மற்றவர்களது கவனத்தை ஈர்த்தல் — அழைத்தல் — எனப் பொருள்படும். பூர்வீகப் பாடல்கள் பலவும் இப்பண்பில் அமைந்தன என்பது சி. எம். பௌரா அவர்களது கருத்து.[6] தமிழுக்கும் இது பொருந்தும். தமிழ் மக்கள் கூட்டுச் சமூகமாக வாழ்ந்த காலப்பகுதியில் ஒருவரையொருவர் அழைத்து — முன்னிருத்திப் பாடிய பாடல்கள் அகவலோசையில் அமைந்தன எனக் கருதலாம். அகவன் மகள் பாட்டுப் பாடுவதான செய்தியும் குறுந்தொகையிற் காணப்படுகின்றது. வழக்கில் இருந்த இந்த ஓசையின் அடியாக ஆசிரியப் பாவானது உருவான வரலாறு ஆய்வுக்குரியதொன்றாகும். ஆசிரியம் என்ற சொல் ''ஆச்சார்ய'' என்ற சமஸ்கிருதத்தினின்று பிராகிருதம் ஊடாக தமிழில் வந்தது.*

* இக்கருத்து பொருந்தாது. —பதிப்பாசிரியர்

குருவைக் குறிப்பது. ஆசிரியர் பா ஆசிரியப்பா ஆயிற்றென்றால் வாய்மொழி வழக்கிலிருந்த அகவலோசைப் பாட்டு வடிவம் மொழி வளர்ச்சியின் ஒரு கட்டத்தில் சமூகத்திற்கு குருவாக — கல்வி அறிவு போதிப்பவராகக் கருதப்பட்ட சமூக அந்தஸ்துடையரால் செப்பமுற அமைக்கப்பட்டிருக்கலாம்.

கூட்டுச் சமூக வாழ்க்கையில் சமூக நிகழ்ச்சிகளாக அமைந்த வள்ளை, குரவை, துணங்கை ஆகிய ஆட்டவகைகளிற் பயின்ற ஆட்டத்திற்கேற்ற துள்ளலோசைப் பண்பு கொண்ட பாடல்களில் இருந்து கலியென்னும் பாவடிவம் உருவாயிற்று எனலாம். கலிப்பாடல்கட்கும் நாடக — ஆட்ட வகைகளுக்குமிடையிலுள்ள உறவை டாக்டர் மார் அவர்களது கருத்தைத் தழுவி டாக்டர் கா. சிவத்தம்பி விரிவாக ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

வாய் மொழியாக வழங்கிய பாடல்கள் வரிவடிவம் பெறும்போது முதல் முயற்சியிலேயே முழுவளர்ச்சி பெற்றுவிடுவதில்லை. இடைஇடையே சொற்கள் கூடியும் குறைந்தும் இசையால் நிரவப்படுதல் முதல் நிலை. ஓசைச் செப்பமுடன் அடிசீரளவுகள் நிரம்பப் பெறுவது இறுதிநிலை. ஆசிரியப் பாவிலும் கலிப்பாவிலும் இந்த வளர்ச்சிக் கட்டங்களை இனங் கண்டு கொள்வதற்கு சங்கநூல்களான பாட்டும் தொகையும் துணைபுரிகின்றன.

சிறிய கட்பெறினேயெமக்கீயு மன்னே
பெரிய கட் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந்துண்ணுமன்னே

என அமையும் புறநானூற்றுப் பாடல் (235) ஆசிரியப்பாவின் ஆரம்பநிலை.

வேரல்வேலி வேர்க் கோட்பலவின்
சாரனுட செவ்வியை ஆகுமதி.

எனத் தொடங்கி எல்லா அடியுமொத்து முடியும் ஆசிரியப்பா (குறுந்தொகை 18) அதன் நிறை நிலை.

இறுதியடி முச்சீரால் அமையும் நேரிசை என்ற நிலை ஆசிரியப்பாவின் குறிப்பிடத்தக்க வொரு வளர்ச்சிக்கட்டம். அடிவரையறை இன்றிச் செல்வதால் பாடல் முடியப் போகின்ற தென்பதைச் சுட்டும் குறியான ஈற்றடி குறைந்தொலித்தலின் அமைதியால் நேரிசை ஆசிரியப்பா ஆசிரியப் பாவின் சிறப்பு வகையாகப் பெருமை பெற்றது எனலாம். மேற்படி ஆசிரியப் பாக்களின் அமைதியைத் தொல்காப்பியர் நேரடியாக வகைப்படுத்திச் சுட்டவில்லை. காக்கைப்பாடினியம், சிறு காக்கைப்பாடினியம், அவிநயம், மயேச்சுரர்நூல் ஆகியவற்றைத் தழுவி யாப்பருங்கலம், காரிகை ஆகியன முறையே இணைக்குறள், நிலைமண்டிலம், நேரிசை என வகைப்படுகின்றன. இவற்றுடன் அடிமறி மண்டிலம் எனப் பொருளமைதி சிதையாமல் அடிகளை மாற்றிக்கொள்ளும் ஆசிரியப்பா வகையையும் காட்டுகின்றன. ஆசிரியப்பாவின் சமாந்தரமான நான்கு வகைகள் என்று இவற்றைக் கொள்ளாமல் வளர்ச்சிக் கட்டங்கள் என்று கொள்வது ஓசையினடியாகப் பா உருவாகி வளர்ந்த வரலாற்றுப் போக்கினை இனங் காணத் துணைபுரியலாம்.

கலிப்பாவிலே ''கூற்றும் மாற்றமும்'' ஆக அமையும் 'உறழ்கலி' ஆரம்பநிலை எனலாம். நாடகப் பாத்திரங்களின் உரையாடலாக அமையும் இந்த பாநிலையின் அடுத்த கட்ட வளர்ச்சி பல உறுப்புக்களுடன் ஓசை கூடியும் குறைந்தும் அமையும் கொச்சகக்கலி எனப்படும் நிலை. ஓசைச் செப்பமுடன் அமைந்த நிலையே ஒத்தாழி சைக்கலி எனக் கொள்வது பொருந்தும். உறழ் கலிப்பாவிலும் கொச்சகக் கலிப் பாவிலும் கூற்றுக்களாக அமைந்தவற்றிலிருந்து வெண்பா என்ற வடிவம் கூர்படை வதை இனங்கண்டுகொள்ளமுடிகின்றது.

''ஒருஉநீஎங்கூந்தல் கொள்ளல் யாம் நின்னை
வெரூஉதூங் காணுங்கடை'' — (கலித்தொகை 87, 1-2, வரி).

''நின்னை நின்பெண்டிர் புலந்தனவும் நீயவர்
முன்னடியொல்கி உணர்த்தினவும் பன்மாண்
கனவித் தலை யிட்டு ரையல் சினைஇயான்
செய்வதி லென்பதோ கூறு'' —(கலித்தொகை 92. 55-58 வரி)

குறள், நேரிசை வகைகளில் அடக்கக்கூடிய மேற்படி வெண்பா அமைப்பு ஆசிரியம், கலி ஆகியவற்றைப் போல நேரடியாக வாய்மொழி வழக்கினின்று உருவாகாமல் இலக்கிய வழக்குப் பயிற்சியில் முகிழ்ந்தது என்று கொள்ளலாமா என்பது யாப் பியலறிஞர்கள் சிந்திக்க வேண்டிய தொன்றுகும். தொல்காப்பியர் வெண்பா வுக்கு நேரடியாக ஓசை சுட்டாமைக்கு இது ஒரு காரணமாக இருக்குமா என்பதை யும் தொடர்பு படுத்தி நோக்கலாம்.

தூங்கலோசையெனப்பட்ட வஞ்சிப்பா சங்கநூல்களிற் சிறுபான்மை பயின் றுள்ளது. போர்க்களக் காட்சிகளை விளக்கும் தேவைக்கும் (புறம் 4) தொடர்ந்து பல தகவல்களை நிரல்படுத்திக் கூறவும் (புறம் 239) இது பயன்பட்டது எனத் தெரிகிறது. தொல்காப்பியர் வஞ்சிப்பாவை ஆசிரியத்துள் அடக்குவர். (செய். 107, 108) தனிவளர்ச்சி பெருத இந்தப் பாவகை ஆசிரியப்பாவின் வளர்ச்சி நிலையின் ஒரு கட்டத்தைக் காட்டுகின்றது எனக் கொள்ளலாமா? என்பது ஆய்வுக் குரியது.

கலிப்பாவிலிருந்து கிளைத்ததாக நாம் கருதக்கூடிய வெண்பாவுக்கு தொல் காப்பியர் பாவகையில் முக்கிய இடம் கொடுத்த போதும் அதற்கு ஓசை சுட்டிக் கூருமைக்குரிய காரணம் புரியாத புதிராகவேயுள்ளது. தமது காலப் பகுதியில் கூர்ப்படைந்து வந்த அந்த வடிவத்தை ஏனைய வாய்மொழி வழக்கில் பயின்று வந்த ஓசைகளோடு ஒன்ருக ஓசை கற்பிக்கலாகாதெனப் பிரித்து வைத்தாரா என்ற ஊகம் எழுகின்றது. அப்படிப் பிரித்து நோக்கியிருந்தால் கலிப்பாவையும் வெண் பாவில் ஏன் அடக்க முயன்றுர் என்பதற்கு விடை காணப்படவேண்டும். வெண்பா வடிவம் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களிலே குறுகிய காலப் பகுதியில் முழு வளர்ச்சி பெற்று தமிழின் மிகக்கட்டுக்கோப்பான — செப்பமான வடிவமாகி விட்டது என்பது தெரிகின்றது. மாணவரை முன்னிறுத்தி ஆசிரியர் போதிப்பதற்கேற்ற அதன் பயன் பாட்டுத் திறனைக் கண்டபின் வந்த யாப்பு நூலார் பொருத்தம் நோக்கி செப்பலோசை எனப் பெயரிட்டதோடு சீர்தளைக் கட்டுப்பாடும் வரையறுத்து அதன் தூய்மையைப் பேண முயன்றனர் எனலாம். இச்செப்பலோசையை

மேலும் நுட்பமாக ஏந்திசை, தூங்கிசை, ஒழுகிசை என சங்க யாப்பு என்ற நூல் எடுத்து விளக்குகின்றது. தொடர்ந்து வெண்பாவுக்கு செப்பலோசை என்ற பண்பு யாப்பிலக்கணத்தில் நிலைத்துவிட்டது.

> ''அகவிக்கூறுது ஒருவற்கொருவன் இயல்புவகையானே ஒரு பொருண்மை கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசையெனப் படும்.''

எனப் பேராசிரியர் தரும் விளக்கம் வெண்பாவின் ஆற்றலையும் பயன்பாட்டையும் கருத்திற் கொண்டு தரப்பட்டதெனலாம்.

வெண்பாவின் ஓசையை மூவகையாகப் பகுத்தமை போலவே தொல்காப்பியர் சுட்டிய அகவல், துள்ளல், தூங்கல் ஓசைகளையும், ஒவ்வொன்றையும் மூன்று, மூன்று வகையாகப் பின்வந்த யாப்பு நூலார் வகுத்தனர். மேற்படி பகுப்புக்கள் சீர், தளை அமைதியினடிப்படையில் அமைந்தன.

தொல்காப்பியர் பாட்டிற் பயிலும் ஒலிநுட்பங்களை இருபது வகை வண்ணங்களாக எடுத்தோதினுர். இவை பின்வந்த அபிநயரும் யாப்பருங்கல விருத்தியுரைகாரரும் நூருக விரித்தோதினர். அன்றியும் யாப்பருங்கல விருத்தியில் பல்வகைச் சந்தங்கள் பற்றிய விளக்கங்கள் உள்ளன.

ஓசைபற்றிய சிந்தனை இவ்வளவு நுட்பமாக விரிந்து வளர்ச்சி யடைந்தமைக்குப் பொருள் மரபில் நிகழ்ந்த மாற்றங்கள் முக்கிய காரணம் என்பதை விளக்க வேண்டியதில்லை. தொல்காப்பியர் காலப் பகுதியில் கருத்துத் தொடர்புக்கும் உணர்ச்சிப் பரிமாற்றங்களுக்கும் பயன்பட்ட ஓசைகள் அடுத்து பக்திப் பிரசாரத்துக்கும் காவியப் பொருளை விரித்துரைப்பதற்கும் தக்க வகையில் பரிணமம் பெற வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தத் தேவைகளே பாவினம் எனப்படும் தாழிசை, துறை, விருத்தம் என்ற புதிய 'பாட்டு' வகைகளாக யாப்பியற் பரிணமம் பெற்றன. இத்தகைய பரிணமங்கள் தமிழ் யாப்பியலில் இன்று வரை நிகழ்கின்றன. சிந்து, கும்மி, கீர்த்தனை முதல் புதுக்கவிதையீருக இத்தகைய பரிணமங்களைக் காணலாம்.

மொழியிலே யாப்பு வடிவம் தொடர்பான சிந்தனை மூன்று சந்தர்ப்பங்களில் முனைப்புப் பெறுவதுண்டு. முதலாவது, பொருள்மரபில் தேக்கம் ஏற்படும் பொழுது; இரண்டாவது, புதிய பொருளை ஏலவேயுள்ள யாப்பு வடிவத்தில் வெளியிடமுடியாத வேளைகளில்; மூன்ருவது, பிறமொழிகளிலிருந்து பெறப்படும் இலக்கிய வடிவங்களை அறிமுகப்படுத்தும் சந்தர்ப்பங்களில். இத்தகைய சந்தர்ப்பங்களில் ஆற்றல் வாய்ந்த புலவன் ஏலவேயுள்ள வடிவத்தைத் தன் ஆற்றலுக்கேற்ப நெகிழ்த்துப் பயன்படுத்துவான், அல்லது நாட்டு மக்கள் மத்தியில் வழங்கும் ஓசைவகைகளை எழுத்திலக்கியத்துக்கு இட்டு வந்து புதிய யாப்பு வடிவங்களைப் படைப்பான். புலவன் புலப்படுத்த விழைந்த கருத்து, அதன் மூலம் வாசகனது உள்ளத்தில் நிகழ்த்த விரும்பிய உணர்வுத்தாகம், வாசகனது சமுதாய அறிவுச் சூழல் என்பன செய்யுளிற் பயிலும் ஓசையைத் தீர்மானிக்கின்றன.

நாட்டார் வழக்கியற் கலைமரபுகளிலிருந்து நுட்பக் கலைமரபுகள் வளர்ச்சி யடைவது வரலாற்று நியதி. இவ்வளர்ச்சி ஒரு முனைப்பட்டதாக மட்டும் அமைவதில்லை. தமிழ் மக்கள் மத்தியில் வாய்மொழிவழக்கிலிருந்த ஓசைகள் ஆசிரியப் பாவாகவும் கலிப்பாவாகவும் வஞ்சிப்பாவாகவும் இயற்றமிழ் யாப்பு வடிவம் பெற்று வந்த காலப்பகுதியில் செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகு மண்டிலம் முதலிய இசைத்தமிழ், நாடகத் தமிழ் வகைகளாகவும் வளர்ச்சி பெற்றுள்ளன. இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் இம்மூவகை வளர்ச்சியையும் பிரதிபலித்தார். பின் வந்த நாயன்மாரும் ஆழ்வார்களும் பத்தியியக்கத்திற்கு இயல் இசை இரண்டையும் இணைத்துத் பயன்படுத்தினர். இத்தகைய முயற்சிகளால் புதிய பாட்டு வடிவங்கள் பெருகின. இவற்றுக்கு இலக்கண அமைதி காண வேண்டிய நிலையில் முப்பதுக்கு மேற்பட்ட யாப்பிலக்கண நூல்கள் எழுந்தனவென்பதை கி. பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த யாப்பருங்கல விருத்தியுரை காட்டும்.

> ''தொல்காப்பியத்தின் பின் யாப்பருங்கலத்துக்கு முந்திய காலம் வரையில், பெருநூல்கள் செய்த பேராசிரியர்கள் நீங்கலாக ஏனையோர் செய்த பாடல்கள் பலவும் பலவகையான யாப்பமைதிகளுள் அடங்கியிருந்தன என்றும், பல பாடல்கள் யாப்பமைதிக்குப் பொருந்தாமல் இருந்தன என்றும், இவர் மிகவும் முயன்று பல பாடல்களை யாப்பிலக்கணத்துக்குப் பொருந்திக் காட்டச் செய்யும் முயற்சியால் நன்கு விளங்குகிறது. ஆனால் இவ்வாறு இவர் கருதுகின்ற பாடல்களும் நூல்களும் பிற்காலத்தில் வழக்கிழந்தன. இவர் காலத்தில் அவை இருந்தன போலும். ''இவ்வோசை விகற்ப மெல்லாம் வல்லார் வாய்க் கேட்பினல்லது காட்டலாகா என்றறிக (பக். 219) வல்லார் வாய்க் கேட்டுணர்க'' (பக். 282, 443) என்பன போன்ற கூற்றுக்களைக் காண்க.''

என யாப்பருங்கல விருத்தியுரை தொடர்பாகக் கூறுகையில் மு. அருணாசலம் அவர்கள்[7] சுட்டிக் காட்டியுள்ளவை ஓசைப்பரிணாமங்கள் யாப்பியல் விளைவித்த தாக்கத்தை உணர்த்தும்.

இவ்வோசைகளையும் வடிவங்களையும் ஏலவே தீர்மானிக்கப்பட்டு விட்ட யாப்பியலில் அடக்க முனைந்தவர்களில் ஒரு சாரார் கலிப்பாவின் ஒருவகையான கொச்சகப் பாவில் அமைதிகண்டனர். இன்னொரு சாரார் 'பா' வகைகளுக்கு இனங்களாகப் புதிய பெயரிட்டனர்; தாழிசை, துறை, விருத்தம் ஆகிய இம்மூன்றனுள் எல்லா வடிவ வேறுபாடுகளுக்கும் அமைதி காண முயன்றனர். பாவினப் பகுப்பின் நிறைவின்மையையும் கலிப்பாவில் அடக்க முடியாமையையும் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளார்.[8] யாப்பருங்கல விருத்தியுரையிலே சந்தம், தாண்டகம் ஆகியவற்றினைப் பற்றிய விளக்கங்கள் சமஸ்கிருத யாப்பியல் அலகுகளுடன் எடுத்துக்காட்டப்படுகின்றன.[9] யாப்பருங்கலத்துக்கு முற்பட்ட காலத்தில் சமஸ்கிருத ஓசையும் யாப்பும் தமிழிற் பயின்றுள்ளமைக்கு இவை ஆதாரமாகின்றன. இவ்வோசைக் கலப்பும் விரிவான ஆய்வுக்குரிய தொன்றாகும்.

இலக்கியங்களின் பயில்நிலைச் சூழலுக்கு ஏற்ப யாப்பிற்பயிலும் ஓசை தீர்மானிக்கப்படுவதைக் காப்பிய காலத்திலிருந்து இன்றுவரையிலான யாப்பு வடிவ வளர்ச்சியில் தெளிவாகக் காண முடிகின்றது. அரசவையிலே கற்றறிந்த புலவர்களையும் சமஸ்தானங்களின் வித்துவ விற்பன்னர்களையும் தனது வாசகர் வட்டமாகக் கருதி காவியமும் சிற்றிலக்கியமும் படைக்கும் புலவன் ஏற்கெனவே இலக்கண அமைதி பெற்றிருந்த யாப்பு வடிவத்தில் தனது சொல்லாட்சித் திறனால் புதிய ஓசை நுட்பங்களைப் புகுத்தி மரபு தழுவிய தனது மொழியாற்றலைப் புலப்படுத்துவான். கவிச்சக்கரவர்த்தி கம்பன் கையாண்ட சந்தபேதங்களை — ஓசைவிகற்பங்களை — இவ்வாற்றலின் கொடுமுடி எனலாம். நாயக்கர் மன்னர் காலப் பாடல்கள் பலவற்றிலும் இந்த ஓசைவீச்சுக்களைக் காணலாம்.

இலக்கியத்திற்கான பொருளை நாட்டு மக்களின் அன்றாட வாழ்க்கை நடைமுறைகளிலிருந்து பெறும் புலவன் அந்த மக்களது ரசனையை நோக்காகக் கொண்டு அவர்கள் மத்தியில் வழங்கும் இசை, நாடக ஓசைகளைப் பாடலிற் கையாளுவான். இதனையே குறவஞ்சி பள்ளு முதலிய இலக்கிய வடிவங்களிற் பயிலும் சிந்துப் பாடல்களின் விகற்பங்களிற் காண்கிறோம். நாட்டு மக்கள் மத்தியில் வழக்கிலிருந்த ஆட்ட வகைகளிலிருந்தே கும்மி முதலியன அறிமுகமாயின. ஆலயங்களுக்குக் காவடி, பால்சொம்பு, என்பவற்றைத் தாங்கி அடியார்கள் வழிநடைசெய்து ஆடிப்பாடிச் செல்லும் சமூக நிகழ்ச்சியின் பகைப்புலத்திலேயே அருணகிரிநாதரின் தாளகதியிலமைந்த திருப்புகழையும் அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்தையும் பொருத்தி நோக்க வேண்டும். வாய்மொழி இசையின் நுட்பக்கலைக் கூர்ப்பான கருநாடக இசையறிவுச் சூழலின் வளர்ச்சியைக் கருத்திற் கொள்ளும் பொழுதே கீர்த்தனை என்ற யாப்பு வடிவத்தையும் அதனுடன் தொடர்புடைய கதாகாலட்சேப முறையையும் இனங்கண்டுகொள்ள முடியும்.

இலக்கிய வெளிப்பாட்டுக்கான பிரதான ஊடகமாகப் பாட்டு வடிவம் இருந்த சூழ்நிலை மாற்றமடைந்து உரைநடை முதன்மை பெற்று விட்ட, கடந்த ஒரு நூற்றாண்டுக்கால வரலாற்றுப் போக்கில் உரைநடையின் அடிப்படையான பேச்சோசைப் பண்பு 'பாட்டு' வடிவத்தின் அமைப்பிலே குறிப்பிடத்தக்க தாக்கத்தை விளைவித்து விட்டது. ஏட்டைவிட்டு அச்சுவாகனமேறிய சூழலையும் இதிற் பொருத்தி நோக்கவேண்டும். வசன கவிதை, புதுக்கவிதை என்ற பரிணாமங்களுக்கு இதுவே அடிப்படை. மரபுரீதியான யாப்புவடிவங்களைப் பேச்சோசையுடன் கையாளும் திறன் இக்காலக் கவிஞர்கள் பலரிடம் காணப்படுகிறது. மாறிவரும் ஓசைத்தேவைகளுக்கு மரபினின்று வழுவாது அமைதிகாணும் இத்திறன் காலஞ்சென்ற மஹாகவி, நீலாவணன் முதலிய ஈழத்துக் கவிஞர்களிடம் சிறப்பாக அமைந்திருந்தது. இ. முருகையன் முதல் புலவர் ம. பார்வதிநாதசிவம் வரையில் இவ்வாற்றல் வாய்ந்த ஒரு பெருங்கவிஞர் பட்டியலை நாம் ஈழத்தில் தயாரித்து விடக் கூடிய வரையில் இன்றைய யாப்புலகில் பேச்சோசைப் பண்பு முதன்மை பெற்றுள்ளது.

**சான்றுதாரங்கள்**

*1.* தொல்காப்பியம் செய்யுளியல் *1*-ம் சூத்திர உரை. கழக வெளியீடு *1972*. பக். *114-115*. *2*. தொல்காப்பிய சூத்திரவிருத்தி - கழகவெளியீடு, *1964* பக். *33*. *3*. தொல்காப்பியம். செய்யுளியல் நச்சினார்க்கினியருரைக் கான விளக்கவுரை. கழக வெளியீடு, *1965*, பக். *279*. *4*. சொல்லிலக்கணத்தில் யாப்பிலக்கணத்தின் செல்வாக்கு - சென்னையில் நடைபெற்ற *2*-வது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டுக் கருத்தரங்குக் கட்டுரை. வெளியீடு: கரவெட்டி: வாணிக்கலைக்கழகம், *1968*. *5*. யாப்பியல் திறனாய்வு சிதம்பரம்: மணிவாசகர் நூலகம். *1977* பக். *83-84*. *6*. C. M. Bowra: Primitive song. P. P. 90–91 *7*. தமிழிலக்கிய வரலாறு *11*-ம் நூற்றாண்டு, மாயூரம்: காந்திவித்தியாலயம் *1971* — பக். *177*. *8*. 'பாவின் இனங்களா?' இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற *7*-வது கருத்தரங்கு ஆய்வுக் கோவை. (தொகுதி *2*) அண்ணாமலைநகர்: *1975*. பக். *574-579*. *9*. மே. வீ. வேணுகோபாலபிள்ளை பதிப்பு. சென்னை *1960*. பக். *367*.

# ஒரு, ஓர்

**(சொல்லாராய்ச்சி)**

டாக்டர் **வெ. தெ. மாணிக்கம்**, எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை

ஒன்று என்பது தமிழில் வழங்கும் எண்ணுப் பெயர்களுள் முதலாவது. அது பெயரடையாக வரும்போது 'ஒரு' எனவும், 'ஓர்' எனவும் மாறும். ஒரு, ஓர் என்னும் எண்ணுப் பெயரடைகளை வழங்கும் முறையில் இக்காலத் தமிழாசிரியர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், திரைப்படக் கலைஞர்கள் ஆகியவர்களுக்கிடையில் வேறுபாடு காணப்படுகின்றது. பழங்காலந் தொட்டு இன்றுவரை இச்சொற்கள் வழங்கிவரும் முறையிற் காணப்பெறும் நுட்பங்களை ஆராய்ந்து நிறுவுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

வருமொழி முதலில் உயிரெழுத்து இருந்தால் 'ஓர்' என்னும் சொல்லையும், மெய்யெழுத்து இருந்தால் 'ஒரு' என்னும் சொல்லையும் வழங்குவது இயல்பு. ஓரிடம், ஒருமொழி என்பன போன்று அஃது அமையும். இவ்வியல்புக்கு மாறாக, ஒருஇடம் ஓர்மொழி என்பன போன்ற வழக்குகளும் தமிழிற் காணப்படுகின்றன.

*திரைப்படம்:*

அன்புக்கு ஒரு அண்ணன்
அவளுக்கென்று ஓர் மனம்
ஒரு வீடு ஒரு உலகம்.
இதயத்தில் ஒரு இடம்.
பகலில் ஒரு இரவு.

*நூற்பெயர்:*

ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்.
ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது.
அவளுக்கென்று ஒரு இதயம்.

இவ்வாறு (1) முறைமாற்றி வழங்குவதில் தவறென்றும் இல்லை என்றும், (2) இவ்வாறுதான் வழங்கவேண்டும் என்று வரையறை செய்துவிடமுடியாதென்றும், (3) இவ்வழக்கு ஆங்கிலத்தில் இருந்து ஏற்பட்டதே தவிரப் பழங்காலத் தமிழிலக்கியங்களில் இல்லை என்றும், (4) உரைநடை வளர்ச்சியே ஆங்கிலத்தின் அடிப்படையில் வந்ததாகலின் a, an என்ற அடிப்படையிலேயே ஒரு, ஓர் என்பன வந்தன என்றும் பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன் அவர்கள் கருத்துரைத்துள்ளார்.[1]

ஆனல், ஓரிடம், ஒருமொழி என்ற முறையிலேயே இச்சொற்களை வழங்குவது தான் மரபு என்பதைத் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் பல இடங்களில் – ஒன்பது நூற்பாக்களில் தெளிவாகக் கூறியுள்ளார்.[2] இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புவது முறையாதலின், தொல்காப்பியர் காலத்தும், அவருக்கு முன்னரும் இவ்வழக்குகள் தெளிவாகப் போற்றப்பட்டன என்பது வெள்ளிடை மலை. எனவே, திரு மகாதேவன் அவர்களுடைய முதல் மூன்று காரணங்களும் ஏற்புடையனவாகா.

a, an, என்னும் ஆங்கில வழக்கை அடிப்படையாகக் கொண்டே தமிழில் ஒரு, ஓர் என்பன அமைந்தன என்னும் கருத்து முற்றும் பொருத்தமற்றது. தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு ஆங்கிலம் துணைநின்றது என்பது உண்மையே; ஆனல் தமிழின் உரைநடையின் தோற்றத்துக்கு காரணம் ஆங்கிலம் அன்று. தொல் காப்பியர் காலத்திலேயே தமிழ் உரைநடை இருந்தது. தொல்காப்பிய வழக்கு வருமாறு:–

| ஒரு | ஓர் |
|---|---|
| ஒரு நெறி *(1427)* | ஓர் அசை *(1313)* |
| ஒரு பெயர் *(532)* | ஓர் அளபு *(3, 771)* |
| ஒரு பொருள் *(525)* | ஓர் ஆங்கு *(726)* |
| ஒரு வழி *(1517)* | ஓர் இயற்று *(386)* |
| ஒரு வினை *(529)* | ஓர் எழுத்து *(5, 226, 267)* |

தொல்காப்பியர் ஒரு, ஓர் என்னும் எண்ணுப் பெயரடைகளை ஒரே தொடரில் கையாண்டுள்ள நுணுக்கமும் நோக்குதற்குரியது.

'நெட்டெழுத் தேழே **ஓரெழுத் தொருமொழி**' *(43)*
'**ஓரெழுத் தொருமொழி** ஈரெழுத் தொருமொழி' *(45)*
'**ஓரினப்** பொருளை **ஒருவழி** வைப்பது' *(1426)*
'**ஒருநெறிப்** பட்டாங்கு **ஓரியல்** முடியும் *(1457)*

தொல்காப்பியர் காலத்தையும், தமிழ்மொழிக்கண் ஆங்கில உரைநடையின் தாக்கம் ஏற்பட்ட காலத்தையும் எண்ணிப் பார்த்தால் பேராசிரியர் மகாதேவனவர்களுடைய கருத்தில் உள்ள முரண்பாடு புலனகும்.

மேலும், 'ஓர்' என்னும் சொல் எண்ணுப்பொருள் தருவதோடு அமையாது ஒப்பற்ற, சிறந்த, புதுமையான, தனித்தன்மையான, எந்தவிதமான, இழிந்த, கடுமையான, குறிப்பிட்ட, இன்னுமொன்று, வருத்துகிற, ஒரே முதலிய பிற பொருள்களையும் தருவதாக உள்ளது. அதுவுமன்றி அச்சொல் அசைநிலைப் பொருளிலும், மிகுதிப் பொருளிலும், அச்சப்பொருளிலும் வருவதுண்டு. புலவர்கள் செய்யுளில் சீர், தளை முதலியன சிதையாதவாறு, யாப்பமைதியைக் கருத்திற் கொண்டு, 'ஒரு' என்னும் எண்ணுப் பெயரைக் கையாளவேண்டிய இடத்தில்

'ஓர்' என்னும் சொல்லேயும் கையாண்டுள்ளனர். இக்கருத்துக்களையெல்லாம் மனத்துட்கொண்டால், ஒரு, ஓர் சொல்லாட்சி பற்றி இன்றுவரை நிகழ்ந்துவரும் ஐயங்கள் யாவும் அகன்றுவிடும்.

ஒப்பற்ற, சிறந்த:—

''எமது **முண்டோர் மதிநாள்** திங்கள்'' — நற்றிணை 62:7.
''சிறைப்பிடித்தா **ளோர்பொன்னங்** கொம்பு'' — பரிபாடல் 7:பாடல் 7:56
''உலக மொருநிறையாத் **தானோர் நிறையா**'' —
— பரிபாடல் திரட்டு 6: 1

' **பிறிதோர் சொல்**'' — திருக்குறள் 645
''சிலப்பதி காரமென்றோர் **மணியாரம்**'' — பாரதியார் கவிதைகள் 20:7.

புதுமையான, வழக்கத்திற்கு மாறான:

''ஓரேன் யானுமோர் **பெற்றி** மேலிட்டு'' — குறுந்தொகை 28:2
''செய்தனெம் மன்றவோர் **பகைதரு** நட்பே'' — குறுந்தொகை 304:8
''யாம்வந்து காண்பதோர் **பருவ மாயின்**'' — ஐங்குறுநூறு 237: 2
''**ஓர்குண்டலன்**'' — சூடாமணி நிகண்டு 1:10

தனித்தன்மையான:—

''காப்பதோர் **திறனுண்டேல்**'' — கலித்தொகை 38: 13: 17.

எந்தவிதமான:—

''ஒருநாள் நக்கதோர், **பழியு** மிலமே'' — குறுந்தொகை 32: 4-5

இழிந்த:—

''காணு தீத்த இப்பொருட்கு **யானோர்**
**வாணிகப்** பரிசிலன் அல்லேன்'' — புறநானூறு 208: 6-7.
''உருவிலே ஒழுங்கில் லாத
**ஓர்மொழி** புகுதல் வேண்டேன்''[3]

கடுமையான, கொடிய:—

''அதிர வருவதோர் **நோய்**'' — திருக்குறள் 429.

குறிப்பிட்ட:—

''**தனித்தோர் தேர்வந்து** பெயர்ந்தது'' — குறுந்தொகை 246: 3-4.
''நிலமணல் கொட்குமோர் **தேருண்டு**'' — அகநானூறு 200: 16

இன்னுமொன்று:—

''கண்டை இஃதோர்**சொல்**'' — கலித்தொகை 105: 57

வருத்துகிற:—

''வெந்ததோர் **புண்ணின்**'' — கலித்தொகை 120: 17

ஒரே:—

''ஓர்குடியிற் கொண்டோன்'' — பிங்கல நிகண்டு 899, சூடாமணி நிகண்டு 2: 77: 2.

அசைநிலை:—

''ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ'' — அகநானூறு 86:22
''கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை'' —சிலப்பதிகாரம் 2:37.
''நிலவரை யிறந்தோர் முடங்குநா நீட்டும்'' மணிமேகலை 5:108.

மிகுதிப்பொருள்:—

''அன்ஞய்.' இவஞேர் இளமா ஞக்கன்'' — குறுந்தொகை 33:1
''கனவெனப் பட்டதோர் காரிகை நீர்த்தே'' — கலித்தொகை 92:2.
''குன்றத் தன்னதோர் பெருங்களிறு'' — புறநானூறு 140: 7-8.

அச்சப்பொருள்:—

''காண்டற் கரியதோர் காடு'' — நாலடியார் 361:4.

இசைநிறை (யாப்பமைதி) :—

''ஊரிற் குறுகினேன் ஓர்மாத் திரையளவென்''
— பண்டார மும்மணிக்கோவை 24:3.

''கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலேயடா — ஊற்ருய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா''
— மலரும் மாலேயும் 18:9.

''முல்லைக்கோர் காடு
முத்துக்கோர் கடலே'' — தேன்மழை, பக்கம் 225.

ஒரு, ஓர் என்னும் சொற்கள் புறநிலையில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் அடங்கி 'ஒரு' என்னும் எண்ணுப்பொருளைத் தருகின்றன. ஆனல் சிறப்பாகச் செய்யுளில் அவை பொரும்பாலும் உய்த்துணரும் பொருட்சிறப்புடையனவாக விளங்குகின்றன. அப்பொருட்சிறப்பைத் தெளிவாக உணராது வெறும் எண்ணுப் பெயரடை எனக்கொள்வோமானல் நயமேதும் புலப்படாது போய்விடும். இத்தகைய பொருட்சிறப்பையே மேலே காட்டியுள்ள மேற்கோள்கள் உணர்த்துகின்றன.

இவ்வாறு பல்வேறு பொருள் தருவனவாகவும் அசைநிலையாகவும் வரும் இயல்புடைய இடைச்சொற்களை இலக்கண நூல்கள் குறிப்பிடுகின்றன. இவ்வகையில் 'ஓர்' என்பதும் இடைச்சொல்லே எனலாம். எல்லா விடத்தும் வரும் அசைச்சொற்கள் என நன்னூல் குறிப்பிடுவதனுள் இந்த 'ஓர்' என்பது அடங்கும்.[4] அதன் உரையாசிரியர் ஆறுமுகநாவலரவர்கள் 'ஒரும்' என்பதையே அசைச் சொல்லாகக் காட்டியுள்ளார்; எனினும் 'ஒரும்' என்பதை ஓர் - உம் எனப் பிரித்து, 'ஓர்' என்பதை இடைச்சொல் எனவும், உம்மையைத் தீவகமாக்கி ஏனையவற்ருேடு கூட்டியும் பொருள் கொள்ள இடமுண்டு என்பது ஈண்டு கருதத் தக்கது,

'ஓர்' என்பது இடைச் சொல்லாக வருவதை அடியார்க்குநல்லாரும். டாக்டர் உ. வே. சாமிநாதையரும் குறித்துள்ளனர்.[5]

பாரதிதாசன், கண்ணதாசன், சுரதா, கா. மு. செரீபு முதலிய இக் காலக் கவிஞர் பலரும் 'ஓர்' என்னும் சொல்லை, பொருட்சிறப்பு யாப்பமைதி முதலிய எக்காரணங்களும் இன்றி 'ஒரு' என்னும் எண்ணுப் பொருளிலேயே பல இடங்களில் கையாண்டுள்ளனர் என்பது அவர்தம் நூல்களைக் கற்பார்க்கு எளிதிற் புலனாகும். இத்தகைய மாறுபட வந்த ஒரு, ஓர் சொல்லாட்சி தொல் காப்பிய எழுத்ததிகாரத்துப் புறனடை நூற்பாவில் வரும் 'கிளந்த வல்ல செய் யுளுள் திரிநவும்' என்பதனுள் அடங்கும்.[6]

முடிவுரை:—

இதுகாறும் கண்டவற்றால், தொல்காப்பியர் கருத்துப்படி 'ஒரு' என்னும் எண்ணுப் பெயரடையை அடுத்து (1) வல்லெழுத்து வருமானால் 'ஒரு' என்றே இயல்பாகவும், (2) மெல்லெழுத்து வருமானால் 'ஒரு' என்றே இயல்பாகவும், (3) இடையெழுத்து வருமானால் 'ஒரு' என்று இயல்பாகவும், (4) இடையெழுத் துள் 'யகரம்' வருவுழி சிலவிடங்களில் 'ஓர்' என மருவியும், (5) உயிரெழுத்து வரு மானால் 'ஓர்' என்று முதல் நீண்டேயும் வரும் என்பது தெளிவாகிறது.[7]

மொழியியல் வல்லுநர்கள், மொழி என்பது காலந்தோறும் மாற்றங் களுக்கு உட்பட்டு, பலவகையிலும் நெகிழ்ச்சியுடையதாகி, மக்கட்குப் பொரு ளுணர்த்த வல்ல பயனுள்ள கருவியாக இருக்கவேண்டும் என்னும் கொள்கையினர். மொழியின் இத்தகைய உயிர்நிலையை — வாழும் தகுதியை நன்குணர்ந்த ஒல்காப்புகழ்த் தொல்காப்பியர் அவர் கால வழக்கையும், அவர்க்கு முற்பட்ட வழக்கையும் காட்டியுள்ளதோடு, தொலை நோக்குப் பார்வையால் தமிழில் பிற் காலத்தில் ஏற்படவல்ல மாற்றங்களையும் மனத்துட்கொண்டு ஓரிலக்கணம் செய் துள்ளார்.

''செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைக்க இலக்கணம் பிழைத்தன போல
வருவஉள எனினும் வந்தவற் றியலான்
திரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே,''[8]

இந்நூற்பாவில் பிழைத்தன எனாது, 'பிழைத்தன போல வருவ' எனக் கூறியிருப் பதும் செய்யுளில் அவ்வாறு இலக்கணப் பிழையுடையன போல வருவனவற்றை முற்கூறிய இலக்கணத்தினின்றும் வேறுபடாதவாறு முடித்துக் கொள்ளல் அறிவுடை யோர் கடமை எனச் சுட்டியிருப்பது ஈண்டு நினையத்தகும்.

பிழைத்தனபோல் வருவனவற்றை அமைதிகூறி ஏற்றுக்கொள்ளலாம்; பிழைத்தே வருவனவற்றை ஏற்கலாகாது என்பது தெளிவு. மரபுநிலை திரியாது வரும் சொற்கள் ஒரு மொழிக்கு ஆக்கம் தருவன; மரபு திரிந்து வருவன கேடு பயப்பன.[9]

உணர்த்துவோனுக்கும் உணர்வோனுக்கும் இடையே பொருள்மயக்கம் ஏற்படாதவகையில் வேறுபட்டுவரும் சொல்லாட்சிகளை ஆய்ந்து தெளிந்து பொருந்துவனவற்றைக் கொள்ளலாம் என்பதும், பொருள்வேறுபாட்டுக்கு இடந் தந்து மாறுபட்டுவரும் சொல்லாட்சிகளைத் தள்ளியே ஆகவேண்டும் என்பதும் தெல்காப்பியர் தரும் எச்சரிக்கைகள். இந்த அறிவுரையை அனைவரும் நெஞ் சிலிருத்தி நினைவுகூர்வதே தமிழ் வாழும் வழி.

## அடிக்குறிப்பு

1. ஆனந்தவிகடன், 8-8-1971 இதழ், பக்கம் 14. 2. தொல்காப்பியம், 437, 438, 455, 460, 464, 465, 471, 478, 479. 3. கண்ணதாசன் கவிதைகள், 1, 11, பக்கம் 227. 4. நன்னூல் 441, அகநானூறு 86, 22, ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை, பக்கம் 203. 5. சிலப்பதிகாரம் 2:37 உரை, பக்கம் 49. மணிமேகலை 5:108 உரை, பக்கம் 63. 6. தொல் காப்பியம் 483. 7. தொல்காப்பியம் 455, 478, 479. 8. தொல்காப்பியம் 1499. 9. தொல்காப்பியம் 1590, 1591.

# தமிழ்மொழிக்குச் செழுமையூட்டும் 'ந' வின் தனிச் செல்வாக்கு

எஸ். பொன்னுத்துரை
*19, சின்ன உப்போடை, மட்டக்களப்பு*

தமிழ் நெடுங்கணக்கில் 'ந' வும் ஓர் எழுத்து. அண்ணத்தைச் சேர்ந்த பல்லினது அடியாகிய இடத்தில் நா நுனி மெய்யுற ஒற்ற 'ந' பிறக்கும். 'ண', 'ன' என்பன இந்த உச்சரிப்புக்குச் சிறிது திரிந்தும் மாற்றமடைந்தும் உச்சரிக்கின்ற எழுத்துக்கள். நுனி நா அண்ணத்திலே பட 'ண' பிறக்கும். நாவினது நுனி மேனேக்கிச் சென்று அண்ணத்தைத் தடவ 'ன' பிறக்கும்'. 'ண', 'ன', 'ந' ஆகியவற்றிற்கு முறையே 'ட', 'த', 'ற' ஆகியன இன எழுத்துக்களாம். இன வெழுத்துக்களுடன் சேர்ந்து அவை வரும்பொழுது உச்சரிப்பு வேறுபாடு எளிதில் இனங்காணப்படும். எடுத்துக்காட்டுகள்: வண்டு, பந்து, கன்று. எனவே, அவற்றை முறையே 'டண்ணகரம், 'தந்நகரம்', 'றன்னகரம்' எனக் குறிப்பிடும் வழக்கம் உண்டு. 'ஐந்தெழுத்தாலொரு பாடை' என்னுங் கருத்து இலக்கணக் கொத்திலே பயிலப்படுவது. எ, ஒ, ழ, ற, ன ஆகியன ஐந்துமே தமிழ் மொழியின் சிறப்பெழுத்துக்களாம். 'ண' வும் 'ந' வும் தமிழுக்கும் சங்கதத்துக்கும் பொது வானவை. 'ன' சங்கதத்தில் இல்லை. உயிர் ஏறி வரும் 'ந' வுக்கும் 'ன' வுக்கும் ஒலிச்சாயல் நெருக்கமானது. தமிழ் வரிவடிவம் ஒலி வழி அமைவதினுலும் 'ந' வும் 'ன' வும் மாறி மாறியும், ஒத்து மாறியும் ஆளப்படும் வழு நிலைத்துள்ளது. முத்தமிழ் வித்தகராம் யாழ்நூலாசிரியர் தமது நாமத்தினைச் சில இடங்களிலே விபுலாநந்தர் எனவும், மற்றும் இடங்களிலே விபுலானந்தர் எனவும் ஒப்பஞ் செய்துள்ளார். தமிழ்க்களஞ்சியத் தொகுப்பிலே பணியாற்றிய அறிஞர் சிலருடைய பெயர்கள் ஸ்ரீனிவாச்சாரியார், ஆனந்தவைத்தியநாதன் என அச்சிடப் பட்டுள்ளது. தமிழை உணர்ந்தோரும் 'ந' வைச் செப்பமாய் ஆளுவதில் இடறினர். தமிழில் எழுந்த எந்த நூலும் 'ந' வைப்பற்றி முற்ருய், முழுதாய் எடுத்துரைத்திலது. இந்நிலையில், 'ந' வின் முறைமைசால் பயிற்சியினை ஆராய்தலே இக்கட்டுரையின் முயற்சி.

தமிழின் சிறப்பு மெல்லெழுத்தென ஏத்தப்படும் றன்னகரம் மொழிக்கு முதலில் வரமாட்டாது என்பதும் தமிழ் விதியே! 'ந' வருக்கம் மொழிக்கு முதலில் உபகாரமாய் நிற்கும். மொழிக்கு முதலிலே பயிலத் தத்துவம் பெற்ற தந்நகரம், மொழிக்கு இடையிலும் கடையிலும் வருமாயின், றன்னகரத்திற்கு ஏது சிறப்பு? 'ற' வின் இன எழுத்தாய்த் தலையெடுப்பதுடன் அதன் உபயோகம் முற்றிற்ரு? மொழிக்கு முதலில் உபகாரமாய் வரும் 'ந', மொழிக்கு இடையிலும் கடையிலும் வரமாட்டாது என்னும் ஒரு தருக்க ஒழுங்கினை நியமிப்பதன் மூலம் 'ன' வின் சிறப்பினை ஊன்றலாமல்லவா? இத்தகைய சிந்தனைகளிலே வசமிழந்த தமிழறிஞர்

கூட்டம் 'ந' வின் உரிய இடத்தினை மங்கச் செய்ததினுலும் 'ந', 'ன' அநர்த்தங்கள் தமிழ்ப் பயிற்சியிலே மலிந்தன போலும்.

'ன' வின் மெய்யும், உயிரேறிய எழுத்துக்கள் சிலவும் மொழிக்குக் கடையில் வரும். 'சீமாந்' சங்கத வடிவம் 'சீமான்' எனத் தமிழ் வடிவம் பூணும். 'ந' வின் மெய் மொழிக்குக்கடையில் வருவதில்லை. கேட்குந, கிளக்குந, ஆகுந, வருந முதலிய ஆட்சிகள் நன்னூல், தொல்காப்பியம் முதலிய நூல்களிலே காணப்படுபவை. இவற்றில் 'ந' விகுதியாய் வந்தது. இவற்றை நடைப்போக்கு எனக் கூறலாம். 'ஆநின்று' நிகழ்கால இடைநிலைக்குள் ஒன்றென வரிசைப் படுத்தப் பட்டுள்ளது. நட + ஆநின்ற + ஆன் = நடவாநின்ருன். செய்யுள்களில் இவ் வழக்கு உண்டு. 'நடவாநின்ருன்' என்பதற்கு, 'நடக்காமல் நின்ருன்' எனவும் பொருள் கொள்ளலாமல்லவா? இந்தப் பொருள் மயக்க ஏது தொற்றிப் பொது வழக்கில் 'ஆநின்று' செயலிழந்தது போலும். இதனையும் முன்மாதிரியாகச் சுட்டி, கேட்குந, கிழக்குந முதலியன ஏட்டு வழக்கே எனச் சாதித்து, அதனை விதியாய் ஆளுவதைத் தவிர்க்கலாம். 'அவ' என்னும் உபசருக்கே இணைப்பினுல் 'அவநி' தோன்றிற்று. இருப்பினும் 'ந' மொழிக்குக் கடையில் வரமாட்டாது என்னும் விதியை ஒழுகுவான் வேண்டி, 'அவனி' என எழுதலாம். இவ்வாறு'ந' மொழிக்குக் கடையில் வருதலைப் பயிற்சியிலே தவிர்க்கலாம். வளமுங் குன்ருது, தெளிவுந் துலங்கும்.

'ந' மொழிக்கு இடையில் வரமாட்டாது என மலைவுற்று, அதனை ஒரு விதியாய்ப் பயிலுவோமாயின், தெளிவு மங்கி, அநர்த்தம் மலியும். எனவே, மொழிக்கு இடையில் எத்தகைய அமைதிகளிலே 'ந' பயிலுதல் வேண்டும் என் பதைத் தமிழறிஞர் பெருமக்கள் நிதானமாகச் சிந்தித்துப் பயிற்சிக்குக் கொண்டு வருதல் நன்று. அத்தகைய ஓர் அறிவு நோக்குக் கருதிய உரத்த சிந்தனையாகவும் இக்கட்டுரை அமையும்.

மன்னன், தென்னை, தனது, புனல், ஈனம், தெனுது, இனிப்பு, முனைப்பு ஆகியன தமிழ் வழக்கு. இச்சொற்களிலே 'ந' வோ 'ந' வருக்கமோ வருவதில்லை. ஒரு சொன்னீர்மை பெற்ற இடங்களில் விட்டிசைத்தல் நேருதல் தவிர்க்கப்படுதல் வேண்டும். அத்தகைய இடங்களிலும், அவ்வமையங்களிலும், விட்டிசைத்தல் செவியினிமைக்கு ஊறு சேர்க்கும். சொற்ருெடரோ என்னும் மலைவு தோன்றிட வழியுஞ்சமையும். ஏட்டுத் தமிழினை விழைவோர் 'வடஎழுத்தொரீஇ' யை மிகுதியும் வற்புறுத்துவர். திநம், திநகரன், தியாநம், மாநம் முதலிய சொற் களைத் தினம், தினகரன், தியானம், மானம் என எழுதும் வழக்கினை ஆட்சிப் படுத்தினர். 'மாநம்' என எழுதினுல், 'மா நம்' எனப் பொருள் கொள்ளும் அவலம் நேருமன்ருே என வாழ்த்துரைத்தும் தமது மதத்திற்கு வலிமை சேர்த் தனர். இவை குறித்தும் பிணக்கில்லை. இவற்றையே அடிப்படைத் தமிழ்ப்பணி யாக மோகித்து, சங்கதச் சொற்களைத் தமிழ் மயப்படுத்துதல் என்னும் மருட்சியில், மொழிக்கு இடையில் வரும் தந்நகரம் அனைத்தையும் ஒரீஇ, றன்னகரத்தைப் புகுத்திப் பயிலுவாராயினர். இந்தப் போக்கினை ஒரு நியதியாக ஏற்று, மொழிக்கு இடையில் தந்நகரம் வருதல் தமிழ்க்கேடு எனக் காமஞ் செப்புதல் அறிவுடைமை

சார்ந்ததா? தமிழின் சிறப்பையும் உயிர்ப்பையுமே நந்துவேன்; யாசிப்பேன். தமிழ் மொழியில் 'ந' வுக்குத் தனி இடம் உண்டு. அதன் சங்கை பேண வாதுரைத் தல், றன்னகரத்தின் சிறப்பினை ஆட்சேபிக்குஞ் செயலுமன்று, மாறுக, 'ன' வின் சிறப்பினை ஓம்ப, 'ந' வின் தனித்துவம் பேணும் விதிகளை நேர்மையாகப் பயிலுத ் சாலப் பொருந்துவதே.

மொழிக்கு இடையில் தந்நகரத்தின் உரிய இடத்தினை நியமிப்பதற்கு நேமிநாதம் இலக்கண இசைவு தரும்.

'நேர்ந்த மொழிப்பொருளை நீக்க வருநகரம்
சார்ந்த துடாலியிற் றன்னுடல்போஞ் – சார்ந்ததுதான்
ஆவியேற் றன்னுவின் முன்னுகும்.'

நேமிநாதம் சுட்டும் இந்த விதியை வீரசோழியம் வழிமொழியும். பல நூறு சங்கதச் சொற்கள் தமிழில் ஏறின. அவை செழுமை சேர்ந்தன. மெய்ம்மை. சங்கதச் சொற்கள் பலவற்றிற்கு எதிர்மறைப் பொருட் சொற்களை ஆக்க 'ந' உதவும். இதனைத் தமிழும் ஏற்றது. இத்தகைய உபகாரத்தைச் செய்யும் வேறு எழுத்துக்கள் தமிழில் இல்லை.

எதிர்மறைப் பொருட் சொற்களை 'ந' வின் துணையுடன் ஆக்குதல் சம்பந்த மாகப் பாணினி சூத்திரத்தில் காணப்படும் முதல் மூன்று விதிகளையுந் தொகுத்துக் கூறும் பாங்கத்தில் நேமிநாதம் வகுக்கும் வரம்பு அமைந்துள்ளது.

'ந' என்னும் எழுத்து 'ந்' என்னும் மெய் அல்லது உடல்மீது 'அ' என்னும் உயிர் அல்லது ஆவி ஏறி வர உண்டாவது. 'ந' வினைச் சார்ந்து உயிர் மெய் எழுத்திலே துவங்கும் சொல் வருமாயின் 'ந' விலுள்ள 'ந்' என்னும் மெய் அல்லது உடல் கெடும்.

ந + கௌரவம் = ந் + அ + கௌரவம் —அகௌரவம்.
ந + தர்மம் = ந் + அ + தர்மம் — அதர்மம்
ந + நீதி = ந் + அ + நீதி — அநீதி
ந + மலம் = ந் + அ + மலம் — அமலம்

இவை போலவே ஏனையவை.

'ந' வினைச் சார்ந்து உயிரை மொழிக்கு முதலில் கொண்டுள்ள சொல் வருமாயின், அந்த உயிருடன் ('ந்' என்னும்) உடல் சேர்ந்து கொள்ள, 'ந' வில் ஏறி வந்த ('அ' என்னும்) உயிர், முன்னுகித் தனியே நிற்கும்.

ந + ஏகம் = ந் + அ + ஏகம் — அநேகம்
ந + உசிதம் = ந் + அ + உசிதம் — அநுசிதம்
ந + இஷ்டம் = ந் + அ + இஷ்டம் — அநிஷ்டம்
ந + அங்கன் = ந் + அ + அங்கன் — அநங்கன்

இவைபோலவே ஏனையவை.

இந்த விதி பேணி, மித்திரர் என்னுஞ் சொல், எதிர்மறைப் பொருளில் 'அமித்திரர்' என அமையும். ஆயினும், 'நமித்திரர்' என்னுஞ் சொற்பிரயோகம் கம்பராமாயணத்திற் காணப்படுவது.

''நப்ராத், நபாத், நவேத, நாசத்யா, நமுசி,
நகுல, நபும்சக, நக்ஷத்ர, நக
நக்ர, நாகேஷு, நப்ரகிருத்யா''

மேற்படி சொற்களில் இயல்பாகும். அதாவது 'ந' மாற்றமடையாது நிற்கும். இதனைப் பாணினி தமது சூத்திரத்தில் நாலாம் விதியாகக் கூறியுள்ளார்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ந | + | பாத் | = | நபாத் | — | காலற்ற |
| ந | + | வேத | = | நவேத | — | அறிவற்ற |
| ந | + | குல | = | நகுல | — | குலமற்ற |
| ந | + | கம் | = | நகம் | — | வெளியற்ற |
| ந | + | பும்ஸகம் | = | நபும்ஸகம் | — | ஆணும் பெண்ணும் அற்ற |
| ந | + | க்ஷத்ரம் | = | நக்ஷத்ரம் | — | அசைவற்ற |

பாணினி வேறு உதாரணங்களும் தொகுத்துள்ளார். பாணினி தரும் முதன் மூன்று விதிகளுக்கு அப்பாற்பட்ட, நேமிநாதம் நேதி நியமிக்க வில்லை. இருப்பினும், இங்கு சாட்டப்பட்ட எடுத்துக்காட்டுக்கள் மூலம் விதியைத் தெளிவோர். 'ந' வை ஒரீஇ 'ன' வைப் புகுத்த ஒருப்படார். இதனை அறியாதார் கற்பனை வேறு. அல், அன் போன்றன எதிர்மறை இடைச்சொற்களென்பர். அவை 'அ' எனக் குறுகி நின்று, எதிர்மறைப்பொருள் தருமென மயங்குவர். இந்த உன்னலுக்கு எடுத்துக்காட்டாய் தமிழ்ச் சொல் ஒன்றுமில்லை.

சிலப்பதிகாரத்திலே ஓசநர், கடவுநர், செய்குநர், தருநர், பகுநர், வல்லுநர் முதலிய சொற்கள் ஆளப்பட்டுள்ளன. இந்த ஆட்சியை ஒட்டி ஓட்டுநர், நடத்துநர், இயக்குநர் போன்ற சொற்களும் இந்நாளிற் பயிற்சிக்கு வந்துள்ளன. மொழிக்கு இடையில், 'ந' வின் இத்தகைய ஆட்சி, இலக்கண அமைதிக்குப் பொருந்துவதே. உடம்படுமெய் என்னும் ஓர் ஏற்பாடு தமிழ் இலக்கணத்தில் உண்டு.

'இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏ முன் இவ்விருமையும்' எனப் பவணந்தி முனிவர் உடம்படுமெய்க்கான இலக்கண விதியைக் குறித்தார். இரண்டு உயிர்களுக்கிடையில் விட்டிசைத்தலைத் தவிர்ப்பதற்காகத் தோன்றும் வழுக்கி போன்ற மெய் (between two vowels a consonantal glide appears for preventing hiatus) என இந்த ஏற்பாட்டினை மொழியியல் வல்லாளர் டாக்டர் கால்ட்வெல் விளக்கினர். யகரம், வகரம் ஆகியன மட்டுமின்றி, ஞகரமும் உடம்படுமெய்யாக வரும் என்பதை நிறுவி, சேரர் தமிழிலும் இவ்வியல்பு இசைவதைக் காட்டினர்.

அறி + அன் — அறிஞன்
பொரு + அன் — பொருநன்

இளே + அன் — இளஞன்; இளநன்
இவை தமிழ் வழக்கு.

'ன' வையும் உடம்படுமெய்யாகப் பயிலலாம் என்பது எங்கணும் நாட்டப் படவேயில்லே. எனவே, உடம்படுமெய்யாக 'ந' மொழிக்கு இடையில் வழங்குதல் முறைமை. பொருத்தமான வாய்ப்பு விடிவதினல் இன்னென்றையும் இங்கு அறிக்கையிடுதல் நியாயம். இலக்கணச் சுருக்கத்தில் ஆறுமுகநாவலர் நன்னூலுக்கு மாறுபட்ட கருத்துக்களேயும் ஆண்டு தமது சுயாதனே வித்து வத்தை நாட்டினர் என மெச்சுவோரும் உளர். புணரியற் பயிற்சியே வீங்கிய தமிழறிவு எனப் பீடு பேசிய பண்டிதர் மத்தியிலே, குறுகிப் புணர்ந்து கலத் தல் உயிர்த்துவ நியதியாயும் மொழி தழீஇய தமிழ் மரபாயும் இருக்கவும், நான்காம் பாலபாடம் எழுதித் தமிழ் கற்பித்த வலு முற்போக்குவாதியாயும் நாவலர் திகழ்ந்தார். இருப்பினும் 'ந' பெயரிடைநிலேயாக வரும் என நாவலர் சாற்றிய கருத்து செவ்விதன்று. 'ந' சிறப்புப் பொருள் உணர்த்துவதோரிடைச் சொல், நச்செள்ளே, நப்பாலத்தன், நக்கீரன் என்ருற்போல், நம்பின்னே விகாரமு மாம் என்பர் நச்சினர்க்கினியர். நன்னூலுக்கு உரை கண்ட மயிலேநாதரும் 'தெரிநிலே தேற்றம்' என்ற தொடக்கத்து நூற்பா உரையில் 'நக்கீரர் நப்பாலத் தனர் என்புழி நகரவிடைச் சொல் சிறப்புப் பொருள் தந்தது' என்ருர். இந்த விதி ஒழுகி, கலித்தொகையைத் தொகுத்தாரை நல்லந்துவனர் என்பர் அந்நூலேப் பதிப்பித்த அநந்தராயர். இவர்களுடைய தமிழ்ப்புலமையை இழித்துரைக்க ஒப்பேன். இருப்பினும், இவர்களுடைய கற்பித்தலுக்கு ஆதரவாக இலக்கணகாரர் எவருமே இடையியல் பற்றி இருபத்திரண்டு சூத்திரங்களிலே விரிந்துரைக்கும் நன்னூலார் உட்பட நகரத்தை இடைச்சொல்லாய்க் காட்டினர் அல்லர். ஆங்கிலத்தில் முன்னிணேப்பு (Prefix) வருவதுபோல, சங்கதத்தில் உபசருக் கங்கள் உள. இதற்கும் அதற்கும் ஒட்டுப்போடுவதுபோல, உபசருக்கங்கள் ஒரு வகை இடைச்சொற்கள் என மயங்குவோரும் உளர். இவ்வாருன தப்பெண்ணத் திற்கு அகராதிக்காரர் சிலரும் பலியாயினர். 'ந'வும், 'ன' வும் போலிகள் என்னும் மயக்கத்தினே வித்துமாறும் அகராதிகள் வெளியாயின. 'நேர்ந்த மொழிப் பொருளே நீக்க வருநகரத்தை' ஒப்புதல் செய்தது போலவே, உபசருக்கம் என்னும் ஏற்பாட்டினேயும் தமிழ் உவந்து ஏற்றது. தூய தமிழ்ச் சொற்கள்கூட உபசருக் கங்களுடன் இணேந்து, அருத்த விகாரமும் செழுமையும் பெற முந்தின. உப சருக்கங்கள் பற்றிய எல்லேகட்டுடைய விசாரணேயும் இக்கட்டுரையின் முழுமைக்குத் துணே நிற்கும்.

ப்ர, பரா, அப, ஸம், அநு, அவ, நிஸ், நிர், துஸ், துர், வி, ஆ, நி, அதி (Adhi), அபி (Api), அதி (Ati), ஸு, உத், அபி (Abhi), ப்ரதி, பரி, உப ஆகிய இருபத்திரண்டு உபசருக்கங்கள் உண்டு, இவற்றுள் ப்ர, ப்ரதி, ஸம், ஸு, அநு ஆகியன முறையே பிர, பிரதி, சம், சு, அனு ¦எனத் தமிழ் வேடம் புனேந்தன. 'ஸ, ஸஜுஷோ ரு:' என்னும் பாணினிய வழியில் ''ஸ் — 'ர்' ஆக மாறும் என்பதைப் பொது விதியாக ஏற்று, (துஸ் + பிரயோகம் — துஷ் பிரயோகம், துஸ் + ஸத — துஷ்ட — துட்ட, நிஸ் + காம்ய — நிஷ்காம்ய எனவும் பிறவுமாக வழங்கும் ஏனய விதிகளிலே கருத்தூன்ருது) நிஸ், துஸ்

ஆகியன முறையே நிர், துர் ஆகியவற்றில் அடங்கும் எனவும் உன்னி, உப சருக்கங்கள் இருபது எனப் பிரயோக விவேகம் செய்தனர் போலும். இந்த இருபதுள் 'அபி' (Api) என்னும் உபசருக்கம் வேதங்களில் மட்டுமே பயின்று, பின்னர் வழக்கிழந்தது. உபசருக்கங்களின் இணைப்புடன் சொற்களோ, சொற்றொடர்களோ வழங்குமாயின் அத்தகைய இடங்களிலே ஒரு சொன்னீர்மையைக் கடைப்பிடித்தல் அவசியமில்லை. மாருக, உபசருக்கங்களையும் அவற்றுடன் சந்தி சேரும் சொற்களையும் இனங் காணக் கூடியதாக பயிலுதல் பொருந்தும். அறிவுடமை சார்ந்தது. சொற்சிதைவுகள் ஏற்படாதிருக்கவும் உதவும். இந்த நியாயங்களுக்கு ஏற்ப சந்நிதி, சந்நியாசம், நிர்நாசம், நிர்நிமித்தம், துர்நீதி, விநதி, விநதை, விநயம், விநியோகம், விநோதம், ஆநந்தம், அதிநுட்பம், சுநீதி, சுநந்தை, சுநிதம், அபிநயம், பிரதிநிதி, பிரதிநிசம், உபநயனம், உபநயம், போன்ற வழக்குகள் ஏற்றத்தக்கன. அவ்வாறே அநுநயம், அநுபவம், அநுநாதம், போன்ற வழக்குகளையும் அங்கிகரித்தல் வேண்டும். அநு உபசருக்கமாக வரும்பொழுது தமிழ் வேடம் புனைவதை இந்த ஏற்பாட்டினுல், 'ந' மொழிக்குக் கடையில் வர மாட்டாது என நாம் ஏலவே ஏற்றுள்ள விதி மீறப்படுவதுமில்லை. இவை அனைத்தும் தமிழ் அங்கிகரித்துள்ள வேறு முன்மாதிரிகளினுலும் நியாய அங்கீகாரம் பெறுகின்றன. பிரணயம் (பிர + நயம்), பிரணுமம் (பிர + நாமம்) பிரணுதம் (பிர + நாதம்), நிர்ணயம் (நிர் + நயம்), பரிணயம் (பரி + நயம்), பரிணுமம் (பரி + நாமம்) முதலிய புணர்ச்சிகள் தமிழில் உண்டு. இருப்பினும், இவை தமிழ் இலக்கண விதிகளுள் அடங்கா. ''ரஷாப்யாம் நோணா: சமந பதே'' என்பது பாணினி சூத்திரம். ஒரே பதத்தினில் ர அல்லது ஷ வின் பின் வரும் நகரம் ணகரமாக மாறும். வேறு சில எழுத்துக்கள், இடத்துக்குத்தக, சில சேர்ந்தோ, தனித்தோ வரினும், இடையில் வந்தாலும், ர அல்லது ஷ வின் பின்வரும் 'ந' 'ண' வாக மாறும் என்பது பிறிதொரு விதி. இராமாயணம், இராவணன் ஆகியன இவ்வகை பயிலப்படுவன. இவற்றிலே சிரத்தையூன்றும் பொழுது, தமிழிலே பயிற்சிக்கு வந்து நிலவும் சங்கத இலக்கண விதிகள் பற்றி நமது சிந்தனை கிளை விடலாம். நமது அக்கறையும் விசாரணையும் ''ந'' வின் நியாய உரிமைப் பிரயோகம் என்னும் எல்லைக்குள் கட்டுப்படுவதினுல், மற்றையன பற்றிய விசாரணையையும் விளக்கத்தையும் ஈண்டு மட்டுப்படுத்துதல் நேதி.

சங்கத மொழியில் உள்ள எழுத்துக்களையும், சொற்களையும். இலக்கண அமைதிகள் சிலவற்றையும் ஏற்றும், சீரிளமை குன்ருச் செம்மொழியாகத் தமிழ் உயிர்ப்புடனும் வீறுடனும் வாழுகின்றது. இந்நிலையில் மொழிக்கு இடையில் நகரம் ஓரீஇ னகரத்தைப் புகுத்துதல் மூலம் தமிழுக்குப் பெருமை சேர்ந்து விடலாம் என மயங்குதல் பேதமையே.

இனி, புணர்ச்சி பயிலும் சொற்களையும் அவை குறித்து நிற்கும் அர்த்தங்களையும் தெளிவாக உணர்வதற்கும் மொழிக்கு இடையில் நகரத்தைப் பயிலுதல் வேண்டற்படுவதே.

நல் + நூல் = நன்னூல். நிலைமொழி ஈற்றின் லகரம் னகரமாகும். இந்த மாற்றம் வருமொழி முதலைத் தன்மைப்படுத்தும். நம் + நூல் எவ்வாறு

புணரும்? இந்தப் புணர்ச்சியிலே, வருமொழி முதலில் வரும் 'ந' வீறு பெற்றதாய் நிலைமொழி ஈற்றிலுள்ள மகரத்தை தன்மயப்படுத்தும். எனவே, 'நந்நூல்' என விளங்கும். இங்கு நகரத்தை ஒரீஇ றன்னகரத்தைத் தமிழ் பெய்யும் உத்தி இணங் காது. ஏன்? பொருட்பேதமும் நேரும்.தே + நீர் = தேநீர். தேனீலே ஈர் கலந்து பருகாதோர் தேனீர் என எழுதி மயங்குதல் முறையோ? மூன்று நூறுகளைக் குறிக்க முந்நூறு என எழுதலே சரி. முன்னூறுக்குப் பொருள் வேறு. நேமி + நாதர் = நேமிநாதர். நேமினுதர் என எழுதினுல் இலக்கணம் அறம் புறமாகிவிடாதா? சுத் தானந்த பாரதியார் 'இராமனுதர்' என எழுதி மகிழ்ந்தார். இராமன் மேல் ஒரு ஆதர் ஏறினுரா? இராம + நாதர் = இராமநாதர். தனக்கு மேலான தலைவன் இல்லாதவன் விநாயகன். வி + நாயகன் = விநாயகன். விஞயகன் என எழுதுதல் நியம விரோதம்.

சத்தியம் தர்மம் ஆகியன வாழ்க்கைக்கு மிக உவப்பானவை. வாழும் மொழிக்கும் அவை நனி சிறந்தன.

# ஒப்பியல் நோக்கில் மெய்ப்பாடு

டாக்டர் **இராம. பெரியகருப்பன்** *(தமிழண்ணல்)*
தமிழியல்துறை மற்றும் இந்தியப் புலத் தலைவர்,
மதுரை காமராஜ்பல்கலைக் கழகம், மதுரை

'மெய்ப்பாடு' என்ற தமிழ் இலக்கியக் கோட்பாடு, அதன் விளக்கங்கள் அனைத்தையும் ஒருசேரக் கொண்டு நோக்கும்பொழுது ஓர் உலக இலக்கியப் பொதுமைக் கோட்பாடாகக் (Universal literary theory) காட்சியளிக்கிறது. வடமொழியில் பரதமுனிவர் கூறி, பிற்காலத்தே நன்கு விளக்கப்பட்ட இரசக் கோட்பாட்டுடனும் மேலைநாட்டில் விரிவாக ஆராயப்பட்டுள்ள 'உரு'க் கோட்பாட்டுடனும் (Imagery) தொல்காப்பியர் விளக்கிய தமிழ் மெய்ப்பாட்டுக் கோட்பாட்டை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இவ்வுண்மை புலனாகிறது.

**நாடகக் கலையும் இலக்கியக் கலையும்**

இலக்கியக் கலை வாய்மொழி இலக்கியத்திலிருந்து தோன்றியது. இலக்கியம் வாய்மொழியாக இருந்தபொழுது, ஆடலுடன் கூடிய பாடலாக இருந்தது. அக் கூத்துக்கலையில் இருந்த அவிநயம், அல்லது சைகையே (முக,உடலசைவுகள்) உணர்ச்சியை வெளிப்படுத்திக் காட்டியது. அவ் வேலையை இலக்கியத்தில் சொற்களை வைத்துத்தான் செய்யமுடிந்தது. தமிழில் தோன்றிய 'மெய்ப்பாட்டில்' இவ் விளக்கம் தொல்காப்பியர் காலத்திலிருந்தே நன்கு பெறப்படுகிறது.

'மெய்ப்பாடு' என்ற சொல்லே மெய்யின்கண் தோன்றும் அவிநயமென முதற்பொருள் தருகிறது. 'மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று.' என்றார் இளம்பூரணர்.[1] அவரே ''இனி சுவை என்பது காணப்படு பொருளால் காண்போரகத்தின் வருவதோர் விகாரம்'',[2] என்னுமிடத்து உலகியலிலிருந்து கூத்துக்கலை வளர்வதை நமக்கு புலனாக்குகிறது. பேராசிரியர் சுவைக்கப்படுபொருளும், சுவை உணர்வும், அதனைக் காண்பான் மனக்குறிப்பும், அஃது அவன் புறத்தே மெய்யில் வெளிப்படும் விறலும் என நான்காகப் பகுக்கும்பொழுது மெய்ப்பாடு கூத்தினுள் வெளிப்படும் முறை[3] புலனாக்கப்படுகிறது. பரதமுனிவர் தம் பரத சாத்திரமாகிய நாடக நூலில் இரசம் பற்றி விளக்குகிறார். அவர் 'விபாவனுபாவ —வியபிசாரி சம்யோகத் ரஸா-நிஷ்பதிஹ்' எனக் குறிப்பிட்டது தலைசிறந்த நாட்டியரசமாகும். அதனைப் பிற்காலத்தார் 'காவிய ரசமாக' விளக்கினர். விபாவம் இரண்டு வகைப்படும். (1) ஆலம்பன விபாவம் (2) உத்தீபன விபாவம் என. ஆலம்பன விபாவம் என்பது சுவைத்தோற்றத்திற்கு முக்கிய காரணமாயிருக்கும் நாயகன், நாயகியைச் குறிக்கும். யாரால் சுவை விளைவு ஏற்படுகிறதோ அவரே ஆலம்பன விபாவம் ஆவர். உத்தீபன விபாவம் என்பது உணர்வைத் தூண்டும் பின்னணியைச்

சுட்டும். நிலவு ஒளி வீசுகிறது. உலவுபவர் யாரும் இல்லே; தனியிடம்; சல சலக்கும் அருவியுடன் மலர் குலுங்குகிறது. இத்தகைய சூழலில் இளங்காத லர்கள் ஒருவரை ஒருவர் எதிர்பார்க்கின்றனர். இதில் சூழலே உத்தீபன விபாவம் என்றும் காதலர்களே ஆலம்பன விபாவம் என்றும் குறிக்கலாம். அனுபாவம் வியபிசாரி பாவம் என்பன பெரிய, சிறிய மெய்ப்பாடுகள் என விளக்கப்படு கின்றன. காண்பவர் மனத்தில் சுவையை விளேவிக்கும் வகையில் சைகைகள் தோற்றுவதும், அடிக்கடி மனநிகழ்ச்சிகள் மாறுவதை முகத்தில் புலப்படுத்து வதும், பிறகு 'ஓ' என அலறுவது அல்லது ஒரே சீற்றமாய் மாறுவது என்பன வெல்லாம் இவற்றிலடங்கும். இவையெல்லாம் ஒன்றுபடும்போதுதான் இரசந் தோன்றுகிறது. இவை எவ்வாறு ஒன்று கலக்கின்றன என்பதில் வடமொழி அறிஞர்களிடையே கருத்துவேறுபாடுண்டு. 'சுவை' என்பது காணப்படு பொருளில் இருக்கிறதா? காண்பவர் மனத்திலேயே இருந்து, அது தூண்டப்பெற்று வெளிப் படுகிறதா? என அவர்கள் விரிவாக ஆராய்ந்துள்ளனர். இது ஒருவகையில் உளவியல் ஆராய்ச்சி போன்றது. இவ்வகையான விரிவான சிந்தனையைத் தமிழில் காண இயலாது.

தமிழில் முதல், கரு, உரி, இயைபு வடமொழி இரசக் கோட்பாட்டுடன் நெருங்கிய ஒற்றுமையுடையது. முதலும் கருவும் உத்தீபன விபாவத்தையும் உரி ஆலம்பன விபாவத்தையும் குறிப்பிடுகின்றன. முதல், கரு, உரி, இயைபு சுவைத் தோற்றத்திற்கு அடிப்படையானது என்பதை அகத்திணை மரபு நன்கு வற்புறுத்துகிறது. வடமொழிக்கும் தமிழுக்கும் இதில் ஒரு வேறுபாடுண்டு. அங்கு நாட்டியரசமாகக் கூத்துக்கலேயுடன் சார்த்தி முதலிற் கூறப்படும் இது, இங்கு தொல்காப்பியத்திலிருந்தே இலக்கியத்துடன் சார்த்திக் கூறி விளக்கப் பட்டு வருகிறது. அதனுல்தான் தமிழில் ஒவ்வோர் அகப்பாடலும் நாடகம் போல் உள்ளன. தமிழில் கூத்தும் இலக்கியமும் இரண்டறக் கலந்து விட்டன என்றே கூறவேண்டும். தமிழில் கூத்துக்கலே வளரவில்லே என்பார் இதை உணரவேண்டும்.

### 'மெய்ப்பாடு' இலக்கியவுத்தி

மெய்ப்பாடு என்றவுடன் உடம்பில் தோன்றும் அசைவுகளே நினேவுக்கு வருவதால், அது நாடகத் தொடர்புடையதென்பது கூறுமலே பெறப்படுகிறது. ஆனுல் தொல்காப்பியர் தாம் கூறும் 'மெய்ப்பாடு' இலக்கியத்திற்கே உரிய தெனச் சுட்டிவிடுகிருர்.

உய்த்துணர் வின்றித் தலேவரு பொருண்மையின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்.

ஒன்றை மிகவும் ஆராயவேண்டாமல், அதனேக் கூறியவுடனேயே அதன் பொருளே மெய்ப்பாடு தோன்ற முடிப்பது மெய்ப்பாடாகும். இச்சூத்திரம் இளம்பூரணர், பேராசிரியர் போன்ற உரையாசிரியர்கட்கு மிக எளிதாக விளக்கங்கள் பெற உதவியது. இளம்பூரணர், ''செய்யுட் செய்வார் மெப்பாடு தோன்றச் செய்தல் வேண்டுமென்பது கருத்து'', எனவும்[4] ''இவ்விலக்கணம் கூத்தினுள் பயன்படல் உண்டாதலின் ஈண்டு வேண்டாவெனின், ஈண்டுஞ்

செய்யுட் செய்யுங்கால் சுவைபடச் செய்ய வேண்டுதலின் ஈண்டுங் கூறவேண்டும் என்க'' எனவும்[5] சுட்டிச் செல்கிறுர். பேராசிரியர் தம் விளக்கம் பலவற்றை நாடகநூலிற் போலக் கூறிச்சென்று, அவற்றை இலக்கியத்தில் ஏற்றிக் காட்டு கிறுர். இதனைப் 'பிறன்கோட் கூறல்' என்னும் உத்தி வகையால் பெறப்பட்டது என்பது போதரும்.

'பண்ணைத் தோன்றிய' என்பதற்கு இளம்பூரணர் 'விளையாட்டாயத்தின் கண் தோன்றிய' என உரை வரைந்தார். 'முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் முதலானேர் நாடக மகளிர் ஆடலும், பாடலும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டு' என விளக்கம் எழுதினர் பேராசிரியர். இவற்றிலிருந்து நாடகத்தினின்று பெறப்பட்ட இலக்கியவுத்தி இது என்பதைத் தொல்காப்பியமும் அதன் உரைகளும் நன்கு விளக்குவது பெறப்படும்.

**இரசக் கோட்பாட்டுடன் ஒற்றுமை வேற்றுமை**

அ. வடமொழியில் பரத முனிவர் 8 இரசங்களையும் 33 நிலைமாறும் மனவுணர்வுகளையும் 8 நிலையுணர்வுகளையும் (ஸ்தாயி பாவம்) 49 பாவங்களையும் பட்டியலிட்டு விளக்குகிறுர். ஸ்தாயி பாவம் என்பது நிலையான மனவுணர்வு. அது ஒவ்வொருவர் மனத்திலும் இருக்கிறது. எவ்வெப்போது அது வெளியிலிருந்து தூண்டப்படுகிறதோ, அவ்வப் பொழுதெல்லாம் அது வெளிப்படுகிறது. வியபிசாரி பாவம் என்பது சிந்திச் சிதறிஞற் போல் தடுமாறும் நிலையற்ற மனவுணர்வுகள். இரசம் என்பது இவற்ருல் வெளிப்படுவது.

| | | |
|---|---|---|
| ஸ்தாயிபாவம் | வியபிசாரிபாவம் | இரசம் |
| (கான்முளை) | (அரும்பு) | (மலர்) |

தொல்காப்பியம் இவ்வகை ஆய்வுக்கோ, மிக நுட்பமான உள்வகைகளுக்கோ இடம் கொடுக்கவில்லை. அவர் எட்டுச் சுவைகளும் எவ்வெவ் அடிப்படையில் தோன்றும் என விளக்குகிறுர். அவற்ருல் சுவை முப்பத்திரண்டாகும் என அவர் வரையறை செய்கிறுர். எடுத்துக்காட்டிற்கு அழுகை அல்லது அவலம் என்ருல் இளிவு அவலம் (இழிவு) இழவு அவலம் (இழப்பு), அசைவு அவலம் (தளர்ச்சி) வறுமையவலம் என நான்கு வகைப்படும் என்பது கருத்து. அச்சமென்ருல் அணங்கச்சம் (பேய்), விலங்கச்சம், களவச்சம், இறையச்சம் என நான்கு வகைப்படும். இங்ஙனம் அல்லாமல் உடைமை இன்புறல், அருளல், அடக்கம், அன்பு என இவ்வாறு முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளும் உண்டென அவர் கூறுகிறுர். இவை தவிர அகத்திணையில் களவுக்கால மெய்ப்பாடுகளாகவும் பிரிவுக்கால மெய்ப்பாடுகளாகவும் அவர் குறிப்பிடுவன தமிழ் இலக்கிய அடிப்படையில் இக்கோட்பாடு தோன்றி வளர்ந்துள்ளது என்பதை மெய்ப்பிக்கும்.

ஆ. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் தலைவன் தலைவியிடையே இருக்கவேண்டிய ஒப்புமைகளையும் இருக்கக்கூடாத பண்புகளையும் பட்டியலிடுவது ஏன் என்ற கேள்வி எழுகிறது. வடமொழி இரசக் கோட்பாட்டில் ஆலம்பன விபாவம் பற்றியறிந்தால் இவ்வினுவிற்கு விளங்கிக் கொள்ளத்தக்க விடை கிடைக்கும். இத்தகைய தலைவன் தலைவியராக இருந்தாற்ருன், மரபுப்படியான

விளக்கம் கூறும் இலக்கணத்திற்கு ஏற்ப, இலக்கியத்தில் சுவை தோன்றும். தொல்காப்பியர் இதனை மனங்கொண்டிருந்தாராதல் வேண்டும்.

இ. சங்குகர் என்னும் வடமொழியறிஞர் முருகுணர்ச்சியால் பெறும் சுவையின்பத்தை விளக்க ஓர் ஓவிய உவமையைப் பயன்படுத்தினர். ஒன்றிலிருந்து இன்பம் பெறுவதென்பது அதனைக் கண்டு சுவைப்பவரைப் பொறுத்தே பெரும்பகுதி இருக்கிறது. ஓர் ஓவியத்திலுள்ள குதிரையை உண்மையானதென்றும் நம்பலாம்; வெறும் திரை எனவும் எண்ணலாம். ஈடுபட்டுக் காண்பவர்கட்குத்தான் சுவை தோன்றுமேயன்றி மற்றவர்கட்குத் தோன்ருது. ஈடுபட்டுச் சுவைப்பவர்களைச் 'சஹிருதயா' என்பர். படைப்பவனேடு ஒன்று பட்டுக் கலையை நுகரவேண்டும் என்பதை இது வலியுறுத்துகிறது. தொல்-காப்பியர்

''கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க்கு அல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே'' *(1221)*

என்னும் மெய்ப்பாட்டில் இறுதி நூற்பாவில் இக்கருத்தை மிகவும் அழுத்தமாகக் கூறுகிருர். 'நன்னயப் பொருள்கோள்' என்று அவர் இங்கு மெய்ப்பாட்டைச் சுட்டுவது கருதத்தக்கது. செய்யுளைப் பொறுத்தவரை மெய்ப்பாடென்பது நல்ல நயமான பொருளைக் கொள்ளுதலே என இதனலறியலாம்.

ஈ. வடமொழியில் இடைக்காலத்தில் இக்கோட்பாடு சமயவுணர்வோடு விளக்கப்பட்டது. 'அலௌகிகரசம்' என அழைக்கப்பட்டதுடன் இது மனங் கடந்த பரவசம் என்றும் பேரின்ப வழிகாட்டி என்றும் விளக்கப்பட்டது. தமிழில் அகத்திணையைப் பெரிதும் சார்த்தி விளக்கப்பட்ட மெய்ப்பாடு, உலகியலையே சார்ந்து நின்றது.

உ. பரதமுனிவர் நாடகரசம் காவியரசம் என வேறுபடுத்தவில்லை. பிற்காலத்து அவ்விளக்கம் பெறப்பட்டது. தொல்காப்பியர் 'பண்ணைத் தோன்றியது' என்ருலும் ''தலைவருபொருளான்'' அமையும் ''நன்னயப் பொருள்கோளே'' என இதனை இலக்கியவுத்தியாக்கித் தெளிவுபடுத்தினர்.

'பண்ணைத் தோன்றிய' முப்பத்திரண்டும் பதினருகியடங்கும் என்பார் அவர்.

காண்பான்-காணப்படுபொருள்-மனக்குறிப்பு-விறல் (மெய்ப்பாடு)

இவை ஒவ்வொரு சுவையிலும் அமைவன; அதனல் முப்பத்திரண்டு ஆவன. இவற்றுள் காண்பானும் காணப்படுபொருளும் ஒரு பக்கமாகவும் மனக்குறிப்பும் விறலும் ஒரு பக்கமாகவும் ஒன்றினென்று இணைந்து பதினருகும் என்பார் பேராசிரியர்.

'நாலிரண்டாகும் பாலுமாருண்டே'' *(1196)* என்ற நூற்பா இலக்கியத்தில் இவையனைத்தும் இணைந்து (காட்சியும் உணர்வு வெளிப்பாடும் ஒன்று பட்டு) எட்டாகவே அமைந்துவிடும் என்று விளக்குகிறது.

இவையெல்லாம் உணர்த்தும் ஓர் உண்மை எதுவென்ருல் மெய்ப்பாடு அல்லது இரசம் என்பது இந்தியப் பொதுக் கோட்பாடு என்பதாகும். அதனைப் பரதமுனிவர் தாம் கற்ற இலக்கியத்திற்கும் மரபிற்கும் தம் கருத்துக்கும் ஏற்ப விளக்குகிருர்; தொல்காப்பியர் தாம் உணர்ந்த இலக்கிய மரபிற்கும், தம் திறமைக்கும் ஏற்ப விளக்குகிருர். ஒருவரை ஒருவர் அறிந்திருக்கலாம்; ஆனல் விளக்கங்கள் அவரவர் இலக்கியச் சார்புக்கு ஏற்பவே அமைந்துள்ளன.

**உருக்கோட்பாட்டுடன் ஒற்றுமை**

மேலைநாட்டு இலக்கியங்களில் 'உணர்வு'க் கூறு (Emotional Element) என்பது மிகவும் வலியுறுத்தப்படும். அதுவே மெய்ப்பாடு என மேலோட்டமாக ஆய்பவர் கூறுவர். ஆழ்ந்து கற்பார்க்கு இமேஜரி (Imagery) எனப்படும் 'உரு'வுடன், இம்மெய்ப்பாட்டுக் கோட்பாடு மிகவும் ஒற்றுமையுடையதாயிருப்பது புலனகும்.

இலக்கியத்தில் 'உரு' வென்பது மனவுருவாகும். ஐம்புல அனுபவத்தினுல் அது ஏற்படுகிறது. கண்ணுற் கண்டது போலவும், காதாற் கேட்டது போலவும் சொற் சித்திரம் அமையவேண்டும். மூக்கால் நுகர்வதுபோல், உடம்பால் தொட்டுணர்வதுபோல், வாயாற் சுவைப்பதுபோல் எழுதுவது இதிலடங்கும். ஒன்றைப் படித்தவுடன் ஐம்புல அனுபவம் ஏற்பட்டு, மனத்தில் ஒரு கற்பனையுலகம் தோன்றும். சி.டே.லூயிஸ் என்பார் 'இது சொற்களால் உருவாக்கப்படும் சித்திரம்' என்பார். ஒரு சொல், தொடர், அடைமொழி, உவமை, உருவகம், சொற்சித்திரம் எதுவும் 'உரு' வை உருவாக்கமுடியும். மோனை, உவமை, பொருளோசை, சொல்லாட்சி, உருவகம் என்ற கூறு எதுவும் 'உரு'வைப் படைக்கவியலும். திராட்சைமது (Wine) என்ருலும் சிவப்புமது (Red-wine) என்ருலும் தோன்ருத உரு, 'இரத்தச் சிவப்பான மது' (Blood-red wine) என்ருல் காட்சிப்படுத்தப்பட்டு மனத்திற்குள் 'உரு' வாகிறதென்பர்.[8]

கவிதையின் உயிர் உருக்காட்சியே. கவிதையை உரைநடையிலிருந்து வேறுபடுத்துவதும் அதுவே. காண்கின்ற பொருளையும் அதனுடன் தன்னை இணைத்த உணர்ச்சியையும் அதனல் விளைந்த அனுபவத்தையும் கவிஞன் தன் கவிதையில் தருகிருன். அதே உணர்ச்சி, அதே அனுபவம் ஆகியவற்றை நமக்கும் தந்துவிடுகிருன். இதுவே 'உரு' வின் பயன். ஒவ்வொரு கவிதையும் ஓர் உருவே. பொருள்கள், செயல்கள், நுண்பொருள்களை விளக்கமாகக் கூறும் ஆற்றலுடையது 'உரு'. மொழியமைப்பும் அதற்கு உறுதுணையாகும். புலன் அனுபவம் என்றும் கூறலாம். 'செந்தார்ப் பைங்கிளி' என்ருல் கிளியும் 'நெடுஞ்செவிக் குறுமுயல்' என்ருல் முயலும் கட்புலனுக்கப்பட்ட 'மொழி'த் துணைபுரிகிறது. நீண்ட சொற்சித்திரங்களும் உவமைகளும் இதே வேலையைத்தான் செய்கின்றன.

''எச்சிற்படுத்திக் கடித்துக்கொடுப்பான்' என்ற பாரதியின் கண்ணன் பாட்டில், கண்ணன் துள்ளிக் குதிக்கக் காண்கிருேம். ''எடும் எடும் என எழுபவர், திடும் திடும் என விழுபவர்'' எனவரும் கலிங்கத்துப்பரணி போன்ற சந்தத்தில் முரசோசை கேட்கிறது. அரிவாள் மணையில் வைத்து இரண்டாகப்

பிளந்த மாவடுவிற்குக் கண்ணை உவமை கூறும்போது, கண்ணின் சித்திரம் வரையப் படுகிறது. இதுபோல் வரும் உருக்காட்சிகளையெல்லாம் கற்றும், அவை பற்றிய திறனாய்வுகளைப் படித்தும் முடித்த பிறகு, நாம் தொல்காப்பியர் கூறும் மெய்ப் பாட்டினையும் அதற்குப் பேராசிரியர் கூறும் விளக்கங்களையும் படிக்கவேண்டும். அப்போதுதான் மெய்ப்பாடு 'உரு' போன்ற இலக்கியக்கோட்பாடென்பது முற்றிலும் விளங்கும்.

1. ''உய்த்துணர்வு இன்றித் தலைவரும் பொருளால்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடாகும்''

ஒரு கவிதையைப் படித்தவுடன், ஆராய்ச்சியின்றியே, மேலோட்ட மாகக் கண்ட பொருளாலேயே 'மெய்ப்படத் தோன்றுவது' மெய்ப்பாடாகும். மெய்ப்பட என்பதற்கு 'உருத் தோன்ற' என்பது போன்ற பொருளே கொள்ளக் கிடக்கிறது.

2. பெரும்பாலும் காட்சியுருவே அதிகம். ஆங்கிலத்தில் காட்சியுரு, பிறவுரு (Visual and Non-visual image) என்ற வகைப்பாடும், காட்சியுரு புலனல் உரு என்ற வகைப்பாடும் மிகுதி. காட்சியுருவிற்கு அடுத்தது செவியுரு. இவை இரண்டுமே தலைமையானவை. தொல்காப்பியர்,

''கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
. . . . . . . . . . . . . . . . . . . .
நன்னயப் பொருள்கோள்'' *(1221)*

என உணர்த்தியிருப்பது கருதத்தக்கது.

3. இளம்பூரணர் உவமவியல் முதல்நூற்பா விளக்கத்தில், வினை, பயன், மெய் உரு என்பன கட்புலனாவன எனக் கொண்டு, ''எனவே கட்புலமல்லாதனவு முள என்ற வாறும். அவை செவியினானும் நாவினானும் மூக்கினானும் மெய்யினானும் மனத்தினானும் அறியப்படுவன'' எனவும், ''இவ்விருவகையும் பாகுபடவந்த உவமையாம்'' எனவும் விளக்குவன ''உரு'த் தொடர்புடையன. உவமையும் உருவகமுமே உருக்காட்சி என்பார் கருத்தோடு இஃதொப்புமையுடையது.

'தம்மிலிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு' *(1107)* என்ற குறளைக்காட்டி 'மனத்தால் அறியப்பட்டது' என்று கூறும் விளக்கம் அருமையானது.

4. பேராசிரியர் செய்யுளியல் முதல் நூற்பாவுரையில், ''மெய்ப்பாடென்பது சொற் கேட்டார்க்குப் பொருள் கண்கூடாதல்'' என எழுதியுள்ள விளக்கம் 'உரு'விற்குரிய விளக்கமே போல இருப்பது வியப்பைத் தருகிறது.

செய்யுளியலில் தொல்காப்பியர் மெய்ப்பாட்டை விளக்குமிடத்தில்*(516)* பேராசிரியர் தரும் விளக்கம் இது: ''கவிப்பொருள் உணர்ந்தால், அதனானே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப்பாடென் றான், அது தேவருலகங் கூறினும் அதனைக் கண்டாங்கு அறியச் செய்தல்

செய்யுளுறுப்பாம் என்றவாறு..''தலைவரு பொருளான்'' எனவே, நோக்குறுப் பால் உணர்ந்த பொருட்பிழம்பினைக் காட்டுவது மெய்ப்பாடென்பது இதன் கருத்து. இக்கருத்தினுற் 'கவி' கண் காட்டும் எனவுஞ்சொல்லுப.''

இவை 'உரு'ப் பற்றிய ஆங்கில விளக்கங்களைக் கற்பார்க்கு, அவற்றுடன் எவ்வளவு தூரம் இவை ஒற்றுமையுடையன என்பதைத் தெளிவுறுத்தும்.

5. பேராசிரியர் மெய்ப்பாட்டியல் முதல் நூற்பாஉரை விளக்கத்தில்,—'மெய்ப் பாடென்பது பொருட்பாடு; அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்ருன் வெளிப்படுதல்'', எனக் குறிப்பிடுவது முழுக்க முழுக்க 'உரு' விளக்கம் போன்றுள்ளது.

மெய்யின்கண் தோன்றுவது மெய்ப்பாடென்பது முதல் விளக்கம்: மெய்ப்பாடு பொருட்பாடு என்பது இலக்கியவுத்தி என்ற மனநிலையில் எழுந்த விள க்கம், 'மெய்' என்பதே 'உரு'' மெய்ப்பாடு உருத்தோற்றம் (பாடு-தோன்றுவது) 'புலப்படுவதோராற்ருல் வெளிப்படுவது' என்ற விளக்கத்தில் 'புலப்படுவது' என்பதைச் சிந்தியுங்கள். புலனுக்கு அகப்படுவதே புலப்பாடு என்ருல் புலன் களுக்கு அனுபவ வடிவாகும் 'உரு'ப் பற்றிய விளக்கமே இதுவெனக் கோடலில் தவறின்று அல்லவா?

**உலகப் பொதுமை**

'மெய்ப்பாடு' உலகப்பொதுமைக் கோட்பாடாகும். தொல்காப்பியர் விளக்கமும் உரையாசிரியர்களின் விரிவுரையும் அதனை இன்றைய 'உரு' வைப் பற்றிய விளக்கம்போலவே காட்டுவது கருதத்தக்கது. வடமொழி விளக்கங்-களைவிடத் தமிழ் விளக்கம் 'உரு' வை ஒட்டிச் செல்லக் காண்கிறோம்.அகவே மெய்ப்பாட்டுக் கோட்பாட்டை உலகு தழுவிய இலக்கியக் கோட்பாடு எனப் போற்றுதல் தகும்.

### அடிக்குறிப்பு

1. தொல் இளம் பொருள் உரை, கழகம், சென்னை, 1969. சூ. 247.
2. மு.நூ.சூ: 245.
3. தொல்.பேரா.பொருள்.உரை, கணேசையர் பதிப்பு, சுன்னுகம், 1943. சூ.249
4. மு.நூ.இளம். உரை. சூ 505.
5. மு.நூ. சூ.247.
6. மு.நூ.பேரா.உரை.சூ.249.
7. Princeton Encyclopaedia of Poetry and Poetics, London, 1975 p. 363.
8. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், மதுரை, 1979. V. 184.

# தமிழ் எழுத்துச் சீரமைப்பு

குடந்தை வீரா. இராசகோபாலன்
(57 பெருமாள் முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை—600 014)

உலக மாமேதைகளில் ஒருவரான பெர்னாட்சா அவர்கள் மறைவதற்கு முன்னர் ''ஒரு மொழி உலகப் பொதுமொழி ஆவதற்கு முப்பத்தொரு எழுத்துகள் தேவை'' என்று கூறிச் சென்றுள்ளார். அங்ஙனம் நோக்குகையில் முப்பத்தொரு எழுத்துகளைக் கொண்ட தமிழ்மொழி உலகப் பொதுமொழி ஆவதற்குரிய தகுதியைப் பெற்றிருக்கிறது என்பது ஒருதலை.

''உயிரும் உடம்புமாம் முப்பது முதலே'' என்றார் நன்னூலார். இவற்றுடன் சார்பொலியாகிய ஆய்தம் ஒன்றைச் சேர்த்தால் முப்பத்தொரு எழுத்துகள் ஆகும். இம் முப்பத்தொரு எழுத்தொலிகளும் தமிழ்மொழியின் அடிப்படை ஒலி வடிவங்களாகும். இந்த அடிப்படையான ஒலி வடிவங்கள் அடிப்படையான வரி வடிவங்களாகின்றன. மெய்யொலியும் உயிரொலியும் கூடிப் பிறத்தலால் உண்டாகும் ஒலி 216—ம் சார்பொலி வடிவங்களாகும். இவைகள் உயிர்மெய்யொலி எனப்படும்.

எனவே, தமிழ் நெடுங்கணக்கில் 247 ஒலி வடிவங்கள் உள்ளன. இந்த 247 ஒலி வடிவங்களை வரி வடிவங்களில் குறிக்க நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 115 ஆகும். தற்போது தமிழ்நாடு அரசு அறிவித்துள்ள தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தால் 7 வரி வடிவங்கள் குறைகின்றன. அதாவது நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 108—ஆக ஆகின்றன.

தமிழ் வரி வடிவங்களில் அகரவுயிர்மெய்யெழுத்திற்கு வலப் பக்கத்தில் ஆகாரவுயிர்க்குறி அமையப் பெற்று ஆகார வுயிர்மெய்யெழுத்துக்கள் முறைமையாக அமைந்துள்ளது போன்று இகர, ஈகார வுயிர்மெய்யெழுத்துகளுக்கும் அதனதன் மேல் இடப்பட்டிருக்கும் இகர, ஈகார வுயிர்க்குறிகளை அகரவுயிர் மெய்யெழுத்திற்கு வலப்பக்கத்தில் முறையாக அமைக்கப்பெறுமாயின் முப்பத்தாறு வரி வடிவங்கள் குறையும். அதே போன்று ஒழுங்கற்ற உகர, ஊகார வுயிர்மெய்யெழுத்துகளுக்கும் உயிர்க்குறிகள் கண்டு அகர வுயிர் மெய்யெழுத்திற்கு வலப்பக்கத்தில் முறையாக அமைக்கப் பெறுமாயின் முப்பத்தாறு வரி வடிவங்கள் குறையும். ஆகத் தமிழ் வரி வடிவங்களில் 72 வரி வடிவங்கள் குறையும். அதாவது நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 36—ஆகக் குறையும். ஆனால் இகர, ஈகார, உகர, ஊகார வுயிர்க்குறி வரி வடிவங்கள் நான்கு புதியதாக சேர்வதால் நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 40—ஆக உயரும்.

உயிர்க்குறிகள் என்பது உயிரெழுத்துகளைக் குறிக்க இடப்படும் அடையாளக் குறியீடுகள் ஆகும். —கரம், —காரம் என்பது எழுத்தைக் குறிப்பதாகும்.

மெய்யுடன் உயிர் சேர்வதால் உயிர்மெய் உண்டாயிற்று என்பர். அவ்வகையில் ஆகார வுயிர்மெய்யெழுத்து, அகர வுயிர்மெய்யெழுத்திற்கு வலப் பக்கத்தில் ஆகார வுயிர்க்குறியைப் பெற்று ஓர் ஒழுங்கு முறையில் அமைந்துள்ளது. ஆனால் எகர, ஏகார, ஐகார வுயிர்மெய் யெழுத்துகள் அங்ஙனம் அமையாது, அகர வுயிர்மெய் யெழுத்திற்கு இடப் பக்கத்தில் அதனதன் உயிர்க் குறிகளைப் பெற்று ஓர் ஒழுங்கற்ற முறையில் அமைந்துள்ளன. ஆகவே, எகர ஏகார, ஐகார வுயிர்மெய்யெழுத்துகளை ஆகார வுயிர்மெய் யெழுத்துகளைப் போன்று அகர வுயிர் மெய்யெழுத்திற்கு வலப் பக்கத்தில் அதனதன் உயிர்க் குறிகளை அமையச் செய்து ஓர் ஒழுங்கு முறைப்படுத்துதல் இன்றியமையாத தாகும்.

எகர வுயிர்க்குறியையும், ஆகார வுயிர்க்குறியையும் அகர வுயிர்மெய் யெழுத்திற்கு இடப்பக்கமும், வலப்பக்கமுமாக இரு பக்கங்களிலும் இரு உயிர்க் குறிகளை ஓர் ஒழுங்கில்லாது பெற்று ஒகர வுயிர்மெய்யெழுத்து அமைந்துள்ளது. அதே போன்று ஏகார வுயிர்க்குறியையும், ஆகார வுயிர்க்குறியையும் அகர வுயிர்மெய்யெழுத்திற்கு இடப்பக்கமும், வலப்பக்கமுமாக இரு பக்கங்களிலும் இரு உயிர்க் குறிகளை ஓர் ஒழுங்கில்லாது பெற்று ஓகார வுயிர்மெய்யெழுத்து அமைந்துள்ளது. ஒகர, ஓகார வுயிர்மெய்யெழுத்துகளுக்குச் சிறிது மாறுபாடாக எகர வுயிர்க்குறியையும், அகர வுயிர்மெய்யெழுத்தாகிய ளகரத்தையும் அகர வுயிர்மெய்யெழுத்திற்கு இடப்பக்கமும், வலப்பக்கமுமாக இரு பக்கங்களிலும் இரு உயிர்க்குறிகளை ஓர் ஒழுங்கில்லாது பெற்று ஔகார வுயிர்மெய்யெழுத்து அமைந்துள்ளது. ஆக, ஒகர, ஓகார, ஔகார வுயிர்மெய் யெழுத்துகள் ஓர் ஒழுங்கற்ற நிலையில் அகர வுயிர்மெய் யெழுத்திற்கு இடமும், வலமுமாக இருபக்கங்களிலும் இரு உயிர்க்குறிகளைப் பெற்று அமைந்துள்ளன. ஒரு மெய்யோடு ஓர் உயிர் சேர்கையில் எங்ஙனம் இரு வுயிர்க்குறிகள் தோன்றுதல் முறைமையாகும்? ஒரு மெய்யோடு ஓர் உயிர் சேர்கையில் ஓர் உயிர்க்குறி தோன்றுதலே முறைமையாகும். எனவே, ஒகர, ஓகார, ஔகார உயிர்மெய் யெழுத்துகளும், ஆகார,இகர,ஈகார,எகர,ஏகார,ஐகார வுயிர் மெய்யெழுத்து களைப் போன்று ஓர் உயிர்க்குறியைப் பெற்று ஓர் ஒழுங்கு முறையில் அமைதலே சாலப் பொறுத்தமுடையதாகும். அதனால் குழப்பங்கள் குறையும். ஒகர ஓகார ஔகார வுயிர்மெய்யெழுத்துகள் மூன்று வரி வடிவங்களுக்குப் பதிலாக இரு வரி வடிவங்களைப் பெறும். ஒரு வரி வடிவம் குறையும். இம் மாற்றங்களால் ஒகர, ஓகார, ஔகார வுயிர்க்குறி வரி வடிவங்கள் மூன்று புதியதாகச் சேர்வதால் நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 43— ஆக ஆகும்.

தமிழ் உயிரெழுத்திலிருந்து ஐகாரம் ஔகாரம், நீங்கின் உயிர்க்குறிகள் உள்பட 4 வரி வடிவங்கள் குறையும். அப்போது நினைவில் கொள்ள வேண்டிய வரி வடிவங்கள் 39— ஆகக் குறையும்.

ஐகார, ஔகாரங்கள் — கூட்டொலிகள் என்பது எல்லோரும் ஒத்துக் கொண்ட ஒன்றாகும். இக்காலத்தில் பெரும்பாலோர் ஐகார, ஔகாரங்களுக்கு அகரத்திற்கு வலப்பக்கத்தில் யகரமெய்யையும், வகரமெய்யையும் இட்டு எழுது கின்றனர். ஐகார, ஔகாரங்கள் நீக்கின் யாப்புச் சிதைந்து விடுமே என்பர். இங்கே சொல்லப்படுவது ஒலி வடிவ மாற்றங்கள் அல்ல: வரி வடிவ மாற்றங் களே என்பதை அவர்கள் உணர்தல் வேண்டும். எனவே, யாப்பொன்றும் சிதைந்து விடாது. நெடிலாக ஒலிக்குமிடங்களில் இரு மாத்திரையும், குறி லாக ஒலிக்கும் இடங்களில் ஒரு மாத்திரையும் கொண்டு அலகிடுவதில் தவ றொன்றுமில்லை. ஒலி வடிவங்களுக்குத்தான் மாத்திரைகளே தவிர, வரி வடிவங்களுக்கு அல்ல. எனவே, பழந்தமிழ் இலக்கியங்கள் பாதிக்கப்பட மாட்டா. மாத்திரை என்பது ஒலிக்கின்ற கால அளவாகும்.

சுருங்கச் சொன்னால் தமிழ் வரி வடிவங்கள் 39 ஆகும். ஆங்கில ஒலி வடிவம் 26 எனினும், ஒரே எழுத்துப் பல வகையாக ஒலிக்கும் வேற் றொலிகளையும், பல எழுத்துகள் சேர்ந்து ஒரெழுத்தாக ஒலிக்கும் கூட்டொலி களையும் நோக்கின், ஆங்கில எழுத்துக்களை விடத் தமிழ் எழுத்துக்கள் குறை வேயாகும். ஆங்கில வரி வடிவம் அச்செழுத்துப் பெரிது, சிறிது; கையெழுத் துப் பெரிது, சிறிது ஆக 104 வரி வடிவங்கள் ஆகின்றன. எனவே, ஆங்கிலத் தனி வடிவெழுத்தை விடத் தமிழ் வடிவெழுத்துச் சொல்வதில் 13 மிகுதியா கவும், எழுதுவதில் 65 குறைவாகவும் ஆகும். ஆங்கிலம் போல படிப்பது வேறு, எழுதுவது வேறு என்னும் வேறுபாடு தமிழ் எழுத்திற்கில்லை.

**பயன்**

அச்சுக்காகவோ, தட்டச்சுக்காகவோ இம் மாற்றங்கள் அல்ல. தமிழ் வரி வடிவங்கள் மிகவாகக் குறைவதால் சொல்லவும், எழுதவும் தெரிந்து கொள்ளும் காலம் மிகமிகக் குறையும். கற்பார்க்கு, ''இத்தனை எழுத்தா?'' என்னும் மலைப்பு நீங்குமாகையால், கற்பதில் ஆர்வம் செல்லும். செல்லவே, குறைந்த நாளில், எளிதில் தமிழ் எழுத்தறிவைப் பெறும் பெரும் பயன் உண் டாகும். ''தமிழ், எழுத்து மிகுதியுடைய மொழி'' என்னும் குறைபாடும் நீங்கும். தமிழர்கள் உலக மொழியாளர் முன் ஏறுபோல் நிமிர்ந்து நிற்க ஏதுவாகும். பிற திராவிட மொழியாளர்களும் தமிழைக் கற்கத் தலைப்படுவர். ''மனத்தைக் கவரும் ஓர் இனிய மொழி தமிழ். இந்தியாவில் ஒரே இனம் ஏற்பட வேண்டுமானால் சென்னை மாநிலத்திற்கு அப்பால் உள்ளவர்களும் தமிழைக் கற்க வேண்டும்'' என்னும் காந்தியடிகளின் விருப்பம் நிறைவேறும்.

இதுகாறும் கூறியவைகள் ஓரளவான தமிழ் எழுத்துச் சீர்திருத்த மாகும். இனி முழுமையான தமிழ் எழுத்துச் சீர்த்திருத்தத்தைக் காண்போம்.

**மெய் வரி வடிவ மாற்றங்கள்**

அகர வுயிர்மெய் யொழிந்த ஏனைய உயிர்மெய்கள் ஏதாவதொரு வகையில் உயிர்க்குறிகள் பெற்று அமைந்திருக்கையில் அகர வுயிர்மெய் உயிர்க்குறி பெறாது அமைந்துள்ளது யாங்ஙனம்? ஒரு காலத்தில் அகர வுயிர்க்குறியாக

புள்ளி இருந்திருக்க வேண்டும், அவ் வுயிர்க் குறியைப் புள்ளி மேவாத மெய் மேலிட்டு அகர வுயிர்மெய்யெழுத்தாக வழங்கி வந்திருக்க வேண்டும். அதனைப் பிற்காலத்தார் புள்ளி மேவிய அகர வுயிர்மெய்யை மெய்யெழுத் தாகவும், புள்ளி மேவாத மெய்யை அகர வுயிர்மெய் யெழுத்தாகவும் கொண் டிருக்க வேண்டும். அதுவே தற்கால வழக்காக வந்திருக்க வேண்டும்.

அகர வரி வடிவத்தில் தொடக்கச் சுழியைத் தவிர ஏனைய எல்லாப் பகுதிகளையும் நீக்கி, எஞ்சி நிற்கும் பகுதியாகிய சுழியைப் புள்ளி மேவாத மெய்களுக்கு வலப்பக்கத்தில் அகர வுயிர்க்குறியாகக் கொண்டு அகர வுயிர் மெய்கள் அமைந்திருக்க வேண்டும். காலப் போக்கில் அகர வுயிர்க் குறியாகிய சுழி புள்ளியாக மாறியிருக்க வேண்டும். சொற்றொடர்க் குறிகள் கண்ட பின்னர் முற்றுப் புள்ளிக்கும், அகர வுயிர்க்குறிப் புள்ளிக்கும் வேறுபாடு தெரி யாது குழப்பம் ஏற்பட்டிருக்க வேண்டும். எனவே, அக்குழப்பத்தைப் போக்கக் கருதிப் புள்ளி மேவாத மெய்களுக்கு வலப் பக்கத்திலிருந்த அகர வுயிர்க்குறி யாகிய புள்ளியைப் புள்ளி மேவாத மெய்களின் தலைக்கு மேலிட்டு அகர வுயிர்மெய்களாகக் கொண்டிருக்க வேண்டும். உலக மொழிகளிலே எந்த ஒரு மொழியிலும் மெய்களுக்குப் புள்ளி இருப்பதாகத் தெரியவில்லை.

ஆகவே, தற்போது மெய் வரிவடிவங்களாக வழங்கப்படும் வரி வடி வங்களை அகர வுயிர்மெய் வரி வடிவங்களாகவும், அகர வுயிர்மெய் வரி வடிவங்களாக வழங்கப்படும் வரி வடிவங்களை மெய் வரி வடிவங்களாகவும் தமிழ்மொழி எழுத்திலக்கணத்தில் சிறிது மாற்றம் செய்து, புள்ளிக்குப் பதி லாக வேறொரு உயிர்க்குறி கண்டு புள்ளி மேவாத மெய்யின் வலப்பக்கத்தில் அமைத்து அகர வுயிர்மெய்யாகக் கொண்டால் கால வேகத்தில் உயிர் எழுத்து வேறு, உயிர்க்குறி வேறு என்ற நிலை மாறும்,

தலைக்காக குல்லாயே தவிர, குல்லாய்க்காகத் தலை அல்ல என்பதை உணர்தல் வேண்டும். மொழி வளர்ச்சிக்காக இலக்கணமே தவிர, இலக்கணத் துக்காக மொழி அல்ல என்பதை உணர்ந்து, கால ஓட்டத்தைக் கருத்தில் கொண்டு தமிழ்ப் பேரறிவாளர்கள் தற்கால மொழி வளர்ச்சிக்கேற்ற வகையில் பாமரரும் எளிதில் கற்றுணரும் வண்ணம் எளிய இனிய தமிழ் இலக்கண நூலொன்று யாத்து, தமிழன்னையை மகிழ்விப்பார்களாக.

**உயிர்மெய் வரி வடிவ மாற்றங்கள்**

மெய்யெழுத்திற்குப் பின் உயிர் எழுத்து அமைத்து, உயிர்மெய்யாகக் கையாண்டு வந்த பழந்தமிழர்கள் பின்னர் உயிர் வரி வடிவம் அளவில் பெரி யதாக இருப்பதால் அதை விடுத்து, உயிர்க்குறி கொண்டு உயிர்மெய்யை உருவாக்கினர். உயிர்க்குறிகள் உயிரெழுத்துகளே ஆகுங்கால் அல்லது உயிர்க் குறிகள் ஒழிய உயிரெழுத்துகளே நிற்குங்கால், ஆங்கிலத்தில் மெய்யெழுத்திற் குப் பின் உயிர் எழுத்து அமைந்து உயிர்மெய் யாதல் போன்று மீண்டும் தமிழ் மொழியில் மெய்யெழுத்திற்குப் பின் உயிரெழுத்து அமைந்து உயிர் மெய்யாகும் நிலை உருவாகும். அப்போது ஆங்கிலம் போன்று தமிழ் மொழியிலும் உயிர்மெய்க்கென்று தனி வரிவடிவங்கள் வேண்டாது ஒழிய ஆங்

கிலம் போன்று நவீனமடையும். உயிர்மெய்–மெய்யும் உயிரும் இணைந்த இரு வரிவடிவங்களைக் கொண்டதாக அமையும். உயிர்மெய் என்பது தலை தடுமாற்றமாகும். மெய்யுயிர் என்றே வழங்கல் வேண்டும்.

**உயிர், உயிர்க்குறி. மெய் வரி வடிவ அமைப்புகள்.**









**4, 5,சமகோட்டில் அடங்கும் புள்ளி மேவாத மெய் வரிவடிவங்களை 3- சமகோட்டில் அடக்குதல் :-**





**வரைப்படம் (Block)**

இங்ஙனம் மாறுகையில் தமிழ் வரி வடிவங்கள் 29— ஆகக் குறையும் அப்போது ஆங்கிலத் தனி வடிவெழுத்தை விடத் தமிழ் வடிவெழுத்துச் சொல்வதில் 3 மிகுதியாகவும், எழுதுவதில் 75 குறைவாகவும் ஆகும். ஆங்கில மொழியில் உயிர்க்குறில்களுக்குத் தனி நெடில் வடிவங்கள் காண்பார்களாயின் 30 ஒலி வடிவங்களைப் பெறும். அப்போது ஆங்கிலத் தனி வடிவெழுத்தை விடத் தமிழ் வடிவெழுத்துச் சொல்வதில் ஒன்றும், எழுதுவதில் 91—ம் குறைவாகும்.

இனி வரி வடிவ அமைப்புப் பற்றி ஒரு சிறிது ஆராய்வோம். (139-ம் பக்கத்தில் வரைபடத்தைப் பார்க்கவும்.

1. உயிர் வடிவம்

உயிர் வரி வடிவங்களில் அகரம், ஈகாரம், உகரம் ஊகாரம், எகரம், ஐகாரம் ஆகிய ஆறு உயிர் வரி வடிவங்களும் மூன்று சம கோட்டிலும், ஆகாரம், ஏகாரம் ஆகிய இரு உயிர் வரிவடிவங்களும் நான்கு சம கோட்டிலும், இகரம் ஐந்து சம கோட்டிலும், ஒகரம், ஓகாரம், ஔகாரம் ஆகிய மூன்று உயிர் வரி வடிவங்களும் ஆறு சம கோட்டிலும் அடங்குவன.

அகர, எகர, ஒகர உயிர்க்குறில் வரி வடிவங்களுக்கு இயைபாக உயிர் நெடில் வரி வடிவங்களும், உகர உயிர்க்குறில் வரி வடிவத்துக்கு ஓரளவுஇயைபாக உயிர் நெடில் வரி வடிவமும் அமைந்துள்ளன. ஆனால் இகர உயிர்க்குறில் வரி வடிவத்துக்கு இயைபற்ற நேர்மாறான வேற்று வடிவம் அமைந்துள்ளது. பண்டைக் காலத்தில் இகர உயிர்க்குறில் வரிவடிவத்துக்கு இயைபாக இகர இறுதியில் சுழியுடன் முடிவடையும் உயிர் நெடில் வரி வடிவம் அமைந்திருக்க வேண்டும். அது பிற்காலத்தில் தற்பொழுது வழங்கும் 'ஈகாரம்' என்ற வரி வடிவமாக மாறியிருக்க வேண்டும். ஐகார, ஔகார உயிர் நெடில் வரி வடிவங்களுக்கு இயைபாக உயிர்க்குறில் வரி வடிவங்கள் இல்லாததையும் ஓர்தல் வேண்டும். ஊகார, ஔகார உயிர் நெடில் வரி வடிவங்கள் ளகர வுயிர் மெய் வரி வடிவங் கொண்டு அமைந்துள்ளதைக் காண்க.

2. உயிர்க்குறி வரி வடிவம்

பழந்தமிழர்கள் மெய் வழி உயிர்வரின் உயிர்மெய்யெனக் கொண்டிருக்க வேண்டும். பின்னர், உயிர் வரி வடிவங்கள் அளவில் பெரியதாக இருப்பதாலும், எழுதுவதற்குக் கடினமாக இருப்பதாலும், அதிக நேரம் ஆவதாலும் எளிமை கருதி உயிர்க்குறி கண்டு, உயிர்மெய்களுக்குத் தனி வரி வடிவங்கள் அமைத்திருக்க வேண்டும்.

அகர வரி வடிவத்தின் தொடக்கச் சுழியைக் கொண்டு அகரவுயிர்க்குறி அதாவது தற்பொழுது மெய்களுக்கு இடப்படும் மெய்க்குறியும், அகர வரி வடிவத்தின் முற்பகுதியைக் கொண்டு ஆகார வுயிர்க்குறியும், இகர வரி வடிவத்தின் முற்பகுதியைக் கொண்டு இகர வுயிர்க்குறியும், ஈகார வரி வடிவத்தின் முற்பகுதியைக் கொண்டு ஈகார வுயிர்க்குறியும், ஓகார வரி வடிவத்தின் கீழ்ப்பகுதியைக் கொண்டு எகர வுயிர்க்குறியும், மேற்பகுதியைக் கொண்டு ஏகார வுயிர்க்குறியும்; ஐகார வரி வடிவத்தின் மேற்பகுதியைக் கொண்டு ஐகார

வுயிர்க்குறியும் அமைந்துள்ளதை உய்த்துணரலாம். இவைகளைத் ''தமிழ் எழுத்துச் சீர்திருத்தப் புரட்சி'' எனும் எம் நூலில் தெள்ளத் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. எனவே, இங்கு விரிப்பின் பெருகும்.

### 3. புள்ளி மேவாத மெய் வரி வடிவம்

புள்ளி மேவாத மெய் வரி வடிவங்களில் ஞகர, தகர, நகர, ரகர, ழகர, றகர என்னும் ஆறு மெய்கள் ஒழிய ஏனைய மெய்கள் மூன்று சம கோட்டில் அடங்குவன. ஞகர, தகர, நகர, ரகர, றகர என்னும் ஐந்து மெய்கள் நான்கு சம கோட்டிலும்; ழகர மெய் ஐந்து சம கோட்டிலும் அடங்குவன.

இங்கே வரைபடத்தின் கண் குறிக்கப்பட்டுள்ள உயிர்க்குறி வரி வடிவங்கள் எல்லாம் மூன்று சம கோட்டில் அடங்குவதாகவும், எழுதுவதற்கும் கற்பதற்கும், கற்பிப்பதற்கும் எளிதாகவும், உயிர் வரி வடிவங்களை விட அளவில் சிறியதாகவும், ஓர் அளவாகவும், சீராகவும், அழகுடையதாகவும், மனதில் நன்கு பதியக் கூடியதாகவும், ஓர் ஒழுங்கு முறைக்கு உட்பட்டதாகவும் பழக்கப்பட்டதாகவும் அமைந்துள்ளதைக் காணலாம். எனவே, நடை முறையிலுள்ள உயிர் வரி வடிவங்களுக்குப் பதிலாக உயிர்க்குறி வரி வடிவங்களை உயிர் வரி வடிவங்களாகக் கொண்டால் பெரும் பயன் விளையும் என்பது திண்ணம். உயிர் வேறு உயிர்க்குறி வேறு என்ற பேதங்களும் ஒழியும். பண்டைக் காலத்தில் கையாளப்பட்டு வந்த முறையான மெய் வழி உயிர்வரின் உயிர்மெய் என்ற நிலைமை மீண்டும் தோன்றும். உயிர்மெய்க்கு என்று தனி வரி வடிவங்கள் வேண்டாது போகும். உயிர்மெய்க்கு என்று தனி வரி வடிவங்கள் இல்லாது ஒழிவதனால் மொழிக் கொன்றும் பாதிப்பு வந்து விடப் போவதில்லை.

உயிர்மெய்க்கு என்று தனி வரி வடிவம் இல்லாது போகுமானால் எழுதுகையில் சொற்கள் அளவில் நீண்டதாக இருக்குமென்பர். இங்குக் காட்டப்பட்டுள்ள உயிர்க்குறிகள் பெரும்பாலும் சதுர வடிவுடையதாக அமைந்துள்ளதைக் காணலாம். அதனால் எழுதுகையில் சொற்கள் அளவில் நீள்வதற்கு நியாயமில்லை. எனவே, தற்போதைய அளவில் பெரும் அளவு மாற்றம் விளைவதற்கில்லை.

அதே போன்று புள்ளி மேவாத ஞகர, தகர, நகர, ரகர, ழகர, றகர என்னும் ஆறு மெய்கள் மூன்று சமகோட்டில் அடங்கும் வகையில் திருத்தம் செய்யப்பட்டுள்ளதைக் காண்க. இம் மாற்றங்களை வடவெழுத்துகளுக்கும் கொள்ளலாம்.

### பயன்

இம்மாற்றங்களால் தமிழ்மொழி வளர்ச்சிக்குத் தடைக் கல்லாக இருந்து வரும் ஓர் ஒழுங்கு முறையற்ற வரி வடிவத் தொல்லைகள் ஒழிய ஓர் ஒழுங்கு முறையான வரி வடிவங்கள் அமையப் பெறும். இதுகாறும் தமிழ் வரி வடிவங்களின் பாலுள்ள பெருங்குறை நீங்குவதோடு காலக்கேடும், பெரு முயற்சியும் பெருமளவு குறையும். எழுத்துப் பயிற்சியும் மிக மிக எளிதில் அமையுமாகையால் எழுத்தறிவின்மையை மிக மிக எளிதில் போக்கலாம். முதியோர் கல்விக்கும்

பெரும் பயன் அளிக்கும். பிற மொழியாளர்களும் தமிழ்மொழியை விரும்பிக் கற்கத் தலைப்படுவர். அதனால் தமிழ்மொழி கற்போர் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருக, தமிழ்மொழி வளர்ந்தோங்கிச் செழிக்கும். மேலும் திராவிட மொழிக் குடும்பத்திற்கு ஒரு பொதுவான வரி வடிவம் உருவாக ஏதுவாகும். மத்திய அரசில் திராவிட மொழிக் குடும்பத்தின் தலையாய மொழியாம் நம் அருந் தமிழ்மொழியை மத்திய அரசின் ஆட்சிமொழியாக ஆக்க வேண்டு மென்று போராடும் இக்காலத்தில் இம்மாற்றங்கள் இன்றியமையாதன.

**அச்சுந் துறை**

அச்சகத்தில் அச்செழுத்துகளைப் போட்டு வைக்கும் பொதுவான அச்சுப் பெட்டியில் தற்பொழுது 199 அறைகள் இருக்கின்றன. தமிழ்நாடு அரசு அறிவித்துள்ள தமிழ் எழுத்துச் சீர்த்திருத்தத்தால் 7 அறைகள் குறையும். அதாவது 192 அறைகளாகும். மேலும் ஓரளவு தமிழ் எழுத்துச் சீர்திருத் தத்தை மேற்கொண்டால் 90 அறைகளாகும். முழுமையான தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தை மேற்கொண்டால் 80 அறைகளாகும்.

ஆங்கிலத்தில் 151 அறைகள் உள்ளன. ஓரளவு தமிழ் எழுத்துச் சீர் திருத்தத்தை ஏற்றால் ஆங்கிலத்தை விடத் தமிழில் 61 அறைகள் குறைவாக வும் முழுமையான சீர்திருத்தத்தை ஏற்றால் 71 அறைகள் குறைவாகவும், ஆகும். அதனால் அச்சு வார்க்க அதிக ஈயம் வேண்டாது போகும். அச்சுப் பெட்டி சிறியதாக ஆவதினால் இட நெருக்கடியும், முதலீடு செய்யும் தொகை யும் வெகுவாகக் குறையும். லைனோ, மோனோ போன்ற அச்சுகளுக்கும் பெரும்பயன் அளிக்கும். எனவே, தமிழ் அச்சுக்கலை மிகச் சிறப்பாக வளர்ந் தோங்கிச் செழிக்கும். விளக்கம் எம் நூலின்கண் காணலாம்.

**தட்டச்சுத் துறை**

இப்போதுள்ள தமிழ் தட்டச்சுப் பொறியில் 45 அல்லது 47 விரல்கள் இருக்கின்றன. ஓரளவு எழுத்துச் சீர்திருத்தங்களை மேற் கொண்டால் தமிழ் தட்டச்சுப் பொறி 30 விரல்களைக் கொண்டதாக அமைத்துக் கொள்ளலாம். முழுமையான எழுத்துச் சீர்திருத்தங்களை மேற்கொண்டால் 30 விரல்களைக் கொண்டதாக அமைத்துக் கொள்ளலாம். அவ்வாறு குறையும் போது தமிழ் தட்டச்சுப் பொறி ஆங்கிலத் தட்டச்சுப் பொறியை விடச் சிறியதாகும்.

தட்டச்சுப் பொறியில் இடைத்தூக்கு (Medium Shift) அமைக்க இயலு மாயின் தமிழ், ஆங்கிலம் இரண்டும் கொண்ட தட்டச்சுப்பொறியை 40 விரல்களில் உருவாக்க இயலும். அப்போது தமிழுக்கென்றும், ஆங்கிலத்துக் கென்றும் தனித்தனி தட்டச்சுப் பொறிகள் தேவையில்லாது போகும். எனவே செலவு குறையும். விளக்கம் எம் நூலின் கண் காணலாம்.

ஆங்கிலத் தட்டச்சுப் பொறி போன்று, தமிழ் தட்டச்சுப் பொறி உருவாக்க முடியும். ஒரு தட்டச்சுப்பொறி பயிற்சியுடைய தட்டச்சாளர் தமிழ் ஆங்கிலம், ஆகிய இரு தட்டச்சுப் பொறிகளையும் கையாளும் நிலை உருவாக் கலாம். ஆங்கிலத்திற்கென்றும், தமிழிற்கென்றும் தனித்தனிப் பயிற்சி தேவை

யில்லாதும் போக்கலாம். ஒரு எழுத்தை உருவாக்க 2 அல்லது 3 தட்டுகள் தட்டும் தொல்லைகள் ஒழியும். நிறுத்தச் சாவிகளும் (Dead Keys) தேவை யில்லாது போகும். ஒரு எழுத்துக்கு ஒரு தட்டுத்தட்டினால் போதுமான தாகையால் ஆங்கிலத் தட்டச்சுப் பொறி போன்று எளிதாகும். மேலும் இச் சுருக்கம் சுருக்கெழுத்து எழுதுவதற்கும், தந்தி அடிப்பதற்கும் எளிதாகும்.

**பயன்**

அச்சுப் பெட்டியில் அறைகள் மிகுதியாக வேண்டியதில்லை. அச்சுக் கோத்துப் பழகவும் நாளாகாது. மேலும், அச்சுக் கோப்போர் ஆடும் நட ராசர் நர்த்தனமும் குறையும். அச்செழுத்து வார்ப்பதும் கடுமையாக இருக் காது. தமிழ் தட்டச்சுப் பொறி செய்யக் கடுமையாக இல்லாததோடு, விலை குறைவும், பழகக் காலமும் குறைகின்றன. அச்சடிப்பதும் எளிதாகிறது. அதனால் வணிக மனைகளிலும். அலுவலகங்களிலும் தமிழ் இருக்குமிடத்தில் ஆங்கிலம் ஆட்சி செலுத்த முடியாது. ஆகையால் இயன்ற வரையிலும் வடி வெழுத்துகளைக் குறைப்பதே யாவற்றிற்கும் எளிதாவதோடு, தமிழ்மொழி சிறப்படைவதற்கும், வளர்வதற்கும் ஏதுவாகும்.

**முடிவுரை**

தசாம்ச நாணயம், மெட்ரிக் அளவைகள் வந்தபோது ஏற்பட்ட சங் கடத்தை அட்டவணையிட்டுப் போக்கியது போன்று, தற்போதுள்ள நூல் களில் பழைய வரி வடிவம், புதிய வரி வடிவம் என்ற அட்டவணைகளைத் தயாரித்து ஒட்டிச் சங்கடத்தைப் போக்கலாம். இங்கே குறிக்கப்பட்டுள்ள வரி வடிவங்களெல்லாம். பெரும்பாலும் பழக்கத்தில் உள்ளவைகளே; புதியவைகள் அல்ல. அதனால் சங்கடங்களை எளிதில் போக்குவதற்கு இயலும். மேலும் தட்டச்சுப் பொறி போன்றவைகளைத் தயாரிப்பதற்குப் பெரும் பொருள் செலவாகுமென்பர். அப்படியொன்றும் பெரும்பொருள் செலவாவதற்கில்லை. இருக்கின்றவைகளைச் செப்பனிட்டாலே போதுமானது. பெரும்பொருள் செல வாகுமே என்று வாழ்க்கைக்குத் தேவையானவைகளைச் செய்து கொள்ளாமலா விட்டு விடுகிறோம்? இல்லையே.

இதுகாறும் அச்சடித்து வைத்திருக்கும் நூல்களை என்ன செய்வது? பெரும்பொருள் இழப்பாகுமே என்பர். நூல்களை அச்சடித்து வைத்து இருக் கிறோமே; பெரும்பொருள் செலவாகுமே என்று மலைத்து முன்னேற்றத்திற் குரிய மாற்றங்களை ஏற்க மறுப்பது அறிவுடைமையாகுமா? பழைய நூல் களைப் புதிய வரி வடிவில் ஒரு காலக் கெடுவுக்குள் புதுப்பித்துக் கொள்ள முனைய வேண்டும். அப்பொழுது நல்ல நூல்கள் நிலைக்க, தீய நூல்கள் ஒழிய ஏதுவாகும். பெரும்பொருள் செலவாகுமே என்று ஏங்குவதை விட்டு விட்டு, அதற்குரிய வழிவகைகளைக் காண முனைவதுதான் அறிவுடையார் செயலாகும். அரசாங்கம் ஒரு பதிப்பிற்காவது மானியம் வழங்கி உதவ முன் வர வேண்டும். அதனால் ஓரளவு பிரச்சனைகளைத் தீர்க்க இயலும். எனவே இந்த வாதம் சரியான வாதமாகாது.

வரி வடிவ மாற்றங்களைச் செய்ய முனைகையில் ஓர் ஒழுங்கு முறைக்கு உட்படாது மனம் போன போக்கில் செய்ய முனைதல் அறிவுடைமையும் ஆகாது—அறிவுடையார் செயலும் ஆகாது. மொழியியல் அறிஞர் வின்ஸ்லோ ''கிரேக்க மொழி தொன்மை வாய்ந்த மொழி. ஆனாலும் கிரேக்க மொழி யிலே கூட இல்லாத நளினமும், துல்லியமும் தமிழ்மொழியில் இருக்கிறது.'' என்று கூறியிருக்கிறார். எனவே, வரி வடிவங்களைக் குறைக்கிறோமென்று தமிழ்மொழியின் வாழ்வை—வளத்தைச் சிதைத்து விடக் கூடாது. ''தமிழ் எழுத்துச் சீர்திருத்தப் புரட்சி'' எனும் எம் நூலின்கண் பல்லோர் கூற்றுகளுக் குத் தெள்ளத் தெளிவாக விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

இக்கட்டுரையில் தமிழ் வரி வடிவப் பண்புகள் அழியாமல் செய்யப் பட்டுள்ள மாற்றங்கள் வரி வடிவ மாற்றங்களே தவிர ஒலி வடிவ மாற்றங் களல்ல. ஒலி வடிவங்களுக்கு நாம் அமைத்துக் கொள்ளும் அடையாளக் குறி யீடுகளே வரி வடிவங்களாகும். ஒலிகளைப் பதிவு செய்து அப்படியே அமைக் கப்பட்டதல்ல. வரி வடிவங்கள் காலத்திற்குக் காலம், வசதி வாய்ப்புக்கேற்ப மாற்றம் பெறக்கூடியன. கல்வெட்டுகளையும், செப்புப் பட்டயங்களையும், ஓலைச் சுவடிகளையும் கால முறைப்படி வைத்துப் பார்த்தால் தெற்றென விளங்கும். ஒலி வடிவங்கள் அவ்வாறல்ல. மாற்றம் பெறாதன. மாற்றம் செய்யக் கூடாதன; மாற்ற முடியாதன; மாற்றக் கூடாதன; நிலையாக நிற்கக் கூடியன.

எனவே, 'பழையன கழிதலும், புதியன புகுதலும்' புதிய வழக்கமன்று. தமிழ்மொழியை மேம்பாடுறச் செய்ய விரும்பும் தமிழ் மக்கள் இம்மாற்றங் களை விரும்பி ஏற்பர் என்பது ஒருதலை. தமிழெழுத்துச் சீர்திருத்தக் குழு வினர் இம் மாற்றங்களை ஏற்றுப் பழக்கத்திற்குக் கொண்டு வருவார்களாக!

# தட்டெழுதியின் சீரமைப்பில் உயிர் மெய் எழுத்துக்களின் வடிவங்கள்

டாக்டர் சாலினி இளந்திரையன்
திருவேங்கடவன் கல்லூரி, புதுதில்லி-21

பலதுறைப் பாடமொழியாகவும், நீதிமன்ற மொழியாகவும், ஆட்சி மொழியாகவும் தமிழ்மொழி பயன்படத் தொடங்கியுள்ளது. இந்தப் பல்வேறு துறைகளின் பணிகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில், புதிய எழுதுசாதனங்களான அச்சு எந்திரமும் தட்டெழுதியும், சீராகவும் விரைவாகவும் செயற்பட வேண்டிய அவசியமும் ஏற்பட்டுள்ளது. இந்தப் பின்னணியில், விரைவாகவும் எளிதாகவும், மக்களின் அழகுணர்ச்சிக்கு விருந்தாகவும் நமது தமிழ்த் தட்டெழுதி செயற்பட வேண்டுமானால், தமிழ் எழுத்துவடிவங்களில் சில சிறிய செப்பங்கள் செய்யப்படவேண்டும் என்னும் கருத்து ஏற்கெனவே பல அறிஞர்களால் வலியுறுத்தப்பட்டுள்ளது. எனவே, அந்தப் பொதுக் கருத்துக்களை விடுத்து தட்டெழுதியைச் சீரமைக்கும் விதமாகத் தமிழ் உயிர்மெய் எழுத்துக்களின் வடிவங்களில் என்னென்ன மாறுதல்களைச் செய்யலாம் என்பதைப் பற்றி மட்டுமே இந்தக் கட்டுரைக் குறிப்பில் ஆராயப்படுகிறது.

தமிழ்த் தட்டெழுதியில் உள்ள விசைகள் 46. இவை ஒவ்வொன்றும் இரண்டு இரண்டு எழுத்துக்களைக் கொண்டிருக்கின்றன. உயிர் மெய் எழுத்துக்கள் அனைத்தையும் எழுதுவதற்கு, மொத்தம் 33 எழுத்துக்களும் குறியீடுகளும் தேவைப்படுவதால், உயிர்மெய் எழுத்துக்களுக்காக மட்டும் நமது தட்டெழுதியில் 17 விசைகளை ஒதுக்க வேண்டியுள்ளது. உயிர்மெய் எழுத்துக்களுக்கும் குறியீடுகளுக்கும் மட்டுமே இத்தனை விசைகளை ஒதுக்கிவிடுவதால், அரைப்புள்ளி (;), கோலன் என்னும் விவரப்புள்ளி (:), வியப்புக்குறி (!), கூட்டல், பெருக்கல், வகுத்தல் முதலான கணிதக் குறிகள் போன்றவை தமிழ்த் தட்டெழுதியில் இடம் பெற முடியவில்லை.

தட்டெழுதிப் பிரதியில் வியப்புக் குறியையும் கணிதக் குறிகளையும் கையினாலேயே எழுத வேண்டியுள்ளது; மெய்ப்புள்ளியையும் காற்புள்ளியையும் சேர்த்து அரைப்புள்ளி (;) அமைக்க வேண்டியுள்ளது. அதேபோல், மெய்ப்புள்ளியையும் முற்றுப்புள்ளியையும் சேர்த்து விவரப்புள்ளி (:) அமைக்க வேண்டியுள்ளது.

கையெழுத்தில் எழுதும்போது, நமது உயிர்மெய் எழுத்துக்களில் சிலவற்றை,— (கி, சீ, து, கூ.....என்பவை போல) ஒரே எழுத்தாக எழுதுகிறோம். மற்றவைகளை (கா, கெ, கொ, மோ என்பவை போல)ப்பல தனி எழுத்துக்கள் சேர்த்து எழுதுகிறோம். தட்டெழுதிக்கு வரும்போது தனி எழுத்துக்

களாக உள்ளவற்றிலேயே கி,கீ,பு,பூ. . . . முதலியவற்றை ஓர் எழுத்தும் ஒரு குறியீடுமாகப் பிரித்துத் தனித்தனியே தட்டுகிறோம்; கூ,சு,மு,து,ளு போன்ற சிலவற்றைத் தனி எழுத்துக்களாகவே வைத்திருக்கிறோம்.

இந்த அமைப்பு முறைகளால் தமிழ்த் தட்டெழுதியின் செயற்பாட்டில் விரைவு குன்றுகிறது; எழுத்து அமைப்பின் அழகும் குன்றுகிறது.

காவன்னாவை, ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக வரும் இரண்டு தட்டுக்களால் உருவாக்குகிறோம். கி,கீ,பு,பூ,மூ,தூ முதலான எழுத்துக்கள் அப்படி ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக இயல்பாக வரும் இரண்டு தட்டுக்களால் உருவாவதில்லை, குறியீட்டை முதலில் அடித்து, அதன் பிறகு மூல எழுத்தை அடிக்கிறோம். குறியீட்டை அடித்ததும் விசை நகர்வதில்லை; அடுத்த எழுத்தையும் அடித்த பிறகே நகர்கிறது. இத்தகையை நகரா விசைகள் பெரும்பாலும் மேல் எழுத்து விசைகளாக இருப்பதால், நகராமை, மேலே ஏற்றுதல் என்னும் இரண்டும் சேர்ந்து, ஓர் உயிர்மெய் எழுத்தைத் தட்டுவதற்கே இரண்டு மூன்று எழுத்துக்களுக்கு ஆகிற நேரம் ஆகிறது.

நாம் மேலே குறித்தவாறு, தமிழ்த் தட்டெழுதியில், அரைப்புள்ளிக்கும் விளக்கப் புள்ளிக்கும் உரிய தனியான குறியீடுகள் இல்லை. வேறு குறியீடுகளை இணைத்தே அவைகளை உண்டாக்க வேண்டியுள்ளது. அப்படி உண்டாக்கும் போது, அவைகளின் வடிவமைப்பே சிதைந்து போகிறது: எழுத்து வரிக்குள் அடங்கி நிற்க வேண்டிய விளக்கப் புள்ளியின் மேற்புள்ளியானது எழுத்து வரிசைக்கு மேலே நிற்கிறது; இதைவிடச் சிறியதாக இருக்க வேண்டிய அரைப்புள்ளியின் மேற்பகுதியும் வரிக்கு மேலே எழும்பி நிற்கிறது.

விரைவுக்காகவும் அழுகுக்காகவும் கண்டுபிடிக்கப்பட்ட தட்டெழுதி அவைகளில் குறைவுடையதாக இருப்பதற்கு நமது தமிழ்மொழியோ அதன் ஒலி எழுத்துக்களோ காரணமல்ல; நமது எழுத்துக்களின் வரிவடிவ அமைப்பில் (இடைக்காலத்தில்) நுழைந்துள்ள சில குழப்பங்களே அதற்குக் காரணம்.

ஆகார வரிசையிலும் அய்கார வரிசையிலும் இருந்துவந்த (ணா,றா,னா, ணை,லை,ளை,னை) ஒற்றை எழுத்து அமைப்பு, தமிழக அரசின் எழுத்துச் சீர் திருத்த ஆணையால்[1] மாற்றப்பட்டு விட்டதால், மற்ற எழுத்து வடிவங்களைக் கவனிப்போம்.

உகர உயிர்மெய் வரிசையிலும் ஊகார உயிர்மெய் வரிசையிலும் எழுத்துக்கள் ஒரே சீராக இல்லை. இதனால், ஏற்கெனவே தட்டெழுதியில் இருந்து வருகிற 18 முதலெழுத்துக்களோடு, இரண்டே இரண்டு துணை எழுத்துக்களைச் சேர்த்து உண்டாக்கியிருக்க வேண்டிய இந்த 36 உயிர் மெய் எழுத்துக்களுக்காக, நாம், இப்போது கு, சு, டு, ஞு, து, நு, மு, ரு, லு, ழு, ளு, று, னு, கூ, சூ முதலான 15 தனி எழுத்து வடிவங்களும் I, ⅎ, o, T, ஆகிய 4 துணைக் குறியீடுகளுமாகப் 19 குறியீடுகளைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. அதாவது இரண்டே குறியீடுகளில் முடிந்திருக்க வேண்டிய பணியைப் 19 குறியீடுகளைக்

கொண்டு நடத்தி வருகிறோம். இதன் காரணமாக, தேவையே இல்லாமல், தமிழ்த் தட்டெழுதியில் உட்கார்ந்திருக்கும் விசைகளின் எண்ணிக்கை பத்து.

நம்மிடையே வழக்கத்தில் இருந்துவரும் கிரந்த எழுத்துக்களின் உகர, ஊகார (ு, ூ)க் குறியீடுகளையே இந்த இடத்தில் பயன்படுத்தலாம். இவைகளில் உகரக் குறியீடு (ு) வரியின் மேற்பகுதியில் மட்டும் அமைந்து கீழ்ப் பாதி இடைவெளியாகக் கிடக்கிறது என்றும், ஊகாரக் குறியீடு (ூ) வரிக்கு மேலே எழும்பித் தெரிகிறது என்றும், இதனால் அழகு கெடுகிறது என்றும் சிலர் கருதுகிறார்கள்.[2] இந்த உகரக் குறியீட்டை வரி முழுதும் வருமாறு கீழே நீட்டியும் ஊகாரக் குறியீட்டை வரிக்குள் அடக்குமாறு குறுக்கியும் வார்த்துக் கொள்வதில் பெரிய சிரமம் எதுவும் இல்லை. ஏற்கெனவே உள்ள இந்த இரண்டு குறியீடுகளையும் பயன்படுத்தினால், தமிழ்த் தட்டெழுதியில் *19* குறியீடுகள், அதாவது *10* விசைகள் மிச்சப்படும். இந்தப் பத்து விசைகளிலே, நமக்குத் தேவையான அரைப்புள்ளி, கணக்குக் குறியீடுகள் முதலிய இருபது குறியீடுகளை அமைத்து அழகு செய்யவும் வாய்ப்பு ஏற்படுகிறது.

உகர உயிர்மெய்களையும் ஊகார உயிர்மெய்களையும், ஒரே சீராக ஓர் எழுத்தும் ஒரே துணைக் குறியீடுமாக அமைப்பதிலே பெரிய புரட்சி எதையும் நாம் செய்து விடவில்லை. கி.பி. *8* ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியன் பராந்தக நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேடு, *9* ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பார்த்திப சேகரபுரம் செப்பேடு, *13* ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு ஆகியவற்றில் (தூ, லூ, நூ முதலான) ஊகார உயிர்மெய் எழுத்துக்கள் மூல எழுத்தும் ஒரே விதமான தனித் துணை எழுத்துமாகவே உள்ளன.[3] வேள்விக் குடிச் செப்பேட்டில் ஊகார உயிர் எழுத்துக் கூட உகரமும் பக்கத்தில் ஒரு துணை எழுத்துமாகவே செதுக்கப்பட்டுள்ளது.[4]

இகர, ஈகார உயிர்மெய் வரிசைகளில் ஒவ்வொரு வரிசைக்கும் ஒரே பொதுக்குறியீடு இருப்பதால், தட்டெழுதியில் அதிகமான விசைகள் வீணாக வில்லை. ஆனால், இந்தக் குறியீடுகளை எழுத்துக்களுக்கு மேலே இணைக்க வேண்டியிருப்பதால், இவைகள் நகரா விசையாக அமைந்து நேர விரையத்துக்குக் காரணமாகின்றன. இகர, ஈகாரக் குறியீடுகளைச் சிறிதே மாற்றி, ஆகாரக் குறியீடு (ா) போல் பக்கக் குறியீடாக அமைத்துவிட்டால் மிகவும் வசதியாக இருக்கும்.

இதற்கும் மேலே எடுத்துக்காட்டிய வேள்விக்குடிச் செப்பேடு நமக்கு வழிகாட்டுகிறது. அந்தச் செப்பேட்டில் பி என்னும் எழுத்து, பகரமும் பக்கத்தில் தனியே அமைந்த ஒரு துணை எழுத்துமாகவே உள்ளது.[5]

நமது உயிர்மெய் வரிவடிவ அமைப்பில் வேறொரு சிறிய குழப்பமும் உள்ளது. பொதுவாக ஓர் உயிர்மெய் எழுத்தை உண்டாக்கும்போது முதல் எழுத்தாகிய மூல எழுத்தை முதலிலும் துணைக் குறியீட்டை அதை அடுத்தும் எழுதுகிறோம். ஆ,இ,ஈ,உ,ஊ, ஆகிய அய்ந்து உயிர்மெய் வரிசைகளில் இந்த

முறை பின்பற்றப்படுகிறது. இவைகளை அடுத்த எ, ஏ, அய் (கெ, கே,கை) என்னும் மூன்று வரிசைகளில் இதற்கு மாறாக, குறியீடு முன்னாலும் மூலஎழுத்து அதன் பின்னாலுமாக வருகின்றன. எஞ்சிய ஒ, ஓ, அவ் என்னும் வரிசை களுக்கு ஓர் எழுத்தும் இரண்டு குறியீடுகளும் பயன்படுத்தப்படுகின்றன; இவை எழுத்தின் முன்னால் ஒன்றும் பின்னால் ஒன்றுமாக வருகின்றன.

தட்டெழுதி ஓர் எந்திரம் என்ற வகையில், இத்தகைய குறியீட்டு அமைப்புக் குழப்பம் பல தொல்லைகளைத் தருகிறது. எழுத்தும் அதைத் தொடர்ந்து துணைக் குறியீடும் வரும் என்ற வரிசைமுறை ஒரே சீராகப் பின் பற்றப்படாததால், தமிழில் தட்டெழுத்துப் பயிற்சி பெறுவதற்கே அதிகமான காலம் ஆகிறது; தமிழ்த் தட்டெழுத்தாளர்களின் விரைவு (ஸ்பீடு)ம் இதனால் மிகுதியாகத் தடைப்படுகிறது.

உயிர்மெய் எழுத்தையே இப்போது மூன்று விதமாக நாம் எழுது கிறோம். (க, ச, த என்னும்) அகர உயிர்மெய் எழுத்து ஒரே எழுத்தாக அமைகிறது; கா,கெ,கே,கை என்னும் உயிர்மெய் வரிசைகளில், ஒரே எழுத்து இரண்டு எழுத்துக்களால் அமைகிறது; இ,ஈ,உ,ஊ,(கி,கீ,பு,தூ,) வரிசைகளுக்கு வரும்போது, கையெழுத்தும் அச்செழுத்தும் ஒற்றை எழுத்தாகவும் தட்டெ ழுத்து இரண்டு எழுத்தாகவும் உள்ளன; ஒ,ஓ, ஔ (கொ, கோ, கௌ) வரி சைகளோ மூன்று எழுத்து வடிவத்தைப் பெறுகின்றன. இவை அனைத்தை யும் ஒழுங்குபடுத்தி, உயிர்மெய் எழுத்து என்பது ஒரு மூல எழுத்தும் ஒரே ஒரு துணைக் குறியீடுமாகவே அமையும் என்று ஆக்கிவிட்டால், தட்டெழுது வது மட்டுமின்றிப் படிப்பதும் கூட மிக மிக எளிதாகி விடுகிறது.[6]

உயிர்மெய் எழுத்துக்கள் எல்லாம் ஓர் எழுத்தும் ஒரு துணை எழுத்து மாகவே அமைய வேண்டும் என்பதிலும் பெரிய புதுமை எதுவும் இல்லை. ஆ,எ,ஏ,அய் ஆகிய நாலு உயிர் மெய் வரிசைகளை, இப்படியேதான், ஓர் எழுத்தும் ஒரு துணை எழுத்துமாக எழுதி வந்திருக்கிறோம். இ,ஈ,உ,ஊ, வரிசை உயிர்மெய் எழுத்து ஒவ்வொன்றும் ஒற்றை எழுத்துப் போலத் தோன் றினாலும், ஓர் எழுத்தும் ஒரு துணை எழுத்தும் என்ற நினைவோடேயேதான் அவைகளையும் எழுதி வந்திருக்கிறோம். எனவே, இந்த மாறுதல் புதிதானது என்றோ, புரியாதது என்றோ, சிக்கலானது என்றோ தயங்குவதற்கு அவசியமே இல்லை.

என்றாலும், ஓர் எழுத்தும் இரண்டு குறியீடுகளுமாக உள்ள ஒகர ஓகார உயிர்மெய் எழுத்துக்களை ஓர் எழுத்தும் ஒரு குறியீடுமாக அமைக்கும் போது, இந்த இரண்டு வரிசைகளுக்கும் ஒவ்வொன்றாக இரண்டு புதிய குறி யீடுகளைக் கண்டறியவே வேண்டும். அந்தக் குறியீடு எதுவாக இருக்கலாம் என்பது பற்றியும் பல அறிஞர்கள் ஏற்கெனவே சிந்தித்துள்ளார்கள்.[7] அவை களுள், ஒகர உயிர்மெய்க்கு ௦ என்பதையும் ஓகார உயிர்மெய்க்கு ௭ என்பதையும் குறியீடுகளாகப் பயன்படுத்தலாம் என்பது என் கருத்து. இவை எகர ஏகார உயிர்மெய் எழுத்துக்களில் ஏற்கெனவே பழக்கப்பட்டிருப்பதாலும்

ஒகர, ஓகார வடிவங்களில் மேல்பகுதியை ஒருவாறு ஒத்திருப்பதாலும் பெரிய மாறுதல்களாகத் தோன்றமாட்டா என்பதே அதற்குக் காரணம்.

இப்போது உள்ள அகர உயிர்மெய்யையே மெய் எழுத்தாகக் கொண்டு மெய்யெழுத்துக்குப் புள்ளியிடும் வழக்கத்தை நீக்கிவிட்டால், நகரா விசை என்ற வேண்டாத கோட்பாட்டுக்கே தமிழ்த் தட்டெழுதியில் இடமில்லாமல் போய் விடும். ஆகார உயிர்மெய் எழுத்துக்கு இரட்டைக்கால் துணை எழுத்து இருப்பது போல, அகர உயிர்மெய் எழுத்துக்கு ஒற்றைக்கால் துணை எழுத்து ஒன்றைச் (T) சேர்த்து (கT, சT, தT) எழுதலாம்.

மேலே எடுத்துக்காட்டிய விதமாக, மெய்யெழுத்தின் புள்ளியை நீக்கி விட்டு, உயிர்மெய் எழுத்துக்கள் எல்லாம் ஒரே சீராக ஓர் எழுத்தும் அதைத் தொடர்ந்த ஒரு துணைக் குறியீடுமாகவே வரும் விதமாக அமைத்துவிட்டால் தமிழ்த் தட்டெழுதியில் நகரா விசை என்பது ஒழியும்; தட்டெழுத்தாளர்கள் எளிதாகப் பயிற்சி பெறவும் விரைவாகச் செயற்படவும் வாய்ப்பு ஏற்படும். நமக்குத் தேவையான எல்லாக் குறியீடுகளையும் அமைத்த பிறகும், தமிழ்த் தட்டெழுதிக்கு 38 விசைகளே போதுமானதாக இருக்கும். தமிழ் எழுத்துக் குறியீடுகள், எழுத்தின் மேலேயும் கீழேயும் முன்னேயும் பின்னேயுமாக நானா விதமாகத் தொற்றிக் கிடந்து எழுத்தின் அழகைக் குறைக்கும் நிலை அடியோடு தீரும். இந்தப் பல நலன்களையும் கருதி, நமது உயிர்மெய் எழுத்துக்களில் இந்த மாறுதல்களை விரைவிலேயே செய்ய நாம முன்வர வேண்டும்.

## மேற்கோள் குறிப்புகள்


1. தமிழக அரசின் எழுத்துச் சீர்த்திருத்த ஆணை: கல்வித்துறை எம். எஸ். 1875 நாள் 19.10.78
2. சிலம்பொலி செல்லப்பன்: (கட்டுரை) எழுத்துச் சீர்மை: அறிஞர்கள் கருத்து, சேகர் பதிப்பகம், சென்னை.83 (1979), பக்கம் 213
3. இரா. கிருஷ்ணமூர்த்தி: தமிழ் எழுத்துச் சீர்த்திருத்தம், திருச்சி (1978), பக்கம் 11.
4. மேற்படி நூல், பக்கம் 7
5. மேற்படி நூல், பக்கம் 10
6. புலவர் குழந்தை: தமிழெழுத்துச் சீர்திருத்தம், ஈரோடு (1968), பக்கம் 18–19
7. அ. மேற்படி நூல், பக்கம் 17–18

   ஆ இராசகோபாலன், வீரா: தமிழ் எழுத்துச் சீர்திருத்தப் புரட்சி, கும்பகோணம் (1979), பக்கம் 49

மேலே கட்டுரையில் காட்டிய திருத்தங்களுக்குப் பிறகு
தமிழ்த் தட்டெழுதியின் விசைப்பலகை

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ<br>1 | ″<br>2 | %<br>3 | ஜ<br>4 | ×<br>5 | ÷<br>6 | ீ<br>7 | ′<br>8 | ஸ்ரீ<br>9 | |
| ¼<br>½ | =<br>ற | +<br>ந | ை<br>ச | 0<br>வ | (<br>ல | )<br>ர | ூ<br>ு | ீ<br>ி | –<br>— |
| @<br>ய | &<br>ள | *<br>ன | ங<br>க | ண<br>T | ழ<br>ா | ஞ<br>ப | ஃ<br>த | ;<br>ம | :<br>ட |
| ஓ<br>ஒ | ஊ<br>உ | ஏ<br>எ | ே<br>ெ | ெ<br>ෙ | ஆ<br>அ | ஈ<br>இ | /<br>. | ?<br>, | |

# மூலபாடத் திறனாய்வில் தொல்காப்பியத்து இரு நூற்பாக்கள்

க. வீரகத்தி

### அ. கள் விகுதியும் தொல்காப்பியமும்

வரலாற்று ரீதியான மொழியியல் வளர்ச்சியில் தொல்காப்பிய விதிகளை நோக்கும்பொழுது சில பல ஐயப்பாடுகளும் முரண்பாடுகளும் எழுகின்றன. இவற்றுக்குத் தீர்வு காணும் நோக்கில் தொல்காப்பிய விதிகளின் மூலபாடத் திறனாய்வு அத்தியாவசியமாகிறது. இந்த வகையில், கள் விகுதி பற்றிய நூற்பாவும் (654), சொல்லதிகாரப் புறனடை நூற்பாவும் (946) இங்கே ஆய்வுக்கிடமாகியுள்ளன.

இன்றைய நடைமுறைத் தமிழில் கள் விகுதியினுடைய பிரயோகப் பரப்பு வெகுவாக விசாலித்து விட்டது. இவ்வகைப் பன்முகப் பிரயோகங்களில் அதிகமானவற்றை கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனப் பலராலும் கருதப்படும் சிலப்பதிகாரத்திலும் காணலாம். கள் விகுதியின் பிரயோக நிலைபற்றிச் சங்கரநமச்சிவாயர் குறிப்பிடுவதுபோல் (நன் 278) அஃது உயர்திணையில் தனிப்பன்மை விகுதியாகவும், பகுதிப்பொருள் விகுதியாகவும் விகுதி மேல் விகுதியாகவும் பின்னிணைந்து, சிலப்பதிகார காலத்திலேயே நன்கு வேரூன்றிக் கொண்டது. சான்றுகள்:

| | | |
|---|---|---|
| அ. தனிப்பன்மை விகுதி | மாக்கள் | (மொத்தம் 5 இடம்) |
| | அந்தரசாரிகள் | *(10.13, 27:93)* |
| ஆ. பகுதிப் பொருள் விகுதி | யாங்கள் | (11:161) |
| இ. விகுதிமேல் விகுதி | பெண்டிர்கள், சிறுமியர்கள் | *(19:4, 17:68)* |
| | வானோர்கள், தேவிர்கள் | *(24:118, 9:12)* |
| | காண்பார்கள், (வி.அ.பெ) | (1:53) |
| | உண்ணுமின்கள்வினைமுற்று | (16: இறுதி வெண்பா) |

இவைதவிர, உயர்வுப் பொருளில் கள் விகுதி ஒருமை கருதுவதையும் கவனிக்கலாம். ''அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்'' (13:87) இங்கே, அடி என்னும் அஃறிணை இயற் பெயருடன், பன்மை தெரிக்கும் கள் விகுதி பின்னிணைந்து, அடிகள் என்னும் உயர்திணைப் பெயர் ஆக்கம் பெற்றுள்ளது. அதுவும் ஒருமையைக் காட்டுவதாகும். விந்தையான இம்மொழி ஆக்கத்திலிருந்து, கள் விகுதி அஃறிணைப் பன்மையை உணர்த்து முன், உயர் பன்மையை உணர்த்தும் வழக்குப் பெற்றிருத்தல் வேண்டும் என ஊகிப்பது சரியற்றதாகாது. உயர்திணையில் மாத்திரம் எண் வேறுபாடு சிறப்பு விகுதிகளால் தொடர்ச்சியாக உணர்த்தப்படுகின்றது எனவும், பழந்தமிழில் அஃறி

ணையைப் பொறுத்த வரையில் இப்படி ஒரு நிலைமை இல்லையெனவும் திரு. யூல்ஸ் புளொக் கருதுவது[1] இவ்விடத்தில் கருதக் கூடியதாக உள்ளது.

அஃறிணையைப் பொறுத்தவரை, 'கள்' ஒட்டிக் கொண்ட பலவின் பெயர்கள் மங்கல வாழ்த்து முதல் வரந்தருகாதை வரை வளமாக வந்துள்ளன. இவ்வாறான பன்முகப் பிரயோகங்களையும் நோக்குமிடத்து, சிலப்பதிகாரக் காலத்துக்குச் சிலபல நூற்றாண்டுகளுக்கு முன்பே கள் விகுதி வழக்காற்றில் நிலை கொண்டுள்ளது புலனாகும். அஃதாவது அதன் நீண்ட தொன்மை தெரியவரும்.

சங்க இலக்கியங்களில் மக்கள், மாக்கள் என்னும் உயர் பன்மைகள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன; ஓரிரு இடங்கள் தவிர, கள் விகுதி பின்னிணைப்பான அஃறிணைப் பன்மைகள் அறவே இல்லை. வழிகள் என்றொரு சொல் அகநானூற்றில் (களிற்றியானை நிரை 18:10) நுழைந்து கொண்டது. ஐங்குறுநூறில் 'மயில்கள்' (291:1) உண்டு. 'கலிப்பாடலிலும் பரிபாவிலும் பலவின் பெயர்கள் சில இடம்பெற்றுள்ளன. இவ் இரண்டும் சங்க இலக்கிய வரிசையில் காலத்தாற் பிற்பட்டவை.

சங்கநூல்களில் கள் விகுதிப் பன்மைகளின் ஆதிக்கம் இல்லை என்ற ஏதுவினால், சங்கநூற் காலங்களில் கள் விகுதிச் சொற்களே இல்லை என்று நியாயித்தல் சாலாது. சங்கநூற் காலங்களில் கள் விகுதிப் பன்மைகள் இலக்கியத்தில் பயின்று வாராமைக்கு மூன்று ஏதுக்கள் குறிப்பிடலாம். ஒன்று, மிக இறுக்கமான நடை கொண்ட அகவலின் இன்னோசைக்கு, 'கள்' இறுதியான ஓரசை இடர் விளைப்பதாகும். ''தந்தையார் ஒப்பர் மக்கள்'' - இதனை, ''தந்தைகள் ஒப்பர் மக்கள்'' என உரக்க ஓதும்பொழுது ஏற்படும் உச்சரிப்பு இடர்ப்பாடும் இன்னோசைச் சிதைவும் துலாம்பரமானது. இருதிணைப் பன்மைக்கும் இதுபொருந்தும். சங்கப்புலவர்கள் சொற்சிலம்ப வித்தையை ஏற்காதவர்; தெளிவைச் சிதைக்க விரும்பாதவர். அதனாலே ஒரு சொல்லை ஒரு பொருளிலேதான் அநேகமாகக் கையாண்டு கொண்டனர். மது என்ற பொருளிலே தான் கள் என்னும் பதம் எங்கும் ஆட்சிபெற்றுள்ளது. எனவே பொருளோட்ட வேகத்தை மயக்கும்-தடைப்படுத்தும் கள் விகுதிப் பன்மைகளை அவர்கள் கையாளவில்லை. ''முன்றில் கள்ளடு மகளிர்'' (பெரும்பாண் 1:239) ''முன்றில்கள் அடுமகளிர்'' என ஓதப்பட்டால் எழும்தொல்லை தெளிவானது. இஃது இரண்டாவது காரணமாகும். மரபை மீற முடியாத மரபு அல்லது பாரம்பரியம் இறுதிக் காரணமாகக் கொள்ளப்படலாம். எனினும், கள் விகுதிப் பன்மைகள் சிறப்பாக உயர்திணைப் பன்மைகள் சங்கம் ஏடுகளில் இடம் பெற்றதனால் அவ்விகுதிக்குரிய தொன்மை ஏற்க வேண்டியதே.

சங்க இலக்கியங்களில் அதிகம் பயின்றுவந்துள்ள மக்கள், மாக்கள், மாந்தர் என்ற உயர்பன்மைகளை உற்றுநோக்கும்போது மக்கள் என்னும் பதமே ஆதிச்சொல் எனஉணரலாம்; சொன்மூலம் தெளிவாக உள்ளது. மக்களின் நீட்டம் மாக்கள் ஆக, மாக்களின் இன்னோசை நோக்கிய திரிபு மாந்தர் எனக் கொள்வது பொருத்தமானதே. 'ர்' என்னும் பன்மைவிகுதி, கள் விகுதியோடு

ஒப்புநோக்கும் பொழுது ஒரு புதிய வழக்கீடு என, திரு. எம். ஜே.வின்சன் சிந்திப்பது[2] இங்கே உளங்கொளப்பாலதாகும்.

கள் விகுதிபற்றிய தொல்காப்பியச் சிந்தனைகளைத் தெரிதற்கு முன்பு திராவிட மொழிகளை ஒப்பியல் நோக்கில் ஆராய்ந்த அறிஞர்களின் கருத்துக் களைக் குறிப்பிடுவது பொருத்தம் ஆகலாம். தமிழ்மொழியின் கள்விகுதி பழங் கன்னடத்தில் கள்-க(G) ள் என நிற்பதும், மலையாளத்தில் கள் (G) ள், க்கள் ஆவதும், தெலுங்கில் 'லு', 'ஆலு' என வருவதும் அறிஞர் கால்டுவெல் ஆய்வின் முடிவுகள்.[3] பழங்கன்னடத்தில் தந்தையார் தந்தைகள் எனவும், தந்தைதாயர் தந்தைதாய்கள் எனவும் உள்ளன எனக் கூறுவர்[4] திரு,யூல்ஸ் புளொக்.

இதுவரை அலசி எடுக்கப்பட்ட தரவுகளில் இருந்து ஆதித் தமிழ் மொழியில் பன்மை குறிக்கும் விகுதி 'கள்' என்பதும், உயர்திணைப்பன்மையாக நின்று, காலப்போக்கில் அஃறிணைப் பன்மைக்கும் தொற்றியிருத்தல் வேண்டும் என்பதும், கள் விகுதியே (கள் — அள் — அல் — அர்) நாளாவட்டத்தில் 'அர்' ஆகி இருத்தல் வேண்டும் என்பதும் புலப்படலாம். இன்னும், பேச்சு வழக்கில் 'அவங்கள்' என்பதை 'அவங்கல்' என ஒரு பகுதியினர் உச்சரிப்பதும், சலராசி சரராசி, சுக்கிலன் சுக்கிரன் ஆனதும் யதார்த்தமான சங்கதிகள். 'கள்' 'அர்' ஆனது யாப்பு நோக்கிய[5] திரிபும் ஆகலாம். புராதன காலத்தில் கள்விகுதி பரவலாக வழங்கியது எனவும், இடையில் வழக்காறு அற்று மீண்டும் தொல் காப்பியர் காலத்தில் அல்லது அதற்குச் சற்று முன்பாகப் புத்துயிர் பெற்றுள்ளது எனவும் கருதலாம்.

இனி, தொல்காப்பியத்துக்கு வருவோம். தொல்காப்பியனார் தமிழ் மொழிக்கு இலக்கணம் கண்டவர் என்று மறுதலித்துக் கொண்டு வருவதைவிட தமிழ்மொழியை நன்கு நெறிப்படுத்தியவர் எனக் கருதுவது மிகப்பொருத்தமாகும். தன் காலப்பேச்சுமொழியைத் திறம்பட ஆராய்ந்தவர்; தன்கால, தனக்கு முந்தைய கால எழுத்து வழக்கையும் தெளிவாகத் தெரிந்தவர். எனவே, தொல்காப்பிய மொழி பொதுநிலைகளை முழுமையாகப் புரிந்து கொள்வது மிக முக்கியமாகும்.

தொல்காப்பியத்திற்கு முன்பே அ,கள் விகுதிகள் இருதிணைப் பன்மை களையும் உணர்த்தியிருத்தல் வேண்டும். அல்லது அவை விதியாகவோ விதி மூலங்களாகவோ தொல்காப்பியத்தில் இடம்பெற்றிருத்தல் இயலாது. திணைப் பாகுபாடு காணாத லீலாதிலகம் என்னும் மலையாளக் கன்னி இலக்கணநூல், ''அனேகஸ்மின் ர், கள் மார், மர், பர், வர், வு, ப்ராயேன'' (நூற்பா 34) என ஆண், பெண் பன்மைகளைக் குறிக்கும் விகுதிகளில் ஒன்றாக, கள் விகுதி-யையும் குறிப்பிட்டிருப்பது இவ்விடத்து ஆழ்ந்து கவனிக்க வேண்டிய தொன்றாகும். திணைப் பாகுபாடு செய்தபிற்பாடுதான் 'அ' பகரமெய்யுடன் சேர்ந்து உயர்திணைப் பன்மைக்கும் (தொல்: 691), வகரமெய்யுடன் சேர்ந்து அஃறிணைப் பன்மைக்கும் (701) வேறு படுத்திக் காட்டப்பட்டுள்ளது. முதன் முதலாக இவ்வேறுபாட்டினை விதியாகச் செய்த தொல்காப்பியனாரே முதல் நூற்பாவிலேயே 'ப' விகுதியை இருதிணைப்பன்மைக்குமாகப் பிரயோகித்துவிட்டார்.

'எழுத்தெனப்படுவ' என அஃறிணைக்கும், 'முப்பஃதென்ப' என உயர்திணைக்கும் பகரம் விகுதியாதல் அறிக. இம்முரண்பாட்டை அவதானித்த உரையாசிரியர் 'செய்யுளின்பம் நோக்கி வகரம் நீக்கிப் பகரம் இடப்பட்டது' எனச் சமாதானம் கண்டார். ''பகரமும் வகரமும் ஒத்த உரிமைய'' என நச்சினார்க்கினியர் குறிப்புரைத்தார். நச்சர் குறிப்பின் குறிப்பு அகரம் இருதிணைப் பன்மையையும் குறிக்கும் என்பதாகும்.

இந்நூற்பாவிலன்று, ''சொல்லெனப்படுப பெயரே வினையென்று ஆயிரண்டென்ப அறிந்திசி னோரே'' *(644)*, ''இடை எனப்படுப பெயரொடும் வினையொடும் நடைபெற்று இயலும் தமக்கு இயல்பு இலவே'' *(734)* என்ற இடங்களிலும் பகரவிகுதியை அஃறிணைப் பன்மை இறுதியாகக் கொண்டுள்ளார்.

'அ' விகுதியின் நிலைப்பாடு இதுவாக, கள் விகுதியின் பிரயோகப்பரப்பைத் தொல்காப்பியத்தில் கவனிப்போம். 'கள்' இறுதியான பலவின்பாற் சொற்களும் பலர்பாற் சொற்களும் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. பலவின் பால்: மிசைகள் *(25)*, மொழிகள் *(196)*, மாண்புகள் *(1098)*, வாயில்கள் *(1139)*. பலர் பால்: மக்கள் *(350,404,484, 648, 1532--)*; மாக்கள் *(1064.)* மரபியலில் இன்னும் ஒரு 'மாக்கள்' உண்டு - ''மாவும் மாக்களும் ஐயறி வினவே, பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே'' *(1531)*. ''மாவும் புள்ளும்'' எனவே பாடங் கொண்டார் உரையாசிரியர். அதுவே சரியெனப்படுதலின் இதனைத் தவிர்த்து விடுவோம். மக்கள் என்ற சொல் மக கள் எனப்பிரியும். 'மக' இருதிணைக்கும் பொதுவான மூலமாகும்.

மக்கள் என்ற சொல் இரு பொருள்களில் கையாளப்பட்டுள்ளது. மனிதர் என்பது ஒரு பொருள் *(484, 648, 1532 ---)*; பிள்ளைகள் என்பது மறு பொருள் *(350, 1093, 1138)*, எனவே 'மக்கள்' இரு பதங்களாகக் கணிக்கப்படுதல் வேண்டும். ''பொருள்நிலை வேறுபாட்டால் சொல்லும் வேறெனவே கொள்க. அங்ஙனமாயினும் சொற்சுருங்குதற் பொருட்டு எழுத்தொப்புமை பற்றிப் பலபொருள் ஒருசொல் என்ப'' எனச் சிவஞான முனிவர் கூறுவது[7] மொழிநூலோருக்கும் உடன்பாடானதே. மொத்தத்தில் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள கள் விகுதி பின்னிணைப்பான உயர்பன்மைச் சொற்கள் மூன்று. பலவின்பாற் சொற்கள் நான்கு. உயர்பன்மைகள் மூன்றும் நூலடங்க மீண்டும் மீண்டும் வருவனவுமாகும்.

சங்க இலக்கியங்களிலும் தொல்காப்பியத்திலும் கள் விகுதியின் ஸ்தானம் இவ்வாறாக, அஃறிணை இயற்பெயர் கள் விகுதிபெற்றுப் பலவின்பாலாகும் என விதிசெய்த தொல்காப்பியனார், கள் விகுதி பெற்றுப் பலர்பாற்சொற்கள் ஆகும் என விதி கண்டாரில்லை என நம்பமுடியுமா? ஆர், அர் விகுதிகள் மரியாதைப் பொருளில் ஒருமைகருதும் எனக் கண்ட தொல்காப்பியனார், மரியாதைக்குரியவர்களான பலரைச்சுட்டுவதற்குப் பிறிதொரு விகுதிவேண்டும் என உணரமுடியாதவரா? நுந்தை, தபு முதலாகப் பலசொற்களைத் தனித்தனி நுணுகிநுணுகி ஆராய்ந்த ஆசிரியர், சங்க இலக்கியங்களிலும் தனது நூலகத்தும் பயிலவந்த

கள் விகுதி, பலர்பால் சுட்டுதலை விதியாக்கவில்லை எனக்கருதிக் கொள்வது எதன் பாற்படும்? எனவேதான், பெயரியலில் இடம்பெற்றுள்ள

'' கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே'' (654)

என்ற நூற்பாவின் மூலபாடம் பின்வருமாறு ஆதல் வேண்டும்.

'' கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே..
கொள்வழி யுடைய பலரறி சொற்கே''

'அவ்வியற் பெயரொடு சிவணும் கள் விகுதியை, பலரறி சொற்களும் 'கொள்ளும் நெறியுடையன' என மொழிமாற்றிப் பொருள் காணலாம்.

தனியாக அஃறிணை இயற்பெயர் கள் விகுதி பெற்றுப் பலரறி சொல் லாகும் என்ற ஒன்றையே விதியாக்குவது தொல்காப்பியர் கருத்தாயின், ''கள் ளொடு சிவணும் அவ்வியற் பெயரே பல்லவை நுதலிய என்மனர் புலவர்'' என நூற்பாவை இலகுப்படுத்தி முடித்திருப்பார். அன்றியும், ''சிவணும்'' எனக் கூறிய பின்பு 'கொள்வழியுடைய'' எனக்கூறுவது கூறியது கூறல் என்னும் குற்றம் படுவதும் அன்றி, குழப்பம் விளைப்பதும் ஆகும்.

தொல்காப்பியப் பெயரியலில் மேற்படி நூற்பா, வைப்பு முறையிலும் இடந்தவறி நிற்றல் அவதானிக்கக்கூடியது. பெயரியலில் 8-11 முடிய உயர் திணைப் பெயர்ப்பட்டியல் தரப்படுகின்றது. 12ஆம் நூற்பா உயர்திணைப் பெயர் களுக்குரிய புறனடையாக முடிகின்றது. 13-14 ஆம் நூற்பாக்கள் அஃறிணைப் பெயர்களைக் குறிப்பிடுகின்றன. அடுத்துவருவது ''கள்ளொடு சிவணும்'' (15) எனத் தொடங்கும் சூத்திரம் ஆகும். முன்னைய இரு சூத்திரங்களில் எங்காவது அஃறிணை இயற் பெயர் கூறப்படவில்லை. அப்படியிருக்க, ''கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரென'' எப்படிச் சுட்டிக் கூறமுடியும்? எனவே, 14ஆம் நூற்பாவை அடுத்து வரவேண்டியது, ''தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர் ஒருமையும் பன்மையும் வினை யொடு வரினே'' என்பதாதல் வேண்டும். இதனைத் தொடர்ந்து வரவேண்டியது அஃறிணைப் புறனடை நூற்பாவாகும். இதற்குப் பின்புதான் ''கள்ளொடு சிவணும்'' எனத் தொடங்கும் நூற்பாவின் அடைவு ஆகும். இந்த ஒழுங்கில் நோக்கும்போது இருதிணை பன்மைக்கும் பொதுவான கள் விகுதியைக் குறிப்பிடுதல் சரியானது. உயர்திணை, அஃறிணை கள்விகுதி பொதுவான இரு திணை, இருதிணைக்கும் பொதுவான பெயர்கள் என்று, ஒழுங்கில் வருவதே நூன் முறைக்கு இசைந்ததாகும்.

தான் வருவாராம் என்பது பேச்சு வழக்கில் 'தான் வருவாவாம்' என்றும் அவர் வரமாட்டாராம் என்பது 'அவ வரமாட்டாவாம்' என்றும் சொல்லப்படு கின்றன. இப்படியே (பலரறிசொல்) மனனிகளால் (பலவறிசொல்) ஆக்கப்பட்டு விட்டது. எனவே, கள் விகுதிபற்றிக் குறிப்பிட்ட நூற்பாவில் பலரறி சொல் என்பதே மூலபாடமாதல் வேண்டும்.

இந்நூற்பாவுக்கு ஐந்தாவதாக இடம்பெற்றுள்ள ''நிகழூஉநின்ற பலர்வரை கிளவியின்'' எனத் தொடங்கும் சூத்திரத்தில் (658) பலர்வரைகிளவி

என்ற தொடருக்கு, பால்வரை கிளவி என பாட வேறுபாடும் உண்டு. இவ் வேறுபாடு ரகரமெய் உச்சரிக்கப்படாமல் விடுவதற்குத் தக்க அகச்சான்ருகும். ஆனுலும், ''மனனகண்டமும், பிரதிவிபத்தும்'' இந்நூற்பாவைப் பலிகொள்ள வில்லை.

### ஆ. தொல். சொல்லதிகாரப் புறனடை நூற்பா

ஒரு மொழிக்கு முழுமையாக இலக்கணம் எழுதும் முயற்சியை மேற் கொள்ளும் ஒருவர், முன்னைய இலக்கணநூல் முடிபுகளில் தன் காலத்திற்குப் பொருத்தமானவற்றை எடுத்தும், வழக்கு வீழ்ந்தவற்றை விடுத்தும், தன்கால வழக்கிற்கான புதுவிதிகளை ஆக்கியும் தொடங்கிய பணியை நிறைவாக்கிக் கொள் ளுதல் வேண்டும். அந்த இலக்கண நூலைப் படிக்கின்றவர் முன்னைய இலக்கண நூல்களையும் படிக்கவேண்டிய நிர்ப்பந்த நிலைக்கு ஆளாதல் அடாது.

எந்த இலக்கண ஆசிரியனும் மொழியின் முழுப்பரப்பையும் தனக்குள் கொண்டுவருதல் சாத்தியம் அற்றது. ''இனைத்தென அறியும் வரம்பு தமக் கின்மையின்'' (தொல். உரி.98), ''சொற்ருெறும் இற்றிதன் பெற்றியென் றனைத்தும், முற்றமொழிகுறின் முடிவில் ஆதலின்'' (நன்.461) எனவரும் நூற்பா வாசகங்களை நாம் அறிவோம். முற்றறிவின்மை, முடிவிலாமறதி, பொதுவிதி ஒன்று வேண்டாத அளவிற்கு வழக்குப் பரவலின்மை, பிணி ஆகியன காரணங் களாகலாம். இதனுலே மிச்சசொச்சங்கள் புறனடை விதிகளால் முடிக்கப் படுகின்றன. சொல்லப்பட்டவற்றைக் கொண்டு சொல்லப்படாதனவற்றையும் அவற்ருேடு சார்த்தி ஒப்புமை ஆக்கமுறையில் உணர்ந்து கொள்க, முடித்துக் கொள்க என்ற முறையிலேயே புறனடைவிதிகள் அனைத்துக்குமான பொது வியல்பு சென்று கொண்டிருக்கும். அன்றி, முழுமையான இலக்கணம் எழுதும் ஓர் ஆசிரியர் தன்னூலில் சொல்லப்படாதவற்றைத், தனக்கு முன்னூல்களாக உள்ளவற்றுடன் ஒட்டியுணர்ந்துகொள்க எனக்கூறுவது மொழித்தர்மம் ஆகாது, குன்றக்கூறல் என்னும் குற்றமும் ஆகும். வேண்டுமென்ருல் பன்னிருபாட்டி யலார் கூறுவதுபோல் 'இனிவரும் புதியனவற்றையும் இந்நூலுள் கூறியவற் டன் ஒட்டிக்கொண்டு கொள்க' (ப.பா.145) என்று புறனடை செய்வது மதிவளமானதாகும்.

மொழியியல் வல்லுனரான தொல்காப்பியர் இருவிதமாகப் புறனடை விதிகளைத் தெரியத்தருகின்ருர். அவை எழுத்ததிகாரத்தில் ஒருவிதம், சொல் லதிகாரத்தில் மறுவிதமாக உள்ளன. எழுத்ததிகாரத்தில் தாம் விதித்தவற்றின் இயல்புக்கு வேறுபாடாகக் காணப்படுவனவற்றை வழக்கொடு சேர்த்து நுட்ப மதியால் தெரிந்து கொள்ளல் வேண்டும் என்பர் (483). எழுத்ததிகாரம் ஒலித்தன்மை, ஒலிக்கண இயல்பு, ஒலிமாற்றம் பற்றியதாதலின் இங்கு வழக் கென்பது பேச்சு மொழியையே கருதும். இஃது தொல்காப்பியனுருக்கே உரிமைய தான மொழியியல் புலமை நுட்பம் ஆகும்.

சொல்லதிகாரத்திலோ புறனடை விதியின் போக்கு வேறுகோலம் கொள் கின்றது; எடுத்தோதியவற்றைக்கொண்டு ஓதாதனவற்றையும் ஒட்டியுணர்க என்பர். இவ்விதமான புறனடைவிதிகள் சொல்லதிகாரத்தில் நான்கு உண்டு.

அ. ''கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலால் உணர்ந்தனர் கொளலே'' *(602)*

ஆ. மேற்படி *(781)*

இ. ''அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இணைத்தென அறியும்
வரம்பு தமக்கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற் றியலால்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்''. *(879)*

ஈ. ''செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்'' *(946)*

மேலே தரப்பட்ட நூற்பாக்களில் இறுதியானது சொல்லதிகாரம் முழுவதிற்கு மான புறனடை. முன்னைய மூன்றும் இயல்களுக்குரியன; சொல். சொற்றொடர் பற்றிய விடுபாடுகள் அவ்வவ்வியல்களின் புறனடை விதிகளோடு ஒட்டி உணர வேண்டியனவாகும். இறுதியான நூற்பாவை, புறனடை எனக்கொள்வதிலும் பார்க்க, சொற்களை வேறுபடுத்தி உணரும் வகையில் அவை பிரித்துக் காட்டப் படல் வேண்டும் என, எதிர் கால அறிவுப் பரம்பரைக்கு விடுக்கும் 'ஆணை' எனக் கொள்வது சரியெனப்படுகிறது. உரையாளர்களின் பிடியிலிருந்தும் பிடிப் பிலிருந்தும் விடுபட்டு, நாமே சுயமாக இந்நூற்பாவின் பொருளை அறிவோம்.

பேச்சு மொழியிலோ எழுத்து மொழியிலோ பொருள்தந்து
நிற்கும் சொற்கள் அனைத்தையும் பல்வேறு விதிகளையும்
விதிமூலங்களையும் கொண்டதான இந்நூல் எம்முறையில்
நெறிப்படுத்தப்பட்டதோ. அந்நெறியிற் பிசகாது,
சொற்களை எல்லைப்படுத்தி உணரும் வகையில் பிரித்துக்
காட்டுக. செய்கை — விதி, விதிமூலம்.

மேற்படி கருத்தையே இந்நூற்பாவின் உள்ளார்ந்த பொருளாகக் கொள்ள வேண்டியுள்ளது. தமிழ் ஓர் ஒட்டு நிலைமொழி என்பதும் இதன்மூலம் உணர வைத்துள்ளார். தொல்காப்பியனர் சொல்லியல் என ஓரியல் கண்டாரல்லர். ஆங்காங்கே சில சொற்களை உடம்பொடுபுணர்த்தல் என்னும் உத்தி கொண்டு பகுத்துக் காட்டியுள்ளார். எனவேதான், ''சொல்வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்'' என ஆணையிட வேண்டியதாயிற்று. வீரசோழிய ஆசிரியர் தாது, கிரியாபடலங்கள் எழுதுவதற்கும், அவற்றைச் சுத்திகரித்துப் புடம்பண்ணி, பவணந்தியார் பதவியல் கண்டதற்குமான அருட்டுணர்வை இந்நூற்பாவே அவர்களுக்கு ஈந்திருத்தல் வேண்டும். நச்சினர்க்கினியரும் இச்சூத்திரத்தில் வைத்தே வினைச்சொல் பகுபத விளக்கம் கண்டார்.

நூற்பாவில் 'இந்நூல்' என்ற சுட்டு, சீரமைப்புக்காக முன்னும் பின்னும் தள்ளப்பட வேண்டியதாயிற்று. 'இந்' 'செய்தி' யுடன் சார்ந்து ஒருசீராயிற்று. 'நூல்' 'நெறி' யுடன் கூடி மறுசீராயிற்று. சீரொடு சேர்ந்தே மனனிக்க வேண்டி இருந்ததால் 'செய்தியின் நூல்நெறி' எனப் பாடாந்தரம் ஏற்பட்டது, மனனமுறை நூற்பாவின் ஆன்மாவை மலினப்படுத்திவிட்டது.

இவ்வாறு பாடாந்தரம் ஏற்பட்டதால் சேனாவரையர் நூல் என்பதற்கு தொன்னூல் என்றும், அவை அகத்தியம் முதலாயின எனவும் பொருள்புகன்றார். நச்சினார்க்கினியரோ 'நூல்நெறி' என்பதற்கு அகத்தியம் கூறிய நெறியில் என உரைத்தார். இவ்வாறு பொருள்கூறிய இருவரில் ஒருவராவது இந்நூற்பா இறுதியில் முடித்துக்காட்டிய முரண்பாடுகளைக்கொண்ட இலக்கியத் தொடர்களுக்கு, அகத்தியத்திலிருந்தோ அல்லது வேறு தொன்னூலிலிருந்தோ ஒரு விதியையாவது எடுத்துக்காட்டி, அவ் இலக்கியங்களை வழுவமைத்துக் கொண்டார்களல்லர் என்பது கவனிக்கப்பட வேண்டியதாகும்.

'செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் முன்னரே முடிபுகூறப்படாத சொற்கள் இவை என்று தெரிந்து அவற்றை உத்திவகை இலக்கணத்தோடு படுத்திக் காட்டுக' – இது உரையாசிரியர் உரைத்த உரை. அடிகளாரின் கருத்து 'இந்நூல்' என்ற பாடத்திற்கே பொருத்தமானதாகத் தென்படுகின்றது. தெய்வச்சிலையர் 'நூல்' என்பதற்கு அகத்தியம் என்றோ, வேறு தொன்னூல் என்றோ கூறினாரில்லை. 'பிறநூன் முடிபினன் முடியிலும் இலக்கணப் பிழைப் பின்றும்' என்ற குறிப்புடன் உரையை முடித்துக்கொண்டார். தெய்வச்சிலையாரின் குறிப்பு இந்நூல் முடிபினால், எஞ்சியன முடிக்கப்படுவதே நியாயமானது என்ற பொருளையே குறிப்பாகப் புலப்படுத்துகின்றது அல்லவா? எனினும், 'பிரித்துக்காட்டல்' என்ற தொடருக்கு உரியதான பொருளைப் பொருத்திக் காட்டத் தவறிவிட்டனர்.

உரையாளர்கள் நால்வரும் மொத்தமாகப் பதினேழு சான்றுகளை இந்நூற்பா விதியால் முடித்துக்காட்டினர். இவற்றுட் பல முன்னைய புறனடைகளாலேயே முடித்துக் காட்டக்கூடியன. சில தவறாகப் பொருள் கொள்ளப் பட்டன. சில இயல்பிலேயே வழுவற்றன. ஆகவே, பரவை வழக்கிலும் சரி பாடல் வழக்கிலும் சரி, சொற்களை வேறுபடுத்தி உணரும் வகையில் பிரித்துக் காட்டுக என்பதே நூற்பாவின் திரண்ட பொருளாகும்.

தொல்காப்பியத்துக்குப்பின் எழுந்த எந்த இலக்கணநூல் ஆசிரியராவது தம்முடைய நூலுக்கு முடிவான புறனடைவிதி எழுதும்பொழுது, எஞ்சியவற்றைத் தொன்னூல் அல்லது முன்னூல் நெறியில் முடித்துக்காட்டுக என்று எழுதிவிட வில்லை. இவ்வுண்மை கணிக்கப்பட வேண்டும்.

அகத்தியமாயை தவிர்க்கப்பட்டால், தொல்காப்பியத்திற்குமுன் முழுமையான இலக்கண நூல்கள் இருந்தன என்பதற்கு ஆணித்தரமான ஆதாரங்கள் இருப்பதாக இல்லை. என்மனார், என்மனார்புலவர், என்ப என்ற பதங்கள் சில இடங்களில், 'யான் அணுகும் முறையில் இப்பிரச்சினையை அணுக முடிந்தவர்கள் இம்முடிவுக்குத்தான் வருவார்கள்' என்ற தருக்கபூர்வமான நம்பிக்கையைப்

பிரதிபலிப்பனவாகவும், பல இடங்களில் வெறுமனே 'நூற்பா நிரவல் பதங்கள்' ஆகவுமே தென்படுகின்றன.

மீண்டும் நச்சினார்க்கினியரை அணுகுவோம். இந்நூற்பாவைப்பற்றி அதிகம் சிந்தனைசெய்தவர் நச்சினார்க்கினியரே. 'யான் விரித்துக் கூறாதனவற்றை விரித்துக் கூறிக் கொள்க என அதிகாரப் புறனடை கூறுகின்றது' என்ற புத்துணர்வுப் பொலிவுடன் பீடிகையிட்டு, பதவுரை காணத்தொடங்கியவர் முதலாவதான பதவுரைப்பாதையிலே 'நூல்நெறி' என்பதற்கு, அகத்தியத்திற் கூறிய நெறியென எழுதி வழுக்கிவிழுந்தாலும் மீண்டும் இரண்டாவது உரையில் தன்னைச் சரிப்படுத்திக்கொண்டார். 'யான் கூறப்படும் இலக்கணங்களை முதல் நூல்களாற் கூறிக்கொள்க எனின் அது குன்றக் கூறல் என்னும் குற்றமாம் என்று உணர்க' என அடித்துக் கூறித் தன்னுரையை முடித்துக்கொண்டார். 'நச்சர்' கருத்தின் படியும் 'இந்நூல்' என்பதே மூலபாடமாதல் வேண்டும்.

''செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு **செய்தியிந் நூல்நெறி** பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்''

இக்கட்டுரையில் தொல்காப்பியத்து இருநூற்பாக்களின் மூலபாடத்தை நிதானிக்கும் ஆய்வுமுயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. மூலபாடத் திறனாய்வுக்கு முகங்கொடுக்க வேண்டியனவா நூற்பாக்கள் சில பல இன்னும் உண்டு. இத்துறையில் வல்லுநர்களின் ஈடுபாடு அவசியமும் அவசரமும் ஆகும்.

### மேற்கோள்


1. Jules Bloch; The Grammatical Structure of Dravidian Language; P. 9; Poona 1954.
2. J. A. Dixeme Serie Tome 17, Le Pluriel Primitifen—M
3. Caldwell, Dr., South Indian Family of Languages; P. 224 - 225; University of Madras; 1961.
4. Jules Bloch; The Grammatical Structure of Dravidian Language; P. 9; Poona 1954.
5. பார்க்க: வீரகத்தி.க; சொல்லிலக்கணத்தில் யாப்பின் செல்வாக்கு, வாணி கலைக்கழகம், கரவெட்டி *1968*.
6. லீலாதிலகம்: இளையபெருமாள் மா; தமிழ்ப்புத்தகாலயம் ப.74;1971
7. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி; ப 59; நாவலர் பதிப்பு 1952.
8. தொல்காப்பியம் பக்.126; எஸ்.ராஜம் வெளியீடு 1960.


குறிப்பு: 1. தொல்காப்பிய நூற்பாக்கள் எஸ்.ராஜம் பதிப்பில் (1960) உள்ளபடி எடுத்தாளப்பட்டுள்ளன.

2. தொல்.நூற்பா இலக்கங்கள் தொல்காப்பியம் கழகவெளியீடு, (344) 2 ஆம் பதிப்பில் (1954) உள்ளபடி குறிக்கப்பட்டுள்ளன.

# நாட்டுப்புற நாடகங்களில் தெருக்கூத்தின் செல்வாக்கு

அ. அறிவுநம்பி
ஆய்வாளர், தமிழ்த்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

தமிழகத்தில் கிராமங்கள்தோறும் கோவில்விழாவுடன் தொடர்பு கொண்டது தெருக்கூத்து. கிராமீயக்கலைகளுள் ஒன்றான தெருக்கூத்து தமிழ் நாடக வரலாற்றில் குறிப்பிடத்தக்க பேரிடத்தைப் பெற்றது. தமிழ் நாடக வளர்ச்சியில் தெருக்கூத்திற்குப் பெரும் பங்குண்டு. நாட்டுப்புறக்கலையான தெருக்கூத்து, தமிழ் நாடகவுலகில் காணப்படும் பல நாட்டுப்புறக்கலைகளையும் பாடல்களையும் உருவாக்கியிருக்கின்றது. ''பெரும்பாலான நாட்டுப்புறப் பாடல்களும் கதைகளும் பிறந்து வாழும் இடங்கள் தெருக்கூத்துக் களங்களே. பிறப்பிப்பதும் வாழ்விப்பதும் தெருக்கூத்துக் கலைஞர்களே'' என்பர்.

தெருக்கூத்தின் பல கூறுகள் பல்வேறாக வளர்ச்சியுற்ற காரணத்தால் பல நாட்டுப்புறக்கலைகள் தோன்றின எனலாம். அதனாற்றான் பலவாறாகப் பெருகிய நாட்டுப்புற இலக்கியங்களில் தெருக்கூத்தின் கூறுகள் அப்படியே காணப்படுகின்றன. இன்றைய நாகரிக மேடை நாடகங்களுக்கு முன்னோடியாகக் கருதப்படுவது தெருக்கூத்து. நாட்டுப்புறக் கலைவடிவங்களிலும், பிறநாடக வகைகளிலும் தெருக்கூத்தின் பல பகுதிகள் பரந்துபட்டிருக்கக் காணலாம். முழுவதும் பாடல்களால் மட்டுமே அமைந்திருக்கும் பாங்கும், ஏட்டிலன்றி வெறும் வாய்மொழி மரபாகவே போற்றப்பட்டு வந்திருக்கும் தன்மையும், களம், அங்கம் போன்ற பிரிவுகளற்ற அமைப்பும் பிறநாடக வகைகளுக்கு முந்தியதே தெருக்கூத்து என்பதை உறுதி செய்கின்றன. ''கூத்துள் ஒன்றாகிய நாடகம் தனியாகப் பிரிந்து பாட்டு வடிவில் வளர்ந்து பள்ளு, குறவஞ்சி, நொண்டிநாடகம் என்ற இலக்கிய வடிவங்கொண்டு, கீர்த்தனைகளாக இசைக்கப்பட்டுப் புராதன இதிகாச நாடோடிக்கதைகளைத் தழுவி மேனாட்டார் வருகையால் புத்துயிர் பெற்றது'' எனக் குறிக்கப்படும் செய்தியால் நாடகப்பாட்டுக்கள் வெவ்வேறு இலக்கியவகைகளாக உருவுகொண்டு நாட்டுப்புறக்கலைகளாக விரிந்தமை உணரலாம். தெருக்கூத்திலிடம் பெற்ற பற்பல பாட்டுக்கள் மக்களால் களத்துமேடுகளில், வண்டிச் சாலைகளில் கூத்தில்லாக் காலங்களில் பாடப்பட்டன. அப்பாட்டுக்கள் தொடர்ச்சியாகப் பாடப்பட்டுத் தனிநாடகவகைகளாக வடிவு கண்டன. ''பள்ளுப்பாட்டு தட்டாரப்பாட்டு, வண்ணாரப்பாட்டு என்று பலவகைப் பாட்டுக்கள் வழங்கி வந்துள்ளன. ஆனால் ஏதோ ஒவ்வொருநிலையில் பாடுவனவாக அமைந்தன. இவை தொடர்கதையாக ஒவ்வொருவரும் பாடுவதாக வந்தால் நாடகமாகிவிடும். குறவஞ்சி நாடகமும், பள்ளு நாடகமும், நொண்டிநாடகமும் இவ்வாறு வளர்ந்து 18ஆம் நூற்றாண்டில் சிறந்து விளங்கின'' என்று தெ.பொ.மீ. கருதுவது ஈண்டு குறிக்கத்தக்கது. இவ்வாறு நாட்டுப்புறக் கலைகளான குறவஞ்சி நாடகம், நொண்டிநாடகம், பள்ளுநாடகம், போன்ற நாடகங்கள் தெருக்கூத்திலிருந்து

மாற்றுவடிவம் கொண்டெழுந்தவை என்பதை இதனால் அறிந்து கொள்ளலாம். இந்நாடகங்கள் ஏட்டில் எழுதப்பட்டு பிற்காலத்தில் மேடைகளில் நடிக்கப்பட்டன. இவற்றில் தெருக்கூத்தின் கூறுகள் அப்படியே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்நாடகங்கள் நாட்டார் நாடகங்கள், நாட்டுப்புறநாடகங்கள் என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றன. ''நாட்டார் நாடகங்கள் முதன்முதலில் தெருக்கூத்துக் களாகவே நடத்தப்பெற்றன. ஆகையினல் அவை அவற்றிற்குத் தகுந்த முறையில் தாம் எழுதப்பெற்றன. பின்னர் அரங்கத்தில் நடிக்கப்பெற்றன. மாற்றங்கள் அதிகமின்றிப் பாடல்களாகவே அவை அமைந்தன'' என்ற செய்தியால் நாட்டுப் புற நாடகங்கள் தெருக்கூத்தைமைப்பில் அதனை அடியொற்றி எழுந்தவை என்பது பெறப்படும். இவ்வாறான நாட்டுப்புற நாடகங்களும், பிற்காலத் தெழுந்த கீர்த்தனை, யட்சகானம் போன்ற நாடகங்களும், மேனாட்டார் உறவால் மேடையேறிய நாடகங்களும் தெருக்கூத்துக் கூறுகளைப் பயன்படுத்தியிருக்கக் காணலாம். தெருக்கூத்திலிருந்து பிறநாடக வகைகள் பெற்ற கூறுகளைக் காண் பதும் பிறநாடக வகைகள் தெருக்கூத்திலிருந்து வளர்ச்சிபெற்ற நிலைகளைக் காண்பதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். நாட்டுப்புறக் கலைகள், பிறநாடக வகைகள் எனத் தனித்தனியே நாடகவகைகளை கூத்துக் கூறுகளுடன் ஒப்பிட்டுக் காணுவதன் மூலம் அந்நாடகங்களில் காணப்படும் தெருக்கூத்தின் செல்வாக்கை இக்கட்டுரையில் காணலாம்.

### குறவஞ்சி நாடகம்

நாட்டுப்புறநாடக வகைகளுள் பெரிதும் குறிப்பிடப்படுவது குறவஞ்சி நாடகங்களே. சங்ககாலத்தில் குறிகேட்டல் என்ற செய்தி இருப்பினும் அஃது ஒரு தனியிலக்கிய வகையாக வடிவங் கொள்ளவில்லை. பிரபந்தங்கள் பட்டிய லிட்டுக் கூறும்போது 'குறத்திபாட்டு' என்ற வகையே காணப்படுகிறது. தனி யொரு நாடகவகையாக இக்குறவஞ்சி வளர்ந்தமையை உணரும்போது தெருக் கூத்தின் செல்வாக்கை உணர முடிகிறது. ''குற்றாலக்குறவஞ்சி ஒரு நாடகம், நாட்டிய நாடகம், தெருக்கூத்து நாடகம், மிகச்சிறந்த சிற்றிலக்கியம் என்பது போலக் காணப்படுவதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய வேண்டும்..... பண்டைய நாடகவியல்பை மறக்காமல் தம்காலத்தில் தோன்றிக் கொண்டேயிருந்த தெருக்கூத்து நாடகக்கூறுகளையும் 'ஆட்டம்' எனப்படும் நாடகக்கூறுகளையும் கூடிய மட்டும் ஏற்றுக்கொண்டு தம் நாடகத்தை எழுதினர் (திரிகூடராசப்பக்கவிராயர்) எனக் கருதலாம்'' என்று குற்றாலக்குறவஞ்சிக்குக் கூறப்படும் கருத்து அனைத்துக் குறவஞ்சிக்கும் பொருந்துவதாகும். (ஏனென்றால் குறவஞ்சி இலக்கியம் குளுவ நாடகத்துடன், குறி கூறும் பகுதியும் இணைத்து அமைக்கப்பட்ட தனிவகையாகும். குறத்தி குறி கூறுவதாக அமையும் பகுதி தெருக்கூத்தின் கூறுகளுடன் சேர்க்கப் பட்டு குறவஞ்சி நாடகமாயிற்று எனக்கருதலாம். 'குறத்தி குறி கூறுவதை நாடகமாக்கியபோது நாடகத்திற்குத் தேவையான உரையாடல்களை, கட்டியக் காரன் போன்றவற்றைச் சேர்த்துக்கொள்வது இன்றியமையாதது ஆகிவிட்டது' என்ற குறிப்பால் நாடகக் கூறுகள் இணைக்கப்பட்டதாலேயே குறவஞ்சி எழுந்தமையை உணரலாம். ''குறவஞ்சி நூலின் தொடக்கத்தில் அமையும் பாயிரம் கடவுள் வணக்கமாகவும், நூற்பயன் அவையடக்கம் முதலியவற்றைக் கொண்ட

தாகவும் நூல் எழுதற்குரிய காரணம் கூறுவதாகவும் அமைந்துள்ளது'' என்று குறிப்பர். இதில் குறிப்பிடப்படும் நூற்பயன் என்பது நாடகத்திற்குரியதன்று. படிக்கப்படும் இலக்கியத்திற்கே உரியது. நாடகம், நூலாக எழுதப்பெறாது நடிக்கப் படும் பொழுது கேட்டார் கண்டார் யாவருக்கும் வாழ்த்துக்கூறும் பகுதி நாடகத்தின் இறுதியில் அமையும். அந்நாடகம் நூலாகும் பொழுதோ அன்றி நடிப்பதற்காக வல்லாது படிப்பதற்காகவென்று எழுதப்படும் பொழுதோ அந்நூலினைக் கற்பார் அதைக் கூறக்கேட்பார் யாவர்க்கும் வாழ்த்துக் கூறி அதனால் பெறும் பயன் பற்றிப் பேசும் நூற்பயனை அமைப்பது வழக்கம். நாடகம் நடிக்கப்படுவது ஆதலின், நூற்பயன் என்பது நடிக்கப்படும் நாடகத்திற்குத் தேவையற்ற ஒன்றாகும். குறவஞ்சியில் காணப்படும் நூற்பயன் வாயிலாக அது படிப்பதற்கு எழுந்தமையை உணரமுடிகிறது. குறவஞ்சி நாடகங்கள் கோயில்களில் நடந்தமையை வரலாறு கூறும். இவ்வாறு நாடகமாக எழுந்தபோது தெருக்கூத்துக் கூறுகள் குறவஞ்சிக்கு நாடக அமைப்பை ஏற்படுத்தின. அதனாற்றான் பாயிரம், அவையடக்கம், தோடயம், காப்பு, மங்களம் போன்ற பாவமைப்பு முறைகளும், கட்டியக்காரன் அறி முகப்படுத்தும் பகுதி போன்ற சிலவும் தெருக்கூத்திலிருப்பதைப் போல அப்படியே குறவஞ்சியில் காணப்படுகின்றன. ''கட்டியக்காரன் என்பவன் தெருக்கூத்திற்கே உரியவன். இவன் இல்லையென்றல் நாடகம் பார்ப்பவர்க்குக் கதை தொடர்புறப் புலனுகாமலே போகும்'' எனக்குறிப்பர். தெருக்கூத்தைப்போலவே தலைவர் தம் வருகையைக் கூறுதல் நிகழ்ச்சிகளை நடத்துதல் ஆகியவற்றைக் குறவஞ்சி யிலும் கட்டியக்காரன் செய்கிறான். தெருக்கூத்தில் முக்கியபாத்திரங்களையும் முதலில் அரங்கில் வரும் 'தலைவேடத்தையும்' பார்வையாளர்களுக்கு எடுத்துக்கூறி எச்சரிக்கை செய்வதைப் போலவே கும்பேசர் குறவஞ்சியில் பாட்டுடைத் தலைவரை மட்டுமின்றி அவையில் முதலில் தோன்றும் தலைவேடதாரியான மையல் கொண்ட தலைவியைக் கட்டியக்காரன் அறிமுகப்படுத்தக்காணலாம். பாத்திரங்கள் நிகழ்ச் சிகள் இவற்றை எடுத்துக்கூறும் கட்டியக்காரன் தெருக்கூத்தில் இடம் பெறும் தனி யமைப்பாவான். காட்சி களம் இவற்றைத் திரைச்சீலை வழியாக இல்லாமல் சொல்வடிவில் காட்ட வேண்டியிருப்பதால் வருகின்ற பாத்திரம், நிகழு மிடம் இவற்றைக் கூறும் கட்டியக்காரன் கிராமியக் கலையான தெருக்கூத்தில் கட்டாயம் இடம் பெறும் பாத்திரமாகும். குறவஞ்சியிலக்கியம் நாடகமாக மேடையேறுங்கால், தெருக்கூத்தின் கட்டியக்காரன் குறவஞ்சி நாடகத்திலும் தோன்றத் தொடங்கியமையை இதன் மூலமறியலாம். இதைப்போலவே ''தெருக்கூத்து நாடகங்களில் முதலில் இறைவனை வணங்கும் குழுப்பாடல் இருக்கும். அவ்வாறே முடிவிலும் குழுப்பாடல் இடம்பெறும். இக்குறவஞ்சியிலும் (திருக் குற்றாலக்குறவஞ்சி) திரிகூடராசப்பக் கவிராயர், விநாயகர், முருகன், குற்றாலநாதர், குழல்வாய் மொழியம்மை, கலைமகள் ஆகிய இறைவர்களை வணங்கி சைவசமயக் குரவர் நால்வர், அகத்தியர் ஆகியோரை வாழ்த்தி நூற்பயனை அவையடக்கத்தோடு கூறி, நூலைத் தொடங்கி,

''ஆதிமறை சொன்னவனை அனைத்துயிர்க்கும் முன்னவனை
மாது குழல்வாய் மொழிசேர் மன்னவனை வாழ்த்துகிறேன்.'' (128)

என்று வாழ்த்தோடு முடிக்கிறர். இவ்வாறு அமைப்பாலும் தெருக்கூத்தினை அடியொற்றியே குறவஞ்சி அமைந்துள்ளது. தெருக்கூத்தின் ஆரம்பத்தில் விநா

யகரே ஆடுபரப்பில் தோன்றுவதும், அவரை வழிபட குருக்கள் ஒருவர் தோன்றுவதும் இன்றைக்கும் வழக்கிலுண்டு. சிலசமயங்களில் தெருக்கூத்துக்குழுவில் ஆட்கள் குறைவாயிருப்பின் விநாயகர் பொம்மை வழிபடப்படும். விதூடகனுக்கு வாழ்த்துக்கூறிக் கூத்துக்கதையைத் துவக்கிவைப்பவராக விநாயகரே மக்களிடையே தோன்றுவது தெருக்கூத்தின் வழக்கமாகும். இதனைக் குறவஞ்சி நாடகங்களில் காணமுடிகின்றது. விநாயகர் வணக்கம் என்பது அனைத்து இலக்கியங்களிலும் காணப்படும் பொதுக்கூறாயினும் விநாயகர் வேடமிட்டு ஆடுகளத்தில் தோன்றும்முறை குறவஞ்சி போன்ற நாடகங்களுக்கு பரவியமை தெருக்கூத்திலிருந்து பெற்ற ஒன்றென்று கூறவேண்டும். சில குறவஞ்சிகளில் குறவஞ்சித் தமிழைக் காக்கக் கணபதி தோன்றினுர் என்று கணபதியையும் ஒரு கதைமாந்தராகச் சித்திரித்துள்ளனர்....... ''சில குறவஞ்சிகளில் விநாயகரே கதைமாந்தராக வருதல் குறிப்பிடத்தக்க ஒன்ருகும்''. அச்சேறியுள்ள கூத்து நூற்கள் பலவற்றில் ஆடுபரப்பில் விநாயகர், அவரை வழிபடும் குருக்கள் தோன்றுவதையும் அவர்களைக் கட்டியக்காரன் அறிமுகப்படுத்துவதையும் காணலாம். சான்றிற்குப் ''பதினெட்டாம் போர்'' நாடகத்தில் ''கேளுங்கள் சபையோர்களே! இந்தப்பிரகாரம் புவியின்கண் ஓங்கும் குருகுலாதிபர்களாகிய பாண்டவர்களுடைய சபைக்கு வீரமுகச் சுந்தர விநாயகர் வருகின்ருரென்றறிவீர்கள் சபையோர்களே'' என்று கட்டியக்காரன் கூற, உடனே விநாயகர்,

''வீரமுக சுந்தர விநாயகர் வந்தார்மிகு
விந்தைசேர் பாண்டவர்க்கே வெற்றியைத் தந்தார் வீர''

........ எனத் தொடங்கிச் சுப அறிமுகத்துடன் களத்தில் தோன்றுவார். பிறகு கட்டியக்காரன், ''கேளுங்கள் சபையோர்களே! இந்தப்பிரகாரம் பாண்டவர் சபையை நாடி வீரமுக சுந்தரவிநாயகர் வந்தபின்னர் அவரைப் பூசை செய்யுஞ் சுந்தரக்குருக்கள் வருகிறவிதங் காண்பீர், சபையோர்களே'' எனக்கூற,

''சுந்தரக் குருக்கள் வந்தார்மிகு
தூயசதுர்மறையின் வாயரெனப் புகலும் சுந்...''

என்று தன்னைத்தானே அறிமுகப்படுத்திக்கொண்டு வரும் பகுதியைச் சுட்டலாம். இதன்பிறகு குருக்கள் ஆடுபரப்பில் விநாயகரை அர்ச்சிக்க, விநாயகர் ஆசி கூறியவுடன் கூத்துத் துவங்கும். ஆடுபரப்பில் இவ்வாறு விநாயகர் வருதல் தெருக்கூத்துப்பாணியாகும்.

அமைப்புமுறை, கட்டியக்காரன் வருகை, விநாயகரே கதைமாந்தராக வருதல் இவற்றால் மட்டுமின்றிப் பிற காரணத்தாலும் குறவஞ்சி நாடகம் தெருக்கூத்திலிருந்து கிளைத்தது என்பதை மேலும் காணலாம். 'வசந்தவல்லி' நாடகத்தின் கதாநாயகி. குற்ருலநாதர் மேல் மோகம் கொள்ளும் பெண். அவள் பந்தடிக்கும் நிலேயினே ஆசிரியர்,

''பந்தடித்தனளே வசந்த சுந்தரி - விந்தையாகவே (பந்)
மந்தரமுலேகளுசலாட மகரக்குழைகள் ஊசலாட
சுந்தரவடிகள் பூசலாட தொங்கத் தொங்கத் தொங்கத்
தொம்மென'' (பந்)

(கு.குற.13)

என்று விளக்கி மேலும் சொல்லுகிறர். இதற்கு ராகம், தாளம் அனைத்தும் குறிக் கப்பெற்றுள்ளது. இது இன்னும் தமிழ்நாட்டுக் கிராம மக்கள் வாழையடி வாழை யாகப் பாடிப் பாடிப் பயிற்றிவரும் தெருக்கூத்தின் மறுவடிவமன்றி வேறென்ன?'' என்று அ.மு.பரமசிவானந்தம் அவர்கள் குறிப்பதை நினைத்தல் வேண்டும். இவ்வாறு கருதுவதற்குக் காரணமுண்டு. தெருக்கூத்திலிருந்து குறவஞ்சி நாடகம் தோன்றிற்று என்பதற்குத் தெருக்கூத்தில் 'குறவஞ்சிநாடகம்' என்ற பெயரில் அமையும் கூத்துக்கதையும் சான்றாயமையும், பாரதக்கதை கூத்தாக ஆடப்படும் பொழுது ''துரோபதை குறவஞ்சி நாடகம்'' என்ற பெயரில் ஒரு பகுதி ஆடப்படும். 'திரௌபதை குறத்தி வேடம் பூண்டுகொண்டு துரியோதனனின் பட்டத்தரசியின் கைகளைப்பார்த்துக் குறி சொல்லுவாள். துரௌபதை இவ்வாறு குறப்பெண் ணாக வேடப்புனைவுடன் தோன்றுவது மட்டும் ஒரு நாள் கூத்தாகும். இவ்வாறு குறத்தி குறி கூறுவதைக் கூத்தாகக் கண்ட மக்கள் இவற்றின் பாடல்களை ஆங் காங்கே பாடியமையை உணரலாம். குறத்தி குறி கூறுவதைக் கூத்தின் ஒரு பகுதியாகக் கண்ட புலவர்கள் தனியொரு நாடகமாகப் பாடுபொருளை மாற்றிப் படைத்ததன் விளைவே குறவஞ்சி நாடகம் எனலாம். குறவஞ்சி நாடகம் என்ற சொல்லாட்சியும் இதனைத் தெளிவுபடுத்துகிறது. இவ்வாறு தனியிலக்கியமாகப் பக்தி பரப்பும் நூலாக வெளிவந்தமை காரணமாகவே நூற்பயன் இடம் பெற்றது எனலாம். தனிவகை நாடகமாகப் படைக்கப்படும்பொழுது தெருக்கூத்தின் அமைப்புமுறை, கட்டியக்காரன் பாத்திரம், விநாயகர் வேடப்புனைவு போன்ற வற்றை அப்படியே கையாண்டனர் என்பதை அறியலாம். இதனாற்றான் ''துரோபதை குறவஞ்சி நாடகம், அப்பெயர் பெறினும் அஃது ஒரு இசைநாடக மேயன்றிக் குறவஞ்சி அன்று. துரோபதை குறத்தியாக வேடமாறித் துரி யோதனுடைய மனைவியிடம் பரிசு பெறுகிறுள். ஆயினும் குறவஞ்சியின் பொதுஅமைப்பு அதற்குக் கிடையாது . . . . . . . . . . . . . . . ஓர் இசைநாடகத்திற்குரிய அத்தனை கூறுகளும் குறவஞ்சி நாடகத்தில் சிறப்பாக அமைந்துள்ளன. . . . . . இது இசை நாடகந்தான் என்று உறுதியாகச் சொல்லலாம்,'' என்று குறிப்பர் ஏ.என்.பெருமாள் அவர்கள். ''இசைப்பாடல் நிறைந்த இசை நாடகங்களை நாட்டுப்புறத்தில் பெரும்பாலான மக்கள் பத்தொன் பதாம் நூற்றுண்டில் தெருக்கூத்தாகவே கண்டு மகிழ்ந்திருக்கின்றனர்'' என்ற அவர்தம் குறிப்பால் இசைநாடகம் என்பது முன்னர்த் தெருக்கூத்தாக நடை பெற்றமையையும் உணரலாம். இதன்மூலம் 'துரோபதை குறவஞ்சி நாடகம்' என்ற தலைப்புடன் கூடிய நூல் தெருக்கூத்தென்பதையும் இதையடியொற்றியே பிற குறவஞ்சி எழுந்திருக்கிறதென்பதையும் அறியலாம். எனவே தெருக்கூத்தின் ஒருபகுதியாக குறவஞ்சி குறி கூறும் பகுதி இறையுணர்வை அடிப்படையாகக் கொண்டு குறவஞ்சி நாடகம் என்ற தனிப்பகுதியாக வளர்ந்தமையை உணர லாம். அவ்வாறாக வளர்கின்ற வேளையில் தெருக்கூத்தின் அமைப்பையும் கட்டியக்காரன், விநாயகர் வருகை, வசனம் போன்றவற்றையும் தெருக்கூத்திலிருந்து அவ்வண்ணமே பெற்றிருக்கிறது என்பதையும் அறியமுடிகிறது. மேற்சுட்டிய காரணங்களால் தெருக்கூத்திலிருந்து வேறொரு வகையாகப் பிறப்பெடுத்தது குறவஞ்சியிலக்கியமெனத் தேறலாம். நாட்டுப்புறக் கலைகளுள் ஒன்றுகக் கருதப்பட்டு, கோயில்களின் மேடைகளில் ஆடப்பட்டதாகக் கருதப்படும் குற வஞ்சி நாடகத்தில் அதனுற்றான் தெருக்கூத்துக் கூறுகள் வடிவஞ் சிதையாமலே

செல்வாக்குப்பெற்று அமைந்திருக்கின்றன என்பதை அறிந்து கொள்ளலாம். குறவஞ்சியின் பிற்பகுதியிலமைந்துள்ள சிங்கன் சிங்கிப் பகுதி குளுவ நாடகத்தைச் சேர்ந்ததாக அமையவும் காணுகிறோம்.

### பள்ளு நாடகம்

> ' நெல்லு வகையை எண்ணினாலும்
> பள்ளு வகையை எண்ணமுடியாது' என்று கூறுமளவு

பள்ளு நாடகம் நாட்டுப்புற இலக்கியமாக வளர்ந்திருக்கின்றது. பயிர்த் தொழில் செய்கின்ற பள்ளர் வகுப்பாரைப் பாத்திரங்களாக்கிப் பள்ளு நாடகங்கள் படைக்கப்பெற்றுள்ளன. நாட்டுப்புற நாடகமான பள்ளினைப் பார்க்கும்பொழுது தெருக்கூத்திலிருந்து பல பகுதிகளை அது பெற்றிருப்பதனை உணரமுடிகிறது. சிலப்பதிகாரத்திற் 'காணப்படும் 'விருந்திற்பாணி,' 'ஏர்மங் கலம்', முகவைப்பாட்டு' போன்றவை உழவுபற்றிய தனிப்பாட்டுக்கள். இவ் வாறு''பண்டைத் தமிழகத்தில் வழங்கிவந்த உழவுப்பாடல்கள் கூத்துக்களுடன் இணைந்து, பள்ளுகள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்திருக்க வேண்டும்''. பள்ளு இலக்கியம் பள்ளுநாடகமாக உருவாவதற்குத் தெருக்கூத்துக் கூறுகளே காரணமென்று கூறலாம். ''பள்ளு, நாடகமாக மக்கள் முன்பு, நடிக்கப் பெற்று வந்தது. அது நாடகமாக நடிக்கப்பெறுங்கால் நாடகத்துக்கு அங்கங் களாகவுள்ள கட்டியக்காரன் வரவு, நூல் கொண்டார் பெருமை முதலாயின வெல்லாம் சேர்க்கப்பெற்று நடிக்கப்பெற்று வந்தன'' என்ற சோமசுந்தர தேசிகர் என்பார் கூற்று, தெருக்கூத்துத்தன்மைகள் படிக்கும் இலக்கியத்தை நடிக்கும் கலையாக மாற்றியமையைக்கூறும். பள்ளு நாடகங்களிற் காணப் படும் தெருக்கூத்துக்கூறுகள் பள்ளுநாடகம் தெருக்கூத்திலிருந்து மாற்றுவடிவில் பள்ளரைப் பாட எழுந்த நாடகம் என்பதை எடுத்துக்காட்டும். பள்ளின் ''தொடக்கத்தில் பள்ளியர், பள்ளன் தோன்றினரே என்று கவிக்கூற்றாக ஒரு பாடல் அமைவதும், அடுத்தபாடலில் அந்தந்த மாந்தர்கள் 'வந்தேனே' என்று தங்களைத் தாங்களே அறிமுகஞ்செய்து வருவதுமான அமைப்பு உள்ளது. இப் பண்பு ஒவ்வொரு மாந்தர் பேசும்போதும் வருகின்றது. தெருக்கூத்தில் மாந் தர்கள் தாங்களே தோன்றி 'வந்தேனே' என்று பாடுமுன்னர்க் கட்டியக்காரனோ அல்லது பின்பாட்டுப்பாடுகின்றவனோ கூறும் அறிமுகத்துடன் இஃது இயை புடையதாக உள்ளது''. இதன்மூலம் தெருக்கூத்தின்பாணி அப்படியே பள்ளில் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறிந்துகொள்ளலாம். கட்டியக்காரன் இல்லாத போது ஆசிரியரே கவிக்கூற்றாக மேற்சுட்டியவாறு கதைமாந்தர்களை, நிகழ்ச் சிகளை அறிமுகப்படுத்தக் காணலாம். ஆசிரியரே கட்டியக்காரனாக வருவது வழக்கமாதலின் கவிக்கூற்றாக வருமிடங்கள் கட்டியக்காரனின் சொற்களாகக் கருதப்படுவது தெருக்கூத்திலுண்டு. கட்டியக்காரன் என்ற பெயரில் இல்லாது போனாலும் கவிக்கூற்றாக வருமிடங்களை இவ்வாறு கருதலாம். கவிஞரே அறிமுகப்படுத்தியபிறகு பாத்திரங்கள் தம்மைத்தாமே அறிமுகப்படுத்தும் பாங்கு தெருக்கூத்தின் பாணியாகும். கட்டியக்காரன் கோலுக்காரன் என்ற பெயரில் திருச்செங்கோட்டுப் பள்ளிலும் கஞ்சமி செட்டியார் பள்ளிலும்

காணப்படுகின்றான். பெயரில் வேறுபாடு உண்டே தவிர கோலுக்காரன் கட்டியக்காரனின் அறிமுகப்படுத்தும் பணியையே ஆற்றக்காணலாம். தெருக்கூத்தில் இடம்பெறும் கட்டியக்காரன் கையில் பிரம்பேந்தி வருவது மரபு. கதைத் தலைவர் யாராயிருந்தபோதும் அவரது வாயில்காப்போனாகிய கட்டியக்காரன் பிரம்பேந்தி வரவேண்டுமென்பது வழக்கமாகும். இவ்வாறு கோலேந்தி வரும் கட்டியக்காரனைக் கோல்காரன் அல்லது கோலுக்காரன் என்ற பெயரில் பள்ளு நாடக ஆசிரியர்கள் பயன்படுத்தியிருக்கின்றனர் எனத் தேறலாம். ''பள்ளுகள் மேடையில் நடிக்கும்போது, சிலமாற்றங்கள் செய்யப்பட்டிருக்கலாம். ஆகவே கட்டியக்காரனேச் சேர்த்து நடித்திருப்பதை அறிகிறோம். 18ஆம் நூற்றாண்டில் வேளான் சின்னத்தம்பி என்ற என்னியினுப்பிள்ளை முக்கூடற்பள்ளை நாடகமாக எழுதியபோது கோமாளியைப் பாத்திரமாகச் சேர்த்துக் கொண்டார்'' என்ற செய்திவழி தெருக்கூத்திலிடம் பெறும் தொப்பைக்கூத்தாடி என்ற கோமாளியும் சில பள்ளுகளில் தோன்றியமையை உணரலாம்.

தெருக்கூத்தில் தர்க்கப்பாடல்கள் இடம்பெறுவது பொதுவான கூறாகும். நடைபெறும் கதைநிகழ்ச்சிகளில் எவ்வாறேனும் இரண்டு முரண்பட்ட பாத்திரங்கள் சந்தித்துத் தங்களுக்குள்ள கருத்துமோதல்களை இவ்வாறு தர்க்கம் செய்வது கூத்திற்கு விறுவிறுப்பை உண்டுபண்ணும். தர்க்கம், ஏசல் சம்வாதத்தரு, பிரிதியுத்தரத்தரு போன்ற தலைப்புக்களில் விவாதப்பாக்கள் தெருக்கூத்திலிடம் பெறும். இத்தகைய ஏசற்பாட்டுக்களே தனியொருநாடகமாகப் பெரிதுபடுத்தப்பட்டு பள்ளுநாடகங்களாக வளர்ந்தன எனலாம். ஏசல் என்பது பள்ளின் ஒரு கூறு என்று சதுரகராதி கூறிடக்காணலாம். ஏசல் அமைப்பும், கட்டியக்காரன் வரவு, தம்மைத் தாமே அறிமுகப் படுத்தியபடியே பாத்திரங்கள் நுழைதல் போன்றவையும் தெருக்கூத்திலிருந்து பள்ளுமாற்றுருக் கொண்டதைக் கூறும். கருத்துக்களினால் வேறுபட்டு நிற்கின்ற இருபாத்திரங்கள் தத்தம் கருத்தை வலியுறுத்தும் ஏசற்பாடல்கள் தெருக்கூத்தில் இடம் பெற்றவை. இதையே சமயப் பிரசாரத்திற்கு நாடகவடிவில் பள்ளு நாடகம் என்ற பெயரில் படைத்துள்ளனர். ''முதற் பள்ளு தமிழ்நாட்டில் 16 ஆம் நூற்றாண்டில் வேரூன்றி வலிமைபெற்றுள்ள சைவ தத்துவ அடிப்படையில் அல்லது வைணவக் கோட்பாட்டில்தான் தோன்றியிருக்க வேண்டும்'' என்று குறிப்பிடுவர். இவ்வாறு சமயக் கருத்துக்களை வலியுறுத்தும் நோக்கில் தெருக்கூத்தின் ஏசற்பாக்கள் நாடக அமைப்பில் பள்ளு நாடகங்களாகப் பிறப்பெடுத்திருக்க வேண்டும். சமய அடிப்படையில் மட்டுமன்றிப் பொதுவான ஏசல்களும் உண்டென்பதைச் 'சிங்காபுரிப்பள்ளு' வாயிலாக அறியலாம். இப்பள்ளில் ஒரு கணவனுக்கு வாய்த்த இரு மனைவியர் ஏசிக்கொள்வது சமயச் சண்டையாக இல்லாமல் பொது ஏசலாக அமைந்துள்ளது. பள்ளில் காணப்படும் ஏசற்பகுதி தவிர 'ஏசல்' என்ற தனி நூலும் உண்டு. பாடுபொருள் இரண்டிலொன்றை வலியுறுத்துவதே ஆதலின் இரு மனைவியராக இல்லாமல் ''தாய் மகள் ஏசல்'' போன்றதாகவும் அமையலாம். 'இட்டிலிக்கும் உப்புமாவிற்கும் ஏசல்' என்றொரு நூல் இருந்தமையை அறிகிறோம். இவ்வாறான 'ஏசல்' என்ற இலக்கியத்திலும் தனியமைப்பிலும் தெருக்கூத்துக் கூறுகள் உண்டு. ''தெருக்கூத்து இலக்கியங்களின் பொது

அமைப்பான காப்புடன் தொடங்கும் முதற்பகுதியும் கதைநிகழ்ச்சிகள் வரும் இடைப்பகுதியும் ஏசலிலும் காணப்படுகின்றன.'' இதனால் ஏசல், அதை ஓர் உறுப்பாகக் கொண்டிருக்கும் பள்ளுநாடகம், இரண்டும் தெருக்கூத்தின் தர்க்கப்பாடல்களாகவும், தெருக்கூத்தின் அமைப்புக்களாகவும், கட்டியக்காரன் சுயஅறிமுகம் போன்ற தன்மைகளைக் கொண்டதாகவும் அமைந்திருக்கக் காண லாம். தெருக்கூத்துப் பாடல்களாகிய விவாதப்பாடல்கள் களத்துமேட்டிலும் பிற இடத்தும் பாடப்பட்டு வந்திருக்கின்றன. ''தென்னாற்காடு மாவட்டத்தில் மன்மதன் கதை தெருக்கூத்தாக நடிக்கப்படுகிறது. இதற்குக் 'காமட்டி நாடகம்' என்னும் பெயர் சூட்டப் பெறுகிறது. காமன் பண்டிகை என்பதே 'காமண்டி' எனத்திரிந்திருக்கலாம். மன்மதனும் ரதியும் முக்கிய பாத்திரங்கள். ஊரினர் எரிந்த கட்சியினர், எரியாத கட்சியினர் என இரு கூறுகப் பிரித்து நகைச்சுவையுடன் வாதிடுவதும் உண்டு'' என்ற செய்தி வாயிலாக கூத்துப் பாட்டுக்கள் கூத்திலன்றிப் பிறவிடத்தும் விவாதப் பாடல்களாவே வழக்கி லிருப்பதை உணரலாம். இவ்வாறு தர்க்கப்பாடல்கள் சமயக்கருத்துக்களை வலியுறுத்தத் தெருக்கூத்து அமைப்பிலேயே உருவாகின. அவை பள்ளு நாடகங் கள் என்று பெயர் பெற்றன என்பதை உணரலாம்.

## நொண்டி நாடகம்

நாட்டுப்புற நாடகங்களில் நொண்டி நாடகமும் ஒன்று. காலை நொண் டியாக மடித்துக்கட்டியவாறு ஒருவன் தன் பழைய கதைகளை எடுத்துக் கூறி இறைவனை வேண்டுவதாக இஃது அமையும். நொண்டியாக உருவந்தாங்கி ஆடிப்பாடுவதால் நொண்டி நாடகம் என்ற பெயர் பெற்றதா, பாக்கள் யாவும் நொண்டிச்சிந்தால் அமைவதால் இப்பெயரா என்பது தெளிவாகப் புலப்பட வில்லை. எதுவாயிருந்தபோதிலும் இந்நாடகம் தெருக்கூத்தின் அமைப்பில் கூத்துக்கூறுகளைக் கொண்டிருக்கக் காணலாம். காப்புச் செய்யுள், தோடயம், மங்களம், அவையடக்கம், கணபதிவருகை, கட்டியக்காரன், கவிக்கூற்று, பாத்திர அறிமுகம், இறுதியில் வாழ்த்து, மங்களம் போன்ற தெருக் கூத்துக்கூறுகள் பெரும் பான்மையும் அப்படியே நொண்டி நாடகங்களில் காணப்படுகின்றன. நொண்டி நாடகத்தில் காணப்படும் நூற்பயன் நடித்தற்குரிய நாடகத்திற்குப் புறம்பானது எனினும் குறவஞ்சி போலவே ஏட்டிலிருந்து மேடைக்கு வந்ததாக நொண்டி நாடகத்தைக் கருதலாம். இவ்வாறு மேடையேறுவதற்குச் சில கூத்துக்கூறுகள் உதவின. 'திருப்புல்லாணி நொண்டிநாடக'த்தின் முன்னுரையில், நொண்டி நாடகத்தில் கட்டியக்காரன் இடம் பெறுவதாகக் கூறப்பெற்றுள்ளது (பக்.2). ஆனல் அச்சிட்ட எந்த நூலிலும் இல்லை. ஒருகால் பள்ளுகளை நடிக்கும்போது கட்டியக்காரனைச் சேர்த்துக்கொள்வது போல், இதிலும் சேர்க்கப்பெற்றிருக்கலாம் எனக் கருதுவர். பள்ளு இலக்கியங்களில் கோலுக்காரன் அல்லது ஆசிரியர் கட்டி யக்காரன் பணிகளைக் கொண்டதைப்போலவே நொண்டி நாடகத்தில் 'சித் தாண்டி' என்ற பாத்திரம் கட்டியக்காரனின் பணிகளைச் செய்கிறது. தெருக் கூத்தில் பொதுவசனத்தைப் பேசுபவன் கட்டியக்காரனே. நொண்டி நாடகங் களில் ''சில இடங்களில் வசனம் வருகிறது. சித்தாண்டி தலைவன் வருகையைக் கூறும்போது வசனத்தில் கூறுகிறான்'' என்பர். இதனால் தெருக்கூத்தின்

அமைப்பு முறைகளுடன் கூட கட்டியக்காரனும் நொண்டி நாடகத்தில் காணப் படுகிறான். நொண்டியின் சுய அறிமுகப்பகுதி தெருக்கூத்தை அடியொற்றியது என்பதில் ஐயமில்லை.

தெருக்கூத்தில் 'புலம்பல்தரு' என்ற தலைப்பின் கீழ் பாத்திரங்களின் புலம்பற்பகுதிகள் அமையும். அவை பொதுவாகவே நெடியதாய் இருப்பது வழக்கம். பாரதக்கூத்தில் 'துகிலுரிதல்' அல்லது 'பாஞ்சாலி புலம்பல்' என்பது தனிக் கூத்து. பாஞ்சாலி புலம்பும்போது தனது பழைய நிலைமைகளை நினைந்தும் அதற்கு உறுதுணையாக இருந்த கிருஷ்ணனின் அருளை எண்ணியும் நன்றி பாராட்டியும் நிகழ்கால இன்னல்களைநீக்கிட கிருஷ்ணனை எண்ணியும் அமையும் புலம்புதல் வழக்கம். இவ்வாறு நடந்தமை கூறியும் இறையருள் எண்ணியும் அமையும் புலம்பல் பகுதி மட்டும் ஒருநாள் கூத்தாக அமையும். இதனுடைய வளர்ச்சியாக நொண்டி நாடகத்தைக் கருதலாம். தன் பழைய நிலைகளை எடுத்துக்கூறுவதும் வள்ளல்களை நன்றியுடன் போற்றுவதும், அருள்தருமாறு ஆண்டவனை வேண்டுவதும் நொண்டி நாடகங்களில் காணப்படும் பாடுபொருள்கள். இவை தெருக்கூத்தின் புலம்பற் பாக்களை நினைவுபடுத்துகின்றன. மக்களிடையே இரக்கவுணர்வு, இறையுணர்வு தோன்ற வேண்டுமென்பதற்காகப் புலம்பற் பாக்களாகத் தெருக்கூத்தில் காணப்பட்டதை அடியொற்றித் தெருக்கூத்தின் அமைப்பு முறையில் அதன் கூறுகளை உள்ளடக்கியதாக நொண்டி நாடகங்கள் தோன்றியிருக்கலாம். ''பெருந்தவறு செய்தவர்களின் கைகால்களை வெட்டும் தண்டனை, முன்காலத்திலிருந்தே பழக்கத்திலிருந்த ஒன்றாகும். நொண்டிகளின் அவலநிலை, அனைவரது இரக்கவுணர்வைத் தூண்டுவதாகும். .. .. .. .. .. .. பரத்தமையும் கொள்ளையும் சமுதாயச் சீர்கேடாக இருந்த காலத்தில் இவ்வகை இலக்கியங்கள் முதன்முதலில் தோன்றியிருக்க வேண்டும். காமவுணர்வில் சிற்றன்னையைக் கெடுத்துவிட்டான் என்று தவறாகக் கருதப் பெற்றுக் கால் கைகளை வெட்டித் தண்டிக்கப்பட்ட சாரங்கதரனின் கதை, மக்களை மிகுதியாகக கவர்ந்திருந்தது. அது பாரம்பரியமாகப் பாரதத்தில் வழங்கி வந்த ஒரு பழங்கதை. அதனுடைய தாக்கமும் நொண்டிநாடகத்தின் தோற்றத்திற்குக் காரணமாக இருந்திருக்கலாம்.'' சாரங்கதரன்கதை இன்றும் தெருக்கூத்தில் ஆடப்பட்டு வருகிறது. தெருக்கூத்தில் காணப்பட்ட புலம்பல்களை இவ்வாறு நொண்டி வேடத்தில் தனியொருவரே ஆடிப்பாடியதால் நொண்டி நாடகம் எனப் பெயர் பெற்றிருக்கவேண்டும். 'பிரலாபத்தரு' என்ற பெயரிலும் தெருக்கூத்தில் இப்புலம்பற் பகுதிகள் காணப்படும். இவற்றைத் தெருக்கூத்தின் அமைப்பில், வசனம் பேசும் கட்டியக்காரன், சுயமாக அறிமுகப்படுத்திக் கொள்ளும் பாத்திரம் இவற்றையும் இணைத்து நொண்டி நாடகங்கள் வளர்ந்திருக்க வேண்டும்.

தெருக்கூத்து முழுமையுமே தனியாக ஒரே சிந்துப்பாடல்களால் உருவாதலும் உண்டு. சான்றாகக் குரும்பலூர் சண்முகம் குழுவினர் 'கொலைச் சிந்து' என்ற சிந்துப்பாடல்களில் தெருக்கூத்துக் கதையை 1.7.78 அன்று திருச்சி வானொலியில் நிகழ்த்தியதைக் குறிப்பிடலாம். இதைப்போலவே நொண்டிச் சிந்து போன்ற சிந்து வகைகளில் கூத்துக்கள் நடத்தப்படுகின்றன. இதைப் போலவே நொண்டிச்சிந்தால் உருவான கூத்து நொண்டி நாடகம் என அழைக்கப்

பட்டிருக்கலாம். கதைப்பாத்திரமும் நொண்டியாக இருப்பதால் இப்பெயரே நிலைத்திருக்க வாய்ப்புண்டு. இன்றைக்கு தெருக்கூத்துப்பாக்களில் பல நொண்டிச் சிந்தாகவே அமைந்துள்ளன.

தெருக்கூத்தின் துவக்கம்போலவே அமைதல், கட்டியக்காரன் அல்லது சித்தாண்டிவருதல், பாத்திரத்தை அறிமுகப்படுத்துதல், அவனே வசனப்பகுதி களை மொழிதல், தெருக்கூத்தின் புலம்பற்பாடல்களைப் போலவே நிகழ்ந்ததை எண்ணி வருந்துதல், நன்றி கூறல், இறையடி ஏத்தல் எனப் பாடுபொருள் அமைதல் வாழ்த்து மங்களம் எனத் தெருக்கூத்தைப்போலவே முடிதல் இவற்றை நொண்டி நாடகத்தில் காணலாம். தெருக்கூத்தின் செல்வாக்கால் தோன்றிய பிறிதொரு நாடக அமைப்பாக நொண்டி நாடகத்தைக் கருதலாம்.

**கீர்த்தனை நாடகம்**

நாடகம் என்ற பெயருடன் கீர்த்தனைகள் அடங்கிய நூல் கீர்த்தனை நாடகமாக தமிழ்நாடகவுலகில் காணப்படுகிறது. புகழ்பெற்ற இராம நாடகக் கீர்த்தனை இசையுரையாகவே எழுதப்பட்டிருக்கிறது. நூற்பயன் கூறும் ஆசிரியர் தருவின் இரண்டாம் சரணத்தில்

'பாகவதர் படிக்கும் கீர்த்தனையாய்ச் சொன்னேன்' என்கிறார். மேலும்,

''ஞானநாயகனும் ராமன் நாடகத்தை
இசையாற் சொல்லும்
கான பாகவதர் உள்ளம் களித்திட
இதனைக் கேட்போர்''

எனவும்

'அருணசலக்கவி சொல்லிய கீர்த்தனை
படிப்போரும் கேட்போரும் வாழி! வாழி!'

எனவும் வரும் பகுதிகள் இந்நூல் கதையுரையாகப் பேசுவதற்குரியதென்பதை எடுத்துக்காட்டும். இராமனுடைய சரிதத்தைக் கீர்த்தனைகளால் பாடியிருக்கின்றார் சீர்காழி அருணாசலக் கவிராயர். இது நாடகம் என அழைக்கப்படுவதற்கு அதனுள் காணப்படும் தெருக்கூத்துக் கூறுகளே வாய்ப்புத் தருகின்றன. ஒரு பழங்கதையை ஒரு குறிப்பிட்ட பாவமைப்பில் அல்லது இசையமைப்பில் பாடுதலென்பது தமிழகத்தில் வழக்கிலுள்ள ஒரு செயலாகும். சிலப்பதிகார காலம் முதல் பரவலாயிருந்த நளதமயந்திகதை வெண்பாக்களினால் இயற்றப்பட்டு நளவெண்பா என்ற இலக்கியமானது. அதைப்போலவே இராமகதை நிகழ்ச்சிகள் கீர்த்தனைகளால் பாடப்பட்டு இராம நாடகக் கீர்த்தனை என்றாயிற்று எனலாம். இந்நூலும் பிறகெழுந்த நூல்களும் எடுத்தாண்ட கதைகள் தெருக்கூத்துக்களாக ஆடப்பட்டவையே,. இராமரின் கதையைக் கீர்த்தனை வடிவில் ஆக்கியபோது இராமர் கீர்த்தனை எனப் பெயரமைவதே பொருத்தமானதாகும். சர்வசமயக் கீர்த்தனை போன்றவை அவ்வாறெழுந்திடக் காணலாம். இராமர் கீர்த்தனைகளில் நாடகம் என்ற சொல் தேவை

யில்லை. ஏனெனில் ''நாடகம் மேடையில் நடித்துக் காட்டப்பெறுவது; அது கண்டும் கேட்டும் மகிழத்தக்கது; இராம நாடகம் ஒருவரால் சொல்லப்பெறு வதற்கும் மக்களால் கேட்கப்பெறுவதற்கும் தகுதியான முறையில் எழுதப் பெற்றுள்ளது''. தெருக்கூத்தில் நடைபெற்ற இராமன் கதையைக் கீர்த்தனை வடிவிலாக்கி யிருக்கின்றனரென்று கருதிடக் காரணங்கள் இரண்டு. முதலாவது நாடகம் என்ற சொல்லாட்சி. தெருக்கூத்துக் களத்தில் நடைபெற்ற இராம நாடகம் கீர்த்தனைகளாக உருவானமையால் இராம நாடகக்கீர்த்தனை என்ற பெயர் அமைந்திருக்கிறது எனலாம். இரண்டாவது, இசையுரையாக அமையும் இக் கீர்த்தனையில் இடம்பெறும் கட்டியம் என்ற பகுதி. காட்சிகளை விளக்கும் திரையமைப்புக்கள் இல்லாத காலத்தில், ஏறத்தாழ ஒப்பனைகளும் ஒன்று போலவே அமைந்திருக்கும் நேரத்தில், ஆடுபரப்பில் தோன்றுகின்ற பாத்திரம் இத்தன்மைத்து, இப்பெயர் உடையது என்பதை மக்கள் அறிய இயலாது. அக்காரணத்தினாலே காட்சியையும், பாத்திரத்தின் அருமைகளையும் கட்டியக் காரன் மக்களுக்கு எடுத்துரைப்பான். அவனது உரை வசன வடிவில் அமையும். இதனால் ஆடுபரப்பில் தோன்றுகின்ற பாத்திரம் பற்றிய செய்திகளை மக்கள் தெளிவாகப் புரிந்து கொள்வர். படிப்பதற்காக அல்லது கதையுரையாகப் பொழிவதற்காக எழுந்த இராம நாடகக்கீர்த்தனையில் 'கட்டியம்' கூறும் பகுதி தேவையற்ற ஒன்று. படிக்கின்ற வாசகன் பாட்டின் மூலமாகவே பாத்திரம் பற்றிய செய்திகளை நேரில் பெறமுடியும். இசையுரையின் போது கதை யுரைப்பவர் பாத்திரத்தின் மேன்மைகளை விளக்குங்கால் கேட்போருக்கு அப் பாத்திரம் பற்றிய செய்திகள் கிடைக்கும். இடையில் அப்பாத்திரத்தைப் பற்றிப் பேசும் கட்டியம் என்ற பகுதி தேவையற்ற ஒன்று. இராமநாடகக் கீர்த்தனையில் 'கட்டியம்' வரும் பகுதி தெருக்கூத்திலிருந்து பெறப்பட்டிருக்கிறது எனலாம். இதன்பிறகெழுந்த கீர்த்தனைகளில் இப்பகுதியின்மையும் பெயரில் நாடகம் என்ற சொல்லாட்சி இடம் பெறாமையும் கருதுதற்குரியன. பிற் காலக் கீர்த்தனைகளில் தெருக்கூத்தில் இருந்து அருணாசலக் கவிராயர் பெற்ற பகுதிகள் நீக்கப்பட்டு அமைக்கப்பட்டிருப்பதை இதனாலறியலாம்.

தெருக்கூத்திருந்து கதைப்பெயரையும், கதையமைப்பையும் எடுத் தாண்ட ஆசிரியர் அவ்வாறே கட்டியம் கூறும் பகுதியையும் பயன்படுத்தியிருக் கின்றார். கட்டியக்காரனே வசனப்பகுதியைப் பேசுபவனாகவும் உரைவழியே பாத்திரத்தை அறிமுகம் செய்பவனாகவும் வருதல் தெருக்கூத்தின் மரபு. இராமநாடகக் கீர்த்தனையில் 'கட்டியம்-வசனம்' என்று வசனப்பகுதி, இடம் பெறுவதனைக் காணுங்கால் தெருக்கூத்துமரபே கையாளப்படுவதனை அறிய முடிகிறது. தெலுங்குக் கீர்த்தனைகளும், கன்னட இசைப்பாடல்களும் தமிழ கத்தில் பரவலாகப் புகழ்பெற்ற காலத்தில் கீர்த்தனைகளால் கூத்துக்கதைகள் மாற்றப்பட்டிருக்க வேண்டும். ''தமிழ்நாடகக்கலை 'தெருக்கூத்து' என்ற பெய ரால் இழிந்த நிலையை அடைந்தமையால் நாடக ஆசிரியர்கள், யட்சகானம், கீர்த்தனை என்ற பெயர்களாக மாற்றியமைத்தனர் என்றே கொள்ளலாம்'' என்ற கருத்தின் மூலமாகத் தெருக்கூத்துக்களே கீர்த்தனை, யட்சகானம் எனப் பெயர் பெற்றமையை உணர முடிகின்றது. இதனால் இராமர்கதை தெருக் கூத்தாக ஆடப்பட்டுவர அக்கதையைக் கீர்த்தனைப்பாக்களில் அமைத்து

இராமநாடகக் கீர்த்தனை என்ற புதுப்பெயரில் வழங்கியுள்ளமையைத் தேற லாம். இதைப்போலவே நந்தனார் சரித்திரமும், பிறகதைகளும் கீர்த்தனை நாடகங்களாக வடிவம் பெற்றுள்ளன. பெயரில்தான் சிறுமாற்றமே தவிர வசன அமைப்பும் பெயரும் பிறவும் தெருக்கூத்தையடியொற்றியது என்பதை அறியலாம்.

**யட்சகானம்**

கன்னடநாட்டில் மிகப் பிரபலமான நாட்டுப்புறக் கலையாகக் கருதப் படுவது யட்சகானம். இந்நாடகம் தமிழகத்திலும் வழக்கிலிருந்ததாகக் கருதப்படு கிறது. தமிழில் கிடைத்திருக்கும் யட்சகானங்கள் இசைநாடகங்கள் என்று குறிக்கப்படுகின்றன. தெருக்கூத்து நாடகங்களே யட்சகானம், கீர்த்தனை என அழைக்கப்பட்டிருக்கின்றன எனவும் ''இந்த அடிப்படையில் தெலுங்கு யட்சகானங்கள் சிறப்புற்றிருந்த காலமாகிய தஞ்சை நாயக்க மன்னர் காலத்திலிருந்தே தமிழில் யட்சகானங்கள் தோன்றியகாலம்'' எனவும் கருதப் படுகின்றது. மேடையில் வேடம்புனைந்து நடிக்கப்பெறும் வகையிலன்றி இசையுடன் கூடிய கதாகாலட்சேபமாக மொழியப்படும் வகையில் நூல் எழுதப் பட்டிருக்கிறது. ''நாடகத்தினை அன்புடன் கற்பவர், ஆசையாய்க் கேட்பவர், இன்பமாய் எடுத்துரைப்பவர், எழுதுபவர் யாவரும் இறைவனருள் பெற்று இடர் நீங்குவர் என்ற வாழ்த்துகளோடும் மங்கள இசையோடும் நாடகம் முடிவு பெறுகிறது'' என்ற குறிப்பானும் நூலின் இறுதியில் 'திரிபுடை' என்ற தலைப் பின் கீழ் அமையும் பாடல் வசனம் ஆகியவையாலும் இந்த யட்சகானம் கதையுரையாகவே வழங்கியமையைப் பெறமுடிகின்றது. ''கன்னடத்தில் 'ஒருவரே பாடுவது' என்ற பொருளில் 'யக்கலகானு' என்ற பெயர் வழங்கி வந்திருக்கிறது, என்று சிவராம காரந்த் என்னும் கன்னட அறிஞர் தாம் எழுதிய 'யட்சகான பயலாட' என்னும் நூலில் கூறுகிறார். இதனால் ஒருவர் மட்டுமே மேடையில் தோன்றி இசையுரையாக மொழியப்பட்ட நாடகம் யட்ச கான மென்பதை உணர்ந்து கொள்ளலாம். ஒருசில யட்சகான நூற்களில் சூத்திரதாரி என்ற கட்டியக்காரன் இடம் பெறுகின்றான். இதன்மூலம் இசை யுரைக்குப் பயன்படாத, பாத்திரங்களை அறிமுகப்படுத்தும் கட்டியக்காரன் தெருக்கூத்திலிருந்து பெறப்பட்டவன் என்பதை உணரலாம். இது மட்டுமின்றி, ஆண்கள் மட்டும் பங்கு பெறுதல், காப்பியக்கதையைத் தேர்ந்து கொள்ளல், தீப்பந்தம் பயன்படுத்தல், நாட்டியமாக நடித்தல், உரையாடுதல் போன்ற கூறுகள் யட்சகானத்திலும் காணப்படுகின்றன. இவை தெருக்கூத்திலிருந்து கையாளப்பட்டிருப்பதால்தான் இசைப்பொழிவிற்குப் பயனற்ற கட்டியக்காரனும் யட்சகானத்தில் கையாளப்பட்டிருக்க வேண்டும் எனத் தேறலாம். இவ்வாறு தெருக்கூத்தின் அமைப்பில் தெருக்கூத்துக் கூறுகளுடன் யட்சகான நாடகங்கள் அமைந்துள்ளன.

தெருக்கூத்தில் ஆடுநர்க்கு ஓய்வளிக்கவும், பிறகாரணங்கட்கா கவும் கூத்துக் கதையையோ, பிறகதைகளையோ கட்டியக்காரன் ஆடவையில் மொழிவது வழக்கம். இவ்வாறு கதை நிகழ்ச்சிகளை இசையுடனும், நாட்டிய அடவுகளுடனும் கூறும் பகுதி ஒருநாள் முழுவதுமாக அமைந்திருக்கவும் வாய்ப்

புண்டு. தனியொருவனே வேடங்கட்டாமல் இசையுடன் பாடியும், ஆடியும் காட்டும் பாங்கே கதையுரைக் கலையாக, கதாகாலட்சேபம் என்ற பெயரில் வளர்ந்திருக்க வேண்டும். கதையை உரைப்பவர் பாத்திரங்களாக மாறிப் பாத்திரத்தின் குணங்களுக்கேற்பக் குரலில் ஏற்ற இறக்கங்களைக் காட்டுதல் இன்னும் வழக்கில் உண்டு. கதையை விளக்கிக் கூறும் கலைஞர் நின்று கொண்டு நாட்டியமாடியபடியே அபிநயத்துக்கு கதை கூறுவது பழைய வழக்கமாகும். கதையுரைக்கலைஞர் எம்பார் விஜயராகவாச்சாரியார் முற்காலத்தில் காலில் சலங்கை கட்டிக்கொண்டு நின்றும் ஆடியும் கதையுரைத்தமையை எடுத்துக் கூறுவது சான்றாக அமையும். தெருக்கூத்தின் கட்டியக்காரனைப் போலவே எளிய கோலத்தில், காலில் சலங்கையுடன் கதைநிகழ்ச்சிகளை இசையுடன் பாடிக்காட்டியும், அடவுகளுடன் ஆடிக்காட்டியும் யட்சகானங்கள் நடத்தப் பட்டிருப்பதால் தெருக்கூத்தின் அமைப்பும், கட்டியக்காரன், ஆடவராடல் போன்ற கூத்துக்கூறுகளும் இடம் பெற்றன எனக் கருதலாம். ஒருவரே பாடும் இசைநாடகமாகிய யட்சகானம் தமிழகத்தில் பிற்காலத்தில் தெலுங்கு, கன்னடமொழி இசைப்பாடல்கள் பரவிய காலத்தெழுந்தது. தெருக்கூத்தில் கட்டியக்காரனின் கதையுரைக்கும் பாங்கினையடியொற்றி இசைப்பாக்களில் கதையை எடுத்துக்கூறும் யட்சகான நாடகங்கள் தெருக்கூத்துப்பாணியிலே அமைவதனை இதனல் அறிந்து கொள்ளலாம்.

## ஆய்வு முடிவுகள்

தமிழ்நாட்டில் காணப்படும் பல நாட்டுப்புறப் பாடல்களும், பல நாட்டுப்புறக்கலைகளும் தெருக்கூத்துக்களத்திலிருந்தே உருவானவைகளாக அமைந்துள்ளன. வடிவங்களாலும், பிற அமைப்புக்களாலும் வளர்ச்சியுற்ற நாடக வகைகளாக வழக்கிலுள்ள பலகலைகள் தெருக்கூத்தின் செல்வாக்கால் கிளைத்தவையாகக் காணப்படுகின்றன.

தெருக்கூத்துக் கதைகளை எடுத்து அதே பாணியில் நவீனவசதி களையும் இணைத்து ஒரு புது வகை நாடகத்தை உருவாக்கியவர் சங்கரதாஸ் சுவாமிகள். ஸ்பெஷல் நாடகம் என்ற பெயரில் அழைக்கப்படும் அவரது நாடகங்கள் தெருக்கூத்து எனவும் கருதும் அளவிற்குத் தெருக்கூத்தின் கூறுகள் அந்நாடகங்களில் பரந்துபட்டிருக்கக் காணலாம். அவர் மூலமே மேடை நாடகங்கள் வளர்ந்தன என்பதால் இன்றைய நாடகங்களுக்கு முன்னோடி தெருக்கூத்து என்பது பெறப்படும்.

இவ்வாறு நாட்டுப்புறக்கலைகளிலும் மேடைநாடகவகைகளிலும் தெருக்கூத்தின் செல்வாக்கு விரிந்து அமையக் காணலாம்.

# வள்ளுவரின் சமயநோக்கு

**மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்,**
*திருக்குறள் ஆராய்ச்சித்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம்*
*மதுரை — 625021*

மனிதனுடைய பண்பையும் கொள்கைகளையும் எதனுல் அறியலாம்; அவன் செய்கையால். வள்ளுவர்கூட ஒருவனுடைய பெருமைக்கும் சிறுமைக்கும் அவனுடைய கருமமே கட்டளைக்கல் என்கின்ருர் அன்றோ! அங்ஙனமாயின் வள்ளுவர் சமயநோக்கை அவர்செய்த நூல்வாயிலாகத் தானே அறியவேண்டும்.

வாழ்க்கை வரலாறு இருந்தால் அறியலாம்; வரலாறுகளோ செப்பேட்டில் எழுதி வைத்திருந்தாலும் தேயும்; வளரும்; மாறும்; மனித வாடைக்கு ஏற்ப மாறுதலடையும். பாரதத்தை மகாமேருமலையில் கண பதியே எழுதி வைத்தார். 'சிலையில் எழுத்து' என்றுதான் எண்ணினேம். அது எத்தனையாயிரம் பாடல்களாக வளர்ந்துவிட்டது. வரலாறுகளும் அப்படித்தான் மாறும். ஆதலால் ஒருவருடைய உண்மைக் கொள்கையை உணர அவர் செய்த நூல்களே சிறந்த சான்ருகும். வள்ளுவர் நூல் திருக்குறள் ஒன்றே. அதனைக் கொண்டுதான் அவருடைய சமயநோக்கு இப்படி இருக்க இயலும் என்று துணியலாம்.

இலக்கியக் கல்லாடம் செய்த கல்லாடர் வள்ளுவரைப் பற்றித் தனது நூலில்

''சமயக்கணக்கர் மதிவழி கூருது
உலகியல் கூறிப்பொருள் இது என்ற வள்ளுவன்''

என்கிருர். இதனுல் வள்ளுவர் மதவாதிகளின் கொள்கைகளாகிற சுழற் காற்றிற் சிக்காது உலகியலிலிருந்தே பொருள் இது என்று துணிந்தார் என்பது போதரும்.

'பொருள்' என்பது என்ன? சமயவாதிகள் மதிவழி பற்றிக் கூருதது ஏன்? கடவுளும் பொருள்தானே! ஏனைய சமயவாதிகள் போல ஏதோ ஒரு நூலளவையை முன்னிறுத்தி, பொருளிதுதான் என்று நம்பி, அதனைச் சாதிக்க, கருதல் காட்சி, உவமை முதலான அளவைகளைக்கொண்டு மெய்ப்பொருளைச் சாதித்தார் அல்லர் வள்ளுவர். சமய உணர்வோ சிந்தனையின் தெளிந்தநிலை. ஆதலால் வள்ளுவர் சமய உண்மைகளைச் சிந்தித்துச் சிந்தித்துத் தெளியத் தூண்டுகிருர். சிந்தனைகள் உலகியலைக் கொண்டு உரு வாவது. அதனுலேயே கல்லாடர் 'உலகியல் கூறிப்பொருள் இது' என்ருர் வள்ளுவர், என்கிருர். இதன்பயன் என்ன? 'கண்டதே காட்சி கொண்டதே

கோலம்; உண்டதே இன்பம்' என்பவர்கள் கூட வள்ளுவ மொழியை ஒப்பும் நிலையுண்டாயிற்று. வள்ளுவமாலைக் கல்லாடர் சொல்கிறார்; பாருங்கள்,

''எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி''

என்பதனை, இத்தகைய ஆன்றோர் சான்றால் நாம் பெறும்பேறு திருக்குறள் சமயப் பொதுநூல் என்பதுதான்,

கடவுளை யுணர்தலாகிய மெய்யுணர்வை உயிர் நாடியாகக்கொண்டு அறவொழுக்கங்களைத் தடையிலாக் குருதியோட்டமாகப் பெற்று, வாழ்வாங்கு வாழ்வதால் இடைக்கிடை விளையும் இன்பங்களை உடல்வளமாகவும் கொண்டு எய்தும் பயனாக இம்மையிற் புகழையும் — இறுதியில் வீடுபேறாகிய பேரின்பத்தையும் பெறும் வழிவகைகளை அறிந்து அமைதலே சமயம். அதனையறிவிப்பதே சமயப் பொதுநூல். அது வள்ளுவம் ஒன்றே.

அரசு அனைத்தையும் அனைவரையும் அரண்செய்து காப்பது. சமயச் சார்பற்ற அரசு எனின், ஒரு கொள்கை மற்றொரு கொள்கையை வன்முறையால் வென்று அழிக்காத வண்ணம் அந்தந்தக் கொள்கையும் அதனதன் சார்பில் வளரத் துணைசெய்வது என்பதுதான் பொருள். ஆயினும் அவ்வப்போது ஆட்சியை ஏற்கும் அரசு தமக்கென்று ஒரு கொள்கை இல்லாமலிருக்காது. கொள்கையாலேயே வளர்ந்திருக்கும். மக்கள் மனத்தில் இடம் பிடித்திருக்கும். ஆட்சியை ஏற்றபிறகு ஏனைய கொள்கைகளையும் தங்கொள்கையோடு ஒப்பு நோக்கும். சமன்செய்து சீர்தூக்கும் கோலாக இருக்கும். அதுபோலவே வள்ளுவரின் சமயநோக்கும் தோன்றிய — தோன்றப் போகிற சமயங்களுக்கு இடையீடாக இல்லாததாய், தன் தனித்தன்மையையும் தெளிவாகக் காட்டி நிற்கிறது.

**தனித்தன்மை எங்ஙனம் அமைகிறது?**

நிலம், நிலத்தின் தொன்மை, மக்கள், அவர்களுடைய பண்பாட்டின் பழைமை, மொழி, புறத்தாக்குதலும் அவற்றை ஏற்றுக் கொள்ளுதல், எதிர்த்து நிற்றல் இவற்றால் விளையும் மாற்றங்கள் இவைகளால் அமைகிறது எனலாம். வள்ளுவம் தமிழ்நாட்டில் தமிழில் தோன்றிய நூலாதலால் இதிலும் இத்தனைக் காரணங்களும் இல்லாமல் இல்லை. தமிழ் வழங்கும் நிலத்தின் தொன்மைக்கு இரண்டொரு எடுத்துக்காட்டுக்கள். சென்னைக்குப் பக்கத்திலுள்ள பறங்கிமலை பல்லாவர மலைகள் ஐந்து கோடி ஆண்டு முதிர்ந்த மலை என்றும், இந்தியத்துணைக்கண்டத்திலேயே இமயமலை விந்தியமலைகளைக் காட்டிலும் வயதானமலை என்றும் டாக்டர் சரவணமுதலியார் தமது ஆய்வேட்டில் கூறுகிறார். சேர்வராயன்மலை 2800 மிலியன் ஆண்டுகள் முதிர்ந்தமலை என்று டாக்டர் கே. சி. இராசசேகரன் ஆய்வேடு அறிவிக்கிறது. மலை இவ்வளவு பழைமையாயிருப்பதால் மலையைச்சுற்றியுள்ள மண்ணும் மரமும் உயிரினங்களும் முதன் முதலிற்றோன்றத் தோராயமாக நாலரைக்கோடி ஆண்டுகளை விட்டாலும் இலக்கம் ஆண்டுகளாவது மக்கள் தோன்றி நாடோடிகளாய் இயற்கையுணவையேயுண்டு சிந்தனைப் பெருக்கமின்றி வாழ்ந்திருப்பார்கள்

என்று ஒதுக்கிவிட்டாலும் கி.மு. முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாவது முழுவளர்ச்சியும் வாழ்வும்பெற்றுச் சிந்தனைச் செல்வர்களாக வாழத் தொடங்கியிருப்பார்கள் எனலாம். அனைத்தையும் விட்டாலும் கி.மு. முதல் நூற்றுண்டிலிருந்தே அரசியல் தானம் தருமம் சமயம் பண்பாடு இவற்றில் உச்சிநிலையை அடைந்திருப்பார்கள் என்று எண்ணத்தடையில்லை. கிடைக்கும் இலக்கியமும் கி.மு. 6ஆம் நூற்றுண்டினது என்று ஆய்வாளர் பலராற் கருதப் பெறும் தொல்காப்பியமும் கூறுவதால் தமிழர்களுக்கென்று தனித்ததொரு சமயக்கொள்கை இருந்திருக்கவேண்டும் என்று துணிவதில் இடையீடில்லை. சுமார் 2000 ஆண்டுகட்குமுன் வாழ்ந்தவராக ஆய்வாளர் முடிவு கட்டும் வள்ளுவரும் ஒரு சமயமரபைத் தம்மொழி வழியே பின்பற்றியிருக்க வேண்டும். அப்போது, வேள்விக்கொள்கை, 'ஒன்றே உயிர்' என்ற கொள்கை, இறைவேறு உயிர் வேறன்று, உலகியலில் காண்பனயாவும் பொய்த்தோற்றம், தன்னையே செம்பொருளாகத் துணிந்து உணர்வதும் அந்நிலையில் அமைவது தான் வீடுபேறு என்ற கொள்கைகள் வள்ளுவரையும் தாக்கியிருக்கின்றன. ஆதலால் வள்ளுவர் அக்கொள்கைகளை மிக நாகரிகமாக மறுக்கின்றுர் என்பதை 'அவிசொரிந்து' 'மன்னுயிர் எல்லாம் தொழும்' 'மெய்ப்பொருள் காண்பதறிவு' 'பிறவியறுத்தலே வீடு' 'பேராஇயற்கையே வீடு' 'சிறப்பென்னும் செம்பொருள் காண்பதே அறிவு' 'உண்மைஞானம் தானே கிட்டாது, சிந்திக்க—வந்திக்க—வாழ்த்த வருவது'; என்ற உண்மைகளை ஆங்காங்கு வள்ளுவர் வலியுறுத்துவதால் வேற்றவர் கொள்கைகள் மெய்யுலகில் விரவுவதற்கு முன்பே இங்குப் பெயர் குறிக்கப்படாத ஒரு சமயக் கொள்கையிருந்தது. எங்குக் குழப்பம் இல்லாத அமைதியான வாழ்வு நடக்கிறதோ அங்குத் தான் சிந்தனைகள் கிளைக்கமுடியும். மனவளர்ச்சியாகிய இலக்கியங்கள் தோன்ற முடியும். இலக்கணங்கள் தோன்ற முடியும். சமயவாடை வீசுகிற தொல்காப்பியக் காலத்திற்கு முன்பே தமிழ்நாட்டில் சமயம் நிலவியிருக்க வேண்டும். முதன்முதலில் மாற்றுச் சமயங்களும் —சமயக்காழ்ப்புகளும்—சண்டைகளும் விளைந்த பிறகு விளையாட்டில் உத்தி பிறப்பதுபோல முத்திநிலைக் கலப்பினுலும் தத்துவ எண்ணிக்கைகளாலும் கடவுட் கொள்கையாலும் சமயங்களுக்குப் பெயர்கள் ஏற்பட்டிருக்கக்கூடும்.

அந்தந்த நிலத்தில் வாழ்கின்ற மக்கள் தத்தம் நிலவளத்துக்கு ஏற்பப் பெயரமைந்த கடவுட் பெயர்கள் யாவும் ஒரே கடவுளை உணர்த்துவன என்ற கொள்கை மாறிக் கடவுளருக்குள் மாற்றிலும் மதிப்பிலும் ஏற்றத்தாழ்வு விளைந்த போது, வள்ளுவர் இறை, உள்ளது, மெய்ப்பொருள், செம்பொருள் என்ற பெயரால் அழைத்துப் பொதுமையை உணர வைக்கிறுர்.

தொல்காப்பியக் காலத்தில் வாழ்க்கைப் பயணத்திற்குத் துணையாகச் சேயோன் மாயோன் வேந்தன் வருணன் முதலான கடவுளரும், கொற்றவையும் பெயராலும் வழிபடுமுறையாலும் இடத்தாலும் வேறுபடினும், பொருள்ஒன்றே என்ற சிந்தனையிருந்தது. 'ஒன்றென்றிரு' என்ற உறுதிப்பாடுதான் நிலவிற்று என்பதை மதச்சண்டையில்லாத இலக்கிய எண்ணங்களே வலியுறுத்துகின்றன. பின்னர் அக்கடவுளர் பெயராலும் சமயத்தலைவர்களின் பெயராலும் மருவிய

பெயருடன் தனித்தனிச் சமயங்களாயின. சமயக்கடவுளரில் ஒவ்வொருவருக்கும் மாற்றும் மதிப்பும் எடைபோடும் வகையில் வரலாறுகள் எழுந்தன. அவ் வரலாறுகள் தாம்தாம் வழிபடும் கடவுளிடம் உறுதியும் நம்பிக்கையும் உண்டாக்க வந்தவை. அதற்கு மாருக மதச்சண்டைக்கு வித்தாயின. இந்நிலையில் வள்ளுவர் சில வரலாறுகளையும் வெளிப்படையாகக் கூறுகிருர். அவற்றுள் ஒன்று.''தாழ் வீழ்வார் மென்ருேள்துயிலின் இனிதுகொல் தாமரைக் கண்ணுன் உலகு'' என்ற குறள். தாமரைக்கண்ணனுடைய உலகில் எய்தும் பேரின்பத்தை வியந்து கூறுவது போலத்தோன்றினும் சிற்றின்பம் நுகரும் அவன்நிலையில் அவ்வின்பம் பெரிதன்று என்ற கருத்தையும் பயப்பதாகக் கவிச்சுவைபடவோ, அல்லது உலகாயதன் உளம்போல நகைச்சுவைபடவோ கூறியது என்றலும் எண்ணிப் பார்க்க வேண்டியதொன்றுதான். அங்ஙனமே,

> ''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅய தெல்லாம் ஒருங்கு''

என்ற குறட்பாவும் திருமால் நெடுமாலாகி மூவுலகும் ஈரடியால் அளந்த இம் மண்ணை, மடியற்ற மன்னவனும் அடைவான் என்பது மூவுலகும் முற்ற அடையத் தெய்வத்தன்மை தேவையில்லை; மடியின்மை ஒன்றே சாலும் என்ற கவிதை நயமும் அத்தகையதே. இங்ஙனம் உலகியற்றியான், இந்திரன் முதலிய தெய்வப் பெயர்களும் எடுத்தாளப் பெறுகின்றன. பயன்கருதி வழிபடப்பெறும் தெய்வங்கள் இவையாக, வீட்டின்பம் பிறவியறுதல் என்ற பெருநோக்கோடு வழிபடப்பெறும் இறைவனை வள்ளுவர் அறிமுகப்படுத்தும் முறை தனிச்சிறப்புடையது.

கடவுளை உணர்ந்தவன்தான் மெய்யுணர்வு பெற்றவன். மெய்யுணர்வு அதிகாரத்தில் கடவுள், 'மெய்ப்பொருள்' 'செம்பொருள்' 'உள்ளது' என்று அழைக்கப் பெறுகிருர்.

> ''எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பதறிவு''

என்ற குறட்பா மெய்ப்பொருள் இதுவெனத் துணிய வகை செய்கிறது. உலகில் பலபொருள்கள் கேட்கப்படலாம். ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு தன்மையாகக் குணங்களும் பலவாகலாம். அந்தப் பொருள்கள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் உண்மைத் தன்மை ஒன்றுதான் இருக்கும். அதனைக்கொண்டு அதனையுடைய பொருளையே மெய்ப்பொருளாகத் துணியவேண்டும். அங்ஙனம் உணர்வதுதான் மெய்யறிவு என்கிருர். ஆகவே எங்குமாய் என்றுமாய் இருக்கும் பொருளே மெய்ப்பொருள் எனப்பட்டது.

பின்னர்,

> ''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்பதறிவு'' *(358)* என்கின்ருர்.

சிறப்பு என்னும் செம்பொருள் — உலகத்தார் நல்லனவாகக் கருதும் பொருள் யாவையினும் சிறந்ததும் தன்னிற் சிறந்தது ஒன்று என்றுமில்லாததுமான பொருளே செம்பொருள் என்பர் காளிங்கர். வீட்டிற்கு நிமித்த காரணமாய செம்பொருள் என்பர் பரிமேலழகர். வீட்டிற்குக் காரணமாய இன்பமெய்ப்பொருள்

என்பர் கா. சு. இங்ஙனமே ஏனையோரும் கூறுகின்றனர். அனைவர் உரையானும் அறியக் கிடப்பதும் வள்ளுவர் உள்ளமாவதும் உலகியல் நுகர்ச்சிகளுக்கு மட்டும் காரணமாகாமல் வீட்டின்பத்தையும் அளிக்க வல்லதே செம்பொருள். இதுவே என்றும் விளங்குந் தன்மையால் 'உள்ளது' என்றும் பெயர் பெறுகிறது. உள்ளது எனினும் மெய்ப்பொருள் எனினும் கருத்து ஒன்றுதான்.

செம்பொருள் — செம்மையுடைய பொருள், செம்மை—நிறப்பண்பன்று. குணப்பண்பு — செம்பொருள் நேர்மையும் சமநோக்கும் உடைய பொருள். நிறப் பண்பைக் கூறினுராதலாகாதோ எனின், ஆகாது. நிறமாயின் அதனையு டைய உருப்பொருளைக் கொண்டுதான் உணர இயலும். உருவுண்டாயின் அவ்வுரு வும் உருவி தோற்றக்கேடுகள் உடன் அறியப்பட்டு, உண்மையும் அதன் மாறுய இன்மையும் உடையதாகி மெய்ப்பொருள் ஆதற்றன்மையிலிருந்து நழுவிவிடும். அதனுலேயே வள்ளுவர் மெய்யுணர்வில் வைத்து நேர்மையும் உண்மையும் ஆகிய பண்புகளையே கருதும் பொருளாகவுடைய ஒன்றுதான் 'உள்ளது' எனப்படுவது என அறிமுகப்படுத்துகிறுர். இத்தகைய கருத்துப் பொருளாக — அறிவேயுரு வாக அறிந்து வருவோமாயின் நமக்குள்ளே இத்தனை மதச்சண்டைகளும் சண் டைக்கு அடிப்படையான கதைகளும், சமய வேறுபாடு – தத்துவ வேறுபாடுகளும் தோன்றியிரா. ஆகவே பழந்தமிழ்க் காலத்தே தமிழையே தத்துவங்களுணர்த்தும் மொழியாகக்கொண்டு பரவிவந்த தமிழர் சமயத்தையே வள்ளுவர் குறிப்பிடுகிறுர்.

மற்றென்று:

தொல்காப்பியம் அவ்வச் சொற்களுக்குரிய நேரிய பொருளைச் செம் பொருள் என்கிறது. அது அங்கத இலக்கணத்தை உணர்த்தும்போது கரப் பென்பது மொழிமறைத்து மொழிதல் என்று கூறி, அதற்கு இனமாகிய செம் பொருள் என்பது மொழிகரவாது எண்ணிய பொருளை எண்ணியாங்குச் சொல்லும் சொல்லாற் புணர்த்துக் கூறுதல் என்கிறது. இதனுல் தெரியும் 'செம்பொருள்' என்ற தொடரின்பொருள் மறைவும், ஒளிவும், இன்றி விளங்கும் பொருள் என அறியப்படும். எந்தப்பொருள் ஒளிவு மறைவு வலிந்துகோடல் முதலிய ஆக்கம் பெறுது நேரே முதன்மையாய் விளங்குகிறதோ அது செம்பொருள் ஆகும் என்ற மெய்ப்பொருள் இலக்கணத்தையும் நாம் கொள்ளலாம். இதனுல் செம்பொருள் என்பது வெற்றுடைகளும் விளக்கமும் வேண்டாது, கடவுட்பொருளையே காட்டு மெனல் பொருந்துவதாற் [illegible]லும் வள்ளுவர் பரம்பொருளைச் செம்பொருள் என்றறிவிக்கிறுர்.

அடுத்த சிந்தனை; இத்தகைய அறிவுருவப் பொருளைக் கருதுவது எப்படி என்பது:— ஒளியையுடையதாய்ப் புற ஒளியாய ஞாயிறு முதலியவற்றின் ஒளியைத் துணைக்கொண்டு நம்கண் இது குடம், இது மண், இது மரம் எனப் பொருள்களை வேறு படுத்திக் காணும் காட்சியை மறைப்பது இருள், கண்ணெளியிருக்கிறது; புற ஒளியில்லை; இருளாயிருக்கிறது. அதனுல் பொருள் புலப்படுமாறு இல்லை. அது போல மக்கள் உள்ளத்தும் பொருள்களை உள்ளவாறுணரவிடாமல் தடுக்கும் தடை ஒன்று உளது. அது இருள்போல் இருத்தலின் இருள் எனவே வள்ளுவரால் வழங்கப்பெறுகிறது. வள்ளுவர் 'இருள் நீங்கி இன்பம் பயக்கும்' (352) 'இருள் சேர் இருவினை' (5) என்ற இடங்களில் இருள் நீக்குதற்குரியது, அது நீங்கத்தான்

இன்பம் வெளிப்படும் என்றும், இருளால் விளைவனவே இன்ப – துன்பங்கட்கு ஏதுவான இருவினைகள் என்றும், இருளால் விளையும் கேடுகளை விளக்குகிறார். இருள் என்பதற்கு அறியாமை, மயக்கம் என்றெல்லாம் உரைகாரர்கள் உரைப்பர். இருளே அறியாமையாகாது; மயக்கமும் ஆகாது. இருள் பயப்பன அறியாமையும் மயக்கமும் ஆனாலும் இருளின் காரியமாகிய அறியாமை முதலியவற்றை இருள் என்றே சொல்லுகிறார் வள்ளுவர். இதனை, இவருக்குப் பின்வந்த சமயத்தமிழ் நூலாரும் இருள் என்றே கூறினர். சிலர் ஆணவமலம் ஆணவ இருள் என்றனர். சிலர் ஆவரணம் என்றனர். பெயர் வேறானாலும் பொருள் ஒன்றுதான்.

இருள் செய்யும் தீமை பொருளைப் புலப்படுத்தாமை மட்டும் அன்று; புற இருளிலே ஒருவன் சிக்கினால் பழுதையைப் பாம்பென்றும் பாம்பைப் பழுதை யென்றும் மாறி உணர்வான். இது ஒன்றை ஒன்றாக உணரும் திரிபுக்காட்சியாகிய மருள். இதனையே வள்ளுவர் 'பொருள் அல்லவற்றைப் பொருளாக உணரும் மருள்' என்கிறார். இதனை மயக்கவுணர்வு என்றும் கூறலாம். இதுவோ அதுவோ என்று ஒருநிலைப்படாத உணர்வு ஐயம். இதுவும் மருளின்வகைதான். தலைவன் தலைக்காட்சியில் 'அணங்கு கொல் ஆய்மயில் கொல்லோ' என்று ஒன்றிலும் ஊன்றிய துணிவின்றித் தடுமாறுகிறான். இது ஐயக்காட்சியாகிய மருள் தானே. ஆகவே இருளின் காரியமாகிய மருள் ஐயமும் திரிவும் ஆக இருவகைப் படுகிறது. இம்மருளுணர்வாலேயே மாணாப்பிறப்புண்டாம் என்கிறார். ஆகவே இருளுக்கும் மருளுக்கும் உள்ள தொடர்பு காரண காரியத்தொடர்பு. காரியம் செயற்படும்போது முன்னர் அதனை நீக்கினால் அதனை நீக்கப்பயன்படுத்தப் பெற்ற உணர்வே காரணமாகிய இருளையும் நீக்கும் என்பார், 'மருள் நீங்கி மாசறு காட்சியவர்க்கு இருள் நீங்கி இன்பம் பயக்கும்' என்கின்றார். 'ஊரின் நீங்கினான்' என்ற வழி, மீளவும் வருதல் கூடும் என்பது போலவும், 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்றவழி ஓடியது திரும்பவும் வந்தியைதல் கூடும், என்று உரையாசிரியர்கள் கூறுவது போலவும் இருளும் அதன் காரியமாகிய மருளும் நீங்குதல் மெய்யுணர்கின்ற வரை உணர்கின்ற உயிரைவிட்டுப் பிரிதலேயன்றி அழிதலோ கெடுதலோ அன்று. ஆகையாலும் (ஆணவ) இருள் என்றும் உள்ள பொருள் என்ற தமிழர் தத்துவக் கொள்கையை மனத்துட்கொண்டு வள்ளுவர் கூறுகிறார் எனலாம்.

உயிரைப் பற்றிய இருள் அகல என்ன செய்யவேண்டும்?
வள்ளுவர் சடங்குகளைச் செய் என்று சொன்னாரல்லர்.

''கற்று, ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாராநெறி'' என்கிறார். பொருளல்லவற்றைப் பொருளன்று என விலக்குதற்கும், பொருள் களில் இது தான் மெய்ப்பொருள் என உணர்தற்கும், எழுமைக்கும் ஏமாப்புடைய தான அறிவாகி உயிரோடு ஒன்றி நிற்கும் கல்வியை இயல்பாகவே பெற்றிருந் தாலும் அதனை விளக்கம் செய்ய மணியின் கண் ஒளி இயல்பாகவே இருப்பினும் அதனை மாசுபோக்கி ஒளியூட்டப்பட்டை யிடுதல் முதலிய செயல்கள் இன்றியமை யாதவாறு போல, எப்போதும் கற்கவேண்டும். அங்ஙனம் கற்கும்போது மெய்ப் பொருள் கண்ட ஆசிரியன்பால் கற்கவேண்டும். உண்மைப்பொருளைத் தேர்ந்து தெளிதல் வேண்டும்; அங்ஙனம் தேர்ந்தவர்கள் மறு பிறப்பெய்தார் என்று

மருள்நீக்கும் வழி, கற்றலும் கேட்டலும் தெளிதலும், சிந்தித்து இருத்தலும் முறையே செய்யத்தக்கன என்கிருர்.

**மருள்நீக்குதற்குரிய முதல்வழி:—**

நாம் முருங்கைக் கொம்பைப் பிடித்திருக்கிரேம்; அதன் ஆற்றல் எவ்வளவு? அது எவ்வளவுநாள் நம்மைத்தாங்கும் என்பதறிந்து புளியங்கொம்பைப் பிடிக்கவேண்டும் என்கிருர். நாம் ஒருவகைச் சார்பும் இல்லாமல் இருக்க இயலாது. முருங்கைக் கொம்பைப் பிடித்தவனைப்போல் ஏதாவது ஒருசார்பைப் பிடித்துத் தான் இருப்போம். அதன் ஆற்றலையறிந்து, பிடிக்கத்தக்க வலுவான சார்பைப் பற்றிக் கொண்டு இந்தச் சார்பைவிடப் பழகுதல் வேண்டும். அங்ஙனம் பழகி வந்தால் நம்மைப்பற்ற இருக்கிற பெரியநோய் பற்ருது. நாம் ஒளியோடு விளங்கலாம் என்கின்ருர்.

''சார்புணர்ந்து, சார்பு கெடஒழுகின், மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்''

என்பது, இத்தனைக் கருத்துக்களையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கிற பிறவிநோய் தீர்க்கும் மருந்துபோல்வது.

**அடுத்து சார்புகெட ஒழுகுவது எங்ஙனம்?**

நோய் நாடுதல் முதல் வேலை; அடுத்தது அதன் முதல்நாடுதல்; அடுத்தது அது தீர்க்கும் வாய்நாடுதல்; அதுபோல் நம்மைச் சார்ந்திருக்கும் நோய்கள் யாவை எனின் காமமும் வெகுளியும் மயக்கமும். இவை மூன்றும் நம் மனத்தைப் பற்றி யுள்ள நோய். அவற்றுள் 'காமம்' வள்ளுவர் காமத்துப்பாலில் கூறும் காமம் மட்டும் அன்று. உலகத்தில் பொருள்களின்மேல் தோன்றும் பற்றுள்ளந்தான் காமம். பொருள்கள் நமக்குப் பயன்படும் வகையில் காமம் மிகுந்தும் குறைந்தும் இருக்கும். அப்பொருள் நமக்குக் கிடைக்காமற் போனலோ, மற்றவனுக்குக் கிடைத்துவிட்டாலோ நமக்குள்ளதை மற்றவன் கவர எண்ணினலோ நம் மனத்து எழும் கொதிப்பு வெகுளி. பொருள் கிடைத்துவிட்டால் இதுவே துறக்கம் என்று அதனியல்பை உள்ளவாறுணராமல் அதுவே தானக இருந்து நுகரும் நிலையும், கிடைக்காவிட்டால் அது காரணமாகச் செயலற்றுத் தடுமாறும் நிலையும் மயக்கம் ஆகும். இவை மூன்றுமே பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் மருளின் விளைவே. இம்மூன்றையும் முதற்கண், பற்றற்ருன் பற்றினைப் பற்றுதலால் களையவேண்டும். இங்ஙனம் பற்ற வேண்டியதைப் பற்றி மருள்நீங்கிய உயிர் மதுவுண்ட வண்டுபோல 'மாணடிக்' கண்ணே மயங்கி. அதனை அழுந்தி நுகர்த லாகிய உயர்நிலை பெற்றுப் பிறவி நோய் நீங்கப்பெறும். அதுவே வீடு என்ற படிமுறைகள் வள்ளுவரால் உணர்த்தப்பெறுகின்றன.

இதுவரை வள்ளுவர் நோக்கில் மக்களாகப் பிறந்தார் எய்தும் பயன் பேராவியற்கைப் பேரின்பத்தை அடைதலே என்பதையும், பேரின்பம் அடை தற்குத் தடையாயின காமம் முதலான முக்குற்றங்கள் என்பதையும் அவற்றைப் போக்கி இருளகற்றி மருணீங்கி மெய்ப்பொருளை உணர்ந்து என்றும் இன்பம் பெருக இருத்தல் என்பதையும் கண்டோம். இந்நெறியிற் பலதெய்வக்

கொள்கையிருப்பினும் பலவற்றையும் தன்மையால் ஒன்றெனக்கண்டு, அப் பயிற்சியால் செம்பொருளைத் தேர்ந்து இன்ப வடிவாய் இருக்கும் பண்டைய தமிழ்வாழ்வே உட்கிடையாக உள்ளதை உணரலாம்.

**கடவுள் எது ?**

அறிந்து அனுபவிக்க வேண்டிய பொருளைப் 'பிரம்மம்' என்ற பொதுச் சொல்லால் வியாசர் சொல்லப்போக, இதுதான் பிரமம்; இதுதான் பிரமம் என உரையாசிரியர்கள் தத்தம் கொள்கைக்கு இழுத்துச் செல்கிறார்களே; அதுபோலத் தானே வள்ளுவரும் 'உள்ளது' 'செம்பொருள்' 'மெய்ப்பொருள்' 'என்கிறார்'. இதற்கும் அதேநிலை தானே விளையக்கூடும் என்ற ஐயம் எழுதல் இயல்பே. இந்த எண்ணம் வள்ளுவருக்கும் தோன்றியிருக்கிறது. கடவுள் வாழ்த்தில், வாழ்த்து, வணக்கம் சேர்தலாகிய எண்ணுதல் இவைகளாலே பரம்பொருளை வழுத்தினு லன்றி அனுபவநிலையில், அது அதுவாயிருந்து பழகும் பயிற்சிநிலையில் உண்மையும் செம்மையுமான — குணமே வடிவான — அறிவுப்பொருளாக எண்ணி நுகர முடியாதே! முடிந்த பயனாகிய முத்தியை அடைய இயலாதே! என்று எண்ணி யிருக்கிறார். கடவுள் வாழ்த்தில், வாழ்த்துகின்ற மக்களின் மனம் வளர்ந்து சிந்தனையிற் சிறக்க செம்பொருளை 'ஆதிபகவன்', வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இறைவன், பொறிவாயிலைந்தவித் தான், தனக்குவமையில்லாதான், அறவாழி யந்தணன், எண்குணத்தான் என ஒன்பது பெயர்களாற் கூறி, அவனை வாழ்த்துக; வணங்குக; எண்ணுக; என மக்களுக்கு அறம் உரைக்கின்றார்.

கடவுளை வாழ்த்துதலே தலையாய அறம் எனக் கூறவந்த வள்ளுவர் பால்திணைப் பாகுபாடுகளைக் கடந்த எல்லாமாயிருக்கிற கடவுளை ஆண்பால் விகுதி கூட்டி ஆண்மகனாக வழங்குகின்றாரே எனலாம். வள்ளுவர் இலக்கியப் போக்கிற்கு ஏற்ப வழங்குவதற்காகப் பால்திணையுள் அகப் படுத்திக் கூறினாரே அன்றி, இறைவற்கு அவையாவும் இல்லையாம் என்பது. ஆகவே வள்ளுவர் இப்பெயர்களாலும் அறிவுருவான இறைநிலையையே குணங்களின் அடிப்படை யில் அமைத்துக் காட்டினார் எனத் தெளியலாம்.

இவற்றுள் ஆதிபகவன் என்பது தன்வயத்தனாதலையும், வாலறிவன் என்பது இயற்கை அறிவினனாதலையும். மலர்மிசை ஏகினான் என்பது முற்றுணர்வினனாதலை யும், வேண்டுதல் வேண்டாமையிலான் என்பது இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனாதலையும், இறைவன் இறை என்பன பேராற்றல் உடையவனாதலையும், 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பது தூய உடம்பினனாதலையும், 'தனக்குவமை யிலாதான்' என்பது வரம்பில் இன்ப முடையதனாலையும், 'அந்தணன்' என்பது பேரருள் உடையனாதலையும் உணர்த்தி, இறைவன் இவ்வெட்டுக்குணங்களும் கூடிய பண்புருவினன். அவனை இடைவிடாது எண்ணுதலே மெய்யுணர் வினராதற்கு உரிய உபாயம். அங்ஙனம் எண்ணுவார் பிறவிப் பெருங்கடல் நீந்திப் பேரின்ப வீடடைகுவர் என இறைவனுடைய சிறப்பிலக்கணம் உணர்த்து வாராய் அவனை வணங்குக; வாழ்த்துக; எண்ணுக; அடிசேர்க; என முடிக் கின்றார்' எனத் திருக்குறள் அறத்துப்பால் உரையாசிரியராகிய நாகை

சொ. தண்டபாணி கூறுவர். இவைகளும் எட்டுக்குணங்களைக் கொண்டு செம் பொருள் இது எனக் கருதியறியக்கூடிய முறை.

இவற்றுள் இறை-இறைவன் என்பன சுட்டாமற் சுட்டும் இறையிலக்கண மாகும். இறுத்தல்-தங்குதல், இறைவன் உயிர்கடோறும் உயிர்க்குயிராய் அவ்வ வற்றின் தகுதிக் கேற்பப் பெரிதும் வெளிப்பட்டும், மறைந்தும் நீங்காது தங்கு பவன் என்னும் பொருளதாய் இந்த எண்குணங்களையும் உடையவனே ஆதிபகவன் முதற்கடவுள் என்பதைக் காட்டுகிறது. இறை என்பது தங்குதல் என்னும் பொருளில் வந்தது மிகப் பிற்காலத்து வழக்கு என்றும், தலைமை என்பதே பழைய பொருள் என்றும் சிலர் கூறுவர். தலைமைப் பொருளில் இறை வரிவாங்குபவன் என்னும் பொருளால் வந்ததாகலின், அதுவேறு என்றொழிக. சத்துவம், இராசதம், தாமதம் என்ற முக்குணங்களும் இருளின் கூட்டுறவால் மக்களுக்கு உளவாகும் குணங்கள். இறைவற்குரிய குணங்கள் அன்று. தன்வயத்தனுதல் முதலியன அவனிடம் இயல்பாகவே அமைந்தவை என்பது. இந்த எண்குணங்களையும் பிற மொழிவழிப் பிற சமயங்கள் எடுத்துக்காட்டாமையானும், யோகநூல் வழிவந்து அணிமாதி சித்திகள் கடவுளுக்கே உரியவன்றி யோகநிலையில் உயர்ந்த மக்களுக்கும் உளவாகலானும், பரிதியார் கூறும் எண்குணங்களில் நாமமின்மை, கோத்திர மின்மை, அவா இன்மை ஆகிய மூன்றும் இறைவனுடைய பிறப்பின்மை உணர்த் தும் ஒரேகுணமாதலானும், பிறப்பில்லை எனவே அழியா இயல்பு என்றதோர் குணம் உண்டெனல் வேண்டாமையானும், அனந்தவீரியமும் முடிவில் ஆற்ற லுடைமையும் ஒன்றுதலானும், அநந்ததரிசனமும் முற்றும் உணர்தலும் ஒன்று தலானும் எட்டு என்றற்கு ஏலாமையால் தன்வயத்தனுதல் முதலிய எட்டையும் இறைவன் குணங்களாகப் பரிமேலழகர் காட்டினர். இங்ஙனம் எண்குணங்கள் இறைவற்குள என்றல் பிற்காலச் சமயநூல்களிற் கூறப்பெறினும் பழைமையான இலக்கியச் சான்று இல்லை. ஆயினும் இறைமைக் குணங்களுக்கு இவை மிகவும் ஏற்புடையதாதலைக் காணலாம்.

'பொறிவாயிலைந்து அவித்தான் என்பது அவனுடைய புலன்கள் பொறி களை வழியாகக்கொண்டு அறியப்பெறுவன அன்று. பொறிகளால் அறியப் பெறுவது ஒரு வரையறைக்குட்பட்ட அறிவு. இறைவன் காலத்தான் வேறுபட்டுச் சேய்மைக்கண் உள்ளவற்றையும் துய்க்கும் ஆற்றலுடையவன் என்பதை விளக்கு வது. அங்ஙனமே 'தனக்குவமை யில்லாதான்' என்பதும் கடவுள் ஒருவரே. ஒப்பாக வேறு வைத்தெண்ணப்பெறும் இரண்டாவது பொருள் இல்லாதவர் என்ற கருத்தினையுடையது. அறவாழி அந்தணன் என்பது பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறத்தினை ஆழியாகக் கொண்டு தண்ணருளையே வழங்கும் தனிப் பொருள் என்பதைக் கருதுவது. இங்ஙனம் இத்தனைக் குணங்களையும் இலக்கண மாகக் கொண்டதே செம்பொருள் எனக்கண்டவர்கள் தமிழ்ச்சமயத்தினர். இதற்குச் சான்று இந்த எட்டுக்குணங்களையும் இறையின்குணங்களாக வள்ளுவர் கூறியதுபோலச் சிறிதுபின்னும் முன்னும் இருந்த நூல்கள் சொல்லாமையொன்றே போதுமானது.

'மாணடி.' என்கின்றாரே எனின் அடியென்பது அருளையுணர்த்தும் மரபு வழிச்சொல். அடியுண்மையான் முகம் முதலிய ஏனைய உறுப்புக்களும் கோடல்

பொருந்தும் என, 'மனக்கோள் நினக்கென வடிவு வேறிலையே' என்பதையும் மறந்து முகமுதலிய உறுப்புக்களும் உள என்பாரும் உளர். இது பழந்தமிழ் மரபன்று. புராணமரபு. ஆகவே கடவுள், யாம் அனைவரும் பின்பற்றி — எண்ணியுய்ய குணவடிவாகவே விளங்குபவர். அக்குணங்கள் இறைவற்குச் சார்பாய்த் தோன்றியவையல்ல. இயல்பான குணங்கள் என்ற தமிழ் மரபே கடவுள் பற்றிய வள்ளுவரின் சமயநோக்கு.

**கடவுளை அறியும் முறை:**

இதிலும், வள்ளுவர் யாரும் கருதாத ஒரு புதுமுறையைக் கையாளுகிறார். வியாசர் பிரம சூத்திரத்தில் உலகப் படைப்புக்குக் காரணமாயிருந்ததால் பிரமம் உண்டென்றறிக என்றனர். இது உலகமாகிய பொருளைக் கொண்டு கடவுள் உண்மையைத் துணிவதால் பொருள் முதல் வாதமாகிறது. சிவஞானபோதம் உலகம் முத்தொழிற் படுவதால் அதனைத் தொழிற்படுத்துபவனே முதல்வன் என்பதைச் செய்யப்பட்ட பொருளுக்குச் செய்பவன் ஒருவன் வேண்டும் என்ற நியாயத்தை வைத்துக் கடவுளுண்மையைக் காட்டியது. வள்ளுவர் கடவுள் உண்மையைத் துணியவும் அவனே முதல்வன் என்பதைத் தெளியவும்,

> ''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே யுலகு''

என்கிறார். இதில் எடுத்துக்காட்டு 'அகர முதல எழுத்தெல்லாம்' என்பது. துணியும் பொருள், 'உலகு கடவுளை முதலாக உடையது' என்பது.

அகரம் எழுத்துக்களுக்கு எப்படி முதலாகிறது? முதலில் சொல்லப் படுவதாலா? அன்று. இடத்தாலும், தோன்றுங்காலத்தாலும் உளதாகும் முதன்மை உண்மையான முதன்மையாகாது. அகரம் மொழிக்குறுப்பாங்காலும், தனியேநிற்கும் போதும் தானே இயங்கும். இகர உகர முதலான ஏனையுயிர் எழுத்துக்கள் எல்லாவற்றோடும் மிகநுட்பமாய்க் கலந்து, வேற்றுமையுணர முடியாமல் உயிருக்குயிராய்க் கலந்து நின்று இயங்கும். மெய்யெழுத்துக்களோடு இணைந்து நின்று இயங்கும். அகரம் இவ்வாறு இயங்குதலைத் தொல்காப்பியப் பிறப்பியலிலும், முதற்சூத்திரவிருத்தி, நன்னூல் விருத்தியுரைகளிலும் பரக்கக் காணலாம். அவ்வாறே இறைவன், சார்பு ஒன்றின்றித் தனித்தும் விளங்குகிறான். உயிருக்குயிராய்க் கலந்து நின்றும் விளங்குகிறான். உயிர்கள் செய்யும் வினைகட்குச் சான்றாய், உடனாய் நின்றும் இயக்குகிறான். ஆதலால் கடவுளுக்கு முதன்மை ஒன்றாயும் உடனாயும் இருந்து இயக்குகிற தன்மையால் அமைந்துள்ளது. இந்நுட்பத்தை முதன்முதலாகத் திராவிடப் பிரகாசிகை முதற்குறள் விருத்தியுரையிற் சபாபதி நாவலரும், முதற்குறள் விருத்தியில் அரசஞ் சண்முகனாரும், கா. சு. வும் திரு. வி. க. வும் கண்டு காட்டியுள்ளார்கள்.

இதுவரை எழுந்த சிந்தனையின் வண்ணம், சங்ககாலத்தில் வாழ்வின் வளம் கருதித் திணைதோறும் பல தெய்வக்கொள்கையிருந்ததாயினும், தெய்வங்களில் உயர்வு தாழ்வு, அதன் காரணமான கொள்கைப்போர்கள் நிகழ்ந்ததாக எள்ளளவு சான்றும் இன்மையின், அக்காலம் பன்மையில் ஒருமைகாணும் பண்பாட்டுக் கொள்கையில் நிலைத்திருந்தது என்பதும், உயர்ந்த வீடுபேற்றுநிலையில் செம்

பொருட்டுணிவைக் கண்டு சீருடைக்கழல் சேர்தலே வீடுபேறு என்ற சிந்தனையும் நிலைத்திருந்தமையின் வள்ளுவர் நோக்கும் அந்நெறியிலேயே நம்மையும் அழைத்துச் செல்கிறது எனலாம்.

**உயிர்கள்:**

கடவுளை ஓர்ந்து 'உள்ளது' என்றுணர்ந்து வீடுபேறு எய்துவனவும், வகுத்தவினைக்காக உடலொடு கூடி, வினைகளைத் துய்த்து, மேலும் வினைகளைத் தேடிக் கொள்வனவுமாகிய உயிர் பலவா ஒன்றா? அழியுந் தன்மையனவா? நிலைத்தனவா? உயிரின் வடிவம் என்ன? என்ற தலைப்பில் வள்ளுவர் நோக்கினைக் காண்போம். வள்ளுவர் காலத்தையொட்டிப் பின் எழுந்த காப்பியம் மணி மேகலை. அது உலோகாயதனை யடுத்துப் பூதவாதத்தைப் பேசுகிறது. அச்சமயம் உயிரைக் கண்டது யார்? உயிர் என்று ஒரு பொருளேயில்லை. ஆகாயம் ஒழிந்த பூதங்கள் நான்கு தம்முள் இயல்பாகக் கூடும்போது உண்டாகிற உணர்வே உயிர். பூதங்கள் பிரிந்தால் உயிர் என்பதொரு பொருளும் இல்லையாம் என்றும் இதனால், உயிருக்குத் தோற்றமும் அழிவும் உண்டென்றுகிறது. வள்ளுவரோ கடவுளைப் போலவே உயிரும் என்றும் உள்ள .பொருள். அழிவேயில்லாத பொருள் என்கிறார். மன்னுயிர் என்று தம் நூலில் ஆறு இடங்களில் சொல்லிக் காட்டுகிறார். 'மன்னுநிலை பேருகும்' என்பது உரியியற் சூத்திரம்.

உயிர் ஒன்றே அதுவே ஆன்மஞானம் பெற்றபோது பிரமான்மா எனப் படுகிறது. பரமான்மாவினிடமிருந்து தோற்றிய பொய்க்காட்சிகளே உயிர்கள் என்ற புறமொழிக் கொள்கை போலாது, வள்ளுவர், உடலும், உள்ளமும், வலியும், சோர்வும் ஒருயிர்க்கு உள்ளபடி ஒருயிர்க்கின்மையின், உயிர்கள் பல என்பதை 'எல்லாவுயிருந்தொழும்' எல்லார்க்கும் நன்றும் பணிதல்' 'எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை' என்ற தொடர்களால் வலியுறுத்துகிறார். பல்லுயிர் ஓம்புதல் என்பதும் இக்கருத்தினதே.

'எழுமை எழுபிறப்பு' என்பது ஊர்வன முதல் தேவரீருக எழுவகைப் பிறப்பு உண்டென்பதையும், ஒவ்வொரு வகையிலும் எத்தனையோ கோடிக்கணக் கான பிறவி வேறுபாடுகள் உண்டென்பதையும், ஒவ்வொரு பிறவி வேறுபாட் டினும் எத்தனையோ கோடிக்கணக்கான உயிர்கள் உள என்பதையும், பழம் பாடல் ஒன்றும் தொகுத்துச் சுட்டுகிறது. இவையனைத்தும் தமிழர் கண்ட உயிரினத் தொகுதிகளைப் பற்றிய உண்மைகள்.

தொல்காப்பியர் உயிரின் அறிவு பற்றிய ஏற்றத்தாழ்வால் ஓரறிவுமுதல் ஆறறிவீருகப் பல உள்ளன என்பதையும், ஒவ்வொன்றிலும் பலகோடி உயிர்கள் உள என்பதையும் காட்டுகிறார். இங்ஙனம் உயிர்கள் பல என்றல் பழந்தமிழ்க் கொள்கையேயாகும். அதில் ஊன்றிநின்ற வள்ளுவரும் பலவுயிர்க் கொள்கையினரே.

**பிறப்பும் இறப்பும்:**

பிறப் பிறப்புகள் உயிர்கள் உடலோடு கூடுதலும் பிறிதலுமேயாம். வள்ளுவர்,

''உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு''

என்ருர். இதனுல் பெறப்படும் சிந்தனை யாது? ஒவ்வொருநாளும் நாம் உறங்கி விழிக்கிருேம்; எதற்காக? வினைகளைச் செய்ய. உறங்குகிருேம்; எதற்காக? உழைத்த களைப்பு அகல. உறங்குவதும் விழிப்பதும் ஒவ்வொருநாளும் மாறிமாறி நிகழும் நிகழ்ச்சிகள்.அவை போன்றனவே பிறப்பும் இறப்பும். பிறப்பு வகுத்த வினைகளை உண்டு தொலைக்க. இறப்புகளைப்பகல. இதற்கிடையில் பிறந்த நாம் வினைகளைக் கழிக்கப் பிறந்தோம் என்று எண்ணுமல் இருட்சார்பால் மருளுற்று எல்லாம் நம்செயல் என்று இறுமாக்கிருேம். வினைகளைச் செய்கிருேம். அதனுல் வினைமூட்டையும் சேர்கிறது. இத்தகைய வினைச் சேர்க்கையை வள்ளுவர் 'தீவினை என்னும் செருக்கு' என்று குறிப்பிடுகிருர். 'முனைப்பாற் செயின் நல் வினைகூடத் தீவினையாய்விடும்' என்ற நுணுக்கத்தை இதிலிருந்து கண்டு வழிநூல் செய்த குமரகுருபரர் ''விலக்கிய நீக்கி விதித்தனவே செய்யும், நலத்தகையார் நல்வினையும் தீதே' என்ருர். இதனுலேயே வருவினை குவிகிறது. இத்தகைய குறிப்பைச் 'செருக்கு' என்ற ஒருசொல்லாற் கூறிக்காட்டுகிருர் வள்ளுவர்.

#### உயிர்களுக்குப் பிறவியுண்டாவது ஏன் ?

இதற்கு விடைகாணும் வகையில் மணிமேகலை காலத்துச் சமயநூல்களே பல காரணங்கள் கூறிக் குழப்புகின்றன. வள்ளுவர் 'மருளான் ஆம் பிறப்பு' என்கிருர். இங்கே மாணுமை பிறவிக்கேயுள்ள இயல்பு என்பது அவர் கருத்து. மாணுப்பிறப்பு மருளான் ஆம். எனவே மாட்சியுடைய பிறப்பு தெருளான் ஆம் எனக் கொள்ளுதல் கூடாது என்பதும் பிறவியைப் பெரிய கடலாகக் காட்டும் வள்ளுவர் கருத்தாகும். பிறப்பு மருட்சியால் விளைந்தால் என்ன? தெருட்சியால் விளைந்தால் என்ன? பிறவி துன்பந்தானே!

மருளான் விளைவன இருவினைகள். ஒரு பிறப்பிற் செய்த வினைகள் எழுமையுந் தொடர்வதாய்ப் பிறவியை முறையே பயக்கின்றன. பிறவி ஆற்றுப் பெருக்குப் போல் இடையருது வந்து கொண்டேயிருக்கின்றது. இங்ஙனம் வரும் உயிர்கள் என்ருயினும் பற்றற்றுச் சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் வீடு பெற்றுய்யக்கூடும் என்பதும் மெய்யுணர்வு என்னும் அதிகாரத்தால் வள்ளுவர் நோக்கச் செய்கிருர்.

மருளான் ஆம் மாணுப்பிறப்பு என்றவர் 'அவா என்ப எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து' என்கின்ருரே. பிறப்புண்டாவது மருளாலா அவாவாலா என்ற ஐயம் தோன்றுமே? அதற்கு மறுமொழியாக அவா, பிறப்பு இடையருது வருவதற்குக் காரணம். முதற்படைப்பு இருளால் ஆகிய மருளால் என்கின்ருர். இந்த அமைப்புமுறையும் கூர்ந்து அறிந்தின்புறு தற்குரியது.

#### மறு பிறப்புக் கொள்கை

இம்மைச் செய்தன மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வாணிகன் ஆஅய் அல்லன்' (புறநா) 'மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி' (பரி. 3:2) என்பன சங்க காலத்து மிகுதியும் நிலவிய கொள்கை. அன்றியும், வினைக்கொள்கை உறுதியாகப்

பற்றப்பட்டபோது அவ்வினைக்கொள்கைகளை உண்டு கழிக்கத் தேவையாகும் மறு பிறப்புக் கொள்கையும் நிலவியதற்கு ஐயமின்று. வள்ளுவரும் அந்நெறியில் நின்றார் என்பதற்கு 'மறுமையும் இன்பந்தரும்' (98) 'மனநலத்தின் ஆகும் மறுமை' (459) 'மறுமையும் இன்மையும் இன்றி வரும்' (1042) என்பன எடுத்துக்காட்டாகும். அன்றியும் 'ஒருமைக்கண் தாங்கற்ற கல்வி ஒருவற்கு எழுமை யும் ஏமாப்புடைத்து' என்பதும் சான்றாகும்.

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும் என்பதும் ஒழுக்கக்கேடு மறுமையில் இழிந்த பிறப்பாம் என்பதும், வினைகட்கீடாகவே பிறப் புண்டானதால், மக்களாய்ப் பிறந்தவன் எத்தகைய தீவினை செய்தாலும் மறுமை யில் மக்களாகவே பிறந்து அவ்வினைப் பயனை நுகர்வான் என்பதன்று. செய்த வினைக்கேற்ப விலங்காகவும் ஏனைய இழிந்த நிலையிலும் பிறக்கலாம் என்பதும் குறிக்கப்பெறுதலின் மறுபிறப்புக் கொள்கையிலும் வினைகளின் நிலைக்கேற்று எப் பிறவியும் நேரலாம் என்ற கொள்கையினர் என்பது அறியப்படும்.

'தவமும் தவம் உடையார்க்கு ஆகும்' (262) இலர் பலராகிய காரணம்' (270) என்பன முற்பிறப்புக்களின் செய்த தவப்பயனே எடுக்கும் பிறவியிற்பயன் தருகின்றது என்பதைக் காட்டி, மறுபிறப்புக் கொள்கைக்கு அரண் செய்கிறார். இப்படி எட்டிடங்களில் இக்கொள்கை வலியுறுத்தப்பெறுகிறது. அங்ஙனமாக உற்றார் உறவினராக ஏழுசுற்றத்தார்: 'மகள், மகன் மகன் மகன். அவன் மகன் முதலாக ஏழு தலைமுறைகள்.' 'ஏழு குடிகள்' என்றெல்லாம் கருதுவது வள்ளுவர் காலக் கருத்தன்று. அவர் நோக்கும் அன்று.

**தத்துவக் கூறுகள்**

மெய்ப்பொருளியலின் நோக்கு முழுவதும் எல்லாக் கொள்கைகளும் தத்து வக் கூறுகளைக்கண்டு துணிதலை அடிப்படையாகக்கொண்டு விளங்குபவை. அதில் உப நிடதக்கால வழக்குப் பருப்பூதங்கள் ஐந்தும் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றிய தாகக் கூறுகிறது. விண்ணிலிருந்து காற்று; அதிலிருந்து தீ; அதிலிருந்து நீர்; அதிலிருந்து மண் உண்டாவதாகக் கூறும். வள்ளுவரோ,

''சுவை ஒளி ஊறோசை நாற்றமென்றைந்தின்
வகை தெரிவான் கட்டேயுலகு''

என்ற குறட்பாவில் பருப்பூதங்கள் ஐந்தும் அவ்வவற்றிற்கும் தனித்தனியே உரிய தன் மாத்திரைகளிற் பிறப்பன. விரையொன்றிடச் சுரை ஒன்று முளையாவாறு ஒரு பூதம் மற்றொரு பூதத்திற்கு முதலாகாது என்பதனை வலியுறுத்துகிறார். ஐம்பெரும் பூதங்களும் தன்மையால் வேறுபட்டவை என்பதைப் புறநானூறு இரண்டாம் பாடலும் அறிவிக்கும். இங்ஙனம் வள்ளுவர் கூறும் தத்துவநோக்குப் பழந்தமிழிலக்கியப் போக்கிற் கூறப்படுவதையும் காணுகிறோம்.

''வகைதெரிவான் கட்டே உலகு'' என்பதை நிலைக்களனாகக் கொண்டு பரிமேலழகர் சுவைமுதலாக மூலப்பகுதியீறாக இருபத்தைந்து தத்துவங்களைச் சாங்கியநூல் துணைக்கொண்டு விதப்பர். திருவள்ளுவர் காலத்திற்கு இரு நூறு ஆண்டிற்குப் பிற்படாத திருமூலர் தமிழர்நெறி பற்றி முப்பத்தாறு தத்துவங்கள் வரை காட்டுவர். அதற்கு மேலும் தத்துவங்களின் விளைவாகிய தாத்துவிகப்

பொருள்கள் அறுபதையும் கூட்டித் தொண்ணூற்ருறு என்பர். இக்கருத்து 9-ஆம் நூற்ருண்டு வரை அதாவது சுந்தரர் காலம் வரை நிலவியதை ஏழாந் திருமுறையிற் காண்கிறேம். அதற்குப் பின்னே சமயமெய்ப்பொருள் நூல்கள் தனித்துத் தோன்றினமையால் அதனைப் பற்றிய ஆய்வு ஈண்டு நமக்கு வேண்டிற்றிலது. இதனுலும் வள்ளுவரின் தொன்மை நோக்குக்கு அவருக்கு அண்மையில் வந்த திருமூலர் வாக்கும் துணையாவதைக் காணலாம்.

**வீடு பேறு**

இது வீடு, சிறப்பு, பிறவியதுதல், என்றெல்லாம் வள்ளுவரால் ஆளப்பெறுகின்றது. ''மலர்மிசை ஏகினுன் மாணடிசேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்'' என்ற குறட்பாவில் 'நிலமிசை' என்பதை 'மிசை நிலம்' எனக் கூட்டி எல்லா வுலகிற்கும் மேலாகிய வீட்டுலகு' என்ற பரிமேலழகர் கருத்தோட்டமும், 'வானேர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்ற வள்ளுவர் நோக்கும் தாமரைக் கண்ணுன் உலகைப்போல் இதுவும் ஒரு தனித்த உலகு ஆகலாம் என்ற சிந்தனையை உண்டாக்குவது, ஆனல் ''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டுவாராநெறி' என்று மீளவும் இம்மண்ணுலகில் வந்து பிறவாநெறியை அடைதலையே வீடு என்கிறது. 'பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' 'பேரா இயற்கை தரும்' என்பன பிறவியறுதலாகிய ஒன்றே வீடு எனக் கருத வைக்கிறது. இங்ஙனம் மெய்யுணர்தல் அவாவறுத்தல் இவைகளில் வரும் வீட்டியல்பை நோக்கின் பற்றற்று, இறையுணர்ச்சியுடன் பேராஇன்பநிலையில் வாழ்தலும், எடுத்த உடல் விழ்ந்தபின் மாணடியைச் சேர்ந்து உயிர்பிறப்பற்றிருத்தலும், என்றும் இன்பம் பெருக இருத்தலையே சுட்டுவது என்று கருதக்கிடக்கிறது; இதுதான் வீடு என்று நுகர்ச்சிமயமாக இருப்பதொன்றைச் சொல்லான் அளந்து சுட்டிக்காட்ட இயலாமையாலேயே வீடு என்று அடிசேர் முத்தியில் வள்ளுவர் நோக்கு அமைந்திருக்கிறது எனலாம்.

இங்ஙனம்மூன்றிப் பொதுநூலாக வேண்டி ஒன்றையும் சுட்டிக் கூருது விடுகிருர் என்பதும் தமக்கு ஒவ்வாத கொள்கைகளை மறுக்கிருர்; அல்லது காப்பியச்சுவைபடப்பேசுகிருர் என்பதும் அவருடைய மெய்யுணர்விற்குப் பொருந்தாததாகும். இவை வேண்டுதல் வேண்டாமைப்பாற் படுதலின் அவர் காலத்துப் பழந்தமிழ்ச் சமயநோக்கும் சைவம், சைனம், பௌத்தம் என்ற பெயர்களைச் சூடிக் கொள்ளாது 'கொள்கை' என்ற அளவிலே பழந்தமிழர்க்குரியதாக இருந்தது. அது பன்மையில் ஒருமையைக் காணும் முடிபினதாக அவாவே தவாப் பிறப்பீனும் வித்து ஆதலின், பற்றறுதலே வீடு, அங்ஙனம் பற்றற்ருர், எடுத்த உடலுக்குரிய வினை கழியும் வரையில் பிறப்பறுக்கலுற்ருர்க்கு உடம்பும் மிகை என்ற உணர்வுடன் சிவன் முத்தர்நிலையில் இருப்பர். பின்னர் அடிசேர் நிலையில் இன்பம் எய்துவர் என்ற நோக்கினதாகிறது.

வள்ளுவர் சமயநோக்கு தத்தம் சமயத்தையே நோக்குவது என்று சாதிப்பதால் உண்மையைக் கண்டதாகவோ அஞ்சாமல் துணிந்து கூறிவிட்டதாகவோ ஆகிவிடாது.

இறவைன் அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாயிருக்கிருன் என்பதால் அவனுடைய சிறப்பியல்பு அதுவேயாதல் போலத் திருக்குறளின் சமயநோக்கும் பழந்தமிழ்ச்சமய நோக்காக — அக்காலத்துச் சமயவாழ்வின் அமைப்பைக் காட்டுகிறது என்றமைவோம்.

**எடுத்தாண்ட நூல்கள்:**

தொல்காப்பியம் பொருளதிகாரம்.
திருக்குறள் ஆராய்ச்சி மறைமலேயடிகளார் பாரிநிலேய வெளியீடு
திராவிடப் பிரகாசிகை சபாபதி நாவலர் — கழக வெளியீடு
சண்முகவிருத்தியுள் முதற்குறள் விருத்தி — அரசஞ்சண்முகனர், மீன லோசனி அச்சியந்திரசாலே, மதுரை, 1921.
தமிழர் மதம் — தேவநேயப்பாவாணர், நேசமணிப்பதிப்பகம்
திருக்குறள் விரியுரை — திரு. வி. க. — சாது பிரஸ்
தமிழர் சமயம் — கா. சுப்பிரமணியபிள்ளே.
குறள்கூறும் சமயம் — காமாட்சி ஸ்ரீனிவாசன், மதுரைப்பல்கலேக் கழகம்.
தமிழர் வாழ்வியல் — டாக்டர் சி. இலக்குவனர்.
தமிழர் நாகரிகமும் பண்பாடும் — டாக்டர் இராசமாணிக்கனர்
திருக்குறள் விருத்தியுரை — நாகை சொ. தண்டபாணியார், கழகப் பதிப்பு.
வள்ளுவத்தில் மெய்ப்பொருட்சுவடுகள் — ச. தண்டபாணிதேசிகர், அண்ணுமலேப் பல்கலேக்கழகம்.
திருவள்ளுவர் — டாக்டர் ச. சோமசுந்தரபாரதியார், நாவலர் புத்தக நிலேயம்.
திருமூலர் திருமந்திரம் — திருமூலர், சைவசித்தாந்த சமரசம்.
நீதிநெறிவிளக்கம் — குமரகுருபரசுவாமிகள், காசிமடம்.
புறநானூறு — மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர்.

# இளங்கோவின் பார்வையில் பெண்கள் சமூகம்

மனோன்மணி சண்முகதாஸ்

> ''காலத்தை ஒட்டி மக்கள் மனப்பான்மையை அறிந்து நூல்களை எழுதுவதே சிறந்த முறை. இவ்வாறு எழுதப்படும் இலக்கியங்களே போற்றப்படும். நூல் தோன்றிய காலத்திலும் மக்களால் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்படும். பிற்காலத்திலும் பெரிதும் பாராட்டப்படும். இத் தகைய நூல்களே சிரஞ்சீவி நூல்களாக நின்று விளங்கும்.''[1]

சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் இவ்வுண்மையை உணர்ந்தே தமது நூலினை இயற்றியுள்ளார். சிறந்த கவிஞர் பலர் நம்மிடையே தோன்றி யுள்ளனர். உயர்ந்த புலமையும், உலக மக்களை நேசிக்கும் பண்பும் கொண்ட கவிஞர் பலர் தோன்றியுள்ளனர். அத்தகைய ஒப்பற்ற கவிஞர்களிலே ஒருவர் இளங்கோவடிகள். சிலம்பின் விளைவால் எழுந்த கதை ஒன்றினைச் ''சிலப்பதி காரம்'' என்னும் காவியமாக்கிய இளங்கோ, தமது காவியத்தில் பெண்மைக்கே முதலிடம் அளித்துள்ளார். கண்ணகி என்னும் பெண்ணைக் கதைத் தலைவியாக்கி அவள் வரலாற்றின் மூலமாகத் தமது பல்வேறு நோக்கங்களையும் நிறைவேற்றி யுள்ளார். நூலின் ஆரம்பம் முதல் முடிவுவரை கண்ணகியின் பெருமையே பேசப்படுகின்றது. கண்ணகி தனியாக நின்று தன் கணவன்மீது சுமத்தப்பட்ட பழியைத் துடைத்து, அதற்குக் காரணமாக இருந்த அந்நாட்டு மன்னனையே அழிக்கின்றாள். இந்த வகையிலே ஒரு பெண் முன்னின்று நடத்திய புரட்சிக் கதையைச் சிலப்பதிகாரம் கூறிச்செல்வதால் புரட்சிக்காவியம் என்றும் சிறப் பித்துப் பேசப்படுகின்றது.

சிலப்பதிகாரத்திலே கண்ணகியின் வரலாற்றோடு தொடர்புகொண்ட பல பெண்களை நாம் அறிகின்றோம். அவர்கள் குணவியல்புகளும் சிறப்புக்களும் பல ராலும் ஆய்வுசெய்யப்பட்டுள்ளன. ஆனால் அத்தகைய பெண்கள் எல்லோரையும் கூட்டாக முன்வைத்துப் பெண்கள் சமூகத்தின் பிரதிநிதிகள் என்ற வகையில் ஆய்வுமேற்கொள்ளப்படவில்லை. அத்தகைய நோக்கு இன்றைய பெண்கள் சமூகத்தின் வளர்ச்சிக் கிரமத்தினைக் கணிப்பதற்கு உதவும் என்ற வகையில் இக் கட்டுரை அத்தகையதொரு ஆய்வினையே மேற்கொள்ளுகின்றது. சிலப்பதிகாரத் தின் அமைப்பும் இளங்கோவின் படைப்பாற்றலும் இத்தகையதொரு ஆய்வினை மேற்கொள்ளுவதற்கு உறுதுணையாக அமைகின்றது. மூன்று காண்டங்களில் மூன்று நாடுகளில் நடைபெற்ற வரலாறாகச் சிலப்பதிகாரக் கதையை இளங்கோ அமைத்துள்ளார்; முப்பது காதைகளை அமைத்துக் காவியத்தை நடத்திச் செல்கிறார். குறுகிய ஒரு கதையை இளங்கோவடிகள் ''நெஞ்சையள்ளும் சிலப்பதிகார'' மாக்கியுள்ளார். அக் குறுகிய கதையினூடாக அவர் காட்டும் சமூக வாழ்வு எமது மனங்கவர்வது. அதிலும் குறிப்பாகப் பெண்களது நிலையை அவர் எடுத்துக்காட்டும் வகை போற்றுதற்குரியது.

ஏறக்குறைய இருபது முக்கிய பெண்பாத்திரங்கள் சிலப்பதிகாரக் கதையில் காணப்படுகின்றனர். அவர்களைப்பற்றிய செய்திகளை இளங்கோ கதைப் போக்கினூடாகக் கூறிச்செல்லும் சந்தர்ப்பங்கள் அக்காலப் பெண்கள் சமூகத்தின் நிலையை அறிய உதவுகின்றன. அகரவரிசைப்படி கூறுவதானல் உருப்பசி, ஐயை, கண்ணகி, கவுந்தி, கார்த்திகை, கோப்பெருந்தேவி, சாலினி, சித்திராபதி, சோணை, தேவந்தி, நீலிப் பெருமகள் மாதரி, மாதவி, மாலதி, வசந்தமாலை, வேண்மாள் எனக் கூறலாம். இப்பெண்கள் பல்வேறுபட்ட சமூகநிலைகளின் பிரதிநிதிகளாக இளங்கோவால் உருவாக்கப்பட்டுள்ளனர். சிலப்பதிகாரத்திலே இளங்கோவடிகள் இப் பெண்களினூடாகத் தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கை நிலையை வருணிக்க முற்பட்டுள்ளார். அத்தகைய வாழ்க்கை முறைகளினூடாக நோக்கும்போது பெண்கள் சமூகம் பெற்றிருந்த முன்னேற்றத்தையும், அதே சமயத்தில் அவர்களுக்கிருந்த கட்டுப்பாடுகளையும் காணமுடிகிறது. மேற்குறிப்பிட்ட பெண்களை வகுத்து நோக்கும்போது பத்து வேறுபட்ட சமூகங்களின் பிரதிநிதிகளாக அவர்களைக் காணமுடிகின்றது. அவ்வாறு காணும்போது அவ்வச் சமூகங்களுக்கிடையே இருந்த வேறுபட்ட நிலைமைகளையும் உணரமுடிகின்றது. தேவகணிகை, பரத்தை, வணிகசமூகத்தவள், அந்தணர்குலத்தவள், பார்ப்பன குலத்தவள், இடைச்சியர், வேட்டுவமகளிர், சைனமதத்துறவி, வைசியர்குலத்தவள், அரசகுலத்தவர் எனப் பத்துவகைப்பட்ட பிரதிநிதிகளையும் ஒருங்குவைத்து நோக்கும்போது பெண்கள் சமூகத்தின் பல்வேறுதரப்பட்ட அம்சங்களையும் காணமுடிகிறது. இப் பிரதிநிதிகள் ஒவ்வொருவரையும் சிலப்பதிகாரத்திலே இளங்கோவடிகள் அறிமுகஞ்செய்யும் போது தமக்கேயுரிய தனிச்சிறப்புடன் அறிமுகஞ்செய்து வைக்கின்றார். கதைப் போக்கினை வளர்த்துச் செல்லும்போது ஏற்ற சந்தர்ப்பங்களில் ஏற்ற பிரதிநிதிகளாக அவர்கள் அறிமுகஞ்செய்து வைக்கப்படுகின்றனர். இவ்வகையிலே வணிகர் குலத்தின் பிரதிநிதியான கண்ணகிக்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. இளங்கோவடிகள் தனது நூலின் நோக்கத்தைப் பதிகம் என்னும் பகுதியிலே கூறிச்செல்கின்றார்.

அரசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்
ஊழ்வினைச் சிலம்பு காரணமாகச்
சிலப்பதிகார மென்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்

அம் மூன்று நோக்கங்களிலே இரண்டாவதாகக் கூறப்பட்ட ''உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தல்'' என்ற உண்மை கண்ணகி வாயிலாக நிறுவப்பட்டுள்ளது. வணிகர்குலப் பிரதிநிதியான கண்ணகியே இச் சிறப்பினைப் பெறுவதற்கு முக்கிய காரணம் இளங்கோவின் தனித்துவம் என்றுதான் கூறவேண்டும். அரசகுலத்தவர் வாயிலாக இத்தகைய பெருமைக் குணங்களை வெளிப்படுத்துவதைவிடச் சாதாரணமான

''நாக நீ ணகரோடு நாகநாடதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னின்
மாகவா ணிகன்வண்ணக மாநாய்கன் குலக்கொம்பர்
ஈகை வான்கொடியன்னாள் ஈராறாண்டகவையாள்
அவளுந்தான்,

போதிலார் திருவினள் புகழுடை வடிவென்றுந்
தீதிலர் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர் மன்னுங் கண்ணகியென் பாண்மன்னோ''

''வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலியொரு மீன் தகையாளை''

''அங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார்.''

இவ்வாறு சிலப்பதிகாரத்து முதற்கதையாகிய மங்கல வாழ்த்துப் பாடலிலேயே கண்ணகியை அறிமுகஞ்செய்யும்போது கற்பின் நலத்தினையே இளங்கோவடிகள் புகழ்ந்துரைக்கின்றார். இக் கற்பின் திறமே கண்ணகியின் ஆற்றலுக்கு உறுதுணையாக நின்று உரைசால் பத்தினியாக்கியது,. ஆனால் சாதாரண வணிகர் குலத்தைச் சேர்ந்த கண்ணகிக்கு இத்தகைய அருங்குணத்தினை இளங்கோவடிகள் இணைத்ததன் காரணம் என்ன? பெண்கள் குணநலன்களுக்குள் சிறப்பாக விதந்து கூறப்படும் இக் கற்பின் சிறப்பு இளங்கோவுக்கு முன்னர்த் தோன்றியவர்களாலேயே கூறப்பட்டுள்ளது. அந்த மரபிலிருந்து இளங்கோ மாற முற்படவில்லை. பெண்கள் சமூக நிலைகளைப்பற்றி இளங்கோவுக்கு முன்னர் வாழ்ந்தவர்களது கருத்துக்களை ஆராயும்போது மனுதர்ம சாஸ்திரத்திலே கூறப்பட்ட கருத்துக்கள் முன்னோடியாக விளங்குகின்றன. மனிதர்களது வாழ்க்கைத் தர்மத்தை வகுத்துக் கூறவந்த மனு பெண்களது நிலைமைகளையும், பண்புகளையும், உரிமைகளையும் வகுத்துக் கூறியுள்ளார்.

மாதரொழுக்கம் என்னும் பகுதியிலே அவற்றை விரிவாகக் கூறியுள்ளார்.

148. ''பால்யத்தில் தகப்பன் ஆஞ்சையிலும்
யௌவனத்தில் கணவன் ஆஞ்சையிலும்
கணவன் இறந்தபின்பு பிள்ளைகள் ஆஞ்சையிலும்
இருக்கவேண்டியதே யல்லாது ஸ்திரீகள் தம் சுவாதீனமாக
வொருபோதும் இருக்கக் கூடாது.

154. கணவன் துராசாரமுள்ளவனாக இருந்தாலும் அந்நியஸ்திரீ
லோலனாயிருந்தாலும் நற்குணமில்லாதவனாக இருந்தாலும்
பதிவிரதையான ஸ்திரீயானவள் அவனைத் தெய்வத்தைப்போற்
பூசிக்க வேண்டியது.

155. ஸ்திரீகளுக்கு பஞ்சமகாவெக்கியம், உபவாசம், விரதம் இவை
முதலான தருமங்கள் தனியாகக் கிடையாது. கணவனுக்குச்
சிசுருஷை செய்வதனாலேயே சுவர்க்கத்திற் பெருமை பெறுகிறார்கள்.[2]

இக்கருத்துக்களை முன்னோடியாகக் கொண்டே இளங்கோவடிகள் தனது கதாநாயகியான கண்ணகியையும் படைத்திருக்கின்றார். கண்ணகியின் முழு வரலாற்றிலும் இப் பண்புகளைச் செறியவைத்துள்ளார். அரசமரபிலே வந்த பெண்களைவிடக் கண்ணகியை மேம்படுத்திக் காட்டுவதற்குக் கற்பினையே ஆதாரமாகக்

கொண்டுள்ளார். இவ்வாறு மனுவினது கருத்துக்கள் மரபாக ஊறியிருந்த சமூகத்திலே தோன்றிய கண்ணகியும் அத்தகைய பண்புடையவளாகவே வாழ்கின்ருள். மாதரொழுக்கம் பேணப்பட்டதனுல் சமூக நிலைமையிலே கண்ணகியின் குணப் பண்புகள் தனித்துவமானதாகவும் அமைகின்றன. கோவலன் அவளைப் பிரிந்து பரத்தைவீட்டில் தங்கியபோது அவனைக் கண்டிக்காது அவள் பெண் தருமத்தையே பேணி வாழ்கிருள்.

''அஞ்செஞ் சீறடியணி சிலம்பொழிய
மென்றுகி லல்குன் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்கும மெழுதாண்
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகஞ் சிறுவியர் பிரியச்
செங்கய னெடுங்க ணஞ்சன மற்பப்
பவள வானுத றிலக மிழப்பத்
தவள வாணகை கோவலனிழப்ப
மையிருங் கூந்தனெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி...

இளங்கோவடிகள் கண்ணகி கோவலனைப் பிரிந்திருந்த நிலைமையை வர்ணிக்கும் போது இது புலனுகின்றது. கற்பின் திறமுடையவளாக இருந்தபோதும் தன் கணவன் தன்னைப் பிரிந்து பரத்தை வீடே கதியென்று வாழ்ந்தபோது அதனைக் கண்டிக்கவோ, தண்டிக்கவோ செய்யாமல் கண்ணகி இருக்கின்ருள்.

இச் சந்தர்ப்பத்தில் கண்ணகியின் வாழ்வின் போக்கையே மாற்றியமைத்தவளாகிய மாதவியை, நாம் பரத்தையர்குலப் பிரதிநிதியாகச் சமூக நிலையில் பெண்களில் இன்னெருசாரார் வகித்த இடத்தையும் அவர்களது சமூக அந்தஸ்தையும் அறியமுடிகிறது. சிலப்பதிகாரத்திலே அரங்கேற்றுகாதையிலே மாதவி அறிமுகஞ்செய்யப்படுகிருள்.

சிறப்பிற் குன்ருச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்ருப் பெருந்தோண் மடந்தை
தாதவிழ் புரிகுழன் மாதவி தன்னை
ஆடலும்பாடலும் அழகு மொன்றிக்
கூறிய மூன்றினொன்று குறைபடாமல்
ஏழாண்டியற்றி யோரீராண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல்வேண்டி

மாதவியின் குலத்தைப்பற்றிக் கூறவந்த இளங்கோ கணிகையர் குலத்திற் தோன்றியவளானபோதும் வானவர் மரபில் வந்தவள் என்று கூறியமை இங்கு நோக்குதற்குரியது. தனது குலத்தளவிலேயே தனித்துவம் பெற்றவளாக மாதவி விளங்குகின்ருள். தன் ஆடற்றிறனை மன்னனுக்குக் காட்டவேண்டி அரங்கேற்றம் செய்கிருள். இங்கு கணிகையர் அரசவை வரை தொடர்பு கொண்டிருந்ததை அறியமுடிகின்றது. அரசனது சபையிலே,

பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென
நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்துக்

காட்டுகின்றாள். தனது மரபு பேணுபவளாக மாதவி விளங்கி இந்திரவிழாவிலும் தன் ஆடல்பாடல் மூலம் மக்களை மகிழ்விக்கின்றாள். அதுவே கோவலனை அவளிடமிருந்து பிரிக்கின்றது. பரத்தையர் சமூக நிலையைக் கோவலன் சற்றும் எண்ணிப்பாராமல் மாதவியைப் .பிரிகின்றான். மாதவி அவன்மீதுகொண்ட உண்மையான அன்பு சமூகமரபுகளால் சந்தேகத்துக்கிடமாகின்றது. அவள் வாழ்வின் போக்கையே மாற்றிவிடுகின்றது. நாடக மகளாக இருந்தபோதும் குலமகளுக்குரிய கற்போடு வாழ எண்ணிய அவள் எண்ணம் ஈடேறவில்லை. கோவலனை மனத்திலிருத்திய குற்றத்திற்காக அவள் துறவு பூணுகிறாள். கோவலனையன்றிப் பிறகணவரைக் கருதாத பெருங்கற்புடையவளாக அவள் மாறுகின்றாள். பரத்தையர் சமூக மரபினையே மீறிய பெருமை பெறுகிறாள். இவ்வாறு மாதவி தன் சமூகத்தின் பிரதிநிதித்துவத்தை இழக்கும் நிலைமைக்கு முக்கிய காரணம் என்ன என்பதைக் குருசாமி பின்வருமாறு கூறுகிறார்:

> ''பெண்களிடையே இரண்டு முரண்பட்ட பிரிவுகளை ஏற்படுத்தியதே பெருங் குறையாகும். குடும்பவாழ்வையும், கலைவாழ்வையும், தனித் தனியாக அக்காலத்திலே பிரித்தனர். குடும்பப் பெண்டிர் ஆடல்பாடல் போன்ற கலைத்துறை முயற்சிகளில் ஈடுபடுவது இல்லை. கலைத்துறை மகளிர் குடும்பப் பெண்டிர்க்குரிய நல்வாழ்வை ஏற்கும் தகுதியும், உரிமையும் மறுக்கப்பட்டனர். பொருள்படைத்த ஆடவர் தம் கேளிக் கைக்குரிய பொருள்களினோடு ஒருங்குவைத்துப் பெண்களையும் கருதினர். குடும்பக் கடமையைப் பெரிதாகப் போற்றினர், குலகமகளிர். கலைக் கவர்ச்சியையே துணையாகக் கையாண்டனர் கலைத்துறை மகளிர். குல மகளிர் என்றும், கலைமகளிர் என்றும் ஆடவரின் பொருளாதிக்கம் இரண்டு பிரிவுகளைப் பெண்களிடையே ஏற்படுத்தியது''[3]

குருசாமியின் கருத்திற்கு இளங்கோவின் சமூகப் பார்வையும் காரண மெனலாம். கண்ணகிக்கும் மாதவிக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை இளங்கோ காட்டும்வகை இரு வேறுபட்ட சமூக நிலைகளிலே பெண்கள் நிலைமை எவ்வாறிருந்த தென்பதைத் துல்லியமாக விளக்கி நிற்கின்றது.

பெண்கள் சமூக நிலைமைகளை வெகு நுணுக்கமாக அவதானித்த இளங்கோ வடிகள் அச் சமூக நிலைகளுக்கிடையே கூட்டுணர்வு ஏற்பட்டால் அதன் பிரதி பலிப்பு எவ்வகையில் அமையக்கூடும் என்பதையும் சிந்தித்திருக்கிறார். கவுந்தி யடிகள் கண்ணகியை இடையர்சேரியில் மாதரியின் அடைக்கலப் பொருளாகக் கொடுக்கும்போது இதனை நாம் உணரமுடிகிறது. பாண்டியன் அரண்மனைக்கு நெய்யளிக்கும் உரிமைபூண்ட மாதரி, கவுந்தியின் அடைக்கலப் பொருளான கண்ணகியை ஏற்கிறாள். கண்ணகியும், கோவலனும் இடையர்சேரியில் உணவுண்டு பழைய இல்லற வாழ்வை ஒருபொழுது அனுபவிக்கின்றனர். ஆநிரைகாத்து வாழும் கோவலரின் ஏகப் பிரதிநிதியான மாதரி வணிகர்குலப் பிரதிநிதியான கண்ணகியோடு ஒத்தியைகின்றாள். உண்மை அன்புகொண்டு நிற்கிறாள்.

ஆயர்பாடியின சோதை பெற்றெடுத்த
பூவைப்புதுமலர் பண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணு நம்பியீங்குப்
பல்வளைத் தோழியும் பண்டுநங் குலத்துத்
தொழுனை யாற்றினுட் டுமணிவண்ணனை
விழுமந் தீர்த்த விளக்குக் கொல்

என்று கோவலன் தனது வீட்டிலே உணவருந்தியபோது கண்ணகியையும் கோவலனையும் உடன் கண்டு விம்மிதம் எய்தினரென இளங்கோவடிகள் கூறுகின்றனர். கவுந்தி கண்ணகியை யாரென அறிமுகப்படுத்திய பின்னரும் வேற்றுநாட்டவர் என்று பிரிவுணர்வின்றித் தமது தெய்வமாகக் கண்ட மாதரியின் மனப்பாங்கு அவள் சமூகநிலைமையை உணர்த்தி நிற்கின்றது. இதே மாதிரிக் கண்ணகிக்கு ஏற்பட்ட துன்பங் கண்டு,

கோவலன் தீதிலன் கோமகள் பிழைத்தாள்
அடைக்கல மிழந்தேன், இடைக்குல மக்கள்
குடையும் கோலும்,
பிழைத்தவோ என இடையிருள்
யாமத்து எரியுட் புகுந்து

உயிர்விட்டாள்.

இதேபோன்று கார்த்திகை, தேவந்தி, மாலதி, மாலினி, வசந்தமாலா, நீலி போன்ற பெண்களும் அவரவர் சமூகப் பிரதிநிதிகளாக இளங்கோவடிகளால் அறிமுகஞ்செய்யப்பட்டுக் கண்ணகியின் வரலாற்றோடு தொடர்புற்று விளங்குகின்றனர். தத்தமது சமூக மரபுகளுக்கு ஏற்றவாறு அவர்களது தொடர்பு கண்ணகியின் சமூக மரபினோடு இணைக்கப்படுகின்றது. இங்கு அரசமரபிலே வந்த வேண்மாள், கோப்பெருந்தேவி, சோணை என்னும் மூன்று பாத்திரங்கள் சமூகரீதியில் கண்ணகியோடு இணையமுடியாத பாத்திரங்களாகவே படைக்கப் பட்டுள்ளனர். இளங்கோவைப் பொறுத்தவரையில் சமூக அமைப்பின் மாற்றத்துக்கோ அன்றி இணைப்புக்கோ உள்ள மரபு பொருந்தாது என்ற கொள்கை வலுப்பெற்று விளங்குவதைச் சிலப்பதிகாரத்திலே காணமுடிகிறது.

இவ்வாறு பல்வேறு சமூக நிலைகளைத் தனித்தனியே எடுத்து அவற்றுக்கிடையே இணைப்புக்காண முயலும் இளங்கோவின் முயற்சி பின்வரும் இலக்கியங்களிலே பெரிதும் பேணப்படுகின்றது. சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற பேரிலக்கியங்களிலே இப்பண்பு துல்லியமாகக் காணப்படுகின்றது. குறிப்பாகப் பெண்கள் சமூக நிலைகளை அவ்விலக்கிய ஆசிரியர்களும் இந்த வகையிலேயே எடுத்துக் காட்டியுள்ளனர். கம்பனின் காவியத் தலைவியான சீதை பல்வேறு சமூக மரபு பேணும் பெண்களோடு இணைந்து சமூக மாற்றத்தை எதிர்நோக்குபவளாக அமைகின்றாள். இதனால் இளங்கோவடிகள் முன்னோடியாக நின்று இப் பணியினைச் செய்துள்ளார் என்பதில் ஐயமில்லை. முடியரசுத் தமிழகத்தில் சிலப்பதிகாரம் இயற்றப்பட்டதாயினும் முடிமக்கள் காப்பியமாக அது விளங்கவில்லை. காலம், இடம், சமுதாயம் இவற்றின் போக்கிற்கு ஒருவாறு

மாறுபட்டதாகவே சிலப்பதிகாரம் அமைந்துள்ளது. இது இளங்கோ செய்த புரட்சி எனப் பிற்காலத்தவர் விதந்து கூறுகின்றனர்,

காலங்கடந்த இலக்கியங்களிலே பெண்கள் சமூகம் பற்றிய கருத்துக்களை நாம் நுணுகி ஆராயவேண்டுவது அவசியம். இன்று நவீன அறிவியற் கருத்துக்களைக் கொண்டு நாம் புதிய சிந்தனைகளை நம்மிடையே ஏற்படுத்துகின்றோம். ஆனால் நமது பழைய இலக்கியங்களிலே அவை சிந்திக்கப் பட்டிருப்பதை நாம் உணருவதில்லை. சமூகவியலடிப்படையிலான கருத்துக்களை நாம் நம்மிடையே வளர்ந்தவற்றை நோக்கும்போது நமது இலக்கிய ஆசிரியர்களின் சமூகத் தொண்டினை அறியமுடிகின்றது. அதுவே எம்மை வழிநடத்தும் இலக்கியச் சேவையாகவும் அமைகின்றது.

அடிக்குறிப்புகள்

1. சாமி சிதம்பரனார் — சிலப்பதிகாரத் தமிழகம், பக். 10.
2. இராமானுசாச்சாரியார் — மனுதர்ம சாஸ்திரம் (தமிழில் மொழி பெயர்ப்பு) சென்னை — 1929. பக். 135–138.
3. குருசாமி. ம. ரா. போ. — சிலப்பதிகாரச் செய்தி. பக். 24–25.

# தமிழில்-உரைகளின் தோற்றமும் வளர்ச்சியும்

மு. வை அரவிந்தன்
தமிழ்த்துணைப் பேராசிரியர், அரசினர் கலைக்கல்லூரி, கிருஷ்ணகிரி

தமிழ் இலக்கிய வரலாற்றில், பழந்தமிழ் நூல்களுக்குத் தோன்றியுள்ள உரைகள் மிகச் சிறந்த இடம் பெறுகின்றன. அவ்வுரைகள் யாவும் ஒரே காலத்தில் திடீரென்று தோன்றியவை அல்ல. அவை, காலச் சூழலுக்கு ஏற்றவாறு, முதலில் சிறிய அளவில் தோன்றி, மெல்ல மெல்ல வளர்ந்து, படிப்படியாய் முழுமை பெற்றன. அவை தோன்றிய முறையும், வளர்ந்த வரலாறும், நிறைவு பெற்ற வகையும் இன்ப மூட்டுகின்றன.

### அரங்கேற்றம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே தமிழ்நாடு, கல்வியிற் சிறந்து விளங்கியது. கற்றுத்துறைபோகிய வித்தகர் பலர், நாடெங்கும் வாழ்ந்து வந்தனர். அவர்கள், தாம் வாழ்ந்த காலச் சூழலை உணர்ந்து, தம்முடன் வாழ்ந்த மக்களின் தேவையை அறிந்து, அம்மக்கள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி காட்டும் நல்ல கருத்துக்களை நன்கு சிந்தித்து நூல்கள் இயற்றினர்.

காலத்திற்கு ஏற்ற புது நூல்களை இயற்றிய அறிஞர்பெருமக்கள், தம் படைப்புக்களைப் புலவர் நிறைந்த பேரவையில் வைத்து அரங்கேற்றினர். புதிய நூல்களை அரங்கேற்றும் பொறுப்பை நாடாண்ட மன்னர் ஏற்றுச் சிறப்புடன் நடத்தினர். திறனாய்வு நோக்கில், புதிய நூல்களில் இருந்த குறை நிறைகள் ஆராயப்பட்டன. அவையோர் எழுப்பிய பலவேறு வினாக்களுக்கு நூலாசிரியர் தகுந்த விடை அளித்தனர். அரங்கேற்றப்பட்ட நூல்களின் மாட்சியை வியந்து பாராட்டி, நாட்டுமக்கள் கற்பதற்குரியவை என்று அறிஞர் ஒப்புதல் அளித்தனர். அதன் பின்னரே அந் நூல்கள் நாட்டில் பரவின.

### உரையில்லாத காலம்

புதிய நூல்கள் தோன்றி அரங்கேறி நாட்டில் பரவிய காலத்தில், அந்நூல்களுக்கு உரைகள் தேவைப்படவில்லை. மூல நூல்களே அனைவரும் கற்றுத் தெளியுமாறு எளியனவாய் இருந்தன. நூலாசிரியர்களின் குரல்கள், அவர்கள் வாழ்ந்த காலத்தின் குரல்களாக ஒலித்தன. இலக்கியக்கலைஞர் தம் காலத்து மக்களுக்காகவே நூல்கள் இயற்றியதால் அவற்றிற்கு அப்போது உரைகள் தேவைப்படவில்லை. இக்கருத்தைப் பேராசிரியர், தொல்காப்பியப் பொருளதிகார உரையில், ''உரையின்றிச் சூத்திரத் தானே, பொருள் நிகழ்ந்த காலமும் உண்டு'' (மரபியல்—98) என்று கூறியுள்ளார்.

**விளங்காத நிலை**

ஒரு சூழலில் தோன்றிய நூல், காலம் செல்லச் செல்லப் பழையதாகி, விளங்காத நிலையை அடைந்தது. நூல் தோன்றிய காலத்தில் வாழ்ந்த மக்களுக்கும், பின்னால் வந்த தலை முறையினர்க்கும் ஏற்பட்ட கால இடைவெளி, பல மாறுதல்களை உண்டாக்கியது. நூலில் உள்ள சொற்களின் பொருள் வேறுபட்டது. நூலாசிரியர் பயன்படுத்திய சொற்களில் சில, பிற்காலத்தில் வழக்கிழந்து மறைந்தன. இலக்கியத்தின் மரபு, கொள்கை, வடிவம் ஆகியவை மாறின. சமுதாயப் பழக்க வழக்கங்கள் வேறுபட்டன. நூல் கூறிய வரலாற்று நிகழ்ச்சிகளில் சில, விளங்காத நிலையை அடைந்தன. இத்தகைய பல மாறுதல்களால் முற்கால நூல்களின் கருத்தைப் பிற்காலத்தவர் அறிந்து கொள்வதற்குக் கற்றறிந்த சான்றோர் உதவி தேவைப்பட்டது.

**ஆசிரியரின் உதவி**

பழங் காலத்தில் கற்றறிந்த சான்றோர்கள், இளைஞர்களுக்குக் கல்வி புகட்டும் பணியை மேற் கொண்டிருந்தனர். அவர்கள் தம் முன்னோர் எழுதிய நூல்களை எடுத்துரைத்துப் பொருள் கூறி விளக்கினர். பழைய நூல்களை விளக்கியவர்கள் ஆசிரியர், ஆசான், கணக்காயர் முதலிய பெயர்களைப் பெற்றனர்.[1] அவர்களிடம் கல்வி பயின்றவர் மாணுக்கர் எனப்பட்டனர்.[2]

ஆசிரியர் பாடம் கூறுவதற்கு முன்னால், மாணுக்கர் நூலில் உள்ள செய்யுட்களைப் பிழையின்றி மனப்பாடம் செய்வது முற்காலத்தில் வழக்கம். அப்பயிற்சி 'பாடம் ஓதுதல்' அல்லது 'பாடம் போற்றுதல்' எனப்பட்டது.[3] மாணுக்கர் மூலத்தை மனப்பாடம் செய்திருந்த போதும், பாடம் கூறிய ஆசிரியர் மூலத்தைக் கூறியே பொருள் உரைத்தனர்.[4]

**மனப்பாடம்**

மாணுக்கர், மூலத்தை மனப்பாடம் செய்தது போலவே, ஆசிரியர் கூறி வந்த பொருளையும் விளக்கத்தையும் மனப்பாடம் செய்து வந்தனர். அவர்கள் நெஞ்சத்தில் மூலமும் உரையும் நன்கு பதிந்திருந்தன. 'விரித்த பொருட்கு எல்லாம் வித்து ஆவது உள்ளம்' (திருமந்திரம் 1998) என்ற திரு மூலரின் பொன்மொழி, நம் முன்னோர்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்தது.

பாடம் கூறும் ஆசிரியர்,

''உரைக்கப்படும் பெருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து'' (நன். பாயிரம்-39)

கல்வி புகட்ட வேண்டும் என்றும்; மாணுக்கன்,

''செவி வாயாக நெஞ்சு களனுக்
கேட்டவை கேட்டவை விடாது உளத்தமைத்துக்.—(நன். பாயிரம்-40)

கல்வி கற்க வேண்டும்' என்றும் நன்னூல் பாயிரம் கூறும் கருத்துக்கள் முற்காலத்துக் கல்வி முறையை நமக்கு அறிவிக்கின்றன.

### உதாரணம் வேண்டாமை

தொடக்க காலத்தில், ஆசிரியர் தம் மாணுக்கருக்குப் பாடம் ஓதிப் பொருள் கூறிய போது மிகுதியான விளக்கம் கூறவில்லை; ஏற்ற உதாரணங்களையும் எடுத்துக்காட்டவில்லை. மாணுக்கரே அவற்றை உய்த்துணர்ந்து கொண்டனர். இதனைப் பேராசிரியர், ''உதாரணம் காட்டல் வேண்டாமையை உணர்ந்து, உரைநடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து நூல்கள்'' என்று கூறுகின்றார் (மரபியல் — 101).

### உரையின் வளர்ச்சி

கற்றறிந்த பெருமக்களிடம் பாடம் கேட்ட மாணுக்கர் கல்வியிற் சிறந்து விளங்கிக் கற்பிக்கும் பணியை மேற்கொண்டனர். அப்போது அவர்கள், தாம் கண்டறிந்த புதிய விளக்கங்களைப் பழைய உரைகளுடன் சேர்த்துக் கொண்டனர்; தகுந்த மேற்கோள்களை இடையிடையே காட்டினர். இவ்வாறு பழைய உரை, பல தலைமுறைகளைக் கடந்து வந்தது. ஒவ்வொரு தலைமுறையினரும் தம் காலத்திற்குத் தேவையான கருத்துக்களை அவ்வுரையில் சேர்த்துக் கொண்டே வந்தனர். இதனுல், தலைமுறை தலைமுறையாகப் பாடம் சொல்லச் சொல்ல நூல்களுக்கு உரிய விளக்கங்கள் பெருகிக் கொண்டே வந்தன.

### மறுப்பும் மரபும்

காலப்போக்கில், முன்னோர் கூறி வந்த விளக்கவுரைகளில் சில பின் வந்தோர்க்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. அதனுல், பழைய உரைகளில் தமக்குப் பொருந்தியவற்றை ஏற்றும், பொருந்தாதவற்றை மறுத்தும் புது உரைகள் கண்டனர். அப்போதும் சிலர், பழைய உரைகளையே போற்றிவந்தனர். இதனுல், உரையாசிரியர்களுக்குள் பரம்பரைத் தொடர்பும், உரைகளுக்குள் மரபு வழிச் சார்பும் ஏற்பட்டன. ஆசிரியர் — மாணுக்கர் என்ற உறவு முறையால் தோன்றிய பரம்பரைத் தொடர்பால், மரபு பிறழாமல் உரைகள் வழங்கிவந்தன. இவ்வாறு உரைகள், வாழையடி வாழையாகக் கற்றவர் நெஞ்சத்தில் நிலைபெற்று வாய்மொழிவாயிலாகவே பரவி வந்தன.

### பட்டோலை கொள்ளுதல்

புலவர்களின் நினைவாற்றலும், உரைத்தோர் நாவும், கேட்டார் செவியும் செய்த உதவியால் வாழ்ந்து வந்த உரைகள், காலப்போக்கில் ஓலைகளில் எழுதப் பட்டன. ஆசிரியர் பாடம் ஓதி, பொருள் விளக்கம் கூறி, கல்வி புகட்டி வந்த போது, அவர்கள் உரைத்தவற்றை எழுதிக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. இவ்வாறு எழுதிக் கொண்ட முறை 'பட்டோலை பிடித்தல்' அல்லது ''பட்டோலை கொள்ளுதல்' என்று பெயர் பெற்றது.[5]

### சொல்லும் எழுத்தும்

ஆசிரியர்கள் கூறியவற்றைப் 'பட்டோலை கொண்டு' பதிவு செய்தபின்னர், கேள்வி முறையால் கல்வி பயின்ற வழக்கம் குறைந்து, எழுதிவைக்கப்பட்ட நூல்களைக் கற்கும் வழக்கம் காலப்போக்கில் ஏற்பட்டது. ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு கல்வி பயின்ற இளம் மாணுக்கர்களைப் பரிபாடல், ''மையாடல்

ஆடல் மழ புலவர்'' — (பரி. — 11:88) என்று குறிப்பிடுகின்றது. அதற்குப் பரிமேலழகர், 'மையோலை பிடித்த இளைய புலவர்' என்று விளக்கம் எழுதியுள்ளார்.

இவ்வாறு, ஆசிரியர்களின் வாய்மொழி வாயிலாக வாழ்ந்து வந்த கல்விச் செல்வங்கள் யாவும், எழுத்து வடிவம் பெற்று நிலையான வாழ்வைப் பெற்றன. மாணக்கர் உலகில் ஒலித்த ஆசிரியர்களின் குரல்கள், அவர்கள் வாழ்ந்த காலத்தையும் இடத்தையும் வென்று சாகாவரம் பெற்றன. ஆசிரியர் பாடம் கூற, அதனை மாணக்கர் கேட்டுப் பொருள் உணர்ந்து கல்வி பயின்ற வழக்கம் குறைந்து, எழுதிவைத்த நூல்களைக் கற்றுப் பயன் பெற்ற முறை, காலப்போக்கில் தோன்றியது. அதனல், கல்வி உலகில் கற்றல் கேட்டல் ஆகிய இருவேறு முறைகளும் நிலவி வந்தன.

இவ்விரு முறைகளையும் பழமொழி நானூறு,

"கற்றுனும் கற்றூர்வாய்க் கேட்டானும் இல்லாதார்
தெற்ற உணரார் பொருள்களை'' — பழமொழி 11.

என்றும்,

"கல்லாதும் கேளாதும் கற்றூர்அவை நடுவண்
சொல்லாடு வாரையும் அஞ்சற்பாற்று'' — பழமொழி 20.

என்றும் குறிப்பிடுகின்றது.

கற்றல் கேட்டல் ஆகிய இருவழிகளில், கேட்டலே சிறந்தது என்ற கருத்து நிலவி வந்தது. இதனை,

கணக்கினை
முற்றப் பகலும் முனியாது இனிதோதிக்
கற்றலின் கேட்டலே நன்று
— பழமொழி 5

என்று பழமொழி நானூறும்,

கற்றிலன் ஆயினும் கேட்க — குறள், 424

என்று திருக்குறளும் கூறுவதால் உணரலாம்.

**சான்றுகள்**

வாய்மொழியாக வழங்கி வந்த உரைகளே பிற்காலத்தில் எழுதப்பட்டன என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன.

இறையனர் களவியலுரை, பல தலைமுறைகளாக வாய் மொழியாய் வழங்கி வந்தது என்பதை அவ்வுரையே பின்வருமாறு கூறுகின்றது.

''மதுரை ஆலவாயிற் பெருமான் அடிகளால் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனரால் உரை கண்டு, குமார சுவாமியால் கேட்கப்பட்டது என்க. இனி உரை நடந்து வந்தவாறு சொல்லுவதும்: மதுரைக் கணக்காயனர் மகனர் நக்கீரனர் தம் மகனர் கீரங் கொற்றனர்க்கு உரைத்தார்; அவர் தேனூர்

கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங்கொற்றனுர்க்கு உரைத்தார்; அவர் மண லூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ் சேந்தனுர்க்கு உரைத்தார்; அவர் செல்லூர் ஆசிரியர் ஆண்டைப் பெருங்குமாரனுர்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத்து ஆசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதவனுர் இள நாகனுர்க்கு உரைத்தார்; அவர் முசிறி ஆசிரியர் நீலகண்டனுர்க்கு உரைத்தார். இங்ஙனம் வருகின்றது உரை''

களவியலுரை வாய் மொழியாக வழங்கி வந்த வரலாற்றை நோக்கும் போது, அவ்வுரை ஆசிரியர் நீலகண்டனுர்க்குப் பின்னர் ஏட்டில் எழுதப்பட்டு எழுத்துவடிவம் பெற்று நிலைபெற்றது என்பது புலனுகின்றது.

ஆழ்வார்களின் திருப் பாடல்களுக்கு உரைகள், நாதமுனிகள் காலம் முதல் இராமாநுசர் காலம் வரை, பல தலைமுறைகள் வாய் மொழியாகவே வழங்கி வந்தன.

ஆழ்வார்களின் திருப்பாடல்களைத் தேடிக் கண்டு பிடித்து, தொகுத்து வழங்கியவர் நாதமுனிகள், அவர் மைந்தர் ஈசுரபட்டர், பேரர் ஆளவந்தார், ஆளவந்தாரின் சீடர் பெரிய திருக்கோட்டி நம்பி, பெரிய திருமலை நம்பி, திருக் கச்சி நம்பி முதலிய பதினுறு பேர்கள். இவர்களில் பெரிய திருமலை நம்பியின் சகோதரி மைந்தரே இராமானுசர். இராமாநுசருக்குச் சீடர்கள் பலர் தோன்றி னர். அவர்களில் கூரத்து ஆழ்வான் குறிப்பிடத்தக்கவர். அவர் மைந்தர் பராசுர பட்டர். நாதமுனிகள் காலம் முதல் பராசுர பட்டர் காலம் வரை ஆழ்வார்களின் திருப்பாடல்களுக்கு உரைகள் வாய்மொழியாகவே வழங்கிவந்தன. பின்னர் இராமானுசர் காலத்தில் தான் அவ்வுரைகள் எழுத்து வடிவம் பெற்றன.

நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிக்கு ஒன்றன் பின்ஒன்முகத் தோன்றிய விளக்க வுரைகள், திருவரங்கத்தில் வைணவச் சான்ருேர் பாகவதர் திருக் கூட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுகளே ஆகும். அச்சொற்பொழிவு களைக் கேட்டு இன்புற்ற சீடர்கள் 'ஒன்றும் தப்பாமல், பதருமல் கேட்டுத் தரித்து, கால் கொம்பு சுழி ஏருமல் இராமுற்ற எழுதி' வைத்துப் போற்றினர்.

இவ்வாறே, பழம் பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திற்கு, இளம் பூரணர் காலத்திற்கு முன்னர், பல உரைகள் வாய்மொழியாகப் பலரால் பல வேறு இடங்களில் கூறப்பட்டுவந்தன. தொல்காப்பியத்திற்கு முதன் முதலில் எழுத்து வடிவில் உரையை வழங்கி ''உரையாசிரியர்'' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்ற இளம்பூரணர், தமக்கு முன் தோன்றி வாய்மொழியாக வழங்கி வந்த மற்ற உரைகளைப் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

கம்பராமாயணத்திற்கு விளக்கவுரை, பல நூறு ஆண்டுகளாக வாய் மொழியாகவே வழங்கி வந்தது என்பதை 'விநோதரச மஞ்சரி' என்னும் உரை நடை நூல் பின் வருமாறு கூறுகின்றது:

''கம்பரையும் அவருடைய மாணக்கரையும் விடுத்து, பல பெயர்கள் இராமாயணத்திற்குச் சம்பிரதாயமாகவும் சாதுரியமாகவும் உரை கேட்டார்கள். அப்புறம் அப் பல பெயரையும் அடுத்துப் பற்பலர் பாடங் கேட்டார்கள். இந்தப்

படி, அதன் பின்பும் காலக் கிரமத்தில் அனேகர் கர்ண பரம்பரையாக இராமாய ணத்திற்கு உரை கேட்டு வந்தார்கள். கொஞ்ச காலத்திற்கு முன்பு அவ்வாறு கர்ண பரம்பரையாகப் பாடங்கேட்டு, கிரமமாய்ப் போதிக்கத் தக்க வல்லமை பெற்றிருப்பவர்கள் ஆர் ஆர் என்னில், தென் தேசத்தில் வசித்திருந்த பெத்த பெருமாள் பிள்ளை என்பவரும், சீகாழி அருணசலக் கவிராயரும், மயிலை சீனி வாசப் பிள்ளையும், சேதுபதியின் வக்கீலாகிய சோமசுந்தரப் பிள்ளையும், தஞ்சாவூர் ஸமஸ்தான வித்துவான் இராமசாமி கவிராயரும், தொல்காப்பிய வரதப்ப முதலியாரும், காலேஜ் திருவேங்கடாசல முதலியாரும், திருத்தணிகைச் சரவணப் பெருமாள் கவிராயரும், புதுவைக் குறள் வேங்கடாசல உபாத்தியாயரும், காஞ்சிபுரம் அருணசல தேசிகரின் பிதாவாகிய சண்முக கவிராயரும், திருநீர்மலைக் காளிங்க ராய பிள்ளையும் மற்றும் சிலரே. இக்காலத்திலும் அப்படிப்பட்ட சாமர்த்தியமுடைய சிலர், சென்னை ராஜதானி முதலான ஸ்தானங்களில் இருக் கிருர்கள்''.[6]

பத்தொன்பதாம் நூற்ருண்டில் வாழ்ந்த மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை பாடம் சொல்லி, வாய்மொழி வாயிலாகக் கல்வி பரப்பிய பழைய மரபைப் போற்றி வந்தார். அவர், தம் மாணுக்கர் பலருக்குக் கூறிவந்த நூல் களின் உரை விளக்கங்கள் எழுத்து வடிவம் பெற்றன. இச் செய்தியை அவரது மாணுக்கர்களுள் ஒருவரான டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் பின்வருமாறு கூறியுள்ளார்.:

''கம்பர் அந்தாதி, முல்லை அந்தாதி முதலிய நூல்களுக்கு இவர் (மீனுட்சி சுந்தரம் பிள்ளை) சொல்லி எழுதுவித்த உரைகளே பின்பு மதுரை இராமசாமிப் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டன. காஞ்சிப் புராணம், தணிகைப் புராணம், திருவானைக்காப் புராணம் முதலியவற்றிற்கு இவர் பாடம் சொன்ன உரையே பிற்காலத்தில் தமிழ் நாட்டில் வழங்குவதாயிற்று''[7]

**காலத்தின் அடிச்சுவடு**

வாய்மொழி வாயிலாக வளர்ந்து வந்த உரைகள் ஏட்டில் எழுதப் பட்டபோது பாடம் கூறிய முறையிலேயே அமைந்தன. ஆசிரியர் வகுப்பில் ஒரு கருத்தைக் கூறுதல், அதைக் கேட்ட மாணுக்கர் ஐயங்களை எழுப்புதல், அவற்றிற்கு ஆசிரியர் விளக்கம் கூறுதல் — ஆகிய முறையிலேயே உரைகள் அமைந்தன. ஒரு நூலுக்கு முதன் முதலாகத் தாமே ஏட்டில் உரை எழுதியவர் களும் பாடம் கூறும் மரபைத் தம்மையும் அறியாமல் மேற்கொண்டனர்.

வாய்மொழியாக வழங்கி வந்த உரைகளின் செல்வாக்கு, எழுத்திலும் நிலைபெற்றது என்பதற்கு இறையனுர் அகப்பொருளுரை, சிறந்த சான்ருக உள்ளது. தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குச் சேனுவரையர் எழுதியுள்ள உரையிலும், பேராசிரியர் திருக் கோவையாருக்குத் தந்துள்ள உரையிலும், காளிங்கர் திருக் குறளுக்குச் செய்துள்ள உரையிலும் பல இடங்களில் வாய் மொழிக் கல்வி முறை யின் அடிச்சுவடு பதிந்துள்ளன.

இறையனுர் அகப்பொருள் உரையில் உள்ள பின்வரும் பகுதி, பாடம் கூறும் முறையில் அமைந்துள்ளது: ''ஐந்திணை என்பதன் முன்னர், களவு என்னும்

சொல் எத்திறத்தான் வந்தது? ஒரு சொல்முன் ஒரு சொல் வருங்கால் பயனிலை வகையானும், தொகை நிலை வகையானும், எண்ணு நிலை வகையானும் என மூன்றினுள் ஒன்று பற்றியன்றே வருவது; அவற்றுள் இஃது எவ்வகையான் வந்ததோ எனின், தொகை நிலை வகையான் வந்தது என்பது. தொகை தாம் பல; அவற்றுள் இஃது எத்தொகையான் வந்ததோ எனின், வேற்றுமைத் தொகையான் வந்தது என்பது. அவ்வேற்றுமைத் தொகைதான் பல; அவற்றுள் இஃது எவ்வேற்றுமைத் தொகையோ எனின், ஏழாம் வேற்றுமைத் தொகை என்பது. அவ்வேழாம் வேற்றுமை உருபு தாம் பல; அவற்றுள் யாது தொக்கது எனின், 'உள்' என்பது தொக்கது. ஐந்திணையுள் களவு என்பதாயின், ஐந்திணை யுள்ளும் களவு வேறாகாதோ, குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் அவ்விடத் தின் வேறுயாது போல எனின், ஏழாம் வேற்றுமை இடத்தையும் இடத்து நிகழ் பொருளையும் வேறு உணரவும் நிற்கும், வேறன்றி உணரவும் நிற்கும்; அவற்றுள் வேறு உரை நின்ற வழிக் காட்டிக் கடாவினாய்; வேறின்றி உணர நின்ற வழிக் காட்டியக் கால் அது போலக் கொள்க''.

இவ்வுரைப் பகுதியை, பாடம் கூறும் முறையில் — மாணவன் எழுப்பும் வினாவிற்கு ஆசிரியர் விடை கூறும் வகையில் பின்வருமாறு அமைக்கலாம்:

மாணாக்கர்: 'ஐந்திணை' என்பதன் முன்னர், களவு என்னும் சொல் எத்திறத்தான் வந்தது?

ஆசிரியர்: ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும், எண்ணு நிலை வகையானும் என மூன்றினுள் ஒன்று பற்றி வரும்.

மாணாக்கர்: அவற்றுள், இஃது எவ்வகையான் வந்தது?

ஆசிரியர்: தொகை நிலை வகையான் வந்தது!

மாணாக்கர்: தொகை தாம் பல; அவற்றுள் இஃது எத்தொகையான் வந்தது?

ஆசிரியர்: வேற்றுமைத் தொகையான் வந்தது?

மாணாக்கர்: அவ்வேற்றுமைத் தொகை தான் பல; அவற்றுள் இஃது எவ்வேற்றுமைத் தொகை?

ஆசிரியர்: ஏழாம் வேற்றுமைத் தொகை.

மாணாக்கர்: அவ் வேழாம் வேற்றுமை உருபுதாம்பல; அவற்றுள் யாது தொக்கது?

ஆசிரியர்: உள் என்பது தொக்கது.

மாணாக்கர்: 'ஐந்திணையுள் களவு', என்பதாயின் 'ஐந்திணையுள்ளும் களவு வேறு ஆகாதோ — குடத்துள் விளக்கும், தடற்றுள் வாளும் அவ்விடத்தின் வேறுயது போல?

ஆசிரியர்: ஏழாம் வேற்றுமை, இடத்தையும் இடத்து நிகழ் பொருளை யும் வேறு உணரவும் நிற்கும், வேறன்றி உணரவும் நிற்கும்;

அவற்றுள் வேறு உணர நின்ற வழிக் காட்டியக் கால் அது போலக் கொள்க.

மாணவர் — ஆசிரியரிடையே நிகழும் இத்தகைய உரையாடலே அன்றி வகுப்பில் பாடம் நடைபெறும் போது மாணுக்கரிடையே நிகழும் கலந்துரையாடலும் களவியலுரையில் இடம் பெற்றுள்ளது. ஆசிரியர் பாடம் சொல்லும் போது, வகுப்பில் உள்ள மாணுக்கரும் ஒருவர் வினு எழுப்புதல் அவ்வினுவிற்கு மற்ற மாணுக்கர் பலவேறு விடைகள் கூறுதல் அவ்விடைகளில் சரியானதை ஆசிரியர் சுட்டிக் காட்டி விளக்குதல் — ஆகியவற்றைப் பின்வரும் பகுதியில் காணலாம்: ''அன்பின் ஐந்திணைக் களவு அந்தணர் அருமறை என அமையாதோ, எனப்படுவது என்றது எற்றிற்கோ எனின், செய்யுள் இன்பத்தின் பொருட்டு வந்தது என்னும் ஒருவன், அற்றன்று, அதனுன் ஒரு பொருள் உரைப்பல் என்னும் ஒருவன், அதனுன் ஒருபொருள் உரைப்பான் பக்கம் வலியுடைத்து. அஃது யாதோ எனின், களவு என்றற்குச் சிறப்புடைத்து என்றவாறு... இங்குப் பிறவும் களவுண்மை சொல்லி, அக்களவுகட்கு எல்லாம் இக்களவு சிறப்புடைத்து, சுவர்க்கம் வீடு பேறுகளை முடிக்கும் ஆகலான் ''எனப்படுவது' என்று சொல்லிச் சிறப்பிக்கப்பட்டது. அது பாயிரத்துள்ளும் உரைத்தாம்.''

இப்பகுதியைப் பின் வருமாறு கலந்துரையாடல் வடிவில் அமைக்கலாம்:

| | |
|---|---|
| மாணுக்கன் 1 | 'அன்பின் ஐந்திணைக் களவு அந்தணர் அருமறை' என அமையாதோ? 'எனப்படுவது' என்றது எற்றிற்கோ? |
| மாணுக்கன் 2 | (அது) செய்யுள் இன்பத்தின் பொருட்டு வந்தது! |
| மாணுக்கன் 1 | அற்றன்று! அதனுன் ஒரு பொருள் உரைப்பல்! |
| ஆசிரியர் | அதனுன் ஒரு பொருள் உரைப்பான் பக்கம் வலியுடைத்து. |
| மாணுக்கன் 1 | அஃது யாதோ? |
| மாணுக்கன் 3 | களவு என்றற்குச் சிறப்புடைத்து. |
| ஆசிரியர்: | இங்கு பிறவும் களவுண்மை சொல்லி, அக் களவுகட்கு எல்லாம் இக்களவு சிறப்புடைத்து. சுவர்க்கம் வீடு பேறுகளை முடக்கும் ஆகவான் 'எனப்படுவது' என்று சொல்லி சிறப்பிக்கப்பட்டது. அது பாயிரத்துள்ளும் உரைத்தாம். |

இத்தகைய பகுதிகள் வேறு சில உரைகளில் பல இடங்களில் உள்ளன.

### எழுத்தும் சொல்லும்

எழுத்துவடிவில் உள்ளனவற்றை உரை, கட்டுரை என்று கூறும் மரபு, அவை முதலில் வாய் மொழியாகவே வழங்கி வந்தன என்பதை நினைவூட்டுகின்றன. எழுத்து வடிவில் தம் உரைகளைத் தந்த உரையாசிரியர்களும், 'இச் சூத்திரம் என்னுதலிற்றோ எனின், முன்னர்க் கூறினும், பின்னர்க் கூறுதும், என்று வினவின், நன்று சொன்னுய், அறியாது கடாயினுய், என்று கூறுவாரும் உளர், வல்லார் வாய்க் கேட்டு உணர்க' — என்று இடையிடையே எழுதியுள்ளனர்.

என்க, என்றவாறு எனப்படுவது, கூறுக — போன்ற சொற்களை அவர்கள் ஆண்டுள்ளனர். இக்காலத்தில் கட்டுரை எழுதுவோரும் இடையிடையே 'ஏனென்றால், எப்படி எனில், ஏன் என்று கேட்டால், விளக்கமாகக் கூறினால்' — என்று எழுதி வாய் மொழியின் செல்வாக்கை நிலை நாட்டி வருகின்றனர்.

**எழுதப்பட்ட உரைகளின் வளர்ச்சி**

ஒரு நூலுக்கு வாய் மொழியாகத் தோன்றிய உரைகள் மறைந்தபோதும், அவ்வப்போது தோன்றி புதிய நூல்களுக்கு உரைகள் தோன்றாத போதும், அந் நூல்களுக்கு முதன் முதலில் உரை எழுத முயன்றவர்கள் பெரிய அளவில் விளக்க வுரை எழுதவில்லை. அவர்கள், செய்யுளில் உள்ள அருஞ் சொற்களுக்குப் பொருள் எழுதினர்; சொற்களைக் கொண்டு சுட்டி வினைமுடிவு காட்டி, இன்றியமையாத வரலாற்றைக் குறிப்பு வரைந்து, சில பகுதிகளுக்கு நயம் மிகச் சுருக்கமாய் உரை எழுதினர். சிலப்பதிகாரத்திற்கு முதலில் அரும் பதவுரையே தோன்றியது. பதிற்றுப் பத்தின் பழையவுரை, குறிப்புரையாகவே உள்ளது. அகநானூற்றின் பழையவுரை (90 பாடல்களுக்கு மட்டும் உள்ளது) சுருக்கமாகவே உள்ளது. ஐங்குறு நூற்றின் பழையவுரை, சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதில் வெற்றி கண்டுள்ளது. பரிபாடலுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையில் மிகுதியான விளக்கங்கள் இல்லை. இவையாவும், ஒரு நூலுக்கு முதன் முதலில் உரை எழுதத் தொடங்கியவர்கள் எடுத்த எடுப்பிலேயே பெரிய அளவில் விளக்கவுரைகளை எழுதிவிடவில்லை என்பதை நமக்கு அறிவிக்கின்றன.

பல நூல்களுக்குக் குறிப்புரை எழுதியவர்களைப் பற்றிய வரலாறு தெரியவில்லை. அவர்கள் பெயர், இருந்த இடம், வாழ்ந்த காலம், மேற்கொண்ட சமயம் முதலியவை தெரியவில்லை 'ஊர் வேண்டேன்; பேர் வேண்டேன்;' என்று யாவற்றையும் துறந்து வாழ்ந்து தமிழ்த்தொண்டு ஆற்றிய பெருமக்கள் அவர்கள்.

ஒரு நூலுக்குக் குறிப்புரை தோன்றிய பின், காலம் செல்லச் செல்ல அந்நூலைப் பற்றிய கருத்துக்கள் வளர்ந்தன. குறிப்புரை மெல்ல மெல்ல விரிவடைந்து விளக்கவுரை ஆயிற்று. உரை வளர்ந்தபோது பல மேற்கோள்கள் இடம் பெற்றன.

இவ்வாறு ஒரு நூலுக்குச் சிறிய அளவில் தோன்றிய குறிப்புரை, காலப் போக்கில் விளக்கவுரை ஆயிற்று.

இத்தகைய வளர்ச்சியைத் தெளிவாக எடுத்துக் காட்டும் சிறந்த சான்றுகளாக, நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழி உரைகள் விளங்குகின்றன. திருவாய் மொழிக்கு முதல் உரையாக 6,000 படி தோன்றியது; அவ்வுரை பின்னர் 9,000 படி ஆயிற்று; பின்னர் 24,000 படி ஆயிற்று; பிறகு அது 36,000 படியாக வளர்ந்தது. இத்தகைய வளர்ச்சி நிலையை எல்லா உரைகளின் வரலாற்றிலும் தெளிவாகக் காண முடிகின்றது.

**வலிமையுள்ளவை வாழ்தல்**

வலிமையுள்ளவை காலத்தை வென்று வாழும் என்ற உண்மையை, உரைகளின் வரலாறும் உணர்த்துகின்றது. ஒரு நூலுக்கு, பல உரைகள்

தோன்றிய பின்னர், விளக்கவுரை தோன்றுகிறது. அது, தனக்கு முன் தோன்றிய உரைகளின் கருத்துக்களை எல்லாம் திரட்டித் தரும் வாய்ப்பைப் பெறுகின்றது. எல்லா உரைகளிலிருந்தும் நல்லவற்றை மேற்கொள்ளவும், தவருன கருத்தைத் திருத்தவும் தேவையற்ற கருத்தை விலக்கவும் மாறுபட்ட கருத்தை ஆய்ந்து நல்ல முடிவுக்கு வரவும் விளக்கவுரைக்கு வாய்ப்பு உண்டாகிறது. மேலும் விளக்க வுரை எழுதுவோர் தம் நுண்மான் நுழை புலம் வெளிப்படும் வகையில் நன்கு சிந்தித்து, சிறந்த உத்திகளைக் கையாண்டு நல்ல முறையில் எழுதுகின்ருர். உரை யாசிரியரின் தனித் தன்மைகள் பல, விளக்க வுரையில் இடம் பெறுகின்றன. அதனுல் புதியதாய்த் தோன்றிய உரைகளை எல்லாம் வெல்லும் ஆற்றலைப் பெறு கின்றது; கல்வி உலகில் செல்வாக்குப் பெற்றுக் காலங் கடந்து நிற்கின்றது. இவ்வாறு வலிமையுள்ள உரைகள் வாழ்வு பெற்று நிலைத்து நிற்பதற்குச் சான்றுகள் பல காட்டலாம்.

இளம் பூரணர் தொல்காப்பியத்திற்கு எழுதிய உரைக்குப் பின் தோன்றிய சேனுவரையர், பேராசிரியர், நச்சினுர்க் கினியர் ஆகியோரது உரைகள் சிறப்பிடம் பெற்றன. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிக்கு இறுதியில் தோன்றிய ஈடு (36,000 படி) முதன்மை பெற்றது. திருக்குறளுக்கு ஒன்பது உரைகளுக்குப் பின் தோன்றிய பரிமேலழகர் உரை நிலை பெற்றது. மயிலை நாதர், சங்கர நமசிவாயர் ஆகிய இருவர்க்கும் பின் தோன்றிய சிவஞான முனிவர் இயற்றிய நன்னூல் விருத்தியுரை செல்வாக்குப் பெற்றது. சிவஞான போதத் திற்குப் பல உரைகள் தோன்றிய பின்னர் எழுந்த 'சிவ ஞான பாடியம்' உயர்வு பெற்றது.

### உரைகளின் மறைவு

ஒரு நூலுக்கு மிகச் சிறந்த உரை தோன்றி நிலை பெற்ற பின், அந்த உரை யையே அனைவரும் போற்றிக் கற்றனர். ஏனைய உரைகள் புறக்கணிக்கப்பட்டன.

இறையனுர்களவியல் நூலுக்கு நக்கீரர் உள்ளிட்ட பலர் உரை எழுதினர் என்றும், நக்கீரர் உரையே சிறந்தது என்று தேர்ந்தெடுக்கப்பட்டது என்றும் களவியலுரை கூறுகின்றது. சிறந்ததாகக் கருதப்பட்ட நக்கீரர் உரை தவிர ஏனைய உரைகள் புறக்கணிக்கப்பட்டன. அதனுல் அவை மறைந்து போயின. தொல்காப்பியத்திற்கு முதன் முதலில் தோன்றிய இளம்பூரணர் உரை தேடிக் கண்டுபிடிக்கும் நிலையை எய்திற்று. பொருளதிகாரத்தின் முன் ஐந்து இயல் களுக்குப் பேராசிரியர் உரை மறைந்து போயிற்று. திருவாய் மொழி ஈட்டிற்கு முன் தோன்றிய உரைகள் அருகிவிட்டன. பரிமேலழகர்க்கு முன் தோன்றிய திருக்குறள் உரைகளில் சில மறைந்து போயின; சில தேடிக் கண்டு பிடிக்க வேண்டிய நிலையை எய்தின. நன்னூலுக்கும் சிவஞான போதத்திற்கும் சிவஞான முனிவர் உரை எழுதுவதற்குமுன், அந்நூலுக்கு இருந்த உரைகள் மறையும் நிலையை அடைந்து, பின் தேடி எடுக்கப்பட்டன.

### உரைக்கு உரை

மூல நூலுக்கு உரை எழுதியதைப் போலவே, உரைக்கும் உரை எழுத வேண்டிய நிலை ஏற்பட்டதை உரைகளின் வரலாறு நமக்கு அறிவிக்கின்றது.

நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களை விளக்கும் அரும் பதவுரைகள் சில தோன்றியுள்ளன.

திருக்குறள் பரிமேலழகர் உரைக்குப் பிற்காலத்தில் பல விளக்கவுரைகள் எழுதப்பட்டுள்ளன. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமேனி இரத்தின கவிராயர் 'நுண்பொருள்மாலை' என்ற பெயரில் பரிமேலழகர் உரைக்கு விளக்கம் எழுதியுள்ளார். 1869-ஆம் ஆண்டில் பரிமேலழகர் உரையைப் பதிப்பித்த சரவணப் பெருமாள் ஐயர், பல விளக்கக் குறிப்புகளை எழுதியுள்ளார். 1885-இல் முருகேச முதலியார் பரிமேலழகர் உரைக்கு நல்ல விளக்கம் எழுதி வெளியிட்டுள்ளார். பின்னர், இராமாநுசாசாரியர், கோ. வடிவேல் செட்டியார் (1919), அரசஞ் சண்முகனார், குப்புசாமி முதலியார், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர் ஆகியோர் பரிமேலழகர் உரைக்கு விரிவுரை எழுதியுள்ளனர்.

தொல்காப்பிய உரைகளுக்கும் இத்தகைய விளக்கவுரைகள் தோன்றி யுள்ளன. தொல்காப்பியம் முழுவதையும் பழைய உரைகளுடன் வெளியிட்ட ஈழத்து அறிஞர் கணேச ஐயர் பல வகை விளக்கங்களை அடிக்குறிப்பிலும் பிற் சேர்க்கையிலும் தந்துள்ளார். எழுத்ததிகாரம் இளம் பூரணர் உரைக்கு வேங்கடராஜுலு ரெட்டியார், மயிலம் சிவலிங்கனார், அடிகள் ஆசிரியர் ஆகியோர் விளக்கம் எழுதியுள்ளனர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், தமிழறிஞர்கள் பூவராகம்பிள்ளை, தேவநேயப்பாவாணர், கு. சுந்தரமூர்த்தி ஆகியவர்களைக் கொண்டு விளக்கம் எழுதித் தொல்காப்பிய உரைகளை வெளியிட்டுள்ளது.

### செய்யுள் வடிவ உரைகள்

உரை நடையில் மட்டுமன்றி, செய்யுள் வடிவிலும் சில உரை நூல்கள் தோன்றின. இலக்கிய வகைகள் யாவற்றையும் உரை நடையிலேயே எழுதிக் கற்று வரும் நமக்கு இச் செய்தி வியப்பு அளிப்பதாக இருக்கலாம். ஆனால் எல்லாவற்றையும் செய்யுளில் எழுதி மனப்பாடம் செய்து கல்வி கற்ற காலத்தில் செய்யுள் வடிவு உரைகள் புதுமையாகத் தோன்றவில்லை.

செய்யுள் வடிவில் தோன்றிய உரைகளைப் பற்றி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் பின் வருமாறு கூறியுள்ளார்.:

''ஒரு செய்யுள் நூலுக்கு வசனத்தில் உரை இயற்றுவதோடு செய்யுள் உருவத்திலேயே உரை இயற்றுவதும் உண்டு. இது, வடமொழியில் பெருவழக்கு. தமிழ்நூல்களிலும் சிவஞான போதத்திற்கு உரிய உதாரண வெண்பாக்களும், சித்தியார் முதலியனவும் உரை நிலையிலேயே உள்ளன. தேவாரப் பதிகங்களில் பாசுரம் முதலிய சிலவற்றிற்கு, பெரிய புராணத்தில் சேக்கிழார் உரை விரித்துச் சொல்கின்றார். இவற்றைப் போலவே திருக்குறளுக்கும் செய்யுள் உருவத்தில் உரை யுண்டு. தனியே குறளுரை என்னும் பெயர் பெறாவிட்டாலும் அவை உரைகளின் தன்மையை உடையனவே''[8]

அகநானூற்றுக்குப் பழங்காலத்தில், அகவற்பாக்களால் ஆன உரை ஒன்று இருந்தது. இச் செய்தியினை உரைச் சிறப்புப் பாயிரம், ''இத் தொகைக்குக்

கருத்து அகவல்லால் பாடினன், இடையள நாட்டு மணக்குடியான் பால்வண்ண தேவனுன வில்லவ தரையன்'' என்று கூறுகின்றது.

ஏதேனும் ஒரு குறட்பாவை வெண்பாவின் இறுதியில் வைத்து, அக்குறட் பாவின் கருத்தை விளக்குதற்கு ஏதேனும் ஒரு கதையையோ, வரலாற்றையோ முதல் இரண்டு வரிகளில் கூறும் வழக்கம் இலக்கிய உலகில் பிற்காலத்தில் தோன்றியது. இத்தகைய நூல்களை, திருக்குறளுக்குச் செய்யுள் வடிவில் தோன்றிய உரைகளாகக் கருதவேண்டும் என்பது, டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரின் கருத்தாகும். அவர், தம் கருத்தைப் பின் வருமாறு விளக்கியுள்ளார்.:

''இரங்கேச வெண்பா, சிவசிவ வெண்பா, தினகரவெண்பா, வடமலை வெண்பா, சோமேசர் முதுமொழிவெண்பா முதலியன திருக்குறளுக்கு உதாரணம் கூறும் நூல்கள். உரைவகைகளிலே உதாரணம் கூறுதலும் ஒன்று ஆதலின், முற்கூறிய நூல்கள் திருக்குறளின் உரைநூல்கள் என்றே கூறல் தகும்''.[9]

இவையே யன்றி, திருக்குறளுக்கு உதாரணம் கூறும் வகையில் பல நூல்கள் தோன்றியுள்ளன. சினேந்திர வெண்பா, வடமலை வெண்பா, திருமலை வெண்பா, முதுமொழி மேல்வைப்பு, திருத்தொண்டர்மாலை, வள்ளுவர் நேரிசை, முருகேசர் முதுநெறி வெண்பா, அளங்கேசவெண்பா திருக்குறட் குமரேச வெண்பா ஆகிய நூல்கள் வெண்பா யாப்பில் தோன்றியுள்ளன. திருப்பல்லாணி மாலை வேறு யாப்பில் உருவாகியது.

திருக்குறள் கருத்தைச் செய்யுளில் விளக்கிக் கூறும் பணியிலும் புலவர் சிலர் ஈடுபட்டுள்ளனர். குமர குருபரர், பல குறட்பாக்களின் கருத்தை ''நீதி நெறி விளக்கம்' என்னும் நூலில் தந்துள்ளார். திருக்குறளின் கருத்தை விருத்தப் பாக்களில் தருகின்ற பழைய நூல் ஒன்றும் உள்ளது. இருபதாம் நூற்றுண்டில் திருக்குறள் அகவல், குட்டிக் குறள், திருக்குறள் இசைமாலை ஆகியவை, திருக் குறளின் கருத்தை பல வேறு யாப்பில் உருவாக்கித் தந்துள்ளன.

திருக்கோவையாரில் உள்ள நூறு பாடல்களின் பொருளை அகவலில் அமைத்துக் கல்லாடம் என்னும் அகப்பொருள் நூலைக் கல்லாடர் இயற்றி யுள்ளார்.

15-ஆம் நூற்றுண்டில், ஆசிரிய நிகண்டு இயற்றிய ஆண்டிப்புலவர் நன்னூலுக்கு விருத்தப்பாவில் உரை எழுதியுள்ளார். ஆசிரிய நிகண்டின் பாயிரம் இச் செய்தியைக் கூறுகின்றது. குருஞான சம்பந்தர், ஞானவரண விளக்கம் என்ற பெயரில் சிவஞான சித்தியாரின் சூத்திரக் கருத்துக்களைச் செய்யுளில் விளக்கியுள்ளார்.

செய்யுள் வடிவில் உரை எழுதும் வழக்கம் இருபதாம் நூற்றுண்டிலும் உள்ளது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், குறுந்தொகைப் பாடல்கள் சில வற்றிற்கு, எளிய நடையில் அமைந்த அகவற் பாக்களில் விளக்கம் தந்துள்ளார். அரசவைக் கவிஞர் கண்ணதாசன் முத்தொள்ளாயிர வெண்பாக்கள் சிலவற்றிற்கு, அகவலில் விளக்கவுரை செய்துள்ளார்.

**நூலாசிரியரே எழுதிய உரைகள்**

புலவர் ஒருவர் எழுதிய நூலுக்கு அவருக்குப் பின் வந்தோர் உரை எழுதியதற்கு மாருக, நூல் இயற்றியவரே உரை எழுதும் வழக்கம் ஏற்பட்டது. இவ்வழக்கம், வடமொழியாளரைப் பின்பற்றித் தோன்றியது என்பதை, பிர யோக விவேகம் ''வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்'' என்று கூறுவதால் அறியலாம்.

நூலாசிரியர் தம் நூலுக்குத் தாமே உரை எழுதியதற்குச் சில காரணங்கள் உள்ளன. ஒரு நூலுக்குப் பல உரைகள் தோன்றியும் அந்நூலின் கருத்து நன்கு விளங்காமல் இருந்த நிலையைக் கண்ட புலவர்கள், தம் நூலுக்குத் தாமே உரை இயற்றினர். நூலாசிரியர்கள் தம் காலத்திலேயே தாம் இயற்றிய நூல்கள் தவருக உணரப்பட்டதைக் கண்டு நூலாசிரியர்களே தம் நூலுக்கு உரையையும் இயற்றினர்.

தமிழ்மொழியில், முதன் முதலில் நூலாசிரியரே உரை எழுதும் வழக்கத் திற்கு அடிகோலியவர், புறப்பொருள் வெண்பாமாலை இயற்றிய ஐயனரிதனர். அவர் புறப்பொருள் இலக்கணத்தைக் கூறும் சூத்திரங்கள் இயற்றி, அவற்றின் கீழே துறைகளை விளக்கும் கொளுக்களை அமைத்து ஒவ்வொரு துறையினையும் விளக்கும் வெண்பா ஒன்றையும் இயற்றியுள்ளார். தாம் வகுத்த புறப்பொருள் இலக்கணத்திற்குத் தாமே மேற்கோள் செய்யுளையும் இயற்றியுள்ளார். இவ்வாறே கி. பி. 12-ஆம் நூற்ருண்டில் தண்டியலங்கார ஆசிரியர், பல அணிகளுக்கு ஏற்ற உதாரணச் செய்யுட்களை இயற்றித் தம் நூலில் சேர்த்துள்ளார். இதனை, ''தண்டியாசிரியர் மூலோதாரணம் காட்டினுற் போல, யாமும் உரை எழுதியல்லது மூலோதாரணமும் காட்டினும்'' என்று பிரயோக விவேகம் கூறுகின்றது.

சிவஞானபோதம் இயற்றிய மெய்கண்ட தேவர், தாம் இயற்றிய நூலிலுள்ள 12 சூத்திரங்களுக்கும் பொழிப்புரையும் இயற்றியுள்ளார்.

கி. பி. 13-ஆம் நூற்ருண்டின் இறுதியில் நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம் என்னும் இலக்கண நூலை இயற்றி அதற்குத் தாமே உரையும் எழுதினர். இச்செய்தியை அந்நூலின் சிறப்புப்பாயிரம்,

''அகப்பொருள் விளக்கம் என்றதற்கொருநாமம்
புலப்படுத் திருளறப் பொருள் விரித் தெழுதினன்''

என்று கூறுவதால் அறியலாம்.

17-ஆம் நூற்ருண்டில் சுப்பிரமணிய தீட்சிதர், பிரயோக விவேகம் என்னும் இலக்கண நூலை இயற்றி அதற்குத் தாமே உரையும் எழுதினர். இச் செய்தியை அவரே பின்வருமாறு கூறுகின்ருர்:

''வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார். இந்நூலும் வடநூலைத் தற்பவமாகச் செய்தலான், யாமும் பதிகமும் உரையும் செய்து உதாரணம் காட்டினும்''.

இவ்வாறே இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகரும், இலக்கணக் கொத்து இயற்றிய சாமிநாத தேசிகரும் தம் நூல்களுக்குத்தாமே உரைகள் எழுதியுள்ளனர்.

வீராமாமுனிவர், தொன்னூல் விளக்கம் என்னும் இலக்கண நூலை இயற்றி, உரையும் செய்தார்.

இருபதாம் நூற்றுண்டிலும், நூலாசிரியரே தம் நூல்களுக்கு உரைகள் இயற்றியுள்ளனர். பாரிகாதை இயற்றிய ரா. இராகவ ஐயங்கார், குமரேச வெண்பா இயற்றிய செகவீரபாண்டியனுர், புதிய ஆத்திசூடி இயற்றிய பாரதி தாசன் ஆகியோர் தம் நூல்களுக்குத் தாமே உரைகளையும் செய்துள்ளனர்.

**மறுப்புரை**

ஒரு நூலுக்கு உரை எழுதுவோர், தமக்கு முன் அந்நூலுக்கு உரை கண்டோரைச் சில இடங்களில் மறுப்பதுண்டு. ஆனுல் ஒரு நூலையே மறுத்து ஓர் உரை தோன்றியுள்ளது.

திருவாரூர் வைத்தியநாத தேசிகர் எழுதிய 'இலக்கண விளக்கம்' என்னும் நூலை மறுத்து சிவ ஞான முனிவர் 'இலக்கண விளக்கச் சூருவளி' என்னும் பெயருடன் மறுப்புரை ஒன்றை இயற்றியுள்ளார்.

**வசனம்**

19-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில், செய்யுள் வடிவில் உள்ள புராண இதிகாசக் கதைகளை உரை நடையில் தரும் முயற்சி தோன்றியது. இராமாயணம், பாரதம், பெரிய புராணம் கந்த புராணம், ஆகியவற்றைப் பொதுமக்களிடம் பரப்பும் பணியில் சிலர் ஈடுபட்டனர். எழுதப்படிக்கத் தெரிந்து சிறிதளவு கல்வியறிவு உடையவரும் கற்றுப் பயனடையும் வகையில், செய்யுளின் கருத்தைத் தொகுத்து 'வசனம்' என்ற பெயரில் அவர்கள் எழுதினர்.

இந்த நன் முயற்சியின் பயனுய்ப் புராண இதிகாச காப்பியக் கதைகள், கவிஞர்களின் கவிதைச் சுவையுடன் உரைநடையில் பொதுமக்களுக்குக் கிடைத்தன. வசன நூல்களை இயற்றியவர்கள் பாடல்களின் கருத்துக்களைக் கூட்டாமலும் குறைக்காமலும் தொடர்ச்சியாய்த் தந்ததால் பெரும்பயன் விளைந்தது. வசன நூல்களைக் கற்றவர்களில் பலர், மூல நூல்களில் உள்ள செய்யுள்களைப் பொருளறிந்து எளிதில் கற்றுப் புலமை பெற்றனர்.

புராண இதிகாச காப்பியங்களுக்கு மட்டுமின்றி, பத்துப்பாட்டு எட்டுத் தொகை ஆகிய பழந்தமிழ் நூல்களுக்கும் யாழ்ப்பாண அறிஞர் ந. சி. கந்தையா பிள்ளை வசன நூல்கள் இயற்றினுர். அவை, தமிழ் கற்கத் தொடங்கும் மாணுக்கருக்குப் பெரிதும் பயன் படுகின்றன.

**உரை எழுதாக் கொள்கை**

அருட் கவிஞர் இயற்றிய பக்திப் பாடல்களைப் பன்முறை ஓதி உணர்ந்து இன்புற வேண்டுமே அன்றி, அவற்றிற்கு உரை எழுதக் கூடாது என்ற கொள்கை

பல ஆண்டுகளாகச் சமய உலகில் நிலவி வந்தது எனினும் இராமாநுசர் காலத்தில் ஆழ்வார்களுக்கு உரை காணும் முயற்சி ஏற்பட்டது. அக்காலத்தில் இருந்த வைணவப் பெரியார்கள் அம் முயற்சியை முதலில் வரவேற்கவில்லை. இருப்பினும், வைணவச்சான்றோர்கள் பொதுமக்களிடையே செய்த சமயச் சொற்பொழிவுகள் 'கால் கொம்பு சுழி ஏருமல்' அடியவர்களால் எழுதிவைக்கப்பட்டன. இதனல், ஆழ்வார்களின் பாடல்களுக்கு உரைகள் வாய்த்துவிட்டன.

ஆனல், பத்தொன்பதாம் நூற்ருண்டுவரை, சைவ சமயத்திற்கு உரிய திருமுறைகளுக்கு உரைகள் தோன்றவில்லை. கற்றறிந்த சைவ வித்தகர்களும் ''அருட்பாடல்களுக்கு நாமா உரை எழுதுவது?'' என்று தயங்கி உரை எழுதாமல் ஒதுங்கிவிட்டனர். இருப்பினும், இருபதாம் நூற்ருண்டில், ''அருட்பாடல்களைப் பொருளறிந்து அனைவரும் ஓதிப் பயன் பெற வேண்டும்'' என்ற நல்லுணர்வு மேலோங்கியதால் திருமுறைகள் பலவற்றிற்கு உரைகள் தோன்றின.*

**தொகுத்து நோக்குதல்**

ஒரு நூலுக்குக் காலந் தோறும் தோன்றியுள்ள உரைகளை எல்லாம் தொகுத்து நோக்க வேண்டும் என்ற ஆர்வம் சில ஆண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்டது. திருக்குறளுக்குக் கிடைத்துள்ள பழைய உரைகளைத் தொகுத்து ஆய்ந்த தன் பயனுய் உரைவளம், உரைக் கொத்து, உரைவேற்று ஆகிய சிறந்த நூல்கள் வெளிவந்துள்ளன. நாலடியாரின் பழைய உரைகளைத் தஞ்சை சரசுவதி மகால் தொகுத்து வழங்கியுள்ளது. திரு முருகாற்றுப்படைக்குப் பழைய உரைகளின் தொகுப்பு வெளிவந்துள்ளது. தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று பகுதிகளுக்கும் தனித் தனியாய் உரைத் தொகுப்புகள் உருவாகியுள்ளன.

**தெளிவுரைகள்**

அண்மைக் காலத்தில் உரைகளின் வரலாற்றில் புரட்சி ஏற்பட்டுள்ளது. பழந்தமிழ்நூல்கள் எல்லாவற்றையும் கற்கவேண்டும் என்ற ஆர்வமும், அந்த ஆர்வத்திற்கு ஈடுகொடுக்கும் வகையில் எளிய உரைகள் எழுதிப் பரப்புவதில் வேட்கையும் தமிழ்நாட்டில் தோன்றியுள்ளன. டாக்டர் மு. வரதராசனர் இயற்றியுள்ள திருக்குறள் தெளிவுரை பல நூறு ஆயிரம் படிகள் விற்பனையாகி வெற்றிக் கொடி நாட்டியுள்ளது. அவரைப் பின்பற்றிப் பலர், தொல்காப்பியம் முதல் ஆத்தி சூடி வரை உள்ள பழந் தமிழ்நூல்கள் பலவற்றிற்குத் தெளிவுரை எழுதியுள்ளனர்.

**உரைகளின் ஆய்வு**

இக்காலத்தில் உரைகளைப் பற்றிய ஆய்வுகள் பெருகி வருகின்றன. உரையாசிரியர்களில் ஒருவரைப் பற்றித் தனி ஆய்வும், ஒரு நூலுக்கு அமைந்த உரைகளைப் பற்றிய விரிவான ஆய்வும், குறிப்பிட்ட சில நூற்ருண்டுகளில் தோன்றிய உரைகளின் வளர்ச்சி பற்றிய திறனுய்வும் நடைபெற்றுள்ளன. மொழியியலும், இலக்கியத் திறனுய்வும் தமக்குத் தேவையான அளவுக்கு உரைகளைப் பயன்

---

* 19-ஆம் நூற்ருண்டில் திருவாசகத்திற்குக் காழித் தாண்டவராயர் என்பவர் விளக்கவுரை எழுதினர். — பதிப்பாசிரியர்.

படுத்திவருகின்றன. ஒப்பியல் ஆய்வுக்கும் உரைகள் துணை புரிகின்றன. தமிழ்க்கலை, பண்பாடு, சமயம், வரலாறு ஆகியவை பற்றிய சிந்தனைக்கும் ஒளியூட்டுகின்றன.

உரையாசிரியர்களின் மொழியியல் சிந்தனைகள், இலக்கியக் கொள்கை, திறனாய்வு முறை ஆகியவற்றில் வருங்கால ஆய்வுலகம் ஈடுபட்டுச் சாதனைகள் பல செய்யக் காத்திருக்கின்றது.

அடிக் குறிப்பு

1. சங்க காலத்தில் கல்விப் பணியில் ஈடுபட்டிருந்த புலவர்: ஆசிரியன் பெருங்கண்ணன், மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார், மதுரைப் பாலாசிரியர் சேந்தன் கொற்றனார், மதுரைப் பாலாசிரியர் நற்றமனார், மதுரை ஆசிரியர் கோடங் கொற்றனார், மதுரை வேளா சான், கணக்காயன் தத்தனார், மதுரைக்காயனார், ''கணக்காயர் — நூலுரைப்போர்'': சேந்தன் திவாகரம் — மக்கட்பெயர்த் தொகுதி.'
2. அன்னாய் இவனோர் இள மாணக்கன் — குறுந். 33.
3. பாடமே ஓதிப் பயன் தெரிதல் — நாலடி — 316
பாடம் போற்றல் — நன்: பாயிரம் — 40.
படிறில் கல்வி விரும்பினேன்
பாடம் போற்றும் அதுபோல — பிரபுலிங்க லீலை: மாயை உற—49.
நெஞ்சு களனாக, கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைந்த செய்யுட்களை மனப்பாடம் செய்யும் வழக்கமானது தொன்றுதொட்டு வந்தது. இப்பயிற்சி உண்டாவதற்காகவே நூற் செய்யுட்களில் அகராதி முறையும், அந்தாதி முறையும் அமைக்கப் பெற்றன என்று சில பெரியோர் கூறுவர். — டாக்டர் உ. வே. சாமிநாதையர், நல்லுரைக் கோவை — பக். 19, 20.
4. ....அறவோன் திருமொழி
அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்
இந்திர விகாரம் — சிலப்பதிகாரம் 10 (12-14)
அறைந்தனர் சாற்றல் — ஆகமத்தைச் சொல்லி விளங்கப் பொருள் சொல்லுதல் — (அரும்)
பாடம் ஓதிப் பொருள் உரைத்தல் — (அடி, நல்).
பாடம் ஓதுதல் — மூலத்தை விளங்கச் சொல்லுதல் (உ.வே. சாமிநாத ஐயர்) கணக்காயர் பாடத்தால் பெற்றதாம் ஓர் சூத்திரம்—நாலடி 34
நாப்பாடம் சொல்லி நயம் உணர்வார் — நாலடி — 312
5. பட்டோலை கொள்ளுதல் — பெரியோர் கூறியதை எழுதுதல்: ''ஒரு வியாக்யானம் அருளிச் செய்து, முற்றப் பட்டோலை கொண்டு' — குருபரம்—538
6. விநோத ரச மஞ்சரி — பக். 245.
7. மீனாட்சி சுந்தரம்பிள்ளை சரித்திரம் — பக். 276
8, 9. திருவள்ளுவரும் திருக்குறளும் — பக். 8.

# ''ஆற்றுப்படை'' காட்டும் பழந்தமிழர் சமுதாய வாழ்வியல்

மா. இராமலிங்கம், எம்.ஏ.,
பூம்புகார் பேரவைக் கல்லூரி, மேலையூர் — 609 107

சங்க இலக்கியம் பழந்தமிழர் வாழ்வியலைப் பாடுகிறது. சங்க இலக்கியத்திற் பல்வகையான இலக்கியக் கூறுகள் காணப்படுகின்றன. திணைகள், துறைகள் இவற்றைப் பொறுத்து அவற்றின் சாயல்கள் வேறுபடுகின்றன. சங்க இலக்கியத்தின் புறத்திணைகளில் பாடாண் திணை இன்றியமையாதது. இத்திணையில் ஆற்றுப்படை அணி செய்கிறது. செல்வாக்குப் பெற்ற புறத்திணையின் வலுவான இந்தத் துறை, பாடாண் திணையைப் பொட்டு வைத்த முகமாக்குகிறது. இத்திணைக்கான பல துறைகளும், ஆற்றுப்படை ஒன்றில் சங்கமித்து விடுகின்றன. 'அவியகத் துறைகள் தாங்கிச் சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' என்று கம்பன் பாடுகிற சங்க இலக்கியத்தின் சிறப்பினை நாம் ஆற்றுப்படைகளில் காண முடிகிறது. பண்டைத் தமிழரின் வாழ்வியலை ஆற்றுப்படைகள் ஓவியமாக்கியிருக்கின்றன. பாட்டாக்கி இருக்கின்றன.

ஆற்றுப்படை இலக்கியங்களில், ஓர் இரட்டைத் தன்மை புகுந்திருக்கிறது. கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்றுங்குக் கலைத்திறன் பெற்றவர்களின் வாழ்வியல்களைப் படம் பிடிக்கிற ஆற்றுப்படைகள், மறுபுறம் அவர்களை ஆதரித்த அரசர்கள், வள்ளற் பெருமக்கள் ஆகியவர்களைக் காவிய நாயகர்களாகவும் ஆக்குகின்றன. 'கொடுப்போரை ஏத்திக் கொடாதவர்களைப்' பழிக்கின்றன. பாராளும் வேந்தர்களையும் பசிக்கென்று அலைகிறவர்களையும் ஆற்றுப்படைத் தராசு சமத் தட்டுக்களில் நிறுத்துகின்றது.

தென் கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி! உடுப்பவை இரண்டே;
பிறவும் எல்லாம் ஒரொக்கும்மே! — புறம் 189

இந்தப் பொருண்மொழிச் சிந்தனைகள் மட்டும் இல்லாது போனால் வேடனையும் வேந்தனையும் ஒரு கோட்டில் நிறுத்திப் பார்க்க முடியாது. 'உண்பதும் உடுப்பதும்' பற்றிய சமூகத் தேவைகள் செல்வர்க்கும் வறியவர்க்கும் வேறு வேறு ஆவதில்லை. செல்வத்தின் பயன் துய்த்தலில் அடங்கியிருக்கிறது. ஒரு சமதர்மச் சித்தாந்தத்தின் அடிப்படை நாதம் இதைவிட வேறாக இருக்க முடியாது. ஆற்றுப்படைகள் இந்த நாதத்தை முழக்குகின்றன.

பசிக்கொடுமை பாடாண் திணைகட்கு விதை போடுகிறதா? பஞ்சப் பாட்டுப் பாடியவர்களா ஆற்றுப்படை பாடியவர்கள்? செல்வர்களின் கால்வருடித் தங்களின் யாழ் நெருடியவர்களா அவர்கள்? இந்த வினுக்கள் ஆற்றுப்படைக் கலைஞர்களிடம் பொய்த்துப் போகின்றன. அறவிலை வணிகர்களை அவர்கள் பாடியதும் இல்லை, செல்வர்களிடம் அவர்கள் விலை போகவும் இல்லை. அவர்களின் செந்நா, பெருமையில்லாத செல்வர்களின் புகழ் தூக்கவில்லை (புறம் 148). திருந்து மொழி மோசி, 'ஆய்' என்பவனைப் பாடும் போது வெறும் செல்வம் மட்டும் உடைய மூவேந்தர்களை அசட்டை செய்யும் பாடப் பார்க்கிறோம். 'திருவினை வென்று வாழும்' அந்தக் கவியுள்ளம் பின் வருமாறு பாடுகிறது.

'சுவைக்கு இனிதாகிய குய்யுடை அடிசில்
பிறர்க் கீவின்றித் தம்வயிறு அருத்தி
உரைசால் ஓங்கு புகழ் ஓரீஇய
முரைசுகெழு செல்வர் நகர் போலாதே!' — புறம் 127.

பிறர்க்கு ஈயாமல் தன் பொருட்டு வாழ்கின்ற சுயநலமிகளை ஆற்றுப்படைப் பாடல்கள் பாடவில்லை. எல்லோரும் உண்போம், இல்லையேல் எல்லோரும் பட்டினி கிடப்போம் என்று பசித்தவர்க்காக வாடிய கருணை மறவர்களையே ஆற்றுப்படைகள் பாடுகின்றன.

'உண்டாயின் பதம் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்' — புறம் 94.

என்று ஔவை அதியனைப் பாடுவள்! இத்தகைய ஏழை பங்காளர்களே ஆற்றுப் படை பாடும் பாடாண் மக்கள்!

ஆற்றுப்படை காட்டும் பழந்தமிழர் வாழ்வியல் நோக்கத்தை இந்த ஆய்வுக் கட்டுரை மனித நேசத்தை ஒட்டியே ஆய்கிறது. அவர்களது ஆடைகள், பழக்கங்கள், அணிகலன்கள், உணவுகள், பொருட்கள் பற்றி ஆய்ந்தவை நிறைய உண்டு. ஆனல் கலைஞர்களின் வாழ்வில் சமத்துவம், அவர்களைக் காத்தவர் களின் சமுதாய உள்ளம், இவற்றை ஆற்றுப்படைகளின் வழி நின்று ஆய்கிறது இவ்வாய்வு. ஆற்றுப் படையின் இலக்கிய அமைப்பு, அதுபாடிய தமிழ் நிலப் பரப்பின் விரிந்து பரந்த வரலாறுகள், பாடப்பட்டோரின் செய்திகள், பொது மக்களின் வாழ்வியல் நெறிகள் பற்றிய ஆய்வுகளிலிருந்து இது ஒதுங்கி நடக்கிறது.

புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய இம்மூன்று சங்க இலக்கியத் தொகுப்புக்களில் மட்டுமே ஆற்றுப்படைப் பாடல்கள் அமைந்திருக் கின்றன. 'ஆற்றுப் படை' என்னும் துறைக்குறிப்புக்கள் அமைந்தவற்றையும், பத்துப்பாட்டுள் ஐந்து ஆற்றுப்படை பாட்டுக்களையும் மட்டுமே இதுவரை ஆய்வு செய்தவர்கள், மேற் கொண்டிருக்கிருர்கள். புறம், பதிற்றுப்பத்து போன்ற வற்றின் சிலதுறைகளை மேலும் ஆயும் போதுதான் 'ஆற்றுப்படைப் பாடல்கள்' பற்றிய ஆய்வு முழுமை பெறுகிறது. பாடாண் திணைத்துறைகளாக வரும் சில பரிசில்துறை, பரிசில் விடை, கடை நிலை, பரிசில் கடா நிலை, குடை மங்கலம்,

இயன்மொழி, வல்லாண் முல்லை, வாழ்த்தியல், துயிலெடை நிலை முதலான வற்றில் ஆய்வு செலுத்தும் போது ஆற்றுப்படைக்கூறுகள் அவற்றில் மிளிர்வதை யும், சில துறைகளே ஆற்றுப்படைகளாக இருக்க வேண்டுமென்பதையும் உணர்கிறோம்.

புறநானூற்றில் விறலி ஆற்றுப்படைகளாக நான்கு அமைந்துள்ளன. (புறம் 64; 103; 105; 133.) பாணாற்றுப்படைகள் ஏழு உள்ளன (68; 69; 70; 138; 141; 155; 180). புலவராற்றுப்படைகள் இரண்டு காணப்படு கின்றன, (48; 49). புறநானூற்றில் சில துறை ஆராய்ச்சிகள் ஆற்றுப்படைப் பாடல்களின் எண்ணிக்கையைக் கூட்டுகின்றன. புறம் (141) ஆம் பாட்டின் துறைக்குறிப்பு ''பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையும் ஆம்'' எனக் குறிப்பிடு கின்றது. புறம் (319) பாணனை விளித்துப் பாடுகிறது; சிறுபாணாற்றுப்படைக் குரிய சாயல், புறம் 135, 136 இவற்றில் காணப்படுகிறது.

பதிற்றுப்பத்திலும் துறைக்குழப்பங்கள் இல்லாமல் இல்லை. விறலியாற்றுப் படையைச் சேர்ந்தவை என்று ஆறு காணப்படுகின்றன. (40; 49; 57; 60; 78; 87;) பாணாற்றுப்படை என ஒரு பாட்டு மட்டும் (67) தெளிவாகக்காணப் படுகிறது. பதிற்றுப்பத்தின் அறுபத்தாரும் பாட்டின் துறை செந்துறைப் பாடாணா அல்லது பாணாற்றுப்படையா என்ற கேள்வியைப் பழைய உரையாசிரியர் எழுப்பி இப்பாட்டு செந்துறைப் பாடாண் தான் என்று முடிவு செய்வர்.

'படர்ந்தனை செல்லும்' என்று பாணன் தன்னில் நினைவன கூறினமையால் ''துறை பாணாற்றுப்படை அன்றிச் செந்துறைப் பாடாணாயிற்று'' என்பது அவருரை. ஆனால் இப்பாட்டின் 'முதுவாய் இரவல!' என்னும் முன்னிலை விளி, துறை முடிவு பற்றிய ஐயத்தை உண்டாக்குகிறது. வண்ணமும் தூக்கும் கலந்து புறப்பாடல் களை இசைப்பாட்டாக்குகிற பதிற்றுப்பத்தில் பாடாண் திணை, துறைச்சாயல் பெற்று விடுகிறது. வாய்ப்பு நோக்கிச் 'செந்துறைப்' பெயர் பெற்று விடுகிறது. ஆதலின் பதிற்றுப்பத்தில் பாடாண் திணை, 'செந்துறைப்பாடாண் பாட்டு' என்று மாறி வழங்குகிறது. இது பதிற்றுப்பத்திற்குள்ள தனித்தன்மை.

பத்துப்பாட்டில் இரு பாணாற்றுப்படைகள் உள்ளன. பொருநராற்றுப் படை ஒன்றுள்ளது. கூத்தராற்றுப்படை ஒன்றுள்ளது. திருமுருகாற்றுப்படை புலவராற்றுப் படையெனக் கருதப்பெறுகிறது. பத்துப்பாட்டில் ஐந்து ஆற்றுப் படைகள் உள்ளன. விறலியாற்றுப்படை பத்துப்பாட்டில் இல்லை.

பதிற்றுப்பத்து, புறநானூறு இவற்றில் வழங்கும் ஆற்றுப்படைகளைக் கண்ணோட்டமிடும்போது சில செய்திகள் தெரிகின்றன. கூத்தர், பொருநர் இவர்க்கான ஆற்றுப்படைகள் புறத்தொகுப்பில் இல்லை. பதிற்றுப்பத்திலும் கூத்தர், பொருநர்கட்கானவை இல்லை.

பெற்ற பெருவளம் பெறாதவர்க்கு அறிவுறுத்தும் ஆற்றுப்படைக்குரியவர் களைத் தொல்காப்பியர் புறத்திணை இயலில் (36) பாடுவார். கூத்தர், பாணர், பொருநர், விறலி என்னும் நால்வகைக் கலைஞர்களும் ஆற்றுப்படைக்குரியவர்கள் என்று புறத்திணைச் சூத்திரம் புகல்கிறது. ஆயின் தொல்காப்பியத்தின் புறத்

திணை இயலில் (26) வரும்; 'அமரர்கள் முடியும் அறுவகையானும்' என்னும் நூற் பாவுக்கு உரை வரைந்த இளம்பூரணரும், நச்சினர்க்கினியரும் புலவராற்றுப் படையை அங்கே இயைத்துக் காண்பர். இப்புலவர் ஆற்றுப்படை தொல்காப்பியர் கூருதது. அவர்க்கு முன்பும், அவர் காலத்தும் வழக்கில் இல்லாதது' என்று டாக்டர் மா. இராசமாணிக்கஞர் போன்ருேர் கருதுகின்றனர். ஆற்றுப்படை பார்த்து ஆற்றுப்படை பாடிய அக்காலத்தில் கால வளர்ச்சியில் புலவராற்றுப் படை புதிதாக முளைத்ததா? அல்லது புலவர் ஆற்றுப்படை குறிக்க வந்த பொருள் பின் மாறி விட்டதா? என்றெல்லாம் நினைக்கத் தோன்றுகிறது. செறுத்த செய்யுள் செய்பவர்கள் புலவர்கள் ஆவர். புலவர் எனும் சொற்கு இயல்பான பொருளிது. திருமுருகாற்றுப்படையைப் புலவர் ஆற்றுப்படையாக நினைக்கும் போது பொருள் மாறிய வளர்ச்சி தெரிகிறது. தெய்வத்திடம் ஆற்றுப்படுத்தும் புதுப்பொருள் இங்கே புகுந்து விடுகிறது.

புறநானூற்றுப் 'புலவராற்றுப் படைப்பாடல்கள் (புறம் 48, 141) எதுவும் புலவராற்றுப் படையாக இல்லை,' என்பார் பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார். திருமுருகாற்றுப்படையை புலவராற்றுப்படையாக கருதியதற்குப் பின் 'புலவராற்றுப்படை' என்பதற்குப் பொருள் மாறிய போக்கு இதன் மூலம் தெரி கிறது. புலவன், பொருநன், கூத்தன், விறலி, பாணன் இவர்கள் தங்களுக்குள் ஆற்றுப்படுத்திக் கொண்ட இயல்பான வழக்கம், பின்னர் இலக்கிய வழக்காகிப் போய்விட்டதா? அந்நிலையில் நாம் அவற்றிற்கு வழங்கிய அர்த்தங்கள் மாறி விட்டனவா என்றும் கருத வேண்டியுள்ளது. காலப்போக்கில் இவை, நாடக வழக்காகப் பாடப்பெற்றவையா என்றெல்லாம் நினைக்கத் தோன்றுகிறது. பரிசில் துறை, பரிசில் கடாநிலை போன்ற இயல்பான துறைகள் ஆற்றுப்படைகளில் வளர்ச்சியாகவும், நாடகத்தன்மை ஊட்டுவனவாகவும் அமைந்து விடுகின்றன.

ஆற்றுப்படைத்துறை பற்றிய ஆய்வுக்குப் புறம், பதிற்றுப்பத்து இவற்றின் துறைகளில் மறு ஆய்வு நடத்த வேண்டும். புறம் 141-ஆம் பாட்டின் அடிக்குறிப் பில் 'பாணாற்றுப்படை, புலவராற்றுப்படையுமாம்' என்று குறிக்கப்பட்டுள்ளதைக் கண்டோம். ஆனல் தொல்காப்பியத்தின் புறத்திணை உரையில் இப்பாட்டை இளம்பூரணர் பாணாற்றுப்படைக்கே உதாரணம் காட்டியுள்ளனர். இதுபோலவே புறநானூற்றில் பொருநராற்றுப்படை இல்லை என்று கருதி வந்தோம். புறத்தின் துறைகள் ''இது–இந்த ஆற்றுப்படை'' என்று சுட்டியதை வைத்து நாம் பார்க்கும் போது புறத்தில் பொருநராற்றுப்படை தனித்துறையாக இல்லை. புறநானூற்றில் ஒரு பொருநராற்றுப்படையை நமக்கு இளம்பூரணர் காட்டுகிருர். புறத்தில் 394-ஆம் பாட்டின் துறை கடை நிலை. துறைப்படி இதனை நாம் ஆற்றுப்படை யாக நினைத்திருக்க மாட்டோம்.

''சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
ஒலி கதிர்க் கழனி வெண்குடைக் கிழவோன்
வலி துஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்
வள்ளியன்ஆதல் வையகம் புகழினும்
உள்ளல் ஓம்புமின்! உயர்மொழிப் புலவிர்!

ஒரு கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
பாடிமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினேனாக ''

என்று இப்பாட்டு தொடர்கிறது. புறத்திணை உரையில் பொருநராற்றுப்படைக்கு இப்பாட்டைச்சான்று காட்டுவர் இளம்பூரணர். இப்பாட்டின் விளி 'உயர்மொழிப் புலவீர்!' என்றுள்ளது. ஆற்றுப்படுத்தியவனே 'மாக்கிணை' ஒற்றிப் பாடியவன். பொருநர் இசைக்கருவி மாக்கிணையாகும். துறையோ கடைநிலை; இளம்பூரணரோ பொருநர் ஆற்றுப்படை என்கிறார். ஆற்றுப்படுத்தப் படுபவரோ உயர் மொழிப் புலவர்! புலவராற்றுப்படையா? பொருநர் ஆற்றுப்படையா? என்று தெளிவு செய்ய முடியாத சூழல்.

தமிழோடு இசை பாடல் மறந்தறியாத கலைஞர்கள் புலவர்களாகவும், பொருநராகவும், கூத்தராகவும், விறலியராகவும், பாணராகவும் இருந்திருப்பர். ஆற்றுப்படைப் பிரிவுகளை வைத்து அவர்களைப் பிரித்துப் பார்ப்பதில் பொருளில்லை. தொகை நூல்களில் தெளிவாகத் தெரிகிற விறலி ஆற்றுப்படைகள் பத்து.[3] பத்துப்பாட்டில், பெருக வழங்கிய இவ்விறலியாற்றுப்படை இடம் பெறாதது குறித்து வெவேறு கருத்துக்கள் வழங்குகின்றன. பொருநன் முதலானவர்களுடன் விறலி சேர்ந்தே சென்றதால் அவர்க்கெனத் தனியாற்றுப்படை பாடப் பெற்றிலது என்பர் இராமநாதன் செட்டியார்.[4] இதற்கு மறுப்பாக திரு. சுப்பிரமணியன் எழுதுகிறார்.

''ஆணாதிக்கம் மேலோங்கியது. பெண்கள் ஆடவர் பாதுகாப்பில் வாழ வேண்டியதேற்பட்டது. ஆகவே பெண்கள் தம் இச்சைபோல் எங்கும் செல்ல முடியவில்லை. தகுந்த ஆடவருடைய பாதுகாப்பிலே செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. இவ்வுண்மையை விளக்குவது போல, மலைபடுகடாம் கூத்தர் தலைவனைச் சூழ விறலியர் நிற்பதனை எடுத்துக்காட்டுகிறது. அதனாலேயே பத்துப் பாட்டில் விறலியாற்றுப்படை இடம் பெறவில்லை''.[5] இந்த இருசாரார் கருத்துக் களும் ஆயத்தக்கவை.

பாணர், பொருநர் முதலான பழந்தமிழ்க் கலைஞர்களின் தேசிய இலக்கியம் ஆற்றுப்படை கலைக்குழுவினரின் இந்த யாத்திரை இலக்கியத்தில் சமுதாய இனக் குழுத் தலைவர்களின் ஓங்கிய வாழ்வு இடம் பெற்றிருக்கிறது. குழுவான கலைஞர்களின் பின்னே விறலியரும் சென்றிருப்பர். ஆதலின் விறலியாற்றுப்படை தனியாகப் பத்துப்பாட்டில் இடம் பெறவில்லை. இக்கருத்து தொல்காப்பியர்க்கே முரணாக முடியும். கூத்தர், பாணர், பொருநர் வரிசையில் விறலி இடம் பெற்றிருக்கிறாள் என்று தொல்காப்பியர்க்குத் தெரியாதா? ஆற்றுப்படைக்குரியவர்களில் விறலியும் சேர்த்துத்தானே கருதப் பெறுகிறாள். பத்துப்பாட்டில் விறலியாற்றுப்படை தனியாகப் பாடப்பெறாததற்கு இதுவும் காரணமில்லை. ஆடவராக்கம் ஓங்கியது. பெண்கள் ஆடவரின் பாதுகாப்பில் நிழலாகத் தொடர்ந்த காலம் ஆதலின் பத்துப்பாட்டில் அவர்க்கு ஆற்றுப்படை அமையவில்லை. இந்தக் காரணமும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

கலைப்பறவைகளின் சிறகுகட்கு விலங்கு பூட்டாத காலம் அது. சுதந்திர மாக இக்கலைஞர்களின் பின்னே விறலியர் சென்றிருக்கின்றனர். தடைகளும், மதில்களும், கதவங்களும் விறலியர் (பாடினி) கட்குத் தடைகளாக இல்லை. நாளும் வேளையும் கூட அவர்கட்கு ஒதுக்கி வைக்கப்பெறவில்லை. (புறம் 124). கட்டுக்கள் அற்ற விடுதலைக்குயில்களாக இருந்த விறலியர்களின் செல்வாக்கைக் கபிலரும், முடமோசியாரும் தங்களின் புறப்பாடல்களில் பாடியிருக்கின்றனர்.

அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ அரிதே!
நீலத்து இணைமலர் புரையும் உண்கண்
கிணைமகட்கு எளிதால், பாடினள் வரினே. — புறம் 111.

கழல் தொடி ஆய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகின் அல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே! —புறம் 128.

ஆதலின் 'அடங்கி ஒடுங்கி விறலியர்கள் இருந்தார்கள்; ஆடவர் செல்வாக்கால், இந்த ஆடுமகளிர் செல்வாக்குத் தாழ்த்திருந்தது; ஆகவே விறலியர்க்கு பத்துப் பாட்டில் இடமில்லை என்று கூறுவது பொருந்தாதே. தொகை நூல்களில் பத்துப்பாடல்கள் விறலியர்க்கு உள்ளபோது, விறலியாற்றுப்படை பத்துப்பாட்டில் இல்லாததற்கு இது காரணமாக இருக்க முடியாது. புறத்தொகுப்பு — புறப் பாடல்களின் காலம், பத்துப்பாட்டுத் தொகுப்பு — பத்துப்பாடல்களின் காலம் இவற்றின் தொகுப்புக்காலம் பற்றிய கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். தொகை யிலும், பாட்டிலும் பாடியவர்களின் காலம் ஒன்றுக்கு ஒன்று வேறாக இருக்க முடி யாது. புறத்தில் பாடிய கபிலரும், குறிஞ்சிப்பாட்டுப் பாடியவரும் வேறு வேறான வரா? ஒருகாலப் புலவர்களின் பார்வையில் பெண்களின் நிலை திடீரென வீழ்ந் திருக்கவோ மாறியிருக்கவோ முடியாது. பதிற்றுப் பத்து, புறம் ஆகிய தொகைப் பாடல்களின் காலத்தில் விறலியர்க்குச் செல்வாக்கு! ஆதலின் அவர்கட்குத் தனி ஆற்றுப்படைகள்; பத்துப்பாட்டுக் காலத்தில் 'பாவையர் நிலை' வேறு. ஆதலின் 'பாடினி கட்குப் பத்துப்பாட்டில் ஆற்றுப்படை இல்லை' என்றெல்லாம் கூற முடியாது.

அகத்திணைப் பாடல்களில் குறுந்தொகை, அகநானூறு (நெடுந்தொகை) நற்றிணை ஆகியவற்றின் தொகுப்புக்களில் பாடல்களின் அடியளவுகள் அங்கம் வகிக்கின்றன. அகப்பாடல்களின் இந்தத் தெளிவான தொகுப்பைப் போல, புறப்பாட்டுத் தொகுதிகள் ஒரு வரையறையைப் பெறுதவை. பதிற்றுப்பத்து; தொகுப்பு தனிச்சிறப்புடையது. புறப்பாடல்களில் திணைக்குத் கிடைக்கிற மரியாதையே அதிகம். அடிகளை வைத்து 'புறத்தொகுப்பு' அமையவில்லை. இருந் தாலும் ஆற்றுப்படைப் பாடல்கள் புறநானூறு, பதிற்றுப்பத்து இவைகளில் ஐந்து வரி முதல் முப்பத்தொன்று வரிவரையே அமைந்திருக்கின்றன. பத்துப் பாட்டுத் தொகுப்பில், அடிகளால் சிறிய பாட்டு முல்லைப்பாட்டு. 103 அடிகள். இந்த அளவுக்குக் குறையாத விறலியாற்றுப்படை பாடப்பட்டிருப்பின் பத்துப் பாட்டுத் தொகுப்பில் அது இடம் பெற்றிருக்கலாம். அன்றியும் ஒரு தொகுப்பில்

வகைகள் வேண்டப்படும். பத்துப் பாட்டுள் இப்பொழுதே ஐந்து ஆற்றுப் படைப் பாட்டுக்கள். ஒரு பாட்டுத்தொகுதிமுழுவதும் ஆற்றுப்படைத் தொகுதி யாக ஆதல் வேண்டாம் என்றும் தொகுத்தவர்கள் விட்டிருக்கலாம். கூத்தர் ஆற்றுப்படைக்குள்ள கூத்தர் தலைவனைச் சூழ விறலியர் நிற்பதை ஆடவராதிக் கத்தின் பாற்பட்டது என்று கருதுவது முறையன்று. பத்துப்பாட்டு ஆற்றுப் படைகளில் விறலி, பாடினி பற்றிய புனைவுகளே அவர்கட்கான சிறப்புக்கள்தாம்! குழுக்கலைஞர்கள் மத்தியில் விறலியர் தனித்து நிற்கப்பட்டதாகப் பாடியிருப்பின் விறலியர் நிலை தாழ்ந்து போயிருந்தமை தெளிவு என்று நம்பலாம். கூட்டமான கலைஞர்கள் அவர்களின் கூட்டத்தில் விறலியர். இங்கே ஏற்றத்தாழ்வற்ற தன்மையே பார்க்கின்றோம். விறலியாற்றுப்படை பத்துப்பாட்டில் இல்லை என்பதற் காக இப்படிக் காரணங்களைக் கற்பித்தால் புறநானூறு, பதிற்றுப்பத்து இவை களில் கூத்தர் ஆற்றுப்படை அமையவில்லை என்பதற்காகக் கூத்தரின் நிலை தொகை நூல்களில் தாழ்ந்து போனது என்று கூறிவிட முடியுமா? குழுக் கலைஞர்கள் கலைஞர்களாக மதிக்கப் பெற்ற காலம் வரையில் அவர்களிடம் பேதங்கள் இல்லை. பின் சாதிய முறைகள் அவர்களிடம் படைக்கப்பட்டபோது சிறுமைகள் நடந் திருக்கலாம். பாணர் முதலிய கலைஞர்களாக இருக்கும்போது அவர்களிடம் குழுத் தன்மையே நிலவியிருக்கிறது. பாணர் கூட்டம் தனி; பொருநர் கூட்டம் தனி; கூத்தர் கூட்டம் தனி; விறலியர் கூட்டம் தனி என்று கலைஞர்களில் ஒருவர்க்கே அமைப்பு தனித்தனியே ஏற்படாத நிலையைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

''முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமானேக்கின் வாணுதல் விறலியர்
நடை மெலிந்தசைஇய...
— — —
...
கைவல் பாண்மகன் கடனறிந்தியக்க
...
முனிவிகந் திருந்த குதுவாய் இரவல'' — *(சிறுபாண்: 30-40)*

''பொன் வார்ந்தன்ன புரியடங்கு நரம்பின்
தொடையமை கேள்வி இடவயின் தழீஇ
...
பழுமரம் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்
புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண!'' — *(பெரும்பாண்: 15–22)*

''துறை பல முற்றிய பைதீர் பாணரொடு
விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்து
இலங்குவளை விறலியர் நிற்புறம் சுற்ற...'' — *(மலைபடு: 40–46)*

வேறுபுல முன்னிய விரகறி பொருந!
...
பெடை மயில் உருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப

பாடல் பற்றிய பயனுடை எழாஅல்
கோடியற் றலைவ! — (பொருநர்: 3—57)

பத்துப்பாட்டைச் சேர்ந்த இவ்வாற்றுப்படைகளில்,

''விறலியர் — பாண்மகன் — இரவலன்'
பாணர் — விறலியர் — கூத்தர்'
பொருநர் — பாடினி — கோடியர்''

முதலான கலைக்குழுவினர் சேர்ந்த கூட்டமே ஆற்றுப்படுத்தப்படுகிறது. பெற்ற பெருவளம் பெறுதார்க்கு அறிவுறுத்தி ஆற்றுப்படுத்தலைத் தொல்காப்பியர் சொன்னுர். பதிற்றுப்பத்தில் (49) வரும் விறலியாற்றுப்படை புதுத் தன்மை யோடு திகழ்கிறது. விறலியரைத் தம்மோடு கூடவே அழைத்துச் செல்ல, குரல் கொடுக்கிறது இவ்வாற்றுப்படை.

யாமும் சேறுக! நீயிரும் வம்மின்
துயலும் கோதைத் துளங்கியல் விறலியர்

என்று தொடங்குகிறது. இது போலவே புறத்திலும் ''நீயும் வம்மோ? முதுவாய் இரவல்'' (180) என்று அழைப்பதைக் காண்கிறேம். இந்தக் கலைஞர்கள் தொழில் முறையில் வெவ்வேறு கலைஞர்களாக இருந்தாலும், இவர்கள் யாவரும் சுற்றத்தினர்தாம் எனக் கருத வேண்டியுள்ளது.

கடும்பின் கடும்பசி களையுநர்க் காணுது
...
ஈங்கு வென் செய்தியோ? பாண! — புறம் 68.

ஓம்பி உடுத்த உயவற் பாண!
...
பெரும் புல்லென்று இரும்பேர் ஒக்கலை — புறம் 69.

தேஎம் தீம்தொடைச் சீறியாழ்ப் பாண!
...
இன்னகை விறலியோடு மென்மெல இயலிச்
செல்வை ஆயின், செல்வை ஆகுவை! — புறம் 70.

காரென் ஒக்கல் கடும்பசி இரவல — புறம் 141.

இத்தொடர்கள் அவர்களின் உறவுகளைக் காட்டுகின்றன. நடைபயின்ற கலைக்குடும்பங்களைக் காட்டுகின்றன. இவர்களின் வறுமைகளை ஆற்றுப்படைகள் நிறையவே பாடுகின்றன. தாயினும் சாலப் பரியும் வள்ளல்கள் பொருநர் முதலான நடமாடும் கலைஞர்களின் ஆதரவாளர்களாயிருந்து சமூகத்தில் உன்னத மான தொண்டை ஆற்றியிருக்கின்றனர். ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல், அற்ரூர் அழி பசி தீர்த்தல் எனப் பசிதணித்தலை வள்ளுவம் அறமாக்கும் (225—226). 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பது மணிமேகலை. (95—96). தருமம், செல்வத்தின் பயன் இவையெல்லாம் பசித்தணித்தலில்தான்

அடங்கியிருக்கிறது என்பது ஆற்றுப்படைகளின் கீதங்கள். அனைத்து ஆற்றுப் படைகளிலும் வள்ளல்கள் பசிப்பிணி மருத்துவர்களாகவே காணப்படுகின்றனர். வயிற்றுக்குச் சோறிடும் கடமை வையம் ஆள்பவரின் முதற் கடமை. அடுத்து மானம் காக்கிற ஆடை பற்றியது. இரவலரின் கந்தலைக் களைந்து பட்டுடை நல்கும் வள்ளல்களை ஆற்றுப்படை பாடுகிறது. சமூகத்தின் அதிமுக்கிய இந்த இரு தேவைகளையும் ஆற்றுப்படைக் கலைஞர்களுக்குத் தீர்த்துவைப்பதில் ஆற்றுப் படை வள்ளல்கள் புகழ் பெறுகின்றனர்.[6]

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் அருள் உணர்வுக்குக் கால்கோட் செய்வது ஆற்றுப்படைதான். பெற்ற பெருவளம் பெறுதாரும் பெற வேண்டும் என்பதில் ஆற்றுப்படை முழக்கும் வாழ்வியல் சித்தாந்தமே அடங்கி யிருக்கின்றது. அமரர்களிடம் ஆற்றுப்படுத்தும் அளவுக்கு ஆற்றுப்படையின் நோக்கம் பின்னர் மாற ஆரம்பித்து விட்டது. அதற்குச் சமூக ஆற்றுப்படைகள் உதவியிருக்கின்றன. முருகாற்றுப்படை முதலான சமய ஆற்றுப்படைகள் பின் மலர்வதற்கு அவைகளின் உதவி ஏராளம். பாணர், பொருநர் என்கிற நிலைமாறிப் பக்தரை ஆற்றுப்படுத்திய சமய ஆற்றுப்படைக்குச் சமூக ஆற்றுப்படைகள் மொட்டாகி, அரும்பாகி உதவியிருக்கின்றன. ஒரு துறை, நதியளவு வளர்ச்சி பெற்றது ஆற்றுப் படை வளர்ச்சி குறித்த தனி ஆய்வாகும்.

இனக்குழுத் தலைவர்கள் ஆற்றுப்படைக் கலைஞர்களிடம் நெருங்கிப் பழகித் தோள் கொடுத்த அளவிற்கு, மாறி வந்த உயர்குடி ஆட்சி வேந்தர் நெருங்கிப் பழகிலர்.[7] இனக்குழு, உயர்குடி ஆட்சி என மாறி வந்த மன்பதை வளர்ச்சி யைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. வேளிர் – வேந்தர் போராட்டமே சமூகத்திலும் ஒரு டார்வின் கொள்கையைக் காட்டுகிறது.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று இவ்வுலகத் தியற்கை

என்று புறம் பாடுகின்றது (76), கலைஞர்களைப் புரக்கிற தொண்டினை இனக்குழுத் தலைவர்கள் தான் அதிகம் மேற்கொண்டனர். வேந்தர்கள் உயர்ந்து போனதால் இத்தொண்டிற்குத் தூரமாகி விட்டனர் என்று ஒரே முடிவாகவும் சங்க இலக்கியத் தின் துணை கொண்டு சொல்ல முடியவில்லை. கலைஞர்களைப் புரக்காத குற்றம் உயர்குடிச் சீமான்களான யாரோ சில வேந்தர்களிடம் காணப்பட்டது போலவே சில இனக்குழுத் தலைவர்களிடமும் காணப்படுகிறது.

பாடாண் திணையைக் கலைஞர், கவிஞர் 'இனக்குழுத் தலைவர்க்கே' இத் திணை உரியது என்று சிலாசாசனம் செய்திலர். 'கொடுப்போர் ஏத்திக் கொடா அர்ப்பழித்தல்' என்ற பொதுச் சுட்டு வேளிராய் இருப்பவர்க்கும் பொது; வேந்தர்க்கும் பொது. புறம், பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு முதலான அனைத் திலும் பாடப்பட்டோர் வரலாற்றை ஆராய்கையில் இச்செய்தி தெளிவாகிறது. புலவர் பாடிய சேர வேந்தர் பலர்; சோழர் பலர்; பாண்டியர் பலர்; உயர் நிலை பெற்ற இவ்வேந்தர் புலவர் உலகத்திற்குத் துருவங்களாகப் போயிருந்தால் புலவர்கள் தங்களின் 'செந்நா நெளிய' இவர்களைப் பாடியிருக்க மாட்டார்கள்.

அறவிலே வணிகரை, பீடில் மன்னரைத் தான் அவர்கள் பாடவில்லே. இந்நிலே வேளிர் முதலான இனக்குழுத் தலேவர்களுக்கும் பொருந்தும்.

வெளிமானே இகழ்ந்து பெருஞ்சித்திரன் பாடிய பாட்டும் உண்டு. குமணன் கொடுத்த யானேயால் அவனூர்க் கடி மரம் பிணித்த செய்தியை அவரது புறப் பாட்டு (162) காட்டுகிறது. குமணனுக்கும் சோதனே விளேவித்த கொடுமைத் தம்பியையும் புறநானூறு (165) குறிக்கிறது. இனக்குழுத் தலேவர்களின் சிறுமை களேத் தாக்கத் துணிந்த புலவர்கள், மூவேந்தர்களாயினும் அவர்களின் சிறுமை களேயும் தாக்கியிருக்கின்றனர்.

முற்றிய திருவின் மூவராயினும்
பெட்பின்றி ஈதல் யாம் வேண்டலமே! — புறம் 205

பிறர்க்கு ஈவின்றித் தம் வயிறு அருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசு கெழு செல்வர். — புறம் 127

இரங்கு முரசின், இனம் சால் யானே
முந்நீர் ஏணி விறல் கெழு மூவரை
இன்னும் ஓர்யான் அவா அறியேனே! — புறம் 137

புலவர்களின் வசைக்கணேகள் மூவேந்தர்கள் என்பதால் அவர்கள் மீது விழாமல் இல்லே என்பதற்கு இப்பாட்டுக்கள் தக்க சான்றுகள். இதனுல், உயர் குடி அந்தஸ்தைப் பெற்று விட்ட எல்லா வேந்தரும் கலேஞர்களேப் புறக்கணித் தார்கள் என்று சொல்ல முடியாது. பாரியைப் பாடிய கபிலரே, சேரன் செல்வக் கடுங்கோ வாழியாதனின் சிறப்பியல்புகளேயும் பாடுகிருர். புறநானூற்றில் வந்த பல ஆற்றுப்படைகள் வேந்தர்களிடம்தான் ஆற்றுப்படுத்துகின்றன. பதிற்றுப் பத்து ஆற்றுப்படைகள், சேரர்களிடமே ஆற்றுப்படுத்துகின்றன. பத்துப்பாட்டின் ஆற்றுப்படைகளில் கரிகாற் பெருவளத்தானும், தொண்டைமான் இளந்திரைய னும் பாடப் பெறுகின்றனர். மன்னர்கள் கலேஞர்களேப் போற்றிய விதத்தை இவ் வாற்றுப்படைகள் விரிவாகவே பாடுகின்றன. ஆதலின் அத்தனேக் குறுநிலத் தலேவர்களும் ஆற்றுப்படைக் கலேஞர்களேப் போற்றியிருக்கின்றனர்; வேந்தரான வர் எல்லாம் கலேஞர்களே வேறுபடுத்திப் பார்த்தார்கள் என்ற ஒரு முடிவுக்குச் சங்க இலக்கியம் கை கொடுக்காது. தனிப்பட்ட வேளிர் தனிப்பட்ட மூவேந்தர் களில் சிலர் செய்த புறக்கணிப்புக்கள், கண்டிக்கப் பெற்றிருக்கின்றன. அவை, கலேஞர் — வள்ளல்கள் — வேந்தர் இவர்களுக்குள் இருந்து வந்த சமூக உறவு களுக்கு முற்றுப் புள்ளி வைத்து விடவில்லே. 'யானே தந்தை தோழன்'' என்று கபிலர் பாரியோடு தோழமை பேசிய நிலே, சேரன் வாழியாதனேப் பாடும்போதும் திகழ்கிறது. அவர்

''பாணர் புரவல! பரிசிலர் வெறுக்கை
பூணணிந்து விளங்கிய புகழ்சால் மார்ப நின்
நாள் மகிழ் இருக்கை இனிது கண்டிகுமே!'' — (பதிற்: 65)

என்றும் பாடுவதைப் பார்க்கிரேம்.

இனக்குழுவின் அழிவுகள், உடைமையாளர்களின் அரசுத் தோற்றம் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்துக்காணப்படுகின்றன. ஆனால் கலைஞர்களைப் போற்றுவதில் மன்னர்களும் இனக்குழுத் தலைவர்களும் வேறுபட்டார்கள் என்று சொல்ல முடியாது.

புலவர் பாடும் புகழுடையோர் வரிசையில் சேர்ந்திட (புறம். 27) மன்னரும் வேட்கையுற்றிருக்கின்றனர். 'மாங்குடி மருதன் தலைவனாகப்... புலவர் பாடாது வரைக' என்று பாண்டியன் சூளுரைத்துக் கொண்டதில் (புறம் 72) கலைஞர் உலகத்தின் செல்வாக்குத் தெரியாமல் இல்லை.

ஆற்றுப்படைகளால் தமிழினத்தின் வரலாறு, நாடுகள், ஊர்கள், நில வழிகள், வள்ளல்கள், மன்னர்களின் அரசியல் செய்திகள், தொழில், வாணிகங்கள், இல்லறம், சமயங்கள் பற்றியெல்லாம் அறிய முடிகிறது. சமுதாயத்தின் விழி களான கலைஞர்களுக்கும், உயிர், உடம்பான மன்னர்கள் முதலியவர்களுக்கும் உள்ள சமூக உறவுகள், அவர்களின் வாழ்வியல் நேசங்கள் இவற்றை மட்டும் வரித்துக் கொண்டு ஆயும் இக் கட்டுரை, இவ்விரு சாராரும் ஒரு நேர்க்கோட்டில் நிற்பதை எடுத்துக்காட்ட முயன்றிருக்கிறது.

### மேற்கோள்கள்

1. பத்துப்பாட்டாராய்ச்சி: பக். 37.
2. I. C- T. of Studies, Volume II, Page 453
3. புறம்: 64; 103; 105; 103; பதிற்றுப்பத்து: 40; 49; 57; 60; 78; 87.
4. I. C. T. of Studies, Volume II
5. ஆராய்ச்சி. ஜனவரி 74 பக். 134.
6. பொருநர்: அடி. 77–88, சிறுபாண்: 236–245. கூத்தராற்: 560–566. பெரும்பாண்: 467–479.
7. ஆராய்ச்சி: ஜனவரி 74, பக். 140.

# கிறித்தவத் தமிழ்க் காப்பியங்கள்

பேராசிரியர் பா. வளன் அரசு, M.A., B.Ed.,
தூய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை

அச்சுத் துறை முதல் ஆராய்ச்சித் துறை முடிய பல்வேறு நிலைகளில் கிறித்தவத் தமிழ் அறிஞர் தமிழுக்கு அரும்பெரும் பணியாற்றியுள் ளனர். இலக்கியக் கலையின் ஏற்றமிகு வடிவமாக விளங்குவது காப்பியம். தமிழ்க்காப்பியங்கள் பெரும்பாலும் சமயச்சார்புடையனவாகவே அமைந்துள்ளன. ''பண்பட்டமொழியில் ஒருமைப்பாடு உடைய கதையில் இலக்கண வரம்பைக் கருதிச் செய்யப்படுவது காப்பியம்'' எனலாம். காப்பியப் புலவன் ஓவியக் கலைஞன் போன்று உள்ளத்து உணர்வை ஒருமுகப்படுத்தி, எழுச்சி எண்ணங்களை வளர்ப்பவன் ஆவான். ஆகவே, ''காப்பியம், மனித வாழ்வின் ஓவியக்கூடம்''.

### உரைநடையும் பாநடையும்

கிறித்தவத் தமிழ்க் காப்பியங்களுள் முதலிடம் பெறுவது வீரமாமுனி வரின் தேம்பாவணி. எல்லாரும் எடுத்தியம்புவது கிருட்டினரின் இரட்சணிய யாத்திரிகம்; அண்மைக் காலத்தில் வெளிவந்திருப்பது ஆரோக்கியசாமியின் சுடர் மணி. மூன்று நூல்களும் ஏற்கெனவே உரைநடையில் வழங்கப்பட்ட வாழ்வியல் கதைகளுக்குப் பாநடை வடிவம் தந்துள்ளன எனலாம். இசுபானிய மொழியில் ஆகிர்தமரி எழுதிய கடவுளின் நகரம், தேம்பாவணிக்கு முதல்நூல். பாட்டக் கரை சாமுவேல் பவுல் ஐயர் எழுதிய பரதேசியின் மோட்சப் பயணம், இரட்சணிய யாத்திரிகம் எழுதத் தூண்டுதல் தந்தது. சேசுசபைத்தொண்டர் சோசப்பு பிரான்சிசு தீட்டிய சேசு கிறிஸ்துநாதரின் ஜீவிய சரித்திரம், சுடர்மணி ஒளிரத் துணை புரிந்ததாக அறியப்படுகிறது.

### நற்செய்தியும் நாற்பெரு நூல்களும்

கிறித்தவ மறைநூலாகிய நற்செய்தியின் அடிப்படையில், திருவாக்குப் புராணம், சுவிசேடப் புராணம், கிறிஸ்தாயணம், கிறிஸ்து மான்மியம் என்னும் நான்கு காப்பியங்கள் எழுந்துள்ளன. யாழ்ப்பாணத்துக் கனகசபைப் புலவர் பாடிய திருவாக்குப் புராணம் 1866-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. பதிகத்தில் 111 விருத்தங்களும், முதற்பகுதியில் பழைய ஏற்பாட்டுச் செய்தியை (Cld Testament) உள்ளடக்கிய இரு காண்டங்களும், இரண்டாம் பகுதியில் புதிய ஏற்பாட்டுச் செய்தியை (New Testament) உள்ளடக்கிய 8 காண்டங்களும் இடம் பெற்றுள்ளன. காண்டங்களின் உட்பிரிவுகள் படலங்களாகும்.

மதுரையில் அரசுப்பணிபுரிந்த சுகாத்தியர் (Scott) வரைந்த சுவி சேடப்புராணம் புதிய ஏற்பாட்டு நிகழ்ச்சிகளை விருத்தப்பா யாப்பில் வழங்கு

கிறது. மத்திய காண்டம், மாற்க காண்டம், லூக்கா காண்டம், யோவா காண்டம், அப்போஸ்தலக் காண்டம் என்னும் ஐந்து பெரும் பிரிவுகள் இந்நூலில் உள்ளன. காண்டந்தோறும் 12 பகுதிகளும், பகுதிக்கு 7 படலங்களும், படலத் திற்கு 8 பாடல்களும் ஆக (5 × 12 × 7 × 8)3360 மூவாயிரத்து முந்நூற்று அறுபது பாக்கள் காணப்படுகின்றன. ''வீட்டுக்கொரு விவிலியம், நாளுக்கு ஓர் அதிகாரம்'' என்று இன்று கூறுவதை, அன்றே திட்டமிட்டு ஆங்கிலப் பாவலர் அருளியுள்ளார்.

திருவனந்தபுரம் சான்பால்மர் (1812-1883) இயேசுவின் வரலாற்றையே ''கிறிஸ்தாயணம்'' என்று எழுதி, 1865 ஆம் ஆண்டில் வெளியிட்டார். பால காண்டம், கிரியா காண்டம், அவஸ்தா காண்டம், ஆரோகண காண்டம் என 4 காண்டங்களும் 842 விருத்தங்களும் இக்காப்பியத்தில் உள்ளன.

சுதோச ஐயர் 1891 இல் தரங்கம்பாடி லுத்தரன் திருச்சங்க அச்சகத்தில் பதிப்பித்த கிஸ்து மான்மியம் 39 சருக்கங்களுடன் திகழ்கிறது.

இக்காப்பியங்கள் வேதப்பொருள் விளம்ப வந்து, விவிலியத் திருநூலை அடிப்படையாகக் கொண்டு, இயேசுவின் வாழ்வியலை வகுத்தும் தொகுத்தும் விரித்தும் பேசுகின்றன.

### வேறு மூன்று நூற்கள்

ஞானாதிக்கராயர் காப்பியம் நசரைக்கலம்பக ஆசிரியர் சாமிநாதரால் எழுதப்பட்டது. ஞானாதிக்கன் வரலாறு கூறும் இந்நூலில், விவிலிய நிகழ்ச்சிகள் கிளைக்கதைகளாக அமைந்துள்ளன. 30 படலங்களும் 2222 பாடல்களும் கொண்ட இக்காப்பியத்தின் மாரி வாழ்த்துப் பகுதிப் பாக்கள் எல்லீசரின் திருக் குறள் மொழிபெயர்ப்பில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

ஆதி நந்தவனப் பிரளயம், ஆதி நந்தவனப் பிரளய மீட்சி ஆகிய இருநூல் களை வேதக்கண் எழுதியதாக அறிகிறோம். 1868 -ஆம் ஆண்டு அச்சேறிய இந்நூல்கள் மில்டனின் வீடுபேறு இழப்பு, வீடுபேறு மீட்சி ஆகியவற்றின் மொழி பெயர்ப்பாகும். முதல் ஏடு 6 பகுதிகளையும், இரண்டாவது ஏடு 4 காண்டங் களையும் கொண்டுள்ளன.

### முப்பெரும் காப்பியங்கள்

இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய வளனது வரலாறு கூறும் தேம்பா வணியும், மோட்சப் பயணியாகிய 'ஆத்தும விசாரி' யின் கதை கிளத்தும் இரட்சணிய யாத்திரிகமும், இறைமகன் இயேசுவின் வரலாற்றுக்கூறுகளை எடுத்துமொழியும் சுடர்மணியும் தமிழ்க் கிறித்தவ முப்பெருங்காப்பியங்களாக மிளிர்கின்றன. தேம்பாவணியில், நாட்டுப்படலம் முதல் முடிசூட்டுப்படலம் முடிய முப்பத்தாறு படலங்கள் வருகின்றன. காப்பியத்தலைவன் வளனது திருவடிகளில் வானவர் முப்பத்தாறு மாலைகளை விரும்பிச் சாத்தும் நிகழ்ச்சி வாயிலாக இக்கணக்கீடு புலனாகிறது. இரட்சணிய யாத்திரிகம் 'முறைவைப்பா நிகழ்படலம் நாற்பத்தேழே'' என வரையறை கொண்டுள்ளது. சுடர்மணி

காப்பியத்துள் தூதுப்படலம் தொடங்கி ஆரோகணப்படலம் முடிய நாற்பத்தேழு படலங்கள் இடம் பெறுகின்றன. தேம்பாவணி அச்சேறிய முதல் தமிழ்க் காப்பியம் என்னும் பெருமை பொருந்தியது. இரட்சணிய யாத்திரிகம், ஆசிரிய ராலேயே பதிப்பிக்கப்பட்ட சிறப்புடையது. சுடர்மணி, நூலாசிரியர் மைந்தனால் பதிப்பிக்கப்பெற்ற ஏற்றம் கொண்டது. *3615* பாக்கள் கொண்ட தேம்பாவணி வீரமாமுனிவரால் *1721–1726*-ஆம் ஆண்டுகளில் ஆரியனூராம் கோனான்குப் பத்தில் எழுதப்பட்டது. *3776* பாக்கள் உடைய இரட்சணிய யாத்திரிகம், என்றி ஆல்பிரட் கிருட்டின பிள்ளையால் *1878-1892* ஆம் ஆண்டுகளில் பாளையங் கோட்டையில் ''நற்போதகம்'' இதழில் தொடர்ந்து எழுதப்பட்டது. *1201* விருத்தப் பாக்களுடன் விளங்கும் சுடர்மணி, பாண்டிச்சேரியில் ''சர்வ வியாபி'' இதழில் வெளிவர எழுதப்பட்டது. தேம்பாவணிக்கு வீரமாமுனிவர் காண்டப் பகுப்பு தரவில்லை! பதிப்பாசிரியர் துப்பியி அடிகளாரே அச்சிட வாய்ப்பாக *3* காண்டங்களாகப் பகுத்துக் கொண்டார். இரட்சணிய யாத்திரிகம் ஐந்து பருவங் களாகவும், சுடர்மணி நான்கு காண்டங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளன. சுடர் மணி காப்பியப் பெரும்பிரிவும் சிறுபிரிவும் மரியாரோக்கியநாதர் என்னும் அடிக ளாரால் அமைக்கப்பட்டனவாம்.

**கம்பரே மூவருக்கும் முன்னோடி**

''கல்வி சிறந்த தமிழ்நாடு — புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு''

என்னும் சுப்பிரமணிய பாரதியார் பாடலை நினைவூட்டும் வகையில், முப்பெரும் புலவரும் கம்பரையே முன்னோடியாகக் கொண்டுள்ளனர். வீரமாமுனிவர், ''*12016* பாக்கள் பாடிய கம்பர் *87* வண்ணங்கள் பாடிய கம்பர் பாராட்டப் படுகிறார். தேம்பாவணியில் *3615* பாக்கள் பாடிய நான், *90* சந்த வேறுபாடு களைத் தந்துள்ளேன்'' என்று கூறியுள்ளார். கிருட்டிணபிள்ளை தம் காப்பிய முகவுரையில், ''இந்நூலின் செய்யுள் நடை பெரும்பாலும் ஸ்ரீமத் கம்பராமா யணச் செய்யுள் நடையையும், அதன் போக்கையும் அநுசரித்தே இயன்ற மாத்திரம் அமைக்கப்பட்டது. ஏனெனில் கம்பராமாயணம் ஒன்றே கற்றோர் எவரும் வியந்து, புகழ்ந்து, மெச்சத்தக்கது'' என்பர். சுடர்மணி ஆசிரியர் ஆரோக்கியசாமி தம் முன்னுரையில், விருத்தப்பா யாப்பில் கம்பராமாயண நடையில் பாடத்தொடங்கிப் பால காண்டத்தைப் பாடி முடித்த வரலாறு கூறுகிறார்.

**காப்பிய இலக்கணக் கூறுகள்**

ஓமருடைய (Homer) எழுத்தோவியங்களான இலியது (Iliad) ஒதிசி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, அரித்தாட்டல் (Aristotle) காப் பியம் (Epic) என்பதற்கு இலக்கணம் வகுத்தார். கதையைத் தொகுத்துக் கூறும் காப்பியம் நாடகப்பாணியில் அமைய வேண்டும்; விலங்கின் உறுப்புக்கள் ஒன்றி இருப்பதுபோல, கதைப் பொருளும் பொருந்தி வரவேண்டும்; அது முதல், இடை, முடிவு என முப்பிரிவுகளுடன் இன்பம் மிக்கதாக மிளிர வேண்டும்; வரலாற்றிலிருந்து வேறுபடும் பெருங்காப்பியம், ஒரு குறிப்பிட்ட செயலைக்

கதையின் சுவைக்கேற்ப எடுத்தியம்பும். அவலநாடகம் போன்று, பெருங்காப்பிய மும் எளிதாகவோ, சிக்கல் நிறைந்ததாகவோ இருக்கலாம். அற உணர்வின் அடிப்படையில், பலவகை வருணனைகளுடன் படிப்பவர்க்கு அலுப்பு நேராத வகையில், பெருங்காப்பியம் விளங்க வேண்டும். மக்களை மகிழ்விக்கும் வியப் பூட்டும் நிகழ்ச்சிகளும் நடக்கக்கூடிய தென்று நம்பத்தக்க செயல்களும் இடம் பெறலாம்.

இராசசிம்ம பல்லவ வேந்தனின் அவைப் புலவரான ஆசாரியர் தண்டியின் 7-ஆம் நூற்ருண்டில் எழுதிய வடமொழி நூல் ''காவியாதர்சம்''. இந்நூலின் தமிழாக்கம் புத்தமித்திரர் எழுதிய ''வீர சோழியம்'' என்னும் இலக்கணநூலுள் 'அலங்காரப்படலம்' என ஐந்தாவதாக அமைந்துள்ளது. பின்பு தண்டியலங் காரம் தமிழில் 12-ஆம் நூற்ருண்டில் தோன்றியது. பெருங்காப்பியத்தின் இலக்கணத்தைத் தண்டியின் காவியாதர்சம் முதற் பரிச்சேதம் சுலோகம் 14 முதல் 19 முடிய எடுத்து மொழிகிறது. தண்டியலங்காரம் 8 முதல் 10 முடிய மூன்று நூற்பாக்களாகக் கூறுகிறது. காப்பியத்துக்கு வாழ்த்து, உறுதிப்பொருள், தன்னிகரில்லாத் தலைமை, வருணனைத் திறம், இல்லறச் செய்தி, அரசியல் வினைகள், பகுப்புமுறை, எண்சுவை ஆகிய எட்டுக் கூறுகள் வேண்டப்படுகின்றன. அறம், பொருள், இன்பம், வீடுபேறு ஆகிய நாற்கூறுகளும் உறுதிப்பொருட் களாம். தண்டியலங்காரம் தெரிவிக்கும் காப்பியக் கூறுகளை மாறனலங்காரம் (நூற்பா: 72-76), வச்சணந்திமாலை (40-43), நவநீதப்பாட்டியல் (62–65), சிதம்பரப் பாட்டியல் (41-42), பன்னிருபாட்டியல் (226) ஆகிய நூற்களும் ஏற்றுப் போற்றியுள்ளன.

**தேம்பாவணி**

சோசப்பு அடிசன், 'காப்பியத்தின் முதல் தேவை கதை' என்பர். இசுபானிய மொழியில் ஆகிர்தமரி அன்னைமரியின் ''பூமான் பழங்கதை உரைத்த வாறே'', வீரமாமுனிவர் தம் காப்பியத்துக்கு வளன் கதையைக் கொண்டார். எல்லா நற்பண்புகளாலும் நிறைந்து விளங்கும் சூசையை ''ஆரிய வளன்'' என்றே மாமுனிவர் குறிப்பிடுகிறார். வளனார் வரலாற்றை அடிப்படையாக்கி, அவரது பிறப்பு வளர்ப்பு திருமணம் ஆகியவற்றை எடுத்தியம்பி, தேவமைந்தனை ஏரோது கொல்ல எண்ணும்போது எசித்து நாட்டுக்குப் புறப்பட்டுச் செல்வதாகச் செப்பி, வழித்துணையாக வரும் வானவர் வாயிலாக இறையாற்றலை எடுத்துரைக் கும் பழைய ஏற்பாட்டுக் கதைகளைப் பொருத்தமுற விளக்கிக் கூற வைத்து, அறுபதாண்டு வாழ்ந்த வளன் வாயிலாகக் கிறித்தவ சமயக் கோட்பாடுகளை நிரல்பட நனிலச் செய்துள்ளார் வீரமாமுனிவர். ''எதிர்த் திருப்பம், தெளிவு, துயருறுதல் போன்ற உறுப்புக்களின் செறிவால் கலைச்சிறப்பு நிறைந்த கதைப் பின்னலை உடைய'' தேம்பாவணி நிறை காப்பியம் ஆகும். ''வையகத்தார் வானகத்தார் வணங்குகின்ற வரம்பெற்ற மதிவல்லோன்'' ஆகிய வளன் வானகத் திலும் முடிசூட்டப்பெறுகின்றார்.

சீரிய உலகம் மூன்றும் செய்து, அளித்து, அழிக்க வல்ல இறைவனைப் பணித்து போற்றிப் பாடத் தொடங்குகிறார் வீரமாமுனிவர். மேலும், ஆரிய வளன் தன் காதை அறமுதல் விளங்கச் சொல்ல விழையும் வீரமாமுனிவர்,

தேம்பாவணிக் காப்பியத்தையே போதனை நோக்குடைய அறவியற் கொள்கை நிறைந்த காப்பியமாக உருவாக்கியுள்ளார். ''ஆடா நிலையறத்து என் மார்பில் தேம்பாவணி யாவான் வாடா அருள் மகன்'' என்று போற்றப்படும் காப்பியத் தலைவனின் கதையைப் படிப்போர் ''திருவீட்டுயர்வார்'' என்று முடிக்கிறார் முனிவர். விடுபேற்றினை விரித்துச் சொல்ல, இறுதியில் உத்தானப்படலமும் முடிசூட்டுப் படலமும் அமைந்துள்ளன. காப்பியத் தலைவன் பிறப்பிலிருந்து இறப்புவரை அறத்தின் வடிவாக விளங்குவது பிற காப்பியங்களில் காணமுடியாத தனிப் பெருஞ்சிறப்பாகும். ''வையகத்துப் போர்வீரம் காட்டும் ஏனைய தலைவரைப் போலன்றி, கடவுளின் அருட்படை வீரராக வரும் வளன் வையகத் திலும் வானகத்திலும் பணியாற்றும் இணையற்ற தலைவராகத் திகழ்கிறார்.''

பாலத்தின் நாட்டின் ஒரு பகுதியாகிய யூதேயா சாக்கடலுக்கும் மத்திய தரைக்கடலுக்கும் நடுவே அமைத்து. வான்மழை பொழிவதால் நானிலமும் வளமும் நலமும் மிக்கவையாக மிளிர்கின்றன. சுந்தரச் சோலைகளும் அந்தமில் இன்பம்தரும் இயற்கைக் காட்சிகளும் நெஞ்சையள்ளும். யூதேயா நாட்டின் மார்பணியாக விளங்குவது எருசலேம். புண்ணிய பூமியாகிய எருசலேமை வானகம் ஒத்திருக்கிறதாம்,. ஆலயவருணனை, அகழிவருணனை, எசித்து நாட்டு நீல ஆற்று வருணனை, கதிரவன் எழுச்சி, கதிர் மறைவு ஆகிய வரு ணனைகள் குறிப்பிடத்தக்கவை. முப்பத்து மூன்று வயதுடைய வளன் பதினான்கு அகவையுடைய மரியளை மணந்து, இல்லறத்திலேயே துறவற வாழ்வை மேற் கொள்கிறார். ''ஈரறக் கண்ணாடியினான்'' என வளனும், ''கதிப்பால் காட்டும் கஞ்சனத்தாள்'' என மரியாளும் பாராட்டப்படுகின்றனர். ஏரோதரசன் ஆலோசனை, சோசுவன் வெற்றி ஆகியவையும் இடம் பெற்றுள்ளன. நாட்டுப் படலம் முதல் முடிசூட்டுப் படலம் முடிய முப்பத்தாறு படலங்களே வீரமாமுனிவர் தேம்பாவணியில் தந்த பகுப்பாகும். நூலை முதலில் பதிப்பித்த துப்புயி அடிக ளார் அச்சிட வாய்ப்பாக பன்னிரு படலங்கள் கொண்ட மூன்று காண்டங்களாக்கி னார். அவற்றை யூதேயாக்காண்டம், எசித்துச் செலவுக்காண்டம், வீடுபேற்றுக் காண்டம் என்று கதை அமைப்பைக் கொண்டு பெயரிடலாம். சோசுவன், சேதையோன், சஞ்சயன், மோயீசன், எலியாசு, ஆணரன், கருணையன், தோபியன் போன்ற சான்றோர் வரலாறுகள் கிளைக் கதைகளாக வந்து சுவை யூட்டுகின்றன.

தேம்பாவணியில் வளன் பிறப்பு ஈரறவாழ்க்கை முடிய உள்ள பகுதியே காப்பியத்தின் முகம்; இறைவன் திருப்பிறப்புப் பகுதி பிரதிமுகம்; எசித்துக்குச் சென்று வாழ்வது கருப்பம்; நசரேத்தூருக்குத் திரும்பி, குழந்தைநாதன் வளனா ரிடம் வரவிருக்கும் செய்தி சொல்லி மகிழ்வித்தது விளைவு; பிணிதேற்றுப் படலம் முதல் முடிசூட்டுப் படலம் முடிய உள்ள பகுதி வளன் பேரின்பம் துய்க்கும் துய்த்தலாம். எனவே, ''முகம் பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்னும் நாடக சந்திகள் நன்கு அமைந்ததோர் இனிய காப்பியம் தேம்பாவணி. இது தமிழ்க் காப்பியங்களின் இனிமைகள் எல்லாம் சேர்த்து வைத்த ஓர் இன்பப் பெட்டகம். மேனாட்டுக் காப்பியக் கருத்துக்களும், கிறித்தவச் சிந்தனை களும் நிறைந்த அருங்களஞ்சியம். பழைய, புதிய ஏற்பாடுகளும் கிறித்தவ மரபுகளும் ஒருங்கே அமைந்த வேதமணி விளக்கு''.

**இரட்சணிய யாத்திரிகம்**

திருப்பயணியான கிறித்தியானைக் காப்பியத் தலைவனாகக் கொண்டு, அவன் நாச நாட்டிலிருந்து பேரின்ப நாட்டுக்குச் செல்லும் செய்தியை விளம்புவதே இக்காப்பியப் பொருளாகும். விவிலியத் திருநூலாகிய சுருதி நூல் கற்ற பாவி கிறித்தியான், பேரழிவிலிருந்து விடு பட விழைந்து, குரு காட்டும் நெறியில், திருவருள் துணையுடன் புறப்படுகிறான். எழிற்சத்திரத்தில் தவமகளிர் நால்வருடன் பத்திவாழ்வின் பல்வேறு இயல்புகள் பற்றி அளவளாவி, சிலுவைத் திருப்பாடுகளைத் தெளிவாக அறிகிறான். பொருளாசை, முகப்புகழ்ச்சி, உறக்கம் ஆகியவை பத்திவாழ்வின் தடைக்கற்களாம். முத்தி நெறியில் சென்ற கிறித்தியானும் அவன் நண்பன் நம்பிக்கையும் இறுதியில் ஈடேற்றம் பெற்று, பொன்முடி சூட்டி இறைவனிடம் சேர்கின்றனர்.

ஆசிரியரே தம் முகவுரையில் மொழிவதுபோன்று இரட்சணிய சமயக் கொள்கைக்குப் பொருந்தாததும் தேவையற்றதுமாகிய சில உறுப்புக்களையும் புனைந்துரைகளையும் தவிர்த்துள்ளார். ''கூறிய உறுப்பிற் சில குறைந்தியலினும் வேறுபாடின்றென விளம்பினர் புலவர்'' என்று சான்று காட்டித் தம் காப்பியம் பெருங்காப்பியமேயாம் என்று எடுத்தோதுகிறார்.

முதல் ஏழு பாக்களின், மெய்ஞ்ஞான இன்பக் குன்றமாம் இறைவனைப் பாடிப்பரவி, எட்டாம் பாட்டில் அடியார் வணக்கம் விளம்புகிறார்; நூற்பொருளை எடுத்தியம்பும்போது, ஆன்மாக்களுக்கு இரட்சிப்பு நல்கும் மருந்தாகக் காப்பியம் துலங்கும் என்கிறார். ''வெறும் பொழுதுபோக்குக் கதையாகவோ, சிற்றின்பத் திறம் திருத்திய காதை'' யாகவோ எழுதவில்லை.

நிதானியும் நம்பிக்கையும் கிறித்தியானுடன் தலை மாந்தர் ஆவர். பாத்திரப் பெயர்களே அவர்தம் பண்பு நலனைப் பறைசாற்றுகின்றன. அறப்பகை, அறக்கிழவோன், விடாத கண்டன் என்றெல்லாம் நடைமுறை வாழ்வியலில் தோன்றும் வாழ்க்கை விளக்கச் சித்திரங்களைச் சந்திக்கிறோம். திருவள்ளுவரின் குறட்பாக்களை எழுபது இடங்களில் எடுத்தாளும் நூலாசிரியர், திருக்குறளை ''இயற்றமிழ் முதுமொழி''என்று போற்றிப் புகழ்கிறார். உறக்கத்தின் கேடுகளைக் கூறிவரும்போது, உலகின் வறுமைக்கெல்லாம் அதுவே காரணம் என்கிறார்.

''உறக்கமே இகபர நன்மைக்குட் பகையாகும்
உறக்கமே சுயமுயற்சியை ஒருங்கறத் துடைக்கும்
உறக்கமே பகைக்கொரு துணையாயுயிர் ஒழிக்கும்
உறக்கமே வறுமைக்கெலாம் காரணம் உலகில்''
— சோகபூமிப்படலம் 10

தேம்பாவணியில் தொண்ணூறு சந்தங்கள் உண்டு என்பர்; இரட்சணிய யாத்திரிகத்தில் தொண்ணூற்றாறு வகைச் சந்தங்கள் உள்ளன. காப்பியத்துக்குக் கவினும் தெளிவும் செறிவும் நல்கும் நானூற்றுக்கு மேற்பட்ட அணிகள் மிளிரக் காணலாம்.

கிரந்த எழுத்துக்களை மனம்போன போக்கில் தம் பாடல்களில் இவர் கலந்துள்ளார்.

*1894* மே முதல் நாளன்று நூலாசிரியர் தம் காப்பியத்துக்கு எழுதிய முகவுரையின் முடிவில், ஆங்கிலமொழி கற்கும் பலர் தாய்மொழியாம் தமிழைப் புறக்கணித்து வருவதைக் குறித்துப் பெரிதும் வருந்திக் கூறியுள்ளது கருதத் தக்கது.

**சுடர்மணி**

தேம்பாவணியும் இரட்சணிய யாத்திரிகமும் இயேசு பெருமானின் வர லாற்றை முழுமையாகக் கூறவில்லை. தேம்பாவணியில் பத்தாவது படலமாகிய மகவருள் படலம் தொடங்கிச் சில படலங்களில் இயேசுவின் வரலாறு வீறுடன் விளங்குகிறது. இரட்சணிய யாத்திரிகத்தில் இரு படலங்களில் இயேசுவின் செய்தி இடம்பெறுகிறது. ''இயேசுவின் வரலாற்றை முழுமையாகக் கூற வேண்டும்'' என்ற எண்ணத்துடன்தான் சுடர்மணிக் காப்பியம் உருவாயிற்று.

அணு முதல் எல்லாம் ஆக்கிக் காத்துவரும் இறைவன் அணுவளவு உருவு மில்லானாக விளங்குகிறான் என மொழிந்து, இறைமகன் மீட்பை நூலாய் ஆக்கிட அவன் திருவடி பணிந்து வாழ்த்தித் தொடங்குகிறார், நூலாசிரியர். மேலும் பதுவைப்பதியராகிய அந்தோணியாருக்குக் குரு வணக்கம் செலுத்துகிறார்.

இசரவேலர்தம் அரசனாகப் பிறக்கும் இயேசு மாட்டுக்குடிலில் பிறந்த மைக்குக் காரணம் கூறும்போது, ஆயர் உரையாடலாகவே அமைக்கிறார். ''அழிந்திடும் மனிதன் கட்டி ஆவலாய் வாழும் வீட்டில் அழிவிலான் அவதரித்தல் அழகன்று''. யூதர்க்கென்றே தோன்றிய தவவலி அரசன் தன்னிகரில்லாத் தலைவனாகத் திகழ்கிறார். சூசையும் மரியும் சக்கரியாசும் எலிசபெத்தும் திரு முழுக்கு அருளப்பரும் பிறரும் இயல்பான மாந்தராகவே வரக் காண்கிறோம். அருளப்பரின் அருளுரை, இருதுகிலுடையோரும் பெருகிய உணவைக் கொண் டோரும் ஈந்து வாழத் தூண்டுகிறது; வரி பெறுவோர் கூட்டி வாங்காதிருக்கவும் நாடு காப்போர் நீதி காத்திடவும் வேண்டுகிறது.

இயேசுவின் மலைப்பொழிவு மூன்று பகுதிகளாக எடுத்துரைக்கப்படு கிறது. எட்டுப்பேறுகள், நான்கு கேடுகள், உலகின் உப்பும் ஒளியும், பொய்யும் மெய்யும், மெய்ப்பொருளும் பொய்ப்பொருளும், இருவகை வாழ்வு என்றெல்லாம் அவை பகுத்துரைக்கப்படுகின்றன.

இயேசு சொன்ன உவமைகள் உவமப்படலத்தில் தொடுத்து எடுத்துரைக்கப் படுகின்றன. விதை விதைக்கிறவன், தகரைவித்து, கடுகுமணி, புளித்த மா, வணிகன், முத்து, வலை, செல்லாக்காசுகள் என அவை அடுக்கப்படுகின்றன. இறையரசு பற்றிய செய்தி எட்டுப்பாக்களில் சுட்டிக்காட்டப்படுகிறது. சிலுவைப் படலம் இயேசு சிலுவை சுமந்து சென்ற வழி பற்றியும், சிலுவையில் அறையப் பட்டது, ஆடையின் மேல் சீட்டுப் போடப்பட்டது. சிலுவை மொழிகள் ஆகி யவை பற்றியும் உருக்கமாக விளம்புகிறது.

# வேதநாயகரின் 'சித்தாந்த சங்கிரகம்'

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி
தலைவர், தமிழ் இலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 5

*தாது வருஷத்தில் நேர்ந்த கொடிய பஞ்சத்தால் ஜனங்கள் பலவகையான துன்பங்களை அடைந்தனர். அப்பொழுது வேதநாயகம் பிள்ளை தாமே பொருளுதவி செய்தும், பல பிரபுக்களிடம் சொல்லிப் பொருளுதவி செய்வித்தும் கஞ்சித் தொட்டிகளை அமைப்பித்து நாள்தோறும் பல பேர்களுக்குக் கஞ்சி வார்க்கச் செய்தார்; அதனால் பல ஏழைகள் இன்புற்றனர். இந்தத் தர்மச் செயலைக் கண்ட (கோபாலகிருஷ்ண) பாரதியார் உள்ளம் குளிர்ந்து வேதநாயகம் பிள்ளையின் மீது 'நீயே புருஷமேரு'' எனத் தொடங்கும் ஒரு கீர்த்தனத்தைப் பாடினார். பாரதியார் இயற்றிய கீர்த்தனங்களுள் இவ்வொன்றே நரஸ்துதியாக உள்ளது. வேறு எந்தச் சமயத்திலும் யார்மீதும் பாடியதாகத் தெரியவில்லை. — (டாக்டர் உ. வே. சாமிநாதையர் 'கோபாலகிருஷ்ண பாரதியார்' — பக்கங்கள் 53—54.)*

தொண்டை கிழித்துக் கொண்டு
சண்டை செய்யும் வக்கீல்கள்
அண்டையில் இருந்து நம்
மண்டையை உடைத்தால் —
ஆண்டவனை நினைப்ப தெப்போது நெஞ்சே!
ஐயன் பதத்தை நினைப்பதெப்போது நெஞ்சே!
*— (பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுபிள்ளை 'கிறிஸ்தவத் தமிழ்த் தொண்டர்' 1946/1957 — பக்கம் 53.)*

As District Munsiff, he (Vedanayagam Pillai) was very popular and discharged his duties with great credit and ability, at a time when Munsiffs of the present type were rare. He was distinguished also for his independence; he once declined to put up with the treatment accorded to him by a judge, who was then well known for his idiosyncrasies and who is now practising in the Madras Bar. – The Hindu, 24th July, 1889.

*(வேதநாயகர் மறைந்த மூன்றும் நாள்)*

1. முதல் தமிழ் நாவல் படைத்த முழுநிலா — இன்றும் சங்கத் தமிழிசைக்கும் தெய்வத்திரு நெறிக்கும் பேரூற்றாய் விளங்கும் மறுமலர்ச்சித் தமிழின் — சமரசத்தின் — விடிவெள்ளி — இந்து, கிறித்துவ ஒருமைப்பாட்டின் கலங்கரை விளக்கம் — கீர்த்தனைத் தமிழின் கீர்த்தி — ச. வேதநாயகம் பிள்ளை (11—10—1826/21—7—1889) ''தம் இருப்பத்திரண்டாம் வயதில் திருச்சிராப் பள்ளியில் வழக்குமன்றத்தில் 'ரிக்கார்டு கீப்பர்' ஆக இரண்டாண்டுகளும், பிறகு மாவட்ட வழக்கு மன்றத்தின் மொழிப்பெயர்ப்பாளராகவும் பணி புரிந்தார்.

1856-ல் மாவட்ட முன்சிப்பு வேலையில் தரங்கம்பாடியிலமர்ந்தார். பிறகு, சீகாழியிலும் மாயூரத்திலும் வேலை பார்த்தார். 1872ல் ஓய்வு பெற்றார். பிறகு மாயூரம் நகரசபைத் தலைவராகத் தொண்டாற்றினார்''.[1]

2. பதினாறாண்டுக் காலம் (1856-1872) முன்சீப் பதவியில் இருந்த வேதநாயகர் சற்றேறப்ப கால் நூற்றாண்டுக்காலம் (1848–1872) நீதிமன்றத் தொடர்புடையவராய்த் திகழ்ந்தார். மேற்கண்ட கலைக்களஞ்சியக் குறிப்பாலும் இது விளங்கும். இத்தகைய நீண்ட நீதித்துறை தொடர்புடையவர் தம் தாய் மொழித் தமிழில் உயர்நீதிமன்ற 'தீர்ப்புகள் திரட்டு' ஒன்றின் தேவையை உணர்ந்து முதன்முதல்[2] அத்தகைய தொகுப்பு ஒன்றைச் 'சித்தாந்த சங்கிரகம்' என்ற பெயரில் 1862இல் வெளியிட்டுள்ள வீறு போற்றத் தக்கதாம். சட்டத் தமிழ் முன்னோடியான இந்நூல் – முதல் நூல் – வேதநாயகர் பற்றி ஆய்வு நடத்திய பலருக்கும் கிட்டாமல் இருந்து அவருடைய பேரர் வே. ஞா. ச. இருதயநாதன் வாயிலாக இப்போது கிட்டியுள்ளது. இந்த நற்செய்தியைச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத்துறை 30–10–'80-ஆம் நாள் வேத நாயகர் நினைவுச் சிறப்புக் கூட்டம் ஒன்றின் வாயிலாக உலகுக்கு விளம்பியது.

இக்கட்டுரையில் வேதநாயகரின் 'சித்தாந்த சங்கிரகம்' நூலின் சில பகுதிகள் அப்படியே தரப்படுவதுடன் நூல் பற்றிய சில ஆய்வுக் குறிப்புகளும் அறிமுகமாகத் தரப்படுகின்றன.

முதலாவது 'சித்தாந்த சங்கிரகம்', நூலின் உள் முகப்புத் தாள் வருமாறு:

A
Translation in Tamil
of the
Rulings of the Sudder Udalut
From 1805 to 1861
By S, Vedanayagam Pillai
District Munisiff of Mayavaram

௲அஉரு முதல் ௲அஉளகூயக வரையில் உள்ள
சதர்க்கோர்ட்டாரவர்களின்

**சித்தாந்த சங்கிரகம்**

மாயூரம் தாலுகா முன்சிப்
ச. வேதநாயகம் பிள்ளையால்
செய்யப்பட்டது.

printed at the Scottish Press
By Graves and Co
1862
(Copy right reserved)

'சதர்' என்ற உருதுச் சொல்லுக்குத் 'தலைமை' என்பது தலைமைப் பொருள். இது பற்றி Manual of Administration of the Madras Presidency தரும் குறிப்பு பின்வருமாறு:

**Sudder:**

Sadakadalat, Hindi, from above (+ ada lat, an account). The supreme court, the name of the highest court established under the East India Company in each presidency, and consisting of two sides, known as the sudder diwanny adault or Chief Civil court and the sudder nizaumat on Fujdarry adaulut, the Chief Criminal court. The sudder adauluts have been replaced by High courts (adaulut).

நூலின் தமிழ் முகவுரை வருமாறு:

> வக்கீல்களும், வியாஜியக்காரர்களும் நியாய பரிபாலக விஷயத்தில் எவ்வகையிலாவது சம்பந்தப்பட்ட இதரர்களும், சதர்க்கோர்ட்டாரவர்களுடைய சித்தாந்தங்களை ஸ்பஷ்டமாக அறிந்திருக்க வேண்டியது அவசியமென்பது ஸகலரும் அங்கீகரிக்கும்படியான விஷயமே தவிர வேறல்ல. ஆனால் அந்த விதிகள் அநேக புஸ்தகங்களில் சிதறிக் கிடக்கிறபடியால், இங்கிலீஷ் பாஷை தெரிந்தவர்களும் அந்தப் புஸ்தகங்கள் ஸ்வாதினம் உள்ளவர்களுங்கூட அந்த விதிகளை அறிந்து கொள்வது மஹா பிரயாசமாயிருக்கின்றது. அப்படியிருக்க இங்கிலீஷ் தெரியாத வியாஜியக்காரர்கள் சதர்க்கோர்ட்டின் சித்தாந்தங்களை வாசித்து அந்தப்படி அநுநஷ்டாநம் செய்வது அசக்கியமானபடியால், நியாயப் பிரமாணப்படி செல்லாதென்று சதர்க்கோர்ட்டாரவர்களால் பல பிரகிருதங்களில் நிஷிதிதம் செய்யப்பட்டிருக்கிற ஸ்வரூபத்தையுடைய வியவகாரங்களுடனேயும் சம்வாதங்களுடனேயும் கட்சிக்காரர்கள் அடிக்கடி கோர்ட்டுக்கு வருவதும் அதனால் விருதாவிரயத்திற்கும் சிரமத்திற்கும் அசௌக்கியங்களுக்கும் அவர்கள் உள்ளாவதும் ஆச்சரியமான காரியமல்ல. இந்த அசந்தர்ப்பங்களையெல்லாம் அறியும்படியான சமயங்கள் என்னுடைய முன்சீப் உத்தியோக மூலமாக எனக்குக் கிடைத்திருப்பதால் 1805 ௵ முதல் 1861 ௵ வரையுள்ள சதர்க்கோர்ட்டின் ஸித்தாந்தங்களைத் திராவிட பாஷாரூபமாகச் செய்வது இங்கிலீஷ் தெரியாத நியாயாதிபதிகளுக்கும், வக்கீல்களுக்கும் கட்சிக்காரர்களுக்கும் பிரயோஜனகரமாயிருக்குமென்றெண்ணி, அந்தப்படி பாஷாந்தரம் செய்ய உடன்பட்டேன். சற்றேறக்குறைய 69 ௵ காலம் வரையில் விரிந்திருக்கிற மேற்படி ஸித்தாந்தங்களைப் பதம்பதமாய்ப் பூரண பாஷியம் செய்கிறதாயிருந்தால் விஸ்தாரமான பரிசிரமத்திற்கும் வியார்த்தகால ஷேபத்திற்கும் ஹேதுவாகுமானதால், அந்தச் சித்தாந்தங்களில் சர்வலோக உபயுக்தமான விதிகள் அடங்கிய பாகங்களை மட்டும் மொழி பெயர்ப்பது போதுமென்றெண்ணி அந்தப்படி சங்கிரகம் செய்திருக்கிறேன். சில விஷயங்களில் அர்த்தம் பிரகாசமாகும் பொருட்டு வியவகார விஷயங்களைச் சங்கேஷபமாயெடுத்துக் காட்ட வேண்டியது அகத்தியமென்று நினைத்து, அந்தப்படி விவரித்திருக்கிறேன்.

ஒவ்வொரு விதியின் அந்தத்தில் அதைச் சேர்ந்த வியாஜிய இலக்கமும் வருஷமும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு விஷயத்திற்குச் சம்பந்தமாக விதிகள் பல அதிகாரங்களில் கலந்து வருவதால், அந்த விதிகளையெல்லாம் ஒவ்வொரு அதிகாரத்திலும் அநாவசியமாய்ப் புநருக்தி செய்யாமலிருக்க வேண்டியதற்காகவும், யாவரும் சூக்ஷுமகிரஹணம் செய்யும்படியாகவும் ஒவ்வொரு அதிகாரத்தின் அடியில் அதற்கு அநுபந்தமான விதிகளை இன்னின்ன அதிகாரங்களில் காணலாமென்கிற விவரத்தை அகராதி வரிசையாய்க் காட்டியிருக்கிறேன். சதர்க் கோர்ட்டாரவர்களால் நூதனமாய்ப் பிரசுரஞ்செய்யப்பட்ட ''ரூல்ஸாப் பிராக்டைஸ்'' என்கிற அனுஷ்டாந விதிகளை அவைகளுக்குத் தகுதியான இடங்களில் அநேகமாய்ச் சேர்த்திருக்கிறேன். சந்தேஹம் ஜனிக்கத்தக்க அநேக வியாஜியங்களுக்குத் தத்துநுகுணமான மூல விதிகள் இந்தக் கிரந்தத்தில் அடங்கியிருப்பதுந்தவிர, ஒவ்வொரு அதிகாரமும் அகராதிக் கிரமமாய்ச் சேர்க்கப்பட்டிருப்பதால், இந்தக் கிரந்தத்தில் எந்தப் பாகத்தைப் பார்க்க வேண்டியிருந்தாலும், வாசிக்கிறவர்கள் எளிதாய்க் கண்டு கொள்வார்களென்று நம்புகிறேன்.

1862 ஹு முதல் அதற்குப் பிந்தின வருஷங்களின் ஸித்தாந்தங்களைப் பிரதி வருஷாந்தத்திலும் பாஷாந்தரம் செய்து பிரசித்தம் செய்ய அபீஷ்டம் உள்ளவனுயிருக்கிறேன்.

மாயூரம் 1862 ஹு
செப்டம்பர் மீ 5 உ

ச. வேதநாயகம் பிள்ளை
மாயூரம் முன்சீப்

நூலின் ஆங்கில முகவுரை வருமாறு:

## PREFACE

The necessity of an intimate acquaintance with the Rulings of the Sudderudault on the part of Vakeels, suitors, and others who are in any way connected with administration of Justice, cannot fail to be universally acknowledged. But these Rulings are interspersed through so many volumes, that even those who are familiar with the English Language, and have copies of those volumes within their reach, experience much difficulty in making themselves at home with the principles and rules laid down therein. Under these circumstances, it is not to be expected that parties unacquainted with the English Language, will ever attempt a study of the Sudder decisions, and regulate their procedure in conformity thereto; and it is therefore not a matter of surprise that these parties should frequently rush into courts with such claims and pleas as have been repeatedly declared by the Sudder Court to be unsustainable in law and they expose themselves to the risk of unnecessary expense, trouble and other inconveniences. My position as a Monsif, having afforded me frequent opportunities of observing all these anomalies, I have been induced to undertake the translation, in Tamil, of the Sudder rulings from 1805 to 1861, for

the benefit of those judicial officers, Pleaders and parties, who are ignorant of the English Language. From a conviction of the immense labour and useless waste of time involved is the task of translating, verbatim, the Sudder decisions which extend over a period of nearly 60 years, I have contented myself with the translating only such parts of them embrace Rulings capable of universal application, except in some cases where, for the sake of perspicuity, I have deemed it necessary to give an outline of details. At the end of each Ruling, the No. and year of the suit to which it relates, are given. To avoid unnecessary repetitions and for the purposes of easy reference, I have annexed to each chapter an alphabetical list showing the Nos. of all the rulings bearing on the subject of that chapter, though they may have been inserted in different chapters. I have also, in proper places brought in a great portion of the Rules of practice recently promulgated by the sudder court.

This work will be found to contain precedents enough to meet a great majority of cases in which doubts generally arise; and it is hoped that the alphabetical arrangement of the subject which I have adopted, will facilitate reference to any part of the work. It is my intention to publish the translation of the Rulings of 1862 and subsequent years at the end of each year.

Mayaveram S. VEDAPILLAI NAYAGUM
5th September 1862

இவ்விரு முகவுரைகளையும் ஒப்புநோக்கி ஆய்தல் மொழி பெயர்ப்புத் திறம் அறியவும் உதவும்; வேதநாயகர் சட்டத்தமிழ் முன்னோடி என்பதையும் அவ்வாறு அவர் ஆதற்கு வாது செய்யும் மக்கள் மீதும் வைத்த அன்பே காரணம் என்பதும் விளங்கும். ஆம். மக்களுக்காகவே மொழியும் பிறவும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் உரைநடையில் வடமொழி செல் வாக்கு மிகுந்திருந்தது வெளிப்படை. இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் காற்கூறில் வெளிவந்த பாரதிதாசன் பாடல்களிலேயே பாரதியார் பாட்டிற்குக் குறையா வகையில் வடமொழிச் செல்வாக்கு வலுப்பெற்றிருத்தல் ஒப்பு நோக்கி ஓரத் தக்கது.

இனி, பின்வரும் வரிசை எண் (இது மூலத்திலும் இல்லாதது) தரப்பட்ட அட்டவணை தமிழக அரசின் இரு சட்டச்சொல் அகராதிகளோடு (1968 — 1979) வேதநாயகரின் சட்டச் சொற்றொகையை இணைத்துக் காட்டும். இது தமிழ்க் கலைச் சொல்லாக்க வளர்வு — வீழ்வு இயல்புகளை ஒப்பு நோக்கப் பெரிதும் பயன்படும். இப்பட்டியலில் சித்தாந்த சங்கிரகம் நூலில் தமிழிலும் ஆங்கிலத் திலும் தரப்பட்டுள்ள சொற்களில் சட்டப் பொருண்மை மிக்க சொற்கள் மட்டுமே தேர்வு செய்யப்பட்டுள்ளன.

## 4. ஒப்புநோக்குப் பட்டியல்

| வரிசை எண் | வேதநாயகர் எடுத்தாண்ட ஆங்கிலச்சொற்கள் | வேதநாயகரின் தமிழ் ஆக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1968) தரும் தமிழாக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1979) தரும் தமிழாக்கம் |
|---|---|---|---|---|
| 1. | Account | | பற்றுவரவுக் கணக்கு | கணக்கு |
| 2. | Action | | வழக்கு, நடவடிக்கை | செய்கை செயல், நடவடிக்கை வழக்கு |
| 3. | Acts | | செயல், செய் சட்டம், இயற்றிய சட்டம் | சட்டம், செய்கை, செய் சட்டம் |
| 4. | Admission | அங்கீகாரம் | *ஒத்தேற்பு | அனுமதித்தல்; ஏற்புரை |
| 5. | Adoption | ஸ்வீகாரம் | * மகவேற்பு; தத்து எடுப்பு | சுவீகாரம்; தத்து |
| 6. | Agent | காரியஸ்தன் | * முகவர், ஏஜென்ட் | முகவர் |
| 7. | Agreement | உடன்படிக்கை | உடன்பாடு | இணங்குதல், உடன்பாடு |
| 8. | Alienation | பந்தகம் | * மாற்றுக்கம். பராதீனம் | பராதீனம் |
| 9. | Ancestral property | பூர்வார்ஜிதம் | *Anchestor மூதாதையர் | |
| 10. | Appeals from Decrees | அப்பீல் | *தீர்ப்பாணைமேல் மேன் முறையீடு | மேல் முறையீடு |
| 11. | Appeals from orders | உத்தரவின்மேல் அப்பீல் | கட்டளைமேல் மேன்முறையீடு | |
| 12. | Attachment | ஜப்தி | * பற்றுகை, ஜப்தி | ஜப்தி |
| 13. | Bond | கடன் பத்திரம் | * பிணைமுறி; பாண்டு | பத்திரம் |
| 14. | Boundaries | | எல்லைக் கோடு | எல்லை; எல்லைக்குறி |
| 15. | Breach of trust | நம்பிக்கைத் துரோஹம் | பொறுப்புரிமை அமைப்பு மீறல் | நம்பிக்கை மோசடி |
| 16. | Bribery | லஞ்சம் | *கையூட்டு, கைக்கூலி லஞ்சம் | லஞ்சம் |
| 17. | Cassavurgum Tennure | காசாவர்க்கம் | | |
| 18. | Caste | ஜாதி | | சாதி |

| | | | | |
|---|---|---|---|---|
| 19. | Cattle | கால்நடை | | கால்நடை |
| 20. | Champerty | | *பங்கு விழை வழக்குதவி, சாம்பர்ட்டி | |
| 21. | Civil Judge | சிவில் ஜட்ஜ் | * Civil உரிமையியல் | Civil = உரிமையியல் |
| 22. | Compromise | சமாதானப் பத்திரிகை | * ஒத்திசைவு | |
| 23. | Conditional sale | அவதிக் கிரயம் | * condition நிபந்தனை; கட்டு வரம்பு ஒப்பந்தம் | Condition நிபந்தனை ஒப்பந்தம் |
| 24. | Contract | | ஒப்பந்தம் | ஒப்பந்தம் |
| 25. | Costs | செலவு | வழக்குச் செலவு; செலவுத் தொகை, | கட்டணம், செலவுத் தொகை |
| 26. | courts | கோர்ட்டுகள் | *நீதிமன்றம், முறை மன்றம் | *நீதி மன்றம் |
| 27. | crime | குற்றம் | குற்றம் | குற்றம் |
| 28. | Damages for Defamation | மாந நஷ்டம் | *Damages இழப்பீடு | Damages = இழப்பீடு |
| 29. | Deed of Sale | | * Deed ஒப்பாவணம் ஒப்புநோக்குக Document ஆவணம் | ஆவணம் (ஒப்புநோக்குக Document பத்திரம்) |
| 30. | Escheat | ராஜஸ்வதந்தரம் | -உறுபொருளடைவு; அரசு உறுபொருள் | வாரிசின்மையால் அரசுடைமையாகும் சொத்து |
| 31. | Estoppel | அங்கீகார விபரீதம் | *முரண்தடை | *மறுப்புத் தடை |
| 32. | Evidence | | சான்று, சாட்சியம் | சாட்சியம், சான்று |
| 33. | Exchange of lands | பரிவர்த்தனை | Exchange பரிமாற்றம் பர்வர்த்தனை | Exchange = பரிமாற்றம் |
| 34. | Execution of Decrees | தீர்ப்பு நிறைவேற்றம் | Execution நிறைவேற்றம் | Execution = நிறைவேற்றம் |
| 35. | Fine | அபராதம் | தண்டப்பணம், அபராதம் | அபராதம் |
| 36. | Fraud | மோசம் | மோசடி | மோசடி |

| வரிசை எண் | வேதநாயகர் எடுத்தாண்ட ஆங்கிலச்சொற்கள் | வேதநாயகரின் தமிழ் ஆக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1968) தரும் தமிழாக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1979) தரும் தமிழாக்கம் |
|---|---|---|---|---|
| 37. | Gift | தானம் | *கொடை (ஒப்புநோக்குக Donor கொடை அளிப்பவன்) | கொடை (ஒப்புநோக்குக Donation = நன்கொடை) |
| 38. | Government Vakeel | கவர்மென்டு வக்கீல் | Government அரசுமுறை, அரசு, ஆட்சித்துறையினர் | Government = அரசாங்கம் |
| 39. | Guardian | போஷகன் | காப்பாளர், கார்டியன் | காப்பாளர், பேணுநர் |
| 40. | Immemorial Waste land | அநாதித்தரிசு | Immemorial தொல்வழக்காறு | |
| 41. | Interest | வட்டி | (1) நலன் (2) வட்டி | அக்கறை, உரிமை, நலன், வட்டி, பாத்தியதை |
| 42. | Judgement and Decree | சித்தாந்தமும் தீர்ப்பும் | Judgement தீர்ப்புரை, தீர்ப்பு Decree தீர்ப்பாணை | கருத்து, தீர்ப்பு, நிதானிப்பு முடிவு. Decree = தீர்ப்பாணை |
| 43. | Jurisdiction | அதிகார வரம்பு | அதிகார வரம்பு | அதிகாரம், அதிகாரவரம்பு |
| 44. | Landlords and Tenants | | Landlord நில மேலாளர் Tenant நிலக்குடியானவர் | Landlord = நிலக்கிழார் நிலன் கவான்தார் Tenant = குடியாள்; குத்தகைதார், வாடகைக்காரர் வாடகைக்கு எடுப்போர் |
| 45. | Lease | குதுவை | குத்தகை | குத்தகை |
| 46. | Limitation | கால நிர்ணயம் | கால வரையறை | |
| 47. | Lottery | அதிர்ஷ்டச்சீட்டு | *பகடைப்பரிசு முறை, லாட்டரி | |
| 48. | Magistrate | மாஜிஸ்திரேட்டர் | குற்றத்துறை நீதிபதி, மாஜிஸ்திரேட் | |

| | | | | |
|---|---|---|---|---|
| 49. | Maintenance | ஜீவநாம்சம் | *வாழ்க்கைப் பொருளுதவி ஜீவனும்சம் | பராமரித்தல், பராமரிப்பு பேணுதல், வைத்துவிடுதல், ஜீவனும்சம் |
| 50. | Marriage | திருமணம் | திருமணம்; மணவினை | திருமணம் |
| 51. | Martial Law | யுத்தப் பிரமாணச்சட்டம் | *படைத்துறை ஆட்சி | |
| 52. | Minor | பாலன் | *உரிமை வயது வராதோர் இளவர் | இளையர் |
| 53. | Mortgage | ஒற்றி | அடைமானம் | அடமானம் |
| 54. | Oath | பிரமாணம் | ஆணையுறுதி, பிரமாணம் | உறுதிமொழி, பிரமாணம் |
| 55. | Partners | கூட்டாளி | கூட்டாளிகள் | கூட்டாளிகள் |
| 56. | Pauper suits | பாப்பர் | *வழக்கு, வறியர், பாப்பர் | |
| 57. | Penalty | | தண்டப்பணம், முறிவு ஈட்டுப் பணம் | தண்டம், தண்டனை |
| 58. | Pension | உபகாரச் சம்பளம் | | ஓய்வூதியம் |
| 59. | Plaint | பிரியாது | *வழக்குரை | பிராது |
| 60. | Plea | கக்ஷி | *எதிர்உரை, எதிர்வாதம் | கோரிக்கை; வழக்கு; வாது |
| 61. | Pleader | பிளீடர் | Pleading வாதுரை (ஒப்பு நோக்குக: | வாதுரைஞர் Advocate = வழக்கறிஞர்) |
| 62. | Pledge | அடகு | அடகு | அடகு |
| 63. | Possession | அநுபவம் | உடைமை | அனுபோகம், வைத்திருத்தல், கைவசம், வசம், சுவாதீனம் |
| 64. | Pre-emption | பிரதமக் கிரய பத்திரம் | வாங்கு முன்னுரிமை | |
| 65. | Riot | கலகம் | கலகம் | கலகம் |
| 66. | Sale | கிரயம் | *விற்பனம்; விற்பனை | விற்பனை |
| 67. | Security and Surety | ஜாமீன் | *பிணையம்; பிணையாள் | உத்தரவாதம்; காப்புறுதிப் பத்திரம்; பாதுகாப்பு, பிணையம், ஜாமீன் |

| வரிசை எண் | வேதநாயகர் எடுத்தாண்ட ஆங்கிலச்சொற்கள் | வேதநாயகரின் தமிழ் ஆக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1968) தரும் தமிழாக்கம் | தமிழக அரசின் சட்டச் சொல் அகராதி (1979) தரும் தமிழாக்கம் |
|---|---|---|---|---|
| 68. | Special Appeal | விசேஷ அப்பீல் | *Special தனிமுறை | Special = சிறப்பான தனிப் பட்ட |
| 69. | Stamp | முத்திரைக் கடிதம் | | முத்திரைவில்லை |
| 70. | Succession | | *உரிமை இறக்கம் | வழிமுறை, வாரிசுமுறை |
| 71. | Supreme Court | சுப்ரீம் கோர்ட்டு | *உச்சநீதிமன்றம் சுப்ரீம் கோர்ட் | உச்ச நீதிமன்றம் |
| 72. | Tenants | குடிகள் | நிலக்குத்தகையாளர் | குடியாள், குத்தகைதார், வாடகைக்காரர், வாட கைக்கு எடுப்பவர் |
| 73. | Theft | களவு | திருட்டுக் குற்றம் | களவு; திருட்டு. |
| 74. | Undivided Family | அவிபக்த குடும்பம் | *கூட்டுக் குடும்பம், அவி பக்த குடும்பம் | |
| 75. | Usage | | வழக்காறு | வழக்காறு |
| 76. | Village Offices | கிராம உத்தியோகங்கள் | Office அலுவலுரிமை | கிராம அலுவலர் |
| 77. | Will | உயில் சாசனம் (மரண சாசனம்) | விருப்புறுதி, உயில் | உயில், மரண சாசனம், விருப்பம் |
| 78. | Witnesses | சாக்ஷி | சாட்சி, சான்றுரையர் | |

வேதநாயகரின் 'சித்தாந்த சங்கிரகம்' நூலைச் சட்டத் தமிழ் வல்லுநர் திரு மா. சண்முகசுப்பிரமணியம் (தமிழ்நாடு அரசாங்கத்துத் தமிழ்ச் சட்டத்துறை ஆட்சிமொழி ஆணைக்குழு முன்னாள் செயலுறுப்பினர்) அவர்களிடம் 20–12–80-ஆம் நாள் காட்டி அதன் நலம் பற்றி அளவளாவியபோது அவர் வரைந்து கொடுத்த கருத்து வருமாறு:

''நீதி மன்றங்கள் எழுதும் தீர்ப்புக்களின் (1) இரு தரப்பினர் கூறும் விவரங்களும் (2) அவரவர் தம் சார்பிற்குச் சாதகமாகக் காட்டும் கூறுகளும் (3) வழக்கு விசாரணையின்போது இடப்பட்ட சாட்சியமும், (வாய்மொழி ஆவணச் சாட்சியம் இரண்டும்), (4) சாட்சியத்தையும் பிற கூறுகளையும் ஆய்ந்தபின் நீதிமன்றம் கொள்ளும் முடிவும்,(5) அந்த முடிவுக்கான காரணங்களும் விரிவாகக் காணப்படும்.

ஒரு வழக்கில் நீதி மன்றம் கொள்ளும் முடிவுக்கான காரணங்களைக் கூறும்பொழுது, சட்டக் கோட்பாடுகள் (Principles of Law) விவரிக்கப் படுகின்றன. எல்லாத் தீர்ப்புகளிலும் சட்டக் கோட்பாடுகள் கூறப்பட வேண்டும் என்ற தேவை எழுவதில்லை. சில வழக்குகளில் மட்டுமே அத் தேவை எழுகின்றது. ஒரு வழக்கில் ஏற்படும் முடிவு அந்த வழக்குத் தரப் பினர்களை மட்டுமே பாதிக்கின்றது. ஆனால் அந்த வழக்கில் கூறப்படும் சட்டக் கொள்கைகள் அல்லது கோட்பாடுகள் பிற்பட்டு வரும் வழக்கு களுக்கும் பொருந்தும் பாங்கு உடையன. இதனை முன் தீர்ப்பு முறைமை (Precedent) என்பார்கள். அதாவது, குறிப்பிட்ட சட்டக் கோட்பாடு பொருந்தும் தன்மையுடைய பின் வழக்குகளில் முன்வழக்கு ஒன்றில்கூறப்பட்ட சட்டக் கோட்பாடு பின்பற்ற வேண்டும் என்பது சட்டவிதியாகும். உயர் நீதி, உச்சநீதி மன்றத் தீர்ப்புகளில் உள்ள சட்டக் கோட்பாடுகளுக்கு மட்டுமே இந்தத் தகுதிப்பாடு உண்டு.

இந்தக் கோட்பாட்டையே ''சட்டச் சித்தாந்தம்'' என்று அந்நாளில் கூறினார்கள்.

எனவே, சிக்கல் உள்ள ஒரு வழக்கை நடத்தும் வழக்கறிஞர்களுக்கு அந்த வழக்கில் உள்ள சட்டப் பிரச்சினை என்ன என்பதும், அந்தப் பிரச் சினைக்குப் பொருந்தும் முந்திய தீர்ப்புகளில் சட்டக் கோட்பாடுகள் உள்ளனவா என்றும் தெரிந்திருக்க வேண்டும். இதற்கு ஏதுவாக கடந்த 30 ஆண்டுகளாக ''Law Digest'' என்று வெளியிடுகின்றனர். தீர்ப்புகளைத் தொகுத்து வெளியிட்டாலும் (Law Reports like All India Report. Madras Law Journal, Supreme Court Reports) தீர்ப்புகளின் உயிர் நாடியாக உள்ள சட்டக் கோட்பாடுகள் மட்டும் தொகுத்து பத்தாண்டு சட்டச் சாரம் (Decennial Digest) ஐந்தாண்டுச் சட்டச்சாரம் (Quinquennial Digest) என்று வெளியிடுகின்றனர்.

அறுபது ஆண்டுகளாக 1805 முதல் 1861 வரை வெளிவந்த ''சதர் அதலாத்'' என்று அன்று அழைக்கப்பெற்ற உயர்நீதிமன்றத் தீர்ப்புகளில் கண்ட சட்டக்கோட்பாடுகளைத் தொகுத்து ''சதர்க்கோர்ட்டாரவர்களின்

சித்தாந்த சங்கிரகம்'' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார், அமரர் வேத நாயகர். *1862*-ஆம் ஆண்டிலேயே இத்தகைய சட்டக் கோட்பாட்டுத் தொகுப்பை வெளியிட்டது வேதநாயகரின் தெளிந்த முன்னேக்கையும் தேர்ந்த திறனையும் காட்டுவதாகும்.

இதற்குப்பின் தமிழில் இத்தகைய ''சட்டக் கோட்பாட்டுத் தொகுப்பு'' வெளி வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இதனைத் தொகுத்து வெளியிடும் நோக்கம், மக்கள் வீணான வழக்கு களில் இறங்கி, பொருள் இழப்புக்கும் கால இழப்புக்கும் உள்ளாகி இதனால் மனத்துயரம் அடையக் கூடாது என்ற சமுதாயப் பணி புரியும் நோக்க மாகும் என்பதை வேதநாயகரே தமது முன்னுரையில் பின்வருமாறு கூறியுள்ளார்.

''கட்சிக்காரர்கள் அடிக்கடி கோர்ட்டுகளுக்கு வருவதும் அதனால் விருதாவிரயத்திற்கும் சிரமத்திற்கும் அசௌகரியங்களுக்கும் அவர்கள் உள்ளாவதும் ஆச்சரியமான காரியமல்ல. இந்த அசந்தர்ப்பங்களை யெல்லாம் அறியும்படியான சமயங்கள் என்னுடைய முன்சீப் உத்தியோக மூலமாக எனக்குக் கிடைத்திருப்பதால், *1805*-ஆம் வருஷம் முதல் *1861*ஆம் வருஷம் வரையில் உள்ள சதர்க் கோர்ட்டின் சித்தாந்தங்களைத் திராவிட பாஷா ரூபமாகச் செய்வது இங்கிலீஷ் தெரியாத நியாயாதிபதிகளுக்கும் வக்கீல்களுக்கும் கட்சிக்காரர்களுக்கும் பிரயோஜனகரமாயிருக்குமென் றெண்ணி அந்தப்படி பாஷாந்திரம் செய்ய உடன்பட்டேன்''.

இனி *266* பக்கங்களும் *1448* தீர்ப்புகளும் கொண்ட வேதநாயகரின் 'சித்தாந்த சங்கிரக'த் திலிருந்து சில எடுத்துக்காட்டுகள்:

**அதிர்ஷ்டச் சீட்டு**

க. லாட்டரிச் சீட்டின் கையொப்பக்காரர்கள் மாதாந்திரஞ் சில தொகை கொடுக்கிறதென்றும் ஒவ்வொரு மாதத்திலும் எவன் பெயரால் சீட்டு விழுகிறதோ அவன் அந்த மாதத்துத் தொகை முழுவதும் எடுத்துக் கொள்கிறதென்றுஞ் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையாவது கஅசச ௵ ரு. வது ஆக்டுக்கு விரோதமானதல்ல (கஅருஎ௵ நம்பர் — கசூகூ — கஅருஅ௵ — ப. ௫௩).

**சாக்ஷியம்**

க. ஆதரவு சிருஷ்டி செய்த தப்பிதத்துக்காக சர்க்கியூட் கோர்ட் டார் முன்பாக விசாரணை செய்யப்பட்டவர்கள் விடுதலையானதைக் கொண்டு அந்த ஆதரவு உண்மையானதென்று நிச்சயிக்கக் கூடாது (கஅககவ௵— நம். எ.). வியாச்சிய காலத்துக்கு முன் ஒரு கட்சிக்காரனால் எழுதியனுப்பப் பட்ட வர்த்தமானக் காகிதத்தின் நகலை அந்தக் கட்சிக்காரன் பட்சத்தில் சாட்சியமாக அங்கீகரிக்கக் கூடாது. அப்படியே எதிர்க்கட்சிக்காரன் தான் எழுதிக் கொடுக்கவில்லையென்று ஆட்சேபிக்கிற ஒரு ஆதரவின் நகலுக்கு நகலையும் அங்கீகரிக்கக் கூடாது (கஅககூ௵ — நம். எ.).

வாதியால் தாக்கல் செய்யப்பட்ட தஸ்தாவேஜின் உண்மைக்கு சாட்சியம் இல்லாமற் போனுல் அதனுல் அவனுக்கு யாதொரு பிரயோஜனமும் இல்லை. ஆனுல் அந்த ஆதரவு, பிரதிவாதிக்குச் சாதகமாயிருந்தால் அதை வாதியின் ஒப்புதலாக எண்ண வேண்டியதானபடியால் அதின் பிரயோஜனத்தை அடையப் பிரதிவாதிக்குப் பாத்தியம் உண்டு (கஅகளஙூ — நம். கள.).

**அங்கீகார விபரீதம்**

2. நிலந்தன் வசத்தில் இருப்பதாகவும், மிராசுமாத்திரம் பதிய வேண்டுமென்றும் வியாச்சியஞ் செய்த வாதி பிற்பாடு நிலமுந்தன்வசமாக வேண்டுமென்று கேட்டுக் கொள்ளக்கூடாது.

(கஅருகூஙூ — நம்பர் — க00–ப. உகூ0).

5. தனக்கும் மற்றவர்களுக்கும் பாகம் நடந்து சில விஷயங்களில் அந்தப் பாகம் நிறைவேறியிருப்பதாக ஒரு காலத்தில் ஒப்புக் கொண்டவன் பிற்பாடு அந்தப் பாகத்தைப் பற்றி ஆட்சேபிக்கக் கூடாது (கஅருகூஙூ நம்பர் ருகூ—கஅகூ0ஙூ — ப. ருச.)

**குறிப்புகள்**

1. கலைக்களஞ்சியம் தொகுதி 9.
2. இத்தகையத் 'தீர்ப்புத் திரட்டு' இன்றியமையாதது என்பது வணக்கத்திற்குரிய இந்நாள் தமிழக உயர்நீதிமன்றத்தின் தலைமை நடுவர் டாக்டர் எம். எம். இஸ்மாயில் அவர்கள் வெளியீடு செய்துள்ள 'தீர்ப்புத் திரட்டு' (1980) வரிசையாலும் விளங்கும்.

[இக் கட்டுரையிலுள்ள பட்டியல்களைத் தயாரிக்கவும் ஒப்பு நோக்கவும் உதவிய அ. ம. சத்தியமூர்த்தி, எம். ஏ. எம். பில். அவர்கட்கு நன்றி]

# தமிழ் இலக்கிய வரலாற்றுத் துறையின் தோற்றமும் அணுகுமுறைகளின் வளர்ச்சியும்- மதிப்பீட்டுக் குறிப்புகள்

சு. கலாபரமேஸ்வரன், எம்.ஏ. (இல.)
யாழ்ப்பாணம், ஸ்ரீலங்கா

ஒரு நாட்டின் செழுமையான பாரம்பரியக் கூறுன இலக்கியமானது அதன் தொன்மையான தோற்றக் காலத்திலிருந்து பல்வேறு புலவர்களின் இலக்கிய ஆக்கங்களூடாகப் பெற்று வந்த வளர்ச்சியையும், காலாகாலம் அரசியல் சமூக இயக்கங்களின் தாக்கங்களில் அதன் இலக்கிய நெறிமுறைகளும் போக்குகளும் மாற்றம் பெற்றுச் செல்கின்ற பாங்கினையும் விளக்குகின்ற துறையினை இலக்கிய வரலாறு எனக் கொள்ளலாம். இவ்வகையில் வரலாற்றுப் போக்கினின்றும் நீங்காத பகுதிகளாக இலக்கியங்களை அமைத்து, கால ஒழுங்குப்படி அமைத்த இலக்கியத் தொகுதிகளாக இலக்கியங்களை அணுகுந் தன்மையினை இலக்கிய வரலாற்றுத்துறை கொண்டிருக்கும் எனலாம்.

எந்த மொழியை எடுத்துக் கொண்டாலும் இலக்கியவரலாற்றுத் துறையானது தனிப்பட்ட ஓர் ஆய்வுத் துறையாக இருத்தல் கடினம். இலக்கியவரலாற்றுக்கு மொழிநூலுணர்ச்சியும் சரித்திர உணர்ச்சியும் சிலாசாசன அறிவும் தேவை என அன்றைய கால கட்டத்திலே வையாபுரிப்பிள்ளை குறித்தமையினை இவ்விடத்தில் மனம் கொள்ளுதல் சாலும்.

20-ஆம் நூற்றுண்டின் விடியல் வரை வெளிவந்த தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான குறிப்புகளுள்ளேயும், நூல்களுள்ளேயும் 1859ல் வெளியான சைமன்காசிச் செட்டியின் 'தமிழ் புளுடாக்; ஜே. ஆர். அனேல் எழுதிய பாவலர் சரித்திர தீபகம் (1886) சி. வை. தாமோதரம்பிள்ளையின் வீரசோழியம் பதிப்புரை (தமிழ்ப் பாஷையின் காலவருத்தமானம்) சுந்தரம்பிள்ளையின் தமிழ் இலக்கியவரலாற்றில் சில மைல் கற்கள்—திருஞான சம்பந்தரின் காலம், ஆர்.ஓ. டி அஸ்பரியின் தமிழ்ப்பாஷை வைபவம் (1886) கனகசபைப்பிள்ளையின் 'தமிழர் 1800 ஆண்டுகட்கு முன்' (நூல்) முதலானவை முக்கியமானவை. மேற் குறிப்பிட்ட நூல்களுள்ளே முதலிரண்டும் தமிழ்ப் புலவர் சரித்திரங்களை அகரவரிசைப்படுத்தி மேற்கோள்களுடன் கூறுவன. சுந்தரம்பிள்ளை அவர்களே சங்க இலக்கியங்களையும் பிற பண்டைய நூல்களையும் முதன் முதல் வரலாற்றுக்குப் பயன்படுத்தியவர் எனக் கொள்ளலாம். கனகசபைப்பிள்ளை அவர்கள் பண்டைய மன்னர் வரிசை, இலக்கியம் வாழ்க்கை முதலானவற்றை பண்டை இலக்கிய நூல்களுடன் சிலாசாசன

அறிவினது துணைகொண்டு திட்பமான காலவரன்முறையுடனும் சரித்திரப்பாங்குடனும் அமைந்தவகை அன்றைய கால கட்டத்திலே விதந்துரைக்கப்பட வேண்டி வேண்டிய ஒரு நிகழ்வு என்றே கொள்ளலாம். 1895ல் மதராஸ் ரெவியூவில் கட்டுரைகளாக வெளிவந்த ஆய்வு 1904ல் நூலுருப் பெற்றது. தமிழாராய்ச்சியின் போக்கு இவ்வகையாயிருத்தல் வேண்டும் என அறிவுறுத்தி ஆராய்ச்சியாளரின் கண்களை இவை திறந்தன என்பர் வையாபுரிப்பிள்ளை.

20-ம் நூற்றாண்டின் விடியலிலே தமிழ் இலக்கிய வரலாற்றுத்துறை தொடர்பாக இலக்கிய ஈடுபாட்டுடன் உழைத்த ஆர்வலரின் நிலை தமிழிலக்கியத்தின் பழமையை வேண்டுமான அளவு முன்னே கொண்டு செல்லுதல், புலவர் வரலாறுகளைப் புனைந்துரைகளுடன் இணைத்து அமைத்தல், மொழியின் தனித்துவமான பண்பம்சங்களை மிகையமுத்தமகக் கூறுதல், இலக்கியச் சிறப்புகளை மரபுத் தன்மைகளுடன் இணைத்து நயந்துரைத்தல் முதலானவை எனப் பொதுப்படக் கூறலாம். இக் காலத்துத் தமிழ் ஆர்வலரின் ஆய்வு முயற்சிகளுக்குப் பக்கபலமாக மொழியின் சீரினைக் கட்டிக்காக்க எழுந்த மதுரைத் தமிழ்ச் சங்கமும், தூய்மையை நிலைநிறுத்த முனைந்த தனித்தமிழ் இயக்கமும், இவை தொடர்பாக வெளியிடப் பெற்ற ஏடுகளும் செயற்பட்ட வகையானது மேற்காட்டிய சிந்தனைப் போக்கினை நன்கு புலப்படுத்துகின்றன. தனிமையான ஆராய்ச்சிக்குரிய அன்றைய தமிழ் ஆய்வு நிலையினை இக்கட்டுரையில் விரித்து எழுதல் இயலாத ஒன்றாகும்.

தமிழ் இலக்கிய வளர்ச்சி தொடர்பான கட்டுரைகளும், ஆய்வுகளும் நூல்களும் மெல்ல மெல்ல பெருவரவானமைக்கு முக்கிய காரணங்களாக நாம் கொள்ளக் கூடியன ஒன்று – மரபை நிலைநிறுத்தும் போக்கு, இரண்டு – இலக்கியத்தை வரலாற்றுக்குப் பயன்படுத்தும் தேவை, மூன்று, கல்லூரிப்பாட நெறியிலே தமிழ் இலக்கியத்தைச் சேர்ந்தமைத்த நிலை என்பனவாகும்.

எம். எஸ். பூரணலிங்கம்பிள்ளை அவர்கள் 1904ல் Primer of Tamil Literature என்ற நூலை வெளியிட்டமை மூலம் தமிழ் இலக்கியப் பரம்பரையை அறிமுகப்படுத்தி விவரண வடிவிற்கூறினர். ஏறக்குறைய 24-ஆண்டுகளின் பின், 1928 அளவில் இந்நூலைக் கல்லூரி முதுகலைமாணி மாணவர்க்குப் பயன்படக் கூடிய வரையில் விரித்தமைத்தார். அந்த இருபத்தைந்தாண்டு இடைவெளிக்குள்ளே இத்தன்மைத்தான நூல் எதுவும் வெளிவராமையிட்டுக் கவலை கொண்ட பூரணலிங்கம்பிள்ளை எதிர்கால வரலாற்றாசிரியன் ஒருவன் பண்டைத்தமிழகம், அதன் பரந்த இலக்கியச் செல்வம், கலாச்சார நிலை பற்றியெல்லாம் அறிந்து கொள்ளக் கற்க வேண்டிய நூல்களை இனங்காண்பதற்குத் தமது நூல் உதவும் என நம்பிக்கை தெரிவித்தார். கர்ணபரம்பரைக் கதைகளின் ஆதிக்கமும் நூல்கள் பற்றிய பட்டியல் ரீதியான பாங்கும் கூடவே அமைந்தாலும் பண்டை இலக்கியம் பற்றிய பல தரவுகளைத் தரும் இந்நூல் அன்றைய சிந்தனைப் பின்னணியில் திட்டமாக வெளியிடப் பெற்ற முதலாவது இலக்கிய வரலாற்று நூல் எனக் கொள்ளத் தக்கதாகும்.

எம். சிறிநிவாச ஐயங்காரின் Tamil Studies நூல் (1914) அதன் பதினொரு அத்தியாயங்களுள், நான்கு அத்தியாயங்களிலே தமிழ் இலக்கிய

வளர்ச்சியை எட்டுக் காலப் பிரிவுகளாகப் பிரித்து நூல் வரலாறுகள், காலம், பண்பு முதலானவற்றைக் கோடிட்டுக் காட்டுகின்றது.

இந்நிலையிலே தமிழன் தொல்லியல் மாண்பைப் பேண வேண்டும் என்ற ஆர்வம் துரக்க இந்நூற்றாண்டின் விடியலில் தமிழ் இலக்கியத்துறையில் நுழைந்து வரலாற்று நூல்களை வெளியிட முனைந்தவர்களுள்ளே தஞ்சாவூர் கே. எஸ். சிறினிவாச பிள்ளை, பி. டி. சிறிநிவாச ஐயங்கார், கா. சுப்பிரமணியப் பிள்ளை, ஜே. எம். நல்ல சாமிப் பிள்ளை ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவார்.

கே. எஸ். சிறிநிவாசபிள்ளை 1922ல் எழுதி வெளியிட்ட 'தமிழ் வரலாறு' முன்னுரையில் குறிப்பிடும் வார்த்தைகள் நமது கவனத்திற்குரியன,

> '' நான் தமிழ்ப் புலவன் அல்லேன். ஆயினும் தமிழினிடத்து மட்டற்ற அன்பு தூண்ட, பல தமிழ் அறிஞர்கள் அவ்வப் பொழுது ஆராய்ச்சி செய்து வெளியிட்டிருப்பனவற்றை...........தொகுத்தும்........... காட்டியும் எழுதுகின்றேன்.

கா. சுப்பிரமணியபிள்ளையின் இலக்கியவரலாறுனது (1930) நூல்களின் சரித்திரம், உள்ளடக்கம், முதலானவற்றைப் பட்டியல் ரீதியிலே அமைத்த அளவுக்கு நூல்களில் இலக்கியப் பண்பு, தெளிவான காலப் பகுப்பு முறை, காலத்தன்மை, சீரான அமைப்பு முறை ஆகியவற்றிற் கவனங்கொள்ள வில்லை. இவ்வகையில் முன்னர் வெளிவந்த நூல்களிலும் பார்க்க எவ்வித வளர்ச்சியையும் இவரது நூலிற் காணமுடியவில்லை. எனினும் பல தசாப்தங்களாக இந்நூலையே ஏற்புடைத்தான ஒரே நூலாகக் கற்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலையிலே தமிழ் மாணவர்கள் இருந்தனர்.

வரலாற்றுக்கு இலக்கியத்தைப் பயன்படுத்தும் பாங்கில் நூல்கள் வெளியிடுகின்ற போக்கினையும் இருபதுகளின் இறுதியிலே காணக் கூடியதாக இருக்கின்றது. இத்துறையில் கனகசபைப்பிள்ளை அவர்கள் வழிகாட்டியாக விளங்கிய போதும் கூட, பின்னைய நூல் சேகரிப்பு, மற்றும் சிறிது முன்னேறிய வசதிகளின் பின்னணியில் வரலாற்றாசிரியர் வரலாற்றுக்கால வரன்முறைக்கோ, பண்டைய அரசியல் சமூகநிலை வளர்ச்சி ஆய்வுக்கோ இலக்கியத்தைக் கணிசமாகப் பயன் படுத்தாத ஒரு குறை அறிஞர்களின் கவனத்தை ஈர்த்தது.

1929ல் தமிழர்வரலாறு எழுதிய பி. டி. சிறிநிவாச ஐயங்கார், மொழியின் தொன்மைக்காலம் முதல் கி. பி. 600 வரையிலான வரலாற்றைக் கூறுவதாகத் தாம் அமைக்கின்ற நூலில், தொல்காப்பியம் அதற்கு மிக முந்திய கால மக்கள் வாழ்க்கையைக் காட்டுகின்றது எனக் கொண்டு ஆய்வதனைக் காணலாம். 'வரலாற்று மாணவனுக்கு தமிழ் இலக்கியம் பற்றி ஆழ்ந்த அறிவும் திறனாய்வுப் பாங்கும் அவசியமானது என்ற தேவையால் எழுந்தது' என திட்சிதர், தாம் 1923 காலப் பகுதியில் தனிக்கட்டுரைகளாக எழுத ஆரம்பித்து 1936ல் வெளியிட்ட Studies in Tamil Literature and History என்ற நூல் பற்றிக் கூறுவர். இருவருமே தமிழிலக்கியத்தின் பழமையை மிக முன்கொண்டு சென்றதுடன், பண்டை இலக்கியம் காட்டும் ஒப்பற்ற வாழ்முறையை ஒத்தி யுரைத்தனர்.

தெளிவான காலவரன்முறையைத் தீர்க்கமாக நிறுவமுடியாத வரைக்கும் தமிழர் வரலாற்றின் தொன்மையைப் பேசுவது கருத்தற்றது என்றும் புனைந் துரைகளையும் உண்மைகளையும் பிரித்தறியாது கிளிப்பிள்ளை மனோபாவத்தில் கூறியதையே ஓயாது கூறுகின்ற வரலாற்றாசிரியரின் போக்கு மாறவேண்டும் என்றும் கருதிய சிவராஜபிள்ளை,[12] இதே காலக்கட்டத்தில் 1932ல் சங்க இலக்கியங் களிற் காணப்படும் அரசர், தளபதி, புலவர் முதலானோர் வரன் முறையை அமைக்கும் வகையில் The Chronology of the Early Tamils நூலை வெளி யிட்டார். எனினும், ஏற்கெனவே அமைத்துக் கொண்ட சில கருதுகோள்களுடன் நூலை எழுத முற்பட்டார் என்றும், தமக்கிசைந்தவற்றையே கொள்வதும், பிறவற்றை இடைச் செருகில் எனத் தள்ளுவதுமான ஒரு போக்கைக் கொண் டிருந்தார் என்றும் காலப் போக்கில் கண்டனங்கள் எழுந்தன. அது புறம்பான ஓர் ஆய்விற்கு எம்மை இட்டுச் செல்லும்.

ஏறக்குறைய இதே காலக்கட்டத்தில் இலக்கிய சரிதத்தின் ஒரு வகை வெளிப்பாடாக சோமசுந்தர தேசிகர், கணேசையர் முதலானோரின் புலவர் வர லாறுகளும், சமயங்களடியாக இலக்கியங்களின் வளர்ச்சியை ஆயும் மயிலை. சீனி. வேங்கடசாமியின் இரு நூல்களும் வெளிவந்தன.

இந்நிலையில், அபிமானத்தையடியாகக் கொண்ட வெறும் உணர்வு ரீதி யான பற்றுதல்களும், அளவிறந்த மரபு வழிபாடும், மிகைநவிற்சித்தன்மையும் அறிவியல் ரீதியான உண்மையான வரலாற்று அணுகுமுறைக்குத் தடைக்கல்லாக அமைகின்ற போக்கு பலத்து வந்தது. சங்கம் இருந்த சீரினை நிறுவமுனைந்து, அதனை மிக நீண்ட ஒரு காலப் பகுதிக்குள் அமைத்துப் பெருமை கண்டனர். காலவரையறை பெறாத சில நூல்களை மிகவும் பழமைக்கண் கொண்டு நிறுவுவான் வேண்டி அவற்றை வேண்டிய அளவுக்கு முன்னே கொண்டு சென்றனர். இப் போக்கினதாக இலக்கிய வளர்ச்சி தொடர்பான தனிக்கட்டுரைகளும், நூல்களும் பெருவரலாயினபோதும் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி முறைநெறியை இனங் கண்டு கோடிட்டுக் காட்டி, அதனைக் கால அடைவின்படி பகுத்தமைக்கின்ற முயற்சி செவ்வனே நடந்தேறவில்லை.

சீரான வரலாற்று உள்ளடக்கமோ, திட்டமான காலவரன் முறையோ, அன்றி முறையான காலஉணர்வோ பகுப்பு முறையோ இன்றி இருந்த இத்தகைய இலக்கிய வரலாற்றுப் போக்கினை ஒரு செவ்விய பாதையிலிட முனைகின்ற ஒரு மகத்தான பணியை மேற்கொண்டவர் வையாபுரிப்பிள்ளையாவார். 'தமிழ் இலக்கியம் மிகை நவிற்சி யாதுமின்றியே நாம் போற்றத்தகும் தொன்மை வாய்ந்தது எனத் தீர்க்கமாக நம்பிய வையாபுரிப்பிள்ளை 'சான்றுகள் காட்டும் நெறியிற் செல்லாது அபிமானம் பற்றி மேற்கொண்ட முடிபுகளே பெரும்பாலும் வெளிவந்துள்ள'' நிலையை மாற்றவேண்டிய அவசியத்தை உணர்ந்தார். அதற்கு மாற்று வழியாக சில நூல்களின் காலத்தை வேண்டுமளவு பின்தள்ளும் போக்கை மேற்கொண்ட போதும் மொத்தத்தில் அவரது பங்களிப்பு மகத்தானது என்பதனை அவரது மாற்றுக்கருத்துடையாரும் ஒப்பர். கர்ணபரம்பரைச் செய்திகளுக்கு முக்கி யத்துவம் கொடுக்கலாகாது என அடித்துரைத்ததுடன் நில்லாது இலக்கிய வர லாற்றை அமைப்பதில் சரித்திர உணர்ச்சி, தொழிலுணர்ச்சி, சிலாசாசன அறிவு

ஆகியவற்றின் இன்றியமையாமையை வற்புறுத்தி அவற்றின் அடிப்படையில் அவர் அமைத்த கால வரையறை ஒரு புதிய பாதையில் இலக்கிய வரலாற்றை இட்டுச் சென்றது. இலக்கிய வரலாறனது நூல் பட்டியல் சேகரிப்பு, ஆசிரியர் வரலாற்றுத் தொகுப்பு என அமையாது இலக்கிய வளர்ச்சிப் பாதையைக் கால அடைவுடன் சமூகப் போக்கின் பின்னணியில் அமைக்கும் ஒரு மகத்தான முயற்சி என்பதனை விளக்கி, அத்தகைய செவ்வையான முயற்சிக்கு பயன் படக் கூடிய வகையில் பல ஆய்வுக் கட்டுரைகளை எழுதினார். அவரது கட்டுரைத் தொகுப்புக்களான இலக்கியச்சிந்தனைகள்( 1947), தமிழ்ச் சுடர்மணிகள், கம்பன் காவியம், இலக்கியத் தீபம் (1952), இலக்கிய மணிமாலை (1954) என்பனவும், காவியகாலம், (1957) தமிழ் இலக்கியவரலாறு, (1956 ஆங்கிலம்) ஆகியனவும் இலக்கிய வரலாற்றுத் துறையிலே தனியிடம் வகிப்பனவாகும்.

சுப்பிரமணிய பிள்ளையின் நூல் வெளிவந்ததிலிருந்து (1930), 1951ல் வி. செல்வநாயகம் எழுதிய 'தமிழ் இலக்கிய வரலாற்றுச் சுருக்கம்' வெளிவரும் வரைக்குமான காலப்பகுதியில் திட்டமாக எழுதப்பட்ட இலக்கிய வரலாற்று நூல் வெளியீட்டு முயற்சிகள் எதுவும் நடைபெறவில்லை. எனினும், வையாபுரிப் பிள்ளையின் ஆய்வுகளுக்குக் களம் அமைத்த இக்கால கட்டம், எதிர்கால வளர்ச்சிக் கான ஒரு சூழ்நிலை உருவாகியதைச் சுட்டி நிற்கின்றது எனக் கொள்ளமுடியும். ஐம்பதுகளின் இறுதியிலே பெருவாரியாக இலக்கியவரலாற்று நூல்கள் வெளி வரஆரம்பித்த போதும் தமிழ் இலக்கிய நெறியை செவ்வையாக ஆய்ந்து வெளி யிடும் போக்கு, அக்காலக் கட்டத்திலே சிறிதாக முளைவிட்டு, அறுபதுகளிலேயே ஓரளவு திட்டமாகச் சில அறிஞர்களாலே கடைப்பிடிக்கப்பட்டது.

மிக அண்மைக்காலம் வரை தமிழ் இலக்கிய வரலாற்றுத்துறை தொடர் பான எழுத்துக்களிலே மேற்கொள்ளப்பட்டு வந்த முக்கிய அணுகுமுறைகளின் தன்மைகளையும் வளர்ச்சியையும் சுருக்கமாக மதிப்பிடுவதற்கு முன்னர், அந்த அணுகுமுறைகளைக் கீழ்க்காணும் வகைகளிலே பகுக்கலாம் போலத் தெரிகின்றது.

1. இலக்கிய ஆசிரியர்—நூல்களைப் பற்றிய காலங்களை நிலைநிறுத்தலை முதலாகக் கொண்ட அணுகுமுறை.
2. ஆசிரியர் வரலாறு, நூல் உள்ளடக்கங்கள் இவற்றுடன் ஓரொரு கால் நூல் நலன்களைக் கூறிச் செல்லும் போக்கு.
3. இலக்கியங்களை காலவரன்முறைப்படுத்தி, காலந்தோறுமான இலக்கிய வளர்ச்சியையும் மரபுநெறித் தொடரையும் விளக்கிச் செல்லும் முறை.
4. காலந்தோறுமான இலக்கியங்களூடாக வளர்ந்து செல்லும் மக்களின் கருத்து நெறியைக் கோடிட்டுக் காட்டும் முறை.
5. காலச்சூழ்நிலை, அரசியல் சமூகமாற்றங்களின் பின்னணியில் இலக்கிய போக்குகளை விமரிசனஞ் செய்யும் சமூக அணுகுமுறை.
6. வெளிநாட்டவர்க்கு தமிழிலக்கியப் பரப்பின் சிறப்புக்களை உணர்த்து கின்ற தேர்ந்த அணுகுமுறை (Selective Approach).

தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களுள்ளே இலக்கியக் காலங்களை வரன் முறை செய்து அதனூடாக இலக்கிய வளர்ச்சியையும் பண்புநலனையும் ஆயமுனை யும் போக்குடைய ஆசிரியர்களே பெரும் பான்மையினராக விருக்கின்றனர். இவர்களுடைய அணுகுமுறையின்படி நூல்களின் காலங்களை ஆய்ந்து நிறுவுதலே முதற்பட்சமாகவும் இலக்கிய நெறியை விளக்கிச் செல்லுதல் அடுத்தபடியாகவும் அமைகின்றன. தமது முதற் பட்சமான கடமையினைப் பூர்த்தியாக்குவதற்குள் நூலை நிறைவு செய்தோரே அதிக மானோர். இத்தகைய ஒரு நிலையிலேயே தமிழ் இலக்கிய வரலாறு தமிழ் இலக்கியங்களின் காலவரலாருகவே முடிகின்றது.

'நூல் தோன்றிய காலத்தை அறிந்தாலன்றி அந்நூலிலுள்ள கருத்துக் களை நாம் முற்றிலும் அறிந்து கொள்ள முடியாது' எனத் தீர்க்கமாகக் கூறியதுடன் ஒரு நூலின் உட்பொருள் அதன் காலத்தே தோன்றிய மற்றநூல்கள், வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவற்ருலேயே மிகப் பெரிதும் விளக்கமாதலால் முதலில் நூலாசிரி யர் நிலவிய காலங்களை ஆய்ந்து வரையறை செய்வது இன்றியமையாதது எனவும் உரைத்தனர். எனவே கால வரையறை அமைத்துத்தருவதே தமது நோக்கம் என இவர்கள் வெளிப்படையாகக் கூறியதுடன் கால வரையறை இருந்தாற்ருன் பிற ஆய்வுகள் அர்த்தபூர்வமாக அமையும் என்பதால் ''யாம் அமைக்கின்ற அடிப் படையில் பிறவகைக் கட்டிடங்களான பல துறை ஆராய்ச்சி எழுதல் கூடும்'' என நம்பிக்கை கொண்டனர்.

இவ்வகையான அணுகுமுறையுடன் தமிழ் இலக்கிய வரலாறுகளை அமைத் தோராக வையாபுரிப்பிள்ளை, கோவிந்தசாமி, இராசமாணிக்கஞர், சதாசிவ பண்டாரத்தார், அருணுசலம் ஆகியோரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

ஒரு நூலின் காலத்தை நிர்ணயிப்பதற்குப் பலவகைச் சான்றுகளை இவர்கள் பயன்படுத்தினர். மொழியியற் சான்று, வரலாற்றுச்சான்று, சமயச்சான்று, பிற நூல், பிரஸ்தாபம், சாசனச்சான்று, வானியல் தரவுகள் என்பனவே பெரும் பான்மையினவாகவும், நூலின் அகச்சான்று, நூலின் வடிவம், பொருள் சிந்தனை படியான மரபுச் சான்றுகள், சமூக கலாச்சார நிலைச்சான்றுகள் முதலாயின மிகச் சிறுவரவினவாகவும் பயன்படுத்தப்பட்டன.

காலவரன் முறையமைக்கும் அணுகுமுறையைப் பயன்படுத்தியவர் களுள்ளே வையாபுரிப்பிள்ளையே தலையாயவர் என்பதிலே எவ்விதக் கருத்து வேறுபாடும் இருக்க முடியாது. அவரின் காலக் கணிப்புக்கள் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன எனினும், தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோ, ஆகியோரைக் பற்றிய அவரது காலவரையறைகள் அறிஞர் பலரின் கணிசமான எதிர்ப்பைப் பெற்றனவாம்.

வையாபுரிப்பிள்ளையின் கால ஆய்வு அணுகுமுறைதான் யாது? ஒரு புலவரின் கால ஆய்வினை நிகழ்த்தத் தொடங்குகையில் அந்த ஆசிரியரின் அல்லது நூலின் காலத்துக்கு முன்னெல்லையையும் பின்னெல்லையையும் வகுத்துக் கொண்டு அவ்விரு கால எல்லைகளுக்குட்பட்ட ஒரு காலப் பிரிவினையைப் பல்வேறு அகப்புறச் சான்றுகள் மூலம் பகுத்தமைத்து நிறுவுதலே அவரது முறையாகும். ஆழமான

இலக்கியப் பயிற்சி காரணமாகக் காலவரன் முறையைத் தமது மனப்போக்கிற் கியைய அமைப்பதற்கு மொழி நிலையைப் பெரிதும் பயன்படுத்தியமையே அன்றைய நிலையில் அவரது பலமும் பலவீனமும் எனலாம். வையாபுரிப்பிள்ளையை அன்று மறுத்த பலர் அவரது காலக்கணிப்புக்கு எதிராகத் தகுந்த சான்றுகளைக் காட்ட முடியாமற் போயது.

அவரின் கால நிர்ணயம் தொடர்பான வாதப்பிரதிவாதங்கள் எவ்வா றிருந்தபோதும் 2000 ஆண்டு கால வரலாற்றையுடைய மொழியிலே ஒரு குறிப்பிட்ட நூலின் காலம் பற்றிய மயக்க நிலையை ஏற்படுத்தும் வகையிலே தெளிவற்ற ஆய்வில் ஒரு முடிவுக்கு வராமல் அந்நூலின் தோற்றத்திற்கு ஒரு அனுமான கால வரையறையை ஏற்படுத்தி, பின் அக்காலப் பகுதிக்குள் ஒரு சரியான காலத்தைச் சுட்டக் கூடிய விஞ்ஞான முறையைக் கையாண்டமை வையாபுரிப்பிள்ளையின் சிறப்பு என ஆய்வாளர் டாக்டர் இராமசுந்தரம் குறிப் பிடுவர்.

இருந்த போதும் வையாபுரிப்பிள்ளை அவர்கள் மரபுப்பற்றுக் கொண்ட தமிழ் ஆர்வலர்கள் பண்டைய இலக்கிய நூல்கள் சிலவற்றின் தோற்றத்தைப் பல்லாண்டுகள் முன்னெடுத்துச் செல்ல முயன்ற தொரு நிலையிலே, அந்நிலையின் நேரெதிர்முனைக்கு அதை வேண்டிய அளவுக்குப் பின் தள்ளுவதில் ஒரு தனி மகிழ் வெய்திருக்க வேண்டும். சில தமிழ் நூல்களின் தோற்றக் காலத்தை வெவ்வேறு வேளைகளில் வெவ்வேறு காலப்பகுதிகளுள்ளே அமைந்திருக்கின்ற வகையும், சிலம்பின் காலத்தை 8-ம் நூற்றாண்டுக்குப் பின் தள்ளும் பாங்கும் விஞ்ஞான முறைக்கு முரணானவையே. இந் நோக்கிலே, ஒரு வித காழ்ப்புணர்வு அல்லது கமில் சுவலபில் மிகையான திரனாய் மனோபாவம் கொண்டவராக வையாபுரிப்பிள்ளை விளங்கினார் என்பர்.

இராசமாணிக்கனார், கோவிந்தசாமி முதலானோர் பெரும்பாலும் காலம் பற்றிய முன்னைய ஆய்வறிஞர் கருத்துக்களைத் தொடுத்தும், வெட்டியும், ஒட்டியும், கூட்டியும் காலத்தை அடிப்படையாகக் கொண்ட தமது வரலாற்று நூல்களை அமைத்தனர். கோவிந்தசாமியின் இலக்கியத் தோற்றம் காலப் பகுப்பு விடய அமைப்பு என்பவற்றில் ஒருமைப்பாடோ வீதாசார ஒழுங்கு முறையோ இன்றி முதலிடுகாலங்களைப் பற்றியே முக்காற் பங்குக்கு மேல் நூலிற் கூறிச்செல்கின்றது.

அருணாசலம் அவர்களின் நூற்றாண்டு ரீதியான இலக்கிய வரலாற்று நூல்கள் எண்ணற்ற பல நூல்களுக்குக் கால வரையறை அமைத்துத்தரும் நோக் குடன் எழுந்ததாகும். கால ஆய்வு, நூலாசிரியர் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் இவற்றுடன் மட்டும் நின்று விடாது இலக்கிய வளர்ச்சி பற்றிய பல சான்றுகளையும் அவதானிப்புக்களையும் அளிக்கின்றார் ஆசிரியர். இலக்கிய வளர்ச்சி குன்றியது எனக்கருதப்பட்ட ஒரு கால கட்டம் பற்றிப் பயனுள்ள பல தரவுகளை இவரின் நூல்கள் தருகின்றன.

வரதராசன் அவர்கள் தமது தமிழ் இலக்கியவரலாறு (1972) நூலின் முன்னுரையிற் கூறுவன இவ்விடத்திலே நோக்குதல் சாலும்.

''காலந்தோறும் சிற்சில மாறுதல் பெற்றுவளர்ந்து வரும் தமிழ் இலக்கிய வரலாருகிய இந்நூலில், எல்லா நூல்களைப் பற்றியும் விளக்கம் தரமுடியவில்லை... நூலாசிரியர் எல்லோருடைய பெயர்களையும் விடாமற் குறிப்பிடவும் முடிய வில்லை... இத்தனை பக்கங்கள் என்ற ஓர் எல்லைக்குள் நின்று எழுதப் படுவது ஆகையால், நூல்களின் விளக்கங்களோ, ஆசிரியர்களின் குறிப்புக்களோ விடா மல் குறிக்கவும் இல்லை. நூல்களின் சிறப்பியல்புகள் பலவற்றை விளக்கவும் இங்கு இடம் இல்லை.

ஒரு இலக்கிய வரலாற்றிலே அவ்வரலாற்றுக்குரிய பிற பண்பம்சங்களுடன் ஒரொருகால் நூல், நூலாசிரியர் குறிப்புக்கள், நூல் விளக்கங்கள் முதலானவை இடம்பெறுவது ஓரளவு இயல்பானதே. ஆனுல் அவ்வக்காலத்துக்குச் சிறப்பான இலக்கியப் பண்புகளையும் இலக்கிய நெறிமுறைகளையும் விளக்கி, வளர்ச்சியினைச் சுட்டிச்செல்லும் பாங்கினைத் தமது வரலாற்று நூலில் இழையோட விடாமலும், அவ்வக்கால நூல்கள் பற்றி உதிரிகளாக அமைந்த பல கட்டுரைகளைத் தொகுத் தமைத்ததோ என்ற உணர்வினைத் தரக்கூடிய முறையிற் காலமாற்றங்களையும் சூழ்நிலைப் போக்குக்களையும் இலக்கியப் படைப்புக்களுடன் சார்த்தி, காரண காரிய முறையிலே ஆயப்படவேண்டிய இடத்தும் கூட (நீதிநூல் காலம், பத்தி இலக்கிய காலம், கிறித்தவ இலக்கியம், கதை இலக்கியகாலம்) அவ்வாறு ஆய்வதனைத்தவிர்த்து, ஆங்காங்கு சில நிகழ்வுகளை மட்டும் பட்டும்படாமற் சில வார்த்தைகளிலே சுட்டி, பின் நூல் விபரணத்திலும், ஆசிரியர் வரலாற்றிலும் பலபக்கங்களை நிரப்பி, நூலை அமைத்திருத்தலானது இதனை 'வரலாற்று நூல்' என்ற வகையில் அடக்கலாமோ என்ற ஐயப்பாட்டினை இலக்கிய மாணவர்க்கு அளித்தல் இயல்பானதே. வரலாற்றில் மரபுவழி 'சீரியன' வாகக் கருதப்படும் நூல்கள் பற்றி பக்கம் பக்கமாக எழுதியபோதும் கூட (குறள் 14. ப., சிலம்பு 13 ப., கம்பராமாயணம். 14. ப.) வரலாற்றிற் புதிய இலக்கிய வடிவங்கட்குக் கால்கோளமைத்த காரைக்காலம்மையார், திருத்தக்கதேவர் முதலானேர்க்கு உரிய இடம் கொடுக்கவில்லை.

எவ்வாறு சுப்பிரமணியப் பிள்ளை தமது நூலைப் பல்வேறு இலக்கியக் காலப் பிரிவுகளுக்கேற்ப ஒரு வீதாசார அமைப்போ, நூலிற்கான மைய இழையோ இன்றி சில நூல்கள் பற்றி அதிக பக்கங்களும் சிலவற்றுக்கு ஓரிரு பக்கங்களும் கொடுத்து அமைத்தாரோ, அதேபோன்று மு. வ. அவர்களும் அதே பலவீனத் துடன் நூலை அமைத்தது ஒரு தற்செயலான நிகழ்வு அல்ல. நூலின் காலப்பிரிவு பகுப்புமுறையின் தவருன தன்மை காரணமாகக் கூறியதுகூறலானது நூலிற் சரளமாக ஏற்படுகின்றது. சங்க இலக்கிய மரபு பற்றிய பகுதியினையும் அங்கு மிங்கும் வெளிப்படும் சில சிறந்த அவதானிப்புக் கருத்துக்களையும் தவிர்த்துப் பார்க்கும்போது நூல் 1972 கால ஆய்வுப் பின்னணியில் அவ்வளவு திருப்தி தருவதாயில்லை.

ஒரு மொழியின் நீண்டதொரு இலக்கியப் பரப்பிலே ஒரு இலக்கியப் பகுதி வில்லது போக்கு எவ்விதம் பல்வேறு புலவர்களாலும் அவர்தம் ஆக்கங் களாலும் அரிந்து வளர்ந்தது என்று காலவரன்முறைப் பகுப்பினடியாக இலக்கிய நெறியையும் இலக்கியப் பண்பு நலனையும் விளக்குவதனை அணுகு முறையாகக்

கொண்ட போக்கே அடுத்து நமது ஆய்விற்குரியது. ஓர் இலக்கிய ஆசிரியனுடைய கடமை காலவரையறையை அமைத்துத்தருவதுடன் நின்றுவிடுவதில்லை என்றும் காலத்திற்குக் காலம் மாற்றமுற்றுச் செல்லுகின்ற இலக்கியப் போக்கினையும் அதற்குக் காரணமாயிருந்தவற்றையும் இலக்கிய வரலாற்றுநூல் விளக்க வேண்டும் என்பதை இவர்கள் வற்புறுத்தினுர்கள். காலத்தைக் கணிக்கும் சிக்கல் தமிழில் இன்னமும் தீர்ந்துவிட்டதென்று சொல்லமுடியாதென்றுலும், இலக்கிய வரலாறு இனியும் கால நிர்ணய விவாதமாக ஒருங்கத்தேவையில்லை என்றும் இலக்கியத்தின் பொருளிலும் போக்கிலும் கவனம் செலுத்தக்கூடிய நிலையில் வரலாற்ருசிரியர் உள்ளனர் என்றும் தீர்க்கமாகக் கொண்டார்கள். இலக்கிய காலங்களைப் பொறுத்தவரை ஆர்வலர்களின் அபிமானக்கால வரையறை களைப் புறக்கணித்தபோதும் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய வகையிலான காலக் கணிப்பையும் பகுப்புமுறையினையும் இவர்களுட் பலர் கொண்டிருந்தார்கள். தேவை ஏற்படுகின்ற பட்சத்தில் மட்டும் ஆசிரியருடைய காலத்தைச் சிறிது ஆய்ந்தனர்.

இம்முறையிலமைந்த நூல்களாக செல்வநாயகத்தின் தமிழ் இலக்கிய வரலாற்றுச் சுருக்கம் (1951), வையாபுரிப்பிள்ளையின் காவிய காலம் (1957), கி. பாலசுப்பிரமணியத்தின் தமிழ் இலக்கிய வரலாறு (1959), ஜேசுதாசனின் தமிழ் இலக்கிய வரலாறு (1961), இராமகிருஷ்ணனின் தமிழ் இலக்கிய வரலாறு ஓர் அறிமுகம் (1962), தெ. பொ. மீ யின் தமிழ் இலக்கிய வரலாறு (1963) முதலானவற்றைக் கொள்ளலாம்.

பண்டைய புலவர் வரலாறுகளையும் அவர்களின் காலங்களைப் பற்றியும் மட்டும் அக்கறையுடன் பயின்ற தமிழ் மாணவர்களை அவ்வக்காலத்து அரசியல், சமூக சூழ்நிலை, இலக்கியப்போக்கு தொடர்புறவு பற்றியும், காலாகாலம் வேறு பட்டுச்செல்லும் இலக்கிய மரபு பற்றியும் சிந்திக்கவைத்து தமிழ் இலக்கிய வளர்ச்சிப் பாதையைக் கோடிட்டுக் காட்டியவர் செல்வநாயகம் அவர்கள். அவரின் சுருக்க நூல், பின்னைய பதிப்புக்களில் விரிவு பெற்றபோது சிறிது பரந்த களத்திலே அவராற் கருத்துக்களைத் தெரிவிக்க முடிந்தது. வையாபுரிப்பிள்ளை அவர்களின் பிரவேசத்துடன் இலக்கிய வரலாற்றுத்துறை திருத்தமுற்ற போதும் செல்வநாயகம் அவர்களால் மேலும் செப்பனிடப்பெற்றது எனின் மிகையாகாது.

ஜேசுதாசன், தமிழ் இலக்கிய நெறி வளர்ந்து சென்ற நெறியினை அவ்வக் காலச் சூழ்நிலையுடனும் சமூக, அரசியற் பின்னணியுடனும் இணைத்து விளக்கியதுடன் தமிழ் இலக்கிய உலகில் அவ்வக்காலத்து இலக்கிய சக்திகளாக விளங்கியவர்களை இனங்கண்டு சுட்டி, மற்றையோருடன் ஒப்பிட்டு அவர்களின் மொத்த இலக்கியப் பங்களிப்பையும் வரலாற்றில் அவர்கள் வசிக்கும் இடத்தையும் மதிப்பீடு செய்திருக்கின்ருர். ஒரு சில இலக்கிய ஆசிரியர்களை மட்டும் மகிமைப்படுத்தும் பாங்கில் கிளிப்பிள்ளை போல பக்கம் பக்கமாகக் கூறும் நிலையை விடுத்து அவர்கள் பற்றி புதிய பார்வையை விசியதுடன் காரைக்காலம்மையார், பட்டினத்தார், சித்தர்கள், தாயுமானவர் மற்றும் 'சிற்றிலக்கியத்தினர்'க்கும் உரிய இடம் அளித்தார். 'இலக்கிய மாணவனுக்கு சிறந்த நூல் இது' என்பர் கமில் சுவெலபில். 23அ

சிக்காகோ பல்கலைக்கழக விரிவுரைகளாகத் தொடங்கி, 1967 இல் நூலாக உருப்பெற்ற தெ. பொ. மீ யின் இலக்கிய வரலாறு பொது வாசகருக்கு தமிழ் இலக்கிய வளர்ச்சிப் போக்குகளை ஆங்கில இலக்கிய வரலாற்று அணுகு முறையடிப் படையில் விளக்குவதனை நோக்கமாகக் கொண்டதாகும். இவ்வகையில், தெ. பொ. மீ. பல்வேறு இலக்கிய காலங்களின் இலக்கியப் பொருள் மரபையும், பண்புநலன்களையும் விளக்குவதிலும், மரபுகளைப் பகுத்தாய்ந்து இலக்கிய நெறித் தொடர்ச்சியை விவரித்தலிலும் கூடிய சிரத்தை செலுத்தினர். சங்கப்பாடல், பெரிய புராணம் போன்றவற்றின் சீர்ப்பாடு பற்றி மரபுவழிக் கருத்துக்களையே மீள மீள உரைத்தபோதும், இலக்கிய மரபு பற்றியும், ஆசிரியர் தகுதிப்பாடு குறித்தும், தத்துவநிலைப்பாடு பொறுத்தும் அவரின் அவதானிப்புக்களும் மதிப் பீட்டுக் கருத்துக்களும் ஆங்காங்கே சிறிது வீச்சாக வெளிவருவதனைக் கவனிக்க முடிகின்றது.

தெ. பொ. மீ. அவர்கள் இலக்கியங்களுக்கூடாகத் தமிழரின் சிந்தனைப் போக்கில் ஏற்பட்ட வளர்ச்சியினை ஆய்வதில் மிகவும் அக்கறை கொண்டவராக விளங்கினர். 1951 இல் அவர் எழுதிய 'A plea for a History of Tamilian Thoughts') என்ற கட்டுரை இதனைப் புலப்படுத்தும். இவ்வகையிலே இவரது இலக்கிய வரலாறும் காலந்தோறும் இலக்கியங்காட்டி நிற்கும் தத்துவ வளர்ச்சியினையும் கருத்துப் போக்கினையும் காட்டுவதில் முன்னிற்கின்றது.

சிலம்பின் சிறப்பம்சங்களில் ஒன்று பிரபஞ்ச அன்பை (Universal Love) வெளிப்படுத்தலே எனக் கூறி, அதனை ஒவ்வொரு பாத்திரமும் மானிடத் திற்கே உரிய அனுதாபத்துடன் படம் பிடிக்கப்பட்டுள்ளனர் என விளக்கும் போதும், மானிடத்துக்கு மிகவும் வேண்டிய அன்புத்தத்துவம் மூலம் உருவாக்கப் படும் ஆளுமை குறித்து குறள் முற்பகுதியும், ஓர் அரசின் இலட்சியமான முழுமை யான பிரஜையின் உருவாக்கம் குறித்து பொருட்பாலும் பேசும் வகையினைச் சுட்டி, வள்ளுவம் ஓர் அரசின் நோக்கமும் இலட்சியமும் மட்டுமல்ல அதனை அடையும் வழியும் தூய்மையாக இருக்கவேண்டும் என வற்புறுத்துகின்ற ஒரு தார்மீக அரசினை (Dharmishta State) எவ்வாறு அவாவி நிற்கின்றது என ஆயும்போது இலக்கியமூடான கருத்து வளர்ச்சியைக் காட்டமுனைவது தெரிகின்றது. சிந்தாமணி சமண மனிதாயத்தைப் புலப்படுத்துகின்றது என்றும் கம்பராமாயணம் மானிடத்தின் மாண்பைப் பேசுகின்றது என்றும் கொள்ளு கின்ற ஆசிரியர் பெரிய புராணம் கூட குடும்ப வாழ்வின் தெய்வீகத்தினையும் தெய்வ, சமூக சேவைக்காக நோற்று வாழுகின்ற மனைவாழ்வின் மாட்சியையும் சிறப்பாகச் சித்திரிக்கும் வகையிலே மானிடத்தின் மாட்சியையே பேசுகின்றது என்பர். தமிழர் கருத்தின் சிறப்பை இவ்வாறு எல்லாம் வெளிநாட்டவர்க்கு உணர்த்தும் பாங்கிலே அமைந்துள்ளது சிக்காகோ பல்கலைக்கழக விரிவுரைகள் கொண்ட இலக்கிய வரலாற்று நூல்.

இத்தகைய சிந்தனை ரீதியான தெ. பொ. மீயின் இலக்கியப் பார்வை தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த வரை ஒரு புதிய அணுகுமுறையினைத் தோற்று வித்தது எனலாம். ஆ. வேலுப்பிள்ளையின் 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்' என்ற நூல் (1969) (ஏற்கெனவே தொடர் கட்டுரைகளாக வீர

கேசரியில் வெளியாகின) தமிழரின் சிந்தனை வளர்ச்சியை இயற்கை நெறி, அறநெறி, சமய நெறி, தத்துவ நெறி, அறிவியல் நெறி எனக் கருத்தியல் ரீதியாகக் காலப் பகுதிகளைப் பிரித்து ஆய்கின்ற நூலாக அமைகிறது. கூடவே அவ்வக்காலச் சமூகப் பின்னணி விளக்கப்பட்டபோதுங் கூட அவ்வக் காலத்துக்கேயுரிய தத்துவப் பார்வையைப் பிரதிநிதித்துவப்படக்கூடிய ஒவ்வொரு முக்கிய நூல்களின் துணை கொண்டு தத்துவச் செறிவு விளக்கப்படுகின்றது. முக்கிய தமிழ் இலக்கிய நூல்களின் தோற்றப் பின்னணியையும் அவற்றை வழி நடாத்திய கருத்தோட்டங்களையும் பற்றிப் புதிய பார்வையையும் வியாக்கியானங் களையும் தருகின்றது இந்நூல்.

இலக்கிய ஆசிரியர்களின் தோற்றத்தையும் அவர் தம் இலக்கியப் போக்கை யும் எவ்வாறு அவ்வக்காலச் சமுதாய அரசியல் பொருளாதார நிலைகள் நிர்ண யிக்கின்றன என்ற வகையில் இலக்கிய வளர்ச்சியைச் சமூகத்துடன் முழுமையைச் சார்த்தி நோக்குகின்ற சமூக அணுகுமுறை சிறிது பிந்திய வொரு நிகழ்வாகவே ஏற்படுகின்றது. இந்தச் சமூக அணுகுமுறையின் உள்ளார்ந்த தன்மைகளை நாம் நோக்கும்போது

1. ஒரு இலக்கிய ஆசிரியனுடைய ஆக்கத்திற்குப் பின்னணியாக இருந்த அக்கால சமூக, பொருளாதார நிலை, அதில் நிலவிய உறவுகள், இயக்க முறைமைகள்.
2. அக்கால நிலையிலே தோன்றிய அந்த இலக்கியத்தின் தோற்றத்திற்கு உந்துகோலாக இருந்த சமுதாய மாற்றங்கள், மாற்றங்களால் ஏற் பட்ட தேவைகள், சிந்தனை அல்லது கருத்தோட்டம்.
3. ஆசிரியருடைய வாழ்வும் சமூக நிலைப்பாடும், விழுமியங்களும், அறிவு சார் நிலைப்பாடும்.
4. இலக்கிய ஆக்கத்தின் தோற்றத்திலும் போக்கிலும் செல்வாக்கு வகிக்கின்ற முன்னைய இலக்கிய மூலங்களும் கருத்துப்போக்கும்.

என்பன முக்கிய இடம் வகிக்கின்றன. இத்தன்மைகள் எல்லாம் ஒன்றிணைகின்ற போது இலக்கிய ஆக்கமும் படைப்பாளியும் நெருங்கிய ஆய்வுக்குட்படுத்தப்படு கின்றனர். இவ்வாறு ஒரு இலக்கிய ஆசிரியன் செயற்படுவதன் மூலம் அத்தகைய தொரு சமுதாயநிலையும், கருத்தோட்டமும் அத்தகைய ஒரு ஆசிரியனை அவாவி நின்றது. எனவே ஒரு புலவனின் தோற்றம் அக்காலத்தின் தேவை என நிறுவப் படக்கூடியதாகின்றது. இதன் காரணமாக இலக்கிய வரலாற்றாசிரியனுக்குத் தெளிவான இலக்கியக் கொள்கைகளும், திறனாய்வுப்பாங்கும் இன்றியமையாது இருக்கவேண்டியதாகின்றது. இவ்வகையிற் செயற்படுவோர் வரலாற்றுத் திறனாய் வாளர் எனவும் அழைக்கப்படுவர்.

1863இல் 'ஆங்கில இலக்கிய வரலாறு' என்ற நூலை எழுதிய ரெயின் என்ற ஆசிரியரே இந்த அணுகுமுறையினை முதன் முதல் அறிமுகப்படுத்தியவர் ஆவார். அவரின் சமூகரீதியான இந்த அணுகுமுறை ஆங்கில இலக்கிய உலகிற்

பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. 1927இல் பாரிங்டன் என்பார் முதன் முதலாக அமெரிக்க இலக்கியத்தில், இச் சிந்தனைப் போக்குடன் இனங்கண்டு கொள்ளக் கூடிய ஓர் அணுகுமுறையைப் பிரயோகித்தார்.

தமிழ் இலக்கிய உலகில் இச்சிந்தனையை முதன் முதற் புகுத்தியவர் வையாபுரிப்பிள்ளை அவர்களாவர். 'ஒரு குறிப்பிட்ட நூலை அதிலுள்ள பொருளை மட்டும் வைத்து விமரிசனம் செய்வது மட்டுமே வழக்காக இருந்த விஷய விமரிசன முறையை விட்டு, சரித்திர சமூகரீதியான விமரிசன முறையைக் கையாண்டவர் வையாபுரிப்பிள்ளை' என க. நா. சு. குறிப்பிடுவது இவ்விடத்திலே மனங் கொள்ளத்தக்கது. ''காலந்தோறும் மாறுபட்டுவரும் சமுதாயத்தின் தன்மையை அவ்வக்காலத்துத் தோன்றிய இலக்கியங்கள் காட்டவல்லன' எனத் தீர்க்கமாகக் கூறிய வையாபுரிப்பிள்ளை, ரெயினின் கருத்துக்களை அடியொற்றிச் சென்றமை யினைக் கீழ்வரும் வார்த்தைகள் தெளிவாகக் காட்டுகின்றன.

> ''ஒரு சமுதாயம் ஒரு குறித்த காலத்தில் எவ்வகை இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளத்தயாராக இருக்குமோ... அவ்வகை இலக்கியந்தான் அக் காலத்தில் உண்டாவது இயல்பு. சமுதாயத்தின் நிலைக்கும் சூழ்நிலைக்கும் அவற்றில் உண்டாகும் இலக்கியத்திற்கும் மிக நெருங்கிய, விட்டு விலகாத தொடர்பு உண்டு''.

வையாபுரிப்பிள்ளைக்கு முன்பு தோன்றிய எவருமே இலக்கிய வரலாற்றில் சமூக நிலைமை, காலப் பின்னணியின் முக்கியத்துவத்தை உணர்ந்து செயற்பட்ட தாகத் தெரியவில்லை. பல நூல்களின் தோற்றக் காலம் தீர்க்கப்படாத ஒரு நிலையில் இது ஒரு கடினமான காரியம் என்றும் கூட அதன் முக்கியத்துவம் அத்துணை உணரப்பட்டதாகக் கொள்ளமுடியாமல் உள்ளது. இந்த அணுகுமுறை யினை ஓரளவு ஒட்டியதாக அமைந்துள்ள ''காவிய காலம்'' நூலிலே படிப்படியாக காவிய உணர்ச்சி வளர்ந்துள்ள நெறியை விளக்குவான் வேண்டி சங்ககாலத் திலிருந்து சமூகநிலையினை இலக்கியத்துடன் இணைத்து விளக்குவதனைக் காணலாம். சங்ககால அரசியல் சமூக நிலையில் வீரத்தைப்பாடும் சூழ்நிலை ஒரு தவிர்க்கமுடியாத தேவை என்பதனை ஆய்ந்து அதனை கிரேக்க வீரயுகத்துடன் இனங்கண்டு செல்கின்ற ஆசிரியர், காவியத்தின் தோற்றத்திற்கான சூழ்நிலையை விளக்கும்போது, தமிழ் நாட்டில் 5-ம் நூற்றுண்டில் எழுந்த சூழல்களையும், ஆரியர் — தமிழர் கலப்பையும், தமிழ் மக்களின் மனப்போக்கினையும் சுட்டி, தமிழ்க் காவியங்களுக்கு உந்து சக்திகளாக விருந்த அம்சங்களையும் விளக்குவர். இவ்வாறு பக்திச் சூழலிலும் அற்புதக்கதை மோகத்திலுமெழுந்த காவியங்களின் தோற்றத்தையும் தகுதிப் பாட்டையும் மதிப்பீடு செய்து, இக்காவிய நெறி வீழ்ச்சியுற்றுச் சென்றமைக் கான சமூகநிலையினையும் சூழ்நிலைக்காரணிகளையும் விளக்குவர்.

இத்தகைய ஒரு அணுகுமுறையின் தன்மைகளுடன் அமைந்த சில கட்டுரைகளை 'இலக்கியச் சிந்தனைகள்' கட்டுரைத் தொகுப்பிற் காணக்கூடியதாக இருந்தபோதும், அவரது இலக்கிய வரலாறு, பத்தி இலக்கியச் சமூகப் பின்ன ணியை ஓரளவு விளக்குவதனைவிட கால ஆய்வுக்கும், இலக்கியப் பொருள், பண்பாய்வுக்குமே கூடிய இடமளிப்பதனைக் காணலாம். எவ்வாறிருப்பினும்,

தமது காலம் வரைக்கும் வாழ்ந்த பிற எந்தத் தமிழறிஞரிலும் பார்க்கத் தமிழ் இலக்கிய வளர்ச்சிப் போக்கினை புறநிலை அம்சங்களோடு பொருத்தி, சமூக அணுகு முறையைக் கையாண்ட வையாபுரிப்பிள்ளை அவர்கள், அதற்குமேற் சென்று அப்புறநிலை மாற்றங்களுக்குக் காரணமான அடிப்படைகளை ஆய முனையவில்லை. இலக்கியத்தின் வளர்ச்சியை அதன் பொருளிற்கும் போக்கிற்கும் சமூக மாற்றங் கட்கும் இயையத் தெளிவாகக் காலவரன்முறைப்படுத்திய செல்வநாயகம் அவர்களும் வையாபுரிப்பிள்ளையின் எல்லைகளுக்கு அப்பாற் செல்லவில்லை. பண்டை இலக்கியத்தை அவ்வக்காலத்துத் தோன்றிய இயக்க முறைகளின் இயற்கையான வெளிப்பாடு என்பதனையோ, வரலாற்று நிகழ்ச்சியின் தவிர்க்கமுடியாத தேவை என்பதனையோ உணர்ந்து அவ்வக்கால நிகழ்ச்சிகளை அவை நடந்தேறிய காலத்தின் புற அம்சங்களோடு பொருத்திக் காரண காரிய ரீதியிற் பார்க்கும் பாங்கினை இவர்கள் எவரிடையிலும் காணமுடியவில்லை.

தமிழ் இலக்கிய வளர்ச்சியைப் பொறுத்தவரை மெய்ம்மையான சமூகவியல் அணுகுமுறையின் தோற்றத்தினை வரலாற்றியல் பொருள் முதல் வாத அணுகுநெறி நின்று தமிழிலக்கிய வளர்ச்சியின் வெவ்வேறு காலகட்டங்களை நோக்கிய அறிஞர்களிடையே காணமுடிகின்றது. சமுதாயமானது அதனுடைய நியதிகளின்படி தொடர்ந்து வளர்ந்து கொண்டும் மாறிக்கொண்டும் இருக்கின்றது என்ற அடிப்படையான ஒரு விதிமுறைக்கமைய அவ்வக்கால இயக்கங்களையும் அவற்றின் கருத்துப் பரிமாணங்களையும் அவை இலக்கியத்தில் பல்லாற்றுனும் வெளிப்படு மாற்றையும் விஞ்ஞானமுறையில் ஆயும் அணுகுமுறையே இதுவாகும். இதன்படி உற்பத்தி உறவுகளடியாக உருவாகும் பொருளாதார அமைப்பே ஒரு சமூகத்தின் அத்திவாரமாக - அடித்தளமாக உள்ளது. அடித்தளத்தின் மேலேயே சமூக உறவுகள், சிந்தனை, கலை, இலக்கியம், சமயம் முதலாம் மேற்றளங்கள் உருவாகின்றன. இதன்படி சமூகத்தின் சிந்தனைகளும் கருத்துக்களும் சமூகப் பொருளாதார நிலைமைகளிலிருந்தே தோன்றி வளருகின்றன. எனவே பல்வேறு காலங்களில் இலக்கியங்களிலே புலப்படுத்தப்படும் நிகழ்வுகளையும் கருத்துக்களையும் உதிரிகளாக நோக்காது, அவ்வக்கால வரலாற்று நிகழ்ச்சிகள் சமுதாய பொருளாதார வாழ்க்கை முதலாம் புற அம்சங்களுடன் பொருத்தி ஆயும் ஒருமுறையே இதுவெனலாம். இவ்வணுகு முறை, சமூகச் செல்நெறிக்கியைய இலக்கிய நெறி அமைந்து செல்வதனைச் சிறப்பாக வெளிப்படுத்தவல்லதாகும்.

இந்த அணுகுமுறையினைக் கைக்கொண்டவர்களாக சாமி சிதம்பரனுர்,எஸ். இராமகிருஷ்ணன், நா. வானமாமலை, கா. சிவத்தம்பி, க. கைலாசபதி, கோ. கேசவன் முதலானேரைக் குறிப்பிடலாம். இந்த அணுகுமுறையிலமைந்த தனியான முழு இலக்கிய வரலாற்று நூல் இதுவரை வெளிவரவில்லை. இராமகிருஷ்ணனின் *தமிழ் இலக்கிய வரலாறு: ஓர் அறிமுகம் (1962)* நூலின் இதன் கூறுகள் சில காணப்பட்டபோதும் கா. சிவத்தம்பியின் *இயக்கமும் இலக்கியமும் (1963)*, க. கைலாசபதியின் *பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும் (1966)*, கோ. கேசவனின் *மண்ணும் மனித உறவுகளும் (1979)* ஆகிய நூல்கள் இந்தச் சிந்தனை நெறியிலமைந்தவையாகும்.

இராமகிருஷ்ணன், தமது இலக்கிய வரலாற்று அறிமுக நூலில் இலக்கியப் போக்குக்களேயும், சிறப்புத்தன்மைகளேயும் சுட்டிச்செல்லுகின்றபோது ஆங்காங்கே முன்னெவரும் குறிக்காத சமூக வரலாற்றுக் குறிப்புக்களேயும் தொட்டு அவை இலக்கியப் போக்குகளே நிர்ணயித்த பாங்குகளேக் கோடிட்டுக் காட்டுவதுடன் அமைத்துவிடுகின்றுர். ஆனுல், 1963 அளவில் தொடர் கட்டுரையாக வெளிவர ஆரம்பித்த கா. சிவத்தம்பியின் 'இயக்கமும் இலக்கியமும்' சிறிது விரிவான களத்தில் அமைந்ததாகும். சங்க இலக்கியப் பொருள் எவ்வாறு அக்கால வாழ்வு முறையின் தவிர்க்கமுடியாத வெளிப்பாடுகளாக அமைந்தது என்பதனே நிறுவ முனேயும் ஆசிரியர், அக ஒழுக்கம் பொருளாதார நிலேயடியாக அமைந்தது என்பதனேயும் குறிஞ்சி, முல்லே, மருதம், நெய்தல் என்ற ஒழுக்க முறைகள் படிமுறையின் சமூக வளர்ச்சி நிலேயைச் சுட்டுகின்றது என்பதனேயும் சமூகவியல் மானிடவியல் முடிவுகளின் ஒளியில் விளக்குவதுடன், புறத்தில் ஒவ்வொரு வாழ்க்கை முறைக்கும் பொருத்தமான பேரே அவ்வந்நிலங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது என்பதனேயும் ஆய்கின்றுர். தொடர்ந்து அறநூல்களின் தோற்றத்தின் பின்னணியைத் திருக்குறள் கொண்டு விளக்குகின்ற ஆசிரியர் பொருளாதாரத் துறையில் வணிகம் வளர்ந்தோங்கிய நிலேயிலும் அரசியலேப் பொறுத்தவரை அரசன் தனிப்பட்ட நிறுவனமாக வளர்ந்து மக்களிலிருந்து விடுபட்டு தனித்து உயர்ந்த நிலேயிலும் தோன்றிய திருக்குறள் எவ்வாறு மரபுவழி உறவுமுறையை மாற்ருது அதனேயடியாக ஏற்றுக்கொண்டு முரணறுக்கும் வகையில் ஒரு புதிய கோட்பாட்டைத் தருகின்றது என்பதனே விளக்குவர்.

அறுபதுகளின் ஆரம்பத்திலிருந்து தமிழ் இலக்கியத்தின் பல்வேறு காலப் பகுதிகளின் கருத்து வளர்ச்சி குறித்து மற்றெவரையும் விட அகன்றதும் ஆழ்ந்ததுமான ஆய் நெறியில் எழுதிவரும் கைலாசபதியின் 'பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்' என்ற நூல், தனிக்கட்டுரைகளின் தொகுப்பே எனினும், சில இலக்கியக் காலப்பகுதிகளின் வளர்ச்சி குறித்து சமூக அணுகுமுறையினேச் சிறப்பாகக் கையாண்ட ஒரு நூல் எனலாம். இரத்த உறவினுல் இணேந்திருந்த குழு நிலேயிலிருந்து உடைமையினடியாக வளர்ந்த அரசுநிலே வரையிலான சமுதாய மாற்றங்கள் தமிழ் இலக்கியத்திலே பிரதிபலிக்குமாறும் அம்மாற்றங்கள் தமிழ்ப் புலவரின் இலக்கியத்தளத்தையும் அந்தஸ்தையும் நிர்ணயிக்கும் பாங்கும் விளக்கப்படுவதுடன், தொடர்ந்து 'அரசு' நிறுவன வளர்ச்சிக்கும், அந்நிறுவனத்தைத் தாங்கிய வணிக வர்க்கத்தின் நிலேபேற்றிற்கும் அவசியமான கோட்பாடுகள் இலக்கியத்திற் பேசப்படவேண்டிய அவசியமும், சிலம்பு, மேகலே இரண்டினும் செங்கோன்மை, நீதி, ஒற்றுமை, பரத்தமை போன்ற கருத்துக் கூறுகளே விதந்துரைக்க வேண்டிய சமூகத் தேவையும் விஞ்ஞான அடிப்படையில் விளக்கப் பெறுகின்றது. இதனேயொத்து, சமணராகவிருந்த வணிக வர்க்கத்தினருக்கும், வைதிகர்களாகவிருந்த நிலவுடைமை வர்க்கத்தினருக்கு மிடையே ஏற்பட்ட பொருளாதார முரண்பாட்டின் வெளிப்பாடு பல்லவர் காலப் பக்தி இயக்கக் கூறுகளே நிர்ணயிப்பதிலும், அதன் இலக்கியத்தைக் கருத்தாட்கொள்ளுவதிலும் வகிக்கும் பங்கினே சமூகவியல் அடிப்படையில் ஆய்ந்து நிறுவுவர். வர்க்க முரண்பாட்டின் வழியான பொருளாதார நெருக்கடியினேப் பத்திப்பாடல்களில் நேரடியாகக் காண முடியாவிட்டாலும் அது பக்தி இலக்கியத்திற்கு மூலாதாரமாக எவ்வாறு அமை

கின்றது என்பதனைச் சங்க காலத்திலிருந்து மாறுபட ஆரம்பித்த சமூக முரண்பாடுகள், வர்க்கபேதம் முதலியவற்றை ஆய்வதிலிருந்து பல்லவர் காலத்து சமயம், மொழி, கல்வி என்ற மூன்று மேற்றள அம்சங்களும் இப் போராட்டத்திலே எவ்வாறு பங்குகொண்டன என்பதனை விளக்குவது ஈருகப் பல சமூகச் சான்றுகளைத் துணைக்கொண்டு நிறுவுகின்ருர்.

இத்தகையவொரு அணுகுமுறை, மரபுரீதியாக வாய்பாடு வகையான் கூறப்படும் மேலெழுந்தவாரியான கருத்து வெளிப்பாட்டு நிலையையும்,சமூக வளர்ச்சி நிலையில் நோக்கப்படவேண்டிய கருத்துக்களையும் நிகழ்வுகளையும் உதிரிகளாக வெடுத்து தமது நிலைக்கேற்ப மகிமைப்படுத்தும் வரலாற்றுக்கு முரணுன நிலையையும் தூர விலக்கி, விஞ்ஞான நோக்குடனும் துணிவுடனும் தமிழிலக்கியத்தை அணுகவேண்டியதன் அவசியத்தை இயற்கையாகவே உணர்த்தி நிற்கின்றது. மேலும், வரலாற்றுப் பொருள் முதல் வாத அணுகு நெறியில் பொது நியதிகளை வெறுமனே கூறிவிட்டு தமிழுக்கும் அமைதிகாணும் வகையிற் செல்லாது தாம் கூற வகுக்கும் மையமான கருத்துக் கூறுகளை தமிழ்நூற் சான்று தளங்கள் மூலமாகவும், மானிடவியல், சமூகவியல் உண்மைகளூடாகவும் நுணுகி ஆயும் ஒரு ஆய்வு நெறியினையும் இவரிடம் கண்டுகொள்ள முடிகின்றது.

இவ்வகையில் இலக்கியம், சமூகம் ஆகிய இரண்டினதும் இருமுனைப்பட்ட தாக்க (Interaction) வெளிப்பாட்டினடியாக ஒரு புதிய ஆய்வு அணுகுமுறையில் தோற்றக் கூறுகளையும் கூடவே அவதானிக்கக் கூடியதாகவுள்ளது. அதாவது, தமிழிலக்கியங்களூடாக தமிழரின் சமுதாய வளர்ச்சியை ஆய்கின்ற ஒரு புதிய முயற்சியே அதுவாகும். ஓர் அமெரிக்க ஆசிரியர் குறிப்பிட்டதைப் போல இலக்கியப் பலகணியூடாக (பிற அறிவியற்றுறைகளின் துணையையும் கொண்டு) அந்நாட்டின் மக்களின் சமூக வாழ்வு, விழுமியங்கள், நிறுவனங்கள், மதிப்பீடுகள் முதலானவற்றை அடக்கிய மொத்த சமுதாய வளர்ச்சியையும் வரலாற்றையும் காணமுனைகின்ற ஓர் ஆய்வுமுயற்சியே அதுவாகும். இவ்வகையிலே கோ· கேசவனின் 'மண்ணும் மனித உறவுகளும்' நூல் தமிழ் இலக்கிய வளர்ச்சிப் போக்கிலே தோன்றும் பல்வேறு கருத்துக்கள், நிறுவனங்கள் முதலானவற்றின் தோற்றம், வளர்ச்சி ஆகியவற்றை ஆய்ந்து சமூக அமைப்பு மாற்றங்களை விளக்குவதனைச் சிறப்பாக மேற்கொள்ளுகின்றது. எனினும் தெளிவான கால அடிப்படையிலும், வளர்ச்சி முறையிலும் இத்தகைய ஆய்வு அணுகுமுறை முழுமையாக வளர்ச்சி பெற இன்னமும் இடம் இருக்கின்றது.

தமிழ் இலக்கிய வரலாற்றின் வெவ்வேறு காலப் பிரிவுகள் பற்றி நூல்கள் எழுதிய மேலைநாட்டவரின் அணுகுமுறையையும் நோக்குதல் இவ்விடத்தில் அவசியமானதே. உலகளாவிய பாரம்பரியச் செல்வத்திலே தமிழ் இலக்கியத்துக்கும் உரிய இடம் உண்டு என நிறுவக்கூடிய வகையிலே, திட்டமான வரலாற்று, மதிப்பீட்டு ஆய்வினை நடாத்துதலே இவர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது. கமில் சுவெலபில், ஜோர்ஜ் ஹார்ட் முதலியோர் இப்பணியிலீடுபட்டோரில் மிக முக்கியமானவர்கள்.

சுவெலபில்லின் 'முருகனின் முறுவல்' நூல், தமிழ் இலக்கியப் போக்குகளில் மிகவும் சிரியனவாகவும், தமிழ்ப் புலமையை மெய்யாகப் பிரதிபலிப்படுத்துவன

வாகவும் தாம், தமது ஆய்வடிப்படையிலே உணருகின்ற நுல்களையும் காலங்களையும் பற்றி மட்டும் தனிக்கட்டுரைகளாகக் கூறுகின்றன. அவரின் அடுத்த நூலான Tamil Literature (Brill) 1975 தமிழ் இலக்கிய வளர்ச்சியைப் புதியமுறையிலே, தொடர்ச்சியான இலக்கியக் காலங்களாக வரன்முறைப்படுத்தி நூல்கள் பற்றிய மதிப்பீடுகளையும் கொண்டு விளங்குகின்றது., அவருடைய மூன்றாவது நூல், கால அடிப்படையில் இல்லாது இலக்கிய வடிவ அடிப்படையில் வளர்ச்சியைக் கூறுவதாக ஒரு மதிப்பீடு, பகுப்பாய்வு ரீதியிலான ஒரு அறிமுக நூலாக அமைகின்றது.

சுவெலபில் பெருமளவு மூலபாடத்திறனுய்வுமுறை அடிப்படையிலேயே தமது நூல்களை அமைத்திருக்கின்றார். அத்தகைய அணுகுமுறை 'முருகனின் முறுவலில்' சங்கப்பாடல் பற்றிய அத்தியாயத்திலேயே தெரிகின்றது. வாய்மொழியில் பாடல் மரபிலிருந்து தோன்றியதாகக் கொள்ளுகின்ற சங்கப்பாடல்களின் அமைப்புக் கூறுகளையும், கருத்தடக்கம் (thought content), வடிவம், மையக்கரு, மொழி முதலாம் சகல தன்மைகளையும் ஆய்கின்றார். சங்கப் பாடல்களிற் பல, குழுடிநிலையிலே தோன்றி நிலமானிய அடிப்படையில் வளர்ந்து சென்றன என ஏற்றுக் கொள்ளுகின்ற ஆசிரியர்,-- பத்திப்பாடல்களின் தோற்றத்திற் காணக்கூடிய சமூக அரசியற் கூறுகளை ஏற்றுக்கொள்ள மறுப்பதற்கான காரணங்கள் தெளிவில்லாதனவாகவும், ஏற்றுக்கொள்ள முடியாமலும் உள்ளன. வள்ளுவர், கம்பர், பாரதி போன்றோரின் இலக்கிய அந்தஸ்து பற்றி வினு எழுப்புகின்றபோது அவருடைய வாதங்கள் தகுந்த அடிப்படையில்லாதனவாக இருப்பதனை அவதானிக்க முடிகின்றது.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கின்றபோது, அவருடைய முதலாவது நூல், பல்வேறு நூல்களின் உருவ அடக்கம், பொருளமைதி பற்றிய அட்டவணை, வரைபடம் இவற்றுடன் கூடவே விஞ்ஞான ரீதியான பகுப்பாய்வு, மதிப்பீட்டாய்வு இரண்டையும் கொண்டதாக விளங்குகின்ற அதேவேளையிலே, இரண்டாவது நூல் இதுவரை இத்துறையிலே வெளிவந்த பிற எந்த நூலையும் விடப் பல்வேறு தரவுகளையும், நூல்களின் அமைப்பு, காலம் பற்றிய பகுப்பாய்வுகளையும் கொண்டு, விரிவான ஒரு தமிழ் இலக்கிய வரலாற்றின் தோற்றத்திற்கு வழிகாட்டியாக அமைகின்றது. மூன்று நூல்களிலும் ஒன்றிணைவு இருந்து, அவருடைய ஆய்வுக் கருத்துக்களும் ஓரிடத்திலேயே அமைந்திருக்குமேயானுல், இதுவரைக்குமில்லாத அளவு ஓரளவு சிறப்பான முழுமையான இலக்கிய வரலாறு ஒன்று தோன்றியிருந்திருக்கக்கூடும். இருந்தபோதும், இத்துறையிலே அன்னாரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது என்பதனை மறந்துவிட முடியாது.

தமிழிலே இலக்கிய வரலாற்று எழுத்து முயற்சிகள் பல்வேறு முனைகளிலும் வெவ்வேறு அணுகுமுறைகளிலும் வெளிவந்த நிலையிலே நூற்றாண்டு ரீதியான வரலாற்று ஆய்வுகளும், சமய அடிப்படையிலான வரலாற்று முயற்சிகளும் கணிசமாக எழுந்துள்ளன. வரலாற்றை நெருங்கிய ஆய்வுக்குட்படுத்தக்கூடிய களம் இரண்டிலுமிருந்தபோதும் வெளிவந்த மிகச் சிலவே தேறக்கூடியன. மேலும், வெவ்வேறு நாட்டின் வரலாற்றின் அடிப்படையிலே தமக்கே உரிய சமூகப் பின்னணியில் தமிழிலக்கிய வளர்ச்சியினை ஆயவேண்டிய தேவைகள் இலங்கை,

மலேசியா போன்ற நாடுகளிலே உணரப்பட்டுவந்த நிலையில் நூல்கள் வெளிவர ஆரம்பித்துள்ளன.

தொகுத்து வகுக்கும்போது இன்றுவரை வெளிவந்த இலக்கிய வரலாற்று நூல்களை மாணவருக்கும் பொது வாசகருக்குமென எழுதப்பட்ட நூல்கள், ஆய்வு நூல்களாகப் பல்கலைக்கழகங்களினுல் வெளிடப்பட்ட நூல்கள், சொற்பொழிவு களாக வெளிவந்த இலக்கிய நூல்கள், அபிமானத்தால் எழுந்த நூல்கள், வெளி நாட்டவர்க்கும் பொது வாசகர்க்கும் ஏற்றவகையில் எழுந்த சாகித்திய அக்கெடமி போன்ற நிறுவனங்களின் வெளியீட்டு நூல்கள், வெளிநாட்டவரால் எழுதப்பட்ட நூல்கள், வெவேறு நாட்டின் வரலாற்றுப் பின்னணியிலே எழுந்த நூல்கள் எனவும் வகைப்படுத்தலாம். தமிழ் இலக்கிய வரலாற்றை வெவ்வேறு நிலையிலே கற்க வேண்டிய மாணவர்கள் பல்வேறு மட்டங்களில் இருப்பதாலும், நீண்ட முழுமை யான இலக்கிய வரலாற்றின் உருவாக்கத்திற்கு இத்தகைய பலரக நூல்கள் உதவும் என்பதாலும் நாம் ஓரளவு திருப்தியடையலாம்.

தமிழ் இலக்கிய வரலாற்றுத்துறையின் இன்றைய நிலை யாது?ஒரு கல்லூரி பாடநெறி அல்லது இலக்கிய ஆர்வலரின் பொது வாசனைத்துறை என்ற நிலையி லிருந்து ஓர் ஆய்வுத்துறை என்ற அளவுக்கு எவ்வகையில் வளர்ந்திருக்கின்றது? என்ற கேள்விகள் எழுப்பப்படுமாயின் பதில்கள் அவ்வளவாகத் திருப்தியைத் தரமுடியாது. ஒரு சிலரின் முயற்சிகள் தவிர, கூறினவற்றையே மீண்டும் உரைத் தும், சிறிது மாற்றி உரைத்தும் செல்வதனை யொத்தும் தமிழ் இலக்கிய வரலாறு பழைய தடம்பட்ட பாதையிலேயே சென்று கொண்டிருக்கின்றது. கல்லூரிப் பாட நெறியைப் பொறுத்தவரையிலே, பொதுமைப்படுத்திக்கூறின் நமது நீண்ட இலக்கியப் பாரம்பரியத்தின் செழுமையையும் சீரினையும் மாணவர்கள் ஓரளவு அறிந்து கொள்ளவும், பரீட்சை நோக்கிலே கற்கவும், இவற்றுட் சில உதவ முடியுமே யன்றி அவர்களின் அறிவுப் பசிக்குத் தீனிபோடக்கூடிய வகையிலே இலக்கியத்தின் உண்மையான நீண்ட வளர்ச்சியையும் தொடர்ச்சியையும் அவற்றின் மூலவேர்களையும் பரம்பலையும் மெய்ம்மையான சமுதாய வரலாற்றுப் பின்னணியிலே ஓரளவாவது முழுமையாகவும் திட்டமாகவும் விஞ்ஞான ரீதியிலே விளக்குகின்ற நூல் எதுவுமே வெளிவரவில்லை என்றே கொள்ளவேண்டும். இதனைப் பல அறிஞர்கள் (கவலையுடன்)ஒத்துக்கொண்டிருக்கின்றனர். எனினும் ‘விரிவான ஒரு இலக்கிய வரலாற்றுக்கு இது ஓர் அறிமுகம்’ என இலக்கிய வரலாற்று நூலாசிரியர் கூறுவது மரபாகிவிட்டது.

விரிவான வரலாற்று நூல் எழுதப்படுவதற்கு வேண்டிய முன்தேவைகளான தெளிவான காலவரன்முறையும், போதிய தரவுகளும், அறிவுசார்நிலையும்ஏற்ற தாக இருக்கின்றன எனக் கொள்ளுவதிலே தவறில்லை. தொல்காப்பியம் முதலாம் ஓரிரு நூல்களின் காலப்பிரச்சினை இன்னமும் செவ்வையாகத் தீர்க்கப்படாவிட்டா லும் இலக்கியக் காலங்களின் வரன்முறையான பகுப்புமுறை அத்துணை பிரச்சினை வாய்ந்ததல்ல. ‘விரிவான இலக்கிய வரலாற்று நூல் எழுதப்படாமுன்னர் இத்துறை யிற் பல்வேறு நூல்கள், இலக்கிய காலங்கள் பற்றிய பலமுனைப்பட்ட எழுத்துக்கள் இன்னமும் வெளிவருவது நல்லது எனச் சுவெலபில் கூறுவது மனங்கொள்ளத் தக்கதே எனினும் இம்முயற்சிக்கு இனியும் காலதாமதஞ்செய்ய வேண்டிதேயில்லை.

# பண்டைத் தமிழ் இலக்கியத்தில் குற்றத் தடயப் பொருள் ஆய்வியல்

ப. சந்திரசேகரன்
இயக்குநர், குற்றத் தடயப் பொருள் ஆய்வகம், சென்னை

குற்றங்கள் எப்போதுமே சாட்சியை வைத்துக் கொண்டு நடை பெறுவதில்லை. அப்படி நடைபெறுகின்ற ஒரு சில குற்றங்களைக் காண நேருகின்றவர்களும் சாட்சி சொல்ல முன் வருவதில்லை. அப்படி சாட்சி சொல்ல வருகின்றவர்களும் உண்மையைச் சொல்வதில்லை. அப்படி அவர்கள் உண்மையையே சொன்னாலும் அவர்கள் கண்களுக்கு அவை உண்மையாகத் தென்பட்டிருக்கலாம். ஆனால் பகுத்து ஆய்ந்து பார்க்கும்பொழுது அவை உண்மைக்குப் புறம்பாக இருக்கும்.

எனவேதான் வாய்மொழிச் சாட்சியங்களை வைத்துக் குற்றவாளிகளைக் கண்டு பிடிக்கின்ற முறையை விட குற்ற வழக்குகளில் சம்பந்தப்பட்ட தடயப் பொருள்களை அறிவியல் துணை கொண்டு ஆய்ந்தறிந்து குற்றவாளிகளைக் கண்டு பிடிக்கும் முறை அண்மைக் காலத்தில் பல நாடுகளிலும் விரிவாகக் கையாளப் படுகிறது. இப்படி குற்றம் சம்பந்தப்பட்ட தடயப் பொருள்களை ஆய்ந்தறியும் கலையானது ''Forensic Science - குற்றத் தடயப் பொருள் ஆய்வியல்'' என்ற பெயரில் ஒரு தனி அறிவியற் பிரிவாக கடந்த 50 ஆண்டுகளாக இயங்கி வருகிறது.

ஆனால் பண்டைத் தமிழகத்தில் பன்னெடுங் காலங்களுக்கு முன் இந்தக் குற்றத் தடயப் பொருள் ஆய்வியல் முறை வழக்கிலிருந்து வந்திருக்கிறது என்பது இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலிருந்து தெரியவருகிறது.

சிலப்பதிகாரத்துப் பொற்கொல்லர் கோவலன் கையிலிருந்த சிலம்பு காணாமற் போன அரசியின் காற்சிலம்பைப் போலவே உருவ அமைப்பில் ஒத்திருந்ததால் அதை அரசியின் சிலம்பு என்றே திட்டவட்டமாக வாய் மொழிச் சாட்சியம் கூறினர். காவியுகு நீரும் கையிற்தனிச் சிலம்புமாகக் கண்ணகி பாண்டியன் அரசவைக்குச் சென்று அச்சிலம்பு அரசியினுடையது அன்று, தன்னுடையதே என்கின்ற உண்மையை அச்சிலம்பை உடைத்து உள்ளிருக்கும் பரல்களை, மாணிக்கம் என்று காண்பித்ததன் மூலம் அச்சிலம்பு தன்னுடையதே என்று நிருபித்தாள். இவ்வாறு தன் கணவன் குற்றம் அற்றவன் என்ற உண்மையை நிருபிக்க உயிரற்ற பொருளான சிலம்பு தடயப் பொருளாகக் கோவலன் வழக்கிலே பயன்பட்டது. இதுபோன்ற உயிரற்ற தடயப் பொருள்கள் வாய்மொழிச் சாட்சியங்களை விடத் திட்பமான சாட்சியங்களாக அமைந்துள்ளன என்பதை இளங்கோவடிகள் அழகாக சிலப்பதிகாரத்தில் எடுத்துக் காட்டியுள்ளார். இந்த அடிப்படைத் தத்துவத்தில்

தான் குற்றத் தடயப் பொருள் ஆய்வியல் என்கிற ஒரு தனி அறிவியற் பிரிவு தற்போது செயல்பட்டு வருகிறது. குற்றம் துலக்குவதிலே, நீதிமன்றத்திற்குக் குற்றங்களில் சம்பந்தப்பட்ட பலவகையான தடயப் பொருள்களை அறிவியல் முறையில் ஆராய்ந்து உதவி அளிக்கும் பணியை மிகச் சிறப்பாக தமிழ்நாடு ஆய்வகம் செய்து வருகிறது. குற்றம் துலக்குவதில் அறிவியல் முறையை பயன்படுத்துவதற்கென்று தமிழகத்தில் 1849-ம் ஆண்டிலேயே ஓர் ஆய்வகம் ஏற்படுத்தப்பட்டது. இந்த ஆய்வகம் ஆசியாவிலேயே முதலாவதாக நிறுவப்பட்ட ஆய்வகம் ஆகும். இந்த ஆய்வகம் முதன் முதலில் குற்ற வழக்குகளில் மருத்துவ வல்லுநர்களுக்கு உதவி செய்வதற்காக தமிழகத்தில் 132 ஆண்டுகளுக்கு முன்பாக ஏற்பட்டது. என்றாலும் 1959-ம் ஆண்டில் தான் இந்த ஆய்வகம் குற்றத் தடயப் பொருள்கள் ஆய்வகம் என்ற பெயரில் நிறுவப்பட்டது. தமிழ் நாட்டில் இருக்கும் இந்த குற்றத் தடயப் பொருள்கள் ஆய்வகமானது தன்னுள் ஏழு துறைகளைக் கொண்டுள்ளது. அவையாவன: துப்பாக்கிப் பிரிவியல், உயிரியல், வேதியல், ஆவணக்காப்பியல், இயக்கவியல், இரத்தக் கூறுபாட்டியல், நஞ்சு இயல். இந்த ஏழு துறைகளோடு அல்லாமல் தனியாக ஓர் ஆராய்ச்சித் துறையையும் கொண்டுள்ளது இந்தியாவிலேயே தமிழக ஆய்வகம் ஒன்றுதான்.

இந்த ஆய்வகத்தில் ஆராயப்படும் குற்றத் தடயப் பொருள்கள் திருடப்பட்ட ஊர்தியிலிருந்து, கொலை நடந்த இடத்தில் கிடக்கும் ஒரு சிறு மயிரிழை வரை பலதரப்பட்ட பொருள்களாகும். ஒரு மனிதனையோ அல்லது இன்னொரு ஊர்தியையோ இடித்துவிட்டு அந்த இடத்தில் நிற்காமல் ஓடி மறைந்து விடுகின்ற ஊர்திகளைக் கண்டு பிடிக்கின்ற வழக்கில் அந்த விபத்து நடந்த இடத்தில் கிடக்கக் கூடிய சிறு கண்ணாடித் துண்டுகள், சிறு வண்ணத்துகள்கள், ஊர்தியின் அடிப்பாகத்திலிருந்து உதிர்ந்த மண் தூள் ஆகிய பொருள்களை அந்த இடத்திலிருந்து சேகரித்துக் குற்றம் துலக்குவோர் ஆய்வகத்திற்கு அனுப்புவார்கள். அதுபோல, சந்தேகப்பட்ட வாகனத்தைப் பிடித்து அதில் இடிப்பட்ட மனிதனின் குருதியோ, சதையோ மயிரிழையோ அல்லது அவர் ஆடையிலிருந்து சுழன்று அந்த வாகனத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் நூல் இழை போன்றவைகளையோ கைப்பற்றி ஆய்வகத்திற்கு அனுப்புவர். இச்சிறு சிறு தடயப் பொருள்களை ஆராய்ந்து அந்த மனிதனை இடித்துச் சென்றது இந்த ஊர்திதானா என்பதை அறிவியல் முறையில் கண்டு பிடித்து உதவுகிறது ஆய்வகம். இதுபோலவே கொலை வழக்குகளில் துப்பாக்கி உபயோகப்படுத்தப்பட்டால் சம்பந்தப்பட்ட துப்பாக்கியையும் இறந்தவரின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட குண்டையும் ஆராய்ந்து இந்தக் குண்டு இந்தத் துப்பாக்கியிலிருந்து வந்தது தானா என்பதை ஆராய்ந்து திட்டவட்டமாக அறிவிக்கமுடிகிறது. இதுபோல நஞ்சுண்டு தற்கொலை செய்துகொள்ளும் வழக்குகளிலும் அல்லது நச்சு வைத்துக் கொலை செய்யும் வழக்குகளிலும் அவர்கள் உட்கொண்ட நஞ்சு என்ன என்பதை இறந்தவனின் உடல் உறுப்புகளிலிருந்து கண்டு பிடித்து உதவுகிறது. சில கொலை வழக்குகளில் அடையாளம் தெரியாமல் பிணங்களை மறைத்து விட்டால் கூட அந்த எலும்புக் கூடுகளை வைத்துக் கொண்டு இறந்தவனின் புகைப்படம் இருந்தால் அந்த புகைப்படத்தையும், இறந்தவனின் மண்டையோட்டையும் வைத்து, இது இறந்தவனின் மண்டையோடுதானா என்பதைக் கண்டுபிடிக்க ஒரு புதிய முறையையும் தமிழ்நாடு ஆய்வகத்தில் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

முன்னுலே கூறியதுபோல வாய் மொழிச்சாட்சியங்கள் இல்லாத அல்லது இருந்தும் பயன்படாத பல வழக்குகளில் இதுபோன்ற மௌன சாட்சியங்களாக விளங்கும் இந்தத் தடயப் பொருள்களே இந்த ஆய்வகத்தில் ஆராய்வதன் மூலம் உண்மையான குற்றவாளிகளேக் கண்டு பிடிக்கவும் நிரபராதிகளே விடுவிக்கவும் முடிகிறது.

கண்களின் நேர்ப்பார்வைக்கு ஒரே மாதிரியாகத் தோன்றும் வண்ணத் துகள்கள், நூலிழைகள், ஆவணத்தாள்கள், குற்றவழக்குகளில் சம்பந்தப்பட்ட தடயப் பொருள்களாக அமைந்து விடுவது உண்டு. ஆனுல் அவைகளே உருப் பெருக்கிகளின் மூலமும் மற்ற அறிவியல் முறை கொண்டும் ஆராயும்போது, பார்வைக்கு ஒரே பொருளாகத் தென்படும் பொருள்கள், உண்மையில் தனித் தன்மைகொண்ட வெவ்வேறு பொருள்கள் என்பது தெரியவரும். இதை உணர்த்து வான் வேண்டித்தான் வள்ளுவப் பெருந்தகை தம் பொய்யா மொழியில்

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு''

என்று கூறிப் போந்தார்.

இக்குறட் கருத்துத்தான் (Forensic Science) – ''குற்றத்தடயப் பொருள் ஆய்வியல்'' என்று அண்மைக் காலத்தில் வளர்ந்து வருகின்ற ஒரு அறிவியற் பிரிவின் அடிப்படைத் தத்துவமாகும். இத்தத்துவத்தின் வளர்ச்சி, தமிழ் இலக்கியத்தின் பிற்பட்ட காலமாகிய சோழர் காலத்திலும் செழிப்புற்றிருந்தமையை சேக்கி ழாரின் பெரிய புராணத்தில் அறியக் கிடக்கிறோம்.

குற்றத் தடயப்பொருள் ஆய்வு இயலில் (Document Examination) ஆவண ஆய்வியல் என்பது தற்காலத்தில் மிகுதியாகக் காணப்படும் ஆய்ந்தறிந் தோர் செய்யும் குற்றங்கள் (White collar offences) காரணமாக மிகுதியாக வளர்ந்து வரும் ஒரு பிரிவு ஆகும். கள்ளக் கையெழுத்திடல், காசோலே மாற்றுதல், பொய்யுரைத்து அனுமதேயக் கடிதம் எழுதுதல் போன்ற குற்றங்களில் சம்பந்தப் பட்ட கைச்சாத்துக்களே ஒப்பிட்டு வல்லுநர்கள் தங்கள் நிபுணத்துவ அறிக்கைகளே வழக்கு மன்றங்களில் வழங்குவது தற்கால அறிவியல் மூலம் வளர்ந்து வந்த ஒரு பிரிவு என்று நாம் கருதுகிறோம். இருப்பினும் நமது இலக்கியங்களே ஆராய்ந்து பார்த்தால் இந்த ஆவண ஒப்பு ஆய்வு முறையானது 12-ம் நூற்ருண்டில் அநபாய சோழன் காலத்திலேயே வழக்கிலிருந்திருக்கிறது என்ற உண்மை புலப்படும்.

சுந்தரமூர்த்தி நாயனுர் புராணத்தில் தடுத்தாட் கொள்ளும் தருணத்தில் அவருக்குத் திருமணம் நடக்கின்ற காலேயில் திருமணத்தை நடத்தவிடாதவாறு தடுத்து வேதியர் வடிவில் வந்த சிவபெருமான் சுந்தரரின் முப்பாட்டனுர் எழுதிய தாகக் கூறி ஓர் ஓலேயைக் காண்பித்து அவையினர் முன்னிலேயில் ''நீ எனக்கு அடிமை'' என்ருர். அதைக் கேட்டுக் கோபம் கொண்ட நம்பியாரூரர் ஓலேயைக் கிழித்து எறிந்து விடுகின்ருர். அதன் பின்னர் எம்பெருமான் அனேவரையும் திருவெண்ணெய்நல்லூருக்கு அழைத்துச் சென்று அவையோர் முன்னிலேயில் மூல ஓலேயைக் காண்பித்து (Original document) அந்த ஓலேயில் எழுதியிருக் கின்ற எழுத்துக்கள் அவரது முப்பாட்டனுர் எழுதியதுதான் என்று விளக்கு

கின்ருர். அவையோர் அதனை ஒப்பிட்டு நிரூபிப்பான் வேண்டி முப்பாட்டனுர் எழுதிய கையெழுத்துடைய மற்ற சுவடிகளைக் கொண்டு வரச் செய்து அவைகளில் கண்ட கையெழுத்தினையும், வேதியர்கொண்டு வந்த சுவடியில் உள்ள கையெழுத்தினையும் ஒப்பிட்டு அது முப்பாட்டனுர் எழுதியதே என்கின்ற உண்மையைக் கண்டறிகின்றனர். எனவே (Document Expert) ஆவண ஆய்வியல் வல்லுநர் நீதி மன்றங்களில் பெரும்பாலான வழக்குகளில் சாட்சியாக விளங்குகிற முறை நம் நாட்டில் 12-ம் நூற்ருண்டிலேயே வழக்கில் இருந்தது என்ற உண்மை தெரியவருகிறது.

''ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்'' என்ன ''முன்னே
மூட்சியில் கிழித்த ஓலை படியோலை மூல ஓலை
மாட்சியில் காட்ட வைத்தேன்'' என்றனன் மாயை வல்லான்.

''வல்லையேல் காட்டிங்'' கென்ன, மறையவன் ''வலிசெய் யாமல்
சொல்லநீர் வல்லீ ராகில் காட்டுவேன்'' என்று சொல்லச்
''செல்வநான் மறையோய்! நாங்கள் தீங்குற ஒட்டோம்'' என்ருர்
அல்லல்தீர்த் தாள நின்ருன் ஆவணங் கொண்டு சென்ருன்.

இருள்மறை மிடற்ருேன் கையில் ஓலைகண் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத் தானும் ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன் தொன்மை நோக்கித்
தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகம் செப்பு கின்ருன்

''அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்எ ழுத்து''.

வாசகங் கேட்ட பின்னர் மற்றுமேல் எழுத்திட்டார்கள்
ஆசிலா எழுத்தை நோக்கி ''அவையொக்கும்'' என்ற பின்னர்
மாசிலா மறையோர் ''ஐயா! மற்றுங்கள் பேர ஞர்தம்
தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் தறிமின்'' என்ருர்.

அந்தணர் கூற ''இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்
தந்தைதன் தந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தஆ வணத்தி னேடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி
வந்தது மொழிமின்'' என்ருன் வலிய ஆட் கொள்ளும் வள்ளல்.

திரண்டமா மறையோர் தாமும் திருநாவ லூரார் கோமுன்
மருண்டது தெளிய மற்ற மறையவன் எழுத்தால் ஓலை
அரண்தரு காப்பில் வேருேன் றழைத்துடன் ஒப்பு நோக்கி
''இரண்டும்ஒத் திருந்த தென்னே! இனிச் செயல் இல்லை'' என்ருர்.

''நான் மறை முனிவ ஞர்க்கு நம்பியா ரூரர்'' தோற்றீர்
பான்மையின் ஏவல் செய்தல் கடன்'' என்று பண்பில் மிக்க
மேன்மையோர் விளம்ப, நம்பி ''விதிமுறை இதுவே ஆகில்
யானிதற் கிசையேன் என்ன இசையுமோ'' என்று நின்ருர்.

# மறு-மறை பொருள்கள் குறி இலக்கியக் கொள்கை

(Theory of Ambiguity in Literature)

சோ. இலட்சுமிரதன் பாரதி

## 1. செய்திகளும் மதிப்பீடுகளும் (Facts & Values)

மனிதரிடம் மனம், மொழி, மெய் ஆகிய மூன்று இயல்புகளும் அமைந்துள்ளன. மாந்தருக்கு இவை ஒன்றுக இயங்கி, தமைச் சார்ந்துள்ள நிலம், பொழுது, கருப்பொருள்கள் ஆகிய சூழ்நிலைகளின் இணக்கம் அறிந்து செயல் புரியும். ஆற்றல் சால் சமனியத் திறமை (Dynamic Equilibrium) பெறும் வாய்ப்பு உளது. இத்தகைய ஆளும் திறமை பற்றியே மனிதனுக்கு 'ஆள்' எனும் பெயர் ஏற்பட்டது. அத்தகைய ஒழுக்கச் சிறப்பு அவனது உரிப்பொருள்.

மக்கள் இனங்கள் ஒருபால் குறிப்பிடத்தக்க பண்பாடுகளையும் கலாச் சாரங்களையும் போற்றிக் காப்பதுடன், மற்ருெருபால் அவற்றில் மாறுதல்கள், முன்னேற்றங்கள் கருதும் நோக்கமுடையவர்களாகவும் உள்ளனர். இத்தகைய போக்கில் அவர்களுள் சில சிக்கல்களும் குழப்பங்களும் எழுகின்றன. ஒருவரைப் புரிந்து வாழும் உறவு முறைகள் பாதிக்கப்படுகின்றன.

''உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் தம் உறவு கலவாமை வேண்டும்'' எனவும் ''வைனும் இன்னுது மன்னே வினைவேறு சொல்வேறு பட்டார் தொடர்பு'' (குறள் 819) எனவும் வேண்டுவர்.

உலகம் யாவும் உளதென்பது யாவரும் ஒப்பும் செய்தி. ஆனல் அதை அறிந்து கொள்ளும் வயணத்தில் ஒவ்வொருவரும் கற்பித்துக் கொள்ளும் உலகு எல்லோருக்கும் ஒன்றாக இருக்காது. மேலும் மக்கள் அதைப்பற்றிய தம் அறிதல் களைத் தாம் புரிந்து கொள்ளுதற்கும், பிறரைப் புரிந்து கொள்ளச் செய்வதற்கும் ஆக்கிய மொழியினால் படைக்கும் கருத்துலகம் மற்றொன்று ஆகும். அறிதலில் அவரவர் பக்குவமடைந்த மனமும், மெய்ப்பாடுகளும் ஒன்றியுள்ளன. படிமலர்ச்சி யின் தன் உணர்வே மனிதன் என்பர். எனவே பொதுவான கருத்துக்களும், தனி யான அறிதல்களும் மாறுபடும் இயல்புடைய தொடர்புகளைக் கொண்டு இயங்கு கின்றன.

உடம்பிற்கு 'மெய்' என்பது பெயர். உலகத்தையும் மெய்யாகக் கருது கிறோம். ஆயினும் அவற்றின் நிலையாமையைக் கருதி அவை பொய், மாயை, 'காயம் இது பொய்யடா, காற்றடைத்த பையடா' என்றவாறாக மறுக்கிறோம். உளமை வேறு, மெய்மை வேறு என்று வேதாந்தப் பொருள் விரித்துரைக்கிறோம்.

பொருள்களால் அல்ல, ஆனுல் பொருள்களைப் பற்றிய தம் தம் புத்தி களால் மாந்தர் துன்புறுத்தப்படுகின்றனர் என்றார் மான்டெயின்.

நயமிடர் மதிப்பீடுகளை மட்டுமின்றிப் பொதுவாகப் பண்பாடுகளையும் பகுத்து அறிவதற்கு ஆகும் மிகச் சிறந்த கருதுகோள் அளவுகளையும் மொழியியல் வகுத்தளிக்கிறது. *சமூக முறைவனங்களில் (Social Systems) அமையும் மக்களி டையே பண்பாட்டு உரிமைகளும் கடமைகளும் ஒழுக்க (திணை) மதிப்பீடுகளைச் செய்யும் பாங்கில் மிக முக்கியத்துவம் பெறுகின்றன.

மதம், அரசு ஆகிய இருவகை இறைமைகளும் நம்மை அச்சுறுத்திப் பற்றுறுத்தும் சூழ்நிலைகளை ஓர்த்து மக்கள் உறவுகளினாலாய பல்வேறு செய்திகளையும் மொழியும்பொழுது, சொற்கள் செம்பொருள்களை வெளிப் படுத்துவனவாகவும், அன்றிக் கரந்துரைப்பனவாகவும் உருப்பெறுகின்றன.

### மறுபொருள் குறி நேர்வுகள்

அறங்கூறும் குறளும் 'தன்னெஞ்சு அறிவது பொய்யற்க' என்றும் அந் நெறிக்கும் விலக்காக 'பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின், 'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமையிலாத சொலல்', 'யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும் வாய்மை யின் நல்ல பிற' எனவும் பொய்மைக்கும் மெய்மைக்கும் வாய்மையின் மூலம் பாலங் கட்டுவதைக் காணலாம்.

ஆக்கவும் அழிக்கவும் வல்ல அரசன் தன்னைச் சுற்றி யுள்ளவர்களிடம், ''இதோ பாருங்கள், வெள்ளைக் காக்காய் பறக்கிறதென்றோ, கடல் அலைகளும் என் ஆணைக்குக் கட்டுப் பட்டு விலகுகின்றன என்றோ, அறையின், அவர்கள் ஆம், ஆம் என்று ஆமோதிக்கவோ, அன்றி அவர்களில் பொருள்கரந்த சொல் தேர்ந்து ஆகா, ஆகா எனப் பகர்ந்து தப்பித்துக் கொள்ளவோ செய்தலும் கூடும்.

---

*''Consideration of Culture in a distributional sense is obliged to be reductionist, following the method developed to analyze the areal variations of one component of Culture, that is, language.... As in the large Scale maps of the linguistic geographies, the isolins would cross the map in different directions with different groups of lines only occasionally bunching perceptibly'' D. E. Sopher: Place & Location: Notes on the Patterning of Culture.

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு
வாரா வாயினும் வந்த நிலத்தின் பயத்தலாகும் 965
(தொல்: அகம்: புறம்: திணைகள்)

''திணை மயக்குறுதலும், கடிநிலை இலவே, நிலன் ஒருங்கு மயங்குதல் இன்றென மொழிப், புலன் நன்குணர்ந்த புலமையோரே: உரிப்பொருள் அல் லன மயங்கலும் பெறுமே.

குந்திதேவி பரிசு-ஐயம் எனக்கேட்டு 'திரௌபதி' என்று அறிந்தபொழுது மாற்றொணாவகையில் கூறியும்,

தனது குருவான துரோணரைத் தன்மகன் அசுவத்தாமன் இறந்தான் எனக்கொண்டு கொல்லப்படுமாறு ''அசுவத்தாமா ஹத:'' என்று நெஞ்சறிந்த பொய்கூறியும், பொய்யனை, 'நீ பெரிய அரிச்சந்திரன்' என்று சொல்வதைப் போல், உதிட்டிரனை'தருமன்' என்ற பெயர் பெற்றது போன்ற மறுபொருள் குறிச்சான்றுகளைப் புராணங்களில் காணலாம்.

கொள்பொருள்களாகக் கருதப்பட்டு உரிமை இழந்த பெண்களும் தாழ்த் தப்பட்ட இனத்தினரும் வாழ்வதற்கு இவ்வுத்திகளைப் பயன்படுத்தும் தேவை ஏற்பட்டது. 'வலியார் முன்மாறு ஏற்றல் ஓம்புக' எனும் தன் திறமுணர்ந்தும், வலியார் மெலியாராவதும், மெலியார் வலியாராவதும் ஆகிய நேர்வுகள் கருதியும் 'குறிப்பு மொழி' பயனுறு கொள்கையாக இலக்கணத்திலும் இடம் பெறுவது வியப்பன்று. நாகரிகம், பண்பாடு, கலாசாரம் முதலியவற்றால் ஒருமைப்பாடு டைய ஒரு நாட்டினத்தவருள் வழங்கும் மொழியில் காணும் இந்த வழக்கு, பல்வேறு மாறுபாடுகளையுடைய பல்வேறு இனத்தவர் ஒருமித்து வாழும் தமிழ கத்தில் அதிகமாகப் பழக்கத்தில் வருதல் இயல்பே.

சொற்களை வரை செய்து பிரித்தும் உளப் பாங்குகளைப் பகுத்தாய்வு முறையில் தேர்ந்தும் மறு பொருள்களை எளிதில் அறியலாம். 'மறு பொருள் குறி' க் கொள்கை அறத்தின் பாற்பட்டதா அன்றி அதற்கு இழுக்கானதா என்ற கேள்வியை ஒதுக்கி, அதற்கான தறுவாய்ச் சூழல்களையும் அதன் தன்மை, பான்மைகளையும் வகைகளையும் சிந்தித்து அறிதலே நலம்.

எத்தகைய பற்றறுத்தல்களில் இந்த உத்திதகவுடையதாகும், அதனைப் புரிந்து பயன்படுத்துதல் எவ்வளவிற்கு தறுவாய்களில் முக்கியமானது, அவற்றை எவ்வாறாகத் தெரிந்து கொள்ளலாம்; குறிப்பு மொழி, நான் கருதிய ஆக்கத்தின் ஒரு பகுதியாகுமா என்பது ஆசிரியருடையவும், படிப்பாளர்களுடையவும் ஆன முடிவு எடுக்கும் கோள்களைப் பெருமளவில் பொறுத்ததாகும் என்பவற்றைப் பலர் ஆய்வு செய்திருக்கிறார்கள்.*

கொள்கை உறுதியில்லாத இன்றைய படிப்பவருலகின் நிலையில் புராணங் களிலும் இதிகாசங்களிலும் காணும் நம்பிக்கைகள் அவை தம்முன் எவ்வளவு முரண்பாடுகள் உள்ளவையாயினும் மக்கள் அவற்றை அப்படியே ஏற்றுக் கொள் கிறார்கள். எனவே எப்பொருள் பற்றிய கூற்றுக்களையும் அப்படியே படிய வைத்துக் கொள்ளும் செயலற்றதாக மனதையும், யாவற்றையும் பிரித்து எடுத்து நீக்கியதொரு தனிமத்தின் கிறப்புக் கொண்டதாக மெய்மையையும் கருதுவது ஒரு மதி நுட்பத் தவறாகும்.

திறனாய்வின் இருபகுதிகளான பாராட்டும் உள்ளமும், பகுத்துணரும் அறிவும் ஒன்று சேர இலக்கியங்களை ஆய்தல் இக் கொள்கை காணுதற்கு உதவும்.

---

* Vid. William Empson: 'Seven Types of Ambiguity'

3. தொல்காப்பியத்தில் குறிப்பு மொழிக் கொள்கை

வரலாற்றுத் தேவைகளின் வயப்பட்ட தமிழகப் புலவர்கள் இவ்வுத்திகளை எவ்வளவு அதிகமாகத் தம் படைப்புகளில் மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது என்பது தொல்காப்பியத்தில் இருந்து அறியக் கிடக்கின்றது.

மறு பொருள் குறி இலக்கிய உத்தி

தொல்காப்பியத்தில் குறிப்பு மொழிக்கொள்கை

அ. சொல்லும் செயலும்

இலக்கியம் என்பது சொல்லாலும் யாப்பினுலும் இயங்குவது. அதனைச் ''செய்யுள்'' என்பர் தமிழில்.

''எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே
பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனர் புலவர்'
தெரிபு வேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்'
இருபாற்றென்ப பொருண்மை நிலையே

(தொல். பெயரியல் 640-642)

செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவு எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிறழாது.
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்

(தொல். எச்ச. 946)

(ஆ) வண்புகழ் மூலர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயரெல்லை அகத்தவர் வழங்கும்''
பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி,
அங்கதம், முதுசொல் ஆகிய ஏழ் நிலத்தும்

(தொல். செய்யுள் 1336)

அறம், பொருள், இன்பம் ஆகிய
மும்முதற் பொருளிலும் — மேலும்
இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்கு நெறி இன்றி
இதுவாகி இத்திணைக்கு உரிப்பொருள் எனது
பொதுவாய்நிற்கும் பொருள்துகையினதாக 1464
குறித்தபொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர் 1335

(இ) செய்யுளும் முப்பொருளும்

தமிழர் கொண்டது முப்பொருளே என்பது குறளில் முப்பொருள் மட்டுமே எடுத்தாளப்படுவதினின்றும் அறம்பொருள் இன்பம் உயிர் எச்சம் நான்கின் திறந் தெரிந்து தேறப்படும் 501

அறனும் பொருளும், இன்பமும், மூன்றும் தேறப்படும் 501
ஆற்றும், பெரும! நின்செல்வம்'', — புற. 28

என்ற வாறுன செய்யுட்கள் பிறவற்றினின்றும் விளங்கும். வடநாட்டு ஆரியரும் முதற்கண் மூன்று பொருளையே கொண்டு பின்னுல்தான் எல்லாப் பற்றுக்களையும் துறப்பதனுல் துறக்கம், விடுவதினுல் வீடு, மோட்சம் என்று, கொள்தகு புருஷார்த்தங்கள் நாலென வகுத்தனர்.*

தமிழிலும் ஆரியக் கொள்கைகள் பரவலாக மேவிய பிற் காலத்தில் இக்கொள்கை பேரின்பமென்றதொரு கற்பனைப் பொருளாகப் புகுதலாயிற்று. இதை பொருளொடு புணராப் பொய்மொழி எனலாம்.

(ஈ) செய்யுள்வகை: எழுநிலத்து எழுந்த செய்யுளுள் பாட்டுதவிர மற்ற ஆறும் அடி வரைவு இல்லாதன — 1421

(உ) நூல்: 'அவற்றுள்; நூலெனப் படுவது நுவலுங்காலை
முதலும் முடியும் மாறு கோளின்றி
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள்நின்று அகன்ற உரையொடு பொருதி
நுண்ணிதின் விளக்கல் விதுவதன் பண்பே — 1422

என்றும்

உரைவகை நடை:
பாட்டிடை வைத்த குறிப்பினுனும்
பாவின்று எழுந்த கிளவியானும்
பொருளொடு புணராப் பொய்மொழியானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழியானும்
நான்கென மொழிப 1429

என்றும், ''பிசிவகை நிலைவிய
ஒப்பொடு புணர்ந்த உவமத்தானும்
தோன்றுவது கிளந்த துணிவினுனும்
என்று இருவகைத்து — 1432

என்றும், முதுமொழி
நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மையும் என்று இவை விளங்கத் தோன்றி
குறித்தபொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய என்ப

என்றும் வாய்மொழியை
நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மதைமொழி தானே மந்திரம் என்ப

என்றும், வள்ளுவர்

---

*குறளில் மாயம் என்பது 'சூது' என்ற பொருளில் ''உடை, செல்வம், ஊண், ஒளி, கல்வி என்று ஐந்தும் அடையார் மாயங்களின் என வருதல் காண்க.

''நிறைமொழி மாந்தர் பெருமை
மறைமொழி காட்டிவிடும் நிலத்து''

என ஆணையையும் மந்திரத்தையும் விடுத்து கூறி அமைகிறர்.

'அங்கதம்' தானே அரில்தபத்தெரியின்
செம்பொருளாயின் வசை எனப்படும், எனவும்
வசையொடும் நசையொடும் புணர்ந்தன்ருயின்
அங்கதச் செய்யுள் என்மனுர் புலவர் என்றும்
மொழி காத்து சொல்லின் அதுபழி காப்பாகும்

எனவும் வகுத்துரைப்பதுடன்

குறிப்புமொழி:

'எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகி
பெருட்புறத்ததுவே குறிப்பு மொழி என்ப

எனப் 'புலன்' என்பதற்கு மாருக மறுபொருள் தெரிக்கும் நயம் நவில்கிறர்.

உள்துறை வகைத்தாய், *(1180)*, திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கு சொல்லின்புறத்ததுவாக பிறக்கும் பொருள், தெரிக்கும் உடனுறையும்; *(இறைச்சி) (1175-77)*.

கருப் பொருள்களில் தெய்வம் நீங்கலாக பிறிதொன்றினுடன் ஒத்து பொருள் முடிகஎன உள்ளுறுத்தும் உள்ளுறை உவமும்; (அகம் *50-51*).

சொற்பொருள்களின் வேருகிய மறைபொருளை உய்த்துணரச் செய்யும் இயல்பு தழுவிய சொல்லோடும், கிளவியில் அமைந்துள்ள இயல்பினுல் அதைக் கொண்டோ அல்லது அதன் குறிப்பினைக் கொண்டோ, மறைபொருளை வரவழைக்கும் (முடிவுகொள்) சொல் எச்சமும்; *(1462)*. இருவகைப் பிசியும் *(1432)* குறிப்பு மொழியும் *(1435)* ஆகிய சுட்டும், வசையினை மொழி சுரந்து சொல்லும் பழி காப்பு அங்கதமான நகையும் *(1383)*. பழிப்பதுபோன்று அதற்கு மாருகப் புகழ் தலைத்தரும் சிறப்பும் மற்றும் புறனடையாக,

''செய்யுள் மருங்கின் மெய் பெறநாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவன உள என்னும் வந்தவற்றியலான்
திரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே'

என விரித்துரைத்து இக்கொள்கைக்கு இடம் வகுத்து உரன்செய் திருப்பத்தைக் காணுகிறேம்.

### இக்கொள்கை பற்றிய சில வரைகற்கள்

இந்திய வரலாற்றில் திராவிட நாகரிகப் பண்பாடுகளை 'சமஸ்கிருதப் படுத்துதல்' என்று சமூகவியல் வல்லுநர்கள் பெயரிடும் வினைவினை போக்கு ஆரிய மறையோர் புகுந்த காலந்தொட்டுத் தொல்காப்பியத்தில் தெளிவாகத் தெரிந்து கொள்ளுமாறு தோன்றி, கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி திருக்குறளில் வெளிப் படையாகவும் மறைமுகமாகவும் அதன் கேடுகளை உணர்த்தும் இடர்ப்பட்டு,

ஆழவேர் ஊன்றி சிலப்பதிகாரத்தில் எதிரும் புதிருமாக விளக்கப்படும் குழப்பங்களுக்கு உள்ளாகி, கிளைகள் கொப்புகளுடன் ஓங்கி வளர்ந்து கம்பர் இராமாயணத்தில் நுண்மாண் நுழைபுல ஆய்வினுலேயே கண்டறியும்படியான தனி ஆட்சி பெற்றுத் தமிழர் சமுதாயத்திலும் இலக்கியத்திலும் ஊடுருவ முழு ஆளுகை ஏற்றது. பின்னுல் இஸ்லாமிய ஆட்சிகளில் சலசலப்புற்று வெள்ளையராட்சியில் கலக்கம் எய்தி, மேற்கத்திய அறிவுக்கலைகளால் அலமரல் அடைந்து தேசீய இலக்கியங்களால் சிதறடிக்கப்பட்டு இன்று பகுத்தறிவுப் புரட்சி இலக்கியங்களால் தோல்வி யுற்றுப் பின்னடையும் நிலையில் உள்ளது. அதற்கேற்ப தமிழ் இலக்கியங்களில் இவ்வுத்திகளின் தேவையும் தோன்றி வளர்ந்து வானேங்கித் தளர்வுற்று மெலியும் பாங்கினையும் காணலாம்.

**தொல்காப்பியம்**

தொல்காப்பியப்பொருள் அதிகாரம் மறைந்து போய் பின்னுல் இறையனுர் அகப்பொருளுடன் கிடைக்கப்பெற்றதாகவும், அதனுல் ஆரியப்படுத்தும் போக்கில் அதில் விடுப்புகளும் தொடுப்புகளும் ஏற்பட்டிருக்கலாம் என்றும், மரபியல் முழுமையுமோ அன்றி அதன் பெரும்பகுதியுமோ பிற்சேர்க்கைகளாக இருக்குமெனவும் ஆய்வாளர் கூறுகின்றனர்.

முதலில் முப்பொருள் இலக்கியங்களாக மட்டுமே இருந்து பின்னுல் நான்காவது பொருளாகிய வீடு, துறக்கம்பற்றிய பக்தி இலக்கியங்கள் மேவி மேலோங்கலாயின. பொருள் இம்மையாக இருந்து மறுமையாக மாறியது — மெய், மாயையும் பொய்யுமாகி, ‘பொருளொடும் புணராப்பொய் மொழிகள்’ ஆதிக்கம் பெறலாயின. ‘மெய்’ என்ற கிளவிக்கே மறுமறை பொருள்கள் கூறப்பட்டன.

பதினெட்டுப் புராணங்களும், பதினெட்டு உபபுராணங்களும் மற்றும் கடவுளர்கள், தேவர்கள், தலங்கள் பற்றிய ஆயிரக் கணக்கான புராணங்கள் புற்றீசல்கள்போன்று உதித்து உதிர்ந்தன. வேதங்களில் காணப்படாத ‘சிவன்’ பழைய தமிழ் இலக்கியங்களிலும் காணப்படவில்லை. ஆரிய சமயங்கள் புகுத்திய பின்னருங்கூட சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகளிடம் சாரணர் அருகனைக்குறிக்கும் அநேக பெயர்களில் சிவகதி—நாயகன், வேத முதல்வன், பகவன் போன்ற சொற்களும் மணிமேகலையில் சமயக்கணக்கர் — தம் திறம் கேட்ட காதையில் ‘இறைவன் ஈசன்’ என்கிற ‘சைவாதி’யும், ‘காதல் கொண்டு, கடல்வண்ணன் புராணம் ஓதினன் ‘‘நாராயணன் காப்பு’’ என்கிற, வைணவவாதி (தலைப்பு) ஆகிய சொற்களும் வருகின்றன. புராணங்களில் பொய்மை, கந்த புராணத்தில் இல்லாத புளுகு வேறெந்தப் புராணத்திலும் காணவியலாது எனும் மக்கள் கூற்றினுல் அறியலாம்.

‘மூவர்’ என்ற சொல் தமிழ் இலக்கியத்தில் திரிமூர்த்திகளா, மூவேந்தர்களா, மூன்றுவருணத்தவர்களா, மூன்று ஆசிரமத்தவர்களா என்றவாறுன மறு, மறைபொருள்களைத் தரும் குழப்பம், அதன் முன் ‘வண்புகழ்’, ‘மேலோர்’, ‘இயல்புடைய’ என்னும் அடைமொழிகளானும் நீங்கற்பாலதல்ல. புலவர்கள் பொருதிக்கொள்வதைப் பார்க்கிறேம். மறையோர் தேஎத்து சனுதன வருண தர்மங்கள் தமிழகத்து நுழைவதற்கு தொல்காப்பியர் வாயிலைத் திறந்துவிட்டபின் புராணக்குறிப்புகளும், செய்திகளும், கதைகளும் சங்க இலக்கியங்களில் பெருமளவு

புகுந்துவிளையாடி, உரையாசிரியர்களும் அவ்வழியாகவே பொருள் கொண்டு விளக்கி, தமிழர் பண்பாடும் நெறிகளும் சிதைந்து நலிவுற்று தம் வலி இழக்கலாயிற்று.

'வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூல்' என்ப தனுலேயே முரண்பாடு முளைக்கிறது. உடம்பு மெய்யென்றால் உழைப்பு வினை மெய்ம்மையாகும். வினைகளை முற்றும் துறந்த இயத்தில் தவங்கிடப்பன் ஆக்கும் நூல் என்ன பயன்தரும் அதையொற்றி எழுதும் வழிநூல்கள் மாந்தர்க்கு எவ்வழி யைக்காட்டும் 'வினையினுரங்கி' அன்றி 'வினைலினூக்கி' என்று இருந்திருக்கலா மல்லவா? பிறப்பை வெறுத்து அதற்கு ஏதுவாக்கும் வினையில் நீங்கி மெய்ம்மை யாகிய துறக்கத்தை பெருதற்காகும் முதனூல் எனில் என் பயன்?

திணை அல்லது வினையின் ஏதுவாக மக்களின் பெயர் ஏற்படுவதைக் கூறிய பின்னர் மரபியலில், பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற ஆரிய வருணங்களுக்கு ஆகும் அந்தணர் அரசர், வணிகர், வேளாளர் என்ற சொற்களைக் குறிப்பிடுவது எதன்பொருட்டு? 'சாதி' என்ற சொல்லும் பிறிதொரு மீன் வர்க் கத்தைக்குறிக்கும் வகையாக நுழைத்து அதனைப் பின்னர் மக்கட் பிரிவுகளுக்கான மறு சொல்லாகுமாறு செய்தது எதன்பொருட்டு? இதனை மறுத்து 'அந்தணர் அறவோர்' என்று வள்ளுவர் வேலி கட்டினுலும் முடிவில் அந்தணர் என்பது பார்ப்பனரையே குறிக்கும் வழக்காயிற்று.

தமிழகத்தில் சிறப்பாக வழக்கில் இருந்த அகத்திணை களவினை மறை யோர் தேயத்து மன்றல் எட்டனுள் துறையமை நல்யாழ்த்துணைமை யோர் வழக்குடன் ஒப்பக் கூறுவதென் பொருட்டு? பின் அது 'காந்தர்வம்' என அகப் பொருள் இலக்கணத்தில் மாறும் பொருட்டா?

### திருக்குறள்

துறவு பற்றிய அதிகாரத்தில் (35) காணும் பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு – 350 என்னும் குறளுக்கு பரிமேலழகர் பற்று அற்ருன் பற்று என்பது பற்று அற்ற இறைவன் ஓதிய வீட்டுநெறியை இதுவே நன்னெறி என்று (பற்றுக) மனதிற்கொள், (அப்படி) கொண்டு (அப்பற்றை அதன்கண் உபாயத்தை (பற்றுக) அம் மனத்தாற் செய்க (பற்று) விடாதுவந்த பற்று வீடுதற்கு என்று கொண்டு கூட்டி உரை தருகிருர்.

பற்று அற்ருனுடைய பற்று என்பது வீட்டைக் குறிப்பின் அடுத்து வரும் 'அப்பற்று' அதனையே குறித்தல் வேண்டும். அவ்வாருயின் ''வீட்டைப் பற்றுக வீட்டை விடுதற்கு' என்ருே அன்றி 'வீட்டு நெறியைப் பற்றுக வீட்டுநெறியை விடுதற்கோ' என்ருகும். ஒரே குறளில் நான்கு இடத்துவரும் பற்று எனும் ஒரே சொல்லுக்கு இறைவன், வீட்டு நெறி, (மனத்திற்கொள்ளற்கு) உபாயம் விடாது வந்த பற்று என்று நான்கு வேறு முரணுறு பொருள் கொள்வதென்ன?

### மறுபொருள்

பற்று அற்ருன் பற்று என்பது பற்று அற்றவனிடம் (இறைவன் பகவன், அருகன், தீர்த்தங்கரன் யாராயினும் இயையும் அன்பு உரிமை, ஈர்ப்பு, பற்றுக அதனை என்று கொள்க, எதற்காக? பற்றுவிடற்கு அப்பற்றைப் பற்றுக, இதர பற்றுக்களை அகற்றுவதற்கு அவ்வன்பு அல்லது ஈர்ப்பு ஏதுவாகும் என்பதனுல்.

ஒருபற்றினை அதற்கு மாறுன மற்றொரு பற்றினுல் மட்டுமே அகற்ற முடியும் என்ற வாறுகும்.

'பிணிக்கு மருந்து பிரமன் — அணியிழையார் தன் நோய்க்குத்தானே மருந்து' என்பதுடன் ஒப்புநோக்கி பற்றுக-பற்றினை — பற்றுவிடற்கு எனமுரண்படு தோற்றம் புகுத்தி முடிவு கொள வைக்கும் திறன் இக்கொள்கைக்கு மற்றுமொரு சான்று.*

'தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை'' — (55)

பரிமேலழகர்: இத்தகைய கற்புடையவள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும்.

மறுபொருள்: மழையை ஏவி பெய்யச் செய்யும் ஆற்றலை அடைவது போன்றது — கணவன் தன்னையே தெய்வமாக வணங்கும் மனைவியைக் கொண் டிருப்பது, பெய்யெனப்பெய்யும் மழையைநிகர்ப்பவள் மனைவி. ஆண் வழிக் குடும்ப நிறுவனத்தைக் கட்டிக் காப்பதற்காக பெண் ஆணின் ஆளுகைக்கு பிறிதொரு ஆணை மனதினும் நினையாத கற்புடன் அமையச் செய்வதற்கான குறள் என்பர்.

ஆபயன் குன்றும் சுறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவானெனின் — 560

பரிமேலழகர் தரும்பெருள்: உயிர் காவாமையினுல் பசுவின்பால் குன்றும் — அவியின்மை (கேள்வி நடவாளம்) — மறையோர் வேதம் ஓதார் — ஆகவே வானம் பெயல் ஒல்லாது.

மறுபொருள் காவலன் காவாக்கால் — முறை செய்து காப்பது தவறின் — குற்றங்கள் நிகழும் — உழைப்பின் ஆகும் பலன்களைப் பிறர் பறிப்பர் — அதனுல் உற்பத்தி அதனுல் ஆ பயன் விளைவிப்போர் உழவு தொழில், வரைவு, வாணிபம், வித்தை, சிற்பம் ஆறு திறன்களையும் பயிலாது மறப்பர்.

இதுபோன்று மறுபொருள் கொள்ளக் கூடிய இன்னும் பல குறள்களைக் காட்டலாகும்.

**சிலப்பதிகாரம்**

தமிழ்ப் பண்புகள் மூழ்கிய காலத்தில் இளங்கோ எதிர்நீச்சல் போட்டு அதிகமாகப் பயன்படுத்தி இவ்வுத்திகளை அதன்கோடுகளைக் காண்பிக்க வேண்டிய தாயிற்று.

---

* This resembles the IV Type of Ambiguity shown by William Empson:– Where two or more meanings, of a statement do not agree among themselves but combine to make clear a more complicated state of mind in the author and where great subtlity, distinct pun and puzzling udgement are not in the focus of consciousness.

இக்காவியத்தில், கட்டமைப்பு (Structure) தொடருறு நிகழ்வுகளின் இணைப்பு பாத்திரங்களின் செயலாற்றும் விளைவுகள் முதலிய பல சேர்க்கைகளையும் திறம்படவகுத்து 'வண்புகழ்மூவர் தண்பொழில் வரைப்பின் நாற்பெயரெல்லைத் தமிழகம் முழுவதும் மயங்கிய நிலையினை இளங்கோ அடிகள் நெஞ்சம் விம்முற எடுத்துக்காட்ட இக்கொள்கையை எவ்வாறு பயனுறுத்தி இருக்கிறார் என்பது இக்காவியத்தை ஆழ்ந்து ஆய்பவர்களுக்கு எளிதில் புலனாகும். பாமரமக்களைக் கவரும் தெருக்கூத்துப் பாணியில் இயல், இசை, நாடகத் தமிழ் விரவிய ஒரு துன்பக் காவியத்தைப் படைத்தார். கோவலன் குற்றஞ் சாட்டப்பட்டு கொலை செய்யப்படுகிறான். தன் தவறுணர்ந்த மன்னன் மடிந்து வீழ்கிறான்; உடன் உயிர்விடுகிறாள் அரசியும். வெஞ்சினங்கொண்ட கண்ணகியும் மதுரைமாநகர் எரிந்துபட சேரநாடுற்று மாய்கிறாள். மாசாத்துவான், மாநாய்கன், மாதவி, மணிமேகலை – ஆகியோர் துறவு பூண்கின்றனர். இருதாயரும் உயிர் விடுகின்றனர். 'கவுந்தியும் மடிகிறாள். அடைக்கலம் அளித்த மாதரியும் இறக்கின்றனர். மீந்தது மாடல மறையோனும் அவன் செவிமடுத்த செங்குட்டுவனுமே. இக்காவியம் அவலமா (Trag dy) அன்றித் தமிழர் கொற்றமுரைக்கும் Comedy யா என்று புலவர் தாம் கூறவேண்டும்.

தமிழகப் புலனெறி வழக்கான களவு–கற்பு ஒழுக்க அகத்திணை மாண்பும், மூவேந்தர் கொற்றமும் வளமும் கணிக்கும் புறத்தினை மறமும் சூழ்வதற்கு மறையோர் சூழ்ந்துசெயல்பட்டு வெற்றி கண்டதை மறு பொருளாகத் தருகிறது இக் காவியம். இளங்கோ அடிகள் அடுத்து அருளும் அறவுரைக்களோடு முடிகிறது.

மறையோர் இறைமையையும் துறவோர் அறநெறியையும் இளங்கோவைப் போல அடுத்தடுத்து வைத்து மறுபொருள் காணச் செய்யும் உத்தியினைக் கம்பரும் கையாள்வதை பின்னர் பார்க்கலாம்.

கண்ணகியைப் பத்தினித் தெய்வம் எனவும் கற்புக்கடம் பூண்டவள் எனவும் கூறுவது சிலப்பதிகாரம். அவற்றில் உள்ள நுண்பொருள் வேற்றுமைகளையும் மறுபொருள்குறி உத்தியால் இளங்கோ அறியச் செய்கிறார்.

ஆரியத் தர்மசாத்திரத்தின்படி பெண், முறையே தகப்பனுக்கும், பின்னர் கணவனுக்கும் அடுத்து மகனுக்கும் பணிந்து நடப்பவளாகவும், சடங்குகளைச் செய்வதற்குத் தனித்த அருகதை அற்றவளாகவும் வைத்யம் அல்லது உடன் கட்டை ஏறல் ஆகிய நோன்புக்கடன் பூண்டவளாகவும் விதிக்கப்படுகின்றாள். ஆரிய, திராவிடக் கடவுளர்களைக் கலந்து குழப்பும் நிலையில் காளி, கொற்றவை மதுராபதி, மீனாட்சி, காமாட்சி, விசாலாட்சி, உமை பார்வதி என்ற பெயர்கள் சூட்டப்பட்ட பெண் தெய்வத்தை, வேதங்களில் குறிப்பிடும் ருத்திரனை பின்னால் சிவனுடன் இணைத்து திரிமூர்த்திகளில் ஒருவராக்கி, இருவர்களுக்கும் மணம் செய்யும் புராணங்களை உண்டாக்கி, சிவனையும் முருகனையும் இணைத்து, யார், யாருக்கு தகப்பன் என்ற குழப்பங்களை உண்டுபண்ணி 'இருவருக்குத்தாதை' எனும் சங்க இலக்கியச் சொல்லில் தாதை என்பது சிவனா விஷ்ணுவா என்ற வாதங்களைக் கிளப்பி 'ஆதிபகவன்' 'உமையொருபாகன்' போன்ற சொற்களால் சக்தி பெரியவளா, சிவன் பெரியவனா யார்முதல் என்ற சமயவாதங்களை கிளப்பும் புராணங்கள்

எல்லாம் இன்று மானிடவியல், சமூகவியல், உள்ளவியல் வல்லுநர்களால் ஆய்ந்து பொருள் காணப்படுகின்றன. புலநெறி வழக்காக தமிழரிடை களவு—கற்பு ஒழுக்கமும் ஆரியரிடை பத்தினி ஒழுக்கமும் உருவாகின. பத்தினி போல் அல்லாமல் கற்பு டையவளுக்குத் தனித்துவம் உண்டு. நளாயினிபோல் தொழுநோயுற்ற பதியை பரத்தை வீட்டிற்குத் தூக்கிக் கொண்டுபோய்ச் சேர்க்கும் பதிவிரதா தர்மம் கற்புடைத் தமிழ்ப் பெண்களுக்கு வழக்கில்லை 'பீடன்று' என ''தெய்வந்தொழாது கொழுநற்றொழுதுஎழும் கற்புடைய கண்ணகி 'சிலம்புள கொண்ம்' என எல்லாம் கொடுப்பினும் 'போற்ரு ஒழுக்கும் புரிந்தீர்' எனக் கோவலன் மாட்டு கூறவும் கூசவில்லை.

கொலைசெய்யப்பட்டுக் கிடந்த கோவலனைக் கண்டு துன்புற்று அழுது புரண்டிடும் செய்கையிற் திகைத்த தன் கணவனையோ அன்றி இராமனையோ போல் அல்லாமல் வீறு பெற்றுஎழும் வீராங்கனை ஆகிருள். தெருக்கூத்துக்களிலும் மணமேடையில் இருக்கும் சிறுமி கண்ணகியையும் பிண மேடையில் உருக்கொள்ளும் மறக்கண்ணகியையும் வேறு வேருகக் காட்டுவர்.

இம்மாற்றத்திற்கு மனதில் எழும் எண்ணங்களை தன் வாய்ச் சொற்களாலேயே பிரதிபலிக்கச் செய்கிருர் இளங்கோ:

''இன்புறுதம் கணவர் இடர் எரி அகம் மூழ்க
துன்புறுவன நோற்றுத் துயர் உறு மகளிரைப்போல்,
மன்பதை அலர்தூற்ற, மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன் யான் அவலங்கொண்டு அழிவலோ'
நறைமலிவியல் மார்பின் நண்பனை இழந்து ஏங்கி
துறைபல திறம் மூழ்கித்துயருறு மகளிரைப் போல்,
மறனெடுதிரியும் கோல் மன்னவன் தவறு இழைப்ப
அறன் எனும் மடவோய்! யான் அவலம் கொண்டு அழிவலோ!
தம்உறு பெரும் கணவன் தழல் எரி அகம் மூழ்க
கைமைகூர் துறை மூழ்கும் கவலைய மகளிரைப் போல்
செம்மையின் இகந்தகோல்தென்னவன் தவறிழைப்ப
இம்மையும் இசை ஒரீஇ, இணைந்து ஏங்கி அழிவலோ!

கைம்மையின் துன்பம் ஒரு புறமும் பழிதுடைத்து நீதியை நிலைநிறுத்தும் வன்மம் ஒருபுறமுமாக கண்ணகியின் நெஞ்சினைத் துளைத்து இவ்விரு உந்துதல்களும் மீண்டும் மீண்டும் ஒலிக்க துணிந்து செயல்படமுனைகிருள்.

பின்னர் கண்ணகி எழுந்து நின்று சிலம்பு ஒன்று கைஏந்தி
மல்லல் மதுரையார் எல்லாரும் தாம் மயங்க
பூசலிட்டு, தீவேந்தன் தனைக்கண்டு, இந்திறம் கேட்பல்
யான் — என்போய் அரசவையில் நீண்டதொரு உரையாற்றி,
மன்னன் தவறுணர்த்தி அவனும் அடுத்து அரசியும் உயிர் துறக்க
''நாவினும் மார்பினும் நவின்ற நூலினன்

முத்தீ வாழ்க்கை முறைமையான வழாத வேதமுதல்வன் வேள்வி கருவியோடு ஆதி பூதத்து அதிபதிக்கடவுளும் மற்ற பூதங்களும் பிறரும் மதுரையை விட்டு ஓட

எரிபடர அந்திவிழவும் ஆரண ஒதையும் செந்தீ வேட்டலும் தெய்வம் பரவலும் மனைவிளக்கு உறுதலும், மாலை அயர்தலும் வழங்கு குரல் முரசமும் (அனைத்தும்) மாநகர் மடியச் செய்கிறுள்.

கண்ணகி வெஞ்சினம் ஆற்றியதையும் பாஞ்சாலி சபதம் நிறைவேறியதையும் ஒப்பிட்டுப்பார்க்கலாம்.

**தேசீயக் கவிதைகள்**

அன்னிய அரசை வெளியேற்றும் கூட்டுமுயற்சியில் தோன்றிய தேசீயமும் தேசிய இன ஆர்வமும் தமிழ் இலக்கியத்தை இன்றைய நவீனயுகத்திற்கு அழைத்துச் சென்றன. தேசிய கவி பாரதி பழமைக்கும் புதுமைக்கும் பாலங்கட்டினுர்.

''சாதிகள் இல்லையடி பாப்பா, உயர்ச்சி தாழ்ச்சி சொலல் பாவம்'' என்ற முழக்கம் ''ஆயிரம் சாதிகள் இங்கு உண்டு, எனில் அன்னியர் வந்து புகவ் என்ன நீதி'' என நம்பழக்கத்தை நினை வூட்டுகிறது. ''ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று கூறும் அறிவிலிகாள், அறிவொன்றே தெய்வம் என்பதை அறியீரோ'' என்ற அறைகூவல் அவர் மாரி, கலைமகள், திருமகள், காளி போன்ற பலப்பல தெய்வங்களை உணர்ச்சிததும்ப நம் கண்முன் படைக்கும்பொழுது அறிவை மறக்கச் செய்கின்றது. ''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம், வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனைசெய்வோம்'' எனக் குறள் உலகை மீட்டித் தருகிறுர். ''அச்சமும் நாணமும் நாய்கட்கு வேண்டுமாம்........நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும் மாதர்க்கு அணி......ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம்'' எனமுரசு கொடும்போது இந்தப் புதிய உலகம் எங்கே என விழித்துப் பார்க்கிறேம்.

**பகுத்தறிவுப் படைப்புகள்**

அன்னியராட்சியில் நாம் அடிமையுற்றிருப்பினும் அறிவியல்கலைகளும் தொழில் நுட்ப நூல்களும் மனிதன் ஆளுமையை எல்லை காணு உச்சங்களுக்கு அழைத்துச் செல்லும் மேற்கத்திய நவீன ஆற்றல்களினுல் அவற்றிற்கு தடையாக விருக்கும் பொருளொடு புணராப் பொய்மொழிகளான புராணங்களையும் மதங்களையும் எதிர்த்து பெரியார் தோற்றுவித்த தன்மான-பகுத்தறிவு இயக்கம் பீடுபெற திராவிட ஆட்சிகளை நிறுவுதற்கு வழிகாட்டியது. இவ்வெழுச்சியின் சிகரத்தை எட்டிய பாரதிதாசன் புரட்சிக் கவிஞுகப் போற்றப்பட்டு புத்தொளி வீசுகிருன்: மறு-மறைபொருள்-குறி இலக்கியங்களின் அவசியம் குன்றியது.

# சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்

பெ. சு. மணி

சங்க காலத்தின் கீழ் எல்லையாக கி. பி. இரண்டாம் நூற்றுண்டைக் கொண்டு, அந்தக் கால கட்டத்திற்கும், அதற்கு முன்னும் வாழ்ந்த உலகப் பெண்பாற் புலவர்களை ஒப்பியல் ஆய்விற்கு உரியர் எனக் கொண்டோம்.

உலகப் பெண்பாற் புலவர்களைப் பற்றிய ஒரு கண்ணோட்டம் வருமாறு:

| காலம் | நாடு | மொழி | பெண் பாற் புலவர்கள் | ஆய்விற் குரிய பாடல் களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| கி.மு. 1500 | வடபாரதம் | வேதமொழி | 28 | 48 |
| கி.மு. 1100 | இஸ்ரேல் | ஈப்ரு | 1 | 15 |
| கி.மு. 600 | கிரீஸ் | கிரேக்கம் | 1 | 30 |
| கி.மு. 600 – 500 | வடபாரதம் | பாளி | 73 | 39 |
| கி.மு. 500 | கிரீஸ் | கிரேக்கம் | 2 | 3 |
| கி.மு. 400 | கிரீஸ் | கிரேக்கம் | 1 | 1 |
| கி.மு. 300 | கிரீஸ் | கிரேக்கம் | 1 | 7 |
| கி.மு. 300 | இதாலி | கிரேக்கம் | 1 | 3 |
| கி.மு. 200 | கிரீஸ் | கிரேக்கம் | 1 | 2 |
| கி.மு. 200 | வடபாரதம் | பிராகிருதம் | 11 | 15 |
| கி.மு. 100 | இதாலி | இலத்தீன் | 1 | 5 |
| கி.மு. 100 | சீனு | சீனமொழி | 3 | 2 |
| கி.மு. 300 – கி.பி. 200 | தமிழகம் | தமிழ் | 41 | 150 |

மனித உணர்வு உலகப் பொதுமையானது. மொழி, பண்பாடு, சமுதாய நிலே, காலத்தால் வளரும் அறிவு ஆகிய அனேத்தும் அந்தந்த மொழிக்குரிய இலக்கியக் கொள்கைக்கு ஆக்கம் அளிக்கின்றன.

**வேத காலப் பெண்பாற் புலவர்கள்**

வேதகாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களுக்குரிய வேத மொழிக்கும், பிற்கால சம்ஸ்கிருத மொழிக்கும் இடையே பல வேற்றுமைகள் உள்ளன. இலக்

கணம், சொற்ஞெகுதி, யாப்பு, நடைவேறுபாடு, பொருள், உணர்வு இவையனைத் திலும் வேற்றுமைகள் இலங்குகின்றன.

வேதகாலப் பெண்பாற் புலவர்கள் அனைவரும் மானுடப் பிறவிகளா, தேவதைகளா, பௌராணிக மரபுத் தெய்வங்களா, இயற்கைச் சக்திகளின் உருவங்களா என்பவற்றில் கருத்தொற்றுமை காண்டல் அரிது.

''ரிக்'' வேதத்தில் 24 பெண்பாற் புலவர்களும், ''சாம'' வேதத்தில் 4 பெண்பாற் புலவர்களும் உள்ளனர்.

வேதகாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் உலகியல் நோக்கு விஞ்சியுள்ளது. பெண்மையின் பல கூறுகளை, தேவைகளை விளக்கும் படைப்பு களில் இளமை, அழகு, காதல், திருமணம் முதலானவற்றைப் பற்றிய செய்திகளை கவிதை யுணர்ச்சி பொங்கிட வேதகாலப் பெண்பாற் புலவர்கள் யாத்துள்ளனர். விரிவஞ்சி, 12 வகைப்பட்ட பெண்பாற் புலவர்களைப் பற்றிய குறிப்புகள் வருமாறு:

1. வயது முதிர்ந்த நிலையில் திருமணத்திற்கு ஏங்கும் கோஷா.
2. புதிதாகத் திருமணம் செய்துகொண்ட சூர்யா.
3. அன்பும் விசுவாசமும் நிறைந்த மனைவியாக சரஸ்வதி.
4. பொறுமைக் குணம் கொண்ட இந்திராணி.
5. ஐம்புலன் இன்ப நாட்டம் கொண்ட ரோமஸா.
6. கணவனால் கைவிடப்பட்ட நோயாளி மனைவியான அபாலா.
7. நிறைவு பெற்ற வாழ்வரசியாக விசுவவாரா.
8. பெருமை மிக்கத் தாயாக அகஸ்தியரின் சகோதரி அதிதி, இந்திர மாதா.
9. சமய உணர்ச்சி மிக்க கோதா.
10. பொருந்தாக் காதலை விரும்பிய யமி.
11. கற்பில்லாத உர்வசி .
12. நம்பிக்கைக்குரிய தூதுவராக சரமா.

**சங்ககால ஔவையாரும் வேதகாலப் பெண்பாற் புலவர்களும்**

வேதகாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களோடு சங்ககால ஔவை யாரின் பாடல்களை ஒப்பிட்டு ஆய்வதற்கான வாய்ப்புகள் அரியவையாய் உள்ளன. வேறுபட்ட இலக்கிய மரபும், சமுதாய நிலையும், புலவர்களின் நோக்கும், இதற்குக் காரணங்களாகும்.

கோஷா, ரோமஸா, லோபமுத்திரா ஆகியோர் பாடல்களில் காணப் பெறும் சிருங்காரச் சுவைக்கும் ஔவையாரின் சங்கப் பாடல்களின் அகத்திணைச் சுவைக்கும் அடிப்படையிலே வேறுபாடு உள்ளது. சங்ககால ஔவையாரின் பாடல்களுக்குரிய புலனெறி வழக்கும், நாடக வழக்கும் வேதகால இலக்கிய நெறிக்கும் முற்றிலும் மாறுபட்டன.

கருத்து அளவில் சில குறிப்புகள் ஒத்துள்ளன. சான்றாக, கோஷாவின் ஒரு பாடலைக் குறிப்பிடலாம், கோஷா, தனது ஒரு பாடலில் திருமணமாகாமல்,

தமியளாய், வயதேறி வருவதைக் குறித்து வருத்தப்படுகிருள். பெண்ணின் இளமை, திருமணத்திலும், மகப்பேற்றிலும் பயனுற வேண்டும் என கோஷா குறிப்பிடுகிருள் (ரிக் 10–40, 11–13).

''இளநலம் இற்கடை ஒழிய...............முதிர்கம்யாமே''

என்ற நற்றிணையின் (295) ஔவையாரின் பாடலோடு கருத்தளவில் ஒத்துப் போகும் குறிப்பாக உள்ளது.

வேதகாலப் பெண்பாற் புலவரான விசுவவாரா, கள்ளுண்ணலைப் பற்றிப் பாடியுள்ளார். சங்ககாலப் பெண்பாற் புலவரான ஔவையாரும் கள்ளுண்ணலைப் பற்றிப் பாடியுள்ளார்.

வேத காலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் தெய்வ நம்பிக்கையும், வேண்டுதல்களும் பரவலாக உணர்த்தப்பட்டுள்ளன. மூவேந்தரையும், அதிய மானையும் வாழ்த்திய இரு சந்தர்ப்பங்களில் முத்தீச் சடங்கையும், தெய்வ நம்பிக்கையையும் ஔவையார் குறிப்பிட்டுள்ளார்.

சங்ககால ஔவையாரின் பாடல்களில் காதலும், வீரமும், இலக்கியக் கொள்கையாக விளங்க, வேதகாலப் பெண்பாற் புலவர்களின் படைப்புகளில் சிருங்காரமும், தனியொருவர் பிரச்னைகள் தீர வேண்டுதல்களும் இடம் பெற் றுள்ளன. ''வீரம்'' பாடப் பெறவில்லை.

**தேரி காதா**: பாலி மொழியில் உள்ள பௌத்த பிக்குகளின் பாடல்கள் ''தேரிகாதா'' தொகுப்பில் உள்ளன.

தேரிகாதாவில் 73 பிக்குணிகளின் 252 உணர்ச்சி மிக்க கவிதைகள் உள்ளன. கி. மு. 80-ல் எழுத்து வடிவத்தில் பதினறு காண்டங்களாகத் தொகுக் கப் பெற்றிருக்கலாம் என ரைஸ் டேவிட்ஸ் அம்மையார் குறிப்பிடுகிருர்.

காதாக்களின் பெண்பாற் புலவர்கள் அனைவரும் புத்தரின் சமகாலத்தவர் களாகவும், பலர் அவரது நேர்முக சீடர்களாகவும் விளங்கினர், என்றும் கருதப் படுகிறது.

புத்தரின் இணையடி நிழலில் இளைப்பாறி, ''அர்ஹத்'' (ஜீவன் முக்தர்) நிலையை எய்திய பிக்குணிகளின் பாடல்களுள் ஒலிக்கும் ஒவ்வொரு சொல்லும் சுயதரிசனத்தின் உயிரோட்டமாய் இயங்குகிறது.

தேரிகாதாவின் முதன்மையான சிறப்பு யாதெனில், சமுதாயத்தின் கீழ்—மேல் பிரிவுகளைச் சேர்ந்த பலரும், உயர்ந்த ஞான நிலையான ''அர்ஹத்'' எனும் அந்தமில் ஆனந்தப் பதவியை அடைந்தனர் என்பதேயாகும்.

தேரிகாதாவில் கவிதையின் உயிர்ப்புச் சக்தியாக விளங்குவது ''நிர் வாணம்'' எனப்படும் பௌத்த தருமத்தின் ''வீடுபேறு நிலையே''. இந்த வீடு பேற்று நிலையை தம்மபதம் ''மேலான பதவி'' ''பரமசுகம்'', ''உயர்ந்த சுகம்'', ''அமைதிவாழ்'' என்றெல்லாம் வருணனை செய்கிறது, இந்த நிலையை எய்தி

னேர்க்கு பிறப்பு இல்லை, வயது இல்லை, பிணி இல்லை, இறப்பு இல்லை, துக்க மில்லை, மாசு இல்லை. தேரிகாதாவில் இவற்றின் எதிரொலிகளைக் கேட்கிறோம்.

பௌத்த சங்கத்தில் துறவிகளாகச் சேர்ந்து உயர்ந்த ஆன்மிக உள்ளுணர்வு பெற்ற பெண்பாற் துறவிகளை ''தேரிகள்'' எனக்குறிப்பிடுவர். துறவு நெறியில் உள்ளார்ந்த விருப்பத்துடன் சேர்ந்தவர்களும் உண்டு. ஏமாற்றங்களாலும், குடும்பத் தொல்லைகளாலும், மகிழ்ச்சியற்ற இல்லற வாழ்க்கையாலும், வறுமை யாலும், பிற இழப்புகளாலும் துறவு நெறியைப் பற்றியவர்களும் உளர்.

தம்மா என்னும் பெண், துறவு கொள்ள கணவனின் இசைவு பெற முடியாத நிலையில், காத்திருந்து, கணவன் மறைவிற்குப் பிறகு துறவியானாள்.

அனுபமா என்பவள் பெயருக்கேற்றவாறு இணையற்ற அழகுடன் செல்வச் செழிப்பும் பெற்று, இல்லறத்தை நாடாது துறவறத்தை நாடினாள், இவ்வாறே செல்வந்தர் பெண்களான குட்டாளம், ரோஹினி என்பவர்களும் திருமணத்தை வெறுத்தனர்.

கம்மதா என்பவள் இளவரசியாய்த் திகழ்ந்தும் அரசனொருவனின் திரு மணக் கோரிக்கையை மறுத்து, துறவியானதோடு தனது பெற்றோர்களையும் துறவு நெறியில் ஆற்றுப்படுத்த முற்பட்டாள்.

இசிதானி என்பவள் மும்முறை மூவருக்கு வாழ்க்கைப்பட்டு மூவராலும் கைவிடப்பட்ட நிலையில் ஏமாற்றமும், சலிப்பும், அவநம்பிக்கையும் எஞ்சிட, புத்த சங்கத்தில் தஞ்சமடைந்தாள்.

கூனன கணவனைப் பெற்ற முட்டாவும், கணவனாக வரவிருந்தவனைத் திருமணத்திற்குச் சற்று முன்பு இழந்த நந்தாவும், மூர்க்கனான கணவனால் சமைய லறையிலேயே முடக்கப் பட்ட சுமங்கலாவின்தாயும், தோழியின் மரணத்தால் துக்கத்தில் ஆழ்ந்த காமாவும் ஒரே மகளின் மறைவினால் சித்தம் தடுமாறிய உப்பிரியும், இரண்டு பிள்ளைகள், கணவன், பெற்றோர், உடன் பிறப்புகள் அனைவரையும் பறிகொடுத்த படாசாரவும், குழந்தையில்லாது ஆதரவற்று, வறுமை மிஞ்சி, விதவையான சந்தாவும், பிள்ளையை இழந்த வைசித்தியும், கணவனையும், மகனையும் கூற்றுவன் கொள்ளக் குமுறிய கிஸா கௌதமியும், கொல்ல வந்த கணவனை தற்காப்புக்காகக் கொன்று சோகத்தில் மூழ்கிய பட்டா குண்டலகேசியும், மகளது மணாளன் என்பதை அறியாமலேயே அவனை மறுமணம் செய்து கொண்ட உப்பல லாவன்னாவும், ஆகிய இவர்கள் அனைவரும் ''ஸஹேதுக வைராக்கியம்'' (காரணத்தோடு கூடிய வைராக்கியம்) என்று கூறப்படும் துறவு நெறியை ஏற்றவர்கள் என்று கூறப்படுகின்றனர்.

முட்டாவின் கவிதையிலே நகைச்சுவை மிளிர்கிறது. பௌத்த சங்கத்தில் சேர்ந்த பிறகு மூன்று ஆபத்துக்களிலிருந்து தான் தப்பியதை நகைச்சுவை யோடு பாடுகிறாள். அவளுடைய கணவன் ஒரு கூனன். அரிசி குற்றிக் கொண்டு வரும் குறைந்த வருவாயில் குடும்பத்தை நடத்த வேண்டும். இவள் புனைந்த கவிதையின் கருத்து வருமாறு:

''நான் விடுபட்டு விட்டேன், நல்ல காலமாக விடுபட்டுவிட்டேன்; துன்பம் தரும் மூன்று பொருட்களில் இருந்து உண்மையிலேயே விடுபட்டு விட்டேன்.

உரல், உலக்கை, கூனனுன என் கணவர், இம் மூன்றிலிருந்தும் நல்ல முறையில் விடுபட்டு விட்டேன். ஆனுல், இவைகளேக் காட்டிலும், மகாமுக்தி எனக்குக் கிடைத்து விட்டது. இன்று நான் பிறப்பு — இறப்பிலிருந்து விடுபட்டு விட்டேன். என்னுடைய வாழ்க்கைத் தளேகள் தளர்ந்து விட்டன.''

பெயர் தெரியாத தேரியின் ஒரு கவிதையின் நயமான பகுதி இதோ:

''அடுப்பின் மேல் வைக்கப்பட்ட பாத்திரத்தில் வறுக்கப்பட்ட உலர்ந்த காயைப் போல், புலன், ஆசைகள் தீர்ந்து விட்டன.''

சோபா என்னும் தேரியின் கவிதையிலே, துறவு நெறியில் பெண்ணுக்கு இடம் உண்டா என்ற ஐய வினுவிற்கு விடை யிறுக்கப்பட்டுள்ளது.

சோபா, பிம்பிசார மன்னனின் புரோகிதருடைய மகள், சோபாவின் தியானத்தைக் கலேக்க எண்ணிய மாரன், அவளிடம் பின் வருமாறு வினு விடுத்தான்:

''பெரிய துறவிகளாலும் அடைவதற்குக் கடுமையான மேனிலேயை நீ அடையப் பார்க்கிருய். நீயோ இரண்டு விரல்களால் சோறு பதமாகிவிட்டதா என்று பார்க்கும் வயதினள், உன்னுல் ஒரு நாளும் அந்த நிலேயை அடைய முடியாது''.

பிக்குணி சோபா மாரன் விடுத்த வினுவிற்கு துடிப்பான விடையை அளிக்கிருள்

''என் மனம் சமாதி நிலேயில் நன்கு நின்றுள்ளது. வாழ்வில் நித்தியமான ஞானம் பொலிகின்றது. தருமத்தின் தரிசனம் மிக அருகிலேயே கிடைத்து விட்டது. இந்த நிலேயில் பெண்ணுக இருப்பதால் எனக்கென்ன வந்தது? இங்கே பார், பாவி, மாரனே! ஜீவன்களே கொலே செய்பவனே! புரிந்து கொள், இன்றே நீயே கொலேயுண்டிருக்கிருய்''.

சான்ருக இருவரின் கவிதைகளேப் பார்த்தோம், தேரர்கள், தங்களது சாதனுமார்க்கத்தில், பெண்கள் பெருந்தடைகள் என்று விதந்தோதியதைப்போல, தேரிகள் ஆண்களேப் பற்றி தங்களது கவிதைகளில் கூற வில்லே.

கிறிஸ்தவ மதம் பெண் துறவிகள், பௌத்த மதத் தேரிகள் போலக் கவிதைகள் படைத்துள்ளனரா என்பது ஆய்விற்குரியது. வின்டர் நீட்ஸ் என்னும் ஜெர்மானிய அறிஞர் இதனே ஆய்ந்துள்ளார். தேரா — தேரிகாதாக்களே மிகச் சிறந்த உணர்ச்சிக் கவிதைகள் என்று புகழ்ந்து அவர் ஒப்பிட்டுக் கூறுவதாவது:

''தேரா — தேரி காதாக்களோடு ஒப்பிடும் பொழுது ஐரோப்பியத் துறவியர் மடத்தைச் சேர்ந்த கவிதைகள் ஆற்றலில் மிகக் குறைந்தனவேயாகும்''.

## தேரி காதாவும், ஔவையாரின் பாடல்களும்

முற்றிலும் சமயச் சார்புள்ள தேரிகாதாவோடு, சமயச் சார்புடைய அமைப்புகள் செல்வாக்குப் பெருத சங்க இலக்கியத்தை ஒப்பிடுவதற்கான வாய்ப் பில்லே. வேதகாலப் பெண்பாற் புலவர்களது கவிதை, சமயச் சார்புள்ள சூழலுக்கு உட்பட்டதாக இருந்தாலும், இல்லறம், இம்மை வாழ்வில் நாட்டம் கொண்டது. ஔவையாரின் பாடல்கள் களவியல்—கற்பியல் நெறிவழிப்பட்ட மனையறத்தை ஓம்புவன. காதலும், வீரமும் பாட்டின் உணர்ச்சி எல்லையைத் தொட்டுக் காட்டும் மாநலம் மேவிய ஔவையார், துறவு நெறியைப் பற்றிய சிந்தனைக்கு அப்பாற்பட்டவர்.

''நாடாக இருந்தாலும், காடாக இருந்தாலும், மேட்டு நிலமாக இருந் தாலும், பள்ளமாக இருந்தாலும் அர்ஹந்தர் எங்கேயிருக்கிருரோ அந்த இடம் இன்பமானது''. தம்மபதத்தின் ''அர்ஹத்தவக்கோவில் உள்ள இந்தப் பாடலுடன் ஔவையாரின் ''நாடா கொன்ருே — '' எனும் பாடல் பெருமளவு ஒத்திருக் கிறது என்பதைத் தவிர பௌத்த இலக்கியத்தோடு ஔவையாரின் சங்கப் பாக்களுக்கு எவ்விதத் தொடர்புமில்லே.

## பிராகிருத மொழிப் பெண்பாற் புலவர்கள்

பிராகிருதம் என்னும் சொல் ஒரே மொழியைக் குறிப்பதாகாது. பல மொழிகளேக் கொண்ட ஓர் இனத்தைக் குறிக்கும். மகாராஷ்டிரீ, சௌரஸேநீ, மாகதி ஆகியவை இவற்றுள் சிறப்புடையன.

''காதா ஸப்தசதீ'' என்னும் தொகுப்பு நூல், பிராகிருத மொழியில் நிகரற்று விளங்குவது. இத் தொகுப்பில் எழுநூறு செய்யுட்கள் உள்ளன. ''காதா''என்பது பிராகிருத மொழிக்கே உரித்தான செய்யுள்வகை. பெரும் பாலும் அகச்சுவை மண்டியதாகவே இருக்கும்.

''காதா ஸப்தசதீ'' யில் பத்துக்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் உணர்ச்சிமிக்க காதாக்களே யாத்துள்ளனர். அனுலச்சி, ரேகா, ரோஹா, ரேவாநாதா, பத்தாவஹி, பிரஹதா, மாதவி, சசிப்பிரபா, சரஸ்வதி, பேஜ்ஜா ஆகியோர் குறிப்பிடத்தக்கப் பெண்பாற் புலவர்கள்.

பத்தாவஹியின் காதா ஒன்று சங்க இலக்கியத்தின் ''கார்காலம்'' பற்றிய குறிப்புடன் ஒத்துள்ளது.

''பொறுத்திரு, அதோ, மையிருட்டாக மலேமீது தெரிவது காட்டுத்தீயி ஞல் எழும் புகையே. கார் அன்று, அவன் வருவேன் என்று உரைத்த பருவம் இஃதன்று''. இந்த காதா, தோழி, தலேவிக்கு ஆறுதல் கூறுவதாக அமைந் துள்ளது.

ஔவையாரின் குறுந்தொகைப்பா ஒன்றிலும் (200), ''பருவ வரவின்கண் ஆற்ருளாகிய தலேமகட்குத் தோழி, ''பருவம் அன்று, வம்பு'' என்ற வழி தலேமகள் சொல்லியது'' என்னுந்துறை வகுக்கப் பெற்றுள்ளது. ரேவா பாடிய காதாவும், குறுந்தொகைப் பாவும் ஒத்த உணர்ச்சியுடன் அமைந்துள்ளதைக் கீழே காணலாம்.

''ஏடி! ரோஷமிக்கவளே! நீ அவனுடன் ஊடி வேற்றுமுகம் காட்டிச் சென்றுலும், பின்புறத்தில் உள் முதுகில் — மயிர்க்கூச்சம் எழுகிறது. உண்மையில் அவன் மீது உனக்குள்ள காதலையல்லவா இது காட்டுகிறது!'' காதா 87.

''காமம், யாவதும்
நன்றென வுணரார் மாட்டும்
சென்றே நிற்கும் பேதைமத்தே'' — குறுந்தொகை 78.

காதலன் — காதலி இருவரிடையே நிகழும் ''வளியிடைப் போக முயக்கத்தின்'' பெருமையைப் பேசும் காதா, ஔவையாரின் பாடலுடன் ஒப்புமையாக ஆளத் தகுதியுள்ளதாய் உள்ளது.

''கயிறுபோல் பிணைந்திருக்கும் என் கரங்களில் இருந்து விடுபட மிக்க பாடுபட்டார். நானே அவரது மார்பகத்தில் புதையுண்ட முலைகளை பெயர்த் தெடுக்க வேண்டியதாயிற்று''.

காதா — 23 பாடியவர் — அனுலச்சி.

இந்த காட்சியை ஔவையார் ஒரே வரியில் இன்னும் உயர்வு நவிற்சி ஓங்க உரைக்கிறுர்:

''மெய் புகுவு அன்ன கை கவர் முயக்கம்'' — அகநானூறு — 303.

### ஔவையாரும் பிராகிருத மொழிப் பெண்பாற் புலவர்களும்

பிராகிருத மொழிப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் பெரும்பான் மையன, கைக்கிளை, பெருந்திணையைச் சார்ந்தவை. ஔவையார் பாடல்களில் இவையிரண்டு விலக்கப்பட்டுள்ளன. நாயகி பேதங்களை விளக்கும் சிருங்காரச் சுவையுள்ள காதாக்கள், ஔவையாரின் அன்பின் ஐந்திணை அளாவிய நெறிக்கு முற்றிலும் மாறுபட்டன.

### ஈப்ரு மொழிப் பெண்பாற் புலவர்கள்

புனித பைபிளின் ''பழைய ஏற்பாட்டில்'' ''தெபொரா'', ''மிரியாம்'' எனும் இரு பெண்பாற் புலவர்களைப் பற்றிய குறிப்பும், அவர்களது பாடல்களும் உள்ளன.

பழைய ஏற்பாட்டில் ஐந்தாவது அதிகாரத்தில் — நியாயாதிபதிகள் — என்னும் தலைப்பில் உள்ள முப்பத்தொன்று பாடல்கள், ''தெபொராவின் பாடல்கள்'' எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. ''தெபொராளும், அபினேகாமின் குமாரர் பாராக்கும் பாடியதாவது'' என்னுங் குறிப்பைச் சுட்டிக்காட்டி, தெபொரா ஒருத்தியே பாடியதன்று எனச் சிலர் கூறுவர். யூதர்களைப் பற்றிய தனிக் கலைக் களஞ்சியங்களிலும், ஏனைய உலகப் புகழ் பெற்றக் கலைக் களஞ்சியங்களிலும் தெபொரா பாடியதாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. சாட்விக் — நோவா சாட்விக் எழுதியுள்ள இலக்கிய வளர்ச்சி என்னும் நூலில் காணப் பெறும் பின்வரும் குறிப்பு நோக்கத்தக்கது:

''தெபொராவின் பாடல் மிக முக்கியமானதும், தொன்மையானது மாகும். தெபொரா, பாராக் இருவரும் சேர்ந்து பாடியதாக அறிமுகச் சொற்கள் கூறுகின்றன. ஆனுல் கவிதைக்குள்ளேயே அவள்தான் முதன்மையாகப் பேசுகிருள்.

கி.மு. 1,400 ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய ஈப்ரு மொழியின் இலக்கிய வரலாற்றில் கி.மு. 1,100-ல் தெபொராவின் பாடல்கள் ஈப்ரு இலக்கிய வளர்ச்சியின் செழுமைக்கு சான்று பகர்கின்றன. முப்பத்தொரு பாடல்களில் சமய உணர்வும், தேசிய இனப்பற்றும், பகைமை முடிக்கத் தூண்டும் வீரவுரைகளும், அமைதியான ஆட்சித் தோற்றமும் இசைக்கப்படுகின்றன.

பாலஸ்தீனத்தின் சீசோன் பள்ளத்தாக்கில் இஸ்ரேலியர்களின் கொடிய விரோதியான சிசராவிற்கும், தெபொரா — பாராக் படைகளுக்கும் இடையே கடும் போர் நிகழ்ந்தது. அப்பொழுது படைகளை முன்னின்று நடத்தி, ஊக்கமளித்து, அறைகூவல் விடுத்து தெபொரா கூறியது, ''தெபொராவின் பாடல்'' என்று குறிப்பிடப்படுகிறது.

எகோவாவை, இஸ்ரேலியரின் ஒரே தேசிய தெய்வமாக பிரகடனப் படுத்தி, தேசிய சமய ஒற்றுமையுடன் போராட எழுச்சியுறுமாறு அழைக்கிறது தெபொராவின் பாடல். இஸ்ரேலின் விரோதிகளான காஞனியரை எதிர்க்க ஏதோயின் வெளியில் இருந்து கர்த்தர் வருகிருர். கர்த்தர் வழிபாட்டோடு தொடங்கி கர்த்தர் வழிபாட்டோடு முடியும் பாடல் செம்மையாக அமைக்கப் பட்டுள்ளது.

''இஸ்ரேலியர்களின் வெற்றிக்காக வானத்தில் இருந்து யுத்தம் உண்டாயிற்று, நட்சத்திரங்கள் தங்கள் அயனங்களிலிருந்து சிசெராவோடே யுத்தம் பண்ணின'' என்பன போன்ற எழுச்சிமிக்க வரிகள் பாடல் முழுவதும் விரவியுள்ளன.

**தெபொராவும் சங்ககால ஔவையாரும்**

தெய்வமே துணை நிற்க, தெய்வத்தின் பெயரால் தேசிய இன ஒற்றுமைக்கு தெபொரா பாடுபட்டதை நிலேவில் கொள்ளும்பொழுது, சங்ககால ஔவையாருக்கு அத்தகைய தேவை ஏற்படவில்லே என்பதையும் குறிப்பிட வேண்டியுள்ளது. தெபொரா, சமயத் தலேவியாகவும், அரசியல் தலேவியாகவும், சமூகத் தலேவியாகவும், கவிஞராகவும், பல திறப்பட்ட பொறுப்புகளேப் பெற்ருள். தெபொராவின் காலத்தில் இஸ்ரேலியருக்கு எதிர்ப்பட்ட பயங்கரப் பிரச்சினேகள் போலத் தமிழக மக்களுக்கு ஔவையார் காலத்தில் ஏற்படவில்லே. சேர, சோழ, பாண்டியர் என்னும் முப்பிரிவில் தமிழகம் அரசியல் வழிப் பிரிந் திருந்தாலும் தமிழ் வழங்கும் நிலப்பரப்பெங்கும் பாணர்கள், புலவர்கள் பரந்து சென்று பண்பாடு, மொழி ஒற்றுமைக்கு ஊறு நிகழா வண்ணம் காத்தனர்.

தெபொராவின் பாடலில், ஔவையாரின் பாடல்களில் காணப்படுவது போல வீரயுகப் பண்புகள் இல்லேயென்ருலும், புகழுரைப் பண்பு நலன்கள் (Panegyrics) உள்ளன. தெபொராவின் பாடலில் உள்ள புகழுரைப் பண்பு நலன்களேப் பற்றி அறிஞர் சி. எம். பௌரா கூறுவதாவது:

''பெரிய செயலை முடித்த ஒருவனை, அவன் எதிரிலேயே பாராட்டுவது புகழுரைப் பாடலாகும். அந்தச் செயல் முடிந்த அப்பொழுதே பாடல் இசைக்கப் படும். சான்ருக, சுமார் கி.மு. 1,200-ல் இயற்றப்பட்ட தெபொராவின் பாடல் என்னும் ஈப்ரு கவிதையில் பலம் மிக்க எதிரி வீழ்த்தப்பட்டதின் எதிரொலியான மகிழ்ச்சி, வீரவுணர்வுடன் கூறப்பட்டுள்ளது. அற்புதமான நடப்பியல் நோக்குடனும், சாகஸப் பண்புடனும் கவிதை உருவாகியிருந்தாலும், அது புகழுரைப் பாடலாகவே விளங்குகிறது''.

ஔவையாரின் புறத்திணைப் பாடல்களிலே போர்க்கள வருணனை, போர்க் கருவிகளின் வருணனை, படைகளின் அணிவகுப்பு வருணனை, களிறு, குதிரைகளின் வருணனை, அதியமான், பொகுட்டெழினி இருவரின் வீரச் செயல்களின் வருணனை இவையாவும், தெபொராவின் பாடலில் இல்லாத வீரயுகக் கவிதைப் பண்புகளின் திரட்சியைக் காட்டுகின்றன.

குதிரைப் பாய்ச்சல் வருணனையில் உள்ள ஓர் ஒப்புமை வருமாறு:

''அப்பொழுது, குதிரைகளின் குளம்புகள், பாய்ச்சலிலேயே, பலவான்களின் பாய்ச்சலிலேயே பிளந்து போயின'' — தெபொராவின் பாடல் (22)

''மாவே பரந்து ஒருங்கு மலைந்த மறவர்
பொலம் பைந்தார் கெடப் பரிதலின்
களன் உழந்து அசைஇய மறுக்குளம் பினவே'' — (புறநானூறு 97)

தெபொரா, ஔவையாரைப் போன்று வீரத்தை பாடினுலும், போர்க்கள, போர்க் கருவிகளின் வருணனையில் ஔவையாரே விஞ்சி நிற்பது புலனுகும்.

ஈப்ரு மொழி பேசும் மக்களை கட்டுப்பாடமைந்த தேசிய இனமாக ஆக்க தெபொரா எடுத்துக் கொண்ட முயற்சிகளை அவள் பாடல்களில் காண்கிறோம். தமிழக மூவேந்தரை ஒருங்கே கண்ட நேரத்தில், அவர்களின் ஒற்றுமையை வாழ்த்திய ஔவையாரின் பாடலை, தமிழரின் தேசிய ஒற்றுமைப் பற்றிய சிந்தனைப் பொறியாகக் கொள்ளலாம்.

**கிரேக்க மொழிப் பெண்பாற் புலவர்கள்**

கிரேக்க — இலத்தீன் பெண்பாற் புலவர்களுள் ஔவையாருடன் போட்டியிடக் கூடிய ஆற்றல் வாய்க்கப் பெற்றவர், கிரேக்க மொழிப் பெண்பாற் கவிஞரான சாப்போ ஒருவரே.

கிரேக்க இலக்கியப் பெண்பாற் புலவர்களுள் சாப்போ (SAPPHO) ஒரு முழுமதி. அவளைச் சுற்றிய விண் மீன்களென ஆறு பெண்பாற் புலவர்கள் திகழ்ந்தனர். சாப்போவின் கவிதா மண்டலத்தைச் சார்ந்த இந்த ஆறு பெண் புலவர்கள் வருமாறு:

டெலிசில்லா (TELESILLA), பிராக்ஸிலா (PRAXILLA), எரின்னு (ERINNA) டெகியாவின் எனிட்டி (ANYTE OF TEGIA), நோஸின் (NOSSIN), கொரின்னு (CORINNA)

கி. மு. ஐந்தாம் நூற்ருண்டைச் சார்ந்த டெலிசில்லாவின் கவிதைகளில் பெரும் பான்மையானவை துதிப்பாடல்களே. சாப்போவின் பெயரால் ஒரு யாப்பு வகை பெயர் பெற்றதேபோல், டெலிசில்லாவின் பெயராலும் ஒரு யாப்பு பெயர் பெற்றுள்ளது.

டெலிசில்லாவின் சமகாலப் பெண்பாற் புலவரான பிராக்ஸிலாவின் பாடல் கிரேக்கத்தில் விருந்துகளில் பாடுவதற்கென்று இயற்றப்பட்ட மதுபான பாடல்கள் தொகுப்பில் (Drinking Songs) உள்ளன. ''பிராக்ஸிலியன்'' என்ற யாப்பு வகை பிராக்ஸிலியாவின் புகழிற்கோர் நினைவுச் சின்னமாகும்.

சாம்போவின் தோழி என்றும், சமகாலத்தவள் என்றும் கருதப்படும் எரின்னு, கிரேக்க இலக்கியத்தின் இரங்கற்பா வகைக்கும் வளம் சேர்த்தவள், எரின்னுவின் இரங்கற்பாவில் விளங்கும் இலக்கியப் பெருமையைக் குறித்து ஆய்வாளர் சி. எம். பௌரா கூறுவதாவது:

''பழையகிரேக்கக் கவிதையில் காண முடியாத தற்சார்பான கருத்து விளக்கத்திற்கு அறு சீரடிப் பாவை ஆண்டது எரின்னுவின் புது வழியாகும். மொழி, யாப்பு, பொருள் தேர்வு ஆகியனவற்றில் இவள் முன்னேடியாகத் திகழ்கிருள். மலர்களையும், விருந்துகளையும், திருவிழாக்களையும், நினைவூட்டும் நாட்களையும் கொண்டு, தோழியின் பிரிவால் விளைந்த ஆற்ருமையை வெளிப் படுத்தும் சாப்போவின் கவிதைகளிலும் இதே நிலைமையைக் காண்கிருேம்''.

கி. மு. மூன்ரும் நூற்ருண்டில் வாழ்ந்த, எனிட்டியின் கவிதைகளில் இயற்கை வருணனையும், சிறுவர்கள் விளையாட்டும், இறந்த வீட்டுப் பிராணிகள் மீது வெளிப் படுத்தப்பட்ட உணர்ச்சிப் பெருக்கும் நயமுடன் விளங்குகின்றன. பண்டை கிரேக்க இலக்கியத்திற்குரிய பௌராணிக மரபை எனிட்டியின் கவிதை களில் காண்கிருேம்.

எனிட்டியின் ''கடற் பன்றியின் கல்லறை'' (Dolphin's Tomb) எனும் பாடல் புகழ் பெற்றது. கடல் கலக்கிய தன் வீர வாழ்வையும், கடற்கரையின் கூழாங்கற் பரப்பில் மீளாத் துயிலில் வீழ்ந்துவிட்ட வெறுமையையும் கடற் பன்றியே கூறுவது போலப் பாடல் அமைந்துள்ளது, இதன் தமிழாக்கம் வருமாறு:

கடல் அலைகளைக் கிழித்தெறிந்து கூறிட்ட
அந்த இன்ப வாழ்வுதான் மீண்டும் வருமோ?
ஆழியின் நீர்ச் சுழலில் இருந்து மேலே
பாய்ந்து பாய்ந்து என் படலை அலைப்பேனே?
போர்க் கப்பல் கூர்முனை நோக்கி என்னை
நிகர்த்ததோ இஃதெனப் பெருமையுற்று
சிறிடும் குலவையிட்டு கப்பலின் முன் பகுதியை
வளைந்து வளைந்து வியப்புற வலம் வருவேனே?
எறிந்தாடும் நீலத்திரை வாரியே எனைச் சுருட்டி
பூமகளின் வற்றிய மார்பிடைத் தூக்கிப் போட்டது
குறுகிய இந்தக் கூழாங்கற் பரப்பில்
நானும் மீளாத் துயிலில் ஆழ்ந்தேனே?

போர்க் கப்பலின் கூர் முனேயைக் காட்டிலும், தனது அலகின் முனே மிக்க கூர்மை யுடையது என்னும் பெருமிதத்தில் சுற்றிச் சுற்றி சீறிப்பாயும் டால்பினின் சொல் லோவியம், நெஞ்சை அள்ளுகிறது.

சங்கச் சான்றோர் பரணனின் பாடல் ஒன்றிலும் (அகநானூறு 152) மரக் கலத்தைத் தாக்கும் இரு மீன் கூட்டத்தின் சீற்றம் ஓவச் செய்தியாக ஒளிர்கிறது.

சினம் கெழுதானே, தித்தன் வெளியன்,
இரங்கு நீர்ப் பரப்பின் கானல் அம் பெருந்துறை,
தனம் தரு நன் கலம் சிதையத் தாக்கும்
விறுவென் இறவின் குப்பை —

''சமன் செய்யும் மரணம்'' (Death, the Leveller) என்னும் கவிதையின் இருவரிகளே கிடைத்துள்ளன. இந்த இரு வரிகளிலேயே எனிட்டியின் தத்துவ நோக்கு சொற்செறிவுடன் சிறப்புறுகின்றது. இக்கவிதையின் கருத்து வருமாறு:

வாழும்போது மாஸேன் ஓர் அடிமை,
ஆனுல் அவன் மரணமுற்ற முதல்
புகழ் பெற்ற டேரியல் மன்னன்
போல் உயர்வு பெற்றுன்.

கி.மு. மூன்றும் நூற்றுண்டில், கிரேக்க நாட்டிற்கு வெளியே ரோம் நாட்டில் வாழ்ந்து கிரேக்க மொழியில் கவிதை இயற்றியவள் நோஸிஸ்.

கிரேக்கக் கவிக்குயில் சாப்போவுடன் போட்டியிடும் தகுதி தனக்குண்டு என்று சாற்றியவள், நோஸிஸ். சாப்போவைப் போன்று, பெண்களுக்கென்றே கவிதை பாடியவள் நோஸிஸ். சாப்போவின் வழியைப் பின்பற்றியவள் என்பதை எடுத்துக் கூறும் சில காதற் பாடல்களுக்குரியவள், நோஸிஸ்.

பின்வரும் அவளது பாடலில் காதலின் ஒப்பற்ற தனித்தன்மை நனிமிக தன்னம்பிக்கையுடன் சாற்றப்படுகின்றது.

''காதலின் இனிது ஏதுமில்லே,
பேரின்பம் பிறிதொன்றும் இதன் பின்னே,
எனது எயிற்றூறி, சிந்தும் தேனும்
அதன் பின்னதே என நோஸிஸ்
என்னும் நான் இதனேக் கூறுகிறேன்,
காதல் தரும் முத்தம் பெருத பெண்
சாற்றுவளோ ரோஜாவின் மலர்ச் சிறப்பை?

நோஸிஸின், கிடைத்த சில கவிதைகளில் பண்டையபழக்க வழக்கங்களே அறிகிறோம். திருக்கோயில்களில் வண்ண ஓவியங்களே அளிப்போரின் சிறப்புக் குறிக்கப்படும் வழக்கத்தை நோஸிஸின் ஒரு கவிதை தெரிவிக்கிறது.

கி. மு. இரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்த கொரின்னு, பௌராணிக மரபை (My hology), கவிதையின் உயிராகக் கருதினுள். இவளது கவிதைகளேப் புரிந்து கொள்ள வேண்டுமானுல், கிரேக்க பௌராணிக மரபில் தேர்ந்த பயிற்சி

பெறவேண்டும். கிரேக்க மொழிக் கவிஞர் பிண்டார் என்பவர் பௌராணிக மரபைப் புறக்கணித்த காலத்தில் அவரைக் குறைகூறினுளாம், கொரின்ஞு.

''ஈசப்பின் பெண்கள்'' (Daughters of Aesops) என்ற கவிதையில் கிரேக்க பௌராணிக மரபில் கொண்டாடப்படும் பல தெய்வங்களின் குறிப்புகள் நிறைந்துள்ளன. தனது கவிதைப் பணியைப் பற்றி கொரின்ஞு ஒரு பாடலில் கூறியதாவது:

''வெண்மையான, கையற்ற மேலாடை அணியும் தனுக்ராவின் கன்னிப் பெண்களுக்காக எனது இனிய பாடல்களைப் பாடுகிறேன். பேச்சு வழக்கில் உள்ள பாடல் மூலம் எனது நகரத்தின் பெருமைக்குரியவளாகிறேன்''.

கொரின்ஞுவின் கவிதைகளில் உள்ள எளிமையைப் போன்றே யாப்பும் எளிமையாக உள்ளதென்று கூறுவர். இலக்கிய மரபில் பௌராணிகத்தை வற்புறுத்தியது, இவளது தனிச் சிறப்பாகும்.

### இலத்தீன் பொழிப் பெண்பாற் கவிஞர்

கி. மு. முதல் நூற்ருண்டில் ரோம் நகரில் வாழ்ந்த சல்பிசியாவின் ஆறு பாடல்கள், அவளது சமகாலக் கவிஞரான டிபுலஸ் (Tibullus) என்பவர் தொகுத்த கவிதைத் தொப்பில் உள்ளன. சாப்போ, நோஸிஸ் போன்று பிற பெண்பாற் கவிஞர்கள் பெற்ற சமூக உரிமையை சல்பிசியாவிற்கு ரோம் நகர மேட்டுக் குடி வருக்கம் வழங்கவில்லை. சல்பிசியாவின் மறைவிற்குப் பிறகே அவள் கவிதைகள் வெளியிடப்பெற்றன.

சல்பிசியாவின் ஆறு கவிதைகளில் ஒன்று, அவள் கூறிய உறுதி மொழியாக வும், இரண்டு கவிதைகள் அவளை ஆதரித்த எமசாலா கார்வின்ஸ் என்பவரைப் பற்றியும் மற்ற மூன்று கவிதைகள் அவள் காதலன் செரிந்தஸ் என்பவரைக் குறித்தும் இயற்றப்பட்டன.

சல்பிசியாவின் காதற் பாட்டுக்களைக் குறித்து ஜியோர்க்லுக் என்பவர் பின்வருமாறு கூறியுள்ளார்.:

''இந்தக் கவிதைகளில் பெரிய கவிதை பத்து வரிகளையும், சிறிய கவிதை நான்கு வரிகளையும் உடையது. காதற் கடிதங்களுக்குரிய முன்னிலை விளி, வினுப் பண்புகளைக் கொண்டு தன்னிச்சையாக எழுதப்பட்ட ஒரு பெண்ணின் எழுத்து களில் இலக்கியம் போலிப் பகட்டு இல்லை, இலத்தீன் இலக்கியத் தொகுப்பில் தனித்தன்மை பெற்றது''.

''சூளுரை'' (Avowal) என்று பொருள் படும் தலைப்பில் உள்ள கவிதையின் சுமாரான தமிழாக்கம் வருமாறு:

மான் அமர் நோக்கிலா மாதரார்
அலர் தூற்றி எம் நலிவு பலரறியச் செய்க.
இன்புறுக, நெஞ்சே! களிப்பரசி! இறுதியில்
தொழுவோர் கழிவிரக்க இசையில் வசமாவாள்
பேரின்ப மஞ்சம் சேரக் காளையை தானே அழைத்தாள்

ஏலத்தில் எடுத்த கொள்ளை குருதி நாளத்தில் சிலிர்த்தது;
முன்னிரவு மயக்கத்தில் மெய்மறந்திருந்தோம்
விரைந்து, மிக விரைந்து, புலரும் பொழுதை காய்ந்தோம்
கையே! நிற்க! ஒழுங்கற்றுக் கிறுக்காதே
கடிதம் வம்பர் கைகளில் சிக்கும், எச்சரிக்கை
இல்லை! நினைவு இனிதுறும், முகச் சுளிப்பு நீங்குக!
வாழ்வரசி! எப்பொழுதும் இருப்பது போலிரு,
அறிக, தகைசால் காளையோடு
நான் கழித்த இரவிற்காக
ஆம், என்னுளம் வருந்தவே வருந்தாது

நோய் அலைக் கலங்கிய மதன் விழி பொழுதில்
காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்''

என இளந்திரையனுர் நற்றிணையில் (94) தெளிவுறுத்துகிருர். ஆனுல், சல்பிசியாவின் ''காமம் செப்பல்'' எத்தகைய குறியீடுகள் இன்றி நேர்முகமாக, எளிய சொற்களில் ஏற்றம் பெற்றது.

இரண்டு பாடல்களில் தனது காதலன் செரிந்தஸிடம் தனக்குள்ள காதலை ஒளிவு மறைவின்றிச் செருக்கோடு வெளிப்படுத்திய சல்பிசியா, மற்றும் இரு பாடல்களில் நோயுற்றுக் கிடந்து, நொந்த மனநிலையில் செரிந்தஸிடம் உருக்கமாக முறையிடுகிருள். முக்கியப் பகுதிகள் மட்டும் கீழே உரைநடையில் தரப்பட்டுள்ளன.

''எனது நோய் நீங்கி எனது காதல் எழில் பெருவிட்டால், நான் மறுநாள் வாழ விரும்ப மாட்டேன். உன்னையொத்த இளைய அழகனுக்கு உதவாத கட்டிளமையும், நலமும், வாழ்வும், பயனளிக்க இயலவில்லையென்ருல் அவற்ருல் எனக்கு மட்டும் என்ன பயன்?''

இவ்வாறு நொந்த உள்ளம் சிந்திய சொற்களை வெள்ளிவீதியாரின் குறுந்தொகைப் பாடலிலும் காண்கிருேம்:

கன்றும் உண்ணுது கலத்தினும் படாது
நல் ஆன் தீம்பால் நிலத்து உக்கா அங்கு
எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
பசலை உணீஇயா வேண்டும் —
திதலை அல்குல் மாமைக் கவினே.

''தனிப்பட்ட இருவரின் காதல் விவகாரத்தைக் கவிதைக்குரிய பொருளாக்கியது, பண்டைக் கவிதையில் தனியொரு நிகழ்ச்சியாகும்'' என்று சல்பிசியாவின் கவிதை குறிப்பிடப்படுகிறது.; (P. 110 – The Latin Love Elegy)

அக்காலத்தில் சல்பிசியாவைத் தவிர வேறு பெண்பாற் கவிஞர் இலத்தீன் மொழியில் எழுதவில்லை. பெண்களின் இலத்தீன் மொழி நடையை அறிவிக்கும் ஒரே வாய்ப்பை சல்பிசியாவின் கவிதைகளே அளிக்கின்றன.

# நீர் ஆட்டு

டாக்டர் தா. வே. வீராசாமி, எம்.ஏ., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை — 600 020.

மனித நாகரிகம் தலை எடுத்த போது மக்கள் பெரிய ஆறுகளின் கரையில் குடியேறினர். ஆற்றிலே அணைகட்டிக் கால்வாய் வெட்டி அந்நீரைக் கொண்டு நிலத்தை நன்செய்யாக்கி வேளாண்மை செய்தனர். தமிழகத்தில் காவிரியின் கரையில் உறையூரும், பொருநயின் கரையில் நெல்வேலியும், வையையின் கரையில் 'மருதத்துறை'யாக மதுரையும் தோன்றின. உலகில் சிந்து, கங்கை, யூப்ரடீஸ், டைக்ரீஸ், நீல நதி, மஞ்சள் ஆறு ஆகியவற்றின் கரையில் எழுந்த நாகரிகத்தை உலக வரலாறு எடுத்துரைக்கும். நீர், அவர்கள் வாழ்வில் மிகமிக இன்றியமையாததாக விளங்கியது. இதனைத் திருக்குறள்.

நீரின்று அமையாது உலகெனின் யார்யார்க்கு
வானின்று அமையாது ஒழுக்கு

எனக்கூறி இக்கொள்கை பரவி வளர்ந்த நிலையைச் சுட்டும். இதற்கு முன்னரே தொல்காப்பியம் இக்கொள்கையை வெளிப்படுத்தும் முன்னோடியாக

நிலம் தீ நீர் வளி விசும் பொடைந்தும்
கலந்த மயக்கம்

என எடுத்துரைக்கும்.

பழங்காலத்தில் கிரேக்க அறிஞர் தாலஸ் உலகில் உள்ள பொருட்களுக்கு அடிப்படையாக அமைவது நீர் என்றார். இத்தகைய கருத்து முதலில் தமிழகத்தில் தோன்றிய பின்னரே ஐம்பூதக் கருத்து வளர்ந்திருத்தல் கூடும். இத்தொடக்கத்தின் எச்சமாகவே குறளில் 'வான் சிறப்'பாகவும், சிலப் பதிகாரத்தில் 'மாமழை போற்றும்' நெறியாகவும் காண்கிறோம். ஐந்து நிலம் வகுத்ததில் மருதம் என நீர் வளப்பகுதியைப் பகுத்ததும், நெய்தல் நிலத்தில் இந்திரவிழவு எடுத்து நீராடல் புரிந்ததும் கொண்டு நீரும் தமிழர் வாழ்வும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்திருப்பதை நன்கு வெளிப்படுத்தும்.

தமிழகம் ஊழிவெள்ளத்தினைப் பலமுறை கண்டு அறிந்து செவிவழிச் செய்தியாகக் கூறி வந்ததைச் சங்க இலக்கியத்திலும் காணுகிறோம். நீரின் எல்லை யற்ற ஆற்றலை உணர்த்தும் வகையில் 'எல்லா உயிர்களும் இறக்கும் ஊழிக்கால முடிவில் நிலத்தின் பாரம் நீங்க, நீர் பரந்து நெருங்கியதைப் பதிற்றுப் பத்தில் காணலாம். பரிபாடலில் கீரந்தையார் 'பனியொடு தன்பெய றலைஇய ஊழி' எனக் குறிக்கிறார். தமிழகம் போன்றே, பண்டைய திராவிடர் வாழ்ந்த மொகஞ் சோதாரோ ஐந்து முறைக்கு மேல் வெள்ளத்தால் அழிந்ததை ஆய்வாளர் கூறு கின்றனர். மேலும் வரலாற்றறிஞர் சிலர் மொகஞ்சோதாரோவில் அகழ்

விடத்தில் சிறுகுளமாக உள்ள பகுதியை மக்கள் நீர் விளையாட்டிற்கும், சமயச் சடங்கிற்கும் அமைத்ததாகக் கூறுவர். உலகப் படைப்பைப் பற்றி இந்தியப் பழங்கதைகள் கூற்றிலிருந்து பிரஜாபதியின் கண்ணீரிலிருந்து எல்லா உயிர்களும் தோன்றியதாகக் காணலாம். இவற்றையெல்லாம் காணும்போது தமிழரும் தமிழரோடு பண்டுதொட்டுத் தொடர்புடைய சிந்துவெளி மக்களும் நீர், நீர் விளையாட்டு, நீரைக் கண்டு அஞ்சி வணங்கிய செயல் ஆகியவற்றின் பழைமையை உணரமுடிகிறது.

நீராடல், மனிதனின் பல் பருவ நிகழ்ச்சியாகப் பல்வேறு கோலம் கொள் வதைச் சங்க இலக்கியங்களில் நன்கு அறிய முடிகிறது.

அதன் முற்கூறாக இளம் பருவ நிகழ்ச்சியைக் கல்லா இளமைக்கால நீராடலாகக் காண்கிறோம். மணலில் செய்த வண்டல் பாவைக்குப் பூச்சூடிக் குளிர்ந்த பொய்கையில் ஆடும் மகளிரோடு கைபிணைந்து தழுவி மருதத்துறையில் மரக்கொம்பிலிருந்து குதித்து மணல் எடுக்கும் நீர் விளையாட்டைத் தொடித்தலை விழுத்தண்டினார் பாடலால் அறிகிறோம். பின்னர் வளர்ந்த பாவைப் பாடல் களும் கண்ணனின் நீர்நிலைச் செயல்களும் இத்துடன் ஒப்பிடத்தக்கன.

புனல் தரு புணர்ச்சியாகக் களவியலின் முதல் அரும்பாக நீராடல் முளை விடுகிறது. பின் 'குறிஞ்சிப் பாட்டாக' அது மலர்கிறது. களவில் நெஞ்சுடன் பட்ட காதலில் ஊரலர் பற்றிக் கவலைப்படாது மலையருவி நீரில் தலைவன் மார்பைத் தெப்பமாகக் கொண்டு விளையாடிய இன்ப ஆடல் மதுரை மதனிளநாகனாரின் குறிஞ்சிப் பாடலில் புலப்படுகிறது. அதனால் காதலர் கேண்மை வளர்வதும், சுனையில் ஆடிய நாட்களைத் தலைமக்கள் நினைப்பதும் அவ்வாறு நீர் ஆடிய இன்பம் மறுநாளும் வாய்க்குமா என அவர்கள் ஏங்குவதும் நீராடலின் விளைவாகும்.

காதலர் முன்னரே ஒருவரை ஒருவர் அறியாத நிலையில் அன்புடை நெஞ்சம் ஒன்று கலந்த நிலைக்கு வானிலுள்ள மழை நீர் நிலத்திலுள்ள செம் மண்ணில் கலந்ததை நினைவூட்டும் செம்புலப் பெயல் நீராரின் பாடல்.

களவு நிலையிலிருந்து கற்பு நிலைக்கு அகவாழ்வு மாறினாலும் நீராட்டின் தொடர்பு அதனின்று நீங்கவில்லை. ஐங்குறுநூறு 'புனலாட்டுப் பத்து' எனத் தனிப்பத்தையே தந்துள்ளது. தலைமகன் பரத்தையரோடு நீராடுகிறான். மகளிர் மருதமரத்திலேறி வானிலிருந்து இறங்கும் மயிலின் தோகை போன்று பொன்னணி ஒளிவிட நீரிலே தம் கூந்தல் பொலியப் பாய்கின்றனர். கல்லா இளமை கழித்த பின்னும் 'நெடுநீர்த் தண்கயத்துத்துடுமெனப் பாய்ந்த' நீராடற் செய்தியை மருதச்சூழலில் காணும்போது நாட்டொழினின் களைப்புத் தீரவும், இன்பம் பெறவும் நீராடல் அமைவதை உணர்கிறோம்.

நீராடும்போது தெப்பங்கொண்டு ஆடுவதையும், அதுபற்றிப் பலவகை யாக எண்ணுவதையும், அதனால் தலைவியைத் தன்பால் ஈர்க்கத் தலைவன் முயல் வதையும் நுண்மையாகக் கூரிய பார்வையுடன் குறுந்தொகை கூறும்.

புதுநீரில் நுரையும் மலரும் மிதந்து வரும். நீர் வரவை நெஞ்சில் பதியு மாறு பிரான்சாத்தன் காட்டல் அந்நீரில் ஆடலே தலைவன் நல்கும் இன்பத்திற்கு இணையெனக் கருதும் மனநிலையைக் கபிலர் காட்டுவார்.

உறந்தையில் ஓடும் காவிரியின் பெருவெள்ளத்தில் வேழக் கரும்பாலாகிய தெப்பத்தில் தலைவன் தான் விரும்பிய மகளிருடன் நீர் விளையாடினன் எனக் காணும்போது மருதநில மக்களின் இன்ப நீராட்டயர்வு வெளிப்படும். இதன் கலை வளர்ச்சியாக ஆதிமந்தி ஆட்டனத்தியின் நீராட்டுக்கதை தமிழகமெங்கும் பரவியது.

மருதத்துறையாம் மதுரையில் ஓடும் வையை, தமிழ் மக்களின் நீராட்டு நாகரிகத்தை நிலைநாட்டும் கண்ணாடி எனலாம். பண்டைப் பரிபாடலாக விளங்கிய முழு நூலில் வையை பற்றி 26 பாடல்களிருந்ததாக அறிகிறோம். ஆயின் இன்று வையைக்குரியனவாக எட்டுப்பாடல்களும் சில உதிரிப் பாடல்களும் மட்டுமே கிடைத்துள்ளன. அவற்றைக் கொண்டு வையை நீராட்டில் மக்கள் கொண்ட ஆர்வம் நன்கு புலப்படும்.

புதுநீர் வரவைப் பறை அறிவிப்புத் தெரிவிக்க மக்கள் விரைந்து வையைக்குச் செல்லும்போது முறைபிறழ்ந்து பற்பல செயல்களை மறதியின் விளைவால் செய்தனர்.

நீராட்டில் காதல்கொண்ட தலை மக்கள் ஊடினர். ஊடலொழிந்து ஆடிப் பாடினர். ஆரவாரத்தில் சிரித்து மகிழ்ந்தனர். ஓடினர். ஓடி ஒளிந்தவரைத் தேடினர். கற்றாரும், கல்லாரும், இழிந்தவரும், உயர்ந்தவரும் விரைந்து சென்ற னர். பாண்டிய மன்னனும் மக்களோடு சேர்ந்து நீராடினன். இத்தகைய கட்டு நிலை, வையை வரவால் விளைகிறது. இதன் விரிந்த விளக்கத்தைப் பிற்காலத்தில் எழுந்த பெருங்கதை போன்ற காப்பியங்களில் காணமுடிகிறது.

வையையில் நீராடும் களம் போர்க்களமாகப் பொலிந்தது. அகத்துறை நீர் விளையாட்டைப் புறத்துறைப் போராகக் கருதித் தலை மக்கள் இன்பம் கண்ட னர். போருக்கேற்பப் பல நீர் விளையாட்டுக் கருவிகளைக் கொண்டனர். புழுகு நெய்யிட்ட துருத்தி, பனி நீரிட்ட கொம்பு, வெண்நெட்டி மிதவை, நிறமூட்டிய நெட்டியால் செய்த தேர் ஆகியவற்றைக் கொண்டு சென்றனர்.

மகளிர் நீராடும்போது வையைப் புனல் அவர்களுடைய காதணி, கைவளை, தலைக்கோலம், துகில், மேகலை காஞ்சி ஆகியவற்றையும், ஆடவர் நீராடும்போது அவர்களுடைய கண்ணி, ஆழி, வாகுவலயம் ஆகியவற்றையும் வையை பறித்துச் சென்றதால் பகை நிலம் வென்ற பாண்டியர் படையாக விளங்கியது.

புனலாடற்கென மாந்தர் தனிப்பட்ட ஆடைகளையும் அணிகளையும் அணிந்து, யானை, குதிரை மேல் இவர்ந்து சென்றனர். சிலர் கோவேறு கழுதை மீதும் சென்றனர். எருது, குதிரை பூட்டிய வண்டிகளிலும் சிவிகையிலும் சென்றனர்.

நீராடற்குச் செல்லாது சிலர் இருந்தனர். அவர்கள் புறச்சேரியிலிருந்த இளைஞர் ஆவர். மெலிந்த நிலையிலிருந்தவர் நீரிற்குள் இறங்காமல் கரையில்

நின்று களித்தனர். மக்கள் பூசிய பத்துவகைத் துவரில் ஊறிய நீரும், சந்தனக் குழம்பும், வாச நெய்யும் வையை நீரில் கலந்து சென்றதால் அதன் தூய்மை அழிந்ததென வேத அந்தணர் நீராடவில்லை. சூடிக்கழித்த பூவும், மாலையும் நீரில் வந்ததாலும் கீழ்மக்கள் உண்டுகுத்த கள் கலந்ததாலும் பிறமக்களும் நீராடலைத் தவிர்த்தனர்.

வையை நீராட வந்த மகளிரில் பல பருவ மகளிரும் இருந்தனர். முகைப் பருவ மகளிர், இளம் பருவ மகளிர், முதுபெண்டிர், கற்புடை மகளிர், பரத்தையர், தோழியர், ஏவல் மகளிர் ஆகிய எல்லா நிலைப் பெண்டிரும் நீராடச் சென்றனர். அவர்களுள் முகைப் பருவ மகளிர் காதற் கணவர் தம்முடன் வந்து நீராடி இன்புறுதலைக் குறித்துச் சென்றனர். அவர்களுக்குக் காவலாகப் பாட்டி மார்கள் இருந்தனர் எனவும் அறிகிறோம்.

முன்பனிக்காலத்து மார்கழி மாதத்தில் திருவாதிரையில் சிவனுக்குரிய விழாவைத் தொடங்கும் போது 'உலகம் மழையால் குளிர்வதாகுக' என வேண்டி 'அம்பாவாடல்' என்ற அம்மை நீராட்டினைக் கன்னிப் பெண்கள் ஆடினர். அவர் களுக்கு அந்நோன்பு செய்முறையை முதுபெண்டிர் சுட்டிக் காட்ட அப்பெண்கள் வைகறையில் நீராடினர்.

அவ்வாறு நீராடும்போது அம்மகளிரின் தாயார் அவர்களின் அருகிருக்கத் தைந் நீராடுதல், முற்பிறப்பில் புலன்களை அடக்கிப் பல தவம் செய்ததன் பயன் என நம்பினர். அத்தகைய நீராடும் பேற்றினை மறுபிறப்பிலும் வேண்டிச் சிலர் வையையை வணங்கினர்.

வையையில் புதுப் புனல் வந்தபோது அதற்குரிய ஆராதனைப் பொருளாக அணியும், பொன்னால் செய்த மீன், சங்கு, நண்டு, இறவு, வாளை முதலியவற்றையும் இட்டனர். சிலர் தம் அணிகலன்களைப் போட வேறு சிலர் நீரில் மதுவைச் சொரிந்தனர்.

புனலாடும்போது காதலர் ஊடலைத் தவிர்க்க அவர்க்குத் தளிரைக் கையுறையாகத் தந்து நீர் விழாவை உயர்த்திப் பேசினர். நீராடும்போது காதலர் இருவரும் மாறா இளமையும், செல்வமும், சுற்றமும் பெற்று நிலைத்து வாழ வேண்டினர். வையை நீராடல் என்பதே அக்கால மக்களின் இன்பவாழ்வின் மறு பெயராக இருந்தது. நீர் விளையாடிய அன்றுதாம் பெற்ற இன்பம் போன்று என்றும் பெற வேண்டி வையையைப் போற்றினர். வையைப் புனல் கள்ளையும் காமத்தை யும் பொருந்தியதால் அது எல்லையற்ற இன்பம் நல்கும் என நம்பினர்.

நீரும், நீரில் இன்ப விளையாட்டிற்காக இட்ட புணையும் இன்ப வாழ்வின் துணையாக விளங்கின. நீரின் போக்கையும் புணையின் போக்கையும் கண்டு சிந்தித்தனர். நீர் வழிப்பட்ட புணையால் மக்களின் மெய்யறிவு பெருகியது. அந்நீரின் ஒழுக்கிலும், அதன் வழிப் படும் புணையின் போக்கிலும் ஒரு முறையைக் கண்டு, அதனை உலக வாழ்வுடன் இணைத்துப் பார்த்தனர். அம்முறை வழிப்பட்டு ஆருயிர்கள் செல்வதை உணர்ந்தனர். நீர்ப் பரப்பைப் போல மானிடப் பரப்பை

யும் அதன் முறையையும் கண்டு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற மனித நீர்மையின் போக்கைப் பொதுமை நிலையில் வெளிப்படுத்தினர்.

சங்க இலக்கியங்களில் நீர்தான் முதற் பொருள் என்று வெளிப்படையாகக் கூறுவிடினும் நீர் பற்றிய பல்வேறு கருத்துக்கள் அதனைக் குறிப்பாகச் சுட்டுகின்றன. அகத்துறையில் நீராட்டு, நல்வாழ்வு அமைக்கும் என்ற நம்பிக்கை ஊட்டியது. வழிபாட்டுப் பொருள்களை மக்கள் நீரில் இட்டு வணங்கினர். நீரின் போக்கைக் கண்டு, அதனால் உலகில் 'முறை' என ஒன்று இருப்பதையும் அதுவே அக வாழ்வில் உயிர்களைக் கேளிராகக் கூட்டுவித்துப் பின் பொதுமை நிலையில் மக்களிடையே ஒருமைப் பாட்டுணர்வை உண்டாக்குவதையும் புலப்படுத்துகிறது.

தமிழிலக்கியத்தில் நீரின் பெருமையை முதன் முதல் வான் சிறப்பாகக் காட்டியவர் திருவள்ளுவர். அவர் கருத்துப்படி உலகம் நிலை பெறுவதற்கு அமுத மாக அமைவது மழை நீர். அதுவே உயிர்களுக்கு வேண்டிய உணவை விளை வித்துத் தானும் உணவாக அமைகிறது. அது இல்லாவிடில் எங்கும் பசியே காணும். வேளாண்மையும் நடைபெறுது,. நிலத்தில் பசும்புல்லும் முளைக்காது. கடல் நீரும் வற்றும். பூசனை, தானம், தவம் போன்ற எந்த உலகியல் ஒழுக்கமும் நடைபெறுது. உலகைக் கெடுப்பதும், எடுப்பதும் மழை நீராகும். அத்தகைய ஆற்றல் படைத்த நீர் இன்றி உலகியல் அமையாது என்று விரிவாகவும் விளக்க மாகவும் நீரின் சிறப்பை நிலைநாட்டுகிறது திருக்குறள்.

உலகு தோன்றுதற்கு நீரே முதற்பொருள் என்ற கருத்தின் வளர்ச்சிக் கூறின் எச்சமாக இதனைக் கொள்ள முடிகிறது.

சங்க காலத்திலிருந்து தமிழ்க் காப்பிய காலத்தில் புகின் பல புதிய செய்திகள் நீரினைப் பற்றியும், நீராட்டைப் பற்றியும் கிடைக்கின்றன. காப்பியக் கதைப் போக்கிற்கு நீராட்டு, பலவகையிலும் துணை செய்து இன்றியமையாத திருப்பங்கள் நிகழ வழி செய்கின்றது.

முதல் தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரத்தின் தொடக்கத்திலேயே 'மாமழை போற்றும்' பாங்கு வள்ளுவர் 'வான் சிறப்பைப் பாடியது போல் உள்ளது. மழையின் கொடை, அரசின் கொடையோடு இணைக்கப்படுவதே இதன் புதிய போக்கு. அக்கால அரசு தலை எடுத்து வளர்கின்ற நிலையை இது காட்டும்.

பண்டைய சங்க அகப் பொருட் செய்திகளை இணைக்கும் வகையில் மகளிர் மலையருவியில் புனல் குடைந்தாடுவதைக் 'குன்றக் குரவை'ப் பாட்டு மடை புலப்படுத்தும். பண்டு தொட்டு நீராடி வந்த நிலையைக் 'கடலாடு காதை' காட்டும். ஆயினும் அத்துடன் நின்று விடாமல் கதை நிகழ்ச்சியில் கதைத் தலைவன் காதல் பரத்தையிடமிருந்து பிரிதற்குக் 'கானல் வரி' வழி செய்வது புதுமையாகும். கற்பு ஒழுக்கத்தில் ஊடல் நிகழும் நெறியில் காவிரி, கங்கை, சோழன் பற்றிய உருவகக் கருத்துக்கள் வெளிப்படுகின்றன. ஆற்றிலே தலை மக்கள், பரத்தையருடன் ஆடி ஊடி உணர்ந்த நிலையைக் காவிரி, கங்கை, சோழனாக உருவகப் படுத்தும் புதுமை, தமிழின் முதல் காப்பியத்தில் நன்கு வெளிப்படு கிறது.

நீராடல் பற்றிய புது நம்பிக்கைகளைக் காப்பிய நிகழ்ச்சிக்கேற்ப அமைத்துள்ளது சிலம்பு. கடலும், காவிரியும் கலக்கும் இடத்திலுள்ள சோமகுண்டம், சூரியகுண்டம் எனும் நீர்த்துறையில் மூழ்கினல் இப்பிறவியில் மனைவிமார், தம் கணவரைப் பெற்று இன்புறுவதுடன், போக பூமியிலும் போய்ப் பிறப்பர் என்ற நம்பிக்கை இருந்தது. அதன்படி சிலம்பின் தலைவி கண்ணகியை நீராட அவள் தோழி தேவந்தி அழைத்தாள். அக்கொள்கையை ஏற்காத கண்ணகி 'பீடன்று' என மறுக்கின்ருள். நீராடலில் உயர்வும் அதனை ஏற்காத உள்ளமும் இணைந்து காணப் பெறுகிறது.

வாழ்வில் நன்னிலை எய்தக் கங்கை ஆறு சென்று மக்கள் நீராடினர். இதனைச் செங்குட்டுவன் தன் தாயை அழைத்துச் சென்று நீராட்டிய நிகழ்ச்சி புலப்படுத்தும். அதற்கும் மேலாக நீர்ப்படை செய்யும் நிகழ்ச்சியில் கண்ணகிக்கு இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டிய செயல் இலக்கியச் சான்ருக உள்ளது. மேலும் இத்தகைய செயலில் பொதிகையில் கல்லெடுப்பின் காவிரியில் நீராட்டினர். இவ்விரண்டிலும் இமயம் சென்று கங்கையில் நீராட்டுவதையே பெருமையாக எண்ணினர், அக்கால அரசர் போன்ற மேற்குடிமக்கள். இதனல் தமிழகத்தில் கங்கையின் செல்வாக்கு வளர்ந்திருத்தலை அறியலாம்.

மற்றொரு வகையில் நீரின் உயர்வு இங்கு புலப்படும். சுனை நீராடின் மக்கள் பண்டைப் பிறவி பற்றி அறிந்தவர் ஆவர் என நம்பினர். சில நீருக்குக் கடவுட் தன்மை இருக்கும். இதனை மக்கள் மீது தெளித்தால் அவர்கள் பழம் பிறப்புப் பற்றிய அறிவு பெறுவர். இயற்கை இகந்த அந்நீரின் தன்மை அழியாது இருக்கும் என்றும் கருதினர். நீர் பற்றிய இந்நம்பிக்கையைப் பயன்படுத்திச் சிலப்பதிகாரக் காப்பியப் பிற்பகுதி பழைய நிகழ்ச்சிகளையும், பல கதை மாந்தர்களின் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துதற்குத் தக்க வாயிலாக அமைந்துள்ளது. இதுவும் நீராட்டினைப் புதிய நெறியில் பயன்படுத்திய பாங்காகும்.

இவற்றில் சிலம்பு நீராட்டைக் கதை நிகழ்ச்சியில் திருப்பம் ஏற்படுத்துதற்கும், இறந்தார்க்குக் கல்லெடுத்து அதற்குச் செய்யும் நீர்ப்படை பற்றி நிலவி வந்த நம்பிக்கைகளைப் புலப்படுத்துதற்கும், பழம் பிறப்புணர்த்துதற்கும் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

இதனை அடுத்து வந்த மணிமேகலை எனும் பௌத்தக் காப்பியத்தில் நீராடல் பற்றி இத்தகைய செய்திகளையும் காப்பிய நிகழ்ச்சிக்கு உதவும் கலை நுணுக்கத்தையும் காண இயலவில்லை. பரிபாடலில் பலவகை நீர்களையும் அவை கங்கையில் பாய்ந்ததையும் கூறியது போல் மணிமேகலையும் கூறும். நீராடுதற்கு வேண்டும்போது நீர் இறைக்கவும், வேண்டாதபோது நீரை அகற்றவும் செய்யும் எந்திர வாவி பற்றிய குறிப்பு உள்ளது. அரசன் தன் பிறந்த நாளில் நீராடிய செய்தி பழைய மரபை உணர்த்தும். நாடக மகளிர் அறிந்திருக்க வேண்டிய கலைகளுள் தூநீர் ஆடலும் ஒன்ருக உள்ளது. மாதவர்களின் பாதம் விளக்கப் பஞ்சசீல உபாசகர் நறுநீர் பயன்படுத்தியதால் பெரியோரைப் பேண நீர் பயன்பட்டது. உயிர்களின் நீர்விடாய் தீரப் பல இடங்களில் தண்ணீர்ப் பந்தல் வைத்தனர்.

இவற்றுடன் நீர் பற்றிய மெய்யறிவுக் கொள்கை இக்காப்பியத்தில் வெளிப் படுகிறது. இதன்படி நீர் அணு, திரளும் செய்கையது. தாழ்ந்து குளிர்ச்சியொடு சுவை உடையதாய் நிலம் சேர்ந்து ஆழ்வது நீர் என அறியலாம்.

இதனுல் நீராடுதற்கு இயற்கைக் குளம், ஆறு, கடல் ஆகியவற்றுடன் இயந்திர அறிவைப் பயன்படுத்தியதையும், மாதவர் அடிக்கு நீரிட்டுத் தூய்மை செய்ததையும், உயிர்க்கு உதவ தண்ணீர்ப்பந்தல் வைத்ததையும், நீர் பற்றிய மெய்ம்மைக் கொள்கைகள் சில பரவியதையும் காண முடிகிறது.

சீவக சிந்தாமணி எனும் சமணக் காப்பியம் நீர் விழாவினைக் காட்சிக்கு இனிய விழாவாகப் புலனின்பம் ஊட்டும் நிலையில் போற்றுதும். அதன் சமய நம்பிக்கைக் கேற்ப, நீர் விழாவிற்கு முதுநகர் மக்கள் சென்றதைப் ‘பொன்னெயில் வட்டம்’ போல் சென்றதாகக் கூறும். இத்தகைய கூற்றுநிலை பரிபாடல் போன்ற நூல்களில் காண இயலாது. முன்னைய தமிழ் நூல்களில் கண்டதுபோல இங்கும் மக்கள் நீராடுதற்குரிய நீர்க்கோலம் பூண்டதையும், நீராட்டினைப் போர்க்கள மாகவும் காட்டுவர். இங்குக் காந்தருவதத்தை பகைவனுகவும் (கட்டியங்காரனுக வும்) மற்ற மகளிர் அரசர் படையாகவும், மாலை முதலியன போர்க்கருவியாகவும் உருவகம் செய்யப் பெறும். கதை நிகழ்ச்சியாக நீராட்டு விழாவில் குணமாலை சுரமஞ்சரி சுண்ண விளையாட்டு ஒரு பகுதியாக இடம் பெறும். நீர்க்கருவிகள் இங்கு மிகுதியாகக் கூறப் பெறும்.

இவற்றில் குறிப்பிடத் தக்கது குரவர் இறந்தால் நீர்க்கடன் செய்யும் செயலாகும். இது புதிய நாகரிகச் செல்வாக்கின் விளைவு என்பர். பொய்த் தவ வேடம் பூண்டு நீராடி வாழ்வாரை இக்காப்பியம் கண்டிக்கும்.

சமணக் காப்பியமாம் பெருங்கதையில் நீராட்டு, தனிச் சிறப்புப் பெறு கிறது. நீராட்டு விழாவிற்குக் காப்பிய மாந்தர்கள் பொய்கைக் கரையை அடை யும் செய்தியை மிக விளக்கமாகக் கூறும் இக்காப்பியம்.

நீராடுதற்குச் செல்வோர்க்குப் பயன்படுதல் கருதி, அங்குச் சுண்ணம் சாந்து, அணி, ஆடை போன்றவை விற்கும் நீரங்காடி நிறுவப் பெற்றது. இது மக்கள் பல நிலைகளில் வளர்ச்சி பெற்றிருந்த நிலையைக் காட்டும். மக்கள் தங்குவதற்கு எனப் படப்பு, பாடி, நீர்மாடம், திரைக்கொட்டில் எனப் பல இடங்கள் இருந்தன. நீர் விழாவிற்குச் செப்பு, கவரி, குஞ்சம் (ஈயோட்டி) அடைப்பை, வட்டி, உறி, காப்பிய நூல், கட்டில், பள்ளி, கட்டிகைப் பலகை, முட்டிணை வட்டு, கச்சு, கண்ணுடி, நக்கிரப்பலகை, சாந்தம்மி, கழங்கு, கவறு, பந்து, பாவை, கிளிக் கூடு, யாழ், குழல்பறை, முழவு, தண்ணுமை, போகக் கலப்பை ஆகியவை கொண்டு சென்றனர். கண்கள் நீராட நல்ல முகூர்த்தம் குறித்தனர். நீராடு முன் அவர்க்கும் அந்தணர்க்கும் தக்கணை கொடுத்தனர். பூப்பலி கொடுத்தனர். இவை அக்கால நீர் விளையாடக் கொண்டு சென்ற பொருள் களையும் பின் பற்றிய பழக்க வழக்கங்களையும் காட்டும்.

ஏவலர்கள், துறைகாக்கும் காவலர்கள் நீர்விழாவின்போது தம் பணிகளைச் செவ்வனே புரிந்தனர். நறுநீர் விழாவில் நாளணி கூறினர். பரிபாடலில் கள்ளுகுந்த

செய்தி மட்டும் கிடைக்க, இங்கு நீராட்டில் களிமகள் செயல்கள் விரிவாக விளக்கப்படுகின்றன. 'நீராட்டரவம்' என்ற பகுதியில் ஏழு பருவ மகளிர் நீராடும் வகைமை வெளிப்படும். இவையெல்லாம் நீராட்டு உயர்நிலை மக்களிடை பெற்ற வளர்நிலையைக் காட்டும்.

பெருங்கதையில் தலைமகன் உதயணன் தலைவி வாசவதத்தையைக் கைக் கொண்டுசெல்லும் நிகழ்ச்சிக்கு ஏற்ற திருப்பு மையக் களமாக நீராட்டு விழா அமைந்துள்ளது. இவ்வளவு விரிவாக நீராட்டு எந்தத் தமிழ்க்காப்பியத்திலும் அமையவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. அக்கால மக்கள் நீராடிய நிகழ்ச்சியின் விளக்கப் படமாக இது விரிந்துள்ளது.

கம்பராமாயணத்தில் முதற் காண்டத்தில் ஆற்றுப் படலம் பாடி வெண் திரை பாயும் புனல் பண்ணை (நீர் விளையாட்டு) சென்று மக்கள் அடைந்ததைச் சுட்டி நீர் விளையாட்டுப் படலத்தைக் கம்பர் பண்டைய பரிபாடல் நெறியிலேயே விளக்க மாக அமைத்துள்ளார். பொய்கை, காதலியாரின் கொழுநர் போன்றிருந்த பழங் கருத்தை மறுபடியும் புதுப்பிப்பார். இது மரபு வழிப்பட்ட அமைப்பாகும்.

கதை நிகழ்ச்சியில் தசரதன் இறந்த போது இராமனை நோக்கி வசிட்டர் நீர்க்கடன் செய்யச்சொல்ல அவன் நீரில் மூழ்கி மறையவர் வழிகாட்ட நீர் விதி முறையில் ஈர்த்ததைக் காட்டுவார் கம்பர். அதுபோன்றே சடாயு உயிர் விட்ட போது இராமன் சந்தனம், மலர், நீர் ஆகியவை சொரிந்து நீர்க் கடன் செய்கிறான். இச்செயல்கள் பெரியவர்கள், உறவினர்கள் இறப்பின் அவர்களுக்குரிய நீர்க்கடன் செய்யும் முறையைக் காட்டும்.

முடிசூடும்போது ஏழ்கடல் நீரும் சரயு ஆற்றின் நீரும் கொண்டு இராமன் நீராடினான். அப்போது மாதவர், மறைவலாளர், மந்திரக்கிழவர், மூதறிவாளர், சான்றோர் முதலில் நீராட்டச் சுக்ரீவன், அநுமன் பின்னர் நீராடிய செய்தி வெளிப்படும். இத்தகைய தெய்வநீராட்டிற்கு ஒத்த செய்வினையை வசிட்டன் செய்தான் என அறிகிறோம்.

இங்கு நீராட்டு, காப்பிய உறுப்பாக அமைகிறது. இத்துடன் இறந்தார்க்கு நீர்க்கடன் புரிவதிலும், மன்னர்க்கு முடிசூட்டுவிழாவிலும் குலகுருவும் மற்ற பெரி யோர்களும் பங்கு கொண்டமையும், அதில் ஒருமுறைமை அமைந்திருப்பதையும் காட்டும்.

பெரியபுராணத்தில் கண்ணப்ப நாயனார் புராணத்தில் குடுமித் தேவர்க்கு அன்பின் வடிவமான திண்ணன் தன் வாயில் மஞ்சன நீர் கொணர்ந்து நீராட்டிய நிகழ்ச்சியையும், வேத முறைப்படி அந்தணர் நீராட்டும் நிகழ்ச்சியையும் காட்டி உண்மை அன்பே நீராட்டிற்கு உகந்தது. அதனை உயர்த்தியே பக்தி நெறியைக் காட்டும். நீராட்டில் வெறும் சடங்கு பெருகியதை நீக்கிய நிலையை இது உணர்த்தும்.

மணிமேகலையில் தண்ணீர்ப்பந்தல் வைத்து உலகுக்கு உதவியது போன்று இங்கும் அப்பூதி அடிகள் தண்ணீர்ப்பந்தல் வைத்துள்ளார். ஆயின் அதற்குத்

திருநாவுக்கரசரின் பெயரிட்டமையால் சிவனடியார் பெயரில் நீர் அறம் நிகழ வேண்டும் என்று எண்ணிய எண்ணம் வெளிப்படுகிறது.

தூய நீரில் ஆடிப் புண்ணியம் பெறக் கங்கை போன்ற 'தீர்த்த'ங்களை மக்கள் நாடிச் சென்றனர். அத்தகைய நீராடலைக் காட்டிலும் 'ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும் தொண்டரடிப்பொடி ஆட நாம் பெறில் கங்கை நீர் குடைந்தாடும் வேட்கை என்னுவதே' எனக் குலசேகராழ்வார் வினவும்போது கங்கை நீர் ஆடிப் புண்ணியம் பெறுதலை விடத் திருமால் தொண்டரின் அடிப் பொடியில் ஆடுவதே சிறந்தது என்ற நம்பிக்கை பக்தி வெள்ளத்தில் மலர்ந்திருப் பதை அறிய முடிகிறது. நீராட்டு என்ற சடங்கினை விட அடியார் பெருமை என்ற மெய்ம்மை உயர்வு பெறும் போக்கினை இது காட்டும்.

இக்கருத்தை மற்றொரு வகையில் வெளிப்படுத்தும் 'கங்கையாடி லென் காவிரி ஆடிலென்' என வினவும் தேவாரப் பாடலடிகள். எனினும் புனித நீரில் நீராடின் அதற்குரிய புண்ணியம் பெறுதல் உறுதி என்பதைத் திருவெண்காடு பற்றிய தேவாரம் காட்டும். 'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடுள்ள நினைவாயினவே வரம் பெறலாம் யானும் ஐயுற வேண்டாம்' எனக் குறிக்கும். இதனைப் பின்பற்றி வெண்காட்டு முக்குள நீரில் குளித்ததின் பயனாகச் சிவஞான போதம் பாடிய மெய்கண்டார் பிறந்தார் எனக் கதை வழங்கி வருகிறது,

அன்பு நெறியில் நின்று இறைவன் அருளைப் பெற நீராடல் ஒரு நோன்பாக வளர்ந்தது. வைணவ மகளிர் மார்கழி மாதத்தில் நீராடிப் பாவை நோன்பு நோற்றுத் திருமாலைத் துதித்தனர். வைகறையில் எல்லாப் பெண்டிரும் எழுந்து பாவைக் களம் சென்றனர். பரமனடி பாடி, நெய் பாலுண்ணாது, மை தீட்டாது, மலர் புனையாது, தீய செயல் புரியாது, நோன்பு நோற்றனர். நோன்பு முடியும் போது முன்னர் அம்மகளிர் நோன்பின் பொருட்டு விலக்கியிருந்த அணியும் ஆடை யும் அணிந்து, நெய்யுணவு உண்டனர். இப்பாவை நோன்பின் பொருள் இறை வனுக்கு ஏழேழ் பிறவியிலும் ஆட்செய்யும் அருள் வேண்டுதலே ஆகும்.

இவ்வாறு மகளிர் நோன்பு நோற்றால், திங்கள் மும்மாரி பெய்யும், நெல் விளையும், ஆதிரைச் செல்வம் வளரும் என நம்பினர். இதனை ஆண்டாளின் திருப்பாவை கூறும்.

நால்வரில் ஒருவராம் மாணிக்கவாசகர் திருவாதிரைக்கு முன்னர் மகளிர் நீராடப்போகும் செயலைத் திருவெம்பாவையாகப் பாடும்போது துயில் எழுப்பும் பெண்டிர்களை ஒன்பது சத்தியாகக் கொள்வதுண்டு. இந்நோன்பில் மகளிர் சிவபெருமானைத் தலைவனாகக் கொண்டு அவனடியாரைக் கணவராகப் பெறுவதே குறையற்ற வாழ்வெனக் கருதுகின்றனர். அவர்கள் குளிக்கும் மடுவை இறைவன் இறைவி எனக்கொள்கின்றனர். தம் இல்லற வாழ்வு இறைவனடியாரோடு சேரவும் தம்பணி இறைவன் பணியாக மாறவும் நீராடும் நோன்பில் வேண்டு கின்றனர். இதில் சமயத்தலைமையே இல்லத்தலைமையாக மாறிய நிலையும், நீராடும் இடமும் இறைவராகக் காணும் போக்கும் வெளிப்படுகிறது.

திருவள்ளுவர் உலகியல் நடத்தற்கு நீரே இன்றி அமையாதது எனக்கூறியது போல் ஆண்டாளும் மாணிக்கவாசகரும் நீரைத் தத்தம் கடவுள் அருளின் செயலாகக் கொள்கின்றனர்.

இறைவனை அன்பு நெறியில் குழந்தையாகக் காண்பர் அடியார்கள். அதனுல் குழந்தைகளைத் தாயார் நீராட்டி வளர்க்கும் வழக்கத்திற்கேற்பக் கற்பனை உலகில் பக்திக் கண்கொண்டு பெரியாழ்வார் தம் திருமொழியில் யசோதை கண்ணனை மஞ்சனம் ஆடுமாறு அழைத்த காட்சியைப் பாடுகிருர். இதனுல் நீராட்டுப் பற்றி அறிவன: குழந்தை பிறந்த நாளில் அதனை நீராட்டுவர். காய்ச்சின நீரோடு நெல்லியும் கடாரத்தில் நிறைத்தனர். எண்ணெயும், புளியம்பழமும், மஞ்சளும், சாந்தும், அஞ்சனமும் நீராட்டிற்கென எடுத்து வைத்தனர். நீராட வராமல் துன்பம் செய்யும் பிள்ளைகளுக்குப் 'பழம், அப்பம் தருவேன்' எனப் பல ஆசை மொழிகள் கூறிக் குளிக்க வேண்டினர்.

இவ்வாறு ஒரு தாய் தன் குழந்தை நீராட வேண்டிப் பாடிய நிலை பின்னர்ப் பிள்ளைத் தமிழில் தனிப் பருவமாக மலர்ந்தது.

நீராடும் பெண்டிரின் துகிலைக் கவர்ந்து சென்று குருந்திடை இருந்த கண்ணனிடம் அப்பெண்டிர் இனிப் பொய்கைக்கு நீராட வாரோம் எனவும் நீர்நிலையில் அவர்கள் படும் வேதனையைக் கூறி ஆடை தருமாறு வேண்டும் நிலை பெண்டிர் நீராடச் செல்லும் போது கண்ணன் போன்ற பிள்ளைகள் செய்யும் விளையாட்டால் படும் துன்பத்தை அறியமுடியும்.

தெய்வங்களைக் குழந்தையாகக் கருதிப் பிள்ளைத்தமிழ் பாடும்போது பெண்பாற் பிள்ளைத் தமிழில் நீராடல் தனியிடம் பெறுகிறது. தெய்வத் தலைவி புது வெள்ள நீராடுதல் நீராடற்பருவமாகக் காணலாம். நீராடுதற்குரிய ஆற்றிலுள்ள சில பொருள்களுக்கும் தெய்வமகளின் அணிகலன்கள், உறுப்புக்கள் ஆகியவற்றிற்குமுள்ள ஒற்றுமை கூறிப் புது வெள்ளத்தில் ஆடுமாறு கவிஞர் வேண்டுகிருர்.

பழந்தமிழ் இலக்கியத்தில் தலைவியரைக் கண்டது போன்றே தெய்வத்தை நீந்தி விளையாடவும் தத்தம் தெய்வத் தோழியர் மீது சுண்ணம் எறிந்து விளையாடுவதையும் குறிப்பர். தெய்வ மகளுக்குப் பண்டைய பரிபாடல் மகளிர் போலவே வையையில் நீராடுவதும், தலைவனுடன் கலத்தலும் ஒன்ருகவே படும். அத்தலைமகள் ஆற்றங்கரையில் தன் தலைவனை நினைத்து வருத்தவும், அவனைக் கடும் வாய்ப்பு நிகழவும், நீராடும் போது உடலில் புனைந்த செயற்கைக் கோலம் நீங்கியது. அதனுல் தலைவியின் இயற்கைக் கோலத்தைக் கண்ட தலைவனுக்கு இன்பம் பெருகுவது பண்டைய அகச் செய்திகளைத் தெய்வத் தலைமகள் மீது புனையும் ஓவியமாகத் திகழும்.

இந்நிலையிலிருந்து மாறும் நிலையாகத் தத்துவப் பொருள்படப் பிள்ளைத் தமிழ் நீராட்டுக் கருத்து வளர்ந்துள்ளது. இதன்படி தெய்வம் எல்லாவற்றையும் தன் மயமாக்கும் என்பதை உணர்த்த மீனுட்சி அம்மையும் நீராடும் போது வையை

யில் காணும் பொருள்களைத் தன் வண்ணமாக்கும் நிலையைக் குமரகுருபரர் உணர்த்துவர்.

தெய்வ மகளிர் ஆடும் திருநதியை அடியவர்க்கு உவமையாக்கி அடியவருடன் ஒன்றுதல் போல் அவ்வாற்று வெள்ளத்திலும் ஆடுமாறு பக்திப் பின்னணி கலக்க அமைப்பர். மேலும் நீராடற் செயலினைத் தத்துவப்பொருள் கலக்க அமைத்து அதனை விரித்துரைப்பதும் உண்டு.

இந்நிலையில் நீராடல் தமிழ் இலக்கியத்தில் தோன்றிய புத்திலக்கியமாம் பிள்ளைத்தமிழில் தனிப் பருவமாக அமைகிறது. நீராடலில் அடியவர் அன்பையும் தத்துவப் பொருண்மையையும் கலக்கிறது. இதுவே புதிய நிலை.

இறைவன் நிலையை ஒட்டியே அரசனையும் பாடி உவந்தனர் சில புலவர்கள். அரசன் செயல்களில் ஒன்றான நீராடல் பற்றி அவர்கள் பாடிப் புகழ்ந்தனர். அரசர்கள் நீராடும் நிலை பற்றிச் சோழ அரசர்களின் அவைக் களப் புலவராய் நீண்ட நாட்கள் வீற்றிருந்த ஒட்டக்கூத்தரின் உலாப் படைப்பிலிருந்து தெளிவாக அறிய முடிகிறது.

விக்கிரம சோழன் காலையில் பள்ளியிலிருந்து எழுந்தவுடன் 'பொய்யாத பொன்னிப்புது மஞ்சனம் ஆடினான்'. அதுபோன்று குலோத்துங்க சோழன் நீராடும்போது மலை மீது முகில் மழை பெய்ததென மஞ்சனமாடினான். இராசராச சோழனைப் பற்றிக் குறிக்கும்போது அவன் கணிகளால் குறிப்பிட்ட முழுத்தத்தில் பலவகை முரசுகள் முழங்கக் காவிரித் தீர்த்தத்தால் முழுக்காடினான் என அறிகிறோம்.

இதனால் அக்கால அரசர் தத்தம் நாட்டிலுள்ள புகழ்மிக்க ஆறுகளிலிருந்து நீரெடுத்து வந்து வைகறையில் துயிலுணர்ந்ததும் மஞ்சனமாடினர். நல்ல நேரத்தில் முரசுகள் முழங்கக் கடவுளுக்குத் தீர்த்தத்தால் அபிடேகம் செய்வது போல் அரசர்களும் நீராடினர் எனக் காணும்போது கடவுளாகவே மக்கள் அரசரைக் கருதி, நீராட்டப் பெற்றனர் என்பதைச் சோழர் காலத்தில் தோன்றிய மூவருலாவால் அறிய முடிகிறது.

அடியவர்கள் தமிழகத்தில் ஒவ்வொரு தலத்திற்கும் சென்று அத்தலத்திலுள்ள புனித நீரில் குளித்து, இறைவனை வணங்கினர். அதனால் 'மூர்த்தி', 'தலம்', 'தீர்த்தம்', ஆகியவற்றின் சிறப்பு மக்களிடையே பரவின. பல பெரு மக்கள் பல ஊர்களின் தெய்வச் சிறப்பைப் போற்றித் தலபுராணம் பாடினர். இத்தல புராணங்கள் அத்தலத்திலுள்ள புனித தீர்த்தத்தில் தெய்வங்கள் வந்து குளித்துத் தம் தீவினையைப் போக்கிக் கொண்டதாகவும் மக்கள் அவற்றில் நீராடினால் அவர்களின் தீவினை நீங்கி உலகியல் நலன்களுடன் இறையருள் பெற்று உயரின்பம் பெறுவர் எனவும் நம்பினர். இதுவரை அச்சில் வெளி வராத தந்தி வனப் புராணம் எனும் கமலஞானப் பிரகாசர் இயற்றிய திருவானைக்காப் புராண நீரின் பெருமையையும் நீராடற் சிறப்பையும் நீர்பற்றி மக்கள் கொண்ட புது நம்பிக்கையையும் நன்கு காட்டும்.

ஆனைக்காவில் அடியார்களின் முதற்செயலாக நீராடுதல் குறிக்கப்பெறும். நீராடிய அடியவர் தம்முடி மீதில் மஞ்சனங்கள் ஏந்திச் சிவ பூசைக்குச் செல்வர் எனக் காணும்போது மக்கள் தாம் செய்த செயலேயே இறைவனுக்கும் செய்து மகிழ்ந்தனர் எனலாம்.

இத்தலத்தின் பொன்னி ஆற்றிலே புது நீர் வரவும் சோழ அரசி முதலியோர் சென்று ஆடினர் என்பது பழைய இலக்கிய நெறியினைப் பின்பற்றிய நெறியாகும். ஆனல் காவிரி பற்றிப் பல புது நம்பிக்கைகளே இப்புராணம் கூறும். அதன்படி காவிரி தன்னிடம் நீராடுவோர் மாசினைப் போக்கும். தன்னைத் தெரிசித்தவர் களின் மோகவல் வினைகளை நீக்கும். தன்னை வந்தடைந்தவர்க்கும் இன்பம் நல்கும். இதுவே காவிரி தீர்த்தப் பெருமை.

இத்தீர்த்தத்தை மற்ற ஆறுகளுடன் ஒப்பிட்டு அவற்றினுலும் மேலானது பொன்னி எனக் காட்டும்போது கீழ் வருமாறு காணலாம். உயிர்கள் தம் வல்வினை யைத் தீர்க்க யமுனையில் ஏழுநாளும், கங்கையில் மூன்று நாளும் நீராடினல் போதும், ஆனல் அம்மக்கள் காவிரியைச் சென்றடைந்த அக்கணமே அவர்களின் தீவினை எல்லாம் தொலையும். அதனல் கங்கை.போன்ற புண்ணிய நதிகளே இதில் வந்து நீராடித் தம் வினை நீங்கிச் செல்வர் என இப்புராணம் கூறும்.

நீராடும்போது இறைவனுக்குரிய பொருளை இதில் இட்டால் அது அவ் விறைவனேயே அடைதற்குப் பொன்னி உதவும் என்பதை இப்புராணத்தின் ஆரம் பூண்ட சருக்கம் கூறும். நீராடும் நிகழ்ச்சி இறைவனின் அருளையும், ஆற்றலையும் வெளிப்படுத்தும் கருவியாக மாறும்போது நீர், இறைவன் ஆணைக்கு அடங்கும் பூதம் என்பதும், நீர் தன் செயலால் இறைவன் பணிக்கு ஏற்ப இயைந்து செல்லும் என்பதும் வெளிப்படும்.

உமை அம்மையின் செயலாம் இத்தலத்தில் நீரே அமுதலிங்க வடிவாயிற்று. இச்செயல் உலகின் முதற்பொருள் நீர் என்ற கருத்தை ஒட்டி அமைகிறது.

நீராட்டு என்பது பண்டைய நிலையில் புதுப் புனலாட்டு என்று மக்களுக்கு மகிழ்ச்சி ஊட்டும் நிலையிலிருந்து இப்புராணங்களால் மாறி புண்ணிய நீராட்டு என்று சமயச் சிறப்பு நிலை பெறுகிறது. இந்நீராட்டு மக்களின் பாவங்களைப் போக்குவதுடன், இறைவனுக்குரிய பொருளை இறைவனிடமே சேர்க்கும் எனவும் நம்பிக்கை ஊட்டியது.

மேலும், இத்தலத்தில் நவ தீர்த்தங்கள் இருப்பதையும் அவற்றில் ஆடும் முறையையும் இப்புராணம் தெளிவாகக் கூறும். ஒவ்வொரு தீர்த்தத்திற்கும் உரிய பெயர், மரம், முனிவன், தெய்வம், கணநாதன், ஆகியவற்றைக் கூறி அத்தீர்த்தத்தில் ஆடியபின் அளிக்கும் தானத்தையும் உரைக்கும்.

நவ தீர்த்தம்

| எண். | பெயர் | மரம் | முனிவன் | தெய்வம் | கணநாதன் | தவம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | பிரம தீர்த்தம் | மா | பிரமன் | சங்கர நாதன் | புட்பவந்தன் | எள் |
| 2. | சூரிய தீர்த்தம் | வில்வம் | பிருகு | சூரியன் | அம்பரீடன் | மணிகள் |
| 3. | இராம தீர்த்தம் | இலுப்பை | இராமன் | கரிமாலயன் | வீரபத்திரன் | கண்ணடி |
| 4. | சந்திர தீர்த்தம் | புன்னை | சந்திரன் | புடவி காக்கன் | குமுதம் | பொன் |
| 5. | செம்பு தீர்த்தம் | நாவல் | வசிட்டன் | மகேசன் | அவந்தன் | கோதுமை |
| 6. | அகத்திய தீர்த்தம் | பலா | அகத்தியன் | அகிலாண்ட அம்மை | கனகி | ஆடை |
| 7. | இந்திர தீர்த்தம் | தென்னை | மந்திர முனி | இந்திரன் | கும்போதரன் | நெய் |
| 8. | அக்கினி தீர்த்தம் | புளி | அத்திரி | அக்கினி | கபத்தி | செந்நெல் |
| 9. | சீர்மெய்த் தீர்த்தம் | வெண்ணா வல் | கார்க்கிய முனி | அமுதலிங்கம் | சுகந்தன் | இலிங்கம் |

தேசியப் போராட்டம் நிகழ்த்த இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் நீராடல் பற்றிய பழைய பார்வை மாறியது, தனித்த ஊர் அதிலமைந்த தீர்த்தம் என்ற 'கடுகுள்ளம்' உடைந்தது. 'எங்கள் நாடு' எனப் பாரதத்தின் பெருமையைப் பாடும்போது 'இன்னமு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே, இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே?' எனப் போற்றப் பெறுகிறது. அன்றைய நிலையில் சிந்து நதியில் நிலவினிலே சேர நாட்டு இளம் பெண்களுடன் சுந்தரத் தெலுங்கில் பாட்டிசைத்துத் தோணிகளோட்டி விளையாடி வரும் புதிய நீராட்டைக் காட்டும் போது இந்திய ஒருமைப்பாட்டின் உணர்வில் ஒற்றுமை நீரோட்டம் வெளிப்படுகிறது. மேலும் நாட்டு வணக்கம் பாடும்போது தாய்மார்கள் தங்கள்

''பொன்னுட லின்புற நீர்விளையாடியிப்
போந்தது மிந்நாடே — இதை
வந்தேமாதரம் வந்தேமாதரம்
என்று வணங்கேனே''

என மகளிர் நீர் விளையாட்டிற்குப் புதிய மதிப்புந் தந்து அவ்வாறு நீராட இடம் தந்ததால் அந்நாட்டைப் புதுமைக் கவி பாரதியார் தாய்நாடாக வணங்குகிறார்.

தேசிய உணர்வுடன் பல்வகைச் சமூக எண்ணங்களும் பரவும் இக்காலத்தில் இலக்கியத்தில் பண்டுபோல் நீராட்டு, தனியிடம் பெற இயலாது. எனினும் அதன் பங்கு மறையவில்லை. இன்றைய வரலாற்று நாவல்களில் கதையில் பல திருப்பத்திற்கு நீராட்டு துணை செய்யும் வகையில் நாவலாசிரியர்கள் அமைத்துள்ளனர். 'பார்த்திபன் கன' வின் கடலாட்டிலே விக்கிரமனின் தாய் கடத்திச் செல்வது கதை நிகழ்ச்சியில் திகைப்பும் அச்சமும் ஊட்டும் நிகழ்ச்சியாகும். அகிலனின் 'வேங்கையின் மைந்தன்' பல்வேறு நீர் விளையாட்டுக்களைக் காட்டித் தலைமை மாந்தரின் பெருமையை விளக்கும்.

சமூக நாவல்களில் கல்கியின் 'அலேஓசை' அவருடைய இளமைப் பருவத்தில் குளத்தில் மூழ்கிய நிகழ்ச்சியின் அடிப்படையில் பின்னப்பட்டு பலவேறு நிலேயில் மகிழ்ச்சி, துன்பம், ஏமாற்றம், இழப்பு ஆகியவற்றைச் சுட்டும் வகையில் நீராட்டு வளர்ந்து செல்கிறது.

ஒரு தாய் செய்த தீவினையைக் கழுவ.மகன் உதவுவானென்று எண்ணி, ஏமாந்து இறுதியில் இந்திய மரபுக் கேற்பக் கங்கைக் கரைக்குப் போகும் நிலேயை தி. ஜானகிராமனின் 'அம்மா வந்தாள்' காட்டும். தனி வாழ்வில் பல்வேறு துன்பப்பட்டு இறுதியில் கங்கையுடன் கலக்கும் வாழ்வை ஜெயகாந்தனின் ''கங்கை எங்கே போகிரு''வில் காணலாம். உழவர் பெருமக்களின் போராட்ட வாழ்வை நெஞ்சில் பதியும் வகையில் 'குருதிப்புனல்' என்று உருவகப் பெயரில் இந்திரா பார்த்தசாரதி, நாவலே உருவாக்கியுள்ளார். இந்நாவலின் முடிவிலே காணும் தொடர்களில் சில பின் வருமாறு. ''இப்பொழுது கால்வாய்க்குப் பதிலாக இரத்த ஆறு ஓடிக் கொண்டிருக்கிறது. கிராமமே இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறது பருவ மழை ஏமாற்றவில்லே. இரத்த மழை பெய்தது.........நான் அநீதி இழக்கப்பட்டவர்களின் இரத்த வெள்ளத்தில் குளிக்கப் போகிறேன்'' இதில் நீராட்டு, புது வடிவம் பெற்றுப் புதிய புரட்சி வெள்ளம் மக்களே நீராட்டப் போவதைக் காணலாம். இக்கண் கொண்டு சிறுகதை, புதுக் கவிதை, நாடகம் ஆகியவற்றையும் காண இடமுண்டு.

அகத்திணே வாழ்வில் புனல்தரு புணர்ச்சிக்கு வழி அமைத்த நீராட்டு வளர்ந்து மருத நாகரிக வளர்ச்சியில் உயரிடம் பெற்றது. நீரே முதற்பொருள் என்ற உண்மையைச் சுட்டுவது போன்று வான் சிறப்பாக மலர்ந்து காப்பிய உலகில் கதைத் திருப்பத்திற்கும், வாழ்வில் இன்பத் துன்பத்தின் சடங்கிற்கும், இயற்கை பிறந்த நிலேக்கும் பயன்பட்டது. அன்பு நெறியில் ஆழ்ந்த அடியவர்கள் தாம் வணங்கிய தெய்வங்களே நீராட்டினர். சில அடியவர் நீராடும் நோன்பில் தலேப்பட்டனர்.

தம்தம் ஊரின் சிறப்பைப் போற்றும் நிலே ஏற்பட்ட தல புராணக் காலத்தில் தீர்த்தத்தின் உயர்நிலே பாவக் கழிவுக்கும் இறைபணி புரிவதற்கும் இறைவனே நீரின் வடிவுறுவதற்கும் நீராடல் கருவி ஆயிற்று.

தேசீய எழுச்சிக் காலத்தில் தனி மதிப்புப் பெற்று நீராடலே ஒருமைப் பாட்டுணர்வுக்கு வழிகோலி நாட்டுப் பற்றை ஊட்டத் துணை செய்தது. மறு படியும் காப்பியம் போன்று இன்றைய புனேவுலகில் கதைத் திருப்பத்திற்கு நீராடல் பயன்பட உதவியது. மரபு வழக்கைச் சுட்டுவதுடன் புதிய உருவகப் பொருளால் எதிர்காலச் சமுதாய அமைப்பின் வடிவை எடுத்துக் காட்ட முன்நிற்கிறது நீராட்டு.

# சங்ககாலச் சமூகவியல் கோட்பாடு

டாக்டர் மா. செல்வராசன்
தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை 600 005

தமிழக வரலாற்றைப் பல காலங்களாகப் பகுத்து வழங்குவர் வரலாற்ருசிரியர். அவற்றுள் சங்ககாலமும் ஒன்று. கி.பி. மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதி வரையிலான காலத்தைச் சங்க காலம் என்று சாற்றலாம். தமிழக வரலாற்றில் எல்லாக் காலங்களும் ஒரே மாதிரி உயர்நிலையில் இல்லை. எல்லாப் பருவங்களையும் இளவேனில் என்பது உண்டா? பிற்காலச் சோழர் காலத்தை வரலாற்றின் பொற்காலம் எனப் பேசுவது உண்டு. அதேபோல் களப்பிரர் காலம் இருண்ட காலம் என்றே இன்றுவரை கருதப்படுகிறது. இலக்கிய வரலாற்றில் ஈடற்ற பொற்காலமாய்ச் சங்ககாலம் இலங்குவது போலவே, நாட்டு வரலாற்றிலும் அதற்கு நல்லதோர் இடம் உண்டு. தமிழர்களைப் பொறுத்தவரை சங்ககாலமே தகைசான்ற காலம்.

அந்த வாழ்வுதான் எந்த நாள்வரும்
இந்த மாநிலம் முழுதாண் டிருந்தார்
இணையின்றி வாழ்ந்தார் தமிழ்நாட்டு வேந்தர்
அந்த வாழ்வுதான் எந்த நாள் வரும் (இசையமுது)

என்று புரட்சியை விரும்பிய பாரதிதாசனும் சங்க காலத்தை எண்ணித் தவித்திருக்கிருர். கலப்பற்ற சமுதாயமாக அது காட்சியளிப்பதே இந்த ஏக்கத்திற்குக் காரணம். அதன் தனித்தன்மையே தமிழர் நெஞ்சில் இவ்வாறு தவிப்பை ஏற்படுத்துகிறது. தொன்மைச் சிறப்புடைய தமிழக வரலாற்றில் பின்னர்த் தோன்றிய கலப்புகள் பல. ஆனல் சங்ககாலத்தில் தமிழர்க்குரிய தனித்தன்மை, இலக்கியம், கலை, பண்பாடு, நாகரிகம், அரசு என எல்லாத் துறைகளிலும் சால்புற விளங்கியது.

புகழ்மிக்க அந்தச் சமுதாயத்தைப் புரிந்து கொள்ள உதவுவது சங்க இலக்கியம். இன்றுவரை கிடைத்துள்ள சான்றுகளுள் இதுவே உண்மையும் பெருமையும் உடையது. பிற காலத்துத் தமிழ் இலக்கியத்தை விட இதுவே நிறைவளிக்கும் வரலாற்று மூலங்களை நிரம்பப் பெற்றுள்ளது என்பர்.

சங்க இலக்கியம் எனச் சாற்றப்படுவன எட்டுத்தொகையும் பத்துப் பாட்டும். இந்தப் பதினெட்டு நூல்களும் தமிழரின் பழம்பெருமையைப் பாடுகின்றன. மொழிக்குச் சொல்லப்பட்ட மூல இலக்கணம் மட்டுமன்று தொல்காப்பியம்; மொழியுடைய இனத்தார்க்கும் வாழ்க்கை இலக்கணத்தை வரைந்தளித்தது அது. அகம் புறம் என அமைந்தது சங்க இலக்கியம். அகம் புறம் என்பன ஒரு மனிதனின் சமூகம் தவிர வேறல்ல. அகம் என்பது

ஏதோ காதலை மட்டும் பாடும் கவிதை எனக் கருதுவது கூடாது. தமிழர்க்கு அது ஒரு வாழ்க்கை முறையாக அமைந்தது. ''ஈராயிரம் ஆண்டுக்கு முற்பட்ட தமிழினச் சமுதாய வாழ்வைச் சங்கப் பாடல்களே காட்டுகின்றன, காட்ட வல்லன. இப்பாடல்களுள் நான்கில் மும்மடங்கு அகத்திணை சார்ந்தவை எனின் சமுதாயச் செய்திகள் அகவிலக்கியப் படைப்பில் பெற்றுள்ள பேரிடம் வெளிப்படை'' என்பது பொருத்தமான கூற்று. எனவே சங்க இலக்கியம் அக்காலத்துக்குரிய சமூக மரபுகளைக் கொண்டுள்ளது. இது தெளிந்த உண்மை.

சமூகம் என்றால் என்ன? ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பு என விளக்கம் தரப்படுகிறது. தமிழர்கள் ஒரு சமூகமாக எப்போது உருவாகிறார்கள் என்பது எளிதில் உரைக்க ஒண்ணாதது. தோற்றம் தொன்மை வாய்ந்தது என்பதே தொன்று தொட்ட கருத்து.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி (புறப்பொருள் வெண்பா மாலை)

என்பது பிற்காலப் பாட்டாயினும், பழமை குறித்த பெருமையைப் பார்த்தல் வேண்டும். தமது தோற்றத்தின் பழமையை எப்போதும் தமிழர்கள் வியந்தே வந்திருக்கிறார்கள். இயற்கை வடிவங்களான வானம், கடல், ஞாயிறு, திங்கள் விண்மீன்கள் தோன்றிய காலத்தில் தோன்றியவர் தமிழர் என்றே உடன்பிறப்பு உறவைக் கூறிப் பெருமையுறுவர். இந்தப் படைப்புக்காலப் பழமையைப் பரிமேலழகரும் குறித்துள்ளார். எனவே தமிழ்ச் சமூகம் பழமையானது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலும் வாழ்க்கை உடையவர் தமிழர். உலகம் தோன்றிய காலத்திற்கும் தமிழகத்திற்கும் உறவுண்டு என்பர் இக்கால நிலவியலார்.

**மக்கள்**

சங்க காலத்தில் வாழ்ந்திருந்த மக்களின் தொகைக்குச் சான்றில்லை. ஆனால் பாகுபாடு இருந்தது. அந்தப் பாகுபாடு, நில இயற்கையையும் செய்யும் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாக நிலம் பாகுபாடு செய்யப்பட்டிருந்தது. ஒவ்வொரு நிலத்து மக்களும் தங்களுக்குரிய தொழிலை மேற்கொண்டிருந்தனர். முல்லை நிலத்தில் வாழ்ந்தோர் ஆயர் எனப்பட்டனர். கோவலர் என்றும், இடையர் என்றும் அவர்களைக் குறிப்பது உண்டு. ஆடுகளையும் மாடுகளையும் மேய்த்து அவற்றின் பயனைக் கொண்டு வாழ்வது இவர்களின் தொழில். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்தோர் குறவர் எனப்பட்டனர். வேட்டையாடல் இவர்களின் தொழில். மருத நிலமே மற்ற நிலங்களிலும் வளமானது. அங்கு வாழ்ந்தோர் உழவர் எனப்பட்டனர். கடையர், களமர் எனவும் அவர்களைக் கழறுவர். உழவே இவர்களின் உற்ற தொழில். நெய்தல் நிலத்தில் வாழ்ந்தோர் பரதவர் எனப்பட்டனர். நுளையர், வலைஞர் எனவும் வழங்கப்பட்டனர். மீன் பிடித்தலே இவர்களின் தொழில். பாலை நிலத்து மக்கள் எயினர். மறவர் வேடர் என்றும் கூறுவர். வழிப்பறியும் வேட்டையும் இவர்களுக்கு வாய்த்த தொழில். இருந்த

இடத்திற்கு ஏற்றவாறு அவர்கள் தொழிலாற்றி வாழ்ந்து வந்தனர். தொழிலால் அவர்கள் பெயர் பெற்றனர். சங்க காலச் சமூகத்தின் தொழில்களே இவ்வளவு தான் என வரையறுத்தல் கூடாது. ஆடை, அணிகலன், கருவிகள், பாண்டங்கள் செய்வோரும் ஆடை வெளுப்போரும் (காழியர்) எனப் பல தொழில் செய்தோரும் வணிகரும் இருந்தனர். உயிர் வாழ்வதற்கே தொழில் பயன்படுகிறது. எனவே ஒவ்வொரு தொழிலும் தன்மையில் உயர்ந்தது. ஆனால் உற்பத்தித் திறனால் உழவுத்தொழில் சற்று உயர்ந்த இடத்தைப் பெற்றது. ஆயினும் தொழில் அடிப் படையில் மக்கள் இயங்கியவரை ஏற்றத்தாழ்வு அவர்களிடையே புகவில்லை என்று கூறலாம். வருணாசிரமம் வளர்த்த சாதிமுறைக்கும் இந்தப் பாகுபாட்டிற்கும் சற்றும் தொடர்பில்லை. அது பின்னால் ஆரியக் கால் கொண்டு நுழைந்தது.

**குடும்பம்**

ஒரு சமூக அமைப்பின் அடிப்படை குடும்பம். சங்க காலச் சமூகத்தில் குடும்பம் நன்கு தழைத்திருந்தது. அது கூட்டுக் குடும்பமாகவே வளர்ந்தது எனலாம். குடும்பத்திற்குத் தலைமை தாங்கியவன் தந்தை. ஆனால் நடாத்தி யவள் தாய். ஆண் தலைமை தாங்கிய சமுதாயம் என்பதால்தான் அரசர்கள் ஆண்களாகவே இருந்துள்ளனர். சமூகக் கடமைகளை வரையறுக்கும் ஒரு புறநானூற்றுப் பாட்டில் மகனை வீரனுக்கும் பொறுப்பு தந்தைக்கே தரப்பட்டுள் ளது. தந்தையின் பெயரைச் சொல்லிப் பிறகு மக்கள் பெயரை வழங்கலே அக்கால மரபு. அண்டர் மகன் குறுவழுதியார், பெருங்கோழிநாயகன் மகள் நக்கண்ணையார் எனக் காணலாம். தந்தை வழிப்பட்ட அச்சமுதாயத்தில் தாய்க்கும் நல்ல மதிப்பிருந்தது.

குடும்பத்தின் வெற்றி குழந்தைகளைப் பெறுவதில் இருக்கிறது. அக் காலக் குடும்பத்தின் குழந்தைக்கு அளவிறந்த மதிப்பு இருந்தது. பொருள் செல்வத்தைப் பெற்றும் மழலைச் செல்வம் இல்லையேல் வாழ்நாள் பயனற்றது எனக் கருதினர். போர் வாழ்க்கையின் ஒருகூறாக விளங்கிய அக்காலத்தில் ஆண் குழந்தைகளுக்கு மிகுதியான வரவேற்பு இருந்திருக்கும். சமூக அமைப்பில் ஆடவரே போருடற்றும் ஆற்றலாளராக விளங்கினர். இல்லறக் கடமைகளே பெண்களுக்கு வகுக்கப்பட்டிருந்தன. ஆடவர்க்கு வினையே உயிர் என்றும், மனைக்கு விளக்காகிய வாணுதல், மனையுறை மகளிர் என்றும் சமூக முறைகள் சாற்றப்பட்டன.

**அரசு**

மக்கள் கூட்டமாகக் கூடி வாழ்கிறபோது அரசு என்ற நிறுவனம் அமைவது மனித வரலாற்றில் தவிர்க்க இயலாத ஒன்றாகிறது. வடவேங்கடம் முதல் தென்குமரி வரை வழங்கிய பகுதி தமிழகம். அங்கே வழங்கிய மொழி தமிழ். ஆயினும் ஒரே அரசு சங்ககாலத்தில் அமையவில்லை. சேரர் சோழர் பாண்டியர் என்றும் மூன்று அரசு மரபுகள் தமிழகத்தை ஆண்டன. ஒவ் வொன்றும் ஒரு குடி என்றே குறிக்கப்படுகிறது. பல சிற்றரசுகளை அழித்த பிறகே ஒரு பேரரசு தோன்றுகிறது. சேர சோழ பாண்டியரும் எத்தனையோ சிற்றரசுகளை வென்று அடக்கியுள்ளனர். என்றாலும் இவர்கள் மூவரில் ஒருவரே

தலைமை தாங்கும் நிலைமை உருவாகவில்லை. எனவே தமிழகத்தைச் சங்க காலத்தில் மூவேந்தர்களும் ஆண்டனர். அவர்களைச் சார்ந்த குறுநில மன்னர் பலரும் ஆண்டுள்ளனர்.

சங்க கால மக்கள் முடியரசை மட்டுமே அறிவர். அரசுக்குத் தலைமை தாங்கியவன் அரசன். ஆற்றலாளனே அரசனாக இயலும். மக்கள் விரும்பிய வாறு மன்னனைத் தேர்ந்தெடுத்தல் இயலாது. தந்தைக்குப் பிறகு மகன் தலைமை யேற்றலே அக்காலமரபு, அரசன் இறந்த பிறகே மகன் அரியணை ஏறல் வேண்டும். வாழ்நாளே இங்குப் பட்டத்திற்கு வரையறை.

மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால்தர வந்த பழவிறல் தாயம் (புறம் 75)

என்று அரசு உரிமை பற்றிச் சோழன் நலங்கிள்ளி என்னும் அரசனே சொல்லி யுள்ளான். பெண்ணுக்கு அரசுரிமை இருந்ததாகத் தெரியவில்லை.

அரசு எவ்வாறு இயங்க வேண்டும் என்பது பற்றிச் சங்க காலத்தில் மக்கள் தெளிவோடு இருந்தனர் எனத் தெரிகிறது. பாண்டியன் நன்மாறனைப் பாடும் மருதன் இளநாகனார் என்னும் புலவர் பாட்டில் (புறம் 55) இத்தெளிவு பொலிகிறது. அரசு என்பது நால்வகைப் படையால் மட்டும் சிறப்பது அல்ல. அறநெறியை அடிப்படையாகக் கொண்டதே அரசு. விருப்பு வெறுப்பு அற்ற தாக அது விளங்குதல் வேண்டும். ஆண்மையும் தண்மையும் வண்மையும் அதனை ஏற்ற அரசனுக்கு வேண்டும் என்கிறார் அவர்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்படாதவனே மன்னன் என்றாலும் தன்னுடைய பெரும் பொறுப்பை அவன் சரியாக உணர்ந்திருந்தான். அரசு என்பது அற நிலை திரியா அன்பின் அவையம் என்கிறான் பூதப்பாண்டியன் என்னும் அரசன். பிறர்க்குப் பணியாத பெருவீரமும், மக்களைக் காக்கும் மாண்பும் வாரி வழங்கும் வள்ளன்மையும் சங்க காலத்தில் அரசனிடம் எதிர்பார்க்கப்பட்டன. 'மண்ட மர்ப் பரிக்கும் மதனுடை நோன்தாள் விழுமியோன்' அரசைப் பெற வேண் டும் என்றும், மன்பதை காக்கும் நீள்குடி என்றும், இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே என்றும் அரசர்கள் பாடியுள்ளமையால் சங்க காலத்தில் அவர்கள் மக்களைத் தழுவியே சென்றுள்ளனர் என அறியலாம். நல்லாட்சி வழங்குவதை உயரிய கடமையாக உணர்ந்திருந்தனர்.

மக்களிடையே மன்னனுக்கு இருந்த மதிப்பு மாணப்பெரிது. நெல் லையும் நீரையும் விட மன்னனையே உயிராக மதித்துள்ளனர். புலவரை அரசு கள் போற்றின. அரசர்களிடம் அவர்களுக்கு இருந்த செல்வாக்கு மிகுதி. அரசவையில் செம்மாந்து நுழையும் அருந்தகுதியை அவர்கள் பெற்றிருந்தனர். இரந்து பெறுதல் மட்டுமே அவர்கள் இயல்பு எனக் கணித்து விடுதல் கூடாது. அரசனை இடித்துரைப்பது ஓர் அறம் என்றே அக்காலப் புலவர்கள் கருதினர்.

தனி ஒருவனே தலைமை தாங்கும் அரசுதான் சங்ககால ஆட்சி முறை. ஆனால் அமைச்சர் முதலான ஆட்சிச் சுற்றமும் இருந்தது. ஐம் பெருங்குழு நாற்பெருங்குழு என அரசனுக்கு உதவிய குழுவினர் பற்றியும் அறிய முடிகிறது.

நீதித்துறைக்கும் அரசனே பொறுப்பு. அறக்கூறவையம், ஊரவை என்பன குறிக்கத்தக்கன.

**போர்**

போர் மனித இயல்புக்குப் பொருந்தாத ஒன்று என இக்காலத்தில் புகல்வர். என்ருலும் போர் மேகங்கள் எப்போதும் சூழ்ந்து திரிகின்றன. அரசின் நிலைபேற்றுக்கு ஒருகாலத்தில் அது அடிப்படை ஆயிற்று. போரை உலகத்து இயற்கையாகவே சங்க காலத்தில் கருதினர். வீரத்தை வெளிப் படுத்தும் வாயில் எனப் போரை விரும்பினர். மார்பில் புண்ணேற்று மடிந்த மகனைக் கண்டு ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்த தாயர் இருந்தனர். போர்க் களத்தில் களிற்றை வெல்லும் புகழுக்குரிய செயல் ஆண்மகன் கடமையாகக் கருதப்பட்டது. வாள்பட்டு இறப்பதே வாழ்க்கைப் பயன் என நம்பினர். இறந்தே பிறந்தாலும், பிறந்த பின் இறந்தாலும் வாளால் விழுப்புண் வரைந் தனர். மறப்பண்பை அந்த அளவு மதித்தனர்.

மிகப் பல நேரங்களில் போரின் மேன்மையைப் புலவர்கள் வியந்தே பாடியுள்ளனர். ஒரு குடிக்குள் நேரும் போரைத் தவிர்க்க முயன்றனர். போரிலே வென்ருலும் வீழ்ந்தாலும் அதைப் புகழுக்குரிய ஒன்ருகவே போற் றினர். அரசின் நிலைபேற்றிலே தனிமனிதன் வாழ்க்கை அமைவதாகக் கருதி யதால் போர் ஒரு சமூகக் கடமையாகி விட்டது. உலகம் முழுதும் அக் காலத்தில் இதுதான் நிலைமை என்ருலும், போர் உடற்றுவதில் தமிழர் பின் பற்றிய நெறிகள் போற்றத்தக்கன. வீரம் வெற்றியை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. வீழ்வதிலும் கூட அது வெளிப்பட்டது. ஆனுல் புறப்புண்ணை இழிவாகக் கருதினர். காலாள், குதிரை, களிறு, தேர் என நால்வகைப் படை களும் வில், வேல், வாள் முதலான கருவிகளும் போருக்குப் பயன்பட்டன. உரிமையை நிலைநாட்டத் துடித்த முயற்சியும், மானம் கருதிய மாண்பும், மணம் செய்து கொள்ள மகள் வேண்டிய வேட்கையும் போர்கள் நடந்ததற்கான காரணங்கள் எனலாம்.

**கல்வி**

கல்வியின் இன்றியமையாமை பற்றித் திருக்குறள் வலியுறுத்துகிறது. ஆனுல் சங்க காலத்தில் வீரத்தைப் போற்றிய அளவு கல்வியைப் பற்றிக் கருதி ஞர்களா என அறியச் சான்றுகள் இல்லை. என்ருலும் மக்கள் கல்வியை மதித் துப் போற்றிஞர்கள் என்பதற்குச் சங்க நூல்களின் ஆக்கமே தக்க சான்று. சங்க காலப் புலவர்கள் எல்லோரும் பாட்டே தொழில் என வாழ்ந்தவர்கள் அல்லர். பலவகைத் தொழில் புரிந்தோரும் சிற்றூரில் வாழ்ந்தோரும் பெண் டிரும் பாட்டெழுதியுள்ளனர். கல்வியறிவற்றவர்கள் யாத்த வாய்மொழிப் பாடல்களாகச் சங்க இலக்கியங்கள் கொள்வதற்கு இல்லை. ஒரு வகையில் அறிவாளர் என்பதனுலேயே புலவர்களுக்கு அரசவையில் உயர்ந்த மதிப்பு இருந்தது

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தனது குளுரையில் புலவர்களுக்குத் தந்த மதிப்பை உணரலாம். ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வியை உடையவர் மாங்குடி மருதன் என்னும் புலவர்

எனப் போற்றுகிறுன். கல்வியால் வரும் கேள்வியே இங்குச் சுட்டப்படுகிறது. உலகமொடு நிலேஇய பலர்புகழ் சிறப்பின் புலவர் எனப் பின்னும் அவன் பேசும் கூற்றில் கல்விச் சிறப்புப் பொலிவதாகவே கருதலாம்.

கவலேயற்ற வாழ்வு பெற்ற பிசிராந்தையார் அதற்கான காரணங்களே எடுத்துக்காட்டுகையில் அறிவு நிரம்பிய மக்களேயும், ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்ருேர் பலரையும் குறிக்கிருர். ஊரில் உள்ளோர் எல்லோரும் சான்ருேர் என அவர் உரைக்கவில்லே. பெரும்பாலோர் சான்ருேர் எனப் பேசுகிருர். சான்ருேர் என்பதற்கு வீரர் எனப் பொருள் கொள்வது இங்கே பொருந்தாது. எனவே அக்காலத்தில் கற்றவர் பலர் இருந்தனர் என்ற கருத்துக்குச் சான்றளிக்கிருர் பிசிராந்தையார்.

மன்னன் உயிர்த்தே அலர்தலே உலகம் என்பது சங்ககாலக் கோட்பாடு. மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி என்பதுதான் முடியாட்சியின் மாண்பு. கல்வியின் சிறப்பை ஒரு மன்னன் உணர்ந்திருந்தான். அது பற்றியே அவன் ஒரு பாட்டும் பாடியுள்ளான். எப்பாடு பட்டேனும் கற்றல் வேண்டும் என்பதும், கல்விச் சிறப்பால் பெற்ற தாயும் மனம் பேதுறுவாள் என்பதும் அறிவுடையோன் வழியில் அரசும் நடைபோடும் என்பதும், ஏற்றத் தாழ்வைக் கல்வியால் வெல்ல இயலும் என்பதும் அவன் கருத்துகள். எல்லாமாக விளங்கிய அரசன் கல்வியின் சிறப்பை இந்த அளவு கண்டுள்ளதால், அவனது ஆட்சியில் மக்கள் கற்பதற்கான வாய்ப்புகள் மிகுந்திருக்கும் எனக் கருதலாம். ஆனுல் அக்காலக் கல்வி முறைகள், கல்வி நிறுவனங்கள் பற்றி ஆழ்ந்தறியத்தக்க சான்றுகள் இல்லே.

சங்க காலத்தில் கலே மேன்மையுற்றது. கலப்பற்ற அக்கலே தமிழரின் தனித்தன்மையை மேம்படுத்துவது. இலக்கியம், இசை, சிற்பம், கட்டடம், ஓவியம், வானநூல் முதலான கலேகள் சிறந்திருந்தன. கலேயைச் சுவைக்கும் மனமுடையவராக மன்னர்கள் விளங்கினர். எப்போதும் பாணர், விறலியர் கூத்தர், பொருநர் முதலான கலேஞர்கள் அரசனே அடுத்தே இன்பம் கண்டனர். மக்களிடத்தும் அவர்களுக்கு மதிப்பிருந்தது. கலேஞர்களேப் புரத்தல் மன்னரின் கடமையாக கருதப்பட்டது. குரவை, வெறியாடல், குழலூதல். பறையடித்தல் முதலான மக்கள் கலேகளும் வளர்ந்தோங்கின.

**சமயம்**

சங்க காலத்தில் சமயம் ஒரு நிறுவனமாக உருப்பெற்றதற்குச் சான்றில்லே. மக்களுக்குச் சமயத்தில் இருந்த ஆர்வத்தைச் சரியாக மதிப்பிட இயலவில்லே. சமயத்தில் அவர்களுக்கு ஈடுபாடு இருந்ததா இல்லேயா என்பதைச் பற்றிச் சங்க இலக்கியம் பொருட்படுத்தவில்லே. இலக்கியத்தைப் பொறுத்தவரையில் சமய வேறுபாட்டைக் கடந்த வாழ்க்கையின் இன்பதுன்ப உணர்ச்சிகள் இடம் பெற்றிருந்தன. பிற்காலத்தைப்போல் வாழ்க்கையின் பெரும்பகுதியைச் சமயம் பெற்றிருக்குமானுல் இலக்கியம் புறக்கணித்திருக்குமா என்ற விஞ எழுகிறது. எனவே சங்க காலத்துக் கடவுள் கொள்கையை வரையறுப்பது எளிதன்று.

தொல்காப்பியனுர் நிலத்திற்கு ஒரு கடவுளாக மாயோன், சேயோன், வேந்தன் வருணன், என நால்வரைச் சொல்கிருர். சங்ககாலத் தமிழர் வாழ்வில் ஆரியரின் கலப்பு மெல்ல ஊர்ந்து விட்டது எனலாம். மக்களை விட்டு மன்னர்களையே அது தாக்கிற்று. வேள்வி செய்தல், மந்திரம் விளம்பல் என்னும் ஆரிய முறைகள் தமிழ் மன்னர்களை ஆட்கொண்டன.

இயற்கை வழிபாட்டில் அவர்கள் ஈடுபாடு கொண்டனர் எனலாம். மரத்திலும் மலையிலும் கடவுளர் உறைவதாகவும், விரும்பிய வடிவில் அவை வெளிப்படும் என்றும் நம்பினர். அவற்றுக்கு விலங்குகளைப் பலியிட்டனர். ஆனுல் உருவ வழிபாட்டை அவர்கள் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. வெறியாட்டு, நடுகல், சுருக்கொம்பு எனச் சில வழிபாட்டு முறைகளை அறிய முடிகிறது.

கொற்றவை, முருகன், சிவன், திருமால், இந்திரன், வருணன், திருமகள், நான்முகன், பலராமன் ஆகிய கடவுளரைப் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. வெற்றிக் கடவுளாகத் தமிழர்க்கு விளங்கியவள் கொற்றவை. போரில் அவர்க்கிருந்த வேட்கையைத் கொற்றவை வழிபாடு புலப்படுத்தும். வெற்றி வேண்டி அவளை வழுத்தினர்.

தமிழ்க் கடவுளாக அன்று முதல் இன்றுவரை போற்றப்படுபவன் முருகன். குறிஞ்சி நிலக் கடவுளாகத் தொல்காப்பியனுரால் குறிக்கப்பட்ட இவன் கொற்றவை பெற்ற குமரன். அக்காலத்தில் முருக வழிபாடு மிகுதி. தென்ஞுடைய சிவனே எனப் பிற்காலத்தில் குரலெழுந்தாலும் சங்க காலத்தில் சிவ வழிபாடு மக்கள் வழிபாடாகச் சிறக்கவில்லை எனலாம். முல்லை நிலக் கடவுளான மாயோன் வழிபாடும் இருந்தது.

சமயம் இறப்புக்கு எத்தனையோ விளக்கம் தருகிறது. இறப்பை இயற்கை என ஏற்றுக் கொண்டனர். ஆனுல் இறப்புக்குப் பிறகு வேருேர் உலகம் எய்துவதாக எண்ணினர். மறுமை பற்றிய நம்பிக்கையும் இருந்தது. இறந்தவரின் உடம்பை அடக்கம் செய்வதிலே இரண்டு முறைகள் பின்பற்றப் பட்டன. உயிர்போன உடம்பைத் தாழியிலே இட்டு மூடுதல் ஒன்று. தணலிலே இட்டு எரித்தல் மற்ருென்று. சமூகத்தில் இன்னுர் இன்ன மரபை மேற்கொண்டார்கள் என்பதற்குச் சான்றில்லை. மன்னர்களில் சிலர் புதைக்கப் பட்டனர். சிலர் எரிக்கப்பட்டனர்; நெடுஞ்செழியன் என்னும் மன்னன் இறந்தபோது.

இடுக ஒன்ருே சுடுக ஒன்ருே (புறம் 239)
படுவழிப் படுக

என இரண்டில் எதை வேண்டுமானுலும் செய்யலாம் என்கிருர் புலவர். மன்னர்க்கு அன்றி மக்களுக்கும் இம்முறை பொருந்தும் எனலாம். (புறம் 256)

இறந்தவர்க்குப் படையல் இடுதல் இன்றளவும் இருந்து வருகிறது. யானையின் காலடி அளவுள்ள இடத்தை மெழுகி, இலை விரித்து அதில் சிறிதளவு

உணவு படைத்தது பற்றியும், (புறம் 234) சிறுகலத்தில் தேறல் படைத்தது பற்றியும் (புறம் 262) அறியலாம். சாவைக் கூற்றுவனுக உருவகித்துள்ளனர். (புறம் 227).

அக்கால மக்களுக்குச் சமய உணர்வு இருந்ததை உணரலாம். ஆனுல் சமயத்தின் செல்வாக்கு அளவு மீறிப் போகவில்லை. அவர்களின் அன்ருட வாழ்க்கையை அது ஆட்கொண்டதாகத் தெரியவில்லை. அதே நேரத்தில் கடவுள் நம்பிக்கை உறுதியாக இருந்தது. சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் அக்காலத்தில் இருந்தபோதிலும், இலக்கியத்தில் அவை செல்வாக்கான இடம் பெறவில்லை என்கிருர் மு.வ. மக்கள் வாழ்க்கையில் மிகுதியான செல்வாக்கை அவை பெற முடியாமையே இலக்கியப் புறக்கணிப் புக்குக் காரணம் எனக் கொள்ளலாம். எனவே சங்க காலத்தில் சமயத்தின் வழி வாழ்க்கை இல்லை என்பது உறுதி.

**பெண்கள்**

சங்ககாலச் சமுதாயத்தில் பெண்களுக்குத் தக்க மதிப்பிருந்தது. உரிமை யோடு அவர்கள் விளங்கினுர்கள். விழாக்களில் ஆடவர்க்குச் சமமாகக் கலந்து கொண்டனர். கணவரோடு சமமாகக் கள்ளருந்திய காரிகையரும், ஆறுகளில் அஞ்சாமல் நீராடிய ஆரணங்குகளும் இருந்தனர். பந்தாடல், புனலாடல், வண்டலிழைத்தல் கழங்காடல், ஆகிய விளையாட்டுகளில் பெண்கள் தேர்ந் திருந்தனர். ஆனுல் அடிமைத்தனம் என்பது அவர்கள் வாழ்வில் அறவே இல்லாமல் இல்லை.

திருணமத்தில் பெண் ஒரு சந்தைப் பொருளாகவே இப்போது திகழ் கிருள். வாங்கவும் விற்கவும் வசதிப்படுகிற அஃறிணை ஆகிருள். ஆனுல் சங்க காலப் பெண்ணுக்குத் திருமணத்தில் உரிமை இருந்தது. காதல் அந்த உரி மையை வழங்கியது. எந்தப் பெண்ணுக்கும் ஓர் ஆடவனைக் காதலிக்கிற உரிமை உண்டு. அந்தக் காதலையே சங்க இலக்கியம் பெரிதும் போற்றுகிறது. களவொழுக்கம் போற்றப்பட்டது. ஆனுல் திருமணமே களவின் வெற்றியாகக் கருதப்பட்டது. ஆதலால் காதலுக்குச் சமூகத்தின் ஏற்புடைமை இருந்தது. எதிர்ப்புகள் வெற்றி கொள்ளப்பட்டன. காதலித்தவனையே மணந்து கொள்ளும் மனஉறுதி அக்காலப் பெண்ணிடம் காணப்பட்டது. ஆனுல் தலைமகன் வரைவை நீட்டித்தவழி, வாடி வதங்கும் தலைமகளின் நிலை இரக்கத்திற்கு உரியது. அங்கே பெண் திருமணம் வேண்டிப் பொறுத்திருப்பதே கடமையாக்கப்பட்டது. அதே நேரத்தில் ஆடவன் உரிமையோடு செயற்பட வாய்ப்பிருந்தது. தலைமகன் தன்னைக் கைவிட்டு விடுவானே என வருந்தும் தலைவியின் அச்சத்தில் பெண் ணடிமை ஒளிந்துள்ளது எனலாம்.

அக்காலத் திருமண முறைகள் தமிழரின் தனித்தன்மையைப் புலப்படுத் துவன; சமயச் சார்பற்றன. காதல் திருமணமே பெரும்பான்மை எனக் கழறலாம். ஒரு மனைவியா பல மனைவியரா என்பதைத் தெளிவுபடுத்தும் சான்றில்லை. ஆனுல் பல மனைவியர் வாழ்க்கைக்கு வாய்ப்புண்டு என்பர். இக்கூற்று ஏற்குமாறு இல்லை.

ஒழுக்கம் பெண்ணுக்கு உயிராகக் கற்பிக்கப்பட்டது. திருமணத்தில்

கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென (அகம் 86)

பெண்ணை வாழ்த்துவதே மரபு. முல்லை சான்ற கற்பினள் எனப் பெண் மொழியப்பட்டாள். கற்புடை மகளிர் கடவுளராகவே கருதப்பட்டதைப் பின் வந்த சிலப்பதிகாரம் பேசுகிறது. அதற்கான அடிப்படை சங்க காலத்திலேயே உறுதிப்பட்டு விட்டது எனலாம்.

பரத்தையர் பற்றிய செய்திகளைச் சங்க இலக்கியத்தில் பரக்கக் காணலாம். பரத்தையர் தோற்றத்திற்குப் போரும் ஒரு காரணம். எது எப்படியாயினும் பரத்தையர் தோற்றம் பெண்ணுலகின் இழிவையே காட்டு கிறது. பெண்கள் இன்பப் பொருள்கள் என்பதற்குப் போடும் முத்திரையே பரத்தமை. ஆணுக்குப் பல பெண்களுடன் இருந்த தொடர்பைச் சமூகம் கண்டித்ததாகத் தெரியவில்லை. அப்பெண்கள் பரத்தையராகவே இருந் தனர். பல பெண்களை ஒருவன் மணந்துகொள்ளச் சமூகம் இசைவு நல்கி யிருக்குமானல் பரத்தையர் தோன்றுவதற்கு வாய்ப்புக் குறைந்திருக்கும். திரு மணத்தைப் பொறுத்தவரையில் சமூகத்தால் ஏற்கப்பட்டவள் மனைவி மட்டுமே எனலாம்.

மனையில் உறைவதே மகளிர்க்கு மாண்பு என்பதை முழுவதும் ஏற் பதற்கு இல்லை. செல்வர்குடிப் பெண்களே இல்லிருத்தல் இயலும். சமூக அமைப்பில் ஆடவனே வினையாற்றினன். ஆனல் பெண்ணும் சில பொறுப் புகளைப் பகிர்ந்து கொண்டாள். குறிஞ்சி நிலக் குறமகளிர் தினைப்புனம் காத் தலும், முல்லையில் ஆய்மகளிர் மோர் நெய் விற்றலும், பாலை நில எயிற்றியர் நிலத்தைப் பண்படுத்தி நெல் விளைத்தலும், மருதநில உழத்தியர் வயலில் உழைத்தலும், நெய்தல் நில மகளிர் உப்பு மீன் விற்றலும் தங்கள் கடமையாகக் கொண்டனர். தெருவில் சென்று பூக்களும் விற்றனர். வணிகத்தன்மை மிகுந்த போது ஆண்மகன் பொருள்திரட்டப் புறப்பட்டான். அதனல் பெண் மகள் அவனுக்கு அடங்க நேர்ந்தது.

இல்லற வாழ்க்கையில் மனைவியே முதன்மை பெற்றுள். கணவனைக் கேட்காமலே கடமையாற்றும் உரிமையும் மனைவிக்கு இருந்தது. மக்களைப் பெற்ற மகளிர்க்குச் சமுதாயத்தில் மதிப்பு மிகுதி. கணவன் மனைவியைக் கடமை காரணமாகப் பிரிவதுண்டு. ஆனல் மணவிலக்கு மேற்கொண்டதா கத் தெரியவில்லை.

மறக்குடி மகளிர்க்கு வீரம் பிறவி இயல்பாயிற்று. வயதில் இளைய மகன் ஒருவனே மிஞ்சியபோதும் அஞ்சாமல் அவனைப் போர்க்களத்திற்கு அனுப்புகிறுள் ஒரு தாய். போர்க்களத்தில் புறமுதுகிடாமல் மடிந்த மகனை எண்ணி மகிழ்கிறுள் ஒருத்தி.

சங்க காலத்தில் பெண்ணைப் பற்றிய அழகுணர்ச்சி மிகுதி எனலாம். ஆடை, அணிகலன், மணப்பொருள் முதலான அழகூட்டும் பொருள்களை அறிந்து

பயன்படுத்தினர். கூந்தல் கலையில் அவர்கள் தேர்ச்சி குறிப்பிடத்தக்கது. ஒப்பனைக் கலையில் உள்ளம் தோய்ந்தனர்.

**பொருளியல் வாழ்க்கை**

ஒவ்வொரு மனிதனும் பொருள் ஈட்டுவது உயர்நெறியாகக் கருதப்பட்டது. மனைவி மக்களைப் பிரிந்து பொருள் தேடும் மரபை இலக்கியம் மாண்புறக் காட்டுகிறது. ஆருயிர்த் துணையைப் பிரிந்து அகல்வது அவ்வளவு எளிதன்று அக்காலத்தில் உறைவதா பிரிவதா என்ற உளப்போராட்டத்தைப் பாடல்கள் உருக்கமாகக் காட்டுகின்றன. இத்துணைப் பாடுபட்டு ஈட்டிய பொருளைச் சேர்த்து வைத்துச் சிந்தை மகிழ்வது அக்காலக் கோட்பாடாகத் தெரியவில்லை. பிறர்க்கு நல்குவதையே பேரின்பமாகக் கருதினர். செல்வத்துப் பயன் ஈதல் என மகிழ்ந்தனர். சேர்த்தாலும் செல்வம் செல்லும் இயல்பினது எனத் தெளிந்திருந்தனர். வறுமையால் பலநாள் வாடிய புலவன், பெருமையால் பெற்ற பரிசுப் பெரும்பொருளை எல்லோர்க்கும் கொடுக்குமாறு தன் இல்லக்கிழத்தியைப் பணிக்கிறான். இரந்த பொருளையே பிறர்க்கு ஈயும் மனம் இங்கே வெளிப்படுகிறது. வந்த பொருளால் வல்லாங்கு வாழ்தலை நெறியென அந்நாள் நினைத்திலர்.

நிலத்திற்கேற்றவாறு தொழில்கள் (மீன் பிடித்தல், முத்தெடுத்தல், உப்பு விளைத்தல், வேட்டையாடுதல், ஆடுமாடு மேய்த்தல்) நிகழ்த்தி வந்தாலும், வேளாண்மையே பெரும்பாலோர் மேற்கொண்ட தொழில் எனலாம். உப்பு விளைத்தலை வேளாண்மைக்கடுத்த ஒரு பெருந் தொழிலாகக் கருதலாம். சங்ககாலச் சமுதாயம் ஒரு வேளாண்மைச் சமுதாயமே.

நகரங்களில் செல்வர்கள் வாழ்ந்தனர். சிற்றூர்களில் ஏழ்மைச் சுவடுகள் தெரிகின்றன. செல்வ நிலைக்கேற்பவே வீடுகள் திகழ்ந்தன. சிற்றூர்களில் குடிசைகளும் நகரங்களில் பெருவீடுகளும் காணப்பட்டன. சில ஊர்கள் சிறு குடிசைகளை மட்டுமே கொண்டிருந்தன. வானளாவிய பல கலைகளோடு வசதியுடையதாக விளங்கிய வீடுகளில் செல்வந்தர்கள் வாழ்ந்தனர். செல்வத்தின் செழுமைக்கு அவ்வீடுகள் சிறந்த எடுத்துக்காட்டுகள். உணவும் உடையும் கூட உறையுளைப் போல இருவேறு நிலைகளை உட்கொண்டிருந்தன. உண்பது நாழி உடுப்பவை இரண்டு என்பது ஒரு பொது மனிதனின் வாழ்க்கை நிலை எனலாம். கள்ளும் இறைச்சியும் களிப்புணவுகள்.

அக்காலத்தில் வாணிகம் ஓர் அடிப்படையைப் பெற்றிருந்தது. அது பண்டமாற்று, பணம் என இருநிலைகளிலும் நிகழ்ந்தது. நெல்லுக்கு உப்பும் கள்ளுக்குச் சிப்பியும் எனப் பண்டங்கள் மாற்றிக் கொள்ளப்பட்டன. வணிகர்கள் செல்வராகவே வாழ்ந்தனர் எனலாம். உப்பு வணிகத்தின் சிறப்பை இலக்கியங்கள் உரைக்கும். உள்நாட்டு வணிகத்தில் அதற்குப் பேரிடம் இருந்தது எனலாம். சேரநாட்டில் மிளகும், சோழ நாட்டில் நெல்லும், பாண்டி நாட்டில் முத்தும் மிகுதியும் விளைந்தன. புரவி, மிளகு, மணி, பொன், ஆரம் (சந்தனம்), அகில், முத்து, துகிர் (பவளம்), கங்கை காவிரி ஆறுகளின் விளைவுகள், ஈழத்து உணவு, காழகத்து ஆக்கம், புளி, உப்பு, உலர்த்திய மீன் ஆகியவை பொருள்களாகப் பயன்பட்டன. இந்த வணிக மேன்மைக்கு வணிக நேர்மை அடிப்படையாக வலியுறுத்தப்பட்டது.

# பௌத்த மடாலய நூலகங்களினூடாகத் தெரிய வரும் தமிழக ஈழ இலக்கிய உறவுகள்

ஆ. சிவநேசச்செல்வன், எம். ஏ.,
உதவி நூலகர், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இலங்கை

தமிழ் நாட்டிற்கும் ஈழநாட்டிற்கும் இடையிலே வரலாற்றுக் காலம் முதலாக நிலவிவந்த தொடர்புகள் பற்றிய ஆய்வுகள் அண்மைக் காலத்திலே புதிய தரவுகள் பலவற்றை வெளிக்கொணரும் வகையிலே மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. காலந்தோறும் மேலெழுந்தவாரியாகக் கூறப்பட்ட கருத்துக்களையும், அவற்றினூடே ஆங்காங்கு வலியுறுத்தப்பட்ட உண்மைகளையும் வரலாற்றாசிரியரும் தமிழியலாளரும் மீளாய்வு செய்யும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளனர். தொல்லியற் சான்றுகளும், சாசனச் சான்றுகளும் தரும் புதிய தரவுகளையும், இலக்கிய ஆதாரங்களின் வழியான செய்திகளையும் கொண்டு மானிடவியல் ரீதியாகவும், சமுதாயவியல் ரீதியாகவும் அவதானிக்கும் நிலையிலே கலாசார பாரம்பரியத்தின் தொடர்ச்சியையும் செறிவையும் விளக்குவது இலகுவான தொன்றாக அமையும். பௌத்த மதம் இலங்கையில் அறிமுகப்படுத்தப்பட்ட காலத்திலேய தென்னிந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்ட தென்பதையும் ஏறத்தாழ கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டுவரையும் அம்மதம் பெற்ற வளர்ச்சி நிலைகளையும், இலங்கையின் பௌத்தமத வரலாற்றோடு இணைத்து நோக்கும்போது இலக்கிய உறவின் செழுமையையும் பங்களிப்புக்களையும் உணர முடியும். இலங்கையின் பாலி இலக்கிய வரலாற்றை ஆராய்ந்தவர்களும், சிங்கள இலக்கிய வரலாற்றை ஆராய்ந்தவர்களும் தமிழக உறவுகளைப் பற்றிய செய்திகளை மேலோட்டமாகவே கூறமுற்பட்டுள்ளனர். பௌத்த மடாலய நூலகங்களிலே தொடர்ச்சியாகப் பேணப்பட்டுவந்த மரபுகளின் பின்னணியைக் கொண்டு இலங்கையிலே ஏறத்தாழ பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையும் தமிழ்நாட்டு இலக்கிய கலாசாரச் சூழல் ஏற்படுத்தியிருக்கக் கூடிய பாதிப்புகளை ஒருமுகப்படுத்தி நோக்கலாம்.

சங்ககால நூல்களுள் ஒன்றாகிய பட்டினப்பாலையில் வரும் ''ஈழத்துணவும்'' என்ற தொடர் கி.மு. முதலாம் நூற்றாண்டிற்கும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடையிலே தமிழகத்திற்கு உணவு ஏற்றுமதி செய்தமையைக் குறிக்கின்றது. இது போலவே ஈழத்துப் பூதன் தேவனார் பற்றிய தொடர்பும் அவதானிக்கத் தக்கது. ஈழத்துப் பூதன் தேவனார் இயற்றிய செய்யுள் இலங்கையிலேயதான் இயற்றப்பட்டதா அல்லது அப்புலவர் தமிழ்நாட்டில் வாழ்ந்தகாலத்தில் இயற்றப்பட்டதா என்பது நன்கு அறியாததொன்று. திருப்பரங்குன்றப்பிராமிக் கல்வெட்டொன்றில் 'ஈழத்துக் குடும்பிகன்' என்ற பெயர் குறிக்கப்படுகின்றது. ஈழத்துப் பூதன்தேவனார் ஈழத்தவரா என்பதைப் பெயரை மட்டும் கொண்டு நிறுவுவது கடினமானது. தமிழ்நாட்டில் வாழ்ந்த ஈழத்தவரை 'ஈழத்து' என்ற அடையுடன்

அழைக்கப்பட்டமையை மேற் குறிப்பிட்ட கல்வெட்டுச்சான்று வலியுறுத்துவதும் குறிப்பிடத்தக்கது. 'நாகர்' என்ற பெயரைக் கொண்டமையால் முரிஞ்சியூர் முடி நாகராயர் ஈழத்தவர் என்றும், 'மாந்தையன்ன இவள் நலம்' என்று குறிப்பிடு வதனுல் அம்மூவனுரை ஈழத்தவர் என்றும் நாட்ட முற்பட்டுள்ளனர். இவை யாவும் காலந்தோறும் இலங்கைத் தமிழ் புலவர்களைத் தேட எடுத்துக்கொண்ட முயற்சிகளாக அமைதி காணலாம்.

இலங்கைத் தமிழிலக்கிய வரலாற்றிலே கி.பி. 13ஆம் நூற்றுண்டு வரையி லான காலப்பகுதியிலே தமிழ் மக்கள் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்திருப்பினும் அவர்களது இலக்கிய ஆக்கங்கள் பற்றி எவ்விதச் சான்றுகளும் இல்லாமையினுல் அக்காலப்பகுதியை இருண்ட காலம் எனக் கூறுவது வழக்கமாகிவிட்டது. கி.பி. 1310 இல் மூன்ருவது பராக்கிரமபாகுவின் அவைக்களப் புலவராகிய தேனுவரைப் பெருமாள் என்னும் இயற்பெயர் கொண்ட போசராச பண்டிதர் பாடிய சோதி நூலாகிய சரசோதிமாலையே காலத்தால் முந்திய தமிழ் நூலாகும். இதன்பின்னர் தமிழ் வேந்தர் யாழ்ப்பாணத்தை ஆண்ட காலத்திலே தோன்றி யவை பெரும்பாலும் வைத்திய நூல்களும் சோதிட நூல்களுமாகவே அமை கின்றன. இந்த நிலையிலே இலங்கைப் பௌத்த மடாலயங்களின் பின்னணியில் வாழ்ந்து தொண்டாற்றிய தமிழ் நாட்டவர்களின் ஆக்கங்களையும், பங்களிப்பு களையும் ஒருமுகப்படுத்தி நோக்குவதன் மூலமே இங்கு நிலவியிருக்கக்கூடிய தமிழி லக்கிய, கலாசார அறிவுச் சூழலை அனுமானிக்க முடியும்.

சிங்கள இலக்கிய வரலாற்றிலும் பாலி இலக்கிய வரலாற்றிலும் தமிழ் நாட்டைச் சேர்ந்த பௌத்தப் பெரியார்கள் இலங்கை பௌத்த மடாலயங் களினூடே ஆற்றிய பணிகள் பற்றிப் பல்வேறு குறிப்புகள் காணப்படுகின்றன. மணிமேகலை காலத்திலும் அதற்கு முன்னரும் நிலவிய திராவிடக் கலாசாரப் பாதிப்புக்கள் சிங்கள இலக்கியங்களிலே ஏற்படுத்தியுள்ள தாக்கங்களைப் பல அறிஞர்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர். சிங்கள மொழி பாலி மொழியுடனும் பின்னர் சமஸ்கிருத மொழியுடனும் தமிழ்மொழியுடனும் கொண்ட தொடர்பு களையும் ஆங்காங்கு வரைந்து காட்டியுள்ளனர். வரலாற்றுக் காலம் முதலாக இலங்கையில் முதன்மை பெற்று வந்த பாலிமொழிக் கல்வி பௌத்த மடாலயங் களிலே பெற்றிருந்த செல்வாக்கைத் திரிபிடகமும் அட்டகதாக்களும் மொழி பெயர்க்கப்பட்டதன் மூலமும், உரைநூல்களும் விளக்கங்களும் எழுதப் பட்டமை யின் மூலமும் உணர்ந்து கொள்ளலாம். அனுராதபுரக் காலத்திலே பௌத்தமும் சிங்கள மொழியும் பாலி இலக்கியத்தின் செழுமையை இணைத்துக்கொண்டமைப் போல வடமொழி மரபையும் காலந்தோறும் அணைத்துக்கொண்டது. அபயகிரிப் பிரிவினரும் வைதுல்யவாதிகளும் வடமொழி மூலநூல்களைப் பயன்படுத்தினர். குறிப்பாகக் குச்சவெளி திரியாய், ஜேதவனராம ஆகிய இடங்களிற் காணப்படும் வடமொழிச் சாசனங்களும், மிகுந்தலையிற் பெறப்பட்ட மகாயான தத்துவநூல் களும், இந்திக் கட்டுச்சாயச் செப்பேடுகளும், திரிகாயஸ்தலக் கல்வெட்டுகளும் இலங்கையில் வடமொழி பெற்றிருந்த செல்வாக்கினை உறுதி செய்வனவாகவுள்ளன.

இது போலவே அனுராதபுரக் காலத்திலே பௌத்த மடாலயங்களிலே தமிழ்நாட்டைச் சேர்ந்த பலர் முதன்மை பெற்றிருந்ததுடன் பாரிய பங்களிப்புக்

களையும் செய்துள்ளனர். பாலி மொழியும் வடமொழியும் கொண்டிருந்த தொடர்புகளைப் போலத் தமிழ்நாட்டுப் பௌத்த மடாலயங்களின் சிந்தனைகளும் விரிவாகக் கலந்தமையை அவதானிக்கலாம். காலந்தோறும் ஏற்பட்ட தமிழிராச்சியங்களின் படையெடுப்புக்களினுலும் மேலாதிக்கத்தினுலும் பௌத்த மடாலயங்களிலே பேணப்பட்ட நூல்களிலும் வரலாறுகளிலும் அவற்றை எழுதிய பௌத்த ''தேரர்கள்'' தென்னிந்திய பௌத்த தேரர்களின் பங்களிப்புக்களுக்கும் ஆக்கங்களுக்கும் அதிமுக்கியத்துவம் கொடுக்கவில்லை. இக்கருத்தினை வரலாற்ருசிரியர் வின்சென்ற் சிமித் அமைதிகாணும் வகையிலே கூறியுள்ளார். மேலும் அனுராதபுரக் காலத்தின் இலங்கைத் தமிழர் வரலாற்றை மேலெழுந்தவாரியாக அறியக் கூடியதாகவே சான்ருதாரங்கள் எமக்குக் கிடைக்கின்றன. மகாவம்சம், சூளவம்சம் போன்ற வரலாற்றேடுகள் முக்கியத்துவம் கொடுத்துத் தமிழர் வரலாற்றைக் கூறவில்லை. தொடர்ந்து சோழப் பெருமன்னரின் ஆட்சியின்கீழ் இலங்கை ஒரு பிரிவாகிய பொலநறுவைக்காலத்திலும் பின்னரும் நிலவிய தமிழராட்சி பற்றிய செய்திகளையும் தமிழ்க் கலாசாரச்சூழல் பற்றியும் கூட விரிவான தரவுகள் பௌத்த மடாலயப் பின்னணியிலான வரலாற்றேடுகளிற் தரப்படவில்லை. எனினும் பௌத்த மடாலயச் சூழலினூடே நிலவிய தமிழக, ஈழ இலக்கிய உறவுகளைப் பிணைக்கக்கூடிய தொடர்புகளைச் சிதறுண்டு காணப்படும் தரவுகளைக்கொண்டு கோடிட்டுக் காட்டலாம்.

பௌத்த மடாலயங்களின் பின்னணியிலே கல்வி மரபும் கலாசார மரபுத் தொடர்ச்சியும் பேணப்பட்டு வந்தன. அனுராதபுரத்தில் அமைந்திருந்த தீகசந்தசேனுதிபதி பிரிவேனுவிலே மகிந்த தேரரால் தேவநம்பியதீசனுக்கு அளிக்கப்பட்ட பாலிமொழித் திரிபிடக உரைகள் பேணிவைக்கப்பட்டிருந்தன. பின்னர் மகாவிகாரை தேரவாத நூலகமொன்று காணப்பட்டது என்பதை இலங்கையின் மடாலய நூலக வரலாற்றின் ஆரம்பப் பின்னணியாகக் கூறுவர். மகாவம்ச மரபுப்படி வட்டகாமினியின் காலத்தில் (கி. பி. முதலாம் நூற்ருண்டு) பௌத்த தேரர்கள் திரிபிடக உரைகளை எழுத்தில் பொறித்தனர் எனவும், இந்நிகழ்ச்சி மாத்தளையில் உள்ள அலுவிகாரையிலே நடைபெற்றது எனவும் கூறப்படுகின்றது. இவையாவும் தொடர்ந்து மகாவிகாரையிலே தொகுத்து வைக்கப்பட்டன. மகாகுளி மகாதிஸ்ஸ (கி.பி. முதலாம் நூற்ருண்டு), முதலாம் கஸ்ஸப்பன் (கி.பி. 5-ஆம் நூற்ருண்டு), இரண்டாவது மொகலானன் (கி.பி. 6-ஆம் நூற்ருண்டு), இரண்டாவது சேனன் (கி.பி. 9-ஆம் நூற்ருண்டு) ஆகியோர் காலங்களில் நடைபெற்ற பாரிய இலக்கிய முயற்சிகளின் தொகுப்புகள் மடாலய நூலகங்களின் பின்னணியிற் பேணப்பட்டன. அரச ஆதரவின் அடிப்படையில் வளர்ந்த சமய நிறுவனங்களான மடாலயங்களிலே காணப்பட்ட நூற் தொகுப்புகளினூடே தொடர்ச்சியான சமயமரபும் வரலாற்று மரபும் பேணப்படலாயிற்று. இந்நிறுவனங்களிலே தமிழ்நாட்டுத் தேரர்கள் ஆற்றிய பணிகள் தமிழக, ஈழ இலக்கிய உறவின் தொடர்ச்சியை வரையிட்டுக் காட்டும் பங்களிப்புகளாக அமைகின்றன.

இலங்கை வரலாற்றிலே அனுராதபுரக் காலப்பகுதியில் மகாவிகாரை, அபயகிரிவிகாரை, சேதவனராமவிகாரை ஆகிய இடங்களில் பௌத்த கல்விப் பாரம்பரியத்தின் முக்கிய சம்பவங்கள் நிகழலாயின. இந்நிலையங்களிலே மடாலய

நூலகங்கள் அமைந்திருந்தன. தேரவாத, வைதுலியவாத நூல்கள் பல இங்கு தொகுத்து வைக்கப் பட்டிருக்கவேண்டும். மகாவம்ச ஆசிரியரான மகாநாமன் வாழ்ந்த தீகசந்தசேனுபதிப் பிரிவினுலும், புத்தகோச மகா ஆச்சாரிய வாழ்ந்து பணிபுரிந்த கந்தகார விகாரையிலும் நூலகங்கள் இருந்திருக்கவேண்டும். அபய கிரியில் உள்ள உத்தரமுல்ல, கப்புரமுல்ல ஆகிய இடங்களின் நூலகங்களும் குறிப் பிடத்தக்கவை. அனுராதபுரக் காலத்திலே தேரவாத மகாயானவாத போராட்டங் களின் களமாகிய மகாவிகாரை, அபயகிரிவிகாரை நூலகங்களும் சிதைவடைந்தன. குறிப்பாக மகாசேனன் காலத்தில் தேரவாத வைதுல்யவாத நூல்கள் பல அழிக் கப்பட்டன. தமிழக ஈழ இலக்கிய உறவை இணைக்கக்கூடிய நூல்களும் பாரிய அழிவுகளினூடே சிதைந்திருக்கவேண்டும். இலங்கையின் பௌத்த மடாலய நூலகங்களின் நூல்வளத்தினுல் ஈர்க்கப்பட்டுத் தமிழகத் தேரர்களும், சீன, பர்மா, கம்போடியா நாட்டுத் தேரர்களும் வருகை தந்ததோடு பிரதிகளையும் காலந் தோறும் பெற்றுக்கொண்டனர். புத்த தத்தர், புத்தகோசன், பாகியன், தர்ம பாலர் போன்ருேரின் வருகை தமது ஆய்வுகளுக்கான நூல் வளத்தின் செழுமை யினைச் சார்ந்ததே எனவும் குறிப்பிடலாம். சிறப்பாக கி. பி. 5-ஆம் நூற்ருண்டில் புத்தகோசன் மகாவிகாரையிலிருந்த நூலகத்தின் பயன்பாட்டை அடிப்படை யாகக்கொண்டே வந்தார் என்பதும், அவர் எழுதிய விசுத்திமார்க்க உரை பல நூல்களை உசாத்துணையாகக் கொண்டு எழுந்தது என்பதும் மனங்கொள்ளத் தக்கது.

பொலநறுவைக் காலத்திலே மடாலய நூலகங்கள் பெருஞ் செல்வாக்கு வாய்ந்த நிறுவனங்களாக அமைந்திருந்தமை பற்றிய செய்திகள் வரலாற்று ஏடு களிற் காணப்படுகின்றன. முதலாம் பராக்கிரமபாகு மன்னன் பாரிய நூலகங்கள் இரண்டினைப் பொலநறுவையில் அமைத்தான். அத்துடன் நூற்றி இருபத் தெட்டு நூலகங்களை உருகுணைப் பிரிவில் அமைத்தான். இன்றும் பொலநறுவை யிலே பொத்துகல் விகாரையும் அதன் சிதைவுகளும் காணப்படுகின்றன. இது அரச அனுசரணையுடன் அமைந்த நூலகமாயிருக்கவேண்டும். பராக்கிரமபாகு மன்னனின் காலத்திலே இலக்கிய எழுச்சி ஏற்பட்டதுடன் பர்மிய இந்திய தேரர்கள் பலர் பௌத்த மடாலய நூலக வளத்தினுல் ஈர்க்கப்பட்டு இலங்கைக்கு வந்தனர். தொடர்ந்து கலிங்க மகானின் படையெடுப்பினுல் ஏற்பட்ட அழிவுகளினுல் அனேக நூலகங்களும் இலக்கிய ஆக்கங்களும் சிதைவடைந்தமையைச் சூளவம்சம் விரித் துரைக்கின்றது. சேனன், குத்திகன் காலம் முதலாக எல்லாளன் ஆட்சியிலும் பின்னரும் ஏற்பட்ட தமிழ்நாட்டின் அரசியற் செல்வாக்கு காலப்போக்கிலே சோழப்பேரரசர்களின் மேலாதிக்கத்துடன் பத்தாம் நூற்ருண்டு வரையில் முழுமை யடைந்தது. இலங்கையின் வடபகுதியாகிய இராஜரட்டை பதினெராம் நூற் ருண்டின் முதலாவது தசாப்தம் தொடக்கம் ஏறத்தாழ அரைநூற்ருண்டுக்கு மேலாக சோழப் பெருமன்னரின் நேரடியான ஆதிக்கத்திற்குட்பட்டது. கி.பி. 1070 இல் முதலாம் விஜயபாகு மன்னனின் வெற்றிவரை ஏற்பட்ட தமிழக கலாசாரப்பாதிப்புப் பற்றிய விவரங்களை சூளவம்சம் விரிவாகக் கூற வில்லை. சோழராட்சியின் முன்னர் இடையிடையே பாண்டியச் செல்வாக்கும் ஏற்பட்டது. பாண்டிய, சோழ மன்னர்களின் காலத்தில் ஏற்பட்ட பௌத்த மடாலயங்களின் அழிவுகளைச் சூளவம்சம் விரிவாகக் கூறுகின்றது.

குறிப்பாகப் பாராக்கிரமபாகு 1 (1153–1186) மன்னர் காலத்திலும், சோழப் பேரரசரை முறியடித்த விஜயபாகு 1 மன்னன் காலத்திலும் மீண்டும் பௌத்த மடாலயங்களும் நூலகங்களும் ஒழுங்குபடுத்தப்பட்டன. கி.பி. 7-ஆம் நூற்றுண்டு முதலாக தென்னிந்தியாவிலே ஏற்பட்ட பக்தி இலக்கிய மலர்ச்சியும், அதன் தொடர்ச்சியான கலாசார மாற்றங்களும் இலங்கையிலும் பாதிப்புக்களை ஏற்படுத்தி யிருக்கவேண்டும். இலங்கையில் வாழ்ந்த பௌத்த பிக்குகள் பலர் தமிழறிஞர்களாக விளங்கினமையை அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ள செய்திகள் உணர்த்தி நிற்கின்றன. கி.பி. 12-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த, பிரதி ராஜ என்ற பிரிவெனுவின் தலைமைத் தேரர் 'சிதத் சங்கராவ' என்ற சிங்கள இலக்கண நூலினை எழுதினர். இந்நூல் வீரசோழியத்தினை அடியொற்றி யெழுந்த தொன்ருகும்.

குறிப்பாக இலங்கைக்கும் தென் இந்தியாவிற்கும் இடையே நிலவிய பௌத்த கலாசாரத் தொடர்புகளை உபசாகஜனலங்கார என்ற பாலி நூல் விரிவாகக் கூறுகின்றது. வரலாற்றுக் காலம் முதலான தொடர்புகளைப் பொதுவாகவும் 13-ஆம் நூற்றுண்டு நிகழ்வுகளைச் சிறப்பாகவும் கூறும் இந்நூல் உடும்பரகிரிப் பிரிவைச் சேர்ந்த சிகளாச்சாரிய பதந்த ஆனந்த மகாதேரரால் எழுதப்பட்டது. அனுராதபுரக் காலத்திலே தேரவாத பௌத்தத்தின் வளர்ப்புப் பண்ணையாக விளங்கிய மகாவிகாரை மடாலயத்திலே பேணப்பட்டுவந்த மரபின் தொடர்ச்சியை விளக்கும் பாங்கினதாக விளங்கும் இந்நூல் இலங்கையின் பாலி இலக்கிய வரலாற்றை எழுதிய பேராசிரியர் மலலசேகராவின் கவனத்தைக் கவரவில்லை. இந்நூலிற் காணப்படும் செய்திகள் பல தமிழக, ஈழ உறவுகளைத் துல்லியமாக விளக்குவதை அமரதாஸ லியனதமமே அண்மையில் விரிவாக ஆய்வு செய்து கூறியுள்ளார். இலங்கையின் கடைசி மன்னனுன ஸ்ரீ விக்கிரமராஜசிங்கன் காலத்தில் மொறதோட்ட தர்மகாந்த மகாதேரரால் (1803 இல்) இந்நூல் சிங்களத்தில் மொழிபெயர்க்கப்பட்டமையும் குறிப்பிடத்தக்கது.

இலங்கையிலே பௌத்த மத பாரம்பரியத்தின் வளர்ச்சியைப் பேணிவந்த மடாலய நிறுவனங்கள் அரச அனுசரணையோடு பெற்றிருந்த செல்வாக்கினையும், அவற்றினூடே காலந்தோறும் நடைபெற்ற இலக்கிய முயற்சிகளையும் பற்றிய ஆய்வுகள் இன்னும் விரிவாக மேற்கொள்ளப்பட வில்லை. கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலம் முதலாக நிலவிவந்த பௌத்தமதச் செல்வாக்கு இலங்கையின் அரசியல் வரலாற்றிலே பெற்றிருந்த முதன்மையை நோக்கிய ஆய்வாளர் பலரும் தமிழகத்திலே செழுமை பெற்றிருந்த பௌத்த கலாசாரத்தின் தொடர்ச்சியை இணைத்து நோக்கும்போது இனவாத மனேபாவத்துடன் அணுக முற்பட்டுள்ளனர். வரலாற்றேடுகளான மகாவம்சம், சூளவம்சம் ஆகியனவற்றிற்கு அளித்த முக்கியத்துவத்தினைத் தமிழக வரலாற்றின் முக்கியத்துவத்திற்கு அளிக்காமை குறிப்பிடத் தக்கதொன்று. குறிப்பாகத் தமிழ்நாட்டு அறிஞராகிய மயிலை. சீனி வேங்கடசாமியும், அவர்வழி நின்று கருத்துகளைத் தொகுத்து நோக்கிய ஹிசல்ல தர்மரத்தின தேரரும், பேராசிரியர் கொடகும்பறவும் எமது கவனத்திற்கு உரியர்கள். இலங்கையின் பௌத்த மடாலயங்களிலே வழிவழி மரபாகப் பேணப்பட்டு வந்த கல்விப் பாரம்பரியத்திலும், இலக்கியப் பாரம்பரியத்திலும் தமிழகத்தைச் சேர்ந்த பௌத்த தேரர்கள் கொண்டிருந்த பங்கு இலக்கிய மரபின் தொடர்ச்சியை இனங்

காண்பதற்குகந்த சாதனம் என்பதை மறந்து விடலாகாது. பௌத்த மதத்தின் வளர்ப்புப் பண்ணையாகிய இலங்கையிலே தமிழ்நாட்டுத் தேரர்கள் ஆற்றிய பணிகள் பாலி இலக்கியப் பின்னணியோடு மட்டுமன்றித் தமிழிலக்கிய மரபோடும் தொடர்பு கொண்டது என்பது வெளிப்படையாக உணர்த்தப்படவேண்டிய தொன்றுகும். இந்த வகையிலே இலங்கையின் பௌத்த மடாலயங்களால் பேணப் பட்டுவந்த கல்விமரபும் அதன் பின்னணியிலான நூலகமரபும் இலக்கிய வரலாற்று மாணவனின் நிதானமான கவனத்திற்குரியவை. சிங்கள மொழியுடன் நெருங்கிய தொடர்புகொண்ட பாலி மொழி, வடமொழி நூல்கள் இந்நூல்களிலே பேணிப் போற்றப்பட்டமை போலத் தமிழ் மொழி நூல்கள் பேணப்படவில்லை ஆயினும் தமிழ்நாட்டு பௌத்த மதச் சிந்தனைகள் பாலி நூல்களிலும், சிங்கள நூல்களிலும் பதித்துள்ள மொழிவழிப் பாரம்பரியங்களை நுணுகி நோக்குவதன் மூலமும் இலக்கிய மரபுத் தொடர்ச்சியை வரையிட்டுக் காண்பது அவசியமாகும். தமிழ்நாட்டுத் தேரர்கள் பாலி மொழிப் பண்டிதர்களாயினும் அவர்களினூடாக தமிழ்நாட்டு இலக்கிய மரபின் தொடர்ச்சியும் இணைந்திருக்கவேண்டும் என்பதும், அவை குறுகிய இனவாத சூழலால் ஒதுக்கப்பட்டிருக்கவேண்டும் என்பதும் அனுமானிக்கப்பட வேண்டிய தொன்றுகும்.

பழமை வாதத்தைப் பேணும் மகாவிகாரையைத் தலைமைப் பீடமாகக் கொண்ட தேரவாத பௌத்தத்திற்கு எதிராக மகாயான பௌத்தத்தை நிலை நாட்டியவரும் ஆகிய சங்கமித்த தேரர் சோழ நாட்டைச் சேர்ந்தவர். கோதாபய மன்னன் (கி. பி. 254—267) காலத்திலே மகாவிகாரையைச் சேர்ந்த சங்கபால தேரரை வெற்றி கொண்டார். அரசனின் புதல்வராகிய ஜோதிஸ்ட திஸ்ஸன், மகாசேனன் ஆகியோருக்கு ஆசிரியராக விளங்கினர். பின்னர் தமது அன்புக் குரிய மாணவனாகிய மகாசேனனின் பின்னணியிலே வைதுல்யவாதத்தின் எழுச்சி க்கும் சீர்திருத்தத்திற்கும் காலாக விளங்கினர். மகாவிகாரைப் பிக்குகளுக்கு எதிராக இயங்கிய இவர் பின்னர் கொலைசெய்யப்பட்ட வரலாறு மகாவம்சத்திலே காணப்படுகின்றது. அபயகிரிவிகாரையின் எழுச்சிக்குக் காரணமாகவிருந்த இவரின் ஆக்கங்கள் எவையும் கிடைக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இலங்கையில் அனுராதபுரத்தில் தங்கி மதுராந்திவிலாசினி, அபிதம்மாவ தாரம், வினயவினிச்சியம் போன்ற நூல்களை எழுதிய ஆசாரிய புத்ததத்தமகா தேரர் சோழநாட்டில் பிறந்த தமிழர் ஆவர். பாலி மொழியிலே நிரம்பிய பாண்டித்தியம் வாய்ந்த புத்ததத்தமகாதேரர் தாம் பிறந்த ஊராகிய காவிரிப்பூம் பட்டினத்தையும், பூதமங்கலத்தையும், சோழநாட்டையும் இனிய கவிதைகளாற் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவை சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம், மணிமேகலையிலும் வரும் செய்திகளோடு இணைத்து விரிவாக ஆய்வு செய்யப்பட வேண்டியவை. திரிபிடகத்தின் பல்வேறு பகுதிகளுக்கு உரைகண்ட புத்தகோச மகாசாரியரும் புத்ததத்த தேரரும் சமகாலத்தவர். கி.பி. ஐந்தாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்த புத்ததத்தரின் ஆக்கங்களிற் காணப்படும் தமிழ்நாட்டுச் சூழலை நுனித்து நோக்குவதன் மூலம் தமிழக, ஈழ உறவுகளை மேலும் வகைந்து கொள்ளலாம். இவரது செயற்பாடுகள் மகாவிகாரை மடாலயத்தைச் சேர்ந்தன என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இலங்கையை ஆண்ட மகாநாமன் என்ற மன்னனின் காலத்திலே வருகை தந்த புத்தகோச மகாசாரியர் காஞ்சிபுரத்து பௌத்த பள்ளியைச் சேர்ந்த சுமதி, ஜோதிபாலர் ஆதியோரின் வழிப்படுத்தலின் பேரில் இலங்கைக்கு வந்தவர். மகாநாமன் காலத்தில் தமிழமகிஷி என்பவள் அவனின் மனைவியாக இருந்தமையும், அவன் மகன் சொத்திசேனன் தொடர்ந்து அரசனுனமையும் குறிப்பிடத்தக்கது. புத்தகோச மகாதேரர் மகாவிகாரைப் பௌத்த சங்கத் தலைவராகிய சுங்கபாலரின் வழிகாட்டலின் பேரில் விசுத்திமார்க்கம் முதலான நூல்களைப் பாலி மொழியில் எழுதினர். சுருங்கக்கூறின் புத்ததத்தர், புத்தகோஷர் காலத்தில் நிலவிய தமிழ் நாட்டுத் தொடர்புகள் பௌத்தக் கலாசார உறவின் நெருக்கத்தினை நன்கு காட்டுவதொன்ருகவும் பௌத்த மடாலயங்களில் வாழ்ந்து ஆங்கு அமைந்து காணப்பட்ட நூல்வளங்களின் செழுமையிலேயே இவர்களது பங்களிப்புக்கள் முழுமை பெறலாயின என்பதும் மனங்கொள்ளத்தக்கது. சுமதி, ஜோதிபாலர், கணதாசர் போன்ருேரும் புத்ததத்தர், புத்தகோஷர் போன்ருேரும் பற்றிய பாலி மொழிச் செய்திகள் நெருங்கிய தமிழக, ஈழ உறவினைக் காட்டுவன. பாலிமொழியையும், பௌத்த நூல்களையும் துறைபோகக் கற்றுணர்ந்த ஆசாரிய தர்மபாலர் சிங்கள உரைகளையும், தமிழ்நாட்டுப் பௌத்தப் பள்ளிகளில் இருந்த திராவிட உரைகளையும் ஒப்புநோக்கியே விளக்க உரைகளையும் எழுதினர். இதனை விரிவாகத் தொகுத்து நோக்கிய த. கனகரத்தினம் பின்வருமாறு கூறுவர்.

> ''அனுராதபுரக் காலத்திலே தமிழ்ப் பண்டிதர்கள் பலர் வாழ்ந்து தமிழை வளர்த்திருக்கிருர்கள். இக்காலத்திலே தமிழ்மொழி உயர்ந்த நிலையில் இருந்ததென அறியக்கிடக்கிறது. சோழர் படையெடுப்புக்குப் பின்னரே தமிழ்ப் பிக்குகளின் வருகை, தமிழ் நூல்களை இலங்கைக்குக் கொண்டு வந்தமை, இந்து கலாசாரம், பழக்க வழக்கங்கள் பரவியமை என்பன நிகழ்ந்தன. தமிழ்ப் பண்டிதர்களின் தொடர்பாற் சிங்கள மொழியிலே தமிழ் மொழியின் செல்வாக்கு உண்டாகியது. அக்காலச் சிங்கள நூல்களாகிய சத்தர்ம ரத்னுவளிய, தூபவம்சம், புத்சரணய என்பவற்றிலிருந்து இச்செல்வாக்குத் தெளிவாகின்றது.''

அபிதம்மத்த சங்கஹ, பரமத்தவினிச்சய, நாமரூப சமாசய ஆகிய நூல்களை எழுதிய அனுருத்ர தேரர் என்பவரும் ஒரு பாண்டி நாட்டுத் தமிழராவர். ரூபசித்திய என்ற பெயரை உடைய பாலி இலக்கண நூலையும், பஜிஜமது என்ற பெயரை உடைய மனத்தை உருக்கும் பாலி காவியத்தையும் உரைநடையில் எழுதிய புத்தம்மபிய திபங்காரதேரோ சோழ நாட்டைச் சேர்ந்தவராவர். இவர் கி.பி. 12-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தார்.

பொலநறுவைக் "காலத்திலே ஜாதகஅட்டுவாவிற்கு விளக்கவுரை எழுதிய ஆசிரியர்கள் சரளமாகத் தமிழ்ச் சொற்களைப் புகுத்தி எழுதியுள்ளனர். இக்காலப் பகுதியிலே தமிழிலக்கிய வளம் சிங்கள இலக்கிய மரபோடு நன்கு இணையும் சூழ்நிலை உருவாகியது. ஜாதகக்கதை மரபு பௌத்த மடாலயங்களினூடே பாலி மொழியிலிருந்தே சிங்களத்திற்கு மொழிபெயர்க்கப்பட்டது. வடமொழி வியா கரணச் சொல்லாட்சிகளைப் பாலிமூலங்களோடு இணைத்து ஆய்வு செய்யும் முறை சிங்கள மொழியில் 10-ஆம் 11-ஆம் நூற்ருண்டுகளைச் சேர்ந்த கலைச்சொற்

தொகுதிகளிற் காணப்படுகின்றது. ஒவ்வொரு ஜாதகக்கதையின் மரபும் மடாலயங் களிற் பயின்ற காலத்திலேயும், பெயர்க்கப்பட்ட காலத்திலேயும் இக் கலைச் சொற் தொகுதிகள் உருவாகியிருக்கவேண்டும். இந்த வரிசையிலே தோட்டகமுவ ஸ்ரீ ராகுல தமிழ ஜாதக கதா படய பற்றிக் குறிப்பிடுகின்ருர். பெயரமைப்பினைக் கொண்டு ஜி. பி. மமலசேகர தமிழ் ஜாதகக் கதைகளையொட்டி அமைக்கப்பட்ட கலைச்சொற் தொகுதி எனக் கூறுகின்ருர். சிங்களப் பௌத்த மடாலயங்களிலே தமிழ் பிக்குகள் ஜாதகக்கதைகளைக் கற்றனரோ அல்லது தமிழ் பௌத்தர்களுக்காக மொழிபெயர்ப்பு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டனவோ என ஊகிக்கலாம் என்பர் மலலசேகர. மடாலயங்களிலே பாலி மாணவர்கள் இருந்தமை போலத் தமிழ் மாணவர்களும் இருந்திருக்கலாம்.

தேரவாத, மகாயானவாத போராட்டங்கள் வலுவடைந்த அனுராதபுரக் காலத்திலே இலங்கையின் மடாலயங்களிலே பேணி வைக்கப்பட்ட நூல்கள் பல அழிக்கப்பட்டன. இலங்கையின் மத்திய கால கலாசார வரலாற்றைப் பற்றித் தொகுப்பு ஆய்வினை எழுதிய வில்லியம் கைகர் மடாலய கல்விப் பாரம்பரியத்தினை விரிவாகக் கூறியுள்ளார். ஒவ்வொரு பௌத்த மடத்திலும் எண்ணிறந்த நூற்றெரு குதிகள் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. மகாசேன மன்னன் காலத்திலே நூல்கள் பல அழிக்கப்பட்ட செய்தியை நிக்காயசங்கிரகய கூறுகின்றது. முதலாம் விஜயபாகு மன்னன் தமது எண்ணிறந்த கடமைகளின் ஒரு பகுதியாகச் சிலமணி நேரங்களைப் பௌத்த மடாலயங்களில் உள்ள நூல்களிலே செலவழித்தான். இதன் பயனுகவே அவன் எழுதிய தம்மசங்கிணி என்ற நூல் தோன்றியது. மகாவி காரை, அபயகிரிவிகாரை ஆகியன தலைமைப்பீடங்களாக விளங்கிய காலங்களிலும் அங்கு தமிழகத் தேரர்கள் வந்த காலங்களிலும் தமிழ்க் கல்வியும் ஒரு பகுதியாக அமைந்திருக்க வேண்டும். தமிழ்நாட்டு வைதீக, அவைதீகப் போராட்டங்களின் தொடர்ச்சியிலே இலங்கைப் பௌத்த தேரர்கள் பற்றிய உதிரிச் செய்திகளும் காணப்படுகின்றன. சோழராட்சிக் காலத்தில் தமிழ்நாட்டு பௌத்த செல்வாக்கின் சங்கமம் பற்றிய ஆய்வுகள் விரிவாக மேற்கொள்ளப்பட வேண்டும். தமிழ் நூல்கள் இல்லாத நிலையிலே பாலி, சிங்கள நூல்களின் அகச் செய்திகளும் புறச் செய்தி களும் இதனையறியத் துணை செய்வனவாகவுள்ளன.

குறிப்பாக கலிங்கமகானின் படையெடுப்புகளின் தொடர்ச்சியாகப் பௌத்த மடாலய நூலகங்களிற் காணப்பட்ட எண்ணிறந்த நூல்கள் அழிக்கப் பட்டமையைச் சூளவம்சம் குறிப்பிடுகின்றது. இக்காலகட்டத்திலே நூல கங்கள் பல சிதைவடைந்திருக்கவேண்டும். சேதவனராம விகாரையில் பொத்த காலயம் இருந்தமை பற்றிய செய்திகளும், புலத்திநகரத்திலே (பொலநறுவ) அவை முதலாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் பெற்றிருந்த செல்வாக்கையும் சூளவம்சம் கூறுகின்றது. இவை யாவும் அழிக்கப்பட்டமை இலக்கிய பாரம்பரியத் தினதும், தமிழக–ஈழ உறவுகளினதும் தடயங்கள் பலவற்றை அழித்தளவுமென லாம். தம்பதேனியாவைத் தலைநகராகக் கொண்டு அரசியல் எழுச்சி பெற்ற 13-ஆம், 14-ஆம் நூற்ருண்டுகளிலும் பின்னரும் காணப்படும் சிங்கள இலக்கிய மலர்ச்சியிலே அவதானிக்கக்கூடிய தமிழிலக்கியச் செல்வாக்கு, பொலநறுவக் காலத்திலும் முன்னரும் கூடுதலாகவே நிலவியிருக்கவேண்டும் என்பது நமது

கவனத்திற்குரியது. தம்பதேனியாவில் உள்ள பொத்துக்கல் கந்த என்ற இடத்தில் அரச அனுசரணையுடனான நூலகம் இருந்தமையையும் அங்கு வசிகார என்ற தேரர் நூலகராக இருந்தமையையும் சூளவம்சம் எடுத்துக்கூறுகின்றது. பின்னர் மூன்றாம் விஜயபாகு, முதலாம் புவனேகபாகு, நான்காம் பராக்கிரமபாகு, ஆறாம் பராக்கிரம பாகு காலங்களிலே சிங்கள இலக்கியம் பெற்ற மறுமலர்ச்சியிலே நிரம்பிய தமிழிலக் கியத் தொடர்புகள் உள்ளன. கொடகும்பற இதனை தெளிவாக விளக்கி உள்ளார். கோகியசந்தேசத்தில் வரும் வலிகமவில் தமிழ்ப்பண்டிதர்கள் வாழ்ந்த செய்தி குறிப்பிடத்தக்கது. சுருங்கக் கூறின் இடைக்காலத்துப் பாரிய அழிவுகள் தமிழக-ஈழ இலக்கிய உறவு பற்றிய செய்திகளை அழித்தாலும் சிதறுண்ட செய்திகள் பல இலக்கிய உறவின் தொடர்ச்சியைக் கோடிட்டுக் காட்டுகின்றன எனலாம்.

இலங்கைத் தமிழ் இலக்கிய வளர்ச்சியின் ஆரம்பகால வெற்றிடத்தை இணைக்கக்கூடிய செய்திகள் பல பாலி இலக்கிய ஆதாரங்களிலிருந்து மேலும் பெறப் படவேண்டும். வரலாற்றுப் பாரம்பரியத்தினூடே உதிரிச் செய்திகளும் தொகுக் கப்படும் நிலையிலே இலக்கிய-கலாசார இணைவை மேலும் வலுப்படுத்தலாம். குறிப்பாகப் பேராசிரியர் செனரத் பரணவிதான சிகிரிக் கவிதைகளின் தொகுப்பிலே அங்கு காணப்படும் தமிழ்ப்பாடல்கள் பற்றியும் குறிப்பிடுகின்றார். சிகிரியா ஓவியங்களில் ஈடுபட்ட நாடோடிக் கவிஞர்கள் பாடிய பாடல்கள் இன்னும் வெளிப் படுத்தப்படவில்லை. கி.பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த இப்பாடல் கள் மத்தியகாலச் சூழலை எமக்கு மேலும் தெரிவிக்கக்கூடியது.

தொகுத்து நோக்கின் இலங்கைப் பௌத்த மடாலய நூலகங்களினூடே வளர்ந்த கல்விப் பாரம்பரிய வளர்ச்சியிலே தமிழ்நாட்டுத் தேரர்கள் காலந் தோறும் பெற்றிருந்த முக்கியத்துவமும், செல்வாக்கும், பங்களிப்புகளும், தமிழக ஈழ இலக்கிய உறவை இணைக்கும் தடங்களாகும். கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலம் முதலாகக் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையும் போதிய ஆதார விளக்க மின்றிக் காணப்படும் இலக்கிய உறவு பின்னைய காலப்பகுதிகளில் வெளிப்படை யாகக் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சுருங்கக்கூறின் பாலி இலக்கிய வர லாற்றையும் சிங்கள இலக்கிய வரலாற்றையும், மேலும் துருவி நோக்கி, மகாவம்ச சூளவம்ச ஆதாரங்களோடு இணைத்துத் தமிழ்நாட்டு பௌத்த வரலாற்றுடனான ஒப்பியலாய்வு மேற்கொள்ளல் மறைந்த உறவுகள் பலவற்றைத் துலக்கும் எனலாம். வரலாற்றுக் காலம் முதலாக நிலவிய பௌத்த மதத் தொடர்புகள் மடாலயங் களிலும் அங்கு அமைந்திருந்த பௌத்தஆலயங்களிலும் தொடர்ச்சியாக எவ் வளவோ அழிவுகளின் மத்தியிலும் பேணப்பட்டு வந்துள்ளது. இவற்றின் மூலம் தமிழக ஈழ இலக்கிய உறவின் ஒரு பகுதியை மேலும் இனங்காண்பது அவசியமாகும்.

# மட்டக்களப்புக் கிராமிய தமிழ்க் கலாசாரம்

வித்துவான், பண்டித வி. சீ. கந்தையா
மட்டக்களப்பு, இலங்கை

ஈழம் என்ற தமிழ்ப் பெயராலே அழைக்கப்பெற்று வரும் அழகிய தீவகத்தின் கிழக்குக் கடற்கரை சார்ந்து சுமார் 150 மைல் நீளமும், 30 மைல் அகலமும் கொண்ட வளமான பகுதி மட்டக்களப்புத் தமிழகம். மிகப் பழமை யான தமிழ்க் குடிகள் வாழும் செழும் பகுதி இது. இந் நிலப்பரப்பின் நடுவே வடக்குத் தெற்காக சுமார் 35 மைல் நீளமும் இரண்டு மைல் அகலமுமுடைய மட்டக்களப்பு வாவி என்றழைக்கப்பெறும் பெருநீர்ப்பரப்பொன்றும் உண்டு. இதன் கிழக்குப் பகுதி நிலப்பரப்பினை, 'எழுவான்கரை' என்றும் மேற்கு நிலப் பரப்பினை, 'படுவான்கரை' என்றும் முன்னுளிலிருந்தே அழைத்து வருகிறார்கள். போக்குவரத்துச்சாதனக் குறைவினல், படுவான் கரைப்பகுதியிற் புதிய நாகரிகம் அதிகம் புக முடிய வில்லை. அதனல், பழந்தமிழ்க் கலை, கலாச்சாரம், மொழி, பண் பாட்டுவளம் என்பவை இன்றும் அங்கு அதிகமாகப் பேணிவளர்க்கப்படும் நிலை இயல்பாகவே உண்டு. அவ்வாறன, பழந்தமிழ்க் கிராமிய கலாச் சாரச் செல்வச் சிறப்புகளை, மேலோட்ட வகையாகவேனும் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்க மாகும்.

ஒரு நாட்டின் பழங் கலாச்சாரம் அங்குள்ளாரது மொழி வழக்கு, நாட்டுப் பாடல்கள், இசை நடன நிகழ்ச்சிகள், சமூக விழாக்கள் என்பனவற்றுட் பொதிந்து எதிர் காலத்தோருக்கும் தன்னைக் காட்டி நிற்கின்ற ஒரு கலங்கரை விளக்காக மிளிருவதென்பது ஒரு பொது உண்மை. இந்த அடிப்படையின் மீது நம்மிடை விளங்கும் கலாச்சாரச் சின்னங்களை ஆராயப்புகுவதனல் மட்டக் களப்பு நாட்டின் பழங் கலாச்சாரத்தின் அருமை பெருமைகளை நாம் காணலாம். இப்பெரும் சிறப்பினல்தான் உலகின் பல்வேறு பாகங்களில், சிறப்பாக இங்கிலாந்து ரஷ்யா, ஜெர்மனி, அமெரிக்கா, பிரான்ஸ், செக்கோசிலவகியா முதலிய நாடு களில் உள்ள கலாச்சார ஆராய்ச்சியாளர்களும் அறிஞர் பெருமக்களும் ஈழத்துக்கு வரும்போது மட்டக்களப்புத் தமிழ்க்கலாச்சார நிகழ்ச்சிகளை முடிந்தவரை தவருது தரிசித்து செல்கிறுர்கள். அண்மைக் காலங்களில் மேல்நாட்டுப் பல்கலைக் கழகங் களிலிருந்து ஆராய்ச்சியாளர் சிலர் மட்டக்களப்புக்கு வந்து இங்கே தங்கி இங்குள்ள மக்களுடன் கலந்து வாழ்ந்து எமது அருங்கலை கலாச்சாரச் செல்வங்களை அறிந்து செல்கிறுர்கள். மட்டக்களப்புக் கலாச்சாரத்தின் வெவ்வேறு துறை களெல்லாம் இத்தகைய மேனுட்டு ஆராய்ச்சி மாணவர்களுக்கு தனித் தலைப்பு களாகப் பயன்பட்டுள்ளதோடு நமது பெருமையினை மேல்புல உலகினுக்கு மேன் மேலும் எடுத்து விளக்கியும் நிற்கின்றன.

''பிறநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்'' என்ற பாரதியாரின் கூற்று இந்த வகையிலே பிழைபோகவில்லை. என்றுலும் நம்நாட்டார், அதாவது

நம்மவர் இன்னமும் நமது சொந்தச் சரக்குகளுக்கு மதிப்பளிக்கத் தயங்குவதேன்! வெட்கக் கேடான காரியம் இது. இலங்கையின் இன்றைய ஆட்சியாளர் தமது நற்கருத்தினுல் அங்கங்கே நியமித்துள்ள கலாசார அலுவலர் மூலம் தூசு துடைத்து மாசு போக்கி எம் கலாச்சார மணியை ஒளிவிளக்கம் செய்து நிற்றல் ஒரு வகையில் இன்றைய காலத்துக்கேற்ற பெருஞ் செயல்.

இனிய கொச்சைத் தமிழ் பயில, இயற்கை அழகு சொட்டும் இன்பச் சூழ லிலே வாழும் பழம் சமூகத்தினரைக் கிராமப்புற மக்கள் என்று நம்மிற் பலர் குறைவாக இன்று கருதுகின்றேம். வெறும் மேனிமினுக்கும், பகட்டான உடை யலங்காரம், போலிநகை நட்டுகளின் பளபளப்பு முதலானவற்றுக்குத் தம்மை அடிமையாக்காது, இயற்கையோடொட்டிவாழும் அம்மக்களிடத்தேதான் நமது உயிர்க்குணமாய் விளங்கும் உயர்ந்த பண்பாடு, கலாசாரம் என்பவற்றை நாம் காணலாகும். மட்டக்களப்புத் தமிழினத்தின் அத்தகைய கிராமிய கலாசாரச் சிறப்புகளை, மட்டக்களப்பு நாட்டுச் சூழலினை அடுத்து ஓரளவு காட்டலாமென எண்ணுகின்றேன்.

மட்டக்களப்புப் பேச்சு வழக்கிற் கொச்சைத் தமிழ் அதிகம் என்பர் மற்றை யோர். மற்றையோரது பேச்சிற்தான் கொச்சை வழக்கு அதிகம் என்பார் இங் குள்ளார். மொழிநூல் அறிஞர்க்கு இந்தக் கொச்சை வழக்கு நல்லதொரு விருந்து. பழந்தமிழ்ச் சொற்கள் பல, உருத்திரிந்த நிலையில் மட்டக்களப்புக் கிராம மக்களிடைப் பேச்சுவழக்கிற் கலந்து வழங்குகிறதென்பதை அறிஞர் பல்லோரும் இன்று ஒப்புக் கொள்கின்றனர். கிறுகு (திரும்பு) மறுகா (மறுகால், மறுமுறை), நறனை (நறுநெய்), மப்புலி (மயிற்பீலி), வழதிலங்காய் (வழுதுணங் காய்) முதலான சொற்களைக் கேட்டாற் புதியோருக்குச் சிரிப்புத்தான் வரும். ஊன்றிய நோக்கத்தின் பின் உண்மையும் சிறப்பும் விளங்கக் கண்டதும் சிரிப்பு வியப்பாக மாறுவதையும் அறிவர்.

''குழூஉக்குறி'' என்று ஓர் இலக்கண வழக்குச் சொன்மரபை இலக்கண நூலார் கண்டுவைத்திருக்கின்றனர். பண்டைக்காலத்தில் வழங்கி வந்து பின்னர் ஒழிந்துபோன இரண்டொரு உதாரணங்களால் மட்டும் இன்னமும் சுட்டப்படுகின்ற நிலையிலேதான் அவை நூலுட்கிடக்கின்றன. ஆனுல், பழந்தமிழர் செறிந்து வாழும் மட்டக்களப்புக் கிராமப்புறங்களிலே உள்ள வயற்களங்களுக்கு நாம் சென்ருல் ''குழூஉக்குறி'' யின் ஆட்சிச் சிறப்பினைப் பார்ப்போம். ''வெள்ளம் பெருக்கம்'' — இது சூடு போடும் களத்தில் வழங்கும் ஒரு ''குழூஉக்குறி''த் தொடர். தண்ணீர் இல்லை என்பது இதன் பொருள். நெல் பொலிந்து, வாரி மிகுந்து அதனுல் நாடு புரக்கும் வள்ளல்களான உழவர் பெருமக்கள், 'இல்லை' என்ற சொல்லைத் தம் செல்வமான தொழிற்களத்தில் உண்மையைக் கூறும் நிலை யிலும் கூடப் புகவிடுவதில்லை. அதனுல் ''இல்லை'' என்ற அமங்கலச் சொல் ''நிறைவு'' என்ற சிறந்த பொருளுடைய அதன் எதிர்ச்சொல்லால், ''பெருக்கம்'' என மங்கலமாகக் குறிப்பிடப்பட்டும் சிறப்பை எய்துகின்றது. இலங்கைத் தமிழ் உழவரிடை வழங்கும் கிராமியக் கலாசாரச் சிறப்பை எடுத்து விளக்குதற்கு இதைவிட வேறு உதாரணம் காட்டவும் வேண்டுமா!

மட்டக்களப்பு மக்களின் இயல், இசை நாடகத் தமிழ் வழக்குடன் கலந்த கலாசாரம் இன்றும் நாட்டுக்கூத்துகளில் பின்னிப் பிணைந்து வாழக் காணலாம். வட மோடி, தென்மோடி, விலாசம் என்ற நாட்டுக்கூத்துகளில் இழையோடிநிற்கும் ''திம்தக திமிதக'' என்ற தாளக்கட்டுகள்தாம் இன்றைய பரத நாட்டியக் கலைக்கான உரம்வாய்ந்த பண்டைய அடிப்படைத் தாளங்களாய் அமைந்து மட்டக்களப்புக் கலை கலாசாரத்தின் ஆணி வேராக பலமும் உறுதியும்கொண்டு நிலைத்து நிற்கின்றன.

''தாளத்தை வைத்துத் தாளம் புனைந்து சக்ர
வாளத்தை ஒத்தமுலை மங்கை மின்னுரே யரசர்
சூழத்துவரை நகராள் துரை வாறுர்''

இது ஒரு நாட்டுக் கூத்துப் பாட்டு. தென்மோடி நாடகமான அனுவுருத்திர நாடகத்திலுள்ள ஒரு கொச்சகத் தரு இது. கொச்சகத் தரு, கொச்சகம், தரு என்பன படிக்கும்போது வெவ்வெறுன இசையமைப்புக் கொண்டவை. தென்மோடி, வடமோடி, விலாசங்களில் இவையொவ்வொன்றின் இசைப்படிப்புக்கும்,பிடிப்புக்கும் மாற்றம் உண்டு. இது மிகச் சிறிய ஒரு சங்கதி. ஆனுல் மிகப் பெரிய புலமையின் அடக்கம் இதில் உண்டு. உணர்ந்தார் உணர்வார், மட்டக்களப்பு இசை, கலாசாரத்தின் நுணுக்கத்தை.

கிருஷ்ண ராசனது வரவு குறித்து அவனது வாசற்கட்டியங் கூறுவோர் கூற்ருக அமைந்தது இப்பாடல். இதில் வரும் தாளம் என்ற சொல் ஓர் இசைக் கருவியைக் குறிப்பது. மகளிரது தன பாரத்துக்கு இது ஒரு நுண்ணிய உவமை. தாளம், தரளம் (முத்துமாலை) புனைந்துள்ளதாம். எத்தகைய இனிய நயம் வாய்ந்த இலக்கிய ரசனை இந்தக் கூத்துப் பாட்டில் மிளிர்கின்றது. இயல் இசைத் துறைகளில் புலமை படைத்தோர் தான் நாடகப் புலவர்களாயும் அன்று இருந்தார்கள் என்பதற்கு வேறு சான்று வேண்டுமா? எட்டடி, குத்துமிதி, நாலடி என்ற தாளங்களுக்கான துடுப்புக்கு உயிர் கொடுப்பது இந்தக் கொச்சகத் தருக்கள். இவற்றின் உயிர்த் துடிப்பைக் கொண்டு இலங்குவன மட்டக் களப்பு நாட்டுக் கூத்தின் இலங்கக்கூடம் (அரங்கக்கூடம்) எனப்படும், பழம்பெருமை மிக்க திறந்த வெளியரங்கங்கள். அவற்றை அணுகிப் பார்த்தால் மட்டக்களப்பாரது தமிழ்க் கலாசாரம் புடமிட்ட தங்கமாய் மிளிர்வதைக் காணலாம்.

பழந்தமிழர் பெண்ணினத்திற்கு மதிப்புக் கொடுத்து வாழ்ந்தார்கள்என்று இலக்கியங்கூறும். கிராமப் புறத் திருமணங்களிலே இவ்வழக்கம் இன்றும் நடைமுறையிற் பரக்கக் காணப்படுகின்றது. மணமக்கள் பெரியோரால் தீர்மானிக்கப் பெற்றபின்னர், மணமகன் வீட்டார், மணமகள் வீட்டுக்குப் பெண் கேட்டுப் போகும் வழக்கம் தவறமுடியாத ஒரு கிராமியக் கலாசாரமாகும். இவ்வழக்கத்திலே பெண்கேட்டுப் போவோர் விதம் விதமான பலகாரங்கள், அரிசி, காய்கறி, தயிர், பால், நெய் முதலான உணவுப் பொருள்கள் யாவும் கொண்டு போய்ப்பெண்வீட்டாருக்குக் கொடுத்து வரிசை செய்தல் நியமம். மாசாத்துவான் கண்ணகியைக் கோவலனுக்குப் பெண்கேட்கப்போன நிகழ்ச்சியில் காணப்படும்

இம்மரபின் அழியாத தன்மையினைப் பட்டினங்களில் இன்றிக் கிராமப்புறத் தமிழ்குடிமக்களிடையேதான் இன்று நாம் கண்டு மகிழக்கூடியதாக இருக்கின்றது.

பழங்காலத் தமிழ்மக்களிடையே நிலவிய காதல் ஒழுக்கம் கிராமப்புறங் களிலே இன்றும் பரந்து காணப்படுவதையும் அந்நிகழ்ச்சியின் தொடர்பாய் எழுந்து நடக்கும் நாட்டுப் பாடற் சிறப்புகளையும் இன்றைய சமூக இலக்கிய நாடக விழாக் களிலும் வானொலி நிகழ்ச்சிகளிலும் சிறப்பும் விரிவுமுற நாம் கேட்டுக்கொண்டே இருக்கின்றோமாதலால் சிறந்த கிராமப்புறத் தமிழ்க் கலாசாரமான நாட்டுப் பாடல் பற்றி நான் இங்கு மேலும் கூறவேண்டியதில்லை என்று எண்ணுகின்றேன்.

குழந்தை பிறந்தவீடு, பெண்பிள்ளை புத்தியறிந்த (பருவமடைந்த) வீடு, குடிபுகும் வீடு, சாவுவீடு ஆகியவை யாவும் மட்டக்களப்பிலே வெவ்வேறான பழக்க வழக்கங்களையும் மரபு கலாசார நிகழ்ச்சிகளையும் மாறாது கடைப்பிடிக்கும் நிறு வனங்களும் திணைக்களங்களும் ஆகும். விருந்துக்கு வந்தோரை, உணவு கொள்ள அழைக்கும்போது சீலையால் வாய்மூடியிட்ட தண்ணீர்ச் செம்பை முதலிற் கொடுத்தல் ஒரு மாறாத வரிசை. இந்தக் கலாசார நிகழ்ச்சியின்போது 'முன்னீடு' கவனிக்கப்படும். முன்னீடு என்பது தருமர் செய்த இராச சூய யாகத்தில் நடந்த முதற் பூசைக்கு நிகரான ஒரு முதல் மதிப்பு நிகழ்ச்சியாகும்.

ஒரு வீட்டிலே ஒருவருக்கு நோய் காணுகின்றது என்றால், எக்காரணம் பற்றிய நோய் அது என்று ஆராய வைத்திய விற்பன்னர்களைத் தேடிச் செல் கின்றார்கள் வசதிநிறைந்த பட்டினத்துப் பெருமக்கள். பிரயாண வசதி வைத்திய வசதி முதலிய எதுவுமில்லாத கிராமப்புறத்தார் அது என்ன என்று அறியத் தக்கதாகக் ''குறி'' பார்க்கின்றார்கள். மந்திரம், தந்திரம், மருந்து என்பவற்றில் எதனால் நோயை மாற்றலாமென்று குறிமூலம் அவர்கள் கண்டுபிடித்தும் விடு கின்றார்கள். தலைவாழை இலை ஒன்றின்மீது வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு, தேங்காய்ப் பாதிகள் என்பவற்றின் இடையே மஞ்சள் நூற் கயிறு ஒன்றைப் போட்டுப் பார்ப்பதும், அந்தப் படைப்பிற்கு நேராக மேலே தூக்கிப்பிடித்த சிறிய வில் ஒன்றில் கட்டிய பாக்குவெட்டிபோன்ற இரும்பின் அசைவு கொண்டு பார்ப்பதும் முதலியனவாக இக்குறிபார்க்கப்படுகிறது. முடிவிலே அவசியமாயின் பேயாடிக் கட்டுச் சொல்லும் நிகழ்ச்சியும் மட்டக்களப்புக் கிராமப்புறமந்திர வைத்திய சாலைகளில் இன்றும் நடக்கின்றன. சங்ககால அகத்திணை இலக்கியங் களிலும், திருமுருகாற்றுப்படை, தொல்காப்பியம் முதலிய பழம் நூல்களிலும் காணப்படும் வெறியாட்டு நிகழ்ச்சியை நிகர்த்து, இன்றும் அழிந்து போகாது காணப்படும் இதுபோன்ற கிராமிய நிகழ்ச்சிகள் சாதாரணமானவையென்று நம்மால் பரிகசித்துவிடமுடியாதனவாகும்.

கோயில் விழாக்கள், கொண்டாட்ட விழாக்கள் முதலானவை வேறெங்கும் இல்லாத சிறப்பு அம்சங்கள் பலவற்றைக் கொண்டவை. அவையெல்லாம் நமது தனித்துவத்தை எடுத்துக் காட்ட உறுதுணையானவை. அவை திருட்டுப் போகா மலும், காணாமல் போகாமலும், மங்கிப் போகாமலும், மறைந்து போகாமலும், அழிந்து போகாமலும், ஒளிந்துபோகாமலும் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும்.

''மோட்டெருமை வெண்டயிரும் முப்பழமும் கற்கண்டும்
போட்டினிய சீனி தேன் பிசைந்து செந்நெல் வெண் சோற்றை''

மட்டக்களப்பார் உண்பார். தயிரோடு கறிபிசைந்துண்பர் மற்றையோர். இவ் வழக்கில் எது சிறந்தது என்று ஆராயவேண்டாம்; நமது வழக்கிலுள்ள சிறப்பு என்னவென்று ஆராய்ந்து பாருங்கள். அப்போது அத்தகைய வழக்கங்களைப் பாதுகாக்கும் உணர்ச்சி தானுகவே நமக்கு எழும். இத்தகைய பணியில், அரசாங்கக் கலாசாரத் துறையும் நமக்குத் துணை நிற்கின்றது. இயன்ற வரை அதற்குத் தவருது துணை கொடுத்து நமது சொந்தத்துவமான கலை கலாசாரங்களைப் பேணி வளர்க்கவும் பேணிக் காப்பாற்றவும் முன்வருவோமாக.

இன்று 'சிரமதானம்' என்ற ஒன்றைப்பற்றிப், புதியதுபோலப் பலரும் பேசிக் கொள்கிறுர்கள். கிராமப் புறங்களிலே செய்யப்படும் தனிவேலைகள், பொதுவேலைகள் என்பவற்றிற் பல முன்னுளிலிருந்து சிரமதான முறையிலேயே செய்யப்பெற்று வருகின்றன. ஒருவருடைய வீட்டுக்கு ஓலை வேய்தல், தோட்டத்தை உழுதல், கிணறு தோண்டுதல், வேலி கட்டுதல் முதலான வேலைகள் செய்ய வேண்டு மென்றுல் நண்பரும் உறவினருமான பலரும் ஒன்றுகூடிக் கூலி பெருது செய்து கொடுப்பது வழக்கம். அவ்வேலையின்போது வீட்டுக்காரர், அனைவருக்கும் உண ளிப்பது வழக்கம். அந்த உணவுக்கு ''பரத்தை'' என்று பெயர். இத்தகைய சிரமதானம் இன்று அரசினரால் நடத்தப்படவேண்டிய நிலைக்கு மற்றைய இடங் களில் வந்திருத்தலை இங்கு நோக்குதல் வேண்டும்.

சூடுபோடும் வயற்களம், மீன்பிடிக்கும் கடற்கரை வலைக்களம், நெற் குற்றும் உரற்களம் முதலானவை எல்லாம் இன்று மெல்ல மெல்ல இயந்திர மயமாக மாறி வருகின்றன. அப்படி மாற்றம் பெருத இடங்களில் இனிய ஓசை யோடு பாடப்பெறும் பொலிப்பாட்டும், வலைப்பாட்டும், வள்ளைப்பாட்டும் எல்லாம் தமிழ்க் கிராமப் புற மக்களின் தொழில் வளம், பொருள்வளம், கல்விவளம், மொழிவளம், கற்பனைவளம் என்பவற்றையெல்லாம் சிறப்புற எடுத்துக்காட்டும் செப்பேடுகள் போன்று, நடமாடும் இலக்கியங்களாக மிளிருகின்றன. ஈழநாட்டு மட்டக்களப்புக் கிராமப் புறங்களில் வாழும் இத்தகைய செல்வங்கள் யாவும் மட்டக்களப்புத் தமிழினத்தின் பழம்பெரும் கலாசாரச் சின்னங்கள் என்பதை நாம் மறவாது மதித்து அவற்றைப் போற்றிக் காத்தல் கடனுகும்.

# சமய இலக்கியங்கள்

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

எல்லா மொழிகளும் எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே இலக்கணம் கண்டன. ஆனால், தமிழில் விளங்கும் தொன்மையான நூலான தொல்காப்பியம் அம்மொழியைப் பேசி வாழும் மக்களின் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துத் தந்திருக்கிறது. இப்படித்தான் வாழவேண்டும் என்ற உணர்வு அரும்பும் தொடக்கமே சமய நெறியின் தொடக்கம். வாழ்க்கையின் அருமைப்பாட்டை உணர்தல், வாழ்க்கையின் நோக்கத்தையறிதல், வாழ்வாங்கு வாழக் காமுறுதல், ஒழுங்குகள் கால்கொள்ளுதல், ஒழுக்கநெறி நிற்றல் ஆகியன தலையெடுக்கச் செய்து தனி மனிதனையும் சமுதாயத்தையும் வழி நடத்துவதே சமயம். ஆதலால், தொல்காப்பியம் சமய இலக்கியம் எனப்பெறாவிட்டாலும் சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. தமிழரின் சமய அனுபவம் மெய்ப்பொருளியல் அடிப்படையிலானது. உலகியலை — உலகியலின் நிகழ்வுகளை ஆய்ந்து, சிறந்த செம்பொருள் காணும் ஆர்வமுனைப்பில், வாழ்க்கையில் முகிழ்த்த நெறி — செந்தமிழ்ச் சமயநெறி. இக்கருத்தினைத் தொல்காப்பியத்தின் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும்கூட நமக்கு தருகின்றன.

பொருளதிகாரத்திலும் கடவுள் வாழ்த்து, மனையற வாழ்க்கை, துறவற வாழ்க்கை ஆகியன குறித்து விளக்கும் தொல்காப்பியத்தை ஒரு சிறப்பான சமய இலக்கியமெனக் கூறல் தவறன்று. ஆயினும் இன்றுள்ள நிலையில் வாழ்க்கையிலிருந்து சமயம் பிரிந்து நெடுந்தொலைவு விலகி, வாழ்க்கையின் ஒரு பகுதியாகச் சமயம் விளங்குவதால், பலர் தொல்காப்பியத்தைச் சமய நூல் என்று கருதுவதில்லை.

தொல்காப்பியர் காலந்தொட்டே நெறிமுறை உணர்வு, தமிழர் வாழ்வில் பொதுளியிருந்ததால் பின்தோன்றிய சங்ககால இலக்கியங்கள் காதல், வீரம் பற்றி மிகுத்துக் கூறினும் வாழ்வாங்கு வாழும் ஆர்வத்தையும் காண்கின்றோம். சங்ககால இலக்கியங்களில் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் தனித்தன்மையுடைய சமய இலக்கியங்களாகும்.

பரிபாடல் மிகச் சிறந்த சமய இலக்கியம். உயிர், உலகியல் தொடர்புடைய வேட்கைகளில் ஆர்வம் காட்டித் தேடும் இயல்பினது. இவ்வுலகில் உயிர் வாழ்க்கைக்கு பொருள் இன்றியமையாதது. தவிர்க்க முடியாதது. தேவைகள் வாழ்க்கையை உந்திச் செலுத்துவன.

''பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை''

என்பது தமிழ்மறை. ஆனால் பரிபாடலில் பொன்னை விரும்பி வேண்டவில்லை. பொருளை விரும்பி வேண்டவில்லை. போகத்தை விரும்பி வேண்டவில்லை. ஏன்?

பொன்னும் பொருளும் மானிட சாதியின் படைப்பாற்றல் துணைக்கொண்டு படைக்கப்படுவன. போகம் அதாவது இன்புறுதல் மனித நலன்களைப் பொறுத்தது. இவற்றை இறைவனிடம் கேட்கும் பழக்கம் தமிழ்ச் சமய நெறியில் இல்லை. கேட்டாலும் இறைவன் தரமாட்டான். அவன் காரணங்களாக அருள் செய்வானேயன்றிக் காரியங்களாக அல்ல. என்ன வேண்டப்படுகிறது? அருள் வேண்டப்படுகிறது. அருளைப் பெற்றுத் தரும் அன்பு வேண்டப்படுகிறது. அருளையும் அன்பையும் படைத்திடும் அறம் வேண்டப்படுகிறது.

யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளி ணர்க் கடம்பின் ஒலிதா ரோயே (பரிபாடல் 5)

மேலும் சமய வாழ்க்கை தனி ஓர் உயிரின் உய்திக்கு மட்டுமன்று. ஒக் உயிரின் வாழ்க்கையைச் சமுதாய வாழ்க்கையில் இணைத்து வளர்ப்பதே சமயம். சிறந்த சமய நடைமுறை சமுதாய அமைப்பு கால்கொள்ளத் துணை செய்வது. சமுதாயத்தை இணைத்து அணைத்து இன்புறுத்த— இன்புற— அன்பு தேவை; அறம் தேவை. தமிழ்ச் சமய இலக்கியங்கள் சமுதாய ஒழுகியலை வலியுறுத்துவன. ஏன்? கடவுளுக்கே ''நீதி'' என்று பெயரிட்டு அழைத்தது தமிழ்ச் சமயம். ஆதலால் சமுதாய வாழ்வியலறங்கள் — உணர்வுகள் இங்கு வேண்டப்படுகின்றன.

சங்க கால இலக்கியங்கள், முழுமையாக வளர்ந்த கவிஞர்கள் பலரை நமக்கு அடையாளம் காட்டுகின்றன. சங்ககால இலக்கியங்களில் காதல் உண்டு; வீரம் உண்டு; ஆட்சிமுறைகள் உண்டு. இவைகளின் ஊடே அறநெறிக் கொள்கைகளும் விளக்கமுற அமைந்து கிடக்கின்றன என்பதை அறிதல் வேண்டும்.

சங்ககால இலக்கியம் காட்டும் வாழ்க்கைமுறை, பொறிகளில் தூய்மை காத்தலன்று; புலன்களில் தூய்மை காத்தலாகும். புலன்களில் தூய்மையுடையாருக்கே — செந்தண்மை வரும். அதனுல் தான் ''புலனழுக்கற்ற அந்தணாளன்'' என்று புறநானூறு (126) பேசுகிறது. இஃதொரு சமயக் கோட்பாடேயாம்.

அதுமட்டுமா? தமிழர் தம் வழிபடு கடவுளாகிய பரமசிவனின் வரலாறுகள் பலப்பல. அவை பழையவரலாறுகளாகவும் உருப்பெற்றுள்ளன; இலக்கியச் சான்றுகளாகவும் இடம் பெற்றுள்ளன. நமக்கு வரலாறு இன்றியமையாததன்று. அந்த வரலாறு வடித்துத் தரும் பயனுடைய வாழ்க்கை நியதி இன்றியமையாதது. சாதாரணமாக உயிரினம் வாழத்தான் விரும்புகிறது. எளிதில் இறக்க யாரும் விரும்புவதில்லை. ஏமாற்றங்களால், ஏற்படும் மனக்குறையால் நிகழும் தற்கொலைகள் உணர்ச்சி வயப்பட்டவை. அவை கணக்கில் எடுத்துக்கொள்ளத் தக்கன அல்ல. எல்லாரும் நெடுநாள் வாழத் துடிக்கின்றனர். அதற்காக மருந்துகளைத் தேடி அலைகின்றனர். அதுமட்டுமா? தாம் வாழ்வதற்காக மற்றவர்களைப் பலிகொடுப்பதற்கும்கூட சிலர் ஆயத்தமாகின்றனர். இது மனித இயல்பாக இன்று இருக்கிறது. பரமசிவத்தின் நிலை என்ன? அமரர்களைக் காப்பாற்ற அலைகடலில் எழுந்த நஞ்சினை, தாம் உண்டது சிவம். அமரர்கள் சாவா மருந்தாகிய அமுதத்தை

உண்டனர். ஆனால் சாவைத்தரும் நஞ்சினையுண்ட சிவம் வாழ்ந்தது. சாவா மருந்தை உண்ட அமரர்கள் செத்தனர்.

''விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்''

என்பது சிலப்பதிகாரம் (12:22). ஏன்? அமுதத்தால் மட்டுமா வாழ்ந்திட முடியும்? அமுதத்திலும் உயர்ந்த நல்லெண்ணம் வேண்டாமா? மற்றவர்கள் வாழவேண்டுமென்ற உணர்வே சிவம். யார் செத்தாலும் அக்கறை இல்லை. தாம் வாழ்ந்தால் போதுமென்ற அமரரின் எண்ணம் நஞ்சினும் கொடியது. ஆதலால், அமரர்தம் நெஞ்சத்திலூறிய நஞ்சை, அமுதத்தாலும் மாற்ற முடியவில்லை. ஆதலால், செத்தொழிந்தனர். இக்கருத்தினை நயம்பட புறநானூறு பேசுகிறது!

நெல்லிக்கனி, சாவா மருந்து. அதியமான் தான் வாழ விரும்பாமல் தமிழ் மூதாட்டியாகிய ஔவையாரே வாழவேண்டும் என்று எண்ணித் தருகின்றான். அதனால் பண்பாட்டுலகில் என்றும் அதியமான் வாழ்கிறான். ''நீலகண்டம்'' தன்னல மறுப்பின் சின்னம்; அருளுடைமையின் அடையாளம்.

ஓர் இனத்தில் சமயம் தோன்றி வளர்வது அந்த இனம் நன்கு வளர்ந்த காலக்கட்டத்தில்தான்; தமிழ், சமயத்தில் சிறந்து விளங்கும் மொழி. கடவுள் நம்பிக்கை, மதம், சமயம் ஆகியன ஒரு தன்மையனபோலத் தோன்றினாலும் மிகுதியும் வேறுபாடுடையன என்பது எண்ணத்தக்கது. தமிழர் சமய நெறிக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. ஆனால், தமிழ்ச் சமய நெறியின் கடவுள் நம்பிக்கை மற்றச் சமயங்கள் அல்லது மதங்கள் கடவுளைக் கருதுவது போலவன்று. தமிழ்ச் சமயத்தின் கடவுள் நம்பிக்கை, நம்பிக்கையின்பாற்பட்டது; நல்லெண்ணத்தின் பாற்பட்டது; ஆக்கத்தின் வழியிலானது; நீதியின்பாற்பட்டது.

மதம், மக்கள் மன்றத்தைத் தழுவாதது. சமயம், மக்கள் மன்றத்தைத் தழுவியதாக, மனித குலத்தை ஆக்குவதற்காகவே தோன்றியது. மதம், உருவாக்கப்பட்டது. சமயம் பரிணாம வளர்ச்சியில் உருவானது. மதத்திற்குப் பகுத்தறிவு பகையானது. சமுதாயத்திற்குப் பகுத்தறிவு உடன்பாடானது. மதம், மறுமையைப் பற்றிப் பேசுவது. சமயம் இம்மையையும் பேசும்; மறுமையையும் பேசும். மதம் ஊழ்வினையின் வலிமையை மிகுத்துக் காட்டும். சமயம், ஆள்வினையை மிகுத்துக் காட்டும். மதம், சிற்றெல்லைகளைப் படைக்கும். சமயம், எல்லைகளைக் கடந்த பொதுமையைப் படைக்கும். இத்தகு சமயமே தமிழர் சமயம். இதனையே சேக்கிழார் ''செழுந்தமிழ் வழக்கு'' (சம்பந்தர் புராணம் 24) என்கிறார். இந்த சமயநெறி ''இந்து மதம்'' என்ற கட்டமைப்பிற்குள் இல்லாதது. ஆனால் நாட்டின் நடப்பில் பிணைப்பு ஏற்பட்டு இந்து மதப் பிணைப்பில் வந்தபிறகு அதன் கொள்கைகளும் இதன் கொள்கைகளாகக் கலப்பின் வழி வந்துள்ளன.

சமயம் என்பது ''சமை'' என்னும் சொல்லின் அடிப்படையில் பிறந்தது. மானிட வாழ்க்கை, புலன்களின் நுகர்வுகளால் ஆயது; நுகர்வுகளுக்கு வாயிலாக இருக்கின்ற பொறிகளால் ஆயது. இப்புலன்களும் பொறிகளும் உயிரின் நலத்திற்கு

ஒத்திசைந்து உள்ளவாறு இயங்கினுல் உயிர்நலமுறும். ஆனுல், இயற்கையில் புலன்களும் பொறிகளும் உயிரோடு ஒத்துழைப்பதில்லை. எந்த உயிருக்கு நன்மை செய்து இன்புறுதல் வேண்டுமோ அந்த உயிருடன் இப்புலன்களும் பொறிகளும் போராடும்; அதை அலைக்கலைவு செய்யும். இதனுல், உயிர்க் குலத்தின் வாழ்க்கை தடம்புரண்டு போகிறது. மனித அறிவு, எண்ணத் தொடங்கிய காலந்தொட்டு சற்றேறக்குறைய 14500 போர்கள் உலகத்தில் நிகழ்ந்துள்ளன. இப்போர்கள் நாடுகளுக்கிடையே நடந்த போர்கள். சாதிகளிடையே நடந்த போராட்டங்கள். மதங்களுக்கிடையே போராட்டங்கள், வீடுகளுக்கிடையே நடந்த போராட்டங்கள். வீடுகளுக்குள் நடந்த போராட்டங்கள் இந்தக் கணக்கில் சேரவில்லை. இக்கொடிய போராட்டங்களில் கொன்று குவிக்கப்பட்ட மனிதர்களின் எண்ணிக்கை 364 கோடி என்றொரு புள்ளிக்கணக்கு பேசுகிறது. இப்புள்ளி விவரமும் நாடுகளிடையே நடந்த போர்கள் பற்றியதுதான். இங்கும் அங்குமாக நடைபெற்ற கொலைகள் இந்தக் கணக்கில் சேரா. ஏன் இந்த அவலம்? உயிரை, உயிரின் உணர்வை அன்பில் சமைத்து உலகு தழீஇய வாழ்க்கை வாழச் செய்யும் சமய நெறியில் ஈடுபடாமைதான்.

உயிரின் அறியாமைக்கு மிகுதியும் காரணம் ''செருக்கு'' என்பது சமய நூற் கருத்து. உயிரின் அனைத்துத் தீமைகளுக்கும் அதுவே அடிப்படை. இதனை அப்பரடிகள். (6665).

தினைத்தனையோர்பொறையிலா உயிர்போங் கூட்டைப்
பொருளென்று மிகுவுன்னி மதியால் இந்த
அனைத்துலகும் ஆளலாம் என்று பேசும்
ஆங்காரம் தவிர்நெஞ்சே அமரர்க் காக
முனைத்துவரும் மதில்மூன்றும் பொன்ற அன்று
முருகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க
நினைத்தபெருங் கருணையன்நெய்த் தானமென்று
நினையுமா நினைந்தக்கால் உய்ய லாமே'

என்று கூறி விளக்குகின்முர்.

சமய வாழ்க்கையின் பயன், பொறிகளும் புலன்களும் தூய்மையுடையன வாகி உயிர் அன்பில் தழைத்து வளர்தலேயாம். உயிரின் தூய்மை என்பது பயன் படாத் தூய்மையன்று. அல்லது தீமை செய்யும் தூய்மையன்று. மாருக, நன்முற்றல் நிகழ்த்தும் தூய்மையே தூய்மை. அகத்திலும் புறத்திலும் ஒத்து இயல்வதே தூய்மை. இதனைச் சேக்கிழார் ''பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்'' என்று விளக்குவார். தூய்மையில் உவர்ப்பு இல்லை; உவப்பு உண்டு. தூய்மை அருள் நலஞ்சான்றது. அங்கு வேறுபாடுகளில்லை; காய்தல் இல்லை. அதுவே தூய்மை. பழுத்த மனத்து அடியார்களாக விளங்குவது சமய வாழ்க்கையின் பயன்.

பொறை, சமய இயலின் ஒழுகலாறுகளில் சிறந்தது; விழுமியது. பொறை யுடைமை வழி மேலும் பல நல்ல ஒழுக்க இயல்புகள் வந்தமையும். பொறை — பொறுத்தாற்றல். நன்றும் தீதும் உலகியற்கை; சுழன்று வருவன. அவை

மானிட சாதியினுலேயே படைக்கப்பெற்று அனுபவிப்பன ஆகும். இதில் ஏன் மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை? பெரியோர், சிறியோர் என்பது அவரவர்தம் சூழ் நிலைக்கு ஏற்ப அமையும் ஒழுகலாறுகளில் விளங்கும் தன்மை. இதனுல் பெரி யோரை வியந்து பாராட்டுதலைத் தவிர்க்க வேண்டும். ஒரோவழி பெரியோரை வியந்து பாராட்டலும் சிறியோரை இகழ்தலும் கூடவே கூடாது. இஃது ஓர் ஒப்பற்ற சமுதாய நடைமுறை விதி.

தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்ருே ரன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிதுஎன மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்
இன்ன தென்றலும் இலமே
.........................................
..............................மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே. (புறம் 192)

என்பதறிக.

சங்ககால இலக்கியங்கள் அப்பட்டமான சமய இலக்கியங்களல்ல என்பதும், ஆயினும் சமய நாகரிகம் தழுவிய இலக்கியங்களே என்பதும் முன்பே கூறப்பெற்றன. சங்க காலத்தில் வாழ்க்கையே சமயமாக விளங்கியதால் சங்க கால இலக்கியங் களில் சமய வாழ்க்கையை விளக்கும் பாடல்கள் பல உள்ளன. இத்தகைய சமய வாழ்க்கையின் முடிவான செய்திதான் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' (திருமந்திரம் 2066) என்ற சொற்றொடர். ''எல்லா உலகமும் ஆனுய் நீயே'' என்ற அப்பரடிகளின் அருள்மொழியும் (6629) சாதி வேறுபாடற்ற ஒருமைப் பாடுடைய மனித குலத்தையே விரும்புகிறது.

மனித குலத்தை விரித்துத் தின்றழிக்கும் தீமையில் தீமை வறுமை, ஏழ்மை. சமய அறிவற்ருேர், வறுமையில் வாழ்தலும் கூட ஒருவகையான அறம் என்றும் ஆதலால் ஆசைகள் கூடாது என்றும் கூறுவர். இங்ஙனம் சொல்வது தவருன வழிகாட்டுதலாகும். இதனுல் உயிரியலில், உலகியலில் ஆர்வம் குறைந்து வறுமையே விஞ்சியது. ஏன்? ''வறுமை இயற்கை; மாற்ற முடியாதது'' என்ற கருத்து வேரூன்றியுள்ளதால் உழைப்பார்வம் இல்லை.

சமயநெறியின் நோக்கம் துன்பத்தைத் தொலைப்பது; இன்பத்தைப் படைப் பது; இம்மண்ணிலேயே விண்ணகத்தைக் காண்பது என்பர் சங்ககாலச் சான்ருே ராகிய பக்குடுக்கை நன்கணியார்,

ஓரில் நெய்தல் கறங்க ஓர் இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி அணியப், பிரிந்தோர்
பைதல் உண்கண் மணிவார்பு உறைப்பப்

படைத்தோன் மன்ற அப் பண்பி லாளன்
இன்னாது அம்ம, இவ் வுலகம்
இனிய காண்க, இதன் இயல்புணர்ந் தோரே (புறம் 194)

என்று பாடுகிறார். ஒரு வீட்டில் துன்பம் ஏன்? அழுகுரல் ஏன்? பிறிதொரு வீட்டில் மணமுரசு ஏன்? இந்த முரண்பாடு உலகில் ஏன்?இந்த முரண்பாடுதான் படைப்பியற்கை என்றால் படைத்தவனே பண்பிலாதவன். உலகியல் இன்னாததாக இருந்தால் என்ன? இந்த இன்னாத உலகத்தை அறிவறிந்த ஆள்வினையால் இனிமை யுடையதாக்குக என்று ஆற்றுப்படுத்துவதை, ஆணையிடுவதை அறிக. இக்கருத்தினை வாழ்வியலாக்காததால் கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரர் காலத்திலும் அவருக்கு முன் ஏழெட்டு நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த நிலையே நீடிக்கிறது. சுந்தரர் இன்பதுன்பம் விரவிய வாழ்க்கையை உடன்படாது மறுக்கிறார். சாவாது வாழவேண்டும் என்று மனித குலத்தை அறைகூவி அழைக்கின்றார். சுந்தரரின் இக்கருத்தினைச் சேக்கிழார் அழகுற விளக்குகின்றார்.

வறுமையை விரும்பியேற்பது உயர் சமய நெறியின் மரபன்று. வறுமையை நச்சுப் பாம்பின் நஞ்சினும் கொடியது என்று திருவாசகம் வருணிக்கிறது (போற்றித் திரு அகவல் 2440) ''நல்குரவென்னும் தொல்விடம்'' என்பது திரு வாசகம். மிகப் பிற்காலத்தில் வந்தவர்களாகிய சமய இயலின் தத்துவம் உணரா தார் வறுமைக்கு ஊழ் காரணம் என்றனர். மேலும் அறியாதார் சிலர் ஊழை நியதியாக்கி வெற்றிகாணமுடியாது என்றனர். ஆயினும் ஒருவர் வறுமைக்கு மற்றவர் முயன்று அதற்கு மாற்றுத் தேடுவதுதான் வாழ்க்கையின் சீலமாக அமைகிறது. இத்தகு சீலமுடைய ஒரு வாழ்க்கையை மிகப் பிற்காலத்தில் ''தருமகருத்தாக் கொள்கை'' யென்று கூறினர். இக்கொள்கையை ஏழாம் நூற்றாண்டிலேயே அப்பரடிகள் தந்த திருமுறை இலக்கியம் எடுத்து மொழிந்தது.

சமய வாழ்க்கை, உயிரின் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அறிகருவிகளை மையமாகக் கொண்டது. மனம், ஒன்றைப் பற்றுவது. மனம் பற்றிய ஒன்றன் தன்மையை ஆராய்ந்து நிர்ணயிப்பது புத்தி. அந்த ஒன்றை நோக்கி விரிவடைவது சிந்தனை. அதனை அடைதற்குரிய உறுதிப்பாட்டினை மேற் கொண்டு முயற்சி செய்வது அகங்காரம். ஆக, மனம்தான் தோணிபோல் பயன் படுகிறது. இந்த மனம், குறைவிலா நிறைவு, கோதிலா அமுது, வரம்பிலா ஆற்றல், பேரறிவு என்று புகழப்பெறும் கடவுளைப் பற்றுவதன் மூலம் அத் தன்மைகளைத் தன்னிடத்து ஈர்த்துத் தன்னையும் தன்னைச் சார்ந்த இதர கருவி களையும் தன்னையுடைய உயிரையும் வளர்த்துச் செழுமைப் படுத்துவதே வழிபாடு.

சமய வாழ்க்கையின் சீலம், உடற்சார்புடையது மட்டுமன்று. சமய நெறி யில் உடற்சார்பான ஒழுகலாறுகள் — வாயில்கள்— பாதுகாப்பு மட்டுமேயாம். அகம் நிறை ஒழுக்கங்களே சமய வாழ்க்கையின் பயன். உயிர், சமய — வாழ்க்கையின் அனுபவமாகிய பத்திமையில் வளரும்பொழுது தொண்டார்வமும் முகிழ்க்கும்; பார்வாழப் பணிசெய்யும் ஆர்வம் தழைக்கும்.

வையகம் தூய அன்பெனும் பத்திமையில் தழைத்துத் தொண்டுநெறியில் செழித்து வளர்வதே சமய இலக்கியங்களின் நோக்கம்; பயன்.

# பண்டைத் தமிழர் கணிப்பு நூல் புலமை

கணியமணி புலவன் புலிப்பாணி
*10, ஆர்டிசான் சண்முகம் தெரு, அயன்புரம், சென்னை-23*

நமக்குக் கிடைக்கும் பண்டைத் தமிழ் முழு முதல்நூல் தொல்காப்பியமே. இதனுள் கணிப்புக் கலையின் அகச் சான்றுகள் உள்ளன. அகத்திணை கூறுங்கால் ஐந்திணைகளின் முதல், கரு, உரிப்பொருள், மக்கள் ஒழுக்கம், காலம் இவற்றைக் கூறும் முகத்தால் தொல்காப்பியர் தமது நிலநூல் புலமை, மனித இயல் ஆய்வு (Human Science) உளநூல் திறன் (Psychology) மரபியல், விலங்கியல் கேள்வி, காலம் கூறுங்கால் தம் கணிப்பு நூல் திறன் இவற்றைத் தெள்ளிதின் வெளிப்படுத்தியுள்ளார்.

ஐந்திணைகளில் காரும், மாலையும் (ஆவணி, புரட்டாசி) முல்லைக்கும், கூதிர் யாமம் (ஐப்பசி, கார்த்திகை) குறிஞ்சிக்கும், முன்பனிக்காலம் மற்றும் பனி எதிர் பருவமான (மார்கழி, தை) இம்மாதங்களும் குறிஞ்சிக்கே சாரும் என்றும், மருதத்திற்கு அறுவகைப் பருவமும் சாரும் என்றும், நெய்தலுக்கு, பகற்பொழுதின் பிற்கூறும், பாலைக்கு இளவேனில், முதுவேனில் ஆகும், சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி மற்றும் பின்பனிக்காலமான மாசி பங்குனியும் உரித்து என்றும் தொல்காப்பியர் கூறுவர்.

கதிரவன் வானியல் நடுக்கோட்டை (Celestial Equator) தெற்கிலிருந்து வடக்காகவேனில் பருவ அற்பகல் ஒத்த நாளென்று (Vernal Equinox) கடக்கின்றான். இது ஆங்கிலம் மார்ச் 21ல் ஏற்படுகிறது. இது போன்று கதிரவன் மேற்படி கோட்டை வடக்கிலிருந்து தெற்கே கடப்பது கார்கால அற்பகல் ஒத்த நாளாம் (Autumnal Equinox) இது ஆங்கிலம் செப்டம்பர் 21ல் வருகிறது.

மேற்படி கோட்டுக்கு 23 பாகை வடபால் தள்ளியுள்ள கோட்டைக் கதிரவன் தொடல் தக்கிணயனம் எனப்படும். இது ஆடி முதல் நாளாம் (Summer Soltice).

இதே போல் மேற்படி கோட்டுக்கு நேர் தெற்கே 23 பாகை தள்ளியுள்ள கோட்டைக் கதிரவன் தொடுவது உத்தராயணம் (Winter Soltice) எனப்படும். இது, தைத் திங்கள் முதல் நாளாம்.

இக்காலக் கூறுபாடுகள் அனைத்தும் அறியாராயின், தொல்காப்பியர் மேற்படி ஐந்திணைக்கும் காலப்பகுப்பு பகுத்துக் கூறுதல் இயலாது,. எனவே அவர் காலக்கணிப்புத் திறனும் பெற்றிருந்தார் என்பதில் ஐயமில்லை.

அடுத்துக் கடைச்சங்கப் பாடல் ஒன்றில் கிடைக்கப் பெறும் கணிப்பு நூல் குறிப்பை, பின்வரும் பரிபாடல் 11-ம் பாடலில் காண்க.

''விரிகதிர் மதியமொடு வியல்விசும்பு புணர்ப்ப
எரிசடை யெழில்வேழந் தலையெனக் கீழிருந்து
தெருவிடைப் படுத்தமூன் றொன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளிவந் தேற்றியல் சேர
வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி
புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்
அங்கி யுயர்நிற்ப வந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்கப்பா லெய்த விறையமன்
வில்லிற் கடைமகர மேவப்பாம் பொல்லை
மதிய மறைய வருநாளில் வாய்ந்த
பொதியின் முனிவன் புரைவரைக் கீறி
மிதுன மடைய விரிகதிர் வேனில்'' என்பார் ஆசிரியர் நல்லந்துவனூர்.

முதல் மூன்று வரிகளில் எரியாம் அங்கிக்குரிய கார்த்திகையாம் இடபமும், சடையாம் ஈசனின் திருவாதிரை நாள் கொண்ட மிதுனமும், வேழமாம், யானை யோனியுடைய பரணியின் மேடமும் காட்டி, தெருவிடைப்படுத்த மூவொன்பதிற் றிருக்கை என்பதால், மேற்கண்ட மூன்று இராசிகளில் கூறப்படும், ஒவ்வொன்றும் ஒன்பது உடுக்கள் கொண்ட இடபவீதியாம், கன்னி, துலாம், மீனம், மேடம், இவையும் மிதுன வீதியாம் விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம் இவையும், மேட வீதியாம் இடபம், மிதுனம், கடகம், சிங்கமும் ஆக இவை 12 இருக்கை யாம் இராசிகளும் கூறப்பட்டன. இவ்விருக்கை சார்பாக விசும்பில் கதிர், மதி ஆம் இவ்விருகோளை முதலாகக் கொண்டவையே இராசிகள் 12-ம் ஆம். (கடக முதல் நேர் இடமான ஆறு இராசிகள் சந்திரனுடையவை, சிங்க முதல் நேர்வலமான ஆறு இராசிகள் சூரியனுடையவை. இனி இவற்றில் குறிப்பிட்ட நாளின் கோள் நிலை கூறுகின்றார்.)

வருடையாம் மேடத்தில் படிமகன் செவ்வாய் சேரவும், ஏற்றியல் ஆம் இடபத்தில் வெள்ளியாம் சுக்கிரன் சேரவும், புந்தி எனும் புதன் மிதுனம் சேரவும், விடியல் நேரத்தில் கார்த்திகை தெரியும்போது உதயமாகும், அந்தணனும் குரு பங்குவாம் சனியில் இல்லத்துணைக் கப்பால், அதாவது மகர, கும்பத்துக்கு அப்பாலுள்ள மீனத்தைச் சேரவும் இறையமனும். அதாவது யமனைத் தமையனாக பங்குவாம் சனியில் இல்லத்துணைக் கப்பால், அதாவது மகர, கும்பத்துக்கு உள்ள சனி வில்லின் கடையாம், தனுசின் பிற்பாலுள்ள மகரத்தைச் சேரவும், பாம்பாம் இராகு மதியம் மறைய வருநாளாம். சந்திரனைப் பற்றிய கிரகணமாம் பூரணை நாளின் விடியலில் வையை ஆற்றின் நிலை குறிக்கப்பெற்றது. இதனால் பாம்பும், மதியும் மகரத்திலும் அதற்கு நேர் ஏழில் சூரியன், கேதுவும் நின்றமை கூறப்பட்டன.

மேற் சொல்லப்பட்ட கோள் நிலை பின்னோக்கிக் கணிப்பின் அந்நாள் கி.மு. 25–6–540 ஆக ஏற்படுகிறது. அன்றைய கோள் நிலை வருமாறு — சூரியன் 95°, சந்திரன்–275°, செவ்வாய் – 15°, சுக்கிரன் – 55°, குரு°, 253°, சனி°, 298°, இராகு°, 275°, கேது°, 95° ஆக வருகின்றன. இக்கணிப்பில் சூரிய, சந்திரர் நீங்கலாக மற்றைய கோள்கள் தம்தம் ஆட்சி வீட்டில் சேர்ந்தமை காண்க.

எனவே இத்துணைப் பழங்காலத்தில் ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன் ஒரு தமிழ்ப்புலவர் உழந்து பொருள் கொள்ளும் சொல் முடிபுகளுடன் இசையும், அமைத்துப் பாடுவாராயின், புலமையுடன், அவர் தம் கணிப்பு நூல் திறனும் வியத்தற்குறித்தாம். வெறும் புலவரே இப்பேரறிவு படைத்தனராயின் முற்றும் கணிப்புக்கலை கற்றோர் அக்கலையில் அக்காலத்தில் எத்துணைத் தேர்ச்சிப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது கூறாமலே விளங்கும்.

கடைசி இரண்டு வரிகளில் ''அகத்தியன்'' என்னும் பெயருள்ள உடு (நட்சத்திரம்) தன் இடம்பெயர்த்து மிதுனமடைந்து கண்ணுக்குத் தோன்ற என்பது மிகவும் நுண்மை சான்றதாம். இது கதிரவன் தென்பால் திரும்பும் தக்கிணாயண ஆரம்ப நாளன்று (ஆடி முதல் நாள்) நேருவதாம். இதனை ஆங்கிலத்தில் (Summer Solstice) என்பர். இது முற்கூறிய இரவும் பகலும் ஒத்த நாளாம். இந்த நுணுக்கத்தைத் தமிழர் கி. மு. 540 லேயே அறிந்திருந்தனர் என்பது அறிந்து மகிழற்பாலது. அன்றியும் மேலே சொன்ன காலப்பகுதி தென்மேற்குப் பருவக் காற்றுத் திரும்பும்போது ஏற்பட்ட விடியலில் சந்திரகிரகணம் பிடித்து விட்ட அந்த நேரத்தில் வையை பொங்கிப் பெருகிற்று என்று கூறி தம் கணிப்பு நூல், வானநூல் திறனை ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

இனி சிலப்பதிகாரத்துள்ள சில கணிப்பு நூல் அகச்சான்றுகளைக் காண்போம்.

முதற்கண் கோவலன் கண்ணகி மணநாள் ஓர் உயர்முழுத்த நாளில் தான் பார்த்துச் செய்ததாக இளங்கோவடிகள் கூறுவர் ''இருபெருங் குரவரும் ஒரு பெருநாளான், மணவணி காண மகிழ்ந்தனர்'' என்பதில் ''ஒருபெருநாள்'' என்பதிலிருந்து இதுபெறப்படும். நாள் பார்க்கும் கணிப்பு நூல்திறன் அன்றும் வழக்கில் உண்டு என்பது இதனால் போதரும்.

ஆயின் கோவலன் கண்ணகியர் அழிந்து பட்டது என்னை எனின், இளங்கோ வடிகள் இக்கதை பாடியதே ''அரசியல் பிழைத்தோர்க் கறம் கூற்றாவதும் உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏற்றலும் ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டு மென்பதுமான'' இவற்றை நாட்டவே என்பாராதலின் கோவலன் கண்ணகியர் வாழ்வு ஊழ்வினை வயப்பட்டதாம் என்று கொள்ள வேண்டும். அதுவன்றியும் அதற்கு வாய்ப்பாக மணவினை முழுத்த நேரத்தில் கதிரவனைச் சுற்றி பரிவேடம் என்ற சுழற்சி வட்டம் ஏற்படல் போன்ற மாசும் (தோஷம்) நேர்ந்திருக்கக் கூடும். ஆதலின் இது ஊழின் பாலதாம்.

ஆயின் இளங்கோ வடிகள் இள அகவையில், அவையில் புகுந்தானொரு நிமித்திகன் இவர் அரசாகும் கூறுபாடுண்டு என்று கூற, அக்கூற்றைப் பொய்யாக் கித் துறவு பூண்டு தம்முனும் செங்குட்டுவனே அரசோச்சச் செய்தமையால் ஊழ் பிறழ வில்லையோ எனின் அதுவும் கூடுமாம்.

''ஊழையும் உட்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்'' என்ற குறளில் (தவ) முயற்சியால் ஊழ் வெல்லப்படும் என்பார் வள்ளுவர். ''கூற்றம் குதித்தலும் கைகூடும்'' ''வேண்டிய

வேண்டியாங் கெய்தலான் செய்தவம் ஈண்டு முயலப்படும்'' (தவம் முயலல்) என்ற குறட் டொடர்கள் இதையே குறித்தன.

இம்முயற்சி கூடாதவரே ஊழ் வயப்படுவர் என்பதைக் காட்டவே ''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்'' என்று வள்ளுவர் கூறினர். அடிகள் முன்னதற்கும் கோவலன் கண்ணகியர் பின்னதற்கும் எடுத்துக் காட்டாம். அதுவன்றி காலக்கணிப்பில் ஊறின்று.

அடுத்து நாடுகாண் காதையில்
''வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்க
காரிருள் நின்ற கடைநாள் கங்குல்'' என்ற வரிகட்கு உரை காணுங் கால் அடியார்க்கு நல்லார் கூறுவதன் கருத்தாவது:—

''(நிகழ்ச்சி நடந்த ஆண்டு) சித்திரை புகுதி நாள் (மாதப் பிறப்பு) மூன்றும் திதியும் சுவாதி நக்ஷத்திரமுமாம். அத்திங்கள் இருபத்தெட்டில் சித்திரையும் பூரணையும் கூடிய சனிவாரத்தில் கொடியேற்றி, இருப்பத்தெட்டு நாளும் (இந்திர) விழா நடத்தி, வைகாசி 28ல் முதற்பக்கம் (சுக்லபக்ஷம்) பதின் மூன்றும் திதி திங்கட்கிழமை கூடிய அனுடத்தில் கோவலன் மாதவி கடலாடினர். வைகாசி 29-ம் நாள் முதற்பக்கம் (சுக்லபஷம்) பதிநான்காம் திதியும் கொண்ட செவ்வாய்க்கிழமை கேட்டையில் ஏற்பட்ட நாச யோகத்தில் வைகறைப் பொழு திடத்து நிலவுபட்ட அந்தரத்தில் கோவலன் கண்ணகியர் மதுரைக்குப் புறப்பட்ட தால், நாசயோகத்தீமையால் இவர்கள் அழிந்து பட்டனர் என்றும், ''சித்திரை சித்திரை திங்கள் சேர்ந்தென'' என்ற இந்திர விழா எடுத்த காதை 64ம் வரி கொண்டும், கட்டுரை காதையில் சொல்லப்பட்டவற்றைக் கொண்டும் (பின்னர் கூறுவாம்) ''தேவரும் மக்களும் ஒத்துடன் திரிதரும் நாலேழ் நாளினும் என்ற'' மணிமேகலை அடிகளையும் பற்றுக் கோடாகக் கொண்டு விளக்குவார். இதனல் தீக்கோள் நிலையில் புறப்பட்டு கோவலன் கண்ணகியர் ஊறு கொண்டனர் என்று அடியார்க்கு நல்லார் ஆற்றல் பற்றிக் கூறுவர். இதனை ஐயுற்று பின்னர் சிலம்புக்கு உரைவளம் கண்ட திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் ''வைகாசித் திங்கள் முதற் பக்கத்து பதின்மூன்றும் நாள் அனுடம் கூடல் அரிது'' எனக் கூறுவர். ஆயின் நம் காலத்திலேயே இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் 1903ம் வருஷம் சூன் மாதம் 8ம் நாள், சோபகிருது வைகாசி 26ம் நாள் விடிந்து சுக்லபக்ஷ பதின்மூன்றும் திதி நா. 0.26 விஞடி உள்ளது. அன்று 17 நாழி 54 விஞடிக்குமேல் விசாகம் போய் அனுடம் வந்துள்ளது. எனவே ஒரே நாளில் வளர்பிறை திரயோதசியும் அனுடமும் வந்தன. தள்ளிவந்த போதிலும், இன்றைக்கு ஏறக்குறைய 2000 ஆண்டுகட்கு முன் அயனசுதி வேறுபாட்டால் இரண்டும் கூடி வர ஏது உண்டு. அடியார்க்கு நல்லார் எதுவும் அத்தாட்சி, ஆய்வு இன்றிக் கூறுர் ஆதலின், அவர் பெரிதும் உழைத்துக் காலத் தீக்கோள் கூற்றை எடுத்துக் காட்டியது போற்றற் குரித்தே. எனவே இதுவும் பண்டையர் கணிப்பு நூல் திறனைக் காட்டுவதாம்.

இனி பின்வருவனவற்றை முன்னரே அறிந்து கூறல் பண்டைத் தமிழர் பெற்றிருந்த கணிப்புத் திறங்களுள் ஒன்றும். கட்டுரைக் காதையில் இளங்கோ வடிகள் பின்வருமாறு கூறுவர்.

''ஆடித்திங்கள் பேரிருள் பக்கத்து
அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வெள்ளி வாரத்து ஒள்ளெரி உண்ண
உரைசால் மதுரையோடு அரைசுகே டுறுமெனும் உரையும் உண்டே''.

கண்ணகியை சினம் தணிப்பித்து மதுரைத் தெய்வம் மேற்படிக்கூறுகிறது. ''ஆடி மாத கிருஷ்ண பக்ஷ அட்டமி பரணி கார்த்திகை சேர்ந்த நாளில் வெள்ளிக் கிழமையில் மதுரையும், அரசும் அழியும்'' என்று முன்னரே சோதிட நூற் புலவர் கூறிய கூற்றும் உண்டு என்று இங்கு அடிகள் கூறுகின்ருர். இதனுல் வரும் பொருள் உரைக்கும் கணிப்புத்திறன் பண்டைத் தமிழர்க்கியல்பே என்பது பெறப் பட்டது.

அடுத்து செங்குட்டுவன் பத்தினிக்கு படிவம் அமைக்க வடபால் படை யெடுக்க எண்ணிய காலே, முதலில் கணிப்பு நூலோன் அதற்கான நல்ல நாளேக் கூறுவதைப் பின்வருவனவற்ருல் உணர்க.

''இருநில மருங்கின் மன்ன ரெல்லாம்நின்
திருமலர்த் தாமரை சேவடி பணியும்
முழுத்த மீங்கி முன்யி திசையில்
எழுச்சிப் பாலே யா கென்று''.

''ஆறிரு மதியினும் காருக வடிப்பயன்

ஐந்து கேள்வியும் அமைந்தோன்'' எழுந்து செங்குட்டுவனிடம் கூறு கிருன்.

''இதில் ஆறிரு மதியாம் 12 இராசி காருகமாகிய கிரக நிலேயும் ஐந்து கேள்வியாம் வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்ற பஞ்சாங்க நிலேயும் அறிந்து கற்றுத்துறை போகிய அரசவை சோதிடன் எழுந்து நின்று முழுத்தம் கணித்துக் கூறினன்'' என்பர் அடிகள். இதனுல் பண்டைத் தமிழகத்தில் சோதிடத் தொழில் அரசவைத் தொழிலாக இருந்ததென்றும் அவர்கட்கு மக்களிடையே பெருமதிப்பு இருந்ததென்றும் அறியக்கிடக்கின்றது.

இனி சங்க காலத்தில் தத்தம் தொழிலாற் பெயர் பெற்ற புலவர் பலர் காணப்படுகின்றனர். ''ஆசிரியன் நல்லந்துவனுர், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனுர், எழுத்தாளன் சேந்தம் பூதன், மதுரைக் கூலவாணிகன் சீத்தலேச் சாத்தனுர், மதுரைக் கொல்லன் வெண்ணுகனுர், தமிழ்க்கூத்தன் நாகன் தேவனுர், பண்ட வாணிகன் இளந்தேவனுர்'' என்ற புலவரில் வணிகர், கூத்துக் கற்பிப்போர், கொல்லர், ஆசிரியர் போன்ற தொழிலர் காணப்படுகின்றனர். இது போலவே ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' — என்ற வேறுபாடற்ற மக்கள் — மாநிலக்

கொள்கையை உலகுக்கு எடுத்துக்காட்டிய புறநானூற்றுப் புலவர் பெருமான் பெயர் ''கணியன் பூங்குன்றன்'' என்பதாம். கணியன் என்ற சொல் சோதிடத்தைத் தொழிலாகக் கொண்டவர் இவர் என்பதைக் காட்டும். இவர் தமிழ்ப் புலமையும் கணிப்புநூல் தேர்ச்சியும் ஒருங்கே பெற்றமை காண்க.

இதுகாறும் கூறியவற்ருல் பல்லாயிரம் ஆண்டுகள் முன்பிருந்தே தமிழர் மற்ற கலைகள் போல் கணிப்பு நூல் துறையிலும் பேரறிவும் ஆற்றலும் பெற்றிருந்தனர் என்பதைத் தெளிதின் அறியலாகும்.

இவ்வளவு கூறியபின் இக்கணிப்புக் கலை ஒரு அறிவியற்கலைதானு? என்ற ஐயம் நிகழல் இயல்பாம். அதற்கு விளக்கம் ஒருவாறு காண்போம்.

**கணிப்பு நூலில் அறிவியல் அடிப்படை**

மற்றவை போல இதுவும் அறிவியற்கலையே. மதியின் சுழற்சிக்கேற்ப Lunar Cycles மாதர் மாத விலக்கு காலம் அமைதல், கதிர் மதியம் இவற்றின் தட்ப வெப்ப ஒளிக்கதிர்களால் உலக சூழ்நிலைகளில் பற்பல பெரும் பாதிப்புகள் ஏற்படுவதும் இதற்கு அடிப்படைச் சான்ரும்.

கோள்கள் தனித்தனி இயல்பு கொண்ட நுண் அணுக்களால் திரண்ட பெரும் உருளைகளாம். கதிர் ஒளி பெற்று இவை பலதிறப்பட்ட பொருட் கூறுள்ள (இரசாயன) மேல்நிலை ஒளிக்கதிர்களை உமிழ்வனவாம் (Cosmic radiations).

# மலேசியத் தமிழ் நாட்டுப் பாடல்களில் தோட்டப்புறச் சமுதாயம்

டாக்டர் இரா. தண்டாயுதம்,
இந்தியப் பகுதி, மலாயாப் பல்கலைக் கழகம், கோலாலம்பூர் (மலேசியா)

நாட்டுப்பாடல் ஒரு தனிமனிதரின் குரலாக அல்லாமல் ஒரு சமுதாயத்தின் கூட்டுக்குரலாக ஒலிக்கின்றது. பனிமலையில் உருட்டப்படும் ஒரு பனிப்பந்து உருண்டுருண்டு கீழே வரும்போது படிப்படியாகப் பெரிதாகி வருவதுபோல, நாட்டுப் பாடலும் ஒவ்வொரு காலத்திற்கும் இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றபடியாகப் பெரிதாகி வளர்கின்றது. எங்கோ பிறந்து சிறிதாகப் புறப்படும் சிற்றாறு, வழியில் பல சிற்றாறுகளின் சேர்க்கையால் பேராறுவது போலச் சமுதாய அங்கத்தினர்கள் நாட்டுப்பாடலை விரிவடையச் செய்கின்றனர். மழை பெய்தவுடன் சில்லென்று பூக்கின்ற சிறுநெருஞ்சிக் காடுபோல, உணர்ச்சிமழை கொட்டும் போதெல்லாம் நாட்டுப்பாடல்கள் பூக்கின்றன.

மலேசியத் தமிழ் நாட்டுப் பாடல்களும் இவ்வகையில் சமுதாயத்தின் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் வாயில்களாகவே அமைந்துள்ளன. கடந்த காலங்களில் அவர்கள் எதிர்நோக்கிய பிரச்சினைகள், பட்ட துன்பங்கள், அனுபவித்த வேதனைகள், அவ்வேதனைகளின் இடையிலும் வீசிய மகிழ்ச்சி அலைகள், வேடிக்கைகள், எண்ணங்கள் முதலிய பலவும் இப்பாடல்களில் எதிரொலிக்கின்றன. பொருளாலும் உணர்த்தும் முறையாலும் ஆழமுடைய இந்நாட்டுப் பாடல்கள் சற்றும் பகட்டில்லாதவை. எழுத்தறிவு அதிகமில்லாத நாட்டுப்புற மக்கள் உருவாக்கிய இலக்கியமானதால் உணர்ச்சிகளில் மிகையோ கலப்போ இங்கில்லை. தாங்கள் உணர்ந்ததையும் அனுபவித்ததையுமே நாட்டுப்பாடல்களாக அவர்கள் உலவ விட்டுள்ளனர். மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் பெரும் பகுதி வாழுமிடம் தோட்டப்புறம். அத்தோட்டப்புற வாழ்க்கை எந்த அளவிற்கு நாட்டுப்புறப் பாடல்களில் எதிரொலித்துள்ளது என்று காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

மலேசியாவில் தோட்டப்புறம் என்பது பெரும்பாலும் ரப்பர்த் தோட்டங்களையே குறிக்கும். கடந்த ஒரு நூற்றாண்டு காலமாக ரப்பர், மலேசியாவின் பொருளாதார வளத்திற்குப் பெருங்காரணமாக விளங்கி வருகின்றது. ஈயமும் ரப்பரும் மலாயாவின் இரட்டைச் செல்வக் கடவுளர் என்றே குறிக்கப் படுகின்றன. மலாயாவின் செல்வ வளத்திற்குக் காரணமான இவைதாம் வேற்றுநாட்டுத் தொழிலாளிகளையும் பெருமளவில் ஈங்கு ஈர்த்தன. அவ்வாறு வந்தவர்களிலே இந்தியத் தொழிலாளர்களின் பங்கு மிகப் பெரிது. மலாயாவின் 'ரப்பர் வளத்திற்குக் காரணமானவர்கள் இந்தியர்கள் என்றும் எனவே இக் காலனியின் உயிரோட்டத்திற்கு அவர்கள் இரத்தம் போன்றவர்கள் என்றும்' ஏறத்தாழ அரை

நூற்ருண்டுக்கு முன்னரே அவர்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். இந்த அளவிற்குத் தங்களுடைய உழைப்பையே பொன்னுக்கியத் தொழிலாளர்கள் எவ்வாறு கொண்டுவரப்பட்டனர், எப்படி நடத்தப்பட்டனர், எப்படி வாழ்ந்தனர் என்பவற்றை ஆராயும் போது அவை கண்ணீர்க் கதைகளாக வரலாற்றில் நின்று விட்டன.

வாணிகம், பண்பாடு ஆகிய துறைகளில் மலாயாவிற்கும் இந்தியாவிற்கும் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகாலத் தொடர்பிருப்பினும், இப்போது இங்குள்ள இந்தியர்கள் இத்தொடர்பின் அடிப்படையில் வந்தவர்கள் அல்லர். பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பகுதி தொடங்கி ஏற்பட்ட குடியேற்றத்தின் காரணமாக வந்தவர்களே இவர்கள். சரியாகச் சொன்னல் 1786–1957 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில்தான் இக்குடியேற்றமே நிகழ்ந்தது. வளர்ந்து வரும் மலாயாவின் தொழில் தேவையே இக்குடியேற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது. எனவே வாணிபம் பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் நிகழ்ந்த பழைய முக்கியத்துவத் தொடர்பு பின்னர் திரும்பவே இல்லே.

1786-ஆம் ஆண்டு பினங்கு ஆங்கிலேயர் வசமான உடனேயே தற்கால இந்தியர் குடியேற்றம் தொடங்கி விட்டாலும், மலாயாவின் மக்கள் தொகையிலே ஒரு குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படுமளவிற்கு இக்குடியேற்றம் வேகமடைந்தது பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியிலேயாம். ஏனெனில் இக்காலக் கட்டத்தில் தான் இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி நிலேயானதுடன் மலாயாவிலும் அது வலுப் பெற்றது. சென்ற நூற்ருண்டின் இறுதிவரை கரும்பு, மரவள்ளிக் கிழங்கு, காபி ஆகியவையே இங்கு அதிகமாகப் பயிரிடப்பட்டன. அப்போது மலாயாவில் இவற்றைப் பயிரிடத் தேவையான தொழிலாளர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவாக இருந்தபடியால் வெளிநாடுகளிலிருந்து தொழிலாளர்களேக் குடியேற்றம் செய்ய வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. இவ்வாறு குடியேறியவர்களில் இந்தியர்களின் தொகை கணிசமாக இருந்தது. இந்தியர்கள் என்று பொதுவாகக் குறிப்பிடப்பட்டாலும் தமிழர்களே அவர்களில் பெரும் பகுதியினர். கூலிகள் என்றே அழைக்கப்பட்ட அவர்கள் ஒப்பந்தத்தின் பேரில் இங்கு வந்தனர். ஒப்பந்தம் என்பது பெயரளவிற்கே இருந்தது. தொழிலாளர்களின் அறியாமையை முழுக்க முழுக்கப் பயன்படுத்தி முதலாளிகளுக்குச் சாதகமாகவே இவ் ஒப்பந்தங்கள் இருந்தன. 'புதிய அடிமைமுறை' என்றும் 'மனித வியாபாரம்' என்றும் வருணிக்கப்படும் இம்முறையில் விற்றலும் வாங்கலும் தடையின்றி நிகழ்ந்தன. 1870-ஆம் ஆண்டு தஞ்சையின் தற்காலிகத் துணைத் தண்டல்நாயகமாக இருந்த ஹெச். ஜே. ஸ்டோக்ஸ் இத்தகைய வணிகம் ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார். மேஸ்திரிகள் என்ற கூலிகளேச் சேர்க்கும் ஆட்கள் எவ்வாறு கூலிகளின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதும், நாகப்பட்டினத்திலிருந்து அவர்களேக் கப்பலேற்றி இங்கு அவர்களே எப்படி விற்றனர் என்பதும் அவரால் குறிப்பிடப்படுகின்றன. தென்னிந்திய, குறிப்பாகத் தமிழ்த் தொழிலாளர்கள் இவ்வாறு கொண்டுவரப்பட்டதற்குக் காரணங்கள் உண்டு. மற்ற இனத்தாருடன் ஒப்பிடும்போது இவர்களே மிகமிக மலிவாகக் கிடைத்தனர் என்பதுடன் மிகமிகக் குறைந்த கூலிக்குக் கடுமையான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட தோட்டப்புறங்களில் உழைக்க இவர்களே ஏற்றவர் என்றும் கருதப்பட்டது.

அன்றியும் அவர்கள் ஏற்கனவே மிகக் கீழான வாழ்க்கை முறைகளுக்குப் பழக்கப் பட்டவர்கள் ஆதலால் அவர்களே பொருத்தமானவர் என்பதும் தோட்ட முதலாளிகளின் கருத்தாக இருந்தது.[1]

ரப்பர் தொழில் வளர வளரத் தொழிலாளர் தேவையும் வளர்ந்தது. இத்தேவையை நிறைவு செய்யும் முறையில் இந்தியத் தொழிலாளர் பெருமளவில் குடிபெயர்ந்தனர். *1891*-ஆம் ஆண்டில் *75,000* ஆக இருந்த இந்தியர் எண் ணிக்கை *1911*-ல் *270,000*-க்கும் *1921*-இல் *470,000*-கும்உயர்ந்தது, இதனை உணர்த்தும். எண்ணிக்கை உயர உயரப் பிரச்னைகளும் பெருகின; துன்பங்களும் கிளைவிட்டன.

இக்காலகட்டத்தில் தமிழச் சமுதாயம் இருந்த நிலையையும், அறியாமை யிலும் வறுமையிலும் மூழ்கியிருந்த கொடுமையையும், ஆடுமாடுகளைப் போல் நடத்தப்பட்ட முறையையும் வரலாற்று நூல்களும் அரசாங்க அறிக்கைகளும் பலபடப் பேசுகின்றன. எனினும் பாதிக்கப்பட்டவர்களுடைய உள்ள உணர்ச்சி களை நேரடியாக அறிய வாய்ப்பில்லாமலே போய்விட்டது. தாங்கள் அனுபவித்த கொடுமைகளை அவர்கள் எழுத்துருவாக்கி நிலைப்படுத்தவில்லை. அவ்வாறு செய்யாததால் இன்று இரண்டாம்நிலை மூலங்களிலிருந்தே அவற்றை அறிய வேண்டி யுள்ளது. எனினும் இக்குறையைப் போக்குவது போல எழுதா இலக்கியமாகிய நாட்டுப்பாடல்கள் விளங்குகின்றன. ரப்பர் பயிரிடத் தொடங்கிய ஒரு நூற் ருண்டு காலத் தமிழ்ச் சமுதாயத்தையே இந்நாட்டுப் பாடல்கள் காட்டுகின்றன. அதற்கும் முன்னர் இங்கு வந்து துன்பப்பட்ட தமிழ்ச் சமுதாயத்தின் கூட்டுக்குரல் காற்ருேடு கலந்துவிட்டது போலும்! சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியிலிருந்து இங்குக் குடியேறத் தொடங்கிய இந்தியத் தொழிலாளர் மூன்று வகைப்பட்டனர். முதல் வகையினர் ஒப்பந்த முறையில் கொண்டுவரப்பட்டவர். இரண்டாம் வகை யினர் கங்காணிகளால் சேர்க்கப்பட்டவர்கள். மூன்ரும் வகையில் இவ்விரண்டு வகைகளுக்குட்படாமல் தாங்களாகவே வந்த தொழிலாளர் அடங்குவர். இவற்றுள் முதல் வகையான ஒப்பந்த முறை *1910*-ஆம் ஆண்டில் ஒழிக்கப்பட்டு விட்டது.

*1898*-ஆம் ஆண்டிலிருந்து கங்காணிமுறை ஒழிக்கப்பட்ட *1938*-ஆம் ஆண்டு வரை *1,153,717* தொழிலாளர்கள் இம்முறையின் வழி கொண்டுவரப் பட்டுள்ளனர்.

கங்காணியும் தோட்ட முதலாளியின் ஒரு தொழிலாளியே: எனினும் முதலாளியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அவருக்கு வேண்டியதைச் செய்வதற் காகத் தன்னுடைய சொந்த ஊரிலிருந்தோ சுற்றுப் பக்கங்களிலிருந்தோ ஆள் திரட்டித்தருவதில் இவர் முன்னிற்பார். அவ்வாறு திரட்டப்பட்ட ஆட்களை மேற்பார்வையிடுவதும் அவர்களைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதும் கங்காணியின் முக்கிய வேலைகள். இதற்காக ஆள்திரட்டும் வேலைக்குத் தரப்படும் தரகுப் பணத் துடன் அவர் மேற்பார்வையில் உள்ள வேலையாட்களுக்காக நாளொன்றுக்கு மூன்றிலிருந்து ஆறு காசுகள் வரை 'தலைக்காசும்' பெறுவார். எந்த ஒருநிலையை யும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி, தொழிலாளர்கள் மேல் தனக்குள்ள

கட்டுப்பாட்டை வலுப்படுத்தி, அவர்கள் தன்குழுவிலிருந்து விலகிப்போகாவண்ணம் செய்து கொள்வதில் இவர் வல்லவர். இம்முறையில் தொழிலாளருக்கும் தோட்ட முதலாளிக்கும் இடையில் ஒரு முக்கியமான இணைப்பாகக் கங்காணியே விளங்குகிறார் எனலாம். ரப்பர்த் தோட்டங்களைப் பொறுத்தவரை கங்காணியின் பங்கே முதன்மையாக இருந்துள்ளது.

மலேசியத் தமிழ் நாட்டுப்பாடல்களில் பெரும்பான்மையானவை ரப்பர்த் தோட்டங்களை ஒட்டியே எழுந்துள்ளன என்றாலும் ஒரு நாட்டுப்பாடல் காப்பி, ரப்பர், தேயிலை, கரும்புத் தோட்டங்களில் தமிழ்ச் சமுதாயம் அனுபவித்த கொடுமைகளை நெஞ்சைத் தொடும் வண்ணம் காட்டுகின்றது. கூலி என்ற பெயரிலே அவர்களைப் பதிவுசெய்ததையும், மனைவி மக்களை ஏமாற்றி அவர்களை நாகப் பட்டினம் அழைத்துச் சென்றதையும், அங்கு அவர்கள் நடத்தப்பட்ட முறையையும் இத்தோட்டங்களில் அவர்கள் பட்ட துன்பங்களையும் இந்நாட்டுப் பாடல் மிகத் தெளிவான முறையில் விளக்குகின்றது.

''காப்பி ரப்பர் தேயிலைக் கரும்புத் தோட்டக் காட்டினிலே கூப்பிட்டு நம் இந்தியரைக் கூலியென்று பேர் கொடுத்து கொண்டு போறார் பதிவு செய்து ரயிலேற்றி பெண்டுபிள்ளை அனைவரையும் ஏமாற்றி (காப்பி) ஏழுநாள் மண்டபத்தில் இறக்கி எங்களை அங்கு வைத்து ஆளொன்றுக்குப் பத்துரூபாய் அட்வான்ஸ் என்றே கொடுத்து அம்மைகுத்தி அனைவரையும் அழுக(அழ) வைத்தார் ஆ(டை)ட துணி மணிமுதலாய் அணிய வைத்தார்.

உப்புபுளி உணவுகளை உரப்புகளை அளந்தளித்து
தப்பிதம் செய்த கைதிகளைப்போல் தண்டனை மிக சுமந்து
அப்பப்பா! பசிக்கொடுமை உண்ணுகிறார்
யாரிடம் போய்ச் சொல்வோமென்று எண்ணுகிறார். (காப்பி)

காடுமலை மேடு பள்ளம் — கண்டகண்ட இடங்களெல்லாம் மாடுகள் போலே யுழைத்து — மலையேறிப் பாடுபட்டும் ஓடிவராார் பூட்ஸ்காலால் உதைக்க— ஓடுரவிப் போகுதையோ இதை நினைக்க''. (காப்பி).

என்பது அந்நாட்டுப்பாடல். *1870*-ஆம் ஆண்டிலே ஹெச். ஜே. ஸ்டோக்ஸ் அன்று கூலிகளை நாகப்பட்டினத்திலிருந்து கப்பலேற்றியனுப்பியதைப் பற்றி எழுதி யுள்ளதையும், *1912*-ஆம் ஆண்டில் தம்முடைய இந்திய வருகையை முடித்துக் கொண்டு திரும்பிய மலாயாத் தொழிலாளர் கட்டுப்பாட்டு அதிகாரி மலாயாத் தோட்ட முதலாளிகள் சங்கத்தில் ஆற்றிய உரையையும் இன்று நினைவு கூர்ந்து இப்பாடலுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போதே இதனை முழுமையாக உணர முடியும். முன்னவர் மேஸ்திரிகள் ஆள்திரட்டிய முறையையும், அவர்கள் நாகப்பட்டினத் திலிருந்து கப்பலேற்றப்பட்டு விற்கப்பட்ட முறையையும் விவரிக்கப் பின்னவர் கப்பல் புறப்படுவதற்கு முன் நாள் நாகப்பட்டினத்தில் கூலிகளின் தேர்வுக்குப் பிறகு ஆளொன்றுக்கு ஒரு சுருட்டு தரப்பட்டதையும் அவர்கள் எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகிய கதையையும் பின்னவர் விவரிக்கும் போதுதான் தப்பிதம் செய்த கைதிகளைப்போல் தண்டனை மிக சுமந்து' என்பதன் பொருளை முழுமை யாகப் புரிந்து கொள்ள முடியும். கங்காணியின் தேர்விற்குப் பின் ஒவ்வொரு

கட்டத்திலும் தொழிலாளி சிறைக்கைதியாகவே நடத்தப்படுவதை மற்ற நாட்டுப் பாடல்களும் நன்கு உறுதி செய்கின்றன.

இவ்வாறு கொண்டுவரப்பட்ட தொழிலாளர்கள் ஓயாமல் நாள் முழுதும் வேலை செய்து பட்ட துன்பங்களை மற்றொரு நாட்டுப்பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது.

''தேயிலைத் தோட்டத்திலே ஐயோ — பாரதச்
சேய்கள் நின்று தியங்கி மயங்குறார் ஐயோ (தேயிலை)
ஓயாது நாள்முழுதும் — பல
ஊழியம் செய்து உடம்பெல்லாம் நோகுறார் (தேயிலை)
நோயால் வருந்துகின்றார் — மிக்க
நோக்கும் சவுக்கடி தாங்குறார் ஐயையோ (தேயிலை)''

நித்தம் ஒரு மழையும் — ஐயா — நேசமுடனே பெஞ்சா நாட்டுவாக்காளி வந்து — ஐயோ — கொட்டித் தவிக்கின்றார் ஐயோ (தேயிலை)

காசாசைப் பேய்பிடித்த — மட்டிக் கங்காணிகள் தந்த மங்குகளை நொந்து (தேயிலை)

என்ற நாட்டுப்பாடல் தொழிலாளர்கள் அன்றுபட்ட துன்பங்களை இன்றும் கண்முன் நிறுத்துகின்றது. ''தேயிலைத் தோட்டத்திலே' என்று தொடங்கும் இந் நாட்டுப் பாடல் இலங்கையிலும் பர்மாவிலும் கூடத் தொழிலாளரிடையே பரவலாகப் பரவியிருந்ததாகத் தெரிகிறது. எனினும் இது எங்கு தொடங்கியது எனத் தெரிய வில்லை. மலேசியாவைப் பொறுத்தவரை கெடா மாநிலத்தில் குரூண் என்ற இடத்திலிருந்து ஐந்துமைல் தொலைவில் உள்ள தைலித் தோட்டமே இப் பாடலில் தேயிலைத் தோட்டம் என வழங்கப்படுவதாக ஒரு தொழிலாளர் கூறினார். இது மேலும் ஆராயத் தக்கது.

மலாயாக் காடுகளை இவ்வாறு தோட்டங்களாக மாற்றுவதற்கு அல்லும் பகலுமாகப் பாடுபட்ட தொழிலாளர்கள் இங்கு கொண்டுவரப்பட்ட கதையே ஒரு சோகக் கதைதான். தொழிலாளர்களுடைய ஏழ்மையும் அறியாமையுமே இங்குக் கங்காணிகளின் முதல்களாயின. அவற்றுடன் கங்காணிகள் கொடுத்த பொய்யான வாக்குறுதிகளும் தொழிலாளர்களை ஈர்த்தன. 1913-ஆம் ஆண்டி லேயே 'அமரித பஜார்' பத்திரிகையும் 1915-ஆம் ஆண்டில் 'இந்தியர் குடி யேற்றம்' என்ற திங்கள் இதழும் இது குறித்து எச்சரிக்கை விடுத்துள்ளன. கங் காணிகள் எப்படிப் பகட்டாகத் தங்கள் கிராமங்களுக்கு வந்து, நட்பாகி, அங்குள்ளவர்களின் துன்பங்களில் பங்கு கொள்வதுபோல் நடித்து, மலாயாவைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறி ஆள் திரட்டினர் என இவ்வெச்சரிக்கைகள் தெளிவாகக் காட்டுகின்றன. மிகைப் படுத்தப்பட்ட வருணனைகளும் பொய் வாக்குறுதிகளும் தொழிலாளர் உள்ளத்தில் பற்பல நம்பிக்கைகளையும் கற்பனைகளை யும் தூண்டி விட அவற்றைக் கங்காணிகள் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டனர். மலாயாவில் மிக எளிய வேலைக்கும் மிக அதிகமான பொருள் பெறலாம் என்பதே கங்காணிகளின் தாரக மந்திரமாக இருந்தது. இதை விளக்கும் வகையில்

சீனிக்குக் காக்காய் ஓட்டுவதுதான் மலாயாவில் வேலே என அவர்கள் ஆசை காட்டினர். இதை நம்பிக் கப்பலேறிய தொழிலாளர்களின் ஏமாற்றத்தை ஒரு நாட்டுப் பாடல் இவ்வாறு வெளிப்படுத்துகிறது.

''கங்காணின்னு கங்காணி கறுப்புச்சட்டைக் கங்காணி சஞ்சியிலே கூட்டி வந்து சாகடிக்கும் கங்காணி.

சீனிக்கும் காக்கா யோட்டிச் — சீராக வாழலான்னு சிரிக்கச் சிரிக்கப் பேசிவந்து — சீரழிக்கும் கங்காணி!

ஆவடியில் கிடைமடக்கி — அஞ்சடியின் நிக்குவெச்சி பெனுங்குச் சீமையிலே பெரட்டுக்களம் போட்டவனும்!

கருவாட்டைச் சுட்டுக்கினு — கஞ்சித்தண்ணி குடிச்சிக்கினு காசுபணம் சேக்கலாண்ணு — கையடிச்சுக் கூட்டி வந்தான்!''

சீனிக்குக் காக்காய் ஓட்ட மட்டுமல்ல, வாழைப்பழத்திற்குக் குரங்கோட்டவும் ஆள் வேண்டும் எனக் கங்காணி ஆட்களேக் கூட்டி வந்ததையும் மற்ெறாரு நாட்டுப் பாடல் காட்டுகிறது. தோட்டத்தில் வேலே செய்ய விருப்பமில்லாவிட்டாலும் அப்பம் விற்றே பொருள் சேர்த்து விடலாமென்றும் ஒரு தட்டு அப்பத்திற்கு ஒரு தட்டு வெள்ளி (மலேசியப் பணம்) கிடைக்கும் என்றும் கங்காணி கூறிய ஆசை வார்த்தைகளும் இந்நாட்டுப்பாடலில் வெளிப்பட்டுள்ளன.

''சீனிக்குக் காக்காயோட்ட — கட்டினு வந்த கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி!

இங்குலாலான் முள்ளு — டிங்குன்னுதே! லப்பர் கொட்டை டப்புன்னுதே!

ஒருதட்டு அப்பத்துக்கு ஒருதட்டு வெள்ளின்னு சொன்ன கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி.

இங்கு லாலான் முள்ளு — டிங்குன்னுதே! லப்பர் கொட்டை டப்புன்னுதே!

வாழைப்பழத்துக்குக் குரங்கோட்ட கட்டினு வந்த கருப்புச்சட்டைக் — கதிர்வேலு கங்காணி!

இங்கு லாலான் முள்ளு டிங்குன்னுதே! லப்பர் கொட்டை டப்புன்னுதே!

என்பது அந்நாட்டுப் பாடல்.[2] தொழிலாளர்கள் எப்படியெல்லாம் ஏமாற்றி அழைத்துவரப்பட்டனர் என்று காட்டுவதுடன் எவ்வளவு கடினமாக அவர்கள் உழைக்க வேண்டியிருந்தது என்பதையும் இப்பாடல் காட்டுகிறது. பாறை இருப்பது கூடத் தெரியாமல் வளர்ந்திருக்கும் லாலான் புற்களுக்கிடையே மம்மட்டி யைப் போடும் போது அப்புற்களே ஒலி செய்வது போலக்காட்டுவதும் தரையில் உள்ள ரப்பர்க் கொட்டைகள் கால் மிதிபடுவதால் உடைப்பட்டு எழும்பும் ஓசையும் தொழிலாளர்களின் துன்பத்தைத் துல்லியமாகக் காட்டி விடுகின்றன.

மற்ெறாரு நாட்டுப்பாடல் ஒரு பெண்ணுக்கும் கங்காணிக்கும் இடையில் நடைபெறும் உரையாடல் போல அமைந்துள்ளது. மலாயாவிற்கு அவளேக் கூட்டி போகக் கங்காணி ஆசைவார்த்தை காட்டுகிறுன். அவளும் மயங்கி விடுகிறுள். எனினும் இடையிடையே சிறு சந்தேகங்கள் எழுகின்றன. சோருக்க அடுப்பும்,

குத்துவதற்கு உரலும், இருப்பதற்குக் குடிசையும் அங்கு கிடைக்குமா என எண்ணுகிறுள். கங்காணியோ எல்லாம் ஒன்றிற்கு இரண்டாகக் கிடைக்கும் என்றும் அதுவும் சொந்தத்தில் கிடைக்கும் என்றும் கூறுகிறுன்.

''ஆக்கவோர் அடுப்புண்டோ — என்னைக் கூட்டி வந்த கங்காணி
அடி நம்படுப்பு ரண்டடுப்பு — சொந்தடுப்புதான் — சுருக்க
நடந்துவாடி செக்கு (கப்பல்) மேலே — போய்வருவோம்!
குத்தவோர் உரலுண்டோ — என்னைக் — கூட்டி வந்த கங்காணி!
அடி நம்மவுரல் ரண்டுவுரல் — சொந்தவுரலுதான்
நடந்து வாடி செக்கு மேலே — போய் வருவோம்!
குந்தவோர் குடிசையுண்டோ — என்னைக் — கூட்டிவந்த கங்காணி!
அடி நம்மகுடிசை ரண்குடிசை — சொந்தக் குடிசைதான் —
நடந்துவாடி செக்குமேலே போய்வருவோம்!''

மலாயாவில் தன் செல்வாக்கு எப்படிப்பட்டது என்பதையே இப்பாடலில் கங்காணி காட்ட முயல்கிறுன். இத்தகைய ஒரு தவருன தோற்றமே பல தொழிலாளர்கள் இங்குவரக் காரணமாக இருந்தது.

கங்காணி தோட்டப்புறத்தின் எல்லா இடங்களிலும் தன் செல்வாக்கைக் காட்டினுன். எல்லா இடங்களிலும் எல்லா வேலைகளிலும் அவன் காணப்பட்டதால் அவனுக்கு என்ன தான் வரையறுத்து வேலை என்ற சந்தேகம் ஏற்பட்டது. அதே நேரத்தில் நினைத்த இடத்திற்கு சென்று நினைத்த வேலையைச் செய்யும் அவன் செல்வாக்கும் ஒரு பிரமிப்பைத் தந்தது. இவையிரண்டும் ஒரு நாட்டுப்பாடலில் அழகுற வெளிப்பட்டுள்ளன.

''என்னக் கூட்டிவந்த கங்காணிக்கு கண்டிராக்டிலே
என்னைப் பார்த்து வந்த கங்காணிக்கு பழம் வெட்டுவேலை
என்னை இட்டுவந்த கங்காணிக்கு — ஸ்டோரிலே வேலை
என்னைக்கூட்டிவந்த கங்காணிக்கு — கோலாம்பூர்லே வேலை''

என்பது அந்நாட்டுப்பாடல். பார்த்த இடத்திலெல்லாம் கங்காணியே நிறைந்திருந்ததை இப்பாடல் காட்டுகிறது.

தன்னை எதிர்த்துப் பேசுவதையும், தனக்குச் சமமாகப் பேசுவதையும் கூடப் பொறுத்துக்கொள்ள முடியாத அளவிற்குக் கங்காணி செல்வாக்குப் பெற்றிருந்தான். ஒரு நாட்டுப்பாடல் இந்த அதிகாரத்தை நன்கு வெளிப்படுத்துகிறது. ஒரு தொழிலாளி பால்வெட்டிக் கொண்டிருக்கிறுன். கருக்கல் நேரம். அப்போது பக்கத்து மேட்டில் யாரோ வந்து நிற்பது தெரிகிறது. 'யார்'? எனக் கேட்கிறுன். அங்கு வந்து நின்ற கங்காணிக்கோ தன்னை 'யார்?' எனக் கேட்டுவிட்டானே என்ற கோபம். உடனே அரைநாள் வேலை போட்டுவிட்டான். இதனை,

''ஆரஞ்சு மேட்டிலே — ஐயா வந்து நிக்கிருராம்
ஆருன்னு கேட்டதுக்கு அரைப்பேரு போடுன்னுராம்''

என்ற நாட்டுப்பாடலில் காணலாம். இந்த அதிகாரமும் செல்வாக்கும்தான் பெண்களிடம் கங்காணிகள் தவருக நடக்கக் காரணமாக இருந்தன. தனக்கு

இணங்கும் பெண்களுக்கு நல்ல நிரைகாட்டுவதும், இணங்காத பெண்கள் சரியாக வேலை செய்யவில்லை என்று கூலிக்காசை வெட்டுவதும் அவர்களுடைய வாடிக் கைகள். இதனுல் தோட்டத்தை விட்டே போய்விடலாம் என்னுமளவிற்கு வெறுப்பேற்படுவதும் உண்டு. இவ்வுணர்வுகள் பல நாட்டுப்பாடல்களில் வெளிப் பட்டுள்ளன. அன்றைய தோட்டப்புறப் பின்னணியையே மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்தி விடுகின்றன. இப்பாடல்கள்.

''வீராயி சீக்கிரம் எழுந்து வாடி — நம்மை
விரட்டுகிருர் கங்காணிமார் பொட்டுக்குப் போடி!

ஏத்துளி பட்டைச்சாக்கு எங்கடி வச்சே? — நான்
அங்குமிங்கும் தேடிப் பார்த்தேன் கிடைக்கவே இல்லே!

தொடத்தொடத்தான் காடிபோட்டுத் தொரையும்
வந்திட்டான் — அந்தக்

கிஸ்முஸ் என்று பேசும் கிராணி வந்திட்டான்

அஞ்சாம் நம்பர் காட்டுக்குள்ளே என்னேவெட்டச் சொல்லுருர்
மெத்தப் பயமாகுதையா — நானும் வேற தோட்டம் போறேனேயா!''

என்பது அப்பாடல்களில் ஒன்று. இப்பாடலே சில என்பது வேறுபாடல்களில் ஒன்று. இப்பாடலே சில சிறுசிறு வேறுபாடுகளுடனும் பாடப்படுகிறது. அவற்றில் இந்நிலே இன்னும் விரிவாகப் பேசப்படுகிறது.

''வீராயி சீக்கிரமா எழுந்து வாடி — உன்னே
விரட்டுகிருன் கங்காணி பெரட்டுக்குப் போடி

தொடதொடத்தான் காடிபோட்டுத்

தொரையும் வந்துட்டான் — இந்த
எஸ்மூஸு கிராணியும் கிட்ட வந்துட்டான்

கோள் சொல்லிக் கங்காணி— கிட்ட வந்துட்டான் — ஏட்டைப் புரட்டுகிருன்
எல்லம்மாவைத் தேடுகிருன் —

எட்டாம் நம்பர் பாசாவிலே — என்ன வெட்டச் சொல்லுருன்
பத்தாம் நம்பர் பாசாவிலே — பாலெடுக்கச் சொல்லுருன்.

கையைக் கையைக் காட்டுருன் — பத்து வெள்ளி கொடுக்கிருன்
ஆ ஊ என்னு சொன்னு — அரைப்பேரு என்னுருன்.

பார்த்தா பயமாகுதே — இந்தக் கிளேரியா எஸ்டேட்டிலே''

வீராயி சீக்கிரம் எழுந்து வாடி
அடிச்சி ஓட்டுகிருர் கங்காணி — பெரட்டுக்குப் போடி!

சங்கு சத்தம் கேக்குதடி — ஜல்தியா வாடி — அந்தச்
சதிகாரக் கங்காணி ஏசுவாரடி!

குடுகுடுத்தான் வண்டியேறித் துரையும் வந்திட்டார்
குட்மார்னிங் என்று சொல்லிக் கிராணி வந்திட்டார்

காயம் பட்டதென்று கூலிக்காசை வெட்டுறார்
சின்னச் சின்னப் பெண்களுக்கு நல்லநிரை காட்டுறார்
என்னைப் போல ஆண்களுக்கு — ஏதோ பாசா காட்டுறார்
பார்க்கப் பயமா இருக்குதடி — நமக்கும் —
பாலுவெட்டு வேண்டாமடி — இந்தப் பாழாப்போன தோட்டத்திலே!''

என்ற இருபாடல்கள் அவ்வாறு அமைந்தவை. பாடல் அமைப்பில் சில வேறு பாடுகள் இருப்பினும் அடிப்படைப் பொருளில் மாற்றமில்லை. தேர்ந்தெடுத்த பிரம்பைக் கையில் வைத்துக் கொண்டு பாறை மீது நின்று கங்காணி சத்தம் போடுவதை,

''கிள்ளிப் பிரம்பெடுத்துக் கிளிமூக்கு லேஞ்சி கட்டி
வட்டக்கல்லு பாறையிலே — தங்கமே தில்லாலே
வந்து சத்தம் போடுவாண்டி என் பூஞ்சோலைக் குயிலே''

என்ற நாட்டுப் பாடலிலும் காணலாம். பல பெண்களோடு கங்காணி கொண் டிருந்த தொடர்பை வேறொரு நாட்டுப்பாடல் இவ்வாறு காட்டுகிறது.

''ருதுவான சேதிகேட்டு மெதுவாகக் கைபுடிச்சி மூணுமாசம் போனப்புறம்
மூடிவச்சுக் கழுத்தறுத்து மொட்டப் பசங்களுக்கு — மூணுமுடி
போட்டவனே!
தொட்டுத் தொடுசலுக்குத் தொங்கநிரைப் பாப்பாத்தி — கட்டித்
தழுவிக்கக் கட்டிலிலே காமாட்சி கருக்கில் களத்தினிலே காத்தானின்
பெண்டாட்டி — மோகம் திரலையோ மூதேவிக் கங்காணி?
மூணுமுடி போட்டாலும் முழு புருஷன் வந்தாலும் காட்டுக்கு
வந்துவிட்டால் கண்ஜாடை போகலையே!
உன்னால கெட்டவநான்
ஊரறியச் சொல்லுறனே!''

கங்காணிமார்களின் அதிகாரத்தையும் செல்வாக்கையும் கண்டு சில பெண்களே அவர்களை நாடுவதும் உண்டு. அவ்வாறு நாடி அடைந்துவிட்டாலும் அவர்கள் 'இரவல் கணவர்கள்' தாம் என்று எச்சரிக்கை செய்வது போல ஒரு நாட்டுப் பாடல் அமைந்துள்ளது.

''அத்தாப்பு வீடுகட்டித் குட்டித் தங்கம்
அதில ஒரு ஜன்ன(ல்) வச்சி குட்டித் தங்கம்
எட்டிஎட்டிப் பார்த்தாலும் குட்டித்தங்கம்
இரவல் புருஷன்தான்டி குட்டித்தங்கம்''

என்பது அந்நாட்டுப் பாடல்.

எவ்வளவு கடுமையாக உழைத்தாலும் முழுக்கூலி கிடைப்பதென்பது சிரமமான ஒன்று என்பதைக் கங்காணி மனைவியே கூறுவதைப் போல ஒரு நாட்டுப் பாடல் அமைந்துள்ளது.

''காலையிலே ஆறுமணிக்குக் கடுமையான பெரட்டுதான்
கங்காணிமார்களுக்கு கத்திரிமார்க்கு சுருட்டுதான்
முன்னூறு மரம் வெட்டினுலும் முழுப்பேர் போடக் கஷ்டம்தான்
எந்தன் புருஷனுக்குக் கங்காணி வேலைதான்''

என்பது அப்பாடல். மற்றெரு பாடல் கங்காணி மனைவியின் காசாசையை,

''கங்காணி கங்காணி — கங்காணி பெண்டாட்டி
காசுக்காரி என்னிருந்தேன்
பச்சைக்காட்டுத் தொங்கலிலே
மொச்சைக்கொட்டை விக்குருளே''

என்று கேலி செய்கிறது.

தன் கட்டுப்பாட்டில் இருக்கும் ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒவ்வொரு நாளும் 'தலைக்காசு' பெற்று வந்த கங்காணி ஒன்றைச் சிந்திக்க வேண்டும் என்று சொல்வதைப் போல் ஒரு நாட்டுப்பாடல் உள்ளது. தொழிலாளிகள் அத்தோட்டத்தில் அவனது கட்டுப்பாட்டில் உள்ளவரைதான் அவனுக்குத் 'தலைக்காசு' கிடைக்கும். அவனது கொடுமை தாங்காமலோ அல்லது வேறு காரணங்களாலோ அவர்கள் ஓடிப்போய்விட்டால் கங்காணியின் கதி என்னவாகும்? நிர்வாகிகளின் அன்பு குறைவதுடன் தலைக்காசும் அல்லவா போய்விடும்? இதை நினைவுபடுத்துவது போல்,

''கங்காணி கங்காணி கறுப்புச்சட்டைக் கங்காணி — இங்கு
நாலாளு ஓடிப்போனு நாலுமூலை சந்தியிலே
நட்டுக்குவியா கங்காணி?
மூணுளு ஓடிப்போனு — முச்சந்தி மூலையிலே
முக்குவியா கங்காணி''?

என்ற பாடல் அமைந்துள்ளது.

தோட்ட நிர்வாகத்தின் கெடுபிடி தாளாமல் சிலர் சொல்லிக் கொள்ளாமல் அடிக்கடி ஓடிப்போவதும் உண்டு. அவ்வாறு ஓடிப் போகும் தொழிலாளரைப்பற்றி,

''அந்தத் தோட்டம் இந்தத் தோட்டம் — பப்பாளித் தோட்டம்
படுத்த பாயைச் சுத்திகிட்டு — எடுத்தாண்டி ஓட்டம்''

என்ற பாடல் எழுந்துள்ளது. சாதாரணமாக எல்லாத் தோட்டங்களிலும் வழங்கும் இப்பாடல், ஒவ்வொரு தோட்டத்திலும் 'பப்பாளித் தோட்டம்' என்பதற்குப் பதில் தன் தோட்டத்தின் பெயரைக் கொண்டிருக்கும். குறிப்பிட்ட தோட்டத்தை ஒட்டி எழுந்த வேறு சில நாட்டுப்பாடல்களும் உண்டு.

''துள்ளுகுஞ்சாம் தோட்டம்னு — நான் வந்திருக்க மாட்டேன்
மம்மட்டி இருக்கும் வாட்டம் — நான் தூக்கிப்போட மாட்டேன்''

என்பது அத்தகைய நாட்டுப்பாடல்களுள் ஒன்று.

இந்நாட்டுப் பாடல்கள் பொதுவாகத் தமிழர்கள் இந்த நாட்டுக்குக் கொண்டுவரப்பட்ட முறையையும் தோட்டங்களில் அவர்களுக்கு அமைந்த

வாழ்க்கை முறையையும் காட்டுகின்றன. இவற்ருேடு ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் எழுந்த நாட்டுப்பாடல்களும் காணப்படுகின்றன. பாடல்களின்பொருளைப் பார்த்த அளவில் இவை எப்போது அரும்பியிருக்கும் என இனங்கண்டு கொள்ளத் தக்க வகையில் அமைந்திருக்கும். எடுத்துக்காட்டாக,

''பாலுமரம் வெட்டலான்னு — பழைய கப்பல் ஏறிவந்தேன்
நாப்பத்தைஞ்சி காசைப்போட்டு நட்டெலும்பை முறிக்கிருனே
முப்பத்தைஞ்சி காசைப்போட்டு — முட்டெலும்பை முறிக்கிருனே''

என்ற பாடலைக் குறிக்கலாம். பொதுவாகவே தோட்டத் தொழிலாளர்களுக்கு நாட்கூலி குறைவாக இருந்தாலும் 1900-ஆண்டு வாக்கிலேயே நாட்கூலி 35-45 காசுகளாக இருந்தது. எனவே இக்காலப்பகுதியில் இந்நாட்டுப்பாடல் எழுந்ததாக ஊகிக்கலாம். அவ்வாறே 1930-களில் ரப்பர் விலையில் ஏற்பட்ட சரிவினுல் தோட்டத் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டதை,

''குப்புறப் படுத்துகிச்சே — ரப்பரு பாலு—நானும்
கப்பலேறி வந்தேனே கெப்புருனுலே — ஓரப்பர் பாலே!
தைப்பிங்கு கிட்ட — நான் அள்ளுரு வெட்ட
என் மாமனுரு கட்(டை) ட எங்க மாமியாரு நெட்(டை)ட—ஐயா
எனக்கு வாய்ச்ச பெண்டாட்டிக்குக் காலு ரெண்டும் குட்(டை)ட''

என்ற பாடல் வேடிக்கையாகக் காட்டுகிறது.

அஞ்சல்துறைச் சேவை பெருத நாளில் ஏழ்மை பிடித்து தள்ள இங்குத் தோட்டப்பாட்டாளிகளாக வந்த மக்கள் ஊர்ச் செய்திகள் தெரியாமல் பட்ட இன்னலையும், முக்கியமான சிறப்புக்கள் கூட உரிய காலத்தில் தெரியாமல் பட்ட துன்பத்தையும் சில ஒப்பாரிப் பாடல்கள் சோக ஒவியங்களாக்கிக் காட்டுகின்றன. ஒரு பெண்ணின் தந்தை ஊரில் இறந்து விடுகின்ருர். இவளோ அவரிடமிருந்து கடிதம் வரும் வரும் என்று எதிர்ப்பார்த்துக் காத்திருக்கிருள். கடைசியில் தாமத மாகச் செய்தி வந்து சேர்கின்றது. அதைச் சொல்லி இவ்வாறு அழுகின்ருள் அவள்:

''ஆத்திலே தண்ணிவரும் — என்னைப் பெத்த ஐயாவே
நீ பெத்த பெண்ணுக்கு — அண்டா சுழண்டு வரும்
ஆருதோ தண்ணின்னு — நான் அள்ளப் பயப்பட்டேன்!
குளத்திலே தண்ணி வரும் — என்னைப் பெத்த ஐயாவே
நீ பெத்த பெண்ணுக்கு குண்டா சுழண்டு வரும்
கோர்ட்டார் தண்ணின்னு — நான் குடிக்கத்தான் அஞ்சினேன்''

இத்தகைய பல பாடல்களை மலேசியத் தோட்டப்புறத் தமிழரிடை காணலாம். தமக்கே உரிய இசையாலும், பரவிய வகையாலும், அமைப்பு முறையாலும் ஒரு கோணத்தில் இவை நாட்டுப் பாடல்களாகக் காணப்பட்டாலும், மற்ருெரு கோணத்தில் இவை சமூக வரலாற்று இலக்கியமாகவே காணப்படுகின்றன. அம்முறையில் மலேசியத் தமிழர் வரலாற்றுக் குறிப்புகளுக்கு இவை இலக்கியங் களாகத் திகழ்கின்றன எனலாம்.

## குறிப்புக்கள்

1. "The most important and dramatic development in twentieth century Malaya has been the plantation rubber industry. More than any other factor, the industry in the years 1910-1941 shaped the economic, social and even political structure of modern Malaya"

– J. N. Parmer, Colonial Labour Policy and Administration: A History of labour in the Rubber Plantation industry in Malaya, 1910-1941, University International, London, 1979, P. VIII

2. இலங்கைக்குத் தொழிலாளர்களைத் திரட்டவும் இதே முறையைக் கங்காணிகள் பின்பற்றியுள்ளனர்.

"காற்று மழைகள் அதிகமில்லை;
ஏற்ற இறக்கங்கள் மெத்த இல்லை
வாழைப் பழத்திலே வீடுமெழுகியே
வாசலுக்கு பாக்கு வெத்திலையாம்".

# யாழ்ப்பாணத்தரசர் காலத்துத் தமிழ்ப்பணிகளும் தமிழ்ச் சங்கமும்

பேராசிரியர் சு. வித்தியானந்தன்
துணைவேந்தர், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

யாழ்ப்பாணத்திலே தமிழரசர்களாக விளங்கிய ஆரியச் சக்கரவர்த்திகள் அரசோச்சிய காலப்பகுதியிலே எழுந்த நூல்களையும் வரலாற்றுதாரங்களையும் நுணுகி நோக்குவதன் மூலம் ஈழத்துத் தமிழிலக்கிய வரலாற்றை ஓரளவு வரன் முறையாக வகுத்துக்கொள்ள முடியும். போர்த்துக்கேயர் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்ட கலையழிவுக் கொள்கையின் காரணமாக வரலாற்றுதாரங்களும், இலக்கிய ஆக்கங்களும் சிதைவடைந்தமையினுற் பாரம்பரிய மரபின் தொடர்ச்சியை வகுத் துக்கொள்வது கடினமான பணியாகவும் அமைகின்றது. யாழ்ப்பாண இராச்சி யத்தை ஆண்ட ஆரியச் சக்கரவர்த்திகளின் கால வரலாறு பற்றிய இலங்கைப் பல்கலைக்கழகத்து வரலாற்றுப் பேராசிரியர்களான கா. இந்திரபாலா, சி. பத்ம நாதன் போன்ருேர் மேற்கொண்ட ஆய்வுகள் தெளிவினை ஏற்படுத்தியுள்ளன.[1] ஏறத்தாழப் பதின்மூன்றும் நூற்றுண்டில் தமிழரசை அமைத்த மன்னர் பரம்பரை யினர் ஆரியச் சக்கரவர்த்திகள் எனத் தம்மைக் கூறிக்கொண்ட போதிலும் தமிழ் மன்னர்களாகவும், தமிழ்க் காதலராகவும் விளங்கியமைக்குச் சான்ருக அக்காலத்தெழுந்த நூல்கள் சில செய்திகளைத் தருகின்றன. தமிழ்ப்புலமை வாய்ந்த இப்பரம்பரையினர் சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்தமை பற்றிய குறிப்புகள் அங்காங்கு உள்ளன. இவர்கள் காலத்திலே தோன்றிய தமிழாக்கங்கள் பற்றிப் பொதுவாகவும் தமிழ்ச் சங்கம் பற்றிச் சிறப்பாகவும் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழிலக்கியப் பாரம்பரியத்திலே மூன்று சங்கங்கள் அமைந்தமை பற்றியும் நம்பகத் தன்மை பற்றியும் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. சங்க இலக்கியங் களில் சங்கம் என்ற நிறுவனம் இருந்தமை பற்றி நேரிடையான சான்றுகள் எவையு மில்லை. கர்ணபரம்பரைக் கதைமூலமும், பின்னைய இலக்கிய வரலாற்றுச் சான்றுகளின் மூலமுமே இதனை அறிகின்ருேம். எவ்வாருயினும் சங்கமமைத்துத் தமிழ் வளர்த்த பாரம்பரியம் எமது கலாசாரத்தின் ஒரு பகுதியாக அமைந்து விட்டது. சங்கம் என்ற நிறுவனம் இருந்தது இல்லை என்பது பற்றிய வாதப் பிரதிவாதங்களும் பெருகியுள்ளன. இது போலவே யாழ்ப்பாண மன்னர் காலத்துத் தமிழ்ச் சங்கங்கள் பற்றியும் கருத்து வேறுபாடுகள் நிகழலாம். ஆனுல் இருக்கின்ற செய்திகளின் பின்னணியில், சங்கமமைத்துத் தமிழ் வளர்த்தனர் எனக் கூறப்படும் யாழ்ப்பாண மன்னர்களின் தமிழ் ஆர்வத்தையும் தமிழக ஈழப் பாரம்பரியத் தொடர்பையும் மறந்துவிட முடியாது. இந்த வகையில் முச்சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த பாரம்பரியத் தொடர்ச்சியைப் பேணி நான்காம் சங்கம் எனத்

தக்க வகையிலே தமிழ்ச் சங்கம் அமைத்த பெருமை யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியச்சக்கரவர்த்திகளுக்கே உரியது எனக்கூறலாம்.

இலங்கையின் வடபகுதியிலே பதின்மூன்றும் நூற்றுண்டின் நடுப்பகுதியில் எழுச்சி பெற்ற யாழ்ப்பாண இராச்சியம் தமிழ் இராச்சியமாகவும் தனிஇராச்சிய மாகவும் விளங்கியது.[2] பாண்டிய மன்னனின் சேனுதிபதியாகிய ஆரியச்சக்கர வர்த்தி என்பவன் *1284* இல் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றி அங்கு தனியரசை ஆரம்பித்த காலம் முதலாகக் கி.பி. *1620* இல் இவ்விராச்சியத்தின் மன்னனேப் போத்துக்கேயர் கைப்பற்றிய காலம் வரையிலான முன்னூற்றைம்பது ஆண்டு காலம் வட இலங்கையிலே தமிழரசு நிலவியது.[3] சிங்கை நகரைத் தலைநகராகக் கொண்டமையாற் சிங்கை யாரியர்கள் என்ற பட்டப் பெயருடன் இவர்கள் ஆட்சிபுரிந்தனர். இவர்களிலே பதினெருவரின் வரலாற்றினை யாழ்ப்பாண வைபவமாலை குழப்பமான நிலையிலே தருகின்றது.[4] யாழ்ப்பாண வைபவமாலை ஆசிரியரான மயில்வாகனப் புலவருக்கு ஆதாரமாக விளங்கிய இராசமுறை, பரராசசேகரனுலா போன்ற நூல்கள் இன்று எமக்குக் கிடைக்கவில்லை.[5] எனவே யாழ்ப்பாண வைபவமாலையைத் துணையாகக் கொண்டு பிற ஆதாரங்களிலே தங்கி நிற்கவேண்டிய நிலை எமது வராலற்றிற்கு ஏற்பட்டுள்ளது. ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திலே தோன்றிய நூல்களையும், அவற்றிலே காணப்படும் அகச் சான்றுகளையும் ஒரோவழி வாய்மொழிமரபு, ஊகம் ஆதியனவற்றின் பின்ன ணியிலே இச்சங்கம் பற்றிய கருத்து வளர்ச்சி பெற்றிருக்கலாம்.

யாழ்ப்பாண வரலாறு பற்றி இந்த நூற்றுண்டின் முற்பாதியில் எழுத முற்பட்டவர்களான கல்லடி ஆசுகவி, வேலுப்பிள்ளை, ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, செ. இராசநாயக முதலியார் முதல், இலங்கைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட இலங்கைச் சரித்திரத்தில் யாழ்ப்பாண வரலாறுபற்றி எழுதியுள்ள சு. நடேச பிள்ளை வரை சங்கமமைத்துத் தமிழ் வளர்த்த ஆரியச்சக்கரவர்த்திகள் என்ற கருத்தோட்டத்துடன் எழுதியுள்ளனர்.

ஈழத்திலே தொடர்ச்சியாகத் தமிழ் மக்கள் வாழ்ந்திருப்பினும் அவர் களது கலாசார வரலாற்றினை உணர்த்தும் இலக்கியச் சான்றுகள் அருகியே காணப் படுகின்றன. ஆரியச்சக்கரவர்த்திகள் ஆண்ட காலப்பகுதியிலே தோன்றிய நூல் களிலும் இன்று எஞ்சியுள்ளவை ஒரு சிலவே. பெரும்பாலும் சோதிடம், வைத்தியம், சிற்பம் ஆகிய துறைசார்ந்தனவாகவும், புராண மொழிபெயர்ப்பு நூல்களாகவும் சமயம் சார்ந்தனவாகவுமே இவை உள்ளன. இவர்கள் ஆரியச் சக்கரவர்த்திகள் என்னும் பட்டப்பெயரைப் பெற்றவர்களாயினும் பதினெருவரும் செகராசசேகரன் பரராசசேகரன் என்னும் சிறப்புப் பெயர்களை மாறிமாறிப் பெற்றனர்.[6] இம்மன்னர் பரம்பரையினர் யாவரும் தமிழார்வமுடையவராக விளங்கியிருப்பினும் சிறப்பாகச் செகராச சேகரன் *(1380–1414)* காலத்திலும் பரராசசேகரன் *(1591–1616)* காலத்திலும் தமிழிலக்கியம் சிறப்புற்று விளங்கியது[7] எனக் கூறலாம்.

ஆரியச் சக்கரவர்த்திகள் யாவரும் தாமே புலமையாளர்களாக விளங்கிய துடன், புலமையுடையோரை ஆதரிக்கும் வள்ளன்மையுடையவர்களாகவும் விளங் கினர்கள். ''இம் மன்னர் முதலில் பருத்தித்துறைக்கு அருகேயுள்ள கடற்கரையில்

அமைந்திருக்கலாம் என்று கருதக்கூடிய சிங்கை நகரிலும், பின்னர் தங்கள் வீழ்ச்சி வரை நல்லூரிலும் இருந்து ஆட்சிநடாத்தினர். அவர்களுடைய காலத்திலே அவர் களது இராச்சியம் ஈழம் என்ற பெயரைப் பெற்றிருந்தது. இப்பெயர் முழு இலங்கைக்கும் வழங்கிய பெயராகும்''[8] எனச் சுவாமி ஞானப்பிரகாசர் கருதுகிறார். சிங்கை நகர் பருத்தித்துறையில் இருந்தமை பற்றிய கருத்து இன்று பலராலும் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. பேராசிரியர் கணபதிப்பிள்ளையும் இக்கருத்துடைய வராகவே யிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

குறிப்பாக வட இலங்கை இக்காலப் பகுதியிலே தமிழகத்துடன் கொண் டிருந்த நெருங்கிய தொடர்பும் இலக்கிய கலாசார வளர்ச்சிக்கும் தொடர்ச்சிக்கும் உறுதுணையாக விளங்கியிருக்க வேண்டும். மேலும் இம் மன்னர்களது ஆட்சிக் காலப் பகுதியில் புகழேந்திப்புலவர், அந்தகக்கவி வீரராகவ முதலியார் போன்றோர் தமிழகத்திலிருந்து வந்து இம்மன்னர்கள்பாற் பரிசில் பெற்றுச்சென்றமைக்குத் தனிப்பாடல்கள் பலவும், கதைமரபுகளும் சான்றாக அமைகின்றன.[9] எனவே தமிழிலக்கிய பாரம்பரியத் தொடர்ச்சியையோ அல்லது கதைமரபுகளின் தொடர்ச்சி யையோ இணைத்து நோக்குவதும் அவசியம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலே முதலாம் குலோத்துங்க சோழன் நடாத்திய கலிங்கப் போர்களிலே சிதறுண்ட கலிங்க அரசவம்சத்தினைச் சேர்ந்த சிலர் இராமேசுவரத்திற்கு வந்தனர். அங்குள்ள ஆலயத்தினைப் பரி பாலித்த பிராமணக் குடும்பங்களோடு கலப்புற்றனர். இக்கங்கை வம்சத்தைச் சேர்ந்த கலிங்க நாட்டுப் பிராமணர்களின் வழித்தோன்றல்களே இவ்வாரியச் சக்கரவர்த்திகள் ஆவர்.[10] விக்கிரம சோழனுக்குக் கலிங்கப் போரில் உதவி புரிந்த பராந்தக பாண்டியனின் அவைக்களப் புலவராகிய புகழேந்திப் புலவர் சிங்கை நகர் ஆரிய சேகரனைக் கண்டு பரிசு பெற்று மீண்ட வரலாற்றைத் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது.

பாவலன் வாசலில் வந்திபம் வாங்கப் படிபுரக்குங்
காவலர் நிற்கும்படி வைத்த வாகண்டி ஒன்பதினும்
மேவலர் மார்பினும் திண்டோளினும் செம்பொன் மேருவினும்
சேவெழுதும் பெருமாள் சிங்கை ஆரிய சேகரனே![11]

என்ற செய்யுள் புகழேந்திப்புலவர் பாடியது என்பர். புகழேந்திப்புலவர் கதிர் காமவேலர் மீது பாடிய பாடலையும், இலங்கைக்கு வந்த வரலாற்றினையும் ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. இராகவையங்கார் ஏற்றுக் கொண்டுள்ளார்.[12] மேலும் புதுவைச் சடையப்ப வள்ளல் காலத்திலும் பரராசசிங்க மன்னன் என்னும் ஒருவன் இருந்தமையையும், அவன் காலத்தில் ஏற்பட்ட பஞ்சத்தின் போது சடையப்ப வள்ளலிடம் பொருள் வேண்டி அரசன் பாடியனுப்பியமையையும் ஆயிரங்கலம் நெல்பெற்றமையையும் சோழமண்டலசதகச் செய்யுள் கூறுகின்றது.

தேனார் தொடையார் பரராசசிங்கப் பெருமான் செந்தமிழ்க்குக்
கானார் நெல்லின் மலைகோடி கண்டிநாடு கரைசேரக்
கூனார் கப்பலாயிரத்திற் கொடுபோய் அளித்த கொடைத் தடக்கை
மானாகரன் சங்கரன் சடையன் வளஞ்சேர் சோழமண்டலமே.[13]

சோழமண்டல சதகம் பாடிய ஆத்மநாத தேசிகர் (கி. பி. 1650-1728) பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதியாதலால் அவர் வாய்மொழியாக நிலவிய கதைகளே ஆதாரமாகக் கொண்டே பாடியிருக்க வேண்டும். இம் மன்னன் முதலாவது பரராசசேகரனுக இருக்கலாம். கம்பர் காலத்து வாழ்ந்த இச்சடையப்ப வள்ளலுடைய உதவி பெற்ற சம்பவத்தின் தொடர்ச்சி கலாசாரப் பாரம்பரிய உறவுகளைச் சுட்டுவதாகும். இவ்வாரியச்சக்கரவர்த்தியின் மறைவை அறிந்து புகழேந்திப் புலவர் உணர்ச்சி மயமான பின்வரும் பாடலைப் பாடினுர் எனவும் கூறப்படுகிறது.:

ஆஅ விதியோ அடலா ரியர்கோமான்
ஏ ஏவலரால் இழிந்தநாள் — ஓஒ
தருக்கண் ணிலும் குளிர்ந்த தண்ணளிதந் தாண்ட
திருக்கண்ணிலும் சுடுமோ தீ.[14]

ஆரியச் சக்கரவர்த்திகளின் சன்மானம் பெறுவதற்குத் தமிழகத்துப் புலவர் பலர் வந்திருக்கக் கூடும். இச் செய்திகளைப் புலவர்களினதும், அரசர்களினதும் காலமுரண்பாடு பற்றிய கருத்துக்களினுல் ஏற்கமுடியாது என்பர். எனினும் இவை ஏதோவொரு வகையான வாய்மொழிமரபு சார்ந்த கதைகளின் தொடர்ச்சியால் ஏற்பட்டிருக்க வேண்டும் எனலாம். இவ்வகையான உதவிச் செய்திகள் யாழ்ப்பாணத் தமிழரசர்களது புலமை மரபைப் பேணிய பண்பினைக் காட்டுவனவாகும்.

ஆரியச்சக்கரவர்த்திகள் இலங்கையின் வட பகுதியில் ஆட்சி நடாத்திய காலத்தில் நிருவாக அமைப்பு ஒழுங்குற அமைக்கப்பட்டிருந்தது. இவர்கள் தமதாட்சிக் காலத்தின் சிற்சில காலங்களிலே இலங்கையின் மத்திய மலைநாட்டுப் பகுதியிலும், தென்மேற்குக் கரையோரப் பிரதேசங்களிலும் மேலாதிக்கம் செலுத்தினர். மேலும் பாண்டிய, விஜயநகரப் பேரரசுகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டு விளங்கியமையால் அவர்களுடன் அரசியல் கலாசார வர்த்தகப் பரிவர்த்தனையும் கொண்டிருந்தனர்.[15] குறிப்பாக நாலாம் பராக்கிரமபாகு குருநாகல் என்னும் நகரத்தின் அருகில் உள்ள தம்பதேனியாவைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட காலப்பகுதியில் தமிழ்ப்புலவர் ஆதரிக்கப்பட்டமைக்கான சான்றுகள் உள. இவனுடைய அவையிலே போசராச பண்டிதர் (1310) என்னும் தமிழ்ப்புலவர் சரசோதி மாலை என்னும் சோதிடநூலை அரசனின் வேண்டுகோளுக்கு ஏற்பப் பாடி அரங்கேற்றினுர். ஈழத்தில் எழுந்த நூல்களுள் காலத்தால் முந்தியதாகக் கிடைப்பது இந்நூலேயாகும். ஆரியச்சக்கரவர்த்திகளின் அவைகளில் மட்டுமன்றி சிங்கள மன்னர்களின் அவைகளிலும் தமிழ்ப்புலவர்கள் செல்வாக்குப் பெற்று விளங்கினர் என்ற உண்மையினை இந்நூல் விளக்குவதாகவுள்ளது.

யாழ்ப்பாண வைபவமாலையின்படி வரோதய சிங்கையாரியன் ஆரியச் சக்கரவர்த்தி மரபிலே ஐந்தாவது மன்னனுவான்.[17] இவன் மூன்ருவது விக்கிரம பாகுவின் (1356—1374) சமகாலத்தவன் என்பதனையும், இபின் பத்துத்தாவினுல் வர்ணிக்கப்படும் ஆரியச் சக்கரவர்த்தி என்பதனையும் பத்மநாதன் தமது யாழ்ப்பாண அரசு என்ற ஆராய்ச்சி நூலில் நிறுவியுள்ளார். இவன் காலத்திலே தமிழ்ச்சங்கம் அமைக்கப்பட்டது என்ற செய்தி யாழ்ப்பாண வைபவமாலையில்

காணப்படவில்லையாயினும் பின்வந்த ஆசிரியர்கள் இவன் செகராசசேகரன் என்ற பட்டப்பெயருடன் ஆண்டான் எனவும் தமிழ்ச் சங்கம் இவன் காலத்தில் அமைக்கப் பட்டது எனவும் கூறியுள்ளனர். செகராசசேகரன் என்ற பட்டப்பெயருடன் ஆண்ட இவன் காலத்திலே தமிழ்ச்சங்கம் அமைக்கப்பட்ட செய்தியை முதலியார் இராசநாயகம் பின்வருமாறு கூறுகிறுர்; ''தமிழை வளர்க்கும் பெருவிருப்புடைய வனுய், தன்தேசத்திலும் தென்னிந்தியாவிலுமிருந்து தமிழ்ப் புலவர்களையும் பண்டிதர்களையும் வரவழைத்துக் கழகமொன்றமைத்து, அவர்களால் புதிய நூல்களை ஆக்குவித்தான். அவனமைத்த கழகம் பின்வந்த அரசர்களாலும் பரி பாலிக்கப்பட்டுவந்தது''[18].

இவ்வரசன் ஒரு கிராமத்தையே புலவர்களுக்கு அளித்தான் எனவும் அதுவே இப்போது சங்குவேலி (சங்க வேலி) என வழங்கப் படுகின்றது எனவும் கூறி யுள்ளார். இவர் கூற்றுக்களை இடப்பெயராய்ச்சியாளரான ச. குமாரசாமி மறுத்துக் கூறியுள்ளார். ''முன்நூலில் காணப்படாத இச்சங்க வரலாறு சங்கத் திற்கு மானியமாக அளிக்கப்பட்ட வேலி விளைநிலங்களின் வரலாறும் மனோராச்சிய வாயிலான் எய்தியவெனவே எண்ணத்தகும்'' எனக் கூறிச் சங்கு என்பதனைச் சங்கம் என்பதின் சிதைவென்னுது வழக்குச் சொல்லெனின் வரும் இழுக்கு என்னை?[19] என்ற கேள்வியினை எழுப்பியுள்ளார். மேலும் இவர் சங்க வரலாறு பற்றிய செய்தி யைக் கற்பனைச் செய்தியாகவே கருதுகின்றுர். குறிப்பாக இவ்வரசன் காலத்திற் புலவர் ஆக்கிய நூல்கள் யாவும் சரஸ்வதி மஹாலயம் என்னும் நூல்நிலையத்தில் ஈட்டி வைக்கப்பட்டன எனவும் பின்னெரு காலத்திற் சிங்களவரசனெருவனல் தீக் கொழுவப்பட்டனவெனவும் வரும் செய்தியும் அவதானிக்கத்தக்கது. சிங்கள மன்ன னின் மந்திரியாகிய அழகேஸ்வரன் காலத்தில் நடைபெற்ற போரின் பொழுதோ அல்லது செண்பகப் பெருமானின் படையெடுப்புக் காலத்திலோ இது நடை பெற்றிருக்கலாம். யாழ்ப்பாண வைபவமாலை இச்சங்கம் பற்றியோ பிறபற்றியோ கூருது விடினும் பின்வந்த வரலாற்ருசிரியர், செகராசசேகரம், செகராசசேகர மாலை, கைலாயமாலை போன்ற நூல்களில் வரும் செய்திகளை மனங்கொண்டு புனைந்துரையாகவோ, அல்லது வாய்மொழி மரபை ஆதாரமாகக் கொண்டோ இக்கருத்தினை உருவாக்கியிருக்க வேண்டும். யாழ்ப்பாண வைபவமாலையின்படி மன்னர்களின் வரன்முறை ஒழுங்கின்மையாக அமைவது போலவே நூல்கள் தோன்றிய காலம் ஒழுங்கு பற்றியும் முரண்பாடுகள் காணப்படுகின்றன. யாழ்ப் பாண வரலாற்றை ஆராய்ந்த ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, முதலியார் செ. இராச நாயகம், சுவாமி ஞானப்பிரகாசர் ஆகியோர் நூல்களின் பின்னணியிலே இரு தமிழ்ச்சங்கங்கள் பற்றிய செய்திகள் வருகின்றன. தீக் கொழுவி அழிக்கப்பட்ட சங்கம் முதலாவது சங்கமாகும்.

வரோதய சிங்கையாரியன் காலத்திலே இச்சங்கம் அமைக்கப்பட்டது, என்ற செய்தியை இராசநாயகம் போன்ரோர் கூறினும் சயவீரசிங்கை எனப்படும் ஐந்தாம் செகராசசேகரன் காலத்திலேயே செகராசசேகரம் என்னும் வைத்திய நூலும், செகராசசேகரமாலை என்னும் சோதிட நூலும், காரிவையாவின் கணக் கதிகாரம் என்னும் கணித நூலும் தோன்றின என்பர்.[20] இச் செகராசசேகரன் காலத்தினைப் பற்றி யாழ்ப்பாண வைபவமாலை அதிகம் குறிப்பிடவில்லை. பின்வந்த வரலாற்ருய்வாளர்களான முதலியார், இராசநாயகம், ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை,

சுவாமி ஞானப்பிரகாசர் போன்ருேர் இவன் காலத்திலே தோன்றினவென்பர். கோணேசர் கல்வெட்டும் இவன் காலத்ததாகவே கூறப்படுகின்றது.[21] இவன் அரசனுகவிருந்த காலத்திலே தமிழ்ப் பாண்டித்தியம் உடையவனுகவிருந்தமையை, ''முத்தமிழ்தேர் செகராசசேகரமன்'' ''சதுர்மறைபயில்வோன்'', போன்ற தொடர்கள் விளக்குகின்றன. கைலாயமாலேயிலே இம்மன்னனேப் புகழ்வதாக வரும், ''புவிதிருத்தி ஆண்டு வைத்த சங்க சமூகத் தமிழாழன்'' என்ற தொடரின் விருத்தியாகவே சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த செய்திகள் விரித்துரைக்கப் பட்டுள்ளன எனலாம். வைத்தியத்திலும், சோதிடத்திலும் நிரம்பிய பாண்டித்தியம் வாய்ந்தவர்கள் யாழ்ப்பாணத்து மன்னர்கள். சோதிடத்திற்கும், வைத்தியத் திற்கும் அவைகளிலே முக்கியத்துவம் அளித்தமை போலத் தமிழ்ப்புலவர்களேயும் அவைகூட்டிப் பாராட்டிப் பரிசில் வழங்கியுள்ளனர். இச் செய்தியைச் செகராச சேகரமாலே பின்வருமாறு கூறுகின்றது.

''மன்னர் மன்னு செகராசசேகரன் மணவையாரிய வரோதயன்
பன்னு செந்தமிழ் வளம்பெறற்குதவு பரிசிலங்கவரு சித்தியாம்
பொன்னின் மிஞ்சிய களாஞ்சி கெண்டிகை பொலன்கலம் பிறவுமாம்பரிச்
சின்னம்''[22]

இவ் வரிகள் செகராசசேகரன் புலவர்களே அவைக்கழைத்துக் கவரி, குடை, களாஞ்சி ஆதிய சிறப்புகளுடன் பரிசு வழங்கிய செய்தியைக் கூறுகின்றன. இவன் சைவமும் தமிழும் வளர்த்த பெருமையைத் தட்சணகைலாசபுராணமும் விரித்துரைத்துள்ளது. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளேயவர்கள் ஈழமண்டலப் புலவர் என்ற கட்டுரையில் பின்வருமாறு கூறுகிருர்.

''ஜகராசசேகரன், அவன் யாழ்ப்பாணத்தரசனுகிய பரராஜ சேகரனின் தம்பி. சிறுவனுயிருக்கும்போது திருக்கோவலூரில் ஒரு வித்தியாகுருவையடைந்து கல்வித்துறையெல்லாம் துறைபோகக் கற்ற மகாபண்டிதன், யாழ்ப்பாணத்துக்கு இளவரசனுகியபோது ஊர்கள் தோறும் பாடசாலேகளமைத்து அங்கே சிறுவர்களேயெல்லாம் கல்வி பயில் வித்தான். சோழபாண்டி தொண்டை மண்டலங்களினின்றும் பண்டிதர் களே வரவழைத்து ஈழநாட்டிலுள்ள புலவர்களோடு நல்லூரில் ஒரு தமிழ்ச் சங்கம் அமைத்தவன். யாழ்ப்பாணத்திலிருந்து சரசுவதி மகாவித்தியா லயத்திலில்லாத வடமொழி தென்மொழி நூல்களேயெல்லாம் தமிழ்நாட்டி னின்றும் வரவழைத்து வைத்தவன். அநேக நூல்களேப் புதிதாயியற்று வித்தவன். அவர்க்குப் பரிசிலும் வழங்கியவன்.''[23]

செகராசசேகரன் காலத்திலேற்பட்ட பன்முகப்பட்ட வளர்ச்சிகளேயும் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளே, ஞானப்பிரகாசர் போன்ருேர் நூலாதாரங்களேக் கொண்டு ஊகமாக விரித்துரைத்துள்ளனர் என்றே கொள்ளக் கிடக்கின்றது. செகராசசேரத்தில் வரும் ''இலங்கை வேந்தர் சீரிய பொன் திறையளக்கச் செங்கோலோச்சும் செகராசசேகரமன் சிங்கைமேவு மாரியர்கோன்''[24] போன்ற புகழ் உரைகளின் தொடர்ச்சியாகப் புனேந்துரையாக பலவிடயங்களேயும் கூறமுனேந்துள் ளனர் போலும். வரோதய சிங்கையாரியன் காலத்திலே சங்கம் அமைக்கப்பட்டது

என்ற கருத்தைப் பலர் கூறினும் அவன் கால ஆக்கங்கள் பற்றி எவையும் தெரிந்தில. சயவீர சிங்கையாரியன் என்ற ஐந்தாம் செகராச சேகரன் காலத்திலேயே பல நூல்கள் தோன்றின என்ற கருத்து இன்று வலுப்பெற்றுள்ளது. செகராச சேகரன் பரராசசேகரன் முதலிய பட்டப்பெயர்களை மன்னர் பெயர்களாகக் கொண்ட மயக்கத்தினுல் வரலாறு எழுதியோர் மயங்கியுள்ளனர் என்பதும் அவதானித்தற்குரியது.

போத்துக்கேயர்களோடு நடைபெற்ற போராட்டங்களினுல் அமைதியற்று விளங்கிய யாழ்ப்பாண அரசிலே கனகசூரிய சிங்கையாரியனுக்குப் பின்னர் ஆண்ட ஆரும் பரராஜசிங்கன் *(1467-1519)* தனது காலத்திற் செண்பகப்பெருமாள் வெற்றி கொண்ட போது சிதைந்த தமிழ்ச் சங்கத்தை அமைத்தான் என இராஜ நாயகம் கூறுகிருர்.[25] இவன் அவையிலே அரக்கேசரி விளங்கி இரகு வம்சத்தை மொழிபெயர்த்துக் காவியமாகப் பாடினுன் என்ற செய்தியையும் தருகின்ருர். இவைபற்றி முரண்பாடான கருத்துக்கள் உள்ளன. முன்னரே குறிப்பிட்ட மன்னர் பட்டப் பெயர்களினுல் ஏற்பட்ட மயக்கம் பற்றியே இவை தோன்றியிருக்க வேண்டும். இராசநாயகம் ''இரண்டாவது தமிழ்ச் சங்கம்'' என்ற உபதலைப்புடன் பின்வருமாறு கூறுகின்ருர்.

> ''முன் செண்பகப்பெருமாள் வெற்றி கொண்ட போது சிதைந்த தமிழ்ச் சங்கத்தைப் பின்னரும் நிறுவ வேண்டிப் புலவர்களையும் தமிழ் வித்துவான் களையும் ஒருங்கு சேர்த்து முன்போற் கழகம் நிறுவி வித்துவான்களுக்கு வேண்டிய சன்மானங்கள் செய்து தமிழ் மொழியைப் பொன்போற் பேணி வந்தான். இவன் அவையிலே இவன் மைத்துனனுகிய அரசகேசரி என்னும் தென்மொழி வடமொழிக் கரைகண்ட வித்வசிகாமணி இரகு வம்சம் என்ற நூலொன்றை வடமொழியிலிருந்து தமிழ் மொழியிலாக்கி அரங்கேற்றினுன். அதுவுமின்றிப் பரராசசேகரனுலாவும் இவன் காலத் திலே யாக்கப்பட்டதென எண்ண இடமுண்டு.''[26]

இதே கருத்தை அடிப்படையாகக் கொண்டே சு. நடேசபிள்ளை யாழ்ப் பாணத்தை ஆண்ட ஆரியசக்கரவர்த்திகள் என்ற கட்டுரையை எழுத முற் பட்டுள்ளார்.[27] யாழ்ப்பாண வைபவமாலையிலேயுள்ளபடி ஆரும் பரராசசேகரன் *(1478-1519)* காலத்திலே தான் மேற்குறிப்பிட்ட முயற்சிகள் நடைபெற்றன என்ற கருத்தின் வளர்ச்சி ஏற்பட்டிருக்கவேண்டும். இம்மயக்கத்தை சுவாமி ஞானப்பிரகாசர் தெளிவித்து எதிர்மன்னசிங்கன் எனப்படும் எட்டாம் பரராச சேகரன் *(1591–1616)* காலத்திலேயே இப்பணிகள் நடைபெற்றன என்பதை வலியுறுத்தியுள்ளார்.[28]

ஆரியச்சக்கரவர்த்திகள் பரம்பரையில் கடைசி அரசனுக அமைபவன் எதிர்மன்னசிங்க பரராசசேகரன். இவன் காலத்திலே தென்னிந்தியாவினின்று யாழ்ப்பாணத்துக்கு வந்த அந்தகக் கவி வீரராகவமுதலியார் இவ்வரசன் மீது வண்ணக்கவி ஒன்று இயற்றினுர்.

பொங்குபிடி யின்பந்தம் போயதே என்கவிக்
கெங்கும் விருதுபந்தம் ஏற்றதே — குங்குமம்தோய்

வெற்பந்தம் ஆனபுய வீரபர ராஜசிங்கம்
பொற்பந்தம் இன்றளித்த போது.[29]

என்றபாடலைக் கேட்டுப் பரிசிலளித்த பரராசசிங்கன் தானும் பாடல்களைப்பாடிப் புகழ்ந்தான்.

விரகன் முத்தமிழ் வீரராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெல்லாம்
உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றினல்
சிரப்பிதம் செய்யலாகுமே.[30]

மேலும் வீரராகவன் அரசவையிலே செய்த இராமாயணப் பிரசங்கத்தைப் புகழ்ந்து கூறுவதாக அமைந்துள்ள பாடலும் பரராசசேகரனின் கவியாற்றலைக் காட்டுவதாக உள்ளது.

இன்னம் கலைமகள் கைம்மீதில் புத்தகம் ஏந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப்பாளென்ன புண்ணியமே
கன்னன் களத்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்சம் ஏடெனக் கற்றுன் ஒருமுத் தமிழையுமே''[31]

எனக் குருடராயிருந்தும் தமிழ்கற்ற வீரராகவ முதலியாரின் சிறப்பைப் பாடியுள்ளார். தனிப்பாடற்றிரட்டிலே வரும் இப்பாடல்களின் வரலாறு உண்மையாயின் இவ்வரசனின் தமிழ்ம்பாண்டித்தியம் போற்றப்படுவதாகும் என சுவாமி ஞானப்பிரகாசர் கூறுவர்.

காளிதாச மகாகவியின் வடமொழி ரகுவம்ச நூலைத் தமிழிலே மொழி பெயர்த்துப் பாடிய அரசகேசரி பரராசசேகரனின் தமையன் எனப் போத்துக்கேய நூல்கள் கூறுகின்றன.[32] இவை பற்றிய முரண்பாடுகள் விரிவாக ஆராய வேண்டியவை.

பரராசகேரனின் வேண்டுகோளுக்கு இணங்கப் பன்னிருவர் பாடி யரங்கேற்றிய பரராசசேகரம் என்ற வைத்திய நூல் 12000 செய்யுட்களைக் கொண்டது. இவற்றில் 8000 செய்யுள்களே அச்சில் வந்துள்ளன. அகத்திய வைத்திய சிந்தாமணி தன்வந்திரி வைத்திய சிந்தாமணி ஆகிய இரண்டையும் தழுவி எழுந்தது[33] இந்நூல் எனக் கூறுவர்.

ஆரியச்சக்கரவர்த்திகள் காலத்தில் தமிழ் பெருவளம் பெற்றிருந்தமையை அக்காலத்துத் தோன்றியனவாகக் கிடைக்கும் நூல்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் செய்திகளைத் தருகின்றன. அவைகளிலே புலமையாளர்களை ஆதரித்து வந்தமையை மனங்கொண்டும், ஓரிரு அகச் செய்திகளை ஆதாரமாகக் கொண்டும் தமிழ்ச் சங்கம் அமைத்தனர் என்ற கருத்து வலுப்பெற்றுள்ளது. இக்கருத்தை மறுத்துரைப்போர் வரலாற்றுதாரம் ஏதுமின்மையையும், புறச் சான்றுகளையும் வேண்டி நிற்பர். தமிழ் வளர்த்த முச்சங்க வரலாற்றுக் கதை போலவே, அரசவைகளின் புலவர் அவை அமைத்திருந்தமை மறுக்கற்பாலதொன்றல்ல. எவ்வாறுயினும், முச்சங்க வரலாற்றின் பின்னர் நான்காவது தமிழ்ச்

சங்கம் எனக் கூறக்கூடிய வகையிலே சங்கமமைத்துத் தமிழ் வளர்த்தவர்களாகத் தமிழேடுகளிற் பயிலப்படுபவர்கள் யாழ்ப்பாணத்தையாண்ட ஆரியச்சக்கரவர்த்திகளே எனக் கூறுவது தவருகாது.

## குறிப்புக்கள்

1. Indrapala K: Dravidian settlements in Ceylon and the beginnings of the Kingdom of Jaffna, Pathmanathan. S. The Kingdom of Jaffna (circa A. D. 1250–1450)
இலண்டன் பல்கலைக்ககழகத்திலே கலாநிதிப்பட்டம் பெறுவதற்குச் சமர்ப்பிக்கப்பட்ட ஆய்வுநூல்.
2. Pathmanathan. S: The Kingdom of Jaffna, (The Ceylon Institute of Tamil Studies publication No.I, 1974) pp. 14–17.
3. Pathmanathan. S., The Kingdom of Jaffna, Part I (circa A.D. 1250–1450) Ceylon News paper Ltd, Colombo 1978, p. 220
4. Pathmanathan. S. மேற்படி பக், 220
5. Gnanapiragasar. S., Sources for the Study of the History of Jaffna, Tamil Culture, Nos. 3 & 4 Sept. 1953, p. 303
6. Pathmanathan. S., மு. கு. பக். 220
7. நடராசா எப். எக்ஸ். ஸி., ஈழத்துத் தமிழ்நூல் வரலாறு, அரசு வெளியீடு, கொழும்பு, 1970, பக். 23 – 26.
8. Gnanapiragasar, மு. கு. பக். 303
9. ''அம்பலவாணன்'' யாழ்ப்பாணத் தரசர்களும் தமிழும், இலங்கை வித்தியாபோதினி, தொகுதி 17, ஒக். 60, பகுதி 9, தொகுதி 17– நவ. டிசம். 60, பகுதி 10; தொகுதி 18 – ஜுலை 61, பகுதி 2 பார்க்க.
10. Pathmanathan. S., மு. கு. பக். 90–121
11. கனகசுந்தரம்பிள்ளை. தி. தி. தமிழ் நாவலர் சரிதை, சென்னை 1921, பக். 53.
12. ''அம்பலவாணன்'' மு. கு., தொகுதி 17, நவ. டிச. 60, பகுதி 2, பக். 327.
13. மேற்படி பக். 327.
14. கனகசுந்தரம்பிள்ளை, தி.தி. மு.கு.நூ. பக். 52.
15. Pathmanathan. S., மு. கு. பக். 5–7
16. நடராஜா, எப். எக்ஸ், ஸி. மு.கு., பக். 26.
17. Pathmanathan S. மு. கு. பக். 220
18. இராசநாயகம் செ. மு. கு. பக். 62.
19. ''அம்பலவாணன்'', மு.கு. பக். 330, முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ. யாழ்ப்பாணச் சரித்திரம், யாழ்ப்பாணம், 1963, பக். 21.

20. இராசநாயகம் செ., மு.கு.,பெக். 69.
21. நடராசா, எப். எக்ஸ். ஸி., மு. கு. பக். 26–27.
22. இரகுநாதையர், கி. சி. செகராசசேகரமாலை, கொக்குவில் 1942, பக்.80.
23. முத்துத்தம்பிப்பிள்ளை. ஆ. ஈழமண்டலப்புலவர், செந்தமிழ் 12 தொகுதி, 1913–1914, மதுரை, பக். 387.
24. செகராசசேகரமாலை, மு. கு. பக். 139.
25. இராசநாயகம் செ. மு. கு. பக். 77.
26. மேற்படி பக். 77–78.
27. யாழ்ப்பாணத்தை ஆண்ட ஆரியச்சக்கரவர்த்திகள், கல்கி, தீபாவளிமலர் 1959, பக். 79–80.
28. ஞானப்பிரகாசர் சுவாமி: யாழ்ப்பாண வைபவவிமர்சனம், அச்சுவேலி 1929, பக். 151–152.
29. கனகசுந்தரம்பிள்ளை தி. த., மு.கு. பக். 104–105.
30. மேற்படி பக். 105.
31. மேற்படி பக். 105.
32. ஞானபிரகாசர் சுவாமி, மு.கு. பக். 151–152.
33. சதாசிவம் ஆ., (தொ. ஆ.) ஈழத்துத் தமிழ் கவிதைக் களஞ்சியம், சாகித்திய மண்டல வெளியீடு, சன்ஞகம். 1966, பக்.50

# சித்த முறையில் நோய் வராது காக்கும் வழி

டாக்டர் ப. சிற்சபை

''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்ற மூதுரையைப் பழங் காலத்து மக்கள் கவனத்தில் கொண்டு, அதற்கு ஏற்ற வகையில் தமது வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருந்தனர்.

மக்கள் நோயின்றி வாழத்தக்க இடம் யாவை என்பதை மிகப் பொருத்த முடன் கூறியிருக்கின்றனர். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் இவற்றுள் மருதநிலமே மக்கள் வாழ்வதற்குத் தக்க நிலமென்றும், அறவே வாழத் தகாத நிலம் பாலையென்றும் மற்றவை மத்திமம் என்றும் கீழ்க்கண்ட செய்யுள்களால் அறிவிக்கின்றனர்.

''மருதநில நன்னீர் வளமொன்றைக் கொண்டே
பொருதநில மாதியநோய் போக்குங் – கருதநிலத்
தாறிரதஞ் சூழ வருத்துரென்றூற் பிணியேல்
ஏறிரதஞ் சூழ்விக்குமில்.''

மருதநிலம் நல்ல நீர்வளம் நிறைந்த ஒன்றுதலால், வாதபித்த கபங்களால் உண்டா கின்ற நோய்களைப் போக்கும். அன்றியும், அந்நிலத்தில் விளைகின்ற அறுசுவைப் பதார்த்தங்கள் சேர்ந்த உணவை உண்பவர்கள் பேரைச் சொன்னாலும் நோய்கள் இவ்வுலகைவிட்டே ஒழியும்.

''நெய்தனில மேலுவர்ப்பை நீங்கா துறிலுமது
வெய்தனில மேதங்கு வீடாகும் – நோய்தின்
மருங்குடலை முக்காக்கி வல்லுறுப்பை வீக்குங்
குருங்குடலைக் கிழிறக்குங் காண்''

நெய்தல் நிலம் மிகுந்த உவர்ப்பை யகலாதிருந்தாலும் அது பித்த வாயு தங்கு வதற்கு இடம். அதில் வசிப்பவர்க்கு உடலின் நுட்ப இடங்களில் கப நீரானது பெருகித் தடித்தலை உண்டாக்கும். யானைக்காலும் அண்ட விருத்தியும் ஏற்படும்.

எனவே வாழ்வதற்குத் தக்க நிலம் மருதமே என அறிந்திருக்கின்றனர். நிலத்திலே ஊர்களை அமைத்து, அங்கு வீடுகளைக் கட்டி வாழ்ந்தனர். ஊர்களின் பரப்பு, வாழும் மக்களின் தொகை. தொழில் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டே கிராமம், புரம், பட்டணம், நகரம், புரி எனப் பிரித்துள்ளனர்.

**கிராமம் (சிற்றூர்)**

500 கெஜ அகல நீளமுள்ளது கிராமம். அதில் 100 குடியானவர்கள் வசிப்பர். ஒவ்வொரு கிராமத்திலும் ஆறு அல்லது ஏரி இருக்கும். அதன் கரைக்குக்

கீழ் வயல்களும், வாய்க்கால்களும் உண்டு. அவைகளுக்கு அருகில் மேடான இடத்தில் ஊர் அமைக்கப்படும். ஊரின் நடுவில் கோயிலும், அதன் எதிரில் ஒரு குளமும், அவைகளைச் சுற்றி நான்கு தெருக்களும், சுற்றுப் புறங்களிலுள்ள கிராமங்களுக்குப் போய் வருவதற்காக இரு பெரும் பாதைகளும் அமைக்கப் பட்டிருக்கும்.

### நகரம்

நகரம் என்பது பெரிய ஊர். சுமார் பன்னீராயிரத்து ஐந்நூறு குடும்பங்கள் நோயின்றி இன்பமாக வாழ்வதற்கேற்ற தெருக்கள், வீடுகள், கோயில், குளம், கடைகள், பள்ளிகள், மன்றம், அரண்கள் முதலிய பல வசதிகள் பெற்றுள்ளதாக அமைந்திருந்தன. ஆட்சிமன்றம் அல்லது அரசன் அங்கு இருந்தால் அது அந் நாட்டுக்குத் தலைநகரம்.

தமிழ் நாட்டின் நகரங்கள் பெரும்பாலும் கோயிலைச் சுற்றியே அமைந் துள்ளன. ஒவ்வொரு நகரமும் மூன்று பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டன. மருவூர்ப் பாக்கம், பட்டினப்பாக்கம், நாளங்காடி என்றும், புறநகர், அகநகர், இடைநகர் என்றும் வகுக்கப்பட்டன.

### வீதி அமைப்பு

நகரத்தில் இராஜவீதி, மாடவீதி (கோயிலைச்சுற்றி இருப்பவை), தேர் விழா வீதி போன்ற அகன்ற தெருக்களும், வன்னியர் வீதி, வணிகர் வீதி, பக்தர் வீதி போன்ற சிறிய வீதிகளும் இருந்தன. இவை பருவக் காற்றுகளின் திசைகளைக் கவனித்து வடக்குத் தெற்காகவும், கிழக்கு மேற்காகவும் அமைக்கப் பட்டன. பெரிய வீதிகள் 32 முதல் 40 அடிகள் அகலமும், சிறியன 9 முதல் 18 அடி அகலமும் இருந்தன. ஒரு கோடி உயரமாகவும், மறுகோடி தாழ்வாகவும், ஆமை ஓடு போன்று நடுவில் உயர்ந்தும் இருபக்கங்களும் தாழ்ந்தும் மழைநீர் தேங்காமல் ஓடுவதற்கு ஏற்றவகையில் இருந்தன.

### வீடு அமைப்பு

தெருவின் இரு புறங்களிலும் வீடுகள் ஒரே வரிசையாகவும், ஒரே உயர முள்ளதாகவும், ஒரே விதமாயும், கட்டப்பட்டன அகன்ற தெருக்களில் மாட மாளிகைகளையும் குறுகிய தெருக்களில் சிறிய குட்டையான வீடுகளையும் காண லாம். இதனால் தெருக்களில் நல்ல வெளிச்சமும் வெயிலும் படுவதற்கு ஏற்றவை யல்லவா?

ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குச் செல்லும் பாதைகளின் இருபுறங் களிலும் ஆல், வேம்பு, இலுப்பை, நாவல், மா, நெல்லி, அரசு, அசோகு, வாகை போன்ற பெரிய மரங்கள் வளர்க்கப்பட்டன. பெரிய தெருக்களின் இருபக்கங் களிலும் நடந்து செல்லும் நடைபாதைகள் அமைந்திருந்தன.

### குளம்

நகரின் ஒவ்வொரு பகுதியிலும் பல குளங்களுண்டு. அவற்றின் கரைகளில் நெல்லி, கடுக்காய், தான்றிக்காய் மரங்கள் வளர்க்கப்பட்டன. இம்மரங்களின்

அருகில் குளிர்ச்சியிருக்கும். அதனுல் குளத்தின் நீர் சீக்கிரத்தில் வற்ருது. அன்றியும் இவைகளின் கனிகள் குளத்தில் வீழ்ந்து நீரைத் தெளியச் செய்வதுடன் நீருக்குச் சுவையையும் ஊட்டும், இம்முறையில் இந்நீரைக் குடிப்போர் நோயின்றி வாழக் கூடுமல்லவா?

**தோட்டங்கள்**

நகர மக்களின் பொழுதுபோக்குக்கும் உடற் பயிற்சிக்கும் விளையாடும் இடங்கள், நாடக சாலே உண்டு. நகரத்தைக் காணவரும் வெளிநாட்டவர்கள் தங்குவதற்குச் சத்திரங்கள் கட்டப்பட்டிருந்தன. இவைகள் நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டு வந்தன. நகரத்தின் பல பகுதிகளில் கோயில் குளங்களுக்கு அருகில் தோட்டங்கள் அமைக்கப்பட்டன. பூஞ்செடிகளும், பழச் செடிகளும், தென்னை மரங்களும் அங்கு வளர்க்கப் பட்டன.

**கடைத்தெரு**

அகநகர்க்கும் புறநகர்க்கும் இடையிலுள்ள நிலம் நாளங்காடி. இங்கே ஒழுங்காக வளர்க்கப்பட்ட மரங்கள், சோலேகளிடையே கடைகள் வைக்கப்பட்டிருக்கும். இதன்னியில் ஒவ்வொரு நகரிலும் அகன்ற கடைவீதிகள் இருந்தன.

**அரண்**

பாதுகாப்பில்லாத நகரம் மக்கள் வசிப்பதற்கு ஏற்றதல்ல. அதனுல் அக்காலத்தில் ஏற்பட்ட நகரங்களுக்கு நில அரண், நீர் அரண், காட்டு அரண், மலே அரண் அமைந்திருந்தன. நில அரண் என்பது மதில் சுவர், நீர் அரண் என்பது அகழி, அதற்கு அடுத்து காவற் காடுகள் பெரும்பாலும் சூழ்ந்திருக்கும். இவ்வகை நகரங்களே பகைவர்கள் எளிதில் தாக்க முடியுமா?

## தொழில்கள்

**பயிர்த்தொழில்**

''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்''

என்ற திருக்குறள் வாக்குப்படி அக்காலத்தில் பயிர்த்தொழிலே மேலான தொழிலாகக் கருதப்பட்டு வந்தது. இதனுல் உணவுக்கு பிறர் உதவியை நாடாமல் வாழமுடிகிறதல்லவா?

**பால் தொழில்**

பால் குழந்தைப் பருவம் முதல் முதியோர் வரை உடல் வன்மைக்கும், நோயின்றி வாழவும் தேவைப்படும் பொருளாதலால் பசு உடையவர்களுக்கு ஆயர்பாடி என்னும் ஒரு கிராமத்தையே ஒதுக்கித் தந்திருக்கின்றனர். பசுக்கள் மேய்வதற்கு வசதியான காடுகளும் புரம்போக்கு நிலங்களும் உள்ள இடத்தில் ஆயர்பாடி இருக்குமானுல் அங்கு வளரும் பசுக்கள் எவ்வளவு செழிப்போடு விளங்கும்?

வெண்கலக் கன்னுரும், செம்பு கொட்டிகளும், மரத் தச்சரும், கொல்லரும், சித்திரக்காரரும், சிற்பியும், பொற்கொல்லரும், இரத்தினவேலேத்

தட்டாரும், தையற்காரரும், புறம்பர் முதலானோரும் தங்கள் தொழில்களைப் பெருக்கி அங்கே இனிது வாழ்ந்தனர். எனவே தொழில் வளச் சிறப்புக்கு அந்நகரங்களில் குறைவில்லை.

### ஊரின் தூய்மை

#### கிராமத் தூய்மை

கிராமத்து ஒவ்வொரு வீட்டிலும் பின்புறத்தில் பெரிய தோட்டமுண்டு, தோட்டத்தின் கோடியில் பள்ளந்தோண்டி, விழும் குப்பைகளை அதில் கொட்டி, எருவாக்கி ஆறு மாதங்களுக்கு ஒருமுறை அந்த எருவை நிலங்களுக்குப் பயன் படுத்துவர். வீட்டின் கழிவுநீரைத் தோட்டத்து செடிகொடிகளுக்குப் பாய்ச்சுவர். மக்கள் தினந்தோறும் தங்கள் வீட்டுத் தெருவை விளக்கிச் சாணிநீர் தெளித்து கோலமிட்டுச் சுத்தமாக வைத்திருக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருப்பதால் இல்லங்களைச் சார்ந்த தெருக்கள் அழகாகத் தோற்றம் அளிக்கும். பொதுக் கிணறுகளையும் குளங்களையும் எவரும் அசுத்தம் செய்யாதவாறு காவல்வைத்துப் பாதுகாப்பர்.

வீடுகள், கடைகள், சத்திரங்கள் இன்னும் பலவிடங்களிலுள்ள குப்பைக் கூளங்களைத் தெருக்களில் அமைந்துள்ள பூரிமங்களில் கொட்ட வேண்டுமென்று வழக்கம் ஏற்படுத்தியிருக்கின்றனர். நகராட்சி கழகப் பணியாட்கள் இக் குப்பை களை நாள்தோறும் காலையிலும், மாலையிலும் வண்டிகளில் ஏற்றி முறைப்படி எரு மன்றத்தில் சேர்ப்பர்.

வீடுகளிலும் பொதுவிடங்களிலும் கழிவுநீர், வெளிச் செல்லுவதற்குக் கால்வாய்கள் கட்டப்பட்டிருந்தன. இக் கழுநீர் கால்வாய்கள் தெருக்கால்வாயுடன் இணைக்கப்பட்டு அவைகள் இறுதியில் ஆற்றிலாவது, அகழியிலாவது சென்று கலக்கச் செய்யும். ஆற்றில் நீர் வேகமாய் ஓடிக்கொண்டிருக்குமாகில் கழிவுநீர் விரைவில் சுத்தமாய்விடும்.

#### கால்வாய் அமைப்பு

கால்வாய்கள் அனைத்தும் ஒரே அளவில் வெட்டிச் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. வீட்டு வடிகால்கள் தெருக் கால்வாயுடன் சேரும் இடங் களில் சதுரவடிவில் செங்கற்களால் கட்டப்பட்ட சிறுகுழிகள் அமைந்துள்ளன. அக்குழிகளில் மூன்றடி உயரமுடைய தாழிகள் புதைக்கப்பட்டுள்ளன. அத்தாழி களின் அடியில் சிறிய துளைகள் உள்ளன. கழிவுநீருடன் கலந்துவரும் குப்பைக் கூளங்கள் தாழியின் அடியிலே தங்கிவிடும். நகராட்சிப் பணியாட்கள் அந்தக் குப்பைகளை அவ்வப்போது அப்புறப்படுத்தித் தூய்மை செய்வர். இவ்வரிய கால்வாய் முறை 5,000 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ்மக்களால் கைக்கொள்ளப் பட்டது என்பதை வியந்து மொகஞ்சதாரோ ஆராய்ச்சியில் சர் ஜான் மார்ஷல் கூறியிருக்கிறார்.

இன்னும் சுவருக்குள் கழிவுநீர்க் குழாய்கள், மூடப்பட்ட கால் வாய்கள், இடையிடையே பெருந்தொட்டிகள், மதகுள்ள கால்வாய்கள், மலம் கழிக்க ஒதுக்கிடம் இவைகள் மிகச் சிறப்பாக அமைத்திருக்கின்றனர்.

**வீடுகள் அமைப்பு**

வீடுகளைக் கட்டுவதற்கு அக்காலத் தமிழர்கள் மனையடி நூல்கள் ஏற் படுத்தியிருக்கின்றனர். கிழக்கு வடக்குத் தாழ்ந்தும், மேற்கு தெற்கு உயர்ந்தும் இருக்கும் இடங்களைத் தேர்ந்தெடுக்கின்றனர் மேற்கும் வடக்கும் தாழ்ந்தும் அல்லது மேற்கு உயர்ந்தும் வடக்குத் தாழ்ந்தும் உள்ள நிலத்தில் வீடுகட்ட ஆயுள் விருத்தி குடும்ப விருத்தி உண்டாகும் என்றும், மேற்கு, தெற்கு, கிழக்கு இவைகள் தாழ்ந்து இருக்கும் பூமியில் வீடு கட்டலாகாது என்றும், அதனுல் புத்திரர்கள் மரணமடைவார்கள் என்றும் கண்டறிந்து அதன்படி வீடுகள் அமைத்திருக்கின்றனர்.

6 8, 10 11, 16 17, 20 21,27 29, 30 31 32 33, 35 36, 37 39, 41, 42, 45, 50, 51 52 54 56 57 60 அடிகள் அகல நீளமுள்ள வீடுகளோ அறைகளோ வைத்துக் கட்டி அங்கு வசித்தால் நோயில்லா வாழ்வோடு, செல்வம், புகழ், லாபம், ஆயுள் விருத்தி உண்டாகி மேலும் பல நன்மைகள் ஏற்படுமென கண்டு அறிந்திருக்கின்றனர்.

''இடம்பட வீடிடேல்'' என்ற மூதுரைப்படி மிக்க அகன்ற வீடுகளைக் கட்டலாகாது, சிறுகக் கட்டி பெருக வாழ வேண்டுமென்பது தமிழரின் கருத் தாகும்.

**முற்றமும் அறைகளும்**

முற்றம் வீட்டுக்குள் விடப்படும் வெளியாகும். இதனை வாசல் என்றும் கூறுவர். மனிதனுடைய வாய்க்கு அடுத்தபடி கழுத்தும், அதை அடுத்து நுரை யீரலும் இருப்பனபோல், வீடுகளின் வாய்க்கு அடுத்து நடையும் பிறகு முற்றமும் உள்ளன. இங்கு வீட்டின் கெட்ட காற்று (கரியமிலவாயு) சுத்தக்காற்றுடன் கலந்து தீய தன்மை குறைவதற்கு வசதி ஏற்படுகிறது.

சமையல் அறை விசாலமாக இருக்கவேண்டும் என்பது தமிழர்களின் திட்டமாகும். இதை 'அகன் அட்டில்' என்பதால் அறியலாம். இது பெரும்பாலும் அக்கினி திக்கில் அமைக்கப்படும்.

**நீர்**

''நீரின்றி அமையாது உலகு'' என்ற மூதுரைக்கு ஏற்றபடி தாவரங்கள், பறவை இனம், விலங்கு இனம், மனித இனம் அனைத்துக்கும் நீர் இன்றியமை யாதது. அதனுல்தான் போலும் இயற்கை அமைப்பு உலகை முக்காற்பங்கு நீராலும், காற்பங்கு நிலமாகவும் அமைத்துள்ளது போலும்!

''விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது''

என்ற குறளின்படி மழை பெய்தாலல்லாது இவ்வுலகில் பசும்புற்றலை காண்பதும் அரிதாகும்.

பரிசுத்தமான நீர் மழை நீர், ஆலங்கட்டி நீர், பனிநீராகும். இவை எக்காலத்தும் எளிதில் கிடைப்பது அரிது. எனவே மற்றும் கிடைக்கும் நீர்களை

நன்ருகக் காய்ச்சி அருந்தலே நோயில்லா நெறிக்கு ஏற்றதென முன்னோர்கள் கூறியிருக்கின்றனர்.

**ஆற்று நீர் பொதுக்குணம்**

ஆற்றுநீர் வாதம் அனலங் கபத்தோடு
தோன்றுகின்ற தாகந் தொலைக்குமே — ஊற்றுமிகுந்
தேகத்தி னேயெல்லாஞ் சீறித் துரத்திவிடும்
போகத்திற் காகுமாம் போற்று.

ஆற்றுநீர் வாதம், பித்தம், கபம் என்னும் முத்தோஷங்களையும், சமனப்படுத்தும், தாகத்தை நீக்கும். உடலுக்கு வன்மை தரும். நோயை எல்லாம் விரைவில் நீக்கும். தாது விருத்தியைச் செய்யும். மேற்கூறியபடி ஆறுகளின் பொதுக் குணங்களைக் கூறுவதோடு முக்கியமான பெரு நதிகளின் சிறப்புக் குணங்களைப் பற்றியும் நமது சித்த நூல்கள் கூறுகின்றன. குறிப்பாக கங்கை, யமுனை, துங்கபத்திரை, நருமதை, சிந்து, கோதாவரி, காவேரி, வைகை, தாமிரவருணி, சித்திரைநதி, பச்சையாறு இவைகளில் ஓடும் நீரின் குணங்களை விரிவாகக் கூறி யிருக்கின்றனர்.

**குளத்து நீரின் குணங்கள்**

குளங்களுள் ஊற்றுள்ள குளங்களும், ஊற்றில்லாது மழையால் நிரப்பப் படும் குளங்களும் உள. இவற்றில் மழையால் நிரப்பப்படும் குளத்துநீர் பயனற்றது. ஊற்றுக் குளத்திலும் நீர் போக்குவரத்துள்ள குளமே மேலானது. நீர் ஓடிக் கொண்டே யிருப்பதால் அசுத்தம் அதிகம் இராது.

தாமரை நிறைந்த குளத்தின் நீரால் வாத, பித்த தோஷங்கள் விருத்தி யாகும். வெப்பு நோய், அதிதாகம் நோய்களுண்டாகும் என்பதை பதார்த்த குண சிந்தாமணி நூலால் அறியலாம்.

அல்லிகுளத்து நீர் அருந்துவதற்கு ஆகாது. அதனுல் அக்கினி மந்தம், பேதி, சொறி, சிரங்கு, வெப்பு, தாதுநட்டம் உண்டாகும்.

அதிகக் குளிர்ச்சியுள்ள குளத்து நீரினை அருந்துவது கூடாது.

**ஏரி நீர்**

ஏரி நீரை உபயோகிக்க நேரிட்டால் காய்ச்சி வடிகட்டி, அது தெளியும் பொருட்டு நெல்லிக்கொட்டை தேற்ருங்கொட்டை முதலியன இட்டுப் பயன் படுத்தலாம்.

**சுனை நீர்**

சுனைநீரில் மூழ்கிக் குளிப்பவருக்கு கபக் காய்ச்சல் உண்டாகும். அந்நீரை ஒரு நாள் வைத்திருந்து மறுநாள் உபயோகப்படுத்தினுல் கெடுதல் எதுவும் செய்யாது.

**பாறை நீர்**

பாறையிலிருந்து ஊறுகின்ற நீரை அருந்தினுல் உடல் சிலிர்ப்பும், வாத கோபமும், காய்ச்சல், அன்னத் துவேஷமும் ஏற்படும்.

**சுக்கான் பாறை நீர்**

சுக்கான் பாறையில் தங்கியுள்ள நீரினுல், நீர்க்கடுப்பு, நெஞ்சில் கோழை, பித்த விருத்தி முதலிய நோய்கள் சூழும்.

**சரும் பாறை நீர்**

சோவை, வாந்தி, பெரும்பாடு, பித்தசுரம், தோஷங்கள் நீர்க்கடுப்பு அதிதாகம் இவற்றைப் போக்கி வீரியம், அறிவு, அழகு இவற்றை அதிகப்படுத்தும். உடல் வளர்ச்சியை உண்டாக்கும்.

**அருவி நீர்**

மேகநோயைத் தீர்க்கும். கபத்தை உண்டாக்கும். இரத்த பித்தத்தை மாற்றும். மிகுந்த பலத்தைத் தரும்.

**கறுத்த நீர்**

வாந்தி, கரப்பான், காந்தல், நெஞ்சுக்கட்டு, ஈளைச்சுரம், நெஞ்செரிவு, தாகம், நளிர் இவை நீங்கும். பசி உண்டாகும்.

**சிவந்த நீர்**

காசம், பித்த தோஷம் நீங்கும். உட்சுரம், காந்தல் தாது நஷ்டம் உண்டாகும்.

**வயல் நீர்**

நெற்கழனிகளில் சூழ்ந்த வயல்களில் உள்ள கிணற்று நீரால், மேகநோய், தாகம், வெட்டை, காய்ச்சல் நீங்கும். உடல் குளிர்ச்சியுறும். இரத்த கபமும் மார்பு நோய், கோபம் தணியும்.

எல்லா நில இயல்புள்ள நீர்களிலும் ஆழ்ந்த கிணற்றுநீர், மதுரச் சுவை யுள்ள ஆற்றுநீர், ஊற்று நீர் இவைகளே சிறந்தவை.

**நீரைத் தெளிய வைக்கும் முறை**

நெடுநாட் பழக்கத்தால் சிறந்ததாகக் கையாளப்படுவது தேற்றான் கொட்டையால் தெளியவைப்பதேயாகும். ''மண்மயக்கந் தேற்றுவித்தால் மாற்றுதல் போல்'' என்ற வாக்கியத்தால் அறியலாம். வடிகட்டிய நீரை இரண்டு மூன்று தேற்றாங்கொட்டையை அதில் இழைத்துவிட்டு ஐந்து அல்லது ஆறு மணி நேரம் அசையாது வைத்திருக்க நுண்ணிய வண்டல் அடியில்தங்கி மேலுள்ள நீர் தெளிந் திருக்கும். இந்நீருக்கு ஒரு இனிப்புச் சுவையும் உண்டு.

நெல்லிக்கனி அல்லது நெல்லிக் கட்டையை நீரில் போட்டு வைக்க நீர் தெளிந்து புனிதமாகும்.

படிக்காரத்தை நீரில் கலந்து தெளியவைக்கும் பழக்கமும் தமிழர்களிடம் உண்டு. இருப்பினும் இம்முறை தேற்றாங்கொட்டை நெல்லிக்கனி போன்று சிறந்ததல்ல.

## நெருப்பு

சூரியனுடைய ஒவ்வொரு ஒளிக் கதிரிலும் ஏழு வண்ணங்கள் இருக்கின்றன. இவைகளைத்தான் தமிழர்கள் ஏழு குதிரைகள் என உருவகப்படுத்தினர் போலும்! அனைத்து உயிரினங்களும் இரை தேடுதல், மக்கள் தொழில் புரிதல், அழகிய தோற்றங்களைக் கண்டு களித்தல் சூரியன் ஒளி வீசும் பகற்காலத்தில்தானே! சூரிய வெளிச்சத்திலுள்ள செடிகள்தான் பச்சையாகவும் செழுமையாகவும் வளர்கின்றன. குளிரைப் போக்கிக் கொள்ள பிராணிகளும் மக்களும் வெய்யிலில் காய்கின்றார்கள். வெய்யிலில் காய்வதால் உடலிலுள்ள நோய்க் கிருமிகள் மாய்கின்றன. சூரிய வெப்பம் தோலின் கீழுள்ள கொழுப்பை வன்மையுள்ளதாக (Vitamin D.) மாற்றி எலும்புருக்கி, இளைப்பு நோய்களைக் குணப்படுத்த உதவுகின்றது. காலை வெய்யிலிற் காய்தல் தீமை பயக்கும், மாலை வெய்யில் நன்மை பயக்கும். வெய்யில் உடலில் படாமல் குளிர்ந்த நிழலிலிருப்பவர்களுக்கு அழகுண்டாயினும், உடல் பருத்து, வாதம், சோம்பல் தோன்றும். எனவே முதுகில் வெய்யில்படும்படி கொஞ்சநேரமேனும் உலவுதல், பணிபுரிதல் அவசியமாகும்.

### தீயின் ஒளி

நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், இலுப்பெண்ணெய் இவைகளைக் கொண்டு விளக்கெரிக்கும் வழக்கமே பண்டைக்காலத்தில் இருந்தது. இவ் ஒளியில் படித்தாலும், தொழில் புரிந்தாலும் கண்கள் பழுதுபடாது. அதை விடுத்து மண்ணெண்ணெய் விளக்குகளும், மின்சார விளக்குகளும் கண் ஒளியைக் கெடுத்து பெரும்பகுதி மக்கள் மிக்க இளம் வயதிலேயே மூக்குக் கண்ணாடி அணியும் கோரக் காட்சியையல்லவா தற்போது காணுகின்றோம்?

### உடல் தீ

இது உடலைக் காக்கவும், கருவை வளர்க்கவும், உண்ட உணவைச் செரிக்கச் செய்யவும் பயன்படுகிறது. இத்தீ ஒவ்வோர் உயிர் வர்க்கத்திற்கு ஒவ்வோர் அளவாக இருக்கும். மனிதர்களுக்கு 98.4° F, மாடுகளுக்கு 101° F, குதிரைகளுக்கு 100° F, நாய்க்கு 111.5° F, பன்றிக்கு 102° F, கோழிக்கு 107° F, ஆகும்.

உடல் தீயானது உண்ணும் உணவால்தான் வளர்க்கப்படுகிறது. பசித் தீயால் உணவு சமைக்கப்பட்டு இரசமாக மாறித் தாதுக்களில் சேரும். அத் தாதுக்கள் தொழில்புரியும்போது உடலிலுள்ள தீ சூட்டைக் கக்கிக் கழி பொருள் களாக மாறும். இங்ஙனம் உற்பத்தியாகும் தீயில் தேவைக்கு மிஞ்சியது வியர்வை மூலமும், மூச்சு மூலமும் சிறு நீர், மலம் இவைகளின் வழியாக அப்போதைக்கப் போது வெளிப்படுகிறது. ஆதலின் உடல் தீ எப்போதும் ஒரே அளவில் நிற்கிறது. இத்தீ அதிகப் படினும் குறைவுபடினும் நோயாம்.

கரு வளருவதற்கு, பூமியில் இடப்படும் வித்துக்கள் முளைப்பதற்கு, முட்டைகளிலுள்ள கரு வளர்ந்து குஞ்சாக வெளிப்படுவதற்கு சூடு அவசியம் தேவைப்படுகிறது. இது மிஞ்சினும், குறையினும் கரு அழியும். இத் தீயின் பகுதி தான் பசித் தீயாகும். ஆகவே. உடல் தீயை அதிகப்படாமலும், குறைவு படா மலும் காத்தல் அவசியமன்றோ!

**காற்று**

காற்று எங்கும் நிறைந்த பொருள். இதைக் கண்ணினுல் பார்க்க முடியாவிட்டாலும் இதன் செயலால் இதனை உணர்ந்து கொள்ளுகிறோம். மனிதன் முதல், தாவரங்கள் வரை காற்று இன்றியமையாததாகும். உயிர்கள் மூக்கின் மூலம் பிராணவாயுவை உள்ளிழுத்து, கரிமல வாயுவை வெளிவிடுகின்றன.

பகல் நேரங்களில் மனிதர்களும், பிராணிகளும், விடும் நச்சுக் காற்றை (கரிமில வாயுவை) ஆங்காங்குள்ள புல், பூண்டு, செடி, கொடி, மரம் முதலிய தாவரங்கள் உள்ளுக்கிழுத்துப் பயன்படுத்திக் கொண்டு உயிர்க் காற்றென்னும் (பிராணவாயுவை) வெளிவிடுகின்றன. சூரிய ஒளியில்லாத இராக்காலங்களில் தாவரங்கள் அந்நச்சுக்காற்றைப் பயன்படுத்துவதில்லை. மாறாக தாவரங்கள் இரவு நேரத்தில் நச்சுக்காற்றை வெளியிடும். எனவே, இரவு நேரங்களில் மரஞ்செடி கொடிகளுக்கு அருகிலோ, அடியிலோ படுத்து உறங்குதல் கூடாது என நமது பெரியோர்கள் ஆசாரக்கோவை என்னும் நூலில் ''இராமரமுஞ் சாரார்'' என்று கூறியிருக்கின்றனர்.

வீட்டின் சமையலறையில் அடுப்பு அக்கினி திக்கில் அமைத்தல் வேண்டும். அப்போதுதான் அதனின்றும் எழும் புகை தூய தென்றல் காற்றுடன் கலந்து தன் தீய தன்மையை இழக்கும் எனக் கண்டறிந்துள்ளனர்.

வெப்பம் மிகுந்த நம் நாட்டில் சிறிது வேலை செய்தாலும் அதிகமாக மூச்சு வாங்குகிறது. இதனுல் இந்நாட்டினரின் வயதும் குறைகிறது. மூச்சை அதிகமாகச் செலவு செய்யாமல் அடக்கி ஆள்பவருக்கு ஆயுள் வளரும். பிராணு யாமம் என்னும் மூச்சுப் பழக்கத்தை சித்தர்கள் ஏற்படுத்தி அனைவரும் பின்பற்றும் படி செய்திருப்பது தமிழர்களால்தான் என்பது உலகறிந்த செய்தி.

**விண்**

மண், நீர், தீ, காற்று முதலிய எல்லாப் பொருள்களுக்கும் இடமளிப்பது விண். இவ்விண்ணின் காரியம் ஒலி. இன்பமுற்றபோதும், துன்பமுற்றபோதும் மக்கள் தம் உள்ளக் கிளர்ச்சியைப் பாடல்களின் வாயிலாக வெளிப்படுத்து கின்றனர்.

இசை என்னும் சொல்லுக்கு வயப்படுத்துவது — இசைவிப்பது என்பது பொருள். மரம், செடி, கொடி முதல் மக்கள் வரை எல்லா உயிர்களையும் இசை வசப்படுத்தும் என்பதை நம் முன்னோர்கள் அறிந்திருந்தனர். மலர், கிளி, யானை முதலியன தம் காரியங்களை விட்டு மயங்கும்படி இசையால் செய்திருக்கின்றனர். அகத்தியர் என்னும் சித்தர் ஒரு நேரம் இசையோடு பாடலைப் பாடியபோது பொதிகை மலையின் கல் உருகியது என்று கூறப்பட்டிருக்கிறது. மோடி வாசித்து நல்ல பாம்புகளை வசப்படுத்திப் பிடிப்பதை இன்னும் காண்கிறோம். தாலாட்டு என்னும் பாட்டுக்களைப் பாடிக் குழந்தைகளைத் தூங்கச் செய்தல் தொன்றுதொட்டு வந்த வழக்கமாகும்.

தொழில்கள் செய்யும்போது ஒவ்வொரு வகையான பண்ணுல் அமைந்த பாடல்களைப் பாடுவதும், பெண்கள், நெல் குத்தும்போது வக்களைப் பாட்டு பாடுவதும், ஓடம் செலுத்துபவர்கள், ஏற்றம் இரைப்பவர்கள் பாடிக் கொண்டே பணியாற்றுவதும் களைப்புத் தெரியாமல் இருப்பதற்காகவே. நோயாளர்களைத் தூங்க வைப்பதற்கும், நோயின்றி வாழ்வதற்கும் பண் அமைந்த பாக்கள் ஏற்படுத்தியிருப்பது நம் முன்னோர் இசையினுல் சாதித்த சாதனைகளல்லவா?

அறிவியலார் இன்று இசையினுல் பயிர்களை வளர்க்கும் பாங்கினையும் கேள்விப்படுகிறோம்.

## ஐந்து பொறிகளைக் காத்தல்

### கண்

கண், மூக்கு, காது, வாய், மெய் ஆகிய ஐம்பொறிகளுள் கண் சிறந்ததல்லவா? தாயின் வயிற்றில் கருவாக இருக்கும்போதே தாயின் தவறுன உணவுகளினுல் குழந்தையின் கண்களுக்குத் தீங்கு உண்டாகுமென்பதைக் கண்டிருக்கின்றனர்.

கண்களுக்கு மை இடுதல் என்பது தற்காலம் அழகிற்காக எதைஎதையோ வாங்கித் தீட்டி கண்களைக் கெடுத்துக் கொள்கின்றனர். மை இடுதல் என்னும் வழக்கம் பண்டைக் காலத் தமிழர்களே ஏற்படுத்தியதாகும். சோற்றுக் கற்றுழையில் விளக்கெண்ணெய் விளக்கின் புகையை படியச் செய்து, அதைச் சேர்த்து மை சிமிழில் வைத்துக் கொண்டு கண் இரப்பைகளில் தீட்டுவதால் அழகோடு, நல்ல குளிர்ச்சியையும், ஒளியையும் தரும் என்பதைக் கண்டறிந்திருந்தனர்.

வீட்டு விலக்கான காலத்தில் பெண்கள் கண்களுக்கு மை தீட்டிக் கொள்ளக் கூடாது. அங்ஙனம் தீட்டியிருக்குங் காலத்தில் கருத்தரித்துக் குழந்தை பிறந்தால் அதன் கண்கள் குருடாகவோ அல்லது பார்வை மந்தமாகவோ ஆகுமென்பதைத் தெரிந்திருந்தனர். மேலும் கர்ப்ப காலத்தில் தாய் கடுமையான மருந்துகளை உண்பதாலும், விஷங்கள் தீண்டப்பட்டு பூரண குணமடையாதிருந்தாலும், உணவும், நீரும் வேண்டிய அளவு கொள்ளாததாலும் பிறக்கும் குழந்தை பிறவிக் குருடாகலாம் என்பதைக் கண்டனர். தாய் திகிலடைவதாலும், அடிக்கடி பசியில் வருந்துவதாலும், மாங்காய், மாங்கனிகளை விரும்பி அதிகமாய் உண்பதாலும், வயிற்றில் கிருமிகள் அதிகம் சேருவதாலும் சிசு பிறக்கையில் அதன் கண்ணில் நோயுண்டாகும்.

கால்கள் வருந்தும்படி நீண்ட தூரம் நடத்தல், அதி விரைவாக நடத்தல், பருக்கைக் கற்கள் பாதங்களில் உறுத்தும்படி நடத்தல், கால் சுடும்படி நடத்தல், வெயிலில் திரிந்து வந்து உடனே குளித்தல், தூக்கம் இல்லாதிருத்தல், அதி தூக்கம் கொள்ளுதல், உட்கார்ந்து கவிழ்ந்து தூங்குதல், எண்ணெய் முழுக்குக்குப் பிறகு தூங்குதல், மின்னல், நெருப்பு போன்ற அதிக ஒளியுள்ள பொருள்களைப் பார்த்தல், நகங்கள் வளர்ந்திருத்தல், தலையில் பெருஞ்சுமை எடுத்தல், உணவோடு கல்லைக் கடித்தல், பாக்கு வெற்றிலையைக் கன்னத்தில் அடக்குதல் போன்ற செயல்களால் கண்கள் பழுதுபடும் என்பது சித்தர்கள் கண்டவையாகும்.

கண் ஒளி மங்காதிருக்க இரவில் கண்களைக் கழுவியபின் சந்திர தரிசனம் செய்தல் மிகவும் நல்லது. கண்களைப் பிசைந்து விடல், மூன்று நாட்களுக்கு ஒரு முறை கண்களுக்கு மை இடல், வாரத்திற்கு இரு முறை எண்ணெய் முழுக்கு, தலைப்பாகை, செருப்பு அணிந்து நடத்தல், இரவில் படுக்கைக்குப் போகையில் உள்ளங்காலில் பசு நெய்யைத் தேய்த்தல், பகல் உணவில் பண்ணைக் கீரை, சிறு கீரை, பொன்னுங்கண்ணிக் கீரை சேர்த்துக் கொள்ளுதல், இரு வேளையும் நெய் கலந்து உண்ணுதல், இரவில் பால் அன்னம் அல்லது தனிப்பால் அருந்தல் உபயோகிக்க வேண்டுமெனக் கூறியிருக்கின்றனர்.

**மூக்கு**

''தேறுமதி யொன்றைக் கோர்தரம் நசியம் பெறுவோம்'' என்ற செய்யுள் படி 45 தினங்களுக்கு ஒரு முறை மூக்கிற்கு நசிய மிடுதல் நல்லது. வாசனையுள்ள பூக்களை இரவில் முகருதலே கூடாது. எண்ணெய் முழுக்கின்போது மூக்குத் தொளைகளில் இரண்டொரு துளி எண்ணெய் விடுதல் நல்லது. இவை பழங்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட செயலாகும்.

**காது**

எண்ணெய் தேய்த்துக் குளிக்கும்போது காதுகளிலும் இரண்டு சொட்டு எண்ணெய் விடுதல் நன்று என தமிழ் நூல்கள் கூறுகின்றன. அதிக சத்தமுள்ள இடங்களுக்குச் செல்லக் கூடாது. அண்ணாந்து நீர் குடித்தல் காது நோய் அல்லது செவிடு உண்டாகும் எனக் கூறியிருக்கின்றனர்.

**வாய்**

வாய்க்கும் கண் மூக்கு காது இவைகட்கும் நெருங்கிய தொடர்புண்டு. ஆதலால் வாயின் நலங்கெட்டால் மற்ற மூன்று பொறிகளின் நலமும் கெட்டுவிடும். ஆகையால் வாயைச் சுத்தமாக வைத்திருத்தல் இன்றியமையாததாகும்.

காலையில் பல் துலக்கிய பிறகே உணவு கொள்ளல் வேண்டும். உணவு அருந்திய பின் வாயைப் பல முறைக் கொப்பளித்து உமிழ வேண்டும். ஒவ்வொரு முறையும் உணவு உட்கொள்வதற்கு முன்னும் பின்னும் வாயை அலம்புதல் வேண்டுமென்பதை வற்புறுத்தியுள்ளனர்.

**மெய்**

உடல் முழுவதும் தோலால் மூடப்பட்டதாகும். இதில் எப்பொழுதும் வியர்வை கசிவதால் அழுக்கு ஏற்படுகிறது. பல கிருமிகள் உற்பத்தியாகி தினவு, சொறி, சிரங்கு உண்டாகும். ஆகவே தினந்தோறும் குளிக்க வேண்டும். ''திங்களரைக் கிரண்டுதரஞ் சவற விரும்பிடுவோம்'' என்பதால் வாரத்திற்கு ஒரு முறையாவது சவரஞ் செய்து கொள்ளல் வேண்டும். சுத்தமான ஆடைகளை அணிதல் வேண்டும். ''கந்தையாயினும் கசக்கிக் கட்டு, கூழாயினுங் குளித்துக் குடி'' என்னும் மூதுரை அதற்கென ஏற்பட்டதே.

**ஒழுக்கம்**

நல்ல பழக்க ஒழுக்கங்களை மேற்கொண்ட ஆன்றோர்கள் கம்பீரமான தோற்றத்தையும், வலிவையும், நலத்தையும் பெற்று நூறு ஆண்டுகளுக்குக் குறை

யாமல் வாழ்ந்து வந்திருக்கிறுர்கள். ஆகவே அனுபவ முதிர்ச்சி பெற்ற பண்டைய பெரியவர்களின் ஒழுக்க முறையைப் பின்பற்றிஞல் நீடிய ஆயுள் வாழலாம் என்பது உறுதி.

### காலையெழுதலும் காலைக் கடன்களும்

''புத்தி யதற்குப் பொருந்துந் தெளிவளிக்கும்
சுத்த நரம்பினறற் றூய்மையுறும் — பித்தொழியும்
தால வழி வாதபித்தந் தந்தநிலை மன்னுமதி
காலை விழிப் பின்குணத்தைக் காண்.'' (தேரையர்)

அதிகாலையில் எழுந்தால் சுறுசுறுப்பாக இருக்கும். புத்தி தெளிவடையும். புத்தித் தெளிவை உணர்த்துகின்ற சுத்த நரம்பின் துவாரத்தில் நிறைந்திருக்கும் நீர் கலங்கலில்லாமல் பரிசுத்தமாக இருக்கும். பயித்திய கோபம் நீங்கும். வாத பித்த கபங்கள் தத்தம் நிலையில் பொருந்தி நிற்கும்.

சூரியன் உதயமானபின் எழுந்தால் உடல் பளுவும், சோம்பலும் மயக்கமும் உண்டாகும்.

### மலம் நீர் கழித்தல்

காலை எழுந்து வாய் கொப்பளித்து, ஒரு குவளை தண்ணீர் அருந்தி, சற்று உலாவி, மலசலங்களைக் கழிக்க வேண்டும். இவற்றைக் கழிக்க இதுவே தகுந்த நேரமாகும். நீரைக்கழிக்கையில் இடக்கையால் வலப்பக்கத்து அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். மலம் கழியும்போது வலக்கையால் இடப்பக்கத்து அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். மலம் தடைப்பட்டால் இடது பக்கம் சற்றுப்படுத்து வலது நாசியில் சுவாசம் வருமாறு செய்து பிறகு மலத்தைக் கழிக்கவேண்டும். நீர் தடைப்பட்டால் வலதுபக்கம் சற்று நேரம் படுத்துப் பிறகு நீர் கழிக்க வேண்டும்.

தினமும் மலச்சிக்கலில்லாமலிருக்க கீரைவகைகளையும் வெண்ணைய்யையும் அதிகம் சேர்க்க வேண்டும். திராட்சை, வாழைப்பழம், பால் அருந்துதல் அவசியமாகும்.

### பல் துலக்கம்

''வேலுக்குப் பல்லிறுகும் வேம்புக்குப் பல்துலங்கும்
பூலுக்குப் போகம் பொழியுங்காண் — ஆலுக்குத்
தண்டா மரையாளுஞ் சாருவளே நாயுருவி
கண்டால் வசீகரமாங் காண்''

இக்குச்சிகளுள் ஆலம் விழுதும் கருவேலும் முக்கியமானதென்பதை ''ஆலும் வேலும் பல்லுக்குறுதி'' என்னும் சான்றேர் வாக்கால் அறியலாம்.

மிருதுவான ஈறுகளையும் வாய்ப்புண்ணையும் உடையவர்கள் வேப்பங் கொழுந்தால் அல்லது திரிபலைப் பொடியால் பல் துலக்கலாம்.

**உடல் பயிற்சி**

உபயோகப்படுத்தாத இயந்திரங்கள் எப்படி துருப்பிடித்துப் பயனற்றுப் போகின்றனவோ அதுபோல மனித உடலில் பயிற்சியில்லாத அங்கங்களும் சிறுகச் சிறுகச் சக்தி குன்றிப் பயனற்றவையாக ஆய்விடும். ஆகையால், ஒவ்வொரு அங்கத்துக்கும் தக்க பயிற்சியை அளிக்க வேண்டும்.

உடலுக்கு வன்மையும், மனத்திற்கு இன்பத்தையும் அமைதியையும் உண்டாக்கும்பொருட்டு முன்னோர்கள் யோகப் பயிற்சிகளைச் செய்து வந்தார்கள். பண்டைக் காலத்தில் இல்லறத்தில் வசிப்பவர்கள் யோகப் பயிற்சிகளைச் செய்து புத்திரப்பேறு முதலிய சம்பத்துகளைப் பெற்றும், துறவிகள் அவற்றைத் தழுவி காய சித்தி முதலிய பயன்களைப் பெற்றும் இன்பமுடன் வாழ்ந்தார்கள்.

கசரத் எனப்படும் தண்டால், பஸ்கி போன்றவைகளும், மல்யுத்தம், சிலம்ப விளையாட்டுகளுமே உண்மையான தேகப்பயிற்சிகளாகும். இவைகளால் எல்லா உறுப்புகளும் வன்மையடையும். இவ்வகைத் தேகப் பயிற்சியை வாத பித்த ரோகிகளும், அஜீரண ரோகிகளும், பன்னிரண்டு வயதுக்குட்பட்ட இளைஞர், கிழவர் முதலியோரும் செய்யலாகாது. இவர்களுக்கு கடுமையில்லாத விளையாட்டுகளும் நடையும் நன்று. வன்மையான பயிற்சிகள் ஆகாது. அவர்கள் தக்க யோகாசனப் பயிற்சிகளைச் செய்தால் மேற்கூறிய நோய்களிலிருந்து விலகி வன்மையடைவர்.

**நீரரடல்**

நாள்தோறும் சூரிய உதயத்திற்கு முன்பே குளித்தல் வேண்டுமென்பது நம் முன்னோர்கள் விதி.

''காலைக் குளிக்கில் கடும்பசி நோயும் போம்;
மாலைக் குளிக்கவிவை மத்தியமே — சோலையிடை
வாசநீர் சுத்தசலம் வன்னீநீ ராடுங்கால்
தேசமுடன் பேதமுன்னிச் செப்பு''

என்னும் இச்செய்யுளால் காலையில் குளித்தலே சிறந்ததாகும். உடலில் வியர்க்கும் அளவு பணிபுரிபவர்கள் மாலையிலும் குளித்தல் அவசியமாகும்.

பெண்கள் முகத்திற்கும் உடம்புக்கும் மஞ்சள் இழைத்துப் பூசிக் குளிப்பது தென்னாட்டுப் பழக்கமாகும். இதனால் உடலில் ஏற்படும் கற்றாழை நாற்றம், முகத்தில் உண்டாகின்ற நோய்கள், தினமையைத் தரும் சிலேத்துமம் வியர்வை இவைகள் நீங்குமென பதார்த்த குண சிந்தாமணி கூறுகின்றது.

''மஞ்சட் குளிதனக்கு மாருத்துர்க் கந்தமொடு
விஞ்சுமுக சாட்டியமும் விட்டகலுந் — தொஞ்சலுறு
மைய மொழியு மடர்வியர்வுங் காணுது
வைய மத நூல் வகுத்து''.

மற்றும் பஞ்ச கற்பம் என்னும் கத்தூரி மஞ்சள், மிளகு, வேப்பங்கொட்டை கடுக்காய்த் தோல், நெல்லி வத்தல் இவைகளை பசும்பால் விட்டு அறைத்துக்

கொதிக்க வைத்துத் தலைக்கும் உடம்புக்கும் தேய்த்துத் தலை முழுகிவர எந்நாளும் பிணி வராது. எண்ணெய், முக்கூட்டு நெய், பசுவின் நெய், உயர்ந்த தைலங்கள் முதலியவைகளை எட்டு நாள்களுக்கு இருமுறை தேய்த்து முழுகிவர எந்த நோயும் உடலை வருத்துதற்கு இல்லையென்றும், எண்ணெய் முழுக்கன்று பலக் குறைவாய்த் தோன்றினாலும், பஞ்சேந்திரியங்கட்கு வலிவு, தெளிவு, தலை, முழங்கால்கட்டு வன்மை, உரோம வளர்ச்சி, நல்ல குரலோசை உண்டாகும், தலைவலி போகும் எனக் கூறியுள்ளனர்.

**உடை**

உணவுக்கு அடுத்தபடி வேண்டப்படுவது உடையேயாகும். மனிதன் உடுத்த வேண்டிய உடைகள் அனைத்தும் பருத்தி நூல்களால் நெய்யப்பட்டதாகவே இருத்தல் வேண்டும். உடைகளுக்கு பல நிறச் சாயங்களை ஏற்றி உபயோகப் படுத்துவது கண்ணிற்கு அழகைத் தருவதற்காக மட்டு மல்ல. ஒவ்வொரு வண்ண மும் பலவகைக் குணங்களைத் தருவதாகும்.

**வெண்மை** நிற உடையை உடுத்தினால் வாதாதி தோடங்களும் வியர்வை யும் விலகும். ஆயுள் விருத்தி வனப்பு, மகிழ்ச்சி, அறிவு, பலம் இவைகள் உண்டாகும். **மஞ்சள்** வண்ண உடையை உடுத்தினால் வாத நீர்ச் சுருக்கு, இருமல், விஷக்காய்ச்சல், மாருத தினவு, தனிச் சுரம், மலபந்தம் இவை நீங்கும். **பச்சை** ஆடையினால் உள்சூடும், சிலேத்தும தோஷமும் போய் கண்ணுக்குக் குளிர்ச்சியும் உடல் பூரிப்பும் உண்டாகும். **கறுப்பு** ஆடையினால் இருமல், காய்ச்சல், அக்னி மந்தம், மகாசர்ப்ப நஞ்சு, பயித்தியம் முதலியன போம். அதி பயித்தியம், உட்சூடு, தருண சுரம், வாந்தி, அரோசகம், சிலேத்தும் கோபம் இவைகளில் ஏதேனும் ஒரு நோய் அல்லது பல அணுகியிருக்குங் காலத்தில் **சிவப்பு** நிற உடை உடுத்தக் கூடாது. உடுத்தினால் அவ்வியாதி அதிகப்படும்.

நாம் சூடுமிகுந்த நாட்டில் வசிப்பதால் இலேசாயும், மெல்லியதாயும் தாராளமாயுமுள்ள உடைகளையே உடுத்த வேண்டும். மேல் நாட்டார் நாகரிகத் தைப் பின்பற்றி ஒன்றின்மேல் ஒன்றாகப் பல உடைகளை உடுத்துவது நமது நாட் டிற்குப் பொருந்தாது. ''உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்'' என்ற வழக்கு நமக்கே பொருத்தமுடையதாகும். அப்போது தான் வேலைகளைச் செய்ய வசதியாக வும், வியர்வை அதிகமாக உண்டாகாமலும் இருக்கும்.

**கால் கவசம்**

ஆடு, மாடு இவைகளின் தோலால் செய்த கால் கவசங்களைப் (செருப்பு கள்) போட்டு நடத்தலால் பூமியில் வரும் வெப்பு நோய்களும், கட்டை, கல், முள் இவைகளால் வரும் காயங்களும், தேள் முதலிய கிருமிகளால் வரும் துன்பங் களும் வாராது தவிர்க்கலாம் என்பதை அக்காலத்திலேயே கண்டறிந்திருக்கின்றனர்

**அணிகலன்**

அணிகலன்கள் அணிதல் அழகுக்காக மட்டுமல்ல. உடலுக்கு சில நன்மைகள் ஏற்படும் பொருட்டே நவமணிகள், தங்கம், வெள்ளி, சங்கு, தந்தம் முதலியவற்றால் தயாரிக்கப்பட்ட நகைகளை அணிந்து வருகின்றனர். முத்து,

மரகதம் சத்துவ குணத்தையும், நீலம் தமோ குணத்தையும், மாணிக்கம், பவழம், புட்பராகம், வைரம், கோமேதகம், வைடூரியம், இராசச குணத்தையும் உடையன என்பதை அறிந்திருந்தனர்.

மாணிக்கம் ஞாயிறுக்கும், முத்து திங்களுக்கும், பவழம் செவ்வாய்க்கும், மரகதம் புதனுக்கும், புட்பராகம் வியாழனுக்கும், வைரம் வெள்ளிக்கும், நீலம் சனிக்கும், கோமேதகம் இராகுக்கும், வைடூரியம் கேதுவுக்குமாம்.

ஒருவன் பிறக்கும்போது இக்கோள்கள் ஒன்பதும் நன்மை பயக்கும்படி அமைந்திருந்தால் எங்ஙனம் அவனுக்கு ஆயுள் உள்ள மட்டும் இன்ப வாழ்க்கை எய்துமோ அதுபோல இம்மணிகளுள் உருவம், நிறம், ஒளி இவைகளில் குற்ற மில்லாதவைகளைத் தேர்ந்து அணிகளில் அமைத்து அணிந்தால் நற்பயனும் சுக வாழ்க்கையும் உண்டாகும் எனக் கருதப்படுகிறது, தமிழ்நாட்டு வழக்கத்தில்.

சங்கினுல் செய்த மோதிரத்தை வலது கை விரலில் அணிந்து முகம் கழுவினுல் முகப்பரு நீங்குமென்றும், தாளக ஈயத்தினுல் செய்யப்பட்ட மோதி ரத்தை இடது கை விரலில் அணிந்து சௌச்சம் செய்து வந்தால் மூலம் நீங்கு மென்றும், கடலில் கிடைக்கும் பாசிக் கொடியின் வேரைக் கையில் அணிய வாதக் குடைச்சல் நீங்குமென்றும், இரசமணியை அணிந்தால் சகல சித்தியும் உண்டாகு மென்றும், நவமணிகளுள் மாணிக்கத்தை நடுவில் வைத்து மற்றவைகளாகிய முத்து, வைடூரியம், வைரம், மரகதம், கோமேதகம், பவழம், நீலம், புட்பராகம் இவைகளை முறையே கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு திசைகளில் நிறுத்தி முறைப்படி அணிகலன் தயாரித்து அணிந்தால் பல சித்தி பெறலாமென அனுபவம் பெற்ற பெரியவர்கள் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

### உணவு

உயிரோடு கூடிய உடலை வளர்க்கவும், காக்கவும், பல தொழில்களைப் புரியவும், புரியங்கால் தாதுக்களுக்கு உண்டாகும் சேதங்களைப் புதுப்பிக்கவும் அறுசுவை உணவு அவசியமாகும். உணவின் சுவை என்பது ஊட்டந்தரும் பகுதி களின் இயற்கை அடையாளம். இதனை நன்கு அறிந்த தமிழ் மக்கள், தாம் உண்ணும் உணவுகளில் அறு சுவைகளையும் கலந்து உண்டு வந்தார்கள்.

துவர்ப்புச் சுவை ஆற்றலும், கார்ப்புச் சுவை வீறும், இனிப்பு வளமும், உவர்ப்பு தெளிவும், கைப்பு மென்மையும், புளிப்பு இனிமையும் தந்து உடலை நலமும் அழகுமுடையதாகச் செய்கின்றன. உணவு வேண்டும் என்று அறிவிப்பது பசியல்லவா? ஆகவே பசியுற்றபோது காலதாமதமின்றித் தகுந்த உணவுகளை உட்கொண்டு பசியை நீக்குதல் வேண்டும். பதினுன்கு வேகங்களில் ஒன்ருகிய இப்பசியை உடனே சாந்தி செய்யா விட்டால் உடல் சோர்வடையும்; வனப்பு நீங்கும், வலிவு, மன உற்சாகம், ஆசை முதலிய குணங்கள் குன்றும்; நா ருசியறி யாது; சொல் ஆடாது; காது கேளாது; கண்களில் இருள் மூடும்; மற்ற இந்திரியங் கள் சோர்வு அடையும். மேலும் பல துன்பங்கள் உண்டாகும்.

உண்ணும் உணவில் கால் பங்கு கிருமிகளுக்கும் கால் பங்கு மலத்திற்கும், கால் பங்கு உடல் தீங்கும், கால்பங்கு உடல் வளர்ச்சிக்கும், பயன்படுகிறது. உணவுகள் அதனதன் தன்மைக்கு ஏற்றபடி விரைவாகவோ, தாமதமாகவோ சீரணமடைந்து சப்த தாதுக்களையும் நிரம்பச் செய்து எட்டாம் நாள் உடலுக்குக் குன்றாத வன்மையைக் கொடுக்குமென்று தேரையர் என்னும் சித்தர் கூறுகின்றார்.

''திரிபதார்த் தம்பலஞ் செய்யும் உடனே
திரிபதார்த் தம்பலஞ் செய்யும் — தெரிமுறையே
சீதவம்பு ணர்ச்சியூன் றேனு சொறி நறும்பா
வரதவம்பு ணர்ச்சிதை லம்.''

**உணவில் ஆண், பெண்ணிற்கு வேறுபாடு**

குழந்தைப் பருவத்தில் வேறுபடுவதில்லை. இயற்கையில் ஆண்களை விட பெண்கள் மெலிந்தவர்கள். பிள்ளைப் பெறுதல், குழந்தைகட்குப் பாலூட்டல் போன்ற பல துன்பங்களைத் தாங்க வேண்டியவர்கள். ஆகவே, இவர்களுடைய உடம்பு கொழுத்து, உருண்டு, திரண்டு, இருக்க வேண்டும். முரட்டுத் தொழில் களை மேற்கொண்டு பல இடங்கட்கு ஓடியாடித் திரிபவராயும் இருக்கும் ஆண்களைப் போன்று பெண்கள் அதிக அளவு உணவை உண்ண முடியாது. ஆதலின் இவர்கள் உணவு குறைந்ததாயும், லகு, வன்மை, கொழுமை ஆகிய குணங்களைப் பெற்ற தாயும், சத்துகள் நிறைந்ததாயும் இருத்தல் வேண்டும். இதனால்தான் ''உண்டி சுருங்குதல் பெண்டிற்கு அழகு'' என்று அவ்வையார் கூறியுள்ளார்.

குழந்தைகட்கு 10 மாதம் வரை தாய்ப்பாலே சிறந்த உணவு.

உணவில் எந்த நேரத்தில் எந்த உணவு உண்பது உடலுக்குப் பொருத்த முடையது என்பதை தேரையர் பதார்த்த முறை சிந்தாமணியில் மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றார்.

பயறு, கடலை, துவரை, உளுந்து, காராமணி, எள்ளு, மொச்சை, கடுகு, மிளகு, சுக்கு, பெருங்காயம் முதலியன காலைக் கறிக்கானவை.

பகல் காலத்தில் கிழங்கு, பழவகைகள், வாத வஸ்துக்கள், மந்த பதார்த் தங்கள், கீரைகள், எருமைத் தயிர், மோர் முதலியவைகளாகும். இவைகளின் குற்றம் சூரிய வெப்பத்தினாலும் தேக உழைப்பினாலும் நீங்கும்.

இரவு நேரத்தில் அவரைப் பிஞ்சு, அத்திக்காய், பசுவின் பால், முருங்கைப் பிஞ்சு, துவரம் பருப்பு, ஆற்று முள்ளிக்காய், தூதுளங்காய் முதலியவை ஆகும்.

**நீர் அருந்துதல்**

நீரை அண்ணாந்தாவது குனிந்தாவது குடிக்கக் கூடாது. அருந்தும் போது பாத்திரத்தைக் கடித்துக் குடிக்க வேண்டும். அண்ணாந்து குடித்தால் காது மந்தமாகும். குனிந்து குடித்தால் காச நோய் வருமெனக் கூறுகின்றார்கள் சித்தர்கள்.

''தண்ணீரண் ணாந்துண்டாற் சாருஞ் செவிமந்தங்
காற்றைக் குனிந்துண்டாற் காசமுண்டாந் — தண்ணீர்

குடிக்கவென்ருற் பாத்திரத்தைக் கோதறவே வாயாற்
கடித்தருந்த துன்பமிலே காண்''.

நீரைச் செம்புப் பாத்திரத்தில் காய்ச்சி அருந்த கண் புகைச்சல், இரத்த பித்தம் நீங்கும். வெள்ளிக் கிண்ணத்தில் காய்ச்சுகிற நீர் கப நோய் நீங்கும். பஞ்சலோகப் பாத்திரத்தில் காய்ச்சியிருந்தால் திருதோஷம் போம். வெண்கலப் பரத்திரத்தில் காய்ச்சுகிற நீர் இரத்தத்தைப் பெருக்கும். இரும்புப் பாத்திரத்தில் காய்ச்சி சாப்பிட பாண்டு நோய் நீங்கும். தாதுவிருத்தியும் நரம்புகளுக்கு உறுதியு முண்டாகும். மட்பாத்திரத்தில் காய்ச்சிய வெந்நீர் உணவுக்குப் பின் அருந்திஞல் எதிர்க்கின்ற உணவு, நெற்றி நோய், புளியேப்பம், குன்மம், சீதக்கட்டு, சுரம், காசம் நீங்கும்.

**உறக்கமும் ஓய்வும்**

மனித வர்க்கம் மட்டுமின்றி எல்லா உயிர்களும் சிறிது நேரம் வேலே செய்து சிறிது நேரம் ஒய்வெடுத்துக் கொள்வதை நாம் காண்கின்ருேம். சில மரங்கள் பகலில் இலேயை விரித்துக் கொண்டு தொழில் புரிகின்றன. இரவிலோ இலேகளேக் குவித்துக் கொண்டு ஒய்வெடுத்துக் கொள்கின்றன. விடாமல் ஒரே நிலேயாகச் சில நேரம் வேலே செய்தால் உறுப்புகள் களேத்து விடுகின்றன. சிறிது நேரம் ஒய்வெடுத்துக் கொண்டால்தான் களேப்பு நீங்கி மீண்டும் வேலே செய்ய பலம் உண்டாகும்.

ஒய்விஞல் உடல் களேப்பு நீங்குகிறதே ஒழிய மனத்திற்கு ஒய்வு ஏற்படு வதில்லே. எண்ணுத எண்ணங்களேயெல்லாம் எண்ணும் மனத்திற்கும் ஒய்வு கொடுக்க வேண்டியது அவசியமாகும். தூங்குவதால் எல்லா உறுப்புகளும், மனமும், அதைச் சார்ந்த மூளே நரம்புகளும் தொழிலின்றி அமைதியாக இருக்கும். ஆகவே, தூங்க வேண்டியது அவசியமாகும். இருதயம், சுவாசாசயம் முதலிய உறுப்புகள் தொழில் புரியினும் அது மெல்லெனவே நடைபெறுவதால் அவற்றிற்குச் சிறிது ஒய்வு ஏற்படும்.

**தூக்கம் கொள்ளும் முறை**

தகுந்த படுக்கையில் இடது பக்கம் படுத்து, இடது கையை மடக்கி, தலேயின்கீழ் வைத்து, இடது காலே மடக்கி ஒஞ்சரித்து, வலக்காலே நீட்டி, இடக் கால் மேலிட்டு, வலது கையை நீட்டி வலக்கால்மீது வைத்து தூங்குவது முறை யாகும்.

குழந்தைப் பருவத்தில் 12 மணி நேரமும், 5 முதல் 15 வயது வரை 8 முதல் 10 மணி நேரமும், காளேப் பருவமாகிய 16 முதல் 30 வயது வரை 7 மணி நேரமும் 30க்கு மேற்பட்டு 50 வயது வரை 6 மணி நேரமும் அதற்கு மேற்பட்ட வர்கள் 8 மணி நேரம் தூங்கா விட்டாலும் படுத்திருப்பது அவசியமாகும்.

மேற்கூறிய அளவு துயில் கொண்டு விடியற்காலே சூரியன் உதயமாவதற்கு ஒரு மணிக்குமுன் விழிக்கவேண்டும். இதஞல் அறிவுக்கு தெளிவும் சுறுசுறுப்பும் உண்டாகும். வாதாதி முத்தாதுக்கள் தத்தம் நிலேயில் பொருந்தும்.

பகல் நேரத்தில் நித்திரை செய்வதால் உடலிலிருந்து பிரிய வேண்டிய சூடு பிரியாமல் சூரிய வெப்பத்துடன் சேர்ந்து உடல் பலவகை வாத நோய்களில் ஒன்று சம்பவிக்கும் என பதார்த்த குண சிந்தாமணி நூல் கூறுகிறது. பகல் நேரத்தில் தூங்கக் கூடியவர்கள் எவர்? பகல் இரவு நித்திரை செய்யக்கூடாதவர்கள் விஷம் தீண்டப்பட்டவர்களும், தொண்டை நோயுள்ளவர்களும், குறைந்த நித்திரை வேண்டப்படுபவர்கள், எவர்? போன்ற விபரங்களைத் தேரையர் நூலில் விளக்க மாகக் காணலாம்.

### படுக்கை

#### படுக்கைக்குப் போகும் நேரம்

ஒன்பது மணிக்குள் உணவுண்டு பத்து மணிக்குள் உறங்குவதுதான் நன்மை. அதற்குப் பிறகு படுத்தால் தூக்கம் கெட்டு தீமை ஏற்படும்.

#### படுக்கையின் வகை

இலவம் பஞ்சு மெத்தையில் தூங்கினுல் உட்சூட்டை நீக்கும். பருத்திப் பஞ்சு மெத்தையில் தூங்கினுல் இரத்தம் விருத்தியாகும் எனக் கூறியுள்ளனர்.

#### பாய் வகை

தாழம்பாயில் தூங்கினுல் வாந்தி, தலை சுத்தல், பித்ததோஷம் நீங்கு மெனவும், கோரைப் பாயில் தூங்கினுல் சுரவேகந்தணியும், உடல் குளிர்ச்சியும், சக நித்திரையும் உண்டாகுமெனவும், பிரப்பம் பாயில் தூங்கினுல் சீதளம் ஏற்படும், மூல ரோகம், சீதபேதி, சீத சுரம், தலைபாரம் உண்டாகுமெனவும், மூங்கில் பாய்க்கு மூத்திரக் கிரிச்சரம், பித்தகோபம் விருத்தியடையுமெனவும் கூறியிருக்கின்றனர்.

#### தாவரப் பொருள்கள்

மனிதனுக்கு தாவரப் பொருள்களே முக்கிய உணவாகும். இவைகளில் புல் இனத்தைச் சேர்ந்த பயிர் தானியங்களே தொன்று தொட்டு முக்கிய உண வாக இருந்து வருகின்றன. நம் முன்னேர்கள் எது நல்லதென்று உண்டார்களோ அதுவே இன்றும் நம் உணவுப் பொருள்களுள் முதன்மையானவைகளாகக் கருதப் படுகின்றன.

நெல், கோதுமை, கேழ்வரகு, கம்பு, சோளம். வரகு, திணை ஆகியவை முக்கிய பயிர் தானியங்களாகும். இவையாவும் இந்தியாவில் விளைகின்றன. வடக்கே கோதுமை, தெற்கே மற்றவைகள் பயிரிடப்படுகின்றன. இக்காரணத்தி ஞலேயே வட இந்தியர்களுக்குக் கோதுமையும், தென்னிந்தியர்களுக்கு அரிசியும் முக்கிய உணவாகப் பயன்படுகின்றன.

நெல் நன்செய்ப் பயிர், மற்றத் தானியங்கள் புஞ்செய்ப் பயிராகும். நெல் வகைகளைக் கணக்கிட முடியாது. இருப்பினும் இவைகளுள் சம்பாவும் காருமே முக்கியமானவைகளாகும். நெல்லை 6 மாத காலம் சேர் கட்டி வைத்துச் சிறிது பழமையான பின்பு பச்சையாகவோ, புழுங்கலாகவோ உரலிலிட்டு குத்தி உப யோகப்படுத்துவதே பண்டைக்கால வழக்கமாகும். எந்திரங்களில் அரைத்து உப

யோகப்படுத்தலில் அரிசியிலுள்ள சத்துகள் நீங்கிவிடும் என்பதை உணர்தல் வேண்டும்.

அரிசியில் பலவகை உண்டு. **மணிச்சம்பா** அரிசி — அதி மூத்திரத்தை போக்கும். **சீரகச் சம்பா** அரிசிக்கு வாத ரோகங்கள் நீங்கும். **குன்றிமணி** அரிசிக்கு சரீர பலமும், சுக்கிலப் பெருக்கமும் உண்டாகும். **கார்** அரிசி சரீர புஷ்டியைத் தரும். **மணக்கத்தை** அரிசிக்கு விஷங்களை நீக்கும் குணமுண்டு. இப்படி ஒவ்வொரு அரிசிக்கும் குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

கேழ்வரகு — இது புஞ்சைப் பயிராகும். இதனைப் ''பஞ்சந்தாங்கி'' என்றும் கூறுவர். இது பெரும்பாலும் ஏழைகளின் உணவாகும். நன்றாக உழைப்பவர்கள் இதைக் காலையிலும், பகல் நேரத்திலும் உணவாகக் கொள்வர். இதைக் கூழாகவும் களியாகவும் உண்பர். இது போன்ற ஒவ்வொரு புஞ்சை தானியங்களையும் பயன்படுத்தி அக்காலத் தமிழர்கள் நல்ல வலிவுள்ளவர்களாகவும், நோய், வராமல் காக்கப்பட்டும் வாழ்ந்திருந்தனர்.

**காய் தானியங்கள்**

துவரை, சிறு பயறு, உளுந்து, பச்சைப் பயறு, தட்டைப் பயறு, கடலை, மொச்சை, காராமணி, கொள்ளு, பட்டாணி முதலியன காய் தானியங்களாகும். இவை ஒருவகைச் செடி கொடிகளின் காய்களிலுள்ள பயறுகளாகும்.

துவரம் பருப்பை நன்றாக வேகவைத்துக் கடைந்து, அன்னமும் நெய்யும் சேர்த்து ஒரு பிடி உண்ண ஒரு பிடி சதை வளரும் என்று அறிகின்றோம். ஊனை வளர்க்கும் சத்துத் துவரம் பருப்பில் மட்டுமேயன்றி மற்றப் பருப்புகளிலும் உண்டு. ஆனால், அவைகள் வாயுவை அதிகரிக்கச் செய்யும்; சீரணமாவதும் கடினமாகும்.

உளுந்து: இதை சிறிது நல் எண்ணெய் தடவி கல் யந்திரத்தில் விட்டு இரண்டிரண்டாகப் பிளவாகும்படி உடைத்து தோல் நீக்கி பல பண்டங்கள் செய்ய உபயோகப்படுத்துகின்றனர். இதனால் இடுப்பு உறுதியும், வீரியமும் உண்டாகும். இதன் மாவில் சர்க்கரை நெய் சேர்த்து உக்களியாகக் கிண்டி பருவமடைந்த பெண்களுக்குக் கொடுப்பது தமிழர்களுடைய பழக்கமாகும்.

மற்ற பயறுகளுக்கும் ஒவ்வொன்றைப் பற்றியும் சிறப்பான குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன சித்தர் நூல்களில்.

**கீரைகள்**

கீரைகளைத் தென்னிந்தியர்கள் உபயோகிக்கும் அளவு வேறு எந்நாட்டினரும் உபயோகிப்பதில்லை. முருங்கை, அகத்தி, அறுகீரை, முளைக்கீரை, சிறுகீரை, கொத்தமல்லி, பொதினா போன்ற கீரைகள் பயிரிடப்படுகின்றன. பொன்னாங்காணி, பசரை, புளியாரை, பண்ணை நீராரை போன்றவை நீர்ப்பாங்கான இடங்களில் கிடைக்கின்றன.

குப்பைமேனி, மூக்கரட்டை, சத்திச்சாரணை, காணாங்கீரை, பொடுதலை, தும்பை போன்ற கீரைகளைச் சேர்த்து மிளகு கூட்டிப் பாகப்படுத்தி பிரசவமான

பெண்களுக்குப் பத்தியப் பொருளாகவும், மற்றையோருக்கு உணவாகவும் கலவைக் கீரை என்ற பெயருடன் நாட்டு மக்கள் வழங்குகின்றூர்கள்.

**கீரைத் துவட்டல்**

சட்டியை அடுப்பேற்றி எண்ணெயிட்டு காய்ந்தவுடன் கடுகு, உளுத்தம் பருப்பு, மிளகாய், வெங்காயம் இவைகளைக் கொட்டி வறுத்து, ஆய்ந்த கீரையை அலம்பி சட்டியில் போட்டு, உப்பிட்டு, மூடி வேகவைத்துத் துவட்டி பதத்தில் எடுத்து, அத்துடன் தேங்காய்ப் பூவையும் சேர்த்துக் கொள்வதே கீரைத் துவட்டலாகும்.

மிளகாய்க்குப் பதில் மிளகு சேர்த்துத் துவட்டினுல் கீரைகளிலுள்ள விஷத்தை நீக்குவதன்றி கீரையில் வீரியத்தையும் குன்ருது பாதுகாக்கும்.

''முருங்கைக் கீரை வெந்து கெட்டது,

அகத்திக்கீரை வேகாமல் கெட்டது'' என்ற மூதுரையின்படி அதிகமாக வெந்த முருங்கைக் கீரையையும், வேகாத அகத்திக் கீரையையும் உண்ணக் கூடாது.

**கீரை மசியல்**

கீரையுடன் பூண்டு, பழைய புளி, பருப்பு இவைகளில் ஒன்றைச் சேர்த்து மசியல் செய்யலாம். புளிப்புச் சுவையுள்ள கீரையாயிருப்பின் புளியை நீக்கவும். தற்கால ஆய்வில் புளிப்பு சேர்த்தால்தான் கீரைகளிலிருக்கும் வைட்டமின்கள் அழிந்து போகாமல் காக்கப்படுமெனக் கூறுகின்றனர்.

**துவையல்**

கீரைகளைச் சிறிது நெய் விட்டு வதக்கி, பச்சை மிளகாய், கொத்தமல்லி, உப்பு, சிறிது புளி, வறுத்த உளுத்தம் பருப்பு, கடுகு சேர்த்து அரைத்து உணவுக்கு உபயோகிப்பது தமிழ்நாட்டு வழக்கம். பச்சைக் கொத்தமல்லி, புதினு, கருவேப் பிலே, புளிச்சக்கீரை, புளியாரை, இஞ்சி, மாங்காய், தேங்காய் முதலியவைகளைத் துவையல் செய்து உபயோகிப்பது சத்துள்ள உணவாகும்.

உணவில் அதிகமாக உபயோகப்படும் சில கீரைகளின் குணங்களை மட்டும் கூறுகின்றேன். இவை சித்த மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ளவை.

பெரும்பாலும் கீரைகள் நல்ல மணத்தையும், சீத வீரியத்தையும் பெற் றிருக்கின்றன. மலத்தைப் போக்கும், இவைகளைப் பகல் உணவில்தான் உபயோ கிக்கவேண்டும். இரவில் உபயோகிக்கக் கூடாது.

தாளி, முருங்கை, தூதுளை, பசரை, அறுகீரை போகம் விளைவிக்கும் சக்தியுண்டு.

முளைக்கீரை — முதியவர், இளைஞர், வாலிபர் ஆகியோருக்கு நாவிற்கு இதத்தைத் தரும். காய்ச்சலையும், காச இருமலையும் போக்கும். பசியைத்தரும்.

அறு கீரை — காய்ச்சல், குளிர், நடுக்கம், சன்னி, கபவாதம் போக்கும். காமத்தை அதிகப்படுத்தும்.

சிறுகீரை — கண் புகைச்சல், கண் படலம், இருமல், பாதரச வேக்காடு, மூத்திர கிரிச்சரம், வீக்கம், பித்த நோய், தாது தாவர விஷங்கள் நீங்கும். அழகை உண்டாக்கும்.

சிறு பசளைக்கீரை — புணர்ச்சியில் விருப்பத்தையுண்டாக்கும். கபத்தை அதிகப்படுத்தும், நீர் வேட்கையையும், வெப்பத்தையும் தணிக்கும். மலத்தை இளக்கும்.

நல்ல பசலைக்கீரை — மூத்திரக் கடுப்பு, மூத்திரக் கிரிச்சரம், வெள்ளை ஒழுக்கு, அருசி, வாந்தி தீரும்.

வேளைக்கீரை — தலைவலி, உடல் குடைச்சல், சீரணம், மார்வலி இவைகள் நீங்கும். வன்மையுண்டாகும்.

பொன்னுங்காணிக்கீரை — கண் காச நோய், கருவிழி நோய் உஷ்ண ரோகம், வாதம், தேகச் சூடு, மூலரோகம், இவற்றை நீக்கும். உடலை பொன்னிற மாக்கும்.

வல்லாரை — கணச்சூடு, மலக் கழிச்சல், இரத்தக் கிராணியால் உண்டாகும் கடுப்பு நீங்கும்.

முருங்கைக்கீரை — அக்கினி மந்தம், உட் சூடு, தெரித்தல் போன்ற தலைவலி பித்தத்தினுல் ஏற்படும் மூர்ச்சை, கண்ணோய் முதலியவற்றைப் போக்கும்.

அகத்திக் கீரை — பிறரால் இடப்பட்ட மருந்தின் தீமை, பைத்தியம் நீங்குதல், உண்ட உணவு எளிதில் செறித்தல் முதலிய நன்மைகள் உண்டாகும். ஆனுல் கடுவனும் வாயுவும் வந்து சேரும்.

ஆரைக்கீரை — இது நல்ல சுவையுள்ள கீரை. நீங்காத பித்த நோய், நீரிழிவு, இரத்த பிரமேகம் ஒழியும்.

தூதுளைக்கீரை — காது கேளாமை, காது எழுச்சி, காசம், நமைச்சல், அக்கினிமந்தம், திரிதோடம், சூலை, விந்து நட்டம் விலகும்.

கருவேப்பிலை — நாக்கு சுவை அறியாமை, சீதமேனியால் உண்டாகும் வயிற்றுவலி, பல நாட்களாயுள்ள காய்ச்சல், வைத்தியம் போகும்.

புளியாரைக்கீரை — பித்த மயக்கம், வாத கப விகர்ப்பங்கள், மூலவாயு, கிரகணி, இரத்த மூலம் போகும்.

கொத்துமல்லிக்கீரை — வாய் அரோசகம், பித்த நோய்கள், பித்தக் காய்ச்சல் இவற்றைப் போக்கி, வன்மையை உண்டாக்கி சுக்கிலத்தை அதிகப் படுத்தும்.

கலவைக்கீரை — வாத பித்த கபம் இவற்றின் குற்றம், மலச்சிக்கல், குடல் வாதம் ஆகியவை நீங்கும்.

**பூ வகை**

வாழைப் பூ — இரத்த மூலம், வெட்டை, கபாதிக்கம், இருமல், உதரக் கடுப்பு, கைகால் எரிச்சல் நீங்கும். சுக்கில விருத்தி தரும்.

தூதுளம்பூ — தேக புஷ்டி, சுக்கில விருத்தி, வனப்பு, இவைகள் உண்டாகும்.
வெங்காயப் பூ — நாட்டு வெங்காயப்பூ குன்ம நோய்களைப் போக்கும்.

வேப்பம் பூ — வாந்தி, ஏப்பம், கிருமி இவை நீங்கும்.

அகத்திப் பூ – சுருட்டு முதலிய புகைகளினுலும், வெய்யிலினுலும், மருந்துகளினுலும் பிறந்த வெப்பத்தையும் தேக அழலேயும் நீங்கும்.

ஆவாரைப் பூ – இது மது மேகிகளுக்கு நன்று; கற்ருழை மணத்தை அகற்றும். உடல் சாந்தி பெறும்.

**தண்டு வகை**

கீரைத்தண்டு – வெண் கீரைத்தண்டு வெப்பம் வெளி மூலம், பித்த எரிச்சல் நீங்கும். செங்கீரைத் தண்டு பித்த நோய், பெரும்பாடு நீக்கும்.

வாழைத்தண்டு – குடலில் சிக்கிய ரோமம், தோல் விஷம் இவைகளே விடுவிக்கும். நீர்ப்பையில் ஏற்படும் கற்களேக் கரைக்கும். நீர்ப்பையில் கற்கள் ஏற்படாமலும் தடுக்கும்.

பிரண்டைத் தண்டு – ஆசனத் தினவு, இரத்த மூலம் ஒழியும்

கருணேத் தண்டு – மூல ரோகம், கப ரோகம் நீங்கும். பசியையும் சீரணத்தையும் உண்டாக்கும்.

**காய் வகை**

தென்னுட்டில் பலவிதமான காய்களே உணவாகக் கொள்ளுகின்றனர். வாழை, கத்திரி, முருங்கை, அவரை, அத்தி, வெள்ளரி, வெண்டை, சுரை, பீர்க்கு, புடல், பாகல் முதலியவற்றின் இளங்காய்களே அவைகளாகும். முற்றிய காய்களில் நார்ப் பொருள் அதிகம். அதன் குணம் மாறும். சீரணமாகாமல் மலம் அதிகப்படும். உடலுக்குத் தீமையை உண்டாக்கும். ஆகவே பிஞ்சுதான் நன்மை பயக்கும்.

**கிழங்கு வகை**

செடிகள் கிழங்குகளில் பலவகைச் சத்துக்களேச் சேர்த்து வைக்கின்றன. இவைகளில் உணவாக உபயோகப்படக் கூடியவை சர்க்கரை வள்ளிக்கிழங்கு, ஆள் வள்ளிக் கிழங்கு, உருளேக் கிழங்கு, முள்ளங்கிக் கிழங்கு, காறு கருணேக் கிழங்கு, காரு கருணேக் கிழங்கு, வெங்காயம், சேப்பு கிழங்கு, இஞ்சி முதலியவையாகும்.

**பழ வகை**

முதிர்ந்து பழுத்த பழங்கள் உபயோகப்படக்கூடியவை. வாழை, மா, பலா, அத்தி, திராகைஷ, விளாம்பழம், இலந்தை, நாவல், கொய்யா, மாதுளே, பேரீச்சை, அன்னுசி இவைகளாகும்.

**வித்து வகை**

அதிக உஷ்ணமானதும், அதிக சீதளமானதுமான விதைகள் விந்துவை வளர்க்காது. உஷ்ண சீதம் சமமாயுள்ள வித்துகள் அதைப் பெருக்கும். காய்க்குள் சமமான இடைவெளியுள்ளதும், ஒரு காய்க்கு ஒரு வித்து உள்ளதுமான முருங்கை, வாதுமை போன்றவைகள் அதை வளர்க்கும். இடைவெளியின்றி நெருங்கியிருக்கின்ற தூதுளே முதலிய விதைகள் மிகுந்த சூடு. இடவெளி மிகுந்தும், நெருக்கமில்லாத பூசிணி போன்றவைகள் சீதள குணம். முந்திரிப் பருப்பு தாதுவிருத்தி.

அக்கினி மந்தம். வாதுமைப் பருப்பு கலவியில் விருப்பத்தை உண்டாக்கும். சாரப்பருப்பு சிறுநீரை சுருக்கி, கடுப்பு நீங்கும்.

**பால் வகை**

குழந்தை வளர்ப்புக்கு தாய்ப்பாலே மிகச் சிறந்த உணவாகும். பத்து மாதங்களுக்குப் பின்னர் வேண்டுமானுல் பசும்பால் உபயோகிக்கலாம். சித்த நூல்களில் பசும்பால், எருமைப்பால், கழுதைப் பால், வெள்ளாட்டுப்பால், செம்மறியாட்டுப் பால், குதிரைப் பால், ஒட்டகப் பால், யானைப் பால் முதலியவை களின் குணங்களையெல்லாம் கூறியிருக்கின்றனர்.

**தயிர் வகை**

காய்ச்சிய பால் கைபொறுக்கும் சூட்டில் சிறிது தயிர் அல்லது மோர் பொறை இட ஆறு அல்லது எட்டு மணி நேரத்தில் தயிராய்த் தோய்ந்து விடும். அதிகமாகப் பொறையிட்டால் தயிர் மிக்கப் புளிப்படையும். மிதமாகக் குத்தினுல் தயிர் இனிப்பாக இருக்கும். குறைவாகக் குத்தினுல் தயிர் தோயாது. குளிர் காலங்களில் பொறைஅதிகமாக இட்டால்தான் தயிர் தோயும். இல்லாவிடில் தோய்வது கடினம். புளித்த தயிர்தான் உடலுக்கு நன்மை பயக்கும் என்பதை ''மூத்த தயிருண்போம்'' என்று தேரையர் நோயணுகா விதியில் கூறப்பட்டி ருக்கிறது.

**தயிரை உபயோகிக்கத் தகாதவர்கள்** – சூறை நோய், வீக்கம், நேத்திர ரோகம், வாத குன்மம், சோபை, சளிப்பு, விஷக் காய்ச்சல், பீனசம், பீலிசும், கிரந்தி, பாண்டு இவையுள்ளவர்கள் தயிரை உபயோகிக்கக்கூடாது.

**குணங்களைப்பற்றி** – பசுவின் தயிர், ஆடையெடுத்த தயிர், எருமைத் தயிர், வெள்ளாட்டின் தயிர், செம்மறியாட்டின் தயிர் இவைகளைத் தனித்தனியே செய்யுள்களால் விவரித்துக் கூறியிருக்கின்றனர்.

**மோர் வகை**

தயிரை நீர் விட்டுக் கடைந்து வெண்ணெய் நீக்கியோ, நீக்காமலோ எடுக்க மோராகும். எவ்வளவுக்கெவ்வளவு நீர் விட்டு மோரைப் பெருக்குகிருேமோ அவ்வளவுக்கவ்வளவு அது சிறந்ததாகும் என்பதை தற்கால ஆராய்ச்சியின் மூலமும் தெரிய வருகிறது.

ஆகையால் முன்னேர்கள் கூறியவாறே ''மோரைப் பெருக்கி'' உப யோகிக்க வேண்டும். உடற் கூறுக்குத் தக்கவாறு வெல்லம், சுக்கு, சித்திரமூலப் பட்டை இவைகளின் ஒன்றைத் தக்க அளவாகத் தயிரில் ஊறவைத்துக் கடைந்து உபயோகிப்பதும் உண்டு.

பசுமோரால் வீக்கம், மகோதரம், வயிற்று வலி, பாண்டு, பித்தகோபம், இடுமருந்தால் வரும் நோய்கள், பேதி, திரிதோஷம், அக்கினி மந்தம், வெப்பம் இவைகள் திரும். இரவிலும் இதனை உபயோகிக்கலாம்.

எருமை மோரினுல் தாகம், கிராணி ரோகம், மலக் கழிச்சல், காமாலை, கிருமி ஆகியவைகள் நீங்கும். இது தேவாமிர்தமாகும்.

ஒட்டை மோர் பித்தவாத தொந்தத்தைச் சாந்தி செய்யும்.

**நெய் வகை**

வெண்ணெய்யை நன்ருக அலம்பிச் சட்டியிலிட்டுக் காய்ச்சவேண்டும். நீர் சுண்டி கடுகு உண்டாகும் பக்குவத்தில் முருங்கையிலே அல்லது வெற்றிலே சிறிது அதில்போட அது பொரியும். நல்ல வாசனே உண்டாகும். அப்பக்குவத்தில் வடிகட்டி எடுத்துக்கொள்ள வேண்டும்.

நெய் மூன்று மாதம் வரை கெடாமலும், காருதலில்லாமலுமிருக்கும். ''நெய்யில்லா உண்டி பாழ்'' என்று கூறியிருப்பதால், நெய்யை உருக்கி உணவில் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

நெய்களுள் பசுநெய் சிறந்தது. காராம்பசு நெய், எருமை நெய், வெள்ளாட்டு நெய், செம்மறியாட்டு நெய், கலப்பு நெய், இவைகளுக்கெல்லாம் குணங்கள் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன பண்டைய சித்த நூல்களில்.

**திரிதோட சமப் பொருள்கள்**

ஏலம், மஞ்சள், சீரகம், பெருங்காயம், சுக்கு, வெந்தியம், பூண்டு, மிளகு இவை திரிதோட சமப் பொருள்களாகும்.

ஏலம்: சிறிது கார்ப்பு இனிப்புச் சுவைகளே உடையது. வெப்பத்தைத் தணிக்கும். இது வாசனேப் பொருள்களுள் ஒன்று. இதை நசுக்கி இனிப்புப் பண்டங்களில் சேர்ப்பர்.

மஞ்சள்: கைப்பு கார்ப்புச் சுவைகளேயுடையது. வாத பித்த கப தோடங் களேயும் கடி விஷங்களேயும் நீக்கும். இனிப்புத் தவிர மற்றெல்லாப் பொருள் களிலும் இதைப் பொடித்துச் சேர்க்கலாம்.

சீரகம்: சிறிது கார்ப்புச் சுவையுடையது. தீபனத்தை உண்டாக்கும். பித்தத்தைச் சாந்தி செய்யும். வெப்ப குணமுள்ள பொருள்களுடன் சேர்த்துப் பாகஞ் செய்யில் அவற்றின் தீக் குணங்களேப் போக்கும். தாளிப்பதற்கு இது பயன்படுத்தப்படுகிறது. இதை மிளகுடன் சேர்த்துப் பொடித்து இரசம் செய்து உபயோகப்படுத்தப்படுகிறது.

பெருங்காயம்: கார்ப்பு கைப்புச் சுவைகளேயுடையது. கிருமி, அஜீரணம், குடல்வாயு இவைகளேப் போக்கும். இது பெரும்பாலும் பருப்பு வகைகைளின் குற்றங்களே நீக்கப் பயன்படுத்தப்படுகிறது. இதைப் பொரித்துப் பொடித்து உபயோகிக்க வேண்டும்.

வெந்தியம்: கைப்புச் சுவையுடையது. திரி தோஷங்களேயும் வாயுவையும் கண்டிக்கும். பித்தத்தைத் தணிக்கும். கார்ப்புச் சுவையுள்ள குற்றங்களே நீக்கும். இதனேச் சிறிது வறுத்து உபயோகிக்க வேண்டும்.

பூண்டு: ஒருவித மணமுடையது. திரிதோஷங்களேயும் நீக்கும். பெரும் பாலும் கிழங்கு பருப்பு வகைகளின் குற்றங்களே நீக்க உபயோகப்படும்.

மிளகு: அற்ப கார்ப்புச் சுவையுடையது. அற்ப விஷங்களேயும் கப தோஷங்களேயும் போக்கும். இது நம் நாட்டில் மிளகாய் தோன்றுவதற்கு முன்பு பயன்பட்டு வந்தது. எல்லாப் பொருள்களின் குற்றங்களேயும் போக்கக் கூடியது. இதை இளம் வறுப்பாக வறுத்துப் பொடித்தும் பொடிக்காமலும் உபயோகிக்கலாம்.

இன்னும் உப்பு, புளி, மிளகாய், ஏலம், இலவங்கம், இலவங்கப்பட்டை, பெருஞ்சீரகம், போன்ற வாசனைப் பொருள்களும் உணவில் சேர்க்கப்படுகின்றன. இவைகளைச் சேர்ப்பதால் உணவு சுவையாகவும், மணமாகவும், எளிதில் சீரணிக்கக் கூடியதாகவும் அமைந்து விடுகின்றது. அதுவுமன்றி அதிலுள்ள சத்துக்கள் அழியாமலும் காக்கப்படுகின்றன.

உணவில் காரச் சுவைக்கு மிளகாயைப் பயன்படுத்துகிறோம். இது வெப் பத்தை உண்டாக்கி, வயிற்றுக் கடுப்பு, மூலம் முதலிய நோய்களை விளைவிக்கும். இக்குற்றத்தை நீக்க தனியா (கொத்தமல்லி விதை) சம அளவு இதனுடன் சேர்த்துப் பொடித்து உபயோகிக்க வேண்டும். பச்சை மிளகாயைப் பயன் படுத்தும்போது பச்சை கொத்துமல்லிக் கீரையைச் சம அளவு சேர்ப்பது அவசிய மாகும்.

கடுகு, உளுத்தம் பருப்பு, கருவேப்பிலையை எண்ணெய் விட்டு பொரித்து குழம்பு, இரசம், கூட்டு, துவையல், பச்சடி, மோர் முதலியவைகளைத் தாளிப்பதால் சுவையும் மணமும் அதிகரிக்கின்றன. மேலும் சுவைபடவேண்டுமானுல் ஏலரிசி, இலவங்கப்பட்டை, இலவங்கம், சோம்பு, சாதிக்காய், சாதிபத்திரி முதலிய வாசனைப் பொருள்களை (வாசனைத் திரவியம்) உபயோகிப்பது தமிழ்நாட்டினர் வழக்கமாகும்.

மஞ்சள் பொடி — துவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு, பொருள்களுக்குப் பயன் படுவதுபோல இனிப்பு பொருள்களுக்குக் குங்குமப்பூ பயன்படுகின்றது. இது இனிப்புப் பண்டங்களின் குற்றத்தை நீக்கும். நல்ல மணத்தையும் தரும்.

**உணவு தயாரிக்கும் பாத்திரங்கள்**

மண் பாத்திரங்கள், கற்சட்டிகள், வெண்கலப் பாத்திரங்கள், வெள்ளீயம் பூசிய செம்பு, பித்தளைப் பாத்திரங்களே உணவுப் பொருள்களைத் தயாரிப்பதற் கேற்ற பாத்திரங்களாகும். உணவுப் பொருள்களைக் கிளறிக் கொடுப்பதற்கு மர அகப்பை, மரத் துடுப்பு, ஈயம் பூசிய கரண்டிகள் பயன் படுத்தப்படுகின்றன. ஆயினும் நோயில்லா வாழ்விற்கு மண் பாத்திரங்களே சிறந்தனவாகும். ஆகையி ஞல்தான் இன்றும் பெரிய கோயில்களில் அன்னத்தை மண் பாத்திரங்களில் சமைக்கின்றனர்.

**பட்டினியிருத்தல்**

நாள்தோறும் இருவேளை சோறும், ஒரு வேளை சிற்றுண்டியும் உண்பதால் சீரண கருவிகளுக்கு ஓய்வு ஏற்படுவதில்லே. சீரண கருவிகளுக்கு ஓய்வு கொடுக்கவும், சப்த தாதுக்களின் மந்தத்தைப் போக்கவும் பட்டினி இருத்தல் அவசியமாகும். இதைப் பதினைந்து நாள்களுக்கு ஒரு முறை அல்லது முப்பது நாள்களுக்கு ஒரு முறையாவது மேற்கொள்வது நன்று. பட்டினி நாளில் நீரைத் தவிர மற்ற எதனையும் உட்கொள்ளக் கூடாது.

பட்டினியிருக்கையில் சிறிது பித்தம் அதிகப்படலாம். மறுநாள் விடியற் காலையில் குளித்து விடவேண்டும். பித்தத்தைச் சமன்படுத்தக் கூடிய அகத்திக் கீரை வெண் பூசணி போன்றவற்றை புளி காரம் மிகக் குறைவாகச் சேர்த்து சமைத்த கறிகளையும் இரசங்களையும் சேர்த்து லேசான உணவு அருந்தவேண்டும். இங்ஙனம் செய்து வந்தால் சீரணக் கருவிகளுக்கு ஓய்வு ஏற்படும். இந்நன்மையைக் கருதித்தான் ஏகாதசி, சஷ்டி, கிருத்திகை முதலிய விரதங்களைத் தமிழக முதிய வர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

### ஒரு பொழுது

சோமவாரம், வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை ஆகிய நாட்களில் ஒரு பொழுது விரதம் இருத்தல் என்ற வழக்கம் தமிழ் மக்களிடையே ஏற்படுத்தி யிருக்கின்றனர். இப்படி இருப்பதனால் உடலின் மந்தம் நீங்கி சுறுசுறுப்புத் தோன்றும். சீரணக் கருவிகளுக்கு ஓய்வு உண்டாகும். உடலின் மூலை முடுக்குகளில் தங்கி நிற்கும் மலினங்கள் எரிக்கப்படும்.

### உணவின் அளவு

உணவை அளவுடன் உண்ணுதல் வேண்டும்.

''அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு'' — குறள்

பசிக்குத் தக்கவாறு ஏற்றத் தாழ்வாக உண்பதே நீண்டநாள் நோயின்றி வாழ உதவிபுரியும். அன்னமும் கறிகளும் அரை வயிறும், பால், மோர், தண்ணீர் போன்ற பொருள்கள் கால் வயிறும் ஆக முக்கால் வயிறே உண்ணுதல் நலன் பயக்கும்.

### உண்ணும் விதிகள்

அதிகச் சூடான உணவை உண்டால் இரத்தபித்தம், தாகம், சித்தப் பிரமை உண்டாகும். லேசான சூடுள்ள உணவே சில நோய்களைப் போக்குவதுடன் உடல்வன்மையையும் தரும்.

உண்ணும்போது முதலில் கொஞ்சம் நீரருந்தி நெஞ்சை நனைத்துக் கொண்டு பிறகு நெய் கலந்து பருப்பு சாதம் இரண்டொரு கவளம், பின்னர் புளிப்பு, உப்பு, காரம் சேர்ந்த பண்டங்கள், பின் இலைக்கறிகள், முடிவில் புளிப்புத் தயிர், துவர்ப்புச் சம்பந்தமான ஊறுகாய் முதலியவைகளையும் உண்ணவேண்டும்.

உணவு உண்ணும்போது இடையிடையே எழுந்திருக்கக்கூடாது. அவ்வாறு எழுந்திருக்க நேர்ந்தால் மறுபடியும் அந்த உணவைப் புசிக்கக் கூடாது. சாப்பிடும் போது பேச்சும், நகைப்பும், பல யோசனைகளும் இல்லாமல் அமைதியாக உண்ண வேண்டும். இடையிடையே நீர் அருந்துதல் கூடாது.

உணவு உண்ட ஒரு மணி நேரம் வரை கடினமான தொழில், குளித்தல், வாகனம் ஏறல், நீந்துதல், வெய்யிலிருத்தல், அதிகமாகப் பேசுதல், ஆழ்ந்த யோசனை கூடாது. இரவு உணவிற்குப் பிறகு குறுநடை (சிறிது உலவுதல்) அவசியமாகும். பகலெல்லாம் உழைப்பதால் பகல் உணவிற்குப் பின் குறுநடை அவசியமில்லை. சிறிது நேரம் உட்கார்ந்து இளைப்பாறுதல் வேண்டும்.

# அகத்தியர் குழம்பு

பேராசிரியர், டாக்டர், ந. சேதுரகுநாதன்
பல்கலைக்கழக மானியக்குழு — சித்த மருத்துவ ஆய்வுப்பணி,
மதுரை — காமராசர் பல்கலைக் கழகம்

"உண்மையாய் நம்முடைய குழம்பைக் கேளு உறுதியுள்ள பெருங்காயம் இந்துப் போடு
தன்மையுள்ள கடுகுரோ கணியுங் கூட்டித் தயவான ரசமுடனே காரம் கூட்டி
நன்மையுள்ள நிருவிசமும் சிலையும் தாரம் நல்ல கருஞ் சீரகந்திப் பிலியும் சேர்த்து
வண்மையுடன் தொகை பார்க்கப் பத்து மாச்சு வரிசையுடன் சரிஎடையாய் வாங்கிக் கொள்ளே.
வாங்கியதோர் மருந்துக்கு எடைதான் வாளம் வளமாக அதற்கரை தான் பச்சை சேர்த்துப்
பாங்குடனே கல்வத்திலிட்டுக் கொண்டு பக்குவமாய் ஈராறு சாமம் ஆட்டித்
தீங்கில்லா முப்பூவும் பத்துக் கொன்று சேர்த்து நீ திறமாகச் சாமம் ஆட்டு
சாங்கமாய் மருந்தரைக்கும் போதில் மைந்தா தயிருடனே சோறுண்டு தயவாய் ஆட்டே
ஆட்டிநன்றாய் வழித்தெடுத்து மேதிக் கொம்பு அமைவான சிமிழதனிற் பதனம் பண்ணி
நாட்டிலே மானிடர்க்கு வரும் நோய்க்கெல்லாம் நலமான அனுப்பானம் அறிந்து செய்தால்
வாட்டமுடன் ஓடிவிடும் மைந்தா மைந்தா மகத்தான வித்தையடா குழம்பைத் தேடித்
தேட்டமுடன் அதன் சிறப்பைத் தெரிந்து கொண்டு சிவசிவா நம்முடையபெயர் வைத்தாரே
பேர்வைத்தாரென்றால் மைந்தா கேளு பெருமையுள்ள சித்தர்தபோ தனர்கள்கூடி
நேர்வைத்த மருந்துருகுங் குறிப்பைக் கண்டு நேர்மையுள்ள அகத்தீசர் குழம்பென் றார்கள்
பார்வைத்த அகத்தீசர் பண்பறிந்தால் பதறினதோர் குழம்புறுதி யறிவா னப்பா
கூர்வைத்த குழம்புறுதி யென்ன வென்றால் குணமான பச்சையடா வுயிரு மாச்சே
உயிரான பச்சைதனை யறிந்து கொண்டு உண்மையாய் நம்முடைய குழம்பு பண்ணிப்
பயிரான மானிடர்க்கு வருநோய் கண்டு பாய்ச்சுகிற விதமுனக்குப் பகருவேன் கேள்."

**அமுத கலைஞானம் *1200 (900 முதல் 904)***

இந்த நாலரைப் பாடலில் கூறப் பெற்ற அரிய மருந்திற்குரிய பொருள் களையும் பச்சை என்பதனையும் கூட்டியும் குறைத்தும் மாறுபடக் கொண்டும்

பல்வேறு வகையாக எழுதியும் செய்தும் வழங்கியும் பழகினவர்கள் எத்துணை மாற்றங்கள் செய்துள்ளனர் என்ற விளக்கம் ஆராயப்பெறும்.

**பொருள்கள்**

1. பெருங்காயம்
2. இந்துப்பு
3. கடுகுரோகிணி
4. இரசம்
5. வெங்காரம்
6. நிருவிசம்
7. மனோசிலை
8. தாரம்
9. கருஞ்சீரகம்
10. திப்பிலி

இப் பொருள்கள் பத்தும் ஒன்றுக்கு ஒன்று நேர் அளவாகப் பத்துக் கழஞ்சு எடுத்துக் கொள்க. நேர்வாளங்கொட்டையையுடைத்துப் பருப்பு எடுத்துக் கீறி உள்முளை போக்கி வறுத்து எடுத்துப் பத்துக் கழஞ்சு எடை முன் கூறிய பத்துக் கழஞ்சு மருந்துடன் சேர்த்துக் கல்வத்திலிட்டு (குழிக்கல்லில் போட்டு) நன்றாய் அரைத்துப் பின் உயிரான பச்சை என்று அகத்தியரால் பாடலில் கூறப்பெற்ற முட்டையின் மஞ்சட்கரு ஐந்து கழஞ்சு உடன் சேர்த்துப் பன்னிரண்டு சாமம் நன்றாய் அரைத்துப் பின்பு நல்ல வைத்தியமுப்பு பத்திலொரு பங்கு ($2\frac{1}{2}$ கழஞ்சு) சேர்த்து மேலும் ஒரு சாமம் ஆட்டி எடுத்து எருமைக் கொம்புச் சிமிழில் அடைத்து வைத்துக் கொள்க.

நூலில் கூறிய துணை மருந்துடன் சேர்த்து நோய்களுக்கு வழங்குக.

இனி இதனை ஆராய்வோம்.

மேற்கூறிய பாடலில் உயிரான பச்சை என்பதனை இன்னபொருளென்று அறிய முடியாமல் பலர் பலவகையாகப் பொருள் கொண்டனர். கோரக்கர் தாம் இயற்றிய முத்தாரம் 91 என்ற நூலில் முப்பதாம் பக்கத்தில் ''அமிர்த சஞ்சீவிக் குழம்பு'' கூறி வரும் பகுதியில் பச்சைக்கு விளக்கம் கூறியிருக்கின்றார்.

''கார்ப்பதற்காய் முட்டைமஞ்சட் கருவும்பச்சை யாச்சே
கனதுரிய சித்தர்இதை மறைத்துவைத்தார் பேச்சே
நேர்பெரிய அகத்தியர்சொல் பச்சை இது வாச்சே
நிலைமையுடன் பரிபாஷையாய் விரைந்து வைத்தார் பூச்சே
ஆர்கலிதீர் குழம்பு மெழுகில் அண்டமிட்டுப் பாய்ச்சே
அரிய பச்சை முட்டைக்கரு தெரியசந்தேகம் போச்சே
பார்பதினெட்டு மக்கள் சொன்ன நுட்பமறியாதது ஏச்சே
பலவிதமாய் எண்ணங்கொண்டு பாரோர் திரிய லாச்சே''

இங்ஙனம் கூறியதனை அறிய இயலாமல் பிறழ உரை கொண்டனர்.

1. ''வாங்கியதோர் மருந்துக்கு எடைதான் வாளம் வளமாக அதற்கரைதான் பச்சை சேர்த்து'' என்பதற்குக் கடையில் ''வாங்கிய பத்து மருந்தின் எடைக்கு நேரளவு வாளமும் அதற்குப் பாதியளவு பச்சை என்ற பொருளும் சேர்த்து'' என்று பொருள் கொள்ளுவதே மொழி நடைக்குப் பொருத்தம். அங்ஙனம் கொள்ளாமல் ஒருவர் அகத்தியர் பாடியதாகத் தாம் பின்பு பாடிய

பாடலில் ''வாங்கிய கழஞ்சுக் கொப்ப வாளமும் வறுத்துப் பாதி தாங்கிய பச்சை பாதி'' என்று செய்யுள் யாத்தார்.

நேர்வாளப் பருப்புப் பத்துக் கழஞ்சு அளவில் பாதியை வறுத்தும், பாதியைப் பச்சையாகவும் சேர்க்க வேண்டுமென்று இவர் பாடினுர். மேலும் இவர், ''பருவதந்தன்னில் வாழும்'' என்று தொடங்கிய பாடலின் இறுதியில் ''பேசினுர் முனிவர்தாமே'' என்று அகத்தியரைக் குறிப்பிட்டுப் பின்பு, ''பேசிய மருந்து கேளாய்'' என்று தொடங்குகின்ருர். அகத்தியர் ''குணமான பச்சையடா உயிருமாச்சே'' ''உயிரான பச்சைதனையறிந்து கொண்டு உண்மையாய் நம்முடைய குழம்பு பண்ணி'' என்ற பகுதியை அந்தப் பின்பாட்டு எழுதிய அவர் நன்ருய் உணராமல் நேர்வாளங் கொட்டைப் பருப்பில் பாதியைப் பச்சையாகவும் பாதியை வறுத்தும் சேர்க்க வேண்டுமென்று குறித்தார். வறுப்புக்கு இடம் வகுத்த இவர் பச்சை என்பதனைத் தன் மனம் போலவே சொன்னுர்.

*2.* மேலும் அகத்தியர் ''கடுகுரோகணி'' என்று கூறியிருக்க இவர் ''கடுகுஇந்துப்பு'' என்று பாடினுர். ஆகவே கடுகுரோகணிக்குப் பதிலாகச் கடுகினைச் சேர்க்கும் வழக்கம் உண்டாயிற்று. யூகிமுனிவர், 'கடுகுரோகணி என்ற சொல்லுக்குப் பிறர் கடைக்குறை செய்து 'கடுகு' என்று பாடிய குற்றத்தை யுணர்ந்து முதற்குறை செய்து ''ரோகணி'' என்றே பாடினுர். கடுகும் கடுகு ரோகணியும் சேர்த்துவிடுவார் என்று அஞ்சினுர் போலும்.

*3.* அகத்தியர் ''திப்பிலி'' சேர்த்திருக்கப் பின்பாட்டுக்காரர் அதனை விடுத்து 'ஓமம்' சேர்த்தார். நிருவிஷம் என்பதற்குப் பலர் நாவிக்கிழங்கினைச் சேர்த்தனர். சித்தவைத்தியத்திரட்டும் நாவியையே சேர்த்தது.

*4.* யூகிமுனிவர் 'நாவி' யை நீக்கிச் சுக்குச் சேர்த்தார்.

5. ''அமுது'' என்ற சித்த மருத்துவ இதழில் பச்சை என்பதற்குப் ''பச்சைக்கற்பூரம்'' சேர்த்துச் செய்தல் வேண்டுமென எழுதப்பட்டுள்ளது. கோரக்கர் நவதசாமிர்த மெழுகிலும் பச்சைக்கற்பூரம் சேர்கிறது.

*6.* பச்சையாகிய முட்டைக்கருச் சேர்க்கும்படி பாடிய அகத்தியர் மோர் விட்டு அரைக்கச் சொல்லவில்லை. ''தயிருடன் சோறுண்டு தயவாய் ஆட்டே'' என்ருர்.

*7.* பின்பாட்டுக்காரர், ''ஓங்கியமோரும் சோறும் உண்டு பின் அரைத் துக் கூட்டே'' என்று பாடினுர். அரைப்புக்கு ஊற்ற வேண்டிய துணைச்சாறு அல்லது நீர் எதுவும் கூறவில்லை.

*8.* யூகிமுனிவர் பச்சை என்பதற்கு வாளம் நீங்கலாக ஏனைய பொருள் களைப் பச்சையாக நிறுத்துச் சேர்க்க வேண்டுமென்ருர். அதன்குறிப்பு பெருங் காயம், கடுகுரோகணி, வெங்காரம், கடுஞ்சீரகம், திப்பிலி ஆகியவற்றை வறுத் தல் வேண்டாம் என்பதாகும். ''அஞ்சித்திரிந்தாலே பச்சை பச்சையென்ற தாகுங் குழம்பு வலுவாமோ'' (கும்பி 1000த்தில், 309) என்ருர். அதனுல் இம் மருந்தினைப் பச்சைவெட்டுமருந்து என்று அவர்பொருள் கொண்டார்.

இரசம், தாரம் இவற்றைப் பற்பமோ செந்தூரமோ செய்யாமல் பச்சையாகச் சேர்ப்பதனுலும் பச்சைவெட்டு என்று கருதினர். அத்துடன் அரைப்புக்குக், ''காதலாய் ஆவின்மோர்விட்டரைத்து'' என்ருர். அதனைப் பின்பற்றிய பலர் மோர்விட்டரைத்தனர்.

9. பிராண ரக்ஷாமிர்த சிந்து என்ற நூலாசிரியர் பச்சை என்பதற்கு நேர் வாளத்தின் பாதியளவு நாட்டுக் காட்டாமணக்கின் பருப்புச் சேர்க்க வேண்டு மென்றெழுதியுள்ளனர். (பக்கம் 218).

10. கவுசிகர் சௌபாக்கியக்குழம்பில் அகத்தியர் கூறிய பத்துப்பொருளில் கடுஞ்சீரகத்துக்குப்பதில் சீரகம் சேர்த்தும் மேற்கொண்டு கடுக்காய் கடுகு ஆகிய இரண்டு பொருளும் சேர்த்தார். இவர் கடுகுரோகணி என்பதனைக் கடுகும் ரோகணியும் என்று சேர்த்தாரோ அல்லது இருதிறத்தார் சேர்ப்பனவற்றையும் சேர்ப்போமென்று சேர்த்தாரோ சேர்த்தேவிட்டார். (கண்ணுசாமி பரம்பரை வைத்தியம் பக்கம் 204) இவர் பச்சைக்குப்பதில் உத்தாமணி இலைச்சாறு (வேலிப் பருத்தி) விட்டுஅரைக்கச் சொல்லியுள்ளார். போகர் 700ல் கூறிய சண்ட மாருதக் குழம்பிற் சேர்ப்பது போல் தென்னங்குடுக்கைக்கரியும் சேர்த்துள்ளார். பனங்கருப்பட்டியும் சேர்கிறது.

11. திரு. டி. வி. சாம்பசிவம்பிள்ளையகராதியில் கடுகும் ஓமமுமே சேர்க்கப்பட்டுள்ளன. ஆனல், 'அகத்தியர் வாகடப்படி' என்று முதலில் குறித் துள்ளனர். இவரும் அகத்தியர்பாட்டின் வண்ணம் கூறவில்லை, பின்பாட்டுக் காரரின் கை வண்ணத்தையே காட்டினர். அரைப்புக்குத் துணைமருந்து கூறவில்லை. ''இதைப்பண்டைக்காலத்தில் மாட்டுக்கொம்பில் பதனப்படுத்துவது வழக்கம். இத்துடன் முப்புச்சேராவிடில் எல்லா வியாதிகளுக்கும் பயன்படாதெனக்கருதப் படும்'' என்றும் எழுதியுள்ளனர். (போகர் 700ல் சண்டமாருதக் குழம்பினை எருமைக்கொம்பினில் அடைக்கும்படியே கூறியுள்ளனர்) ஆங்கிலத்திலும் வரைந் துள்ளனர்.

12. என்னிடம் உள்ள ஏட்டுச்சுவடியில் வெள்ளைப்பாடாணம் சேர்த்து எழுதப்பட்டுள்ளது. நிருவிஷம் என்பதற்குப்பதிலாக வெள்ளையைச் சேர்த்தனர். நமனுசமெழுகில் வெள்ளைப்பாடாணம் சேர்ப்பது கருதிச் சேர்த்தனர் போலும் (கண்ணுசாமி பரம்பரை வைத்தியம் 202) கோரக்கரும் வெள்ளைப்பாடாணத்தை நவதசாமிர்த மெழுகில் சேர்த்துள்ளனர்.

13. அகத்தியர் விஷாமிர்த மெழுகில் முன்கூறிய பத்தில் கடுகுரோகணி யும் திப்பிலியும் நீக்கி கந்தகமும் நவாச்சாரமும் சேர்த்துள்ளனர். (கண்ணு சாமியம் பரம்பரை வைத்தியம் பக்கம் 210).

14. கோரக்கர் நவதசாமிர்த மெழுகு செய்தார்.

15. போகர் 700-ல் சண்டமாருதக்குழம்பு விரிவாகச் சொன்னர்.

16. திருவள்ளுவர் ஞானவெட்டியானில் சண்டமாருதக்குழம்பு கூறினர்.

17. பிரமமுனி சண்டமாருதக் குழம்பு சுருக்கமாகச் சொன்னர். இக் குழம்புகளெல்லாம் அகத்தியர் குழம்பினைப் பின்பற்றி விரிவாகச் செய்த நன் மருந்து என்க.

(15) யான், யூகி முனிவர் முறைப்படி செய்த அகத்தியர்குழம்பில் போகர் சண்டமாருதக்குழம்பு அரைப்பதற்குக் கூறிய குழித்தைலம்விட்டு அரைத்துக் கொடுத்ததில் பயன்மிகுதி யாக உண்டாயிற்று.

(16) போகர் சண்டமாருதக் குழம்பிற்குக் கூறிய வெள்ளறுகு முதலிய ஏழுவகைப்பொருள் சேர்த்த கியாழத்தில் கலந்து கொடுக்க மேலூறல் பற்றுப்படை வீக்கம் புண் முதலியன நீங்கின.

(17) கடுக்காய்க்கியாழத்தில் சிறிது கலந்து கொடுக்கக் கக்குவான் நீங்கிற்று.

18. வேப்பெண்ணெய்யிற் கலந்து கொடுக்க பற்றுக்கள், அரிப்பு, புண்கள் முதலியன நீங்கின. நஞ்சும் பழைய நஞ்சும் விலகின. இதனைக் கொடுத்த பின்பு காலபயிரவ எண்ணெய் கொடுத்தேன். உடல் முழுவதும் உள்ள கருப்பு ஆனைச் சொறி புண் முதலியனவும் கரப்பான் கிரந்தி முதலிய கடிய நோய்களும் நீங்கின.

19. நோயாளிக்கு மருந்து கொடுக்கும்போது, இரண்டு மூன்று வேளை வயிறு கழிந்தவுடன் மோரும் சோறும் உண்ணும் வண்ணம் கட்டளையிடுவேன். களைப்பாக இருந்தால் மேற்கூறியவாறு உண்க என்று கூறினல் நலம். இந்த மருந்து வழங்குவதில் வருத்தம் ஏற்படாது.

20. யூகிமுனிவர் தாம் இயற்றிய வாதகாண்டம் முதல் ஆயிரத்தில் இந்த மருந்தைப்பற்றிக் கூறிய அறிவுரை மிகச் சிறந்தது. 23 முதல் 27 முடிய உள்ள ஐந்து பாடலின் கருத்தினை நோக்குவோம்.

நால்வகை உடற்கூறு அறிந்து மருந்து வழங்குக.

(1) வாதநோய்க்குத் (வாத உடற்கூற்றினர்க்கு) தேங்காய்ப் பாலில் வழங்குக நலம் உண்டாகும்.

(2) பித்த உடலினர்க்கு விளக்கெண்ணெய்யிற்கொடுக்க.

(3) சிலேத்தும உடலினர்க்குச் சிவதைவேரும் கடுக்காயும் சேர்த்துக் காய்ச்சிய கியாழத்திற் கலந்து ஊட்டுக. அல்லது வெந்நீரிற் கொடுக்க.

(4) தொந்த நோய் உடலினர்க்குக் கள்ளிப்பாலும் மோரும் கலந்து அதிற்குழம்பு சேர்த்து உண்பிக்க. அல்லது உழ லாற்றிப்பட்டையும் (ஆத்திப்பட்டை) அமுரியும் கலந்து கியாழமிட்டுக் குழம்பு சேர்த்து அருந்தச் செய்க.

இங்ஙனம் கொடுக்காவிட்டால் வயித்தியங்கள் எல்லாம் பொய்யாம் என்கின்ருர்.

''பொய்யென்று அகத்தியர்தான் குழம்பு தன்னைப்
போக்கோடே சொல்லாமல் ஒன்ருய்ச் சொன்ஞர்.
மெய்யென்று நம்பாதே திரேகந் தன்னை
மெதுவான குறியறிந்து செய்ய வேணும்
வையென்று பேதிக்குப் பச்சை தன்னை
மறைத்துவைத்தார் என்றுமே மயங்கல் வேண்டாம்
கையென்ற உடலதுதான் ஊற்றக்கட்டை
கனமாக சிதையறிந்து வயித்தியம் செய்யே''

என்ற பாடலில் பச்சையை மறைத்த குறிப்பினை உணர்க. முட்டையின் மஞ்சட் கரு சேராவிட்டால் குழம்பு நாளடைவில் காய்ந்து எருப்போல் ஆகிவிடும்.

தவருகப்பேதி மருந்து வழங்கினுல் இரண்டுமுறை கழிச்சலானுல் ''காத டைத்துக் கண்ணுங்கெட்டு பொறிகலங்கி யுயிர்கள் போகும்'' வயித்தியர்கள் விழிப்பார்கள். முன் கொடுத்தேன் பின் கொடுத்தேன் என்பார். உடற்கூறு அறியாமல் கொடுத்து விட்டு, ''சாத்திரங்கள் பொய்யோ என்று வலுமையாய் இருந்தழுதுமாளுவாரே'' என்று கூறுகின்ருர். நாலுவகையுடலறிந்து கைபாகமாகச் செய்தால், ''நீடூழிவாழ்ந்துமே இருப்பாய்'' என்கின்ருர்.

21. யூகிமுனிவர் வாதவைத்திய உலா ஆயிரத்தில் மேலும் கூறுகின்ருர். அகத்தியர் கூறிய பச்சை என்பதற்கு நேர்வாளத்தில் பாதியை நன்ருய் வறுத்தும் பாதியை இளவறுப்பாய் வறுத்துப் பச்சையாகவே சேர்க்க வேண்டுமென்ருர்.

பச்சை என்பதற்குத் துருசு சேர்த்து அரைத்துச்சிலர் கொடுக்க வாந்தியா யிற்று என்கிருர்.

''அகத்தியரும் பச்சை யடைவாகத் தான் மறைக்கத்
தகத்துடனே வயித்தியரும் தான்கேட்டுத் — தகையாய்
துருசதுதான் பச்சை தொகையாய் அரைத்தோரும்
மருத்திதுதான் கேட்டுப்பதைத்தோரும் — உருசைப்

பச்சையிது பச்சை பகையாகப் பின்னொன்றை
நிச்சயமாய்ச் சேர்த்து நினைவாக — வெச்சை
கொடுக்கவே வாந்தி கொடூரமாய்த்தான் பண்ணி
அடுக்கவே பாகம் அலைந்தோரும்''

என்று கூறுகிருர். துருசுசேர்க்க அது வாந்தி செய்ய வேருென்றைச் சேர்க்க அதுவும் கொடூரமாய் வாந்தி செய்தது என்கிருர்.

22. இம்மருந்தினைப் பின்பாட்டுக்காரர் பாராட்டுகின்ருர்.

''விதியாம் மருந்து இதுவல்லால் வேறே தேடவேண்டாங்காண்
பதியாய் நாலாயிரத்து நானூறு பகரும் வியாதிகளுக்கெல்லாம்''

என்று கூறிப் பத்தியம் காக்கச் சொல்கின்றார்.

அகத்தியர், ''நாமப்பா சொல்லுகிறோம் பத்தியமில்லை'' என்கின்றார். வயிறு கழிந்தபின் மோரும் சோறும் உண்ணலாமே பத்தியம் வேண்டியதில்லை.

யூகிமுனிவர், ''ஆனசுக்குக் கியாழத்தி லிட்டிட
மனுவான ரோகம் அறுபத்தினாலுமே
வாகாக ஓடி ஒழிந்திருங்காண்''

''தெள்ளு தமிழ்க்கலை சோதித் தகத்தீசர்
தீர்க்கமாய்க் கைபாகம் காட்டினர்காண்''

''அள்ளல்கள் எல்லாமும் தீர்ந்துவிடும் வெகு
ஆண்மைகள் உண்டாகும் மோனமிகும்''

என்றும் பாடினார்.

23. யான் முதன்முதலிற் செய்த மருந்து இதுவே. பின்னர் காலபயிர எண்ணெய்யும் செய்தேன். எத்துணை வகையோ நஞ்சும் நோயும் காய்ச்சலும் கக்குவானும் கொடிய இளைப்பும் காசமும் முதலிய பலப்பல நோய்கள் பறந்தோடின.

துணை மருந்தும் வழங்கும் முறையும் காண்க
நீர் என்பது — கியாழம்; (வற்றக்காய்ச்சிய நீர்)

**துணை மருந்தும் நீங்கும் நோயும்**

1. இஞ்சிச்சுரசம், சுக்குநீர் — குளிர்சுரம் சன்னி வாதசுரம் அண்டவாதம் வாய்வு மூலவாய்வு.
2. கடுக்காய்த்தூள் — இருமல்.
3. கடுக்காய் வெந்நீர் — பித்தசுரம்
4. திப்பிலி நீர் — சிலேத்துமசுரம்
5. கிராம்பு மலைதாங்கி நீர் — பேதிச்சுரம்
6. சுக்குமிளகு நீர் — குளிர்சுரம்
7. ஆவின்நெய் — இரத்த மூலம்
8. ஆவின்பால் — பாண்டு
9. மிளகுத்தூள் வெள்ளுள்ளியில் — மகோதரம் பெருவயிறு நீராமை குன்மம்.
10. தேன் இஞ்சிச்சாறு — சன்னி
11. சுக்கு நொச்சி நீர் — வாய்வு.
12. சங்கங்குப்பிச்சாறு, மிளகு பொரிகாரம் கற்கண்டு இவற்றின் பொடியும் நெய்யும் கலந்த கூட்டு, வெள்ளரிப்பிஞ்சுச்சாறு, இளநீர், காடி — இவற்றில் ஏதேனும் ஒன்றிற் கொடுக்க நீர்க்கடுப்பு, நீர்ச்சிறுப்பு, கல்லடைப்பு.

13. வெள்ளுள்ளித்தைலம் அல்லது வெள்ளுள்ளி கழற்சிமுசுமுசுக்கை இவற்றின் நீர் — சன்னி 18.
14. அரசங்கொழுந்தரைத்துக் கொட்டைப்பாக்களவு ஆவின் பாலிற் கலந்து 3 நாள் 3 வேளை கொடுக்க — கர்ப்பநோய்.
15. வெள்ளாட்டுப்பால் விட்டிடித்த நவ்வற்பட்டைச்சாறு சீரகப்பொடி— சூதக வாய்வு, வாய்வுக்கட்டி.
16. நொச்சி வேர் பங்கம்பாளைவேர் சுக்குமிளகு இவற்றின் நீரில் — சூதக வாய்வு, வாய்வுக்கட்டி.
17. இஞ்சி வெள்ளுள்ளி முருங்கைப்பட்டை எருக்கம்வேர் திருகுகள்ளிவேர் புன்கம்வேர் இவற்றைத்தட்டிப்பிழிந்த சுரசநீர் —உட்குத்து, புறவீச்சு.
18. கொடிவேலி வேர்ப்பட்டைத் தூளும் கருப்புக்கட்டியும் சேர்த்துக் குப்பைமேனிச் சாற்றால் ஆட்டித்தேன்விட்டுக் குழைத்து அதில் வைத்து வழங்க — நெஞ்சுவலி.
19. வில்வம் லவங்கப்பத்திரி கிராம்பு அதிமதுரம் தாளிசப் பத்திரி நீர் வெண்ணெய் — நெஞ்சுவலி.
20. தாளியிலை அவுரியிலை அரைத்துக் கொட்டைப்பாக்களவு எடுத்து வெண்ணெய் சேர்த்து — விரியன் கடிநஞ்சு.
21. நவ்வற்கொழுந்து மிளகு வெற்றிலையரைத்துக் கொட்டைப்பாக்கள வில் — நல்லரவின் நஞ்சு.
22. ஈருள்ளிச்சாற்றில் உள்ளுக்குக் கொடுத்து மேலும் தடவ — தேள்கடி நஞ்சு.
23. வெல்லமும் புகையூரலும் பேய்ப்பீர்க்கன்வித்தும் மேனிச்சாற்றில் அரைத்ததில் கொட்டைப் பாக்களவில் — வழலைகடி.
24. நொச்சிச்சுரசமும் திரிகடுகுப்பொடியும் — வீக்கம் விசபாகவீக்கம்.
25. காடியில் — சத்திப்பு.
26. ஆவின்பால் அல்லது வெள்ளாட்டுப் பாலில் — மூலநோயால் சீதம் விழுதல் கெர்ப்பவிப்புருதி கெர்ப்பநோய்.
27. ஆவின்நெய் — இரத்த மூலம்.
28. அகத்தியிலைச்சாறு — மகோதரமும் வெட்டையும்.
29. ஆமணக்கெண்ணெய் — வாயுத்திரட்சி.
30. தேங்காய்ப்பாலில் — கழல்வாதம்.
31. கருப்புக்கட்டியில்—ஆனந்த வாய்வும் சுரமும்.
32. ஆவின்பாலில் — பித்தம்.
33. பஞ்சமூலக்கொதி நீர் — சன்னி 13.
34. இஞ்சிச்சுரசம் — குன்மம் 8.
35. வெல்லத்தில் — தாபசுரம்
36. நொச்சிச்சாற்றில் — வாதசுரம்
37. கொத்தமல்லிக்கொதி நீரில் — பித்தசுரம்
38. திப்பிலி நீர் — நடுக்க ஐயசுரம்.
39. வெள்ளாட்டுத் தயிரில் — வயிற்றுக்கடுப்பு.
40. கருப்புக்கட்டியில் — சூலை பதினெட்டும் கிரந்தியும்.
41. ஆவின்தயிரில் — சூதகவாய்வு.

42. விலாமிச்சவேர்க்கியாழத்தில் — பித்தவெட்டை
43. செம்மறியாட்டுப்பால் அல்லது சாம்பிராணித்தைலம் — திரளாத பெண்திரளும் (9 நாள் கொடுக்க).
44. திரிகடுகில் — பலநோய்.
45. வெற்றிலைச்சாற்றில் — நஞ்சு.
46. சாதிக்காய்ப்பொடியில் — அதிசாரசுரம்.
47. நல்லெண்ணெய்யில் குழைத்திட — ரணம் நீங்கும்.
48. வேப்பெண்ணெய் நல்லெண்ணெய் இவற்றில் குழைத்திட — ஆருப் புண் ஆறும்.
49. உமிழ் நீரிலாவது தேனிலாவது குழைத்திட —சிலந்தி அரையாப்பு பிளவை புற்று
50. முலைப்பாலில் கலந்து நாசியில் நசியமிட — தலையிடி நீங்கும்.
51. முலைப்பாலில் கலந்து பூச — நெறிக்கட்டு நீங்கும்.
52. கடுகின் அளவு முலைப்பாலில் கலந்து கண்ணில் போட — மரத்தி லிருந்து விழுந்து மயங்கின மயக்கம், தண்ணீரில் வீழ்ந்து மயங்கின மயக்கம்.
53. துணியில் தடவிப்புகைப்பிடிக்க முகவாதச்சன்னி பற்கட்டு விஷகடி கபாலவலி பேய் பிசாசு நீங்கும்.
54. வேப்பெண்ணெய்யிலாவது சுக்குக்கியாழத்திலாவது எள்ளளவு உரைத்துக் கண்ணிலிட—சன்னி நீங்கும். கண்வீங்கி வேதனைகண்டால் சுடுசோறும் தயிரும் சந்தனமும் மத்தித்துக் கண்ணிற்கட்ட நீங்கும் (பிள்ளைப்பாலும்கண்ணில் விடலாம்) வயிற்றுக்கழிச்சலுமிருந்தால்— வசம்பைச்சுட்ட கரியைத் தேனில் உரைத்துக் கொடுத்தாலும், முருங்கை யீர்க்குக்கியாழம் கொடுத்தாலும் எலுமிச்சம்பழச்சாறு கொடுத்தாலும் ஆவின்பால், மோர், காடி இவற்றில் ஒன்றைக் குழைத்தாலும் கழிச்சல் நிற்கும்.

குறிப்பு: கழிச்சல் மிகுவதுபோல் காணப்பட்டவுடனும் களைப்புத் தோன்றியவுடனும் மோரும் சோறும் உண்ண முதலிலேயே கூறிவிடுக.

இம்மருந்தின் துணைமருந்து இன்னும் விரிக்கிற்பெருகும். யோகஞான சாத்திரத்திரட்டிலும் கௌசிகர் குழம்பிலும் யூகி முனிவர் கும்மியிலும் காண்க.

# ஆட்சியும் தமிழும்

கீ. இராமலிங்கனுர், எம்.ஏ.,
(உறுப்பினர், தமிழ்நாடு சட்ட ஆட்சிமொழி
ஆணையம், சென்னே)

## அன்று முதல் இன்றுவரை

### 1. கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தில்

தமிழ்மொழி மிகப் பழைமையான மொழி. உலகம் தோன்றி உலகத்தில் மனிதன் தோன்றி, அம்மனிதனுக்குப் பேசத் தோன்றி, அவன் வாயைத் திறந்து பேசிய முதல் மொழி தமிழ். இது எவ்வாறு நேர்ந்திருக்கும் என்று ஆராய்வோம்.

படுவேகத்தில் சுழன்று கொண்டுள்ள ஞாயிற்றிலிருந்து, பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, தெரித்து விழுந்த தீ வடிவப் பெருந்துண்டுகளில் ஒன்று இந்நிலம். ஞாயிற்றைச் சுற்றிச் சுழல, இத்துண்டு, உருண்டை வடிவம் எய்திக் கொண்டே, குளிர்ந்து கொண்டும் வந்தது. இதில் உயிர் இனம் தோன்றுவதற்கு உரிய பக்குவத்தை இது அடைந்தது; இவ்வுயிரினங்கள் படிப்படியாக வளர்ச்சி யுற்றன. இறுதியாக மனிதன் இதில் உருவானுன்.

அக்காலம் இளகியிருந்த தீப்பிழம்பாகிய உலகம், இறுகிக் கல்லாகி அமைந்து இருந்த காலம். அக்கல், பின்பே, தேய்ந்து தேய்ந்து நாளடைவில் மணலும், பிறகு மண்ணும் ஆயிற்று. கல்தோன்றிய காலத்துக்கும், மண் தோன்ருத காலத்துக்கும் இடைப்பட்ட காலத்திலேதான் மனிதன் முதல்முதலில் தோன்றினுன்.

அங்ஙனம் தோன்றிய மனிதனே தமிழன். எனவேதான், தமிழனே, ‘கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே முன்தோன்றி மூத்த குடி’யைச் சேர்ந்த வன் என்று சொல்லுகிருேம். இது நெடுங்காலத்திய தொடர், காரணம் இல்லாமல் எழவில்லே.

‘மூத்த குடி’ என்னும் சொல்லில் இருந்தே, அக்காலத்துத் தமிழன் ‘குடிசெய்து’ வாழ்ந்தான் என்று தெரிகிறது. காட்டுமிராண்டித் தனமாக வாழ வில்லே. வீடுவாசல் அமைத்துக் கொண்டான். அவன் ‘குடிசெய்வ’ தற்காகக் கட்டிக்கொண்ட வீடே, ‘குடிசெய்’. இது பின்னர் ‘குடிசை’ எனப்பெற்றது. ‘நன்செய்’, ‘நஞ்சை’ யானது போல். அங்ஙனம் வாழ்ந்த காலத்தில், ஓர் எளிய ஆட்சிமுறையும் இருந்திருக்க வேண்டும். அந்த ஆட்சியை நடத்துவதற்குப் பயன்பட்ட மொழி, தமிழை விட்டால், வேறு எதுவாக இருந்திருக்க முடியும்?

எனவே, வரலாறு அறியாத அம்முதுபெருந் தொன்மைக் காலத்திலேயே, தமிழ் ஆட்சி மொழியாக இலங்கியது என்று கொள்ளலாம். அடுத்தபடியாக:

## 2. குமரிக்கண்டம் — இலமூரியாவில்

நம் நாட்டிற்குத் தெற்கே விரிந்து பரந்து கிடக்கும் இந்துமாக் கடல் ஒரு காலத்தில் நிலப்பகுதியாக இருந்தது என்று, ஆராய்ச்சியாளர்கள் முடிவுகட்டிக் கூறுகின்றனர். நம் நாட்டிற்கு மேற்கிலும், பெரும்பரப்பு, நிலமாக இருந்தது என்றும் சொல்கின்றனர். நம் நாட்டின் வடபகுதி, விந்திய மலேக்கு அப்பால், கடற்பரப்பாக இருந்தது என்றும் மொழிகின்றனர். எளிதில் விளங்கிக் கொள்ள லாகாத இயற்கையாற்றல்களின் செயல்களால், கடல் நிலமாயிற்று, நிலம் கடலாயிற்று. திடும் என்றோ, சிறிது சிறிதாகவோ, இவ்வாறு நேர்ந்திருக்கிறது.

'ஆஸ்திரேலியா'க் கண்டம் என்பதே வானவெளியிலிருந்து ஒரு காலத்தில் திடும் என இந்நிலவுலகின்மீது வீழ்ந்தது என்றும், அந்தத் தாக்குதலாலும் அதன் விளேவான அதிர்ச்சியினுலும் இந்நிலவுலகத்தின் தென் பகுதி அமிழ்ந்து கடலாயிற்று என்றும் கூறுவர். இங்ஙனம் கடலாக மாறிய நிலப்பகுதியே முதலில் 'குமரிக் கண்டம்' ஆக இருந்தது என்போம். இந்நிலப் பகுதியை மேல்நாட்டு அறிவியல் ஆராய்ச்சியாளர்கள் 'இலமூரியா' என்பர்.

விந்திய மலேக்கு வடக்கேயுள்ள நம்நாட்டு நிலப்பரப்பில் இன்றும் இராசத் தானம் போன்றவற்றில் பெரும் மணல் பரப்புகள் இருப்பதும், இமயமலேயில் அகழ்ந்து பார்க்கும்போது, ஆழ்கடலில் காணக் கூடிய பொருளான திமிங்கலத்தின், எலும்புக் கூடுகள் கிடைப்பதும், பிற கடல்படு பொருள்கள் காணப்பெறுவதும் நம் நாட்டின் வடபகுதி, ஒரு காலத்தில் கடலாக இருந்திருக்க வேண்டும் என்பதற்குத் தக்க சான்றுகளாக அமைகின்றன.

கடலால் விழுங்கப்பட்டுவந்த குமரி நாட்டில் வசித்திருந்த மக்கள் தமிழ் மக்கள். கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே முன்தோன்றிய மூத்த குடியாயிற்றே அவர்கள்! அக்காலத்துக்கு ஏற்ற ஆட்சிமுறை அன்று நிகழ்ந்திருக்கும். அதனே நடத்துவதற்குத் தமிழே ஒரு தனிமொழியாக விளங்கியிருக்கும் என்று கொள்வது பொருத்தம். இதற்கு அடுத்தபடியாக:

## 3. மொகஞ்சதரோ — ஆரப்பாவில்

குமரி நாட்டைக் கடல் மூடியது, பகுதி பகுதியாக, மூன்று முறை நடந்தது என்பர். தெற்கே இருந்து, நிலத்தைக் கடல் சிறிதுசிறிதாக மூடிக் கொண்டு வந்திருக்க வேண்டும். நிலம் கடலில் அமிழ அமிழ, அங்கு வாழ்ந்த தமிழ் மக்களில், நீரில் அமிழ்ந்த பெரும்பாலோர் போக, மற்றவர்கள் தப்பிப் பிழைத்து வடக்கே ஓடிக் குடியேறியிருக்க வேண்டும். கடைசிக் கடல்கோளுக்குப் பிறகு, விந்திய மலேக்குத் தெற்கே, இப்போதுள்ள தென்னகத்தில் மக்கள் செறிந்து விட்டிருக்க வேண்டும். இத்தென்னகப் பகுதி எக்காலத்திலும் கடலால் பாதிக்கப்படவில்லே என்பது நிலநூல் ஆராய்ச்சியாளர் முடிவு. என்றுமே. வாழும் நிலப்பகுதியாக இது இலங்கியிருக்கிறது. இங்கிருந்து முன்னேய கடல் பகுதியாக இருந்தது புதிதாக நிலமாகிக்கொண்டு வந்த நாட்டில், வடக்கேயும்

சென்று குடியேறியிருப்பர். அங்ஙனம் குடியேறிய பகுதிகளில் மொகஞ்சதரோ, ஆரப்பா முதலியனவாகப் பிற்காலத்தில் உருவாகிய பகுதி, மற்ற இடங்களைக் காட்டிலும் வசிப்பதற்கு வளமானதாக அமைந்திருக்க வேண்டும். தெற்கில் இருந்து, கடலானது, வடக்கிருந்த நிலப்பரப்பை உண்டுகொண்டு வந்ததால், கடல் கோளுக்கு அஞ்சியவர்களாய், எவ்வளவு வடக்கே செல்ல முடியுமோ அவ்வளவு வடக்கே சென்றிருப்பது இயல்பே. அப்படிக் குடிபுகுந்த இடங்களே, சிந்துவெளி நாகரிகத்தால் சிறந்தன என்று பின்னல் போற்றுதற்குரியவான பகுதிகளாகும்.

மொகஞ்சதரோ, ஆரப்பா முதலிய இடங்களில் அகழ்ந்து கண்ட பொருள் களை ஆராய்ந்து அறிவியல் அறிஞர்கள், அந்நாகரிகம் இற்றைக்கு ஐயாயிரம், ஆறுயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று கூறுகின்றனர். அங்கே புதை வடிகால்களும், பாதுகாத்த குடிநீர்க் குழாய்களும் அமைந்த பெரிய கட்டடங்கள் காணப்படுகின்றன. சிறந்த நகர் அமைப்பு முறைகள் கையாளப் பெற்றுள்ளதை யும் பார்க்கலாம். இத்துணை மேன்மையார்ந்த நாகரிக வாழ்வு வாழ்ந்தவர்கள், மேதக்க முறையில் அரசாண்டும் இருப்பர் என்பது திண்ணம்.

அன்றைய ஆட்சிக்கு உகந்ததாயிருந்த மொழி ஒரே மொழிதான். அதுவே தமிழ்மொழி. அகழ்ந்தெடுத்த பொருள்களில், எழுத்துப் பொறித்த ஓடுகளும் காணப்படுகின்றன. அந்த எழுத்துகளைத் தவத்திரு ஈராசுப் பாதிரியார் ஆராய்ந்து பார்த்தார். அவை தமிழ் எழுத்துக்களையே குறிக்கின்றன என்று முடிவுகட்டினர். பின்னர் பிற பல அறிஞர்களும், ஆராய்ந்து கண்டு, இம்முடிவுக்கே வந்தனர். பின்லாந்து நாட்டு எழுத்தியல் வல்லுநர்களும், உருசிய எழுத்துருவ ஆய்வு அறிஞர்களும் இம்முடிவையே உறுதிப்படுத்துகின்றனர்.

தமிழ்மொழியுடன் தொடர்பில்லாத மொழிகளைத் தாய்மொழிகளாகக் கொண்ட அயல்நாட்டு அறிஞர்கள், சிறிதும் பால்பற்றுமல் ஆய்ந்து கண்ட உண்மையைத் தாம் அறிந்தவாறே கூறியிருப்பவும், வேறு சிலருக்கு ‘இந்த உண்மையை எப்படியாவது மறைத்துவிடக் கூடாதா’ என்னும் நப்பாசை, இன்னும் இருந்து வருவதை யறிவோம். தமிழைத் தாய்மொழி என்று சொல்லிக் கொண்டவர்களே, அச்சிலரில் பெரும்பாலோர் என்று அறியும்போது, நமக்கே வியப்பாக இருக்கிறது. இப்படியும், தம் தாயிடமே அன்பில்லாத, இயற்கைக்கு மாறுன எண்ணம், இவர்கள் உள்ளங்களில் உதிக்கின்றதே எனக் கையற்றுப் போகிறோம். தமிழர்களாகத் தம்மைக் கூறிக்கொண்டாலும், இவர்கள் வேறு ஏதேதோ பற்றினைத் தம் மனத்தகத்தே பொதிந்து வைத்துக்கொண்டு, இங்ஙனம் உண்மையை மறைத்து, மற்றொன்றை வலியுறுத்தித் திட்டமிடுகிறார்கள் என்பதை நாம் உணர்ந்து கொள்ளாமல் இருக்க முடியாது.

உள்எண்ணத்தால் எவர், அத்தனை முயன்றாலும் உண்மையை உண்மை யென்று உலகம் உறுதிசெய்து கொள்ளாமற் போகாது. சிந்துவெளி நாகரிகக்

காலத்தில் ஆட்சிமொழி தமிழே என்பதை ஐயத்துக்கு இடமின்றிக் கூறலாம். இதற்கும் அடுத்து:

**4. சங்க காலத்தில்**

பண்டைக் காலத்தில் தமிழ்ச்சங்கங்கள் மூன்று நிலவின என்று அறிகிருேம். அவை பணியாற்றிய காலங்களை, இறையனுர் அகப்பொருள் அகலவுரை விரிவாகக் கூறுகின்றது. வரலாற்றுக் காலத்துக்கு முன்பே, தமிழ்ச்சங்கம் தொடங்கப் பெற்றது என்று தெரிகிறது. பல்லாயிரம் ஆண்டுகள் ஒவ்வொரு சங்கமும் நடந்தது என்றும், ஒவ்வொன்றிலும் இருந்த உறுப்பினர்களின் எண்ணிக்கை இத்தனை இத்தனை என்றும், அவ்வுரை விரித்துரைக்கிறது. பிறவா யாக்கைப் பெரியோராகிய கடவுளே முதற் சங்கத்தின் தலைவர் என்றும் கூறக் காண்கிருேம். பெம்மான் முருகனே அகப்பொருள் இலக்கணத்துக்கு உண்மை உரை காண, உணர்வு வயப்பட்டு உதவினுர் என்றும் சொல்லப் பெற்றிருக்கிறது.

அதில் கூறிய எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்வது எளிதாக இல்லை யாயினும், தமிழ் இலக்கண இலக்கியங்கள், ஆய்வதற்குரிய அளவு பெருகி வளர்ந் திருந்தன என்பதும், அவ்வாறு ஆயும் புலமை சான்ற பெருமக்கள் பலர் வாழ்ந் திருந்தனர் என்பதும் இனிது புலனுகின்றன. வரலாறு காணுத காலத்திலேயே, தமிழில் அகத்தியம் என்ருேர் இலக்கண நூல், முதற் சங்கத்தில் இலங்கியது என்னும்செய்தி கூறப்பெற்றிருப்பதால், அதற்கு முன்பே பல இலக்கியங்கள் தோன்றி, மக்களால் பயிலப் பெற்றிருக்க வேண்டும் என்பது விளங்குகிறது.

''எள்ளில்இருந்து எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத்திலிருந்து எடுபடும் இலக்கணம்''

என்று ஒரு நூற்பாவும், அவ் அகத்தியத்தில் இருந்ததாகப் பிற நூல்களில் எடுத்தாளப்படுவதை யறிவோம்.

இரண்டாவது சங்கத்துக்கு இலக்கணமாக இருந்தது 'தொல்காப்பியம்' என்பர். சங்கம் மருவிய நூல்களில் சில பகுதிகள் தொல்காப்பிய இலக்கணத்தைச் சாராதனவாக இருப்பது கொண்டு, நமக்குக் கிடைத்துள்ள சங்க நூல்களுக்கு முன்பே, பல இலக்கியங்கள் இருந்தன என்பதும், அவற்றிற் கண்ட இலக்கண அமைதியையே தொல்காப்பியம் தனது நூற்பாக்களில் நவின்றுள்ளது என்பதும் பெறப்படும். இடைச்சங்க, கடைச்சங்க காலத்தில் நிலவிய நூல்கள் சிலவற்றி லிருந்து இங்கும் அங்கும் சிதறி வழங்கிய பாடல்கள் சிலவற்றைத் திரட்டியே 'எட்டுத் தொகை' நூல்கள் யாக்கப் பெற்றன. பத்துப் பாடல்களும் இங்ஙனம் கிடைத்தவையே.

அரிதிற் கிடைத்த இச்சில நூல்களும் தமிழர்கள் அல்லாதார் வகுத்த இலக்கணத்தை வைத்துக்கொண்டு எழுதப்பெற்றன என்று சொல்வதிலே 'தமிழர்கள்' என்று தம்மைச் சொல்லிக்கொள்ளும் சிலருக்கு மனநிறைவு ஏற்படு வதைப் பார்க்கிருேம். 'இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் வகுப்பதே மரபு' என்னும் உண்மையை மறுத்து உண்டாக்கிக் கொள்வதே இவரது இம்மனநிறைவு.

'அகத்தியம்' என்னும் சொல்லுக்குக் 'கட்டாயம்' என்னும் பொருள் இருப்பதை நாட்டுப்புறங்களில் உள்ளவர்கள் பேசும் பேச்சிலும் அறியலாம். 'எங்கள் வீட்டுத் திருமணத்திற்கு நீங்கள் அகத்தியம் வரவேண்டும்' என்று அழைப்பர். 'அகத்தியம்' எழுதியவர் 'அகத்தியர்'. தமிழுக்கு அகத்தியமானவர் அகத்தியர் எனப் பெற்ருர். காரணப் பொருளில் இப்பெயர் அமைந்திருக்கிறது. இப்பெயரை, 'முட்டி'யை 'முஷ்டி' என்பது போல, 'அகஸ்தியர்' என்று திரித்து அவர் தமிழர் அல்லார் என்று ஆக்கிக் கொண்டும், அகத்தியரின் மாணுக்கரான 'திரணதூமாக்கினியே' தொல்காப்பியர் என்றும் கதை கூறி, அவரையும் தமிழர் அல்லார் என்று சொல்லிக்கொண்டும் இம்மன நிறைவுக்கு அமைதி தேடிக் கொள்ப வர்களை என்னவென்று சொல்வது?

முச்சங்கங்களால் தமிழுக்கு உள்ள சிறப்பினைக் கண்டு பொருமலோ என்னவோ, 'சங்கம்' என்னும் சொல்லே தமிழ்ச்சொல் அன்று என்று கூறுவதற்கு ஆதாரமாக 'ச' என்னும் எழுத்தே சொல்லுக்கு முன்வராது என்னும் பொருள் படும்படி, தொல்காப்பிய நூற்பா ஒன்றையும் உருவாக்கி வைத்துவிட்டனர் போலும். வளைந்து குவிந்திருப்பது என்னும் பொருளைத் தரும் சங்கு என்னும் தமிழ்ச் சொல்லிலிருந்து 'சங்கம்' என்னும் சொல் பிறப்பது இயல்பு. இங்ஙனமாக, 'சங்கம்' என்னும் சொல்லே தமிழ்ச் சொல் அன்று என்னும் வாதத்தைக் கிளப்பி, முச்சங்கம் என்பன இல்லை என்னும் எண்ணத்தை யுண்டாக்கவும் சங்கம் மருவிய நூல்கள் இல்லை என்னும் தவருன கருத்தை வலியுறுத்தவும் உள்நோக்கு இருப்பது வெள்ளிடைமலை.

'இலக்கியம்' என்னும் சொல் 'இலங்கு—இயம்' என்று பிரிப்பதற்கு உரியதாய் இலங்குகின்ற கருத்தை, இலங்குகின்ற மொழியிலே, இலங்குகின்ற முறையிலே எடுத்தியம்புவது என்னும் பொருளில் இலக்கிறது. இதனை 'இலட்சியம்' என்றும், 'இலக்கணம்' என்னும் சொல்லை 'இலட்சணம்' என்றும் ஆக்கிக்கொண்டு இலக்கியமும் இலக்கணமும் பிறமொழிச் சொற்களே என்று அடித்துக்கூறும் போக்கும், இதே உள்நோக்கினை அடிப்படையாகக் கொண்டதேயாகும்.

இத்தகைய மனநிறைவைக் கொள்ளவோ, இத்தகைய உள்நோக்கை வலியுறுத்தவோ எவர் ஏதேது செய்தாலும், ஏதேது சொன்னுலும், தமிழ் மொழி, சங்க காலத்தில் மிகச் சிறந்த பொற்போடு பொலிந்தது என்னும் உண்மை, மறைக்கலாகாத உண்மையே யாகும்.

அம்மொழியின் மாண்பினைப் புரிந்துகொண்டு, தென்னகத்தையாண்ட சேர சோழ பாண்டியர்கள், தமிழையே தம் நாட்டாட்சிக்குத் தனி மொழியாகப் பயன்படுத்தினர் என்பதே நாம் ஈண்டு உணரற்பாலது. இதற்கும் அடுத்து:

### 5. பல்லவர் காலத்தில்

பல்லவர்கள் அயலகத்திலேயிருந்து நம் நாட்டின்மீது படையெடுத்து வந்தவர்கள் ஆயினும், நம் நாட்டில் தங்கி ஆட்சிபுரிந்தபோது, தமிழைத் துணை யாகக் கொண்டனர். அவர்களுக்குப் பிறமொழிப்பற்று இருந்தது என்ருலும், அதனைச் சிலவகைக்கே கட்டுப்படுத்திக்கொண்டு, தமிழிலேயே ஆட்சியை நடத்

தினர். அவர்கள் காலத்துக் கல்வெட்டுகள் இதற்குச் சான்று பகரும். பல்லவ மன்னர்களில் சிலர் சிவனடியார்களாகவும் வைணவ அடியார்களாகவும் விளங்கி, இருநெறியினராலும் போற்றப்பெறும் செயல்களைச் செய்து, புகழ் எய்தியிருக் கின்றனர். சைவ, வைணவ திரு நெறிக் குரவர்களால் பாடப்பெறும் பெருமை யினையும் பெற்றிருக்கின்றனர். இவையும், அம்மன்னர்கள், தமிழைப் பாராட்டிய தற்குச் சான்றாக அமைந்து, தமிழில் ஆட்சி புரிந்தனர் என்பதைச் சுட்டிக்காட்டும்.

ஆட்சியில் சில பிறமொழிச் சொற்களை அவர்கள் பயன்படுத்தியிருப்பது இயல்பே. வடமொழிப் பற்றும் அவர்களுக்கு இருந்ததில் ஏதும் புதுமையில்லை. தனியவர்களுக்குப் பட்டங்கள் வழங்கும்போது, தம் மரபின் பெயரையே பட்ட மாக்கி வழங்கினர். பெரிய புராணம் எழுதிய சேக்கிழார் பெருமானை 'உத்தம சோழப் பல்லவன்'' என்னும் பட்டத்தால் பெருமைப் படுத்தினர். வீரநெஞ்சம் படைத்த 'படையாட்சி' மரபுக்கே 'பல்லவர்' என்னும் பட்டம்சூட்டிப் புகழ்ந் தனர். இப்பட்டமே பிற்காலத்தில் 'பள்ளவர்' 'பள்ளி' என்னும் பெயர் அந்த மரபுக்கு வருவதற்குக் காரணமாயிருந்தது. இதைப் புரிந்து கொள்ளாத சிலர் 'படையாட்சிக்' குலத்தினர் தமிழர் அல்லர் என்றும், வேறு புலத்திலிருந்து தமிழ்நாட்டில் குடியேறிய பல்லவர் என்னும் இனத்தினர் என்றும் சொல்ல முற் பட்டனர். ஆங்கிலேயர் 'சர்' என்றும்' 'நைட்' என்றும் பட்டம் கொடுத்தது போலவும், முசுலீம் மரபையொட்டி 'இராவ்சாகிப்', 'திவான்பகதூர்' என்று பட்டம் அளித்தது போலவும், பெருமை செய்வதற்குத் தகுதி பூண்ட தனியாள் களுக்குப் 'பல்லவன்' என்று பட்டம் தந்தது போல, ஒரு தமிழ் இனத்துக்கே 'பல்லவர்' என்னும் பட்டம் தந்தனர் பல்லவ மன்னர்கள்.

தம் மரபுக்கு ஏற்ற வகையில் பட்டங்கள் அளித்தாலும், தாம் தொடர்பு கொண்டிருந்த பிறமொழிகளில் பற்றுடையவராக இருந்தாலும் தமிழை அவர்கள் புறக்கணித்துவிடவில்லை. ஆட்சிமொழி தமிழாகவே அவர்களது ஆட்சியில் விளங் கிற்று என்னும் உண்மையை நாம் அறிந்துகொள்ள வேண்டும். இதற்கும் அடுத்து:

### 6. பிற்காலச் சேர சோழ பாண்டியர் காலத்தில்

சங்க காலத்தின் சேர சோழ பாண்டியர்களின் தமிழ்ப்பற்றை இங்கும் — அதாவது பிற்காலச் சேர சோழ பாண்டியர் காலத்திலும் காணலாம். ஆனல் முந்தைய அம்மன்னர்கள் காலத்தில் தமிழ் பிறமொழித் தாக்குதலுக்கு ஆளா காமல் இருந்தது. அப்போது தமிழ் தனது தனித் திருச்செழிப்பில் திகழ்ந்திருந் தது. இப்போது பிறமொழியாளர் இடையீடுகளால், தமிழ் தனது தனித்தன்மை யில் ஓரளவு குறைந்திருந்தாலும், தமிழுக்கு உச்சநிலை இல்லாமல் இல்லை. அரசாளும் மொழியாக அரியணையில் அமர்ந்து விளங்கிவந்தது.

சங்க காலத்தைப் போல, பல கலைகளும் தமிழில் தழைத்து வளர்ந்தன. அக்காலத்தில் உரோம நாட்டுடனும், கிரேக்க நாட்டுடனும் வணிகம் புத்துயிர் பெற்று நடந்தது; இக்காலத்தில், தென்கிழக்கு நாடுகளில் தமிழ்ப்பண்பாடு பரவியது. இசைக்கலை, நாட்டியக்கலை பற்றிய நுணுக்கங்கள் கட்டடக் கலையோடு தொடர்பு கொண்டன. தென்கிழக்கு நாடுகளிலும் இவை நிலையான உருவங்கள்

பெற்றன. இன்றும் அவற்றின் சின்னங்களை அந்நாடுகளில், கண்டு புகழத்தக்க அளவில் அவை அங்கு நிலவுகின்றன. அவை அங்கு நிலைகொள்ளுவதற்கு முன்பு அந்நாடுகள் தமிழர் ஆட்சிக்குத் தலை சாய்த்தன. ஆனால், அது எளிதில் கைவந்து விடவில்லை. போர் நிகழ்த்தி அந்நாடுகளை வென்றனர் தமிழ் மன்னர்கள். கடல் இடைப்பட்ட நாடுகள் அவையாதலின் தரைப்போர் செய்து அவற்றைத் தமிழர் ஆட்சிக்கு ஆட்படுத்துவது எங்ஙனம் இயலும்?

கடற்போர்கள் பல நிகழ வேண்டியிருந்தன. கடற் கொள்ளைக்காரர்களை அடக்கி வெல்லவும், கடலில் போர்கள் நடந்திருக்கின்றன. போர்க்கப்பல் என்பது எளிய படகு போன்றதாகுமா? எதிரியின் தாக்குதலைத் தாங்கிச் சமாளிக்கும் ஆற்றலும், அதற்குத் தேவையான அமைப்புகளும், அக்கப்பல்களில் இருந்திருக்க வேண்டும். எதிரியை வெற்றிகொள விரைந்து தாக்கி முறியடிக்கும் கருவிகளும் அவற்றில் பொருத்தப் பெற்றிருக்க வேண்டும். கடல்மீது அணிவகுத்து அடல் புரியும்போது கப்பலில் உள்ளவர்களுக்கு அன்றாடத் தேவைகள் அளிக்கப்பெறு வதற்குரிய ஏற்பாடுகள் அக்கப்பலில் அமைந்திருத்தல் வேண்டும்.

இக்கப்பல்கள் அயல்நாடுகளில் அயலவர்களால் ஆக்கப்பெற்று, நம்மவர் களால் விலைக்கு வாங்கிப் பயன்படுத்தப் பெற்றவையா? நாமே செய்துகொண்டவை தாமே! இவற்றைச் செய்வதற்குரிய கலையை நம் முன்னோர்கள் நன்கு அறிந்திருந் தனர். அக்கலையை நூல் வடிவிலே எழுதி வைத்திருந்தனர். அவர்கள் எந்த மொழியிலே எழுத முடியும்? தமிழிலேதான் பொறித்து வைத்தனர் என்று சொல்லவும் வேண்டுமா? அந்நூல்களில் ஒன்றாவது இன்று இல்லையே என்று கலங்கு கிறோம். பிறமொழியில் அவை திட்டமிட்டு மொழி பெயர்க்கப் பெற்றன. பிறகு தமிழ்நூல்கள் எங்கே போயினவோ தெரியவில்லை?

ஐரோப்பிய நாடுகளுடன் கப்பல் வணிகம் செய்வதற்குரிய கப்பல்களைக் கட்டும் அறிவியல் நூல்களும் தமிழில் இருந்தன. பின்பு அடிச்சுவடு கூட இல்லாமல் அவை எங்ஙனம் மறைந்து போயினவோ தெரியவில்லை. பல்லாயிரம் கற்கள், பலப்பல மாதங்கள் அக்கப்பல்களிலே பயணம் செய்த பலருக்கும் தேவையான உணவுப் பண்டங்கள் அக்கப்பல்களிலே பண்டடை செய்யப்பட்டிருக்க வேண்டும். ஓராண்டுக்கும் மேலான காலத்துக்குத் தேவையான குடிநீரும் அக்கப்பல்களில் சேமித்து வைக்கப் பெற்றிருக்க வேண்டும். அல்லது கடல்நீரை அவ்வப்போது தேவையான அளவுக்கு நன்னீராக மாற்றும் வகையறிந்திருக்க வேண்டும். அலுப்புத் தீர உறங்குவதற்கான வசதிகளையும் பிற வசதிகளையும் அவற்றில் பொருத்தி யிருக்க வேண்டும்.

வழியில் கடலிலுள்ள சுறு, திமிங்கலம், செந்நாகவனி முதலிய தீங்கிழைக் கும் கடலுயிர்களால் கப்பலுக்கு ஊறுநேராதபடி காப்பதற்குரிய முறைகளையும், அவற்றைக் கையாளுவதற்கான அறிவையும் ஆற்றலையும் படைத்த திறலாளர் களையும் அக்கப்பல்கள் கொண்டிராவிட்டால் ஒரு கப்பலாவது உருப்படியாக அயல்கரையை அடைந்திருக்க முடியுமா? அவ்வுயிர்களால் ஊறுண்ட, உடைகப்பல் கப்பலாய்த் திரையாழி யூடு செல்லுமோ?

கடற்பயணத்தில் நேரக்கூடிய புயல்கள், சூறுவளிகள், பெருமழைகள் முதலியவற்றை வெல்லும் ஆற்றல் அக்கப்பல்களுக்கு இருந்திருக்க வேண்டாவா? எனவே நெடுந்தூரக் கப்பல் பயணத்திற்கான 'கடலியல்', 'காற்றியல்', 'வானியல்', 'மீனியல்' போன்ற பல வகை அறிவியல் ஞானமும் கப்பலியலுடன் தெரிந்திருந்தால்தானே கப்பற்பயணம் வெற்றியளிக்கும். இந்த அறிவியல் செய்திகளை எந்த மொழியில் நம்மவர்கள் கற்றுப் பயன்படுத்தியிருப்பர்? தமிழில்தானே! அவ்வறிவியல் நூல்கள், அந்தோ! இன்று காணேமே என்று கவல்வதைத் தவிர நாம் என்ன செய்ய முடியும்? அயல்மொழியில் இவ் அறிவியல் நூல்களைப் படித்து அறிந்து, அக்காலத்து நிலையின் அளவுக்காவது உயர்வதற்கு நமக்குக் காலம் போதாதே என்று கவலையில் ஆழாமல் இனிவரும் நம்மவர்களாயினும், இக்கால உயர்நிலையை இவ்வறிவியல் துறைகளில் எய்துவதற்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்ய நம் அரசு மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு நாமும் உவந்து தோள்கொடுத்து உதவுவோமாக! தமிழில் இவ்வறிவியல் துறைகள் வளம் பெறுவதற்குத் தமிழறிவு படைத்த நாம்தாம் பிறமொழியிலுள்ள அறிவியல் நூல் அறிவுடன் தக்க தமிழறிவும் பூண்டு, அவ்வறிவியல் நூல்களைத் தமிழில் எழுதியாக வேண்டும்.

கப்பலியலே யன்றி, வானூர்தியியலையும் சங்ககால மக்களுக்கு முன்னிருந்தவர்களே அறிந்திருக்கவேண்டும் என்று தெரிகிறது. அங்ஙனம் அறியாமலா, வானூர்தியைப் பற்றிய செய்திகள் பெருங்காப்பியங்களில் வருகின்றன? ஓட்டுநர் இல்லாமலே இயங்கும் வானூர்திகள் பற்றியும் அக்காலத்தவர் அறிந்திருந்தனர் என்பதற்குச் சான்றுகவன்றே வருகின்றது, ஆங்கிலத்தில் Pilotless Plane என்பதற்கு நேரான 'வலவன் ஏவா வானஊர்தி' என்னும் தமிழ்த் தொடர்?

'ஏரோப்ளேன்' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு எவ்வளவு பொருத்தமாக அமைந்திருக்கிறது 'வானூர்தி' என்னும் சிறுசொல்'! இதன் அழகை யுணராத நண்பர் ஒருவர் கேட்டார், 'ஊர்தி' என்றல் எறும்பு போல மெல்ல ஊர்ந்து செல்வதைத்தானே குறிக்கும், வானத்தில் மிக விரைந்து பறந்து செல்லும் பொருளை 'ஊர்தி' என்பது எப்படிப் பொருந்தும்? என்று. அவர் வானத்தில் ஒரு வானூர்தி பறந்துபோகும் போது அண்ணந்து பார்த்தாராஞல் இங்ஙனம் கேட்க மாட்டார்? அது எவ்வளவு விரைந்துபறந்து போனலும், கீழிருந்து பார்க்கும் நம் கண்ணுக்கு அது மெல்ல ஊர்ந்து செல்வது போலத்தானே தோன்றுகிறது? வரிசையாக ஒன்றன்பின் ஒன்ருகப் பல ஊர்திகள் பறக்கும்போது, அக்காட்சி எறும்புகள் ஒன்றன்பின் ஒன்ருய் ஊர்ந்து செல்வது போலவே தோன்றும் என்பதையும் அந்நண்பர் கவனித்து, 'வானூர்தி' என்னும் சொல்லின் அழகையும் பொருத்தத்தையும் அகமுவந்து போற்ற வேண்டாமா?

சிலப்பதிகாரத்தில் வரும், காண்பாரை வியக்கவைக்கும் ஐந்து மன்றங்களான 'வெள்ளிடை மன்றம்', 'இலஞ்சி மன்றம்', 'ஒளிகால் மன்றம்', 'பூதச் சதுக்கம்', 'பாவை மன்றம்' இவை போன்ற கருவிகளை இக்காலத்தவர் கணிப்பங்கள் (Computers) என்பர். ஏதோ மாயத்தால் மந்திரத்தால் அம்மன்றங்கள் உருவாக்கப் பெற்றன என்று எண்ணுமல் அக்காலத்துத் தமிழ் மக்கள் தமது அறிவியல் ஆற்றலால், இக் கணிப்பங்களை அமைத்துக் காவிரிப்

பூம்பட்டினத்தைச் சிறப்பித்தனர் என்றே கொள்ள வேண்டும் என்பது என் கருத்து.

சங்க காலச் செய்திகளில் முன்பே சொல்ல விடுபட்ட சிலவற்றையும் அக்காலச் சேர சோழ பாண்டியர்களின் வழித் தோன்றல்களே பிற்காலச்சோழ பாண்டியர்கள் என்பதால் ஈண்டுச் சொன்னேனுனாலும், எனது நோக்கம், தமிழ், அறிவியல் சான்ற அரசாளும் மொழியாக, இவ்விருவகை மன்னர்கள் காலத்தில் திகழ்ந்தது என்று எடுத்துரைப்பதே யாகும், இதையும் அடுத்து:

**7. நாயக்க மன்னர் காலத்தில்**

தென்னகத்தில் 'இந்து' சமயம் அயல் சமயத்தவரால் அழிக்கப்பட்டு விடாதபடி காக்கும் பொறுப்புணர்ச்சியுடன் அமைக்கப் பெற்றதே விசயநகரப் பேரரசு. ஆனுல் அவ்வரசைச் சேர்ந்த விசுவநாத நாயக்கர் தமிழகத்தைத் தம் நேர் ஆட்சிக்கு ஆட்படுத்த மதுரைக்கு வந்தார். அவர் தமிழின் வடபகுதி வடிவ மான 'வடுகு' என்னும் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர். தமிழ் தேன்போல இனியது ஆவது போல் வடுகும் இனிதுஆதலின் பின்பு அது 'தெனுகு' எனப்பெற்றது. பின்னர் இது தெலுங்கு ஆயிற்று. எனினும் தமிழைப் புறக் கணிக்கவில்லை. அவருக்குத் திடமூட்டி அவரைத் தமிழகத்துக்கு அழைத்து வந்த அரிய நாயக முதலியார் நல்ல தமிழர். தொண்டை நாட்டைச் சேர்ந்தவர். எங்கள் சிற்றூரான கீழச்சேரியைத் தொட்டாற் போலுள்ள 'மப்பேடு' என்னும் சிற்றூரைச் சேர்ந்தவர். சிறுபிள்ளையாக இருந்த போதே விசயநகர அரசின் அரண்மனையில் பணியேற்றவர். அப்போது விசுவநாத நாயக்கருக்குத் தோழரான வர். இயல்பாக விசுவநாத நாயக்கர் தமிழைப் போற்றுபவராக இருந்ததுடன் அரியநாயக முதலியாரின் தொடர்பு விசுவநாத நாயக்கர் ஆட்சியில் தமிழுக்கு ஏற்றந்தந்தது.

திருமலை நாயக்கர், தெய்வத் தமிழ்ப் பெரும்புலவரான குமர குருபர அடிகளாருக்குப் பேராதரவு அளித்து, அத்திருவாளர் எழுதிய 'மதுரை மீனுட்சி யம்மை பிள்ளைத் தமிழ்' என்னும் அரிய நூலின் அரங்கேற்றத்திற்குத் தாமே தலைமையமர்ந்து பாராட்டினர் என்றும், பெரும்பொருள் வழங்கி மகிழ்ந்தார் என்றும் அறிகிரேும். அவ்வளவு தமிழ்ப் பற்றுடைய அம்மன்னர் காலத்தில் தமிழ் ஆட்சி ஓங்கியிருந்தது என்று கூறுவது மிகையாகாது. வடுகத் தமிழைத் 'தெலுங்கு' என்று ஒரு தனிமொழியாக்கிவிட்ட சமற்கிருதத்தின்மீது அவருக்குப் பரிவு இருந்ததில் வியப்பில்லை. ஆனுல் அதனுல் தமிழின் வளம் கெடவில்லை. சில அயற்சொற்கள் தமிழில் இயல்பாகப் புகுவனவாயின; அவ்வளவே.

மதுரையேயன்றி, திருச்சி, தஞ்சை, செஞ்சி இந்நகரங்களைத் தலைமையிட மாகக் கொண்டு நாயக்க மன்னர்களின் பிரிவினர் அரசாண்டு வந்தனர். அவர் களும் தமிழையே ஆளும் மொழியாகப் பயன்படுத்தி வந்தனர்.

நாயக்க மன்னர்களிடையே ஏற்பட்ட பொருமையும் புகைச்சலும் பிற மொழியாளர்கள் தமிழகத்தில் நுழைந்து ஆட்சியைக் கைப்பற்ற இடந்தந்தது. இதையும் அடுத்து;—

## 8. மராட்டியர் காலத்தில்

மதுரை நாயக்கருக்கும் தஞ்சை நாயக்கருக்கும் ஏற்பட்டிருந்த பகைமை காரணத்தால் ஏற்பட்ட போரில் மராட்டியரின் உதவி கோரப்பட்டது. உதவி புரிய வந்த மராட்டியர், தஞ்சையைத் தம் வசமாக்கிக் கொண்டு, அங்கு அமர்ந்து ஆளத் தொடங்கினர். மராட்டிய மொழி சமற்கிருதத்துடன் பெரிதும் தொடர் புடையது ஆதலின், அங்கு ஆண்டவர்கள் சமற்கிருதத்துக்கு ஏற்றந் தந்தனரா யினும் அம்மொழி ஆட்சியைக் கைப்பற்ற விட்டுவிடவில்லை. பல தமிழ்நூல்கள், வடமொழி நூல்கள் ஆயின என்ருலும் அரசு தமிழிலேயே நடந்தது.

சரபோசி மன்னர் பல்கலைக் கலைஞராக இருந்தார் ஆதலின், பல கலைகளைப் பற்றிய நூல்களையும் திரட்டுவதில் அவர் பேருக்கங் கொண்டார். 'சரசுவதி மகால்' என்று இன்றும் புகழோடு விளங்கும் நூலகத்தில் அரிய கலைநூல்கள் பல செறிந்துள்ளன. நாட்டு மருத்துவம், இசை போன்ற துறைகளில் போற்றற் குரிய ஓலைச் சுவடிகள், அவற்றைப் படித்து, அத்துறைகளில் ஆராய்ச்சி செய் வோர்க்கு அரும்பொருள்களாகக் கிடைக்கின்றன. இந்நூலகம், தமிழின் வளத்தை பெருக்குவதற்கு, இன்னும் பெரிதளவு பயன் படுத்தப்பெற வேண்டியிருக்கிறது என்பதைத் தமிழ்நலம் பெருக்கும் கருத்துடையவர்கள் கவனத்தில் கொண்டு அரசின் உதவிபெற்று ஆவன செய்ய வேண்டும். இதையும் அடுத்து:—

## 9. காகதியர், ஒய்சாளர் ஆட்சியில்

மராட்டிய மன்னர்கள் பிறமொழியாளராளுலும் தமிழையே ஆட்சிமொழி யாகக் கொண்டிருந்ததுபோல் ஐதராபாத்தைச் சேர்ந்த 'வாரங்கல்' என்னும் நகரத்தைத் தலைமையிடமாகக் கொண்டு அரசாண்ட 'காகதியர்' என்னும் மரபினரும், ஒரு காலத்தில் திருச்சி வரை கைப்பற்றி அவர்களது ஆட்சிக்கு அத் தமிழ்நாட்டுப் பகுதியை உட்படுத்தியிருந்தபோது, அவர்களும் தமிழையே ஆட்சி மொழியாகக் கொண்டு ஆண்டு வந்தனர். சில காலம் ஒய்சாள நாட்டு மன்னர், திருச்சிக்கு அண்மையிலுள்ள சமயபுரத்தை தலைநகரமாகக் கொண்டு, தமிழகத்தின் ஒரு பகுதியை ஆண்டனர். அவர்களும் தமிழைப் புறக்கணித்துவிடவில்லை. ஆட்சி மொழி தமிழாகவே இருந்தது. இதனையும் அடுத்து:—

## 10. முசுலீம் அரசில்

எந்த நோக்கத்துடன் விசயநகரப் பேரரசு அமைக்கப் பெற்றதோ அந்த நோக்கம், காலப் போக்கில் காற்றில் சென்று விடவே, அப்பேரரசு சிதைந்து போனதுடன், பல சிற்றரசுகள் தோன்ற இடம் ஏற்பட்டது. முசுலீம் மன்னர் களுக்கு இது வாய்ப்பான நேரமாயிற்று. தமிழகத்தில் பல பகுதிகளைத் தம் ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டனர்.

தம் சமயத்தைப் பரப்புவது முசுலீம் மன்னர்களின் முதல் நோக்கமாக இருந்தது என்ருலும், தமிழர்களை இசுலாமியர்களாக மதமாற்றம் செய்தபோது, அத்தமிழர்கள் தமிழர்களாகவே இருக்க இசைந்து போந்தனர். சமய வழி பாட்டிற்கு அரபுமொழி ஓரளவு பயிற்றப்பெற்றது ஆளுலும், தமிழும் இணையாக வளர்க்கப் பெற்றது. ஆட்சியைத் தமிழிலேயே நடத்தி வந்தனர். 'மசால்ச்சி,' 'சிரஸ்ததார்', 'டபேதார்', 'தாசில்தார்', 'தாக்கிது', 'வாபிசு', 'பதில்',

'நகல்' போன்ற சில உருதுச் சொற்கள் ஆட்சித் தமிழில் நுழையலாயின. இது இயல்பே. மற்றப்படி, தமிழுக்கு ஏதும் ஊறு நேரவில்லை. பிற்காலத்தில் தமிழில் இசுலாமிய இலக்கியங்களை இயற்றுவதற்குரிய ஆற்றல் படைத்த தமிழ்ப் பெரும் புலவர்கள் தோன்றுவதற்கு வாய்ப்புகள் இருந்தன. தில்லியில் ஆட்சி புரிந்த மொகலாய மன்னர் அவுரங்கசீப், குமரகுருபர அடிகளாருக்குக் காசியில் இடம் தந்து, தமிழை வளர்ப்பதற்கு வாய்ப்பு அளித்ததுபோல் தமிழகத்தில் ஆட்சி செய்த முசுலீம் சிற்றரசர்களும் தமிழ் வளர்வதற்கான வாயில்களைக் கெடுத்துவிட வில்லை.

இவ்வாருகக் கல்தோன்றி மண்தோன்ருக் காலம் முதற்கொண்டு ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு வரையில் நம் நாட்டில் ஆட்சிமொழி தமிழாகவே இருந்துவந்தது என்பதை ஒருவாறு அறிந்தோம். நமது நாட்டை ஆண்டவர்கள் எந்த வேற்றுமொழியினராக இருப்பினும் தம்தம் மொழியையே நாட்டின் ஆட்சி மொழியாக்கிவிட முனையாமல், நம் மொழியாகிய தமிழே தமிழகத்தின் ஆட்சி மொழியாக இருப்பதற்கு இசைந்து வந்திருக்கின்றனர் என்பதையறிகிறோம்.

## 11. ஆங்கிலேயர் ஆட்சியில் ஆட்சிமொழி ஆங்கிலமாக மாறியது

வணிகம் புரிய வந்த ஆங்கிலேயர் எதிர்காலத்தில் நாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் தம்மை வலுப்படுத்தி கொண்டு, இங்கு அதுபோது சிதறுண்டு கிடந்த அரசியல் நிலையை யறிந்து, பிரித்தாளும் வல்லமையால் சிற்றரசர்களுடன் வசதிக்கு ஏற்றபடி கூட்டுச் சேர்ந்து, அவர்களே ஒருவரையொருவர் மாய்த்துக் கொள்ளும்படிசெய்து, சிறிது சிறிதாக நாட்டைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்துவிட்ட செய்தி நாம் அறிந்த செய்தியே.

நாட்டை ஆளத் தொடங்கியபோது, ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருப்பது அவர்களுக்கு எளிதாக இருந்தது. பல மொழிகள் பேசும் பல இனத்தவருக்கும் பொதுவாக அவ்வொரு மொழியையே பயன்படுத்துவது வசதியாக இருக்கும் என்று எண்ணினர். இங்கிலாந்திலுள்ள தலைமையரசு வரையில் இதுபற்றிக் கடிதப் போக்குவரவு நடந்தது. ஆங்கிலப் புலமை மிக்க மெக்காலே என்பார், அரசியலிலும் பெரும்பதவி பூண்டிருந்தவர், இதுகுறித்த முடிவைச் செய்தார். ஆங்கிலேய அலுவலர்கள், மேல் பதவிகளில் இருந்தாலும், அடிநிலையில் நாட்டில் இருக்கும் மக்களையே கொண்டு ஆட்சி நடத்துவது என்றும், நாட்டில் பல பகுதியிலுள்ள எல்லாருக்கும் பொதுவானதும் புதிதானதுமான ஆங்கில மொழியை ஆட்சி மொழியாக்கிக் கொள்வது என்றும் முடிவு எடுக்கப்பட்டது.

ஆங்கிலம் பயிற்றுவிக்கும் பள்ளிக்கூடங்கள் தொடங்கப் பெற்றன. நாட்டு மொழியும் கணக்குப் பாடமும் பயிற்றுவிப்பதுடன் ஆங்கிலத்தில் அலுவலகச் செய்திகளை எழுதும் அளவுக்கு அம்மொழியும் கற்பிக்கப்பட்டது. நாளடைவில் ஆங்கிலப் பாடங்களின் அளவு மிகுதிப்படுத்தப்பட்டது. பல்கலைக்கழகப் பட்டப் படிப்புகளும் பின்னர் ஏற்பட்டன. இவ்வாறு புகுத்தப்பட்ட ஆங்கில மொழியில் நாட்டவர்கள் நல்ல புலமை பெறலாயினர். எழுத்தர் பதவிகளுக்கு மேலுள்ள பதவிகளுக்கும் உயர்த்தப்பெற்றனர். நாளாவட்டத்தில், உயர் அலுவல்களுக்கும் நம்மவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். அலுவலகங்கள் அற மன்றங்கள்

**8. மராட்டியர் காலத்தில்**

மதுரை நாயக்கருக்கும் தஞ்சை நாயக்கருக்கும் ஏற்பட்டிருந்த பகைமை காரணத்தால் ஏற்பட்ட போரில் மராட்டியரின் உதவி கோரப்பட்டது. உதவி புரிய வந்த மராட்டியர், தஞ்சையைத் தம் வசமாக்கிக் கொண்டு, அங்கு அமர்ந்து ஆளத் தொடங்கினர். மராட்டிய மொழி சமற்கிருதத்துடன் பெரிதும் தொடர் புடையது ஆதலின், அங்கு ஆண்டவர்கள் சமற்கிருதத்துக்கு ஏற்றந் தந்தனரா யினும் அம்மொழி ஆட்சியைக் கைப்பற்ற விட்டுவிடவில்லை. பல தமிழ்நூல்கள், வடமொழி நூல்கள் ஆயின என்றாலும் அரசு தமிழிலேயே நடந்தது.

சரபோசி மன்னர் பல்கலைக் கலைஞராக இருந்தார் ஆதலின், பல கலைகளைப் பற்றிய நூல்களையும் திரட்டுவதில் அவர் பேரூக்கங் கொண்டார். ‘சரசுவதி மகால்’ என்று இன்றும் புகழோடு விளங்கும் நூலகத்தில் அரிய கலைநூல்கள் பல செறிந்துள்ளன. நாட்டு மருத்துவம், இசை போன்ற துறைகளில் போற்றற் குரிய ஓலைச் சுவடிகள், அவற்றைப் படித்து, அத்துறைகளில் ஆராய்ச்சி செய் வோர்க்கு அரும்பொருள்களாகக் கிடைக்கின்றன. இந்நூலகம், தமிழின் வளத்தை பெருக்குவதற்கு, இன்னும் பெரிதளவு பயன் படுத்தப்பெற வேண்டியிருக்கிறது என்பதைத் தமிழ்நலம் பெருக்கும் கருத்துடையவர்கள் கவனத்தில் கொண்டு அரசின் உதவிபெற்று ஆவன செய்ய வேண்டும். இதையும் அடுத்து:—

**9. காகதியர், ஒய்சாளர் ஆட்சியில்**

மராட்டிய மன்னர்கள் பிறமொழியாளரானாலும் தமிழையே ஆட்சிமொழி யாகக் கொண்டிருந்ததுபோல் ஐதராபாத்தைச் சேர்ந்த ‘வாரங்கல்’ என்னும் நகரத்தைத் தலைமையிடமாகக் கொண்டு அரசாண்ட ‘காகதியர்’ என்னும் மரபினரும், ஒரு காலத்தில் திருச்சி வரை கைப்பற்றி அவர்களது ஆட்சிக்கு அத் தமிழ்நாட்டுப் பகுதியை உட்படுத்தியிருந்தபோது, அவர்களும் தமிழையே ஆட்சி மொழியாகக் கொண்டு ஆண்டு வந்தனர். சில காலம் ஒய்சாள நாட்டு மன்னர், திருச்சிக்கு அண்மையிலுள்ள சமயபுரத்தை தலைநகரமாகக் கொண்டு, தமிழகத்தின் ஒரு பகுதியை ஆண்டனர். அவர்களும் தமிழைப் புறக்கணித்துவிடவில்லை. ஆட்சி மொழி தமிழாகவே இருந்தது. இதனையும் அடுத்து:—

**10. முசுலீம் அரசில்**

எந்த நோக்கத்துடன் விசயநகரப் பேரரசு அமைக்கப் பெற்றதோ அந்த நோக்கம், காலப் போக்கில் காற்றில் சென்று விடவே, அப்பேரரசு சிதைந்து போனதுடன், பல சிற்றரசுகள் தோன்ற இடம் ஏற்பட்டது. முசுலீம் மன்னர் களுக்கு இது வாய்ப்பான நேரமாயிற்று. தமிழகத்தில் பல பகுதிகளைத் தம் ஆட்சிக்கு உட்படுத்திக் கொண்டனர்.

தம் சமயத்தைப் பரப்புவது முசுலீம் மன்னர்களின் முதல் நோக்கமாக இருந்தது என்றாலும், தமிழர்களை இசுலாமியர்களாக மதமாற்றம் செய்தபோது, அத்தமிழர்கள் தமிழர்களாகவே இருக்க இசைந்து போந்தனர். சமய வழி பாட்டிற்கு அரபுமொழி ஓரளவு பயிற்றப்பெற்றது ஆனாலும், தமிழும் இணையாக வளர்க்கப் பெற்றது. ஆட்சியைத் தமிழிலேயே நடத்தி வந்தனர். ‘மசால்ச்சி,’ ‘சிரஸ்ததார்’, ‘டபேதார்’, ‘தாசில்தார்’, ‘தாக்கீது’, ‘வாபிசு’, ‘பதில்’,

'நகல்' போன்ற சில உருதுச் சொற்கள் ஆட்சித் தமிழில் நுழையலாயின. இது இயல்பே. மற்றப்படி, தமிழுக்கு ஏதும் ஊறு நேரவில்லை. பிற்காலத்தில் தமிழில் இசுலாமிய இலக்கியங்களை இயற்றுவதற்குரிய ஆற்றல் படைத்த தமிழ்ப் பெரும் புலவர்கள் தோன்றுவதற்கு வாய்ப்புகள் இருந்தன. தில்லியில் ஆட்சி புரிந்த மொகலாய மன்னர் அவுரங்கசீப், குமரகுருபர அடிகளாருக்குக் காசியில் இடம் தந்து, தமிழை வளர்ப்பதற்கு வாய்ப்பு அளித்ததுபோல் தமிழகத்தில் ஆட்சி செய்த முசுலீம் சிற்றரசர்களும் தமிழ் வளர்வதற்கான வாயில்களைக் கெடுத்துவிட வில்லை.

இவ்வாறுகக் கல்தோன்றி மண்தோன்றுக் காலம் முதற்கொண்டு ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு வரையில் நம் நாட்டில் ஆட்சிமொழி தமிழாகவே இருந்துவந்தது என்பதை ஒருவாறு அறிந்தோம். நமது நாட்டை ஆண்டவர்கள் எந்த வேற்றுமொழியினராக இருப்பினும் தம்தம் மொழியையே நாட்டின் ஆட்சி மொழியாக்கிவிட முனையாமல், நம் மொழியாகிய தமிழே தமிழகத்தின் ஆட்சி மொழியாக இருப்பதற்கு இசைந்து வந்திருக்கின்றனர் என்பதையறிகிறோம்.

### 11. ஆங்கிலேயர் ஆட்சியில் ஆட்சிமொழி ஆங்கிலமாக மாறியது

வணிகம் புரிய வந்த ஆங்கிலேயர் எதிர்காலத்தில் நாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் தம்மை வலுப்படுத்தி கொண்டு, இங்கு அதுபோது சிதறுண்டு கிடந்த அரசியல் நிலையை யறிந்து, பிரித்தாளும் வல்லமையால் சிற்றரசர்களுடன் வசதிக்கு ஏற்றபடி கூட்டுச் சேர்ந்து, அவர்களே ஒருவரையொருவர் மாய்த்துக் கொள்ளும்படிசெய்து, சிறிது சிறிதாக நாட்டைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்துவிட்ட செய்தி நாம் அறிந்த செய்தியே.

நாட்டை ஆளத் தொடங்கியபோது, ஆங்கிலம் ஆட்சிமொழியாக இருப்பது அவர்களுக்கு எளிதாக இருந்தது. பல மொழிகள் பேசும் பல இனத்தவருக்கும் பொதுவாக அவ்வொரு மொழியையே பயன்படுத்துவது வசதியாக இருக்கும் என்று எண்ணினர். இங்கிலாந்திலுள்ள தலைமையரசு வரையில் இதுபற்றிக் கடிதப் போக்குவரவு நடந்தது. ஆங்கிலப் புலமை மிக்க மெக்காலே என்பார், அரசியலிலும் பெரும்பதவி பூண்டிருந்தவர், இதுகுறித்த முடிவைச் செய்தார். ஆங்கிலேய அலுவலர்கள், மேல் பதவிகளில் இருந்தாலும், அடிநிலையில் நாட்டில் இருக்கும் மக்களையே கொண்டு ஆட்சி நடத்துவது என்றும், நாட்டில் பல பகுதியிலுள்ள எல்லாருக்கும் பொதுவானதும் புதிதானதுமான ஆங்கில மொழியை ஆட்சி மொழியாக்கிக் கொள்வது என்றும் முடிவு எடுக்கப்பட்டது.

ஆங்கிலம் பயிற்றுவிக்கும் பள்ளிக்கூடங்கள் தொடங்கப் பெற்றன. நாட்டு மொழியும் கணக்குப் பாடமும் பயிற்றுவிப்பதுடன் ஆங்கிலத்தில் அலுவலகச் செய்திகளை எழுதும் அளவுக்கு அம்மொழியும் கற்பிக்கப்பட்டது. நாளடைவில் ஆங்கிலப் பாடங்களின் அளவு மிகுதிப்படுத்தப்பட்டது. பல்கலைக்கழகப் பட்டப் படிப்புகளும் பின்னர் ஏற்பட்டன. இவ்வாறு புகுத்தப்பட்ட ஆங்கில மொழியில் நாட்டவர்கள் நல்ல புலமை பெறலாயினர். எழுத்தர் பதவிகளுக்கு மேலுள்ள பதவிகளுக்கும் உயர்த்தப்பெற்றனர். நாளாவட்டத்தில், உயர் அலுவல்களுக்கும் நம்மவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். அலுவலகங்கள் அற மன்றங்கள்

யாவற்றிலும் ஆங்கிலமே ஆளப்பெற்றது. நம்மவர்கள் ஆங்கில மொழியில் அம்மொழியாளரைப்போலவே எழுதும் ஆற்றல் கைவரப் பெறலாயினர். ஆங்கிலம் பேசுவதிலும் சிலர் ஆங்கிலேயரை நிகர்த்தனர். அவர்களை விஞ்சும் வகையில் ஆங்கிலப் புலமையும் படைக்கலாயினர்.

ஓர் அயல்மொழியை அத்துணைச் சிறந்த அளவு பயில்வதில் நாட்டின் அறிஞர்கள் முனைந்து ஈடுபட்டு விளங்கவே அவர்கள் தம்தம் தாய்மொழிகளைப் பயில்வதற்கு அளிக்க வேண்டிய அளவு நேரத்தையும் ஊக்கத்தையும் உழைப்பையும் தராமற் போகலாயினர். அறிஞர்களாயினோர் இங்ஙனம் போய்விடவே நாட்டிலுள்ள பிறரும் தாய்மொழிப் பயிற்சியிலே பற்றுக்கொள்ளாமற் போயினர். வீட்டில் பேசுவதிலும் எழுதுவதிலும் கூட ஆங்கிலச் சொற்கள் புகுந்து, தாய்மொழியின் தரத்தைக் குறைத்தன. மேடைகளிலும் தாய் மொழியில் பேசுவதே குறைவென்றும், 'தாய்மொழியில் எனக்குப் பேசத் தெரியாது' என்று சொல்லிக் கொள்வது பெருமை யென்றும் கருதப்பட்டது.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில், பன்னெடுங்காலமாக அரியணையில் அமர்ந்து அரசுபுரிந்து வந்த தமிழன்னை, 'அந்தோ! ஒதுங்கிநின்று, ஆங்கிலத்திற்கு அடங்கி நடக்கும் பணிப்பெண்ணாக மாற நேர்ந்துவிட்டது!' 'ஆட்சியைத் தமிழில் எப்படி நடத்த முடியும்?', 'ஆங்கிலத்தில் எழுதுவதுபோல் அத்துணைத் திறம்படத் தமிழில் எங்ஙனம் எழுத இயலும்? தமிழில் வரைந்தால் விளங்குமோ? ஆங்கிலத்துக்குரிய தெளிவு தமிழுக்கு உண்டா? வரைவுகள் (Drafts and Notes) குறிப்புகள் எழுதுவதற்குரிய ஆற்றல்தான் தமிழுக்கு ஏது?' என்றெல்லாம் நாமே நினைக்கலானோம், கூறலானோம்.

இடையில் ஒரு நூறு ஆண்டுகள் மட்டுமே ஆங்கிலம் தமிழினை ஒதுக்கி விட்டு ஆட்சி புரிய நேர்ந்தது. இந்தச் சிறிய கால எல்லைக்குள்ளேயே நம் அன்னையை இவ்வளவு ஒடுக்கிவிட்டோம்! தமிழர்களாகப் பிறந்தும், நாம் நம் தாய்மொழியில் தன்னம்பிக்கையிழந்து விட்டோம். அதனை அழகுறவும் வல்லமையுடனும் இயக்கும் ஆற்றலையும் போக்கடித்துக்கொண்டு விட்டோம். இவற்றைக் காட்டிலும் படுகேடான செய்தியொன்று உள்ளத்தை நைக்கின்றது. நம்மில் பலருக்குத் தமிழில் பற்றே இல்லாமல் போய்விட்டிருக்கும் செய்தியே அது. பற்று இல்லாமை மட்டும் அல்லாது தமிழ் என்றால் சிலருக்கு அருவருப்பே வளர்ந்துவிட்டிருக்கிறதே! ''ஐயகோ, எவரிடம் சென்று இதனை முறையிடுவது? எங்கே சென்று ஆறுதல் பெறுவது?'' என்று குன்று முட்டிய குருவியாகின்றோம்.

இவ்வாறு திணறிக்கொண்டிருந்த நேரத்தில் நம்நாடு விடுதலை பெற்றது. அயலவர் அகன்றார். அயலரசு நம் அரசு ஆயிற்று.

**விடுதலைக்குப் பின்**

**1. அரசு மாறியது**

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் நாள் நாடு மீளவும் நமக்கே உரிய நாடாயிற்று. அன்று நள்ளிரவில் நம் நாட்டுத் தலைவர்கள் அரசாட்சியை ஆங்கிலேயர்களிடமிருந்து ஏற்றுக்கொண்டனர்! ஆங்கிலேயத் தலைமை ஆளுநர்

(Governor General) அவரது பதவியை நம் மதிப்பிற்குரிய மேதகு இராசாசி அவர்களிடம் ஒப்புவித்தார். மாண்புமிகு சவகர்லால் நேரு அவர்கள் நாட்டின் முதல்வர் ஆனுர். அமைச்சர்கள் அனைவரும் நம்மவர்கள் ஆயினர். மாநில அரசுகளின் ஆளுநர்கள் (Governors) நம்மவர்கள் ஆகித் தலைமை ஆளுநரின் கீழ்ப் பணிபுரிவாராயினர். 'விடுதலை பெற்றுவிட்டோம் — அரசு நம்முடைய தாகிவிட்டது' என்னும் அகமகிழ்வில் திளைத்தோம். ஆனுல்?

## 2. ஆட்சிமொழி ஆங்கிலமே

ஆங்கில மொழியே ஆட்சிமொழியாகத் தொடர்ந்து இருந்துவந்தது. திடும் என அரசு நடத்தும் மொழியை எப்படி மாற்றிவிட முடியும்? அதுவும் பலமொழி பேசுநரையுடைய பல மாநிலங்களைக் கொண்ட மாபெரிய நாடல்லவா நம் நாடு? ஆங்கிலமே நம் அனைவர்க்கும் ஒரு பொதுவான மொழியாக வாய்த் திருந்தது. அரசு நள்ளிரவில் மாறியது போல, ஆட்சி மொழியும் ஒரே நாளில் எங்ஙனம் மாறிவிடும்? அரசின் அன்றுடப் பணிகள் நாடெங்கிலும் நடந்தாக வேண்டுமே? அறிவிப்புகள் அனுப்பவும் ஆணைகள் பிறப்பிக்கவும் மொழிதானே வாயில்! நூருண்டுகளாக ஆட்சியைத் திறம்பெறச் செலுத்தி வந்தமொழி ஆங்கிலந் தானே? நம் நாட்டிற்கு ஏற்ற வண்ணம் ஆட்சியின் திறல் குறையாத வண்ணம் நமது ஆட்சிமொழியை நாம் அனைவரும் இசைந்து அமைத்துக்கொள்ளும் வரையில், அதுகாறும் கோலோச்சி வந்த ஆங்கிலத்தை நமது பணிக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது.

## 3. அரசியல் அமைப்பு

''ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் — என்று
ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!''

என்று கவிஞர் பெருமகனுர் சுப்பிரமணிய பாரதியார் அன்ருெருநாள் பாடினுர். அப்போது நாடு அயலவனின் காலடியில் அடிமையாய்க் கிடந்தது. சுதந்திரத்தைப் பற்றிப் பேசினுல் சிறைவாசம் என்ற சட்டம் தலைவிரித்தாடிய காலம் அது. என்ருே வரப்போகும் விடுதலையை, கவிஞர்க்கு உரிய எதிர்கால ஞானத்தோடு அன்றே அறிந்து சொல்லிவைத்தார் என்று கூறவேண்டும். அவரது வாக்கின் வண்ணமே, எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு 1947-ஆம் ஆண்டில் நாடு விடுதலையடைந்தது.

அவரது இந்தக் கனவு பலித்து விட்டது போலவே, அவரது இன்னொரு கனவும் பலிப்பதற்குரிய நற்காலம் நண்ணியது. இக்கனவுதான் 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்னும் அரியதொரு கனவு. இக்கனவு நமது நாட்டிலேயே நாம் அடிமைகளாகக் கிடந்த காலத்திலே அவருக்கு ஏற்பட்ட கனவு. நாடு நம் கைக்கு வந்துவிட்டது. இனி அதுவரை அயலான் ஆண்ட முறையில் நாட்டை ஆள்வதா? நமக்கெனத் தனியே ஓர் அரசியல் அமைப்பை ஆக்கிக் கொள்வதா? என்னும் கேள்வி எழுந்தது. இந்திய அரசியல் அமைப்பை உருவாக்குவதற்கு மக்களின் சார்பாளர்கள் அடங்கிய மாமன்றம் (Assembly) ஒன்று கூட்ட வேண்டியிருந்தது. மாநிலச் சட்ட மன்றங்களும் நாடாளுமன்றமான பாராளு

மன்றமும், தேர்ந்தெடுத்த அந்த அந்த மன்றங்களின் உறுப்பினர்களும், அரசு தேர்ந்தெடுத்த சில வல்லுநர்களும் அடங்கிய இந்திய அரசியல் அமைப்பு மாமன்றம் (Indian Constituent Assembly) தில்லியில் அமர்ந்து 1950ஆம் ஆண்டில் செயலாற்றத் தொடங்கியது. நம் நாட்டின் அரும்பெருந் தலைவர்களில் ஒருவரான இராசேந்திரப் பிரசாத் அவர்கள் அம்மாமன்றத்தின் தலைவர் ஆனர்.

நம் நாட்டின் அரசியல் அமைப்பு (Indian Constitution) நம் கவிஞர் பெருமான் பாரதி அன்று கனவு கண்ட வண்ணம், நம் நாட்டில் பிறந்த ஒவ் வொருவரும் நம் நாட்டை ஆளும் ஒரு மன்னராக விளங்குகின்ற நிலைமையை மக்களாகிய நமக்கு அளிக்கும் 'குடியாட்சி' யாக இருக்க வேண்டும் என்று முதலில் முடிவு செய்தனர்.

**4. ஆட்சிமொழிப் பகுதி**

1950ஆம் ஆண்டின் இறுதியில் நிறைவேற்றிய இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தில் நாட்டின் ஆட்சி மொழியைப் பற்றிய திட்டங்கள், அச்சட்டத்தின் பாகம் xvii-ல் 'ஆட்சிமொழி' என்னும் தலைப்பின்கீழ் தீட்டப்பெற்றன.

இப்பாகத்தின் உறுப்பு (Article) 343ல் 'இந்தியே இந்திய ஒன்றியத்தின் ஆட்சி மொழியாகும்' என்று கண்டிருந்தது. ஆட்சி மொழி பற்றிய பாகம், அரசியல் அமைப்பு மாமன்றத்தின் முன் வந்த போது, மாமன்றத்தின் தலைவர் மேதகு இராசேந்திரப் பிரசாத் அவர்களே தலைமையமர்ந்திருந்தார். மாமன்றத் தில் வீற்றிருந்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் இந்தி பொதுமொழி ஆவதை ஆதரிப்பவர் பெரும்பாலோராக இல்லாமல் இருந்ததைக் கண்டார். ஆட்சி மொழி பற்றிய அச்சட்டப் பகுதி அப்போது முடிவுக்கு எடுத்துக்கொள்ளப் பட்டால் 'இந்தி' இந்திய ஒன்றியத்தின் ஆட்சிமொழியாவது நிறைவேறுது போகும் என அஞ்சினர். எனவே, ''இது சிக்கலான பகுதி, நாளை பார்த்துக் கொள்வோம், இதை ஒதுக்கி வைத்துவிட்டு, மேலேயுள்ள பகுதிக்குச் செல்வோம்'' என்று சொல்லி அடுத்துள்ள பகுதிக்குப் போய்விட்டார். அன்று மாமன்றக் கூட்டம் முடிந்தது. இரவோடு இரவாக ஏதோ நடந்திருக்க வேண்டும். நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

மறுநாள் மாமன்றம் கூடியது. இந்தியை ஆதரிப்போர் பலராக இருந் தனர். இந்திக்குப் பெரும்பான்மை கிடைத்துவிடும் என நம்பி ஆட்சி மொழி பற்றிய பகுதியை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டார் தலைவர். பலர் பிணங்கிப் பேசினர். 343ஆம் உறுப்பு, வாக்களிப்புக்கு விடப்பட வேண்டியதாயிற்று. வாக்குகளை எண்ணினர். ஒருபாதி உறுப்பினர்களே இந்தியை ஆதரித்தனர். சரிபாதி எதிர்த்தனர். தலைவர் சிக்கலான நிலைக்கு ஆளானுர். தமது தாய் மொழியாகிய இந்திமொழியின் மீதிருந்த பற்று அவரது நடுநிலைமையையும் கசந்து விட்டது. தம் தலைவர் பதவி வாக்கை (Casting Vote) இந்தியை ஆதரிப்போர் பக்கம் அள்ளிப் போட்டார்.

அப்போது. அரசியல் அமைப்பு மாமன்ற உறுப்பினர்களில், காங்கிரசின் சார்பாக அந்தப் பேரவையில் வீற்றிருந்தவர்களில் ஒருவர் திரு. எல். கிருஷ்ண சாமி பாரதியார், எம்.ஏ.; பி.எல் அவர்கள் ஆவார். இப்பெருந்தகையார்

காங்கிரசில் பழைய தொண்டர், நாட்டுப்பற்று மிகுந்தவர். அயலரசினை எதிர்த்துச் சிறை சென்றவர். இவர் வாழ்வரசியாரும் அங்ஙனம் நாட்டுப்பற்றுக் கொண்ட தற்காக ஆங்கில அரசினுல் சிறைக்கு அனுப்பப் பெற்ருர். இவர்கள் தலைமகனுரும் நாட்டுத் தொண்டுபுரிந்தது காரணமாகச் சிறைசெய்யப் பெற்றவர். மாமன்றத்தில் நடந்த இந்நிகழ்ச்சியைக் கண்டு மனம் புழுங்கினுர் இப்பெருமானுர், அப்புழுக்கத் தினைப் போக்கிக்கொள்ள, இதைப்பற்றி வெளியில் பிறகு பேசியும் எழுதியும் மன அமைதி கொண்டதைப் பலர் அறிந்திருப்பர்.

'இந்தி' இந்திய ஒன்றியத்தின் ஆட்சி மொழியான வரலாறு இதுதான். இதுவே இந்திய அரசின் பொதுமொழி. இனி அரசியல் அமைப்புச் சட்டத்தின் XVII ஆம் பாகத்தில் 345ஆம் உறுப்பினைக் காண்போம்.

அப்பாகத்தின் உறுப்பு (Article) 345ல் மாநிலங்களின் ஆட்சிமொழியைப் பற்றிக் கூறியிருக்கிறது. மாநிலங்களின் மொழிகளில் எதையேனும் ஒன்றையோ, அவற்றில் சிலவற்றையோ, அம்மாநிலத்தின் ஆட்சித் தேவைகளில் எதற்காவதோ அல்லது எல்லாவற்றிற்குமோ, ஆட்சிமொழியாக ஆக்கிக் கொள்ளலாம். இதற் கென அம்மாநிலச் சட்ட மாமன்றம் ஒரு சட்டம் இயற்றிக்கொள்ள வேண்டும் என்பதே அந்த உறுப்பில் கண்ட செய்தி.

இவ்வாறு அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஆட்சிமொழி பற்றித் திட்ட மிட்டது பொருத்தமே. பல மொழிகளைப் பேசும் பல மாநிலங்களைக் கொண்டது நமது நாடாகிய இவ் இந்தியச் சிறுகண்டம். இம்மொழிகளில் ஏதேனும் ஒன்றை, ஏதோ ஒரு காரணத்தைக் காட்டி, நம் நாட்டிலுள்ள அனைவர் மீதும் சுமத்தி விட்டால் நாட்டின் ஒற்றுமை குலையும். அம்மொழி பேசுபவர்கள் 'ஆளும் மொழி யினர்' எனத் தம்மைச் செம்மாப்புடன் எண்ணிக் கொள்வர். மற்ற மொழியினர் நாட்டின் இரண்டாந்தரக் குடிமக்களாகி விடுவர். இந்நிலை நேரவிடாமல் அந்தந்த மாநிலமே அந்தந்த மாநிலத்தின் ஆட்சிமொழியைத் திட்டஞ்செய்யச் சட்டஞ்செய்து கொள்ள வேண்டும் என்னும் அரசியல் அமைப்புச் சட்டத்தின் 345ஆம் உறுப்புப் பெரிதும் வரவேற்கப்பாலதாக அமைந்தது.

ஆனுல், அரசியல் அமைப்புச் சட்டத்தின் இப்பகுதியில், பின்வரும் ஏற் பாட்டுக்கு வகைசெய்யும் இன்னொரு செய்தியும் இருந்தது:—

> ''இவ்வரசியல் அமைப்புச் சட்டம் செலாவணிக்கு வந்த நாளி லிருந்து பதினைந்து ஆண்டுகளுக்குள், எந்த மாநிலமாவது அந்த மாநிலத் தின் ஆட்சிமொழி வேறு எதுவாக இருக்க வேண்டுமென்று சட்டம் செய்துகொள்ளா விட்டால், தானுகவே, இந்திமொழி, அந்த மாநிலத்தின் ஆட்சிமொழியாக ஆகிவிடும். அப்படி இந்தி அம் மாநிலத்தின் ஆட்சி மொழியாவதற்கு, வேறு சட்டமோ, ஆட்சி முறை ஆணையோ (Administrative order) தேவையில்லை.''

இதுவே கடுமையான அச்செய்தி.

இந்தி பேசாதவர் பெரும்பாலோராக இருக்கும் மாநிலங்களுக்கு, இச் சட்டப்பகுதி அச்சத்தை விளைவிப்பதாக இருந்தது. இந்தி பேசுவோரைக் கொண்ட மாநிலங்களான பீகார், உத்திரப் பிரதேசம், ஒரிசா ஆகிய மாநிலங்கள், மனமகிழ்ச்சியுடன், விரைந்து, 'இந்தியே' அம்மாநிலங்களின் ஆட்சிமொழியாகும் என்று சட்டங்கள் செய்து கொண்டன.

5. அரியணையில் அன்னையை அமர்த்தும் பாடு

தமிழகத்தில் எல்லா அரசியல் கட்சியினருமே, ஆளும் காங்கிரசுக்கட்சி யினர் உள்பட – பரபரப்பு அடைந்தனர். பதினைந்து ஆண்டு என்பது எப்படியோ விரைந்து ஓடிவிடுமே! அதற்குள் தமிழை நமது மாநில அரசின் ஆட்சிமொழியாக ஆக்கிக்கொள்ள வேண்டுமே. ஏதேதோ காரணத்தால் பதினைந்து ஆண்டு எல்லைக்குள், தவக்கங்கள் இடைப்பட்டுவிட்டால் என்ன ஆகுமோ? என்று அஞ்சலாயினர். அரசினரை எல்லாக் கட்சியினரும் ஒரு மனதாகக் கூடி வேண்டிக் கொள்ள முடிவு செய்தனர். உடனடியாக, நம் மாநிலத்திற்குத் தமிழை ஆட்சி மொழி ஆக்குமாறு கேட்டுக்கொள்ளத் திட்டமிட்டனர்.

சென்னை அண்ணாமலை மன்றத்தில் அனைத்துக் கட்சி மாநாடு ஒன்று கூடிற்று. அப்போது மேல்மன்ற உறுப்பினராக இருந்த திரு. கசபதி நாயகர் பி.ஏ.,பி.எல்.,எம்.எல்.சி. தலைமையமர்ந்தார். அவர் மாவட்ட நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றவர். பல அரசியல் கட்சியினரும், தமிழை ஆட்சி மொழி யாக்கும்படி மாநில அரசினை வேண்டிக்கொள்ளும் தீர்மானம் ஒன்று நிறை வேறியது. அதைத் தொடர்ந்து திரு. கசபதி நாயகர் அவர்களே ஆட்சிமொழிச் சட்ட வரைவு (Draft Bill) ஒன்றனை ஆயத்தம் செய்து, மேல் மன்றத்தில் கொண்டு வருவது என்றும் முடிவு செய்தனர்.

அம்முடிவையொட்டி, உடனடியாகத் திரு, நாயகர் அவர்கள் 'ஆட்சி மொழிச் சட்டவரைவு' ஒன்றனை மேல் மன்ற முடிவுக்கு அனுப்பினர். தமிழக அரசும் தமிழை நம் மாநிலத்தின் ஆட்சிமொழியாக்கும் சட்டத்தை நிறை வேற்றும் ஆர்வமுடன் இருந்தது, என்றாலும், தனியார் ஒருவர் கொண்டுவரும் வரைவினைச் (Draft) சட்டமாக்க இடந்தருதவற்கு இயையும் மனம் அரசுக்கு இல்லாதிருப்பது இயல்பே. மக்கள் போற்றுவதும், வரலாற்றுப் பெருமை பூணத்தக்கதுமான இத்தகையதொரு சட்டத்தினை அரசினரே கொண்டு வந்து நிறைவேற்ற நினைப்பது பொருத்தந்தானே? திரு. நாயகர் அனுப்பிய வரைவினைச் சட்டம் ஆக்கினால் அதனைச் செயற்படுத்த பணச் செலவாகும் என்னும் காரணத் தினால், அப்போது முதலமைச்சராக விளங்கிய மாண்புமிகு சி. இராசகோபாலா சாரியர் அவர்கள், அவ்வரைவினை ஆளுநரின் முன் ஒப்புதலுக்கு அனுப்பினர். பணச்செலவு விளைவிக்கும் சட்டங்களை ஆராய்வதற்கு ஆளுநரின் முன் இசைவைப் பெறவேண்டும் என்பது விதி. ஆளுநர் இசைவளிக்க மறுத்துவிட்டார்!

இது நிகழ்ந்த சிறிது காலத்திற்குள், அப்போது தமிழக அரசின் அமைச் சராக மாண்புமிகு திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் சட்ட மாமன்ற ஆய்வுக்கு, தமிழக ஆட்சிமொழிச் சட்ட வரைவினைப் படைத்தார். 1956ஆம் ஆண்டின் XXXIX எண் சட்டமாக, தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டம் நிறைவேறிவிட்டது.

அன்னைமொழி அரியணை ஏற்றப்பெற்ருள். மக்கள் உள்ளங்கள் மகிழ்ச்சியால் துளும்பின!

தமிழை ஆட்சிமொழி யாக்கிக் கொண்டாலும், ஆங்கிலம் சில செயல்களுக்குத் தேவையான காலம் வரையில் உடனிருந்து வரவும் தமிழக ஆட்சிமொழிச் சட்டத்தில் வகை செய்யப்பெற்றது.

நாட்டின் நம் முன்னைய தலைமை அமைச்சர், நம் போற்றுதலுக் குரிய சவகர்லால் நேரு அவர்கள், இந்தி பேசாத மக்கள் பெரும்பாலோராக இருக்கும் மாநிலங்களில் அவர்களாக, அவர்கள் மாநிலச் சட்டமன்றத் தீர்மானத்தால் விரும்பினுலொழிய, இந்திக்கு மாற்ருக ஆங்கிலமே, மைய அரசுடனும் பிற மாநிலங்களுடனும் தொடர்பு கொள்ளுவதற்குரிய மொழியாக இருந்துவரும் என்று பாராளுமன்றத்தில், இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி தீர்மானம் செய்துவிட்டுப் போயிருக்கிருர்.

### 6. பொங்கல் புது நாளில் அன்னை அரியணையமர்ந்தாள்

முதற்படியாக *14–1–1958* முதல் கையினுல் எழுதியே கடிதப் போக்கு வரவு நடத்தி வந்த சிறு அலுவலகங்களான மாநிலம் முழுவதுமுள்ள பள்ளித் துணை ஆய்வர் (Dy. Inspector of Schools), தொழிலாளர் உதவி ஆய்வர் (Asst. Inspector of Labour), வனச்சரக அலுவலர் (Forest Range officer) போன்றவர்களின் பல அலுவலகங்களில் தமிழையே பயன்படுத்தும்படி அரசிதழில் ஆட்சிமொழிச் சட்டத்தின் கீழ், அறிக்கை (Notification in the Govt. Gazette under the Official Language Act) வெளியிட்டனர். "Tamil shall be used in respect of all official communications in the following govt. offices" என்று அந்த அறிக்கை கூறியது. 'Shall be' என்னும் தொடர் கட்டாயம் என்னும் பொருளுடையது என்பதை யறிவோம். இந்த அறிக்கை, சட்டத்தின் ஆற்றலையுடையது. சட்டத்தை மீறினுல் தண்டனையென்னும் விதி, இவ்வறிக்கையை மீறினவர்களுக்கும் பொருந்தும்.

### 7. நாடெங்கும் தமிழ் ஆட்சி-நான்கு நிலைத்திட்டம்

*14–1–1958*ல் சிறு அலுவலகங்களில் தமிழில் எழுதுவது என்னும் ஆணை பிறந்த பின்பு, படிப்படியாகப் பல அலுவலகங்களுக்குத் தமிழ்த் திட்டம் விரிவாக்கப் பெற்று வந்தது. சித்திரைப் புத்தாண்டு, நாடு விடுதலை பெற்ற நாள், குடியரசு நாள் என்று இப்படியாக, நினைவுக்குரிய நாள்களைத் தேர்ந்தெடுத்து அந்த அந்த நாள் முதலாகச் செயற்படுவதென, இவ்விரிவாக்கங்கள் செய்யப் பெற்று வந்தன.

இங்ஙனமாக, இன்று அரசின் தலைமைச் செயலகமான அமைச்சகத்திலிருந்து (Secretariat) சின்னஞ்சிறு அரசலுவலகம் வரைக்கும், எல்லா அலுவலகங்களிலும் தமிழ் ஆட்சி மொழியாக ஆக்கப்பெற்று விட்டிருக்கிறது. பின்வரும் நான்கு நிலையில், படிப்படியாகத் தமிழ், ஆங்கிலத்தின் இடத்தில் அமர்வது எனத் திட்டமிட்டுச் செயலாக்கப் பெற்றது.

1. பொதுமக்களுக்குத் தமிழில் எழுதுவது.
2. மாவட்ட நிலையில் ஓர் அலுவலகம் மற்ற அலுவலகங்களுக்குத் தமிழில் எழுதுவது.
3. துறைத்தலைமை அலுவலகங்களுக்கு மாவட்ட அலுவலகங்கள் தமிழில் எழுதுவது.
4. வரைவு குறிப்பு முதலிய எல்லாச் செயல்களுக்குமே தமிழினைப் பயன்படுத்துவது.

இந்நான்கு நிலைத் திட்டம் மாநிலத்திலுள்ள எல்லா அலுவலகங்களிலும் சட்டப் படி செயலுக்கு வந்துவிட்டது என்று பெருமைப்பட்டுக் கொள்கிறோம்.

நீதி மன்றங்களிலும் நிகழ்ச்சிகள் தமிழில் நடப்பதற்கு வகை செய்வதற்காகத் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் விரிவாக்கப் பெற்றது. 14–11–1979 முதல், மாவட்ட நிலையில், குற்றவழக்கு நீதி மன்றங்களில் தீர்ப்புகள் தமிழில் வரையப் பெற வேண்டும் என்று அச்சட்டத்தின்கீழ் அறிக்கை வெளியிடப் பெற்றது. உரிமை வழக்கு நீதி மன்றங்களிலும் அவ்வாறே தமிழில் தீர்ப்புகள் வழங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப் பெறுகின்றன. இருவகைக்குமான சட்டங்கள் நூற்றுக்குமேல் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன. இந்தப் பணியைச் சட்ட ஆட்சிமொழி ஆணையம் விரைந்து புரிந்து வருகின்றது. சட்டச் சொல் அகராதிகள் இரண்டு வெளியிடப் பெற்றிருக்கின்றன.

ஆட்சித் தமிழ் கல்தோன்றி மண்தோன்றாக் காலமான அன்று எப்படியிருந்தது, அதுமுதல் எப்படி வளர்ந்து, இடையில் சிறிது காலம் எப்படி மறைந்து, இன்று எப்படி இருக்கின்றது என்பதை ஒருவாறு வரிசைப்படி அறிந்தோம்.

# தமிழ் இலக்கணவரலாற்றில் ஈழத்தவரின் பங்களிப்புகள்

திருமதி கலையரசி சின்னையா எம். ஏ.,
விரிவுரையாளர், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

தமிழ் இலக்கணவரலாற்றில் ஈழத்தவரின் இலக்கணப் பங்களிப்பு நாவலரின் நன்னூல் விருத்திப் பதிப்புடனேயே தொடங்குகின்றது.

நாவலர் நன்னூல்மூலமும் சங்கரநமச்சிவாயப்புலவரால் செய்யப்பட்டு சிவஞானசுவாமிகளால் திருத்தப்பட்ட விருத்தியுரையும் எனவழங்கும் நன்னூல் விருத்தியை 1851-ஆம் ஆண்டிலும், சிவஞானமுனிவரின் இலக்கண விளக்கச் சூருவழி, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, ஸ்ரீசுவாமிநாததேசிகரின் இலக்கணக் கொத்து மூலமுமுரையும் என்பனவற்றை 1866-ஆம் ஆண்டிலும் பரிசோதித்துப் பதிப்பித்துள்ளார். இவற்றுடன் சி. வை. தாமோதரம்பிள்ளையால் 1868-ஆம் ஆண்டிற் பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனுவரையம், சதாசிவம் பிள்ளையால் 1882 இல் பதிப்பிக்கப்பட்ட பிரயோகவிவேகம் மூலமுமு ரையும் என்னும் இலக்கண நூல்களைப் பரிசோதித்துக் கொடுத்தவரும் நாவலரே. நாவலரால் பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்ட இந்த ஆறு இலக்கண நூல்களும் நாவலருக்கு முன்பு எவராலும் பரிசோதித்துப் பதிப்பிக்கபடாதனவாகையால் இவற்றை முதலிற் பரிசோதித்து வெளியிட்ட பெருமை நாவலருக்கேயுரியது. அத்துடன் தமிழ் இலக்கணவரலாற்றிற் பரந்த அளவில் இலக்கணநூற் பதிப்பில் முதல் ஈடுபட்டவரும் நாவலரேயாவர்.

நாவலரின் பதிப்புப்பணியினைத் தொடர்ந்து பலநூல்களை அச்சிற் பதிப் பித்து வெளியிட்டவராகச் சி. வை. தாமோதரம்பிள்ளை விளங்குகின்றார். சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்புத்துறையில் நாவலரை அடியொற்றி இறங்கியபோதும் நாவலரிலும்விட உயர்ந்து நிற்கின்றார் எனலாம். 1868ஆம் ஆண்டிற்கும் 1892-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் ஏட்டில் அழியும் நிலையிலிருந்த தொல்காப்பியம் முழுவதனையும் அச்சிற் பதிப்பித்தவர் சி. வை. தாமோதரம் பிள்ளையே. 1847-ஆம் ஆண்டு தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினி யத்தை மழவை மகாலிங்கஐயர் பதிப்பித்த பின் இருபது ஆண்டுகளுக்குத் தொல்காப்பியப்பதிப்புக்கள் எவையும் வெளிவரவில்லை. இருபது ஆண்டுகள் கடந்த பின் 1868-ஆம் ஆண்டு சி. வை. தாமோதரம்பிள்ளை தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனுவரையத்தை[1] ஆறுமுகநாவலரைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பித்தார். பின் 1885-ம் ஆண்டு தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க் கினியத்தையும்,[2] 1892 இல் தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியத் தையும்[3] பதிப்பித்தார். இதற்கிடையில் 1892 இல் மழவை மகாலிங்க ஐயர்

பதிப்பித்த தொல்காப்பியம் ஏழுத்ததிகாரம் நச்சினர்க்கினியத்தையும்[4] சி. வை. தாமோதரம்பிள்ளை திரும்பவும் பதிப்பித்தார். சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்பித்த தொல்காப்பியப் பதிப்புக்களில், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினர்க்கினியம் தவிர்ந்த ஏனைய மூன்று பதிப்புக்களும் வேறொருவராற் பதிப்பிக்கப்படாத முதற் பதிப்புக்களாகும். இதனாலேதான்

> ''பிறர் பிரசுரித்த நூல்களை மீள அச்சிடுவிக்காத எனக்கு இவ் வெழுத்ததிகாரம் ஒரு விலக்காயிற்று''.[5]

எனத் தாமோதரம்பிள்ளை கூறியுள்ளார். இவ்விதம் தொல்காப்பியம் முழுவதனையும் அச்சிட்டுத் தமிழ் இலக்கணமரபை நிலை நிறுத்திய தாமோதரம்பிள்ளையே வீரசோழியம்[6] இலக்கண விளக்கம்[7] என்னும் நூல்களையும் முதலில் அச்சுவாகனமேற்றினர். இறையனர் களவியல் உரையும்[8] முதலில் தாமோதரம்பிள்ளையினாலேயே அச்சிற்பதிப்பிக்கப்பட்டது. இவற்றைப் பார்க்குமிடத்து சி. வை. தாமோதரம்பிள்ளையின் இலக்கணநூற்பதிப்புகள் தமிழ் இலக்கணத்தையே நிலை நாட்டிய சிறப்பினைப் பெறுகின்றன எனலாம். தாமோதரம்பிள்ளை தொல்காப்பியப் பதிப்பு முயற்சியில் ஈடுபடு முன்னரும், ஈடுபட்ட காலத்திலும் தமிழ் நாட்டறிஞர்களான மழவை மகாலிங்கஐயர், எஸ். சாமுவேற்பிள்ளை,[9] சுப்பராயச் செட்டியார்[10] ஆகிய மூவரும் தொல்காப்பியப் பதிப்பு முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். இக்காலகட்டத்தில் வேறு தமிழ் நாட்டறிஞர்கள் தொல்காப்பியப் பதிப்பு முயற்சியில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை.

நாவலர், சி. வை. தாமோதரம்பிள்ளை இருவரையும் தவிர ஈழத்தறிஞர்கள் வேறு சிலரும் சில இலக்கண நூல்களைப் பதிப்பித்துள்ளனர். வித்துவான் சிவானந்தையர் நாற்கவிராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கம் மூலமும் உரையும்[11] என்பதனையும் வட்டுக்கோட்டை குருமூர்த்தி ஐயர் வீரசோழியம் பெருந்தேவனர் உரையினையும்[12] பதிப்பித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### புதிய இலக்கண நூல்கள்

தமிழ் இலக்கணத்தினை விளக்கும் பழந்தமிழ்பாரம்பரிய இலக்கணநூல்கள் யாவும் செய்யுள் நடையில் சூத்திர உருவிலேயே அமைந்தனவாகும். தொல்காப்பியத்திலிருந்து தொன்னூல் விளக்கம் வரை அத்தன்மையினைக் காணலாம். 19-ம் நூற்றூண்டில் அத்தன்மை மாற்றமுற்று வசனநடையில் தமிழ் இலக்கண நூல்கள் எழுதப்பட்டன. தமிழ் இலக்கணத்தினை வசனத்தில் கூறும் முறையினை முதன் முதலில் 18-ம் நூற்றூண்டில் வாழ்ந்த வீரமாமுனிவர் தொடக்கி வைத்தார். வீரமாமுனிவர் இலத்தீன் மொழியில் எழுதிய 'இலக்கிய வழக்குத் தமிழ் இலக்கணமும் பேச்சு வழக்குத்தமிழ் இலக்கணமும்' என்ற நூலே தமிழ் இலக்கணத்தை வசன நடையில் விளக்கும் நூலாக முதலிலே தோற்றம் பெற்றது. அந்நூல் பின்னர் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. அதற்குப் பின்னர் 19ம் நூற்றூண்டில் தமிழ் இலக்கணத்தை வசனத்தில் விளக்கும் நூல்கள் பல தமிழிலும் ஆங்கிலத்திலும் ஆக்கப்பட்டன. தமிழ் நாட்டில் தமிழ் இலக்கண நூல்கள் வசனத்தில் தோற்றம் பெற்றதற்கான காரணத்தினை மயிலை சீனி வேங்கடசாமி கூறுகிறர்.[13]

ஆங்கிலேயர் தமிழ் கற்பதற்காக வசனத்தில் தமிழ் இலக்கண நூல்கள் தோற்றம் பெற்றது ஒரு புறமிருக்க, மறுபுறம் மேல்நாட்டிலிருந்து வந்த பாதிரி மார்கள் தம் மதத்தைப் பரப்புவதற்காகப் பாடசாலைகளை நிறுவி, வகுப்புகளுக் கேற்ப வசனபாடனூல்களை எழுதிப் படிப்பித்ததைக் கண்ட தமிழ்நாட்டறிஞர்கள், 19ஆம் நூற்றுண்டில் தம் மாணவர்களுக்குத் தமிழ் அறிவை எளிதாக ஊட்ட விரும்பியும் வசனத்தில் தமிழ் இலக்கண நூல்களை எழுதினர்.

ஈழத்தில் எழுந்துள்ள புதிய இலக்கண நூல்களின் வரிசையிற் சிறப்பிடம் பெறுவது நாவலரின் இலக்கணச் சுருக்கமாகும்.[14] நாவலரின் இலக்கணச் சுருக்கம் எழுத்திலக்கணம் என்பவற்றுடன் தொடர் இலக்கணத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்தமைந்துள்ளது. தொடர்மொழியதிகாரம் என்ற அமைப்பு ஆறுமுக நாவலராலேயே செய்யப்பட்டுள்ளது. இச்சிறப்புடன் பழந்தமிழ் இலக்கண நூல்கள் கூறிய சில விடயங்களை விலக்கியும், பழந் தமிழ் இலக்கணநூல்களில் தெளி வாக விளக்கப்படாத சிலவிடயங்களைத் தெளிவாக விளக்கியும் இலக்கணச்சுருக்கத் தினை நாவலர் எழுதியுள்ளார்.

வினையை நாவலர் செய்வினை செயப்பாட்டு வினை என வகைப்படுத்திச் சொல்லியுள்ளார். இத்தன்மை பழந்தமிழ் இலக்கண நூல்களில் இல்லை. தொல் காப்பியரும் நன்னூலாரும் செயப்பாட்டு வினைபற்றிக் கூறவில்லை. வீரசோழியம் கருமகாரகம் என்ற பெயரால் செயப்பாட்டு வினையைக் குறிக்கின்றது. இலக் கணக் கொத்திலும் செயப்பாட்டு வினை என்ற சொல்லாட்சி வந்துள்ளது. பிரயோக விவேக உரையில் செயப்பாட்டுவினை பற்றிக் கூறப்படுகிறது. எனினும் இவையாவும் செயப்பாட்டு வினை பற்றிய தெளிவான விளக்கத்தினைத் தரவில்லை. ஆனுல் நாவலர் வினையைச் செய்வினை செயப்பாட்டு வினை என இரண்டாகப் பிரித்து

''செய்வினையாவது படுவிகுதிபுணராத முதனிலையடியாகத்
தோன்றி எழுவாய்க் கருத்தாவைக் கொண்டுவரும் வினையாம்.

''செயப்பாட்டுவினையாவது படுவிகுதி புணர்ந்த முதனிலையடி
யாகத் தோன்றி வினைமுதல் மூன்றும் வேற்றுமையிலும்
செயப்படுபொருள் எழுவாயினும் வரப்பெறும் வினையாம்''.

எனக் கூறியுள்ளார். எனவே, நாவலர் பழந்தமிழ் இலக்கண நூல்களில் தெளிவாகக் கூறப்படாத சில இலக்கண விடயங்களுக்கு தெளிவாக விளக்கம் தந்துள்ளமையை அறியலாம். இத்தகைய தெளிவான விளக்கத்தினைக் கொடுக்கும் தன்மை விசாகப் பெருமாளையரின் இலக்கணச் சுருக்க வினுவிடையிலும் காணப்படுகின்றது. எனினும் விசாகப்பெருமாளையரின் இலக்கணச் சுருக்கம் வினுவிடையினையும் நாவலரின் இலக் கணச் சுருக்கத்தினையும் ஒப்பிட்டு நோக்கும் இடத்து விசாகப்பெருமாளையரின் விளக்கங்களிலும் பார்க்க நாவலரின் விளக்கங்கள் தெளிவு மிக்கதாக இருப்பதனை அவதானிக்க முடிகின்றது. குற்றியலுகரம், செய்வினை, செயப்பாட்டு வினை என்பன வற்றிற்கு இருவரும் கொடுக்கும் விளக்கங்களை ஒப்புநோக்கிப் பார்க்கின் இக்கருத்து தெளிவடையும். பொதுவாகக் கூறின் விசாகப் பெருமாளையரின் இலக்கணச்

சுருக்க வினுவிடையுடன் ஒப்பிடுமிடத்து நாவலரின் இலக்கணச் சுருக்கம் படிப் பவர்களுக்கு இலகுவான முறையில் சந்தி பிரித்துக் குறியீடுகளை இட்டு இலக்கண விதிகளை எளிதாக விளக்குவதாக உள்ளது எனலாம். நாவலரது இலக்கணச் சுருக்கத்திற்கு முன்பாக வசனநடையில் வெளிவந்த தமிழ் இலக்கண நூல்களில் விசாகப் பெருமாளையரின் இலக்கணச்சுருக்க வினுவிடை சிறந்த இலக்கண நூலாக அமைந்தாலும் நாவலரின் இலக்கணச்சுருக்கம் வெளிவந்த பின்னர் விசாகப் பெருமாளையரின் இலக்கணச் சுருக்க வினுவிடையின் பயன்பாடு குறைந்தது என்றே கொள்ளலாம். விசாகப்பெருமாளையரின் இலக்கணச் சுருக்க வினுவிடையில் அடங்கிய யாப்பிலக்கணம் அணியிலக்கணம் என்பன தனியாகப் பதிப்பிக்கப்பட்டு வழக்கிலிருக்க, ஏனைய பகுதிகள் அவ்வளவு முக்கியத்துவம் பெருமைக்கு நாவலரின் இலக்கணச் சுருக்கமே காரணமாகலாம். நாவலர் இலக்கணச் சுருக்கத்துடன் இலக்கண வினுவிடை இரண்டாம் புத்தகம்[15] என்ற நூலையும் எழுதியுள்ளார். மாணவர்களுக்கு அடிப்படை இலக்கண அறிவை ஊட்டுவதற்காக அந்நூல் எழுதப் பட்டமையால் தேவை நோக்கிப் பல இலக்கண விதிகள் அதில் தவிர்க்கப்பட் டுள்ளன.

தொடர்ந்து நாவலரின் இலக்கணச்சுருக்கத்திற்கு முன்பும் பின்புமாக எழுதப்பட்ட[16], புதிய இலக்கணநூல்களை இப்பகுதியில் நோக்கலாம். அவை யாவற்றையும் காலஒழுங்கின்படி வரிசைப்படுத்தி விளக்குவது விரிவாக அமையும் என்ற காரணத்தினுல் தமிழ் இலக்கணத்தினை எளிமைப்படுத்துவதனை முக்கிய நோக்காகக் கொண்டு பல்வேறு அடிப்படைகளில் எழுந்துள்ள அந்நூல்களுக் கிடையே சில ஒருமைப்பாடுகளைக் கண்டு அவற்றின் அடிப்படையில் புதிய இலக்கண நூல்களை,

1. நன்னூல் அடிப்படையாகக் கொண்டெழுதப்பட்டவை
2. பாடசாலை மாணவர்களின் வகுப்பு நிலைகளுக்கேற்ப எழுதப்பட்டவை
3. வசன இலக்கணத்தினை விளக்குபவை
4. யாப்பு, பாட்டியல் சம்பந்தமானவை
5. ஐந்திலக்கணத்தினை விளக்குபவை
6. வடமொழித் தொடர்பானவை

என வகைப்படுத்தியுள்ளேன்.

### 1. நன்னூலை அடிப்படையாகக் கொண்டெழுந்தவை

சௌந்தரநாயகம் பிள்ளையின் நன்னூற் சுருக்கம் (1862) நன்னூற் சுருக்க அனுபந்தம் இரண்டும் நன்னூலிற் கூறப்பட்டனவற்றைச் சுருக்கிக் கூறுவன வாக அமைந்துள்ளன. இவரின் நன்னூற் சுருக்கச் சார்பு (1866) நன்னூற் சூத்திரங்களின் எண்ணைக் குறிப்பிட்டு பின் அச்சூத்திரத்தில் வரத்தக்க வினுக்களை மட்டுமே கேட்டுச் செல்கிறது. நன்னூற் சுருக்கச்சார்பில் கேட்கப்பட்ட வினுக் களுக்கு ஒரு திறவு கோலாக சௌந்தரநாயகம் பிள்ளையின் இலக்கண விடை விளக்கம் அமைந்துள்ளது.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் எழுத்ததிகாரம் (1904) நன்னூல் இலகுபோதம் சொல்லதிகாரம் (1905) நன்னூல் உதாரண

விளக்கம் (1905) என்பனவும் இப்பிரிவில் அடங்கத்தக்கன. எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் எனப்பிரித்து இலகு போதம் என்றபெயரில் முத்துத்தம்பிப்பிள்ளை எழுதிய இந்நூல்கள் ஒரு நோக்கிற் பார்க்குமிடத்து நன்னூலுக்கு எழுதப்பட்ட உரைகள் என்றே சொல்லத்தக்கனவாயுள்ளன. இந்நூல்களில் நன்னூற் சூத்திரங் களின் பொருளைத் தெளிவாக விளக்கியதுடன் வினுவிடையாக விளக்கமும் அளித் துள்ளார். நன்னூல் உதாரண விளக்கம் பெயர்ச்சொல் வினைச்சொல்வகை யாவற் றிற்கும் தெளிவான உதாரணங்களைக் கொடுக்கின்றது.

சுன்னுகம் அ. குமாரசாமிப்புலவரின் வினைப்பகுபதவிளக்கம் (1913) நன்னூலில் வரும் ''நடவாமடி சீவிடுகூடவேவை. . . .' எனத் தொடங்கும் வினைப் பகுதி பற்றிய சூத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. நன்னூலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட புதிய இலக்கண நூல்களில் வினைப்பகுபத விளக்கம் முக்கியமான சிறப்பான இடத்தை வகிக்கிறது. நன்னூலிற் கூறப்பட்ட 23 வினைப்பகுதிகளுக்குள் அடங்கும் 350க்கு மேற்பட்ட வினைப்பகுதி களை வினைப்பகுபத விளக்கம் எடுத்துக் காட்டியுள்ளது. அத்துடன் அமையாது அவ்வினையடிகளில் இருந்து தொழிற்பெயர் பெயரெச்சம் வினையெச்சம் முற்று என்பன அமையுமாற்றையும் குமாரசாமிப் புலவர் பழந்தமிழ் இலக்கிய உதாரணங் களுடன் விளக்கியுள்ளார். இத்தகைய சிறப்புக்களினுல் குமாரசாமிப் புலவரின் இந்நூல் தமிழ் இலக்கணவரலாற்றில் ஒரு புதுமுயற்சியாக, மொழியியல் அறிஞர் களுக்கு உதவிபுரியும் நூலாக விளங்குகின்றது என்பதில் ஐயமில்லை.

பொன் இராமநாதன் எழுதிய செந்தமிழ் இலக்கணமும் (முதற்பாகம் எழுத்தும் சொல்லும் 1927) நன்னூலின் அடிப்படையில் எழுந்ததாகும். நூல் அமைப்புப்பற்றி முகவுரையிற் கூறும்பொழுது

> ''பவணந்தி முனிவரின் சூத்திரங்களை மேற்கோளாகக் கொண்டு அச் சூத்திரங்களுக்குத் தெளிவுரை எழுதியும்''

எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. பழைய உரையாசிரியர்களின் கருத்துக்களை மறுத்துரைத்துப் புதிய விளக்கங்கள் கொடுக்கும் தன்மையும் ஓரோ விடத்து இந்நூலிற் காணக்கிடக்கின்றது.

## 2. பாடசாலை மாணவர்களின் வகுப்பு நிலைக்கேற்ப எழுதப்பட்டவை

பாடசாலைகளில் இலக்கணக் கல்வி படிப்பிக்கப்பட்ட பொழுது ஒவ்வொரு வகுப்புக்கும் ஏற்றவகையில் இலக்கணநூல்கள் எழுதும் முயற்சியும் தொடங்கியது. இதனுலேதான் வசனநடையில் அமைந்த இலக்கண நூல்கள் பல ஈழத்தில் எழுந்தன. இப்பிரிவில் ஜேம்ஸ் ரி. அப்பாப்பிள்ளை எழுதிய தமிழ்இலக்கணதீபிகை (6ம் தரம் 1891) ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையின் புதிய இலகுபோத இலக்கணம் (4ம் 5ம் தரம்) ஞானச்சகோதரர் சவரிமுத்து எழுதிய இலக்கணதீபம் முதலாம் பாகம் (6ம் தரம்) இலக்கண பாலபோதம் (3ம் 4ம் 5ம் தரம் 1920) மானிப்பாய் ம. ந. ஞானமுத்து எழுதிய இலக்கண சங்கிரகம் முதலாம் பாகம் (6ம் தரம்) இலக்கண சங்கிரகம் இரண்டாம் பாகம் (7ம் தரம் 1908) குமார குலசிங்கம் எழுதிய Hand Book of Tamil Grammar (J.S.C. S.S.C., H.S.C. Civil Service First Examination என்பவற்றிற்குரியது 1929) என்பன அடங்கும்.

இலக்கணதீபிகை எழுத்திலக்கணத்தினை மட்டும் கூறுவது. பல இடங்களில் விரிவாக நச்சினார்க்கினியர் கருத்துக்களை ஆசிரியர் மறுத்துரைக்கின்றார். இடை யெழுத்துக்களுக்கு இனவெழுத்தில்லை. அவற்றை மாத்திரையைக் காரணமாகக் கொண்டு இவ்விரண்டையும் ஓர் இனமாகக் கொள்ளமுடியாது, என்பனவற்றைத் தெளிவாக விளக்கியுள்ளார். மாணிப்பாய் ஞானமுத்து எழுதிய இலக்கணசங் கிரகத்தின் முதற்றொகுதி எழுத்தியலையும் பதவியலையும் உள்ளடக்க, இரண்டாம் தொகுதி பெயரியல் வினையியல் இடையியலை உள்ளடக்கியுள்ளது. பல இலக்கண நூல்களில் இருந்து திரட்டப்பட்ட கருத்துக்கள் இந்நூலில் முறைப்படுத்திக் கூறப் படுகின்றன. இலக்கணதீபம் எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் கூறுகின்றது. இங்கு ஆசிரியர் உதாரணங்களை முற்கூறிப் பின் விதிகளை விளக்குகிறார். அதனை இலக்கிய அனுமானமுறை எனக் குறிப்பிட்டுள்ளார். இந்நூலிற் பழையனவற்றை நீக்கிப் புதியனவற்றை ஏற்கும் பண்பும், உரையாசிரியர்களது கருத்துவேறுபாடு களை ஆராயும் போக்கும் காணப்படுகிறது.

இப்பிரிவில் அடங்கிய நூல்கள் மாணவர்களின் வகுப்புநிலைகளுக்கு ஏற்ப எழுதப்பட்டவையாகையால் பெரும்பாலும் எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக் கணம் கூறுகின்றன. தேவை நோக்கிக் கடின சந்தி விதிகளை நீக்கின தன்மை யினையும் இவற்றிற் காணலாம்.

இவ்வரிசையில் பிறஇனத்தவரும் தமிழ் இலக்கணத்தினைக் கற்கத்தக்க வகையில் எழுதப்பட்ட Barr Kumarakulasinghe யின் Hand book of the Tamil Language என்ற நூலையும், ஆ. முத்துத் தம்பிப்பிள்ளையின் Civilians Tamil Grammar *(1931)* என்ற நூலையும் அடக்கலாம்.

இங்ஙனம் பாடசாலை மாணவர்களைக் கருத்திற் கொண்டு எழுதும் போக்கு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்நாட்டிலும் இருந்தமையை மழவை மகாலிங்க ஐயரின் இலக்கணச் சுருக்கம் முகவுரையால் அறியலாம்.

> ''இச்சிறு புத்தகம் கீழ்வகுப்புச் சிறுவர்களுக்கன்றி மட்ரிக்குலேஷன் முதலிய பரீட்சைகளுக்கு படிக்கும் மேல்வகுப்பு மாணவர்களுக்கும் உதவு வது''

என அவர் கூறியுள்ளார்.

### 3. வசன இலக்கண அமைப்பினை விளக்குபவை

மு. சிதம்பரம்பிள்ளை அல்லது வில்லியம் நெவின்ஸ் எழுதிய தமிழ்வியா கரணம் *(1886)* நல்லூர் த. கைலாசபிள்ளை எழுதிய வசனத்தொடை *(1907)* வசன அமைப்பிற் கவனிக்க வேண்டிய விதிகளைச் சொல்வனவாகையால் இவற்றினை வசன இலக்கண அமைப்பினை விளக்கும் நூல்களாகக் கொள்ளலாம். தொடர்மொழிக்குப் பழந்தமிழ் இலக்கணநூல்கள் முக்கியத்துவம் கொடுக்க வில்லை. ஆறுமுகநாவலரே தொடர்மொழி அதிகாரம் அமைத்துச் சென்றார். வட மொழியில் வசன இலக்கணம் உண்டு. தமிழ் வசன இலக்கணம் கூறவந்த சிதம்பர பிள்ளை வடமொழி இலக்கணத்தின் துணையை நாடியுள்ளார். நூன்முகத்தில் சிதம்பரபிள்ளை,

> ''வசனங்களிற் பிரயோகமாகின்ற சொன்னிலே பொருனிலே வழாய் நிலே அவாய்நிலே என்னும் நால்வகை நிலேயையும், விசேட நோக்கு விசேடணநோக்கு ஆரோபன நோக்கு கன்மநோக்கு என்னும் நால்வகைப் பொருணேக்கையும், பரிதம், கால், சங்கால், கர்த்தம் என்னும் நால் வகைப் பங்கீகரணத்தையும் மாணவர் தெள்ளிதில் உணர்ந்து சாதனே செய்யவேண்டும் எனக் கருதியே தமிழ் வியாகரணத்தின் சப்த இலக்கணங் களுள் ஒன்ருகிய வசன இலக்கணத்தினே முதலிற் பிரசுரஞ் செய்தேன்''

எனக் கூறியுள்ளார். இங்கு வடமொழி இலக்கணத்தினேத் தமிழ் மொழியுடன் கலக்கும் தன்மை காணப்படுகின்றது. கைலாசபிள்ளேயின் வசனத்தொடை வசன மெழுதத் தொடங்குவோர் அசுத்தமான சொற்களே நீக்கவேண்டும் என்று கூறி அவற்றை எடுத்துக் காட்டுவதுடன், வசனத்தில் வரும் உறுப்புக்களேயும் குறியீடு முதலானவற்றையும் இடமறிந்து சொற்களேப் பிரயோகிக்கும் முறையினேயும் கூறிச் செல்கின்றது. இவ்விதம் வசன இலக்கணத்தினேக் கூறும் இவ்விரு நூல்களும் ஈழத்து இலக்கண முயற்சிகளில் முக்கியத்துவம் பெறத் தக்கன. இவ்வரிசையில் நீர்வேலிச் சிவப்பிரகாச பண்டிதரின் வாக்கியநிருபணமும் அடங்கும்.

### 4. யாப்புப் பாட்டியல் சம்பந்தமானவை

சி. வை. தாமோதரம்பிள்ளேயின் கட்டளேக்கலித்துறை என்னும் நூல் செய்யுள் வடிவில் அமைந்து கட்டளேக்கலித்துறை என்ற பாவின் இலக்கணத்தினேக் கூறுகின்றது. உடுவில் ச. ஜகநாதையரின் பாட்டியல்வினுவிடை, இலக்கண விளக்கப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல் என்பனவற்றிற் சூத்திர உருவிற் கூறப்பட்ட விடயங்களே வினுவிடையாக உரைநடையிற் கூறுகின்றது.

### 5. ஐந்திலக்கணத்தினே விளக்குபவை

நீர்வேலிச் சிவப்பிரகாச பண்டிதர் இயற்றிய இயற்றமிழ் இலக்கணசாரம் (1905) இப்பிரிவில் அடங்கும். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்தின் இலக்கணங்களும் இந்நூலிற் சுருக்கமாகக் கூறப்படுகின்றது.

### 6. வடமொழித் தொடர்பானவை

இப்பிரிவில் சங்கரபண்டிதரின் தாதுமாலே, சத்தசங்கிரகம் (1890) என்பன வும் குமாரசாமிப் புலவரின் இலக்கணசந்திரிகையும் (1897) அடங்கும். இவற்றுள் இலக்கணசந்திரிகை முக்கியமான ஒரு நூலாகும். இலக்கணசந்திரிகையின் பெரும் பகுதி தமிழிற் பயின்று வரும் வடசொற்களின் இயல்பினேத் தெளிவாக விதி அமைத்து விளக்குகிறது. வடமொழியிலிருந்து வடசொற்கள் தற்பவமாகவும் தற்சமமாயும் தமிழில் வந்து வழங்குகின்றன. இவற்றுள் தற்பவமாய் வந்து வழங்கும் வடசொற்களுக்கு நன்னூலார் பதவியலில் விதி கூறியுள்ளார். நன்னூ லார் கூறிய விதிகளுக்குள் அடங்காத பல சொற்கள் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் வந்துள்ளமையைக் கண்ட குமாரசாமிப் புலவர் அப்படிப்பட்ட வழக்குகளுக்கும் இலக்கணசந்திரிகையில் விதி கூறிச்செல்கின்ருர். நன்னூலார் பிர யோகவிவேக நூலாசிரியர் ஆகியோரின் கருத்துக்களேயும் சிற்சில இடங்களில் திருத்தியுள்ளார். வடசொற்களேத் தமிழில் எடுத்தாளுவோருக்கும், தமிழிற்

கலந்து காணப்படும் வடசொற்களைப் பிரித்து அறிய முயல்வோருக்கும் இந்நூல் பெரிதும் உதவும். இத்தகைய சிறப்புக்களினால் இந்நூல் புதிய பயனுள்ள முயற்சியாக அமைந்துள்ளது.

இங்கு வகுத்த பிரிவுகளுக்குள் அடங்காத இலக்கணம் என்ற பெயரில் வெளிவந்துள்ள இரு நூல்கள் பற்றியும் இறுதியிற் குறிப்பிட விரும்புகின்றேன். ஆ. வேலுப்பிள்ளையின் தமிழ் வரலாற்றிலக்கணம் (1966) பண்டிதர் வீரகத்தியின் இலக்கணவிளக்கம் (1968) என்பன அவ்விரண்டுமாகும். தமிழ் இலக்கணத்தின் சில முக்கிய பகுதிகள் இவ்விரு நூல்களிலும் நன்கு விளக்கப்படுகின்றன. முன்னைய தில் வரலாற்றுக் கண்ணோட்டமும், மொழியியற் கருத்துக்களும், சாசனவியல் வழக்காறுகளை ஒப்புநோக்கி விளக்கமளிக்கும் தன்மையும் மிகுந்து காணப்படுவத னால் இலக்கணச் சிந்தனைகளும் மொழியியற் பண்பும் வாய்க்கப் பெற்ற நூலாக அது விளங்குகின்றது. வீரகத்தியின் இலக்கணவிளக்கமும் பழையன கழிதலும் புதியன புகுதலும் என்பதற்கேற்ப புதிய வழக்குகள் சிலவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்தும் புது விளக்கங்கள் பலவற்றை நல்கியும் செல்கின்றது.

### உரைகள்

ஈழத்தறிஞர்கள் தமிழ் இலக்கண நூல்களுக்குப் புதிய உரைகளை எழுதி யுள்ளனர். பழைய உரைகளைத் திருத்தியும் விளக்கியும் புதுக்கியுள்ளனர். பழைய உரைகளுக்குத் தெளிவான விளக்கத்தினை அளித்துள்ளனர். எனவே ஈழத்தவரின் உரைமுயற்சியினை இலக்கணத்தினைப் பொறுத்தவரை

1. புதிய உரைகள்
2. பழைய உரைகளுடன் இணைத்து, திருத்தியும் விளக்கியும் எழுதப் பட்ட உரைகள்
3. உரை விளக்கங்கள்

எனப் பிரித்து நோக்கலாம்.

### 1. புதிய உரைகள்

ஈழத்தில் இலக்கணநூல்களுக்குப் புதிய உரைகள் எழுதியவர்களின் வரி சையில் சுன்னாகம் வி. குமாரசாமிப்புலவரின் பங்கு விதந்து கூறத்தக்கது. அவர் யாப்பருங்கலம்[17] வெண்பாப்பாட்டியல்[18] என்பனவற்றிற்குப்'பொழிப்புரை எழுதிய துடன் தண்டியலங்காரம், யாப்பருங்கலக்காரிகை, அகப்பொருள்விளக்கம் என்பன வற்றிற்குப் புதிய உரைகளையும் எழுதியுள்ளார். புலவர் எழுதிய புதிய உரைகள் தமிழ்இலக்கணவரலாற்றில் முக்கிய இடத்தினைப் பெறுவன என்பது பழைய உரைகளுடன் இவரின் உரைகளை ஒப்பிட்டு நோக்குமிடத்துத் தெளிவாகும்.

தண்டியலங்காரத்திற்கு சுப்பிரமணிய தேசிகர் என்பவர் எழுதிய உரையே மிகப் பழைய உரையாகும். இப்பழைய உரையில் உள்ள குறைபாடுகள் சில வற்றைக் கண்ணுற்ற குமாரசாமிப்புலவர் அக்குறைபாடுகளை நிவர்த்தி செய்யும் வகையில் தண்டியலங்காரப் புத்துரையை[19] எழுதினர். பழைய உரையில் காணப் பட்ட குறைகளை நீக்கியதுடன் புதிய உதாரணச்செய்யுட்களைக் காட்டியும், சில வற்றைப் புதிதாகச்சேர்த்தும் இப்புத்துரை அமைந்துள்ளது. பழைய உரையில்

இருந்து வேறுபட்டுத் தாம் செய்த திருத்தங்களை எல்லாம் குமாரசாமிப் புலவர் நூல்முகவுரையில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.[20]

யாப்பருங்கலக்காரிகைக்கு குணசாகரர் உரை எழுதியிருந்தார். குண சாகரர் உரையிலும் அதனை அடியொற்றி எழுந்த ஏனைய காரிகைஉரைகளிலும் பலகுறைபாடுகளைக் குமாரசாமிப்புலவர் அவதானித்தார். பின் அக்குறைபாடு களை நீக்குவதற்காகவே புலவர் யாப்பருங்கலக்காரிகைப்புத்துரையை[21] எழுதினர். இப்புத்துரையில் 'தன்சீர்தன தொன்றிற் தன்தளையாம்', 'எழுவாயெழுத் தொன்றின் மோனை', 'மாஞ்சீர்கலியுட்புகா' என்னும் காரிகைகளுக்கு குமார சாமிப் புலவர் உரையெழுதுமிடத்து பழைய உரைகாரரின் கருத்தினை மறுத்து புதிய விளக்கங்களை அளித்துள்ளார். பழைய உரைகளையும் புலவரின் புத்துரை யினையும் படிக்குமிடத்து புலவரின் விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளத்தக்கனவாகவும், காரிகைமூலத்துடன் ஒத்தமைவனவாகவும் விளங்குகின்றன. இப்படிப் பல காரிகை களில் பழைய உரைகாரர் உரையினை மறுத்துப் புதிய கருத்துக்களை புலவர் கூறியுள்ளார். இவ்விதம் பழைய உரைகளிற் காணப்படும் பிழைகளைத் திருத்திய துடன், கட்டளைக்கலிப்பா கட்டளைக்கலித்துறை ஆகிய பாக்களுக்கும் தெளிவான விளக்கங்களைப் புலவர் இப்புத்துரையில் விளித்துள்ளார். புலவரின் உரைக்கு முன்னர் வெளிவந்த யாப்பருங்கலக் காரிகை குணசாகரர் உரையிலும், ஏனைய உரைகளிலும் 'தூங்கேந்தடுக்கு' என்னும் காரிகை மூலத்தோடு சேர்த்துக் கூறப் படாது உரைக்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. ஆனல் குமாரசாமிப் புலவர் யாப்பருங்கலக்காரிகையில் ஒழிபியற்காரிகைகளின் முதனிணைப்புக்களுணர்த் தும் 'சீரொடுவிட்டிசை' என்னும் காரிகையில், 'சீரியதூங்கேந்தடுக்கு' என வரு வதை எடுத்துக்காட்டி, 'தூங்கேந்தடுக்கு' என்பதும் மூலபாடத்தோடு சேர்ந்த காரிகையே என விளக்கி, அதற்கும் உரையெழுதியுள்ளார்.

இவற்றைவிட அகப்பொருள் விளக்கப்புத்துரையினை[22] குமாரசாமிப் புலவர் தி. த. கனகசுந்தரம்பிள்ளையுடன் சேர்ந்து எழுதியுள்ளார். இவ்விதம் தண்டியலங்காரம், யாப்பருங்கலக்காரிகை, அகப்பொருள் விளக்கம் என்னும் மூன்றனுக்கும் புதிய உரைகளைக் குமாரசாமிப்புலவர் எழுதியமையால் தமிழ் இலக்கண வரலாற்றில் பொருள், யாப்பு, அணி என்னும் மூன்றனுக்கும் புத்துரை எழுதிய பெருமை அவருக்குரியதாகின்றது.

குமாரசாமிப் புலவருக்கு முன்னர் உடுப்பிட்டிச் சிவசம்புப்புலவர் யாப்பருங் கலக்காரிகைக்கும், வல்லை. ச. வயித்தியலிங்கபிள்ளை அகப்பொருள் விளக்கத் திற்கும் உரையெழுதியுள்ளனர் என்பதும் குறிப்பிடவேண்டியது.

## 2. பழைய உரைகளைத் திருத்தியும் விளக்கியும் எழுதப்பட்ட உரைகள்

இப்பகுதியில் நாவலரின் நன்னூற்காண்டிகையுரை, புலோலி வ. குமாரசாமிப் புலவரின் நன்னூற்காண்டிகை விளக்கம் என்னும் இரண்டும் அடங்கும். நாவலரின் நன்னூற்காண்டிகையுரை 1880 இல் வெளிவந்தது. அது 'நன்னூற்காண்டிகை யுரை நல்லூர் ஆறுமுகநாவலர் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கியது' என்ற பெயரில் வழங்குகின்றது. நாவலர் நன்னூலுக்குக் காண்டிகை உரைசெய் தார் என்றும், விசாகப்பெருமாளையர், நன்னூலுக்கு எழுதிய முக்காண்டிகையை

நாவலர் வினுவிடை என்னும் இரண்டனையும் சேர்த்து ஐங்காண்டிகை ஆக்கினுர் என்றும், வழக்கிலிருந்த நன்னூல் உரைகளில் மாணவர்களுக்கு விளங்க வேண்டுவன வற்றை மேலும் விளக்கியும் குறிப்புக்கள் பல கூட்டியும் சொல்லிலக்கண சூசி என்பவற்றைச் சேர்த்தும் நாவலர் நன்னூலுக்குப் புதிய முறையில் காண்டிகையு ரையை எழுதினுர் என்றும் நாவலரின் நன்னூற்காண்டிகையுரையைப்பற்றிச் சில கருத்துக்கள் நிலவுகின்றன. நன்னூலுக்கு மயிலைநாதர் சங்கரநமச்சிவாயர் ஆகி யோர் எழுதிய பழைய உரைகள் உண்டு. சிவஞானமுனிவர் சங்கரநமச்சிவாயரின் உரையுடன் சேர்த்து நன்னூலுக்கு விருத்தியுரை எழுதியுள்ளார். இவற்றின் பின்னர் 19-ம் நூற்ருண்டில் நன்னூலுக்குப் பல உரைகள் எழுதப்பட்டன. நாவலரின் நன்னூற்காண்டிகையுரை வெளிவருமுன்னர் 1847இல் இராமானுசகவிராயரும் 1875இல் விசாகப் பெருமாளையரும்[23] நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதி யுள்ளனர். இவற்றை அடுத்தே நாவலரின் நன்னூற் காண்டிகையுரை வெளி வந்தது.

முன்வந்த உரைகளுடன் நாவலரின் காண்டிகையுரையினை ஒப்பிட்டு நோக்குமிடத்து சிலபுதிய பகுதிகள் நாவலரின் நன்னூல்காண்டிகையுரையில் சேர்க்கப் பட்டுள்ளமையினை அவதானிக்க முடிகின்றது. நாவலர் தமது காண்டிகை யுரையில் சூத்திரங்களுக்கு இடையிடையே பரீக்ஷைவினுக்களை அமைத்துள்ளார். நூலின் முடிவில் அப்பியாசங்கள் பலவற்றை இணைத்துள்ளார். பகுபத முடிவுக்கு உதாரணங்கள் காட்டியுள்ளார். சொல்லிலக்கண சூசி சேர்த்துள்ளார். இறுதியில் உபாதியாயருக்கு அறிவித்தல் மாணுக்கர்களுக்கு அறிவித்தல் என்ற தலைப்புகளில் இலக்கணம் கற்கும் முறை பற்றிச் சில கருத்துக்களை முன் வைத்துள்ளார். இவை யாவும் மாணவர்களுக்காக நாவலர் நன்னூற்காண்டிகையுரையினை எழுதியுள்ளார் என்பதனைத் தெளிவாக விளக்குகின்றன.

மாணவர்கள் இலக்கணம் கற்பதற்காக நன்னூற் காண்டிகையுரையை எழுதிய நாவலர் தமக்கு முன் எழுதப்பட்ட காண்டிகையுரைகளுள் விசாகப் பெருமாளையரின் காண்டிகையுரையினையே சில மாற்றங்கள் செய்து எழுதியுள்ளார் போல் தெரிகின்றது. விசாகப்பெருமாளையரின் நன்னூற்காண்டிகையுரையையும் நாவலரின் நன்னூற்காண்டிகையுரையினையும் ஒருங்கே வைத்துப் பார்க்குமிடத்து நாவலர் விசாகப்பெருமாளையரின் உரையில் மாணவர்களுக்கு விளக்கம் வேண்டிய இடங்களில் உதாரணங்களை விளக்கியும், (உதாரணத்திற்கு 'இடுகுறி காரணப் பெயர் பொதுச்சிறப்பின்' என்னும் சூத்திரத்திற்கு இருவர் எழுதிய உரைகளையும் பார்க்க) சில இடங்களில் விசாகப்பெருமாளையரின் உரையினை தெளிவுநோக்கித் திருத்தியும், (ஆகுபெயர், வேற்றுமை பற்றிய நன்னூற் சூத்திரங்களுக்கு இருவர் எழுதிய உரையினையும் ஒப்பிட்டுப்பார்க்க) சில சூத்திரங்களின் உரைகளிற் சில கருத்துக்களைப் புதிதாகக் கூட்டியும் (ஆகுபெயர் குறிப்புவினை பற்றிய சூத்திரங் களுக்கு இருவரும் எழுதிய உரையினை நோக்குக) எழுதியுள்ளமையை அறியலாம். இவ்விதமாகப் பல இடங்களில் விசாகப் பெருமாளையர் எழுதிய நன்னூற் காண்டிகையுரையினை நாவலர் விளக்கியும் திருத்தியும் கூட்டியும் புதுக்கியபடியால் தான் ''நன்னூற்காண்டிகையுரை நாவலர் விளக்கியும் திருத்தியும் கூட்டியும் புதுக்கியது'' எனக் கூறப்படுகின்றது. இவ்வாறு நாவலரால் எழுதப்பட்ட நன்னூற்

காண்டிகையுரை வழக்கில் உள்ள ஏனைய காண்டிகையுரைகளுடன் பார்க்குமிடத்து தெளிவும் விளக்கமும் கூடியதாக அமைந்துள்ளது என்றும் கூறலாம்.

நாவலரின் நன்னூற்காண்டிகையுரைகளை மேலும் விளக்குவதாகவ. குமார சாமிப்புலவரின் நன் னுற்காண்டிகை விளக்கம் அமைகின்றது. புலோலி குமார சாமிப்புலவர் நாவலரது உரையுடன் புதிய உதாரணங்களை மேலதிகமாகச் சேர்த் தும் சிலவிடங்களில் வடமொழியுடன் ஒப்பிட்டும் விளக்கவுரைகளை எழுதிச்சேர்த் துள்ளார்.

## 3. உரை விளக்கங்கள்

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினர்க்கினியம் *(1937)* தொல்காப் பியம் சொல்லதிகாரம் சேனவரையம் *(1938)* தொல்காப்பியம் பொருளதிகாரம் பின் நான்கியல்களும் பேராசிரியரும் *(1943)* தொல்காப்பியம் பொருள திகாரம் முன் ஐந்தியல்களும் நச்சினர்க்கினியமும் *(1948)* என்பன ஈழகேசரி நா. பொன்னையா அவர்களால் சி. வை. தாமோதரம் பிள்ளை ஞாபகார்த்த வெளியீடுகளாக வெளியிடப்பட்டுள்ளன. இப்பதிப்புக்களை வித்துவான் கணேசையர் பரிசோதித்துப் பதிப்பித்து உரைவிளக்கமும் எழுதியமையால் இவை கணேசையர் பதிப்புகள் என்றே இன்று வழங்குகின்றன. இப்பதிப்புக்களில் கணேசையர் எழுதியுள்ள உரைவிளக்கங்கள் ஒருவகையிற் பார்க்குமிடத்து தொல்காப்பிய உரைகள் எனக் கூறத்தக்கனவாக இருப்பதனுல் இவற்றையும் உரைகள் என்ற பகுதியில் அடக்கியுள்ளேன். சேனவரையர் நச்சினர்க்கினியர் என்போர் எழுதிய உரைகள் சில இடங்களில் தெளிவற்றும், விளங்குவதற்கு முடியாதும் இருந்தநிலையில் கணேசயர் அவ்வுரைகளுக்கு விளக்கம் எழுதினர்.

> ''இவ்விளக்கவுரைக் குறிப்புக்கள் நச்சினர்க்கினியர் உரையில் அதிகம் புலப்படாதவற்றிற்கே எழுதப்பட்டுள்ளன. சில பகுதிகள் விளங்கற் கரியனவாயினும் அவற்றை அவர் உதாரணமாகக் காட்டிய சூத்திரங்களை யும் அவர் உரைப்போக்கையும் நன்குகாட்டி விளக்கியுள்ளார்.''

என எழுத்ததிகாரப் பதிப்பு முகவுரையிற் கணேசையர் கூறியுள்ளார். எழுத்ததி காரப் பதிப்பிலும் விட ஏனைய பதிப்புக்களில் அமைந்துள்ள உரைவிளக்கங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. அவற்றில் உரைப்பகுதிகள் சிலவற்றைத் தெளிவு கருதி பலபிரதிகளோடு ஒப்புநோக்கித் திருத்திய தன்மையினையும் பிரச்சினையான இலக்கணவழக்குகளைத் தெளிவாக விளக்கத் தமது கருத்தினையும் சேர்த்து வெளி யிடும் தன்மையினையும் காணக்கூடியதாக உள்ளது. இத்தகைய உரைவிளக்கங்களை எழுதியதனுல் பழைய உரைகளைத் தெளிவாக அறிய உதவி செய்ததுடன், பின்னர் உரைவிளக்கங்களுடன் கூடிய தொல்காப்பியப் பதிப்புக்கள் தோன்றவும் கணேசை யர் வழிகாட்டியுள்ளார் எனக்கூறலாம்.

## இலக்கணச் சிந்தனைகள்

தமிழ் இலக்கணத்தில் விளக்கம் வேண்டி நின்ற சிலவிடயங்கள் உதாரண மாக ஆகுபெயர், அன்மொழித்தொகை, பிறிதுபிறிதேற்றல் போன்றன பல ஆசிரியர்களினுல் பல்வேறு கோணங்களில் விளக்கப்பட்டுள்ளன. அவற்றையே

இலக்கணச் சிந்தனைகள் என இங்கு குறிப்பிடுகின்றேன். இவ்விலக்கணச்சிந்தனைகள் பெரும்பாலும் பிறர் மதம் மறுக்குமிடத்தில் உதயமாகின்றன. ஈழத்தறிஞர்களான சுன்னுகம் குமாரசாமிப்புலவர், வித்துவான் கணேசையர் ஆகிய இருவரும் பல இலக்கணச் சிந்தனைகளை முன்வைத்து தமிழ்நாட்டறிஞர்களுடன் கருத்துப் பரிமாறி யுள்ளனர்.

குமாரசாமிப்புலவர் செந்தமிழ், உதயபானு, ஸ்ரீலோகரஞ்சனி, ஞான சாகரம் ஆகிய பத்திரிகைகளில் எழுதிய கட்டுரைகள் பல இலக்கணச் சிந்தனை களுக்கு உரியனவாகின்றன. உகரவீற்றுவினைப்பகுதி,[25] வினைப்பகுதிவேறுபடுகை[26] அவையல்கிளவி,[27] திசைச்சொல்,[28] என்மனுர் என்னும் சொன்முடிபு[29] என்னும் கட்டுரைகளை உதாரணமாகக் கூறலாம். என்மனுர் என்றசொன்முடிபு என்ற கட்டுரையில்,

''என்மனுர் என்னும் சொல்லைப் பகுபதமுடிப்புழி என்-ம்-அன்-ஆர் என முடிப்பதே யோக்கியமாகும்''

எனக்கூறிச் சிவஞான முனிவர் மன் எதிர் கால இடைநிலை எனக்கூறியதை மறுத் துத் தக்கதுயாது என ஏனையோர் முடிபுகளையும் காட்டி குமாரசாமிப்புலவர் வினவியுள்ளார்.

வித்துவான் கணேசையர் அரசன் சண்முகனுர் அன்மொழித்தொகை யையும் ஆகுபெயரையும் வேறு என நிறுவ முயன்றபோது அது முன்னையோர் கொள்கைக்கு மாறு எனப் பலவிதங்களிற் சண்முகனுர் கருத்துக்களை மறுத்துத் தமது கருத்தினை நிறுவினுர். கணேசையர் எழுதிய அளபெடை, போலிஎழுத்து, ஆறனுருபு பிறிதுபிறிதேற்றல், இருபெயரொட்டு, ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் முதலான பல கட்டுரைகளிற்[30] சிறந்த சிந்தனைகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. பெரும்பாலும் சிவஞானமுனிவரின் கருத்துக்களை மறுத்து வட மொழியுடன் ஒப்பிட்டு விளக்கி உண்மைக்கருத்தை நிறுவமுயன்றுள்ளமை கற் போரைச் சிந்திக்க வைக்கின்றது.

இவர்களை விட ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, புலோலி இராமநாத பிள்ளை, வித்துவான் வேந்தனுர், பண்டிதர் வீரகத்தி ஆகியோரும் இலக்கணச் சிந்தனைக்குரிய சில விடயங்களை எழுதியுள்ளனர்.

### மொழியியற் கருத்துக்கள்

20ம் நூற்றுண்டில் தமிழ் இலக்கணப் பார்வை மொழியியற் பார்வை யாக மாறத் தொடங்கியது. பலமொழிப்பயிற்சியும், சாசனவியல் ஆராய்ச்சி யும், வெளிநாட்டுக் கல்வித் தொடர்புகளும், வழக்குமொழிப்பயிற்சியும் மொழி யியற் பார்வையினை ஈழத்திலே தோற்றுவித்தன.

ஈழத்திலே பழந்தமிழ் இலக்கணப் பார்வையினை மொழியியற்பார்வை யாக மாற்றியவர்களில் முதல்வர் சுவாமி ஞானப்பிரகாசர் ஆவார். தமிழ் நாட்டில் மாகறல் கார்த்திகேயமுதலியார், டாக்டர் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார் ஆகியோர் தமிழ் இலக்கணத்தை மொழியியல் நோக்கில் அணுகினர்

எனினும் சுவாமி. ஞானப்பிரகாசர் செய்தளவு முயற்சியினை அவர்கள் செய்ய வில்லை என்றே சொல்லலாம். இதனைச் சுவாமி ஞானப்பிரகாசரும் கூறியுள்ளார்.

> ''மொழிநூல்வேறு இலக்கணநூல் வேறு. முன்னையது தனிச் சொற்களின் இயல்பையும் அவை தம்முள் அடையும் மாற்றங்களையும் கூறுவது. பின்னையது சொற்கள் ஒன்றோடொன்று கூடும்பொழுது முன்னிலை இறுதிநிலைகளிற் கொள்ளும் விகாரங்களை எடுத்தோதும். தமிழில் தொல் காப்பியம் முதலாய பல இலக்கணநூல்கள் எழுந்துள்ளன. மொழிநூல் களோ சமீபகாலத்தில் மட்டும் வெளிப்படத்தொடங்கின. மாகறல் கார்த் திகேய முதலியார் இயற்றிய மொழிநூல் (1913) இந்நிலையில் முதற் செய்த பிரயத்தனமாய் பல திருத்தங்களுக்கு இடனாய்க் கிடக்கின்றது. டாக்டர் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார் சென்ற வருடம் வெளியிட்ட தமிழ் மொழி நூல் உண்மையில் இலக்கண ஆராய்ச்சி நூலேயன்றி மொழிநூல் ஆகாது. எனது தமிழ் அமைப்புற்ற வரலாறு, தமிழ்ச்சொற் பிறப்பு ஆராய்ச்சி இரண்டும் யதார்த்தனமான மொழிநூலுக்குரிய அத்திவாரங் களை இட்டன.''.[31]

எனச் சுவாமி ஞானப்பிரகாசர் தாமே தமிழில் மொழியியலுக்கு அத்திவார மிட்டமையைக் கூறிச்சென்றுள்ளார். தமிழ் அமைப்புற்றவரலாறு (1927) தமிழ்ச் சொற்பிறப்பாராய்ச்சி (1932) என்னும் நூல்களிற் காணப்படும் கருத்துக் களையும் அவர் ஆங்கிலத்தில் மொழியியல் சம்பந்தமாக எழுதிய கட்டுரைகளையும் பார்க்குமிடத்து ஈழத்தில் மட்டுமல்ல தமிழ்மொழியிலேயே மொழியியல் துறை முன்னோடியாக அவர் விளங்குவதை அறிந்து கொள்ளலாம். சுவாமி ஞானப் பிரகாசரின் கருத்துக்கள் சில தற்கால மொழியியலாளரின் கருத்துக்களுக்கு ஏற்ற தாக அமையாவிடினும் அவர் தமிழில் மொழியியல் ஆய்வுக்குக் கால்கோள் நாட்டியவர் என்பதனை எவரும் ஏற்காதிருக்க முடியாது.

இப்பிரிவில் சுவாமி விபுலானந்தர், பேராசிரியர் கணபதிப்பிள்ளை ஆகி யோரின் பங்கும் முக்கியம் பெறுகின்றது. விபுலானந்தர் எழுதிய 'சோழ மண்டலத் தமிழும் ஈழமண்டலத்தமிழும்'[33] என்ற கட்டுரையும் தமிழ் ஒலியியல் சம்பந்தமாக ஆங்கிலத்தில் எழுதிய Phonetics of Tamil Language[34] என்ற கட்டுரையும் மொழியியல் சம்பந்தமானவை.

ஈழநாட்டிலே மொழியியல் என்ற நவீன அறிவியல் துறையைப் பரவலாக அறிமுகப்படுத்தியவர் பேராசிரியர் கணபதிப்பிள்ளை அவர்களே. இலண்டன் பல் கலைக்கழகத்திலே பேராசிரியர் ரேணர் என்பவரின் கீழ் மொழியியல் ஆராய்ச்சி செய்து ஏழாம் எட்டாம் நூற்றுண்டுத் தமிழ்ச்சாசனங்களின் வழக்கு மொழியினை ஆராய்ந்து கலாநிதிப்பட்டம் பெற்ற பேராசிரியர் கணபதிப்பிள்ளை மொழியியல் சம்பந்தமான கட்டுரைகள் பலவற்றை எழுதியுள்ளார். அத்துடன் ஈழத்தில் பல்கலைக்கழகநிலையில் மொழியியல் ஆய்வினை வளம்படுத்தியவரும் பேராசிரியர் கணபதிப்பிள்ளையே. மேலும் மொழியியல் நோக்கில் வழக்குத் தமிழுக்குரிய முக்கியத்துவத்தினை உணர்த்தி,

''மக்கள் பற்றி மக்களுக்காக எழுதும் இலக்கியங்களில் மக்கள் மொழி கையாளப்பட வேண்டும்'' என்ற கொள்கையினை நிலைநாட்டியவரும் அவரே.

தொடர்ந்து ஈழத்திலே பேராசிரியர் கணபதிப்பிள்ளையின் மாணவர்கள் மொழியியல் துறையை வளம்படுத்தித் தமிழ் இலக்கணத்தினை மொழியியல் அடிப்படையில் நோக்கி வந்தனர். வருகின்றனர். இவ்வரிசையில் பேராசிரியர் தனஞ்செயராசசிங்கம், பேராசிரியர் வேலுப்பிள்ளை, கலாநிதி சுசீந்திரராசா, கலாநிதி சண்முகதாஸ் ஆகியோரின் பணியினைக் குறிப்பிடலாம்

## தமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடம் பெறுபவை

இவ்வாறு பல்வேறு பிரிவுகளில் ஈழத்தவரின் இலக்கணப்பங்களிப்புக்களை நோக்கியதன் வாயிலாக ஈழத்தவரின் இலக்கணப்பங்களிப்புகள் பற்றி முழுமையாக அறிவதுடன், அப்பங்களிப்புகளிற் சில தமிழ் இலக்கணவரலாற்றில் முக்கிய இடம் பெறுவனவாக விளங்குவதையும் வலியுறுத்தக் கூடியதாக உள்ளது. அவற்றை இங்கு சுருக்கமாகப் பார்ப்போம்.

பழந்தமிழ் இலக்கணநூல்களில் முக்கியமான பல நூல்களை ஈழத்தறிஞர்களான ஆறுமுகநாவலரும் சி. வை. தாமோதரம்பிள்ளையும் பதிப்பித்துள்ளனர். நன்னூல்மூலமும் சிவஞானமுனிவரால் செய்யப்பட்ட விருத்தியுரையும், இலக்கணவிளக்கச்சூறுவளி, தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, இலக்கணக்கொத்து மூலமும் உரையும், பிரயோகவிவேகம் மூலமும் உரையும், தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம், தொல்காப்பியப்பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், வீரசோழியம், இலக்கணவிளக்கம், இறையனார் களவியல்உரை என்பனவற்றை முதன்முதலிற் பரிசோதித்துப் பதிப்பித்து வெளியிட்டவர்கள் ஈழத்தவர்களே. ஆறுமுகநாவலரும் சி. வை. தாமோதரம்பிள்ளையும் இவற்றைப் பதிப்பித்த காலப்பகுதிகளில் தமிழ்நாட்டறிஞர்களான தாண்டவராயமுதலியார், மழவைமகாலிங்க ஐயர், இராமானுச கவிராயர், சுப்பராயச் செட்டியார் ஆகியோர் பெரும்பாலும், ஒவ்வொரு இலக்கண நூல்களை மட்டுமே பதிப்பித்துள்ளனர். இதனால் நாவலரும் தாமோதரம்பிள்ளையும் செய்த இலக்கண நூற்பதிப்புப்பணி தமிழ்நாட்டறிஞர்களின் பதிப்புப்பணியிலும் மேலானதாக, பழந்தமிழ் இலக்கணநூல்கள் பலவற்றை அழியாமற் காத்த சிறப்பினைப் பெறுவதனால், நாவலரதும் தாமோதரம்பிள்ளையதும் இலக்கணநூற்பதிப்புகள் தமிழ் இலக்கணவரலாற்றில் முக்கியமான இடத்தினைப் பெறுகின்றன என வலியுறுத்திக் கூறலாம்.

19-ஆம் நூற்றாண்டில் வசனத்தில் எழுதப்பட்ட தமிழ்இலக்கணநூல்கள் பல தமிழ்நாட்டிலும் ஈழநாட்டிலும் தோற்றம் பெற்றன. அவற்றுள் சில நூல்களே பயனுள்ளனவாகவும் புதிய நோக்குடன் எழுதப்பட்டனவாகவும் காணப்படுகின்றன. இந்நோக்கிற் பார்க்கையில் தமிழ்நாட்டில் எழுதப்பட்ட புதிய இலக்கணநூல்களில் விசாகப்பெருமாளையரின் இலக்கணச்சுருக்கவினாவிடை தமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடம் பெறத்தக்கது எனலாம். அதே போல் ஈழத்தில் எழுதப்பட்ட இலக்கணநூற்களில் நாவலரின் இலக்கணச் சுருக்கம்,

குமாரசாமிப்புலவரின் வினைப்பகுபதவிளக்கம், இலக்கணச்சந்திரிகை என்பனதமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடம் பெறுவனவாகக் காணப்படுகின்றன. விசாகப் பெருமாளையரின் இலக்கணச்சுருக்கவினுவிடை, நாவலரின் இலக்கணச்சுருக்கத்திற்கு பல ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டபடியால் விசாகப்பெருமாளையரின் இலக்கணச் சுருக்கவினுவிடைக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தினை நாவலரின் இலக்கணச் சுருக்கத்திற்குக் கொடுக்கமுடியாதெனினும் நாவலரின் இலக்கணச்சுருக்கம் விசாகப் பெருமாளையரின் இலக்கணச்சுருக்க வினுவிடையிலும் பார்க்க தெளிவும் விளக்கமும் கூடியது என்பதனை மறுப்பது கஷ்டமே. சுன்னுகம் குமாரசாமிப்புலவர் எழுதிய வினைப்பகுபதவிளக்கம் இலக்கணசந்திரிகை என்ற நூல்களின் போக்கில் தமிழ் நாட்டில் நூல்கள் எழுந்ததாகத் தெரியவில்லை. அதனுல் குமாரசாமிப் புலவரின் இவ்விரு நூல்களும் தமிழ் இலக்கணவரலாற்றில் புதிய முயற்சிகளாக முக்கியம் பெறுகின்றன.

இலக்கண உரைகளைப் பொறுத்தளவில் தமிழ்நாட்டில் எழுந்தது போன்று அதிகஉரைகள் ஈழத்தில் எழவில்லை. எனினும் ஈழத்தில் இலக்கண நூல்களுக்கு உரையெழுதியவர்களுள் சிலர் தமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடம் பெறத் தக்க வகையில் பணிபுரிந்துள்ளனர். இவர்களுள் முதல்வராகச் சுன்னுகம் குமார சாமிப் புலவரைக் கூறலாம். தண்டியலங்காரம், யாப்பருங்கலக்காரிகை, அகப் பொருள் விளக்கம் என்பனவற்றிற்குக் குமாரசாமிப்புலவர் எழுதிய உரைகள், தமிழ் நாட்டிலும் ஈழத்திலும் இந்நூல்களுக்கு எழுதப்பட்ட உரைகள் யாவற்றிலும் சிறந்தனவாக விளங்குகின்றன. இதனுலும், பொருள் யாப்பு அணி என்னும் மூன்றினுக்கும் உரையெழுதிய ஒருவர் என்ற காரணத்தினுலும் தமிழ் இலக்கண வரலாற்றில் உரையாசிரியர் வரிசையில் குமாரசாமிப் புலவர் முக்கிய இடம் பெறுகின்ருர். குமாரசாமிப்புலவரின் உரைகளுடன் நாவலரின் நன்னூற் காண்டிகையுரை, புலோலி குமாரசாமிப்புலவரின் நன்னூற்காண்டிகைவிளக்கம், கணேசையரின் தொல்காப்பிய உரைவிளக்கங்கள் என்பனவும் தமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடம் பெறத்தக்கன.

## அடிக்குறிப்புக்கள்

1. தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனுவரையம், ஆறுமுகநாவலர் பரி சோதித்தது. சென்னப்பட்டணம் கலாரத்நாகரவச்சுக்கூடம், விபவ ஞு புரட்டாசி மீ.
2. The Scottish Press, Madras, 1885.
3. விக்டோரியா ஜுபிலி யந்திரசாலை சென்னபட்டணம், நந்தன ஞு புரட்டாசி மீ.
4. வித்தியானுபாலன யந்திரசாலை சென்னபட்டணம், கரவருஷம் வைகாசிமீ
5. சி. வை. தாமோதரம்பிள்ளையால் பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினுர்க்கினியம் பதிப்பின் (1891) பதிப்புரை பக். 3.
6. 1881ல் பதிப்பிக்கப்பட்டது.
7. விரோதி ஞு புரட்டாசி மீ பதிப்பிக்கப்பட்டது. சென்னபட்டணம் வித்தியானுபால யந்திரசாலை.

8. 1883ல் பதிப்பிக்கப்பட்டது.

9. இவர் '1858ல் தாம் பதிப்பித்த தொல்காப்பியநன்னூல் என்ற நூலில் தொல்காப்பியத்திலுள்ள மூன்றதிகாரங்களுக்குமுரியதாக 1583 சூத்திரங்களைத் தந்தார்' எனக் கூறப்படுகிறது. தொல்காப்பியம் எஸ். ராஜம் வெளியீடு பதிப்புரை: 1960.

10. இவர் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணத்தைப் பதிப்பித்துள்ளார். சென்னை அத்திநீயம் அன்ட் டேலிநியூஸ் பிரான்ஸ், விபவ ஹு கார்த்திகை மீ.

11. கொக்குவில் சோதிடப்பிரகாச யந்திரசாலையில் பராபவ (1907) பங்குனியில் பதிப்பிக்கப்பட்டது.

12. யாழ்ப்பாணம் ரென்ரோசப் கத்தோலிக்க பிரஸில் பதிப்பிக்கப்பட்டது. ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

13. பத்தொன்பதாம் நூற்றுண்டுத் தமிழ் இலக்கியம், சாந்தி நூலகம், சென்னை 1962, பக். 130.

14. நாவலரது இலக்கணச் சுருக்கம் 1873ல் வெளிவந்தது. கனகரத்தின உபாத்தியாயர், ஆறுமுகநாவலர் சரித்திரம், நாவலர் நூற்றுண்டு விழாச் சபை மறுபிரசுரம், 1968, பக் 109.

15. சென்னபட்டணம் வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. யுவஹு புரட்டாசி மீ.

16. மழவைமகாலிங்க ஐயர், இலக்கணச்சுருக்கம் 2ம் பதிப்பு கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை, 1894. நூலின் தொடக்கத்தில் உள்ள 'அறிக்கை' என்ற பகுதியில் பார்க்க.

17. யாப்பருங்கலம் மூலமும் குமாரசாமிப்புலவர் செய்த பொழிப்புரையும். யாழ்ப்பாணம் வித்தியாநுபாலனயந்திரசாலை, சார்வரி ஹு ஆனி மீ (1900).

18. வெண்பாப்பாட்டியல் மூலமும் குமாரசாமிப்புலவர் செய்த பொழிப்புரையும். யாழ்ப்பாணம் வித்தியாநுபாலன யந்திரசாலை சார்வரி ஹு ஆனி மீ.

19. தண்டியலங்காரம் மூலமும் உரையும் குமாரசாமிப்புலவர் புதுக்கியது சென்னபட்டணம் வித்தியாநுபாலன யந்திரசாலை சோபகிருதுஹு ஐப்பசி மீ (1903).

20. மேற்படி நூல், உபக்கிரமணிகை பக். 5-6.

21. இந்நூலின் முதற்பதிப்பு 1908ல் வெளிவந்தது.

22. இந்நூலின் முதற்பதிப்பு 1912ல் வெளிவந்தது.

23. A Catalogue of the Tamil Books in the Library of the British Museum 1909. இதில் விசாகப்பெருமாளையரின் நன்னூற்காண்டிகையுரை வெளிவந்த ஆண்டு 1875எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பக். 435.

24. இந்நூல் வண்ணைநகர் மெஸ் க. வேற்பிள்ளையால் விவேகானந்த அச்சு யந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. 1902.

25. செந்தமிழ் விசுவாவசு (1901) கார்க்கிகை.

26. ——————— பரிதாபி (1913) மார்கழி, பக். 41–44.

27. ———————சித்தார்த்தி (1919) வைகாசி, பக். 341–343.

28. செந்தமிழ், தொகுதி 16, பகுதி – 1, பக். 53–54.

29. ஸ்ரீலோக ரஞ்சனி 15–11–88.

30. கணேசையர் எழுதிய இலக்கணக் கட்டுரைகள் அவரின் தொல்காப்பியப் பதிப்புகளில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

31. தமிழ் மொழி ஆராய்ச்சி, பக். 26.

32. (1) "The Origin of Language: A New Theory" Madras Christian College Magazine, Oct, 1929.

(2) "Some Laws of Dravidian Etymology" The Anthropos, Vol. xi, Page, 129–154.

(3) "Radical Relationship Between the Dravidian and Indo-European Languages" New Review, November 1936.

(4) "Root words of the Dravidian Group of Languages" என்பன சுவாமி ஞானப்பிரகாசர் எழுதிய சில கட்டுரைகளாகும்.

33. கலைமகள் 1964.

34. Modern Review, 1940.

# திருக்குறள் உரைகள்

டாக்டர் இரா. சாரங்கபாணி

*தமிழ்த்துறைத் தலைவர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி — 3*

திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பரிதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் என்னும் பதின்மர் உரை கண்டுள்ளனர் என்பர். அவர்களுக்குபின்னும் பல உரைகள் எழுந்துள்ளன. அவற்றுள் கா. சுப்பிரமணிய பிள்ளை, திரு. வி. க., டாக்டர் மு. வ., டாக்டர் சி. இலக்குவனர், புலவர் குழந்தை, நாமக்கல் கவிஞர், தேவநேயப் பாவாணர், டாக்டர் வ. சுப. மாணிக்கனர், தவத்திரு குன்றக்குடி அடிகளார் முதலியோர் எழுதிய உரைகள் குறிப்பிடத்தக்கன. தம் இலக்கியங்களில் குறளை எடுத்தாளும் வகையில் புதிய விளக்கங்கள், சில சமயங்களில் புதிய உரைகள் காணப்படுகின்றன. 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்' (110) என்ற குறளுக்கு விளக்கமாகக் கம்பர் பாடல் அமைந்துள்ளது.

சிதைவகல் காதல் தாயை, தந்தையை, குருவை, தெய்வப்
பதவியந் தணரை, ஆவை, பாலரை, பாவை மாரை,
வதைபுரி குநர்க்கும் உண்டாம் மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனும் ஒழிக்கலா முபாயம் உண்டோ

(கிட்கிந்தைப் படலம். 61)

நால்வர் நான்மணிமாலையில் சிவப்பிரகாச அடிகளார் 'அறத்தாறிது வென வேண்டா' (37) எனும் குறளுக்குப் புத்துரை வழங்குவர்.

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானே டூர்ந்தா னிடையை — மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து (33)

இலக்கண இலக்கிய உரையாசிரியர்கள் குறளை எடுத்தாளும் போதும் சில இடங்களில் புதிய உரை எழுதியுள்ளனர். நன்னூல் விருத்தியுரையில் 'இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்' (308) என்னும் குறளுக்குப் 'பூங்கொத்து தீயிலே தோய்ந்தாற் போல'என்று உரை காணப்படுகிறது. 'சங்குடைந்தனைய வெண் டாமரைத் தடங்கள் போலும் நம்குடி' (547) எனும் சிந்தாமணிப் பாடலுக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதும் போது, 'நத்தம் போற் கேடும்' (235) எனும் குறளை எடுத்துக் காட்டுவர். இதற்குச் 'சங்கு கெட்டாலும் நிறம் கெடாதது போல வித்தகர் வறுமையால் வாடினும் தம் தன்மை கெடார்' எனப் பொருள் கண்டிருப்பர் போல் தோன்றுகிறது. இவ்வாறு இலக்கியங்களானும் உரைகளானும் புது விளக்கங்கள் காணப்படுவதோடு உரைநடை நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்களாலும் புதிய உரைகள் காணப்பெறுகின்றன. 'வள்ளுவர் கண்ட நாடும்

காமமும்', 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' 'வள்ளுவம்' போன்ற குறள் விளக்க நூல்களில் சில உரைவேற்றுமைகள் காண்கின்றன. எல்லிசு போன்ருர்தம் ஆங்கில மொழிபெயர்ப்பினும் சில உரைவேறுபாடுகள் உள்ளன.

திருவள்ளுவர் ஒரு கருத்துப் புலப்படத்தான் ஒரு குறளைப் படைத்திருப்பர். ஆனுல் பல உரைகளையும் தொகுத்துப்பார்க்கும்போது ஒரு குறளுக்கே வேறுபட்ட பல கருத்துக்கள் காண்கின்றன. இவ்வேறுபாடுகளுக்குக் காரணம் என்ன?

1. ஏடெழுதுவோரால் எழுந்த பாடவேறுபாடுகள்.
2. உள்ளபாடம் சிறப்பில்லை எனத்தாமே படைத்துக்கொண்ட புதுப் பாடங்கள்.
3. போதிய இலக்கண இலக்கியப் பயிற்சியில்லாதார் வழுப்பட உரை கண்டமை.
4. குறள் நோக்கிற்குச் சொற்களைப் பிரிக்காமல் தம் நோக்கிற்கியையப் பிரித்தல், சொற்களைக் கண்டபடி கொண்டு கூட்டுதல், குறள் காலச் சொல்லாட்சி உணராமல் இக்காலத்துக்கேற்ப உரைத்தல்.
5. நயமாகவும் இருபொருள் படவும் புதுவதாகவும் உரை கூறவேண்டும் என்ற ஆர்வமும் முனைப்பும்.
6. சமயச்சார்பு, அரசியற் சார்பு, சாதிச் சார்பு முதலியவற்ருல் தம் கொள்கையைச் சார்த்தி எழுதுதல்.

முதலியவற்றைக் காரணமாகக் கூறலாம்.

திருக்குறள் உரைகள் வேறுபடுவதற்குத் தலையாய காரணம் பாடவேறு பாடுகள் எனலாம். இப்பொழுது பெரும்பாலும் பலரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு வழக்கில் உள்ளது பரிமேலழகர் கொண்ட பாடமே. ஆனுல் அவர் கொண்ட பாடங்களிலும் பொருத்தமான சிறந்த பாடங்கள் வேறு உரையாசிரியர் கொண்ட மூலத்தில் அமைந்துள்ளன.

'வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில' (4)

என வகையுளியாகப் பரிமேலழகர் கொண்ட பாடத்தினும்,

'வேண்டுதல் வேண்டாமை இல்லா னடிசேர்ந்தார்
யாண்டு மிடும்பை யிலர்' (4)

என்று மணக்குடவர் கொண்ட பாடம் சிறப்பினது. இது

'மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்'

எனும் அமைப்பை ஒத்திருத்தல் காண்க.

'மோப்பக் குழையும் அனிச்சம்' (90) எனப் பரிமேலழகர் கொண்ட பாடத்தினும், 'மோக்கக்குழையும் அனிச்சம்' எனப் பரிப்பெருமாள் கொண்ட பாடம் 'நோக்கக் குழையும்' என வரும் எதுகைக்கேற்ப இருத்தலின் சிறப்புடையது.

'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானா
மாணா செய்யாமை தலை' (317).

'மனத்தானும்' என்னும் பரிமேலழகர் பாடத்தினும், 'மனத்தானும்' என்னும் மணக்குடவர் பாடம் எதுகை நயமும் பொருட்சிறப்பும் கொண்டுள்ளது. 'இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக' (539) எனும் பரிமேலழகர் பாடத்தினும் 'எண்ணுக' எனும் மணக்குடவர் பாடம் மோனைச்சிறப்புடையது.

'தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்' (256)

இதில் 'கொல்லாது' எனும் பரிமேலழகர் பாடத்தினும் 'கொள்ளாது' எனும் மணக்குடவர் பாடமே தக்கது. பின்வரும் 'ஊன் தருவார் இல்' என்பதில் உள்ள 'தருதல்' என்னும் சொல்லுக்குக் 'கொள்ளாது' என்பதே பொருட்பொருத்தமுற இயைகின்றது.

'கடனறிந்து காலங் கருதி இடனறிந்து
எண்ணி உரைப்பான் தலை' (687)

எனக்கொண்டு மூவகைத் தூதுவர்களுள் இது தலையாயவரைக் குறிக்கும் எனப் பரிமேலழகர் உரைப்பர். 'எண்ணி உரைப்பதாம் தூது' என்பது காளிங்கர் பாடம். இப்பாடம் 'நன்றி பயப்பதாம் தூது' (685), 'தக்கதறிவதாம் தூது' (686) 'உறுதி பயப்பதாம் தூது' (690) எனவரும் குறள்நடைக்கொப்பது.

வ. உ. சிதம்பரம்பிள்ளை ஏடெழுதுவோரால் குறள் சிதைந்துள்ளது எனக் கருதித் தாமே சில புதுப் பாடங்களைப் படைத்துள்ளனர். 'சிறியர் செயற்குரிய செய்கலாதார்' (26) 'உடைமையுள் உண்மை விருந்தோம்பல்' (89) 'மறவற்க மாசறுத்தார் கேண்மை' (106) 'வாயினுற் சுட்டவடு' (126) என்பன அவர் மாற்றிய புதுப்பாடங்கள். ஒவ்வொருவரும் தம் விருப்பத்திற்கு மாற்றின் குறளே மாறிப்போகும் ஆதலால் இம்முறை ஏற்றுக்கொள்ளற்குரியதன்று. ஏட்டில் காணப்பெறும் பழைய பாடங்களே ஏற்றற்குரியன.

உரையாசிரியர்களின் சில உரைப்பகுதிகளைக் காணுங்கால் இப்பொழுதுள்ள மூலத்திற்கு இயையவில்லை. வேறுபாடம் கொண்டிருப்பரோ என எண்ணத் தோன்றுகிறது. 'பாத்தூண் மரீஇயவனை' (227) எனும் பகுதிக்குப் பசித்தவர் உண்டோ என்று பார்த்துக் கூட்டிக் கொண்டுவந்து பசி யாற்றுவானை எனப் பரிதி உரை கூறுவர். இப்பொருட்குப் 'பார்த்தூண்' என்பது பாடமாகலாம். ஆனல் இச்சொல்லாட்சி குறளிடையே காணப்பெருமையானும், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' (322) 'தம்மில் இருந்து தமது பாத்துண்டற்றால்' (1107) 'பழியஞ்சிப் பாத்தூண் உடைத் தாயின்' (44) என்று பகுத்துண்டல் என்னும் பொருளில் வரும் பாத்தூண் என்ற சொல்லே பயின்று வருதலானும் பாத்தூண் என்பதே உரிய பாடம் எனத் தெளியலாம். 'அறி கொன்றறியான் எனினும்' (638) என்பதற்கு எல்லாம் அறிவுள்ள ராசா அறிகிற தறுவாயில் அறியாத போது என்று பரிதி உரை கூறுவதை நோக்கும்போது 'அறிகோன்' அவரது பாடம் என உய்த்துணரலாம். 'அறிகொன்றறியான்' எனும் பிறர் பாடத்தினும் பரிதி

பாடம் விழுமிது. 'தவாவினை தான்வேண்டுமாற்றான் வரும்' (367) என்பதற்குத் தவமான காரியம் தான் நினைத்தபடியே வரும் எனப் பரிதி உரைப்பர். தவமான காரியம் எனும் உரைப்பகுதியை நோக்கின் 'தவவினை' என்பது அவர் பாடமாக லாம்.

'மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்' (445) என்பதற்கு மணக்குட வர், அரசன் தன்னைச் சூழ்ச்சியாற் கொல்ல நினைத்தாரைத் தானும் சூழ்ச்சியாற் கொல்ல வல்லனாதல் என உரைப்பர். சூழ்ச்சியாற் கொல்ல வல்லனாதல் எனும் உரைக்குச் 'சூழ்ந்து கொலல்' எனும் பாடமே பொருந்துவதாகும். ஆனால் அப் பாடம், ஏடுகளில் காணப்பட்டிலது. 'மற்று அதற்கு உப்பாதல் சான்றோர் கடன்' (802) என்பதற்கு அவ்வுரிமையால் செய்யுமதற்கு உடன்படுதல் சான்றோர்க்கு இயல்பு என்பது மணக்குடவர் உரை. உடன்படுதல் என்னும் சொல்லை நோக்குழி 'ஒப்பாதல்' என்பதே பாடம் என்னலாம். 'நகச்செய்து நட்பினுட் சாப்புல்லற் பாற்று' (829) என்பதற்கு 'தாம் புறமே முகத்தான் நகச்செய்தே அவரொடு நட்பினன் உள்ளூறச் செறியும் பகுதியினை உடைத்தன்று' என்று உரை கூறிப்பின், 'உள் புல்லற்பாற்று அன்று-தாம் அவரொடு உள்ளூற அணைக்கும் பகுதியினை உடைத்தன்று' என விளக்கம் தருவர். இவ்விளக்கம் அவர் பாடம் 'நட்பினுட் புல்லற் பாற்றன்று' என உணர்த்துகின்றது. இதுபோல ஒவ்வோர் உரையாசிரி யரின் உரைப்பகுதிகளை நுணுகி ஆராய்ந்தால் இதுகாறும் ஏடுகளில் காணப்படாத சில புதுப் பாடங்களை உய்த்துணர முடிகின்றது. குறளுரைகளின் ஆய்விற்கு மூல பாடங்களின் ஆய்வு இன்றியமையாததாகும்.

**பரிமேலழகர்**

திருக்குறள் உரையாசிரியர் பதின்மருள் இவரே பிந்தியவர் எனக் கருதப் படுகிறது. ஆகவே, முந்தையோர் உரைச் சிறப்பையெல்லாம் கண்டு தம் உரையில் போற்றிக் கொள்ள இவருக்கு வாய்ப்பு இருந்தது. இவர் சில இடங்களில் மணக்குடவர், பரிதி முதலியோர் உரைகளைத் தழுவியும் பொருந்தாக் கருத்துக்களை நல்ல ஏதுக்களான் மறுத்தும் சிறப்பில்லா உரைகளை எடுத்துக் காட்டியும் உரை வரைவர். பரந்த இலக்கண-இலக்கியப் புலமை, திட்பநுட்பம், குறளனைய சுருக்கம், வடமொழிப் புலமை, குறளை முன்பின் தொடர்பு படுத்தி உரை காண்டல், முரணுவது போன்ற குறளை எடுத்துக் காட்டித் தெளிவுபடுத்தல் முதலிய சிறப்புக்களோடு உரையெழுதியவர். சங்கப் பனுவல்களையும் திருக்குறளையும் தம் உரைக்கிடையே நடைப்படுத்தியும் மேற்கோள் காட்டியும் எழுதியது அவர்தம் பரந்த புலமையைக்காட்டும். வேண்டிய இடத்து இலக்கணக் குறிப்பும் காட்டுவர். குறட்கருத்திற்கு வடமொழிக் கருத்தை ஒப்புமை காட்டுவர். சில இடங்களில் வடநூற் கருத்தைப் புகுத்தியும் எழுதியுள்ளார். இவர் எடுத்துக் காட்டிய பிறர் உரைகளுள் சில யாருடையன என அறிய இயலவில்லை. 'இலனென்னும் எவ்வம் உரையாமை' (223) எனும் குறளின் கீழ்க்காட்டும் 'யான் இது பொழுது பொருளு டையேன் அல்லேன் எனக் கரப்பார் சொல்லும் இளிவரவைச் சொல்லாது கொடுத்தல்' என்னும் உரை இன்னரது என்று தெரிந்திலது.

**உவமை**

'கரும்பயிறற்குக் கூலி போல' (399), 'ஏரல் எழுத்துப்போல்' (404) 'குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன் போல' (422) 'புலியை அடைந்த

புல்வாயினம் போன்று' (571) முதலிய உவமைகளைத் தாமே தந்து குறட்கருத்தினை விளக்குவர்.

### வடநூல் ஒப்புமை

'இன்பம் ஒன்றையேநோக்கும் இன்ப நூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் (பிறனில் விழைதல்) பரகீயம் என்று கூறுவராதலின் அறம் பொருள் கண்டார்கண் இல்' என்றார். (141). 'கொடியவரை வடநூலார் ஆததாயிகள் என்ப' (550). 'மெய்யுணர்வாவது பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களான் அன்றி உண்மையான் உணர்தல். இதனை வடநூலார் தத்துவஞானம் என்ப'. இங்ஙனம் குறட் கருத்துக்களுக்கு வடமொழி ஒப்புமை காட்டுவர்.

### வடநூற் சார்பு

உரைப் பாயிரத்தில் 'அறமாவது மனுநீதி முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டமென மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களின் வழுவாதொழுகுதல்' என்று குறிப்பிடுகிறார். 'இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை' (41) இயல்புடைய மூவராவர் பிரம்மச்சாரி, வானபிரத்தன், சந்நியாசி என்ற கருத்துப்படக் குறித்துள்ளார். 'கடாஅ உருவொடு' (585) என்பதற்குப் 'பார்ப்பார் வணிகர் முதலிய ஐயுருத உரு' என விளக்கம் தருவர். 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்பது போன்ற குறள் கொண்டு அறத்திற்கு இலக்கணம் வகுக்காமல் ஒரு குலத்துக்கொரு நீதி கூறும் மனு நீதியை உரைகல்லாகக் கொண்டு அறத்திற்கு இலக்கணம் கூறுதல் பொருந்தாது. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' எனப் பொதுநிலை பேசும் குறளுக்குச் சாதியடிப் படையில் வருணாச்சிரம முறையில் உரை கூறுதலும் சாலாது. 'கடாஅ உருவொடு' எனத் தொடங்கும் குறளுக்கு அடுத்ததில் 'துறந்தார் படிவத்தராகி' எனத் துறவுக் கோலத்தை ஐயுருத வடிவாகச் சுட்டவும், பரிமேலழகர் பார்ப்பாரைக் குறிப்பது ஏலாது. எனினும் ஓரிரு இடங்களில் வடநூன் முறையை மறுத்துக் குறள் அறன் வலியுறுத்துவதைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டத் தவறவில்லை. 'இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க வென்னும் வடநூன் முறைமையை மறுத்து உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்க வென்பதாம்' என்று,

''இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்'' (961)

என்னும் குறளின் சிறப்புரையில் குறிப்பிட்டுள்ளார்.

பரிமேலழகர் இலக்கணங் காட்டி மறுக்கும் சில இடங்கள் பொருத்தமாகப் படவில்லை. காட்டாக ஒன்று காண்போம்.

''நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்'' (334)

இதற்கு மணக்குடவர் 'நாளென்பது இன்பந்தருவதொன்று போலக் காட்டி உயிரை ஈர்வதொரு வாளாம், அதனை அறிவாரைப் பெறின்' என உரைகூறியுள்ளார். 'நாளென்பது' மணக்குடவர்கொண்ட பாடம் என்று வ. உ. சி. தம் அறத்துப்பால் பதிப்பில் குறித்துள்ளார். இவ்வுரையை 'என' என்பது பெயரன்றி இடைச் சொல்லாக லானும் 'ஒன்று போற் காட்டி' என்பதற்கு ஒரு பொருட் சிறப்பின்மை யானும் 'அது' என்பது குற்றியலுகரம் அன்மையானும் அஃது உரையன்மை யறிக' எனப் பரிமேலழகர் மறுப்பர். 'நாளென்பது எனப்பாடமிருத்தலின் நாளென என்று இடைச்சொல்லாகக் கொள்ளத் தேவையில்லை. 'வாளதுணர் வார்ப் பெறின்' என்னும் குறள் நடையை ஒத்த' 'பிறிதொன்றன் புண்ணதுணர் வார்ப் பெறின்' (257) என்னுமிடத்தில் 'அஃது என்னல் வேண்டும் ஆய்தம் விகாரத்தால் தொக்கது' என்று பரிமேலழகர் எழுதியிருப்பக் காண்கிறோம். அது போலவே ஈண்டும் ஆய்தம் தொக்கதாகக் கொள்ளின் அது என்பது குற்றியலுகரம் அன்மையின் பொருந்தாது என்று கூறி மறுக்கத் தேவையில்லை. ஈரும் வாளது உயிர் எனக் கொண்டு உயிரை எழுவாயாகவும், வாளது என்பதனை வினைப் பயநிலையாகவும் கொள்வர் பரிமேலழகர். அதனினும் நாள் எனும் எழுவாய்க்கு வாள் என்பதனைப் பெயர்ப் பயனிலையாகக் கொள்ளும் மணக்குடவர் உரைப் போக்கு இயல்பாக உள்ளது. இதுபோலச் சில இடங்களில் தக்க உரைகளையும் பரிமேலழகர் மறுக்கின்றார்.

### மணக்குடவர்

இவர் அறத்துப் பாலைப் பாயிரம், இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என நான்காகவும், பொருட்பாலை அரசியல், அமைச்சியல், பொருளியல், நட்பியல், துன்பவியல், குடியியல் என ஆறாகவும், காமத்துப் பாலைக் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என நிரலே ஒவ்வொரு திணைக்கும் ஐந்ததிகாரமாக ஐந்தாகவும் பகுத்துள்ளார். இவர் உரை பரிமேலகழர் உரைக்கு அடுத்த சிறப் பினது. பொழிப்புரையாகவும் ஒரோவழி விளக்கமுமாகவும் இவ்வுரை அமைந் துள்ளது. வடமொழிக் கருத்தைப் புகுத்தாது தமிழியல் தழுவிய இயல்பினது. பரிமேலழகர் உரைக்குச் சிறந்த வழிகாட்டி, 'சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்' (412) என்புழி மணக்குடவர் 'பெருக உண்ணின் கேள்வியை விரும்பாது காம நுகர்ச்சியை விரும்பும் ஆதலான் 'சிறிது' என்றார் எனக் கூறியதைத் தழுவிப் பரிமேலழகர் 'நோயும் காமமும் பெருகுதலால் 'சிறிது' என்றார் எனக் கூறுவர்.

'குடம்பை தனித்தொழிய' (338) எனத் தொடங்கும் குறளுக்கு மணக் குடவர் கூறிய பொருத்தமான உரையைப் பரிமேலழகர் மறுப்பர்.

'ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு' (21)

'ஒழுக்கத்தின் பொருட்டு எல்லாப் பொருளையுந் துறந்தாரது பெருமையை நூல் களின் துணிவு விழுப்பத்தின் பொருட்டு வேண்டும் என்றவாறு.

'யாதானுமொரு பொய்யைச் சொல்லும் நூலும் தன்னை எல்லாருங் கொண்டாடுதற்காகத் துறந்தார் பெருமையை நன்கு மதித்துக் கூறும். அதனாலே யானும் சொல்கின்றேன் என்பது' என மணக்குடவர் கூறுவர். பிறர் மதிப்பதற்

காகப் பொய்ம் மொழியாய்த் திருவள்ளுவரும் துறவறத்தைப் போற்றுகின்ருர் எனப் பொருள்படுதலின் இவ்வுரை பொருந்தாது.

'இன்மையுள் இன்மை விருந்தொரால்' (153) என்பதற்கு 'வலியின்மையுள் வைத்து வலியின்மை யாவது புதுமையை நீக்காமை. புதுமை என்றது கேட்டறி யாதது; நீக்காமை — பொறுமை' என்று கூறுவர். இவ்வுரையும் பொருத்த மில்லை. ஆதலால் உரைகளின் குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல் வேண்டும்.

பரிப்பெருமாள்

இவர் மணக்குடவரைப் பின்பற்றிச் சிலவிடங்களில் விளக்கமாகத் தம் உரையை எழுதுவர். சிலவிடங்களில் மணக்குடவரினும் வேறுபாடம் கொள்வர். 'கணங்குழை மாதர் கொல்' (1081) 'காணுது இமைவில கண்' (1178) என்பன சான்றுகள். தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாடுகளைக் 'காதற் சிறப்புரைத்தல்' அதிகாரத்தில் பொருத்திக் காட்டுவர்.

கண்ணுள்ளிற் போகார் (1126) — எதிர்பெய்து பரிதல் என்னும் மெய்ப் பாடு
கண்ணுள்ளார் காதலவராக (1127) — இன்பத்தை வெறுத்தல்
நெஞ்சத்தார் காதலவராக (1128) — பசியடரநிற்றல்
இமைப்பிற் கரப்பாக்கறிவல் (1129) — கண்துயில் மறுத்தல்

இவர் குறளுக்கு வடநூன் மரபை ஒட்டிச் சில மதங்களைக் காட்டுகின்ருர். அரிய கற்ருசற்ருர் கண்ணும் (503) என்னும் குறளில் 'கல்வியுடையார் உள்ளும் புறம்பும் தூயாரைத் தேறலாம் என்பது துரோணுசாரியார் மதம். அவ்வளவில் தேறலாகாது என்று இது கூறப்பட்டது. இவ்வாறே 504 இல் கௌடில்யர் மதம் 505 இல் நாரதர் மதம் 506இல் மகேச்சுரர்மதம் 507இல் பராசர் மதம் 508 இல் வியாதன் மதம் 510இல் உத்தரவாசாரியர் மதம் என்று குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்ருல் அவர்தம் வடமொழிப்புலமை அறியப்படும்.

'செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து' (431)

இக்குறளுக்கு விளக்கமாகப் 'பிறர்மனை நயத்தலாற் கெட்டான் இராவணன் வெகுளியாற் கெட்டான் சனமேசயன்; நுகர்ச்சியாற் கெட்டான் சச்சந்தன்' என்பர். இவ்வாறு கதைகூறி விளக்கல் பரிப்பெருமாள் இயல்பு என்பது 432, 437, 439 குறள்களாலும் பெறப்படும்.

பரிதி: வள்ளுவரின் சமயப் பொதுமையைக் கருதாது சைவம் சார்ந்து உரையெழுதுகிருர். 'நற்ருள்' (2) என்பதற்குச் சிவன் ஸ்ரீபாதம் என்றும், 'அறவாழி அந்தணன்' (8) என்பதற்குத் 'தன்மம்' என்னும் சமுத்திரமாக உள்ள பரமேசுவரன் என்னும் உரை எழுதுவர். இவரது நடை பேச்சு நடையாக உள்ளது. வடசொல்லாட்சி மிகுதி. உரைக்கும், மூலத்திற்கும் சில இடங்களில் தொடர்பு காணப்பெறவில்லை. சில குறள்களுக்குக் குறளினும் சுருக்கமாக உரை அமைகிறது (336, 339, 1195)

''கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள'' (1101)

என்ற குறளுக்குப் பரிதியார் 'விளக்குக் கண்டு அழிந்த விட்டிலும், யாழ் கேட்டு அழிந்த அசுணமும், இரை கண்டு அழிந்த மீனும் செண்பக மணம் உண்டு அழிந்த வண்டும், மெய்யின்பம் கண்டு அழிந்த யானையும் ஒவ்வொரு புலனுல் அழிந்தன. ஐம்புலனும் ஓரிடத்திலே கூடியதால் என் செய்யாது'' என்று பொருள் உரைக்கின்ருர். இது புணர்ச்சி மகிழ்தல் எனும் அதிகாரத்துக்குப் பொருந்தாது.

'பருவந்து பாழ்படுதல் இன்று' (83) என்பதற்குச் சரீரத்தில் ஒரு பருவந்து விதனமான காலத்துச் சீப்பறிய விதனமாறுவது போல வருவிருந்து உபசரிக்கில் வினையறும்' என்று உரை எழுதியிருப்பது பொருத்தமற்றது.

''இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்'' (822)

என்பதற்கு 'இனம் போலக் கூடியிருக்கையிலே மனம் பகையாயினுர் உறவு இருமனப் பெண்டிர் போலும்' என்றவாறு என்று கூறுகிருர். மகளிர் என்பதற்கு ஈண்டுப் பொதுமகளிரைக் கருதி எழுதுவது பொருத்தமாக உள்ளது. இவர் உரையை ஆராயின் பல புதுப்பாடங்களைக் காணலாம்.

**காளிங்கர்**

இவர் உரை பிறமொழி கலவாத நடைச்சிறப்பு உடையது. இது பொதுவாக வினுவிடை-முறையில் அமைந்துள்ளது. சில அதிகாரப்பெயர்கள் இவர் உரையில் வேறுபடுகின்றன. 'கண்விதுப்பழிதல்' என்பது 'கண்விதுப்பு அழித்தல்' என்றும் 'அவர்வயின் விதும்பல்' என்பது 'அவர்வயின் விரும்பல்' என்றும் கொள்ளப்படுகின்றன. 'நினைந்தவர் புலம்பல்' என்பதில் உள்ள 'விடாஅது சென்ருரை' (1210) என்ற குறள் அவர் வயின் விதும்பலில் ஆருவது குறளாக உள்ளது. காளிங்கர் உரையால் சில பாட வேறுபாடுகள் புலப்படுகின்றன. ஒருவந்தம் (593) பெருஞ்செல்வம் என்றும் பேடிகைவாள் (614) உறையகத்து இருந்த வாள் என்றும் மட்பகை (883) வெள்ளம் என்றும் பொருள் கூறுவர், 'மெய் வேல் பறியா நகும்' (774) 'நகும் என்றது வெறுங்கையாளனை எறிந்தவன் என்ன வீரனே என்று ஒரு நகையும் வெறுங்கைக்கு அம்மா ஒரு வேல் வந்தது என்று நகையும் என அறிக' என்று நகுதற் காரணம் காட்டுவர். இங்ஙனம் நல்ல விளக்கங்களைச் சில குறளிடத்துக் காணலாம்.

பின்வந்த உரைகளுள் ஏற்றுக் கொள்ளத்தக்க கருத்துக்களும் உள்ளன. 'தீயவே தீய பயத்தலால்' (202) எனப் பாடங்கொண்டு அக் குறளுக்கு யாக முதலியவற்றில் நன்மையுங் கொடுக்கும் தீயைப் போலல்லாமல் ஒரு காலத்திலும் நன்மையைக் கொடாமல் எந்தக் காலத்தும் எந்த இடத்தும் தீமையே தீவினை கொடுத்தலால் தீக்குப் பயப்படுதலினும் அதிகமாகத் தீவினைக்குப் பயப்பட வேண்டும் எனஉரைப்பர் அரசஞ் சண்முகனர்.

'ஒன்ருனும் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்
நன்ருகா தாகி விடும்' (128)

(பேசுகின்ற பேச்சுக்களில்) ஒரு சொல்லாவது கெட்ட சொல்லின் பொருள் தரக்கூடிய பயன் உண்டாகுமானல் அடக்கம் என்பது கெட்டுப் போகும் என அடக்க முடைமை எனும் அதிகாரப் பொருத்தத்துடன் கூறிய நாமக்கல் கவிஞர் பொருள் சிறப்புடையது. ‘அறத்தாறிதுவென வேண்டா’ (37) என்னும் குறளுக்குத் திரு வி. க. அறநெறி பல்லக்கைத் தாங்கலில் சுருங்கியும் அதில் செல்கையில் பெருகியும் நிற்பதோ? இல்லை. பல்லக்கைச் சுமந்து செல்வோரும் அறநெறி நின்ருல் அறவோர் ஆகலாம். பல்லக்கில் ஊர்ந்து செல்வோரும் அறநெறி நின்ருல் அறவோர் ஆகலாம். அறவோராகும் வாய்ப்பு இருவர்க்கும் உண்டு. ஒருவர்க்கு மட்டும் வாய்ப்பில்லை. அறத்தாறு ஒரு சாரார் பக்கம் சாயும் தன்மை யுடையதன்று என விளக்குவர்.

இயல்புடைய மூவர் (41) — அடுத்த குறள் கூறும் துறந்தார் துவ்வாதவர் இறந்தார் என்னும் மூவர் என்பர் புலவர் குழந்தை.

> ‘‘அறத்திற்கே அன்பு சார்பென்ப வறியார்
> மறத்திற்கு மஃதே துணை’’ (76)

‘அறியாதவர் அறத்திற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று கூறுவர். ஆராய்ந்து பார்த்தால் வீரத்திற்கும் அதுவே துணையாக நிற்கின்றது’ என மு. வ. வும், வறியார் மறத்திற்கும் அஃதே துணை எனக்கொண்டு ‘வறியவர்கள் தங்குடும்பக் காப்பின் பொருட்டுச் செய்யும் தீச் செயலுக்கும் அன்பே அடிப்படை’ என வ. சுப. மாணிக்கனரும் கூறுவர். காமத்துப் பாலில் பரத்தையர் பிரிவைச் சுட்டாமலே திருவள்ளுவர் பாடியிருப்பவும் அதனை இயைத்து உரையாசிரியர்கள் உரைகூறுவது பொருந்தாது என்பர் தெ. பொ. மீ. இங்ஙனம் பின்வந்த நூல்களிலும் அரிய செய்திகள் உள்ளன. ஆதலால் ஒவ்வோர் உரையையும் நன்கு பார்த்துக் குற்றம் நீக்கிக் குணங் கொள்ளுதல் பயில்வார் கடனுகுக!

# தமிழக ஆரம்பப் பள்ளிகளில் சத்துணவு, ஆரோக்கியக் கல்வி

டாக்டர் திருமதி இராஜம்மாள் பா. தேவதாஸ்
இயக்குநர், திரு. அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரி, கோயமுத்தூர்

அன்பின் கனிகள், தாய்மையின் அரும்புகள், மானிடப் பரம்பரையை வளர்க்கும் பச்சிளம் பாலகர்கள், புன்னகைக் கொழுந்துகள், வசந்தத்தின் மலர்கள், மழலைச் செல்வங்கள், உயிரின் ஊன்றுகோல்கள், இசையின் சுரங்கள், இன்பத்தின் ஊற்றுகள் என்று பலவாறு பெருமையுடன் பாராட்டப் படும் குழந்தைகள் நலம், அவர்களின் உடல் நலம், மன நலம் என்ற இரண்டிலும் அடங்கியுள்ளது. அகில உலக குழந்தைகள் நல நிறுவனம் குழந்தைகளுக்கான பத்து உரிமைகளை எடுத்துக் காட்டியிருக்கிறது. ஆரோக்கியம் நிறைந்த உடல், நல்ல உணவு, உடை, வீடு, விளையாட்டு வசதி, கல்வி வசதி ஆகியவை உடல் நலத்திற்கும், அன்பு, இரக்கம், நம்பிக்கை ஆகிய நல்லுணர்ச்சிகள் மன நலத் திற்கும் தேவையானவை, குழந்தைகள் நலம் சிறந்த முறையில் பேணப்பட்டால், ஏவா மக்கள் மூவா முருந்து, ''சான்றோரென்கை, ஈன்றோர்க்கழகு'' என்ற நிலையில் குழந்தைகள் விளங்குவர்.

இந்திய நாட்டில் சுமார் 25 கோடிக் குழந்தைகள் உள்ளனர். சத்துணவு இன்மையால், ஆயிரமாயிரம் குழந்தைகள் நாளும் அல்லலுறுகின்றனர். நாள் ஒன்றுக்கு மருத்துவ மனையில் சேர்க்கப்படும் 250 லட்சம் குழந்தைகளில் 50 லட்சம் குழந்தைகள் சத்துணவுக் குறைவால் பாதிக்கப்பட்டவர்கள். அவர்களில் 3,500 பேர் ஒவ்வொரு நாளும் மரணமடைகிறுர்கள். இந்தத் துயர நிலையை மாற்றி எதிர்கால மக்கள் வளமுடன் வாழச் சத்துணவு, ஆரோக்கியக் கல்வி பெற்றோர்க்கும், குழந்தைகளுக்கும் கொடுக்க வேண்டிய அவசியத்தை இந்தப் புள்ளிவிபரம் வலியுறுத்துகின்றது.

தமிழகத்திலுள்ள ஆரம்பப் பள்ளிகளில் சத்துணவுக் கல்வி கொடுக்கக் கூடிய ஒரு திட்டத்தை உருவாக்கித் தமிழக அரசிற்கு அனுப்பினேம். தமிழக அரசு அதனை மத்திய அரசிற்குப் பரிந்துரை செய்தது. மத்திய அரசு இத்திட் டத்தின் சிறப்பினை உணர்ந்து நாடெங்கும் நடைபெற அகில இந்திய கல்விப்பயிற்சி ஆராய்ச்சிக் கழகத்தின் வாயிலாக அகில உலக குழந்தைகள் நல நிறுவனத்தின் நிதி உதவியுடன் நாட்டில் ஐந்து மையங்களை நிறுவியது. எல்லா மையங் களுக்கும் வழிகாட்டும் மையமாகவும் தென் மாநிலங்களின் முக்கிய மையமாகவும் திரு அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரி செயல்பட்டு வருகிறது.

**பணியாற்றிய முறைகள்**

முதன் முதலில் இத்திட்டத்தினைச் செயல்படுத்த கோவை மாவட்டத்தி லுள்ள பத்து பஞ்சாயத்து ஒன்றியங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. இந்த பஞ்சாயத்து ஒன்றியங்களைச் சார்ந்த 660 கிராமப் பள்ளிகளில் பணிபுரியும் 3600 ஆசிரியர்களுக்கு 5 நாட்களுக்கு சத்துணவு ஆரோக்கியக் கல்வி அளிக்கும் முறைகளைப் பற்றிப் பயிற்சியளிக்கப்பட்டது. ஆசிரியர்களின் உதவியுடன் அந்தந்த கிராமங்களில் உள்ள உணவு நிலைமை, பழக்க வழக்கங்கள் குறித்து 2700 வீடுகளில் புள்ளி விபரம் எடுக்கப்பட்டது. இதனை அடிப்படையாகக் கொண்டு சத்துணவு ஆரோக்கியக் கல்வியை குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்க தமிழில் ஒரு வழிகாட்டி நூலும் தயாரிக்கப்பட்டது.

ஒவ்வொரு பள்ளிக்கும் கொடுத்துள்ள பலவகை சுவரொட்டிகளின் உதவி யுடனும் தாங்களே தயாரித்த பல்வேறு உபகரணங்களின் உதவியுடனும், பயிற்சி பெற்ற ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் மிகச் சிறந்த முறையில் சத்துணவு ஆரோக்கிய கருத்துக்களை எல்லாப் பாடங்களிலும் தகுந்த இடங்களில் இணைத்துக் கற்றுக் கொடுத்தனர். வில்லுப்பாட்டு, பொம்மலாட்டம், கும்மி, கோலாட்டம், மற்றும் உள்ள பல்வேறு வகையான கிராமிய நடனங்கள் வாயிலாக சத்துணவுக் கருத்துக் களை ஆசிரியர்கள் தம் பள்ளிக் குழந்தைகளுக்கும் கிராமத்து மக்களுக்கும் எடுத் துரைத்தனர். இவற்றில் அதியமான் ஒளவைக்கு அளித்த நெல்லிக்கனி, ஒளவை பாரிமகளிர் கீரையைச் சமைத்ததைப் பாராட்டியது ஆகிய குறிப்புகளைத் தமிழ்ப் பாடத்தின் மூலமாகக் கற்பிக்கும் பொழுது சத்துணவைப்பற்றியும் பொருத்திக் காட்ட முடித்தது.

**பணியினால் கிடைத்த பயன்கள்**

சத்துணவு ஆரோக்கியக் கருத்துக்களைக் குழந்தைகளுக்குக் கொடுத்ததின் பயன் பல விதங்களில் வெளிப்பட்டன. முதலில் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் தம் சொந்த வாழ்க்கையில் அவற்றைக் கடைப்பிடித்தனர். இதன் காரணமாக அவர்களின் உணவுப் பழக்க வழக்கங்களில் நல்ல மாற்றம் காணப்பட்டது. எளிமை யான உணவு என்று ஒதுக்கப்படும் சத்து நிறைந்த தானியங்களான ராகி, சோளம் முதலியவற்றையும், பச்சைக் கீரைகளையும், காய்கறிகளையும் தம் தினசரி உணவில் அடிக்கடி சேர்த்துக் கொண்டனர். இது தவிர தமிழகப் பள்ளியில் சிறப்புடன் நடந்து வரும் மதிய உணவுத் திட்டத்தில் கீரைகளையும், எளிதில் கிடைக்கும் சத்து நிறைந்த காய்களையும் சேர்த்தனர். அத்துடன் உணவு சமைக்கும் முறைகளிலும் சிறந்த முறைகளைக் கடைப்பிடித்தனர்.

ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளின் வயதிற்கேற்ப கருத்துக்களைக் கற்றுக் கொடுத்ததின் பயனாகக் குழந்தைகளிடையே கருத்துத் தெளிவு காணப்பட்டது. அத்துடன் நம் நாட்டில் மிகுதியாகக் காணப்படும் சத்துணவுக் குறை நோய் களான வாய்ப்புண், ஈறுகளின் இரத்தம் வடிதல், மாலைக்கண், இரத்த சோகை முதலியவற்றின் அறிகுறிகளைக் கண்டறிந்த ஆசிரியர்களின் அறிவுரையினால் தகுந்த உணவுகளை உண்டதினால் குழந்தைகளிடையே குறை நோய்களின் அறிகுறிகள் மறைந்தன. குழந்தைகளின் ஆரோக்கியத்தில் முன்னேற்றம் காணப்

பட்டது. குழந்தைகளின் சுகாதாரப் பழக்க வழக்கங்களிலும் நல்ல முன்னேற்றம் ஏற்படுத்தப்பட்டது.

**இத்திட்டம் விரிவு படுத்தப்பட்ட முறை**

கோவை மாவட்டத்தில் செயல்படுத்திய இத்திட்டத்தை பல்வேறு நிலைகளில் வந்து கண்டு சென்ற தமிழக அரசு கல்வித்துறை அதிகாரிகள், அகில இந்திய கல்வி, ஆராய்ச்சி பயிற்சிக்கழக அதிகாரிகள், அகில உலக குழந்தைகள் நல நிறுவனத்தைச் சேர்ந்த அலுவலர்கள், ஆகியோர் இத்திட்டத்தின் பயன்களை உணர்ந்து இதனைத் தமிழகத்திலுள்ள மாறுபட்ட மூன்று மாவட்டங்களில் செயல் படுத்துவதற்குக் கல்லூரிக்கு வாய்ப்பளித்தனர்.

குழந்தைகள் நலமுடன் வாழத் தேவையான கருத்துக்களைத் தமிழகத்தில் உள்ள சில மாவட்டங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பள்ளிக் குழந்தைகள் மட்டுமே பெற்றுள்ளனர். இதனை குழந்தைச் செல்வங்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் புன்னகைத்து நல்ல ஆரோக்கியத்துடன் வாழ வகை செய்யும் வகையில் தமிழகத்திலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் இத்திட்டத்தினை செயல்படுத்த வேண்டும். தமிழக அரசு தமிழகக் குழந்தைகளின் நலனில் நாட்டம் கொண்டுள்ள நல் அரசு, இதனை விரைவில் எல்லாப் பள்ளிகளுக்கும் விரிவுபடுத்துவார்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# சுற்றுச் சூழல் அறிவியல்

பி. சிவலிங்கம்
துணைவேந்தர், பேரறிஞர் அண்ணா தொழில்நுட்பப் பல்கலைக்கழகம், சென்னை

நம்மைச் சுற்றிலும், மேலும், கீழும், முன்னும், புறமும் எல்லாத் திக்குகளிலும் கண்களுக்குப் புலனாவதும், ஆகாததுமாக உயிர் உள்ளனவும் அல்லனவுமான எல்லாவற்றையும், அணுவிலிருந்து அண்டம் வரையான பற்பலவற்றையும் தன்னுட்கொண்டது சுற்றுச் சூழல். அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியுள்ளது என்ற சொற்றொடர் இதற்கு மிகவும் பொருந்தும். மனித இனம், மிருக இனம், தாவர இனம் மற்றும் கண்களுக்குப் புலப்படாத மிகச்சிறிய உயிரணுக்களும் இதில் அடங்கும். மண், நீர், சக்தி, மகாசமுத்திரங்கள், காற்று ஆகியவையும் மண்ணிலே மண்டிக் கிடக்கும் பல வகைக் கனிமங்களும் தாதுக்களும் இதில் அடங்கும், மண்ணிலே கிடைக்கும் எரிவள எண்ணெய் மண்ணடி நீர் ஆகியவையும் நமது சுற்றுக் சூழலின் ஒரு பகுதியே. நமது வாழ்வும் வளமும் நமது சுற்றுச் சூழலால் நமக்கு கிடைத்தவை யாகும். நமது எல்லாவிதமான தேவைகளுக்கும் சுற்றுச் சூழலே இருப்பிட மாகும். உயிரினங்களின் பிறப்பிடமும் அதுவே. எனவே நமது வாழ்வில் சுற்றுச் சூழலுக்கு ஒரு சிறப்பிடம் இருப்பது புலனாகிறது. இவ்வாறு நமது வாழ்வையே உருவாக்கி நம்மை வாழவைக்கும் நமது சுற்றுச் சூழலைப் பற்றி நம்மில் பலர் இதுவரை சிந்தித்ததே இல்லை. ஆனால் இப்பொழுது அதைப்பற்றி சிந்திக்க வேண்டிய அவசியம் வந்துவிட்டது!

உலகில் பெரும்பாலான நாடுகளில் இருக்கும் எல்லா விளை நிலங்களும் பயன்படுத்தப்பட்டு விட்டன. ஆகையால் காடுகள் அழிக்கப்பட்டு கழனிகள் ஆகின்றன. காடுகளை அழிப்பதால் கடும் சுற்றுச்சூழல் பிரச்சினைகள் தோன்றுகின்றன. மண் அரிப்பு வெட்டப்பட்டு விடுவதால் பலவிதமான பறவை இனங்களும், தாவர இனங்களும் புகலிடமின்றி மாய்ந்து விடுகின்றன, அல்லது வேறு இடங்களுக்குக் குடி பெயர்ந்து விடுகின்றன. இதனால் அந்தப்பகுதியில் சுற்றுச் சூழல் சமநிலை பாதிக்கப்பட்டுவிடுகிறது.

மக்களின் அதிக தேவைகளைப் பூர்த்தி செய்ய பல பெரும் தொழிற்சாலைகள் தோன்ற வேண்டியுள்ளன. பெரும்பான்மையான தொழிற்சாலைகளும் பல வசதிகள் காரணமாக நகர்ப்புறங்களிலேயே அமைக்கப்படுகின்றன. நாட்டுப் புறங்களில் தொழிற்சாலை தோன்றினும் நாளடைவில் அங்கு ஒரு நகரமே உருவாகி வேலை வாய்ப்புக்கள் காரணமாக அதிக மக்களை ஈர்க்கின்றது. எனவே தொழிற் பெருக்கம் காரணமாக ''நகரமயம்'' ஆதல் அதிகரிக்கிறது. இதனால் பல கிராமங்களிலிருந்தும் மக்கள் தொழில் நோக்கி நகரங்களுக்குப் புறப்பட்டு விடுகிறார்கள். இவர்களில் பெரும்பாலானோர் வசதியற்ற ஏழைகள். ஏழ்மை காரணமாக இவர்கள் நகர்ப்புறங்களின் புறநகர்களிலும், மையங்களிலும்,

குடிசைகளிட்டு வாழ ஆரம்பிக்கின்றனர். இதனால் சேரிகள் ஏராளமாக உருவாகின்றன. இவற்றில் தக்க சுகாதாரம் இல்லை. இதன் காரணமாக சேரி வாழ் மக்களுக்கு மட்டுமின்றி அவற்றின் அருகாமையில் வாழ்பவர்களுக்கும் பல நோய்கள் உண்டாகின்றன. இதனால் நகர்ப்புறங்களின் எழிலும் சுற்றுச் சூழலும் கெடுகின்றன. இது தவிர பல சமூகக் கேடுகளை விளைவித்து ஒரு பெரும் சமுதாயப் பிரச்சினையையே தோற்றுவிக்கின்றன.

தவிர, தொழிற்சாலைகளிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுப் பொருள்கள் நீர்நிலைகள், நிலம், ஆகாயம் இவற்றைப் பெரிதும் பாதிக்கின்றன. பாழ்படுத்துகின்றன. உலகத்திலுள்ள நீரின் மொத்த அளவில் இவ்விதம் அடைவது பெருமளவாகும். மாசுறாத நல்ல குடிநீர் என்பது இப்போது குதிரைக் கொம்பாகிவிட்டது. மாசுற்ற குடிநீர் மூலம் பல தொற்றுநோய்கள் பரவுகின்றன. எனவே பாதுகாக்கப்பட்ட குடிநீர் மக்களுக்கு வழங்க வேண்டியது அவசியம். மக்களின் வாழ்க்கைத் தரம் உயர உயர அவர்களுக்குத் தேவைப்படும் குடிநீரின் அளவும் அதிகரிக்கிறது. இதனுல் விளையும் கழிவு நீரின் அளவும் அதிகரிக்கிறது. கழிவு நீர் மிகவும் தீங்கு பயக்கத்தக்கது. இதைச் சரியான முறையில் உடனுக்குடன் அப்புறப்படுத்தியாக வேண்டும். இன்றேல் இக்கழிவுநீர் அருகாமையிலுள்ள ஓடையிலோ, நதியிலோ கலந்து அந்நீர்நிலைகளை மாசுபடுத்துகிறது. மாசுபடுத்தப்பட்ட நீர் அந்த நதியின் கீழோட்டப்பகுதியிலுள்ள மக்களால் பயன்படுத்தப்பட்டால் அவர்களுக்கும் நோய்கள் பல உண்டாகக் காரணமாகிறது. டைஃபாயிட், வாந்திபேதி, சீதபேதி போன்ற கொடிய தொற்று நோய்களும் மஞ்சள் காமாலை, நரம்புச்சிலந்தி, இளம்பிள்ளைவாதம் போன்ற நோய்களும் பரவுகின்றன. நோய்வாய்ப்படுதல் அதிகரித்து மக்கள் வலிவிழந்தவர்களாகி விடுவது தவிர அகால மரணத்திற்கும் இவை காரணமாகின்றன. இதனால் வீட்டிற்கும் நாட்டிற்கும் ஏற்படும் இழப்பு ஈடுசெய்ய முடியாதது.

தமிழ்நாட்டின் தலைநகராம் சென்னை மாநகருக்கு மாசு கற்பிக்கும் அடையாறு, கூவம் ஆகிய இரு சிற்ருறுகளும் பக்கிங்ஹாம் கால்வாயும் கிட்டத்தட்ட திறந்தவெளிச் சாக்கடைகளாகவே மாறியுள்ளன என்பதை நாம் அறிவோம். வாழ்வும் வளமும் கொடுக்கும் நீர், வாழ்வும் வளமும் கெடுக்கும் நஞ்சாக மாறுவது எத்தனை கொடுமை! நீர் மாசுறுவதால் நோய்கள் மட்டுமின்றி வேறு பல தீங்குகளும் உண்டாகின்றன. வேளாண்மைக்கும் அவை பயன்படாது போகின்றன. தொழிற்சாலைகளின் உபயோகத்திற்கும் பயன்படாது போகிறது. மீன்வளம் பாதிக்கப்படுகிறது. படகுப் போக்குவரத்து, நீச்சல் போன்ற பொழுதுபோக்கு ஆகியவற்றிற்கும் பயன்படாது போகிறது. வடஆற்காடு மாவட்டத்தில் நிலத்தடி நீர் கடந்த முப்பது ஆண்டுகளுக்குள் உவர்ப்பாக மாறி வேளாண்மைக்குப் பயன்படாத அளவிற்குப் போய்விட்டது என்று கூறப்படுகிறது. பாலாற்றில் தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலிருந்து வெளிப்படும் முடைநாற்றமெடுத்த கழிவு நீரே ஓடுகிறது. அதன் படுகையின் கீழுள்ள மண்ணடி நீரும் தரமிழந்து காணப்படுகிறது.

இதேபோல் காற்றும் மாசு அடைகிறது. காற்று மாசுறுவதற்கான காரணங்கள் இரண்டு, ஒன்று தொழிற்பெருக்கம்; இரண்டாவது போக்குவரத்து

வசதிகள் (பேருந்துகள், ஊர்திகள் முதலியன) அதிகரிப்பு. தொழிற்பெருக்கம் காரணமாகப் பல தொழிற்சாலைகள் தோன்றுகின்றன. அநேகமாக எல்லாத் தொழிற்சாலைகளுமே கழிவு நீர், புகை, திண்மக் கழிவுகள் ஆகிய மூன்று வகையான கழிவுப் பொருட்களைத் தோற்றுவிக்கின்றன. கழிவு நீர் பற்றி முன்னரே குறிப்பிட்டு விட்டோம். தொழிற்சாலைகள் கக்கும் புகைபற்றி இப்போது காண்போம். இப்புகை நாம் சுவாசிக்கும் காற்றை மாசுறச் செய்கிறது. அதனால் மக்களுக்கு T. B., Bronchitis, Asthma, போன்ற நோய்கள் உண்டாகின்றன. மிருகங்களும், பிராணிகளும், பறவைகளும் கூட மாசுற்ற காற்றினால் பாதிக்கப் படலாம்.

அடுத்து நிலம் மாசுபடுவது பற்றிப் பார்ப்போம். மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவாக மண் மாசுறுதல் அதிகரிக்கிறது. பல இடங்களில் கழிவுநீர் சரியாக அகற்றப்படாமல் தேங்குகிறது. கழிவறைகள் இல்லாததாலும், கழிவறைகளைப் பயன்படுத்தும் ஆர்வம் இல்லாததாலும், திறந்த வெளியில் மக்கள் மலஜலம் கழிக்கின்றனர். இவற்றின் விளைவாக நிலம் மாசுற்றுப் பல நோய்கள் உண்டாகின்றன. கொக்கிப்புழு (Hook Worm) எனும் நோய் இவற்றுள் மிகவும் குறிப்பிடத்தக்கது. பலவிதமான தோல் சம்பந்தப் பட்ட நோய்களும் மண்மாசுறுவதால் உண்டாகலாம். மேலும் குப்பை கூளங்கள் கண்ட இடங்களில் எல்லாம் கொட்டப்படுவதும் மண் மாசுறுதலுக்கு ஒரு முக்கிய காரணமாகிறது. இரசாயன, மற்றும் இதர தொழிற்சாலைகளிலிருந்து வெளிப்படும் திண்மக் கழிவுப்பொருட்களைச் சரியான முறையில் அகற்றாமல் ஆங்காங்கு குவித்து வைப்பதாலும் மண் மாசுறுகிறது. மண் மாசுறுவதால் நிலம் பார்ப்பதற்கு அருவருப்பாகிறது. நோய் நொடிகளை உண்டாக்கும் பூச்சி புழுக்கள் அதிகரிக்கின்றன. நிலத்திலே உழுது பயிரிடுவோர், விளையாடும் குழந்தைகள் மற்றும் மாணவர்கள் அத்தனை பேரையும் இது பாதிக்கிறது. மண் மாசுறுவதன் பிரதிபலிப்பாக நீரும், காற்றும் கூட மாசுறுகின்றன.

இவை தவிர மின்னணுக்கதிர்களாலும் சுற்றுச் சூழல் அபாயகரமான நிலையை எய்துகிறது. இதன் விளைவாய் புற்று நோய், பிறவி ஊனங்கள் முதலியன அதிகரிக்கின்றன. அணுவை சமாதானத்திற்காகப் பயன்படுத்தினால் கூட கதிர் அபாயம் உள்ளது. அதைத் தவிர்க்க உலகெங்கும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வந்த போதிலும் இன்று வரை சந்தேகத்திற்கு அப்பாற் பட்ட முறைகள் எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை என்பதை நாம் உணர்வது அவசியம்.

சுற்றுச் சூழல் இன்னும் பற்பல விதங்களிலும் மாசுபட வாய்ப்பு உள்ளது. இவையெல்லாம் மக்கள்தொகைப் பெருக்கம், விஞ்ஞான, தொழில் நுட்ப முன்னேற்றம் ஆகியவற்றின் நேர் விளைவுகள், சுற்றுக் சூழல் வளம் குன்றல், இதனுல் வாழ்க்கைத் தரம் குன்றல் இவை எதிர் விளைவுகள். இவற்றைக் கண்டும் காணாததுமாய் நாம் வாளாவிருந்தால் இதுவே நாம் நமக்குச் செய்து கொள்ளும் பெரும் நாசமாகும்.

நமது பழக்க வழக்கங்கள் சிலவற்றை மாற்றிக் கொள்வது மிகவும் அவசியம். அசுத்தத்தைக் கண்டு பொறுத்திராமல் சிலிர்த்தெழவேண்டும். இதற்கு

மிகவும் அடிப்படையான தேவை சுற்றுச்சூழல் பற்றிய ஒரு விழிப்புணர்வு. இவ் விழிப்புணர்வை சுற்றுச்சூழல் கல்வியின் மூலமும், நல்ல அறிவு பூர்வமான முறை களைக் கடைப்பிடிப்பதன் மூலமுமே தோற்றுவிக்க முடியும். இதற்கு நாட்டு மக்களின் ஒத்துழைப்பும், அரசியல் வாதிகளின் ஆதரவும் தேவை. ''இளமையிற் கல்'' என்பது முதுமொழி. சுற்றுச்சூழல் பற்றிய கல்வியை இளமையிற் போதிப்பதே சாலச்சிறந்தது. ''ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது''. எனவே இளமை யில் சுற்றுச்சூழல் பற்றிய விழிப்புணர்ச்சி தோற்றுவிப்பது மிகவும் அவசியம். இதனால் கிடைக்கும் பயனும் ஏராளம். அறியாமை என்னும் இருளில் சிக்கி, ஏழ்மை என்னும் படுகுழியில் வீழ்ந்து உழலும் நம் மக்கட்கு இவ்விருளை நீக்கி அவர்களைத் தூக்கிவிடக் கல்வியறிவு மெத்தவும் அவசியம். அக்கல்வியின் ஒரு பகுதியாக சுற்றுச் சூழல் கல்வியை வழங்குதல் அதனினும் அவசியம். நாம் வாழ, நம் வருங்கால சந்ததியினர் வாழ இது மிக மிக அவசியம். கல்வியறிவு இல்லாத முதியவர்களுக்கு முதியோர் கல்வித் திட்டத்துடன் சுற்றுச்சூழல் பற்றிய கல்வித் திட்டத்தையும் இணைத்து வழங்க வேண்டும். இதற்கான முயற்சியை நமது கல்வி கூடங்களனைத்தும் மேற்கொள்ள வேண்டியது அவசியம். நமது நாளேடு களும், பிற பத்திரிகைகளும், ரேடியோ டெலிவிஷன் முதலியவைகளும் இவற்றை இடைவிடாது வலியுறுத்திப் பிரசாரம் செய்ய வேண்டும். நாட்கள் கடத்தினுல் நாம் நசிவுறுவது திண்ணம். எனவே உடனே செயலில் இறங்குவோம். சுற்றுச் சூழல் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவோம். மக்களனைவரையும் சுற்றுச் சூழல் காக்கும் பணியில் ஈடுபடுத்துவோம். ஓர் அறியாமையை எதிர்த்துப் போராடும் ஓர் அறப்போராக, அறிவுப் போராகக் கருதி இதை நாம் செயல்பட முனைந்தால் நமது இலட்சியத்தில் நாம் வெற்றி காண்பது நிச்சயம்.

# தெருக்கூத்தும் அங்கீயா நாட்டும்

டாக்டர் மா. நவநீதகிருட்டிணன்
தமிழியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 21

அங்கியா நாட்டாவது அஸ்ஸாமில் வழங்கும் கூத்து. 'அங்கியாநாட்' என்ற சொல் அஸ்ஸாமிய மொழியில், 'வைணவக் கதைகளை ஓரங்கத்தில் நடித்துக் காட்டும் நாடக அமைப்பு' என்று பொருள்படும். அங்கீயாநாட் ஓரளவு வட மொழி நாடகக் கோட்பாட்டைத் தழுவினாலும் தனக்கென்று சில தனித்தன்மை களைக் கொண்டுள்ளது. அது வடமொழியின் ரூபக அங்க நாடகத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது. பூர்வரங்கத்திலும் சூத்திரதாரனை அறிமுகம் செய் வதிலும், வடமொழிப் பாடல்களைப் பயன்படுத்துவதிலும் ஆகிய மூன்று நிலை களில் மட்டுமே அங்கியாநாட் வடமொழி நாடக முறையைப் பின்பற்றுகிறது. தெருக்கூத்தில் அங்கங்கள், காட்சிகள் என்ற பாகுபாடு கிடையாது. எவ்வாறு தெருக்கூத்து, நாடோடிக்கூத்து வகையைச் சார்ந்து நாட்டுப்புறக் கலை வடிவமாக அமைந்து கோயிலை ஒட்டியதாக, புராணக்கதைகளை அடிப்படையாகக் கொண்ட தாக அமைந்துள்ளதோ அவ்வாறே, அங்கியாநாட்டும் அமைந்துள்ளமை வியக்கத் தக்கதாய் உள்ளது. அஸ்ஸாமியக் கலைவடிவமாகிய அங்கியாநாட்டைத் தமிழகத் தில் தெருக்கூத்துக் கலையோடு ஒப்பிடும்போது பல ஒற்றுமை முடிவுகள் பெறப் படுகின்றன. தெருக்கூத்து கோவில்களில் கோடைப்பருவத்தில் ஆடப்படு கின்றது. மற்றக்காலங்களில் மழை வேண்டுதலுக்காகவும் ஆடப்படுகின்றது. இறப்புக்காகவும், வேண்டுதலுக்காகவும் தெருக்கூத்து ஆடப்படுதலும் உண்டு. அங்கியாநாட்டும், ஜன்மாஷ்டமி, நந்தோச்வம், டோலியாத்ரா போன்ற விழா நாட்களில் நடைபெறுகின்றது. விதைப்புக் காலம், அறுவடைக் கலம், முழு நிலாக்காலம் ஆகிய காலங்களில் அங்கியாநாட் நடைபெறும்.

தெருக்கூத்துக்குரிய கதைக்கருவாக மகாபாரதம், இராமாயணம் முதலியன முதன்மையாக அமைகின்றன. மற்றும் பெரியபுராணம், திருவிளையாடற் புராணத் தில் நடைபெறும் பக்திக்கதைகளும் நடிக்கப் பெறும். கந்தபுராணக் கதைகளும் இடம் பெறும். மயில்ராவணன் முதலிய கலப்புக் கதைகளும் வ.உ.சி. போன்றோ ரின் வரலாறும் நடிக்கப்பெறும். அரிச்சந்திரன் கதை, மார்க்கண்டேயர், நல்ல தங்காள் கதைகளும் உண்டு. இரண்டு பெண்டாட்டிக்காரன் கதை, ஆளவந்தார் கொலைவழக்கு முதலிய நவீனங்களும் உண்டு. அங்கியாநாட் பெரும்பாலும் பாகவதபுராணம், இராமாயணம் ஆகியவற்றின் அடிப்படையிலேயே கதைக் கருவைத் தேடிக் கொள்கிறது.

தெருக்கூத்தில் அகவல், வெண்பா, கலித்துறை போன்ற யாப்புவகைப் பாடல்களும் உள்ளன. மேடையில் அமையும் இசைப்பாட்டுவகை அல்லது நாடகப் பாட்டாகிய 'தரு'க்கள் உள்ளன. தருவிற்கு முன்னுரையாக இடம் பெறும்

கவி, திபதை, விருத்தம் ஆகியவை இசையின்றி மொழியப்படும். அதன்பின் வருகின்ற தரு இசையோடு பாடப்படும். பின்னர்வரும் வெண்பா, கட்டளைக் கலித்துறை முதலியவை இலக்கிய வரிகளைப் போல மொழியப்படும்.

பாத்திரம் நுழைவதற்குரிய 'பிரவேசத்தரு' இரு பாத்திரங்கள் விவாதம் புரியும் 'சம்வாதத்தரு' புலம்பும்போது பாடும் 'புலம்பல் தரு' முதலிய பல 'தருக்கள்' எனப் பெறும் இசைப்பாடல்களே கூத்தின் பெரும்பகுதியை விளக்கும்.

முற்பகுதி இராகதாளமின்றியும் பின்பகுதி இராக தாளங்களுடன் கலந்தும் பாடப்பெறும் கந்தார்த்தம் என்பதும் தெருக்கூத்தில் அமையும். இவற்ருல் இசைப்பாடல் இல்லையேல் தெருக்கூத்தும் இல்லை என அறியலாம். அஸ்ஸாமிய அங்கியாநாட்டில் இசைப் பாடல் வடிவம் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது. சூழ்நிலைகளையும், நிகழ்ச்சிகளையும் விளக்கும் பல பகுதிகள் பாத்திரங்களாலும், நடிப்பாலும் விளக்கப்படுவதில்லை. மாருகச் சூத்திரதாரன் உரைக்கின்ற விளக்கப் பாடல்களாலேயே உணர்த்தப்படுகின்றன.

சிறு நிகழ்ச்சிகளும், உணர்ச்சிகளும், மெல்லுணர்வுகளும், பாடல்களாலேயே வெளிப்படுத்தப்படுகின்றன. அங்கியாநாட்டில் இடம்பெறும் வசனமும், பாட்டமைப்பில் வரும் மெல்லுணர்வை விளக்கவே எழுந்தவை. உரைநடையில் அமையும் அவ்வசனமும் மிகக் குறைவே. ஆனுல் அதுவும் மிகுந்த இசைப்பண்பு கொண்டதே. இதனுலேயே அங்கியாநாட் ''பாட்டைமைப்பிலான நாடகக் காட்சி'' என அழைக்கப்படுகிறது.

தெருக்கூத்தில் கட்டியங்காரன் மிக இன்றியமையாத தலைமை மாந்தனுகத் தோன்றுகிருன். அங்கியாநாட்டிலும் சூத்திரதாரன் ஒரு மையப்பாத்திரம் போலச் செயல்படுகிருன். தெருக்கூத்தில் கட்டியம் கூறிக்கொண்டு ஆடுகளத்தில் முதன் முதலில் தோன்றுகிருன் கட்டியங்காரன்.

அவனுடைய பணிகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துரைப்பர் -

1. கதைப் பாத்திரங்களை அறிமுகம் செய்து வைப்பது. 2. கடவுள் வழிபாடு முடிந்ததும் கோமாளியுடன் மேடையில் தோன்றி உரையாடல் மூலம் கதையை அறிமுகப்படுத்துதல். 3. எளிய உடையோடு களத்தில் தோன்றும் அவன் வேறு பிறபாத்திர வேடங்களையும், தேவைக்கேற்ப ஏற்பான். 4. வரும் பாத்திரத்தை அறிமுகப்படுத்துவதோடு, எதிர்ப்பாத்திரமாக நின்று சுவையான உரையாடலை உருவாக்குவான். 5. சமயத்தில் விதூஷகனுக மாறி நகைச் சுவையும் எழுப்புவான். 6. நடத்திக் காட்ட முடியாத காட்சிகளைப் பாடலாக அல்லது வசனமாக விளக்கிக் கதையோட்டத்திற்கு உதவுகிருன். 7. காட்சி, அங்கம் ஆகியன மாறுவதை உணர்த்தலும் அவன் வேலையே. 8. முதல்நாள், மறுநாள் கூத்துக்களை எடுத்து விளக்கித் தொடர்பு படுத்துகிருன். 9. பார்வையாளரின் ஒரு பிரதிநிதியாக நின்று கேள்விகள் கேட்கிருன். 10. பாத்திரங்கட்குப் பாடல் மறந்தாலும், நிகழ்ச்சிகளில் குழப்பம் ஏற்பட்டாலும் சரிப் படுத்தி, சமாளிக்கிருன். 11. ஒய்வு தரும் வகையில் ஊடே வந்து நின்று தன் சொல்திறத்தால் மக்களைக் கவர்வான். 12. அவ்வப்போது பாடல்கட்டும் திறமை

யும், பாட்டுக்கு விளக்கம் தரும் ஆற்றலும் உள்ளவன். 13. விதூஷகனைவிடப் பல மடங்கு பொறுப்புள்ளவன். 14. வசனங்களைக் குறைப்பதும், நீட்டுவதும் சொல்லாற்றலால் பலமணி நேரம் உரையாடுவதும் கதைக்குப் புறம்பாகப் பிற செய்திகளை, அறிவுரைகளைச் சொல்வதும் முதலாகப் பலவகை திறமைப்பணிகள் உடையவன். 15. தொடங்கும்போது 'குற்றம் குறையிருப்பின் பொறுக்க' என்று வேண்டுபவன், முடிவின்போது, கூத்தைப் பார்த்தோரும், ஆடினோரும், பாடினோரும் பெரும்பேறு அடைவர் என்று வாழ்த்தை முடிக்கும் வரை இடையறாத பணி உடையவன்.

பொதுவாக வடமொழி நாடகத்தில் வரும் சூத்திரதாரியும், தெருக்கூத்தில் இடம் பெறும் கட்டியங்காரனும் செய்யும் பணியால் ஓரளவு வேறுபட்டவர்களே. எனினும் அங்கியாநாட்டில் இடம் பெறும் சூத்திரதாரனும் தெருக்கூத்தில் கட்டியங்காரனும் பல்லாற்றானும் ஒத்துள்ளனர்.

அங்கியாநாட்டில் சூத்திரதாரன் கூத்தைத் தயாரிப்பவனாக அமைகிறான். கூத்தை நேர்முக வர்ணனை செய்பவனைப் போல் செயல்படுகிறான். நாந்தீப்பாடல் பாடி நாடகத்தைத் தொடங்கி வைக்கிறான். பாத்திரங்கள் அனைத்தையும் அறிமுகப் படுத்துகிறான். பாத்திரங்களுக்கு நெறிமுறைகள் உணர்த்துகிறான். பாத்திரங்களின் வருகையையும் வெளிச் செலவையும் கட்டியம் கூறுகிறான். நாந்தி முடிந்ததும் சூத்திரதாரன் அன்றைய கதையின் கருவை வடமொழிப் பாடல் வடிவில் மக்களுக்கு அறிவிப்பான். இதனை அடுத்து 'பக்திமா' (Bhaktima) எனப்படும் நீண்ட பாடல் பாடப்பெறும். பின்னர் அவனுக்கும், அவன் தோழனுக்கும் ஒரு விவாதம் எழும். பின் சூத்திரதாரன் களத்துக்கு வரும் பாத்திரங்களை அறிமுகம் சொல்லிக் கட்டியம் கூறுவான். விவாத உரையாடல் முடிந்ததும் அவன் தோழன் களத்தை விட்டுச் சென்று விடுவான். சூத்திர தாரன் நாடகத்தில் ஏற்படும் இடைவெளியைப் பாடல், ஆடல், வசனங்களின் மூலம் நிரப்புவான், அன்றைய கதையின் நீதிக் கூறுகளையும், ஆன்மீகக் குறிப்புகளையும் பற்றி வசனம் ஆற்றுவான். காட்சிகள் மாறுவதை உணர்த்த அங்கியாநாட்டில் வாய்ப்பில்லை. ஆதலால் சூத்திரதாரன் தனது வசனத்தாலோ, இசைக்கருவியோடு கூடிய பாட்டாலோ காட்சி மாறுதலை உணர்த்துகிறான்.

தெருக்கூத்தில் பெண்கள் ஆடுவதில்லை. பெண்களின் வேடத்தையும் ஆடவரே ஏற்று நடிக்கின்றனர். அங்கியநாட்டிலும் ருக்மணி, பாமா, யசோதா, சீதா முதலிய எல்லாப் பெண் வேடங்களையும் பையன்களே ஏற்று நடிக்கின்றனர்.

தெருக்கூத்தில் கட்டியங்காரனைத் தொடர்ந்து கோமாளி உடன்வருவதுண்டு. இருவரும் உரையாடல் மூலம் கூத்துக்கதையை அறிமுகப்படுத்துவர். அவர்கள் பேசுவது நகைச்சுவையும் பொது அறிவும் கலந்ததாக இருக்கும். வடமொழி நாடகத்தில் சூத்திரதாரனுடன் நடியும் வந்து நின்று கதையை அறிமுகம் செய்வாள்.

அங்கியாநாட்டில் சூத்திரதாரன் நாந்தீயை முடித்து வழிபட்டதும் அன்றைய கதையை வடமொழியில் பாடல் வடிவில் சொல்வான். இதனை அடுத்துத் தூதனும் பகுவனும் களத்தில் தோன்றுவார்கள். அவர்கள் நாடக அமைப்புக்குள் அடங்காத வேறு நகைச்சுவைகளைச் சொல்லி மகிழ்விப்பார்கள். புதிய பாத்திரங்களின் வருகையையும், காட்சி மாற்றத்தையும் இவர்களும்

அறிவிப்பதுண்டு. பகுவன் (Bahuwa) நாடக மூலக்கதையைச் சிதைத்து விடாத படி நகைச்சுவைகளும் வேடிக்கைகளும் சொல்லிப் பார்வையாளரை மகிழ்விப்பான்.

வடமொழி நாடகச் சூத்திரதாரிக்கு உரிய பணிகளாகக் கூறப்படுவன வற்றை விட அங்கியாநாட்டின் சூத்திரதாரனுக்கு உரிய பணிகள் மிகுதி. தெருக் கூத்தின் கட்டியங்காரனே மேலும் பொறுப்பு மிகுந்தவனாகக் காணப்படுகின்றான்.

அங்கியாநாட் பக்தி உணர்வுக்காகவே எழுந்தது. தெருக்கூத்தும் கோயிலை யும் புராணங்களையும் ஒட்டியே தோற்றம் பெற்றது. அங்கியாநாட்டில் வீர எழுச்சி, மக்கள் கிளைவழித் தோற்றம், காதல் ஆகிய உணர்வுகளும் தலைமை பெற்றனவாக இருந்திருக்கின்றன. தெருக்கூத்தில் புராணக்கதைகளும், வீரர் வரலாறும் கதைக்கருவாகியபோது இயற்கையாகவே இவ்வுணர்வுகள் வெளிப் படுத்தப் பட்டிருக்கின்றன.

தெருக்கூத்தைப் போலவே, அங்கியாநாட்டிலும் கேடயம், வாள், கத்தி போன்ற போர்க்கருவிகள் மரத்தால் செய்யப்படுகின்றன. பாத்திரங்களின் தன்மைக்கேற்ப ஒப்பனையும், உடையும் வேறுபடுவதைத் தெருக்கூத்தில் காணலாம். அதேமுறை அங்கியாநாட்டிலும் உள்ளது.

தெருக்கூத்தில் ஆர்மோனியம், தாளம், மத்தளம் முகவீணை முதலிய இசைக்கருவிகள் பின்பாட்டோடு அமைவதைப்போல் அங்கியாநாட்டிலும் இசைக் கருவிகள் பயன்படுகின்றன. தொடக்க காலத்தில் தெருக்கூத்துக்கள் தீவட்டி வெளிச்சத்தில் நடைபெற்றனவாக அறிகிறோம். அங்கியாநாட்டும் இரவில் தீவட்டி வெளிச்சத்தில் நடிக்கப் பட்டிருக்கிறது.

தெருக்கூத்திற்கும் அங்கியா நாட்டிற்கும் சில குறிப்பிடத்தக்க வேறு பாடுகளும் உள்ளன.

1. தெருக்கூத்தின் கதைக்கு கரு புராணப்பரப்பை அளாவிப் பின் அவ்வெல்லை மீறப் பிறகதைகளைச் சொல்வதாகவும் வளர்ந்தது. அங்கியாநாட்டோ பாகவதபுராணம், இராமாயணம், பாரதம் இவற்றை விடுத்து வெளியேறுவதில்லை.

2. தெருக்கூத்தில் கட்டியங்காரன் கூத்தின் இடையிடையே பார்வை யாளருக்கு அறிவுரையும், நீதிகளும் கூறுவான். கூத்தின் நிறைவுப் பகுதியாக. கண்டவருக்கும், கேட்டவருக்கும் ஏற்படும் பயனைச் சொல்லி, எல்லோரையும் வாழ்த்தி, மங்களம் பாடும் மரபு உண்டு. அங்கியாநாட்டிலோ நாடக முடிவில் சூத்திரதாரன் நாடகத்தில் உணர்த்தப்படும் நீதி, அறிவுரைகளைச் சொல்லிப் பொதுமக்கள் அனைவரும் அவற்றைப் பின்பற்ற வேண்டும் என்று வேண்டிக் கொள்வான்.

3. தெருக்கூத்து முதலில் கோவில் முற்றங்களிலும் பின் திடல், நாற் சந்தி, வயல், களத்துமேடு ஆகிய இடங்களிலும் நடக்கலாயிற்று. சில ஊர்களில் தட்டையான கொட்டகைகளை அமைத்துக் கொள்வதும் உண்டு என்பர். அங்கியாநாட் கோயிலிலும் வழிபாட்டிடங்களிலும் நடத்தப்பட்டிருக்கிறது. பின் தாற்காலிகக் கொட்டகைகளிலும் 'மணிக்குட்' எனப்படும் வீடுகளிலும் நடத்தப்பட்டிருக்கிறது.

போர், கொலை, சாவு, நோய், உறக்கம், சாப்பாடு முதலிய காட்சிகள் வடமொழி நாடகத்தில் காணப்படா. அங்கியா நாட்டில் எல்லா நிகழ்ச்சிகளும் நடத்தப்பெறும். வடமொழி நாடகத்தில் புறக்கூற்றும், கிசுகிசுத்தலும் இடம் பெறும். அங்கியாநாட்டில் இவை இடம் பெறுவதில்லை.

# அறிவியல் தமிழாக்கம்

டாக்டர் ஜி. ஆர் தாமோதரன்
துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

உலக நாடுகள் அறிவியலில் பெரும்பயன் பெற்று விளங்குவதற்குக் காரணமாக இருந்தது, அந்நாடுகளின் கல்வி வளர்ச்சியே ஆகும். அந்நாட்டினர் தாய்மொழி வாயிலாகவே கற்கின்றனர். இதனால் அவர்களின் அறிவு வளம் சிறப்பான வளர்ச்சி பெறுகின்றது; முன்னேற்றம் ஏற்பட்டுக்கொண்டே உள்ளது. நம் நாட்டவர் அறிவில் குறைந்தவரல்லர். ஆனால் அவர்களின் ஆக்கப்பூர்வமான சிந்தனையை வளர்த்து அறிவு வளம் காண முடியாதவாறு நம்நாட்டுக் கல்வி வேற்றுமொழிகளில் அளிக்கப்படுகின்றது. இதை உணர்ந்து நாமும் நம் கல்வியை எல்லா மட்டங்களிலும் தாய்மொழியில் அளிக்க முயலவேண்டும்.

இந்த முயற்சியில் கடந்த பல ஆண்டுகளாக எல்லாமொழிகளிலும் சிறப்பாகவும், விரைவாகவும் முன்னேற்றம் ஏற்பட்டு வருகின்றது. நமது தமிழ் மொழியிலும் அத்தகு முயற்சிகள் பலரால் பல ஆண்டுகளாக மேற்கொள்ளப்பட்டு வரினும், விரைவானதும் தெளிவானதுமான முடிவுகளை நாம் இன்னும் காணவில்லை. இதற்குக் காரணம்: தமிழால் அறிவியலைக் கூறவே முடியாது என்கின்றனர் சிலர்; சிலர் தூய்மையான தமிழிலேதான் கூறவேண்டும் என்கின்றனர். வேற்றுமொழிச் சொற்களை அப்படியே ஏற்றுக்கொள்ளலாம் என்று ஒரு சிலர் கூறுகின்றனர்; சிலர் பிறமொழி எழுத்துக்களைக் கடன் வாங்கிக் கொள்ளலாம் என்கின்றனர்; சிறிதும் பிறழாமல் ஒலி பெயர்ப்புச் செய்துகொள்ளலாம் என்று சிலர் கருதுகின்றனர். அவரவர் நிலையில் நின்று பார்த்தால் அவரவர் கூற்றுச் சரியாக இருக்கலாம். ஆனால் எல்லாவற்றையும் ஒட்டு மொத்தமாக வைத்து இழப்பு எவ்வளவு, ஈட்டம் எவ்வளவு, குறைநிறைகள் என்ன என ஆராய்ந்து சிறந்த முறைகள் எவையெனத் தெளிந்து அவற்றை எல்லோரும் பின்பற்றுதலே சிறப்பான முறையாகும். இதனை அரசும், அறிஞர் உலகமும், தமிழ்நாட்டின் எதிர்கால நல் வளர்ச்சியில் நாட்டம் உடையவர்களும் ஆழ்ந்து எண்ணிப் பார்த்துச் செயல்பட வேண்டும். அவ்வாறு செயல்பட்டு அறிவியல் நூல்கள் எல்லாத் துறைகளிலும் எல்லா மட்டத்தினர்க்கும் பயன்படும் வகையில் பல்லாயிரக் கணக்கில் வெளிவர வேண்டும்.

நூல்கள் வெளிவரவேண்டும் என்று எண்ணும்போது தொழிலாளர்கள் அறிந்துள்ள சொற்கள், அவர்கள் பயன் படுத்தும் சொற்கள், நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தும் பொருள் தொடர்பான சொற்கள், அறிஞர்கள் உருவாக்கிய சொற்கள் இவைகளையெல்லாம் தொகுக்கவேண்டும். இவை அனைத்தையும் கொண்ட அறிவியல் கலைச்சொற்களைக்கொண்ட பேரகராதியொன்றினை விரைவாகத் தமிழ்மொழி பெறவேண்டும் என்பது என் அவா. அதற்கு அறிஞர் உலகம் பாடுபடவேண்டும். இன்றுள்ள அறிவியல் சொற்கள் எல்லாவற்றையும் தொகுத்து

நெறிமுறைப்படுத்தினுலே அதுவே ஒரு பெரிய உதவியாக இருக்கும். அறிவியல் நூல்களைத் தமிழாக்க அது ஒரு பேருதவியாக இருக்கும்.

அறிவியல் கலைச்சொற்களைக் கையாளும்போது அவைகளை (1) மொழி பெயர்க்கலாம் (2) ஒலி பெயர்க்கலாம். மொழி பெயர்ப்பின்போதும் ஒலிபெயர்ப் பின்போதும் சில நெறிமுறைகளைப் பின்பற்றவேண்டும். பின்பற்றப்பட வேண்டிய நெறிகளும் அவற்றிற்கான காரணங்களும் பலவாகும். அவை அத்தனையையும் இக்கட்டுரையில் எழுதாது மொழிபெயர்ப்புப்பற்றிச் சிலவற்றை மட்டும் குறிப் பிடுகின்றேன்.

சைக்கிள், மோட்டார், பெட்ரோல் என்பன போன்ற சொற்களுக்குத் தமிழ் மொழிபெயர்ப்புத் தேடுவது கால விரையத்தையும் தோல்வியையும் உண்டுபண்ணும். வழக்கில் வந்தனவற்றை அப்படியே நமதாக்கிக் கொள்வதுதான் வளர்ச்சிக்கு வழி.

மொழிபெயர்க்கும்போது அம்மொழிபெயர்ப்பு கற்பதற்கு எளிதாகவும், உபயோகிப்பதற்கு இலகுவாகவும் இருத்தல் வேண்டும். மொழிபெயர்ப்புச் சொற்கள் பயின்ற சொற்களாகவும் மக்களிடையே பழக்கத்தில் உள்ள (அல்லது) பழக்கத்தில் நிலைக்கக்கூடிய சொற்களாகவும் இருப்பது நல்லது. சொற்களை மொழிபெயர்க்கும்போது அவை மயக்கம் தராமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ளவேண்டும்.

மேலும், இன்றைய உலகில் ஒரு மொழியினர் பிற மொழியினரிடமிருந்து ஒதுங்கி வாழ்தல் இயலாது; உலகம் சுருங்கி வருகின்றது. எனவே, வேற்று மொழிச் சொற்களைக் கடன் வாங்குவது என்பது தவிர்க்க இயலாத ஒன்று. சொற் களைக் கடன் வாங்குவதில் தவறு இல்லை; அது வளர்ச்சிக்கு உறுதுணையாகும். இதனை ஓர் உதாரணத்தால் விளக்கலாம்.

தொழில் செய்பவர்கள் தங்களிடம் உள்ள கைப்பொருள் ஒன்றினைமட்டும் நம்பி இருப்பதில்லை; வங்கியிலும் பிற இடங்களிலும் கடன் வாங்கித் தங்கள் முதலைப்பெருக்கித் தொழிலை வளர்த்துக் கொள்வதனைக் காண்கிறோம். அவ்வாறு கடன் வாங்கத் தயங்கினுல் தம்மிடம் உள்ள பொருளைமட்டும் வைத்துத் தொழில் செய்தால் அவர்களால் வளரமுடியாது என்பதனை அவர்கள் நன்கு அறிவார்கள். அதுபோல நம் மொழிச் சொற்களோடு பிறரிடமும் வாங்கி நம்மொழியை வளர்ப் பதில் தவறு இல்லை. இல்லாததனை உள்ளவர்களிடம் வாங்கிக் கொள்வதில் தவறு இல்லை. ஆனுல் அவற்றை வாங்கும் முறையிலும் வாங்கியவைகளைக் கையாளும் வகையிலும்தான் விழிப்பாக இருக்கவேண்டும்.

கடன் வாங்கும்போது நம்மிடம் உள்ள முதலைப் பயன் படுத்தாமல் கடனை மட்டும் பயன்படுத்தினுல் புதிய வெள்ளம் பழைய வெள்ளத்தினை அடித்துச் செல் வதனைப்போன்று நம் முதலும் போய்விடும். அதுபோன்று நம்மிடம் உள்ள சொற் களைப் பயன்படுத்தாமல் கடன் வாங்கியே பயன்படுத்துவது என்று இருந்தால் நம் சொற்களும் வாழ்விழந்துவிடும். நாமும் வளர முடியாது, நம்முடையது எனச்

சொல்ல ஒன்றுமே இருக்காது. எனவே நம்மொழிச் சொற்களை முழுவதுமாகப் பயன்படுத்தவேண்டும்.

இல்லாதனவற்றைப் பிறடமிருந்து வாங்கி நமதாக்கிக் கொள்வதே அறிவியல் தமிழாக்கத்திற்கு உரிய முறைகளில் சிறந்தது எனலாம். அதாவது நம்முடைய மொழியில் உள்ள ஒலிகளைக் கொண்டே அவைகளை அமைப்பது நல்லதாகும். 'கிரைஸ்ட்' என்ற ஆங்கிலச் சொல்லைச் சீனர்கள் 'கிலிசெது' எனவும், ஜப்பானியர் 'கிரிசெத்து' எனவும் நாம் 'கிறித்து' எனவும் சொல்லி அச்சொல்லையே நம்முடையதாக்கிக்கொண்டதுபோல அமைதல் வேண்டும். ஆங்கிலேயர் நம் தமிழ் மொழியைச் சிறப்பு 'ழ' கரம் போட்டு எழுதாமல் அவர்களின் ஒலியமைப்புக்கு ஏற்றாற்போல 'டமில்' என எழுதுவதனையும், கட்டுமரத்தினை 'கட்டமரான்' எனச் சொல்வதனையும் எண்ணிப்பார்க்கலாம். எனவே, சொற்களைக் கடன் வாங்கும்போது தமிழுக்கு ஏற்ப அவற்றை மாற்றியே வழங்க வேண்டும். இப்படித்தான் ஒவ்வொரு மொழியினரும் கடன் வாங்கிய சொற்களைத் தத்தம் மொழிக்கு ஏற்ப மாற்றிக் கொள்கின்றனர். இதனால், வேற்று மொழியில் இச்சொற்களைக் கற்கும்போது ஓரளவு எளிமையாகவும் இருக்கும்.

மேலும், உலகமெலாம் ஏற்றுக்கொண்டுள்ள அறிவியல் கலைச்சொற்களையும் அறிவியல் குறியீடுகளையும் அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் நல்லது. அவைகளைத் தமிழாக்க முயன்றால் நாம் தனித்து நிற்க வேண்டிவரும். $+$, $-$, $\pi$, $\Delta$, போன்ற குறியீடுகள், Fe, Cu, K, Cl, Na, போன்ற குறியீட்டு எழுத்துக்கள் சைன், கொசைன், லாக்ரிதம் போன்ற அனைத்துலகக் கலைச்சொற்கள் முதலியவைகளை அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் நல்லது. அப்போதுதான் அறிவியல் வளர்ச்சி எந்த நாட்டில் ஏற்பட்டாலும் நம்மால் எளிதில் புரிந்துகொள்ள இயலும்.

# பழந்தமிழிலக்கியங்களில் அறக் கூறுகள்

**ஆ. கந்தசாமி** எம். ஏ. எம். பில்;
தமிழ்த்துறைத் தலைவர், முத்தியாலுப்பேட்டை, மேனிலைப்பள்ளி, சென்னை

பண்டைத் தமிழர்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர். சூழ்ந்துள்ள இயற்கையெல்லாம் அவர்களோடு பின்னிப் பிணைந்திருப்பதாக உணர்ந்தனர். அவர்கள் மகிழ்ந்தபோது இயற்கையும் மகிழ்ந்தது என்றும், துயருற்ற போது இயற்கையும் துயருற்றது என்றும் கருதினர். தனி நெஞ்சங்களின் துடிப்பைப் பரந்து விரிந்திருக்கும் புறவுலகம் புரிந்துகொண்டது போன்ற ஒருவகை அனுபவத்தைப் பெற்றனர். அதனால் இயற்கையும் மனிதனும் இரண்டறக் கலந்திடும் ஒன்றிய நிலையினைக்கண்டு வாழ்ந்தனர். (1) அன்பையும் அறத்தையும் ஆரத்தழுவி வாழ்ந்தனர். அறத்தைத் தம்மினின்றும் பிரிக்கமுடியாத ஒன்றாக உணர்ந்தனர்; பொதுவாழ்வின் அடிப்படையாக்கினர்; இல்வாழ்வின் முடிந்த பயனாகவே கருதினர். அறமென்பது மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்கமுறைகளின் தொகுதியே என்று கூறுவர். பிறவிதோறும் மனிதனைப் பற்றிக்கொண்டுவரும் தீவினையின் பயனாகிய அறியாமையை அறுத்தெறிவதே அறம் என்றும் ஆன்மிக நெறியினர் விளக்கம் கூறுவர். (2)

அவ்வறத்தையும் பண்டைத்தமிழ் மக்கள் தனிமனிதனையும் சமுதாயத்தையும் போற்றி வளர்க்கும் ஒழுக்கநெறியாகக் கருதினர். மறுமைப்பேற்றை அளித்தாலும் அளிக்கா விட்டாலும் இவ்வுலக வாழ்க்கையில் தனிமனிதனும் சமுதாயமும் நலமாக வாழ்வதற்கும் முன்னேற்றத்தை அடைவதற்கும் அற வாழ்வு இன்றியமையாதது என்னும் நம்பிக்கை நம் முன்னோர்களிடம் நெடுங் காலமாக இருந்துவந்திருக்கிறது. அவர்களின் வாழ்வின் அடிப்படை நிலைக் களன்களாக காதல், போர், சமுதாயம், அரசியல் முதலியன அமைந்திருந்தன. இவற்றில் சிக்கல்களும் முரண்பாடுகளும் தோன்றிற்று. இவற்றைச் செம்மைப்படுத்த எண்ணியபோதே அறக் கருத்துக்கள் மலர்ந்தன. அவை பழந்தமிழ் இலக்கியங்களில் அறக்கூறுகளாய்க் கனிந்து கிடக்கின்றன.

தனிமனிதர்களாகிய சான்றோர்கள் தத்தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகிய பழக்கங்களை அவர்களோடு நெருங்கிப் பழகியவர்கள் முதன் முதலில் பின்பற்றி நடந்திருக்கலாம். நாளடைவில் அச்சான்றோர்களின் பழக்கங்கள் அவர்கள் வாழ்ந்த சமூகத்தினரால் சிறப்புடையனவாகப் போற்றப் பட்டிருக்க வேண்டும். பண்பால் உயர்ந்த சான்றோர்களை, உயர்ந்த வேட்ட உயர்ந்திசினோர், உயர்நிலை யுலகத்து உயர்ந்தோர், துகளறு கேள்வி உயர்ந்தோர் வடுவில் கொள்கை உயர்ந்தவர், மையுறு சிறப்பின் உயர்ந்தோர் எனப் புலவர்கள் போற்றிப் பாராட்டுவது கருதத்தக்கது. இவர்கள் அல்லவை கடிந்து நல்லவையுரைத்து எல்லாரையும் நல்லாற்றுப்படுத்தும் அறவாணர்

களாக விளங்கினர். குடும்பங்களில் ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்துக்கொள்ள பெண்டிரும் இவர்களை அணுகித் தக்கன கேட்க விழைந்துள்ளனர்.

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே என்று தனிமனிதன் வாழ்வில் கண்டநெறி பலரால் பின்பற்றப் பட்டது மட்டுமன்றி அரசனுல் ஆணையாகவும் (சட்டமாக) ஆக்கப்பட்டமை நாம் அறியக் கிடக்கின்றது. ஒத்த பண்புள்ள ஆணும் பெண்ணும் தாமே எதிர்ப்பட்டுக் காதலித்துக் கடிமணம் புரிந்து வாழ்ந்தனர். இக்காதல் வாழ்வில் பொய்யும் வழுவும் தோன்றிய காரணத்தால் பலரறிய மணமுடிக்கும் வழக்கம் மணச்சடங்கு என ஆக்கப்பட்டு இன்றியமையா ஒன்ருக ஆக்கப்பட்டது.

பண்டைத் தமிழர் வாழ்க்கையை அகம் புறம் எனப்பாகுபாடு செய்து ஆய்ந்தனர். அகன் ஐந்திணையில் முதல் கருப்பொருள்களைக் கண்டு மனிதர் களுக்கேயுரிய ஒழுக்கத்தை உரிப்பொருளாக்கிப் பாடினர். வாழ்வை இல்லறம் துறவறம் எனப்பிரித்து ஒவ்வொன்றற்கும் ஏற்ற அறத்தைக் (நீதியைக்) கண்டனர்.

### 1. தொல்காப்பியத்தில் (இலக்கணத்தில்) அறக்கூறுகள்

அறந்தோய்ந்த நெஞ்சினரான தமிழ்ப்பெருங்குடியின் வாழ்வியல் நெறி முறைகளைப் படம்பிடித்துக் காட்டுவதே தொல்காப்பியப் பொருளதிகாரம் என்பர். இதன்கண் அகப்பொருள் புறப்பொருள் தொடர்பான செய்திகளைக் கூறுமிடங்களில் அறக்கூறுகள் காணப்படுகின்றன.

#### அகப்பொருள் தொடர்பான செய்தியில் அறக்கூறுகள்

தொல்காப்பியத்தில் அகப்பொருள் பற்றிக்கூறும் பல்வேறிடங்களில் அற நோக்குகள் மணியிடைத்திகழ்தரு நூல்போல் (மறைந்து) காணக்கிடக்கின்றன. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களுக்கும் முறையே மாயோன், சேயோன், வேந்தன், வருணன் முதலியோர் நிலத்தெய்வங்களாகக் குறிக்கப்படுகின்றனர். எந்த வொரு நிலமாயினும் அதற்கென ஒருதெய்வம் இருந்தால்தான் அறம்தழைக்கும்; அரும்பயன் விளையும் என்று கருதினர். அன்றி யும் தம்மை இயக்கும் ஒருதெய்வம் இருப்பதை நினைவில் கொள்ளும்போதுதான் எங்கும் உளனொருவன் என்றஞ்சி அங்கங்குலைந்து மக்கள் தம்மை அறத்தினின்று வழுவாமல் காத்துக்கொள்ளவியலும் என்பதனை மனத்திற்கொண்டே தொல் காப்பியனர் அவ்வந்நிலத்திற்குரிய தெய்வங்களைச் சுட்டினர் எனக்கருதுவர்.[3]

அடியோர், வினைவலர் ஆகியோர் கைக்கிளை பெருந்திணைகளில் மட்டும் பாடுதற்குரியவர்கள் எனத் தொல்காப்பியர் கூறுவதற்குக் காரணம், இவர்கள் அறம் பொருள் இன்பங்களில் வழுவி வாழ்பவர்கள் என்பதால்தான். அவ்வாறு வழுவாது வாழ்கின்ற ஒழுக்கமுள்ளவர்களே அன்புடை ஐந்திணையில் பாடுதற்குரிய தலைமக்களாகக் கருதப்படுகின்றனர். ஒரு காலத்தில் 'ஐந்திணையில் பாடுதற்குரிய தகைமை பெற்றுத் தலைமக்களாக விளங்கியவர்கள் பிறிதொரு காலத்தில் அறம், பொருள், இன்பங்களில் வழுவிய நிலையினராயின் அவர்கள் ஐந்திணையில் பாடுதற் குரிய தகுதியை இழந்துவிடுவர் எனக்கூறப்படுவது சிந்திக்கத்தக்கது. மேலும்,

பண்பால் உயர்ந்தவர்களை அடிப்படையாகக் கொண்டே உலகவழக்கு நடை பெற்றது என்ற செய்தியும் காணக்கிடக்கிறது.

பிரிவுக்குரியவர்கள் யார் யாரெனக் கூறும்போது ''ஓதலுந்தூதும் உயர்ந் தோர்மேன'' எனக்குறிப்பிடுகின்ருர். ஒழுக்கத்தில் சிறந்த உயர்ந்தோர் வெளி நாட்டுக்கோ வேறிடத்துக்கோ சென்ருல் அறவுணர்வுடைய அவர்களால் தன்னுட் டின் பண்பும் பெருமையும் காப்பாற்றப்படும் எனக் கருதியே இவ்வாறு கூறி யிருக்கலாம். பிரிவு, பொருள்தேடுதல் நோக்கமாயினும் நல்லொழுக்க அடிப் படையிலேயே அதனை ஈட்ட வேண்டும் என்பதனை 'உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கந்தான்' எனத் தெளிவாகக் குறிப்பிடுகின்ருர். எந்த நாட்டிலேனும் அறம் அழியுமானுல் அந்நாட்டில் ஆக்கம் அருகும், அமைதி அழியும், பண்பாடு பாழ் படும், மக்கள் மாக்களாவர். அற அழிவிற்குப் பல்வேறு காரணங்கள் உண்டு. வற்கடம் வாட்டல், பிணிபெருகி நிற்றல், செறுபகைமிகல், மாறுபாடு கொண்ட பல்வேறுகுழுக்கள் மக்களை மயக்கி உட்பகைபெருகி உலாவரல், கொலைவேட்கை மிக்க உயர்நிலை அலுவலர்களின் இழிசெயல்கள் போன்றவற்ருல் அறம் அழியும் என்பர். இவற்ருல் நாடு பாழ்பட்டால் - முறைமை தப்பியவழி அந்நாட்டில் தப்பாது அறம் நிறுத்தற்பொருட்டும் அரசனும் அவனைச்சார்ந்தோரும் பிரிவர் என்பதனை,

> ''முல்லை முதலா சொல்லிய முறையாற்
> பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்......பிரிவே

என்ற வரிகள் உணர்த்தும். மேலும் அறநெறிகளை எடுத்துரைப்பதற்காகவும், அவற்றைக் காப்பதற்கான செயல் முறைகளில் ஈடுபடுவதற்காகவும் தலைமகன் பிரிவதுண்டு என்ற செய்தியும் சிந்திக்கத்தக்கது.

இல்லறத்தில் ஈடுபடும் தலைமக்களின் அடிப்படை நோக்காக அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையே தொல்காப்பியம் கருதுகின்றது என்பதனைக் களவியலின் தொடக்க நூற்பாவில் வரும் 'இன்பமும், பொருளும், அறனும் என்ருங்கு அன் பொடு புணர்ந்த ஐந்திணை', என்னுந்தொடர் வெளிப்படுத்துகின்றது. தலை மக்களுக்குரிய ஒப்புமைப் பண்புகளைப்பற்றி சொல்லுகின்றபொழுது கூறும் பத்து பண்புகளும் அறத்தின் ஆண்மைபெற்றே விளங்குகின்றன. தலைமகனுக்குரிய பண்புகளைச் சுட்டுமிடத்து அருள்மிகவுடைமை அன்புதொக நிற்றல் என்ற தொடர் வருகின்றது. இத்தொடரும் அறத்தின் அடிப்படைகளை எடுத்துரைப்பதாய் அமைந்துள்ளது.

**அறத்தை யுணர்த்தும் தனித்துறைகள்**

அகப்பொருள் துறைகளுள் அறத்தொடுநிற்றல், உடன்போக்கு முதலியன அறத்தையுணர்த்தும் தனித்துறைகளாக ஒளிர்கின்றன.

**அறத்தொடுநிற்றல்**

அறம் என்பது இங்கு பெண்ணுக்குரிய முதற்பண்பான கற்பையே குறிக்கின்றது. கற்பெனுங் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்ருேர்க்கு வெளிப்படுத்துதல் என்பது இத்துறையின் பொருள். களவொழுக்

கத்தைப் பெற்றோருக்கு அறிவித்தல் தோழியின் நோக்கம் இல்லை. தலைவி ஏற்கனவே கற்பு நெறிப்பட்டுவிட்டாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே அவள் நோக்கமாகும். இந்த நன்னோக்கம் சங்கப்புலவர்களின் நெஞ்சைப் பிணித்தது. அதனால் ஐம்பத்தொரு பாடல்கள் காணக்கிடக்கின்றன. வேறுவழி யெல்லாம் பயனற்றுப் போனபோது அறத்தொடு நிற்றல் என்னும் நேர்நெறியைத் தலைவியும் தோழியும் மேற்கொள்வார்கள்.[4] நாணத்தைக்காக்க உயிர்விடுக, கற்பைக்காக்க நாணத்தைவிடுக என்பது பண்டைத் தமிழ்மகளிர் மனப்போக்காக இருந்தது. கபிலர், மாற்றரசன் ஆரியன் பிரகத்தன் என்பானுக்குத் தமிழின் சிறப்பை யுணர்த்த அறத்தொடு நிற்றல் என்னும் இத்துறையமைந்த குறிஞ்சிப் பாட்டினை இயற்றினர் என்பது சிந்திக்கத் தக்கது.

### உடன்போக்கு

அறத்தொடு நிற்கும் துணிவற்ற தலைமகள் தலைமகனுடன் சேர்ந்து இல்லறமாம் நல்லறத்தை இனிதே நடத்த உடன்போக்கை மேற்கொள்வர். தலைமகளின் அன்பால் பிணிக்கப்பட்ட தலைமகனும் அவளுக்கு எள்ளளவும் மனவருத்தம் ஏற்படாது காக்கவேண்டும் என்பதற்காகவே உடன்கூட்டிச் செல்ல உடன்படுவான். எனவே, உடன்போக்கும் அறவுணர்வின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது என்ற கருத்தும் சிந்திக்கத்தக்கதாகும்.[5]

### கண்டோர் கூற்றுவழி வெளிப்படும் அறவுணர்வு

உடன்போக்கு மேற்கொள்ளும் தலைமக்கள்மீது பண்டைத்தமிழ் மக்கள் பரிவும் பாசமும் காட்டினர். அவர்களைத் தம் மக்கள் போலவே கருதி வரவேற்று விருந்தளித்துப் பேணினர். தலைமக்கள் செல்லும் வழிகளைப் பரிவோடு கேட்டு அவ்வழியே செல்வதால் ஏதேனும் துன்பம் உண்டாகுமாயின் அவற்றைப் பக்கு வமாக எடுத்துரைத்தனர். எத்தகைய இடையூறும் இல்லெனின் செல்லும் வழிமுறைகளை எடுத்துரைத்து ஆற்றுப்படுத்தினர். பொழுதின் போக்கைத் தெளிந்து அப்பொழுதில் ஏதேனும் இடையூறுகள் ஏற்படக்கூடும் என்றிருந் தாலும்,, செல்லும் ஊர் சேய்மைத்தாய் இருந்தாலும் தம் இல்லத்திலேயே இரவைக்கழித்துப் பிறகு போக விடுத்தனர். உடன்போக்கால் இடர்பாடுகள் ஏற்படக்கூடும் எனக்கருதினால் அன்போடு மிகப்பக்குவமாக அறத்தை எடுத் துரைத்துத் தலைமக்கள் தன்னில்லம் மீள ஆற்றுப்படுத்தினர். பின்னர் அவர்களே முன்னின்று இருவரையும் சேர்த்துவைத்தனர் என்ற கருத்துகள் சிந்திக்கத் தக்கன. இவ்வாறு இல்லறத்தில் ஈடுபட்ட தலைவனும் தலைமகளும் இன்பம் நிறை வுறப்பெற்று முதுமையெய்திய காலத்தில் அறம்புரி சுற்றமொடு சமுதாயத்திற்கு (மக்கள் வட்டத்துக்கு) அறத்தொடு தொண்டாற்ற வேண்டும் என்று கற்பியலில் கூறும் கருத்து சமுதாய அறம் பேணும் திறத்தைத் தெளிவுபடுத்துகின்றது.

### புறப்பொருள் தொடர்பான செய்திகளில் அறக்கூறுகள்

சங்ககாலத்தில் அகம், புறம்; — அறம், பொருள், இன்பம் என்னும் இருவகைக் கோட்பாடுகள் பெருவழக்கினதாக இருந்துள்ளன. இவற்றுள் முன்னது இலக்கியக் கோட்பாடு; பின்னது வாழ்வியல் கோட்பாடு. வாழ்வியலை அடிப் படையாகக் கொண்டு இலக்கியங்கள் முகிழ்ப்பதால் இருவகைக் கோட்பாடுகளும்

ஒன்றனுள் ஒன்று மயங்கியே வந்துள்ளன. இவற்றுள் புறத்தில் அறம்பற்றிய செய்திகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன என்பது உண்மை. தொல்காப்பியம், புறத்திணையியலில் வாகைத்திணையிலும் காஞ்சித்திணையிலும் அறம்பற்றிய கருத்துகளை மிகுதியாகக் கூறிச்செல்கின்றது. வாகைத்திணைக்குரிய துறைகள் பதினெட்டனுள் முதல் ஒன்பதினை மறவாகையாகவும் அடுத்துவரும் ஒன்பதினை அறவாகையாகவும் இருகூறிட்டு, அறவாகைக்குரிய துறைகளாக,

''பகட்டி னானும் ஆவி னானும்
துகட்டபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கட்டில் நீத்த பாலி னானும்
எட்டுவகை நுதலிய அவையத் தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலி னானும்'' (தொல்காப்பியம் கற்பியல்)

எனக் குறித்திருப்பது புறத்தில் அறத்திற்குரிய சிறப்பினைத் தெளிவாகப் புலப்படுத்துகின்ற தெனலாம். காஞ்சித்திணைக்குரிய வரையறையும் அத்திணைக்குரிய பெருங்காஞ்சி, முதுகாஞ்சி, முதுமொழிக்காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி முதலிய அறத்தையுணர்த்தும் தனித்துறைகளும் அறத்தின் வீறினை நெறியப்படுத்தி உரைப்பனவாகும்.

## 2. இலக்கியத்தில் அறக்கூறுகள்

சங்க இலக்கியத்தில் கலித்தொகையிலேயே மிகுதியான அறக்கருத்துகள் இடம்பெற்றுள்ளன. அப்பாடல்கள் அறத்தை வலியுறுத்த வேண்டிய காலச் சூழலில் எழுந்தமையே அதற்குக் காரணமாகும்.

### அகப்பாடல்களில் அறக்கூறுகள்

காதல் பற்றிப்பேசும் அகப்பாடல்களில் ஆங்காங்கே அறக்கருத்துக்கள் ஒளிரும் மணிகளாகக் காணப்படுகின்றன. சில பாடல்களில் பாடலொடு, ஒன்றி காணப்படுகின்றன சான்றாக,

ஆற்றுதல் என்பது ஒன்றலந்தவர்க் குதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்;
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை;
அறிவெனப் படுவது பேதையர் சொல்நோன்றல்;
செறிவெனப் படுவது கூறியது மாறாமை;
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை;
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வௌவல்
நெய்தற் கலி 16)

— என அறவாழ்வுக்கு இன்றியமையா பண்புகளான ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை முதலியவற்றிற்கு வரை யறுத்த இலக்கணங்கூறுவது போன்று கலித்தொகை கூறுவது பண்டைத்தமிழர் —என அறவாழ்வுக்கு இன்றியமையா பண்புகளான ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு,, அறிவு. செறிவு, நிறை, முறை, பொறை முதலியவற்றிற்கு வரையறுத்த இலக்கணங்கூறுவது போன்று கலித்தொகை கூறுவது பண்டைத் தமிழர் அறவாழ்வில் ஆழ்ந்த பற்றுடையவர்களாக விளங்கியமையைப் புலப் படுத்தும். முன்னோர், பிறர்மனம் புண்படாது நடந்து கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த பண்பு கொண்ட மக்களையே நாகரிகமுடையவர்களாகக் கருதி னர். தனக்குக் கொடிய நஞ்சினைத் தருகின்ற செயலைக்கண்டும் அதனை மறுப் பின், கொடுக்கின்ற நண்பனின் உள்ளம் வருந்துமே என்றெண்ணி அதனையும் மனமகிழ்வோடு ஏற்றுக்கொள்வதே சிறப்பு என்பதனை,

''முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர். *(நற்றிணை 355)*

என நற்றிணை நவில்கின்றது. இதனால் பண்டைத்தமிழரின் அறந்தோய்ந்த நெஞ்சின் ஆழத்தை நாம் உணரமுடிகின்றது.

அன்புடன் கூடிய இல்வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது என்ற கருத்தும், அப்பொருளை அறத்தின் வழியே ஈட்டுதல் வேண்டும் என்ற கருத்தும் பல்வேறிடங்களில் காணப்படுகின்றன. முன்னோர் ஈட்டிய செல்வத்தில் வசதி யாக வாழ்தலும், பொருள்தேடும் முயற்சியின்றி சோம்பியிருத்தலும் அற மன்று; இழிவானது என்பதனை,

''உள்ளது சிதைப்போர் உளரெனப் படார்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு'' *(குறுந்தொகை 283)*

என்றும், தீயவழியில் வரும் செல்வம் ஒவ்வாது; அழியும் என்பதனையும் 'அறனும் அன்றே ஆக்கமும் தேய்ம்' என்றும் வாழ்க்கையில் அறம்பல புரிவதற்கும், பிறர் கடைவாயிலில் சென்று நிற்காத நிலைமைக்கும் பொருள் இன்றியமையாதது என்பதனை,

'அறங்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும்' — *(அகம் 155)* — என்றும்

நாளும் வருந்திப் பொருள் தேடா திருப்பின் —

'அறந்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த
கேளிற் கேடுபல ஊன்றலும் நாளும்
வருந்தா உள்ளமொடு இருந்தோர்க் கில்லை' *(அகம் 173)*

என எச்சரித்தும் கூறப்படுதலைக்காணலாம். மேலும், இவ்வாறு பொருள்தேடி புகழ் குவித்து வாழ்ந்தாலும் இல்வாழ்வு உண்மையான அன்பினை அடிப்படை யாகக் கொண்டே இயங்குகின்றது என்ற உண்மையும் சுட்டப்படுகின்றது. வறுமையிலும் செம்மையான இன்பம் பெறலாம்; உண்மையான அன்பிருந்தால் என்பதனை

ஒரோஒ கைதம்முட் தழீஇ – ஒரோஒ கை
ஒன்றன் கூருடை உடுப்பவரே யாயினும்
ஒன்றிஞர் வாழ்க்கையே வாழ்க்கை.''

எனக் கலித்தொகை கவின்பெற எடுத்துரைப்பதால் அறியலாம்.

**உவமைகள் மூலம் வெளிப்படும் அறக்கூறுகள்**

பண்டைத்தமிழ் அகப்பாடல்களில் உள்ள உவமைகளில் வரலாற்றுச் செய்திகள் இடம் பெற்றதைப்போன்றே அறக்கருத்துகளும் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்ருகும். எட்டுத்தொகை நூல்களோடு ஒப்பிட பத்துப் பாட்டில்வரும் அறவுவமைகள் அருகியே யுள்ளன. எட்டுத்தொகை நூல்க ளுள்ளும் கலித்தொகையில் அறவுவமைகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. பத்துப் பாட்டில் குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலே, பெரும்பாணுற்றுப்படை, பொருநராற்றுப்படை ஆகிய நான்கு நூல்களில் மட்டுமே அறவுவமைகள் இடம் பெற்றுள்ளன. பயின்று, பழகித், தேர்ந்து, தெளிந்து, அறிந்த உண்மைகளே சங்கப்பாடல்களில் உவமைகளாகக் கையாளப்பட்டுள்ளன. குறுந் தொகையில், தோழி தலேவனே நோக்கி, 'களவுக்காலத்து இன்பம் நல்கிய தலேவியைக் கற்புக் காலத்தும் மறவாது வாழ்க'. என்று கூறுமிடத்து, தாழ்வுற்றபோது தனக்கு ஒருவர் செய்த உதவியினே அரசுகட்டில் ஏறியபின்னர் மறந்துவிடும் மன்னனேப் போல் மறக்காதே எனக்கூறுகின்ருள்,

''கெட்டஇடத்து உவந்த உதவிக்கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல்
நன்றி மறந்து அமையாய் ஆயின்'' (குறுந்தொகை 225)

என்பதே அவ்வரிகள். செய்நன்றி மறவாமை என்னும் பண்பு இவ்வுவமைமூலம் விளக்கப்படுகின்றது. தலேவன் பிரிந்தால் தலேவியானவள் அழிவாள் என்பதற்கு,

''ஆள்பவர் கலக்குற அலேபெற்ற நாடுபோல்
பாழ்பட்ட முகத்தோடு பைதல் கொண் டமைவாளோ'' (கலித்தொகை)

– என நிலேயற்ற ஆட்சியில் நாட்டில் அறம் அழிய மக்கள் அமைதியிழந்து வாடுவதுபோல என்ற உவமையைக் கலித்தொகை கையாளுகின்றது. மற்ருே ரிடத்தில் மாலேமயக்கத்தை வருணிக்கும்போது கூறப்படும் உவமை அறவாழ் வின் இன்றியமையாமையை எடுத்தியம்புவதாய் உள்ளது. கல்லாதும் அற நெறியைப் பின்பற்ருதும் பெற்ற வாழ்வின் முதிர்ச்சி, இருளும் பயனின்மையும் கொண்டது போல தனிமையும் மயக்கமும் தருகின்ற மாலேப்போது என்பதனே

கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம்போல்
புல்லிருள் பரந்தரூஉம் புலம்புகொள் மருண்மாலே'' (கலி. 130)

என அழகுபட உவமிக்கப்பட்டுள்ளது. வேனிலில் வெப்பத்தால் மரங்கள் தீப்பற்றி எரிந்தன என்ற செய்தியைக் கூறுமிடத்து பொய்சாட்சி சொன்னவன் தீண்டிய பச்சைமரமும் கருகிடுவது போல என்ற உவமை,

''கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி
யெரிபொத்தி'' – (கலித்தொகை)

என அறநெஞ்சத்தின் அழகை வெளிப்படுத்துகின்றது. வறுமை கொடிது, கொடை புகழைத்தரும், கொடுப்போர் செல்வம் பெருகும் போன்ற கருத்துகளும், அடக்கமுடைமை, உயிர்க் கொலை செய்யாமை, எளியோரை இகழாமை, சான்ருண்மை, புறங் கூருமை, முதலியபொது அறங்களும், அரசியலறங்களும் சங்க அகப்பாடல்களில் உவமைகளின் வழி வலியுறுத்தப்படுகின்றன.

## உள்ளுறை

தலைவனிடம் அவனது குறையை நேர் சொல்லால் கூறுவது நாகரிக மன்று; நாணுடைய நா அவ்வாறு நவிலாது. நாணில் செயல்களை நாணுடைய மொழிகளால் வெளிப்படுத்துவதே உள்ளுறையாகும். இது பண்பட்ட இலக்கியகருவி. சங்க இலக்கியத்தில் உள்ளுறை குறிப்பாக நான்கு நிலைகளில் அமைந்துள்ளது. (1) கேட்போர் நிலையைத் தாம் முழுவதும் உணர்ந்து விட்டமையைச் சுட்டல் (2) கேட்போருக்கு தம் எதிர்ப்பையுணர்த்தி நெறிப்படுத்தல், (3) தம் நிலையை உய்த்தறியும்படி சில சொல்லல் (4) தன் உணர்வு வெளிப்பாடு. இவ்வகையில் குறுந்தொகையில் மட்டும் ஐம்பதுக்கும் மேற்பட்ட உள்ளுறைகள் அமைந்துள்ளன என்பர்.[6] தவறு செய்கின்றவர்களைப் பண்பாக எடுத்துச் சொல்லித் திருத்தும் அறவுணர்வு இவ்வுள்ளுறையில் அமைந்திருத்தலை உணரலாம். பரத்தையிற் பிரிந்த தலைமகனை நோக்கித் தலைவி கூறுவதாக அகநானூற்றில்,

'சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து
அந்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முன்றறைப் பிரம்பின் மூதரிற் செறியும்'' (அகம் 6)

என்ற பகுதி வருகின்றது. இதன் பொருள்: சுடர்போல் விளங்கும் தாமரைகள் மலர்ந்துள்ள நீர்செறிந்த வயற்புறத்தில் புகுகின்றது ஒரு நீர் நாய். அது தன் போக்கில் போவதோடு அமையாது வள்ளைக் கொடிகளை உழக்கி மயக்குகிறது. அந்தக் கலக்கமும் மயக்கமும் தெளியுமுன்னர் வள்ளைக்கொடியிலே வுள்ள வாளை மீன்களை மேய்கிறது. பின்னர் ஒன்றும் அறியாதது போலத் தனக்குரிய பிரப்பம் புதரிலே தங்கிவிடுகிறது. அத்தகைய வளமான நாட்டுக்குத் தலைவனே — — என்பதாம்.

இந்த இயற்கை ஓவியத்தின் ஊடே, தலைவியின் இதயத்தில் குமுறியெழும் குற்றச்சாட்டும் அவனைத் திருத்த எண்ணும் அறவுணர்வும் உள்ளுறைந்துகிடக்கின்றது. பரத்தையின் உறவினரை மயக்கி, அவரிடை வாழும் பரத்தையின் நலம் கவர்ந்தபின் ஒன்றுமறியாதவன் போல் தன் பழைய இல்லம் நாடி, ஒப்புக்குத் தங்குகின்ற தலைவனே! என்பதே உள்ளுறைந்து கிடக்கும் பொருளாகும். இவ்வாறு தலைவனின் புறத்தொழுக்க இயல்பினைச் சொல்லாமல் சொல்லித் தலைவனின் குற்றத்தை அவன் உள்ளம் உணரச் செய்கின்ருள் தலைவி. இப்பண்பட்ட தலைவியின் மறைபடு உவமையால் (dark Similitudes) தலைமகன் தன் தவறுணர்ந்து அறவுணர்வைப்பெறல் ஒல்லுமன்ரே? காதலர்களிடையேயுள்ள ஆழ்ந்த உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் குறிப்பால் புலப்படுத்த பெரும்பாலும் வண்டும், எருமையும், மீனும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வுள்ளுறையுவமத்திலும் அறக்கூறுகள் வெளிப்படுகின்றன.

**இறைச்சி**

உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாகக் கூறப்படுவது இறைச்சிப் பொருள். இதனைத் தொல்காப்பியர் உடனுறை என்றுங்கூறுவர்.[7] தலைவனொரு வன் நீண்ட நாட்களாகக் களவு ஒழுக்கத்தில் ஒழுகி வருகின்றான். தலைவி யின் வாழ்வு செப்பமுற அமைய வேண்டுமென்ற அறநெஞ்சுடைய தோழி இதனைக் காண்கின்றாள். தான் அடிக்கடி குறியிடம் அமைத்துக் கொடுத்தால் தலைவன் தலைவியை மணம்புரிந்து கற்புநெறியில் ஒழுக விரும்ப மாட்டான் என்று தோழி எண்ணுகின்றாள். எனவே, தலைவனை வழியருமை கூறி இனி இரவுக் குறிக்கு வராதே எனக் கூறுகின்றாள். தலைவன் வரும் வழியில் காட் டாற்றின் வெள்ளத்தைக் கடந்து இரவில் வருவது தீது என்றும், அவனுக்குத் தீங்கு நேரின் தலைவி உயிர் வாழமாட்டாள் என்றும் கூறுகின்றாள். இரவில் வராதே எனக்கூறும் தோழி ‘பகல்நீவரினும் புணர்குவை’ எனக் கூறுகின்றாள்.

..................................’ எம்படப்பை
கொடுத்தேன் இழைத்த கோடுயர் நெடுவரைப்
பழந்தூங்கு நளிப்பில் காந்தளம் பொதும்பில்
பகல்நீ வரினும் புணர்குவை
......................தடமென் தோளே’’ (கபிலர்)

இதனை மேற் போக்காக நோக்கில் இரவில் வராதே பகலில் வந்தால் தலைவியுடன் இணையலாம் என்று பொருள்படும். தோழி கூறிய சொற்களை ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். மலைப்பகுதியில் கொடுத்தேன் இழைத்த கோடுயர் நெடுவரை பழந்தூங்கு நளிப்பு; காந்தளம் பொதும்பு; இவை உள்ளன. தலைவியோடு தலைவன் தனித்து இன்பம் அனுபவிக்க ஏற்ற இடம் என்றும் கருதலாம். ஆனால், கூறிய பொருளுக்கு புறம்பாக ஒன்று இதில் இருக்கின்றது. அதாவது, மலையில் தேன்மிகுந்துள்ள காரணத்தால் அத்தேனை எடுக்கப் (பகலில்) பலர் அங்கு வருவர். மரச்செறிவிலுள்ள கனிகளைப்பறிக்கவும் பலர் வருவர்; புதரிலுள்ள காந்தள் மலர் கொய்வதற்கும் பலர் வருவர். எனவே, பகற் குறியும் உனக்குக் கிட்டாது. தலைவியுடன் தனித்து ஆரா இன்பம் நீ அனுப விக்க வேண்டுமானால், மணம் புரிந்து இல்லறத்தில் இன்பம் பெறுக எனத் தோழி தலைவனை முறையான வாழ்வுக்கு ஆற்றுப்படுத்துகின்றாள். இவ்வாறு கற்பு நெறிப்படுத்தும் தோழியின் அறவுணர்வை இறைச்சிப்பொருளில் நாம் காணுகின்றோம். மேலும், அறனிலி, அறக்கழிவுடையன, அறஞ்சாரான், அறஞ்செய்திங்கள், அறந்தலைப்பட்ட போன்ற அறத்தை உள்ளடக்கிய தொடர் களும் காணப்படுகின்றன. (பின்னிணைப்பு)

**புறப்பாடல்களில் அறக்கூறுகள்**

புறப்பொருளாராய்ச்சி மக்களின் அறவுணர்வு, பொருளுணர்வு, புகழ்வேட்கை, வீடுபேற்றுவிழைவு முதலியவற்றை நன்கு விளக்கிக்காட்டும் வீறுடையதாகும் என்பர்[8] எனவே, அகப்பாடல்களைவிட புறப்பாடல்களில் மிகுதியாக அறக்கருத்துகள் இடம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் இல்லறத் தார்க்கும் துறவறத்தார்க்கும் அரசர்க்கும் உரிய அறநெறிக் கருத்துகள் நூலின் இடையிடையியே இடம் பெற்றிருக்கின்றன.[9] எட்டுத்தொகையுள் ஒன்றான

புறநானூற்றில் அறத்தை உணர்த்தும் பாடல்கள் மிகுதியாக வுள்ளன. குறிப்பாகப் பாடாண்திணையில் செவியறிவுறூஉத் துறையில் அமைந்துள்ள பாடல்களும், காஞ்சித்திணையில் பொருண்மொழிக்காஞ்சி, பெருங்காஞ்சி, முதுமொழிக்காஞ்சி என்ற துறைகளில் அமைந்துள்ள பாடல்களும் குறிப்பிடத் தக்கன. பாண்டியன் அறிவுடை நம்பிக்குப் பிசிராந்தையார், மக்களிடத்தில் முறையறிந்து வரி கொண்டால் கோடியாத்து நாடுபல நந்தும், என்றும் முறைதவறி வரிவசூலித்தால், ''யானை புக்க புலம்போலத்தானும் உண்ணுள் உலகமுங் கெடுமே''. என்றும் கூறுகின்ருர். இப்பகுதியில் குடிமக்கள்பாலும் கொற்றவன்பாலும் புலவர்கொண்டிருந்த அன்பும், நாட்டுநலத்தில் ஈடுபாடு கொண்ட அறநெஞ்சும் விளங்கக் காண்கின்ருேம். இவ்வாறு, செவியறிவுறுப் பனவாக புறநானூற்றில்மட்டும் எட்டுப்பாடல்கள் முற்பகுதியில் அமைந்து அறமுறைக்கின்றன.

காஞ்சித்திணையில் உள்ள பாடல்களில் பல, மனித இனத்துக்கு இருவகை உண்மைகளை யுணர்த்துகின்றன. ஒன்று நிலைபேறில்லா இவ்வுலக இயல்பைப் பலவகையிலும் பற்றியொழுகுவதால் உண்டாகும் துன்பத்தைப் புலப்படுத்துவது. இரண்டு, நிலைபேறற்ற இவ்வுலகவாழ்க்கையில் மனிதன் பாங்கருஞ் சிறப்பைப் பெறுவதற்கு முயலவேண்டும் என்று அறிவுறுத்துவது. இவ்விரு அறக் கருத்துகளும் எக்காலத்தவருக்கும் பயன்படும் வகையில் அமைந்துள்ளன. இத்திணையில் அமைந்த பாடல்களே, பின்னர் தனி நீதிநூல்கள் வளர்ச்சியுற்றமைக்குக் கருமுதலாக அமைந்தன என்பர். பக்குடுக்கை நன்கணியார் பாடிய பெருங்காஞ்சித்துறைப் பாடலில்,

ஓரில்லத்தில் சாப்பறை முழுங்குகின்றது; மற்ருெரு இல்லத்தில் மணத்திற்குரிய மங்கல இசைக்கருவிகள் இசைக்கின்றன. புணர்ந்தவர் பூக்களால் பொலிவு பெறுகின்றனர்; பிரிந்தவர்கள் தம் கண்களில் நீர்வழிய துன்பமே உருவாகக் காட்சியளிக்கின்றனர். இந்த இருவேறுபட்ட காட்சியைக்கண்ட புலவர் 'படைத்தோன் மன்ற பண்பிலாளன்' எனச் சாடுகின்ருர். முடிவாக,

'இன்ன தம்ம இவ்வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே' — எனக் கூறுகின்ருர்.

முரண்பட்ட இவ்விருகாட்சிகளும் நம்நெஞ்சில் நிலைத்து இவ்வுலக இயல்பை சிந்திக்கச் செய்கின்றன. இத்தகைய கருத்தமைந்த (பெருங்காஞ்சித்துறை யமைந்த) ஒன்பது பாடல்கள் புறநானூற்றில் பிற்பகுதியில் அமைந்து அறத்தின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றன. அறவுணர்வு நெஞ்சில் ஆழமாகப் பெற்ற குடபுலவியனர், பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறமுறைக்கும் பகுதியில் (முதுமொழிக்காஞ்சித்துறையில்) 'நீ நாட்டில் நீர்நிலை பெருகச் செய்தல் அறம், பொருள், இன்பம் ஆகியவற்றை அடைந்தவனய்' எனக் கூறுகின்ருர்.

'உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே' — என்று

அவர் அடுக்கிச்சொல்லும் பாங்கு அறிந்து மகிழத்தக்கது. இவ்வாறு (முது மொழிக் காஞ்சித்துறையில்) அறமுறைக்கும் பாடல்கள் ஐந்து புறநானூற்றில் முற்பகுதியில் காணப்படுகின்றன. உயிருக்கு இருமையும் உறுதி தருகின்ற மெய்ப்பொருளைச் சான்றோர்கள் ஒருவனுக்கு எடுத்துக்கூறும் முறையிலமைந்த (பொருண் மொழிக்காஞ்சித்துறை) அறமுறைக்கும் பாடல்கள் பதினேழு புற நானூற்றின் முற்பகுதியில் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கனியன் பூங்குன்றனரின்

''யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
..............................................
..............................................
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'' (புறம் 192)

என்ற பாடலாகும். இதில் உலகளாவிய அறநோக்கும், மனித இனத்துக்குரிய பொதுமையான அறச் செய்தியும் இடம்பெற்றுள்ளமையறிய இன்பம் பயக்கும். நீதியை மட்டும் நேரிடையாகக் கூறும் பாடல்கள் புறநானூற்றில் மட்டும் முப்பத்துஒன்பதும், இவையன்றி அறத்தின் ஆற்றலையும் சிறப்பையும் அறிவிக்கும் பாடல்கள் முப்பத்துமூன்றும், நிலையாமை இயல்பை உணர்த்தும் கையறு நிலைப்பாடல்கள் நாற்பதும், பொதுவாக நானூறு பாடல்களில் ஏறக் குறைய அறத்தை யுணர்த்தும் பாடல்கள் நூற்றிருபதும் இடம் பெற்றுள்ளன என்ற கருத்து பண்டைத் தமிழர் வாழ்வில் அறம் வீறுகொண்டு விளங்கிய தன்மையினைப் புலப்படுத்தும்.

### உவமைகள் மூலம் வெளிப்படுவன

அகப்பாடல்களில் காணப்படுவது போன்றே புறப்பாடல்களிலும் உவமைகளில் அறக்கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. நீதி வழுவாது நடுநிலை யோடு வாழ்தல் வேண்டும் என்ற உயர்ந்த அறக்கருத்து,

'குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு' — (பெரும்பாண்) என்று

காய்கதிர்ச் செல்வனை உவமை காட்டி விளக்கப்படுகின்றது. சோழன் நலங் கிள்ளியைப் பாராட்டவந்த கோவூர் கிழார் அவனுடைய வெண்கொற்றக் குடையானது மற்ற இரு அரசர்களுடைய குடைகள் பின் தொடர்ந்துவர சிறந்து முன்னர்ச் சென்றது எனக்கூறுகின்றார். அதற்கு, அவர் அறத்தையே உவமையாக்கி அறத்துக்கும், பொருளுக்கும், இன்பத்துக்கும் உள்ள தொடர் பினைப் புலப்படுத்துகின்றார். அப்பகுதி,

''சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்து சேண்விளங்க'' — (புறம் 31)

என்பதாகும். இயற்கை நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி வாழ்வின் உண்மைகளை விளக்கி அறவுணர்வூட்டும் பாங்கும் காணப்படுகிறது. வாழ்வில் ஏற்படும் வளர்ச்சியும், தேய்வும், இறப்பும், பிறப்பும் இயற்கையானது என்ற கருத்தை இயற்கைப் பொருளான நிலவின் செயலைக்காட்டி நம்நெஞ்சில் நிலைக்கச் செய்கிறார் ஒருபுலவர். அப்பாடலில்,

'தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து'' — (புறம் 27)

எனக்கூறும் அழகு சிந்திக்கத்தக்கது. மேலும் அறமென்ற சொல்லை உள்ளடக்கி வந்த உவமைகளும் புறப்பாடல்களில் காணப்படுகின்றன.

**தனிமனித சமுதாய அறவுணர்வுகள்**

தனிமனிதனின் ஈட்டமே சமுதாயமாக (மக்கள்வட்டமாக) அமைகிறது. ஆதலின், தனிமனிதனிடத்தில் அறவுணர்வு இருந்தாலொழிய சமுதாயத்தில் அறவுணர்வு தழைக்காது என்ற உணர்வினைப் பெற்றிருந்தனர் பண்டைத் தமிழர்கள். எனவே, பண்டைத் தமிழிலக்கியங்களில் தனிமனிதனுக்குரிய அறம் பற்றியும் பேசப்படுகின்றது. தனிமனிதன் உயர்ந்த அறநெறிகளை மேற்கொண்டு வீறுடன் வாழ்ந்த குறிப்புகளும் காணக்கிடக்கின்றன. 'பண்டைத்தமிழன் வாழ்தல்வேண்டிப் பொய்கூறேன்; மெய்கூறுவல்' என்றும், 'ஈயென இரத்தல் இழிந்தது, ஈயேன் என்றல் அதனினும் இழிந்தது' ஏன்றும் உயர்ந்த உணர்வுகளைப் பெற்று வாழ்ந்தான். அவன் குடி நன்குடையனாக கூடுநர்ப்பிரியலனாக, கொடுநா மொழியலனாக அன்பினனாக வாழ்ந்தான்,. இது போன்று தனி மனிதனின் எண்ணம் சொல், செயல் பற்றிய அறவுணர்வுகள் காணக்கிடக் கின்றன. மனிதசமுதாயத்தில் இடம்பெறுவது இருபிரிவு: ஒன்று ஆண்; மற்றது பெண்.

**பெண்கள்**

பண்டைத்தமிழகத்தில் பெண்கள் இளமையிலேயே அறவுணர்வூட்டப் பெற்று வளர்க்கப்பட்டனர். 'கழிவினும், எதிர்வினும் வழிகொள் நல்லவை யுரைத்து அல்லவை கடிந்து' வளர்க்கப்பெற்றனர். ஆதலின், அவர்களிடம், 'கற்பும் காமமும் நற்பா லொழுக்கமும் மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின் விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்' — ஆகிய அறப்பண்புகள் அமைந்திருந்தன. அதனால், அவர்கள் அறநெறிபிழையாது ஆற்றின் ஒழுகினர். கற்பு நெறியை உயர்ந்த அறமாகக் கொண்டனர். அந்நெறியில் சிறந்து விளங் கினர்.[10] அக் கற்பு 'நன்றி சான்ற கற்பு' ''முல்லை சான்ற கற்பு செயிர்தீர் கற்பு'' 'காமர் கடவுளும் ஆனும் கற்பு' 'கடவுட்கற்பு' 'கடவுள் சான்ற' கற்பு[11] என்று பலவாறு பாராட்டப்படுகின்றது. பிறர் நெஞ்சு புகா பெருங்கற்பு கொண்ட மகளிராக விளங்கினர்.

திருமணத்திற்கு முந்தையநிலையில் பெண்களின் வாழ்வு பெற்றோரைச் சார்ந்தே அமைந்திருந்தது. மலையில் தோன்றும் சந்தனமும், அலைகடலில்

தோன்றும் முத்தும், யாழிற்பிறக்கும் இசையும் தோன்றுமிடத்திற்குப் பயன் படாமல் சென்ற இடத்தைச் சிறப்பித்து சிறப்புறுவதுபோல் புகுந்த இடத்திற்குப் புகழ்தேடித் தருவது பெண்களுக்குச் சிறப்பென்று கருதினர். சிறந்த ஆடவனைக் காதலித்து அவன் வழி ஒழுகுதலே அறமென்றும் அவ்வாறு செல்வது (உடன் செல்வது) அறவழியென்றும் உணர்ந்தனர்.

இல்லறத்தை மேற்கொண்டபெண்கள் மனைக்கு விளக்காக விளங்கினர். கணவனுக்கு ஆற்றவேண்டிய அறுசுவை உணவளித்தல் முதலிய கடமைகளைத் திறம்பட ஆற்றினர். மனைவி அரிதாக முயன்று சமைத்த மோர்க்குழம்பு இனிதாக உள்ளது என்று கணவன் உண்ண அவள் முகம் நுட்பமாக மகிழ்ச்சியை வெளிக் காட்டியது என்று குறுந்தொகை கூறுகின்றது. தலைவி தலைவனைப் பிரிந்து இல்லறத்தில் இருந்த போதும் அவள் உள்ளத்தில் அறவுணர்வே மேலோங்கி நின்றது. நாட்டுக்குத் தீங்கிழைக்கும் பகைவர்கள் சிறுமையடைக, நாடு நன்மை பெற அந்தணர்கள் மந்திரம் ஓதுக, என்ற நினைவுடனேயே தலைவி இருந்தாள் என்பதனை, 'பகைவர் புல்லார்க பார்ப்பார் ஓதுக எனவேட்டோளே யாயோ'' என்ற ஐங்குறு நூற்றுப் பகுதியால் அறிகின்றோம். ஒரு தலைவி

'சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவிற்
பிறப்புப் பிரிதாகுவ தாயின்
மறக்குவேன் கொல்லென் காதலன் எனவே' — எனக்

கூறியதாக நற்றிணை பேசுகின்றது.

### மக்கட்பேறு

நல்ல புதல்வனையீன்று புறந்தருதலைப் பேருகக் கருதினர் என்றும் அவ்வாறு புதல்வரைப் பெற்ற பெண்கள் 'சிறுவர் பயந்த செம்மலோர்' என்றும், 'புதல்வர்ப்பயந்த புகழ்மிகு சிறப்பின் நன்னராட்டி' எனவும் சமுதாயத் தில் பாராட்டப்பெற்றனர். தான்பெற்ற புதல்வன் நாட்டுக்குப்பயன்பட வாழவேண்டுமென்று கருதினர். அவ்வாறு, பயன்படாது பழியேற்ற மைந் தனைப் பெற்ற தாய் அவனுக்குப் பாலூட்டி வளர்த்த மார்பகத்தையே அறுத் தெறிவேன் என்று புறப்பட்டாள் என்றும் புகழுடன் வீழ்ந்த மகனைக்கண்டு ஒரு முதிய தாயின் வற்றிய மார்பகத்திலிருந்து பாலூறிச் சுரந்தது என்றும் புறநானூறு புகல்கின்றது. இல்லறப் பெண்டிர் விருந்து பேணுதலைச் சிறந்த அறமாகக் கொண்டனர். நடு இரவில் விருந்தினர் வந்தாலும் முகம் மாறுபடாது அவர்களுக்கு உணவளித்து மகிழ்ந்தனர் அத்தகைய பெண்டிர்,

'அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின் மெல்லியல் குறுமகள்

— என்றும் 'எல்விருந் தயரும் மனைவி' (91) என்றும் பாராட்டப்பட்டனர்.

கணவனை இழந்த மகளிர் உடன் உயிர்துறத்தலைத் தலையாய அறமெனக் கருதினர். தாமரைப்பொய்கையும் கணவன் ஈமத்தீயும், ஒன்றெனக் கருதினர்.[12] சமுதாயத்தில் அவர்கள் இருந்து ஆற்றவேண்டிய கடமைகள் இருக்குமானல், உயிர் வாழ்ந்தனர். எந்த கடமையை நிறைவேற்ற உயிர் வாழ்கின்றார்களோ, அந்த கடமைக்கு ஊறுஏற்படாது இருக்கவேண்டிய, இயல்பாக எழும் சில

உணர்வுகளுக்குத் தடையமைக்கும் வகையில் கைமைநோன்பு நோற்றனர். உப்பில்லாதசோறு, கீரைக்கறி, கற்படுக்கை முதலியவற்றை மேற்கொண்டனர். இவை அவர்களின் மன ஒருமைப்பாட்டுக்குத் துணை செய்தன.[13] மனைவியை இழந்த ஆடவர் மறுமணம் செய்து கொண்ட குறிப்பு சங்க இலக்கியத்தில்இல்லை.[14] கணவனை இழந்த பெண்கள் கைம்பெண்கள் என அழைக்கப்பட்டது போன்று, மனைவியை இழந்த ஆண்களும் தபுதாரர்கள் என வழங்கப்பட்டனர். இவ்வாறு இருபாலருக்கும் ஒத்த அறம் வழக்கிலிருந்தது. பொதுவாக, நாணம், கற்பு முதலிய செல்வப்பண்புகளும், விருந்தோம்பல், மக்கட்பேறு, கணவனைப் பேணுதல், முதலிய குடும்பச் சிறப்புகளும், வீரம், கல்வி முதலிய சமுதாய நலஇயல்புகளும் அமைந்து மாறாமல் அறம்வளர்க்கும் மங்கையராக விளங்கினர். அறத்துக்கும் இன்பத்துக்கும் துணையாய் (பொருளாய்) வாழ்க்கையில் பெண்கள் அமைந்தனர். பெண்கள் தீவினைக்கும் துன்பத்திற்கும் ஏதுவானவர்கள் என்ற கருத்து சங்கநூல்களில் இடம்பெறவில்லை.

**இல்லறத்துக்குரிய அறம்**

பண்டைத்தமிழர் இல்வாழ்வின் முடிந்த பயனாக அறத்தையே போற்றினர். அன்பும் அருளும் கொண்டு வாழ்ந்தனர். காம உணர்வைவிட ஒத்த அன்பே இல்வாழ்வின் தலையாய பண்பு என்ற பொருள்பட முதுமையிலும் உங்கள் காதல் பொலியட்டும் என்று தோழி வாழ்த்துவதாக நற்றிணை பேசுகின்றது. அப்பகுதி, 'நின்னையன்றி வேறுதுணையில்லா இவள் அண்ணாந்து உயர்ந்த அழகிய கொங்கைகள் தளரவும், பொன்போலும் மேனியில், கருமணிபோலத் தாழ்ந்த நீண்டகூந்தல் நரைக்கவும் முதுமையெய்துவளாயினும், இவளைக் கைவிடாது காத்தல் நின்கடன்' என்பதாகும். கணவன் கருத்தறிந்து ஒழுகும் மனைவியே இல்லறத்தில் போற்றப்பட்டாள். அத்தகைய மனைவியைக் கதிரவன் செல்லுந் திசையை நோக்கி நிற்கும் நெருஞ்சி மலருக்கு ஒப்பிட்டனர். இல்லறவாழ்வில் இன்பம் பொருளில்மட்டும் வருவதன்று ஒத்தஉள்ளமே உயர்ந்த இன்பத்தைப்பயப்பது என்ற அறவுணர்வினைக் கலித்தொகை கழறுகின்றது. கணவன் மனைவியர் இருதலைப்புள்ளின் ஒருயிராக வாழ்ந்தனர். மறுபிறப்பிலும் தன்கணவனே தனக்குக் கணவனாக வாய்க்க வேண்டும் என்ற உயர்ந்தபண்பினை மகளிர் கொண்டிருந்தனர். மனைவியின் கைபட்ட உணவு வானோர் அமிழ்தமாகக் கணவன் கருதினான். இதுபோன்று இல்லறத்தில் ஆடவர்க்குரிய அறமும், மகளிர்க்குரிய அறமும் பொதுவாக அறத்தின் இயல்பும் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன.

**துறவறம்**

துறவறத்தைப் பற்றியும் அதில் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுங்குமுறைகள் பற்றியும் தொல்காப்பியம் பேசுகின்றது. தலைவனும் தலைவியும் இல்லறத்தைச் செவ்வனே நடத்தி மக்கட்பேறு முதலிய பேறுகளைப்பெறுவர். பின்னர்ச் சிறிது காலம் செல்ல அவ்வில்லறத்தில் மனநிறைவுற்று, அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினுஞ் சிறந்த வீட்டின்பத்தினைப் பெறுவதற்கு வழியாகிய வானப்பிரத்தம், சன்னியாசம் முதலியவற்றின்கண் நிற்பர் என்று பேசப்படுகின்றது. இவ்வாறு, இல்லறத்திலிருந்து துறவு மேற்கொள்ளுதல் ஒருபுறமிருக்க முற்றுந்துறந்த முனிவர்களும் பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்தனர். அவர்கள்;

''செற்றம் நீக்கிய மனத்தினர்; யாவதும்
கற்ருேர் அறியா அறிவினர்; கற்ருேர்க்கு
தாம்வரம் பாகிய தலைமையர்; காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர்; இடும்பை
யாவதும் அறியா இயல்பினராக''

இருந்தனர் எனத் திருமுருகாற்றுப்படை கூறுகின்றது.

இப்பகுதியில் துறவிகளுக்குரிய அறங்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளமை புலனுகும். எனவே, இல்லறத்தில் இன்பந்திளைத்து துறவு மேற்கொள்ளுதலும் முற்றத் துறத்தலுமாக இருநிலைகள் தமிழகத்தில் இருந்தமை புலனுகும். இவர்களுக்கெனத் தனித்தனி அறங்கள் வகுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்ருகும்.

**சமுதாயம்**

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் (மக்கள்), 'பால்புளிப்பினும் பகல் இருளினும், நால்வேத நெறி திரியினும் திரியாச் சுற்றமொடு' இனிது வாழ்ந் தனர். ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்ருேர் பலர் வாழ்ந்தனர். மக்கள் இனியவை பெறின் தனித்தனி நுகராது பகிர்ந்து உண்டனர். முல்லையும் குறிஞ்சியும் மயங்கிய வறண்ட நிலப்பகுதியில் (பாலையில்) நெல்லிமரங்களை வளர்த்தனர். வழிச்செல்வோர் அதன் கனிகளையுண்டு நீர்விடாயை மாற்றிக் கொள்வர். இதனை அறந்தலைப்பட்ட நெல்லியங்கனி என்று குறுந்தொகை கூறுகின்றது. பரத்தமையைக் கண்டித்தனர். பொதுமகளிரின் வஞ்சகத்தொழிலை மதுரைக்காஞ்சி இழித்துரைக்கிறது. பிறர்க்கென வாழும் அறிவுணர்வுடைய சான்ருேர்களாலேயே இவ்வுலகம் நிலைத்திருக்கின்றது என்ற உயர்ந்த கருத் தினை மக்கள் தம் உள்ளத்தே மிக ஆழமாகப் பதித்து அவர்களை மதித்து வாழ்ந்தனர். இவ்வாறு அறவுணர்வு வாய்ந்த மக்கள் சேர்ந்து வாழும் ஊர்கள் அறந்திரியாபதியென்றும், அறந்துஞ்சு உறந்தையென்றும், 'அறத்திற் காக்கும் கொற்கையம் பெருந்துறை' யென்றும் பாராட்டப்பட்டது.

**தொழில்**

உழுதுண்டு வாழும் வாழ்வே சிறப்பாகப் போற்றப்பட்டது. அத் தொழிலை உழவர்கள் சிறந்த அறத்தொண்டாகவே கருதினர். சமுதாயமும் அவ்வாறே மதித்தது. ஆதலின், உழவர்கள் மிகச்சிறந்த அறப்பண்புகளைக் கொண்டு தமக்கும் பிறர்க்கும் பயன்பட வாழ்ந்தனர். இச்செய்தி,

''கொலைகடிந்தும் களவு நீக்கியும்
அமரர் பேணியும் ஆவுதி அருத்தியும்
நல்லானேடு பகடு ஓம்பியும்
நான்மறையோர் புகழ் பரப்பியும்
பண்ணியும் அட்டியும் பசுபதம் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசை உழவர்'' — என்ற பட்டினப்பாலை வரிகளால்

அறிந்தின்புறலாம். நாட்டின் பொருளாதாரத்தில் பெரும் பங்கு வகிக்கும் வணிகர்களும், தம் வணிகத் தொழிலே அறத்தொண்டாகவே கருதினர். மக்களுக்கு வேண்டியவற்றைத் தேடித் தொகுத்துத் தரும் தூய பணியாகவே தம் தொழிலைக் கருதினர். இத்தகைய, அறச்சிந்தனை அவர்கள் உள்ளத்தில் அரும்பிய காரணத்தால் பொருள் ஈட்டுதலையே தம் குறிக்கோளாகக் கொள்ளாது, 'வடுவஞ்சி வாய்மொழிந்து தமவும் பிறவும் ஒப்பநாடிக் கொள் வதும் மிகை கொளாது கொடுப்பதும் குறை கொடாது நெடுநுகத்துப் பகல் போல நடுவு நின்ற நன்னெஞ்சினேராக' வணிகம் புரிந்தனர். இன்றைய நிலையை எண்ண நம் நெஞ்சம் நெகிழ்கிறது. இத்தகைய அறவுணர்வுகள் சமுதாயத்தில் தழைத்திருந்தமைக்கு அறத்தின் அடிப்படையில் அமைந்த ஆட்சி யும் காரணமாக அமைந்தது.

### மன்னனும் மக்களும்

''அறநெறி முதற்றே அரசின் கொற்றம்'' என்பதனை மிகத்தெளிவாக மன்னனும் மக்களும் உணர்ந்திருந்தனர். அறத்தைத் தெளிவுற அறிந்து அறத் தின் வழிநின்று, அறம் வழுவாது மக்களைக் காக்கும் அறக்காப்பாளர் களாகவே அரசர்கள் கருதப்பட்டனர். ஒருவகையில் அறத்தை இயக்கும் தலைவனாகவே அரசன் கருதப்பட்டான் எனலாம். முறை செய்து காப்பாற்றும் மன்னனையே மக்கள் இறையெனக் கருதிப் போற்றி மகிழ்ந்துள்ளனர். அரசனின் செங்கோல்,

'அறந்துஞ்சு செங்கோலாக' 'அறம்புரி செங்கோலாக' 'அறங்கடைப் பிடித்த செங்கோலாக' அமையவேண்டுமெனப் பண்டைச் சான்றோர்கள் விழைந்தனர்.

மாதவர் நோன்பிற்கும் மடவார் கற்பிற்கும் காவலன் காவல் இன்றி யமையாதது என்ற உணர்வை மக்கள் பெற்றிருந்தனர். நெல்லும் நீரும் மக்கள் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாயினும் ஆட்சி அறமுடைத்தாய் அமைந்த போதே அவைபயன் படுமாதலின் மன்னனே நாட்டின் உயிர் என்றுங் கருதினர். நாட்டில் அறத்தை நிலைநாட்ட மன்னர் பிரிவதுண்டு என்ற செய்தியைத் தொல்காப்பியம் கூறுவதும் சிந்திக்கத் தக்கது. மன்னர்கள் ஞாயிறன்ன வெந்திறம் வீரமும், திங்களன்ன தண்பெருங்கருணையும், மேகம் போன்ற கொடையும் உடையவர்களாக விளங்குவதே அறமென்றுங் கருதினர். மன்னர்கள் மக்களுக்கு, நமரெனக் கோல்கோடாது பிறரெனக் குணங்கொல் லாது நீதி வழங்கினர். ''தன்னை வழிபடுகின்றவர்களை விரைவாக அறிந்து கொண்டான்; பிறர்கூறும் பழிச்சொற்களைச் செவிமடுக்காதவன். தன் மனத் துக்குத் தீமையெனப்பட்டால் அதற்கான தண்டனையை வழங்கச் சிறிதும் தயங் கான். தவறு செய்தவர்கள் மனந்திருந்தி வந்து காலடிகளை வணங்கினல் மன மிரங்கித் தண்டனையைச் சிறிது தளர்த்துவான் என்று ஒரு மன்னனைப்பற்றிப் புறநானூறு புகழ்கின்றது. கரிகாலன் நரைமுடித்து நீதிவழங்கிய திறமும் எண்ணத் தகுந்தது. நாட்டில் நீதித் துறைத்தலைவனாக அரசனே விளங்கினன். மக்களுக்கு விரைந்து தீர்ப்பு (நீதி) வழங்க பல அறங்கூறவையங்கள் மன்னனால் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றில் நீதி வழங்க ஒழுக்க உயர்வும் அறவுணர்வும்

மிக்க சான்றோர்களேயே அரசன் நியமிப்பான். அவர்கள் நீதியிலிருந்தும் சிறிதும் வழுவமாட்டார்கள். அவ்வாறு வழுவினால், வரும் பழியானது அரசனையே சாரும். அது அவனுடைய செங்கோலைக் கொடுங்கோலாக்கும் என்றஞ்சினர் என்பதனை,

''அறநிலை திரியா வன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தே னாகுக'' (புறம் 71)

என்ற வரிகள் விளக்கும்.

இத்தகைய அறங்கூறவையங்கள் நீதிவழங்குவது மட்டுமின்றி மக்கள் உள்ளத் தேயுள்ள அச்சத்தையும், வருத்தத்தையும், (பிறர்) பொருள்கள் மேல் தோன்றின பற்றினையும் நீக்கி, செற்றம் முதலியவற்றைச் செய்யாமல் பாது காக்குமென மதுரைக்காஞ்சி கூறுவது,சிந்தைக்கு விருந்தாய் அமைகிறது. இத்தகைய அறத்தைக் காக்கும் அறமன்றங்கள் மட்டுமல்லாமல், ஊர்களில் ஊர்ப் பொதுமன்றங்களையும் அரசன் அமைத்திருந்தான். அம்மன்றங்கள் (பொது-இல்கள்) பொதியில் என வழங்கப்பட்டன.

'அவையிருந்த பெரும் பொதியில்', 'முன்னூர்ப் பொதியில்', 'வம்பலர் சேக்கும் கந்துடைப்பொதியில்' 'கலிகெழுகடவுள் கந்தம் பொதியில்' என்றும், அப் பொதுமன்றங்கள் இரத்தி, விளா, பலா, வேம்பு, முதலிய மரங்களுக் கடியில் கூடின, அம்மரங்கள் ஊர் நடுவேயிருந்தன போன்ற செய்திகள் பழந்தமிழ் நூல்களில் காணக்கிடக்கின்றன. அறவுணர்வுக்குக் கல்வி இன்றி யமையாதது என்பதனை யுணர்ந்த மன்னர்கள் நாட்டில் கல்விபெருக வழி வகுத்தனர். கீழ்ப்பால் ஒருவனும் மேற்பால்படுக்கும் கல்வியை, உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்று என்றும், அறிவுடையவன் வழியே அரசும் நடைபெறும் என்றும் எடுத்துரைத் தனர். காவலன் வேண்டுகோளை மதித்தனர். கல்வி வழங்குவது சிறந்த அறம் என்றுணர்ந்த இடங்களில் குலபதி நக்கண்ணனார் என்ற சங்கப்புலவர் ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்களுக்குக் கல்வி பயிற்றி அருந்தொண்டாற்றினர் எனக் குறுந்தொகை கூறுகிறது. நாட்டில் பருவமழை பொய்ப்பினும், பசியும் பிணியும் மிகினும், மன்னன் செங்கோலின்மையே காரணமென்று மக்கள் நம்பினர். இவ்வாறு இயற்கையின் சீற்றத்துக்கு மக்கள் அறத்தை மறந்து மறத்தை மேற்கோள்வதும் காரணமென்று நம்பினர் என்பது,

''சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்
அல்லல் புரிந்தொழு கலான்'' என்ற வரிகளால் விளங்குகிறது.

எனவே, மன்னனும் மக்களும் இயற்கை மாற்றத்துக்குப் பொறுப்பேற்றனர். ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காக்கும் மன்னர்கள் பகைநாட்டின்மீது படை நடத்தும் போதும் அறவுணர்வுடனேயே நடந்து கொண்டனர். போருக்கு முன்னர் ஆநிரைகளை அப்பாற் படுத்துவதும் (வெட்சி) போர் தொடங்குவதற்கு முன்னர் பறையறைவித்து,

''ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறுஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்'' — (புறம் 9)

என்று அறிவித்தனர் என்பது பண்டைத்தமிழரின் போர் அறத்தையுணர்த்தும். மறத்திலும் அறத்தின் ஆற்றல் வேரூன்றி நின்ற தன்மையினை இது விளக்கும்.

தன்மீது படைநடத்தினன் பகைமன்னன் எனக்கேட்டு சினந்தெழும் வேந்தன் கூறும் வஞ்சின உரைகளிலும் அவன் உள்ளத்தின் அடித்தளத்தில் உறைந்துள்ள பண்பட்ட அறவுணர்வு பொங்கியெழுவதைக் கண்டு வியக்கின்றோம். சான்றாக,

''என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணாது
கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக''. (புறம் 72)

என்றவுரையில் குடிமக்கள்மாட்டுக் கொண்டுள்ள அருள்உள்ளம் வெளிப்படு கின்றது.

''புரப்போர் புன்கண் கூற
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே'' — (புறம் 73)

என்பதில் அவன் கொடுக்கின்ற அருள்உள்ளம் விளங்கும்.

''தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே''

என்பதில் ஒருத்திக்கு ஒருவன் என்ற உயர்ந்த அறவுணர்வு வீறுகொண்டு நிற்றல் விளங்கும். இத்தகைய மன்னர்கள் மீது மக்கள் கொண்டிருந்த மதிப்பு மிக உயர்ந்திருந்தது. மன்னனுக்கு நேர்ந்த இன்னலைத் தனக்கு நேர்ந்த தாகவே மக்கள் கருதினர்.

அறத்தின் காவலனாக நின்ற அரசன் மட்டுமன்றி நாட்டில் அறவுணர்வுக்கு சமயவுணர்வும் ஓரளவு துணைபுரிந்தது.

### அறமும் சமயமும்

நானில தெய்வங்கள் மட்டுமல்லாமல் சிவன், பலராமன், ஞாயிறு, திங்கள், திருமகள், நான்முகன், கூற்றுவன் போன்ற கடவுளர்களும், நடுகல்தெய்வம், பேய், பேய்ப்பெண்டிர் போன்ற சிறு தெய்வங்களும் பண்டைத் தமிழர் வழிபாட்டு முறையில் இடம்பெற்றன. பண்டைத் தமிழர் தெய்வக் கோட்பாட்டில் ஊறிநின்றவர். சடங்கு வகையிலும், தத்துவ வகையிலும் சமய நம்பிக்கை சிறப்பான இடம் பெற்றிருந்தது. ஆனால், ஒரு சொல்லால் சமய வழிபாட்டு முறையைக் குறிக்கும் வழக்கம் சங்க காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை.[15] நேர்மையான வாழ்வுக்கு அறம் உதவுகிறது என்றும் அதைக் கடைப்பிடிப்பதால் இம்மையில் இன்பமும் மறுமையில் வீடு பேறும் அடைய முடியும் என்றும் நம்பினர். இந்நம்பிக்கை ஒழுக்கவியலும் சமயமும் இணைந்த

ஒன்றுகக் காணப்படுகின்றது என்பர்.[16] அறம் என்ற சொல் ஆன்மீக நெறியினர் கருதும் சமயம் என்ற பொருளில் சிலவிடங்களில் கையாளப்பட்டுள்ளன.

**அறக்கடவுள்**

அனைத்துக் கடவுளர்களும் அறத்தின் காவலர்களாகவே படைக்கப் பட்டுள்ளனர். என்றாலும், அறக்கடவுள் என்ற ஒன்று தனியே பேசப்படுகின்றது. அறத்தின்மீது மக்கள் கொண்ட பற்றினால் அதனைக் கடவுளாகவே உருவகித்தனர். இவ்வாறு உருவகிக்கும் வழக்கம் பல்வேறு நாடுகளிலும் வழக்கில் இருந்திருக் கிறது. அவ்வறக்கடவுள் நல்வினை செய்தவருக்கு நன்மையையும் தீவினைசெய்ப வருக்குத் தீமையையும் அளிக்கும் என்று நம்பினர். தொல்காப்பியர் இவ் வுருவகக் கடவுளை வினை, பால், அறம் என்ற சொற்களால் குறிப்பிடு கின்றார். இம்மரபு சங்க இலக்கியங்களிலும் இடம் பெறுகின்றது. ஆலத்தூர் கிழார் கிள்ளிவளவனை அறக்கடவுளைப்போன்று நீதி வழங்குமாறு கூறுகின்றார். தன் மனைவி வறுமையால் வாடினாலும் தன் துன்பத்திற்குக் காரணம் அறக்கட வுளே என்று கருதி அவனைப்பழிப்பாள் என்று பெருஞ்சித்திரனார் கூறுகின்றார்[17] இவ்வாறு கூறப்பட்டுள்ள அறக்கடவுள் வைதீக சமயத் தெய்வங்களுள் ஒன்றான தருமதேவதையிலிருந்து வேறுபட்டது என்பது சிந்திக்கத் தக்கது. இறப்புக் கடவுளைக் கூற்று, காலன் எனத் தனியே குறிக்கப்பட்டுள்ளது. இம்மரபு பின்னர் மாற்றத்துக்குள்ளாயிற்று. அறக்கடவுள் வேறு, கூற்றுவன் வேறு என்ற நிலை மயங்கி அறக்கடவுளே கூற்றுவனாகும் என்ற கருத்து வலுப்பெற்றமையை 'அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்' என்றும் 'அல்லவை செய் தார்க்கு அறங்கூற்றாகும்' என்றும் சிலம்பு கூறுவதால் அறியலாம். பின்னர் அறக்கடவுள் என்றாலே கூற்றுவனைக் (தருமதேவனைக்) குறிக்கும் மரபினைத் தமிழிலக்கியங்களில் காண்கின்றோம்.

மறுபிறப்பு பற்றிய நம்பிக்கையும் பண்டைத்தமிழர்களிடம் இடம் பெற்றிருந்தது. வையாவிக் கோப்பெரும் பேகனின் கொடையைப்புகழும் போது,

மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின்றவன் கைவண்மையே — (புறம் 145)

எனக் கூறுகின்றார். இவ்வுலகில் புகழ்பட வாழ்ந்தவரே மறுமையில் சுவர்க் கத்தில் இன்புறுவர் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தனர் என்பது,

இவணிசை யுடையோர்க் கல்லது அவண
உயர்நிலை யுலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல் — (புறம் 5)

என்ற வரிகளால் விளங்கும். அருளும் அன்பும் நீக்கி வாழ்பவர் மறுமையில் கொடிய நரகத்தை அடைவர் என்றும் நம்பினர்.

ஊழ்பற்றிய நம்பிக்கையும் அவர்கள் கொண்டிருந்தனர். செல்வமானது முன்வினைப் பயனால் ஒருவனிடத்தில் சென்று சேரும் என்றும், ஆற்றின் வெள்ளத்தால் அடித்துச்செல்லும் தெப்பம் போல ஊழின் வழியே மனிதவாழ்க்கை நடக்கிறது என் றும் யானையை வேட்டையாடச் சென்றவன் யானையைப் பெறுதலும், சிறுபறவையை (குறும்பூழ்) வேட்டையாட நினைத்தவன் வெறுங்கையுடன் திரும்புதலும் ஊழின்

செயலே என்றும் நம்பினர். இவ்வாறு, அறவுணர்வு கலந்த சமயவுணர்வும் சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. இறைவனிடம் ''யாம் இரப்பவை பொன்னும் பொருளும் போகமும் அல்ல. அருளும் அன்பும் அறனும் மூன்றும்'' மட்டுமே என்று வேண்டினர். பண்டைத்தமிழர் அறம் பொருள் இன்பம் என்ற மும்முதற்பொருளை அடைதலே சிறந்த பேருகக் கருதினர்.

### முப்பெருங் கோட்பாடுகள்

வாழ்க்கையில் வளமும், நலமும் பெறத் தேவைப்படும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றினையும் உறுதிப் பொருள்கள் என்றும், பேறுகள் என்றும் நம்முன்னோர்கள் வகுத்துரைத்தனர்.[18] இம்முப்பெருங்கோட்பாடு தமிழர்க்கே உரிய ஒன்றாகும். இக்கோட்பாடு திரிவர்க்கத்தின் வழிவந்ததெனக்கூறுதல் பொருந்தாது என்பதற்குக் கீழ்வரும், ''தமிழ்வழி மலர்ந்த இலக்கியமர மொன்று கிருத்துவ நூற்றாண்டுக்கு முன்பே இந்தியாமுழுக்க மூலஊற்றாக வழங்கி வந்திருக்கவேண்டும் என்றும், அவ்வூற்றின் வழி மும்முதற்கொள்கை வடமொழியிலும் தமிழ்மொழியிலும் பாய்ந்தோடியிருக்கலாம் என்றும் கருது வர்'.[19] என்ற அறிஞர் கூற்று சான்றாகும்.

இம்மூவகைப்பேறோடு வீட்டின்பமாகிய மறுமைப் பேற்றினையும் சேர்த்து நால் வகைப் பேறாகக்கருதும் வழக்கம் பின்னர் ஏற்பட்டதே. ஆனால் நால்வகைப் பேறுக்கான வித்துக்கள் சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. ''எக் காலத்தில் சமயத்துக்குக் குற்றேவல் செய்யும் பணிமகளாக அறத்தைக் கருதும் வழக்கம் தோன்றியதோ அக்காலம் முதற்கொண்டு நால்வகைப்பேறுகள் தமிழகத்தில் செல்வாக்குப் பெறலாயிற்று''[20] என்ற கூற்றும் இக்கருத்தினை வலியுறுத்தும்.

### தனி நீதிநூல்கள் தோற்றம்

தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே மூதுரை, வாயுரை வாழ்த்து, செவியறிவு நூல் போன்ற நீதியை மட்டும் எடுத்துரைக்கும் தனி நீதி நூல்கள் வழக்கிலிருந்திருக்கலாம் எனக் கருத இடமுளது. 'அறம்' 'அறம்பாடிற்றே' 'அறங்கூறும் ஆக்கம்' 'அறம் பொருள்கண்டார்' போன்ற தொடர்களால் 'அறம்' என்ற ஒரு தனி நூலே இருந்திருக்க வேண்டும் என்று கருதுவர். அதற்கான தடயங்களே இவ்வரிகள் என்று கருதுவர். ஆனால் சங்க இலக்கிய மரபு நீதியைத் தனியே எடுத்துக் கூறும் தனிநூலாக வெளிவர இடந்தரவில்லை. திருக்குறளே இன்று நமக்குக் கிடைக்கும் தலைசிறந்ததும் முதலில் தோன்றியது மான நீதி இலக்கியமாகும். பின்னர் தனி சமய நிறுவனங்கள் நீதியைப் பரப்பத் தலைப்பட்ட பின்னரே அவை சமயச்சாயல் பெற்று தனி நீதி நூல்கள் பல முகிழ்த்தன. சங்கம் மருவிய காலம் நீதி இலக்கிய காலம் என்று சுட்டப் பெறும் அளவுக்கு நீதிநூல்கள் தோன்றின. இவை அனைத்திற்கும் திருக்குறளே அடிப்படையாய் அமைந்தது. ஆனால் திருக்குறளுக்கு அடிப்படையான அறக்கூறுகள் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் ஊற்றுக்கண் களாய் காணக்கிடக்கின்றன. அவை உலகை ஊட்டி வளர்த்தன; வளர்க் கின்றன. வளர்க்கும்.

இதுவரை பார்த்தவற்ருல் பண்டைத்தமிழ் இலக்கணத்திலும் இலக்கியங்களிலும் தனித்துறைகளாக அமைந்தும், பாடலோடு ஒன்றியும். புறம்பொசிந்தும் அறக்கருத்துக்கள் வெளிப் படுகின்றன. அகப்பொருள் பற்றிய செய்தியில் உவமையிலும், சிறப்பாக உள்ளுறை, இறைச்சிகளிலும் அறக்கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. புறப்பாடல்களில் மிகுதியாக அறக்கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. தனிமனிதனுக்குரிய அறமும், பெண்டிர்க்குரிய அறமும், இல்லற துறவறத்துக்குரிய அறமும், சமுதாயத்துக்குரிய பொது அறங்களும் இடம் பெற்றுள்ளன. ஆட்சி அறவுணர்வோடு அமைந்திருந்தது. நாட்டில் அற மன்றங்கள் இருந்தன. மக்களும் மன்னனும் ஒருவரைஒருவர் மதித்து வாழ்ந்தனர். அறவுணர்வோடு சமயஉணர்வும் இடம் பெற்றிருந்தது. அறக் கடவுள் என்ற ஒன்று சுட்டப்படுகின்றது. முப்பெரும் கோட்பாடுகள் தமிழருக்கே உரிய ஒன்ருகும், தனி நீதி நூல்கள் முன்பு இருந்திருக்கவேண்டும். இன்றைய நீதிஇலக்கியங்களுக்குத் தலைமைதாங்கும் திருக்குறளுக்கு அடிப்படையான அறக்கூறுகள் காணக்கிடக்கின்றன. இவற்ருல், பண்டைத்தமிழர் வாழ்வில் அறவுணர்வு எந்த அளவு வேரூன்றி வீறுகொண்டு விளங்கியது என்பது விளங்கும்.

அடிக்குறிப்புகள்

1. வரதராசனார் டாக்டர். மு. — பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரிநிலையம், சென்னை—1. 1964 — பக்கம். 536 — 37.
2. திருநாவுக்கரசு க. த. — திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக் கழகம். 1971. பக்கம். 23.
3. மோகராசு. டாக்டர் கு. தொல்காப்பியர் விருந்து, சென்னை, பக்கம் — 75.
4. மாணிக்கம் டாக்டர் வ. சுப. — தமிழ்க்காதல் பாரிநிலையம் சென்னை.— 1. 1962. பக்கம் — 79.
5. ——————— பக்கம் 82, 97, 121, 359, 383, 391, 426.
6. சுப்பிரமணியஷீ டாக்டர் ச.வே. திறனாய்வுக் கட்டுரைகள் ''குறுந்தொகையில் உள்ளுறை'' அணியகம் சென்னை— 30 1977 — பக்கம் 30—31.
7. காண்க. வெங்கடராஜுலு ரெட்டியார் — ''இறைச்சிப் பொருள்'' கரந்தைச் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா மலர் இறு—தங்கு என்பதன் அடியிற் பிறந்தபெயர் இறைச்சி என்பர்.
8. துரைசாமிப்பிள்ளை. ஔவை. சு. ''புறநானூறு காட்டும் பண்டைத்தமிழர் நாகரிகம்'' புறநானூற்றுச் சொற்பொழிவு கழக வெளியீடு—1944. பக்கம் 199.
9. திருநாவுக்கரசு சு. த. திருக்குறள் நீதி இலக்கியம் பக்கம் 332.
10. 'முல்லை சான்ற கற்பின் மெல்லியல்' — சிறுபாண் வரி — 30
அருந்ததி யனைய கற்பின்
குரும்பை மணிப்பூண் புதல்வன் தாயே' — ஐங்குறு — 442: 4—5,
பெருநல் வானத்து வடவயின் விளங்கும்

சிறுமீன் புரையுங் கற்பின் நறுதல்' — பெரும்பாண் — 302, 303.
'வடமீன்.புரையுங் கற்பின் மடமொழி' — புறம் 122: 8.

11. ''சிறந்தானே வழிபடீஇ'' சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறுமற்றதுவே'' —கலித்தொகை — 9.

12. புறம் — வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோரற்றே' —புரம்
குறிப்பு:— இவ்வரிகள் அப்பர் திருநீற்றறைக் காட்சியோடு (மாசில் வீணையும்) ஒப்பு நோக்கத்தக்கது.

13. கணவன் மாட்டுக் கொண்ட இக் காதலுணர்வு பக்தி இயக்க காலத்தில் இறைவன்மீது கொண்ட காதலாக மாறியது. ஆண்டாளின் 'பாலுண்ணோம் நெய்யுண்ணோம்' என்ற திருப் பாவை ஒப்பு நோக்கத்தக்கது.

14. மெய்யப்பன் ச. இலக்கியத்தில் பெண்கள், கிருஸ்தவ இலக்கிய சங்கம், ரென்னை —1 1977. பக்கம்—8.

15. சமயம் என்ற சொல்லாட்சி முதன்முதலாக மணிமேகலையில் தான் காணப்படுகின்றது. காதை. 20: வரி 79.

16. திருக்குறள் நீதி இலக்கியம். பக்கம் 88.

17. ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின் — தொல். பொருள் 92.
'அறன் அழித்துரைத்தல். ஆங்கு நெஞ்சழிதல் — தொல். பொருள். 270

18. 'இன்பமும் பொருளும் அறனும் என்ருங்கு' —.தொல்.
'அறனும் பொருளும் இன்பமும்' — புறம் 28.

19. க. த. திருநாவுக்கரசு, திருக்குறளும் இந்திய அறநூல்களும் பக்கம் 10.

## பின்னிணைப்பு—1

### பண்டைத் தமிழிலக்கியங்களில் அறத்தை உள்ளடக்கிய தொடர்கள்

அஞ்சுவ தஞ்சா அறனிலி: — கலி. 42:26. அருளும் அன்பும் அறனும் — பரி. 5:80. அறக்கழிவுடையன — 3-214-1 அறங்கடைப்பிடித்த செங்கோல் — அகம். 338:3. அறங்கரைந்து வயங்கிய நா — பதிற். 64:3. அறங்காவலர் பெண்டிர் — பரி. திரட்டு. 2:48 அறங்கூறு அவையம் — மது. 492. அறங்கெழு நல்லவை உறந்தை — அகம். 93—5. அறங்கொண்டோர் — பரி. 5—71. அறஞ்சாரான் — கலி. 38—19. அறஞ்சால் கற்பு — பதிற். 31—24. அறஞ்செய் திங்கள் — நற் 202—9. அறஞ்செய்யா ஆன்றோ ருலகு — கலி. 92—16. அறத்தகை — புறம் 171—11. அறத்தியல் மரபு — 3—203—2. அறத்திற்திரியா பதி — பரி. திரட்டு. 1—21 அறத்தின் மண்டிய மறப்போர் — . வேந்தர். — புறம். 62—7. அறத்துறை — பதிற். பதி. 7—7. அறத்துறை அம்பி — புறம் 381—24. அறத்தொடு நிற்கும் காலம். 3—203—1. அறந்துஞ்சுஞ் செங்கோல் — புறம் 20—17. அறந்துஞ்சு உறந்தை — புறம். 58—9. அறந்த லைப்பட்ட நெல்லியம். பசுக்காய். — குறுந். 209—1. அறந்தலை பிரியா ஆறு —

கலி. 9—24. அறந்தலைப் பிரியாது. ஒழுகலுஞ்சிறந்த கேளிர் — அகம். 173—1. அறந்தெரி திகிரி — பதிற்: 22—4. அறநிலை திரியா அன்பி னவையம் — புறம். 71—7. அறநிலை பெற்றோர் — நற். 166—6. அறநெஞ்சத்தோன் — புறம். 377—6. அறநெறி — கலி. 129—5, புறம். 55. அறநோக்கான் — கலி. 120—1. அறப்பெயர்ச் சாத்தன் — புறம். 395—21. அறநிலைஇய வகனட்டில் — பட். 43. அறம்பழியாத் துவ்வாள் — புறம். 159—13. அறம்புரி அந்தணர்— பதிற். 24—8. அறம்புரி அருமறை — ஐங். 387—1. அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர் — புறம். 93—7. அறம்புரி சுற்றம் — 3—190—3. அறம் புரி செங்கோல் — பெரும். 36, ஐங். 290—1. அறம்புரி நெஞ்சத்தவன் — கலி. 42—15. அறம்புரி நெஞ்சம் — 3—145—21. அறம் புகழ்ந்த வலை — புறம். 166—14. அறமறக் கண்ட நெறிமாணவையம். — புறம் 224—4. அறமுதலாகிய மும்முதற் பொருள் 3—418—1. அறவர் — அகம் 85—4, 304—19. நற். 86—1, பரி. 8—68. அறவன் — ஐங் 152—5, 212—3 குறுந் 284—4, புறம். 399—19. அறவிலை வணிகண் — புறம் 134—2. அறவோன் நற். 136—3, புறம். 366—6. அறன்கடைப் படாஅ வாழ்க்கை — அகம்.155—1 அறன்நவில் கொள்கை — முருகு. 180. அறனழிந்துரைத்தல் 3—266—8. அறனில் அன்னை — குறுந்தொகை. 262—2. நற். 63—6, 145—7. அறனில் காட்சி — புறம். 210—2. அறனில் கூற்றம் — புறம் 210—8 230—11. 237—9. அறனில் கூற்று — புறம். 255—4. அறனில் கோள் — குறுந். 267—8. அறனில் பால் — ஜங். 376—5. அறனில் யாய் — அகம் 60—15, 302—15, ஐங். 385—6, குறுந். 244—6, நற். 376—12. அறனில்லவன் — கலி. 144—58. அறனில்லா அன்பிலி — கலி. 86—34. அறனில்லான் — கலி. 144—35. அறனில் வேந்தன் — அகம். 109—14. அறனிலர் — நற் 227—1. அறனிலள்.— புறம். 336-8. அறனிலன்— கலி. 74—6. அறனிலாளர் — அகம். 294—13. அறனிலான் — அகம். 207—12, 219—1. 256—17, ஐங். 118—2, 229—2. நற். 275—8. அறனிலோய் நற். 277—4. அறனிலோர் — புறம். 34—1. அறனிழல் — கலி. 99—8. அறனும் பொருளும் இன்பமும் — புறம். 28—15. அறனெறி பிழையாத் திறனறி மன்னர். — அகம். 188—4. அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல் பொருள். 230. இன்பமும் பொருளும் அறனும் 3—89—1. சேரா வறத்துச் சீரிலோர்— பரி. 5—74. ஞாயிறும் திங்களும் அறனும் — பரி. 3—5. புரையறம் 3—268—1. மூவேழுலகமும் மூலமும் அறனும் — பரி. 13—24. விறன்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும் அறன். பரி. 1—41.

## பின்னிணைப்பு—2

### அறத்தை உள்ளடக்கிய, உவமையாக வந்துள்ள தொடர்கள்

1. அருள் தீர்த்த காட்சியான் அறநோக்கான் நலஞ்செய்யான்
வெருவுற உய்த்தவன் நெஞ்சம்போல் — கலி 120—1.
2. அரும்பிணி.உறுநர்க்கு வேட்டது கெடாஅது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல — நற் 136—3·
3. அல்லது மலைத்திருந் தறநெறி நிறுக்கல்லா
மெல்லியான் பருவம்போல் — கலி. 129—5,

4. அறஞ்சாரன் மூப்பேபோல்' — கலி. 38—19.
5. அறத்துறை அம்பியின்மான' — புறம். 381—24.
6. அறநிலே பெற்ருேர் அனேயேன் — நற். 166—6.
7. அறம்புரி செங்கோல் மன்னிற் ருநனி
சிறந்தன போலும் — ஐங். 290—1.
8. அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டம் — புறம். 35—14.
9. அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல — பரி. 9—10.
10. அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்
செல்சுடர் நெடுங்கொடி போல — நற். 202—9.
11. ஆர்வுற்ற பூசற் கறம்போல — கலி. 145—62.
12. ஆறல்ல மொழிதேற்றி அறவினே கலக்கிய
தேறுகண் நறவுண்டார் மயக்கம்போல் — கலி. 147—1,
13. ஈதலிற் குறைகாட்டாது அறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போல் — கலி. 27.— 1.
14. சோழர் அறங்கெழு நல்லவை உறந்தை
அன்ன — அகம். 93—5.
15. நறவினே வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவையெடுத்
தறவினே யின்புறா உம் அந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியின் நூல்நெறி.பிழையாது
குழவியைப் பார்த்தூறு உந் தாய்போல் — கலி..99—2.
16. புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரை
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கும் — புறம். 28—11.

பயன்பட்ட நூல்கள்


1. (ப. ஆ.) வையாபுரிப்பிள்ளே .— சங்க இலக்கியம் (பாட்டும் தொகையும்) பாரிநிலேயம். சென்னே —1. (இ. ப.) 1967.
2. அகநானூற்றுச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். சென்னே—1. 1969.
3. கலித்தொகைச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். சென்னே—1. 1957.
4. புறநானூற்றுச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். சென்னே—1. 1944.
5. நற்றிணேச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். ரென்னே—1. 1950 (இ.ப.)
6. குறுந்தொகைச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். சென்னே—1. 1957.
7. பதிற்றுப்பத்துச் சொற்பொழிகள் — சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னே—1. 1955.

8. பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் — சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம். சென்னை—1. 1957.
9. வித்யானந்தன், டாக்டர் சு. — தமிழர் சால்பு — பாரிபுத்தகப் பண்ணை சென்னை—5. 1971.
10. திருநாவுக்கரசு க. த. — திருக்குறளும் இந்திய அறநூல்களும். மணியகம். சென்னை—85. 1978.
11. பாலசுந்தரம் தி. சு. — சங்க இலக்கிய இன்கவித்திரட்டு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை—1. 1940.
12. சுப்பிரமணியன் . டாக்டர். ச. வே. — திறனாய்வுக் கட்டுரைகள், அணியகம். சென்னை—30 1977.
13. மாணிக்கம் டாக்டர் வ. சுப. — தமிழ்க்காதல் (வி. உ.) பாரிநிலையம், சென்னை—1. 1962.
14. சீனிவாசன் டாக்டர் சீ. சங்க இலக்கியத்தில் உவமைகள் அணி யகம். சென்னை—30, 1973.
15. வரதராசன் டாக்டர் மு. வ. — பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை பாரிநிலையம், சென்னை—1. 1964.
16. தமிழண்ணல் (பு. பெ.).— சங்க இலக்கிய ஒப்பீடு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை—1. 1975.
17. வரதராசன் டாக்டர் மு. வ. — தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அகாதெமி, புது தில்லி. 1972.
18. திருநாவுக்கரசு க. த.— திருக்குறள் நீதி இலக்கியம் சென்னை பல்கலைக் கழகம் 1971.
19. தொல்காப்பியம் — பொருள் — கழகப்பதிப்பு சென்னை—1. 1953.
20. மோகனராசு. கு.— தொல்காப்பியவிருந்து, சென்னை 197.
21. இலக்கியத்தில் பெண்கள் கிறிஸ்துவ இலக்கியசங்கம் சென்னை, 1977
22. (ப. ஆ.) உ. வே. சாமிநாதையர் புறநானூறு, சென்னை, 1923.
23. செந்தமிழ்ச் செல்வி —சிலம்பு 7, 5, 3, பரல்—10. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1
24. Balasubramanian C. The Status of women in Tamilnadu During the Sangam Age, University of Madras, 1976.
25. Thirunavukkarasu, K. D. Treatment of Ethics in Ancient Tamil Literature (Unpublished M. Litt. Thesis) Annamalai University, 1962.

# தமிழ் ஆட்சி மொழிக் கொள்கை

பேராசிரியர் டாக்டர் மா. நன்னன், எம்.ஏ., பிஎச்.டி.
(தமிழ் வளர்ச்சி இயக்குநர்)

இவ்வெழுத்துரை மூன்று பகுதிகளைக் கொண்டது. அவற்றுள் முதற் பகுதியில் ஆட்சி மொழித் திட்டத்தின் தேவையும் நோக்கமும் குறிக்கப்படு கின்றன. இரண்டாம் பகுதியில் அதன் வரலாறும், வளர்ச்சியும் வரையப் படுகின்றன. மூன்றும் பகுதியில் அதன் எதிர்காலத் திட்டம் சுட்டப்படுகிறது.

## பகுதி—1

ஓர் இனத்தின் வாழ்க்கை சிறக்க வேண்டுமானால் அதன் மொழியும் சிறக்க வேண்டும். அம்மொழியின் சிறப்பு அஃது ஆட்சி மொழியாகவும் அமையும் வாய்ப்பைப் பெரிதும் சார்ந்திருக்கிறது. மதம் போன்ற கொள்கைகளும் ஆட்சி களின் ஆதரவிலேயே வளர்ந்திருக்கின்றன என்பதை நாம் இங்கு நினைவு கூரலாம். அரசின் செல்வாக்கைப் பெற்றுள்ள ஆட்சி மொழிகளே வாழும் பேற்றையும் வளரும் வாய்ப்பையும் பெற முடியும். ஓரினம் மற்றோரினத்தை அடிமைப்படுத்தி நசுக்குவது போலவே ஒரு மொழி மற்றொரு மொழியை அரசியல் செல்வாக்கால் அடிமைப்படுத்தி ஒடுக்கிவிட முடியும். ஆகவே ஒரு மொழியின் வளர்ச்சியும் வாழ்வும் அது தான் வழங்கும் நாட்டின் ஆட்சி மொழி ஆதரவைப் பொறுத் திருக்கிறது என்பதையும் அம்மொழி பேசும் மக்களின் வாழ்வும் வளர்ச்சியும் அம்மொழி ஆட்சி மொழியாதலைப் பெரிதும் சேர்ந்திருக்கின்றன என்பதையும் உணரலாம். இது ஒருமைப்பாட்டுக் கொள்கைக்கு மாறானது என்றோ குறுகிய நோக்கம் உடையதென்றோ உணர்ச்சிக்காட்பட்டு எண்ணிவிடக் கூடாது.

பிற்காலச் சோழர்களின் ஆட்சிக்குப் பிறகு தமிழகத்தில் தோன்றிய மொகலாயர்கள் ஆட்சி போன்றவற்றிலும், பல்லவர்கள், ஆங்கிலேயர்கள் போன்றோரின் ஆட்சியின்போதும் தமிழ் பெற்ற சீரழிவை நாம் இங்கே நினைவு கூர வேண்டும். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கிச் சில நூற்றாண்டு களுக்குமுன் வரை பரந்த தமிழ் உலகின் சிறந்த ஆட்சி மொழியாக வளமும் தோதும் வாய்ந்து பயன்பட்ட தமிழ் பின் ஆட்சி மாற்றத்தினால் செல்வாக்குப் பெற்ற பிற மொழிகளின் தாக்குதல்களால் நலிந்து, மெலிந்த உண்மையை நாம் மறந்துவிடுவதற்கில்லை.

எனவே தமிழகத்தில் தமிழ் முழுமையான ஆட்சி மொழியாக ஆகும் போதுதான் அது முழுமையான செல்வாக்கைப் பெற்ற மொழியாக ஆக முடியும். ஆட்சிக்கு ஆங்கிலம், ஆலயத்தில் வடமொழி, இசைக்குத் தெலுங்கு, படத்துக்கு இந்தி என்றவாறு வாழ்க்கையின் ஒவ்வொரு துறைக்கும் வேறு ஒவ்வொரு மொழியைப் பயன்படுத்தி வந்த தமிழர்கள் வீட்டிலும் அலுவலகம் போன்ற

இடங்களிலும் ஆங்கிலச் செல்வாக்கு தோன்றுகின்ற இன்றையநிலை நீடிக்கு மானால் உண்ண ஓர் இடம், உறங்க ஓரிடம், உவகைக்கு வேறு ஓர் இடம், உணர்விற்குப் பிறிதோரிடம் மற்ற வாழ்வுக்கு மற்றோரிடம் என்னும் நிலையில் உள்ள ஒரு குடும்பத்தைப் போல் தமிழ் மொழியும் ஆகிவிடும். நாம் தெளிவாக உணர வேண்டும்.

அதனைத் தெளிவாக உணர்ந்த காரணத்தினால்தான் இந்திய நாட்டின் மூத்த கட்சியாகிய பேராயக் கட்சி (காங்கிரஸ்) 1934இல் இந்திய நாட்டை மொழிவழியாகப் பிரித்து அவ்வாறு பிரிக்கப்பட்ட ஒவ்வொரு மாநிலத்திற்கும் உரிய மொழியையும் வரையறுத்தது. அந்த வரையறையில் அப்போது கூட்டாக இருந்த சென்னை மாநிலத்தைத் தமிழகம், ஆந்திரம், கேரளம், கர்நாடகம், என்று நான்காகப் பிரித்து அவற்றிற்கு முறையே தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகியவற்றைத் தாய் மொழியாக வகுத்துக் கூறியிருக்கிறது.[1]

இந்திய தேசிய காங்கிரஸ் என்னும் பெயரில் தோற்றுவிக்கப்பட்ட அவ் விடுதலை இயக்கம் மாபெரும் மக்கள் இயக்கமாக மாற்றி அமைக்கப்பட்ட பின்னர் வட்டார மொழிகளுக்கு ஏற்றமளிக்க வேண்டிய இன்றியமையாமையை காந்தியடிகள் உணர்ந்து அதனை வற்புறுத்தினர்.

மற்றும் இந்தியா விடுதலை பெற்ற பிறகு 1948ஆம் ஆண்டு எஸ். கே. தார் என்னும் அறிஞர் தலைமையில் ஓர் ஆணையம் இந்திய அரசால் நியமிக்கப் பட்டது. அது மக்களின் தாய் மொழிக்குச் சிறப்பிடம் தந்து இந்தியாவில் மொழி வழி மாநிலங்களைப் பிரித்தமைக்கப் பரிந்துரை செய்தது. அதன் அடிப்படையிலும் மக்களுடைய உணர்வுகளை மதித்தும் இந்தியப் பேரரசு மொழிவழி மாநிலக் கொள்கையை ஏற்று நடைமுறைப் படுத்தியது. அதற்கிணங்கவே தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம், கர்நாடகம் போன்ற தனித் தனி மாநிலங்கள் மொழி அடிப் படையில் இந்தியாவில் உருவாயின.

இவ்வாறு மொழி அடிப்படையில் மாநிலங்கள் பிரிக்கப்படுவதற்கு பிரிதொரு காரணமும் உண்டு. மக்களாட்சி என்பது மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் ஆட்சி. அவ்வாட்சி பெரும்பாலான மக்களுக்குத் தெரிந்த மொழி யில் அதாவது பெரும்பாலான மக்களின் தாய் மொழியில் நடைபெறுவதுதான் சரியாகும். அம்மக்களுக்குத் தெரியாத மொழியில் ஆட்சி நடைபெறுமானால் அது முழுமையான மக்களாட்சியாகாது என்பதோடு அது மக்களை ஏமாற்றக் கூடிய ஆட்சியாகவும் அமைந்துவிடக் கூடும். எனவே மக்களாட்சிக் கோட்பாடு முழுமைபெற வேண்டுமானால், முழுமையாக நிறைவேற வேண்டுமானால், அவ் வாட்சி அம்மக்களின் மொழியில்தான் நடைபெற வேண்டும். இக்கொள்கை நிறை வேற வேண்டுமானால் மாநிலங்கள் மொழிவழியாகப் பிரிக்கப்படுவது இன்றியமை யாததாயிற்று. ஆகவேதான் இந்தியாவின் பழம்பெரும் கட்சியும் இந்திய அரசும் மொழிவழி மாநிலப் பிரிவினையை ஏற்றுச் செயற்படுத்தின. அவ்வனைத்திற்கும் மேலாக விடுதலை உணர்வு பெற்ற மாந்தர் அனைவரும் உழைத்த உழைப்பால், தந்த பெறவரும் விலையால் 1947ஆம் ஆண்டு இந்தியா விடுதலை பெற்றது. இம்மக்களின் நாடும் பிற உடமைகளும் விடுதலை பெற்றனவே தவிர அவர்தம்

உணர்வுகளும் அவற்றின் வைப்பிடமாகிய மொழியும் விடுதலை பெறாத நிலையில் இருந்ததால் அதனை மாற்றி மக்களின் உணர்வுகளும் அவ்வுணர்வுகளின் பிறப் பிடமும் பேணுமிடமும் ஆகிய மொழியும் விடுதலை பெற வேண்டுமென்று கருதி மாநிலங்களில் அவ்வம் மாநில மொழியே ஆட்சி மொழியாக வேண்டுமென்னும் கொள்கை நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது.

தாம் கைப்பற்றிய இந்திய ஆட்சியைக் கட்டிக்காக்க எண்ணிய ஆங்கிலே யர்களுக்கு அரசின் சார்பில் இந்தியாவிற்குக் கோலோச்சவரும் இ.கு.ப. (I. C. S.) அலுவலர்கள் அந்தந்த வட்டார மொழிகளை அறிந்தவர்களாக இருக்கவேண்டு மென்று விரும்பினர். இலண்டனில் இருந்த இந்திய அலுவலகத்தின் ஆணையின் படி[2] சென்னைக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்ற இ.கு.ப. (I. C. S.) அலுவலர்கள் இங்கிலாந்தை விட்டு இந்தியாவுக்குப் புறப்படுமுன் தமிழைக் கட்டாயம் கற்றி ருக்க வேண்டும் என்றும் தெலுங்கு போன்றவற்றைக் கற்பதை அவர்தம் விருப் பத்திற்கு விட்டும் ஆணை பிறப்பிக்கப்பட்டிருந்தது என்பது இக்கருத்தை மேலும் வலுப்படுத்தக் காணலாம்.

## பகுதி -2

உலகின் விடுதலை பெற்ற நாடுகள் இத்துறையில் பெற்றுள்ள வளர்ச்சி யோடு நாம் பெற்றுள்ள வளர்ச்சியை ஒப்பிட்டால் நம் நிலை எவ்வளவு வருந்தத் தக்கதாக இருக்கிறது என்பதை உணர முடியும். அதை உணர்ந்ததால்தான் இந்தியா விடுதலை பெற்றுப் பத்து ஆண்டுகள் நிறைவதற்குள்ளாகத் தமிழகச் சட்டப்பேரவையில் அளிக்கப்பட்ட 1957-58ஆம் ஆண்டுக்கான குறுகிய கால வரவுசெலவு திட்டம் நிதியமைச்சர் அவர்களால் தமிழில் தரப்பட்டது. அதனை அடுத்து 26—12—57இல் சட்டப் பேரவை கூடியபோது அறிக்கைகளும், குறிப்பு களும் தமிழிலேயே வைக்கப்பட்டன.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் பிரிவு, கூறு 345இல் வகை செய்யப் பெற்றுள்ளதற்கிணங்க தமிழ்நாட்டில் தமிழை ஆட்சிமொழியாக்கும் முறையில் தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டத்தை (தமிழ்நாட்டுச் சட்டம் 1956) 1956ஆம் ஆண்டு தமிழ்நாடு சட்டமன்றம் நிறைவேற்றியது. அது 1957ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 19-ஆம் நாள் ஆளுநரின் இசைவினைப் பெற்றுத் தமிழ்நாடு அரசிதழில் 1957 சனவரி 23-ஆம் நாளன்று வெளியிடப்பெற்றது. அதன் மூலம் தமிழை ஆட்சி மொழியாக்கும் முன்னேற்றப் பாதையில் நாம் முதல் அடியை எடுத்து வைத்தோம்.[3] 1957-ஆம் ஆண்டு ஆட்சி மொழிக் குழு ஒன்று உருவாக்கப்பட்டு அது ஆட்சி மொழிச் சட்டத்தைச் செயல்படுத்த வேண்டுமென ஆணையிடப் பட்டது.

அதனைத் தொடர்ந்து 1959 சனவரித் திங்களில் அரசு தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் என்னும் ஓர் அமைப்பினை உருவாக்கியது. அதன் நோக் கங்களில் ஒன்றாக ஆட்சி மொழிச் சட்டத்தைச் செயல்படுத்தும் குழுவினால் செயற்படுத்தப்படும் பணிகளின் வளர்ச்சி பற்றி ஆராய்வதையும் அரசு சேர்த்தது.

இவ்வாறு ஆட்சிமொழிச் சட்டத்தையும், அதனை நிறைவேற்றும் குழுவையும், அதற்கு உதவும் மன்றத்தையும் அமைத்த அரசு அதன்பின் தமிழ் வளர்ச்சி இயக்கத்தைத் தோற்றுவித்து அதனிடம் இம்மாபெரும் பணியை ஒப்படைத்தது.

### இந்திய விடுதலையும் ஆட்சி மொழித் திட்டமும்

1947ஆம் ஆண்டில் இந்தியா விடுதலை அடைந்ததும் நமக்கென ஆட்சி மரபு ஒன்றை அமைக்கவும் நம்நாட்டின் ஆட்சிமொழியைத் திட்டமிடவும் இந்திய அரசமைப்புப் பேரவை (Constituent Indian Assembly) ஒன்று நிறுவப்பெற்றது. மாநில சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப் பட்டோர் பலரும் வேறு சிலரும் அதன் உறுப்பினர்களாக இருந்தனர். மேதகு ராஜேந்திர பிரசாத் அவர்கள் அதன் தலைவராக விளங்கினார். 1950ஆம் ஆண்டில் இப்பேரவை இந்திய அரசமைப்புச் சட்டத்தை உருவாக்கியது. ஆட்சி மொழியைப் பற்றிய முடிவுகள் அரசமைப்புச் சட்டத்தின் பகுதி XVII இல் ஆட்சிமொழி என்னும் தலைப்பில் இடம் பெற்றுள்ளன.

### ஆட்சி மொழித் திட்ட நிறைவேற்ற நிலைகள்

ஆட்சி மொழிச் சட்டத்தின் பிரிவு 4-இன் கீழ் நடைமுறையிலுள்ள ஆட்சி முறையைத் தமிழில் உடனடியாக மாற்ற இயலாததால், படிப்படியாக அதனைப் புகுத்தத் திட்டமிடப்பட்டது.

14—1—1958-இல் (பொங்கல் திருநாளன்று) தமிழில் கடிதப்போக்கு வரத்து மேற் கொள்ளப்பட வேண்டுமென்று ஆட்சிமொழித் திட்டத்தின் பிரிவு 4இன் கீழ் அறிவிக்கை ஒன்று வெளியிடப்பெற்றது. அதன்படி முதலில் தட்டச்சுப் பொறிகள் இல்லாத அரசு அலுவலகங்களில், அதாவது கையினால் கடிதங்களை எழுதியனுப்பும் வேளாண் துறை முதலாக வருவாய்த் துறை ஈறாக உள்ள பத்தொன்பது துறை அலுவலகங்களில் இத்திட்டத்தைச் செயற்படுத்த ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. 1961-63-ஆம் ஆண்டுக் காலத்தில் இத்திட்டமானது மாவட்ட அளவிலான அரசு அலுவலகங்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. துறைத் தலைமை அலுவலகங்களைப் பொறுத்தவரையில் கீழ்க்கண்ட நான்கு நிலைகளிலான தொரு திட்டம் வகுக்கப்பட்டது.

| | |
|---|---|
| முதல் நிலை: | 1963-ஆம் ஆண்டு பொது மக்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும். |
| இரண்டாம் நிலை: | சார்நிலை மற்றும் மாவட்ட அலுவலகங்களுக்கு எழுதப்படும் அனைத்துக் கடிதங்களுக்கும் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும். |
| மூன்றும் நிலை: | பிற துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களுக்குத் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும். |
| நான்காம் நிலை: | அரசுச் செயலகத் துறைகளுக்கு எழுதப்படும் கடிதங்களுக்குத் தமிழ் பயன்படுத்தப்பட வேண்டும். |

முதல் நிலை 1963-ஆம் ஆண்டில் செயற்படுத்தப்பட்டது. இரண்டு மூன்றும் நிலைகள் முறையே 1965, 1969 ஆகிய ஆண்டுகளில் புகுத்தப்பட்டன. நான்காம் நிலை 1971-ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்தது. அதில் ஆட்சி மொழித் திட்டத்திலிருந்து அதுவரை சில அலுவலகங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த விதிவிலக்குகள் திரும்பப் பெறப்பட்டு, அரசு அலுவலகங்கள் அனைத்தும் முழுமை யாக இத்திட்டத்தை நிறைவேற்ற வழி வகுக்கப்பட்டது.

### அரசுச் செயலகத்தில் ஆட்சி மொழித் திட்டம்

சட்டம், நிதி, சட்டப் பேரவை, சட்ட மேலவை ஆகிய துறைகள் நீங்கலாக அரசுச் செயலகத்தின் ஏனைய துறைகளின் ஆட்சிமொழித் திட்டத்தின் முதல் நிலையானது 1966ஆம் ஆண்டு மே திங்கள் முதல் நாளிலிருந்து நடைமுறைக்கு வந்தது. பின்னர் படிப்படியாக மற்ற நிலைகளும் அத்துறைகளில் புகுத்தப்பட்டன. சட்டத்துறை, நீதித் துறை ஆகியவற்றில் 1970ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் நாளிலிருந்து முதல் நிலை நடைமுறைக்கு வந்தது.

### நீதி மன்றங்களில் ஆட்சி மொழித் திட்டத்தைப் புகுத்தல்

சில விதிவிலக்குகளுடன் தமிழ்நாட்டிலுள்ள குற்றவியல் நீதிமன்றங்களின் அனைத்து நடவடிக்கைகளிலும் சான்றுகளைப் பதிவு செய்யும் நோக்கத்திற்காக 1970ஆம் ஆண்டு சனவரி 14ஆம் நாளிலிருந்து தமிழைப் பயன்படுத்த வேண்டு மென ஆணையிடப்பட்டது. 14—11—1976 முதலாக நீதிமன்றங்களில் தீர்ப்புகள் எழுதுவது தொடர்பாகவும், தமிழ் ஆட்சிமொழித் திட்டத்தைச் செயற்படுத்த வேண்டுமென ஆணையிடப்பட்டது. நடைமுறைச் சிக்கல்களின் காரணமாக இவ்வாணையானது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

### ஆட்சி மொழிச் சட்டத்திலிருந்து விதிவிலக்களிக்கப்பட்டுள்ள இனங்கள்

நிருவாக முறையில் சில சிக்கல்களைத் தவிர்க்கும் பொருட்டுக் கீழ்க் காண்பவற்றுக்கு ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதற்கு அனுமதியளிக்கப்பட்டு உள்ளது.

1. மாவட்டக் கருவூலங்களுக்கும், சம்பளக் கணக்கு அலுவலக (சென்னை)த்திற்கும் அனுப்பப்படும் சம்பளப் பட்டிகள், சில்லறைச் செலவினப் பட்டிகள், பயணப்படிப் பட்டிகள் மற்றும் பயிற்சிக்கால உதவித் தொகைப் பட்டிகள்.
2. ஊர் (கிராம) நீதிமன்றங்கள் அல்லாத பிற நீதி மன்றங்களுக்கும், பிற மாநில அரசுகளுக்கும், மைய அரசு அலுவலகங்களுக்கும் எழுதப்படும் அனைத்துக் கடிதங்கள்.
3. மேல்முறையீடு அல்லது சீராய்வுக்குட்படக்கூடிய சட்ட முறைப் படியான அனைத்து ஆணைகள்.
4. வெளிநாட்டுத் தூதர் அலுவலகங்கள் போன்றவற்றுக்கு அனுப்பப் படும் கடிதங்கள்.
5. தொழில்நுட்பம் மிகுந்த பொருள்கள் குறித்த கடிதங்கள்.

### தமிழில் ஒப்பமிடல்

மேலும் அரசுப் பணியாளர் அனைவரும் தமிழிலேயே அனைத்திலும் ஒப்பமிட வேண்டும் என்றும் அரசு அறிவித்துள்ளது.

பட்டிகளும், காசோலைகளும் (Bill and cheques) விதிவிலக்குக்குரிய இனங்களாயினும் பட்டிகளிலும், காசோலைகளிலும் தமிழில் ஒப்பமிடலாம் என அரசு ஆணையிட்டுள்ளது. ஆனால், அவ்வாறு தமிழில் ஒப்பமிடும்போது உரிய ஆங்கில ஒலிப்பெயர்ப்பையும் (Transliteration) அதனடியில் குறிப்பிட வேண்டும்.

அரசு அலுவலகங்களில் தமிழ்த் திட்டத்தைச் செயற்படுத்த அரசு தமிழ்த் தட்டச்சுப் பொறியில் விசைப்பலகையைத் தரப்படுத்த நடவடிக்கை எடுத்து அதற்கென ஒரு குழு அமைத்து விசைப்பலகையைத் தரப்படுத்தியது.

### ஊக்கத் திட்டங்கள்

1. அரசுச் செயலகம், 2. அரசுத் துறைகள், 3. சென்னை மற்றும் மதுரை மாநகராட்சிகள் 4. நகராட்சிகள் மற்றும் நகரியங்கள், 5. ஊராட்சி ஒன்றியங்கள், ஊராட்சி நகரியக் குழுக்கள் மற்றும் பேரூராட்சிகள் ஆகியவற்றில் பணிபுரியும் பணியாளர்களைச் சிறந்த வரைவுகள், குறிப்புகள் ஆகியவற்றைத் தமிழில் எழுதுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் பணப்பரிசுத் திட்டம் (Cash Award Scheme) ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது. முதற் பரிசு ரூ. 500/- இரண்டாம் பரிசு ரூ. 300/- மூன்றும் பரிசு. ரூ. 200/- என மேற்கண்ட ஒவ்வொரு பிரிவுக்கும் மும்மூன்று பரிசுகள் ஆண்டுதோறும் வழங்கப்பட்டு வருகின்றன.

தமிழில் தேர்ச்சி பெற்றுள்ள தட்டச்சர்களுக்கும், சுருக்கெழுத்துத் தட்டச்சர்களுக்கும் அவர்களது தேர்ச்சி நிலைக்கேற்ப ரூ. 20/-லிருந்து ரூ. 125/- வரை சிறப்புச் சம்பளம் (Special pay) அளிக்கப்பட்டு வருகிறது. தமிழ்ச் சுருக்கெழுத்தருக்கு உதவிப் பணம் ரூ. 50/- வழங்கப்படுகிறது.

தமிழைச் சிறந்த முறையில் பயன்படுத்திய துறைத் தலைமை அலுவலகங்களுக்கும் மாவட்டப் பகுதிகளிலுள்ள மாவட்ட நிலை அலுவலகங்களுக்கும் ஆண்டுதோறும் தகுதிச் சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன.

### மொழி பெயர்ப்புப் பணி

தமிழ் வளர்ச்சிக்கு உறுதுணை புரியும் வகையில் மொழிபெயர்ப்புப் பணிக்கென ஒரு பிரிவு தமிழ் வளர்ச்சித் துறையில் செயலாற்றி வருகிறது. அப்பிரிவில் ஆட்சிச் சொல்லகராதியின் முதற் பதிப்பு 1957ஆம் ஆண்டு வெளியிடப் பட்டது. இரண்டாம் பதிப்பு 1962ஆம் ஆண்டிலும், மூன்றும் பதிப்பு 1971ஆம் ஆண்டிலும் வெளியிடப்பெற்றன. நான்காம் பதிப்பைத் தொகுக்கும் பணி முடிவடையும் நிலையில் உள்ளது. ஆட்சிச் சொல்லகராதிக்கு மறுபதிப்பு வெளியிட முனையும்போது சேர்ப்பு, திருத்தம் ஆகியவை குறித்து உரியவாறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. வெளியிடப்பட இருக்கும் நான்காம் பதிப்பானது முந்தைய மூன்று பதிப்புகளினின்றும் வேறுபட்டுத் திருந்திய முறையில் வெளிவர உள்ளது. முந்தைய மூன்று பதிப்புகளிலும் சொற்கள், பொருள் அடிப்படையில்

தொகுக்கப்பட்டன. நான்காம் பதிப்பில் சொற்கள் அகரவரிசையில் (Dictionary Pattern) தொகுக்கப்பட்டுள்ளது. இதனால் அகராதியை மிக எளிதாகப் பயன்படுத்தமுடியும்.

**சிறப்புச் சொல் துணையகராதி**

ஆட்சிச் சொல்லகராதியில் பொதுவான ஆட்சிச் சொற்களே இடம் பெற்றுள்ளமையால் அவ்வத் துறைகளில் ஆளப்பெறும் சிறப்புச் சொற்களுக்குத் தமிழாக்கங்கள் அளிக்கப்பட வேண்டியது இன்றியமையாததெனக் கண்டறியப் பட்டது. அம்முறையில் ஒவ்வொரு துறைக்கும் ஒரு சிறப்புச் சொல் துணையக ராதி தயாரித்து வெளியிடப்பெற்றது. சிறப்புச் சொல் துணையகராதிக்கான பட்டியல்கள் அந்தந்த துறைகளிடமிருந்து துறைகளின் வழக்கிலுள்ள, தமிழாக் கங்களுடன் பெறப்பட்டுத் துறைகளின் அலுவலர்களுடன் தொழில் நுணுக்கச் சொற்களின் பயன்பாடு தொடர்பாக கலந்துரையாடி இயக்கக மொழிபெயர்ப்பு உதவி இயக்குநர்களால் ஆய்ந்து அறுதியிடப்பெறுகின்றன. அறுதியிடப்பெற்ற பட்டியல்கள் உரிய துறைகளின் ஏற்புக்குப் பின்னர் அச்சிடப்பெற்றுத் துறை களுக்கு வழங்கப் பெறுகின்றன. இவ்வகராதிகள் காலந்தோறும் புதுக்கியும், சேர்த்தும் வெளியிடப்பெறுகின்றன.

**துறை நூல்கள் மற்றும் படிவங்கள் மொழிபெயர்ப்பு**

பல்வேறு துறைகளிலிருந்தும் படிவங்கள், பதிவேடுகள் அலுவலக நடை முறை நூல்கள், விதித் தொகுப்புகள் போன்றவை பெறப்பட்டுத் தமிழ் வளர்ச்சி இயக்கத்தால் மொழிபெயர்த்தனுப்பப்பட்டு வருகின்றன. 1976ஆம் ஆண்டில் சட்ட ஆட்சிமொழி ஆணையம் (Official Language (Legislative) Commission) திருத்தியமைக்கப்பட்டதனையடுத்துச் சட்டங்கள், விதிகள் ஆகியவற்றின் மொழி பெயர்ப்பு குறித்த பணியானது சட்ட ஆட்சிமொழிஆணையத்திடம் ஒப்படைக்கப் பட்டது. பின்னர் துறைகளின் தேவைக்கேற்ப மொழிபெயர்ப்புகளை அளிக்க வேண்டியதன் காரணமாக மைய, மாநிலச் சட்டங்களின் கீழ் இயற்றப்பட்ட விதி களை மொழிபெயர்க்கும் பணியானது தமிழ் வளர்ச்சித் துறையிடம் ஒப்படைக்கப் பட்டது.

ஆட்சிச் சொல்லகராதி, சிறப்புச் சொல்லகராதி ஆகியவற்றுடன் திரு நெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் வெளியிடப் பெற்றுள்ள திரு கா. அப்பாதுரையார் அவர்களின் கழகத் தமிழ்க் கையகராதியும், பிழை நீக்கி எழுதும் முறை என்னும் நூலும் அலுவலகப் பயன்பாட்டிற்கென வாங்கிக் கொள்ளப்படுதற்கும் வகை செய்யப்பட்டுள்ளது.

**எழுத்துச் சீர்திருத்தம்**

ஒருமொழியில் எழுத்தறிவு பெறுவது அந்த மொழியில் ஆளப்படும் எழுத்து வடிவத்தினைப் பெரிதும் சார்ந்திருக்கிறது என்னும் உண்மையை எவரும் மறந்துவிடலாகாது. எண்ணிக்கையில் குறைந்து, எழுதுவதற்கும், அச்சு, தட்டச்சு செய்வதற்கும் மிகவும் எளிமையாக இருக்கும் வரிவடிவங்களைக் கொண்ட உரோமன் எழுத்து முறையை இன்று உலக நாடுகள் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்று முன்னேற்றம் எய்தி வருகின்றன.

தமிழ் மொழியிலுங்கூட மூல எழுத்தொலிகள்

எழுத்தெனப் படுவ
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃது என்ப (தொல்—எழுத்து)

என்று சொல்லப்பட்டாலும் நடைமுறையில் 247 வரிவடிவங்களை ஒருவர் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. ஆகவே தமிழ் வரிவடிவங்களில் மாற்றமும் சுருக்கமும் தேவைப்பட்டன. அவ்வரிவடிவ மாற்றம் காலந்தோறும் நிகழ்ந்து கொண்டே வந்திருக்கிறது. அந்த வரிசையில் வீரமாமுனிவரின் எழுத்துச் சீர்திருத்தத்திற்குப் பின் தந்தை பெரியார் அவர்கள் கடந்த 40 ஆண்டுகாலமாகப் பெரும் அளவில் பயன்படுத்தி வெற்றிகண்ட எழுத்துச் சீர்திருத்தத்தை அரசு அவர்தம் நூற்றுண்டு விழாவின்போது ஏற்று நடைமுறைக்குக் கொணர்ந்து ஆணையும் பிறப்பித்தது.

இவ்வாறு கடந்த 23 ஆண்டுகட்கு மேலாக இத்திட்டம் நிறைவேறுவதற்காக அரசு பல்வேறு முயற்சிகளையும் எடுத்து வந்திருக்கிறது. ஆயினும் அரசின் முயற்சிக்கு ஏற்ப என்று சொல்ல முடியாவிடினும் குறிப்பிடத்தக்க அளவேனும் பலன் கிடைத்திருக்கின்றதாவென்று எண்ணிப்பார்த்தால் அப்படிச் சொல்ல முடியவில்லை. மிகக் கீழ் மட்டத்திலுள்ள சார்நிலை அலுவலகங்களில் ஓரளவு இத்திட்டம் நிறைவேறுகிறதெனலாம். துறைத் தலைமை அலுவலகங்கள் பலவற்றில் இத்திட்டம் தொடங்கப்படவே இல்லை, வேறு சிலவற்றில் பெயர்ப் பலகைகள், முத்திரைகள் இவற்றில் மட்டும் தமிழ் இடம் பெற்றிருக்கிறது; இன்னும் மேற்கூறியவற்றோடு பதிவேடுகள் தமிழில் அமைந்துள்ளன; மிகமிகச் சில துறைத் தலைமை அலுவலகங்களில் மட்டுமே கோப்புகளும், கடிதப் போக்குவரத்துகளும் ஓரளவேனும் தமிழில் பேணப்படுகின்றன. தலைமைச் செயலகம், முன்னாள் வருவாய் வாரியம், அரசுத் தொடர்புடைய வேறு பல நிறுவனங்கள், தனியார் துறைகள் போன்றவற்றில் இத்திட்டம் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய எந்த வகையிலும் இடம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. தலைமைச் செயலாளர் திரு. கா. திரவியம் போன்ற சில பெருமைக்குரிய அலுவலர்களால் அவ்வத் துறைகளில் இத்திட்டம் ஓரளவு நிறைவேற்றப்படுகிறது. கல்வித் துறை போன்ற ஒருசில தலைமைச் செயலகத் துறைகளில் அவ்வப்போது சிற்சில ஆணைகள் தமிழிலும் வெளியிடப்படுகின்றன என்பது தவிர அரசு ஆணைகள், பிற கடிதங்கள் ஆகிய யாவும் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே இருக்கின்றன. விரல்விட்டு எண்ணக்கூடிய இரண்டு மூன்று துறைகளின் துறைத் தலைமை அலுவலகங்களில் 50, 60 விழுக்காட்டிற்கு மேல் தமிழ் பயன்படுத்தப் படுகிறது.

## பகுதி—3

மேல் விரித்துரைக்கப்பட்ட தமிழ் வளர்ச்சித் திட்டத்தின் தேக்க நிலைக்கான காரணத்தை அறிந்து, களைந்து அதனை முழுமையாகவும் செம்மையாகவும் நிறைவேற்றுவதற்கு அரசு விரும்புகிறது. அதற்காகத் திட்டம் ஒன்றும் வகுத்து மிக விரைவில் அது நிறைவேற்றப்படவிருக்கிறது. அத்திட்டத்தைப் பற்றிச்

சுட்டுவதற்கு முன்னால் மேற்கூறிய தேக்க நிலைக்கான காரணங்களைக் காண்பது இன்றியமையாததாகும். இத்திட்டத்திற்குத் தடையாக இருக்கக்கூடியவை பின் வருவன:

1. இத்திட்டம் அப்போதிருந்த சூழ்நிலைக்கேற்ப அடிமட்டத்திலிருந்து தொடங்கப்பட்டதென்றாலும் இன்றைய நிலையில் அது தலைமைச் செயலகத்திலிருந்து தொடங்கப்படாமை ஒரு பெரும் தடையாக விளங்குகிறதெனலாம். ஏனெனில் துறைத் தலைமை அலுவலகங்களும் பிறவும் மேல் மட்டத்திலிருந்து வருவன யாவும் ஆங்கிலத்திலேயே வருவதால் நாங்களும் ஆங்கிலத்திலேயே எங்கள் நடைமுறைகளை அமைத்துக்கொள்கிறோம் என்கின்றன. இவர்கள் மேலிருந்து வருவனவற்றைத் தமிழாக்கம் செய்து நடவடிக்கை எடுப்பதென்றால் வேலைச் சுமை தாங்க முடியவில்லை என்று துறை அலுவலகங்களில் கூறப்படுகிறது. மேலும் தலைமைச் செயலகத்தில் வெளிப்படுகின்ற ஓர் ஆணை ஓர் உதவியாளரால் தமிழில் எழுதப்பட்டால் அப்பணி அவர் ஒருவராலேயே முடிந்து விடுகிறது. அவ்வாறின்றி அவர் ஆங்கிலத்திலேயே அதை எழுதிவிடுவாரானால் அவர் ஒருவரால் செய்யப்பட வேண்டிய பணி துறைத் தலைமைதோறும், சார்நிலை அலுவலகங்கள் தோறும் பல நூறு பேர்களால் செய்யப்பட வேண்டிய (மொழிபெயர்ப்புப்) பணியாக ஆகிவிடுகிறது.

2. பல அலுவலகங்களுக்கும் பணியாளர்களுக்கும் இத்திட்டம் நிறைவேற்றப்பட வேண்டிய ஒரு திட்டம் என்னும் கருத்து இருப்பதாகத் தெரியவில்லை.

3. இத்தனை இடையூறுகளுக்கிடையேயும் ஓரளவுக்குத் தமிழ் வளர்ச்சித் திட்டம் நிறைவேற்றப்படுகின்ற அலுவலகங்களில் போதிய அளவு தமிழ் தெரியாத அலுவலர்கள் வந்து அமர்ந்துவிடுகிறபோது ''சாண் ஏறினால் முழம் சறுக்கும்'' என்னும் பழமொழிக்கிணங்கப் பல ஆண்டு காலம் முயன்று கொண்டு வரப்பட்ட தமிழ் வளர்ச்சித் திட்டம் ஒருசில நாட்களில் முடக்கப்பட்டு ஆங்கில ஆட்சி மொழித் திட்டம் மறுபடியும் முழுமையாக இடம் பெற்றுவிடுகிறது.

4. தமிழ்த் தட்டச்சுகள் போதிய அளவு இன்மை.

5. படிவங்கள் போன்றன ஆங்கிலத்தில் இருப்பது.

மேற்கூறிய தடைகளைக்களைய அரசு பின்வரும் திட்டங்களை மேற்கொள்ளவிருக்கிறது.

1. முதல் தடைக்கு இப்போது விடை தேவையற்றது.

2. அலுவலர் பணியாளர் ஆர்வமின்மையைப் போக்கத் தமிழ் வளர்ச்சித் துறை அரசுக்குத் திட்டத்தை பரிந்துரைத்து அரசும் அதனை ஏற்று ஆணை பிறப்பிக்கிற நிலையில் அது இருந்து வருகிறது. ''மூவாண்டு முனைப்புத் திட்டம்'' என்னும் அத்திட்டம் கடந்த 10 மாதங்களாகத் துறைத் தலைவர்கள், மாவட்ட ஆட்சியர்கள், பிற அலுவலர்கள், பல்வேறு அலுவலகங்களில் பணியாற்றும் பணியாளர்கள் ஆகியோர்களோடு கருத்துரையாடி உருவாக்கப்பட்டதாகும். அடுத்த மூன்றாண்டுகளில் அரசின் எல்லா நிலைகளிலும் விலக்களிக்கப்பட்ட ஒரு சில இனங்கள் தவிர பிற அனைத்திலும் முழுமையாகவும் செம்மையாகவும் இத்திட்டம் நிறைவேற்றப்பட்டுவிடும். இத்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டு நடைமுறைகள் காலஅட்டவணைப்படி வகுத்து அளிக்கப்பட்டு நிறைவேற்றி முடிக்கப்பட வேண்டியிருக்கிறது.

3. இந்திய ஆட்சிப் பணி, (I. C. S.) இந்திய காவல் பணி (I. P. S.) போன்ற பணிகளில் ஈடுபடும் அலுவலர்களுக்கு அவர்களின் பயிற்சிக் காலத்திலேயே இம்மாநிலத்திற்கு ஒதுக்கப்படும் தமிழ் தெரியாத அலுவலர்களுக்குத் தமிழ் கற்பிக்கத் திட்டமொன்று வகுக்கப்பட்டுள்ளது. இப்போது பணியிலுள்ள போதிய அளவு தமிழ் தெரியாத அலுவலர்களுக்கும் அவர்கள் பணிக் காலத்திலேயே தமிழ்ப் பயிற்சி அளிக்க மற்றொரு திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது.

4. மற்றொரு சிறப்புத் தடையாகிய போதிய அளவு தமிழ்த் தட்டச்சின்மையை போக்கவும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஏறக்குறைய பத்தாயிரம் தமிழ்த் தட்டச்சுகள் அத்திட்ட நிறைவேற்றத்திற்குத் தேவைப் படும் என்று கருதப்படுகிறது. ஆங்கிலத் தட்டச்சுகளுக்குப் பதிலாகத் தமிழ்த் தட்டச்சுகளை வழங்கவும் திட்டம் ஒன்று உருவாக்கப்பட்டு வருகிறது. இத்திட்ட நிறைவேற்றத்திற்குச் சில ஆண்டுகள் தேவைப்படும் என்னும் நிலை ஏற்படு மானால் அக்காரணத்தினால் இம்மாபெரும் திட்டம் முடமாக்கப்பட்டுவிடக் கூடாது என்பதற்காகத் தேவையான அளவு படியெடுப்பவர்களை நியமித்துக் கொண்டு தமிழ்த் தட்டச்சின் பணியை அப்படியெடுப்பவர் உதவியால் நிறை வேற்றிக் கொள்ளுவதற்கு ஏற்ற வகையில் ஆணை பிறப்பிக்க அரசுக்குத் திட்டம் ஒன்று வகுத்து அளிக்கப்படுகிறது.

5. படிவம் போன்றவற்றை மொழிபெயர்ப்பதற்கு இத்துறையில் உள்ள பிரிவு விரிவாக்க வேண்டியிருக்கிறது. இப்போதுள்ள அந்தப் பிரிவு அப்பணியை செய்து முடிக்க மேலும் பல ஆண்டுகள் ஆகக் கூடும். ஆகவே மொழிப்பெயர்ப்புப் பிரிவை விரிவு படுத்தி முனைப்புத் திட்டத்திற்கு உதவும் வகையில் அப்பிரிவு தேவையான அளவு விரிவாக்கப்படும்.

இது தொடர்பாக வேறு சில கருத்துகளையும் இங்கே குறிப்பிடுவது தேவையென்றே நான் கருதுகிறேன்.

ஆட்சிச் சொல் மொழிபெயர்ப்பில் இப்போது வேறுபாடுகள் இருக் கின்றன. இதற்குக் காரணமும் இருக்கிறது. ஆகவே அக்காரணத்தை நீக்கி அதில் ஒருமைப்பாடு ஏற்பட முயல வேண்டும். தமிழகத்திலுள்ள நடுவண் அரசு அலுவலகங்களிலும் தமிழ் ஆட்சி மொழித் திட்டத்தை நிறைவேற்றுவதற்குத் தக்க முறையில் முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். தமிழகத்தில் உள்ள அலுவலகம் இம்மாநில அரசால் நடத்தப்பட்டாலும் நடுவண் அரசு போன்ற வற்றால் நடத்தப்பட்டாலும் அவை யாவும் மக்களோடு தொடர்பு கொள்ள வேண்டிய அலுவலகங்களே ஆதலின் தமிழகத்திலுள்ள அத்தகைய எல்லா அலு வலகங்களிலும் தமிழும் ஆட்சி மொழியாகின்றவண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டும். அரசுச் சார்புடைய நிறுவனங்கள், தனியார் நிறுவனங்கள் போன்ற அனைத்திலும் இத்திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும். வழக்கு மன்றம், நிதித் துறை, விலக்களிக்கப்பட்ட பிற இனங்கள் ஆகிய எல்லாவற்றிலும் மேலும் ஒருசில ஆண்டுகளிலேனும் இத்திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும் என்னும் வேணவாவை வெளியிட்டு என் எழுத்துரையை முடிக்கிறேன்.

அடிக்குறிப்பு

1. 'Development of the Congress Constitution'
2. Extracts from Home public (A) Nov, 1882 Nos. 90–95
3. விடுதலைக்குப்பின் தமிழ் வளர்ந்த வரலாறு – டாக்டர் ம. பொ. சி.

# திரு. வி. க. வின் சிந்தனை வளர்ச்சியில் சதாவதானி நா. கதிரைவேற்பிள்ளையின் செல்வாக்கு

க. கணேசலிங்கம்
(திருமதி) யோ. கணேசலிங்கம்
ஸ்ரீலங்கா

''என் வாழ்க்கைச் சக்கரம் ஒரு வழியில் ஓடிக் கொண்டிருந்தது. கதிரைவேற்பிள்ளை கூட்டுறவால் அது வேறு வழியில் திரும்பியது. என் பொருட்டே கதிரைவேற்பிள்ளை யாழ்ப்பாணம் விடுத்து சென்னை போந்தனர் என்று யான் ஒவ்வொரு போழ்து நினைப்பதுண்டு.''

இளமையில் தன் குருவாயமைந்த யாழ்ப்பாணத்து மேலைப் புலோலியூர் சதாவதானி நா. கதிரைவேற்பிள்ளை பற்றி திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இங்ஙனம் பெருமையுடன் கூறுகிறார்.

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் *(1883-1953)* தமிழ் நாட்டில் திருவாரூரில் விருத்தாசல முதலியார் என்பவருக்கு ஆறுவது பிள்ளையாகப் பிறந்தவர். 'திரு' என்ற அடைமொழி அவர் முன்னோரின் ஊராகிய திருவாரூரைக் குறிப்பது. குறும்பும் துடுக்கும் மிகுந்தவராய் வளர்ந்த திரு. வி. க.வுக்குப் பிள்ளைமைப் பருவத்திலே கதிரைவேற்பிள்ளையின் சந்திப்பு ஏற்படுகிறது. எதற்கும் அஞ்சாத கதிரைவேற்பிள்ளையின் ஆளுமையும், தமிழிலும் சைவத்திலும் அவருக் குள்ள ஆழ்ந்த ஈடுபாடும் திரு. வி. க. வின் உள்ளத்தில் ஆழப்பதிகின்றன.

''கதிரைவேல் எங்கள் பள்ளியில் முதல் முதல் அளித்த காட்சி என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. 'தமிழ்ச் செல்வம் நம் பள்ளிக்கு வந்ததே' என்று யான் ஆனந்தமெய்தினேன்.'' என்கிறார்.

ஐந்தாம் பாரத்தில் திரு. வி. க. படிக்கின்ற காலத்திலே கதிரைவேற் பிள்ளை அவருக்கு முதல் முதல் ஆசிரியராகிறார். அப்பொழுது திரு. வி. க. வுக்குப் பத்தொன்பது வயது. இளவயதில் அவர் சிந்தனை வளர்ச்சியில் பெரும் பங்கெடுத்த கதிரைவேற்பிள்ளை பற்றிப் பின்வருமாறு கூறுவார்.

''......முதல் முதல் எனக்குக்கல்விக் கண் திறந்தவர் யாழ்ப் பாணம் நா. கதிரைவேற்பிள்ளை. அவர்தம் பெரும் பொழுது சமய வாதங்களிலும், கண்டனங்கள் வரைவதிலும் செலவாயிற்று. குறிப்பிட்ட நேரத்தில் மாணுக்கர் அவரிடத்தில் தமிழ் பயிலுதல் இயல்வதில்லை.

ஓய்வு கிடைக்கும் எந்த நேரத்திலும் அவர் பாடஞ் சொல்வார்; எவ்விடத்திலும் சொல்வார். அவரது வாதப் பேச்சுக்களிலும் தமிழ் மணம் கமழும்; கலைமகள் நடம் புரிவாள்; மாணுக்கர் ஐயப்பாடுகள் நீங்கும்... கதிரைவேலரின் சொன்மாரி வெள்ளத்தில் இலக்கியம், இலக்கணம், தர்க்கம், சாத்திரம் முதலியன தேங்கும். அத்தேக்கம் மாணுக்கருக்குக் கலைவிருந்தாகும்.''

கதிரைவேற்பிள்ளை (1871-1907) யாழ்ப்பாணத்துப் புலோலியூரில் பிறந்தவர். ஆறுமுக நாவலரின் மாணுக்கர் சுவாமிநாத பண்டிதர், சபாபதிநாவலர், காசிவாசி செந்திநாதையர் முதலியோரிடம் மாணுக்கராய் இருந்து பாடம் கேட்டவர். ஆறுமுக நாவலர் வழியில் நின்று தமிழின எழுச்சிக்கும் சைவ சமய மலர்ச்சிக்கும் அயராது உழைத்தவர். மேலைப் புலோலி சைவப்பிரகாச வித்தியாசாலை, சென்னை பச்சையப்பன் கல்லூரி, திருமயிலை சாந்தோம் கல்லூரி, சென்னை வெஸ்லி கல்லூரி முதலிய பாடசாலைகளில் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். கண்டனங்கள், சொற் பொழிவுகள் ஆற்றுவதில் ஆறுமுகநாவலர் போல் திறமை மிக்கவர். கதிரைவேற்பிள்ளை நாவலர், சதாவதானி, மாயாவாததும்சகோளரி முதலிய பட்டங்கள் பெற்றவர். ஆசிரியராக, மதுரைத் தமிழ்ச் சங்கப் பரிசோதகராக, ஆரணி சமஸ்தானம், ஸ்ரீபால சுப்பிரமணிய பக்த ஜனசபை ஆகியவற்றின் மாண்புறு சொற்பொழிவாளராகப் பதவிகள் வகித்தவர்.

இவர் எழுதிய தமிழ்ப் பேரகராதி அன்று வரை வெளிவந்த அகராதிகளுள் தலைசிறந்ததாகவும் பின்வந்த அகராதிகளுக்கு வழிகாட்டியாகவும் அமைந்து பலராலும் புகழப்பெற்றது. சைவபூஷண சந்திரிகை, சுப்பிரமணிய பராக்கிரமம், புத்தமத கண்டனம், சைவ, சித்தாந்த சங்கிரகம் முதலிய பல நூல்கள் இவரால் ஆக்கப்பட்டவை. நைடதம், கந்தரனுபூதி, பட்டினத்துப் பிள்ளையார் புராணம், ஏகாதசிப் புராணம், முதலிய பல நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். தமது முப்பத்தாறும் வயதில் இளமையிலேயே இவ்வுலகை நீத்தார்.

ஆரம்பகாலத்தில் கதிரைவேற்பிள்ளையின் சேர்க்கையால் திரு. வி. க. வுக்கு உண்டான முருகபக்தி 'முருகன்' என்னும் நூலாக 1925 இல் முகிழ்த்தது. அழகைப்பற்றிய தம் கருத்துக்களையும் பெய்து 'முருகன் அல்லது அழகு' என்ற தலைப்பில் இரண்டாம் பதிப்பைப் பின்னர் வெளியிட்டார். 1950இல் இந்நூலின் எட்டாம் பதிப்பு வெளியானது. முதுமையில் கண்ணொளிமங்கி நோயுற்று வருந்திய நிலையிலும் இப்பதிப்புக்கு நூன்முகம் வரைந்த திரு. வி. க. வின் முருகபக்தி போற்றத்தக்கதே. இளமையில் கதிரை வேற்பிள்ளையின் சேர்க்கையால் உண்டான முருக பக்தி முதுமையின் எல்லையிலும் சுடர்விட்டுப் பிரகாசித்தது.

முதல் முதலாக தமையனாரின் தூண்டுதலினால் திரு. வி. க. பின்னி கம்பெனியில் வேலையேற்றார். அடுத்த நாளே அவ்வேலையை விட்டு விலகினார். பின்பு இன்னொரு கம்பெனியில் வேலைக்குச் சென்று தன் மனப்போக்குக்கு ஒத்து வராத வேலையென்று கருதி அதை ஏற்க மறுத்தார். ஸ்பென்ஸர் கம்பெனியில் காட்லாக் டிப்பார்ட்மென்டில் வேலை யேற்றர். அது ஒரு நூலக அதிபர்போல் ஓரளவு சுதந்திரமாகச் செய்ய வேண்டிய வேலையென்பதால் அதை விரும்பி

ஏற்ருர். விடுதலையுணர்ச்சியுடனேயே இதை ஏற்ருர். ஆனுல் இவரின் அரசியல் ஈடுபாடு கம்பெனியில் உள்ள மேலதிகாரிகளுக்குப் பிடிக்காத காரணத்தால் கம்பெனி விருப்பத்திற்கெதிராக அவ்வேலையையும் உதறித்தள்ளினுர். இப்படியே அச்சுக்கூடவேலை, பள்ளி ஆசிரியர் தொழில், பேராசிரியர் தொழில் என்று பல வேலைகள் பார்த்தார். ஆனுல் எதிலும் அவரால் நீண்ட காலம் உழைக்க முடிய வில்லை. வாழ்வின் குறிக்கோளுக்குத் தம் தொழிலால் இடையூறு விளையுமென்று கருதினுல், அல்லது தம் சுதந்திர வாழ்வு பாதிக்கப்படுமென்று எண்ணினுல், எவ் வளவு பணநெருக்கடியிலும் தமது தொழிலை உதறித்தள்ள அவர் தயங்கியதில்லை.

பெரிய புராணவுரைப் பதிப்பின் முகவுரையில் திரு. வி. க. பின்வருமாறு கூறுகிருர்.

> ''சென்னை வெஸ்லி கலாசாலையில் யான் மாணுக்கராயிருந்த போது யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளையவர்களது அன்புக்குரிய வனுனேன். ஆங்கிலத்தில் பித்துக்கொண்டு திரிந்த எனக்குத் தமிழில் வேட்கையை எழுப்பியவர் அவரே யாவர்.''

இக் கருத்தையே தமது 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்' என்ற நூலிலும் தெரிவித்துத் தனக்குத் தமிழ்ப் பற்றை ஏற்படுத்திய தம் குருவைப் போற்றுகிருர்.

> ''ஒன்று, யான் இரவும் பகலும் ஒரு பெருங்குறிக் கொண்டு சென்னை வெஸ்லி கலாசாலையில் ஆங்கில மயமாக நின்று பயின்று மெட்ரி குலேஷன் பரீட்சைக்குப் போகுந்தருவாயில், எனக்குத் தேனென இனித்து வந்த ஆங்கிலத்தை வேம்பெனக் கைக்குமாறு செய்து, என் மனத்தைத் தீந்தமிழில் தோய்த்தாண்ட யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளையவர் களின் கூட்டுறவு.''

தமிழில் எல்லாம் எழுத முடியாதென்ற நிலையை மாற்றி, அதில் எதுவும் எழுதலாம் என்று காண்பித்த திரு. வி. க. 'தேசபக்தன்' 'நவசக்தி' போன்ற பத்திரிகைகள் மூலம் தமிழிலே சிறந்த அரசியல் பத்திரிகை நடத்தலாமெனவும் நிருபித்தார்.

> ''தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதி காரம் என்று மூன்று சேர்க்கை கொண்ட ஒரு பெரிய நூல். எழுத்து ஒலியின் சேர்க்கை; சொல் எழுத்தின் சேர்க்கை; சொல்லின் சேர்க்கை பொருள். பொருளில் என்ன பேசப்படுகிறது? உலகச் சேர்க்கை பேசப்படுகிறது.''

என்று தொல்காப்பியத்தைப் புதுநோக்கில் பார்க்க முயன்ற திரு. வி.க. தொல்காப்பியத்தில் கூறப்பட்ட நால்வகை நிலங்களின் தொடர்பையும் அவற் ருலான உலகையும், அவ்வுலகுடன் சேர்ந்து சுழலும் பிறகோள்களையும், அவை சுற்றும் ஞாயிறையும், இவைபோன்ற பிற உலகங்களின் சேர்க்கையையும் நம் கண்முன் கொண்டுவந்து, இயற்கை வழி சேர்க்கையென்றும் பிரிவு அல்லவென்றும் கூறி தொல்காப்பியம் பேசும் உலகச் சேர்க்கையை வலியுறுத்துகின்ருர்.

இவ்வாறே தமிழ் மொழிக்கு அரண் செய்யும் பிறநூல்களைஇவர் அணுகும் முறையும் தமிழ்மீதுள்ள வற்ருத பற்றும் என்றும் போற்றற்பாலன. கதிரைவேற் பிள்ளை இளமையில் விதைத்த தமிழ்வித்து முளைத்துப் பெருமரமாய்ப் பயன் தருவதை இங்கே காண்கிறோம்.

கதிரைவேற்பிள்ளையுடன் பழகியதால் தான் அவர் பித்தனுகினுரென்றும், அப்பித்து தமிழிலும் சைவத்திலும் தன்னை ஈடுபாடு கொள்ளச் செய்ததாகவும் பல இடங்களில் திரு. வி. க. கூறியிருக்கிருர்.

> ''அவர் வெஸ்லி கல்லூரியில் ஒரு தமிழாசிரியராக வந்த போது அவருடன் யான் நெருங்கிப் பழகினேன். அப்பழக்கம் என்னைக் கதிரைவேற் பித்தனுக்கியது. அப்பித்து, யான் மாணுக்கனுயிருந்த போதே கதிரை வேற்பிள்ளை மீது தொடுக்கப்பட்ட வழக்கொன்றில் என்னைச் சான்று கூற உந்தியது; பள்ளிப்படிப்பில் கவலையினத்தை உண்டாக்கியது; தமிழில் கருத்தைச் செலுத்தியது; சைவ சமயத்தில் நிறுத்தியது.''

ஆயினும் அவர் வாழ்வு தமிழ், சைவம் என்ற துறைகளில் மட்டும் நின்று உழலவில்லை. நாட்டில் அன்றிருந்த அரசியல் நிலை காங்கிரசில் ஈடுபாட்டை உண்டாக்கியது. சுப்பிரமணிய சிவா, பாரதியார், விபின்சந்திரபாலர் போன்ருேரின் பேச்சுக்கள் அவர் உள்ளத்தில் அரசியல் புயலை வீசின. வந்தே மாதரப் பத்திரிகையும், பாலர் பேச்சும், திலகர் சிறையும், இவைபோன்ற பிறவும் அரசியல் பித்தையுண்டாக்கி அவர் பார்த்துவந்த 'ஸ்பென்ஸர் கம்பெனி' வேலையை விடச் செய்தன. ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர், அன்னிபெசன்ட் அம்மையார் போன்ருேரின் உறவு அரசியலுடன் தியோசொபிக்கல் சங்கத்திலும் ஈடுபாட்டை ஏற்படுத்தின. இங்ஙனம் சைவம், தமிழ் என்றிருந்த வாழ்வு சிறிது சிறிதாக மலர்ந்து, அரசியல் தேசத் தொண்டு என்று வளர்ந்து, தேசபக்தன், நவசக்தியாகிய பத்திரிகைகளின் ஆசிரியப் பதவியை ஏற்று, தொழிலாளர் இயக்கம், புரட்சி, விடுதலைப்போர் என்று பரந்து விரிந்தது. இந்தப் பரந்து விரிந்த தொண்டு வாழ் விலே இராஜகோபாலாச்சாரியார், மகாத்மாகாந்தி போன்ருேரின் உறவும் ஏற் பட்டது. காந்தியமும் மார்க்சீயமும் கலந்தன. ஒத்துழையாமை இயக்கம், வேலைநிறுத்தம், தொழிலாளர் நலன், நாட்டுவிடுதலையென்று ஓயாது உழைத்தார். புது உலகம் அமைக்க விரும்பினுர். அதை அமைக்க வல்லது மார்க்சீயம் என்று கருதினுர்.

இராயப்பேட்டை பௌத்த சங்கத்தில் நடந்த கூட்டத்தில் குழப்பம் விளைவித்து, புத்தமத எதிர்ப்பில் திரு. வி. க. ஈடுபட்டதற்கு மூலகாரணம் அவரின் குருவாகிய கதிரைவேற்பிள்ளையின் சேர்க்கை எனலாம். கதிரை வேற்பிள்ளை உறவால் தமிழ் இலக்கிய உலகில் ஏற்பட்ட ஈடுபாடு இவருக்கு மணிமேகலையைக் காண்பித்தது. அதனைப் படித்த திரு வி. க. அந்நூலின் தமிழ் அழகையும் அது காட்டும் பௌத்த சீலத்தையும் வாயார வாழ்த்துகிருர்.

> ''யான் தமிழ் இலக்கிய உலகுடன் உறவு கொண்டபோது 'மணி மேகலை'யைக் கண்டேன். அக்காட்சியை என்னென்று கூறுவேன்? அது தமிழ் அமிழ்தமா! அற ஆழியா! சீல இமயமா! பௌத்த நீதியா!

எல்லாஞ் சேர்ந்த ஒன்ரு? அச்செல்வ நூலே யாத்த ஆசிரியரை — தமிழ்ப் பெருமானை — என்போன்ருேர் உய்யும் பொருட்டுப் பௌத்த தர்ம சாரத்தைத் தமிழில் இறக்கி உதவிய வள்ளலை — அறவோரை — எம் மொழியில் வழுத்த வல்லேன்!''

முன்பு புத்தமதக் கூட்டத்தில் தொல்லை விளைவித்த திரு. வி. க. இப் பொழுது மணிமேகலையைப் படித்து அதன் மூலம் புத்தமதத்தைப் போற்றும் மனப்பான்மை பெறுகிருர். மணிமேகலை மூலம் ஏற்பட்ட புத்தமத உறவு பல அறிஞர்களின் புத்தமதச் சார்பான நூல்களைப் படிக்கவைத்தது. அம்மதத்தைப் போற்றி எழுதவும் பல மேடைகளில் பேசவும் செய்தது சைவத்திலும் பார்க்க பௌத்தத்திற்கு மேலான இடத்தை அவர் கொடுப்பது போல் சிலநேரங்கள் எண்ணத்தோன்றும். ஆனுல் அவரின் தள்ளாத வயதில், கண்ணொளி மங்கிய நிலையில், துறவும் அனுபவமும் முதிர்ந்த வேளையில், தமது 'பரம்பொருள் அல்லது வாழ்க்கைவழி' என்ற நூலில் கூறிய கருத்துக்கள் அவரின் மெஞ்ஞானத் தெளிவையும் சைவ சித்தாந்தத்துக்கு அவர் கொடுக்கும் ஒப்புயர்வற்ற இடத்தையும் நன்கு விளக்குவனவாக அமைகின்றன. அத்துடன் அக்கருத்துக்கள் சித்தாந்தச் செம்மல் கதிரை வேற்பிள்ளையிடம் படித்த சைவசித்தாந்தத்தின் விளைவென்பதும் புலனுகும்.

சூந்யம் பற்றி ஆராயவந்த திரு. வி. க. சடாகாசச் சூந்யம் பற்றியும் சிதாகாசச் சூந்யம் பற்றியும் குறிப்பிடுகிருர். புத்தர் புகன்றது சடாகாசச் சூந்யமென்றும் சங்கரர் சாற்றியது சிதாகாசச் சூந்யமென்றும் விளக்கி சங்கரர் சாற்றியதே பரவெளி அல்லது பரம்பொருள் என்று கூறி, புத்தர் வழியிலும்விட சங்கரர் வழியே பரம்பொருள் காட்டவல்லதென்பதையும் பௌத்தம் ஒரு அளவுக்கு மேல் செல்ல முடியாதிருக்கிறதென்பதையும் குறிப்பாக உணர்த்துகிருர்.

> '' . . . சடாகாசச் சூந்யம் அளவில் அடங்கும்; செயல் நிகழ்த்தும். சிதாகாசச் சூந்யத்துக்கு இவ்விரண்டும் இல்லை. இச்சூந்யம் அளவற்றது; செயலற்றது; சடாகாயச் சூந்யத்துக்குத் தாயகமாயிருப்பது. யான் பரம்பொருளைப் பற்றிக் குறிப்பிட்டு வரும் சூந்யம் இதுவே. புத்தர் புகன்றது சடாகாசச் சூந்யம். சங்கரர் சாற்றியது சிதாகாசச் சூந்யம். இது பரவெளி — பரம்பொருள்.''

சங்கரரையும் கண்ணப்பரோடு ஒப்பிட்டுக் கண்ணப்பரின் நம்பிக்கை மாண்பைச் சங்கரர் போற்றும் திறனைக் கூறி சைவசித்தாந்தம் உணர்த்தும் பக்தி நெறிக்கு உயர்ந்த இடம் கொடுப்பது கருதற்பாலது.

கதிரைவேற்பிள்ளையிடம் மாணுக்கராக இருந்தபோது பெரிய புராணம் படிக்கும் வாய்ப்பு திரு. வி. க. வுக்குக் கிட்டியது. நாயன்மார் வரலாறுகளை உரை நடையில் எழுதுமாறு திரு. வி. க.வை ஊக்குவித்தவர் அவரே. இதுபற்றித் தாம் எழுதிய பெரிய புராணவுரைப்பதிப்பின் முகவுரையில் பின்வருமாறு கூறுகிருர்.

> ''அவரிடம் நான் நெருங்கிப் பழகி வந்தபோது, பெரிய புராணத்தைப் படிக்குமாறும், நாயன்மார் வரலாறுகளை உரைநடையில் எழுதி எழுதிப் பயிற்சி பெறுமாறும் அவர் எனக்கு அடிக்கடி சொல்லி வருவர். அவ்வாறே யான் பெரிய புராணத்தில் சிறுதேர் உருட்டியும், சிற்றில் கட்டியும் விளையாடி வந்தேன்.''

இங்ஙனம் கதிரைவேற்பிள்ளை தூண்டுதலால் பயிற்சியின் பொருட்டு எழுதிய அரும்பதவுரையுடனும் வசனத்துடனும் பெரிய புராணத்தைச் சஞ்சிகை சஞ்சிகையாக வெளியிடும் முயற்சி 1907 – 1910 வரை நடைபெற்றது. பெரிய புராணம் திரு. வி. க. வின் மனத்தில் மற்றெந்த நூலும் பெறாத ஆழ்ந்த இடத்தைப் பிடித்துக் கொண்டது. அதன் பிறகு. 24 வருடங்கள் கழித்து, மீண்டும் 1934 இல் தான் பெரிய புராணத்தொண்டில் ஈடுபட்டதாக திரு. வி.க. கூறுகிறார்.

இடைக்காலத்தில் அரசியலில் முழுமூச்சாக உழைத்தபோதும் பெரிய புராணமும் நாயன்மார் வரலாறும் இவரின் பல்வேறு பணிகளிலும் இடம் பெற்றதை அவதானிக்கலாம். சமயத்தொண்டோ, சமூகத் தொண்டோ, சுதந்திர வேட்கையோ, எதிலும் நாயன்மார் காட்டிய வழியைக் காண விழை வார். குறிப்பாக நாவுக்கரசர் வாழ்வும் பணியும் இவரின் தொண்டுகள் அனைத் திலும் எடுத்துக்காட்டப்பட்டன. சாதி வேற்றுமையை அறவே வெறுத்து சமுதாய வாழ்விலிருந்து அதனை அகற்றத் தன் முழு ஆற்றலுடனும் முனைந்தவர் திரு. வி. க. நாயன்மார் வாழ்வில் சாதிப்புன்மை இடம் பெறவில்லையென்றும் அப்புன்மை நொறுங்குண்டதென்றும் கூறிச் சீர்திருத்தம் செய்தார். அறுபத்து மூவருள் பலசாதியைச் சேர்ந்தவர்கள் இருந்ததாகவும் கீழ்ச்சாதி மேற்சாதியென்று பாராமல் ஆன்மநேய ஒருமைப்பாட்டால் ஒன்றுபட்டுப் பணிசெய்தனர் என்றும் கூறிய திரு வி. க.,

> '' . . . அவர்தம் வழிவழி வந்த தமிழ்மக்கள் இப்பொழுது சாதிப் பகைமையில் தலைசிறந்து விளங்குகிறார்கள். என்னே காலம்! என்னே கொடுமை''.

என்று வருந்திக் கொதிப்பதைக் காணலாம். சீர்திருத்தத்திற்கும் தன்னை மற்ற தொண்டிற்கும் அப்பர் சுவாமிகளின் வாழ்வை முக்கியமாகக் குறிப்பிடுவதை இவரின் பல நூல்களிலும் குறிப்பாக 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் நூலிலும் அறியலாம்.

திரு வி. க. வின் இளமைக் காலத்திலும் அதன் பின்னும், அவர் பிறந்த நாட்டிலும் வெளியுலகிலும் வேகமாகப் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. உலகப் போர், ரஷ்யப் புரட்சி போன்ற அரசியல் புரட்சிகள், அடிமைப் பட்ட நாடுகளின் விடுதலைப்போர் முழக்கம் முதலியவற்றை அவர் கண்டார். இந்திய நாட்டிலே, குமுறி எழும் சுதந்திர வேட்கையும் மகாத்மாகாந்தியின் அறவழிப் போராட்டமும், சீர்திருத்தம், தொழிலாளர் இயக்கம் முதலியனவும் குறுகிய காலத்தில் பல மாற்றங்களை உண்டுபண்ணின. விஞ்ஞான தொழில் நுட்ப முன்னேற்றங்கள் மனித வாழ்வு முறையிலும் மனிதனின் அறிவு அனுபவம் சிந்தனை முதலிய வற்றிலும் தீவிர மாற்றங்களை உண்டுபண்ணின. இந்தத் தீவிர மாற்றங்களுக் கெல்லாம் அவர் தன்னை வழிப்படுத்தி முன்னின்று உழைத்தார். அம்மாற்றங்களை விஞ்ஞான நோக்கில் ஆராய்ந்து வரவேற்றார். ஆயினும் அவரின் வாழ்வின் பல்வேறு பட்ட கூறுகளில், ஆரம்ப காலத்தில் அவரின் 'கல்விக்கண் திறந்த' கதிரைவேற் பிள்ளையின் சேர்க்கையால் உண்டான சிந்தனை எழுச்சி பிரதிபலித்தது. இடையில் வந்தணைந்த பலவும் ஒதுங்கியபோதும் இச்சிந்தனை எழுச்சி இறுதிவரை நிலைத்து நின்ற தெனலாம்.

# திருக்குறளில் அறிவு

வே. தில்லைநாயகம்
தமிழ்நாடு பொதுநூலகத்துறை இயக்குநர், சென்னை.

## 1 எடுப்பு

### 11 சொல்

ஒருவர் கருத்தை அடுத்தவருக்கு எடுத்து உரைக்க உதவுவது சொல் — சொல் தொகுப்பு — மொழி — ஆகும்.

### 12 பொருள்

எனவே அறிவு முயற்சியில் — ஆய்வில் — ஆக்கத்தில் — ஒரு சொல் ஒரு பொருளில்தான் பயன் படுத்தப்பட வேண்டும். அதுவும் சந்தேகம் இல்லாமல் எடுத்து உரைக்க வேண்டும். ஏன்?

### 13 நான்கு நிலைகள்

நிகழ்வு (Fact) ஒவ்வொன்றும் கருத்து நிலை (Idea plane), பேச்சு நிலை (Verbal plane), குறியீட்டு நிலை (Symbolic plane), குறியீட்டு இலக்கநிலை (Notational plane), என்ற நான்கு நிலைகளிலும் நடைபோடுகிறது.

### 14 சரிநிலைப் பொருள்

எனவே இந்நான்கு நிலைகளிலும் நிகழ்வைக் குறிக்கும் சொல். சரியான பொருள் (Exact meaning), தரவேண்டும். அப்போதுதான் அறிவிப்பவரும் அறிவிக்கப்படுபவரும் — அறிவியலரும், அவரோடு தொடர்பு கொள்பவரும் — குறிப்பிட்ட சொல்லின் பொருளைக் குறிப்பாய் உணர முடியும்.

### 15 இருசொல்

இந்த நிலையில் பார்த்தால் 'திருக்குறளில் அறிவு' என்ற தலைப்பில் 'இல்' என்ற இடைச் சொல்லை நீக்கி விட்டால் 'திருக்குறள்', 'அறிவு' என்ற இரு சொல்களைப் பெறுகிறோம்.

### 16 திருக்குறள்

முதல் சொல்லான — அடிப்படைச் சொல்லான — திருக்குறள் என்ற சொல் — உலக உயர் இலக்கியங்களில் ஒன்றான — தமிழுக்கே உரித்தான — வாழ்க்கை நூலை — வழிகாட்டி நூலைக் — குறிப்பிடுகிறது.

### 17 அறிவு

இரண்டாவது சொல்லான அறிவு என்ற சொல் ஒரு தொழில் பெயரைக் குறிக்கிறது. அதாவது அறி என்ற வினைச் சொல்லின் அடிப்படையில் பிறந்த பெயர்ச் சொல்லைக் குறிக்கிறது.

### 18 பிரித்து ஆளுக

எதையும் கட்டுப்படுத்த வேண்டுமானுல் பிரித்து ஆளவேண்டும். இம் முறையில் இந்த இரு சொற்களையும் முதலில் தனித்தனியாகப் பரிசீலிக்க வேண்டும். பரிசீலித்துக் கண்ட கருத்தை இணைத்து அதுதரும் பொருளைப் பார்க்கவேண்டும்.

### 19 ஆய்வோம்

எனவே இதற்கான முய்ற்சியில் ஒவ்வொரு சொல்லையும் தனித்தனியாகப் பார்க்கலாம். அதற்கான ஆய்வு செய்வோம்.

## 2 திருக்குறள்

### 21 பலர்

உலகில் கோடானு கோடி மக்கள் பிறக்கின்றனர்; வளர்கின்றனர்; வாழ்கின்றனர்; மடிகின்றனர்; மறைகின்றனர்.. அவர்களில் பெரும்பாலோரைப் பற்றி உலகத்திற்கு — நமக்கு — ஒன்றுமே தெரியாது. ஏன்? அவரவர் குடும்பத் திற்குக்கூட கொஞ்சகாலத்திற்குப்பின் தெரிவது இல்லை; தெரிந்து கொள்ள முடிவது இல்லை.

### 22 சிலர்

ஆனுல் சிலர் மட்டும் என்றும் வாழ்பவர்களாக — நின்று வாழ்பவர்களாக— இருக்கின்ருர்கள். இது எப்படி?

தங்கள் அறிவால் — அனுபவத்தால் — ஆற்றலால் — செயலால் — செய் நேர்த்தியால் — செய்த நூல்களால் — உலகப் புகழ் பெற்றவர்களாக வாழ் கிருர்கள்.

### 23 காலத்தை வென்ற நூல்

இன்றும் இனம் கடந்து, மொழி கடந்து, நிறம் கடந்து, நாடு கடந்து, காலம் கடந்து, உலகின் பல்வேறு மொழிகளிலே உயரிய நூலாக — காலத்தை வென்ற நூலாக — நமக்குக் கிடைப்பது திருக்குறள். இதன் சிறப்பு என்ன?

### 24 வழி காட்டி

இந்நூல் ஒன்றுதான் ஆண்பெண் இரு பாலருக்கும் இயைந்த செய்திகளைச் செப்புகிறது. குழந்தைகளுக்கும் முதியோர்களுக்கும் முக்கியமானவைகளை மொழி கிறது. ஆள்பவனைப் பற்றியும் ஆளப்படுபவனைப் பற்றியும் அழகாக ஆராய்கிறது. தனி மனிதத் தத்துவத்தையும் சமூகத்தத்துவத்தையும் சமமாகச் சிந்திக்கச் செய் கிறது. அதாவது அனைவருக்கும் அடிப்படையான அறிவுத்துறைகள் அனைத்தையும் அலசிக்காட்டுகிறது. வாழ்வுக்கு வழிகாட்டி நூலாக இருக்கிறது.

### 25 கண்ணுடி

ஒவ்வொரு நூலும், எழுந்த காலத்தின் கண்ணுடி என்பர் நூல் வல்லோர். இதன் பொருள் என்ன?

காலம் காலமாக வரும் கருத்துக்களை அலசி, இன்றையத் தேவைகளை அறிந்து, எதிர்கால நிலையை உய்த்துணர்ந்து, இலட்சிய நிலையை இயலும் வாழ்க்கை நெறியாகப் படைப்பதுதான் நூலின் நோக்கமாகும். இதை எப்படிச் செய்தார் திருவள்ளுவர்?

**26 புலன் அறிவு**

உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனையும் போலவே திருவள்ளுவரும் மெய், வாய், கண், மூக்கு, செவி முதலிய ஐம்புலன்கள் மூலம் அறிவு பெற்றார்.

**27 அறிவு முயற்சி**

அப்படிப் பெற்ற அறிவை, மனிதனுக்கு இயற்கையாய் வாய்த்து உள்ள மூளையின் ஆற்றலோடு இணைத்துக் கொண்டார்.

தன் காலத்துக் கிடைத்த நூல்களை எல்லாம் எடுத்து அலசி ஆராய்ந்து கல்வி அறிவு பெற்றார்.

கல்வி அறிவு இல்லாத போதும் கேள்வி ஞானம் உடையவர்களோடு தொடர்பு கொண்டு பல செய்திகள் தெரிந்தார்.

காரண காரியத் தொடர்பு அறியும் வகையில் நாடெல்லாம் சுற்றி வந்து தன் அனுபவம் பெற்றார்.

இப்படிக் கேட்டு அறிந்த நிகழ்வுகளைப் பல்வேறு அறிவுத் துறைச் செய்திகளை எல்லாம் தொகுத்து, வகுத்துத் தெளிய, சிந்தனையைப் பயன்படுத்தினார்.

**28 உள்ளுணர்வு**

சிந்தித்தவைகளைச் செப்பம் செய்ய உள்ளுணர்வு — விட்ட குறை — தொட்ட குறை — சித்து வீச்சு — முதலிய அறிவுக்கால்களைப் பயன்படுத்திக் கொண்டார்.

**29 பொருள் பொதிப் பாக்கள்**

சகலகலா வல்லவர் ஆனார். தான் அறிந்ததை மக்களுக்குச் சொல்ல, அத்தனையையும் பிழிந்து திருக்குறள் என்ற தலைப்பில் 1330 பொருள் பொதிப் (Capsule) பாக்களாகத் தந்துள்ளார் என்றால் உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

## 3 அறிவு

**31 தொடர்புச் சொற்கள்**

ஒரு சொல்லின் பொருளை நன்கு அறிந்து கொள்ள வேண்டுமானால் — புரிந்து கொள்ள வேண்டுமானால் — அதனோடு தொடர்பு உள்ள சொற்களைத் தொகுத்துப் பார்ப்பது துணையாய் இருக்கும்.

**32 குறளில் அறிவு**

அம்முறையில் அறிவு என்ற சொல்லின் தொடர்பாகத் திருக்குறள் தரும் சொற்களைப் பார்க்கலாம்.

அறி — அறிந்த 218, 272, 638; அறிக-அறிந்து கொள்க 116, 210; அறிகல்லாதார் — அறிய மாட்டாதார் 427; அறிகிலார் — அறியாது இருக்கின்றார் 1138; அறிகொன்று — அறிந்தவர் சொல் கேளாது 638; அறிதல் — தெரிதல் 582, 632; அறிதோறும் — அறியும் தோறும் 1110: அறிந்த — அறிவு உடைய 61, 721, 1143; அறிந்தக் கடைத்தும் — அறிந்த பொழுதிலும் 637; அறிந்ததிலேன் — அறிய வில்லை 1226; அறிந்தது — தெரிந்தது 122; அறிந்தவை— தெரிந்தவை 587; அறிந்தார் — உணர்ந்தவர் 288, வல்லவர் 717; அறிந்தான் — தெரிந்தவன் 635; அறிந்து — உணர்ந்து 123, 136, 164, 179, 427, 441, 469, 472, 477, 483, 493, 494, 515, 625, 637, 644, 645, 687, 696, 711, 721, 725, 729, 754, 767, 793, 878, 943, 944, 946, 981, 1128. 1287, 1312.

அறிந்தேன் — தெரிந்து கொண்டேன் 1083; அறிய — அடுத்தவர் அறிய 590, 795; அறியலாம் — தெரியலாம் 1258; அறியா — அறியாத 736, 836, 1116; அறியாமை — தெரியாமை 440, 925, 1110; அறியார் — அறியாதவர் 76, 228, 337, 507, 713, 1141; அறியான் — அறியாதவன் 474, 638, 863; அறியும் — நுகரும் 1101, தெரிந்து கொள்ளும் 1308; அறியேன் — உணரேன் 928, 1083, 1125, 1207; அறிவதில்லை — மதிப்பது இல்லை 61; அறிவது — தெரிந்து கொள்வது 61, 293, 1255; அறிவல் — அறிவேன் 1129; அறிவறிந்த — அறிய வேண்டியது அறிந்த 61; அறிவறிந்து — அறிய வேண்டியது அறிந்து 123, 618; அறிவன் — அறியக் கூடியவன் — கடவுள் 2; அறிவாண்மை — அறிவு உள்ள நிலை 287; அறிவாம் — பார்க்கலாம் 36; அறிவானின் — அறிகின்றவரின் 1072; அறிவாளன் — அறிவை ஆள்கின்றவன் 215; அறிவான் — அறிகின்றவன் 214, 318, 677, 701; அறிவிப்ப — தெரிவிப்ப 1233; அறிவிலா — அறிவு இல்லாத 869; அறிவிலார் — அறிவு இல்லாதவர் 427, 430, 843; அறிவிலான் — அறிவு இல்லாதவன் 842, 847; அறிவில்லார் — அறிவு இல்லாதவர் 1140; அறிவினவர்— அறிவு உள்ளவர் 857, 915, 918, 941; அறிவினர் — அறிவு உடையவர் 918; அறிவினர் — அறிவு உடையவர் 198, 429; அறிவினுள் — அறிவுள்ளே 207; அறிவின்மை — அறிவு இல்லாமை 841; அறிவு — 61, 68, 123, 174, 179, 214, 287, 331, 355, 358, 373, 382, 396, 404, 421, 422, 423, 424, 425, 426, 427, 430, 441, 454, 507, 513, 622, 682, 684, 841, 846, 869, 1022; அறிவுடைமை — அறிவு உள்ளமை 43; அறிவுடையார் — அறிவு உள்ளவர் 463, 816, 1153; அறிவுடையான் — அறிவு உள்ளவன் 662.

ஆக மொத்தம் 152 சொற்கள் அறி என்ற சொல் தொடர்பாக — அறிவு என்ற சொல் தொடர்பாகப் — பயன் படுத்தப்பட்டு உள்ளன.

### 33 பொருள்

அறி என்ற வினைச் சொல்லின் அடிப்படையில் பிறந்த பெயர்ச் சொல் அறிவு. தொழில் பெயர் என்ற இலக்கணத்தின் பால் சேரும்.

### 34 பிறப்பு

பிறப்பு ஒவ்வொன்றுக்கும் இரு பொருள்கள் இணைய வேண்டும் என்பது மரபு. அறிவியலார் முடிவு.

இம்முறையிலே அறியும் மனிதனும் அறியப்படும் பொருளும் இணையும் போது அறிவு பிறக்கின்றது; உருவாகிறது. இதோ ஒரு படம். பாடம் தரும்:

| | | |
|---|---|---|
| அறிபவர் | அ | அறி பொருள் |
| | றி | (கருத்து,) |
| (மனிதன்) | வு | (பொருள்) |

35 அறிவு பெறு முறை

இத்தகு முறையை – அறிவு பெறு முறையை – அறிபவரும் அறிபொருளும் இணைந்து அறிவுபெறு முறையை – அறிவியலார் மூன்று கொள்கைகளாக வகுத்து உள்ளனர். அவையாவன:

36 புலன் வழிக் கொள்கை

உயிர் பெறத் தொடங்கிய நாள் தொட்டே அறிவு பெறும் முயற்சியில் இயற்கையாகவே மனிதன் ஈடுபட்டு வருகிறான்.

அதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி, முதலிய ஐம்புலன்களும் படிப்படியாக உதவுகின்றன.

எனவே ஐம்புலன்கள் மூலம் அறிவு பெறும் புலன் வழிக் கொள்கை (Sensationalism) என அழைக்கப்படுகிறது. இதையே, 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு' (27) என்கிறார் திருவள்ளுவர்.

37 அறிவு முதல் கொள்கை

மனிதன் புலன்கள் மட்டுமல்ல; அவனுக்கு இயற்கையாக வாய்த்து உள்ள மூளை – ஆறுவது அறிவு கொண்ட உயிர்ப் பொருள் – அறிவு பெறும் ஆற்றலைக் கொண்டது.

அந்த ஆற்றல் மனிதனின் கல்வி அறிவு, கேள்வி ஞானம், காரண காரியத் தொடர்பு, முடிவு காணும் முயற்சி, சிந்தனை முதலியவற்றால் வளர்கிறது.

இம்முறையில் ஆற்றலை வளர்த்துக் கொள்ளும் முறை அறிவு முதல் கொள்கை (Rationalism) என அழைக்கப்படுகிறது.

38 உள் உணர்வுக் கொள்கை

மனிதன் அறிவைப் புலனால் பெறுவது உண்மை, அறிவு வாதத்தால் அடைவதும் அறிவோம்.

ஆனால் அதையும் தாண்டிச் சில சமயம் சிலர் உள்எழுச்சி வெளிப்பாடாக அறிவு பெறும் நிகழ்ச்சிகளைக் காண்கிறோம். அதை விட்டகுறை தொட்டகுறை என்கிறோம். முற்பிறப்புத் தொடர்பு என்கிறோம். சித்து விளையாட்டு என விளம்புகிறோம்.

இப்படி விளக்க முடியாத நிலையில் அறிவுக்கால் வீசி ஆற்றல் வெளிப் படுத்தும் உணர்வுப் போக்குகள் உள் உணர்வுக் கொள்கை (Intutionalism) என அழைக்கப்படுகிறது.

### 39 வளர்ப்பு

இம்முறையிலே ஒவ்வொரு கருத்தும் முன்னுல் கூறிய அறிவுக் கால்கள் (Three sources of knowledge) மூலம் இணைகிறது; வளர்கிறது; வாழ்கிறது.

## 4 அறிவுத் துறைகள்

### 41 ஆக்கம்

இம்முறையிலே உருவாகும் அறிவு ஆக்க முயற்சியில் ஆராயப்படுகிறது, பயன்படுத்துவார் பண்புக்கு ஏற்ப, பயன்படுத்தப்படும் பாலத்திற்கு ஏற்ப, பயன்படுத்தப்படும் தலத்திற்கு ஏற்பச் செயற்படுகிறது.

### 42 முறைகள்

இம்முறையிலே சில சமயம் பிளப்புப் (Fission) பெறுகிறது. சில சமயம் வடிப்புப் (Distillation) பெற்று வாழ்கிறது. சில சமயம் இணைப்புப் (Fusion) பெற்று இழைகிறது. தொகுப்பு (Clustering) பெற்றுத் துவள்கிறது. குவிப்புப் (Agglomeration) பெற்றுக் குமிண் சிரிப்புக் காட்டுகிறது.

### 43 மாற்றம்

இப்படி எல்லாம் ஆக்கம் பெறும் அறிவு, உலகத்திற்கு ஏற்ப – உலக மக்கள் அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப – பல்வேறு அறிவுத் துறைகளாகப் பெயர் பெறுகிறது. இதையே வள்ளுவர் வாக்கினுல் சொல்வதானுல்

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு *(426)*

இங்கு உலக இயற்கைக்கு ஏற்றது போல மனிதன் அறிவோடு நடக்க வேண்டும் என்று உரைகொள்வர் பெரியோர்.

இதையே உலக வளர்ச்சிக்கு ஏற்ப – உலக அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப – அறிவு வளரும் என்று சொல்வது தவருகாது!

### 44 அகம் புறம்

ஆதியில் மனித ஒழுக்கத்தை – ஒழுக்க அறிவுத் துறையை – அகம் புறம் என்று இரு பிரிவாக வைத்திருந்தவர் பழந்தமிழர்.

### 45 ஏழு திணைகள்

அடுத்த கால கட்டத்தில் அகத்திற்கு ஏழு திணையும் புறத்திற்கு ஏழு திணையும் ஆனுல் ஒன்றிற்கு ஒன்று தொடர்பான – சமன்பாடு கொண்டு – ஏழு திணைகளை வகுத்தார் தொல்காப்பியர்!

### 46 அறுபத்து நான்கு

'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்அம்மை – தூய
உருப்பளிங்கு போல்வாள் என்உள்ளத்தின் உள்ளே
இருப்பள்இங்கு வாராது இடர்'

என்ற பாட்டு அறிவுத்துறைகள் அறுபத்து நான்காகப் பிரிக்கப்பட்ட நிலையைத் தெரிவிக்கிறது.

### 47 பதின்முறைப் பத்து

அடுத்து அமெரிக்க நாட்டு மெல்வில் டுயி (Melvil Dewey) என்ற நூலகர் அறிவுத் துறைகளைப் பதின்முறை எண்மானங்கள் கொடுத்துப் பகுத்துக் காட்டினர் அதன் விவரமாவது:

| | | |
|---|---|---|
| 0 | பொதுமை | Generalia |
| 1 | தத்துவம் | Philosophy |
| 2 | சமயம் | Religion |
| 3 | சமூக இயல்கள் | Social sciences |
| 4 | மொழி இயல் | Philology |
| 5 | அறிவு இயல்கள் | Pure sciences |
| 6 | பயன்படு அறிவு இயல்கள் | Applied sciences |
| 7 | நுண் கலைகள் | Fine arts |
| 8 | இலக்கியம் | Literature |
| 9 | பூகோளம்-சரித்திரம் | Geography/History |

இத்துறை ஒவ்வொன்றும் பதின்முறைப்படி ஆயிரக்கணக்கில் பிரிக்கப் பட்டுள்ளன. இதன் காரணமாகப் புதிய துறைகளைத் தொடர்பான இடத்தில் புகுத்திக் கொள்ள வசதியாய் இருக்கிறது.

### 48 கோலன் துறைகள்

உலகப் புகழ்பெற்ற மறைந்த மேதை அரங்கநாதன் அறிவுக்களஞ்சிய மான நூலகத் துறைக்குப் பயன்படும் முறையில் ஒரு புதிய பகுப்புமுறை — கோலன் பகுப்புமுறை (Colon scheme of Classification, 1933) கண்டார். இதன் சுருக்கமாவது.

| | | | |
|---|---|---|---|
| 1 | 01 | அறிவுக் கால்கள் | Information sciences |
| 2 | A | இயற்கை இயல்கள் | Natural sciences |
| 3 | B | கணக்கு இயல் | Mathematics |
| 4 | C | இயற்பு இயல் | Physics |
| 5 | D | பொறி இயல் | Engineering |
| 6 | E | இயைபு இயல் | Chemistry |
| 7 | F | நுணுக்க இயல் | Technology |
| 8 | G | உயிர் இயல் | Biological sciences |
| 9 | H | புவி இயல் | Geology |
| 10 | I | தாவர இயல் | Botany |
| 11 | J | விவசாய இயல் | Agriculture |
| 12 | K | விலங்கு இயல் | Zoology |
| 13 | L | மருத்துவ இயல் | Medicine |
| 14 | M | பயன்படு கலைகள் | Useful arts |
| 15 | N | நுண் கலைகள் | Fine arts |
| 16 | O | இலக்கியம் | Literature |
| 17 | P | மொழி இயல் | Linguistics |
| 18 | Q | சமயம் | Religion |

| | | | |
|---|---|---|---|
| 19 | R | தத்துவம் | Philosophy |
| 20 | S | உள்ள இயல் | Psychology |
| 21 | T | கல்வி இயல் | Education |
| 22 | U | நில இயல் | Geography |
| 23 | V | வரலாறு | History |
| 24 | W | அரசு இயல் | Politics |
| 25 | X | பொருள் இயல் | Economics |
| 26 | Y | சமூக இயல் | Sociology |
| 27 | Z | சட்டஇயல் | Law. |

### 49 என்று நீ அன்று நான்

'என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ'

என்கிறுர் அற்புதமாகத் தாயுமானவர், ஆண்டவனுக்கும் அடியாருக்கும் உள்ள தொடர்பை விளக்கப் புகுந்தபோது.

அது போலவே மனிதன் அறிவு தெளிந்ததுமே அறிவியல் ஆய்வு — அறிவுத் துறைகள் பிரிப்பு முயற்சி — தொடங்கிவிட்டது என்னலாம். இயற்கை அதை மனிதனுக்குத் தந்தது. மனிதன் இயற்கையிலே அதைக் கண்டான்.

இதை வலியுறுத்துவது போல திருக்குறளும் அறிவுத் துறைகள் பற்றிய கருத்துக்களைத் தருகின்றன என்னலாம்.

இதை ஏற்க மறுப்பவர்கள் — இப்படி எல்லாம் அன்றே இருந்து இருந்தால் இன்று நாம் ஏன் இப்படி இருக்கிறோம் என்று கேள்வி எழுப்புவர். நியாயம்தான்!

ஆனுல் ஒன்று. அறிவுத்துறை கருத்துகளை வளர்க்க நாம் தவறிவிட்டோம். உண்மைதான். ஆனுல் அந்தக் கருத்துகள் நமக்குத் தெரியாதது அல்ல. தவறிய கருத்தைச் சொல்லிச் செயற்பட ஊக்கும் முயற்சி தவறு இல்லை என்பதைஎல்லோரும் ஏற்பர்.

இந்த இடத்தில் அறிவு பற்றி கீழ்க்கண்ட திருக்குறள் பாக்கள் இரண்டும் மனதிற் கொள்ள வேண்டியனவாகும்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. (423)

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. (355)

இம்முறையிலே இன்றைய அறிவுத் துறைகளைப் பற்றிய கருத்துகளை அன்றே கூறியுள்ள திருக்குறள்கள் சிலவற்றைப் பார்க்கலாம்.

ஒவ்வொரு துறை பற்றியும் அந்தந்தத் துறை வல்லுநர்கள் விளக்கமாகத் தனிக்கட்டுரைகள் வரைந்துள்ளனர். இங்குப் பறவைப் பார்வை (Bird's eye view) யாகச் சில செய்திகள் செப்பப்படுகின்றன.

## 5 இயற்கை அறிவியல்கள்

### 51 பொருள்

எங்கெங்கோ தொடர்பு இன்றி துண்டு துண்டாக உள்ள நிகழ்வுகளைத் தொகுத்து, வகுத்து, பரிசீலித்து, அடிப்படை அறிந்து, வாழ்வுக்குப் பயன்படும் வகையில் அறிவு — அறிவியல் ஒட்ட சுழற்சி (Spiral of Scientific method) முறையை ஏற்றுக் கொள்ளும் அறிவு — அறிவியல் (Science) எனப்படும்.

### 52 பெயர்

இதில் இயற்கையை ஆயும் இயல்களை, இயற்கை அறிவியல்கள் (Natural sciences) என அழைக்கிறோம்.

### 53 வகை

கணக்கு இயல், இயல்பு இயல், பொறி இயல், இயைபு இயல், நுணுக்க இயல் முதலியன இதில் அடங்கும்.

### 54 கணக்கு இயல்

*பொருள்:* எண், எண்திறம், எண் தொடர்பு பற்றி விளக்குவது கணக்கு இயல் (Mathematics) எனப்படும்.

*வகை:* இதில் எண்மானம், எழுத்துமானம், கோட்டுக் கணக்கு, இயங்கு முறை, காலக்கணக்கு, வான இயல் முதலியன அடங்கும்.

*சான்று:* ஒன்று *(87)* என்று தொடங்கி எழுபது *(639)*, நூறு *(932)*, ஆயிரம் *(259)*, கோடி *(337)* வரை எண்மானக் கணக்குப் பார்க்கிறோம். *22*-வது குறள் எண்ண முடியாத நிலை (Infinity) யை எடுத்துக் காட்டுகிறது. *1037* வது குறள் பின்னம் (Fraction) பற்றிப் பேசுகிறது.

### 55 இயற்பு இயல்

*பொருள்:* இயற்கைச் சக்திகள் பற்றி விளக்குவது இயற்பு இயல் (Physics) எனப்படும்.

*வகை:* இதில் அடிப்படைக் கருத்துகளான காலம், இடம், பரப்பு, பரி மாணம் முதலிய ஆயப்படும். மேலும் ஒலி, ஒளி, வெப்பம், மின்சக்தி, காந்தம் முதலியனவும் பேசப்படும்.

*சான்று:* தராசுபற்றி *118*-வது குறள் கூறுகிறது. கணம் பற்றி — கண் இமைக்கும் நேரம் பற்றி — கால அளவு பற்றி *29*-வது குறள் பேசுகிறது. ஒளி பற்றி உரைக்கிறது *706*-வது குறள்.

### 56 பொறி இயல்

*பொருள்:* கணக்கையும், இயல்பு இயல்களையும் பயன்படுத்திப் பொறி களை அமைத்துக்கொண்டு, அதன் துணையால் இருப்பிடம், போக்குவரத்து, சூழ் நிலைகளைக் கட்டுப் படுத்தப் பயன்படும் அறிவு முயற்சி பொறி இயல் (Engineering) எனப்படும்.

*வகை:* இருப்பிடம் அமைப்பு, சாலைகள் அமைப்பு, இயந்திர அமைப்பு, மின்சார அமைப்பு, சூழ்நிலை உதவிகள் அமைப்பு முதலியன இதில் அடங்கும்.

சான்று: 475, 667, 1032-வது குறள்கள் அச்சு (Axle) அமைப்புப் பற்றி அறிவிக்கின்றன. 615-வது குறள் தூண் (Pillar) கூறி கட்டட அமைப்பை விளக்குகிறது. 308-வது குறள் 'இணர் எரி' பற்றி எடுத்து உரைக்கிறது.

**57 இயைபு இயல்**

பொருள்: உலகத்து இயற்கைப் பொருள் ஒவ்வொன்றும் எவ்வாறு பல்வேறு பிரிவுகள் இணைந்து – இயைந்து – உருவாகிறது என்பதை இயைபு இயல் (Chemistry) விளக்குகிறது.

வகை: தனிமங்கள், அமிலங்கள், உப்புகள், உயிர்மப் பொருள்கள் முதலியனவற்றின் செயல்படு பண்பை விளக்குவது இதில் அடங்கும்.

சான்று: 759-வது குறள் எஃகு பற்றி இயம்புகிறது. இது வேல் (500) வாள் (729), அம்பு (597), செய்யப்பயன் படுவதைப் பார்க்கிறோம். 714-வது குறள் 'சுதை' வண்ணம் காட்டுவதைக் காட்டுகிறது.

**58 நுணுக்க இயல்**

பொருள்: முன் கண்ட அறிவு இயல்களைத் துணையாகக் கொண்டு தொழில் நுணுக்க வளர்ச்சி காண்பதை விளக்குவது நுணுக்க இயல் (Technology) எனப்படும்.

வகை: ஒவ்வொரு தொழிலும் இன்று ஒரு தனித் துறையாக வளர்ந்து விட்டது.

சான்று: 267-வது குறள் சுடச் சுடரும் பொன் பற்றிப் பேசுகிறது.

**59 இணைப்பு இயல்**

முன் கண்ட துறைகளை இணைத்து உருவாகும் இயல்களும் இப்பிரிவில் அடங்கும்.

அப்போதைய கருத்துக்கும் குறள் கருத்து வழங்கும்.

## 6 உயிர் அறிவியல்கள்

**61 பொருள்**

உயிரை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்து வரும் அறிவியல்கள் உயிர் அறிவியல்கள் (Biological sciences) எனப்படும்.

**62 வகை**

இதில் உயிர் இயல், புவி இயல், தாவர இயல், விவசாய இயல், பிராணி இயல், மருத்துவ இயல், பயன்படுகலைகள் முதலியன அடங்கும்.

**63 உயிர் இயல்**

பொருள்: உயிர் பற்றி விளக்குவது உயிர் இயல் (Biology) எனப்படும்.

வகை: இதில் உடல் தோற்றம், அமைப்பு, செயல்படுமுறை, குறைபாடுகள், சூழ்நிலை, இணைப்பு, பரிணாமம் முதலியன அடங்கும்.

சான்று: 27-வது குறள் ஐம்புலன்கள் பற்றி அறிவிக்கிறது. 398-வது குறள் பாரம்பரியம் பற்றிப் பரிசீலிக்கிறது.

64 புவி இயல்

பொருள்: புவித்தோற்றம், மண், பாறை, நிலம்முதலிய அமைப்புகளையும், அதனோடு தொடர்பானவைகளையும் விளக்குவது புவி இயல் (Geology) எனப்படும்.

வகை: மண் அமைப்பு, பாறை இயக்கம், படிவப் பாங்கு, பழைய உயிர்ப் படிவங்கள், உலோகங்கள் பற்றியன இதில் அடங்கும்.

சான்று: 1037-வது குறள் தொடிப்புழுதி பற்றிப் பேசுகிறது. 396-வது குறள் மணற்கேணி பற்றிப் பேசுகிறது. 151-வது குறள் நிலம் அகழப்படுதலைப் பற்றி பேசுகிறது.

65 தாவர இயல்

பொருள்: தாவரங்கள் பற்றிய அறிவுப் பிரிவு தாவர இயல் (Botany) எனப்படும்.

வகை: தாவரங்களின் தோற்றம், அமைப்பு, வளர்ச்சி, வகை பற்றிய ஆய்வு இதில் அடங்கும்.

சான்று: 595-வது குறள் 'மலர்' மாண்பு விளக்குகிறது. தாமரை (617), குவளை (1114), அனிச்சம் (90) முதலிய மலர் வகைகளைக் காண்கிறோம். 277-வது குறள் குன்றி மணியின் கருப்பு சிவப்பு நிறம் பற்றி நவில்கிறது.

66 விவசாய இயல்

பொருள்: தாவரத்தை மனிதன் பயன்படுத்தும் முயற்சியை விளக்குவது விவசாய இயல் (Agriculture) ஆகும்.

வகை: இதில் தாவரங்கள் பயன்படும் வகை கொண்டும் பயன்படும் தாவரப்பகுதி கொண்டும் இனம் பிரிக்கப்படும்.

சான்று: கரும்பு (1078), பருத்தி (1273), மூங்கில் (1113), முதலிய விவசாயப் பொருள்களைக் குறிக்கின்றன. அவை உணவு (216) ஆகச் சில சமயமும், நஞ்சு (1008) ஆகச் சிலசமயமும் பயன்படுவதும் பகரப்படுகிறது.

67 பிராணி இயல்

பொருள்: பிராணித் தொடர்பான அறிவுத்துறை பிராணி இயல் (Zoology) எனப் பெயர் பெற்றது.

வகை: இதில் பிராணிகளின் தோற்றம், வளர்ச்சி, சிறப்பு, வகை முதலியன ஆயப்படும்.

சான்று: பிராணிகளை எலும்பு உள்ளன, இல்லாதன எனப் பிரிக்கிறது 77-வது குறள். வேலுக்கு அஞ்சாத களிறு (500), ஆண் சிங்கம் (381), வெருஉம்புலி (599), பொருதும் ஆடு (486), தந்திர நரி (500), சீறும்பாம்பு (763), எளிய எலி (763), அடங்கிய ஆமை (126), நெடும்புனல் முதலை (495), கலந்து உண்ணும் காகம் (527), முதலிய பிராணிகளைக் காண்கிறோம்.

68 மருத்துவ இயல்

பொருள்: மனிதனின் உடல் பற்றி விளக்குவது மருத்துவ இயல் (Medicine) எனப்படும்.

வகை: இதில் மனிதன் உடல் அமைப்பு செயல் பண்பு, நோய், நோய் தீர்க்கு முறை, வளர்ச்சி பற்றிப் பேசப்படும்.

சான்று: புலன்கள் பற்றியும், புலன்கள் கட்டுப்பாடு பற்றியும் 6-வது குறள் பேசுகிறது. மனிதன் உடல் பேணல் பற்றி — இன்றைய வைத்திய முறைகள் பற்றி — விதந்து ஓதுகிறது மருந்து (941-50) என்னும் அதிகாரம்.

69 பயன்படு கலைகள்

பொருள்: முன்கூறிய அறிவு இயல்களை எல்லாம் பயன்படுத்திக் கொண்டு மனிதன் தனக்கு வேண்டிய பயன்படு கலை (Useful arts) களைப் படைத்துக் கொள்வது பற்றி இத்துறை விளக்குகிறது.

வகை: இன்றைய புதிய படைப்புகள் எல்லாம் — நூல் ஆக்கம் தொடங்கி அஞ்சல்தலை சேகரிப்பு வரை — இதில் இடம் பெறுகின்றன.

சான்று: அறிவுக்கு உதவும் நூல்களைச் சொல்கிறது 401-வது குறள். தூசிப்படையைப் பற்றித் துல்லியமாக சொல்கிறது 767-வது குறள். அரண் பெருமையை அலசுகிறது 741-750 முதலிய குறள்கள்.

7 மனித இயல்கள்

71 பொருள்

தனி மனிதன் சிந்தனையால் — செயலால் — அவனோடு தொடர்பு கொண்ட துறைகள் மனித இயல்கள் (Human sciences) எனப்படும்.

72 வகை

இதில் நுண்கலைகள், இலக்கியம், மொழி, சமயம், தத்துவம், உள்ள இயல் முதலியன அடங்கும்.

73 நுண்கலைகள்

பொருள்: மனிதன் அறிவு தெளிந்த நிலையில் — அறிவுத் துறைகளைப் பயன்படுத்திக் கொண்டு — ஓய்வு நேரத்தில் அழகு காண முயல்கிறான். நுண் கலைகள் (Fine arts) பிறக்கின்றன.

வகை: கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, நாட்டியக்கலை, இதனோடு ஒத்த — இணைந்த — இழைந்த கலைகள் முதலியன இதில் அடங்கும்.

சான்று: பண்ணையும் பாடலையும் பரிசீலிக்கிறது 573-வது குறள். பாவை செய்தல் பற்றி 407-வது குறள் கூறுகிறது.

74 இலக்கியம்

பொருள்: மனிதன் வாழவேண்டி இலக்கு — இலட்சியம் — பற்றி விளக்குவது — காலக் கண்ணாடியாக விளங்குவது — இலக்கியம் (Literature) ஆகும்.

வகை: செய்யுள், கூத்து, புனைகதை, முடங்கல், பொழிவு, கட்டுரை முதலிய இதில் அடங்கும்.

சான்று: நாநலம் பற்றி — பொழிவு பற்றி — சொல்லாற்றல் பற்றி — சொல்வன்மை (641–650) பற்றி ஒரு அதிகாரமே உள்ளது. நவில்தொறு நூல் நயம் காண்கிறது 783-வது குறள்.

### 75 மொழி இயல்

பொருள்: மொழியின் இயல்பு பற்றிப் பேசுவது மொழி இயல் (Linguistics) ஆகும்.

வகை: மொழியின் கூறுகள் பற்றி — எழுத்து, சொல், சொல் வகை, சொல் தொடர், சொல் செயல், சொல் பயன், மொழி வகை முதலியன இதில் அடங்கும்.

சான்று: சொல் எப்போதும் இன்சொல் (91) லாகப் பயன்படும் சொல் (97) லாக இருக்கவேண்டும். எழுத்து அகரம் (1) கொண்டு தொடங்குகிறது. எண்ணும் எழுத்தும் (392) மனிதனுக்குக் கண்கள் போன்றவை.

### 76 சமயம்

பொருள்: மனிதன் தன் அறிவுக்கு அப்பாற்பட்டு ஒரு அதீத சக்தி இருக்கிறது. அதைத் திருப்திப்படுத்திஞல் தனக்கு எல்லாம் கிடைக்கும் என்று கருதிஞன் அது சமயம் (Religion) ஆக உருக்கொண்டது என்பர்.

வகை: சமய அடிப்படையான ஆண்டவன், அவனே அடையும் முயற்சிகள், அதஞல் ஏற்படும் பலன்கள் பற்றியும், சமயப் பிரிவுகளேப் பற்றியும் பேசுவது இதில் அடங்கும்.

சான்று: கடவுள் வாழ்த்து (1–10) அதிகாரம் கடவுள் பற்றிய கருத்தை ஒழுக்கத்தை ஒவ்வொருவரும் ஏற்கும் வகை எடுத்து உரைக்கிறது.

### 77 தத்துவம்

பொருள்: உலகக் கருத்துகளின் மெய்ம்மை அறியும் முயற்சி, தத்துவம் (Philosophy) என அழைக்கப்படுகிறது.

வகை: அறிவு ஆராய்ச்சி, தருக்க இயல், ஒழுக்க இயல், அழகு உணர்வு இயல், மெய்ம்மை முயற்சி இயல் முதலியன இதில் அடங்கும்.

சான்று: ஐயுறவின்றி ஆய்ந்து நாம் காணும் ஒவ்வொரு நிகழ்ச்சியைப் பற்றியும் மெய்ம்மை உணர்ந்து பிறப்பு அறுத்து பெருநிலே அடையும் வகையை மெய் உணர்தல் (351–360) அதிகாரம் விளக்குகிறது.

### 78 உள்ள இயல்

பொருள்: கணச்சித்தம் கணப்பித்தம் என்ற வாக்கு மனித நிலேயை விளக்கும் வாக்காகும். அதாவது மனிதனின் மன நிலேயை — உள்ள நிலேயை — விளக்குவது உள்ள இயல் (Psychology) எனப்படும்.

வகை: புலன் உணர்வு, கருத்து அறிவு, உள்ள எழுச்சிகள் அதஞல் ஏற்படும் மாற்றங்கள் ஒவ்வொரு மனிதனிடமும் எவ்வாறு உருவாகி செயல்படுகின்றன என்பதை இது விளக்கும்.

சான்று: மனிதனுக்கு மனசாட்சி (293) உண்டு. உள்ளம் கள்ளம் (282) கொண்டதாக இருக்கக்கூடாது. எண்ணம் திண்ணம் (666) ஆக இருக்கவேண்டும்.

## 79 இணைப்பு

தனி அல்ல: இது வரை மனிதர் ஒவ்வொருவரையும் தனித்தனியாகப் பார்த்தோம். மனிதன் தனியாக வாழ்வது இல்லை; முடியாது; கூடாது.

சேர்வு: அவன் சேர்ந்தே வாழ வேண்டும். ஏனெனில் மனிதன் சமூக உணர்வு — சேர்ந்து வாழும் உணர்வு — கொண்டவன்.

எப்படிச் செயல்: அப்போது அவன் எப்படிச் செயல்படுவான்? தொகுத்துப் பார்க்கலாம்.

# 8 சமூக இயல்கள்

## 81 பொருள்

மனிதன் தனி நிலைமை மாறி சேர்ந்து வாழத் தொடங்குகிறான். அப்போது அடுத்தவரோடு சேர்ந்து வாழும்போது தன்னை அடக்கிக் கொண்டு சமூக வாழ்வாக வாழ முனைகிறான். அந்நிலை பற்றி ஆய்வது சமூக இயல்கள் (Social sciences) எனப்படும்.

## 82 வகை

கல்வி, பூகோளம், வரலாறு, அரசியல், பொருளாதாரம், சமூகம், சட்டம் முதலிய துறைகள் இதில் அடங்கும்.

## 83 கல்வி

பொருள்; உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனும் அறிவோடு வாழ, கல்வி அறிவு தேவை. இத்தகு கல்வி பெறும் வழிமுறைகளைக் கூறுவது கல்வி இயல் (Education) ஆகும்.

வகை: கல்வி என்றால் என்ன, ஏன், எப்படி என்று விளக்கும் முறையில் கற்றல், கற்பித்தல், கற்பிக்கும் முறைகள் கல்வி மதிப்பீடு, கல்வி அமைவு முதலியன இதில் அடங்கும்.

சான்று: கல்வி கண் போன்றது (392). அதை முயன்று அடைய வேண்டும் (396). அறிந்ததை நடைமுறையில் நடத்திக் காட்டவேண்டும். (391). அது செல்வம் போன்றது (400) என்பது போன்றவைகளைக் கல்வியும்,(391-400) அறிவும் (421-430) அறிவிக்கின்றன.

## 84 நில இயல்

பொருள்: பூமியின் மேற்பரப்பான நிலத்தைத் தட்ப வெப்பம், காற்று, மழை முதலியன எப்படிப் பாதித்து மக்கள் வாழ்வை மாற்றி அமைக்கிறது என்பதை விளக்குவது நிலஇயல் — பூகோளம் (Geography) ஆகும்.

வகை: நிலக்கணக்கு, இயற்கை அமைப்பு, பழைய பயிர் அமைப்பு, மனித மாற்றம், அரசியல், பொருளாதாரப் பாதிப்பு முதலியவைகள் இதில் அடங்கும்.

சான்று: உலகம் மழையை நம்பி இருக்கிறது (542). மழை இல்லையானல் ஒழுக்கம் குன்றும் (20). மணிநீரும், மண்ணும், மலையும், காடும், நாட்டிற்கு அரண் (742). மண் மனிதனுல் மாண்பு பெறுகிறது (996).

**85 வரலாறு**

பொருள்: மனித இனம் உலகம் முழுமையும் காலா காலமாக எப்படி முன்னேறி வருகிறது என்பதை — கருத்தோட்ட வளர்ச்சியை — எடுத்து உரைப்பது வரலாறு (History) ஆகும்.

வகை: ஆட்சி அங்கங்கள், கொள்கைகள், அரசியல் அமைப்பு, செயல் பண்பு, மக்கள் — மன்னர் தொடர்பு, அதற்கான ஆதாரங்கள் பற்றி அலசுவது இதில் அடங்கும்.

சான்று: நாடா வளத்தனவே நாடு (739). குறையா விளையும், குறை யில்லா அறிஞரும் கொண்டதே நாடு (731). பசி, பிணி, பகை இல்லாமல் இருப்பதே நாடு (734).

**86 அரசியல்**

பொருள்: அரசு என்ருல் என்ன, ஏன், எப்படி என்ற கேள்விகளுக்கு விடையளிக்க முன்வரும் முயற்சி அரசு இயல் — அரசியல் (Political science) எனப்படும்.

வகை: தனி மனிதநிலை, சமூக உறவு, பெரிய தனக்காரர் எழுச்சி, மன்ன ராட்சி, சிலராட்சி, குடியாட்சி, இராணுவப் புரட்சி, பொது உடைமை, உலக ஒருமைப்பாடு முதலியன இதில் அடங்கும்.

சான்று: இறைகாக்கும் அரசனே முறைகாக்கும் (547). அறத்திற்கும் அறிவுக்கும் அடிப்படை அரசனே (543). கண்ணோட்டம் உள்ளதே கண் (573).

**87 பொருளாதாரம்**

பொருள்: பொருள்களின் ஆக்கம், வினியோகம், நுகர்வு தொடர்பாகத் தேவைப்படும் போக்கு வரத்து, பணம், பணமதிப்பீடு, வணிகம், நிர்வாகம் முதலியன பற்றிப் பேசுவது, பொருள் இயல் — பொருளாதாரம் (Economics) எனப்படும்.

வகை: பொருள்களை விளைத்தல், தோண்டல், ஆக்கல், நகர்த்தல், உதவல் முதலியன ஐம்பெரும் பொருளியல் அடிப்படைகள் இதில் அடங்கும்.

சான்று: இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்த வகுத்தலும் காட்டு வது பொருளாதாரம் (385). அது உறுபொருளாலும், உல்கு பொருளாலும், தெறு பொருளாலும் தேரவேண்டும் (756). அதை அருளொடும் அன்பொடும் பெறவேண்டும். (755).

**88 சமூகம்**

பொருள்: ஒரு நாட்டின் பல்வேறு நிலை மக்கள் எவ்வாறு கூடி, சேர்ந்து, வாழ்ந்து, சிறக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டுவது சமூக இயல் (Sociology) ஆகும்.

வகை: கலாச்சாரம், நாகரிகம், மக்கள் இயல்பு, மக்கள் பெருக்கம், நடமாட்டம், வாழ்வு முதலியன இதில் அடங்கும்.

சான்று: எல்லா உயிரும் பிறப்பால் சமம் (72). நல்லவர் நல்லது அன்றி அல்லது செய்யார் (954). அவர் ஒழுக்கம், வாய்மை, நாண் கொண்டு வாழ்வார் (952). சமூகத்திற்கு உழைப்பவனுக்குத் தெய்வம் உதவும் (1023).

### 89 சட்டம்

பொருள்: தனிமனிதன் கடமை — உரிமை, அவன் சமூகத்தோடு சங்கம மாகும்போது ஏற்படும் பொறுப்புகள், அரசோடு தொடர்பு கொள்ளும்போது உண்டாகும் கட்டுப்பாடுகள் பற்றிப் பேசுவது சட்டம் (Law) ஆகும்.

வகை: தனி மனிதன் உரிமை — கடமை, சொத்து, ஒப்பந்தம், சட்ட மீறல், குற்றம், சட்ட முரண்கள், அறமன்றம், அரசுப் பொறுப்பு, அனைத்து நாட்டுச் சட்டங்கள் முதலியன இதில் அடங்கும்.

சான்று: மனம் அறிந்து என்றும் யாருக்கும் இன்னாத செயல் செய்யக் கூடாது (317). தாம் பசியோடு இருந்த போதிலும் நல்லார் பழிக்கும் செய்கை செய்யக்கூடாது (656).

## 9 முடிப்பு

### 91 சிறந்தது

திருக்குறள் சிறந்த நூல். இதுபண்டிதர்கள், விற்பன்னர்கள், மேதாவிகள் மட்டுமே படித்துப் புரிந்து கொள்ள முடியும். சாதாரண மனிதன் அதைப் படித்துப் புரிந்து கொள்வது என்பது இயலாத காரியம் என்று எண்ணிக் கொண்டு ஒதுங்கி விடுகின்றனர் பலர் இன்றும்!

### 92 பயன் படாது

திருக்குறள் வாழ்க்கைக்குப் பயன் படாது. அதைப் படிப்பது வெட்டி வேலை. பொழுது போக்கு இல்லாதவர்களும் பெரியவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களும் கூடிப் பேச, குந்தி உறவாட உதவும் என்று விலகி விடுகின்றனர் சிலர்.

### 93 படிக்க முடியுமா?

திருக்குறள் படிக்க வேண்டுமானால் நூல் வேண்டும். நூல் வாங்கப் பணம் வேண்டும். பணம் கொடுத்து வாங்கிய பின்பும் படிக்க நேரம் வேண்டும். நேரம் கிடைத்தாலும் படிக்க அறிவு வேண்டும். அத்தகு அறிவு பெற்று படிக்க வேண்டுமா? படிக்க முடியுமா? என்று பின்தங்கி விடுகின்றனர் சிலர்.

### 94 படிக்க வேண்டியது இல்லை

பள்ளி, கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றாயிற்று. வேலையும் கிடைத்து விட்டது. சிபாரிசு பிடித்துவிட்டால் முன்னேறிவிடலாம். இனி நாம் படித்துத் தெரிந்துகொள்ள ஒன்றும் இல்லை. படிக்க வேண்டியது இல்லை என்று அலட்சியத் தால் அண்டாதவர் சிலர்.

**95 சரியாய்ப் படிப்பது இல்லை**

இவர்களைப் போல் இல்லாமல் திருக்குறள் பயன் உள்ளது என்று உணர்ந்தவர் கூட, நூலைச் சரியாய்ப் படிப்பது இல்லை. பல்கலைக் கழகப் பட்டம் பெற்றவர்களில் எத்தனைபேர் திருக்குறளை முழுவதும் படித்து உள்ளனர்?

பதவுரை, பொழிப்புரை, கருத்துரைக்கு அப்பால் எத்தனை பேருக்கு நூல் நுவல் பொருள் தெரியும்?

**96 அறியாமை**

திருக்குறள் அமைப்பு, பொருள், நோக்கம், இலட்சியம் முதலியன தெரியாமையால், தெரிந்துகொள்ள முயலாமையால், தெரிந்துகொள்ள இயலாமையால், தெரிந்து கொள்ள முடியாமையால், தெரிந்து கொள்ளச் செய்யாமையால், மக்கள் தொடர்பு ஆர்வம் இல்லாமையால் – அறியாமையால் – திருக்குறள் தெரியவில்லை. இந்த நிலைமை மாற வேண்டும். மாற்ற வேண்டும். இதற்கு வழி என்ன?

**97 மக்கள் தொடர்பு**

கோபுரத்தில் இருக்கும் குறள் – பண்டிதர்கள் இடையே இருக்கும் குறள்– மக்கள் மன்றத்திற்கு வரவேண்டும். வரச்செய்ய வேண்டும். அதை ஒவ்வொருவரும் அறியச் செய்ய வேண்டும்.

இதைச் சொன்னவுடன் வள்ளுவர் விழாக் கொண்டாடினேம். விழா மலர் போட்டோம். விற்பனையாகவில்லை. கடை விரித்தோம். கொள்வார் இல்லை என்று விசனப்படக் கூடாது.

திட்டமிட்டு இந்நூலை வாழ்வு நூலாக்க வேண்டும். இதற்குத் திருக்குறளை தேசிய நூலாக அறிவிக்க வேண்டும்.

திருக்குறளை எல்லாக் கோணத்திலும் பார்க்க முயல வேண்டும். அதற்கான ஆய்வு முயற்சிகள் தொடர்ந்து நடக்க வேண்டும். ஒழுக்கத்தை ஒப்பும் ஒவ்வொருவரும் முயல வேண்டும்.

**98 சங்கத் தொடர்பு**

இம்முயற்சியில் ஒரு பகுதியாகத்தான் உலகத் தமிழ்ச் சங்கம் தமிழ் ஆய்வுக் கோவைக்கு ஏற்பாடு செய்துள்ளது. இது நடுநிலை – உயர்நிலை – முயற்சியாக இருக்கும் என்று நம்பலாம்.

**99 கருத்துத் தொடர்பு**

இத்தகு கருத்துத் தொடர்பாகத்தான் திருக்குறளில் அறிவு என்ற தலைப்பில், மறைந்த நூலக இயல் மேதை அரங்கநாதன் கண்ட பெரும் அறிவுத் துறைகளை அடிப்படையாகக் கொண்டு அறிவு ஆராயப்பட்டுள்ளது. இது முழுமையானதோ முடிவானதோ அல்ல; முறையாக முயல உதவலாம்; ஊக்கலாம்.

# அறிவியற் புரட்சிகள்

பேராசிரியர் பொன். திருஞானசம்பந்தம்
முதல்வர், மாநிலக் கல்லூரி, சென்னை

அறிவியல் வளர்ச்சியில் பல்கலைக்கழகங்கள், ஆய்வகங்கள், ஆய்வரங்கங்கள் முதலிய நிறுவனங்கள் ஆங்காங்கு பெருந்தொண்டு செய்து வருகின்றன. இங்கிலாந்திலுள்ள காவெண்டிஷ் ஆய்வரங்கம், அமெரிக்காவில் அமைந்த பெல் டெலிஃபோன் ஆய்வரங்கம், ப்ருக்ஹேவன் தேசீய ஆய்வரங்கம், ஐரோப்பிய நாடுகள் இணைந்து அமைத்த செர்ன் ஆய்வரங்கம், நம் நாட்டிலுள்ள பாபா அணு ஆய்வரங்கம் முதலிய நிலையங்களின் போற்றுதற்குரிய பணிகளை உலகறியும். நம் நாட்டைப் பொறுத்த வரையில், பண்டித நேரு அவர்கள் சீரிய தொலைநோக்குடன் நிறுவிய பல்வகையான தேசீய ஆய்வரங்கங்களும், பிறநாடுகளின் துணையுடன் நிறுவப் பெற்ற இந்தியத் தொழில் நுணுக்கக்கல்வி நிலையங்களும் நல்ல பயிற்சி தந்து, நம் நாட்டு இளைஞர்களுக்கு அறிவியல் புகட்டுகின்றன. தும்பா, ஸ்ரீஹரி கோட்டா, பெங்களூர் முதலிய இடங்களில் நிறுவப்பட்டு வளர்ந்து வரும் ராக்கெட்டுகள், துணைக்கோள்கள் பற்றிய ஆய்வகங்களும், ஏவு நிலையங்களும் ஏற்றம் வாய்ந்த பணிகள் புரிந்து வருகின்றன. நிற்க, பல்லாண்டுகளாக பெங்களூரில் இயங்கிவரும் டாட்டா ஆராய்ச்சி நிலையத்தின் சிறந்த பணிகளும் பெருமையும் யாவரும் அறிந்ததே.

**ஆய்வறிஞர்கள்**

ஆய்வகங்கள் அறிவியல் வெள்ளத்தினை அளிக்கும் நிலையங்கள் என்று சொல்லும்போது, அவைகளில் ஆய்வு செய்யும் அறிஞர்கள் அவர்தம் அறிவின் திறத்தாலும் அயராத உழைப்பாலும் அறிவியல் வெள்ளத்தினை மேகங்கள் எனப் பொழிகிறார்கள் என்பதனையே குறிப்பிடுகிறோம். அறிவியல் துறைகளில் பேரார்வம் கொண்ட தனிமனிதர்களும் அவ்வகையில் பெருந்தொண்டு செய்து வருகிறார்கள் என்பதும் இங்கு நினைவு கூறற்பாலது. கடந்த எண்பது ஆண்டுகளாகப் பல்துறைகளில் நோபல் பரிசு பெற்றுவருவோர்களின் பட்டியல் மூலம் அந்த அறிவியலறிஞர்களின் ஒளிமிக்க பணி தெரியவரும். எளிமை (Simplicity), சீர்மை (Symmetry), நுண்மை (Subtlety) என்ற மூவகைகளிலும் இயற்கையின் சிறப்பு காணப்படும் என்னும் உண்மையை உணர்ந்து, உண்மைக்காகவே உழைத்து, வெற்றிகாணும் வகையிலேயே அறிவியல் அறிஞர்கள் தங்கள் பெரும் பொழுதைச் செலவிடுகிறார்கள். அவர்தம் முயற்சிகளின் அடிப்படையிலேயே புதுமைகளும் புரட்சிகளும் தோன்றுகின்றன.

**அறிவியல் புரட்சிகள்**

அறிவியல் துறைகள் பலவற்றையும் ஒட்டிய புரட்சிகளையும், அவை பற்றிய விளக்கங்களையும், விளைவுகளையும் பற்றி விரிவாகக் கூறலாம் எனினும்,

இங்குக் காலத்தின் அருமை நோக்கி, தலைசிறந்த புரட்சிகள் என்று பேசப்படும் நான்கு மாபெரும் புரட்சிகளைப்பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடுவது பொருத்தமாகும். ஒன்று உயிரியலைப் பற்றியது; மற்றொன்று சமூகவியலைப்பற்றியது; இன்னொன்று உளவியலைப் பற்றியது; பின்னொன்று இயற்பியலைப் பற்றியது. உயிரியல், சமூகவியல், உளவியல், இயற்பியல் ஆகிய நான்கு அறிவியல்துறைகளில், சென்ற நூறு ஆண்டுகளில், இதுவரையில் காணப்பெறாத கருத்துக்கள் மலர்ந்து, அறிவியல் துறையில் மாபெரும் புரட்சிகள் நிகழ்ந்திருக்கின்றன என்பதனைப் பார்க்கிறோம்.

உயிரினங்களின் தோற்றம் பற்றிய பரிணாமக்கொள்கை (Theory of Evolution) என்னும் புதுமைக்கருத்தினை அளித்து உயிரியல் பற்றிய அறிவியலை வளர்த்தவர் டார்வின் என்பவர். 1831 முதல் 1836வரையில் ஐந்து ஆண்டுகள் பீகிள் என்ற கப்பலில் உலகம் சுற்றிய டார்வின் தன்னுடைய நுண்மாணுழை புலத்தினால் இயற்கை ஏற்றிய அருங்காட்சியினைக்கண்டு அத்துறையில் அறிவு மறுமலர்ச்சிக்கு வழி வகுத்தவர். பின்னர் தோன்றிய மரபு வழிப்பண்பியலும் (genetics) மேலும் மேலும் உயிரியல் பற்றிய அறிவியல் வளர்ச்சிக்குத்துணை செய்து வருகிறது.

இரண்டாவதாக, சமூகவியல் துறையில் கார்ல் மார்க்ஸ் என்னும் பேரறிஞர் பொதுமக்கள் நலம் கருதி, பொதுவுடைமைக் கொள்கையினை வகுத்தார். ஜெர்மன் தேசத்துத் தத்துவமேதை ஹிகல் என்பவரின் வாதத்திறனைப் பின்பற்றி, எஞ்செல்ஸ் என்னும் பெரிய அறிஞரின் தோழமையுடன் இணைந்து அளித்த இப்புதுமைக் கொள்கை உலகவரலாற்றின் திசையையே திருப்பியது என்பது யாவரும் அறிந்த செய்தியாகும்.

மூன்றாவதாக, உளவியல் என்னும் துறையில் மிக்க துணிவுடனும், ஆராய்ச்சியுடனும் மனிதர்களுடைய பழக்கவழக்கங்களை நுட்பமாக மதிப்பீடு செய்து, மனிதனுடைய செயல்கள், அடிப்படையில், பாலுணர்வின் உந்துகோள் களாக அமைகின்றன என்னும் முடிபினை ஃப்ராய்டு என்னும் அறிஞர் எடுத்துக் கூறியிருக்கிறார். அவருடைய கருத்துக்கள் புதுமையாகவும் புரட்சியாகவும் அமைகின்றன என்பதும், நமது கவனத்தினைக் காலமெல்லாம் ஈர்க்கவல்ல கருத்துக்கள் என்பதும், அறிஞருலகம் அறிந்த செய்திகளாகும்.

இவ்வாறு, உயிரியல், சமூகவியல், உளவியல் ஆகிய மூன்று துறைகளிலும் முறையே டார்வின், மார்க்ஸ், ஃப்ராய்டு ஆகிய அறிவியல் அறிஞர்கள் செயற்கரிய செய்து, பெறற்கரிய பேறு பெற்றனர் என்பதனைப் பார்க்கிறோம்.

இனி, நான்காவதாக, ஐன்ஸ்டீன் என்னும் பெரிய மாபெரும் கலைமாச் செல்வர், இயற்பியல் துறையில், கணிதத்துறையில், அண்டவியல் துறையில் செய்திருக்கும் புரட்சிக்கு ஈடு, இணை இல்லை என்று கூறுதல் மிகையாகாது. இசையார்வத்திலும், இயற்கை நாட்டத்திலும், உண்மை உணர்விலும், மனிதாபி மானத்திலும் உயர்ந்த மனிதராகிய ஐன்ஸ்டீன் , எந்த அறிஞரும் காணாத உயர் நிலைக்காட்சி கண்டார்; அறிவியல் மாமன்னர் என்று அறிஞர்களால் போற்றப் பெறுகிறார்.

காலம் இன்றி இடமில்லை; இடமின்றிக் காலமில்லை என்பது இயற்கைக் கலைச்செல்வர் ஐன்ஸ்டீன் கண்ட புதுமைக் கருத்து ஆகும். காலத்தையும் இடத்தையும் தனித்தனியே கருதாது, காலயிடம் (Space time Continuum) என்றவாறு இணைத்துப் பேசுதலே அறிவியலுக்குப் பொருந்தும் என்னும் புரட்சிக் கருத்தினை அவர் அளித்திருக்கிறார். இதன் அடிப்படையிலே உருவாகிய அறிவியல் கருத்துக்களும் கனிகளும் மக்களுக்கு அறிவுப் பெரு விருந்தாய் அமைகின்றன.

இனி, இருபதாம் நூற்றாண்டு அறிவியற் கண்கொண்டு பார்க்கும்போது, அண்டவியல் கூறும் செய்திகள் நமக்குப் பெரும் வியப்பினை அளிக்கின்றன என்பதனைக் காணலாம். ரேடியோ வானவியல் (Radio Astronomy) என்னும் புதியதொரு வானவியல் துறை, 1931-ம் ஆண்டு பிறந்தது. இப்போது உலகில் பல நாடுகளிலும் ரேடியோ வானவியல் நிலையங்கள் நிறுவப்பெற்று மிகச் சிறந்த ஆராய்ச்சிகள் நடந்து வருகின்றன. அண்டத்தின் பருமை எண்ணத்திற்கும் அப்பாற்பட்டதாய் அமைகிறது என்பதனைப் பார்க்கிறோம். ஒளிவேகமே மீப்பெரிய வேகம் என்பது ஐன்ஸ்டீன் கண்ட முடிவு ஆகும். ஒரு கணப் போதில் அல்லது கண்ணிமைப்பொழுதில், 1,86,000 மைல்கள்; அவ்வாறே ஓராண்டில் ஒளி செல்லும் தூரம் எதுவோ, அதுவே ஒளியாண்டு எனப்படும். சூரியன் நம்மிடமிருந்து 9 ஒளி நிமிஷங்கள் தூரத்தில் இருக்கிறது. ஆல்ஃபா செஞ்சாரி என்ற விண்மீன் 4.3 ஒளியாண்டுகள் தூரத்தில் உள்ளது. நமது வான்கங்கையின் (galaxy) விட்டம் ஒரு இலட்சம் ஒளியாண்டுகள் ஆகும். இனி, பேரண்டத்தின் (Universe) விட்டம் ஈராயிரம் கோடி ஒளியாண்டுகள் என்று கூறுகிறார்கள்.

'உள்ளம் தான் கவ்வ ஒரு சிறிதும் கூடாத கொள்ளைப் பெரிய உருக்கொண்ட பல கோடி வட்ட உருளைகள் போல் வானத்தில் அண்டங்களில் எட்ட நிரப்பி எப்போதும் ஓட்டுகின்றாய்' என்பதும் பாரதியார் வாக்காகும்.

### ரேடியோ வானவியல்

இனி, ரேடியோ வானவியலின் துணையினால் அறியப்பட்ட மூன்று புதுமையான வானத்துப் பொருள்கள் பற்றிக் கூறவேண்டும். அவைகள் பல்சார் (Pulsar) கருங்கிடங்கு (Black Hole) குவாசார் (Quasar) என்பனவாகும்.

பெரிய விண்மீன்கள் மூப்படைந்து அழிவுறும்போது, ஒளியை மட்டு மல்லாமல் ரேடியோ அலைகளையும் உமிழ்கின்றன என்றும், ரேடியோ சைகைகள் துடிப்புகளாக வெளிவிடப்படுகின்றன என்றும், அவைகள் நியூட்ரான் விண்மீன்கள் என்றும், அவைகளைத் துடிப்பியல் விண்மீன்கள் (Pulsating stars) அல்லது பல்சார்கள் (Pulsars) என்று அழைக்கலாம் என்றும் 1969-ம் ஆண்டில் கண்டார்கள். காட்டாக, ஒரு பல்சார் சூரியனை யொத்த பொருண்மையைக் கொண்டு, அதே சமயம் மிகமிகச்சிறிய 12 கி.மீ. தொலைவே விட்டமாகக் கொண்டிருக்கிறது என்று அறிகிறோம். அதனுடைய ஈர்ப்புப்புலம் சூரியனுடைய ஈர்ப்புப் புலத்தை விட ஆயிரங்கோடி மடங்கு பெரியது என்பது விந்தையான செய்தியாகும்.

மூப்படைந்த விண்மீன் பல்சார் நிலையிலிருந்து, மேலும் மாறுதல் அடைந்து, பிணமீனுக மாறுகின்ற போது தன்னுடைய மீப்பெரிய ஈர்ப்புப் புலத்தினுல் ஒளியையே வெளிவிடாது கருங்கிடக்காக (Black Hole) மாறி விடுதல் நேரும்.

இனி, விண்மீன் ஒன்று, பல்சார், கருங்கிடங்கு ஆகிய இரு நிலைகளைக் கடந்த நிலையில் விண்மீன் என்ற பெயருக்கே பொருத்தமில்லாத மூன்றுவது நிலையினை அடைகிறது. அப்போது அது (Quasi Stellar Radio Source) அல்லது (Quasar) என்று பெயர் பெறும். இந்தக் குவாசார்கள் பேரண்டத்தின் விளிம்பில் அமைகின்றன என்று தெரிகிறது.

**ஒப்புமைக் கொள்கை**

இனி, பேரறிஞர் ஐன்ஸ்டீன் கண்ட புரட்சிக் கொள்கையான ஒப்புமைக் கொள்கையினைப் பற்றிச் சிறிது காண்போம். சிறப்புநிலை ஒப்புமைக் கொள்கையின்படி (Special Theory of Relativity) ஒரு பொருள் அதன் வேகம் காரணமாக நிறைமிகும். மேலும் $E=MC^2$ என்ற முறையில் பொருள் அழிந்து ஆற்றலாக மாறலாம். இக் கருத்துக்களெல்லாம் மெய்ப்பிக்கப்பட்ட நிலையிலே தான் அணு பற்றிய அறிவியல் இந்த நூற்றுண்டிலே பிறந்து, வளர்ந்து, அணு ஆற்றல் நிலையங்களை வளர்த்து மக்கள் வாழ்விற்குப் பெரும்பயன் அளிக்கிறது என்பதனை நினைவு கூர்தல் வேண்டும்.

அடுத்து, பொதுநிலை ஒப்புமைக் கொள்கையின் (General Theory of Relativity) வழியாக ஐன்ஸ்டீன் கண்டகாட்சி மெய்யாகவே நமது கருத்திற்குப் பெருவிருந்தாக அமைகிறது. இக்கொள்கைக்கு அரண் செய்யும் சோதனைகள் நான்கு ஆகும்:

(i) புதன் கோளானது சூரியனைச்சுற்றி வரும்போது அதன் சுற்றுப் பாதையும் சிறிது சிறிதாகச் சுழல்கிறது. அப்பாதை முப்பது லக்ஷம் ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒரு முழுச்சுற்று சுற்றும் என்று கண்டார்கள். ஒரு நூற்றுண்டில் 43 செகண்டுகள் அளவு கணக்கில் வராத இந்தப் புதிருக்கு ஐன்ஸ்டீன் கணக்கின்படி விளக்கம் கிடைத்தது. மேலும், 1974-ம் ஆண்டில் மிகவேகமாகச் சுற்றிக் கொள்ளும் இரண்டு பல்சார்களின் இயக்கத்தைக் கணக்கிட்டு இவ்வகையில் ஐன்ஸ்டீன் கணக்கிற்கு ஐயம் திரிபு அற ஆதரவு கண்டார்கள்.

(ii) ஒரு விண்மீன் தரும் ஒளியானது சூரியனுக்கு அருகாமையில் வரும் போது சூரியனுல் ஈர்க்கப்படும். இம்மெய்ம்மையினை 1919-ம் ஆண்டு நிகழ்ந்த சூரிய கிரகணத்தின் போது செய்த ஆராய்ச்சியின் மூலம் எடிங்டன் என்பவர் நிறுவினுர். இந்தக் கருத்தினை மேலும் சரிபார்க்கும் வகையில், 1969-ஆம் ஆண்டில் வேறொரு சோதனை செய்தார்கள். செவ்வாய்க்கோளிற்கு அனுப்பப்பட்ட ஏவு கோளிலிருந்து ரேடியோ அலைகள் நம்மைநோக்கி அனுப்பப்படுங்கால், சூரியனுல் ஈர்க்கப் பெற்று, காலம் தாழ்ந்து பூமியை வந்தடையும் என்று கருதினுர்கள்; சோதனை மூலமும் நிறுவினுர்கள். இதுவும் ஐன்ஸ்டீன் கணக்கினை மெய்ப்பித்தது.

(iii) சூரியன் போன்ற விண்மீனிலிருந்து வெளியாகும் ஒளிக்கற்றை அவ் விண்மீனின் ஈர்ப்புப்புலம் காரணமாக அலைநீளம் அதிகரிக்கப் பெறலாகும். இந்த

மெய்ம்மை 1925-ம் ஆண்டிலேயே வெள்ளைக்குறளை விண்மீன் (White Dwarf) பற்றிய ஆராய்ச்சியினுல் விளக்கப் பெற்றது. மேலும், காமாக்கதிர் பற்றிய மாஸ்பாயர் சோதனை மூலம் இக்கருத்து இன்று அறிவியல் உலகில் தெளிவார்ந்த உடன்பாடாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

(iv) பூமியானது சூரியனைச் சுற்றும்போது முடுக்கத்திற்கு உட்படுவதன் காரணமாக பூமி ஆற்றல் இழக்கும்; ஈர்ப்பு அலைகள் உருவாகும் என்பது நெடு நாட்களாக நம்பப் பட்டு வந்த கருத்து ஆகும். பூமியின் துணையினுலோ, சூரிய குடும்பத்திலுள்ள பிற வானத்துப் பொருள்களின் துணையினுலோ, மிகச்சிறிய அளவீடு சார்ந்த இக்கருத்தினை மெய்ப்பிப்பது அருமையாக இருந்துவந்தது. ஆனுல், அண்மையில், 1978-ஆம் ஆண்டில், பல்சார்களின் துணை கொண்டு நிகழ்ந்த ஆய்வுகளின் மூலம் இக்கருத்திற்கும் ஆதரவு கிடைத்துள்ளது என்பது அறிவியலின் சிறப்பினை எடுத்துக்காட்டுகிறது.

ஆகவே, கடந்த 75 ஆண்டுகளில், ஐன்ஸ்டீன் கருத்திற்கண்ட காட்சி பல சோதனைகள் மூலம் இன்று ஆக்கம் பெறுவதனைக்கண்டு அறிவியல் உலகம் உண்மையிலேயே மகிழ்கிறது. எனவே, டார்வின், மார்க்ஸ், ஃப்ராய்டு, ஐன்ஸ்டீன் ஆகிய நான்கு பேரறிஞர்களும் உலகில் எவரும் காணுத காட்சி கண்டு அறிவியல் மறு மலர்ச்சிக்கு ஆக்கம் தேடினுர்கள் என்பதனைக் காண்கிருேம். அப்பெரியோர்கள் என்றுமுள்ள அறிவியலை உய்வித்தவர்கள் ஆவர். இயற்கைத்தாயின் செல்லக் குழந்தைகள். பல நூற்றுண்டுகளுக்கு ஒரு முறை மலரும் அற்புதக் கற்பூர மலர்கள்.

Darwin destroyed the innocence of Nature; Marx destroyed the innocence of the State; Freud destroyed the innocence of the mind; Einstein destroyed the innocence of Time and Space என்பது ஸ்டான்லி கியூனிட்ஸ் (Stanley Kunitz) என்னும் பெயரிய திறனுய்வாளரின் கருத்து ஆகும்.

**மொழியாக்கம்**

இதனை மொழியாக்கம் செய்து பின்வருமாறு கூறலாம்.

இயற்கையின் பிள்ளைமையை டார்வின் நீக்கினுர்;அரசாங்கக் கண்ணேட்டத்தின் பிள்ளைமையை மார்க்ஸ் போக்கினுர்; மனித உள்ளத்தின் பிள்ளைமையை ஃப்ராய்டு ஒதுக்கினுர். கற்பகோடி காலமாகக் கனிந்து நிற்கும் காலயிடத்தின் பிள்ளைமையை ஐன்ஸ்டீன் ஓட்டினுர்.

மொழிபெயர்ப்பு அல்லது மொழியாக்கம் என்பதனை ஒரு கலை என்றே சொல்லுதல் பொருந்தும். இங்கும் பாரதியார் தமிழின் ஏற்றம் கூறுகிருர்.

''இங்கிலீஷ் ரொம்ப நயமான பாஷையானதால், இங்கிலீஷ் எழுத்தின் கருத்து சிதைந்து போகாமல், நம்மவர்களுக்கு அதை ஸ்வாரஸ்யமாய் சொல்லும் பொருட்டு, நேரான தமிழ்ச் சொற்களை நான் கண்டு பிடிக்கவேண்டியதாயிற்று. தமிழ் பாஷையின் கம்பீரமும் ரசமும் அப்பொழுது எனக்கு இன்னும் தெளிவாய்த் தெரிந்தது''. மொழிபெயர்ப்புத் துறையில் எனது அனுபவம் ஒன்றினை இங்குக் குறிப்பிடுவது பொருத்தமாகும் என்று நினைக்கிறேன்.

(Science is truth multiplied by doubt) என்பது பால் வலேரி என்ற ஃபிரெஞ்சுக் கவிஞர் அளித்த பொருள் பொதிந்த சொற்றொடர் ஆகும். இதனைத் தமிழில் கூற முற்பட்டபோது பலவிதமான மொழிபெயர்ப்புகள் எனது உள்ளத்தில் தோன்றின. இறுதியாக, ''ஐயமுண்ட மெய்ம்மையே அறிவியல்'' என்ற வகையில் மொழியாக்கம் செய்தேன். ''நதியுண்ட கடலென சமயத்தையுண்ட பரஞான ஆனந்த ஒளியே'' என்ற தாயுமான சுவாமிகள் தமிழ் எனக்கு இப்பணியில் கை கொடுத்து உதவியது. ஆகவே, மொழி பெயர்ப்பாளனுக்கு அறிவுத்துறை மட்டுமல்லாமல் மூலமொழி, மாற்றுமொழி ஆகிய இரு மொழிகளும் நன்கு தெரிந்த நிலையில்தான் மொழியாக்கம் நன்கு அமையும் என்பது தெளிவாகும்.

இராமன் விளைவு என்று பேசப்பெறும் கண்டுபிடிப்பு காரணமாக, நமது தமிழ்நாட்டு அறிவியல் அறிஞரான இராமன் அவர்களுக்கு 1930-ம் ஆண்டில் நோபெல் பரிசு கிடைத்தது என்பதனை அறிவோம். அத்துறையில் இன்று ஏற்பட்டுள்ள மறு மலர்ச்சியானது மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது. அது பற்றி இப்போது சிறிது கூறலாம். ஒளியானது துகள்களாலாகிய கற்றை என்பது பிளாங்க் என்ற அறிஞர் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்ட புதுமைக் கொள்கையாகும். ஒளிக்கற்றை யொன்று ஒரு திரவத்தினுள் செல்லும்போது அத்திரவத்தின் மூலகங்களோடு ஆற்றல் பரிமாற்றம் பெறுகிறது. அவ்வகையில் ஆற்றல் குறைந்துவரும் ஒளிக்கற்றை, ஆற்றல் அதிகரித்து வரும் ஒளிக்கற்றை ஆகிய இருவகையான கற்றைகள் கிடைக்கும். அவைகள் இராமன் நிற மாலையில் முறையே ஸ்டோக்ஸ்வரி, ஆண்ட்டி ஸ்டோக்ஸ்வரி என்ற பெயர் பெறுகின்றன. திரவத்திற்குத் தக்கவாறு இந்த இராமன் ஒளிவரிகள் எண்ணிக்கையிலும், ஒளி வலிமையிலும், முனைவுப்பண்பிலும் மாறுபடும். ஆகவே, இராமன் நிறமாலையின் அடிப்படையில் பொருள்களின் பண்புகள் கடந்த ஐம்பது ஆண்டுகளாக உலகெங்கும் ஆராயப்பட்டு வந்திருக்கின்றன. திரவ நிலையில் மட்டுமல்லாமல், ஒரு பொருள் வாயுநிலை, திட நிலை ஆகிய நிலைகளில் இருக்கும்போதும் இந்த விளைவு ஏற்படுவதனைக் கண்டார்கள். பொருளானது ஒளி புகும் பொருளாக உள்ளபோது தான் இந்த விளைவு காணப்பெறும் என்பது முக்கியமானதொரு குறைபாடாக இருந்து வந்தது.

ஆனால், இப்போது நமக்குக் கிடைத்துள்ள லேசர் (Laser) என்னும் பெயர் பெற்ற மீக் கூர்மையான கதிர்கொண்டு இராமன் விளைவுத் துறையில் மிகவும் வரவேற்கத்தக்க மறுமலர்ச்சி ஏற்பட்டிருப்பதனால் புதுப்புது செய்திகள் அறியப்பட்டு வருகின்றன. அதன் விளைவாக, மிகை இராமன் விளைவு (Hyper Raman Effect) எதிர்மாறு இராமன் விளைவு (Inverse Raman Effect), தூண்டிய இராமன் விளைவு Stimulated Raman Effect), கார்ஸ் இராமன் விளைவு (Cars—Coherent Anti Stokes Raman Scattering) ஆகிய புதுப்புது விந்தை விளைவுகள் தெரிய வந்திருக்கின்றன. அறிவியல் துறையில் புதுமையான கண்டுபிடிப்புகள் என்றாலே புதுமையான முடிபுகள்; புதுமையான விளக்கங்கள், புதுமையான அறிவியற் செய்திகள் என்பது கூறாமலே விளங்கும். சாதாரண இராமன் விளைவு மூலம் கிடைக்காத இராமன் வரிகள் மிகை இராமன் விளைவில் கிடைக்கின்றன. எதிர்மறை இராமன் விளைவு கொண்டு, நானோ செகண்டு கால அளவில் வாழ்காலம் கொண்ட தனித்த மூலகக்கூறுகள் (Free Radicals) பற்றிய இராமன் விளைவு காணலாம். தூண்டிய

இராமன் விளைவின் துணையினுல் லேசர் போன்ற வலிமைமிக்க கதிர்களைப் பெறும் வாய்ப்பும் உண்டு. கார்ஸ் விளைவு கொண்டு ஒளிச்சுடர்களில் பிறக்கும் வாயுக்களின் செறிவையும் காணலாம்.

இவ்வாறு இராமன் விளைவுத்துறையில் மட்டுமே இவ்வளவு புதுமைகளைத் தரவல்ல லேசர் கதிர், பிற துறைகளிலும் மிகவும் வியப்பூட்டும் பயன்களைத் தருகிறது என்பது இனிய செய்தியாகும். வைரம் போன்ற திண்மை வாய்ந்த பொருட்களைத் துளைத்தல், கண்களில் அறுவை மருத்துவம் செய்தல் முதலிய நுட்பமான செய்முறைத் துறைகளில் லேசர் பயன்படுவதனைப் பார்க்கிறோம். இந்த லேசர் எனும் புதுமை அண்மை ஆண்டுகளில் செயற்பாட்டிற்கு வந்துள்ள போதிலும், இதுபற்றிய சிந்தனை விளக்கமானது 1916-ஆம் ஆண்டிலேயே ஐன்ஸ்டீன் அவர்களால் அளிக்கப்பட்டது என்பது இங்கு நினைக்கற்பாலது.

**மாநிலக்கல்லூரி ஆய்வுகள்**

எங்கள் துறையில் இராமன் விளைவின் அடிப்படையில்கிடைக்கப் பெற்றுள்ள சில இனிமைதரும் முடிவுகளைப்பற்றி இங்குச் சொல்லுவது பொருத்தமாகும். மூலகங்களில் அணுக்களுக்கிடையே இயங்கிவரும் விசைகளைக் கணக்கிடுவதில் இராமன் நிறமாலை பல்லாண்டுகளாகப் பயன்பட்டு வந்தது. அந்த விசைகள் பற்றிய மதிப்புகளைப் பார்க்கும் போது இயற்கையின் அடிப்படைப் பண்பாகிய ஒழுங்கு அவைகளிடையே காணப் பெறவில்லை. கூர்ந்து ஆய்வு செய்தவகையில் சில காரணங்களும் தெளிவுரைகளும் தெரியவந்தன. அவைகளை உளம் கொண்டு மேலும் ஆய்வுகள் செய்து மூலகவிசைகளைக் குறிக்கும் மூலக விசைமாறிலிகளைக் கணக்கீடு செய்தோம். விளைவுகள் விருந்தாய் அமைகின்றன.

அவ்விசை மாறிலிகள் மூலகங்களின் அமைப்புச் சிறப்பினை மிகவும் சிறப்பாக எடுத்துக் கூறுவதைப் பார்க்கலாம்.

அட்டவணை I

சம வளையிய $XY_2$ மூலகங்களின் விசை மாறிலிகள் (மில்லிடைன்/ஆங்ஸ்ட்ராம்)

| வ.எண். | மூலகம் | fd | fdd | fx | fdx |
|---|---|---|---|---|---|
| 1. | $H_2O$ | 8.4200 | −0.1122 | 0.1890 | 0.0220 |
| 2. | $D_2O$ | 8.4089 | −0.1303 | 0.1903 | 0.0424 |
| 3. | $T_2O$ | 8.4161 | −0.1422 | 0.1913 | 0.0614 |

அட்டவணை I-ல் $H_2O$, $D_2O$, $T_2O$ ஆகிய மூலகங்கள் பற்றிய விசை மாறிலிகள் கொடுக்கப்பட்டுள்ளன. fd, fx ஆகிய இரு விசை மாறிலிகள் இந்த மூன்று மூலகங்களிலும் பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம். இவ்வாறு அவைகளுக்கிடையே ஒற்றுமை காணப்படும் என்று எண்ணப்பட்டு வந்த கருத்து

இங்குத் தெளிவு பெறுகிறது. அதே சமயம் fdd, fdx என்ற விசைமாறிலிகள் அவைகளுக்குகந்த ஒழுங்கு முறைகளில் அமைவதனையும் கண்டு மகிழலாம்.

அட்டவணை II

*நாற்பக்க $XY_4$ மூலகங்களின் விசை மாறிலிகள் (மில்லிடைன்/ஆங்ஸ்ட்ராம்)*

| வ.எண். | மூலகம் | fd | fdd | fx | fxx | fdx |
|---|---|---|---|---|---|---|
| 1. | $CH_4$ | 4.9259 | 0.0421 | 0.0915 | −0.0194 | 0.0150 |
| 2. | $CD_4$ | 5.5137 | 0.0681 | 0.0932 | −0.0197 | 0.0279 |
| 3. | $CT_4$ | 5.5225 | 0.1210 | 0.0984 | −0.0164 | 0.0408 |

மேற்கூறப்பட்ட சிறப்புகள் அட்டவணை II-ல் அமையும் $CH_4$, $CD_4$, $CT_4$ என்ற மூலகங்களுக்கிடையேயும் அமைவது மிகவும் வரவேற்கத்தக்க முடிவாகும்.

அட்டவணை III

*சமதள $XY_3$ மூலகங்களின் விசை மாறிலிகள் (மில்லிடைன்/ஆங்ஸ்ட்ராம்)*

| வ.எண். | மூலகம் | fd | fdd | fx | fdx |
|---|---|---|---|---|---|
| 1. | $BF_3$ | 7.8820 | 0.4720 | 0.3321 | −0.4257 |
| 2. | $BCl_3$ | 4.0164 | 0.2770 | 0.1482 | −0.2155 |
| 3. | $BB_{\pi3}$ | 3.2775 | 0.1579 | 0.1209 | −0.1932 |
| 4. | $BI_3$ | 2.4833 | 0.1079 | 0.0852 | −0.1402 |

இனி, அட்டவணை III-ல் காணப்படும் $BF_3$, $BCl_3$, $BB_{\pi3}$, $BI_3$ ஆகிய நான்கு மூலகங்களிலும் fd, fdd, fx, fdx, ஆகிய விசைமாறிலிகள் ஒவ்வொன்றும் இறங்குமுகமாக வேறுபட்டு நிற்கின்றன என்பதும் அறிவியலுக்கு உடன்பாடான முடிவுகளாகும்.

இவ்வாறு, இத்துறையில் இனிய பல இயற்பியல் முடிவுகள் எங்கள் ஆய்வகத்தில் கிடைக்கப்பெற்றுள்ளன, இத்தகைய ஆய்வுகள் மேலும், மேலும் சிறந்த முடிவுகளை அளிக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

**இளமையும் ஆய்வும்**

இவ்வாறு அறிவியல் துறைகளில் பொலிவுமிக்க புதுமைகளும் புரட்சிகளும் உருவாகவேண்டுமானுல் இளைஞர் சமுதாயம் இத்துறையில் பெரிதும் ஈடுபட வேண்டும் அறிவியல் வரலாற்றினைத் துருவி நோக்கினுல், அறிவியலுக்கும் இளமைக்கும் இடையே உள்ள தொடர்பு தெரியவரும். அகிலத்தையே ஆட்சி செய்யும் இயற்கை விதியினைத் தம் பதினெட்டாம் வயதிலேயே நியூட்டன் கண் டார். லாக்ராஞ்சு என்னும் இயற்கைப் புலவர் பிரான்ஸ் நாட்டில் தம்முடைய பதினேராம் ஆண்டிலேயே பேராசிரியராக நியமனம் பெற்ருர். அயர்லாந்து தேசத்தைச் சேர்ந்த ஹாமில்டன் தன்னுடைய இருபத்திரண்டாம் வயதிலேயே வானவியல் பேராசிரியர் எனத்திகழ்ந்தார். இருபத்தேழு ஆண்டுகளே வாழ்ந்த ஏபெல் என்ற கணித விற்பன்னரும் முப்பத்து மூன்று வயதளவே வாழ்ந்த கணித மாமேதை இராமாநுஜம் அவர்களும் கருவிலே திருவுடையவர்கள். அவகாட்ரோ என்னும் வேதியற்புலவர் அவருடைய பதினுரும் வயதிலேயே டாக்டர் பட்டம் பெற்றவராம். அணுவின் மெய்ம்மை பற்றித் துணிந்து கூறிய டால்ட்டன் அவருடைய பன்னிரண்டாம் வயதிலேயே தலைமையாசிரியராகத் திகழ்ந்தார். ஓப்பன்ஹைமர் என்ற மேதையும் அவருடைய பன்னிரண்டாம் வயதிலேயே அறிஞர் கழகத்தில் அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளப்பெற்ருர். காஸ் என்ற இயற்பியல் ஞானி தம் இருபதாம் வயதிலேயே சிறந்த அறிவியற் கருத்துக்களை எடுத்துரைத்தனராம். இச்செய்திகளை எல்லாம் பார்க்கும்போது, இளமைக்கும் அறிவியலுக்கும், கற்பனைக்கும் கண்டு பிடிப்புகளுக்கும், புலமைக்கும் புதுப் புனைவு களுக்கும் இசைந்த பொருத்தமுண்டு என்பதனைக் காண்கிருேம். மேலும், மேலை நாட்டுப் பல்கலைக்கழகங்களைப் போலவே, நம் நாட்டுப்பல்கலைக் கழகங்களிலும் அறிவியல் வரலாறு (History of Science) என்னும் தலைப்பில் பாடம் அமைப்பது பொருத்தமாகும் என்பதனை இங்குக் கூறவேண்டும்.

# சங்க இலக்கியம் - கற்பனை மரபு

(டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம், எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,
முதல்வர், அரசு கலைக் கல்லூரி, கோயம்பத்தூர்.)

**கலைகளும் கற்பனையும்**

கற்பனை என்பது மனக்கண்பார்வை. பிற கலைகளுக்கு வேண்டப்படுவது போலவே இலக்கியக் கலைக்கும் இது தேவைப்படுகிறது. பிற கலைகளுள் ஓவியம், சிற்பம், நடனம் இசை போன்ற நுண்கலைகளில் அமைந்த கற்பனையின் பங்கு ஏனைய கலைகளில் காணப்படும் அளவிலும் அதிகமானது. காரணம் கற்பனையின் அடிப்படையில்தான் அறிவியற்கலைகளும், மெய்யுணர்வுத் தத்துவம், இறையியல் கோட்பாடுகள் போன்றனவும் இயங்குகின்றனவாயினும், குறிப்பிட்ட அடிப்படைப் பொருட்கூற்றைக் கருதுகோள்களாகக் கற்பனையால் படைத்துக் கொண்ட பிறகு இக்கலைகள் தத்தம் ஆய்வுக் கருவிகளால் அவற்றைத் தொகுத்தும், வகுத்தும், பகுத்தும், கூட்டியும் காண முயல்கின்றன. இத்தொகைவகைப் பகுப்பாய்வு களால் அக்கூறுகள் பயனுடையன எனக் காணப்படின் ஏற்றுக் கொள்ளப்படு கின்றன; பயன் படாதனவாயின் அக்கருதுகோள் கூறுகள் புறக்கணிக்கப்பட்டு மீண்டும் கற்பனையின் உதவியால் வேறு கருதுகோள்கள் மேற்கொள்ளப்படுகின்றன. எனவே இக்கலைகளில் கற்பனையின் எல்லாக் கூறுகளும் பயன்படுத்தப்படுவதில்லை. ஏற்றுக் கொள்ளப்படும் கூறுகளும் அளவையியல் போன்ற ஆய்வுக் கருவிகளால் மீண்டும் ஆராயப்படுகின்றன. ஆக இரண்டு படிகளையும் கடந்த பின்னரே இக்கலைகளில் கற்பனை நிலையான தன்மையைப் பெறுகிறது. அவ்வாறு பயன்படும் போதும் கருதுகோள்களைப் படைக்கும் அளவில் மட்டுமே கற்பனை பயன்படுகிறது என அறிகிறோம்: அதன் பின்னர்க் கற்பனையின் பணி தேவைப்படுவதில்லை. விண் வெளிக் கலன்களைப் புறவெளியில் செலுத்துவதற்குப் பயன்படும் எரிகலன்கள் அவற்றை அவ்வாறு செலுத்திய பின்னர்ப் பூமியை நோக்கிச் சுழற்றி நீக்கப்படு கின்றன. கற்பனை இந்த எரிகலன்களைப் போன்று தொடக்கத்தில் பயன் படுவதோடு நின்றுவிடுகிறது.

**இலக்கியமும் கற்பனையும்**

இலக்கியக் கலையில் கற்பனையின் பங்கு வெறும் கருதுகோள் அளவில் நின்று விடுவதில்லை. இலக்கியமாகிய ஓர் உயிரியப் பொருண்மைக்குக் கற்பனைதான் இயக்கமாகப் பயன்படுகிறது. இக்கலையில் ஏற்றுக் கொள்ளப்பட்ட பின்னர்ப் படைப்பாளியின் எவ்வகையான ஆய்வுக்கும் இது உட்படுவதில்லை. எவ்வகை யான கருத்துக்கும் நிகழ்ச்சிக்கும் இன்றியமையாதது என்று கருதப்படும் தருக்க முறைமை கூட இலக்கியப் படைப்பில் ஆய்வு என்ற முறையில் கையாளப் படுவ தில்லை; எனவே தருக்க முறைமைக்கு ஒவ்வாதன என்று ஒதுக்கப்படுவதுமில்லை. படைப்பாளிக்கும் இவ்வகை ஆய்வுக்கும் அறிந்த (Conscious) தொடர்பு எதுவு

மில்லை. திறனாய்வாளர்களில் ஒரு சாரார் இலக்கிய ஆய்வுக்கு இம் முறைமையைப் பயன்படுத்துகின்றனர். ''Art is magic not logic'' என்ற எடித் சிட்வெலின் (Edith Sitwell) கருத்து இதனை நன்கு விளக்குவதைக் காணலாம். இலக்கியம் போன்ற நுண்கலைகளில் தான் கற்பனை வளமான பங்கினைப் பெறுகிறது; அதனை வளப்படுத்தும் பாங்கினைப் பெறுகிறது எனக் கூறலாம். இத்துணைச் சிறப்புடைய கற்பனை இலக்கியத்திற்கு இருவகைகளில் துணை நிற்கிறது.

**(1) படைப்பிற்கு அடிப்படையாக நிற்றல்:** *அதாவது கலைப் படைப்பின் தோற்றத்திற்கே முதற்காரணமாக நிற்பது.* இவ்வகையில் இதனை மேலும் இரு கூறுகளாகப் பகுக்கலாம். (அ) ஒன்று, இலக்கிய வகையைத் தோற்றுவிப்பதற்குப் பயன்படுதல், (ஆ) மற்றொன்று, முன்னரே தோற்றுவிக்கப்பட்ட இலக்கிய வகைக்கு பாடுபொருளை அமைக்கத் துணையாக நிற்பது. இவ்விரு வகைகளும், படைப் பாகவே மலர்வன; படைப்பினின்று பிரித்தறியப்படாதன; எனினும்; இவை மட்டுமே படைப்பாக ஆகமாட்டா; எனவே இவற்றை முதற் காரணக் கற்பனை எனக் கூறலாம்.

**(2) படைப்பின் சிறப்பிற்குத் துணையாக நிற்றல்:** *அதாவது முதற்காரணக் கற்பனையின் அடிப்படையில் எழுந்த கலைப் படைப்பிற்கு மேலும் மெருகு கூட்டும் வண்ணம் துணை நிற்கும் உத்தி வகைகளைத் தோற்றுவிப்பது.* இதனைத் துணைக் காரணக்கற்பனை என்று கூறலாம். இவ்விரண்டினுள் முன்னது புலன்கடந்த பார்வையால் பெறுவது; பின்னது அப்புலன் கடந்த பார்வையால் பெற்ற பொருளைப் புலன்களின் துணையால் உணர்த்துவது. முன்னது எல்லாக் கலைகட்கும் பொதுவானது. பின்னது ஒவ்வொரு கலையின் வாயிலுக்கு ஏற்ப ஒவ்வொரு வகை யாக அமைவது.

**ஓவியக் கலையில் இவ்விரு வகைக் கற்பனைகள்**

ஓவியக் கலையை எடுத்துக்கொண்டால், எதனை வரைய வேண்டும் என்பதும் எவ்வகை நிலையில் அதனை வரைய வேண்டும் என்பதும் கலைஞனின் முதற்காரணக் கற்பனையின் வளத்துக் கேற்ப அமையும். கலைஞனால் கற்பனை செய்யப்பெறும் பொருள் புலன்களுக்கு உட்பட்டதாகவும் இருக்கலாம்; புலன்களுக்கு உட்படாத தாகவும் இருக்கலாம். உட்படாதனவற்றையும் புலன்களுக்குப் புலப்படுமாறு காட்ட முற்படுவதிலும் இவ்வகைக் கற்பனை உதவுகிறது. மைக்கல் ஏஞ்சலோ (Michael Angelo) போன்ற பெருங்கலைஞர் இதில் நன்கு வெற்றி பெற்றிருப்பதைக் காணலாம். வானுலக உயிர்களையும், காட்சிகளையும் புலன்களுக்குப் புலப்படக் கொண்டு வருவதில் அவருடைய கற்பனை பெரு வெற்றி பெற்றதை நாம் நன்கு காண முடிகிறது. சித்தன்ன வாசல், எல்லோரா, அஜந்தா, தஞ்சைப் பெருவுடை யார் கோவில் போன்ற இடங்களிற் காணப்படும் ஓவியங்களைப் படைத்த பழைய இந்திய ஓவியர்களும், பிற்காலத்தே தோன்றிய இரவிவர்மாவும் இத்தகைய கற்பனை வளத்தைப் பேரளவில் பெற்றிருந்தனர். இவர்களால் வரையப்பட்ட பொருள்கள் முதற்காரணக் கற்பனையால் பிறந்தவை.

ஓவியக் கலைஞர்களின் துணைக் காரணக் கற்பனையாவது, ஒரு ஓவியத்தை எதன் மீது வரைவது, என்ன அளவில் வரைவது, என்ன வண்ணங்களைப் பயன் படுத்துவது; அவ்வண்ணங்களை எவ்வெவ்விகிதங்களில் கலப்பது, எப்பகுதிக்கு

எவ்வண்ணத்தை ஊட்டுவது போன்ற படைப்பு முறைகளையும், உத்திகளையும் படைத்துக் கொள்ள உதவும் திறன் என்று கூறலாம். இவ்விருவகைக் கலைக் கூறுகளிலும் புதுமையாகவும், சிறப்பாகவும், கற்பனை செய்யும் ஆற்றலுடைய கலைஞர்கள் பெரும்பாலும் காலமும் களமும் கடந்து நிற்கும் பெற்றியர் என்பதை உலகக் கலை வரலாறு நமக்குக் கூறுகிறது.

இலக்கியக் கலையைப் பொறுத்த வரையில் குறிப்பாகத் தமிழிலக்கியக் கலையைப் பொறுத்த வரையில் இவ் இருவகைக் கற்பனைகளும் நிரம்பிய படைப்பாக சங்க இலக்கியப் பாடல்களைக் குறிக்கலாம். பாட்டும் தொகையும் என்றவுடன் பலராலும் அறியப்படும் 2381 பாடல்கள் தாம் இங்குச் சங்க இலக்கியம் என்னும் தொடரால் கருதப் படுகின்றன.

**சங்கப் பாடலும் முதற்காரணக் கற்பனையும்**

சங்கப் பாடல்களிற் காணும் பாடுபொருள் பாகுபாடாகிய அகம், புறம் என்ற இரண்டும் முதற்காரணக் கற்பனையின்பாற் பட்டவை. இக்கற்பனையை உருவாக்கிய தனிப்பட்ட புலவர்களைப் பற்றி அறிய முடியவில்லை. 'சங்கம்' என ஓர் அமைப்பு இருந்திருக்குமா என்னும் ஐயம் இன்னும் தெளியவில்லையாயினும், ஒருவகை இலக்கியக் கூட்டுறவு மரபு இருந்திருக்க வேண்டும் என்பதைப் பாடல்களின் தன்மையை நோக்குகிறபோது உணர்ந்து கொள்ளலாம். கிரேக்க, உரோமானிய பழம் பெரு இலக்கியங்கள் பெரும்பாலும் தொடக்ககால முதற் கொண்டே — அதாவது இலக்கிய வகைகளாகத் தொடங்கிய கால முதற்கொண்டே (சுமார் கி.மு. 12-ஆம் நூற்ருண்டு) எவ்வாறு, யாரால் தோற்றுவிக்கப்பட்டன என்ற செய்திகளை அறியத் துணை நிற்கின்றன. சங்கப்பாடல்களைப் பொறுத்த வரையில் இத்தகைய தெளிவான செய்திகளை அறிய முடியவில்லை. அகம், புறம் என்னும் பொருட்பாகுபாடு இலக்கிய உலகில் நன்கு பரவிக் கால்கொண்டு வளமாகப் பெருகிய காலம் தான் 'சங்க காலம்'' என்பதை மட்டும் தெளிவாக உணர முடிகிறது. இம்மரபில் தோன்றியனவாகப் பிற பிற்கால இலக்கியங்கள் காணப்படாமையின் இது மேலும் வலியுறுகிறது. இவ்வாறு ஒரு குறிப்பிட்ட இலக்கிய மரபின் உச்சக் கட்டத்தில் எழுந்த இலக்கியப் பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளமையின், இம்மரபின் தோற்றத்திற்குரிய கவிஞர்களை அறிய இயல வில்லை.

இங்கு அகம், புறம் எனப் பகுபடும் பாடுபொருள் ''முதற்காரணக் கற்பனையின்பாற் பட்டவை என்னுமிடத்து, இப்பொருள்களைப் பற்றிப் பாடுவதை அதாவது காதலையும் வீரத்தையும் பற்றிப் பாடுவதைக் 'கற்பனை'' என்று குறிப்பிட வில்லை; 'காதல்' என்னும் அடிப்படை மானிட உணர்ச்சியைப் பாடு பொருளாகக் கொள்ளுமிடத்துப் பிற நாட்டு இலக்கியங்களைப் போலச் சங்க காலப் புலவன் தன்னுள்ளத்தே தோன்றிய உணர்ச்சிகளைத்தன் மனத்தையீர்த்தவர் மீது இட்டுப் பாடியவையாக இல்லை. இவ் உணர்ச்சி மானிடப் பொதுமையாதலின் எல்லோரது வாழ்க்கை அனுபவத்திற்கும் ஏற்பத் தொகுத்துப் பின்னர்ப் பாகு படுத்தித் திணை, கைகோள், கூற்றெென வகுத்துப் பாடுவது என்பதை அகம், புறம் என்ற இலக்கிய வகையைப் படைத்ததைத்தான் இங்கு முதற்காரணக் கற்பனை என்று கூறுகிறோம்.

கற்பனையின் தூண்டலாகப் பெரும்பான்மையும் ஐம்புலக் கூட்டும் செறிவும் அமைவது இயல்பு. எனினும் சில நேரங்களில் சில பொருள்களைப் பொறுத்த வரையில் இப்புலன்களால் தூண்டப்பட்டுத் துலங்கிய கற்பனை பின்னர்ப் புலன்களைப் பற்றாது அறிவினால் இயக்கப்படுவதும் உண்டு. இவ்வாறு அறிவினால் இயக்கப்பெற்ற பின்னர் வெளிப்படுமிடத்து மீண்டும் புலன்களைப் பயன்படுத்துவதும் உண்டு. சங்கப் பாடல்களின் பொட்பாகுபாட்டுக்கு அடிப்படையாக அமைந்த கற்பனை இவ்வாறு முதலில் புலன்களால் தூண்டப்பட்டுப் பின்னர் அறிவின் துணைகொண்டு துலங்கிப்பின்னர் புலன்களின் வழியே வெளிப்படுகிறது என அறிகிறோம்.

| புலன்கள் | அறிவு பகுப்பாய்வு | புலன்கள் |
|---|---|---|
| தூண்டல் | துலங்கல் உள்ளீடு | இலக்கியத் துலங்கல் வெளியீடு |
| *(காதல் உணர்ச்சி)* | *(மரபாக்கம்)* | *(அகப்பாடல்கள்)* |
| (Stimulus real emotions) | (Poetic idiom) | (Literary-generic response received emotions) |

இவ்வாறே வீரம் பற்றிப் பாடுவதும், வீரரைப்போற்றிப் புகழ்வதும் உலக இலக்கிய மரபிற் காணப்படும் செய்திகள்தாம். எனினும், வீரம் வெளிப்படும் போர் நிகழ்ச்சிகளை ஏழு திணைகளாகப் பாகுபாடு செய்து அவ்வத் திணைக்குரிய செய்திகளாகத் துறைகளை அமைத்துப் பாடும் வகையும் இக்கற்பனையின் அடிப்படையில் தோன்றியவாறு பிறமொழி இலக்கியங்களில் தோன்றவில்லை.

இவ்வாறு அடிப்படையான மானுட உணர்ச்சிகளை 'இலக்கிய வடிவம்' தருமிடத்து, அதாவது உணர்ச்சிகளை வினை நிகழ்ச்சிப் படுத்துமிடத்து (Concretisation of emotional entities) மேற்கொள்ள வேண்டிய மனக்கண் பார்வைதான்- செயல்படும் பார்வைதான் — கற்பனையின் சிறந்த பகுதி எனலாம். காப்பியங்கள், அவல நாடகங்கள் போன்றவற்றின் கதைப் பின்னல்களை அமைப்பதில்தான் கவிஞனின் தனிப் பெரும் கலைத் திறம் அடங்கி உள்ளது, என்ற அரிஸ்டாடிலின் கருத்து இம் 'முதற்காரணக்' கற்பனைப்' பார்வையைக் குறித்து எழுந்ததுதான், இதனை அடுத்த சிறப்பினதாக அவர் கருதும் பாத்திரப் படைப்பும் சங்கப் பாடல்களைப் பொறுத்த வரையில் இம்முதற்காரணக் கற்பனையிலேயே அடங்கிவிடும். மானிட உணர்ச்சிகளின் கிளையூற்றுகளாகக் கிளர்ந்தெழும் மன வோட்டங்களை உட்கொண்டே கூற்றுகள் வகுக்கப்பட்டுள்ளமையும் அவற்றின் வெளிப்பாடாகத் தான் பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளமையும் இக்கூறு இக்கற்பனையுள் அடங்கக் காரணமாக உள்ளன.

### இலட்சியக் கற்பனை: அகப் பொருள் மரபு

இப்பாடல்களின் படைப்புக்குக் காரணமான 'இம் முதற் காரணக்கற்பனை' மானிட வாழ்க்கையில் விளையும் எல்லா வகையான சிக்கல்களையும் உள்ளடக்கி

நிற்கவில்லை என்பதையும் காண்கிறேம். அகப்பாடல்களில் அங்குமிங்குமாகப் பொருள் வறுமையும், யாக்கை வறுமையும் (கூன், முடம் முதலியன) இளமை நிலையாமையும் சுட்டப்படினும் அவையாவும் அகப் பொருட் சிறப்பை-பாடப்படும் உரிப் பொருட் சிறப்பை விளக்கவே எழுந்தன எனவும் காண்கிறேம். காதல் உணர்ச்சி குறித்து தாறுமாறுன உறவுகளோ, அவற்ருல் விளையும் உள்ளத் தடு மாற்றங்களோ, அவற்றின் விளைவாக நிகழும் உயிர், பொருள் முதலானவற்றின் சேதங்களோ இப்பாடல்களில் இடம் பெறவில்லை. காதல் உணர்ச்சிகள், காலம் இடம், மனிதன், பொருள் நிலை போன்ற சூழல்களில் சிக்குவதால் தோன்றும் பலவேறு சிக்கல்கள் — மோதல்கள் இக்கற்பனைப் படைப்பில் இடம் பெறவில்லை. சுருங்கக் கூறின், வாழ்க்கையின் ஒளிமயமான காட்சிகளே சித்திரிக்கப்பட்டுள்ளன. பொது நிலையில் எவ்வகையான காதல் வாழ்வு இன்பம் அளிக்கும், அவற்றை நிறை வேற்றத் தேவையான கூறுகள் எவை என்பன போன்ற செய்திகள் மட்டும் இக்கற்பனையுள் அடங்குதலின் இதனை இலட்சியக் கற்பனை என்று கூறுவதும் பொருத்தமாகத் தோன்றுகிறது. 'இல்லதெனினும் இனிதாதலின்' என்னும் நோக்கு இதில் அமைந்துள்ளது. 'புலனெறி வழக்கமாக இவ்வகைக் கற்பனை இலக்கிய உலகில் கொள்ளப்பட்டிருப்பதால், தனிப்பட்ட புலவர்கள் தனித்தன்மை வாய்ந்த கற்பனையை இவ்வகைப் படைப்பில் — அதாவது பாடுபொருளை அமைப் பதில் காண இயலவில்லை.

### புறப் பொருள் மரபு

புறப் பொருள் அமைப்பை நோக்குமிடத்துப் பாடாண்திணையும், பொது வியல் திணையும் கவிஞர்களின் தனித்தன்மை தோன்ற சற்று இடம் அளிக்கு மெனினும், வெட்சி முதலாக வாகையீருக அமைந்துள்ள போர்த்திணைகள் அகப் பொருள் அமைப்பைப் போலவே நெகிழ்ச்சியற்ற புலனெறி மரபைத் தோற்று விக்கும் கற்பனையாகவே அமைந்திருக்கக் காண்கிறேம். புறம் கூறிப் பொய்த் துரைக்கும் புல்லர்களோ, தம் அரசைக் கவிழ்க்கத் தாமே துணை செய்யும் அதிகாரி களோ, வீரர்களோ, அமைச்சர்களோ, துணையெனத் துணிந்த அரச நண்பர்களைத் துறந்து எதிர்ப்புறம் இழிதகையினரோ, ஆன் முலையறுத்தல் முதலான குற்றங்களைச் செய்தவரோ பாடற்பொருளாக வராமை நோக்கத் தக்கது. இத்தகையோர் அக்காலத்தே இருந்திலர் என்று கருதுவது மனித இயல்பை அறியாத — அறிய இயலாத பிள்ளைமைத் தன்மையைக் குறிக்கும். எனவே இங்கும் தீமையைப் பாடலாகாது, வாழ்க்கையின் இருளடைந்த பகுதிகளைக் கலைப் பாற்படுத்து படைக்கலாகாது என்ற 'புலனெறி வழக்கமும்' போற்றப் படுவதைக் காண்கிறேம். மனித மனத்தின் கொடூரங்கள் சில புறப் பாடல்களிற் காட்டப்படினும் அவை பாடு பொருளாக அமையாமல் இருத்தலைக் காணலாம். வறுமையின் கொடுமை குறிக்கப்படினும், வள்ளல் தன்மையைச் சிறப்பிக்கப் பயன்படும் உத்தியாகவே அது அமைவதைக் காணலாம். ஆக அகம் புறம் ஆகிய இருவகைப் படைப்பு கட்கும் அடிப்படையான 'முதற்காரணக் கற்பனை' இலட்சிய நோக்கிலேயே அமைந்திருக்கக் காண்கிறேம்.

### சங்கப் பாடலும் துணைக் காரணக் கற்பனையும்

காதற் பொருளின் தன்மை உரிப் பொருள் என்னும் பெயரால் ஐவகைக் குள் வரையறுக்கப்படினும் ஒவ்வொரு உரிப் பொருளின் கூறுபாடுகளைப் பலபடி

யாகப் பெருக்கிப் பாடுவதற்குக் கவிஞனின் பாட்டறிவும், கற்பனையும் துணை நிற்றல் கூடும். மனிதமனம் ஒரு குறிப்பிட்ட உரிப் பொருளை எத்துணை எத்துணை வேறுபட்ட சூழலில் அனுபவிக்கக் கூடும் என்பதைக் கற்பனைக் கண்ணால் பார்க்கும் வாய்ப்பு கவிஞனுக்குத் தனித்தனியே உளதாகிறது.

அடுத்து, இப்பாடு பொருண்மையை ''உணர்த்தும்'' முறையிலும் கவிஞன் தன்னுரிமை உடையவனாய்க் காணப்படுகிறான். இவ்வாறு உணர்த்தும் முறை பல்வேறு உத்திகளின் வழியே நடைபெறுகின்றது. சில பெருங்கவிஞர்கள் இவ் உத்திகளைத் தாங்களே கற்பனையால் முதன் முதலாகப் படைத்துக் கொள்ளும் ஆற்றலுடையவர்களாகக் காணப்படுகின்றனர். பெரும்பாலான கவிஞர்கள் முன்னரே வழக்கிலுள்ள உத்திகளைப் பயன்படுத்துவதில் தம் கற்பனையைப் பயன் படுத்துகின்றனர். இக்கற்பனை முன்னரே படைத்துக் கொள்ளப்பட்ட பாடு பொருளை உணர்த்துவதற்குப் பயன்படுதலின் துணைக் காரணக் கற்பனை என்று கூறலாம். இக்கற்பனையால் எழுந்த சங்க இலக்கிய உத்திகள் சிலவற்றைக் கீழே காணலாம்.

**1. நாடக முறைமை**

அகப் பொருட்பாடல்கள் எல்லாம் புறமைப் பாடல்களாதலின் (Objective poetry) புலவன் தன் ஆளுமையைப் புலப்படுத்தாமலிருக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இத்தகைய புறமைப் படைப்புக்கு நாடக முறைமை சிறந்த உத்தியாகப் பயன்படுகிறது. நாடகமுறைமை என்றதும் உரையாடல்களை அமைத்துப் பாத்திரங்களைத் தாமே பேச விடுதல் என்பது தெளிவாகிறது. இவ் உத்தியைப் படைப்பதில் கவிஞனின் கலைத் தேர்ச்சி வெளிப்படுகிறது. இக்கலைத் தேர்ச்சியின் உயிர்நாடியாக விளங்குவது கற்பனைத் திறம் தான். என்னென்ன சூழ்நிலைகளில் எவ்வெப் பாத்திரங்கள் எவ்வெவ்வாறு பேசலாம் என்ற வரை யறைகள் முதற்காரணக் கற்பனையால் விளைவன. இப்பேச்சை எவ்வாறு அமைக்க லாம் என்பதில் கவிஞனின் துணைக் காரணக் கற்பனை செயற்படுகிறது.

இச்செயல் இரு வகைகளில் நிகழ்கிறது. முதலில் கவிஞன் தன் சொந்த ஆளுமையை மறைத்துக் கொள்ள வேண்டும். பின்னர், பேச இருக்கும் பாத்திரத் தின் உள்ளத்தைக் கற்பனை செய்து தானே அதுவாக மாற வேண்டும். கற்பனையின் துணையின்றி இதனைச் செய்ய இயலாது. தன்னை மறத்தலும் பிறிதொன்றின் உள்ளத்துப் புகுதலும் எளிமையான செயல்கள் அல்ல. புலன்களின் ஈர்ப்பை நிறுத்துவதனால் மட்டும் இத்தன்மையை அடைய முடிவதில்லை. புலன்களின் உதவியால் படிந்து நின்ற தன்னறிவு நிலைமையையும் (State of consciousness) விலக்கி நிற்கும் ஆற்றல் தேவைப்படுகிறது. இந்நிலைமை அடைந்த பின்னர்ப் பிறிதொரு மனித மனத்தின் தன்மையையும் கவிஞன் அடைய வேண்டும். இந்த இரண்டாவது படி நிலையை அடைவதற்கும் கற்பனையின் துணை வேண்டப் படுகிறது.

**2. இயற்கை**

இயற்கை என்பது திணைதொறும் வழங்கப் பெறும் பொருள்கள் எல்லா வற்றையும்குறிக்கும் மீவியற்கைப் பொருள்கள், மனிதர், பிற உயிரினங்கள்,

மரஞ்செடி கொடி, மலை, கடல், ஆறு போன்ற பிற அஃறிணைப் பொருள்கள் ஆகியன எல்லாம் இயற்கை என்னும் பெரும் பிரிவில் அடங்கும். சங்கப் பாடல்களில் வரும் இயற்கைப் பொருட்கள் யாவும் 'கருப்பொருள்' என்னும் கலைச் சொல்லில் அடங்கும். தொடர்புடைய உரிப் பொருளைப் படைத்துக் காட்டும் போது இக்கருப் பொருட்கள் பின்புலமாக அமைக்கப்படுவதைக் காண்கிறோம். இயற்கையின் அழகை அதற்காகவே (Nature for Nature's sake) சுவைபடப் படைத்துக் காணும் கற்பனைப் பாங்கு அகப் பாட்டு இயல்பிற்கு மாறானது. பாடப் பெறும் உரிப் பொருளின் சிறப்பினைப் புலப்படுத்துகின்ற ஒத்துணர்வுப் புலமாகத்தான் (Sympathetic background) இயற்கைப் பொருட்கள் பெரும் பாலும் படைக்கப்பட்டுள்ளன. மிகச் சில இடங்களில் மட்டுமே கற்பனையாகப் படைக்கப்படும் இயற்கைக் காட்சி உரிப் பொருளொடு நேரிடையாகத் தொடர் பற்று அமைந்துள்ளது (அகம் 82). மானிட உணர்வுகளைக் கூர்ந்து கணித்து, இயற்கைப் பொருட்களின் தன்மைகளுள் பொருந்துவனவற்றைப் பொருத்திக் காட்டியும், பொருந்தாதவற்றை உறழக் காட்டியும் அறிவுறுத்துவதே இப்பாடல்களின் தன்மையாக இருக்கக் காண்கிறோம். இவ் இயற்கைப் பொருள்களை இவ்வாறு பொருந்துமிடங்களில் இலக்கண வழுத் தோன்றாமைப் பொருட்டுச் சில உத்திகள், ''அணிகள்' என்ற பெயருடன் தோன்றின. இக்கவிதை உத்திகளாக, உணர்வு வழுவமைதி (Pathetic fallacy) தற்குறிப் பேற்றம் திணை உருவகம் (Personification) போன்றன பயன்படுவதைக் காண்கிறோம். இத்தகைய நிலையில் இயற்கை என்பது மானுடம் ஒழிந்த பிற உயிரினங்களை உள்ளடக்கிய பொருண்மையாக உள்ளது. இப்பாடல்களிற் காணும் மானுட ஆர்வமாய மனித நேயக் கருத்திட்டிற்கு (Humanistic concepts) இவ்வியற்கைப் பொருட்கள் வெறும் பின்புலப் பொருள்களாகவும், துணை முதற்பொருட்களாகவும் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம்.

### 3. அணிகள்

சங்கப் பாடல்களுள் பயின்றுவரும் அணிகள், துணைக்காரணக் கற்பனையால் மேற்கொள்ளப் பெறும் உத்தி வகைகளுள் ஒன்று. பாடற் பொருண்மையைப் படைக்கும் அளவுக்கு ஆழ்ந்த கற்பனை இவ்வுத்திப் படைப்பில் செயற்படவில்லையெனினும், வெறுங்கற்பனை (Fancy) என்னும் துணைக் காரணக் கற்பனை யாவது செயற்பட்டாலன்றிச் சிறந்த பொருளணிகள் தோன்றும் வாய்ப்பு ஏற்படுவதில்லை. கூரிய புலனுணர்வும், புலச் செறிவும் நனவறிவின் (Conscious intellect) துணையோடு ஒன்றியும் உறழ்ந்தும் செயற்படுமிடத்து உவமை, உருவகம் முதலான பல அணிகள் தோன்றுகின்றன. இலக்கண நோக்கில் உவமையும் உருவகமும் வாய்பாட்டளவில் வேறுபடுகின்றன என அறிகிறோம். கற்பனை நோக்கில், புலனழுத்தச் செறிவிற்கும் நனவறிவிற்கும் இடையே உள்ள வேறுபாட்டால் விளைவனவாக உவமையும் உருவகமும் காணப்படுகின்றன. சங்கப் பாடல்களில் புலனுணர்வுக் கூர்மையால் விளையும் கற்பனையே (உவமை) மிகுதியாகக் காணப்படுகின்றது. புலனழுத்தச் செறிவால் விளையும் கற்பனை (உருவகம்) குறைவாகவே காணப்படுகின்றது. இதனால்தான் புலன் வழுவமைதியாகப் படைக்கப்பட்ட பாடல்கள் (Synaesthesia) (தேன் வந்து பாயுது காதினிலே, செவி நுகர் கனிகள்) சங்க இலக்கியத்தில் மிகுதியாகக் காணப்படவில்லை. நம்முடைய சங்கப் பாடல்கள் செவ்விலக்கியத் தன்மையுடையன (Classical literature) என்று

கருதுவதற்கான காரணங்களுள் இத்தகைய கற்பனை பொருந்திருயிருப்பதும் ஒன்று என அறிகிறோம்.

**தொல்காப்பியமும் சங்க இலக்கியமும்**

இலக்கியப் படைப்பு முறைமை குறித்துத் தொல்காப்பியம் கூறுவது இங்குக் கருதத் தக்கது.

''வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதநூல் ஆகும்'' (தொல். 640)

படைப்பு முறைமை பற்றிய இந்நூற்பா எத்தகையோன் முதநூலை இயற்றும் தகுதி பெற்றவன் எனக் கூறுகிறது. முதநூல் எத்தகையோனால் இயற்றப்பெறும் என இயம்புகிறது. ஆயின் முதநூல் எத்தன்மையது. எவ்விலக்கணத்தது என்னும் குறிப்பைப் புறமை வாய்பாட்டால் தரவில்லை என்பது கருதத் தக்கது. இத்தகையோனால் இயற்றப் பெறுவது முதநூல் என்கிறதே தவிர இன்ன தன்மைத்து முதநூல் என்று கூறவில்லை. நூலின் மரபைக் கூறவந்த இடத்தில் ஆக்கியோனின் மரபு கூறப்படுகிறது அன்றி ஆக்கப்படும் பொருளின் தன்மை விளக்கப்படவில்லை. எனவே முதனூல் என்னும் சொல்லைச் சார்பிலக்கண வரையறையால் தொல்காப்பியம் விளக்குகிறது; பொருண்மையிலக்கண வரையறை (Objective definition) பெறப்படவில்லை.

சங்க இலக்கியப் பாடல்களை நோக்குமிடத்து – படைப்பு நிகழும் செயன் முறைமையால் ஆராயுமிடத்து – இப்'பொருண்மை வரையறையைக் கண்டுணரும் வாய்ப்பு ஏற்படுகிறது. படைப்போனைப் பற்றிய தன்மை வரையறை சிறிதும் பெறப்படாத சங்கப் பாடல்களும், பொருண்மை வரையறை பெறப்படாத தொல்காப்பியமும் இவ்வாறு ஒன்றையொன்று அவாவி நின்று (Complementary) படைப்பின் முழுமைப் புணர்ப்பை நமக்கு உணர்த்துவது தமிழர்தம் இலக்கியச் செவ்வியே எனலாம்.

இதுகாறுங்கண்டவற்றால், சங்கப் பாடல்களிற் காணப்பெறும் கற்பனை மரபாக உணரப்படுவனவாவன:

1. முதற்காரணக் கற்பனை (Secondary Imagination in Coleridgean Sense) துணைக்காரணக் கற்பனை அல்லது வெறுங்கற்பனை (Fancy) என்ற இரு கற்பனைக் கூறுகளும் சங்கப் பாடல்களின் தோற்றத்திற்குத் துணை நின்றுள்ளன.
2. இவற்றுள், சங்கப் பாடல்களின் பொருண்மை மரபு தோன்றுவதற்கு, முதற்காரணக் கற்பனை அடிப்படையாக அமைந்துள்ளது.
3. இப்பொருண்மை மரபைக் கவிதையாக்குங்கால் மேற்கொள்ளப்பட்ட கவிதை உத்திகளின் தோற்றத்திற்குத்துணைக் காரணக்கற்பனை துணை நின்றுள்ளது.

இவ்வாறு கற்பனையின் செயன்மைக் கூறுகள் (Compositional aspects of Imagination) இரண்டும் இயையச் சங்கப் பாடல்கள் தோற்றம் பெற்றுள்ளன. பொதுவாக உலக இலக்கியங்களில் தனிப்பட்ட கவிஞர்கள் படைக்கும் கற்பனைகள் பிறகு பலரால் மரபாக ஏற்கப்படுவதைக் காண்கிறோம். ஆனால் சங்க இலக்கியம் பலரால் கூடிப் படைக்கப்பட்ட ஒரு கற்பனை மரபை எல்லோரும் ஏற்றுக் கொண்டு அதன் வழித் தம் படைப்பை ஆக்கியுள்ளனர் என அறிகிறோம்.

# அன்னை மொழியும் ஆட்சித் துறையும்

(கோ. முத்துப் பிள்ளை)

உலகினைக் காட்டும் பலகணியாக விளங்கும் ஆங்கில மொழியினால் நாம் அளவற்ற நன்மைகளை அடைந்துள்ளோம். ஆட்சிமொழி குறித்து எந்தச் செய்தியையும் எளிதாக ஆங்கிலத்தில் எடுத்துக்கூற இயலுவதை நாம் நாடோறும் கண்டு வருகின்றோம். இன்றைய ஆட்சிமுறைகளுக்கு ஆங்கிலம் ஏற்ற மொழியாக இருப்பதால், மொழிபெயர்ப்பு முக்கிய இடத்தை ஈட்டிக் கொள்கின்றது.

ஆங்கில மொழியின் வாக்கிய அமைப்பு வேறாகவும் தமிழ்மொழியின் வாக்கிய அமைப்பு வேறாகவும் இருப்பது இயல்பேயாகும். ஆங்கில வாக்கியங்களை மொழிபெயர்க்கும்போது தமிழின் வாக்கிய முறைக்கு ஏற்ப, மொழிபெயர்த்தல் வேண்டுமன்றோ? இது அவரவர்க்குள்ள திறனையும் பயிற்சியையும் பொறுத்தது.

**ஆங்கிலத்தில் வெளிவரும் அழகு மிக்க அகராதிகள்**

சொற்களையும் சொற்றொடர்களையும் மொழிபெயர்க்கும்போது, தேவைப்படும் உதவிகளைப் புரிவதற்காகத்தான் அகராதிகள் எழுந்துள்ளன. அகராதிகள் என்று சொன்ன மாத்திரத்திலேயே, ஆங்கில மொழியில் வெளிவந்துள்ள, அன்றாடம் வெளிவருகின்ற, அகராதிகள் நம் கண்முன்னர்க் காட்சி தருகின்றன. ஆட்சிமொழி என்னும் துறை குறித்துத் தனியாக அகராதிகள் ஆங்கிலத்தில் இல்லாதபோதிலும் பொதுவகையான அகராதிகள் போற்றத்தக்க முறையில் வந்து குவிகின்றன. சொற்களுக்கு அகராதிகள், சொற்றொடர்களுக்கு அகராதிகள், மரபுத் தொடர்களுக்கு அகராதிகள், பழமொழிகளுக்கு அகராதிகள், அறிவியல் சொற்களுக்கு அகராதிகள் என்று இவ்வாறு எத்தனையோ அகராதிகள் ஆங்கிலத்தில் வெளிவருகின்றன. ஆங்கிலக் கலைக் களஞ்சியத் தொகுதிகள் கண்களைக் கவர்கின்றன. அவை காலமுறைகளில் கவின்மிகு தொகுதிகளாக வெளிவந்தவண்ணமிருக்கின்றன. இவ்வாறெல்லாம் அகராதிகள் ஆண்டுதோறும் தமிழில் வெளிவரும் நாள் எந்நாளோ என்று ஏங்கத்தான் வேண்டியதாக இருக்கின்றது. இத்தகைய குறைகளை நீக்குவதற்கு, பல்கலைக் கழகங்கள் விரைந்து பணியாற்றுதல் மிகமிக அவசரமாகும்.

ஆட்சிமொழித் துறையை மட்டும் எடுத்துக்கொண்டால், சைவ சித்தாந்தக் கழகம் போன்ற தனியார் அமைப்புகளும், தனிப்பட்ட அறிஞர்களும், பல்கலைக் கழகங்களும் தமிழ்நாடு அரசும் பல்வேறு அகராதிகளை வெளியிட்டு உள்ளனர்.

**தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon)**

இன்று ஆட்சிமொழிக்கு மிக முக்கியமாகப் பயன்படும் அகராதிகளைப் பற்றி இங்கு ஆராய்வோம். முதலாவதாக, சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள தமிழ்ப் பேரகராதியை எடுத்துக் கொள்வோம். இது பல்வேறு தொகுதிகளாக, மொத்தத்தில் எட்டுத் தொகுதிகளாக, வெளிவந்துள்ளது. ஆறு தொகுதிகள், துணை வெளியீடுகளின் இரண்டு பாகங்கள், ஆக எட்டுத் தொகுதிகள், முதலாவது தொகுதி 1926-27 ஆம் ஆண்டிலும் இணைப்புத் தொகுதியின் இரண்டு பாகங்கள் 1938-1939ஆம் ஆண்டிலும் வெளிவந்தன. இந்தப் பேரகராதியின் தொகுதிகள் இப்போது கிடைக்கவில்லை. தமிழார்வம் கொண்டவர்கள் தத்தளித்துக் கொண்டுள்ளனர். இந்த அகராதியை மறுஆய்வு செய்து, புதிய பதிப்புக்களாகக் கொண்டுவர சென்னைப் பல்கலைக் கழகம் செய்துள்ள முயற்சிகள் பாராட்டுவதற்குரியனவாகும். அண்மையில் 12–11–80ஆம் தேதியன்று முதலாவது தொகுதியாக ஒரு வெளியீடு வந்துள்ளது. இந்த அகராதி அகரத்தைத் தாண்டி நகர்வதாக இல்லை. இது கடலில் கரைத்த காயத்தையே நிகர்க்கும். பகுதிநேரப் பணிகள் பயனளிக்கவில்லை என்பதையே நாம் உணர்கின்றோம். 1939ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை, நாற்பதாண்டுக் காலத்திற்கு மேலாக, ஒரு நீண்ட இருண்ட காலமாகவே இருந்து வருகின்றது. முழுநேரப் பணியில் மூதறிஞர்களை ஈடுபடுத்தி எல்லாத் தொகுதிகளையும் எட்டாண்டுகளில், ஆண்டுக்கொரு தொகுதியாக வெளியிடக்கூடுமானால், அது தமிழன்னைக்குச் செய்த தனிப்பெருந் தொண்டாகக் கருதப்படும் என்பது திண்ணம்.

**ஆங்கில-தமிழ் அகராதி**

இதே போன்றதுதான் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள ''ஆங்கில–தமிழ் அகராதி'' யின் நிலையும். 1965ஆம் ஆண்டு வெளிவந்த இந்த அகராதியின் திருந்திய பதிப்பு இதுவரை (1981) வெளிவரவில்லை. இப்போதுள்ள இந்த அகராதி யாவர்க்கும் பேருதவியாக இருந்துவருகின்றது என்பதில் ஐயமில்லை. எனினும் பல்வேறு துறைகளில் புதிதாகப் புனையப்பட்டு, அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட சொற்களையும் இதில் சேர்த்துக்கொண்டால், இந்த அகராதி மேலும் பயனுடையதாக மாறிவிடுமன்றோ? எடுத்துக்காட்டாக, ஆட்சிச் சொற்கள், சட்டச் சொற்கள், கல்லூரிகளில் வழங்கும் கலைச் சொற்கள் போன்ற சொற்களையெல்லாம் இந்த அகராதியில் ஏற்ற இடங்களில் சேர்த்துச் சிறப்புறுமாறு செய்யலாம்.

**அரசின் அரிய நடவடிக்கைகள்**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சிப் பணிகளிலே தனிக் கவனம் செலுத்தி வருகின்றது. ஆட்சி மொழியைப் பொறுத்தவரையில், அதிகமான ஆர்வம் காட்டிவருகின்றது. அரசு அலுவலகங்கள் அனைத்திலும் அன்னை மொழியை முழுமையாக இடம்பெறச் செய்வதற்காக ஆவன அனைத்தையும் தமிழ்நாடு அரசு செய்துவருகின்றது. ஆக்கப் பணிகளை ஆற்றுவதோடு, ஊக்கமூட்டும் நிகழ்ச்சிகளையும் உவந்து புரிந்து வருகின்றது. ஒவ்வொரு அலுவலகத்திற்கும் ஓடிச் சென்று, தமிழ்த் திட்டம் செயற்படும் முறையை நேரில் கண்டுணர்ந்து, விரைவுபடுத்துவதற்கான ஆய்வுரைகளை அந்த இடத்திலேயே வழங்கி, தக்க

மேல்நடவடிக்கைகளை எடுப்பதற்காகப் போதுமான ஆய்வு அலுவலர்களை அமைத்துள்ளது. தமிழில் சிறப்பாகக் குறிப்புகளும் வரைவுகளும் எழுதுவோர்க்கு ஊக்க மூட்ட, பரிசுத் திட்டங்களையும் வகுத்துள்ளது. எண்ணற்ற நடவடிக்கைகளை எடுத்திருந்தும், எண்ணியபடியான விரைந்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதாகத் தெரியவில்லை.

### ஆட்சிச் சொல் அகராதி

அரசு வெளியிட்டுள்ள ஆட்சிச் சொல் அகராதி ஓர் அரிய வெளியீடாகும்; பயன்மிகுந்த நூலாகும். இந்த அகராதிக்குத் துணை அகராதிகளாக அமையுமாறு பல்வேறு துறைகளுக்கான சிறு சிறு அகராதிகளும் வெளிவந்துள்ளன. அவற்றில் சிலவற்றிற்குப் புதிய பதிப்புகளும் வெளிவந்துள்ளன. இந்தச் சிறப்பான ஏற்பாட்டை யாவரும் போற்றக் கடமைப்பட்டுள்ளோம். ஆனால் ஆட்சிமொழி வகுப்புகளை நான் நடத்திவந்தபோது, மிக முக்கியமாகத் தேவைப்படும் ஒரு சில சொற்களும் சொற்றொடர்களும் ஆட்சிச்சொல் அகராதியில் இடம் பெறவில்லை என்பதை உணர்ந்தேன். இக்கால இளைஞர்கள் ஆட்சிமொழியின் மீது பேரார்வம் கொண்டுள்ளனர். இடம் பெறாத சொற்களையும் சொற்றொடர்களையும் எடுத்துக்காட்டி, அவற்றிற்குரிய தமிழாக்கங்களை அறிந்து கொள்ள அவாவி நிற்கின்றனர். இந்த இளைஞர்களின் எழுச்சியை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இந்த இளைஞர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் நல்ல தமிழிலேயே நாட்ட முடையவர்களாகத் திகழும் நிலையை நேரில் கண்டு நான் கிளர்ச்சியுற்றேன். ஆட்சிச்சொல் அகராதியின் மூன்றாம் பதிப்பு 1971ஆம் ஆண்டு வெளிவந்தது. அதனை உடனடியாகப் புதுக்குதல் வேண்டும்; பெருக்குதல் வேண்டும். அழகிய புதிய பதிப்பு ஒன்றை, பெரிய தொகுதியாக, கண்கவர் முறையில் மிக விரைவில் வெயிடுதல் வேண்டும்.

பொதுவாகக் கூறவேண்டுமானால் தமிழில் அகராதிகள் அடுக்கடுக்காகவும் அடுத்தடுத்தும் வரவேண்டும்.

### ஆட்சித் துறையில் அழகு தமிழ்

பொறியியல், மருந்தியல் போன்ற துறைகளிலே அன்னைமொழி ஆக்கம்பெற சற்று நாள்பிடிக்கலாம். ஆனால் ஆட்சித் துறையிலே, ஆட்சி மொழியாக அன்னை இடம் பெறுவதில் சுணக்கம் எற்றுக்கு? தமிழ்மொழி உடனடியாக முழுஅளவில் நிரம்பி நிற்கக் கூடிய ஒருதுறை உண்டென்றால், அது ஆட்சிமொழித் துறை ஒன்றுமட்டுந்தான் என்றுகூடச் சொல்லிவிடலாம். மிக எளிதான வாய்ப்பு ஒன்று கிடைக்குமானால், அந்த வாய்ப்பு ஆட்சித்துறையில்தான் அமையமுடியும். தமிழிலே பேசுவதைத் தமிழிலே எழுதவேண்டிய இயல்பான ஒரு வேலையைப் பற்றிக் கடினம், கடினம் என்று போலிக் காரணங்களைச் சிலர் புகன்று வருகின்றனர். அவர்கள் எழுப்பும் வினாக்களை எண்ணிப் பார்த்தால் எள்ளி நகையாடவே தோன்றும். ஒரு நண்பர், தமிழ் நன்றாகப் படித்தவர், என்னிடம் ''ஐயா, Sound Engineer என்னும் பெயரைத் தமிழில் எப்படிச் சொல்லலாம் என்று வினவினார். ''ஒலிப் பொறியாளர்'' என்று விடை கூறினேன். இந்த விடையை ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவர், ''எலிப்பொறி'' என்பது போன்றல்லவா இது ஒலிக்கின்றது என்றார். நான் சிறிது சிந்தித்த பின்னர்

''ஒலியியல் பொறியாளர்'' என்றுகூடச் சொல்லலாமே என்றேன். நண்பர் தமிழ்ப் பற்றுடையவராகையால் ''இது நன்றாக உள்ளது'' என்று ஏற்றுக் கொண்டார்.. கடினம் பொடியாகிய கதையல்லவா இது! இந்த நிகழ்ச்சியை ஒவ்வொருவரும் நெஞ்சில் நிறுத்திக் கொள்ளவேண்டும். இந்த ஒரு நிகழ்ச்சியி லிருந்தே எத்தனையோ படிப்பினை நாம் பெறுதல்கூடும்.

நான் ஒரு பத்திரிகையில் பார்த்தேன். தமிழில் எழுதப்பட்டுள்ள செய்தி களுக்கிடையே Housing and Urban Development Corporation என்னும் பெயரும் Civil Services Joint Council என்னும் பெயரும் ஆங்கிலத்திலேயே கொடுக் கப்பட்டிருந்தன. இவற்றை ''வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற வளர்ச்சி நிறு வனம்'' என்றும், ''குடிமுறைப் பணியாளர் கூட்டு மன்றம்'' என்றும் தமிழிலே எழுதினால் என்ன தீங்கு நேரிடுமென்று தெரியவில்லை. ஒரு சில நண்பர்கள் Visiting Card, Paper Weight. Buzzer, Electrician, Bio-data, போன்ற சொற்களையெல்லாம் எடுத்துக்காட்டி இத்தகைய சொற்களைத் தமிழில் அழகுற அமைப்பது இயலுவதாக இல்லையே என்று குறைபட்டுக் கொள்கின்றனர். ''காண்பு அட்டை'' என்று சொன்னால் கசப்பாக இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். ''காண்புச் சீட்டு'' என்று சொல்லி விட்டால் இனிக்குமே! Paper Weight என்பதற்கு அகராதிப் பொருளாகிய ''தாள் பளு'' என்பதை எடுத்துச் சொன்னால், நண்பர்கள் அந்தப் பளுவைத் தாங்கிக் கொள்ளமாட்டார்கள்! ''காகிதக் காப்பு'' என்று மாற்றினால் மகிழ்ச்சி வெள்ளமல்லவா பெருக்கெடுத் தோடும். Buzzer என்று சொல்லும்போதே ''விர்'' என்ற அழைப்பு ஒலி நம் செவிகளில் கேட்கின்றது. ''இமிர்தல்'' என்றால் ஒலித்தல் என்பது நமக்குத் தெரியும். வண்டினம் இமிர்தலையும் நம் இலக்கியம் நமக்குக் காட்டுகின்றது. ''இமிரி'' என்று சொல்லிப் பார்த்தால், ''இம்'' என்ற இனிய ஒலியும் ''விர்'' என்ற அழைப்பு ஒலியும் எழுகின்றனவே. தன் தகுதிக் குறிப்புகளே Bio-data, ஆகும். நம் தகுதியை நாம் நவிலும்போது, நம் பெயரையும் ஊரையும் பிறந்த தேதியையும் சொல்லாமலா விடுவோம்! ஆட்சிமொழி கடினமாக இல்லையே. எளிதாக அமைந்தன்றோ தேன்போல இனிக்கின்றது.

**நாமே உண்டாக்கும் சிக்கல்கள்**

எளிதான இந்த ஆட்சிமொழித் துறையை நாமாகவே சிக்கலாக் கிக் கொண்டுள்ளோம். Satisfaction என்னும் சொல்லிற்கு ''திருப்தி'', ''மன நிறைவு'' என்னும் இரண்டு மொழிபெயர்ப்புகள் வழங்கி வருகின்றன. இதைப் போலவே Proposal என்னும் சொல்லுக்கு ''செயற்குறிப்பு'', ''கருத்துரு'', ''தெரிப்புரை'' என்னும் மொழி பெயர்ப்புகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. Precedent என்னும் சொல்லுக்கு ''முன்முடிவு'' ''முன்நிகழ்வு'', ''முற் கோள்'' என்னும் மூன்று மொழிபெயர்ப்புகள் உள்ளன. Suggestion என்னும் சொல் படுகின்ற பாட்டினைச் சொல்லி முடியாது. ''யோசனை'', ''எண்ணம்'', ''தொடங்கெண்ணம்'';, ''தூண்டுரை'' முதலான பல சொற்கள் போட்டியிட்டு வருகின்றன. தொடக்கக் கட்டத்தில், ஒரு சொல்லுக்குப் பல மொழிபெயர்ப் புகளை எடுத்துக் கூறுவதில் தவறில்லை. அவரவர் கூறிய சொற்களைஅவரவர் வலியுறுத்துவது புரிந்து கொள்ளக்கூடிய ஒன்றுதான்,. ஆயினும் எந்த முடிவிற்கும்

வரஇயலாமற் போய்விடுதல் ஆகாது. விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை மிகமிகத் தேவையாகும். எல்லாச் சொற்களின் பொருத்தங்களையும் எடை போட்டுப் பார்த்து, எந்தச் சொல் அனைத்திற்கும் மேலாக அழகுற அமை கின்றதோ அந்தச் சொல்லை ஏற்றுக்கொள்ளுதல் யாவர்க்கும் பொறுப்பாகும்.

ஒரு சில சொற்களைப் பொறுத்தவரையில் படிப்படியான முன்னேற்றம் ஏற்பட்டு, கடைசியில் கற்கண்டு போன்ற இனிய மொழிபெயர்ப்பு அமைந்து விடுவதைக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக Pollution என்னும் சொல்லைப் பார்ப்போம். ''தூய்மைக்கேடு'' என்று முதலில் சொல்லிப் பார்த்தோம். அதன் பிறகு சிலர் ''நஞ்சூட்டம்'' என்று நவின்றார்கள். ஆனால் இப்போது முடிவாக ''மாசுபாடு'' என்று அழகுற அமைத்துக்கொண்டோம்.

ஒரு சொல்லிற்கு, பல சந்தர்ப்பங்களுக்கு ஏற்றாற்போல, பல மொழி பெயர்ப்புகள் இருக்கலாம். ஆனால் ஒரே சொல்லுக்கு ஒரே சந்தர்ப்பத்திற்கு ஒரே மொழிபெயர்ப்புதான் இருந்தாகவேண்டும்.

இவ்வகையான ஒருசீர்மை முறை மிகமிக முக்கியமாகும். இந்நிலையை நாம் எய்த முயலாவிட்டால், சொற்குழப்பமும் அதன் காரணமாகப் பொருட் குழப்பமும் ஏற்பட்டு இன்னல் விளைவிக்கும். இந்தக் குழப்ப நிலையை ஆட்சித் துறைத் தமிழில் நாம் உருவாக்கினால், பொதுமக்கள்தாம் எதுவும் விளங்காமல் அளவற்ற அல்லலுக்கு ஆளாவர்,. நாம் கொடுக்கும் தொல்லை தாங்க முடியாமல், ''ஆங்கிலமே இருந்து போகட்டுமே'' என்று கூடச் சொல்லத் தொடங்கிவிடுவர். அறிஞர் குழாத்திடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகள் தூய நெஞ்சினரான தமிழ் மக்களைத் துன்பத்திற்கு உள்ளாக்குதல் ஆகாது.

ஆட்சிமொழி வளர்க்கும் அமைப்புகள் அனைத்தும் இன்று சிதறிக் கிடக் கின்றன. அவை ஒரு குடைக்கீழ் வந்தாகவேண்டும். சட்டச் சொல் வளர்க்கும் ஆட்சிமொழி ஆணையம் தலைமைச் செயலகச் சட்டத் துறையின் கீழ் இயங்கி வருகிறது. அன்னை மொழியை அலுவலகங்களில் அமரச் செய்யும் தமிழ் வளர்ச் சித்துறை, கல்வித் துறையின் கண்காணிப்பில் இயங்கி வருகின்றது. மொழி பெயர்ப்பையே மூச்சாகக்கொண்டு திகழும் மொழிபெயர்ப்புத் துறை தகவல்—விளம்பர அமைச்சகத்தின் ஒரு பகுதியாக அமைந்து நிற்கின்றது. இம் மூன்று பகுதிகளையும், இன்னும் இவைபோன்ற பிற பகுதிகளையும், ஒரு குடையின்கீழ் கொண்டு வருதல் உடனடித் தேவையாகும்.

**அதிகாரிகள் மனமாற்றம்**

ஆட்சிமொழி என்று நினைக்கும்போதே அதிகாரிகள் மனம் மாறிவிட் டார்களா என்னும் கேள்வி பிறக்கின்றது; ஐயம் எழுகின்றது. கீழதிகாரியைக் கூப்பிட்டனுப்பி ''ஆங்கிலத்தில் எழுதிக் கொண்டுவா'' என்று கூறும் மேலதி காரிகள் இன்னும் இருப்பதாகவே அறிகின்றோம். இளைஞர்கள் துடிப்புடன் ஓடிவந்து ''தமிழில் எழுதுவதற்கு எங்கள் மேலதிகாரி எங்களை அனுமதிக்க மறுக்கிறாரே'' என்று கூறுவதை நான் பலமுறை கேட்டிருக்கிறேன். தமிழ் படித்த தமிழராயுள்ள சில மேலதிகாரிகள்கூட இந்த வகையாகச் செயற்படுவது

மிகவும் வருத்தத்தைக் கொடுக்கின்றது. பிற மாநிலங்களைச் சேர்ந்த தமிழ் தெரியாத அதிகாரிகளைப் பொறுத்தவரையில் நிலைமை மிகவும் பழுதாக இருப் பதைச் சொல்லத் தேவையில்லை. அரசு அலுவலர் தேர்வுக் கழகம் நடத்துகின்ற தமிழ்த் தேர்வுகளில் அவர்கள் வெற்றி பெற்றால்கூட, கோப்புகளில் எழுதும் அளவிற்கு அவர்களுக்குப் போதுமான தமிழறிவு ஏற்படுவதில்லை.

ஆங்கிலம் அருமையாக வளர்ந்துள்ள வகைகளையெல்லாம் நாம் வியந்து வியந்து போற்றுகின்றோம். அதே முறையில் தமிழும் வளரவேண்டுமென்பதில் நாம் அக்கறை கொள்வதில்லை, பழைய பல்லவிகளையே நாம் பாடிக் கொண்டி ருக்கின்றோம். ஒரு சில எடுத்துக்காட்டுகளைத் தருவதற்கு நான் விழை கின்றேன். (Percent) என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நேரான தமிழ் மொழி பெயர்ப்பு ''நூற்று விழுக்காடு'' என்பதாகும். ஆனால் (Forty percent, Sixty percent) என்றெல்லாம் எழுதும்போது ''நாற்பது விழுக்காடு'', ''அறுபது விழுக் காடு'' என்று எழுதுகின்றோம். இவை சுருக்கமாகவும் அழகாகவும் அமைகின்றன. ஆனால் சிலர் ''நாற்பது நூற்று விழுக்காடு'' என்றும் ''அறுபது நூற்று விழுக்காடு'' என்றும் எழுதித்தான் ஆகவேண்டும் என்று அடம்பிடிக்கின்றனர். என்னே நம் தமிழ்ப்பற்று! (To break open or enter any apartment) என்னும் தொடரை எடுத்துக் கொள்வோம். இதனை ''அறை எதையும் உடைத்துத் திறப்பதற்கு அல்லது நுழைவதற்கு'' என்று எழுதினால் போது மென்று தோன்றுகின்றது. ஆனால் சிலர் ''அறை எதையும் உடைத்துத் திறப்பதற்கு அல்லது அதில் நுழைவதற்கு'' என்றுதானே எழுதவேண்டும் என்று உறுதியாகக் கூறுகின்றனர். பல்லவன் போக்குவரத்துக் கழகத்தினர் தங்கள் பேருந்துகளில் ''ஓடும் வண்டியில் ஏறவோ இறங்கவோ கூடாது'' என்று எழுதி வைத்துள்ளனர். இதை நாம் நாள்தோறும் பார்த்துப் பாராட்டு தெரிவிக் கின்றோம். நண்பர்களின் கூற்றுப்படி ''ஓடும் பேருந்தில் ஏறவோ அதிலிருந்து இறங்கவோ கூடாது'' என்றுதானே இருக்கவேண்டும்! இது உண்மையில் தேவை தானா? "The property shall be put up in one or more lots" என்னும் வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். இதைச் ''சொத்தானது ஒன்று அல்லது மேற்பட்ட தொகுப்புகளாக அமைக்கப் படுதல் வேண்டும்'' என்று மொழிபெயர்க்கலாம். நண்பர்கள் இதற்கும் ஒரு தடையை எழுப்புகின்றனர். ''ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட என்று இருந்துதான் ஆகவேண்டும்'' என்பது அவர்களின் வாதம். ''அதற்கு'' என்னும் சொல் விடுபட்டுவிட்டால், பொருள் மாறியா போய்விடும்? இயல்பாக ஏற்படும் வளர்ச்சிகளை இல்லாமற் செய்வது சரிதானா? சிந்தனைக்காகவே நான் இவற்றை எடுத்துக் கூறியுள்ளேன். சிந்திக்க வேண்டுகிறேன்.

**விரைந்த நடவடிக்கை**

ஆட்சி மொழித் திட்டத்தின் முன்னேற்றம் குறித்து நண்பர்களிடம் உசாவிப் பார்த்தால் பல செய்திகளை நாம் தெரிந்து கொள்ளலாம். ''எத் தனையோ ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழ்ச் சொற்கள் கிடைக்கவில்லையே'' என்று உண்மையாகவே மனம் வருந்துவோர் பலர் இருக்கின்றனர். ஆயினும் வேறு சிலர் ''நம்மீதுதான் குறை. நாம் முனைந்து செயல்பட்டால் தமிழ்மொழி

தடையின்றி முன்னிற்குமே'' என்று கூறுவதையும் கேட்கலாம். சட்டம் இயற்றப் பட்ட ஆண்டினைச் சற்றே மனத்திற்குக் கொண்டுவருதல் வேண்டும். தமிழ்மொழி இந்த மாநிலத்தின் ஆட்சிமொழியாக இருக்குமென சட்டம் இயற்றப்பட்ட ஆண்டு 1956 ஆகும். ஆகவே, தமிழ்த் திட்டம் அறிவிக்கப்பட்டு கால்நூற்றாண்டுக் காலம் கடந்து விட்டது. இந்த நீண்ட நெடுங்காலத்திற்குப் பிறகு, இன்று உள்ள நிலை என்ன? அலுவலகங்களிலே அன்னைமொழி ஓரளவுதான் ஆட்சிபுரியத் தொடங்கி யுள்ளது; முழு அளவில் வரவில்லை. நீண்ட இடைவெளி காணப்படுகின்றது. இந்த நிலையை மேலும் நீடிக்கவிட்டால், புதுப்புதுச் சிக்கல்கள் தோன்றிவிடும் என்பதைக் குறிப்பிட்டுத்தான் ஆகவேண்டும். ஆட்சிமொழித் திட்டத்தை முழு அளவில் நிறைவேற்றி வைப்பதற்கு விரைவான நடவடிக்கை தேவைப்படுகிறது.

**நிதி ஒதுக்கீடும் நிலைத்த ஏற்பாடும்**

தமிழ்ப் பணியில் தலைசிறந்து விளங்கும் தமிழ்நாடு அரசு, ஆட்சிமொழிக் காக நிலைத்த ஏற்பாடுகளைச் செய்ய முன்வரவேண்டுமென்று நான் பெரிதும் விழைகின்றேன். தமிழ் வளர்ச்சிக்கென நிதி ஒதுக்கீடு செய்வதில் தமிழ்நாடு அரசு தாராளமாகவே இயங்கி வருகின்றது. எனினும் தேசிய மொழிகள் பதினான்கனுள் தமிழ்மொழியும் ஒரு மொழியாகையால், மைய அரசும் தமிழ் மொழியின் வளர்ச் சிக்கென நிறைந்த நிதிகளை ஒதுக்கித்தர முன்வரவேண்டும். தமிழ்மொழியைப் பேணிக் காப்பதில் எத்துணைப் பொறுப்பும் கவலையும் தமிழ்நாட்டு அரசிற்கு உள்ளனவோ அத்துணைப் பொறுப்பும் கவலையும் மைய அரசுக்கும் உண்டு. எனவே மாநில அரசும், மையஅரசும் போட்டியிட்டுச் செயற்பட்டு தமிழ் வளர்ச்சிப் பணிகள் சிறந்தோங்கச் செய்தல்வேண்டும்.

சரியான தமிழ்ச் சொற்கள் கிடைக்கவில்லை என்னும் போலி வாதத்தை முறியடிக்க, வல்லுநர்குழு ஒன்று உடனடியாக நிறுவப்படுதல் வேண்டும். மிகச் சிறந்த அறிஞர்கள், ஆட்சித் துறையில் பழுத்த அனுபவமுடையோர் ஆகியோர் இந்தக் குழுவில் இடம்பெறுதல் வேண்டும். இவர்களை முழுநேரப் பணியாளர் களாக அமர்த்துதல் மிகவும் அவசியம். எந்தச் சொல்லிற்குத் தமிழ் தெரிய வில்லையோ அந்தச் சொல் தொலைபேசி மூலம் வல்லுநர் குழுவிற்குத் தெரி விக்கப்பட்டு அப்போதே, அதே தருணத்தில், பொருத்தமான சொல்லைத் தொலை பேசி மூலம் பெற்றுக் கொள்ளவேண்டும். இந்த ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டால், காலதாமதங்களுக்குக் காரணம் காட்டுதல் இயலாததாகிவிடும். இன்னொரு பரிந்துரையும் செய்ய விரும்புகிறேன். வேடிக்கையாக நான் சொல்லவில்லை. பெருங்கவலையோடு பேசுகிறேன். ஆட்சிமொழி காட்சிமொழியாக இல்லாமல் மாட்சி மொழியாக மக்கள் மடிகளிலே தவழவேண்டுமென்பது நம் பேராவல். தமிழ்த் திட்டம் எல்லா மட்டங்களிலும் வெற்றி பெற ஒரே ஒரு அறிவிப்பு தேவையாகும். எல்லாக் கோப்புகளையும் தமிழில் எழுதும் அரசு அலுவலர்கள் அனைவருக்கும் ஒரு கூடுதல் சம்பள ஏற்றம் (Advance increment) கொடுக்கப் படும் என அரசு அறிவிக்க வேண்டும். இந்த நடவடிக்கை மூலம் மின்னல் வேகச் செயலாக்கம் மிளிருமென்பது திண்ணம்.

# எழுத்தறியார் தமிழில் யாப்பிலக்கண அமைப்புகள்

புலவர் இரா. திருமுருகன்
புதுச்சேரி

''தொடையும் சீரும் செயற்கையானவை; பாடலுக்குப் புறம்பான சேர்க்கைகள்'' என்பது பிளிண்டு என்னும் மேனுட்டுப் பாவலர் கருத்து. இந்தக் கருத்துத் தமிழ் யாப்புக்கும் பொருந்தும் என்று கொள்ளும் தமிழர்களும் உள்ளனர். இதன் வன்மை மென்மைகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

இந்த ஆய்வுக்குரிய களங்களாக யான் தேர்ந்து கொண்டவை எழுத் தறியாத் தமிழ் மக்களின் பேச்சு வழக்கில் இடம் பெறும் இணை மொழிகள் (Words in Pairs) தொடர்மொழிகள் (Idioms) பழமொழிகள், விடுகதைகள், நாட்டுப்புறப்பாடல்கள் ஆகியன. நாட்டுபுறப்பாடல்களிற் பெரும்பாலன புதுச்சேரி வட்டாரத்தில் தொகுக்கப் பெற்றவை.

யான் எடுத்துக் கொண்டவை எழுத்தறியார் தம் வழக்குகளே என்று நம்புகிறேன். இவற்றில் படித்தவர் படைப்புகளும் கலந்து விட்டிருக்கக்கூடும். படிக்காதவர் வழக்கும், படித்தவர் வழக்கும் பலவிடங்களில் ஒத்திருக்கலாம். அதனுல் ஒரு வடிவம் இவ்விருவகையாரில் யாருடைய படைப்பு என்று இனங் கண்டு கொள்வது அரிய செயலே. எனினும் படிக்காத மக்களின் படைப்புகளை அறிந்து கொள்ள நமக்குச் சில தடயங்கள் கிடைக்காமலில்லை. அவை ஓரளவு இப்பாகுபாட்டுக்குத் துணை செய்கின்றன. 'வெரை ஒண்ணு போட்டா சொரை ஒண்ணு காய்க்குமா?' என்னும் பழமொழியில் விதை என்பதற்குப் பதில் வெரை என்னும் பேச்சு வடிவம் இடம் பெற்றுள்ளது. அதனுல்தான் வெரை — சொரை என்று ஒலி ஒன்றுகிறது. 'புள்ளேய சாக்கிட்டுப் பூதம் முழுங்கிச்சாம்' — படித்தவர் இதை உருவாக்கியிருக்க முடியாது. அவர் புள்ளை என்ற பேச்சு வடிவத்தைப் பயன்படுத்த மாட்டார். பிள்ளை என்ற வடிவத்தையே பயன்படுத்துவார். அப்படி அமைந்தால் பிள்ளை — பூதம் என்ற சொற்களிடையே ஒலியொற்றுமை இராது.

'வாழற ஊட்டுக்கு ஒரு பொண்ணும் வைக்கப்போருக்கு ஒரு கண்ணும்' — இதில் கற்றவர் கைவண்ணம் இருந்தால் பெண்ணும் என்றும் கன்றும் என்றும் சொற்கள் அமைந்து, பொண்ணும் — கண்ணும் என்ற ஒலி நயம் இல்லாமற் போகும். இங்குக் காட்டப் பெற்றவை போன்ற, எழுத்தறியாத் தன்மைகள் வெளிப்படும் எடுத்துக்காட்டுகளையே பெரும்பாலும் என் ஆய்வுக்காக எடுத்துக் கொண்டேன்.

**யாப்பிலக்கணக் கூறுகள்**

இத்தகைய வழக்குகளில், யாப்பிலக்கண நூல்கள் பாகுபடுத்திக் கூறும் சீர், தளை, அடி, தொடை முதலிய பாட்டுறுப்புகள், பா, பாவினங்கள் ஆகிய வற்றின் இலக்கண அடிப்படைகள் தொட்ட விடமெல்லாம் செவியில் தட்டுப் படுகின்றன. எழுத்து அசைகளைப் பற்றி இங்கு ஆராய வேண்டுவதில்லை; அவை வழக்குக்கும் செய்யுளுக்கும் ஒரு தன்மையானவையே.

**சீர்**

யாப்பிலக்கணம், ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர்களையே சிறப்பாக வகுத்துரைக்கிறது. இலக்கிய வழக்கிலும் அருகிக் காணப்படும் நாலசைச்சீர், கல்லார் வழக்கிற் காண்பரிதாக உள்ளது.

**ஓரசைச் சீர்**

சில இடங்களில் மட்டுமே அமைந்துள்ளன.
'மருந்தும் விருந்தும் மூன்று நாள்' நேரசைச்சீர்.
'கிட்ட இருந்தா முட்டப் பகை' — நிரையசைச்சீர்.

**ஈரசைச் சீர்**

'ஆடிக் காத்தில அம்மியும் பறக்கும்'
'கோழி திருடியும் கூடக் கொலாவரு'

ஆடி, கோழி, கூட — தேமா. பறக்கும் — புளிமா. திருடியும், கொலாவரு — கருவிளம். காத்தில, அம்மியும் — கூவிளம்.

**மூவசைச் சீர்கள்:- காய்ச்சீர்**

'அக்காளுந் தங்கச்சியும் அக்கரைக்கிப் போவகுள
தக்காளிப் பழங்குடுத்து — குட்டி — கிளியாம்பா
தள்ளிகினுன் பள்ளத்திலே — போடு தனுக்கு'

அக்காளும் — தேமாங்காய், கிளியாம்பா — புளிமாங்காய், பழங்குடுத்து — கருவிளங்காய், தள்ளிகினுன் — கூவிளாங்காய்.

**கனிச் சீர்**

'மழை பேயுது மழை பேயுது நெல்ல வாருங்கோ
முக்காப்படி அரிசி போட்டு முறுக்கு சுத்துங்கோ
ஏரு ஓட்ற மாமனுக்கு எண்ணி வையுங்கோ
சும்மா இருக்கிற மாமனுக்குச் சூடு போடுங்கோ'

'அரிசிருக்குது பருப்பிருக்குது அடுப்பில்லாத சங்கடம்
காத்தடிக்குது தூள்பறக்குது கதவில்லாத சங்கடம்'

முக்காப்படி — தேமாங்கனி, மழைபேயுது — புளிமாங்கனி, அரிசிருக்குது — கருவிளங்கனி, காத்தடிக்குது — கூவிளங்கனி.

**தளை**

'தாயப் போலப்புள்ள நூலைப் போல சேல'
— நேர் ஒன்று ஆசிரியத்தளை.

'குருடனும் செவடனும் (கூத்துப் பாத்தாப்போல)
— நிரை ஒன்று ஆசிரியத்தளை.

'நத்த வவுத்தில முத்து பொறந்தது போல'
நத்த வவுத்தில — மாமுன் நிரை
வவுத்தில முத்து — விளமுன்நேர் இயற்சீர் வெண்டளை

'காடுவெட்டிக் கல்பொறுக்கிக் கம்புதெளே தான் வெரச்சி
— வெண்சீர் வெண்டளை.

'பதக்கு வரவரைச்சி பணியாரம் சுட்டுவச்சேன்'
வரவரைச்சி பணியாரம் — கலித்தளை
அரிசிருக்குது பருப்பிருக்குது — ஒன்றிய வஞ்சித்தளை
காத்தடிக்குது தூள்பறக்குது — ஒன்றாத வஞ்சித்தளை

அடி

'கைப்பட்டா கண்ணாடி' குறளடி
'அடியாத மாடு படியாது' — சிந்தடி
'கொண்ணா பாவம் திண்ணா தீரும்' — அளவடி
'அழற ஆம்பிளயையும் சிரிக்கிற பொம்பளயையும் நம்பாதே' — நெடிலடி.
'ஆட மாட்டாத் தேவடியா கூடம் கோணல் இன்னாளாம்' — கழிநெடிலடி.

**தொடை:- மோனை**

தொடைகளில் சிறந்தது மோனை. அதனால்தான் அது முதலில் வைத்து எண்ணப் பட்டது போலும். 'மோனை முத்தமிழ்' என்று ஒட்டக்கூத்தர் தமிழுக்கு மோனை என்னும் அடை கொடுத்துப்பாடியுள்ளார். ஓர் அடியில் பல இடங் களில் மோனை வருவது பழமொழிகளின் இயல்பாக உள்ளது. கம்பர் இவ் வியல்பை விருத்தத்தில் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளார். கம்பராமாயணத்தில் அடிதோறும் மூன்றுக்குக் குறையாத அடுக்கிய மோனை அமைந்துள்ள அடிகளே மிகுதி. யாப்பிலக்கணத்தில் மோனை இலக்கணமே சிறிது சிக்கலானது. எத்துணை பயின்றாலும் சிலர்க்கு அதில் தெளிவு ஏற்படுவதில்லை. முதலெழுத்து ஒன்றுவது மோனை என்று அதன் இலக்கணம் சுருக்கமாகச் சொல்லப்பட்டாலும் ஒன்றும் எழுத்துக்கள் யாவை என்பதை விரிவாக அறிந்து கொள்ள வேண்டும். உயிர்களில், அ ஆ ஐ ஔ என்பன ஓர் இனம் இ ஈ எ ஏ என்பன ஓர் இனம். உ ஊ ஒ ஓ என்பன ஓர் இனம். ஓர் இன எழுத்துக்கள் தமக்குள் ஒன்றுக்கொன்று மோனை யாக வரும். உயிர் மெய்களில் வந்த மெய்யே வந்தாலும், அவற்றின் மேல் ஏறிய உயிர் ஓர் இனமாயிருத்தல் வேண்டும். சகரத்துக்குத் தகரமும், மகரத்துக்கு வகரமும் நகரத்துக்கு ஞகரமும் கூட வரலாம்.

எழுத்தறியார் படைப்புகளில் மேற்கண்ட இலக்கணங்களிற் சிறிதும் பிழையாத சிறந்த மோனைகள் காணப்படுவது வியப்பைத் தருகிறது. சில வருமாறு:—

பூச்சி பொட்டு — பூ, பொ, வேலை வெட்டி — வே, வெ.
ஈயத்தப் பாத்து இளிச்சிதாம் பித்தளே — ஈ, இ.

42

ஆத்தில போற தண்ணி ஐயா குடி அம்மாகுடி — ஆ, ஐ, அ.
ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியை விரட்டிச்சாம் — ஒ, ஊ.

தலெக்கு மேல வெள்ளம் போவுது: சாண்போனு என்ன முழம் போனு என்ன? —த, சா

வவுத்தெரிச்சல் ஆம்படையானுக்கு மாலைக்கண்ணு பொண்டாட்டி–வ,மா
கத்திரிக்காய்க்கி கையுங் காலும் மொளச்சாப் போல — க, கா, கை, கா.
போரோட திண்ற மாட்டுக்குப் புடுங்கிப் போட்டா கட்டுமா? —போ, பு.

அளவடிகளில் வரும் சீர்த் தொடைகளே, இணே, பொழிப்பு, ஒரூஉ, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், கூழை, முற்று என்று இலக்கணம் பாகுபடுத்துகிறது. இவற்றுக்கும் எழுத்தறியார் தமிழில் எடுத்துக்காட்டுகள் தர முடியும். மோனே விகற்பங்களிற் சில வருமாறு.

பாத்தா பூனே பாஞ்சா புலி — பொழிப்பு மோனை
கந்தையானுலும் கசக்கிக் கட்டு — மேற்கதுவாய் மோனை
பழகப்பழகப் பாலும் புளிக்கும் — கூழை மோனை
படுக்கப் படுக்கப் பாயும் பகை — முற்று மோனே.
நொண்டிக்குதிரைக்கி சறுக்கினது சாக்கு — கடையிணே மோனை.

பின்வரும் நாட்டுப் பாடல்களில் மேற்கண்ட மோனை வகைகள் எவ்வாறு இன் புறுத்துகின்றன. பாருங்கள்.

'சாந்து அரைக்ககுள சன்னலால பாத்திருந்தான்
என்னுத்தான் மையிட்டானே — குட்டி — கிளியாம்பா
இழுத்தரைக்க மாளலியே — போடு தனுக்கு'.

'வீராம்பட்ணம் போவலாம் வெள்ளை இட்லி வாங்கலாம்
சவுக்கத் தோப்ப போவலாம் சமுத்துப் போட்டுந் துண்ணலாம்!

'மைலம் கொஞ்சம் போறேன் சாமி — ஏலாலம்படி ஏலம்.
மாட்டேன்னு சொல்லாதிங்க — ஏலாலம்படி ஏலம்
தேருபாக்க போறஞ்சாமி — ஏலாலம்படி ஏலம்'
தெரிஞ்சவங்க கூப்படறுங்க — ஏலாலம்படி ஏலம்'

'தாழம்பூச் சித்தாடை — எனக்குத் — தச்சி வரும் பாவாடை
தையல் பிரிஞ்சாலும் — எனக்கு — தாலி பிரியலாமோ'

'உப்பு போட்டு அடிக்கச் சொல்லுது — அதில
ஒரு கிளாசு போடச் சொல்லுது.
'சிஎடியைக் கண்ட ஒடனே — போயி — செடியின் கீழப் பதுங்கச்சொல்லுது

**எதுகை**

மோனேக்கு அடுத்தபடியாகச் செல்வாக்குப் பெறுவது எதுகை. இரண்டாம் எழுத்து ஒன்றுவது எதுகை என்றே பெரும்பாலான இலக்கண நூல்கள் கூறினுலும், முதலெழுத்தும் குறிலுக்குக் குறில் நெடிலுக்கு நெடில் என்று அளவு ஒத்து வர

வேண்டும் என்ற கட்டாயம் உண்டு. இரண்டாமெழுத்து ஒன்று மட்டும் ஒத்து வருவதை விட, முதலெழுத்து ஒழிய அச்சீரில் எத்தனை எழுத்துகள் ஒத்து வந்தாலும் அதற்கேற்றபடி ஒலிநயம் சிறப்பாக இருக்கும். முதலெழுத்தொழிய மற்றவை ஒன்றுவது எதுகை என்று தொல்காப்பியர் இதனைக் குறிப்பிடுகின்ருர். பல்காயனர், முதலெழுத்து அளவோடொத்துப் பிற எழுத்துகள் ஒன்றுவது என்று மிகத் தெளிவாகக் கூறுகின்ருர். இந்த நுட்பங்கள் அனைத்தும் எழுத்தறியார் தமிழில் எள்ளளவும் பிழையாமல் வருவதை, எக்கச் சக்கம், கோணல் மாணல், சாக்குப்போக்கு, சீட்டு நாட்டு, தில்லுமுல்லு, எதிரும்புதிரும் முதலிய இணை மொழிகளிற் காணலாம்.

சில இணைமொழிகள் எதுகையின்பம் நோக்கிச் சிதைந்து உருவாகியுள்ளன. வம்புதுன்பு என்பதில் துன்பு — தும்பு எனத்திரிந்து வருவது ஒலிச்சிறப்புக் கருதியே. ஆட்டம் பாட்டம் என்பதில் பாட்டு — பாட்டம் ஆனதும் அப்படியே. நல்லது என்பதற்குப் பொல்லாதது என்பதும் எதுகைதான். ஆனல் நல்லது என்பது போலப் பொல்லாதது என்பது எல்லா எழுத்தும் ஒத்து ஒலிக்க வில்லை; ஆதனல் அது 'பொல்லது' என்று திரிக்கப்பட்டு 'நல்லது பொல்லது' என்று பேசப்படுகிறது. இப்படி முதலெழுத்து ஒழியச் சீர் முழுவதும் ஒத்து வருவதைத் தலையாகு எதுகை என்பார்கள். அந்தச் சிறப்பும் பொதுமக்கள் தமிழில் உணரப்பட்டுள்ளது. சொல்வடிவத்தைச் சிதைத்தாவது ஒலியின்பம் நுகர விழையும் விழைவு இதில் வெளிப்படுகின்றது. அகல நிகளம் என்பதில் நீளம் — நிகளமானதற்குக் காரணம் இதுவே. நன்மை தின்மையும் இத்தகையதே. சில இடங்களில் இணையாக வரும் சொற்கள் இரண்டுமே எதுகை நயம் நோக்கி வடிவம் அறிய முடியாதபடி சிதைவது உண்டு. எதுகை மோனை என்பதை எந்தப்புலவரும் எதுகை நயத்துடன் சொல்ல முயன்றதில்லை. அவர்களின் செய்யுள் விகாரங்கள் என்னும் உரிமத்தைக் கூட இங்கே பயன் படுத்தவில்லை. ஆனல் படிக்காதவர் இவற்றை எதுகை நயத்துடன் கூறுகின்றனர். அதற்கேற்றபடி இரண்டு சொல்லையும் சிதைத்து 'எகனை மொகனை' என்கின்றனர். (இயைபு என்னும் தொடை நயமும் இதில் அமைந்து விட்டது) எதனையும் இணை மொழியாற் குறிப்பது மோனை எதுகைகளின் இன்பத்தைக் கருதியே. இவ்வுண்மையைப் பூச்சி பொட்டு, சொத்த சொள்ள, வேலை வெட்டி என்ற மோனைத் தொடர்களில் இரண்டாம் சொற்கள் பொருள் சிறவாதனவாக இருப்பதிலும், மிச்சம் மீதி என்பது கூறியது கூறலாக இருப்பதிலும் அறிந்து கொள்ளலாம்.

எக்கச்சக்கம், சம்பளம் கிம்பளம், வாட்டம் சாட்டம், வெள்ளையும் சள்ளையும், போக்கிரி சாக்கிரி ஆகிய தொடர்களில் இரண்டாம் சொற்கள் எதுகையின்பம் நோக்கி வந்த பொருள் சிறப்பற்ற சொற்களாய் உள்ளன. இத்தகைய தொடர்கள் முதற்சொற்கள் மட்டுமே கருத்தைக் கூற வந்ததாகவும் இரண்டாம் சொல் ஒலி நயம் குறித்து வந்ததாகவும் இருப்பதை ஊன்றி நோக்குதல்வேண்டும்.

**தலையாகு எதுகை**

'அழையாத ஊட்டுக்கு நொழையாத சம்பந்தி'
திடுக்கிண்ணு வாக்கப்பட்டு வெடுக்கிண்ணு அறுத்தாளாம்'
'அலையெப்ப ஓயறது தலையெப்ப முழுவறது'

எதுகை விகற்பங்கள்.

கேட்டை மூட்டை செவ்வாக் கெழமை — இணை எதுகை
பட்டும் பாழு நட்டுஞ் சாவி — பொழிப்பு எதுகை
புள்ள பல்லா கள்ளு வித்தான் — கூழை எதுகை
(ஏலேலம்படி ஏலம்)
காட்டில செத்தாலும் ஊட்டில தீட்டு — மேற்கதுவாய் எதுகை.
கெஞ்சினு மிஞ்சுவான் மிஞ்சினு கெஞ்சுவான் — முற்று எதுகை

**இன எதுகைகள் :-1. வல்லின எதுகை**

'தோட்டக்காரன் வாழ்வு காத்தடிச்சா போச்சி (ட்-த்)

**2. மெல்லின எதுகை :-**

'அண்ணன் தம்பிதான் சென்மப் பகை' (ண், ம், ன்)

**3. இடையின எதுகை :-**

'தாய்க்கு ஆவாத புள்ள ஊர்க்கு ஆவுமா' (ய், ர்)

**மூன்றுமெழுத்து ஒன்று எதுகை :-**

நரிக்கு நாட்டாமை குடுத்தா கெடைக்கு ரண்டு ஆடு கேக்கும்' (க்,க்)

**நெடிலெதுகை :-**

(இரண்டாமெழுத்தின் ஏறிய உயிர் நெடிலாயிருப்பது)

'தானு வர சீதேவியைக் காலால் எட்டி ஒதைக்காதே' (ஞ, லா)

**உயிரெதுகை :-**

(இரண்டாமெழுத்தின் மேல் ஏறிய உயிர் மட்டும் ஒன்றுயிருப்பது)

'மடியில கனம் இருந்தா வழியில பயம்' இ, இ)

**ஆசெதுகை :-**

முதலெழுத்துக்கும் இரண்டாமெழுத்துக்கும் இடையில் யரலழ என்னும் ஒற்று வருவது.

'கேப்பாரு மில்ல மேய்ப்பாரு மில்ல' — ய்
வாழ்வைத் தள்ளினுலும் சாவைத் தள்ளாதே' — ழ்

**வழியெதுகை :-**

(ஓர் எதுகை பல விடங்களில் வருவது)

'உண்டு ருசி கண்டவனும் பொண்டுருசி கண்டவனும் உடமாட்டான்'

**முரண் :-**

(எதிர் மொழியாக வரத் தொடுப்பது)

அல்லும் பகலும், தலேகால், ஏறக்கொறைய, 'சிறுதுளி பெரு வெள்ளம்'

'நிமிந்து போட்டதென்ன குனிஞ்சி எடுத்ததென்ன'
'நிண்ணு நெடுமரம் சாஞ்சா பனமரம்'
'பாம்பு பசிய நெனைக்கும் தேரை விதியை நெனைக்கும்'
'அக்கர மாட்டுக்கு இக்கர பச்சை'

**இயைபு :-**

இறுதி ஒத்து வரத் தொடுப்பது; சந்தப் பாடல்களுக்கு இதுஎதுகை மோனைகளைவிட மிகுதியாய்ப் பயன்படுகிறது.

'சொன்னு வெக்கம் அழுதா துக்கம்'
'மாமியார் ஒடச்சா மண் சட்டி மருமவ ஒடச்சா பொன் சட்டி'
'ஆரு ஊட்டு எழவோ பாய போட்டு அழவோ'
'அவளைத் தொடுவானேன் கவலைப் படுவானேன்'
'கருப்புச் சட்டக்காரன் காவலுக்குக் கெட்டிக்காரன்'
'தண்ணிக் கொளத்தில கிண்ணிமெதக்குது'
'ஆலிலை பழுப்பதேன்; ராவழி நடப்பதேன்'

மோனை எதுகை இயைபு முதலியவற்றின் அடிப்படை இயல்பு என்ன? அவற்றில், வந்த ஒலியே மீண்டும் மீண்டும் வருகின்றது. அது செவிக்கின்பம் தருகின்றது. சரிகமபதநி என்னும் ஏழு சுரங்களே திரும்பத் திரும்ப ஓர் ஒழுங்குடன் வந்து செவிக்கின்பம் தருவது தானே இசை?

**அந்தாதித்தொடை :-**

ஓரடியின் வரும் எழுத்து, அசை, சீர் இவற்றில் ஒன்று அடுத்த அடியின் முதலில் வருவது அந்தாதி எனப்படும்.

மதி நலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீபுல் பொற்புடை ஆசனம்

என்பதன் அமைப்பை,

''ஏணியிலே கேணி; கேணியிலே குண்டு';
குண்டு மேலே பில்லு; பில்லுக்குள்ள பூச்சி''

என்ற விடுகதையில் காணலாம்.

இனி மேற்கண்ட மோனை எதுகை முரண் இயைபு ஆகிய தொடைகள் ஒரே தொடரில் பலவாக அமைந்து ஒலி நயம் சிறப்ப வருவன சில காண்க:

தட்டுக் கெட்டுத் தடுமாறி (மோனை, எதுகை)
ஓதவாப் பழங்கலமே ஓசையில்லா வெங்கலமே (மோனை, இயைபு)

'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்'
(மோனை, எதுகை, இயைபு)

'கொழுத்தவனுக்கு கொள்ளு எளச்சவனுக்கு எள்ளு'
(மோனை, எதுகை, முரண், இயைபு)

**பா :-**

வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி என்று உருவான பாக்களின் அடிப்படைகள் மக்கள் தமிழிற் காணப்படுகின்றன.

**வெண்பா :-**

'தூங்காத தூங்காத தூங்கி மோசம் போவாதே
தேங்கா கடலசுண்டல் வாங்காத போவாதே'

என்பது போல் வருவன வெண்பா நடைக்கு முன்னேடி.

**ஆசிரியம் :-**

'ஊரு ஓட ஒக்க ஓடு
நாடு ஓட நடுவே ஓடு.'

இத்தகையன ஆசிரியப் பாவின் நடைக்கு முன்னேடி.

**கலி :-**

'கொளுத்தற வெய்யிலிலே கொணமுஞ்செத்த எறங்கலியா?

என்பன போன்றவற்றில் கலிப்பா நடையினைக் காணலாம்.

**தாழிசை :-**

கலிப்பாவின் உறுப்பாகத் தாழிசை வரும். அது பெரும்பாலும் ஒரு பொருள் மேல் மூன்றுக அடுக்கிப் பாடப்படும். இந்த அமைப்பு நாட்டுப் புறப் பாடல்களில், சிறப்பாக ஒப்பாரிகளில் பெருவாரியாகக் காணப்படுகிறது.

'குட்ட பனஞ்சோலை குயிலடையும் மண்டகமாம் — அங்க
கருத்தை வெட்டி நார் கிழிச்சா குயில் போனு எங்க அண்டும்!

மட்ட பனஞ்சோலை மயிலடையும் சத்தரங்க — அங்க
மட்ட வெட்டி நார்கிழிச்சா மயில் போனு எங்க அண்டும்?

'ஆக்கன சோறிருக்க அறிவுள்ள மாடிருக்க — எனக்கு
அரசன் சரியிருந்தா — நான் — ஆத்தா ஊடு ஏன் போறேன்
பொங்கன சோறிருக்க புத்தியுள்ள மாடிருக்க — எனக்கு
புருசன் சரியிருந்தா — நான் பொறந்த ஊடு ஏன் போறேன்.

சாலகட ஓரத்தில் — அட — சாந்துகினுகெடந்த பையா
சரக்கு இன்னு வாங்கித்தரேன் — அட
சங்க மாங்கி ஊட்ட வாடா
இட்லி கட ஓரத்தில — அட — இளிச்சிகினு கெடந்த பையா
இட்லி இன்னு வாங்கித்தரேன் — அட
இளிஞ்ச்ச வாயா ஊட்ட வாடா.

முறுக்குக்கட ஓரத்திலே — அட — முறுக்கிக்கினு கெடந்த பையா முறுக்கு இன்னு வாங்கித்தரேன் — அட முட்டுக்கட்ட ஊட்ட வாடா.

**முடுகியல் :-**

சில வகைக் கலிப்பாக்களில் முடுகியல் (அராகம்) என்ற உறுப்பு உண்டு. யரலழ ஒழியப் பிற ஒற்றெழுத்துப் பெருது, பெரும்பாலும் குறிலே பெற்றுக் 'கடகட' என்னும் ஓசையுடையதாய் வருவது முடுகியல்.

'தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
தழலென விரிவன பொழில்'

என்ற முடுகியலில்,

'ஓடற நரியில ஒரு நரி சிறு நரி
சிறு நரி முதுவில ஒருபுடி நர மயிர்'

என்ற சடுகுடுப் பாடலின் சாயலைக் காணலாம்.

'தாலி அரும்பெடுத்த தட்டானும் கண்குருடோ
சேலைக்கு நூலெடுத்த சேணியனும் கண்குருடோ
பஞ்சாங்கம் பாக்க வந்த பாப்பானும் கண்குருடோ
எழுதினவன் தான் குருடோ எழுத்தாணி கூர் இல்லையோ
கட்டின சேலை இன்னும் கசங்கி மடியலையே
வச்ச பூ இன்னும் வாசம் கொலையலியே
மஞ்சா கலையலியே வந்தசனம் போகலியே
பந்த பிரிக்கலியேவந்தசனம்போகலியே
கலியாணப் பானைகளும் கழுவிக் கவுக்கலியே
பணியாரம் சுட்ட சட்டிப் பாதி மணம் போவலியே'

என்ற ஒப்பாரியில் வெண்கலிப்பாவின் நடையைப் பார்க்கலாம்.

**வஞ்சி**

'வெட்டினதால் தப்பி விட்டேன்
வெட்டா விட்டா செத்திருப்பேன்,
செத்ததனுல் தப்பி விட்டேன்
சாவா விட்டா செத்திருப்பேன்
வந்ததனுல் வரவில்லை
வராவிட்டால் வந்திருப்பேன்'.

என்ற விடுகதையில் குறளடி வஞ்சிப்பாவின் குரல் கேட்கிறது.

**பாவினம்**

பாக்களை ஒரு புடை ஒத்து வருவன பாவினங்கள் எனப்படும். அவை, தாழிசை, துறை, விருத்தம் என மூவகைப்படும்.

**தாழிசை**

'அந்த அலறு மரம் ஆம்பளைங்க தூங்கு மரம்
ஆம்பளைங்க மூஞ்ச பாத்தா அழவாணி மல்லியப்பூ

இதில் குறட்டாழிசையின் அமைப்பு உள்ளது.

துறை

'முப்பதியா லேழு முத்துமுத்தா தண்ணி
முத்துமுத்தா தண்ணி மொத மடைக்கிப் பாயும்.

என்ற ஏற்றப்பாட்டில் வஞ்சித்துறையின் மணம் வீசுகிறது.

விருத்தம்

ஒய்யாரக் கொண்டையாம் தாழம் பூவு
உள்ளே இருக்குதாம்ஈரும் பேனும்.

என்ற பழமொழி,

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்

என்ற எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தின் அமைப்புக்கு முன்னோடி போல் அமைந்துள்ளது.

சந்தப் பாக்கள்

குறட்டாழிசைகள் பிற்காலத்தில் நடைகளிற் பெருகிச் சந்தப்பாக்களாக மாறியமைந்தன. பல்வகை நடைகளுக்கு அடிப்படையாக விளங்கும் சந்தப்பாக்களை நாட்டுப் பாடல்களிற் காணலாம்.

வெய்யில் ஒரைக்குதே மாமாவே — அட
வேர்வை தட்டுதே மாமாவே
கானல் ஒரைக்குதே மாமாவே — அட
காசு குடுத்துடேன் நாம் போறேன்.

சுண்ணம் இடிப்பார்தம் சுவை மிகுந்த இந்தப் பாடலின் சந்தத்தில் உலக்கை விழும் ஒலியைக் கேட்கலாம்.

தனிச் சொல்

ஓர் அடியின் முதலில் தனியே வருவது தனிச்சொல், அது இறுதியிலும் இடையிலும் கூட வருவதுண்டு என்பது இலக்கணம். இந்தப் பண்பைக் கூட மக்கள் தமிழில் காண முடிகிறது.

உன்னை — எலியை எடுக்கச் சொன்னாங்களா
தலையை எண்ணச் சொன்னாங்களா?

இதில் அடி முதலில் தனிச் சொல் வருகிறது.

'புள்ளை இல்லாத ஊட்ல — கெழவன் — துள்ளி வெளையாடறான்'

இதில் அடிக்கிடையில் தனிச் சொல் வருகிறது.

பின்வரும் நாட்டுப் பாடல்களில் மேற்கண்ட சீர், அடி, தொடையழகுகளும், சந்த நயமும் கொஞ்சிக் குலவுவதைப் பாடி உணரலாம்.

'பூமுடியேன் பொண்ணே — நாம்
புச்சேரிக்கிப் போவோம்

மாவிடியேன் பொண்ணே — நாம
மயிலத்துக்குப் போவோம்.

'அஞ்சி ஊட்டுக் கஞ்சித் தண்ணி தெகோலு — இப்ப
அறுத்துக்கிச்சான் கவுறுபாடி தெகோலு.

'ஆசைக்கி ஆப்பம் வாங்கி
அடிமடில கட்டி வச்சேன்.

புண்டந்துண்ணி பையஞல — எனக்கு
புட்டுத் துண்ண நேரமில்ல.

நேத்து சமஞ்சவளே
நெய்யுஞ் சோறுந் துண்ணவளே

கண்ணுடிதான் பாக்காதடி — பொண்ணே
கண்ணக்காட்டி கூப்புடுவான்.

காலு சட்ட போட்டவனே
காப்பித் தண்ணி வித்தவனே
இங்கிலீசு படிச்சவனே — நான்
இருக்கட்டுமா போவட்டுமா'

'தேர உட்டு கீழ குதிச்சான் — அர்ச்சுனராசன்
மோர உட்டு கூழ கரைச்சான்'

'பொரிஞ்ச மணல் மேலே பொணம் போற வீதியிலே

இந்தத் தொடையழகுகள் படிக்காத மக்களிடையே இயற்கையாகஎழுபவை என்று எப்படிச் சொல்ல முடியும்? படித்தவர் பாடல்களைக் கேட்டதன் தாக்கமாக ஏன் இருக்க கூடாது? என்று கேட்கலாம். இப்படியும் அமைவதுண்டு என்பதை ஒப்புக் கொள்ளலாம். இப்படித்தான் அமைந்தன என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது.

மொழி வரலாற்றைக் கூர்ந்து நோக்கினுல், ஓர் உண்மைப் புலப்படும். மக்கள் முதலில் தம் கருத்தை உணர்த்தப் பேச்சு மொழியையே உருவாக்கினுர்கள். அதிலே துணிமணி, நகை நட்டு முதலிய ஒலி ஒத்த இணைமொழிகள் முன்னதாக உருவாயின. இணை மொழிகளிற் சில 'நோயும் நொடியும் பாயும் படுக்கையும்' என்பது போல் நீண்டு தொடர் மொழிகளாக வளர்ச்சி பெற்றது, அடுத்தபடி நிலையாகும், பின்னர் நீண்ட பழமொழிகள் உருவாயின. பழமொழிகள் மேலும் நீண்டு சந்த அமைப்புடன் கூடிய பாட்டாகக் கூர்தல் (Evolution) பெற்றன. இதனைப் பாட்டாதல் (Poetised) என்று இலக்கிய ஆய்வாளர் கூறுகின்றனர்.

'நடைன்னு நடப்பளு வடைன்னு சுடுவளு
வந்த விருந்தாடிக்கி இந்தான்னு குடுப்பளு'

'ஒரு காசுக்கு எண்ணெ வாங்கி
ஒம்பது நாள் வெளக்கெரிச்சி
மீந்துபோன எண்ணெயில
மினுக்கு கொண்ட போட்டாளம்'.

'மானத்தை வில்லா வளைச்சவன் வேணுமா
மணலைக் கவுரு திரிச்சவன் வேணுமா'

என்பவற்றை இதற்குக் காட்டலாம். இவற்றில் பாட்டமைப்பு தலை காட்டு வதைப் பார்க்கலாம். படித்தறியா மக்கள் பாடி வந்த நாட்டுப்புறக் கதைப் பாடல்களே காப்பியங்களாக வளர்ந்தன என்பது எல்லா மொழியிலும் காணப் படும் உண்மை. யாப்பிலக்கண வளர்ச்சிக்கும் இது பொருந்தும்.

'மாயக்காரனம்மா — கிருஷ்ணன்
மகுடிக்காரனம்மா.

என்ற நாட்டுப் பாடலின் அமைப்பைப் பின்பற்றியே

'மாயச் சூதினுக்கே — ஐயன்
மனமிணங்கி விட்டான்'

என்ற பாஞ்சாலி சபதப் பகுதியைப் பாடியதாகப் பாரதியாரே கூறுகின்றார். 'தமிழுக்கு இலக்கணம் செய்யுமுன் தொல்காப்பியர், பேச்சு, இலக்கியம் ஆகிய இரு வழக்குகளையும் ஆராய்ந்தார்' என்கிறார் பனம்பாரனார். இதில் பேச்சு வழக்கை முதலிற் குறிப்பது அதன் முன்மையைக் குறிப்பால் உணர்த்துகிறது. தொல்காப்பியரும் உலக வழக்குக்கே உரிய குறிப்பு மொழி, பிசி, முதுசொல், முதலியவற்றின் இலக்கண அமைப்புகளைத் தம் நூலில் பாகுபாடு செய்கின்றார். பேச்சு மொழியில் உருவான அழகு அமைப்புகளே மக்களின் பாடல்களில் இடம் பெற்று, அவையே புலவர்களால் தெரிந்தெடுக்கப்பட்டு யாப்பிலக்கணமாகப் போற்றிக் கொள்ளப் பெற்றன என்பது எனது கருத்து.

சுருங்கக் கூறின் பேச்சுத் தமிழில் முந்தியது உரை, பிந்தியது பாட்டு, எழுத்துத் தமிழில் முந்தியது பாட்டு, பிந்தியது உரை. எனவே பேச்சுத் தமிழின் பாடல் வடிவத்திலிருந்து எழுத்துத் தமிழின் பாட்டு வடிவம் முகிழ்ந்து மலர்ந் திருக்கிறது.

அழகுணர்வு மிக்க எழுத்தறியா மக்களும் உள் நின்று எழும் உணர்வோடு, தமிழைக் கையாளும் போது தாமாக அமையும் ஒலி வடிவ அமைப்பே நாளடைவில் யாப்பிலக்கணமாகச் செப்பனிடப்பட்டது.

எனவே, தமிழ் யாப்பிலக்கணம், எழுத்தறியார் தம் இயல்பான வெளிப் பாட்டில் உள்ளது என்பது அறியப்படுவதால், அது பாட்டுக்குச் செயற்கையானது என்பதும் புறம்பானது என்பதும் தமிழுக்குப் பொருந்தவில்லை.

# இலக்கியத்தில் எதிர்ப்பியல்

முனைவர் சாலை இளந்திரையன்
தில்லிப் பல்கலைக்கழகம்

இயற்பியல், புனைவியல், நடப்பியல், திறனாய்வு நடப்பியல், பொதுமை நல (சோசலிச) நடப்பியல் எனப் பல நெறிகள் இலக்கியத்திலே பேசப்படுகின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் வரையறுத்த இலக்கணம் அமைக்கும் முயற்சியிலும் ஆய்வாளர்கள் ஈடுபட்டு வந்துள்ளார்கள்.[1] இவைகளுள் எதிலும் அடங்காத ஒரு போக்கு, தமிழ் இலக்கியத்தின் நீண்ட வரலாற்றில் ஊடுருவிக் கிடப்பதாகத் தோன்றுகிறது. ''எதிர்ப்பியல்'' என்று பெயர் சூட்டத் தக்கதான சில தன்மை களை வெளிப்படுத்தும் அந்தப் போக்கினைப் பற்றிச் சிந்திப்பதே இந்தக் குறிப்பின் நோக்கம்.

சங்க இலக்கியத்திலே வீரம், கொடை என்னும் இரண்டு பண்புகளும் நிரம்பியவனே சிறந்த தலைவனாக மதிக்கப்பட்டுள்ளான். அவை இரண்டுக்கும் ஏற்ற வாய்ப்புகளை உண்டாக்கிக் கொள்வதற்காகவே அந்நாளைய வேந்தரும் குறுநில மன்னரும் போர்களில் ஈடுபட்டு வந்துள்ளார்கள். குறுநில மன்னர் மற்றவர்களுக்குப் படைத்துணையாகி, அதற்காகக் கிடைத்த பொருளைக்கொண்டு வள்ளன்மை புரிந்ததாகவும் பேசப்படுகிறது.[2]

இந்தப் பின்னணியில், வழிவழியாகக் கிடைத்த செல்வமோ படை யெடுத்து அல்லது படைத்துணை சென்று பெற்ற செல்வமோ இல்லாத ஈர்ந்தூர் கிழான் தோயன்மாறன் என்பவனின் புதுமையான கொடைத்தன்மையை எடுத்துப் பேசுகிறது புறநானூறு.[3]

''நிரப்பாது கொடுக்கும் செல்வ(மு)ம் இலன்'' என்று அவனை அறிமுகப் படுத்தும் புலவர், ''பாண்பசிப் பகைஞன்'' என்று அவனுக்குச் சிறப்புப் பட்டமும் சூட்டுகின்றார். வாய்ப்பும் தலைமையும் உடையவர்களை ''இல்லோர் ஒக்கல் தலைவன்'' என்றும் ''பைதல் சுற்றத்துப் பசிப்பகை'' என்றும் ''பசிப்பிணி மருத்துவன்'' என்றும் பாராட்டிச் சிறப்பிக்கின்ற புறநானூறு,[4] நிரப்பாது கொடுக்கும் செல்வமோ போர் எடுத்துப் பொருள் திரட்டும் தலைமையோ இல்லாத ஒரு சாதாரண வீரனான தோயன்மாறனைப் ''பாண்பசிப் பகைஞன்'' என்று சிறப்பிக்கிறது. அதாவது, வாய்ப்புக்கள் உடைய பெருநிலையினருக்கு உரிய பெருமை எளிய நிலையில் உள்ளவனுக்கும் உண்டு என்று குரல் கொடுக்கிறது.

வாய்ப்பு உடையோர், மற்றவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்து வறுமை அடைந்து போனார்கள் என்று புறநானூறே சொல்லுகிறது.[5] ஆனால், தோயன்

மாறன் என்றைக்குமே செல்வம் உடையவனாக இருந்ததில்லை. ஆயினும் ''இல் லென மறுக்கும் சிறுமை'' அவனிடம் இல்லை என்று சொல்லும் போது, வாய்ப்பும் வசதியும் உடையவர்களின் மீது ஏற்றிச் சொல்லப்படும் சீரிய கொடையாண்மை அவை இல்லாதவரிடமும் உண்டு என்று (இந்தப் புலவர்) வலியுறுத்த முனைவது போலத் தோன்றுகிறது. அதனாலேயே இதனை, ஓர் எதிர்க்குரலாகக் கொள்ளத் தோன்றுகிறது.

மணிமேகலையில் வரும் ஆபுத்திரனைப் பற்றிய சித்திரமும் இத்தகைய தோர் எதிர்ப்பு உணர்ச்சியின் விளைவு என்றே தோன்றுகிறது.

மணிமேகலைக் கதையின்படி, ஆபுத்திரன், ஒழுக்கம் தவறிய ஒரு பார்ப் பனிக்குப் பிறந்தவன்; (''வாரணாசியோர் மாமறை முதல்வன், ஆரண உவாத்தி அரும்பெறல் மனைவி யான்; பார்ப்பார்க்கு ஒவ்வாப் பண்பின் ஒழுகிக், காப்புக் கடை கழிந்து கணவனை இழந்தேன்'' என்று அவளே சொல்வதாக வருகிறது.[6] பிறந்த உடனேயே பெற்ற தாயால் கைவிடப்பட்டவன்; ஏழுநாள் வரை ஒரு பசுவினாலேயே வளர்க்கப்பட்டவன்.[7] பின்னர், தன்னுடைய வளர்ப்புப் பெற் றோராலும் அவர்களைச் சேர்ந்த ஏனைய அந்தணர்களாலும், ''புலைமகன்'' என்று வெறுத்து விரட்டப்பட்டவன்.[8] ஆனாலும், தான் பிச்சை எடுத்துச் சேகரித்த உணவை, இயலாதவர்களுக்கு ஊட்டி மகிழும் இனியவனாக அவன் வளர்கிறான், இந்த எதிர் வளர்ச்சியை —

அய்யக் கடிஞை கையின் ஏந்தி,
மையறு சிறப்பின் மனைதொறும் மறுகி, —
'காணார், கேளார், கான்முடப் பட்டோர்,
பேணுநர் இல்லோர், பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருக' என்று இசைத்து, உடனூட்டி,
உண்டொழி மிச்சில் உண்டு, ஓடு தலைமடுத்துக்
கண்படை கொள்ளும் காவலன்

என்று[9] சித்திரிக்கிறது மணிமேகலை.

துன்பத்திற்கும் இகழ்ச்சிக்கும் ஊடேயே பிறர்க்குரியாளனாகவே வளர்ந்த ஆபுத்திரனுக்கும் வாழ்விலே சோதனை வருகிறது: இந்திரனே அவன் முன் தோன்றி, ''உனக்குப் பெரிய இன்பம் தருகிறேன், — இந்த ஈகையைக் கைவிடு'' என்று சொல்லுகிறான். அப்போதும், தனக்கு மட்டும் கிடைக்க இருந்த அந்தப் பெரிய இன்பத்தை மறுத்து, ஈகை அறத்தையே மேற்கொள்ளுகிறான் ஆபுத்திரன்.[10] இதனாலேயே, ''மாயிருஞாலத்து மன்னுயிர் ஓம்பும் ஆருயிர் முதல்வன்'' என்று அவன் குறிக்கப்படுகிறான்.[11]

''நறுந்தாது உண்டு, நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டு'' என்றும், ''கண்டோர் நெஞ்சம் கொண்டு அகம் புக்கு, பண்தேர் மொழியில் பயன் பல வாங்கி, வண்டின் துறக்கும் கொண்டி மகளிர்'' என்றும்[12] பழிக்கப் படுவோர் வரைவின் மகளிராகிய பரத்தையர். அவர்களின் குடியிலே பிறந்த மாதவி. இற்பிறப்பாட்டி போல் கற்புக்கடம் பூண்டு ஒழுகுகிற வரலாற்றைச் சிலப்பதிகாரம் பரக்கப் பேசுகிறது. இதுவும், குடிப்பிறப்புக்கே உரியவையாகச்

சொல்லப்பட்ட பெருங்குணங்கள் குடிப்பிறப்பு இல்லாரிடமும் உண்டு என்று வலியுறுத்தும் எதிர்க்குரலே.

பதினென்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான நான்மணிக்கடிகையில்,

கள்ளி வயிற்று இன் அகில் பிறக்கும், மான்வயிற்று
ஒள் அரிதாரம் பிறக்கும், பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும்;— அறிவார்யார்
நல்ஆள் பிறக்கும் குடி?

என்னும் குரல் கேட்கிறது.[13] ''அறிவார் யார் நல்ஆள் பிறக்கும் குடி?'' என்று இந்தப் பாட்டு எழுப்புகின்ற குரல், ''இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல் பாகச் செப்பமும் நாணும் ஒருங்கு'' என்னும் கருத்தை[14] மறுத்து எழுவது போலத் தோன்றுகிறது.

கல்வி அறிவு இல்லாதவர்கள் எப்போதாவது காட்டக் கூடிய அறிவு டைமை மிகச் சிறந்ததாக இருந்தாலும் கூட (கல்வி) அறிவுடையோர் அதனை ஏற்க மாட்டார்கள் என்கிறது குறள்.[15] புறக்கணிக்கப்பட்ட அல்லது வாய்ப்புகள் கிடைக்கப் பெறாத அவர்கள் வெளிப்படுத்தும் சீரிய அறிவாற்றலை, ''ஏரல் எழுத்துப் போல்வதோர் விழுக்காடு'' என்று சொல்லிப் புறமொதுக்குகிறது இடைக்கால உரையாசிரியரின் குரல்.[16]

கள்ளி வயிற்றில் பிறந்த அகில் மணம் உடையதல்லவா? — மான் வயிற்றில் பிறந்த அரிதாரம் சிறப்புக்கு உரியதல்லவா? — உப்பு நீர்க் கடலுள்ளே பிறந்த முத்து மதிப்புக்கு உரியது அல்லவா?'' என்றெல்லாம் கேள்விகளை எழுப்பும் நான்மணிக் கடிகையோ, வாய்ப்புகள் இல்லாத இடத்தில் உண்டாகும் சிறப்புகளும் அறிவுகளும் ஏற்கத் தக்கவைகளே என்கிறது; அப்படி எதிர்பாராத இடத்திலே தோன்றிய சிறப்புக்கு உரியவனை ''நல் ஆள்'' என்றும் குறிப்பிடுகிறது. அதன் மூலம், அத்தகையவனுக்குத் தரப்படும் பெருமையானது, ஒரு சலுகை என்ற அளவிலோ விதிவிலக்கு என்ற முறையிலோ கருதத் தக்கது அல்ல என்பதையும் இந்த நூல் வலியுறுத்துகிறது. (ஆபுத்திரன், மாதவி ஆகியோரின் சீரிய வாழ்க்கை இந்தக் கருத்தை வலியுறுத்தவே எழுதப்பட்டது போல அமைந்திருப்பதும் நோக்கத்தக்கது.) எனவேதான் இதனை எதிர்க்குரல் என்று கொள்ள வேண்டி யுள்ளது.

இந்த நூற்றுண்டுக்கு வரும்போது, இந்த எதிர்க்குரல் நெறியிலேயே ஒரு புதிய தெளிவு ஊடாடுகிறது.

பெண்களின் சார்பில் நின்று குரல்கொடுக்கும் சுப்பிரமணியக் கவிஞர், ''பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்''! என்கிறார்.[17] இந்தப் பாட்டிலே, ஓர் உம்மை, வேண்டுமென்றே விடப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும்: 'ஆண்களும் பெண்களுமான இந்த உலகில், கல்வியும் பிற பொறுப்புகளும் தராமலே பெண்கள் ஒதுக்கப்படுகிறார்கள். அவர்களும் கல்வி முதலியவற்றுக்கு உரியவர்களே' என்று விளக்க வேண்டிய கவிஞர், பெண்கள் மட்டுமே இவைகளை நடத்தத் தக்கவர்கள் என்று பொருள்

படும் படியாக ''(பாரினில்) பெண்கள் நடத்த வந்தோம்'' என்கிறார். வேறோர் இடத்தில் ''ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே'' என்று[18] அமைதிக்கு இறங்கும் கவிஞரின் குரல் இங்கே, பெண்கள் மட்டுமே பட்டங்களை ஆண்டு சட்டங்களைச் செய்யப் போவதாக எதிர் ஏறி ஒலிக்கிறது. அதாவது, ஆண்களாலேதான் இவைகளை நடத்த முடியும் என்ற சமுதாயப் பழங்குரலுக்கு எதிராக, — எந்தவிதமான காரண காரியத் தொடர்பும் காட்டாமலே, — பெண்கள்தான் நடத்த முடியும் என்று கிளர்ந்த எதிர்க்குரல் இது.

கனகசுப்புரத்தினப் புரட்சிக் கவிஞர் இந்த எதிர்க்குரலை இன்னும் வலிமையாக எழுப்புகிறார்.

மகளிரெலாம் அரசியலைக்
கைப்பற்றி ஆண்டால் —
மாநிலத்தில் போரில்லை
சாக்காடும் இல்லை![19]

ஆணும் பெண்ணும் இணைந்துதான் வாழ வேண்டும் என்பது மனித வாழ்வுக்குரிய இயல்பான நடைமுறை. அந்த நடைமுறை நீண்ட காலமாகவே குழம்பிக் கிடக்கிறது. (ஆளும் தன்மையாகிய) ஆண்மைத் தன்மை ஆடவனுக்கே உரியது என்றும் (மென்மையாகிய) விரும்பப்படும் தன்மையே பெண்ணுக்கு உரியது என்றும் பிரித்து, — பெண்ணுக்கு உரிய கல்வியும் பிற வாய்ப்புகளும் தராமல், அவளை (அடக்கி) ஆளும் உரிமையையும் ஆண்களுக்கே தந்திருந்தது சமுதாயம். அதன் விளைவாக, 'பெண்மக்களால் அரிய செயல்களை நிறைவேற்ற முடியாது என்கிற ஒரு தவறான முடிவுக்கும் சமுதாயம் வந்துவிட்டது. அந்த நிலையை மாற்றப் புறப்பட்ட இக்கவிஞர், ''ஆளும் தன்மை என்பது ஆண்களிடம் இல்லை,— அது பெண்களிடமே உண்டு'' என்று எதிர்க்குரல் கொடுக்கிறார்.

இந்த இரண்டு கவிஞர்களின் குரல்களைக் கேட்கிற போதுதான் முன்பு எழுந்த பல்வேறு எதிர்க்குரல்களுக்கும் கூட நமக்குப் பொருள் விளங்குகிறது. கொடையாண்மை, ஒழுக்கம், கல்வியறிவு என்பன போன்ற பொதுவான கோட்பாடுகள் சமுதாயத்தின் நலிந்த பகுதியினருக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்; அதனை எதிர்த்து நின்று சமாளிப்பதற்குத் தேவையான செல்வச் செல்வாக்கும், தலைமையும் இல்லாதவர்கள், — சமயம் நேர்ந்தபோது, தங்கள் எதிர்க்குரலைத் தோயன்மாறன், ஆபுத்திரன் போன்ற இலக்கியப் பாத்திரங்களாகவும் வேறுபட்ட கருத்தாகவும் எழுப்பியிருக்க வேண்டும். பெண்ணடிமைத் தனத்துக்கு எதிராக இந்த இரண்டு கவிஞர்கள் எழுப்பிய குரல், பழைய கவிஞர்கள் எழுப்பிய எதிர்க்குரலின் ஒரு தொடர்ச்சி என்றே தோன்றுகிறது.

இவைகளை எதிர்க்குரல்களாகக் கொண்டு, இலக்கியத்தில் எதிர்ப்பியல் என்னும் ஒரு நெறிக்கு இவை அடிகோலுவதாக நாம் கருதுவதற்குக் காரணம் உள்ளது: இலக்கியத்தில் எந்தக் கருத்தை எடுத்துரைப்பதானாலும், காரண காரியத் தொடர்போடு அதை நிலைநாட்ட வேண்டும். இங்கே நாம் பார்த்த முரண்பட்ட குரல்களுக்கு அத்தகைய காரணகாரியத் தொடர்பு எதுவும் காட்டப் படவில்லை. ''உன்னிடம் மட்டும்தான் உண்டா? — என்னிடமும்தான் உண்டு''!

என்கிற ஒரு தோரணையில், (வேறுவகையில் காட்டிக்கொள்ள முடியாத) தங்கள் எதிர்ப்பு உணர்ச்சியை மட்டுமே இந்த ஆசிரியர்கள் எழுப்புகிறார்கள். ஆகவே, மேலே நாம் சுட்டிக்காட்டிய இயற்பியல், நடப்பியல், திறனாய்வியல் முதலான எந்த நெறிக்குள்ளும் இது அடங்குவதாகத் தெரியவில்லை. அதனாலேயே இதை ''எதிர்ப்பியல்'' என்னும் புதிய பெயரிட்டு அழைக்கலாமோ என்று தோன்று கிறது. இந்த முன்னுரையுடன் இந்தக் கருத்தை, இலக்கிய ஆய்வில் ஈடுபட்டுள்ள அறிஞர்களின் பார்வைக்கு வைக்கிறேன்.

## மேற்கோள் குறிப்புகள்


1. Joseph, T. Shipley (Ed): Dictionary of world Literary Terms, London (1970), pp. 155; 210-11; 265-267; 281-82.
2. கபிலர்: (புறநானூறு) — 122: வீயாத் திருவின் விறல்கெழுதானை, மூவருள் ஒருவன் துப்பாகியர் என, ஏத்தினர் தரூஉம் கூழே நும்குடி, வாழ்த்தினர் வரூஉம் இரவல ரதுவே.
3. கே. எ. மா. மதுரைக்குமரனார்: (புறநானூறு) — 180
4. புறநானூறு: 95 — (இல்லோர் ஒக்கல் தலைவன்' — அதியமான்); 173 — (பசிப்பிணி மருத்துவன் ' — சிறுகுடி கிழான் பண்ணன்); 212 — ('பைதல் சுற்றத்துப் பசிப்பகை' — கோப்பெருஞ்சோழன்)
5. புறநானூறு: 127 — (ஈகை அரிய இழையணி மகளிரொடு சாயின்று என்ப ஆஅய் கோயில் )
6. சாத்தனார்: மணிமேகலை, 13: 78 — 81.
7. மேற்படி நூல், 13: 11 — 14.
8. மேற்படி நூல், 13: 91 (புல்லல் ஓம்பன்மின், புலைமகன் இவன்); 13: 100 — 101 (ஓதல் அந்தணர்க்கு ஒவ்வான் என்றே, தாதை பூதியும் தன்மனை கடிதர).
9. மேற்படி நூல், 13: 109 — 115.
10. மேற்படி நூல், 14: 30 — 48.
11. மேற்படி நூல், 14: 32 — 33.
12. மேற்படி நூல், 18: 19 — 20; 107 — 109.
13. பதினெண்கீழ்க்கணக்கு (மர்ரே பதிப்பு), சென்னை (1959), பக்கம் 227 (பாட்டு: 4).
14. குறள். 951.
15. குறள், 404 — (கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும், கொள்ளார் அறிவுடையார்.)
16. மேற்படிக் குறள் பரிமேலழகர் உரை.
17. பாரதியார் கவிதைகள் (அருணா பதிப்பு), மதுரை (1971), பக்கம் 178.
18. மேற்படி நூல், பக்கம் 60.
19. பாரதிதாசன்: குடும்பவிளக்கு — 2, சென்னை (1976), பக்கம் 116.

# வருங்காலவியல் கூறும் அறிவியல் தமிழ்வளர்ச்சி

கிருபாகரன் – ரமணி

மனிதன் தனது அறிவின் திறத்தால் வருங்காலத்தில் நிகழக்கூடிய சாதனைகளை எல்லாம் நிகழ்காலத்தில் கட்புலப்படுத்தி முயலும் அறிவியல் துறையே வருங்கால வியல் என்று கூறப்பெறும். இதுகாறும் தொடர்ந்து வந்துள்ள கடந்த கால வரை படத்தின் தொடர்ச்சியே வருங்காலம் என்று அமையாது, புதியபாதை களைத் தோற்றுவித்து, முற்றிலும் புதிதான வருங்காலத்தை – ஏன், பல புதிய வருங்காலங்களைக் கூட உருவகம் செய்து, அறிவியலுக்கு உகந்த அளவுகோல்களைக் கொண்டு, விரும்பிய வருங்காலத்தைக் கணித்துத் தேர்ந்து கொள்வதற்குரிய வழிமுறைகளை வகுக்கும் வகையிலேயே வருங்காலவியல் உருவாகிறது.

தேர்ந்தெடுக்கப்பெற்ற புதிய பாதையில் சிறந்த வருங்காலமொன்று கைகூடுவதற்கு எத்தகைய சீரிய சிக்கன முறையில் ஊக்கமும் ஆக்கமும் பயன் படுகின்றன என்பதற்கு உத்திகளும் விதிகளும் உள்ளன. எந்தெந்த அளவுகளுக்கு, எந்தெந்த ஆக்கச் சக்திகளைப் பயன்படுத்தி, எந்த நாளில் ஒரு குறிக்கோள் நிறை வேற வழியுண்டு, அந்தநாள் விரைந்து வந்து எய்த வேண்டுமானல் எத்தகைய உபாயங்களை மேற்கொள்ள வேண்டும் என்ற வகையில் அறிவியல் அடிப்படையில் அறுதியிட்ட ஒரு நம்பிக்கையோடு தெளிவு செய்ய முடியும்.

### அறிவியல் தமிழ்

அறிவியல் தமிழிற்கு ஓர் 'அந்தநாள்' – அறிவியல் தமிழிலேயே பயின்று, அறிவியல் தமிழிலேயே உயர்கல்வியும் கற்று, அறிவியல் தமிழிலேயே சிந்தித்து, புதிய கருத்துக்களை உருவாக்கி, அவற்றை உலகம் ஒப்ப வெளியிட்டு, அவ்வகையில் அறிவியல் தமிழும் உலகம் போற்றும் அறிவியலும் செழித்துத் தழைக்கும் நாள் எப்போது வரும்? அந்த நாளை வருங்காலவியல் கணித்துக்கூறுமா? அறிவியல் தமிழின் வருங்காலத்தைக் கருதுவதற்கு முன்னர், பொதுவாக, அறிவியலின் வருங்காலம் பற்றி எண்ணுவது ஏற்புடைத்தாகும்.

### வருங்காலவியலாளர்கள்

ஃபாண்டியரி என்பவர் அறிவியல் நம்பிக்கைப்பேரவாவினுல் உந்தப்பட்டு நம்பிக்கையின் இமயத்தில் இருப்பவர் (Ultimate Technological optimist) என்று போற்றப்பெறுகிறர். அவர் மரணத்தையும் அறிவியல் வழியில் வெற்றி கொள்ள லாம் என்ற நம்பிக்கை உடையவர்.

மாருக, எல்லாம் அழிவில் முடிவுபெறும். அறிவியல் வழியிலேயே மடிந்தொழியும் என்பது மேற்கூறப்பட்ட கருத்திற்கு முற்றிலும் மாறுபட்ட,

முற்றிய விரக்தி நிலையினைக் (Terminal Pessimism) குறிப்பதாகும். இக்கருத்தினை வலியுறுத்துபவர் பால் எல்ரிச் ஆவர்.

இவ்விரு சிந்தனையாளர்களுக்குமிடையே இடைவெளி அதிகம். அத்துறையில் ஹெர்மன்கான், மெடோஸ், காயா, மெசரோவிக், சேத்தி, ஹெயில்ப்ரானர் முதலிய அறிவியலாளர்களின் கருத்தோவியங்களைப் பார்க்கலாம்.

பொதுவாகக் கூறுமிடத்து, உலக உயிரினச் சூழ்நிலையில் நால்வகையான கண்டங்கள் (Fourfold Crisis) தோன்றியுள்ளன என்பது பெரும்பாலான வருங்காலவியலாளர்கள் ஒப்பக்கூறும் கருத்தாகும். இதனைப் படம் 1 இல் காணலாம். இனி, பாண்டியரி கூறும் கோட்பாடுகளின் அடிப்படையில் வரையப் பெற்ற சில எல்லைக் கோடுகளைப்படம் 2ல் காணலாம்.

சில வருங்காலவியலாளர்கள் விடுத்துள்ள எச்சரிக்கைகளைப்படம் 3, 4ல் பார்க்கலாம்.

மேலும், அனைத்துவருங்கால வியலாளர்களும் வாதிட்டுவரும் உலகஉரு வகங்களை (Conserver Society Models, CSO 1, 2, 3) படம் 5 கூறும்.

சிவா உருவகங்கள் என்று கூறும் போது சைவசித்தாந்தம் நமது நினைவில் எழுவது இயற்கையேயாகும். இவை எல்லாம் வருங்கால வியல் கூறும் சிக்கன வாழ்வின் மாதிரிக்காட்சிகள் என்று கூறுதல் மிகையாகாது.

இவற்றைச் சைவசித்தாந்தக் கருத்துக்களோடு தொடர்பு படுத்தி வருங்காலத்தில் யாரேனும் விளக்கம் அளிக்கமுற்படுவது வியப்பளிக்காது. சைவசித்தாந்தம் தானே இந்திய சிந்தனைகளின், உணர்வுகளின் சிகரம், இந்தியத்தத்துவ ஞானத்தின் இமயம் என்றெல்லாம் உலக அறிஞர்கள் போற்றியது, அச்சித்தாந்தத்தைப் படைத்த தமிழ் இன்னும் எத்துணை அறிவியல் கோட்பாடுகளை உலகிற்கு அளிக்கக் கூடும் என்ற சிந்தனையை உருவாக்கும் இந்த சிவா உருவகங்கள் நமக்குத் துணை செய்யும் என்று நம்பலாம்.

**நாவலர் பாரதியார் கருத்து**

தாய்மொழியில் உயர்தரக் கல்விபற்றிப் பேசும்போது நாவலர் சோமசுந்தர பாரதியார் கூறியுள்ள கருத்துக்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்:

1. ஓரிரு நூற்றாண்டுகளுக்குமுன், பாரிலேயே ஆங்கிலப் பயிற்சி குறைவாக இருந்தது. பிறகு அரசியல் நோக்கமும் பொருள், தொழில் ஆக்கமும் ஆங்கிலப் பயிற்சியால் ஓங்கிய நிலையில் தாய்மொழி வளர்ச்சி தேய்ந்தது. 2. தாய் மொழியிலேயே எத்தரக் கல்வியும் எவர்க்கும் தரலாம். நாட்டுமக்கள் புத்தறிவு எய்தாக் கேட்டினை எளிதில்போக்கலாம். 3. கல்விக்கு அயல்நாடு செல்லும் இளைஞரின் அல்லலை ஒழிக்கவேண்டும். 4. ஏழை இந்தியரின் வாழ்வு உயர, அஞ்ஞானப் பழி அகல, நம்மவர் விஞ்ஞான உலகில் விழுப்புகழ் எய்த, உழவும் தொழிலும் வளம் பெற, நாளும் வணிகம் வளர, செல்வம் தழைக்க, பண்டைப் பெருமை பத்து மடங்காக — தாய்மொழியிலேயே கல்வி. 5. தாய்மொழியில் பயில்வதால் தெளிவும் திட்பமும் ஏற்படுகிறது. பிறிதொரு மொழியில் அறிவு

பெறவேண்டில் தாய்மொழிப் பயிற்சிக்குறையும், பிறமொழிக் கல்வியும் பெருகி வளராது. 6. எந்த நாட்டிலும், எக்காலத்திலும், எல்லோரிடையும் அவரவர் தாய்மொழிக் கல்வியே தழையக் காண்கிறோம். 7. தமிழில் புதுக்கலைச் சொற்கள் போதுமளவு இடம்பெற ஆங்கிலச் சொற்களை அப்படியே எடுத்தாளத் துணிந் தால் அம்மொழியறிவே வளருவதன்றித் தமிழ்மொழி வளமும் வளர்ச்சியும் குன்றும். 8. பிறமொழிச் சொற்களை எடுத்தாளுகையில் தமிழ் எழுத்தியல்பு, மொழிமரபு எதுவும் பிறழவிடாமல் மாற்றி வழங்கலாம். மொழியியல் மரபோடு முழுவதும் முரணுகும் எழுத்தையும் சொல்லையும் புகுத்துதல் வழுவாகும், அப்படிச் செய்வது தமிழை வதைத்தொரு புதுமொழி படைப்பதாகும். தமிழ் மொழியின் தகவு கெடாமல் புதிய சொற்களைப் புகுத்துதல் வேண்டும். 9. தமிழி லேயே அவ்வக்கலைக்குச் செவ்விய நூல்கள் இயற்றப்படவேண்டும். கலைச்சொல் வளம் பெருகவேண்டும். தரம்தரமாக இதம்பதமாக நூல்களைத் தமிழிலேயே இயற்றவேண்டும். மொழி வளமின்றி விழுமிய நூல்களை எழுத இயலாது, நூல்வளமில்லா மொழியில் கல்விச் சால்பு உயராது. 10. நூலறிவும் மதிநுட்பமும் சாலச்சிறந்த மேதைகள் நுனித்து ஆராய்ந்து தெளிந்த அரும்பொருள்பற்றி அவர் களைக் கொண்டு புதிய நூல்களை ஆக்குதல் வேண்டும். முன் அறியாத பொருள் களும் கருத்தும் எழுதுங்கால் தமிழிலேயே அதுவதற்குரிய புதிய சொற்களைப் படைத்தல்வேண்டும்.

இக்கருத்துக்களைக் கூர்ந்துநோக்கும் போது உயர்தரக் கல்வி தமிழில் இயலுமா என்ற ஐயம் நீங்குகிறது.; தமிழில் கூடாது என்று சொல்பவர்கள் யாருமிருக்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையும் பிறக்கிறது. நாவலர் சோமசுந்தர பாரதியாரவர்கள் தாம் கூறும் முறைகளை நாம் கையாண்டால் உயர்தரக் கல்விக்கு ஆங்கிலப் பயிற்சியை ஐயிரண்டாண்டில் அறவே விடலாம் என்கிறுர்,

அப்படிப் பத்து வருடங்களில் உலகில் யாரும் முன் அறியாத பொருள் களுக்கும் கருத்துக்களுக்கும் தமிழிலேயே பெயரிடும் உரிமை நமக்குக் கிடைத்து விடுமா என்பது வருங்காலவியலுக்கோர் கேள்வி. பொருள்களுக்கும், கருத்துக் களுக்கும், அநுபவங்களுக்கும் பெயரிட்டு வகைப்படுத்தி வார்த்தைகள் தேவை; எல்லாவற்றிற்கும் மேலாக இந்திரிய ஞானம், புலனறிவு, தத்துவ அறிவு, அறிவு ணர்ச்சி, சைதன்யம், புத்தி, மெய்யுணர்வு என்றெல்லாம் பாகுபடுத்தப்படும் ஒரு சக்தியை (Power of Perception) அனுபவிக்க வார்த்தைகள் வேண்டும். ''முதலில் பார்க்கிறோம், அப்புறம் பெயரிடுகிறோம், பிறகுதான் தெரிந்து கொள்ளு கிறோம்''. என்பது வால்ட்டர் ரிப்பன் கூறும் கருத்து ஆகும்.

உலகின் இயல்பை, யதார்த்தத்தை, சத்யத்தை — உவமையாக, குறிப்பாக, பாவனையாக, பிரதிமையாக, அச்சுப்பொழிப்பாக, ஒப்பனையாக, திருஷ்டாந்தமாகத் தெளிவாக்குவன வார்த்தைகள் என்று சொல்லுதல்பொருந் தும் நமக்குப் புலப்படும் மெய்ந்நிலையினை வெற்றிகொண்டு தெளிவுசெய்வதற்கு உரிய கருவி மொழியாகும். (Language is our Instrument for conquest and construction of Reality) என்று ஜாய்ஸ் ஹெர்ஸ்லர், ''மனித நாகரிகத்தில் மொழி யின்பங்கு'' என்ற தமது நூலில் கூறுகிறுர்.

ஆதியில் வார்த்தை (Logos) இருந்தது; அந்த வார்த்தை கடவுளுடன் இருந்தது; அந்த வார்த்தையே கடவுள் என்பது விவிலியம். நம் எண்ணங்களும் கற்பனைகளும் மனக்காட்சிகளும் அபிப்பிராயங்களும் வார்த்தைகளாக அவதாரம் செய்கின்றன, உடம்பெடுக்கின்றன.

மூளை சிந்திக்க, வார்த்தைகளைத் தேடுகிறது. வார்த்தைகள் இல்லாத போது மூளை வேலை செய்யாது. எண்ணங்களை வார்த்தைகளாக வெளியிட முடியாத சமயங்களில் துயரே மிகுவதாகும். வார்த்தைகள் இல்லையெனில் மனிதனின் எண்ணமும் சிந்தனையும் மப்பும் மந்தாரமும் நிறைந்து மூடுபனி மூடியிருக்கும்.

அழகான வண்ணத்துப்பூச்சி கண்ணில் பட்டதும் அது பறந்துவிடாதவாறு வலைபோட்டுப் பிடித்திழுத்துக் குண்டூசியால் குத்திவைத்துக் கொள்ளுவதைப் போல, பறந்துவரும்கருத்துக்களை நழுவி விடாதவாறு வார்த்தை என்னும் குண்டூசி கொண்டு உள்ளத்தில் ஆழமாகப் பதித்துவைத்துக் கொள்ளவேண்டும். சிந்திக்கும் மனம் தன்னுடனே வார்த்தைகள் வழியாக உரையாடல் செய்கிறது என்பது சாக்ரடீஸ் கருத்து ஆகும்.

''மனிதனின் அறிவுச் செல்வம், அதன் இலக்கும் எல்லையும்'' என்ற நூலில் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் கூறுகிறார்.: ''வார்த்தைகளின் பயன் என்னவென்றால் எண்ணத்தை எடுத்துரைப்பதற்காக மட்டுமன்று, அவற்றின் உதவியில்லாமல் தோன்ற முடியாத — ஜீவிக்க இயலாத — வாழ முடியாத — நிலைபெறாத — நினைவுகளை — கருத்துக்களை, மனோபாவங்களை சிந்தனைகளைத் தோற்றுவிக்கவும், ஜீவிக்கவும், வாழவைக்கவும் — நிலைபெறவும் கருவியாகப் பயன்படுவதே.''

சிந்தனை செய்யும் மனத்தவர் கையாளும் மொழி எந்த அளவுக்குத் தெளிவாகவும் கருத்தாழம் கொண்டதாகவும், விரிவானதாகவும் இருக்கிறதோ அந்த அளவுக்கே சிந்தனையும் பூரணமானதாக, நிறைவானதாக, தீர்மானமானதாக இருக்கமுடியும். படைக்கும் திறனென்பது, சிருஷ்டிக்கும் ஆற்றல் என்பது, ஆக்கும் சக்தியானது, உலகில் புதிய விதிவினைகளை தத்துவங்களை — இணைப்புகளை— பொருத்தங்களை — சூத்திரங்களை, மொழி அறிகுறிகளாக, இலஞ்சனங்களாக, பிரதிமைகளாக, அச்சுக்களாக, அடையாள வார்த்தைகளாக உற்பத்தி செய்வதேயாகும்.

தமிழில் இத்தகைய உற்பத்தி இன்று நடைபெறுகிறதா? வடமொழி அன்றிப் பிறமொழி எதுவும் எய்தப்பெறாத பழமையும் பெருமையும் மொழிநூல் முடிபும் இலக்கியவளமும் பெற்றது தமிழ்; காவியச் சுவையிலும் கவிமணிக்குவையிலும் உலகில் சிறந்தமொழி எதனோடும் ஒக்கவும் உயரவும் உரிமை பெற்றது தமிழ்; சைவசித்தாந்தம் கண்ட தமிழ், என்றெல்லாம் கூறிவருகிறோம், புது வார்த்தைகளை எந்த அளவுக்குப் படைத்துள்ளோம் படைக்கப்போகிறோம் என்று சிந்தித்துப் பார்க்கலாம்.

தமிழ் அறிவியல் அறிஞர்கள் — அறிவியல் தமிழறிஞர்கள் — தமது புதிய கண்டுபிடிப்புக்களை, விந்தையான படைப்புக்களை, புத்தம் புதிய தமிழ்ச்

சொற்களாகவே உலக அறிவியல் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யும் 'அந்தநாள்' எப்போது வரும்? ரிலெடிவிடி (Relativity) என்பதை ஒப்புமைத் தத்துவம், சார்புக் கொள்கை என்றெல்லாம் தமிழில் மொழி பெயர்த்து நாம் புரிந்துகொள் கிறோம். அறிவியல் தமிழறிஞர்கள் படைத்தளிக்கும் அறிவியல் கருத்துக்கள் தமிழுக்கே உரிய சொற்களாக உலக அறிவியல் பாடத்தில் புகுவது எப்போது? அறிவியல் தமிழால் தமிழிலக்கியமே, பொதுத் தமிழ் நடையே பொலிவு பெறும் நாள் எந்நாள்?

தமிழ் மக்கள் முயன்றால் ஐயிரண்டாண்டில் அது கைகூடும் என்கிறார் நாவலர் சோமசுந்தர பாரதியார்.

தமிழ் மக்கள் முயன்றால் அறிவியல்தமிழ் என்னும் புதுத்தமிழ் இந்த நூற்றாண்டிலேயே அமையும் — அது காரணமாக, கங்கை நடை, காவிரி நடை, தாமரை நடை, புலி நடை, புயல்நடை, கயல்நடை, மயில்நடை, அமைதி நடை என்பதுபோல அறிவியல் நடையும் உருவாகும் — என்கிறார் டாக்டர் திருஞான சம்பந்தம் அவர்கள்.

வருங்காலவியலின் விதிகள்படி திட்டமிட, சாதாரணமாகக் கணக்கி லெடுத்துக் கொள்ளப்படும் காலத்தின் அளவு இன்று முதல் சுமார், ஐம்பதாண்டுகள் வரையில் ஆகும். துணிகள், ஆடைகள் போன்ற நுகர் பொருள்களைத் தயாரிப் போர் மூன்று முதல் ஐந்து ஆண்டுகளுக்குத் திட்டம் தீட்டுகின்றனர்; மின்கருவிகள், இரசாயனத் தொழில், பிற தொழில் திட்டங்கள் இவற்றுக்கு ஐந்து வருடங்கள்; நாட்டு வளர்ச்சித் திட்டத்துக்கு 5 வருடங்கள்; பாதுகாப்புத்திட்டம், எண்ணை வளம், செய்திப் போக்குவரத்து, சமூகச் சீர்திருத்தங்கள் — இவற்றுக்குப் பத்து வருடங்கள். இது பொதுவான வழக்கு. தவிர எதிரதாக்காக்கும் கழகங்கள் (Lookout Institutions) என்பன, பொதுவாக அடுத்த ஐம்பது ஆண்டுகளில் நிகழக் கூடியவை பற்றி ஆய்வு செய்கின்றன. இத்தகைய ஆராய்ச்சி இன்றைய சூழ்நிலையில் மூன்று திசைகளில் நடக்கிறது. அவைகளை அகம் (Subjective), புறம் (Objective), ஆகமம் (Systemic) என்று கூறலாம். அவற்றுக்கேற்ற கணித அமைப்புக்கள் உருவாகி வந்துள்ளன. அகம், புறம், ஆகமம் என்ற மூன்று திசைகளிலும் நல்லபயன் தரும் ஒரு உத்தியானது டெல்ஃபி (Delphi), என்ற அறிஞர் திருவாக்கு ஆகிறது. டெல்ஃபி அருள்வாக்கைப்பற்றி நாம் சரித்திரத்தில் படித்திருக்கிறோம். டெல்ஃபி என்பது ஒரு பழங்கால கிரேக்க நகரம். அப்போலோ கோயில் கொண்ட இடம். மனிதன் கேட்கும் கேள்விகளுக்கு அங்குத் தேவதைகள் விடையளிப்பார்களாம். இன்று டெல்ஃபிப் பயிற்சி மூலம் நாம் அறிவதனை அத்தகைய அருள்வாக்கு என்று கூறுதல் மிகையாகாது. இந்தப்பயிற்சியில் அறிஞர்கள் கூட்டமாகப் பங்குகொண்டு, ஒருவரையொருவர் தெரிந்துகொள்ளாமலேயே ஒவ்வொருவரும் தம்முடைய இயற் கையறிவிலும் சுயவுணர்விலும் தோன்றும் கருத்துக்களைச் செம்மைப்படுத்தித் தெளிவாக்கிக் கொள்ளுகிறார்கள். இதில் மிக முக்கியமான தன்மை என்ன வென்றால், அறிஞரிடையே கருத்தொருமிப்பு ஏற்பட முயற்சி செய்வதேயாகும். அவர்கள் கூட்டாக ஏற்கும் உண்மைப்பொருளை, விடையை, நிர்விகற்பக்காட்சி யாக (Collective Intuitive knowledge) உலகுக்கு அளிக்கிறார்கள்.

ஒலாப் ஹெல்மர் முதன்முதலில் கையாண்ட இந்த முறை தற்போது மிகவும் வளர்ச்சியடைந்து, புது மாறுதல்களோடு பலப்பல திட்டங்களில் பயன் படுத்தப்பட்டு வருகிறது. அறிஞர்கள் நேருக்குநேர் சந்தித்து விவாதித்தால், பேச்சுத்திறமை, வயது, அந்தஸ்து போன்றவற்றிலுள்ள வேறுபாடுகள் காரண மாக அவருள் பலர் தம் கருத்தைத் தெளிவாகச் சொல்ல முடிவதில்லை, அல்லது வேண்டுமென்றே சொல்லாமலு மிருந்துவிடுகின்றனர்; பிரச்சினைகளைப்பற்றி தனிமையில் சிந்திக்கவோ, விரும்பிய நூல்களையும் அறிஞர்களையும் கலந் தாலோசிக்கவோ, வாய்ப்பில்லாமலும் போகிறது; அல்லது தம்கருத்தை மறுப் பார்கள், நகையாடுவார்கள் என்ற அச்சமும் சிலசமயம் நம்மை வாயடைத்துப் போக வைக்கலாம். இவற்றிற்கெல்லாம் மாருக, இந்த டெல்ஃபி முறையில், மற்றவருடைய கருத்துக்களை மீண்டும் மீண்டும் கேட்டு, பிறகு எந்தத் தடங்கலு மின்றித் தம்முடைய முடிவான கருத்துக்களை — ஒரு முறை இருமுறையல்ல — தேவைப்பட்டால் ஆறுமுறைவரை — திரும்பத்திரும்ப ஆய்ந்து தமது முடிவான முடிவைச் சொல்ல வாய்ப்பு ஏற்படுகிறது. பல்வேறு துறைகளில் பணியாற்றும் அறிஞர்களிடையே கருத்துப்பரிமாற்றம் நடப்பதால் பிரச்சினைகள் பலப்பல கோணங்களில் ஆய்வுக்குப் புலப்படுகின்றன. இந்த டெல்ஃபிப் பரிவர்த்தனை யில் தெளிவான அறிவியல் சக்தியொன்று செயல்படுகிறது, அந்த நிகழ்ச்சியும் கருத்தொருமிப்பும் அறிவியலுக்குகந்த அளவுகோலால் அளவிடமுடியும் என்பது வருங்காலவியலின் கோட்பாடு.

**ஒரு வினுத்தாள்**

இத்தகைய ஒரு முயற்சியின் ஆரம்பம் இக்கட்டுரையோடு இணைக்கப் பட்டுள்ள வினுத்தாள். இதனே அறிஞர் பெருமக்கள் பூர்த்திசெய்து தந்ததும், விடைகளின் கூட்டமைப்பானது பயிற்சியில் பங்குகொள்ளும் அனைவருக்கும் தெரிவிக்கப்படுவதுடன், மீண்டும் அதே வினுக்கள் — அவசியமானுல் சிலபுதிய வினுக்களோடு அளிக்கப்படும். அப்படித்திரும்பத்திரும்ப மூன்று அல்லது நான்கு அல்லது ஐந்து முறை செய்தால் விடைகளில் முடிந்த அளவு கருத்தொருமைப்பாடு ஏற்படும். ஆறு முறை செய்து ஒருமைப்பாடு காணுவிட்டால் முயற்சி கைவிடுதற் குரியதொன்று ஆகும்.

படம்–1

## உலக உயிரினச் சூழ்நிலையில் நால்வகைக் கண்டங்கள்

1. மக்கள் தொகைப் பெருக்கம்

2. நச்சுப் பொருட்கள் பரவுதல்

3. ஆக்கப் பொருட்கள் விரைவாகக் குறைதல்

4. வளரும் குரோத மனப்பான்மை, போராயத்தம்

படம்-2

# வருங்காலவியலில் சில எல்லைக்கோடுகள்

| | | |
|---|---|---|
| 1990 கி.பி. | : | எரிபொருள் பற்றுக்குறை தீர்வு |
| 2000 | : | செயற்கையான புத்திக் கூர்மை |
| | : | பிற கோள்களில் குடியேறுதல் |
| 2010 | : | வாய்மொழியில்லாத உரையாடல் |
| 2015 | : | தட்பவெப்ப நிலைகள் கட்டுப்படுத்தப் படல் |
| 2035 | : | பிரபஞ்சத்தில் வேறு ''மனிதரோடு'' தொடர்பு கொள்ளல் |
| 2065 | : | சோதனைச் சாலையில் மனிதன் படைக்கப்படுதல் |
| 2080 | : | கம்ப்யூட்டரின் புத்திக் கூர்மை மனிதனை விஞ்சுகிறது. |
| 2095 | : | உலக மூளை; மரணம் வெல்லப்படுதல் |

படம்-3

# நிறைந்த பெட்ரோல் கொள்கலம் - ஆனால் காலியான வயிறு

| | | | | |
|---|---|---|---|---|
| | | | ஒரு வருட தானியம் | |
| ஒருவர் | 1. | உயிர் பிழைத்திருக்க | 180 | கிலோ |
| | 2. | செல்வச் செழிப்பில் | 700 | கிலோ |
| ஐரோப்பிய மோட்டார் வண்டி | | | 3000 | |
| அமெரிக்க மோட்டார் வண்டி | | | 7000 | |

படம்–4

## தொழில் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்கு வருங்காலவியலில் இரண்டு கேள்விகள்

1. முன்னேற்றப் பாதையில் பயணம் தொடராதவாறு பாலங்கள் தகர்க்கப் பட்டுள்ளனவா?

2. எல்லோரும் உயிர் வாழ இடமில்லை எனும்போது யார்தான் உயிர் வாழ்வது? ஊழிப்பெருவெள்ளம் வரும்போது உயிர்காக்கும் தோணியில் ஏற்றிக் கொள்ளப்படுவோர் யார்?

(LIFE BOAT ETHICS OF GARRETT HARDIN)

படம்–5

## ''சிவா'' உலக உருவங்கள்

சிவா 0 : தேவைகளைப் பெருக்கு, பிறகு பொருள் தேடு. திக்குத் தெரியாத பயணம். வளர்ச்சியில்லை வெறும் வீக்கம்.

சிவா 1 : குறைந்த செலவு, அதிக சாதனை. கார்ய சித்தி. சீரான வளர்ச்சி. பயனின் அளவு கருதாமல் நுகர்வது கைவிடல்.

சிவா 2 : இன்றைய வாழ்க்கைத் தரத்தையே இன்னம் குறைந்த செலவில் சமாளிப்பது. மேடுபள்ள மில்லாத வாழ்க்கை நலம். தேவைகள் அதிக மாவது, ஆலைகள் வளர்ச்சி, நகர்ப்புற வளர்ச்சி, எரிபொருள் சேதம் — தவிர்த்தல்.

சிவா 3 : புத்தன் காட்சியணி. செயற்கைத் தேவைகள், ஆலைத் தொழில்கள், நகர்ப் புறங்கள், படிப்படியாக மறைவது.

# தத்துவராயர் பாடிய புதுமைப் பிரபந்தங்கள்

டாக்டர் சு. வெங்கடராமன்
விரிவுரையாளர், தமிழ் மற்றும் இந்திய மொழிப்புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

புலவர் நாவில் பொருந்தி வளருந் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பான இடம் பெறுபவர் தத்துவராயர். பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவர் வாழ்ந்தவர். இவருடைய படைப்புக்களில் அடிநாதமாக வேதாந்தம் ஒலிக்கின்றது. இவர் படைத்த புதிய சிறுபிரபந்தங்கள் பற்றி ஆய்வது இக்கட்டுரையின் நோக்கம்.

சமயக்கவிஞரில் வேதாந்தம் பாடிய தத்துவராய சுவாமிகள் குறிப்பிடத்தக்க ஒருவர். இவருடைய காலத்தைப் பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று மு. அருணாசலம் கூறுவர். தத்துவராயர் முதன்முதலில் சங்கரரின் அத்துவைத வேதாந்தத்தைத் தமிழில் பாடிய அருளாளர். இவருக்கு முன்பு வேதாந்த நூல்கள் அனைத்தும் வடமொழியிலே எழுதப்பெற்றுவந்தன. சங்கரரின் வேதாந்தத்தைத் தமிழில் மிகுதியாகப் பாடியவரும் இவரே. இவருக்கு முன்னர் பட்டனாரின் பகவத்கிதை (தமிழ்), கண்ணுடைய வள்ளலின் பாடல்கள் சிவஞான வள்ளலின் பாடல்கள் என்பன இத்துறையைப் பாடின என்றாலும், தமிழில் தத்துவராயர் வழியாகவே வேதாந்தம் கால்கொண்டது. எனவேதான், ''தமிழ்மொழியில் வேதாந்த மார்க்கத்துக்கு மூலகர்த்தர் இவரே என்று சொல்லலாம். இவரளவு அந்த மார்க்கத்தைப் பரப்பியவர்கள் முன்னரும் இருந்ததில்லை பின்னரும் இருந்ததில்லை'' என்று இவரைப் பாராட்டுவர்.

சோழநாட்டில் வீரைமாநகரில் தத்துவராயர் பிறந்தார். இவருக்கு அம்மானாகிய சொரூபானந்தர் குருவாக அமைகிறார். சொரூபானந்தரின் குருவாகிய (தத்துவராயரின் குருவின் குரு) சிவப்பிரகாச சுவாமிகள் குருவிற்குக் குரு. எனவே, தத்துவராயரின் பாடல்கள் முழுவதிலும் இரு குருநாதர்களும் இடம் பெறுவர்.

**தத்துவராயர் படைத்தவை**

தத்துவராயர் பாடியவை அனைத்தும் அடங்கல்முறை, பாடுதுறை என்ற இரண்டில் அடங்கும். இவ்விரண்டும் தவிர, உலகிற்காக வேதாந்த மார்க்கத்தின் சாத்திரத்திற்குள்ளே சுவானுபூதிக்குப் பொருந்திய சாரமான செய்யுட்களைத் திரட்டிப் பெருந்திரட்டு, குறுந்திரட்டு என்ற இருநூல்களாகத் தொகுத்தார். மேலும், சிவப்பிரகாசவெண்பா, தத்துவாமிர்தம், ஈசுரகீதை, பிரமகீதை, ஆகியனவும் இவர் படைத்தவை. இந்நூல்கள் அனைத்திலும் சைவ-வைணவ பேதம் பாராட்டாது இரண்டையும் உள்ளடக்கிய புதிய மார்க்கத்தை வடமொழி

வேதாந்த மார்க்கத்தையொட்டித் தமிழில் நிறுவ அரும்பாடுபட்டிருக்கிறார் தத்துவராயர். மிக்க இலக்கியநயம் பொருந்திய திருத்தமான நடையில் இவர் பாடியுள்ளார்.

இவ்வளவு நூல்களைப் படைத்திட்ட இக்கவிஞரைப் பெரும்பாலான தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் கூறாது விடுத்துள்ளனர். பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் தொகைநூல்கள் பற்றிக் கூறுகையில் இவரைக் கூறுகிறார். டாக்டர் மு. வ. தம்முடைய 'தமிழ் இலக்கிய வரலாறு' நூலில் பொதுவாகத் தத்துவராயரைக் கூறி அவர் படைப்புக்களை விளக்குகின்றார். அத்துடன், தத்துவராயரின் 'பாடுதுறை' குறித்து விரிவாகத் தனியே ஒரு கட்டுரை எழுதியுள்ளார். தமிழ்ப்புலவர் வரலாறாகத் தமிழ் இலக்கிய வர லாற்றை நூற்றாண்டு முறையில் விரிவாக எழுதிவரும் தமிழ் அறிஞர் மு. அருணாசலம் விரிவாக இவரைப்பற்றி, 15-ஆம் நூற்ருண்டு தமிழ் இலக்கிய வரலாறு நூலில் கூறுகிறார். தமிழ் இலக்கிய வரலாறு நூலில் (ஆங்கிலத்தில் எழுதப்பெற்றது) பேராசிரியர் தெ. பொ. மீ. தத்துவராயரைக் குறிப்பிடுவார். பேராசிரியர் மு. அருணாசலம் அளவிற்குத் தத்துவராயரைத் தமிழில் வேறு யாரும் கூறவில்லை.

தத்துவராயரின் அடங்கல்முறை நூலில் 18 பிரபந்தங்கள் அடங்கி யுள்ளன. பாட்டியல் நூல்கள் கூறும் மரபில் இவை பாடப்பெற்றவை. எனினும் சிலவற்றில், பிரபந்த மரபிற்கு மாறுபட்ட போக்கும் உள்ளது. அத்தகைய, மரபுமீறிப் புதிய முறையில் அமைந்தவையும் பாடுதுறை நூலில் உள்ள புதுமை யான பிரபந்தங்களும் இவ் ஆய்வுக்கட்டுரைக்குப் பொருளாகின்றன. பாடுதுறை நூலில் 138 தலைப்புக்களில் 1140 பாடல்களும் உள்ளன. பக்திக் கவிஞர்கள் பாடிய அமைப்பில் சில பாடல்களும், அகப்பாடல் அமைப்பில் சமயத்தைப் பாடிய சில பாடல்களும், திருவாசக அமைப்பில் பல பாடல்களும் உள்ளன. இவை தவிர, எஞ்சியவற்றுள் பெரும்பாலானவை இவர் பாடிய புதுமைப்பிரபந்தங்கள். பாமரமக்களும் உயர்ந்த வேதாந்தக் கருத்துக்களை அறிந்து கொள்வதற்காகத் தத்துவராயர் பாடியவை புதியவகையிலான பிரபந்தங்கள். இவரளவிற்குப் பிரபந்தங்களில் புதிய வகைகளை வேறு யாரும் பாடவில்லை. மக்கள் மத்தியில் இருந்த நாட்டுப்புற இலக்கிய வடிவங்களை மிகுதியும் எடுத்தாண்டு புதிய பிரபந்தங்களாக இவர் தமிழிற்குத் தந்துள்ளார். வேதாந்தத்தைப் பரப்ப இத்தகு நாட்டுப்புற இலக்கிய வடிவங்கள் இவருக்குப் பெரிதும் கைகொடுத்தன. அவற்றைப் புதிய புதிய பிரபந்த வடிவங்களாகத் தத்துவராயர் படைத்துள்ளார். உயர்ந்த வேதாந்தக் கருத்துக்களை உள்ளடக்கமாக அமைத்து, நாட்டுப்புறப் பாடல்வடிவங்களில் பாடுகையில் கலப்பு வடிவமான கவிதைகள் புதிய பிரபந்தங் களாக வந்துள்ளன. இக்கருத்தே இக்கட்டுரையில் அடிப்படைச் செய்தியாக வலியுறுத்தப்படுகின்றது. எனவேதான், இவரைப் பற்றி எழுதிய இலக்கிய வரலாற்றாசிரியர்கள் டாக்டர் மு. வ. வும். பேராசிரியர் மு. அருணாசலமும் இவரைப் புதிய பிரபந்தமுறைகளை மிகுதியும் பாடிய கவிஞர் என்று போற்று கின்றனர்.

**தத்துவராயர் பாடிய சிறுபிரபந்தங்களில் (மரபிற்குட்பட்டவைகளில்) புதுமை**

**1. பிள்ளைத் திருநாமம்**

ஆண்டாள் பிள்ளைத்தமிழைப் போலவே, தத்துவராயர் பாடிய சொரூபானந்தர் பிள்ளைத்தமிழும் பருவந்தோறும் பாட்டுக்களின் எண்ணிக்கை மாறுபட்டுள்ளது. இந்நூலிற்குப் பிள்ளைத்திருநாமம் என்று பெயரிட்டுள்ளார்.

பருவத்திற்குப் பருவம் பாட்டுக்களின் எண்ணிக்கை மாறுபடுவதேன் என்ற வினாவிற்கு விடை கிடைக்கவில்லை. மரபிற்கு மாறுபட்டுப் புதிய அமைப்பில் பாடுவது தத்துவராயருக்குரிய தனித்தன்மை. பிள்ளைத் திருநாமம் என்று பெயரிட்டுள்ளமையும் புதுமை.

**2. சின்னப்பூ வெண்பா**

தசாங்கத்திற்குரிய பத்து உறுப்புக்களையும் கொண்டு வெண்பாவில் நூறானும் தொண்ணூறானும், எழுபதானும், ஐம்பதானும் பாடுவது சின்னப்பூ என்று பாட்டியல் கூறும். ஆயின், தத்துவராயர் இவ்வகை சிறுபிரபந்தத்தை, சொரூபானந்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நூறுபாடல்களில் வெண்பாயாப்பில் பாடி, சின்னப்பூவெண்பா என்று பெயரிட்டும் உள்ளார். சின்னப்பூ என்ற சிற்றிலக்கிய வகைக்கு எடுத்துக்காட்டாக அமைவது தத்துவராயரின் இது ஒன்றே என்பர்.

**3. உலா**

உலா பற்றிப் பாட்டியல் நூல்கள் இலக்கணம் கூறும். தத்துவராயர் பாடியுள்ளவை உலா, சிலேடையுலா ஆகிய இரண்டுமாகும். சிலேடையுலா என்ற அமைப்பு புதிய ஒன்று. பாட்டுடைத்தலைவர் சொரூபானந்தரே. இரு உலாக்களிலும் தொடக்கத்தில் குழகன் என்ற பகுதி புதிதாக உள்ளது. பாட்டுடைத் தலைவன் சிறப்பு பேசுவதே இதன் நோக்கமாக உள்ளது.

**4. பரணி**

அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி ஆகிய இரு பரணிகளைத் தத்துவராயர் பாடியுள்ளார். இவ்விரண்டிலும் சும்முலக்கை என்னும் புதிய பகுதி ஒன்று இடம்பெற்றுள்ளது.

முன்னமேயுள்ள இலக்கிய வகைகளைப் பாடுகையில்கூட தத்துவராயர் அவற்றில் பெயரிடுவதில், பாடல் எண்ணிக்கைகளை ஆள்வதில், புதிய வகையான ஒன்றைப் பாடுவதில், புதிய கூறுகளைப் புகுத்துவதில் ஆர்வங்காட்டியுள்ளார். மரபை மீறிப் புதியவற்றை அவர் மிகுதியாகப் பாடியுள்ளார். இலக்கிய வளர்ச்சியில் பழைய இலக்கியவகைகள் மறைந்து புதியன தோன்றுவதும், பழைய வகைகளுள் ஒன்று மற்றொன்றாக வளர்வதும் அடிப்படை நியதி என்பதைத் தத்துவராயரிடம் மிகுதியும் காணலாம். உயர்ந்த உள்ளடக்கமான வேதாந்தத்தைப் பாடுவதற்கு, சமயக் குரவர்களான நாயன்மார், ஆழ்வார் பாடல் போன்று மக்கள் இலக்கிய வடிவம், இசை, மரபு, அமைப்பு (யாப்பு) ஆகியவற்றை மிகுதியும் அவர் ஆண்டுள்ளார்.

### புதியதாகப் பாடிய சிறு பிரபந்தங்கள்

### 1. திருத்தாலாட்டு

தாலாட்டு என்னும் இலக்கியவகை பற்றி இலக்கணநூல்கள் கூறவில்லை. பிள்ளைத்தமிழில் இடம்பெறும் தாலப் பருவத்திலிருந்து மாறுபட்ட ஒன்று இது. பாட்டுடைத்தலைவனைப் புகழ்வதாக அமையும் இப்பாடல்கள் கண்ணிகளில் பாடப்படுகின்றன. பாடல் எண்ணிக்கை பற்றி வரையறை காணப்படவில்லை. தம் குருவாகிய சொரூபானந்தரைப் புகழ்ந்து பாடுவதாக 51 கண்ணிகளால் ஆன திருத்தாலாட்டு ஒன்றைத் தத்துவராயர் பாடியுள்ளார். எளிய சொற்களில், குருவணக்கமாக – சொரூபானத்தரைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்ட பாடலாக – அமைந்த இந்நூல் எளிய மக்கள் இலக்கிய வடிவில் அவர்தம் யாப்பில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இன்றும் தாழ்ந்த இனமக்கள் கண்ணிகளாகவே தாலாட்டுப் பாடல்களைப் பாடுகின்றனர். மேலும், நம்மாழ்வார் திருத்தாலாட்டு பாடல்களைத் திருவிழாநாட்களில் நம்மாழ்வாரின் முன்பு தாதர் என்னும் இனத்தவரே பாடுவதை இன்றும் ஆழ்வார் திருநகரி ஆலயத்தில் காணலாம். குருகூர்ப்பள்ளு நூலில் தாலாட்டு ஒன்று இடம் பெற்றுள்ளது. இதுவும் நம்மாழ்வாரைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டு பாடப்பட்டது. கண்ணிகளால் அமைந்த இத்தாலாட்டும் மேற்சொன்ன அமைப்பில் எளிய சொற்களால் ஆன அமைப்பில் 6 பாடல்களாக அமைந்துள்ளது. இவற்றால், எளிய மக்களின் இலக்கியமாக அவர்தம் யாப்பில் பாடப்பட்டுள்ளது சொரூபானந்தர் தாலாட்டு என்பதை அறியலாம். சிற்றம்பலநாடி தாலாட்டு, தத்துவராயர் பாடிய சொரூபானந்தர் திருத்தாலாட்டு சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய சிவஞான பாலய சுவாமிகள் மீது திருத்தாலாட்டு, சிதம்பரசுவாமிகள் பாடிய திருப்போரூர் முருகன் தாலாட்டு, உபயகவி அப்பா பாடிய சுவாமி நம்மாழ்வார் திருத்தாலாட்டு, கீதாசாரத்தாலாட்டு, என்பன சில தாலாட்டு நூற்கள்.

### 2. அமிர்தசாரம்

வெண்பா யாப்பில் 220 பாடல்களில் தத்துவராயர் பாடியவை. கலைக் கட்டளை, அநுபவக்கட்டளை இருபிரிவுகளுள் இப்பாடல்கள் அமைந்துள்ளன. முன்னதில் 191 பாடல்களும் பின்னதில் 29 பாடல்களும் உள்ளன. ஒருதனி நூலாக அமைந்துள்ள பாங்கு தத்துவராயரின் பிற இலக்கிய வகைகள் எவற்றிலும் காணப்படாத முறையில் இந்நூலில் உள்ளது. அதாவது, கடவுள் வணக்கம், அருளிறை வணக்கம், வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு, அறிஞருரைச்சிறப்பு, நூற்பெயர், அவையடக்கம் என்பவைகளால் ஆன முற்பகுதி உள்ளது. புலமை இலக்கியம் என்ற தன்மையில் இந்நூல் உள்ளது.

### 3. தொழில் அடிப்படையில் அமைந்த பிரபந்தங்கள்

தொழிலை அடிப்படையாகக் கொண்டு, தொழில் செய்யும்போது பாடப்படும் பிரபந்தங்களாகப் பல அமைகின்றன. இனத்தைக் குறிப்பனவாக அவை அமையினும்கூட, அவற்றைத் தொழிலுடன் தொடர்புபடுத்தியே தத்துவராயர் பாடுகின்றார். இத்தகு அமைப்பில் பாடுதுறையில் பதினாறு தலைப்புக்களில் பிரபந்தங்கள் உள்ளன. குறத்தி, தட்டான், தச்சன், ஆண்டார், பாம்பாட்டி, முதலியார், வண்ணான், அம்பட்டன், பிடாரம், தச்சாண்டி, செட்டியார்,

பறைச்சியும் பறையனும், பார்ப்பானும் பறைச்சியும், இருபிறப்பாளர், பூணுநூல், சிகை என்பன அவை. இப்பிரபந்தங்களின் பொதுவியல்புகள் என்று நோக்குமிடத்து, உள்ளீடாக அத்வைத வேதாந்தக் கருத்துக்கள் உடையனவாக உள்ளன. இத்தலைப்புக்கள் யாவும் குறியீடாக நின்று பொருளுணர்த்துகின்றன. இவற்றுடன் இறைவன் அல்லது குரு பாட்டுடைத்தலைவனாக அமைய, அவன் புகழ் பாடும் இவை. இப்பிரபந்தங்கள் அனைத்துமே ஒன்றிற்கு மேற்பட்ட பாடல்களை உடையன. உலக வழக்கில் காணப்படும் இனப்பெயர்களும் அவரவர்க்குரிய தொழிலும் கூறப்படினும் அவை குறியீடுகளாகின்றன. இவை அனைத்திலும் எளிய சொற்கள் பயின்று வருவதும் ஒரே சொல் மீண்டும் மீண்டும் வருவதுமான அமைப்பும் தொடர்ந்து காணப்படுகின்றன. நாட்டுப்புறவியற் கூறுகளான இவற்றை இவர் பிரபந்தங்கள் அனைத்திலும் காணலாம்.

அரும்பதஉரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் பிரபந்தம் என்பதைக் கூத்துடன் சார்த்திப் பேசுகின்றனர். ''அகக்கூத்திற்கு உருவான: கந்தமுதலாகப் பிரபந்தவுரு வீருக இருபத்தெட்டும்'' என்பது அரும்பத உரை. ''பிரபந்தம் என்றது அடிவரையின்றிப் பலதாளத்தாற் புணர்ப்பது'' என்பது அடியார்க்கு நல்லார் கூறும் விளக்கம். மேலும், அவரே, பல்வரிக்கூத்தின் விளக்கமாக நீண்ட மேற்கோள் பாடல் ஒன்றில் பலவகைப் பிரபந்தங்களைக் கூறுகிறார். இவர் கூறும் அப்பாடலில் வரும் பல்வகைக் கூத்திற்கும் உரிய பிரபந்தங்களை இலக்கண நூல்களோ பாட்டியல் நூல்களோ கூறவில்லை. இசையும் கூத்தும் கலந்த ஒன்றாகப் பிரபந்தத்தை இவர்கள் விளக்குவதை அடிப்படையாகக் கொண்டு காணின், நாட்டுப்புற இலக்கியக்கூறுகள் அடங்கிய, மக்களின் வாழ்வோடு ஒன்றிய இசையும் கூத்தும் கலந்த வடிவமாக அமைவது பிரபந்தம் என்ற பொருள்படும். இவ்விளக்கம் தத்துவராயர் பாடியவற்றிற்குப் பெரிதும் பொருந்தி வரக்காண்கிறோம். அடியார்க்கு நல்லார் கூறும் பல்வரிக் கூத்துக்களுக்கான பாடல்கள் அவர் காலத்திற்கு முன்னரும் அவர் காலத்திலும் இருந்திருக்க வேண்டும். மக்கள் வாய்மொழியாக வழங்கிய அவற்றை இலக்கியம் படைத்தோர் எடுத்துப்பாடினர். எனவே, மக்கள் தத்தம் தொழில் ஆற்றுகையிலும் விளையாட்டிலும் பாடப்பட்ட பல்வகைப் பிரபந்தங்கள் இவை. பாட்டியல் நூற்களும் இலக்கணநூற்களும் மிகுதியாகத் தோன்றிய இவற்றைக் கூறாது விடுத்துள்ளன. பாட்டியலார் பெரும்பாலும் தம் முன்னோர் கூறியவற்றை அப்படியே கூறினர்: அவற்றுடன்கூடத் தாம் வாழும் பகுதியில் தோன்றியவற்றையும் சேர்த்துக்கொண்டனர். ஆனால், நாட்டுப்புற இலக்கிய வடிவங்களாக அமைந்த பிரபந்தங்களின் வகைகளை அவற்றின் இலக்கணங்களை இவர்கள் கூறாது விடுத்துள்ள தன்மை வியப்பிற்குரியது.

தத்துவராயர் பாடியுள்ள புதிய பிரபந்தங்கள் யாவும் இத்தகு தன்மையில், பாட்டும் கூத்தும் கலந்து எளிய சொற்களில் நாட்டுப்புறவியற் கூறுகளை உள்ளடக்கி உள்ளன. அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் பல்வரிக்கூத்தில் பாம்பாட்டி என்று ஒன்றுள்ளது. தத்துவராயர் பாடிய பாடுதுறையில், பாம்பாட்டி இடம் பெற்றுள்ளது.* அடியார்க்கு நல்லார் கூறும் வகைக்குரிய பாடல் நமக்குக் கிட்ட

---

* தத்துவராயருக்குச் சமகாலத்தில் இருந்திருக்கக்கூடிய பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் இங்குக் கருதத்தக்கன – பதிப்பாசிரியர்

வில்லை. தொழில் அடிப்படையில் அமைந்த இப்பிரபந்தங்கள் யாவும் அத்வைத வேதாந்தத்தைப் பாட முற்பட்டதால், சமூகத்தில் காணப்படும் சாதிப்பாகுபாடு களை மறைமுகமாகச் சாடுகின்றன. இச்செய்தியில்கூட, பறைச்சியும் பறையனும், பார்ப்பானும் பறைச்சியும் ஆகிய இரண்டு மட்டுமே வேறுபட்டுள்ளன. வெளிப் படையாக இவை சாதியமைப்பைச் சாடுகின்றன. அத்துடன்கூட, இவை இரண்டும் இருவர்க்கிடையிலான உரையாடல் அமைப்பில் உள்ளன. இருவரும் மாறி மாறிப் பேசிக் கொள்ளும் அமைப்பில் உள்ளன. பரதர் நாட்டிய சாத்திரம் நூலில் கூறும் பத்து வகை ரூபங்களில் வீதி என்ற ஒன்றும் உள்ளது. அதில் இருமாந்தர்களே இடம் பெறுவர். தெலுங்கில் உள்ள கோலா கலாபம் என்னும் வகை ஓர் அந்தணனுக்கும் இடைச்சிக்கும் நடைபெறும் உரையாடல் அமைப்பில் அமையும் என்பர். தத்துவராயரும் இரு மாந்தர்களுக்கிடையிலான உரையாடல் பாங்கில் புதிய பிரபந்த வகைகளைப் பாடியுள்ளார்! இவை அனைத்தையும் ஒருங்கிணைத்துக் காணின் பாட்டும் கூத்தும் கலந்த, நாட்டுப்புற இலக்கிய வடிவமாக அமைந்தவை இவை என அறியலாம். மேற்கூறிய தொழில் அடிப் படையிலான பிரபந்தங்களில் குறத்தி என்ற ஒன்றை மட்டும் தனியே ஆராய்வோம்.

## குறத்தி

'குறத்தி' என்ற தலைப்பில் பத்துப்பாடல்களை உள்ளடக்கிய பிரபந்தம் ஒன்றைத் தத்துவராயர் பாடியுள்ளார். இப்பாடல்கள் யாவும் குறத்தி ஒருத்தியின் கூற்றாக அமைந்துள்ளன. முதலிரு அடிகளில், குறத்தி தன் தொழிற்பாட்டை உலகியலில் காணப்படும் குறத்தி போலத் தான் அல்லேன் என்பதை – எதிர்மறை யாகக் கூறுகிறாள். பின்னிரு அடிகளில் குறத்தி தன் நிலையை உடன்பாட்டாகக் கூறுகிறாள்.

''பச்சை வடம்பூண்டு பசுங்குழவி யரைசேர்த்துப்
பிச்சை பலகொண்டு பிழைபேசுங் குறத்தியல்லேன்
அச்ச மறத்துறந்த வதிகாரி குடிரேறும்
விச்சை பலசொல்லி விளையாடுங் குறத்தியேனே''

என்பது போல அப்பாடல்கள் உள்ளன. தத்துவராயர் பாடியுள்ள ஞான வினோதன் கலம்பகத்தில் இடம்பெறும் 'குறம்' பகுதியில், ''சூத்திரம் தாவுலகர் பிச்சையிட வென்றுசில கூறியருள் வேறுபடுமக் குறத்தியலன்'' என்று வரும். பாடுதுறையில் இடம் பெறும் குறத்தி பிரபந்தம், தமிழில் முதல் குறம் என்று எண்ணத்தகும் முத்துக்குறி அரையர் ஸேவையின் குறத்தி பாட்டுடன் ஒப்பிடத் தக்கது. ''பச்சை யிலையுடன் பருசிலவேரும் கொண்டு இச்சகமே சொல்லி இரந்துண்ணும் குறத்தி யல்லேன் நச்சரவில் துயில் நம்மிளையாழ்வார் தொழுகேச்சி அருளார் கழல் பாடும் குறத்தி நானே'' என்று வரும் முத்துக்குறி உரையுடன் ஒப்பிடத்தக்க அமைப்பைத் தத்துவராயரின் குறத்திப் பிரபந்தத்தில் காணலாம். குறம் இலக்கியத்தின் வளர்ச்சியாக அமையும் குறவஞ்சி பிரபந்தத்திலும் நாட்டுப்புறக் கூறுகள் மிக்க திரௌபதை குறம், வித்துவான் குறம், வள்ளி ஆயலோட்டும் குறம், மின்னொளியாள் குறம் ஆகிய முழுவதும் நாட்டுப்புறக்

கூறுகள் அடங்கிய குறம் பிரபந்தங்களிலும் காணப்படாத கூறாக குறத்தி தன்னை அறிமுகப்படுத்திக்கொள்ளும் — முதலில் எதிர்மறையிலும் பின்னர் உடன்பாட்டிலும் கூறும்-பாங்கு உள்ளது. கோயில்சார்புக்கலையான அரையரின் முத்துக்குயில் காணப்படும் பாங்கு, தத்துவராயர் பாடலில் அமைந்துள்ளது. இது, புதிய வகையிலான ஒரு பிரபந்தமாகும். நாட்டுப்புறவியற் கூறுகள் மிகுந்து காணப்படும் பிரபந்தமாகும் இது.**

### 4. சங்கீர்த்தனம்

இப்பெயரில் ஐந்து பிரபந்தங்களைத் தத்துவராயர் பாடியுள்ளார். இவை அனைத்திலும் குருவின் புகழ் பாடப்படுவது அடிப்படைச்செய்தி. ஈற்றுச்சொல் சிவசிவ, நம நமோநம, நமஸ்காரம், போற்றி நம என்று முடியும் அமைப்பில் முறையே இவை அமைந்து உள்ளன. எளியசொற்கள், ஒரேசொல் பயின்று வரல் ஆகிய நாட்டுப்புறக் கூறுகள் கலந்துள்ள பிரபந்தமாகும். இவை பிற்காலத்தில் தோன்றிய இசைக்கூறு மிகுதியும் கலந்த பஜனைப்பாடல்களுக்குரிய தோற்று வாயாகத் தத்துவராயரின் இப்பிரபந்தங்களைக் கொள்ளலாம். சங்கீர்த்தனம் என்னும் பெயர் பெற்றுள்ளதால் இசைத்தன்மை கலந்தவை என்று கொள்ளினும் கூட, பாட்டுடைத் தலைவன் (சொரூபானந்தர், சிவப்பிரகாசர்) புகழ்பாடுவதே நோக்கமாக உடையவை இவை.

### 5. அருள் வேண்டல்

இறைவனுடைய அருள் அல்லது குருவினுடைய அருள் வேண்டுவதாக அமையும் பல்வகையான புதிய பிரபந்தங்களைத் தத்துவராயர் பாடியுள்ளார். இவற்றில் திருவடிமாலை, திருவருட்கழன் மாலை, போற்றிமாலை, புகழ்ச்சி மாலை, பழித்துரைமாலை, நிந்தாஸ்துதி, அடிமடக்கு ஸ்துதி ஆகியன ஒருவகை. ‘அடிமடக்குஸ்துதி’ என்பதில் மட்டும் புலமைக்கூறுகள் மிகுந்து காணப்படு கின்றன. ஏனையவற்றில் நாட்டுப்புறக் கூறுகளே மிகுந்துள்ளன.

திருநீற்றுக்காப்பு, அந்திக்காப்பு என்பன ஒருதன்மையில் அமைந்தவை. பிரார்த்தனை, அடைக்கலம், அபயம், அபயவரதம், குறைவல்லபம், சீர்பாத வல்லபம், நமசிவாய என்பன அருள்வேண்டியும் புகழ்பாடியும் அமைவன. இவை அனைத்திலும் எளிய சொல்லாட்சியுடன் ஈற்றடியில் ஒரேசொல் பயின்று வரும் பாங்குள்ளது.

### 6. ஆடல் அடிப்படையில் அமைந்த பிரபந்தங்கள்

கூத்து எனப்படும் ஆடலை மையமிட்டுப் பல்வரிக்கூத்துப் பற்றி விளக்குகை யில், அடியார்க்கு நல்லார் நூறு புதிய பிரபந்தங்களைக் குறிப்பிட்டுள்ளார் என்று முன்னர்க் கண்டோம். இவற்றுள், குரவை, குணலை, பகடி, பந்து ஆகியவை அவர் உரையிலேயே இடம்பெறுகின்றன. தத்துவராயர் பாடல்களிலும் இவை காணப்படுகின்றன. ‘குரவையிடு’, என்றிடு குணலை’, ‘என்றிடு பகடி’, ‘பாவை

---

**சேரித்தலைவன் — நந்தனர், வேதியர் — நந்தனர் ஆகிய உரையாடல் களை இசைச் செய்யுள் வடிவத்தில் பிற்கால நூலாகிய நந்தனர் சரித்திரக் கீர்த்தனை யில் காணலாம் — பதிப்பாசிரியர்.

நல்லீர் பந்தடிக்க வாரீர்' என்பன முறையே இப்பிரபந்தங்களில் இடம்பெறும் பாடல்தோறும் பயின்றுவரும் ஈற்றுத்தொடர். பந்தடிக்கப் பாவையரை அழைப்பது போல வரும் பாங்கு பழைய மரபு. நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் இவற்றில் மிகுந்து காணப்படுகின்றன. இவற்றுள், குணலை, பந்து ஆகிய இரண்டும் மட்டும் இருமுறை இடம் பெற்று உள்ளன. குணலை முன்னதில் இடம்பெற்றது போலவே 'என்றிடு குணலை' என்னும் சொல் பயின்று வந்துள்ளது. ஆயின், பந்து என்னும் பிரபந்தம் மட்டும் முதலில் 'பந்தடிக்கவாரீர் பாவை நல்லீர்' என்ற ஈற்றடியைக் கொண்டும், இரண்டாவது பிரபந்தத்தில் பந்தை நோக்கியே விளிப்பதான அமைப்பைக் கொண்டும் விளங்குகின்றது.

### 7. இசைக்கருவிகள் அடிப்படையில் அமைந்த பிரபந்தங்கள்

சில பிரபந்தங்களுக்கு இசைக்கருவிகளின் பெயர்களைத் தலைப்பாகத் தத்துவராயர் தந்துள்ளார். இவ்வகையில், இம்பில், காளம், சாற்றுபறை, ஆகியன இடம்பெற்றுள்ளன. 'இம்பிவடி', 'ஊதோகாளம்', 'அறையுமேடா பறையை' என்னும் சொற்கள் இப்பிரபந்தங்களில் பயின்றுவருவன. நாட்டுப்புறக் கூறுகள் இவற்றில் மிக்குள்ளன. அடியார்க்குநல்லார் உரையில் பல்வரிக்கூத்து பற்றிய விளக்கப் பிரபந்தங்களில் 'பறை' என்பதும் கூறப்பட்டுள்ளது. அவர் உரையில் காணாத இம்பில், காளம் ஆகிய இரண்டும் புதியனவாகத் தத்துவ ராயர் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

### ஆய்வு முடிவுகள்

1. பதினைந்தாம் நூற்றாண்டினரான தத்துவராயர், சங்கரரின் அத்வைத வேதாந்தத்தைத் தமிழில் மிகுதியும் பாடினார். இவர் பாடிய பிரபந்தங்களில் பாட்டியல் நூலார் கூறாத புதிய கூறுகளும் இடம்பெற்று உள்ளன. 'பாடுதுறை என்னும் தொகுப்பில் புதிய பிரபந்தங்கள் பலவற்றைப் பாடியுள்ளார். பாமர மக்களும் உயர்ந்த வேதாந்தக் கருத்துக்களை அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அவர்களின் மொழி, பா, யாப்பு இசை ஆகியவற்றை இவர் மிகுதியும் கையாண்டார்.

2. உயர்ந்த வேதாந்தக் கருத்துக்களை உள்ளடக்கமாகக் கொண்டு நாட்டுப் புறப்பாடல் வடிவங்களில் கலப்பு வடிவமான கவிதைகளைப் புதிய பிரபந்தங்களாக இவர் பாடினார். சமய இயக்கத்தை மக்கள் இயக்கமாக ஆக்குவதற்கென்று சமயக்கவிஞர் மேற்கொண்ட இவ்விலக்கியக் கோட்பாட்டைத் தத்துவராயர் பின்பற்றினார்.

3. பிள்ளைத்தமிழிற்குப் பிள்ளைத்திருநாமம் எனப்பெயரிட்டுப் பருவத்திற்குப் பருவம் பாடல் எண்ணிக்கை வேறுபட்டு வருமாறு பாடினார். சின்னப்பூ பாடியுள்ளார். இவர் பாடிய உலாக்களில் குழகன் என்னும் பகுதியும், பரணிகளில் சும்முலக்கை என்ற பகுதியும் புதியதாக இடம்பெற்றுள்ளன. சும்முலக்கை என்ற பகுதி, வள்ளைப்பாட்டின் வளர்ச்சி என்பதும் பிற்பகாலப் பரணிகளில் இடம் பெற்றது என்பதும் அறியத்தக்க செய்திகள்.

4. பாட்டியல் நூற்கள் தத்தம் காலத்திலும் தமக்கு முன்னும் இருந்த அனைத்துப் பிரபந்தங்களுக்கும் இலக்கணம் கூறிவிடவில்லை. திருவாசகத்தில் காணப்படும் பலவகைப் பிரபந்தங்களுக்கு அவை இலக்கணம் கூறவில்லை. அவ்வாறே அவை இலக்கணம் கூறும் பல பிரபந்தங்கள் நமக்குக் கிட்ட வில்லை. பாட்டியல் நூற்கள் தமக்கு முந்தியவற்றை அப்படியே கூறியும் தத்தம் பகுதிகளில் தோன்றியவற்றை எடுத்துக் கூறியும் அமைந்தன. மக்களி டையே வழங்கி, இலக்கியம் படைப்போரால் ஏற்றுப் போற்றப்பட்ட பெருவழக் கான நாட்டுப்புறப்பாடல் வடிவங்களான பிரபந்தங்கள் பலவற்றைப் பாட்டியல் நூற்கள் கூறவில்லை. இத்தகு பிரபந்தங்கள் பலவற்றைத் தத்துவராயர் பாடி யுள்ளார்.

5. அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் பிரபந்தம் பற்றிக் கூறுகின்றனர். பல்வரிக்கூத்துப் பற்றி விளக்குகையில் அடியார்க்குநல்லார் நூற்றுக்கு மேற்பட்ட கூத்துத் தொடர்பான பிரபந்தங்களைத் தருகிறார். மக்களின் வாழ்வோடு ஒன்றிய நாட்டுப்புறக் கூறுகள் கலந்த, இசையும் கூத்தும் கலந்த வடிவமாக அமைவது பிரபந்தம் என்று பொருள்படும் இவ்விளக்கம் தத்துவராயர் பாடிய புதிய பிரபந்தங்களுக்குப் பொருந்திவருகின்றது. அடியார்க்குநல்லார் குறிப்பிட்டவை தவிர, வேறு பல புதிய பிரபந்தங்களையும் தத்துவராயர் பாடி யுள்ளார்.

6. எளிய சொற்கள், ஒரே சொல் பயின்று வரல் ஆகிய அமைப்புக்கள் இவர் பிரபந்தங்களில் மிக்கு காணப்படுகின்றன. நாட்டுப்புறக் கூறுகள் அனைத்து நிலைகளிலும் தத்துவராயர் பாடிய பிரபந்தங்களில் பரவிக் காணப்படுகின்றன. வைணவத் திருக்கோயில்களில் நடைபெறும் அரையர்சேவை முத்தமிழ்க் கலையின் சிலகூறுகளான பிரபந்தங்கள் தத்துவராயர் பாடியுள்ள பிரபந்தங்களுடன் ஒப்பிடத்தக்கன. பரதரின் நாட்டியசாத்திரம் கூறும் பிரபந்தங்கள் சில தத்துவ ராயர் பிரபந்தங்களுடன் ஒப்பிடத்தக்கன.

7. தொழில், இனம், ஆடல், அருள் வேண்டல் என்ற பல்வேறு தன்மை களில் இவர் புதிய பிரபந்தங்களுக்குப் பெயர் சூட்டியுள்ளார். தமிழில் வேதாந்தக் கருத்துக்களை மிகுதியாகவும் முதலாவதாகவும் பாடிய தத்துவராயர், புதிய பிரபந்தங்களை மிகுதியாகவும் முதல் முறையாகவும் பாடி உள்ளார்.

# மாஸ்ட் அணுக்களைப்பற்றிய ஓர் ஆராய்ச்சி

பேராசிரியை லலிதா காமேஸ்வரன்,
இயக்குநர், துறைத்தலைவர் — மருந்தியல் துறை,
துணை முதல்வர், சென்னை மருத்துவக்கல்லூரி, சென்னை.

மாஸ்ட் செல் அல்லது மாஸ்ட் அணு என்பது அநேகமாக உடலில் உள்ள எல்லா உறுப்புகளிலும் பரவலாக ஆங்காங்கே காணப்படும் ஒருவகையான உயிரியல் அணு. எல்லாவகையான திசுக்களையும் இணைக்கும் தன்மையுடையது, இணைப்புத்திசு. இந்த இணைப்புத்திசு எல்லா உறுப்புகளினூடிலும் இருப்பது இயற்கை. இந்த இணைப்புத் திசுவில் உள்ள பலவிதமான அணுக்களுக்கிடையில், அமிலத்தன்மை, காரத்தன்மை உடைய சாயங்களை ஏற்று, பூதக்கண்ணுடி வழியாக நோக்கும்போது, அடர்த்தியான சிறுமணிகள் (granules) நிறைந்திருக்கும் தன்மையுடையதாகத் தோன்றும் இயல்புடையதே, மாஸ்ட் அணு என்று, டாக்டர் ஹான்ஸ் ஸெல்யி இதை வர்ணிக்கிருர். பல ஆண்டுகளாக இந்த மாஸ்ட் அணுவின் இயல்புகளையும் பணிகளையும் பற்றிய ஆராய்ச்சிகள் உலகில் பலநாடு களிலும் பல சோதனைக்கூடங்களில் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. முன்னர் ஆராய்ச்சிகள் செய்த பலருடைய கண்டுபிடிப்புகளில் இருந்து, ''ஒவ்வாமை'' (allergy) அல்லது முரண்பாடான பொருள்களுடன் உடல் எதிர்ப்புத்தன்மை யின் திடீர் மோதலினுல் விளையக்கூடிய அயற்பொருள் அதிர்ச்சி (anaphylactic shock) எனப்படும் நிகழ்ச்சிகளின்போது, மாஸ்ட் அணுக்களில் இருந்து சாயத்தை ஏற்கும் தன்மையுடைய சிறுமணிகள் (granules) வெளிப்படுத்தப் படுகின்றன, என்பது ஏற்கெனவே தெரிந்திருக்கும் உண்மை. இப்படி சிறுமணிகள் அணுவிலிருந்து வெளிப்படும்போது அதிலிருந்து ஹிஸ்டமின் (Histamine), ஸீரோ டோனின் (Serotonin), ஹெப்பாரின் (Heparin) போன்ற ரஸாயனப் பொருள் கள் வெளிப்படுகின்றன.

இந்தக்கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் மாஸ்ட் அணுக்கள் உடலில் பல பணிகளுக்குக் காரணமாக இருக்கக்கூடும் என்று கருத்துக்கள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்னர் கருவளர்ச்சியிலும், மற்றத் திசுகளின் வளர்ச்சி, முதிர்ச்சியுடன் தொடர்புடைய நிகழ்ச்சிகளிலும் ஹிஸ்ட மினுக்கு உள்ள தொடர்பு பற்றிய ஆராய்ச்சிகள் சில நடத்தியிருக்கிறேன். அதனுல் ஹிஸ்டமினைத் தன்னகத்தே கொண்டிருக்கும் இந்த மாஸ்ட் அணுக்கள் என் கவனத்தை ஈர்த்ததில் வியப்பில்லை.

கடந்த சில ஆண்டுகளாக உடல்உறுப்புகளில் சரியாக அதன் பணி என்ன என்று, இதுவரை புரியாமல் இருந்த உறுப்புகளில் ஒன்ருன தைமஸ் (Thymus) எனும் நாளமில்லா சுரப்பியைப் பற்றிய அக்கரையும் தற்போது அறிவியல் உலகில் மிகுந்திருக்கிறது. இந்த சுரப்பி நெஞ்செலும்பிற்கு அடியில் இரண்டு நுரையீரல்

களுக்கும் இடையில் அமைந்திருக்கிறது. சமீபகாலத்தில்தான் இது நோய் எதிர்ப்புச் சக்தியை உருவாக்கும் பணியில் முக்கிய பங்கேற்கிறது; நோய் எதிர்ப்புச்சக்திக்கு மூலாதாரமாக விளங்கக்கூடிய குருதி வெள்ளணுக்களைப் பதப்படுத்தும் பணியில் முக்கியமாகச் செயலாற்றுகிறது என்பது கண்டு பிடிக்கப்பட்டது. உடல் எதிர்ப்புத் தன்மையால் சிலவேளைகளில் ஏற்படக்கூடிய விபரீத விளைவுகளை ஒவ்வாமை, அயற்பொருள் அதிர்ச்சி போன்றவை. அதனுல் இந்த தைமஸ் திசுவின் பணி களுக்கும், மாஸ்ட் அணுக்களில் ஏற்படும் விளைவுகளுக்கும் ஏதேனும் தொடர்பிருக்கக்கூடுமா என்று கண்டறிய வேண்டும் என்ற ஆர்வத்தினுல் இந்த ஆராய்ச்சியில் இறங்கினேம். எங்களுடைய ஆராய்ச்சிக்கூடத்தில் நானும், என்னுடைய ஆராய்ச்சி மாணவர்களுமாக இணைந்து இந்தத்துறையில் செய்த சில பரிசோதனைகளையும் அவைகளின் முடிவுகளையும் இன்று தமிழில் சமர்ப்பிக்க முன் வந்துள்ளேன்.

### முறைகள்

எந்த வகையில் ஆராய்ச்சியை மேற்கொள்ளவேண்டும் என்று ஆலோசித்து படிப்படியாகச் செய்ய வேண்டிய அணுகுமுறைகளை வகுத்தோம்.

1. விஸ்டார் இன வெள்ளை எலிகளில் ஆண் எலிகளைத் தேர்ந்தெடுத்து, அவைகளைப் பத்துப்பத்தாக, சிறுகூட்டங்களாகப் பிரித்துக்கொண் கொண்டோம்.
2. ஒவ்வொரு எலியாகத் தனித்தனியாக எடுத்து மயக்க மருந்து கொடுத்து அறுவை சிகிச்சை முறையில் நாளமில்லாச்சுரப்பிகளை ஒவ்வொரு கூட்டத்திலும் ஒவ்வொரு சுரப்பி என்ற முறையில் அகற்றினேம்.
3. ஒவ்வாமையின் விளைவுகளை அறிவதற்காக முட்டையின் வெள்ளைக் கருவை 50 மடங்கு இயற்கை நிலைக்கேற்பத் தயாரிக்கப்பட்ட (0.9%) உப்பு நீரில் கரைத்து அதில் 0.1 மில்லி அளவை ஊசிமூலம் தைமஸ் சுரப்பிக்குள் ஏற்றி அதன் விளைவுகளைப்பார்த்தோம்.
4. ஒவ்வாமையால் ஏற்படும் விளைவுகள் தான் இவைகள் என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக மற்றெரு எலிக்கூட்டத்திற்கு அதே அளவு உப்பு நீரை மட்டும் தைமஸ் திசுவுக்குள் ஏற்றி அதன் விளைவுகளை முந்திய எலிக்கூட்டத்தில் கண்ட விளைவுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தோம்.
5. மற்றுமொரு எலிக்கூட்டத்திற்கு இதேமுறையில் புற்றுநோயை உண்டாக்கக்கூடிய 1 : 2 டைபென்ஸ் ஆன்த்ரஸின் (1 : 2: (dibenzanthracene) என்னும் ரஸாயனப் பொருளை மருத்துவமுறையில் தயாரிக்கப்பட்ட சுத்திகரிக்கப்பட்ட எள்ளெண்ணெயில் கரைத்து 0.02 மில்லி அளவுமட்டும் தைமஸ் திசுவுக்குள் ஊசி மூலம் ஏற்றி அதன் விளைவுகளைப் பார்த்தோம்.
6. ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக இணைப்பான மற்றெரு கூட்டத்தின் விலங்குகளுக்கும் அதே அளவு தனி எள்ளெண்ணெ மட்டும் ஊசி மூலம் செலுத்தப்பட்டது.

7. உடலில் வேறு எங்காவது ஒருபகுதியில் புற்றுநோய் ஏற்படும்போது திசுக்களில் நோய் எதிர்ப்புச்சக்தியால் விளையும் பாதிப்புகளையும் அவை தைமஸ் சுரப்பி, மாஸ்ட் அணுக்கள் இவைகளில் ஏற்படுத்தும் மாற்றங்களையும் அறிவதற்காகத் திசுப்பெயர்ப்பு முறை வழியாக (Transplantation technique), எலியின் புற்றுநோய்த்திசு அடையாறு புற்றுநோய் மனையில் இருந்து அன்பளிப்பாகப் பெறப்பட்டு எங்கள் சோதனைக்கூடத்தில் எலிகளுக்கு அறுவை முறையில் பெயர்க்கப்பட்டன. இதற்காகப் புற்றுநோயுள்ள எலியின் உடலில் இருந்து அந்தப்புற்றுத் திசுவை அறுத்தெடுத்து சிறு சிறு துண்டுகளாகக் கத்தரித்து, கிருமிகள் நீக்கப்பட்ட இயற்கை ரீதியிலான உப்புநீரில் சேர்த்து, சோதனைக்குழாய்களில் வைத்து, சுழல் இயந்திரத்தில் (Centrifuge) வேகமாகச் சுழற்றினோம். அதில் மிதந்து மேலாக வரும் அணுக்கத்தையைத் தனிப்படுத்தி எடுத்து, மறுபடியும் ஒன்றுக்கு ஐந்து என்ற விகிதத்தில் இயற்கை உப்புநீரில் கலந்து, அந்தத் தொங்கல் திரவத்தை (suspension) பரும் ஊசிமூலம் எலியின் வலது தொடைப்பகுதியில் சருமத்துக்கடியில் 0.5 மில்லி அளவு ஏற்றினோம். இந்த எலிகளைப் பாதுகாப்பாக வைத்து புற்றுநோய் வளர்வதைக் கவனித்தோம்.

மேலே குறிப்பிட்ட ஒவ்வொரு பரிசோதனை முறையையும் கடைப் பிடித்த பின்னர் எங்கள் ஆராய்ச்சிக்கூடத்தில் இருக்கும் வசதிகளுக்கேற்ப சில வழிமுறைகளில் சோதனைகள் நடத்தினோம். எனினும் இந்தக்கட்டுரையில் தைமஸ் சுரப்பியிலும், மற்ற உடல்திசுக்களிலும் பரவலாக இருக்கும் மாஸ்ட் அணுக்களில் காணப்பட்ட மாற்றங்களை மட்டுமே எடுத்து விளக்க முற்படுகிறேன். பரிசோதனை முடிந்தவுடன் எலியைத்தியாகம் செய்து, அதன் திசுக்களை எடுத்து பார்மலின் (formalin) திரவகத்தில் பதப்படுத்தி, மெழுகில் வைத்து கெட்டிப்படுத்தினோம். சோதனைக்காக எடுத்துக்கொள்ளப்பட்ட திசுக்களின் தன்மைகளுக்கேற்ப 5 அல்லது 7 மைக்ரான் கனஅளவில் திசுக்கூறுகளை சீவி எடுத்து முதலில் இத்னல் (Ethanol) திரவகத்தில் கரைத்த டொலுடீன் நீலம் (Toludine Blue) சாயத்தில் ஊர வைத்துப் பின்னர் தண்ணீரில் கரைக்கப்பட்ட இளம்பச்சை (light green) சாயத்தில் கழுவி உலர வைத்தோம். சாயமேற்றப்பட்ட திசுவுடன் கூடிய ஆடிவில்லையை (glass slide) நுண்நோக்காடியில் (microscope) வைத்து, புள்ளியியல் முறைப்படி, எதேச்சையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட (Random selection) ஐந்து பகுதிகளில் மாஸ்ட் அணுக்கள் எண்ணப்பட்டன. இதிலிருந்து அவைகளின் சராசரி அளவு கணக்கிடப்பட்டது.

தைமஸ், அட்ரீனல் (Adrenal), தைராய்டு (Thyroid), ஓவரி (Ovary) போன்ற சுரப்பிகள் ஏற்கனவே அறிவியற் துறைகளில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் அறுவை முறைகளில் அகற்றப்பட்டன. ஒவ்வொரு எலிக்கூட்டமும் தனித்தனியே ஒவ்வொரு முறையான அறுவை சோதனைக்குட்படுத்தப்பட்டது.

**முடிவுகள்**

தைமஸ் திசு அகற்றப்பட்ட எலிகளின் திசுக்களில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை உடனே உயர்கிறது. அறுவை முறை முடிந்து 24 மணிநேரத்

திற்குள் எண்ணிக்கை உயரத்தொடங்கி 5 நாட்களில் உச்சநிலையை எட்டுகிறது. பழைய நிலைக்கு வர ஒரு வாரம் ஆகிறது. மேலும் மூன்று வாரங்களுக்குத் தொடர்ந்து திசுக்கள் சோதனைக்கு உட்படுத்தப்பட்டன. இந்தக்காலத்தில் வேறு குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏதும் நிகழவில்லை. இதற்குமுன்னர் நடத்தப்பட்ட சில ஆராய்ச்சிகளில் மேலீடான காயங்கள் ஆறும்போது காயப்படுத்தப்பட்ட இடத்திற்கு அண்மையில் உள்ள சருமம், மற்றும் சவ்வுத் திசுக்களில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை கூடுவதையும், மாஸ்ட் அணுக்களின் சிறுமணிக் கத்தைகள் கசிந்து திசுவுக்குள் ஏறுவதையும் கவனித்து அதற்கு விளக்கங்களுடன் கட்டுரைகள் வெளிவந்திருக்கின்றன. எனினும் சிறிதும் காயப்படுத்தப்படாமல் நீங்கி இருக்கும் பிற திசுக்களில் மாற்றங்கள் விளைவதில்லை. ஆனால் ஐயப்பாடுகளைப் போக்கிக்கொள்வதற்காக ஒரு எலிக்கூட்டத்தின் கழுத்தில் அறுவைமுறையில் சருமத்தில் காயமேற்படுத்தி அந்தக்காயத்தின் வழியாக தைமஸ் திசுவை விரல் களால் தொட்டு, ஆனால் அகற்றாமல் மறுபடியும் திசுவை உள்ளேயே வைத்துக் காயத்தை மூடி, சருமத்தை இணைத்துத் தைத்து, இந்த எலிகளில் ஏற்படும் மாஸ்ட் அணு மாற்றங்களையும் கவனித்தோம். எதிர்பார்த்தபடியே இந்த எலிகளில் காயமேற்படுத்தப்பட்ட பகுதியில் மட்டுமே மாஸ்ட் அணுக்களின் மாற்றங்கள் தென்பட்டன. நீங்கியிருக்கும் மற்றத்திசுக்களிலும், தைமஸ் திசுக் களிலும் எந்தவித மாற்றமும் விளையவில்லை. இது தைமஸ் திசுவை அகற்றுவதால் உடல் எங்கிலும் மாஸ்ட் அணுக்களில் மாற்றம் ஏற்படக் கூடும் என்னும் எங்கள் அனுமானத்தை உறுதிப்படுத்தியது.

2. எங்கள் பரிசோதனைகளின் மூலம் தைமஸ்திசு வெள்ளணுக்களின் (Leucocytes) பணியுடன் தொடர்புடையது என்று ஏற்கனவே தெரிந் திருக்கும் செய்தியும் உறுதிப்பட்டது. பரிசோதனையின் முடிவுகளில் இருந்து மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கையில் அதிகரிப்பும், வெள்ளணுக்களின் எண் ணிக்கையில் குறைவும் உடனே தென்படுகிறது. முக்கியமாக நிணநீரணுக்களின் (Lymphocytes) எண்ணிக்கை குறைவதாலேயே வெள்ளணுக்களின் எண்ணிக்கை குறைவாகத் தோன்றுகிறது.

3. திசுக்களின் மொத்த ஹிஸ்டமின் அளவில் குறிப்பிடத்தக்க மாற்றம் இருக்கவில்லை.

4. ஒவ்வொரு எலிக்கூட்டத்திலும் ஒவ்வொரு நாளமில்லா சுரப்பி அகற்றப் பட்டதென்று முன்னரே குறிப்பிடப்பட்டது. அறுவை முறைக்குப்பிறகு மூன்று வாரங்கள் கழித்து, தைமஸ் திசுவின் மெல்லிய கூறுகள் பதப்படுத்தப்பட்டு, முன்கூறியபடி சாயமேற்றப்பட்டு மாஸ்ட் அணுக்கள் எண்ணப்பட்டன. சோதனை துவங்கும்போது எடுத்துக்கொள்ளப்பட்ட எலிகள் 100 கிராம் எடையுள்ளவை. மூன்று வாரங்கள் கழித்துச் சோதனைகள் முடிவுறும்போது 120 முதல் 130 கிராம் வரை எடையுள்ளவையாயிருந்தன. அதனால் இந்த எலிகள் வேறு எந்த பாதிப்புகளாலும் நலியவில்லை. மற்ற நாளமில்லாச் சுரப்பிகள் ஒவ்வொன் றையும் அகற்றுவதாலும் தைமஸ் திசுவில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை உயர்வதைக் கண்டோம். ஏற்கனவே அட்ரினல் சுரப்பியின் ஆற்றல், நிணநீர் அணுக்களைக் குறைக்கும் என்னும் முடிவு பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதனால்

அட்ரீனல் சுரப்பியை அகற்றும்போது நிணநீர் அணுக்களில் பெருக்கம் ஏற்படக் கூடும். அத்துடன் ஒருவேளை மாஸ்ட் அணுக்களும் பெருகக்கூடும் என்று நினைக்க இட மிருக்கிறது. அதைப்போலவே ஒருகால் ஓவரி (Ovary), டெஸ்டிஸ் (Testes) போன்ற பால் இயற்சுரப்பிகளும் ஸ்டிராய்டுத் தன்மையான (Steroids) சுரப்பி நீர்களை வெளிப்படுத்துவதால் இணையான விளைவுகளை ஏற்படுத்தக்கூடும் என்று நினைத்துப்பார்க்கவும் இடமிருக்கிறது. ஆனால் இதுவரை தைராய்டு சுரப்பிக்கு நிணநீர் அணுக்களின் மேலோ அதன் உறைவிடங்களில் ஒன்றான தைமஸ் திசுவின் மேலோ எந்தவிதமான தடை கட்டும் தன்மை இருப்பதாக அறிவிக்கப்படவில்லை. இப்படி மற்ற நாளமில்லாச் சுரப்பிகளில் எதை அகற்றினாலும் தைமஸ் திசுவில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை கூடுவது மட்டுமல்ல, மூன்று வாரங்களான பின்பும் அது கூடுதலாகவே இருக்கிறது என்பது நம் கவனத்தை ஈர்க்கக்கூடிய ஒரு கண்டுபிடிப்பாகும்.

5. முட்டையின் வெள்ளைக்கருவை உப்புநீரில் கரைத்து அந்தக்கரைப்பானை தைமஸ் திசுவுக்குள் ஊசிமூலம் ஏற்றியதனால் விளைவுகள் குறிப்பிடத்தக்கனவாக இல்லை. மிகக்குறைவான அளவு முட்டைக்கருவைத்தான் ஏற்றினோம். அதை அந்த எலிகளின் திசுக்கள் ஏற்றுக்கொண்டன. குறிப்பிடத்தக்க விளைவுகள் ஏதும் மாஸ்ட் அணுக்களிலோ மற்ற நிணநீரணுக்களிலோ ஏற்படவில்லை என்பது முடிவு.

6. அதன்பிறகுதான் தைமஸ் திசுவுக்குள் புற்றுநோயை உண்டாக்கக் கூடிய திரவகத்தை ஏற்ற முடிவுசெய்தோம். 1.2 டைபென்ஸான்த்ரஸீனை எள் ளெண்ணெயில் கரைத்து, பின்னர், 0.1 மில்லி எண்ணெயில் கரைக்கப்பட்ட 1 மைக்ரோகிராம் அளவு நச்சுப்பொருளை தைமஸ் திசுவில் ஏற்றினோம். இதன் பின்னரும் எல்லாப்பரிசோதனைகளும் நடத்தப்பட்டன. மருந்தேற்றிய பிறகு ஆறுமாத காலத்தில் தைமஸ் சுரப்பியின் எடையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு தென்படுகிறது. ஒத்த எடையுடைய மற்ற எலிகளுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் போது மருந்து ஏற்றப்பட்ட எலிகளின் தைமஸ் சுரப்பியின் எடை கூடுதலாக இருந்தது. சாதாரணமாகத் தைமஸின் பணி, நோய்-எதிர்ப்புத் தன்மையை உருவாக்குவதாகையால் உடலில் வேறு எங்காவது நோய் ஏற்பட்டாலும் தைமஸில் இருந்து மிகுதியாக வெள்ளணுக்கள் வெளிப்பட்டுத் தேவைப்பட்ட இடத்திற்கு இரத்த ஓட்டத்தின் மூலம் செல்வதால் தைமஸின் எடை குறைவதுதான் அனுபவ உண்மை. இந்தப் பரிசோதனையில் ஊசி ஏற்றப்பட்ட இடமே தைமஸ் திசுவாகை யால் தைமஸின் எடை மேலும் கூடுதலாகிறது என்று முடிவுகட்டினோம். வெறும் எள்ளெண்ணெய் மட்டும் ஊசிமூலம் ஏற்றப்பட்ட எலிகளில் இந்த மாற்றம் ஏதும் இல்லை.

ஊசிமருந்து ஏற்றப்பட்டு ஒரு மாதத்திற்குள் தைமஸ் திசு அழிந்து, நார்த்திசு மிகுந்து, அருகாமையில் இருக்கும் தைமஸ் திசுவில் புறம் பகுதித் திசுக்கள் (Cortical tissue) அதிதீவிரமாகச் செயலாற்றும் தன்மையைக் கண்டோம். புறப்பகுதித் திசுவின் அணுக்கள் அதிதீவிரமாகச் செயலாற்றுவதுடன், இதிலுள்ள வெள்ளணுக்கள் உட்சோற்றுப்பகுதியிலும் (Medulla) ஊடுருவிப் பரவியிருப்பதை யும் கண்டோம். தொடர்ந்து ஆறுமாதங்கள் இந்த எலிகள் கவனிக்கப்பட்டன. ஆறுமாத காலமும் இந்த அதிதீவிர செயற்றன்மையின் அறிகுறிகள் தென்பட்டுக் கொண்டேதான் இருந்தன. இந்த ஆறுமாத காலத்தில் இடையிடையே தைமஸ்

திசுவில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை கணக்கிடப்பட்டு மாற்றங்கள் கவனிக்கப் பெற்றன. சிறிதும் மாறுபாடின்றி பரிசோதனைக் காலத் துவக்கத்தில் இருந்து இறுதிவரை எல்லாத்திசுக்களிலும் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை இயல்பான நிலையைவிடக் கூடுதலாகவே இருந்தது. பல மாஸ்ட் அணுக்களிலும் அதன்மேற் புறச் சவ்வு சிதைந்து சிறுமணிகள் கசிந்திருப்பதும் தெரிந்தது.

அத்துடன் குருதியில் புரதச்சத்து (Protein) முக்கியமாக, நோய்எதிர்ப்பில் பங்கேற்கும் காமா-உருண்டைப்புரதத்தின் (R-globulins) அளவு அதிகரிக்கிறது. மாஸ்ட் அணுக்கள் எல்லாத் திசுக்களிலும் கசிந்தவாறு சிறுமணிகளைப் புறத்தே வழியவிட்டுக்கொண்டே இருப்பதற்கிணங்க எல்லாத்திசுக்களிலும் ஹிஸ்டமினின் (Histamine) அளவு குறைவாகவே தென்படுகிறது.

7. இதைத் தொடர்ந்து புற்றுநோய் திசுக்களை நேரடியாக நோயுற்ற எலியின் உடலில் இருந்து இயல்பான (Normal) நிலையில் உள்ள எலியின் உடலில் சருமத்துக்கடியில் பெயற்சி செய்து அதன் விளைவுகளை ஆராயத்தலைப்பட்டோம். நார்த்திசுவிலிருந்து உருவான புற்றுநோய் திசு எலியின் தொடையின்மேல் பகுதி யில் பெயற்சி செய்யப்பட்டது. புற்றுநோய் வளர்ந்து மூன்று வார அளவில் உருண்டையான கட்டியாகத் தென்படுகிறது. புற்றுக்கட்டி வளர வளர சோதனை எலிகளின் தைமஸ் சுரப்பியின் எடை குறைகிறது. தீவிரமாக எந்தநோய் ஏற் பட்டாலும் நோயை எதிர்க்க தைமஸின் வெள்ளணுக்கள் மிகுதியாக வெளியேறுவ தால் தைமஸின் எடைகுறையும் என்பது முன்னரே பலரால் பிரசுரிக்கப்பட்டிருக்கும் செய்தி. இதனுல் தைமஸின் செயற்திறன் குறைந்துவிட்டதாக நினைத்து விடக் கூடாது. மேலும் மேலும் வெள்ளணுக்களைத் தயாரித்து வெளியேற்றிக்கொண் டிருப்பதால் அதன் பணி மிகுந்தபோதிலும் அதன் எடை குறைந்துவிடுகிறது.

பலபரிசோதனைகளிலும் தைமஸ் திசுவிலும், மாஸ்ட் அணுக்களிலும் விளையும் மாற்றங்கள் ஆவன:

1. தைமஸ் திசு அகற்றப்பட்ட உடன் குறுகிய காலத்திற்கு உடலில் எல்லாத்திசுக்களிலும் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை மிகுதியாகி பிறகு குறைந்து இயல்பான நிலைக்குத் திரும்புகிறது.

2. மற்ற நாளமில்லா சுரப்பிகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக அகற்றப் பட்டுப் பரிசோதனைக்குட்படுத்தப்பட்ட எலிகளின் தைமஸ் திசுவில் மாஸ்ட் அணுக் களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது.

3. தைமஸ் திசுவுக்குள் எதிர்ப்பொருள்களில் ஒன்ருகக் கருதக்கூடிய முட்டையின் வெள்ளைக்கருவை ஏற்றிய பின்னர் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் தைமஸ் திசுவிலும் மாஸ்ட் அணுக்களிலும் ஏற்படவில்லை.

4. ஆனுல் புற்றுநோய் ஊக்கி மருந்தை அதைப்போலவே தைமஸ் திசுவில் ஏற்றிப்பார்த்தபோது பல மாதங்களுக்கு மாஸ்ட் அணுக்களின் எண் ணிக்கை மிகுதியாகத் தொடர்ந்து இருந்ததையும், அவைகளின் சிறுமணிகள் கசிந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்ததையும் கண்டோம்.

5. இதைத்தொடர்ந்து நார்த்திசுப்புற்று நோயின் ஒரு சிறுகூற்றை சருமத்துக்கடியில் பெயர்த்து வளரச்செய்து பார்த்தபோதும் நீங்கியிருக்கும் தைமஸ் திசவில் மாஸ்ட் அணுக்களின் எண்ணிக்கை கூடுதலாகவே இருந்தது என்பவை குறிப்பிடத்தக்க ஆராய்ச்சி முடிவுகளாகும்.

# 'அன்புடைமை' பற்றி விவிலிய சின்னப்பரும் திருவள்ளுவரும்

டாக்டர் வே. அந்தனிஜான் அழகரசன், எம்.ஏ., பிஎச்.டி.,
முதல்வர், புனித வளனர் குருத்துவக் கல்லூரி,
உப்புவெளி, திருக்கோணமலை, இலங்கை

**முன்னுரை**

புனித சின்னப்பர் சிலிசியா நாட்டில் தத்துவத்திலும், பண்பாட்டிலும், கல்வியிலும் புகழ்பெற்ற தர்சு நகரத்திலே கி. பி. 10 ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் விவிலியத்தில் உள்ள புதிய ஏற்பாட்டில் பதின்மூன்று நூல்களை ''மடல்கள்'' (Epistles) வாயிலாக எழுதியுள்ளார். அவற்றில் ஒன்று கொரிந்திய நாட்டு மக்களுக்கு எழுதிய கடிதம். இவர் எழுதிய முதற்கடிதத்தில் 13 ஆம் அதிகாரத்தில் ''அன்பின் சிறப்பை'' நனி சிறப்புடன் எடுத்துக் கூறுவார்.

வள்ளுவப் பெருந்தகையார் தமிழகத்தில் உள்ள மைலாப்பூரில் கி.மு. முதல் நூற்றுண்டுக்கும். கி. பி. முதல் நூற்றுண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் பிறந்ததாகக் கூறுவர் பெரும்பாலான அறிஞர்பெருமக்கள். இவர் 1330 குறள்களில் அறம், பொருள், இன்பம் பற்றிப் பேசுகின்றுர். இதில் அறத்துப்பாலில் உள்ள ''இல்லறவியலில்'' ''அன்புடைமை'' பற்றிப் பத்துக் குறள்கள் படைத்துள்ளார். சின்னப்பரும், வள்ளுவரும் அன்பைப்பற்றிப் பேசுகையில் பொது நோக்குடன் காணப்படுகின்றுர்கள். இருவர் கருத்துக்களையும் இங்கு ஆய்வுக்கண் கொண்டு பார்ப்போம்.

I. சின்னப்பர்: ''மண்ணேர் மொழிகளிலும், விண்ணேர்
மொழிகளிலும் நான் பேசினும்,
அன்பு எனக்கு இல்லையேல்
ஒலிக்கும் வெண்கலமும், ஓசையிடும்தாளமும்
ஆனேன். (1 கொரிந்தியர் 13 : 1)

வள்ளுவர்: புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு (குறள் 79)

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. (குறள் 80)

II. சின்னப்பர்: இறைவாக்கு வரம் எனக்கு இருப்பினும்
மறைபொருள் யாவும் எனக்குத் தெரிந்தாலும்

அறிவு அனைத்தும் எனக்கு இருந்தாலும்
மலைகளைப் பெயர்த்தகற்றும் அளவுக்கு
விசுவாசம் என்னிடம் நிறைந்திருப்பினும்
அன்பு எனக்கு இல்லையேல், நான் ஒன்றுமில்லை.
*(1 கொரி 13 : 2)*

வள்ளுவர்: *அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்*
*வற்றல் மரந்தளிர்த் தற்று (கு. 78)*

III. சின்னப்பர்: எனக்குள்ளதெல்லாம் நான் வாரி வழங்கினும்
எரிப்பதற்கு என் உடலைக் கையளித்தாலும்
அன்பு எனக்கு இல்லையேல், எனக்குப் பயன் ஒன்றுமிலை
*(1 கொரிந்தியர் 13 : 3)*

வள்ளுவர்: *என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம். (குறள் 77)*

*அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை (கு. 76))*

IV. சின்னப்பர்: அன்பு பொறுமையுள்ளது, பரிவுள்ளது,
அன்பு அழுக்காறு கொள்ளாது.
பெருமை பேசாது, இறுமாப்பு அடையாது.
இழிவானதைச் செய்யாது, தன்னலத்தைத் தேடாது,
சீற்றத்திற்கு இடந்தராது, வர்மம் வைக்காது.
அநீதியைக் கண்டு மகிழ்வுறுது;
உண்மையைக் கண்டு உளம் மகிழும்.
அனைத்தையும் தாங்கிக் கொள்ளும்,
பிறர்மீது நல்லெண்ணம் இழப்பதில்லை;
நம்பிக்கையில் தளர்வதில்லை;
அனைத்தையும் பொறுத்துக்கொள்ளும்.
*(1 கொரி. 13 : 4– 7)*

வள்ளுவர்: *அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு (கு. 72)*

*அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு*
*என்போடு இயைந்த தொடர்பு (கு. 73)*

*அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்*
*நண்பென்னும் நாடாச் சிறப்பு (கு. 74)*

V. சின்னப்பர்: அன்புக்கு என்றும் முடிவு இராது;
இறைவாக்கு வரம் எது இருந்தாலும்,
அது ஒரு நாள் இல்லாமற் போகும்;

பரவசப் பேச்சு வரம் இருந்தால்,
அதுவும் முற்றுப்பெறும்:
அறிவு வரம் இருந்தால்,
அதுவும் ஒருநாள் இல்லாமற் போகும்.
ஏனெனில், நமது அறிவு குறையுள்ளது;
நாம் உரைக்கும் இறைவாக்கும் குறையுள்ளது;
நிறையுள்ளது தோன்றும்பொழுது
குறைவுள்ளது மறைந்துவிடும்.
நான் குழந்தையாய் இருந்தபோது,
குழந்தையின் பேச்சு
குழந்தையின் மனநிலை
குழந்தையின் எண்ணம் கொண்டிருந்தேன்.
நான் பெரியவனாய் வளர்ந்த பின்னர்
குழந்தைக்குரியதைக் களைந்துவிட்டேன்.
இப்பொழுது கண்ணாடியில் மங்கலாகக்
காண்கிறோம்;
அப்பொழுது முகமுகமாய்க் காண்போம்.
இப்பொழுது அரை குறையாய் அறிகிறேன்;
அப்பொழுது கடவுள் என்னை அறிவதுபோல்
நானும் அறிவேன்.
எனவே, விசுவாசம், நம்பிக்கை, அன்பு ஆகிய
மூன்றுமே நிலையாய் உள்ளன;
இவற்றுள் தலைசிறந்தது அன்பே.
*(1 கொரி 13 : 8 அ, 13)*

வள்ளுவர்: அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு (கு. 75)

VI. சின்னப்பர்: அன்பு பொறுமையுள்ளது,
அன்பு அழுக்காறு கொள்ளாது.
பெருமை பேசாது இறுமாப்பு அடையாது,
இழிவானதைச் செய்யாது, தன்னலத்தைத் தேடாது,
சீற்றத்திற்கு இடந்தராது, வர்மம் வைக்காது.
அநீதியைக் கண்டு மகிழ்வுறாது;
உண்மையைக் கண்டு உளம் மகிழும்.
அனைத்தையும் தாங்கிக் கொள்ளும்;
பிறர்மீது நல்லெண்ணம் இழப்பதில்லை.
நம்பிக்கையில் தளர்வதில்லை;
அனைத்தையும் பொறுத்துக்கொள்ளும். *(1 கொரி 13 : 4-7)*

அன்பு என்னென்ன செய்யும் என்பதை இரண்டு நேர்நிலை விளக்கங்களாலும், அன்பு என்னென்ன செய்யாது என்பதை எட்டு எதிர்மறை விளக்கங்

களாலும், மீண்டும் அன்பு என்னென்ன ஆற்றும் என்பதை நான்கு நேர்நிலை விளக்கங்களாலும் சுட்டிக்காட்டுவார் சின்னப்பர்.

அன்பு பொறுமையுள்ளது. (கான் கலாத்தியர் 5: 22; உரோ. 2:4) துன்பத்தில் நிலைகுலையாது, சீற்றத்திற்கு இடம் கொடாது நிற்றலே பொறுமை எனப்படும். (மத். 5: 10-11).

அன்பு பரிவுள்ளது (காண். கலா. 5: 22) மேன்மை, உயர்ச்சி, இரக்கம், இன்சொல், தாராளமனப்பான்மை முதலிய பொருள்களும் இச் சொல்லுக்கு உண்டு. அன்பு திமை செய்தவர்களுக்கும் நன்மை செய்யும்.

அன்பு அழுக்காறு கொள்ளாது. பரந்த அன்பு, நிரந்தர அன்பு இருக்குமிடத்தில் பொறாமைக்கு இடமே இல்லை. மனநிறைவும், மனமகிழ்ச்சியும் குடி கொள்ளும்.

அன்பு பெருமை பேசாது. பணிவும் அன்பும் கைகோத்துச் செல்லும் போது பெருமை பேச இடம் இல்லை. புகழார்வம், படாடோபத்தை அன்பு தவிர்க்கும்.

அன்பு இறுமாப்பு அடையாது. இது பெருமையோடு தொடர்புடைய சொல். தாங்கள் புண்ணியவான்கள், இறை அருளால் நிரப்பப்பெற்றவர்கள் எனச் செருக்கு அடையாது.

அன்பு இழிவானதைச் செய்யாது. சகோதர உறவுகளை முறிக்கக்கூடிய கண்ணியத்துக்கு முரணான அனைத்தையும் அன்பு அகற்றிவிடுகிறது. அன்பு எல்லோரிடமும் நேர்மையுடன் நடந்துகொள்ளும்.

அன்பு தன்னலத்தைத் தேடாது. உண்மையான அன்பை எண்பிக்க இதைவிடச் சிறந்த அடையாளம் வேறு இருக்க முடியாது. உண்மை அன்பானது தனக்கு உரிமை இல்லாததுபோல் தன் உரிமையைத் தணிக்காது. பிறர் நலத்துக்காகத் தன் உரிமையையும் தியாகம் செய்யக் கூடியது.

அன்பு சீற்றத்திற்கு இடந்தராது. சீற்றம், பகைமை, சண்டை சச்சரவு, போட்டி பூசல்களுக்கும், பிளவு, பிணக்குகளுக்கும் வித்திடும். எனவே உண்மை அன்பு சீற்றத்திற்கு இடம் தராது என்பார்.

அன்பு வர்மம் வைக்காது. தீங்கு நினைக்காது. தனக்கு இழைக்கப்பட்ட தீங்கை நினைத்து, அன்பு பழி தீர்க்க முனையாது. தீமையை அன்பினால் வெல்லும்.

அநீதியைக்கண்டு மகிழ்வுறாது. அன்பு தீங்கிழைக்காதவாறு கவனமாய் இருக்கும். அடுத்தவர், சிறப்பாகப் பகைவர் துன்புறக்கண்டு துன்புறுமே தவிர இன்புறாது.

உண்மையைக் கண்டு உளம் மகிழும். உண்மையான அன்புள்ளவன் பிறருடைய நற்பண்புகளைக்கண்டு இன்புறுவான். தன் பகைவருடைய நலனையும் கண்டு உண்மையான அன்புள்ளவன் இன்புறுகின்றான். பிறரில் காணப்படும் நன்மையை, உண்மையை மகிழ்ச்சியோடு அங்கீகரித்து ஏற்றுக்கொள்கிறான். மூல மொழிப்படி, மகிழ்வதோடு தன் மகிழ்ச்சியைப் புகழ்ச்சியாக, பாராட்டாக வெளிப்படுத்துகின்றான். ஒருவரின் துன்பத்தில் அனுதாபப்படும் பண்பை விட, ஒருவரின் வெற்றியில் பாராட்டும் பண்பு மேலானதாகும்.

அன்பு அனைத்தையும் தாங்கிக்கொள்ளும். பொறுத்துக்கொள்ளுதல், பூசி மெழுகுதல், மூடி மறைத்தல், பிறர்க்குத் தெரியாமல் வைத்தல், பொருட்படுத்தாமல் இருத்தல் என்றும் பொருள்படும்.

தாங்கிக்கொள்ளுதல் என்பதைவிட மூடி மறைத்தல் என்னும் பொருளே இவ்விடத்திற்குப் பொருத்தமானது. அயலாருடைய குறைபாடுகளைப் பிறருடைய கவனத்திற்குக் கொணராது அன்பு மறைத்துக் கொள்கிறது. தனது மௌனத்தால், சுயவிருப்பத்தால், பிறரிடம் அவற்றை எடுத்துச் சொல்வதற்குப் பதிலாக அவற்றை மறக்க, மறைக்க முற்படுகிறது. கோவலனின் பெற்றோர் கண்ணகியைக் காணவந்தபோது, அவள் அவனின் குற்றத்தை எடுத்துக்கூறாது புன்னகை செய்து அவன் குற்றத்தை மறைத்தது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பிறர்மீது நல்லெண்ணம் இழப்பதில்லை. பாராட்டும், மதிப்பும் காட்டுவது அன்பின் இயல்பாகும். எப்போதுமே நல்லவற்றையே சிந்திக்கும். எல்லாவற்றிற்கும் நன்மையான பொருள் விளக்கமே அளிக்கும். அடுத்தவரை நம்புமே தவிர, அவர்களுடைய எண்ணங்கள், செயல்கள் பற்றி அவநம்பிக்கையோ ஐயப்பாடோ கொள்ளாது.

நம்பிக்கையில் தளர்வதில்லை. பிறன் தனக்கு நிச்சயமாகத் தீங்கிழைப்பான் என்று தெளிவாகத் தெரிந்திருப்பினும்கூட அன்புடையான் எதிர்காலம்பற்றி அவநம்பிக்கை கொள்வதில்லை. இறுதியில் வாய்மையே வெல்லும் — நன்மை வெற்றி கொள்ளும் என்ற அடிப்படையில் எப்போதும், எதிலும் நலமே காண்கின்ற, தளரா நம்பிக்கை ஆர்வம் கொண்டுள்ள, பெருந்தன்மையான பண்பு அன்புக்கு உண்டு.

அனைத்தையும் பொறுத்துக்கொள்ளும். நம்பிக்கை அடியோடு ஒழிந்து போன நிலையிலும், பெருத்த ஏமாற்றம் கண்ட வேளையிலும், வழியில் குறுக்கிடும் புறக்கணிப்பு, அவமதிப்பு, நன்றியின்மை போன்ற இடையூறுகளால் அன்புடையார் மனம் தளர்ந்துபோகார். மனம் உடைந்து போகாது அன்பில் நிலையாய் உறுதியாய் நிற்பர். எல்லாவற்றையும் மனத்துணிவோடு தாங்கிக் கொள்வர்.

வள்ளுவர்: அன்பிலார் எல்லாந்தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு (கு. 72)

அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
அன்போடு இயைந்த தொடர்பு. (கு. 73)

அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. (கு. 74)

சின்னப்பர் அன்பு என்னென்ன செய்யும், என்னென்ன செய்யாது, என்னென்ன ஆற்றும் எனக் கூறினர். வள்ளுவரும் அவரைப்போன்று அன்பின் ஆற்றலை, பண்புகளை இவ்வாறு கூறுவார்.

'அன்பு இல்லாதவர் எல்லாப் பொருளையும் தமக்கே உரிமையாகக்கொண்டு வாழ்வர்; அன்பு உடையவர் தம் உடம்பையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர்,

என்பார். 'அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானுந் தமக்கேயுரியர்; அன்புடையார் அவற்றுனேயன்றித் தம்முடம்பானும் பிறர்க் குரியர் என்றவாறு' எனப் பரிமேலழகரும் ''ஒருவர்மாட்டும் தன்னெஞ்சில் அன்பி லாதவர் யாவரே, அவரே தம்முடம்பைப் பேணிப் பிறர்க்கும் ஈயாது பின்பும் நகைப்புக்கு உரியவராவார்; மற்றிவ்வாறன்றிப் பிறர்மாட்டு அன்புடையார் தமது பொருளெல்லாங்கொடுப்பது மன்றித் தமது உடம்புதானும் பிறவுயிர்க்கு ஓர் இடுக்கண்வரின் ஈந்து புகழினைப் பெறுவர் என்றவாறு எனக்காலிங்கரும் தெளி வுறுத்துவார்கள். கிறிஸ்து சிலுவையில் தன் எலும்பைக் கூட மனுக்குலத்துக்காக உவந்தளித்தார். அன்புக்குத் தியாகம் பற்றித் தெரியும். தன்னைத் தியாகம் செய்யவும் தெரியும். அருமையான உயிர்க்கு உடம்போடு பொருந்தியிருக்கின்ற உறவு, அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர். அன்பினல் உயிரும் உடலும் உறவு கொண்டாடுவதுபோல், அன்புள்ளம் கொண்ட வர்களின் நட்பும் விளங்கும். இந்த அன்பு பிறகு வீட்டின்பத்தைப் பெறத் துணைசெய்யும். அன்பு பிறரிடம் விருப்பம் உடையவராக வாழும் தன்மையைத் தரும். அஃது எல்லோரிடத்திலும் நட்பு என்று சொல்லப்படும் அளவற்ற சிறப்பைத் தரும். அன்புள்ளவரின் நல்ல பண்புகள் பிறரைக் கவரும், இதனல் எல்லோரும், சிறப்பாகப் பகைவர்கூட அன்புள்ளவரோடு நட்புக் கொண்டாட விழைவர். பரிதியார், அன்பு ஆர்வமென்று சொல்லப்பட்ட ஞான நேயத்தைக் கொடுக்கும்; அந்த ஞானம் பிறவா நெறியாகிய முத்தியைக் கொடுக்கும் என்றவாறு என்பார்.

> அன்புக்கு என்றும் முடிவு இராது.
> ......................................
> எனவே, விசுவாசம், நம்பிக்கை, அன்பு ஆகிய மூன்றுமே நிலையாய் உள்ளன; இவற்றுள் தலைசிறந்தது அன்பே (1 கொரி 13: 8 அ, 13)

அன்பு எப்பொழுதுமே செயலில் வெளிப்படும். அதே நேரத்தில் அதனுடைய தன்மையும் மாறுபடாது. இங்கு வள்ளுவரின் குறள் குறிப்பிடத்தக்கது.

> அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
> புன்கண்நீர் பூசல் தரும் (கு.71)

எல்லா வரங்களுக்குள்ளும் அது தலைசிறந்ததாகவே இருக்கும். அன்பு மறுவுல கிற்கும் அவனைத் தொடர்ந்து செல்லும். அங்குத் தன் இறுதிக்கோளான இறைவனை அறியும் நிலையை அடையும். எனவேதான், ''அன்பு இவ்வுலகின் ஆற்றலாக விளங்குகிறது. இப்பண்பு மறுவுலகின் ஆற்றலாகவும் உள்ளது'' என்கிறார் ஓர் அறிஞர்.

> வள்ளுவர்: அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
> இன்புற்றார் எய்துஞ் சிறப்பு (கு. 75)

உலகத்தில் இன்பம் உற்று வாழ்கின்றவர் அடையும் சிறப்பு, அன்பு உடைய வராகிப் பொருந்திவாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர். வள்ளுவர் தன்னலமற்ற அன்பே வாழ்க்கைக்குப் பொருளும், கருத்தும், குறிக்கோளும் கொடுக்கிறது என்பார். அன்பை நாடுகின்றவர்களுக்கு அது அறத்தையும், இன்பத்தையும் இவ்வுலகில் கொடுக்கும். மறுவுலகில் பேரின்பத்தையும் கொடுக் கும். ஒருவரின் வாழ்வின் முதலும் முடிவும் அன்பாகும்.

1. ஒருவனுக்கு எவ்வளவுதான் புறச்சிறப்பு இருந்தாலும், அன்பு அவனிடம் இல்லையேல் அவன் ஒன்றுமில்லாதவன், செத்தவன், என்பதை விளக்க சின்னப்பர் வெண்கலத்தையும், தாளத்தையும் எடுத்தாள்வார். வெண்கலத்தின் ஒலியும், தாளத்தின் ஓசையும் விரைவில் ஒன்றுமில்லாமல் போவதுபோல், அகத்தில் அன்பில்லாதவனின் புறச்சிறப்பு பொருளற்றதாகும் என்பார். வள்ளுவரும் அகத்தில் அன்பு இல்லையேல், புற உறுப்புக்களால் பயன் இல்லை என்பார். ''அகத்தில் அன்பு இல்லாத உடல் வெறும் 'அலங்காரம்', மரப்பாவை'' என்பார் பரிதியார். அகத்தில் அன்பில்லாதவர்கள் எப்படிக் காட்சி அளிப்பார்கள் என்றால் எலும்பைத் தோல் போர்த்தியிருப்பதற்குச் சமமானவர்கள். அவர்கள் உயிரற்ற பிணம் என்பார்.

2. பேரறிவு ஒருவருக்கு இருந்தாலும், மலைகளை ஒருவரால் இயற்கையாகப் பெயர்த்தெடுக்க முடியாது, அப்படிச் செயற்கரிய செயலைச் செய்யும் ஆற்றலை ஒருவர் பெற்றிருந்தாலும் அன்பு இல்லாவிடில் அவர் திறமை எல்லாம் வீண் என்பார் சின்னப்பர்.

அகத்தில் அன்பில்லாதவன் வாழ்க்கை வீணான வாழ்க்கை. பாலை நிலத்தின் பட்டமரம் தளிர்த்ததைப் போன்றது என்பார் வள்ளுவர். காலிங்கர் மனத்தில் அன்பில்லாத வாழ்க்கை பாறையின் மேல் மரம் தளிர்த்ததை ஒக்கும் என்பார். உலர்ந்த செடி கற்பாறையில் மீண்டும் தளிர்விடாது. அன்பில்லா வாழ்க்கையில் மீண்டும் மலர்ச்சி இல்லை. சின்னப்பர் ''மலையை''யும். வள்ளுவர் ''வன்பாற்கண்'' போன்ற தொடர்களையும் கையாண்டிருக்கும் நயம் போற்றத்தக்கது.

3. ஒருவர் தன் உடைமைகளை எல்லாம் ஏழைகளுக்கு வாரி வழங்கினாலும், நெருப்பில் எரிப்பதற்குத் தன் உடலையே கொடுத்தாலும் அன்பில்லாவிடில் இவ்வீரச் செயல்களினால் எவ்விதப் பயனும் இல்லை என்பார் சின்னப்பர். நல்ல செயல்களுக்கு மட்டும் அன்பு துணை நிற்பதில்லை. அது வீரச் செயல்களுக்கும் துணைபோகிறது என்பார் திருவள்ளுவர். எலும்பு இல்லாத புழுவை வெயில் சுடுவதுபோல் அன்பு இல்லாத உயிர்களை அறம் வருத்தும் என்பார் திருவள்ளுவர்.

சின்னப்பர் அன்பில்லாத வீரச் செயல்களால் பயன் இல்லை என்று கூற, வள்ளுவர் வீரச் செயல்கள் செய்வதற்கும் அன்பின் அவசியத்தை வலியுறுத்தவர். சின்னப்பர் எரிக்கும் நெருப்பை எடுத்தாள்வார். வள்ளுவர் காயும் வெயிலை உதாரணம் காட்டுவார்.

4. சின்னப்பர் அன்பின் சிறப்பை, பண்பைப் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ந்து, அன்பு தன்னலத்தை நாடாது என்று கூறுவார். வள்ளுவரும் அன்பு சுயநலமற்றது. பிறர் நலத்துக்காகத் தன் எலும்பையும் கொடுக்க வல்லது என்று கூறுவார்.

5. சின்னப்பரும், வள்ளுவரும் அன்பு இம்மையில் இன்பத்தை ஒருவருக்குக் கொடுக்கும், மறுமையில் அது பேரின்பத்தையும் கொடுக்கும். அன்பின்

சிறப்பு எத்தகையது என்றால் அது ஒருவர் வாழ்வின் முதலும், முடிவும் ஆகும் என்பர்.

சின்னப்பரும், வள்ளுவரும் வெவ்வேறு காலத்தவராயினும், வெவ்வேறு நாட்டினராயினும், இருவரும் எடுத்துக்கொண்ட ''அன்பு'' என்ற தலைப்பு அனைத்துலக மாந்தருக்கும் பொதுவானதாகும். இருவரும் வாழ்க்கைக்கு அன்பின் இன்றியமையாத் தன்மையை, அதன் அழியாத் தன்மையைத் தங்கள் ''அன்புடைமை'' என்ற படைப்பு மூலம் தெளிவாகக் காட்டியுள்ளனர்.

1. Spicq Ceslaus O. P., Agape in the New Testament. Vol. 11 Herder St. Louis and London 1965, p. 145.
2. Spicq Ceslaus op. cit p. 145.
3. One is the Hindu philosopher, Calanos who wrote early in his life to Alexander "Fire reaches only the body. We are above that; while still alive we allow ourselves to be burned." He committed suicide by fire. Zarman ocheges, another Hindu, who had himself burned at Athens in 20 A.D. at the end of his happy life. His tomb is inscribed. "He made himself immortal. Philo (Quod Omnis prob. liber 96) the suicide by Strabo 15: 1, 68, Diodoros of Sicily. 17: 107 cf. according to Nicholas of Damas and quoted by Strabo 15: 1, 73 in Spicq Ceslaus. op. cit. p. 148.
4. Love never treats anyone unfairly, as a man would do who provoked a girl's passions and refused to marry her. BARRETT C.K. commentary on the first epistle to the Corinthians. A & C Black, London, 2nd Edition 1971 p. 303 also "Love does not put on a fine show". Barrett op. cit. p. note 2 p. 298.
5. "Love not merely does not seek that which does not belong to it; it is prepared to give up for the sake of others even what it is entitled to. – Barrett C. K. op. cit. p. 303 also மத்தேயு 5: 38-42; லூக். 6:35; 1 தெச. 2:9; 1கொரி. 10: 24, 33; உரோ. 14:1-15-6; உரோ. 15:3; பிலிப். 2:4.
6. Erich Fromm. Man for Himself. An enquiry into the Psychology of ethics. Routledge and Kegan Paul Ltd. London, 1956, p. 126.
7. Dhavamony Mariasusai. Love of God according to Saiva Siddhantha, Oxford 1971, p. 114

# நாயக நாயகி பாவ வெளிப்பாடு

பொ. விசயலட்சுமி, எம்.ஏ.,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

புலன்களால் மனத்தால் தான் உணரும் ஒவ்வொன்றையும் மனிதன் வெளிப்படுத்தத் துடிக்கின்றான். இவ்வகையில் இறையனுபவத்திலும் வெளிப்பாடு ஊற்றெனப் புறப்படுகிறது. ஆனால் வெளிப்பாட்டுணர்வுக்கும் அதன் மொழிக்கும் இறையனுபவம் ஓர் அறைகூவலாகத் திகழ்கிறது. இறையனுபவம் 'நாயக நாயகி பாவமாய்' வெளிப்படுதலை இங்கு ஆராயலாம்.

வெளிப்படுத்தலாவது அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ளல் அல்லது அறிவித்தல். இதற்குச் சொற்கள் தேவை. ஆகவே, இறை இணைவு அனுபவம், வெளிப்படுத்தல், சொற்கள் என்ற மூன்று வளர்நிலை காணப்படுகிறது. இதனால் இறை இணைவு அனுபவம் (1) சொல்லக்கூடாது, (2) சொல்ல இயலாது, (3) சொல்லியே தீரவேண்டும் என்ற மூன்று படி நிலைகளில் தங்குகிறது.

இறை இணைவு அனுபவமாம் பேரின்பத்தைச் சொல்லால் விளக்க முடியாது என்ற கருத்து பொதுவாக எல்லாரும் ஒருமித்துக் கூறும் முடிபாம். இதற்கு அடிப்படையாக நான்கு காரணங்களைக் காண்கிறோம்.

1. இறையனுபவத்தின் மீஉயர் தன்மை
2. மொழியின் குறைபாடு
3. அனுபவித்தவனின் இயலாமை
4. கேட்பவனின் அறியாமை

**மீ உயர் தன்மை**

''இறை இணைவு அனுபவம் விளக்கத்திற்கு அப்பாற்பட்டது. அதை வெளிப்படுத்த மொழியோ வேறு வழியோ இல்லை. உலகியலிலும், மொழியோ வேறு வழியோ இல்லை. உலகியலிலும் ஆப்பிள் பழத்தைச் சுவைக்காதவனுக்கு ஆப்பிளின் சுவையை விளக்க முடியாது. விழியற்றவனுக்கு வண்ணத்தை விளக்க முடியாது. அதுபோல அந்நிலை பேரின்பமானது, மகிழ்வானது, அமைதியே வடிவெடுத்தது என்று அவ்வளவுதான் சொல்ல முடியும். மற்றப்படி நீயே நுகர்ந்தால்தான் உணரமுடியும்'' என்று சுவாமி சிவானந்தர் தம் மடலில் உரைக்கிறார்.

**மொழியின் குறைபாடு**

மனித மொழியால் இறைஇணையை உள்ளபடியே விளக்க இயல்வதில்லை. இறை இணைவு அனுபவத்தை விளக்க முற்படும்போது மொழி ஊனப்பட்டுப் போகிறது. ஆனால் அம்மொழி அவனது உடனொத்த மனிதரால் விளங்கிக்

கொள்ள முடியாது. அதனுல் அவன் தன் இறை இணேவு அனுபவத்தைத் தெரிவிக்கும் போது உடனெத்த மனிதர் விளங்கிக்கொள்ளும் பாங்கில் சாதாரண பொதுவான மொழியையே பயன்படுத்த வேண்டியுள்ளது.

**அனுபவித்தவனின் இயலாமை**

இறைஇணேவு அனுபவத்தில் முழுமையாக ஈடுபட்டஅனுபவத்தை விளக்குமின் என்று கேட்டபோது,கபீர் ''ஆத்மானுபூதியை விளக்கவா?
ஊமை வெல்லமுண்டான்,
அதன் சுவையை எவ்வாறு உணர்த்துவான்?
என்று வினவினராம்.

**கேட்பவனின் அறியாமை**

இறை இணே அனுபவத்தைக் கேட்டறிபவனுக்கும் ஒரு தகுதி வேண்டும். ''பிறவிக் குருடனுக்குக் காட்சி அனுபவத்தை விளக்க முயல்கிறவரைப் போல அவன் உணர்கிருன். தன்னேயொத்த பிற இறை இணேவாளர்களுக்கு இதனே உணர்த்துதலில் அவனுக்குத் தொல்லேயில்லே. சமய உணர்வுத்'' துலக்கமில்லாதவர்க்கு அவன் புதிராகவே இருக்கிருன். இந்நான்கு தடைகளேயும் தாண்டிய பின்னரே சொல்லித் தீருதல் எனும் வெளிப்பாடு நிகழ்கிறது.

**சொல்லியே தீர வேண்டும்**

'இறை இணேவனுபவம் யாருடனும் பகிர்ந்து கொள்ள முடியாத அளவுக்குத் தூயது, உயரியது எனினும், அதைச் சொற்களில் வடித்தால் அது தன் மதிப்பரிய மணத்தை இழக்கும் என்ற அச்சமிருந்தாலும் கூட இறை இணேவாளர் தம் கண்டுபிடிப்பை உலகோருடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற தவிப்பில் மிக்க தயக்கத்துடன் வெயிடுகின்றனர்.''

இறை இணேவு அனுபவ வெளிப்பாட்டில் முதல் சிக்கல் எழுவது இங்கே தான். உலகியலுக்குக் கட்டுப்படாத மீஉயர்வாகிய இவ்வனுபவத்தை விளக்க மொழியால் இயல்வது இல்லே. இருப்பினும் இறை இணேவு அனுபவ வெளிப்பாட்டில் ஏராளமாய்ப் பங்கேற்றுள்ளது பாலியல் மொழியே. அது பயன்பட்டுள்ள அடிப்படைகளே ஆராய்ந்து கீழ்க்கண்டவாறு வகுப்போம்.

**கடன் வாங்குதல் கோட்பாடு**

உலகியலிலிருந்து சிற்றின்ப மொழியாகிய பாலியல் மொழி கடன்வாங்கப்படுகிறது. கடன் வாங்குதல் ஏன் என்று ஆராயும் போது பல்வகைக் காரணங்களே நாம் காண முடிகிறது.

**வேறு மொழி இல்லே**

'இறை இணேவு அனுபவத்தை விளக்கப் பாலியல் மொழியைப் பயன்படுத்துவதற்கு முதன்மையான கரணம், அதை வெளிப்படுத்த வேறு மொழி இல்லே என்பதே. இறை இணேவாளர் மனிதக்காதல் மொழியைப் பயன்படுத்த வேண்டியுள்ளது. அல்லது வெளிப்படுத்தும் முயற்சியை அவன் கைவிட்டாக வேண்டும்.

தான் உணர்ந்ததை மற்றவர்க்குக் குறிப்பிட அது ஒன்றே வழி எனத் தெளிவாகச் சுட்டுகிருர் ஜேம்ஸ் பிசெட் ப்ராட்

### அறிந்து கொண்டு அறியாததுணர்த்துவது

பொதுவாக, உவமைகள் கூறும்போது அறிந்த பொருளைச் சுட்டி அறியாத பொருளை உணர்த்தும் முறை உண்டு. அறிந்ததை உவமையாகச் சுட்டுவதனுல் அறியாதது எவ்விதத்ததும் தன் சீரில் குறைந்து விடாது. ''அதனை அவனுக்கு உணர்த்தப் போந்த மற்றொருவன் அவன் நுகர்ந்து மகிழ்ந்த களாக்கனியைச் சுட்டி அதைவிட வடிவத்தானும் சுவையானும் பன்னூறு மடங்கு பலாப்பழம் பெரியதெனப் புகல முற்படுவான். அது போலக் கடவுளைக் கண்டு அவர்தரும் இன்பப் பெருக்கினை நுகர்ந்தறியாத நம்முனோர்க்கு அதனையுணர்த்த உலகியலில் இன்பமுடையதைக் கொண்டு நாம் நுகரும் பொருள்களைக் காட்டி அவற்ருன் வரும் இனிமையினும் மிக உயர்ந்தது என்று கூறுதலில் இழுக்கொன்றும் இல்லை'' என்னும் வெள்ளை வாரணர் கூற்று ஏற்புடைத்து.

### கண்டதை வைத்துக் காணுததுணர்த்துவது

'ஆண்டவனுடைய நிறத்தையும் அழகையும் ஆபரணங்களையும் மனித சுபாவத்தை வைத்துத்தான் எல்லாரும் பாடுகிருர்கள். தங்கத்துக்கு மேல் தாமரைக்கு மேல் வானத்துக்கு மேல் அழகு நமக்குத் தெரியாது. அந்தப் பொருட்களை வைத்துத் திருமாலைத்தியானிக்கிறோம். எல்லாப் பாரத்தையும் அவன் திருவடியில் பரிசுத்தமடைந்த பக்தர்களின் பக்தியை பரமவேகத்தை அடைந்த அவர்களின் ஆசையை எப்படி விளக்குவது?நாமறிந்த குற்றமற்ற பெண்ணின் காதலை வைத்துப் பாடுவதற்கு மேல் என்ன செய்ய முடியும்? நாம் இவ்வுலகில் கண்ட ஆனந்தம் இவ்வுலகில் பட்ட விரகதாபம் இவற்றை வைத்துத் தான் பக்தர்களுடைய தாபத்தையும், இசையையும் ஒருவாறு சொல்ல முடியும். இதற்குமேல் சுகம் இல்லை. இதற்குமேல் துக்கமில்லை என்று சொல்லக்கூடிய சுகமும் விரகதாபமும், நாயக, நாயகி சம்பந்தத்தில்தான் நாம் இவ்வுலகில் காணக்கூடியது. ஆனபடியால் அதை வைத்து நம்மாழ்வாரும் இன்னும் பல பக்திக் கவிஞர்களும் பாடுகிருர்கள்'.

> 'கண்டதைக் கொண்டு காணுததை அடைதல் என்ற முறையில் சிற்றின்ப வாயிலாகப் பேரின்பத்தை அறிவதே பொருந்தும்' என்பர்.

### மனிதக் காதல் தெய்வக் காதல் ஒற்றுமை

உளவியல் வல்லுநர் பலர் இறை இணை அனுபவத்தை ஒத்துக்கொள்வதில்லை. மனத்தின் நிகழ்ச்சிகளைப் பயிற்சிகள் மூலமாகவே விளக்கிப் பழகிப்போன அவர்களால் இறை இணை அனுபவத்திற்கு மனச்சோதனைகள் மூலம் முறையான விளக்கம் தர இயல்வதில்லை. இருப்பினும் உளவியலாளர் கிளார்க் தம் நூலில் 'அது காதல் கொண்ட நிலைக்கு இணையானதுதான். மற்றவர்கள் கண்ணுக்கு மிகச் சாதாரணமாகத் தோன்றும் ஒரு பெண், கண்ணுக்குத் துணைச் சிறப்பு வாய்ந்தவள் இருக்கிருள் என்பதை அவள்மீது காதல்கொண்ட ஒரு இளைஞனுல் விளக்க முடிகிறதா? அதுபோலத்தான் இறை இணைவு அனுபவத்தில் காதல்,

திருமணம் என்ற மொழிகளைக் கையாளும் காரணம் இதுவாக இருக்கக்கூடும்' என்கிறார்.

இதனால் இருகாதலுக்கும் இடையே உள்ள ஒற்றுமை காரணமாகவும் கடன் வாங்கப்படுவதை அறியலாம்.

**உட்பொருள் கோட்பாடு**

இறைஇணையனுபவத்தைக் கருத்துக்களாக வெளிப்படுத்துவது கடினம். உள்ளுணர்வை விளக்குவதற்கு இருப்பில் உள்ள கோட்பாடுகள் ஒத்து வருவதில்லை. எனவே இறைஇணைவாளர், விளக்க முடியாத உள்காட்சியை ஓரளவு உணர்த்து வதற்கு வெளி உலகப் படிமங்களைப் பயன்படுத்துகிறார்கள்.

உட்பொருள் கோட்பாட்டை ஆதரிப்பவர்கள் அனைவருமே இச்சிற்றின்ப மொழிக்கும் சிற்றின்பத்திற்கும் தொடர்பே இல்லை என்றுதான் கருதுகிறார்கள்.

ஆழ்வார்களில் நாயக நாயகி பாவம் முழுவதுமே ஒரு தொடர் உருவக வெளிப்பாடே என்று கருதுபவரும் உட்பொருள் கோட்பாட்டுக்குச் சார்புக் கருத்துடையவரே.

இறை இணைவு அனுபவமொழி முழுவதுமே கடினமாகவும், குறியீடுகள் நிறைந்ததாகவும் அமைகிறது. இருண்மை அதன் நோக்கமன்று; ஆனல் சொல்லப் படும் கருத்தின் தன்மையே அம்மொழிக்குக் காரணம். இதனல் பாடலில் ஒவ்வொரு அடிக்கும் உட்பொருள் விளக்கம் கூறும் இயல்பு மிகுதியாகிறது. இதையொட்டி விளக்கப்படும் சமயத்துவங்களும் மிகுதியாகின்றன.

**வேற்றுமைக் கோட்பாடு**

உட்பொருளைப்பற்றி மிகுதியும் சிந்திப்பவர்கள் மேலோட்டமான இப் பாலியல் மொழிக்கும் சிற்றின்பத்துக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்று கருதுகிறார்கள். சொல்லப்பட்டிருப்பதெல்லாம் ஆழமான தத்துவப் பொருளே என்று எண்ணுகிறார்கள். அவ்வாறு எண்ணும்போது, பாயியல் மொழியிலிருந்து இறை இணைவு அனுபவம் வெகுதொலைவு பட்டதாகத் தோன்றும். வழங்கி அடிப்பட்ட இக்காதல் சொற்றொடர்கள் எல்லாமே பொன்னுக்கு மாற்றுப் பொருளாக வழங்கப்படும் செப்பு நாணயமேயன்றி வேறல்ல எனத் தோன்றும்.

எனவே, இக்காதல் மொழி உடல்நினைவு காமவெறி இவற்றினின்றும் முற்றிலும் வேறுபட்டது என்று வேறுபடுத்துவர்.

**ஒற்றுமைக் கோட்பாடு**

வேற்றுமைக்கோட்பாடுடையோர் எவ்வளவிற்குச் சிற்றின்பத்தை விட்டு விலகி ஓட முனைகிறார்களோ அவ்வளவிற்கு, ஒற்றுமைக் கோட்பாடுடையோர், நெருங்கி வருகின்றனர். ஒற்றுமைக் கோட்பாடு முதலில் 'அதைப்போல' என்ற உவமைக் கோட்பாட்டில் தலைகாட்டுகிறது. 'ஒரு பெண்ணின் ஒவ்வொரு நடை, நொடி, அடிநயம் ஆகியவைகளில் இன்பம் மிளிர்வதைப் பெண்ணலம் கண்டோன்

அனுபவிக்க முடிகிறது. இஃதேபோல் இறைநலம் கண்டோன் ஒவ்வொரு உலகக் காட்சி, தோற்றம், காலமாறுதல், நொடி ஆகியவைகள் இறைவனைச் சொரிந்து கொண்டு இருக்கின்றன என்ற உண்மையை நுகர முடிகிறது'.

இது முற்றிய வடிவில் சிற்றின்பம் பேரின்பத்தோடு தொடர்புடையது என்ற கருத்து உருவாகி விடுகிறது. அவ்வகையில் பாலியல் பரம்பொருளொடு இணையும் இணைவை உணர்த்தும் பாலமாகச் சொல்லப்படுகிறது.

நாயகநாயகி பாவ மொழியின் பயன்பாடு உலகளாவிய நிலையில் பல மொழிகளிலும் இடம் பெறுகிறது. பாலியல் மொழி இறை இணைவியலில் மிக இயற்கையாகப் பயன்பட்டு வந்துள்ளது. பலசமயம் மதத்தின் தத்துவங்கள் இதனோடு இணைக்கப்பட்டிருக்கின்றன.

வைணவக் கோட்பாட்டின்படி பகவான் ஒருவனே ஆண் மகன், மற்று ஆடவர் உட்பட உலகிலுள்ள அனைவரும் அப் பரமபுருஷன் முன்னிலையில் பெண் களே என்று கொள்ளும்போது, இம்மொழியின் வெளிப்பாடு மேலும் உறுதி பெறுகிறது. அவ்வாறும்போது,

'உலகியல் மொழியிலிருந்து கடன் வாங்கப்பட்டது என்ற கோட் பாடும், பிறவும் அடிபட்டுப்போகின்றன'.

ஆழ்வாரைப் பொறுத்தவரை கடவுள் ஆண் மக்கள் யாவரும் பெண்கள் என்ற தத்துவம் மிகவும் கைகொடுக்கிறது. நாயக, நாயகி, பாவ வெளிப்பாடு இயற்கையாய்ப் பரிமளிக்கிறது.

அது ஒரு காரணம் எனினும் அதனினும் ஆழமான ஒரு அடிப்படையும் உள்ளது. அது சங்க இலக்கண, இலக்கியத்துள் காணப்படும் அகமரபுகள், காதற் பாடல்கள் ஆகியவற்றின் செல்வாக்கும், அவற்றில் ஆழ்வார்கட்கிருந்த பயிற்சியு மாம்.

# இந்தியக் காவிய மரபும் ஆரம்பகால ஈழத்துத் தமிழ்க் காவியங்களும்

எஸ். வன்னியகுலம்
ஆல்வாய், ஸ்ரீலங்கா

காவியம் என்னுஞ் சொல்லும் அச் சொல் தரும் பொருளும் ''காவ்ய'' என்ற வடசொல்லின் வழிவந்தவை.- (காப்பியம்-தமிழ்) தமிழ்க் காவியங்களிலே வடமொழிக் காவியங்களின் செல்வாக்குச் செறிந்திருக்குமென்பதும், அச் செல்வாக்கினுலே தமிழ் மொழியிலுள்ள ஏனைய இலக்கிய வடிவங்களும் பாதிப்பினுக் கிலக்காகியிருக்கும் என்பதும் பெறப்படும். வடமொழியிலே தண்டியாசிரியர் இயற்றிய காவ்யாதர்சம் வடமொழிக் காவிய இலக்கணங்களே வரையறுக்கின்றது. தமிழ்க் காவியங்களின் இலக்கணங்களே வடமொழிக் காவ்யாதர்சத்தின் வழி நூலான தண்டியலங்காரம் கூறுகின்றது. பன்னிரு பாட்டியல் தண்டியலங்காரத் தினைப் பின்பற்றி வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், மாறனலங்காரம், இலக்கணவிளக்கப் பாட்டியல், தொன்னூல் விளக்கம் ஆகிய நூல்களும் காவிய இலக்கணங் கூறுகின்றன.

''பெருங்காப்பிய நிலே பேசுங்காலே'' என்ற தண்டியலங்காரச் சூத்திரம் பெருங்காப்பிய இலக்கணங்களே வரையறைசெய்கின்றது. வாழ்த்து, வணக்கம், வருபொருள் கூறுவதாய் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் புருஷார்த்தங்களேயும் பயப்பதாய் நாடு, நகர், பருவகால வருணனைகள் மிக்கதாய்த் தன்னிகரில்லாத் தலேவன் ஒருவனது அரசியல், இல்லற வாழ்க்கையின் மாண்பினைக் கூறுவதாய்ச் சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் முதலியனவாகப் பகுத்துக் கூறப்படும் நூலே பெருங்காப்பியம் எனத் தண்டியலங்காரம் கூறுகின்றது. அறமுதலுன்கிற் குறைபாடுடையது காப்பியமாகும். நாடகமும் ஒருவகையிற் காப்பியமே என்பதனை மணிமேகலேயிலே வரும் ''நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்'' என்னும் வரி விளக்குகின்றது. சிதம்பரப் பாட்டியலுடையார்,

''அறையுமிதிற் சில குறைபாடெனினுங் குன்று
தறம் பொருளின் பம்வீட்டிற் குறைபாடாகப்
பெறுவதுகாப் பியமாகும் புராணமாகும்''

என்ற சூத்திரத்தின்மூலம் புராணம் காப்பியமாகும் என்பர். இதிகாசமும் அடிப்படையிலே பெருங்காப்பிய இலக்கணங்களேக் கொண்ட பேரிலக்கியமாகவே கருதப்பட்டு வருகின்றது. தண்டியலங்காரப் பழையவுரைகாரர்,

''பாடப்படுவனவெல்லாம் காப்பியமன்றே. பொருட்டொடர் நிலேயைக் காப்பியமென்றதென்னையெனின் சேற்றுள் தோன்றுவனவெல்லாம் பங்கயமெனப் பெயர்பெறுமாயினும் அப்பெயர் தாமரையொன்றன்

மேற்றேயாயினவாறு போல இப்பெயர் பொருட்டொடர்நிலைக்கேயா யிற்று''

எனக் குறிப்பிடுவது ஈண்டுக் கருத்தூன்றிக் கவனிக்கற்பாலதாகும். எனவே பண்டு காப்பிய இலக்கணங்கள் வரையறுக்கப்பட்டிருப்பினும் சொற்றொடரும் பொருட் டொடரும் தொடர்ந்து வருவனவெல்லாம் காப்பியமெனக் கருதப்பட்டு வந்துள்ள மையும் புலப்படுகின்றது.

ஆயினும், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகியவைந்தும் பெருங்காப்பியங்களெனவும் சூளாமணி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாககுமாரகாவியம், நீலகேசி ஆகியவைந்தும் காப்பியங்களெனவுங் கொள்ளப்படுதல் இன்றைய மரபாகவுள்ளது. இவற்றிலே சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சங்கமருவிய காலத்திலும், ஏனைய மூன்று பெருங்காப்பியங்கள் பஞ்சகாவியங்கள், இதிகாசங்கள் ஆகியன சோழராட்சிக் காலத்திலும் தோற்றம்பெறுகின்றன. பல்லவ மன்னராட்சிக் காலத்திலே புராண, பக்தி இலக்கியங்களே பெருமளவு முகிழ்ப்பதை அவதானிக்கமுடிகிறது.

இந்தியாவிலே, கி. பி. 750—1300 ஆண்டுகாலப் பகுதியிலே காவியங்கள் பெருமளவினவாகத் தோற்றம் பெற்றமைக்கு அக்கால அரசியற் சூழல் சாதகமாய் இருந்திருப்பதனை நாம் அவதானிக்கமுடிகிறது. பேராண்மையுடைய தமிழ் மன்னர் களின் ஆட்சியிலே அவர்தம் ஆட்சிஎல்லைகள் விரிவடைந்தன, பேரரசுகள் உதய மாகின; உலக வாணிகத் தொடர்புகள் வியாபித்தன. இதனால், நாட்டிலே செல்வம் மிகுந்தது, செழிப்பு வளர்ந்தது; மக்கள் வாழ்க்கையிலே அமைதியும் ஒழுக்கமும் நிறைந்தன. மன்னன் தெய்வமாக மதிக்கப்பட்டான். அவனது வாழ்க்கை மக்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைவதாயிற்று. எனவே, அவனது வாழ்க்கையையும் அவனது வெற்றிப் பிரதாபங்களையும் தொடர்நிலையாகப் பாடுவது இன்றியமையாததாயிற்று.

> ''மன்னர் வாழ்ந்த வகை மக்களுடைய மனத்தைப் பிணித்தது மட்டுமின்றி, பெரும் புலவர்களுடைய கற்பனையையும் தூண்டவல்லதாகக் காணப்பட்டது. இங்ஙனம் மன்னருடைய வாழ்க்கை சிறப்புற்று விளங்கி யமைதான் தமிழிற் காவிய உற்பத்திக்கு ஒரு முக்கிய காரணமாகும்''.

எனத் தமிழ்க் காவியங்களின் தோற்றம்பற்றி விளக்குவர் பேராசிரியர் வி. செல்வ நாயகம்.

ஆயின், ஈழத்திலே இந்தியாவிலமைந்ததுபோன்ற பேரரசுகள் அமை வதற்கான வாய்ப்புக்கள் ஏற்படவில்லை. யாழ்ப்பாணத்தைத் தலைநகரமாகக் கொண்டு அரசோச்சிய ஆரியச் சக்கரவர்த்திகளின் ஆட்சிக்காலத்துக்கு முற்பட்ட (கி. பி. 1240 க்கு முன்) ஈழத்துத் தமிழ் மக்களின் அரசியல், இலக்கிய வரலாறு இன்றுவரை தெளிவாகவில்லை. கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியின் கடைக்கூற்றிலே ஆரியச் சக்கரவர்த்திகள் ஆட்சிசெய்யத் தொடங்கிய காலத்தி லிருந்தே ஈழத்துத் தமிழ் மக்களின் அரசியல் இலக்கிய வரலாற்றை ஓரளவேனும் தெளிவாக அறியமுடிகின்றது. உறுதியான நிலைப்பாடுகளற்ற அரசியற் சூழலிலே இக் குறுநில மன்னர்களாற் சிறப்பான ஆட்சியை நிறுவமுடியவில்லை.

ஈழத்தின் தென்பகுதியிலிருந்தும் தென்னிந்தியாவிலிருந்தும் அடிக்கடி நிகழ்ந்த ஆக்கிரமிப்புக்களின் மத்தியிலே ஒரு பேரரசை இவ்வாரியச் சக்கரவர்த்திகளினுல் அமைக்கமுடியாது போயிற்று. இதனுலேதான் சீவகன்போன்ற தன்னிகரில்லாத் தலைவனெருவனே கோவலன் போன்ற பெருங்குடி வணிகனெருவனே ஈழத்திலே உருவாகமுடியாதுபோயிற்று.

ஆனுலும், ஆரியச் சக்கரவர்த்திகளின் ஆட்சிக்காலத்திலேயே காவியங் களெனக் கொள்ளத் தகுந்த இலக்கியங்களும் ஈழத்திலே தோற்றம் பெறுகின்றன. பரராசசேகரன், செகராசசேகரன் ஆகிய பட்டப்பெயர்களை மாறிமாறிப்பெற்று ஆண்டுவந்த இவ்வாரியச் சக்கரவர்த்திகளே இலக்கியங்களை ஆக்குவோராயும், ஆக்கும் புலவர்களை ஊக்குவிப்போராயும் திகழ்ந்துள்ளனர். ஈழத்தின் தலைசிறந்த புராணங்களுள் ஒன்ருகிய தட்சிணகைலாச புராணமும், பெருங்காப் பியங்களுக்கு நிகர்த்ததாகக் கருதப்படும் கண்ணகிவழக்குரையும் 5ம் செகராச சேகரனுற் பாடப்பட்டவையாகும். அரசகேசரி இரகுவமிசம் என்ற காவியத்தை யும் 6ம் பரராசசேகரனின் தம்பி செகராசசேகரன் செகராசசேகரம் என்ற நூலையும் பாடியுள்ளனர். செகராசசேகரமாலை, பரராசசேகரம், வையாபாடல் ஆகியவை யும் ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்திற் பாடப்பட்டவையாகும்.

இனத்தாலும் மொழியாலும் கலாசார மரபுகளினுலும் வேறுபட்ட போர்த்துக்கேயர், ஒல்லாந்தர், ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் ஈழத்திலே காவியங்களும் புராணங்களும் ஏனைய பிரபந்த வகைகளும் தோன்றவேசெய்தன. இக்காலப்பகுதியிலே, இந்தியாவிலே பெருவழக்கிலிருந்தது போன்று பள்ளு, குறவஞ்சி, கோவை முதலிய பிரபந்த வடிவங்களே ஈழத்திலும் பெருமளவின வாகத் தோற்றம் பெற்றன. போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் ஆட்சிக்காலப் பகுதியிலே தண்டிகைக்கனகராயன்பள்ளு, பருளைவினயகர்பள்ளு, கதிரமலைப்பள்ளு குருநாதசுவாமிகிள்ளைவிடுதூது, வெருகல்சித்திரவேலாயுதர்காதல், கல்வளையந் தாதி, கரவைவேலன்கோவை முதலிய பிரபந்தங்களும் மறைசையந்தாதி, புலியூர் யமகவந்தாதி, திருக்கரைசைப்புராணம் முதலிய தலபுராணங்களும் சிவராத்திரி புராணம், ஏகாதசிபுராணம் ஆகிய விரதமகிமை கூறும் புராணங்களும் தோற்றம் பெற்றன. ஞானப்பள்ளு, திருச்செல்வர்காவியம், திருச்செல்வர்அம்மானை, அர்ச். யாகப்பர்அம்மானை, ஞானனந்தபுராணம் முதலிய கிறித்தவ இலக்கியங்களும், இக் காலத்தியிலேயே தோன்றின. ஆங்கிலேயராட்சிக் காலத்திலே, இவ்வகைப் பிரபந்தங்களுடன் பெருமளவு சமயவிளக்க நூல்களும், கண்டன நூல்களும், மொழிபெயர்ப்பு நூல்களும் தோற்றம்பெற்றன.

இவ்வாறு ஈழத்திலே பல்கிப்பெருகிய இலக்கியங்களிற் சில, சிறப்பாகக் காவியங்களும் புராணங்களும், இந்தியக் காவிய மரபான வடமொழிக் காவிய மரபினையும் தென்னிந்தியத் தமிழ்க் காவிய மரபினையும் பின்பற்றியவையாகவே அமைந்துள்ளன. வடமொழியிலே காளிதாசர் இயற்றிய இரகுவம்சம், இருது சங்காரம் ஆகிய காவியங்களை ஈழத்திலே முறையே அரசகேசரியும் சதாசிவஐயரும் அதர்ப்பட மொழிபெயர்த்துள்ளனர். 5ம் செகராசசேகரனுல் இயற்றப்பட்ட தட்சிணகைலாசபுராணம் வடமொழிப் புராணமரபினைப் பின்பற்றிப் பாடப் பட்டதாகும். தென்னிந்தியத் தமிழ்க் காவியமான சிலப்பதிகாரக் கதையைப் பொருளாகக் கொண்டு 5ம் செகராசசேகரன் கண்ணகிவழக்குரையைப் பாடினர்.

வீரமாமுனிவர் இயற்றிய கிறித்தவக் காவியமான தேம்பாவணியும், ஈழத்துப் பூலோகசிங்கமுதலியார் பாடிய திருச்செல்வர்காவியமும் அடிப்படை இயல்பு களிலே ஒரேதன்மைத்தானவையே.

ஈழத்திலே தோன்றிய கண்ணகிவழக்குரை கர்ணபரம்பரையாக வாய் மொழியாக வழங்கிவந்து பன்னூறு ஆண்டுகளின் பின்னரே காவியமாக்கப் பட்டது என்பதற்குப் பல்வேறு சான்றுகள் காணப்படுகின்றன. சிலப்பதிகாரத் திலே குறிப்பிடப்படும் கயவாகு மன்னன் காலந்தொடக்கம் ஈழத்திலே கர்ண பரம்பரையாக வழங்கிவந்த கண்ணகியின் கதை கி. பி. 13ம் நூற்றூண்டிலேயே காவியவடிவம் பெறுகின்றது. இதனுல், ஈழத்தின் சமூக பண்பாட்டியல்புகளுக் கேற்பவே கண்ணகியின் கதை காவியமாக்கப்பட்டுள்ளமையை நாம் அவதானிக் கலாம். இன்றும், யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலுமுள்ள கண்ணகி அம்மன் தலங்களிலே விழாக்காலங்களிற் கண்ணகிவழக்குரை படிக்கப்பட்டுவருவது இதற்குத் தக்க சான்ருகும்.

> ''கண்ணகிவழக்குரை தமிழ்நாட்டின் கோவலன் கதையைப் பலவிடங்களிற் பின்பற்றியபோதும் பொதுவாக அது இளங்கோ அடிகளின் காவியத்தையே தழுவிச் செல்வதாகக் கருதப்படுகிறது''

எனக் கூறுவர் எப். எக்ஸ்.சீ. நடராசா. இக் காவியத்தைக் கருத்தூன்றிப் படிப் போர் இவரது கூற்றிலே உண்மையில்லை என்பதனைத் தெளிவாகப் புரிந்துகொள்வர். காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப மூலகாவியங்களிலே இல்லாத சில பகுதிகள் வாய்மொழிக் காவியங்களிலே சேர்க்கப்படுவதும், சில பகுதிகள் விடப்படுவதும் இயல்பானதாகும். இப் பண்பினைக் கண்ணகிவழக்குரையிலே நாம் பரவலாக அவதானிக்கலாம்.

கண்ணகி வழக்குரையிலே பல புதிய தகவல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இதற்கு அடிப்படையான காரணங்கள் எனப் பின்வரும் நான்கு காரணங்களைக் குறிப்பிடலாம்.

1. கயவாகுமன்னன் காலந்தொடக்கம் கண்ணகி வழிபாட்டை ஈழத் திலே நிலைபெறச்செய்யும் முயற்சிகள் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளன. அவ்வாறு கண்ணகியைத் தெய்வமாகப் பரவுதற்கு அவள் தெய்வீகத் தொடர்பு கொண்டவள் என எடுத்துக்காட்டுவது இன்றியமையாததாகியது. இதனுலேயே கண்ணகிவழக்குரையிலே கண்ணகி தேவர்குலப் பெண்ணுக வருணிக்கப்பட்டுள் ளாள். இவ்வாறு தேவர்குலப் பெண்ணுகப் படைக்கப்பட்டமையினுலேயே ஈழம் வாழ் தமிழ்மக்கள் மத்தியில் மட்டுமன்றிச் சிங்களமக்கள் மத்தியிலும் கண்ணகி வழிபாடு இன்றும் வேரூன்றியுள்ளது. சோழநாட்டிலே பிறந்து, பாண்டிநாட்டிலே புரட்சிசெய்து, சேரநாட்டிலே தெய்வமாகிய கண்ணகிக்குத் தமிழகத்திலே கோவில் ஒன்றுதானும் இல்லாதிருக்க, ஈழத்தின் மூலைமுடுக்குகளெங்கும் கோவில்கள் அமைக்கப்பட்டிருப்பதும் கண்ணகி தெய்வமாகச் சிருஷ்டிக்கப்பட்டமையினுலே யாகும்.

2. ஈழநாட்டின் கரையோரங்களிலே 12, 13ம் நூற்றூண்டு காலப்பகுதி களிலே முக்கியர், கரையார் ஆகிய சமூகக் குழுவினரே பேராதிக்கமுடையோராகத் திகழ்ந்தனர். கப்பல் கட்டுதல், மீன்பிடித்தல் ஆகியன அவர்தம் தொழில்களாய மைந்தன. அவர்தம் அரசியல் சமூக முக்கியத்துவத்தை நிலைநிறுத்தவேண்டும்

என்பதற்காகவே கப்பல்வைத்த காதையும் கடலோட்டு காதையும் இந்நூலிலே அமைக்கப்பட்டுள்ளன.

> ''அன்றியும் கண்ணகிவழக்குரை நூலானது குருகுலத்தார் மாண்பினையும் முக்கியர் என்ற குருகுலத்தாரின் அரசியற் செல்வாக்கதனையும் விரித்துரைத்தற்கு எழுந்த காவியமோ என்று படிப்போர் எண்ணும் வண்ணம் இவ்விரு வகுப்பினருக்கும் உயர்ந்த இடத்தினை யளித்திருப்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.''

என இந்நூலின் மதிப்புரையிலே ஏ. பெரியதம்பிப்பிள்ளை குறிப்பிட்டுள்ளனர்.

3. கண்ணகிவழக்குரையின் தனிச்சிறப்பியல்புகளிலே மிக முக்கியமானது அது இந்து சமயக் கொள்கைகளைமட்டும் விரித்துக் கூறுவதாகும். பண்டுதொட்டு ஈழத்திலே தமிழ்மக்களின் தனிப்பெருஞ் சமயமாக இந்து மதமே விளங்கியது. எனவே, இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலே கூறப்படும் சமண, பௌத்த, வைணவ சமயக் கருத்துக்கள் பிரக்ஞைபூர்வமாகப் புறக்கணிக்கப்பட்டுள்ளதோடு, அம் மதங்களைப் பிரதிநிதித்துவப்படுத்திய பாத்திரங்களான கவுந்தி, மாடலன் போன்ற பாத்திரங்களும் தவிர்க்கப்பட்டுள்ளன.

4. கண்ணகிவழக்குரை ஈழத்திலே ஓர் இலக்கியத் தேவையாகவன்றிச் சமயத் தேவையாகவே அமைந்தது. எனவே, அக் காவியத்தின் பாடல்களைக் கோவில்கள்தோறும் படிக்கக்கேட்டுப் பக்தர்கள் இன்புறும்வண்ணம் அமைத்தலும் இன்றியமையாததாகியது. எனவேதான் சிலப்பதிகாரம்போன்று அகவல் நடையிலே அதன் யாப்பு அமையாது பொதுமக்கள் விரும்பிக்கேட்கும் ஒருவகைக் கவர்ச்சி நடையிலே அமைக்கப்பட்டுள்ளது.

> ''பெரும்பாலும் அந்தாதித் தொடையாக அமைந்த இந்நூல் முழுவதும் அகவல் அடிகளும், வெண்பா, தாழிசை என்பனவும் கலந்த ஒருவிதக் காப்பியமாக விளங்குகின்றது.''

என இந்நூலின் யாப்புப்பற்றிக் குறிப்பிடுவர் வி. சி. கந்தையா.

இவ்வாறு, இந்தியக் காவிய மரபினையும் கதையையும் பின்பற்றி தனித்துவமான கண்ணகிவழக்குரை தோன்றியதுபோலப் பிறமொழிக் கதையொன்றினைப் பொருளாகக்கொண்டு அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நாற்பொருளும் பயப்பத் 'திருச்செல்வர் காவியம்' என்றொரு காவியம் ஈழத்திலே தோன்றியுள்ளது.

காவிய இலக்கண அமைதிசெறிந்த ஈழத்தின் இன்னொரு காவியமாக அரசகேசரியினுற் பாடப்பட்ட இரகுவமிசம் அமைந்துள்ளது.

> ''வடமொழியிலே பஞ்சகாவியம் என்ற தொகுதியிலே மகாகவி காளிதாசர் இயற்றிய இரகுவம்சமும் அடங்குகின்றது. இதனைப் பதினேமூராம் நூற்ருண்டிலே ஈழத்திலே வாழ்ந்த அரசகேசரி என்பார் மொழி

பெயர்த்துள்ளார். வம்ச சரிதையாக விளங்கும் இந்நூலிற் காவியப் பண்புகள் பல மிளிரக் காணலாம்.''

இவற்றினைத் தவிர மாணிக்க கங்கைக் காவியம், கண்ணகை அம்மன் ஊர் சுற்றுக் காவியம், புசற் காவியம், பிள்ளைக் காவியம். கந்தளாய்க் குளக்கட்டுக் காவியம், கஞ்சன் காவியம் ஆகியனவும் ஈழத்தின் ஆரம்ப காலத் தமிழ்க் காவியங்களாகக் கருதப்பட்டுவருகின்றன. மாணிக்க கங்கைக் காவியம் 18 பாடல் களைமட்டுமே கொண்டது. இதனைப் பள்ளுப் பிரபந்தங்களிலே வரும் ஆற்று வரவுப் பாடல்களுடனேயே ஒப்பிடமுடியும். கண்ணகை அம்மன் ஊர்சுற்றுக் காவியம் 72 விருத்தங்களாலானது. காப்புப் பாடல்களையும் கண்ணகைஅம்மன் தலங்கள் பற்றிய வாழ்த்துப் பாடல்களையும் இக் காவியம் தன்னகத்தே கொண் டுள்ளது. மழை வேண்டிப் பாடப்பட்டுள்ள மழைக்காவியம் 15 பாடல்களை மட்டுமே கொண்டுள்ளது. கடும் புயலினாலே ஏற்பட்ட நிலையை வருணிக்கும் புசற்காவியமும், பிள்ளைப்பேற்றை வேண்டி மங்கையொருத்தி இறைவனை வேண்டு வதாகப் பாடப்பட்ட பிள்ளைக் காவியமும் மிகச் சிறிய வடிவினவே.

வரலாற்றுக் காலமுதல் இந்தியாவின் அரசியல், சமூக, கலாசாரத் தொடர்புகள் ஈழத்திலே பெரும் பாதிப்பினை ஏற்படுத்தி வந்தமையை நாம் அவ தானிக்கலாம். இனத்தாலும், மொழியாலும் இணைக்கப்பட்டுள்ள தென்னிந்திய தமிழ்மக்களுக்கும் ஈழத்துத் தமிழ் மக்களுக்குமிடையே பாக்குநீரிணை என்ற சிறு நீர்ப்பரப்பினால் ஒரு பாரிய பிளவினை ஏற்படுத்தமுடியவில்லை. வட இலங்கையி லிருந்து மத்திய இலங்கைக்குச் சென்று வருவதிலும் பார்க்கத் தென்னிந்தியாவுக்குச் சென்று வருவது இலகுவாகவே காணப்பட்டது. எனவே, எத்துறையிலும் தென் னிந்திய ஆதிக்கம் ஈழத்தினைப் பாதிப்பதாகவே அமைந்துவிட்டது. எனவேதான் இந்திய இலக்கியங்களே ஈழத்திலும் நெடுங்காலமாகப் போற்றப்பட்டு வந்துள்ளன. இதனால், ஈழத்திற்கெனத் தனியானதோர் இலக்கியப் பாரம்பரியம் பண்டு உரு வாகமுடியாதுபோனமையை நாம் நன்கு தெளிதல்வேண்டும்.

இவ்விடத்துத், தண்டியலங்காரம் கூறும் காவிய இலக்கணங்களை மறுமதிப் பீடு செய்யவேண்டிய அவசியம் நேர்ந்துள்ளமையையும் நாம் குறிப்பிட்டாக வேண்டும்.

> ''தண்டியலங்காரம் கூறும் காவிய இலக்கணத்திற் குறைபாடுகள் சிலவுள என்று வாதிடும் அறிஞரும் உளர். இக் குறைபாடுகளிற் சில இதன் மூல நூலாகிய காவ்யாதர்சத்திற் காணப்படவில்லை எனச் சங்கத மொழியுணர்ந்தோர் கூறுவர்.''

தண்டியலங்காரம் தமிழ்க் காவியங்களுக்கு ஒரு வரம்பாக அமைந்ததே யன்றி அரணாக அமையமுடியவில்லை. இதனாலேயே ஐம்பெருங் காப்பியங்களிலும் பஞ்ச காவியங்களிலுமுள்ள பல்வேறு நூல்களும் பூரணமாக காவிய இலக்கணங் களைக் கொண்டதாக அமையமுடியாதுபோயின.

''சிலப்பதிகாரம் சிறியதாயினும் வீடு கூறுமையினலே அது பெருங் காப்பியம் அன்,ென்பதும், அறனும் வீடுங் கூறும் மணிமேகலையையும் சேர்த்து ஒரு பெருங் காப்பியமாகக் கருதவேண்டுமென்பதும் அடியார்க்கு நல்லார் கொள்கை''.

பஞ்சகாவியங்களிலும், சூளாமணி ஒழிந்தனவற்றைக் காவியமென்று கூறல் பொருந்தாதெனக் குறிப்பிடுவர் எவ். எக்ஸ். சி. நடராசா.

அவ்வாறு தண்டியலங்காரத்தை மீளாய்வு செய்யப் புகுமிடத்து ஐம்பெருங் காப்பியங்களுக்கும், பஞ்ச காவியங்களுக்கும் நிகராக ஈழத்திலே, தோன்றிய கண்ணகிவழக்குரை, திருச்செல்வர் காவியம், இரகுவம்சம் போன்ற காவியங்கள் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

# மஸ்தான் சாகிப் பாடல்களில் சூபிநெறி

பேராசிரியர் சி. நயினர் முகம்மது, எம். ஏ.,
ஜமால் முகம்மது கல்லூரி, திருச்சிராப்பள்ளி

இறைவனை நாடித் தேடியடையும் ஞான நெறியை அறபியில் தஸவ்வுப் என்பர். இதனை சூபி நெறி எனவும் அழைப்பர். இந்நெறியைப் பின்பற்றிய வரை சூபி என்பர். சூப் எனும் சொல்லடியாகப் பிறந்த இதற்குத் தூய்மையான வர், முன்னணியினர், திண்ணைத்தோழர், கம்பளி அணிந்தவர் எனப் பலவாறு பொருள் கூறுவர். இவற்றுள் கம்பளி அணிந்தவர் எனும் கருத்து மொழியிய லுக்குப் பொருந்துவதாக உள்ளது என்பர்.[1]

ஆத்மா இறைவனைத் தேடி அடைய மேற்கொள்ளும் பயணமாக சூபி நெறியைக் கூறி விளக்குவார் இஸ்லாமிய உலகின் புகழ்பெற்ற சிந்தனையாளர் இமாம் கஸ்ஸானி[2]. இதன் படித்தரங்கள் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | தா ஆத் | — | கீழ்ப்படிதல் |
| 2. | ஷரீ அத் | — | சமயச் சட்டம் |
| 3. | தரீக்கத் | — | ஞான வழி |
| 4. | மஃபரித் | — | இறைஞானம் |
| 5. | ஹக்கிகத் | — | மெய்ஞ்ஞானம் |
| 6. | அகீதத் | — | இறை மீது அளவற்ற காதல் கொண்டு தன்னையே அவ னுக்காக அர்ப்பணிக்கும் இயல்பு[3]. |

இன்று உலகில் ஏறத்தாழ 200 மெய்ஞ்ஞான வழிகள் — தரிக்காக்கள் உள்ளன[4]. இவற்றுள் அதிகமாகப் பின்பற்றப்படுபவை காதிரிய்யா, நக்ஷ பந்திய்யா, ஷாதிலிய்யா பெக்தா ஷிய்யா, திஜானிய்யா, சஹ்ரூஸிய்யா, ஷத்தி ரிய்யா ஆகிய ஏழு தரீக்காக்கள். இவற்றுள் மஸ்தான் சாகிப் காதிரியாத் தரிகாவைச் சார்ந்தவர். இவர் திருப்பாடல் திரட்டின் முதல் பாடல் குரு வணக்கமாக அமைந் துள்ளது. அதில் காதிரிய்யாத் தரீகாவைத் தோற்றுவித்த கௌதுல் அஃலம் முகியித்தீன் அப்துல் காதிறு அவர்களை மெய்ஞ்ஞானப் பேரின்பக் கடலில் இன்னமுது எடுத்து அளிப்பவராகவும் மாயைப் பின்னலை நீக்குபவராகவும் தவ சீலர்க்கு அருள் புரியவந்த வள்ளலாகவும் குணங்குடி வாழ்பவராகவும் போற்றித் துதிக்கின்றூர். அடுத்துவரும் 10 பாடல்களிலும் முகியித்தீன் சதகத்திலுள்ள 100 பாடல்களிலும் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் முகியத்தீன் ஆண்ட கையைத் துதித்துப்பாடுகின்றூர். வேறு பல விடங்களிலும் இவர்களைக் குருவாகப் போற்றுகின்றூர். இறைவனையடைய வழி காட்டும்படி குறையிரந்து வேண்டு கின்றூர்.

மஸ்து எனும் உருது மொழிச்சொல் போதை, மயக்கம் முதலிய பொருட்களைத்தரும். இறை காதல் மீக்கூர்ந்து மயங்கி இருப்பவரை மஸ்தான் எனும் சொல் குறிக்கும்.[5] சாகிபு எனும் அறபுச்சொல் தோழர் எனும் பொருள் கொண்டது. இங்கு இறைவனின் இனிய தோழர் எனும் உயர்ந்த பொருளை உணர்த்தவும் செய்கின்றது. இறை காதல் போதை மிகுந்திருந்ததால் இவரது சுல்தான் அப்துல் காதிறு எனும் இயற்பெயர் மறைந்து மஸ்தான் சாகிபு எனும் பெயர் வழங்கலாயிற்று.

சூபி நெறியில் இறைவன், படைப்பு குறித்து ஆறு நிலைகள் கூறப்படு கின்றன. அவற்றுள் முதல் மூன்றும் இறைவனைப்பற்றியன; பிந்திய மூன்றும் படைப்புக்கள் பற்றியன. அவை வருமாறு:

1. அஹதியத்: இஃது இறைவனின் முதல் நிலையாகும்; மூல நிலையாகும் குறிப்பும் பெயரும் பிரிவும் அற்றது. ஆராய்ச்சியால் இன்னது என்று அறிந்து கொள்ள முடியாதது. தான் தானுகிய சூத்திரமாய் இருக்கும். தாத்து (மூலம்) தன்னை மறந்த நிலையாகும். இதற்கு 'கன்ஜுல் மக்பி'' என்று பெயர்.

2. வஹதத்: இது தாத் (மூலத்) தின் உணர்வு நிலை. தன்னைத்தான் அறியும் உணர்வு தோன்றிய நிலை. தானே ஆதி என்றும் அந்தம் என்றும் இரகசியம் என்றும் பராசியம் என்றும் கூறப்படும் தெளிவு இதில் உண்டா யிற்று. இதில் நூரே முகமத்தியாவை (முகம்மதின் ஒளியை)ப் படைத்தான். இது படைப்பனைத்திற்கும் வித்துப் போன்றது. இது மூலத்தின் முதல் குறிப்பாகும்.

3. வாஹிதிய்யத்: இது மூலத்தின் (அஹதிய்யத்தின்) இரண்டாங் குறிப்பா கும். முன்பு சொந்தமாகவும் மறைவாகவும் இருந்த பொருட்கள் விவரமுள்ள விரி பொருட்களாகத் தோன்றின. இம்மூன்று நிலைகளும் சூபி நெறியில் முச்சுடர் கள் எனக் கூறப்படுகின்றன. இவ்வாறு மூன்ருகக் கூறப்படினும் இவை வேறுபட்ட வையல்ல; ஒன்றே.

4. ஆலமே அர்வாஹ்: இது ஆன்மாவின் நிலையாகும். படைப்புக்களில் மூன்று நிலைகள் உள்ளன. அவற்றுள் இது முதல் நிலை. தூய்மையானது. இது தூல உலகிற்கு உயிரானது. நான் நீ என்னும் வேற்றுமை அழிந்து போகு மானுல் உயிர்களுக்கு இத்தூய நிலை எய்தப்பெறும். இது தாத் (மூலத்) தின் மூன்றும் குறிப்பாகும்.

5. ஆலமே மிதால்: இது சூக்கும நிலை பற்றியது. இதனை அகம் என்றும் கூறுவர். இது படைப்புக்களின் இரண்டாம் நிலை. மூலத்தின் நான்காம் குறிப்பு. இதில் தூல உலகில் உள்ள சடப்பொருள் உருவங்களின் மாதிரிகள் பொருந்தியுள்ளன. ஆதலின் இதனே ஆலமே மிதால் என்பர்.

6. ஆலமே அஜ்சாம்: இது தூய உலக நிலையாகும். படைப்புக்களின் மூன்றும் நிலை. தாத்(மூலத்)தின் ஐந்தாம் வெளிப்பாடு. சூக்கும உலகில் ஒளி மயமாக இருந்த அனைத்தும் இதில் தூல உருவங்களாயின. மறைவாக இருந்தவை யெல்லாம் பார்த்தும் தொட்டும் அறியக் கூடியனவாயின.

இறைவன் சூக்குமத்திலிருந்து தோற்றுவித்த தூல உலகித்திலேயே மனித உடலைத் தோற்றுவித்து அதில் உயிரைப் புகுத்தினுன். அதில் சூக்கும உடலும் அஹதியத்து, வஹதத்து, வாஹிதியத்து ஆலமே அர்வாஹ ஆகிய அனைத்தும் பொருந்தியுள்ளன. புறநிலை மனிதனும் அகநிலை இறைவனுமாகும். உலகங்கள் எனும் உடலுக்கு மனிதன் உயிராயுள்ளான் என்று சூபி நெறி பற்றிய நூல் கூறும்.[6] இந்தத் தத்துவ நுட்பங்களை மஸ்தான் சாகிபு தம் பாடல்களில் விளக்குகின்ருர். பின்வரும் பாடல் சூபிநெறியின் சாரமாக அமைகிறது. ஆதலின் அப்பாடலை ஈண்டுக் காண்போம்.

மகுலியத் தானதாந் துல்கிபுரி யாவில்
மறைந்த கன்சுல் மகுபியாம்
மஸ்கூத்து அன்குல் கதீமுல் அமாவான
மவுஜூ தெனுஞ் சிருபுலே
அகதியத் துகதாதி வாகிதிப் யத்தான
ஆலம் அறு வாகா னதில்
ஆலம் மிதாலாகி ஆலம் அசி சாமான
ஆலம் இன்சா னுனபின்
பகுதியத் தில்லா ஜலாலொடு ஜமாலும்
பதீகுல் கமாலு மாகி
பகுதுகபு லற்ற லா கூத்துஜப றூத்தில்
பகாவான குவியத் தினுல்
நகுசியத் தற்றுமுன் ருளிணிழல் பெற்றடிமை
நானினைவு மற்றுய் வனே
நற்குணங்குடி கொண்ட பாதுஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (வஸ்து தயத்தினுனந்தம்)

இப்பாடலில் சூபி நெறிக் கருத்துக்கள் வந்துள்ளதால் அறபுச் சொற்கள் மிகுந்துள்ளன. மஸ்தான் சாகிபு சிறந்த சூபி ஞானி என்பதுடன் அறபியிலும் ஆழ்ந்த புலமை கொண்டவர் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

'நற்குணங்குடிக் கொண்ட அரசே: குரு நாதரே: முகியித்தினே: கலப்பற்ற தூய தெளிவான சுயவடிவில் கண் மறைவாகிய புதைபொருளாம் அதைத் தொட்டும் வாய்மூடி பூர்வீகமெனும் இருளாகி நின்று எவற்றிற்கும் உடையதான பொருளிலே குறிப்பற்ற ஒருமையாகி (அஹதிய்யாத்தாகி) ஒன்ரும் குறிப்பாகி (வஹதத்தாகி) இரண்டாங் குறிப்பான ஒருமை (வாஹிதிய்யத்)யினின்றும் ஆன்ம உலகம் (ஆலம் அறுவாஹ்) ஆகி பின் பல உலகங்களைக் கொண்ட மாதிரி உலகம் (ஆலம் மிதால்) ஆகி, சட உலகம் (ஆலம் அஜ்சாம்) ஆகி. பிறவியைக் கொண்ட மனித உலகத்தளவில் வந்தபின் மட்டில்லாத சூட்டுடன் குளிரும் சேர்ந்து விநோதமாகி, பரிபூரணமாகி, முன்பின் இல்லாத லாகூத் என்னும் சூபிப் பயணத் தின் இறுதி நிலையிலும் ஜபறூத் என்னும் வல்லமையைப் பெறும் நிலையிலும் தரிபாடான உண்மைப் பெயரினுல் கேடளவில் சார்தல் இல்லாத உமது திருவடி நிழலைப் பெற்றுக் கொண்ட அடிமையாகிய நான் உமது நினைப்பை விட்டால் ஈடேறுவது எங்ஙனம்' என்பது பாடலின் திரண்ட கருத்தாகும்.

இதன் கண் முதல் நிலையை விளக்கி அடுத்து ஐந்து நிலைகளைக் கூறி மனிதன் பற்றியும் குறிப்பிட்டு சூபிப் பயணத்தில் எய்த வேண்டிய பரிபூரணமான இறுதி நிலையான லாகூத் பற்றியும் வலிமை பெறும் நிலையான ஜபறூத் பற்றியும் சுருங்கச் சொல்லி விளக்குகின்றுர்.

சூபிப் பயணத்தின் இலட்சியம் இறைவனை அடைதல் என்பதைக் குறிப் பிட்டோம். இதனை எய்துதற்கு மனத்தூய்மை இன்றியமையாதது. கை, கால், முகம் முதலியவற்றைக் கழுவுதலும் குளித்தலும் உடல் தூய்மை பற்றியன. இது புறத் தூய்மையாகும். சூபி நெறியில் அகத்தூய்மை வலியுறுத்தப்படுகிறது. இம்மனத் தூய்மை பெறுவதற்குச் சில நெறி முறைகளை வகுத்துள்ளனர். இறை நாமத்தை உச்சரித்து இறைவனை நினைவு கூர்வது. ஆசாபாசங்களை எதிர்த்துப் போரிடுவது, தவக்கிரியைகளைத் தவருமல் போற்றுவது முதலியன இந்நெறிமுறை களுள் குறிப்பிடத்தக்கன.

மஸ்தான் சாகிபு எப்போதும் இறைநாமம் உச்சரித்து இறைவனை நினைவு கூர்ந்து வந்தார். இறைவனின் காட்சியை உணர்தற்கு இவை பெருந்துணை புரியும். இதயத்தே ஒளி தோன்றச் செய்யும்.

கூலாயி லாஹயில் லல்லாகு என்பனே
குடிகெட்ட நிலையுன் பனே
வேலையது வாய் முகம்மது றசூ லென்பனே
வேலை யிது தா னென் பனே
(முகியத்தீன் சதகம் 53: 1—2)

என்பதில் இஸ்லாமிய மூலமந்திரம் ஒளி வீசுகிறது. மூலமந்திரம் மொழிவதில் தான் வாழ்வு இன்றேல் தாழ்வு எனும் கருத்தும் பேரின்ப வாழ்வுக்குத் தவிக்கும் தவிப்பும் இதனுல் புலப்படுகின்றன.

'இல்லல்லா கூவென் றெனை மறந்து கொண்டுனையே சொல்லவருள் மெஞ்ஞானச் சுடரே பராபரமே' (56) எனும் இறைநாமத்தால் தன்னை மறக்கும் நிலையைத் தந்தருளும்படி இறைவனிடம் இறைஞ்சுகிறுர். 'இல்லல்லா கூ வென்றென்னை மறந்து கொண்டிருப்பாய் என்னெஞ்சமே' என்னும் கீர்த்தனத் தால் இறைநாமம் மொழிவதில் தன்னை மறந்திருக்கும்படி தன் நெஞ்சத்தை வேண்டுகின்றுர்.

'அல்லாகூ வென்னுங்கள் அஞ்ஞானத்தை விட்டு எல்லோரும் வெளிப் பட்டு' எனும் கீர்த்தனத்தில் இறைநாம உச்சரிப்பதில் நாம் பெறும் 'இன்பத்தைப் பெற வாரீர் என எல்லோரையும் பரிந்து அழைக்கின்றுர். இறைவனை நினைவு கூர வழக்கமான அறபுப் பெயர்களை உச்சரித்து வந்த மஸ்தான் சாகிபு தமிழிலும்இறை நாமங்களை உச்சரித்து இன்புறுகின்றுர். 'கத்திக் கத்தித் தொண்டையுங் கட்டிச் செந்தேனே' எனத் தொடங்கும் கீர்த்தனத்தில் 'முத்தனே', 'நாயனே', 'தூயனே' 'நேயனே', 'ஏகனே', 'யோகனே', 'மோகனே', 'நாதனே', 'நீதனே', போதனே' 'நித்தனே', 'அத்தனே', 'சுத்தனே', முதலிய பெயர்களை உச்சரித்து இறை உணர்வில் தன்னை மறந்த நிலையடைந்து விடுகின்றுர். மேலும் பிற பாடல் களிலும் இறை நாமம் பரந்து சிறந்திருக்கப் பார்க்கலாம்.

இறைவனைக் குறித்து சூபி நெறியில் வஹ்தத்துல் உஜூத் என்றும் வஹ்தத்துல் ஷுஹூத் என்றும் இரு கொள்கைகள் உள்ளன. 'படைப்புக்கள் அனைத்திலும் இறைவனே உள்ளான்' என்னும் கொள்கை வஹ்தத்துல் உஜூத் ஆகும். 'ஒப்புமையில்லா இறைவன் தன்னை ஒவ்வொரு பொருளிலும் வெளிப் படுத்தியுள்ளான் என்பது' இதன் கருத்தாகும். 'இவ்வுலகமும் இவ்வுலகில் உள்ள படைப்புப் பொருட்களும் இறைவனின் பிரதிபலிப்பேயன்றி வெளிப்பாடு அல்ல. இறைவன் வேறு, பிரதிபலிப்பு வேறு' என்பது வஹ்தத்துல் ஷுஹூ தாகும்.[7]

இவ்விரண்டனுள் மஸ்தான் சாகிபு வஹ்தத்துல் உஜூது எனும் கொள் கையைப் பெரிதும் போற்றுகின்றார். இறைவன் படைப்புப் பொருட்களில் உள்ளான் என்பதைப் பல இடங்களிலும் குறிப்பிடுகின்றார்.

உடலாகி, உடலிலுள்ள உயிராகி, எவ்வுலகுமாகி, ஒன்றாகி, இரண்டுமாகி, உள்ளாகி, வெளியாகி, ஒளியாகி, இருளாகி, ஊரும் பேருமாகி, காடாகி, மலை யாகி, கடலுமாகி, காட்டு விலங்குமாகி, வெளியில் கண்ட பொருளுமாகி, இரவு பகலாகி, மதியாகி, கதிராகி, நானாகி, நீயாகி, அவனாகி, அவளாகி நாதமொடு பூதமும் ஆகி (முகியித்தீன் சதகம் 25 ) எனவும்

கண்ட பொரு ளத்தனையுமாகி நின்றவைகளும்
காணாத காரணத்தை (முகியித்தீன் சதகம் 20)

எனவும் கூறிச் செல்கின்றார்.

இவ்வாறு பார்க்கும் இடமெங்கும் நிறைந்து ஆனால் மறைந்து இருக்கும் பரம் பொருளை அடைவது எவ்வாறு? இதற்கு இஸ்லாம் நேரான ஒரு வழியைக் காட்டுகிறது. தன்னை அறிந்தால் தன் இறைவனை அறியலாம் என்பதே அவ்வழி.[8] இதனை மஸ்தான் சாகிபு தன்னை யறிந்தால் தலைவன் தனையறிந்ததென்னு மொழியே யிதங்கா ணிராமயமே (நிரா. 70) என்னும் கண்ணியால் உணர்த்திவிடுகின்றார். தான் என்பது உடலா? உடையா? பட்டம் பதவிகளா? இவை அனைத்துமா? எனின் அல்ல என்று கூறுவார். ஆன்மாவையே தான் எனக் கருதுவார். ஆதி இறையாகிய மூலத்திலிருந்து வந்த இவ்வான்மா இறைவனை மீண்டும் அடைவதற்குத் தடைகளாக உள்ள திரைகளை விலக்கித் தொடர்பு கொள்ளச் செய்வதே சூபிநெறியின் நோக்காகும். இதன் தொடக்கம் பாவ மன்னிப்புக் கேட்டு மனம் மாறுதலாகும். இதனால் மனம் தூய்மை அடைகிறது. இம்மனத்தூய்மை துறவாலும் பற்றுக்களை உதறித் தள்ளுவதாலும் ஆன்மீக சிந்தனைகள் மட்டும் இடம் பெறச் செய்வதாலும் பொலிவு பெறுகிறது. இந்நிலையில் சாதகர் கீழான மன இச்சைகளை எதிர்த்துப் போரிட வேண்டும். இப்போரில் வெற்றிபெற்ற சாதகர் இலட்சியப் பயணத்தில் பாதி கடந்து விட்டார் என்பர்.[9]

மஸ்தான் சாகிபு தன்னை மிகவும் நொந்து கொள்கின்றார். இறைவ னிடம் மன்னிப்பு வேண்டி உருகிப்பாடுகின்றார். தம் மனத்தைச் சாடுகின்றார். ஆசா பாசங்களை எதிர்த்துப் போரிடுகின்றார். பற்றற்றான் பற்றினைப் பற்று தற்கு உலகப் பற்றுக்களையெல்லாம் உதறித்தள்ளித் துறவு மேற்கொள்கின்றார்.

மாசு போக்கி மனக்கண்ணுடியைத் தூய்மைப்படுத்துகின்ருர். இறைவன் கொலு விருக்கும் பீடமாக மனதை உயர்த்திவிடுகின்ருர்.

'ஆசைக்கடலின் அலைவாய்ப்பட்டு மோசப்படாதிருக்க' அருளுமாறு வேண்டுகின்ருர் (நிரா. 246) ஆசைப் பசாசைத் துரத்தித் துரத்தி வந்து அண்ட வொட்டாமலே அடிக்க விழைகின்ருர் (எத்தனையாட்ட 10-3)

மண்ணுன மூவாசை மாட்டே னென் ருேடவும்
மாருவனு பூதி வந்தெனை மூடவும்
கனவுங் கண்டி லனே' (கனவுங். 9)

என ஏங்குகின்ருர். பாழான மூன்ருசை பாழாகவும் அருள்புரிய வேண்டுகிருர் (அகத் தொகை.4) மண்ணுசை, பொன்ணுசை, பெண்ணுசை ஆகிய மூவாசையால் வருங் கேட்டையும் அவ்வாசைகளை நீக்கும் பாட்டையும் கூறுகிருர்.

மாளிகை மேல்வீடு கட்டி — மனை
வாழ்வை நிலையென வாழ்கின்ற மட்டி (இரக் — 6)

எனச் சாடுகின்ருர்.

கதகதென் றெரியும் பணத்தீ மிதித் தெனது
கால் கொப்பளித்துழல் வனே (முகியித்தீன் சத. 70-7)

என்று ஏங்கிப் பதைத்துக் கலங்குகின்ருர்.

தங்கத்தையும் செங்கல்லென்றெண்ணியே தள்ளு
தள்ளெனற் கருள் புரியவும் (அகத் திறவு 3)

எனப் பொன்னை வெறுக்கும் நன்மனத்தையருள வேண்டுகின்ருர். ஆடவரைக் கவர்ந்து பிடித்திழுத்து ஆட்டி அழிவுக் குழியில் தள்ளுவது பெண்ணுசையாகும். இதனை வெறுத்து அருவருப்புடன் மறுத்துரைக்கின்ருர்.

கைச் சரசமான சிற்றின்ப அனுபோகம்
கசப்பாக வருள் புரியவும் (அகத். தவநிலை 6)

என வேண்டுகின்ருர்.

கொண்டார்களைக் கொல்லும் இயல்பினது பெண்டாசை (அகத். நியம. 5) என்றும் மங்கையர் முயக்கைச் சேறு (அகத். துறவு. 9) என்றும் வலை வீசு முலையாரைக் கொலைஞர்' (அகத். துறவு. 6) என்றும் 'வஞ்சியரின் உடம்பு வெறும் நஞ்சு' (அகத். துறவு 6) என்றும் பேயைப் பழித்த பெண் பேய்' (அகத். துறவு 3) என்றும் கூறுகின்ருர். சிற்றின்பச் சுனைகளான மங்கையரின் அங்கங் களைக் காய்ந்துரைக்கின்ருர். விழிகளை அம்புகள் என்றும் கூந்தலை வலை என்றும் கொங்கையைத் தேள் என்றும் அல்குலைப் பாழிடி கிணறு என்றும் குறிப்பிட்டு அவற்றுள் பட்டழியாமல் தன்னைக் காக்கும்படி வேண்டுகிருர். பெண் கொண்ட பேர் பட்டபாட்டையும் கேட்டையும் பட்டியலிட்டுக் காட்டு கின்ருர். பாலுணர்ச்சியால் காமத்தால் ஏற்படும் கேட்டைப் பழித் துரைக் கின்ருரே தவிர பெண்களைத் தாயாகப் போற்றுகிருர். (ஏதேது செய்திடுமோ-5)

பெண்ணிச்சையிலிருந்து ஆண்களைப் பேணிக் கொள்ள வேண்டும் என்று எவ்வாறு விரும்புகிருரோ அவ்வாறே பெண்களும் ஆடவர் மயக்கில் வீழ்ந்து விடக் கூடாது என்று எச்சரிக்கின்ருர்.[10] ஆடவரும் பெண்டிரும் சிற்றின்பத்திலிருந்து விலகிப் பேரின்பத்தைத் துய்க்க வேண்டும் என்பதே மஸ்தான் சாகிபின் நோக்காகும். சிற்றின்பத்தை வெறுக்கும் மஸ்தான் சாகிபு இதன் தொடர்பான ஐம்புலன் களையும் அடக்கியாள வேண்டும் என வலியுறுத்துகின்ருர். வீறு கொண்ட ஐம்புலன்களையும் அஞ்சாத வேடர்களாக உருவகப்படுத்துகின்ருர்.

'அஞ்சாத அஞ்சுபல வேடர்களும் அடியனேற்
கஞ்சிடற் கருள் புரியவும்' (அகத். சமாதி 1. 2) என வேண்டு கின்ருர்.

'பாங்கான ஞானம் படைக்கும் — ஐந்து
பாழ்ப்புல வேடரைப் பல் உடைக்கும்' எங்கள் குணகுடியானே[11]

என்பதில் மஸ்தான் சாகிபின் ஆளுமை புலப்படுகிறது.

உண்டு உடுத்தி ஒப்பனை செய்து பேணி வளர்க்கும் உடலை 'பொய்க் கூடு', 'புழுக்கூடு', 'சோற்றுப் பொதி', 'பீறற் றுருத்தி', 'நாற்றக் கருவாடு', 'மூத்திரம் ஊற்றி வைத்த ஓடு' என்றெல்லாம் வெறுத்துச் சாடுகின்ருர். 'நாவுருசி தேடுதற்கு ஆவி கெட்டலையாமல் நற்றவம் செய்ய' அருள்புரிய வேண்டுகின்ருர். (அகத். காட்சி 8) கீழான மனத்தால் வருங் கேட்டிற்கோ அளவில்லை. இதனைப் பல விடங்களிலும் எடுத்து இடித்துரைக்கின்ருர். மாறு வதில் மின்னலை மிஞ்சியது மனம் (அகத். துறவு 9) என்றும் எண்ணுதவற்றை யெல்லாம் எண்ணிச் (அகத். நியம, 3) சிதையக் கூடியது, (அகத். தியான — 7) என்றும் கூறி மனத்தைக் குரங்காக உருவகித்து அதனைக் 'கட்டிப் போட்டாலும் காட்டும் பல்லை' (போவோம் குணங்குடிக்கும்) என்று குறிப்பிட்டு, படிக்கும்படி நடக்காமல் அலையும் மனத்தை நோக்கி, 'படிக்கும்படி நடக்கின்றையோ யிப்பழஞ் செருப்பா லடிக்கட்டுமோ............முடக்கிப்படுத்துக்கொள்' (தவமே பெறுவா யெனல் — 9) என்று அச்சுறுத்துகிருர்.

மனத்தின்கண் காமம், குரோதம், மோகம் முதலிய களிம்புகள் தோன்றி யுள்ளன என்றும் அவற்றை அகற்றித் தூய்மைப்படுத்த வேண்டும் என்றும் 'கரையா நெஞ்சக் களிம்பெலாம் துரிசனக் கண்டு நல்லருள் புரியவும்' (அகத். து. 11) உலையிலிட்ட மெழுகென மனம் உருக அருள்புரிய வேண்டுகின்ருர். (அகத். நியம நிலை 3) கண்ணுடி போன்றுள்ள இதயத்தில் இறைவனைக் காட்சி தருமாறு வேண்டுகின்ருர். (கண்மணிமாலைக்கண்ணி 59).

பெண்களை மட்டுமா பிள்ளைகளையும் வெறுத்துரைக்கின்ருர்.

'புதல்வரெனு முதலைகள் பிடித்துக் கடித்துப்
புசிக்கக் கொடுத்துழல் வனே.' (முகியித்தீன் சதகம் 7)

என்றும்,

பிள்ளைகளென்னும் கூளிபல கூளி என்னைப்
பிடுங்கிடா தருள் புரியவும்' (அகத். துறவு 3) என்றும் பிள்ளைப் பாசத்தை வெறுத்தொதுக்குகின்ருர். இத்துடன் நிற்கவில்லை.

'எந்தை முதல் யாவரும் வந்து கலையும் சந்தை' இவ்வுலக வாழ்வு என்றும் (அகத். துறவு. 8)

'சாதி சனத்துடனே சார்ந்திருந்து பட்ட துயர்
போதும் போதும்' (பராபராக்கண்ணி 85) என்றும் கூறி மக்கள் கூட்டத்தை வெறுத்து ஒதுங்குகின்ருர். பந்த பாசங்களை விட்டுத் துறவு வாழ்வை மேற்கொள்ள மஸ்தான் சாகிபு கொள்ளும் துடிப்பும் புலப்படுகின்றது.

'எவையும் பழித்த துற வெய்தி வெளி யேறி நா
னீடேற அருள்புரியவும்' (அகத். துறவு. 9:4) எனவும்
'கந்தையைச் சுற்றவும் கானகஞ் சுற்றவும்
கந்த மூலந் தனைத் தந்துதந்து கந் தெனைக்
காப்பாற்றியருள் புரியவும்' (அகத். துறவு 8: 1—3) எனவும் குறையிரந்து கேட்கின்ருர்.

ஆசாபாசங்களை உதறித் தள்ளினுர்: மாசுகள் நீங்கின. இந்நிலையில் ஆன்மக் கண்ணுடி தூய்மை பெறுகிறது. இது வரை சட உலகில் இருந்து பார்த்த சாதகர் சூக்கும உலகில் (ஜபரூத்) அடியெடுத்து வைக்கின்ருர். புலன் உணர்வு வாழ் விலிருந்து விடுபடுகிருர். இறைவனைக் காணும் இலட்சியம் தெளிவாகத் தெரி கிறது. தெய்வீக ஒளியில் முன்னேக்கிச் செல்கின்ருர். இறைவனும் அடியவரை நோக்கி நெருங்கி வருகிருன். பரவச நிலை ஏற்படுகிறது. சாதகரின் இதயத்தில் இறையொளிபாய்கின்றது.

இறைக்காட்சி நிலையடைந்தவர் மெய்ஞ்ஞானத்தின் (தஸவ்வுபின்) எல்லையைக் கடந்து விட்டார். சூபிப் பயணத்தின் முடிவுக்கு வந்து விட்டார். தன் இலட்சியத்தை எய்திவிட்டார். அகப்புறக் கண்களுக்கெட்டாத ஒருயிர் நிலை பெற்றவராகி விட்டார். 'பனு' (அழிவு) அடைந்தவர் பகா என்னும் மரணமிலாப் பெரு நிலையை அடைந்துவிட்டார். இவர் இறைநேசச் செல்வராக ஆகிவிட்டார். இவர் இறைவனுடன் தோழமை கொண்டு காணும் பேரின்பத்தில் திளைப்பதுடன் நிற்கமாட்டார். பரம்பொருளின் பேரொளிப் பிழம்பிலிருந்து பெறும் ஒளியால் வழிதெரியாது மயங்கும் பிறர்க்கும் ஒளியூட்டும் விளக்காக அமைகின்ருர். இப் பேரின்பப் பெருநிலை எய்திய மஸ்தான் சாகிபு வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழ்கின்ருர். மகாவித்வான் திருத்தணிகை சரவணப்பெருமாளையரும் சிவயோகி ஐயாசாமி முதலியாரும், வேங்கடராயப்பிள்ளைக் கவிராயரும், சபாபதி முதலி யாரும், புலவர் நாயகம் என்று போற்றப்படும் சேகனுப் புலவரும் மெய்ஞ்ஞான ஒளியேற்றி அஞ்ஞான இருளகற்றிக் கடைத்தேற வழி காட்டும் குருவாகப் போற்றுகின்றனர்.

இவரின் சீடர்களிலிருந்தே மஸ்தான் சாகிபு சமரச நோக்குடையவர் என்பது புலப்படும். இவருடைய பாடல்களும் சமரசத் தேனைப்பிலிற்றுகின்றன;

சூபிகள் மதபேதம் பாராட்டார்; அறிவார்ந்த தெய்வ நம்பிக்கை கொண்ட மக்களிடையே வேற்றுமை பாராட்டார். சமரசம் போற்றுவர் என்பர். இக்கருத்தை மஸ்தான் சாகிபு பாடல்களில் பரக்கக் காணலாம். 'அறியாமல் என் தெய்வம் உன் தெய்வம் என்பார்க்கும் அவ்வகைக் காரணத்தை' (முகியத்தீன் சதகம் 31: 2) என்றும்

'மதபேத மோதி மதி கெட்டவர்க் கெட்டாத
வான் கருணை வெள்ளமாகி' (மு. ச. 42:2) என்றும்

என் தெய்வம் உன் தெய்வம் என்று வேறுபடுத்திப் பூசலிடுவதைச் சாடுகின்றார்.

'சண்டை நின்றிடுவதும் மண்டை பிண்டுடைவதும்
சள்ளென்ப தெக்கால்மோ
சாடாது சமநிலையி னின்று சமரசமீது
சாடீர் வதெக்கா லமோ' (96; 2-3) என்று கவலைப் படுகின்றார்.

வகையற்ற சமயக் குதர்க்கத்திலிருந்து தம்மை விலக்கியருள வேண்டுகிறார். (அகத். நியம 6:2) மதமற்ற மதம் (அகத் சத. சமாதி 7) பொருத்தத் துடிக்கின்றார். பழகரிய சமரசம் என்று (முகமது நபி துதித்தல் — 3) போற்றுகின்றார். இவரது பாடல்களில் சிவன், கணபதி, உமையாள் முதலிய இந்துக் கடவுளரின் பெயர் களும் குறியீடாகக் கொள்ளப்படுகின்றன. தமிழ் நாட்டுச் சூழலுக்கு ஏற்ப சூபி நெறியைக் கண்டு விளக்கியுள்ளார் எனலாம்.

சூபிப் பயணத்திற்குத் துணையாகும் பொறுமை, உறுதி, பயபக்தி, மௌனம் முதலியன பற்றியும் மஸ்தான் சாகிபு கூறுகின்றார். விரியுமாதலின் அவை ஈண்டு விளக்கப்படவில்லை.

இக்கட்டுரையில் சூபிநெறி பற்றியும் மஸ்தான் சாகிபு தமிழ்நாட்டுச் சூழலுக்கேற்ப அந்நெறியினை விளக்கியுள்ள திறம்பற்றியும் சுருக்கமாகப் பார்த் தோம். எளிமையும் தெளிவும் உணர்ச்சி வேகமும் கொண்ட இவருடைய பாடல்கள் தமிழ்நாட்டுச் சூபி நெறிச் செல்வங்களாகும் தகுதி படைத்தன.

## அடிக்குறிப்பு

1. எம். ஆர். எம். அப்துற்றகீம், தஸவ்வுப் இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் (மூன்றும் தொகுதி, சென்னை, யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் 1979) பக். 267.
2. ஆர். பி. எம். கனி, இமாம் கஸ்ஸாலி, மறுபதிப்பு (தென்காசி, அருள் நூல் பதிப்பகம், 1965) பக். 100.
3. எம். ஆர். எம். அப்துற்றகீம், தஸவ்வுப் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் தொகுதி மூன்று பக். 268.
4. எம். ஆர். எம். அப்துற்றகீம் தரீக்கா, இஸ்லாமிய கலைக்களஞ்சியம் மூன்றும் தொகுதி, பக். 247.

5. ம. முகமது உவைஸ், எம். ஏ. ஞானச் செல்வர் குணங்குடியார் (சென்னை யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் 1965) பக். 17.
6. முர்ஷித் எச். அப்துல் சாகிப், பைஜுல்ஹபீப் (சென்னை 1956) பக் 72-76.
7. எம். ஆர். எம். அப்துற்றகீம் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம், மூன்றும் தொகுதி, பக். 834.
8. 'தன் நப்ஸை அறிந்தவன் இறைவனை அறிவான்' — நபி மொழி
9. ஆர். பி. எம். கனி: இமாம் கஸ்ஸாலி பக், 96.
10. தாய்மார்களே பாவி சொல்வதைத் தான் சற்றுந்
தள்ளாமற் கேட்டுக் கொள்ளும் எனும் கீர்த்தனம்
மஸ்தான் சாகிபு திருப்பாடற்றிரட்டு.
(சென்னை, தெய்வமகன் விலாச அச்சுக் கூடம், 1947) பக். 355.
11. ஆர். பி. எம். கனி, இமாம் கஸ்ஸாலி, பக். 116—117

# நீலமலைப் படுக மொழியும் பழந்தமிழும்

சி. பி. கிருஷ்ணையா
கொலக்கம்பை, நீலமலை

திராவிட மொழிகளின் ஒரு கிளைமொழியான படுக மொழிக்குத் தமிழ் தாய் மொழி என்பதற்கையமில்லை. பழந்தமிழ்ச் சொற்களே படுக மொழியிலும் நிலவுகின்றன.

### வடசொற் கலவாமை

ஏனைய திராவிட மொழிகளில் சமஸ்கிருதச் சொற்கள் மிகுதியாகக் கலந்துள்ளன போன்று படுக மொழியில் கலக்கவில்லை. படுக மக்கள் தனிக் குழுகாயப் பண்பாட்டுடன் ஏனைய மக்களின் தொடர்பற்றுத் தனித்து வாழ்ந்ததே படுக மொழியில் வடமொழிச் சொற்கள் அதிகமாய்ப் புகாமைக்குக் காரணமாகும்.

### எடுப்பொலி

ஆனல் படுக மொழியிலுள்ள சில பழந்தமிழ்ச் சொற்களில் வடபுல எடுப்பொலியேற்பு காணப்படுவதால் இந்நாடு முழுவதிலும் தமிழர் பரவியிருந்த காலத்தே, படுக குழுகாயத்தவரின் மூலக் குடியிருப்பு இந்நாட்டின் வடபுலப் பகுதியாயிருத்தல் கூடும் எனத் தோன்றுகிறது.

### மொழிப் பெயர்

மொழி என்னும் சொல்லிற்கு இணையான படுகச் சொல் 'மாத்து' என்பதாகும். பழைய கன்னடத்திலும் மொழி என்பதற்கு 'மாத்து' எனவே வழங்கிற்று ஆனல் புதுக்கன்னடத்தில் அதனைப் பாஷா என வடமொழியாக மாற்றி வழங்குகின்றனர்.

மக்கள் உரையாடுகையில் ஒவ்வொருவரும் மாறி மாறிப் பேசிக்கொள்ளுவதாலும், ஒவ்வொருவரும் தத்தம் கருத்தை மற்றவர்களோடு மாற்றிக் கொள்ளுவதாலும் றகரம் தகரமாகத் திரிந்து அது மாத்து எனவாயுள்ளது.

### வர்க்கம்

தமிழைத் தவிர்த்த ஏனைய திரவிடமொழிகளிலும், வடபுல மொழிகளிலும் க ச ட த ப என்னும் ஐந்து வல்லின எழுத்துக்கள் ஒவ்வொன்றிற்கும் வர்க்கம் என்னும் நான்குவித ஒலிவேறுபாடுகள் உள்ளன. ஆனல் ஆங்கில மொழியில் உள்ளதுபோன்று படுக மொழியில் எடுப்பொலியோடு இருவிதமான ஒலிவேறுபாடுகளே உள்ளன.

## எடுப்பொலிக் குறியீடு

படுக மொழியில் வரும் எடுப்பொலிகளுக்கேற்ற வல்லின எழுத்துக்கள் தற்காலத் தமிழெழுத்துக்களில் இல்லாமை கொண்டு எடுப்பொலியற்ற தமிழ் வல்லின எழுத்துக்களின் முன்னே இரு நெட்டுவயப் புள்ளிகளிட்டு அவ்வெடுப்பொலிகளைப் பலுக்கும் முறை ஈங்குக் கொள்ளப்பட்டுள்ளது.

## அளபெடை

படுகில் வரும் ஆகார அளபெடைக்கு நெடிலுக்காயுள்ள குறியீட்டுடன் அகர உயிர்களைச் சேர்த்து வழங்குகிறது.

எடுத்துக்காட்டாக: அதிகமான, அபாரமான என்னும் பொருள்படும் அப்பார என்னும் படுகச் சொல்லின் அளபெடைக்கு அப்பாஅஅஅர என நீட்டி வழங்கலாம்.

படுகில் வரும் ஈகார அளபெடைக்கு நெடிலுக்காயுள்ள குறியீட்டுடன் இகர உயிர்களைச் சேர்த்துப் பலுக்கலாம்.

எடுத்துக்காட்டாக: எழுஞாயிற்றின் தோற்றகாலத்தைக் குறிக்கும் உதி உதின என்னும் படுகச் சொற்றொடரின் அளபெடைக்கு உதி உதீஇஇஇன என நீட்டி வழங்கலாம்.

## திரிபுகள்

தமிழ்ச் சொற்களுக்கேற்ற பொருள் தரும் படுகச் சொற்களை ஆய்ந்து நோக்குங்கால், அவை பலவடிவங்களாகத் திரிந்து பலுக்கப்படுதல் புலனாகும்.

1. தமிழ்ச் சொற்களில் வரும் ஐகார விகுதிகள் படுகில் எகர விகுதிகளாகின்றன. எடுத்துக்காட்டாக:

| தமிழ் | | படுகம் |
|---|---|---|
| இலை | — | எலெ |
| உடை | — | ஒடெ |
| கரை | — | கரெ |
| கழுதை | — | கத்தெ |
| கன்னி | — | கன்னெ |
| தினை | — | தனெ |
| பனை | — | பனெ |
| மனை | — | மனெ |
| முட்டை | — | மொட்டெ |
| வெண்ணெய் | — | பெண்ணெ |

எனத் திரிந்து வழங்கப்படுகின்றன.

2. ஆனால் இரண்டாம் வேற்றுமையின் உருபான ஐகாரம் அகரமாகத் திரிகிறது. எடுத்துக்காட்டாக:—

| | | |
|---|---|---|
| அக்காளை | — | அக்கெய அல்லது அக்கன |
| அதை | — | அதுன |
| அவர்களை | — | அவக்கர |
| அவளை | — | அவ்வ |
| அவனை | — | அமன |
| உன்னை | — | நின்ன |
| என்னை | — | என்ன |
| தங்கையை | — | அம்மெய |
| தாயை | — | அவ்வெய |
| நம்மை | — | நங்கவ |

என்று திரிந்து வழங்கப்படுகின்றன.

3. தமிழில் வரும் அம் விகுதிகள் படுகில் அகர விகுதிகளாகத் திரிகின்றன. எடுத்துக்காட்டாக:

| | | |
|---|---|---|
| குடம் | — | கொட |
| குஷ்டம் | — | குஷ்ட |
| தடம் | — | எடுப்பொலியேற்று தட |
| நிலம் | — | நெல |
| நோட்டம் | — | நோட்ட |
| படம் | — | பட |
| பள்ளம் | — | ஹள்ள |
| பாடம் | — | பாட்ட |
| பிரியம் | — | பிரிய |
| வெல்லம் | — | எடுப்பொலியேற்று பெல்ல |

4. தமிழ்ச் சொற்களில் வரும் உகரப் பகுதிகள் படுகில் ஒகரப் பகுதிகளாகத் திரிந்து வருகின்றன. தமிழின் பேச்சு வழக்கிலும் உகரம் ஒகரமாகத் திரிதலுண்டு. எடுத்துக்காட்டாக:

| | | |
|---|---|---|
| உடல் | — | ஒடலு |
| உடை | — | ஒடெ |
| உயர்வு (உசத்தி) | — | ஒசத்தி |
| உலகம் | — | ஒலக அல்லது லோக்க |
| உலை | — | ஒலெ |
| உள்ளறை | — | ஒகெ மனெ அல்லது ஓகாசு மனெ |
| உள்ளே | — | அகத்தில் என்னும் பொருள்பட ஒகெ அல்லது ஓகாசு |
| உறக்கம் | — | ஒறக்க |
| உறங்கு | — | ஒறகு |
| உளவு | — | ஒளவு |

5. இன்னும் தமிழில் சிறிய மலை என்பது 'குன்று' எனப்படுவது போன்று தமிழின் சகரம் படுகில் ககரமாகத் திரிகின்றன. எடுத்துக்காட்டாக:

| | | |
|---|---|---|
| சங்கு | — | கொம்பு அல்லது கொ:ப்பு |
| சந்தனம் | — | எடுப்பொலியேற்று :கந்த |
| சிவப்பு | — | கெப்பு |
| சிறுத்தை | — | கிறும |
| சின்ன | — | குன்ன |
| செய் | — | எடுப்பொலியேற்று :கிய் |
| செந்நாய் | — | கென்னே(ய்) |
| சென்னி | — | கென்னி |
| சீவுதல் | — | கீசுவது |
| கீழ் | — | கீவு |

6. வகரவினத்தைக்கொண்டு தொடங்கும் தமிழ்ச் சொற்கள், படுகில் எடுப்பொலியேற்ற பகரங்களாகத் திரிதல் பொதுவழக்கு. எடுத்துக்காட்டாக:

| | | |
|---|---|---|
| வஞ்சனை | — | :பஞ்சனெ |
| வட்டி | — | :ப:ட்டி |
| வடக்கு | — | :படக்கு |
| வண்டி | — | :பண்டி |
| வளையல் | — | :பே |
| வா | — | :பா |
| வாய் | — | :பே(ய்) |
| வெட்டு | — | :பெட்டு |
| வெள்ளி | — | :பெள்ளி |
| வெறுமனே | — | :புறுதெ |

எனத் திரிதல் காண்க. படுகில் வகர இனத்தைக் கொண்டு தொடங்கும் சொற்களே இல்லை எனத் தெரிகிறது.

7. மேற்கூறியது போன்றே பகரவினத்தைக்கொண்டு தொடங்கும் தமிழ்ச் சொற்கள் படுகில், வடமொழிஹகர எழுத்தைக் கொண்டு தொடங்கு கின்றன. எடுத்துக்காட்டாக

| | | |
|---|---|---|
| பச்சை | — | ஹச்செ |
| பட்டி | — | ஹட்டி |
| பல்லி | — | ஹல்லி |
| பாடு | — | ஹாடு |
| பாலு | — | ஹாலு |
| புல் | — | ஹுல்லு |
| புறம் | — | ஹொருசு |
| பெட்டை | — | ஹெட்டெ |
| பெண் | — | ஹெண்ணு |
| போ என்பது போகுதல் என்பதினின்று | — | ஹோகு |

8. தமிழ்ச் சொற்களில் வரும் ழகரங்கள் தொக்கியும் அடுத்துள்ள எழுத்துக்கள் எடுப்பொலியேற்றும் திரிகின்றன. எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| உழுந்து | — | உ:த்து அல்லது உதந்து |
| கமழ் | — | :கமலு |
| கழுகு | — | பருந்து என்னும் பொருள்பட ஹ:த்து |
| கழுத்து | — | :கத்து |
| கொழுப்பு | — | கொ:ப்பு |
| தாழ்ந்துபோ | — | த:க்கி ஹோகு |
| நுழை என்பது புகு என்னும் பொருளில் | — | ஹு:க்கு |
| பணிவு என்னும் பொருள் தரும் தாழ்வு | — | :ப:க்கு |
| விழுந்து என்பதிலுள்ள வகரம் பகரமாகி எடுப்பொலி யேற்று | — | :பு:த்து |
| வீழ்த்து | — | :பூக்கு |

9. தமிழ்ச் சொற்களில் வரும் ழகரம் தொக்கி முன்குற்றெழுத்து நெட்டெழுத்தாகின்றன. எடுத்துக்காட்டு:

இகழ் என்பது ஏசல் அல்லது ஏடல் என்னும் பொருள்பட ஏடிச்சு

| | | |
|---|---|---|
| கழற்று | — | காசு |
| கிழங்கு என்பது எடுப்பொலி யேற்று | — | :காசு |
| குழந்தை | — | கூசு |
| தொழுவம் | — | தோ |
| நிழல் | — | நாலு |
| மழை | — | மே |
| பழகு | — | பாகு |
| பழக்கம் | — | பாக்க |
| மழி | — | :பாசு |

10. தமிழ் எதிர்மறைகளில் வரும் நெடில்கள் படுகில் குறில்களாகின்றன. எடுத்துக்காட்டு:

| | | | |
|---|---|---|---|
| | அல்லாமல் | — | அல்லதெ |
| | இல்லாமல் | — | இல்லதெ |
| | செய்யாமல் | — | மாடதெ அல்லது :கீயதெ |
| | பொல்லாத | — | ஹொல்லத |
| | போகாமல் | — | ஹோகதெ |
| 11. | இசைவு | — | எசவு |
| | இறங்கு | — | எறகு — ஈகு |
| | இலை | — | எலெ |

என இகரம் எகரமாகத் திரிகின்றன.

12. அன்று — அந்து
இன்று — இந்து
பன்றி — ஹந்தி

என, றன்னகரங்கள் தன்னகரமாகத் திரிகின்றன.

13. அச்சம் — அஞ்சிக்கெ
அச்சுறுத்து — அஞ்சிசு அல்லது அந்திசு

வல்லினங்கள் மெல்லினங்களாகத் திரிதல் காண்க.

14. ஆனே என்பது யானே என்பது போன்று ஆயிரம் என்னும் சொல்லி லுள்ள முதல் ஆகாரம் யாகாரமாகியும், யாகாரம் சாகாரமாகியும், சாயிரம். சாயிர — சாவிர எனவாகி படுகில் வழங்குகின்றது.

15. இன்னும் அகில் அல்லது அகிலி மரம் என்பது லகரம் ரகரமாகத் திரிந்து அகுரி மொர என படுகில் நிலவுகிறது.

16. தமிழ்ச் சொற்களிலுள்ள ழகரம் சென்னே வழக்குப்போன்று யகர மாகத் திரிதல் காண்க. எடுத்துக்காட்டாக:—

அழி — அயி எனவாகி, அழிந்துபோனஎன்பது அயிதோத எனவாகிறது
கோழி — கோயி
குழி — குய் எனப் பலுக்கொலியேற்றுத் திரிகிறது.

17. தமிழ்ச் சொல்லின் ழகரம் வகரமாதல் உண்டு. எடுத்துக்காட்டாக:

அழு — அவ்வு எனவும்
உழு — உவ்வு — உத்து
வீழ்-விழு — :புவ்-:பூவ்

18. சில சொற்களிலுள்ள ழகரங்கள் தொக்கி, எடுப்பொலியேற்ற பகர ஒற்றுக்களாகின்றன.

தழுவு — த:ப்பு
கொழுப்பு — கொ:ப்பு

19. இன்னும் தமிழைப்போன்றே ழகரம் ககரமாகத் திரிதலும் உண்டு.

அகழ் — அகெ
மிழை — மெக

என்று திரிந்து படுக வழக்காற்றில் உள்ளன.

**பழந்தமிழ்ச் சொற்கள்**

தமிழுக்கு இணேயான சுமார் ஐயாயிரம் படுகச் சொற்களே ஓர் அகர முதலியாகத் தொகுத்து அவைகளே ஆய்ந்து நோக்குங்கால் மிகப்பல படுகச்

சொற்கள் திரிந்துள்ள நிலையிலான பழந்தமிழ்ச் சொற்களாய் விளங்குவது புலனாயிற்று. அவற்றில் ஒரு சில சொற்களை மட்டும் எடுத்துக் காட்டி விளக்குவம்.

அடுப்பு என்னும் சொல்லுக்கேற்ற உலை என்னும் பழஞ்சொல் படுகில் ஒலெ என வழக்கிலுள்ளது.

உல் — உலன் — உவன் — ஒவன் — அவன் OVEN
என ஆங்கிலமாகிறது.

அகப்பை என்பதற்கான 'சட்டுவம்' என்னும் பழஞ்சொல் படுகில் 'செடெ' என நிலவுகிறது.

அங்கு, இங்கு, எங்கு என்பவைகளுக்கான அத்து, இத்து, எத்து என்னும் பழஞ்சொற்கள் — அத்து கடெ, அத்தோகு, எத்தோகிதெ என்பவை இற்றை நாளின் படுக வழக்கில் உள்ளன. அவைகளுக்கேற்ற அல்லி, இல்லி, எல்லி என்பவைகள், படுக மக்கள் நீலமலையில் காயமாய்க் குடிகொள்ளாமுன், கருநாடகப் பகுதியில் தங்கியிருந்த காலத்தே படுகில் புகுந்த கன்னடச் சொற்களாகும். அட், இட், எட், என்பது தொதுவம்.

தமிழ்த்தாய் என்னும் பொருளில் விளங்கும் ஔவை என்னும் சொல்லே தாயைக் குறிக்க, படுகில் ஔவ்வெ என விளங்குகிறது.

க்வா, க்வா என அழும் குழந்தையின் ஒலியோடு அகர உயிரேற்று 'அக்வா' என இருளமொழியில் தாயைக் குறிக்கின்றது.

விவிலியத்தில் காணும் ஆதித்தாயைக் குறிக்க ஆங்கிலத்தில் EVE எனவும், பிற மொழிகளில் ஔவா எனவும் வந்துளது.

தானிய மணிகளைப் பொதுப்படையாகக் குறிக்கும் 'அக்கம்' என்னும் பழஞ்சொல் அரிசியைக் குறிக்க படுகில் அக்கி என வழங்குகின்றது.

இழைந்து போகும் நீரை 'நீரிளெ'' எனவும், விரைந்தோடும் நீரோடை என்னும் பொருளில் படுக மொழியில் 'அருது ஹோப்ப :கங்கெ' எனக் கூறுவதினின்று அருது — அருவி என்பவைகளுக்குள்ள பழந் தொடர்பு தெளிவாகிறது.

மிகச் சூடான தீ என்னும் பொருளில் 'உருத கிச்சு' என்பதினின்று, உரு என்பது இரும்பை உருக்கி உருக்காக்கும் தன்மையிலான அதிகச் சூடு கொண்டதென்னும் பழஞ்சொல்லும், தீ என்பதற்கான கிச்சு என்னும் பழஞ்சொல்லும் தெளிவாகின்றன.

செப்பியாங்கு செய்தான் என்பதிலுள்ள போன்று என்னும் பொருள்படும் 'ஆங்கு' என்பது, 'ஹேகித அங்கெ மாடித' என்பதிலுள்ள அங்கெ எனத் திரிந்து படுகின் பொதுவழக்கில் உள்ளது.

நீரை, ஊற்று, வார், அளி, கொடு என்னும் பொருளில், கல்வெட்டுகளில் காணக்கிடக்கும் 'அட்டு' என்னும் பழந்தமிழ்ச் சொல் இன்றைய படுக வழக்கில் நீரு + அட்டு = நீரட்டு என உள்ளது குறிப்பிடத்தக்கது.

பனங்காயிலுள்ள இளம் விதையை மெல்லாது விழுங்கப்படுதல் என்னும் பொருளில் நுங்கப்படுவதால் நுங்கு எனப் பெயர் வரலாயிற்று. அந்நுங்குதல் என்னும் பழந்தமிழ் வினைச் சொல்லே படுகில் 'நுங்கு' எனவும், விழுங்கச் செய் என்பதற்கு 'நுங்கிசு' எனவும் வருதல் காண்க.

உரையாடினர் என்னும் பொருள்பட ''மெள்ளென நுடித்தனர்'' என்பதில் வரும் நுடி என்னும் பழந்தமிழ் வினைச்சொல் நுடிதரு — நுடிதூண்டி:த்தரு எனப் படுகில் நிலவுகிறது.

நெற்றியின் நடுப்பகுதியான நுதல் என்னும் சொல்லில் உள்ள தகரம் சகர மாகத் திரிந்து படுகில் நொசலு என வழங்கியுள்ளது.

பழந்தமிழ்ச் சொல்லாகிய 'கவைமா' என்னும் காட்டு மாடானது, அது மேய்ந்த இடத்திலேயே படுத்திளைப்பாறுதல் போன்று உண்ட இடத்திலேயே உறங்கி வந்தாயா? என வீட்டின் காரியத்தைக் கவனியாது வெளியூர் சென்று தங்கிவரும் ஒருவனைப் பார்த்து அவ்வூர்ப் பெரியோர் ''கௌ—ஹடுது :பந்தெயா?'' என்னும் வினுச் சொற்றொடரில் வைவர். அச்சொற்றொடரிலுள்ள 'கௌ' என்பது 'கவைமா'என்னும் சொல்லின் திரிபென விளங்குகிறது.

கடமானைக் குறிக்கும் மிழை என்னும் பழந்தமிழ்ச் சொல்லிலுள்ள ழைகாரம் ககரமாகத் திரிந்து படுகில் ''மெக'' என வழங்குகின்றது.

மயிலைக் குறிக்கும் 'நவிலம்' என்னும் சொல்லினின்று மயிற்றோகையைக் குறிக்க படுகில் மயிலின் வால் என்னும் பொருள்பட 'நவிலு:பாலு' என வருகிறது.

தாய்ப்பாலூட்டலை குழந்தைக்கு முலை கொடுக்கிறாள் என வரும் பழந் தமிழ் வழக்குப்படி படுகில் ''அவ கூசுக மொலெ கொட்டவெ'' என்பர். மலை யாளத்திலும் இவ்வழக்குண்டு.

உட்காரு என்பதற்கு குள்—குளி என படுகிலும், குள்—குருகு—குக்கு — எனக் கோவை வழக்கிலும், குக்கிஇரு — குக்கிரு எனக் கோத்த மொழியிலும், திரிகின்றன.

மண்டை உரி என உருமாலையைப் படுகில் மண்ட்ரெ எனவும்,
வரை என்னும் பொருள்பட எழுத்தை :பரெ எனவும்,
கல் — படி என்பதை 'ஓது' எனவும்'',
தோண்டு என்பதை அகழ் என்னும் பழஞ்சொல்கொண்டு அகெ எனவும்,

நகத்தைக் குறிக்க உகிரு என படுகிலும் உகிர் — கிர் — கில் — கில Claw என உயிரினத்தின் நகத்தைக் குறிக்க ஆங்கிலத்திலும் ஆக, ஆயிரக்கணக்கான படுகச் சொற்கள் பழந்தமிழின் அடிப்படையில் பிறந்துள்ளது கொண்டு, படுக மொழி பழந்தமிழே என உறுதிப்படுத்திக் கூறலாம்.

# கன்பியூசியசும் வள்ளுவரும் கண்ட நட்பியல் சிந்தனைகள்

டாக்டர் மோகனராசு
விரிவுரையாளர், திருக்குறள் ஆய்வுப்பகுதி, தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்

### முன்னுரை

சீனப் பெருநாட்டின் சிறப்புமிகு பேரறிஞர் கன்பியூசியசு. இவர் கி.மு. 551-இல் பிறந்தார் என்பார்.[1] கி. மு. 552-இல் பிறந்தவர் என்பாரும் உளர்.[2]

தமிழ்த்திரு நாட்டின் தனிப்பெரும் மேதை வள்ளுவர். இவருடைய காலம் இன்னது எனத் தக்க சான்றுகளுடன் இன்னும் நிறுவப்படவில்லை. இவருடைய காலத்தின் மேல் எல்லை கி. மு. 7995 வரை செல்கின்றது; கீழ் எல்லை கி.பி. 600 வரை நீள்கிறது.[3] கால வேறு பாட்டிற்கு உரிய இடைவெளி 8595 ஆண்டுகள்! — ஏறத்தாழ 86 நூற்றுண்டுகள்!

### இலக்கியப் பணி

கன்பியூசியசு ஷர்-ஜிங் (பழம் பாடல் தொகுதி) ஷூ-ஜிங் (வரலாற்றுத் தொகுதி) என்னும் நூல்களைத் தொகுத்தவர் என்பர்; லி-ஜிங் (வினைமுறைத் தொகுதி), யோ-ஜிங் (இசைத் தொகுதி) என்னும் நூல்களைப் பதிப்பித்தவர் என்பர்; யி-ஜிங் (மாற்றத் தொகுதி ) என்னும் நூலுக்கு உரை எழுதியவர் என்பர்; சூன்-சியூ (இளவேனிலும் இலை யுதிர் காலமும்) என்னும் நூலை எழுதியவர் என்பர்.[4] எந்த ஒரு நூலும் கன்பியூசியசால் எழுதப்படவில்லை என்றும் கொள்கின்றனர்.

லுன்யூ (முதுமொழிகள்) என்னும் நூல், கன்பியூசியசின் சிந்தனைகளையும் அவருடைய மாணவர்கள் சிலரின் சிந்தனைகளையும் உள்ளடக்கியதாகும். இந்நூலே இந்த ஒப்பாய்வுக்குரிய அடிப்படை நூலாகக் கொள்ளப்படுகின்றது.

### லூன்யூவும் திருக்குறளும்

லூன்யூ, திருக்குறள் ஆகிய இரு நூல்களும் திட்பமும் நுட்பமும் செறிவும் மிக்கவை; முன்னது சீன வேதமாகக் கருதப்படுவது, பின்னது தமிழ் வேதமாகக் கருதப்படுவது.

லூன்யூ உரையாடல் முறையில் அமைந்த நூல்; திருக்குறள் வெண்பா நடையில் அமைந்த நூல்; முன்னது 20 இயல்களில் 499 மூதுரைகளைக் கொண்

டது; பின்னது 3 பால்களில் — 13 இயல்களில் — 133 அதிகாரங்களில் 1330 குறட்பாக்களைக் கொண்டது.

லூன்யூவில் உள்ள 499 மூதுரைகளில் 424 மூதுரைகள் கன்பியூசியசு உரைத்தவை; 32 மூதுரைகள் கன்பியூசியசு பற்றியவை; 43 மூதுரைகள் பிற அறிஞர்கள் கூறியவை. திருக்குறளில் காணும் 1330 குறட்பாக்களும் வள்ளுவர் உரைத்தவை.

லூன்யூவில் வரும் இயல் கருத்துகள் முறைப்படுத்தப்பட்டவை அல்ல; திட்டமிட்டு எழுதப்பட்டவையும் அல்ல; இயல்களில் காணும் மூதுரைகளின் எண்ணிக்கைகளும் முறைப்படுத்தப்பட்டவை அல்ல; ஓர் இயலில் 3 முதல் 47 வரை மூதுரைகள் இடம்பெற்றுள்ளன. ஆனால், திருக்குறள் திட்டமிட்டு எழுதப் பட்ட ஒன்று; அதில் இயல் கருத்துகள் முறைப்படுத்தப்பட்டுள்ளன; ஒவ்வோர் இயலில் வரும் குறட்பாக்களின் எண்ணிக்கையும் சமன் செய்யப்பட்டுள்ளது.

அறம் பொருள் தொடர்பான கருத்துகள் மட்டுமே லூன்யூவில் இடம் பெற்றுள்ளன; அறம் பொருள் காமம் தொடர்பான கருத்துகள் திருக்குறளில் இடம்பெற்று உள்ளன.

கன்பியூசியசின் பண்புகள், அவருக்கு முன் வாழ்ந்தவர், சம காலத்தில் வாழ்ந்தவர் ஆகியோரைப் பற்றிய செய்திகள் ஒருங்கிணைந்து ஓரளவு வரலாற்றுச் சாயல் பெற்றுள்ளது லூன்யூ. இச்சாயல் குறளில் இடம்பெறவில்லை.

அணிநலம், சொல்லாட்சிச் சிறப்பு, ஓசை நயம் ஆகியவற்றை லூன்யூவில் ஓரளவே காண இயலும்; திருக்குறளில் இவை பின்னிப் பிணைந்துள்ளன.

சினமண் உலகிற்கு வழங்கிய நன்கொடை லூன்யூ; தமிழ்மண் உலகிற்கு வழங்கிய நன்கொடை திருக்குறள். இவ்விரு நூல்களிலும் காணும் நட்பியல் சிந்தனைகளை ஒப்பிட்டு ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## 1. நட்பு

உறவால் — பால் உணர்வால் தம்முள் தொடர்பு அற்ற, ஒத்த உணர்ச்சி யுடைய உயர்ந்த உள்ளங்களை ஒருங்கு இணைக்கும் நல் உறவு-நல்உரிமைப் பாலம் நட்பு. இப்பொருள் விளக்கம், 'உணர்ச்சிதான் நட்பாங்கிழைமை தரும்' (785) என்னும் வள்ளுவத் தொடரை அடித்தளமாகக் கொண்டு எழுந்ததாகும்.

'முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகநக நட்பது நட்பு' (குறள் 786)

'அழிவினவை நீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு' (குறள் 787)

'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு' (குறள் 788)

என்பன வள்ளுவம் நட்பிற்குத் தரும் சிறப்புநிலை விளக்கங்கள்; இவ்விளக்கங் களுக்கு ஒத்த உணர்ச்சியும் உரிமையும் அடித்தளம் ஆதல் காணலாம். கன்பியூ சியசின் கருத்துகளில் நட்பு என்பதற்கு வெளிப்படையான விளக்கம் ஏதும் இல்லை;

**2. நட்பின் அடிப்படை**

நட்பிற்கு அடிப்படையாக அமைவது ஆர்வம் உடைமை என்பது கன்பியூசியசின் கருத்து (லூன்யூ 13:27). இக்கருத்து வள்ளுவருக்கும் உடன்பாடே (குறள். 74). எனினும், வள்ளுவர் அடிப்படையை வெளிப் படுத்துவதோடு நின்றுவிடவில்லை; அடிப்படையின் அடிப்படைகளையும் வெளிப் படுத்துகின்றார். அவர் தரும் அடிப்படையின் அடிப்படைகள் இரண்டு: 1. ஒத்த உணர்ச்சி; 2. அன்பு. பின்னதற்கு முன்னதே அடிப்படையாகவும் அமையும்.




**3. நட்புக் கொள்ளத் தக்கவர்கள்**

நல் உறவுப் பாலம் நட்பு ஆதலின் அதில் அல் உறவு இருத்தல் கூடாது. நல் உறவு என அமையவிருக்கும் நட்புள்ளும் இருவகை உண்டு. ஒன்று நம்மை நாடும் நட்பு; மற்றொன்று நாம் நாடும் நட்பு.

**நம்மை நாடும் நட்பு**

நம்மை நாடி ஒருவர் நட்புக் கொள்ளவரின், அவரின் குணம் குற்றங்களை ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டும் என வள்ளுவர் வலியுறுத்துகின்றார் (குறள் 793). இக்கருத்து கன்பியூசியசின் கருத்துகளிடை மறைபொருளாகவே அமைந்துள்ளது.

ஒருவன் பிறந்த குடியை அடிப்படையாகக் கொண்டும் அவனுடைய குணங்கள் அமைகின்றன; ஆதலின், நாடிவரும் நட்பினரின் குடியையும் ஆராய வேண்டும் என வள்ளுவர் வகுத்து உரைக்கின்றார் (குறள்கள் 791, 793). இக்கருத்து, கன்பியூசியசின் கருத்துகளிடை காணவில்லை.

ஒருவருடைய குணம் அறிவு ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் மாற்றத்துக்கும் அடிப்படையாக அமைவனவற்றுள் மற்றொன்று இனம். ஆகவே, நாடிவரும் நட்பினர் தொடர்புகொண்டுள்ள இனத்தையும் தெளிந்தே அவர்பால் நட்புக் கொள்ளவேண்டும் என்பது வள்ளுவர் நெறி (குறள் 793); நல்லவர்களொடு நட்புக்கொள்ள வேண்டும் என வலியுறுத்தும் கன்பியூசியசு, நல்லவர்களோடு தொடர்புடையாரிடத்தே நட்புக்கொள்ள வேண்டும் என வழிவகுக்க வில்லை. எனினும், 'ஒப்பிலார் நட்புக் கொள்ளற்க' (லூன்யூ, 1:6) என அவர் உரைத்திருப்பதால், நல்லவர்கள் நல்ல இனத்தோடே நட்புக் கொண்டிருப்பர் எனக் கொள்ளவும் இடமுண்டு.

**நாம் நாடும் நட்பு**

முன்பு நட்புக் கொண்டவர்களின் நட்புரிமைகளை மதித்து, எந்தச் சூழலிலும் நட்பில் குன்றுதல் இல்லாதவர்களை – 'கெடாவழிவந்த கேண்மை

யரை' — நாடிச் சென்று நட்புக் கொள்ள வேண்டும் (809), நண்பர்கள் நல்லன வில்லா நெறிகளில் சென்றால், நட்புரிமையுடன் அவர்கள் வருந்தும்படியாக எடுத்துரைத்தும், திருந்தாவிடின் இடித்துரைத்தும் ஆற்றுப் படுத்தும் தெளிவும் துணிவும் உலக வழக்கு அறியவல்ல திறனும் உள்ளாரை நாடிச்சென்று நட்புக் கொள்ள வேண்டும் (குறள். 795) என்பன வள்ளுவம். இவை கன்பியூசியசின் கருத்துகளிடை இடம்பெறவில்லை.

அறத்தைத் தெளிவாக அறிந்தவர்களுள்ளும் அதன்வழி நடப்பவர்களையே நாடிச் சென்று நட்பாக்கிக் கொள்ளவேண்டும் (லூன்யூ 15:9) என்பர் கன்பி யூசியசு. இக்கருத்து,

'அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்'

என்னும் குறள் (441) வழி வெளிப்படக் காணலாம். இக்குறளுக்கு உரை எழுதிய பரிதியார்,

'கல்வி கேள்வி அறிந்து தன்மத்தின் வழி நிற்பார் உறவை எந்த வகையிலும் பண்ணிக் கொள்வார்'

எனக் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது. 'நீரவர் கேண்மை' (குறள். 782) என்னும் தொடரில் வரும் 'நீரவர்' என்னும் சொல் மேற்கூறிய கருத்தையே வலியுறுத்துவது.

மாசற்ற தூயவர் (குறள். 800), குடிப்பிறந்து தன்கண் பழி நாணுவார் (குறள். 794) ஆகியோர் நாடிச் சென்று நட்புக் கொள்வாருள் மேலானவர்கள்; இவர்களை நாடி, வேண்டுவன கொடுத்தும் நட்பாக்கிக் கொள்ளவேண்டும் என்னும் கருத்து வள்ளுவத்தில் மட்டுமே இடம் பெற்று உள்ளது.

பொதுவாக, நட்புக்கொள்ளத் தக்கவர் யார்யார் என்பதை வகுத்துரைப் பதில் வள்ளுவரிடம் காணும் விரிந்த பார்வை கன்பியூசியசிடம் இல்லை.

## 4. பழகு முறை

நட்புக் கொள்ளத் தக்கவர்களைத் தேர்ந்து நட்புக் கொள்வது ஓர் அரிய செயல்; அதனினும் அரிய-பெரிய செயல் கொண்ட நட்பைப் பேணுவது. நட்பைத் தக்கவாறு பேண வேண்டுமாயின், நட்பில் உண்மையான பற்றுறுதியும் நேர்மையும் செறிந்து மிளிரவேண்டும் எனக் கன்பியூசியசு எதிர்பார்க்கின்றார் (லூன்யூ 5:25). வள்ளுவத்தில் இக்கருத்து உய்த்துணர் வகையானே அமைந்துள்ளது.

நண்பர்களிடம் பழகும் பாங்கு குறித்த சிந்தனைகளுள் குறிப்பிடத் தக்கனவாக அமைவன நண்பர்களை மதித்தல், தாங்கல், கடிந்துரைத்தல், பழைமை பாராட்டல் போன்றனவாகும். இவைபற்றிய சிந்தனைகள் இருவரிடமும் காணப்படுகின்றன.

### நிலைப்பேறும் வளர்ச்சியும்

நண்பர்கள் ஒருவரோடு ஒருவர் பழகும்போது, ஒருவர் மற்றொருவரின் எண்ணம் சொல் செயல்களுக்கு மதிப்பளித்தல் வேண்டும். அம் மதிப்பு எத்தன் மைத்தாக விளங்க வேண்டும் என்பதை,

''இயென் பிங் (YEN PING) தன் நண்பர்களிடம்
தொடக்கத்தில் கொள்ளும் மதிப்பு, எள்ளளவும்
குறையாமல் நீடித்து நிலைத்து நிற்கும்''
(லூன்யூ 5: 16)

என்னும் நடைமுறை எடுத்துக்காட்டைக் காட்டி விளக்குகின்றார் கன்பியூசியசு. அதாவது, நண்பர்கள் ஒருவர்பால் ஒருவர் தொடக்கத்தில் கொள்ளும் மதிப்பு நீடித்து, நிலைத்து நிற்க வேண்டும் என்பது அவர் வாக்கு.

பண்புடையாளர் தம்முள் கொள்ளும் நட்பின் சிறப்பை,

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு' (குறள் 783)

என்னும் குறள்வழி வெளிப்படுத்துகின்றார் வள்ளுவர். நூற்பொருள் கற்குந் தொறும் கற்குந்தொறும் புதுப்புதுப் பொருள் பயந்து இன்பம் பயத்தலைப் போலப் பண்புடையாளர் தம்முள் கொள்ளும் நட்புப் பயிலுந்தொறும் பயிலுந் தொறும் இன்பம் பயக்கும் என்பது இதன் பொருள். இங்குத் தோன்றும் இன்பம் படிநிலைத்தான வளர்ச்சியுடை இன்பம்; இன்பப் பயன், நண்பர்பால் கொண்ட மதிப்பில் ஏற்றத்தை நல்கும். படிநிலைத்தான இன்பப் பயன், மதிப்பில் படிநிலைத்தான ஏற்றத்தை நல்கும்; இந்த மதிப்பை, நட்பு நாளுக்கு நாள் வளர வழிவகுக்கும்.

'நிறைநீர நீரவர் கேண்மை பிறை' (குறள். 783)

என வள்ளுவர் உரைப்பதும் இஃதே. ஆகவே, நண்பர்கள் ஒருவர்பால் ஒருவர் தொடக்கத்தில் கொள்ளும் மதிப்பு, நாளுக்கு நாள் வளர்தல் வேண்டும் என வள்ளுவர் எதிர்பார்க்கின்றார் என்பது தெளிவு.

கன்பியூசியசு, மதிப்பு நீடித்து நிலைத்து நிற்கவேண்டும் என உரைக் கின்றார்; வள்ளுவர், அஃது நாள்தோறும் படிப்படியாக வளர்தல் வேண்டும் என்று எதிர்பார்க்கின்றார். இருவரும் குறிக்கோள் நோக்கினர்; எனினும், வள்ளுவர் குறிக்கோளின் உயர்நிலையைக் கருதுகின்றார்.

**விரைவும் ஊன்று நிலையும்**

நட்பு நிலையில் விரைவு வேண்டும் (லூன்யூ 13: 27); நண்பர்களைத் தாங்க வேண்டும் (லூன்யூ 16: 4) எனச் சுருங்க உரைக்கின்றார் கன்பியூசியசு. வள்ளுவத்தில் இக்கருத்துகள் சற்று விரிவு பெற்றுள்ளன.

'உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு' (குறள். 788)

என்னும் குறள், நண்பர்களுக்கு இடுக்கண் வருகின்றபோது அதனைக் களைவதில் விரைவு எத்தன்மைத்தாக விளங்க வேண்டும் என்பதைக் கவிநயம்பட உரைக் கின்றது. இடுக்கண் களைவதில் மட்டுமன்று, நல்லது செய்வதிலும் விரைவு வேண்டும் என்பதை,

'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்' (குறள். 679)

என்னும் குறள் எடுத்துரைக்கின்றது.

எஞ்ஞான்றும் திரிபு இல்லாமல் நண்பர்களைத் தாங்கும் திண்மை வேண்டும்; இயலும் வழிகளில் எல்லாம் நண்பர்களைத் தாங்கும் திண்மை வேண்டும் என வள்ளுவம் நண்பர்களைத் தாங்கும் தகைமையை எடுத்துரைக்கின்றது (குறள். 789).

ஓரளவு கன்பியூசியசின் கருத்துகளுக்கு வள்ளுவம் தக்க விளக்கங்களாக அமைந்துள்ளது எனலாம்.

**கடிதலின் அளவு**

நண்பர்கள் நலிவுதரு நெறிகளிலே நாட்டம் கொண்டால், அவர்களைக் கண்டித்து நல்நெறியில் ஆற்றுப்படுத்த வேண்டும் என்பதைக் கன்பியூசியசும் வள்ளுவரும் ஏற்றுக்கொள்கின்றனர்.

உண்மையான நட்புணர்வுடன் நண்பனைக் கண்டிக்க வேண்டும்; நயமாகக் கண்டிக்க வேண்டும் (லூன்யூ 12: 23) எனக் கூறும் கன்பியூசியசு நண்பனைக் கடிந்துரைக்கலாம் என்பதையும் ஏற்றுக்கொள்கின்றார். ஆனால், அடிக்கடி கடிந்துரைப்பது நட்பின் பிணைப்பிற்குத் தடையாகி நண்பர்கள் பிரிவதற்கும் காரணமாகி விடுகிறது என்பதனால், கடிந்துரை அளவோடு அமையவேண்டும் எனவும் நெறிப்படுத்துகின்றார் (லூன்யூ 4: 26). இவர் நோக்கு உலக நடைமுறையொடு ஒத்து அமைகின்றது.

அவன் அவள் என்னும் வேறுபாடு அற்று உள்ளதால் ஒன்றுபடும் காதலர்களைப்போலத் தான் அவன் என்னும் வேறுபாடு அற்று உள்ளத்தால் ஒன்றுபடும் குறிக்கோள் நிலைக்கு வள்ளுவர் நட்பைக் குறிக்கொள்வதால், நண்பர்களைக் கடிந்துரைப்பதில் உண்மையான நட்புணர்வு மிளிர வேண்டும் என்பதில் ஆழமான நம்பிக்கை உடையவர் வள்ளுவர் என்பது தெளிவு.

நண்பர்கள் அவ்வழிகளில் சென்றால் அவர்களை இடித்துரைத்து நல்வழிப் படுத்தும் நோக்கொடு நட்பு அமையவேண்டும் என்றும், அவ்வாறு இடித்துரைக்கும் தெளிவும் துணிவும் உள்ளவனையே ஒருவன் நட்பாகக் கொள்ளவேண்டும் என்றும் வள்ளுவர் நெறிவகுக்கின்றார். இவற்றால், இடித்துரைப்பது நட்பின் ஒரு கூறு என்பதை வள்ளுவர் மிகத் தெளிவாக வெளிப்படுத்துகின்றார். ஆகவே, நயமாகக் கண்டித்தல்வேண்டும் என்பதையோ, அடிக்கடி கண்டிக்காமல் ஒருசில நேரங்களில் தவறு கண்டவிடத்தும் கண்டும் காணாது இருந்துவிடல் வேண்டும் என்பதையோ வள்ளுவர் வலியுறுத்தவில்லை; மாறாக, 'மிகுதிக்கண் மேற்சென்றிடி' (குறள். 784), 'அழச்சொல்லி அல்லது இடி' (குறள். 795) என்றே வலியுறுத்துகின்ருர். இதற்கு அடிப்படைக் காரணம் வள்ளுவர் நட்பில் காணும் குறிக்கோள் அளவினதான ஒத்த உணர்ச்சியும் உரிமையும் என்க.

**பழைமை பாராட்டல்**

பழைமை பாராட்டலுக்குப் பெருமதிப்புத்தரும் வள்ளுவர், பழைமை பாராட்டும் முறைமையை விளக்க ஒரு தனி அதிகாரமே வகுத்துள்ளார். அவ்வதிகாரத்தில் அவர்தரும் கருத்துகளின் சாரம் வருமாறு: நட்பு என்பது 'பெருங்கிழமை' — அதாவது 'வேற்றுமை அறநின்ற பெரியதோர் உரிமை'.[6] உரிமையின்

ஊட்டமாக விளங்கும் நட்பில், நண்பர்கள் தாம் நட்புக் கொண்டோரைக் கேளாம லேயே, நட்புக் கொண்டோர் தொடர்பான வினைகளை உரிமையுடன் மேற் கொள்ளுதல் இயல்பு; அதனால் நன்மையும் விளையலாம் – தீமையும் விளைய லாம். தீமையே விளைவதாயினும் நண்பர்கள் உரிமையான் செய்வனவற்றை வெறுத்தல் கூடாது; பொறுத்தல் வேண்டும் (குறள். 805); உடன்பாடு அற்றன வற்றைச் செய்யினும் அவர்களைப் புறக்கணியாது அவற்றிற்கு உடன்படுதலும் வேண்டும் (குறள்கள் 802, 803); அவர்கள் செய்வனவற்றை விரும்பி ஏற்று மதிக்கும் மனப்பக்குவம் வேண்டும் (குறள். 804). நண்பர்கள் உரிமையான் கேளாது செய்வனவற்றால் உடல் – உயிர் உடைமைகளுக்குக் கேடு வருமாயினும் நண்பர்களைப் புறக்கணித்தலோ நட்பிலிருந்து விலகுதலோ கூடாது (குறள் 806).

அதாவது, பொறுத்தல், உடன்படல், விரும்பல், புறக்கணியாமை, நீங்காமை ஆகியனவற்றைப் பழைமையை மதித்தொழுகும் செயற்பாடுகளாக வள்ளுவம் வகுத்துரைக்கின்றது. நண்பர்களைப் புறக்கணித்தல் கூடாது என்னும் சிந்தனை மட்டுமே கன்பியூசியசின் கருத்துகளில் காண முடிகின்றது; உரிமையின் பெருமையை அவர் அவ்வளவாக விளக்க முனையவில்லை.

பழைமையை மதித்தொழுகும் பாங்கு சான்றோர்களிடம் பெரிதும் மிளிர வேண்டும் என வள்ளுவர் எதிர்பார்க்கின்றார் (குறள். 802). கன்பியூசியசு இப்பாங்கை அரசு உயர் அலுவலர்களிடம் எதிர்பார்க்கின்றார் (லூன்யூ 8: 2). உயர் அலுவல்களில் இருப்பவர்கள் சான்றோர்களாக இருத்தல் வேண்டும் எனக் கன்பியூசியசு வரையறுப்பதால், வள்ளுவரும் கன்பியூசியசும் இக்கருத்தில் ஒன்று படுகின்றனர் என்பது பொருந்தும்.

### நட்புக் கொள்ளத் தகாதவர்கள்

உலகில் எல்லாவற்றிலும் இருமை உண்டு. நட்பு இதற்கு விதிவிலக்கானது அன்று. கொள்ளத்தக்க நட்பு என ஒரு பிரிவு உண்டு என்றால், கொள்ளத் தகா நட்பு என மற்றொரு பிரிவு இருப்பது இயற்கை. அக் கொள்ளத்தகா நட்பினை, (1) ஒப்பிலார் நட்பு, (2) தீய நட்பு, (3) கூடா நட்பு என மூவகையாகப் பகுத்துக் காணும் நோக்கு இருவரிடமும் காணப்படுகின்றது.

### ஒப்பிலார் நட்பு

நட்புக் கொள்ளுங்கால், 'ஒப்பிலார் நட்புக் கொள்ளற்க' (லூன்யூ1:6) என வரையறுத்துரைக்கின்றார் கன்பியூசியசு. ஒப்பிலார் என்பதற்குப் பண்பால் ஒப்பு இல்லாதவர்[7] என்றும், கீழோர்[8] என்றும் பொருள் கொள்கின்றனர். உரை யாசிரியர் ஹிசிங் பிங் (கி. பி. 932 – 1010) அவர்கள் ஒப்பிலார் என்பதற்கு நட்பில் பற்றுறுதியும் உண்மையும் அற்றவர் எனக் குறிப்பிட்டுரைக்கின்றார்.[9]

'நீரவர் கேண்மை' (குறள். 782), 'பண்புடையாளர் தொடர்பு' (குறள். 783), 'உணர்ச்சிதான் நட்பாங் கிழமை தரும்'(குறள். 795) என்னும் வள்ளுவத் தொடர்கள் நட்பில் ஒப்புடைமை வேண்டும் என்பதை வலியுறுத்துவன. வள்ளுவர் ஈரிடங்களில் 'ஒப்பிலார்' எனக் கூறி, அவர்களிடம் நட்புக்கொள்ளல் கூடாது எனவும் நெறிப்படுத்துகின்றார். அவ்வொப்பிலாருள் ஒருவகையினர்

பயன் உள்வழி நட்புச் செய்து, பயன் இல்வழி நட்பை விடுவார் எனக் குறிப்பிட்டுரைக்கின்றார் (குறள் 812).

### தீய நட்பு

வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ தீமை பயப்பனவாக அமையும் நட்பைத் தீய நட்பு என்க.

'தற்புகழ்ச்சியார், புகழ்வதுபோல நயமாக இகழ்பவர்கள், பயன் தராதனவற்றைப் பிறர் மயங்கப் பேசுபவர்கள் ஆகிய மூவர் நட்பும் தீமை பயப்பன' (லூன்யூ 16 4) என்கிறார் கன்பியூசியசு. இப்பாகுபாடு சொல்லின் அடிப்படையில் அமையும் பாகுபாடு; இதனால், எண்ணம் செயல் வகைப்பட்ட தீய நட்பினரைக் கன்பியூசியசு கருதவில்லை என்பது தெளிவு.

வள்ளுவர் எண்ணம், சொல், செயல் ஆகிய மூவகை நிலையிலும் தீய நட்பினரை அளவிட முனைகின்றார். பண்பிலார் (குறள் 811), அறிவிலார் (குறள் 816), நகைவகையர் (குறள் 817), மனைக்கண் நட்புச் செய்து மன்றில் பழிப்பார். (குறள் 820), வினைவேறு சொல்வேறு பட்டார் (குறள் 819), பயன் உள்வழி நட்புச் செய்து இல்வழி விலகுவார் (குறள் 813), செய்தேமம் சாரார் (குறள். 815), இயல்வது செய்யாதார் (குறள். 818), துன்பம் வாராக்கால் துணையாவார் போலிருந்து துன்பம் வருங்கால் விலகுவார் (குறள். 814) எனப் பல்வேறு பெயர்களால் தீய நட்பினரை அடையாளங்காட்டுகின்றார்.

தீய நட்பு மூன்று எனக் கன்பியூசியசு வரையறுத்து இருப்பது முழுமையற்ற ஒரு வரையறையே. தீய நட்பினர் பலதிறத்தர் ஆகலின், அவர்கள் இத்தனை வகையினர் என வரையறைக்குள் அடக்காமல், ஒரு சிலரை மட்டும் வள்ளுவர் அடையாளம் காட்டுகின்றார்; காட்டி, அவர்களால் வரும் பயனின்மைகளையும் தீமைகளையும், விலகு முறைமைகளையும் எடுத்துரைக்கின்றார். இவை எல்லாம் கன்பியூசியசு உரைக்காதவை.

### கூடா நட்பு

உள்ளத்தால் ஒன்றாமல், புறத்தில் ஒன்றினார்போல், பழகுவார் நட்புக் கூடா நட்பு. இவ்வகை நட்புச் செய்து ஒழுகுவதற்கு ஒவ்வொருவரும் நாண வேண்டும் என்பது கன்பியூசியசின் கருத்து (லூன்யூ 5:24).

வள்ளுவர் கூடா நட்பினரை 'இனம்போன்று இனம் அல்லார்' (குறள். 822), 'ஒட்டார்' (குறள் 826), 'ஒன்னார்' குறள்கள். (827, 828), 'நேரா நிரந்தவர்' (குறள் 821), 'பகை' (குறள் 830), 'மனத்தின் அமையாதவர்' (குறள் 825), 'மாணார்' (குறள் 823), 'மிகச் செய்து தம்மெள்ளு வார்' (குறள் 829), 'வஞ்சர்' (குறள் 824) எனப் பல்வேறு பெயர்களால் வேறுபடுத்திக் காணுகின்றார்.

மனம் செம்மை அடைதற்கான நூல்கள் பலவற்றைக் கற்ற போதிலும் இவர்களின் எண்ணம் செம்மை அடையாது (குறள். 823); அதில், வஞ்சனை நிறைந்து விளங்கும் (குறள். 824); பொருட்பெண்டிர் மனமும் இவர்தம் மனமும்

ஒருசேர விளங்கும் (குறள் 822); புறத்தில் நண்பர்போல் நடித்து அகத்தில் இகழ்ந்து உரைப்பார்கள் (குறள் 824); எண்ணத்தில் மட்டு மன்று; சொற்களிலும் வஞ்சனைகள் மறைந்திருக்கும்; பகைமையை மறைத்தற் பொருட்டு நயமாகப் பேசுவார்கள் (குறள் 825); பணிவாகப் பேசுவார்கள் (குறள் 827); நண்பர்களைப் போன்று பயன் தருமாறு பேசுவார்கள் (குறள் 825); செயலிலும், நண்பர்களைத் தாங்குவது போலிருந்து, பிறர் தாக்க வரும்போது தாக்க வருபவர்க்குத் துணைநின்று நட்புக் கொண்டவரை வீழ்த்துவர் (குறள் 821); சுருங்க உரைப்பின், இவர்கள், எண்ணம் சொல் செயல் ஆகிய மூவகையானும் மாறுபட்டு, அம்மாறுபாடு நட்புக் கொண்டார்க்குப் புலனாகாது ஒழுகுவர்; இதனால், நட்புக் கொண்டார்க்குத் தீமையே என்பதைப் பல நிலைகளில் வள்ளுவர் விளக்குகின்றார். இத்தகையோரை, எண்ணம் சொல் செயல்களைக் கொண்டு நம்புதல் கூடாது; கற்ற கல்வியானும் நம்புதல் கூடாது என்றும் எச்சரிக்கின்றார்.

கன்பியூசியசு, மனத்தின் அமையாது நட்புக் கொண்டு ஒழுகுவார், அவ்வாறு நட்புக் கொள்வதற்கு நாணவேண்டும் என்கிறார். வள்ளுவர், கூடா நட்பினர் இயல்பு, அவர்களால் வரும் தீமை, அவர்களிடம் ஒழுகும் முறைமை ஆகியவற்றை எடுத்துரைத்து மற்றவரை எச்சரிக்கின்றார்.

### 6. நட்புக் கொள்ளத்தகாதவரிடம் பழகு முறைகள்

தன்னிடம் நட்புக் கொண்டவர் அல்லது தான் நாடி நட்புக் கொண்டவர் நட்புக்கொள்ளத் தகாதவர் என்பதனை ஒருவன் தெளிவாக அறியும் நிலை ஏற்படின், அந்நிலையில் எவ்வெவ்வாறு ஒழுகவேண்டும் என வள்ளுவம் ஓரளவு ஆற்றுப்படுத்துகின்றது.

### 7. நட்பிலிருந்து விலகல்

ஒப்பில்லாதவர்களுடன் நட்புக் கொள்ள நேரிட்டால், அவர்கள் விரும்பிய ஒன்றைக் கொடுத்தேனும் நட்பிலிருந்து விரைந்து விலக வேண்டும்: பேதையார், அல்லல்கண் ஆற்றறுப்பார், மனைக்கண் நட்புச் செய்து மன்றில் பழிப்பார் ஆகிய மூவர்பால் கொண்ட நட்பிலிருந்து உடனே விலக வேண்டும்; பண்பிலார், ஒல்லும் கருமம் உடற்றுபவர் ஆகிய மூவரிடம் கொண்ட நட்பிலிருந்து உடனே விலகுவது தீமை பயக்கும்; ஆதலின், இத்தகையோர் நட்பிலிருந்து மெல்ல மெல்லவே விலகவேண்டும்.

### 8. நட்பின் பயன்கள்

பயன் கருதி நட்புக் கொள்ளக் கூடாது என்பது அறநூல்களின் துணிபு; இச்சிந்தனை கன்பியூசியசின் கருத்துகளிலும் வள்ளுவத்திலும் வேரோடிக் கிடக்கின்றது; எனினும், வள்ளுவம் மட்டும் வெளிப்படையாகவே எடுத்துரைக்கின்றது. நட்பில் பயன் கருதக்கூடாது என நெறி உரைக்கும் அறநூல்களே, நட்பினால் விளையும் பயன்களையும் பல்நிலைகளில் எடுத்துரைக்கின்றன.

### 9. முடிவுரை

நட்புப் பற்றிய கன்பியூசியசு, வள்ளுவர் ஆகிய இருவரின் சிந்தனைகளுக்கும் அடித்தளம் அரசியல்; எனினும், சிந்தனை மாளிகைகளோ சமுதாயப் பார்வை உடையவை.

நட்பியல் சிந்தனைகளைப் பொறுத்தவரை இருவரிடமும் முரண்பாடுகள் காணப்படவில்லை; ஒருசில நுட்ப வேறுபாடுகள் மட்டுமே காணப்படுகின்றன. ஆர்வம் உடைமையான் அமையும் நல் உறவுப் பாலமாக மட்டும் நட்பைக் கன்பியூசியசு கருதுகின்றார்; வள்ளுவர், ஒத்த உணர்ச்சியுடன் கூடிய நல் உரிமைப் பாலமாகவும் கருதுகின்றார்.

இருவரின் நட்புப் பற்றிய சிந்தனைகள் பெரிதும் ஒத்து வருகின்றன; என்றாலும், வள்ளுவரிடம் காணும் திட்டமிட்ட, ஆழ்ந்த, விரிந்த நோக்குகள் கன்பியூசியசிடம் காண இயலவில்லை. இவற்றிற்கு அடிப்படைக் காரணங்களாக இரண்டினைக் கூறலாம். ஒன்று, வினவப்படும் வினாக்களுக்கு விடையிறுத்தல் என்ற நிலையில் கன்பியூசியசின் நட்பியல் சிந்தனைகள் அமைதல்; மற்றொன்று, சீன அரசியலில் உறவுக்கு இருந்த முதன்மை நட்புக்கு அமையாமை.

நட்புப் பற்றிய சிந்தனைகளில் கன்பியூசியசிடம் பொதுமையொடு வர லாற்றுச் சாயலும் காணப்படுகின்றது; வள்ளுவரிடம் உலகப் பொதுமை நோக்கு மட்டுமே மேலோங்கி நிற்கின்றது.

உயர்ந்தோர் எங்கு தோன்றினும் அவர்களின் உயரிய எண்ணங்கள் ஒன்றியே செல்லும் என்பதற்கு இந்த நட்பியல் சிந்தனைகளின் ஒப்பாய்வே ஓர் அரிய சான்றாக அமைவது, பலரின் சிந்தனைக்கு விருந்தாகவும் அமையும் என்பது திண்ணம்.

## அடிக்குறிப்புகள்

1. "More is known about the life of Confucius than of any other early Chinese Philosopher, owing chiefly to the long chapter (Ch. 47) devoted to him in the *Shih Chi* (Historical Records). According to this chapter, he was born in 551 B.C. in the State of Lu, somewhere near the present town of Chufu in Shantung."
   Fung yu-Lan, *A history of Chinese Philosophy*, 1937, p. 43.
2. F. C. Hsu, *Confucianism*, 1966, p. 15.
   Shigeki Kaizuka, *Confucius*, 1956, p. 42.
3. கி.மு. 7995 என வரையறுப்பவர் திரு. அழகரடிகள் (திருவள்ளுவர் திருநாள் விழாமலர், சை. சி. நூ. கழகம் 1968, ப. 82] கி. பி. 600 என வரையறுப்பவர் திரு. எஸ். வையாபுரி அவர்கள்.
4. F. C. Hsu, ibid, p. 100.
   Fung yu-Lan, ibid, p. 46.
6. காலிங்கர் உரை, குறள். 805
7. Wing-Tsit Chan (tr.), *A source book in Chinese philosophy*, 1963, p. 20.
8. Duncan Greenlees (tr.), *The Gospel of China*, 1949, p. 91.
9. Wing-Tsit Chan (tr.), ibid., pp. 20–21.

பயன்பட்ட ஆங்கில நூல்கள்

1. FUNG YU-LAN, 1937. *A History of Chinese Philosophy*, Derk Bodde (tr.), George Allen & Unwin Ltd., London.

2. HOWARD SMITH, 1973. *Confucius*, Temple Smith, London.

3. HSU, F. C. 1966. *Confucianism*, Sri Aurobindo International Institute of Education, Pondicherry.

4. JAMES LEGGE. *The Philosophy of Confucius*, The Peter Pauper Press, New York.

5. LIN YUTANG (Ed.), 1955. *The Wisdom of China and India*, the Modern Library, New York.

6. PAUTHIER, 1949. *The Gospel of China*, Duncan Greenlees (tr.), The Theosophical Publishing House, Madras.

7. RICHARD WILHELM, 1931. *Confucius and Confucianism*, Danton, George H., (tr.,) Kegan Paul, Trench, Trubner and Company, Ltd., London.

8. Shigeki Kaizuka, 1956. *Confucius*, Geoffrey Bownas (tr.), The Macmillan Company, New York.

9. WING TSIT CHAN, 1969. *A Source book in Chinese Philosophy*, Princeton University Press. Princeton, New Jersey.

# சிற்றிலக்கியங்களின் தோற்றம்

டாக்டர் நா. செயராமன்
தமிழ் விரிவுரையாளர், தமிழ் மற்றும் இந்திய மொழிப்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

**சிற்றிலக்கியம்-பெயர்**

தனிநிலைப்பாடல் தொடர்பற்ற தனிப்பாடலாய், கதையமைப்பின்றி ஏதேனும் ஒரு பொருள் பற்றிப் பாடப்படுவதாகும். காப்பியம் கதையை மைய மாக வைத்துத் தலைமைமாந்தர் பெருமை உரைப்பதாய் அளவில் நீண்டு பல பாடல்கள் கொண்டதாய் அமையும்.

இவ்விரு இலக்கிய வகைகளுக்கும் இடைப்பட்ட தன்மையுடைய ஒரு புதிய இலக்கிய வகை தோன்றியது. அது காப்பியத்தை நோக்க அமைப்பில் சிறியதாய் அமைந்திருந்ததால் சிற்றிலக்கியம் என்று இன்று நாம் அதைக் குறிப்பிடுகிறோம். பிரபந்தம் என்பது வடமொழியில் பொதுவான இலக்கியத் திணைக் குறிக்கும் சொல்லாகும். முதலில் பிரபந்தம் என்னும் சொல்லையே இவ் வகைக்குப் பயன்படுத்தினர். பின்னர்த் தமிழில் மொழிபெயர்க்கும்போது சிற்றி லக்கியம் இன்று வழக்கு வந்துள்ளது.

**இலக்கணம்**

தனிநிலைப்பாடல்
1. ஒரேபாடல்
2. கதை தழுவாதது
3. தலைவன் மீதோ தலைவன் இன்றியோ பாடப் படும். (நீதிப்பாடல் போல)

காப்பியம்
1. பலபாடல் தொடர்ந்தது
2. கதையை மையமாகக் கொண்டது
3. தலைவனை மையமாகக் கொண்டது.

இவ்விரண்டிற்கும் இடையே
1. பல பாடல்கள் தொடர்ந்தது
2. கதை தழுவாதது
3. தலைவனைப் புகழ்வது

என்ற இலக்கணங்களைக் கொண்டு சிற்றிலக்கியம் வளர்ந்தது.

**பாட்டியல் நூல்கள்**

தமிழில் செய்யுள்வகை கூறும் இலக்கண நூல்கள் பல தோன்றியுள.

1. பன்னிரு பாட்டியல
2. வெண்பாப் பாட்டியல்

3. நவநீதப் பாட்டியல்
4. பிரபந்த மரபியல்
5. சிதம்பரப் பாட்டியல்
6. இலக்கண விளக்கப் பாட்டியல்
7. பிரபந்த தீபிகை

இவற்றுள் பன்னிரு பாட்டியல் எனும் நூல் பத்துப்பாட்டு, மேல்கணக்கு, கீழ்க்கணக்கு, காப்பியம் என்பவற்றையும் இணைத்தே பேசுகிறது.

வெண்பாப் பாட்டியல், நவநீதப்பாட்டியல் இரண்டும் பெருங்காப்பியத்தை இணைத்துப் பேசுகின்றன. பிரபந்த மரபியல் எனும் நூல் காப்பியம், பெருங்காப்பியம், புராணம் முதலியவற்றை இணைத்தே பேசுகிறது.

எல்லாப் பாட்டியல் நூல்களும் காப்பியத்தையும் இணைத்துப் பேசுகின்றன.

தொண்ணூற்றாறு வகையாக இச்சிற்றிலக்கியங்கள் கூறப்படும் மரபு காணப்படுகிறது.

'தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங்கள்'
(சிவந்தெழுந்த பல்லவராயன் உலா)

என்று என்ன அடிப்படையில் கூறினரோ தெரியவில்லை. பிற்காலத்தில் தொண்ணூற்றாறு வகை காணும் முயற்சி தோன்றியது. பிரபந்த மரபியலிலும் சதுரகராதியிலும் (பின் இணைப்பு 1, 2) 96 வகையின் பெயரும் பட்டியலிடப்பட்டுள்ளன.

அப்பட்டியல்களில் காப்பியம் இடம் பெற்றுள்ளது.

எனவே இப்பட்டியலில் இருப்பது சிற்றிலக்கிய வகையன்று; பொதுவான இலக்கிய வகையே என்றறியலாம்.

**சிற்றிலக்கியம் தோன்றிய காரணமும் காலமும்**

சங்ககாலத்தே தனிநிலைப்பாடலும், பின்னர்க் காப்பியங்களும் தோன்றியதை அடுத்து பக்தி இலக்கியம் தோன்றியது. பக்தி இயக்கத்தின்போது சமயத்தை மக்களிடையே எழுச்சியோடு பரப்ப முற்பட்டனர். அவ்வாறு மக்களிடையே சென்று பரப்ப இலக்கியம் மிகச் சிறந்த சாதனமாகப் பயன்பட்டது. எனவே இலக்கியத்தில் பல்வேறு வகைகளைக் காணும் முயற்சி ஏற்பட்டது. இலக்கியத்தால் மக்களைக் கவர்ந்து சமயத்தைப் பரப்ப நினைத்தபோது இலக்கியம் என்னும் கருவி மக்களைக் கவரத்தக்க வகையில் மாற்றத்திற்குள்ளாகியது. இசையோடு இணைதல், நாட்டுப்புற வடிவங்களை ஏற்றல், பல வடிவங்கள் உருவாதல் போன்ற பல மாற்றங்கள் அதனால் ஏற்பட்டன.

எனவே பக்தி இயக்கந்தான் சிற்றிலக்கிய வகைகள் பெருகக் காரணமாக இருந்ததெனலாம். முதலில் பக்திப்பதிகம் பாடிய காரைக்காலம்மையார் பாடிய 'இரட்டை மணிமாலை' சிற்றிலக்கிய வகையுள் ஒன்றாக வளர்ந்தது.

கண்ணனது பிள்ளைப் பருவத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டு பாடிய பெரியாழ்வாரின் பாடல்கள் பிள்ளைத்தமிழ் உருவாகக் காரணமாயிருந்

தன. அம்மானை, ஊசல், தூது, சதகம், கேசாதிபாதம், உலா முதலியன அவ்வாறே பக்திப் பாடல்களிலிருந்து தோற்றம் கொண்டன.

இவ்வாறு பக்தி இலக்கியம் சிற்றிலக்கியம் தோன்றக் காரணமாயிருந்தது; ஆனல் சிற்றிலக்கியத்திற்குரிய கரு சிலப்பதிகாரத்திலும், சங்கப்பாடலிலும் அமைந்திருந்தன.

தூது பற்றிய குறிப்புக்கள் தொல்காப்பியத்திலும் தூதாயமைந்த பாடல்கள் சங்கப்பாடல்களிலும் காணப்படுகின்றன. அவை தூது எனும் சிற்றிலக்கிய வகைக்குக் கருவாக அமைந்தனவேயன்றி அவையே தூது எனும் சிற்றிலக்கியம் ஆகா.

அவ்வாறே உலாப் பற்றிய குறிப்பு சிலப்பதிகாரத்தில் வருகிறது. அம்மானை பற்றியும் சிலம்பில் காணலாம்.

இவ்வாறு தொல்காப்பியம், சங்ககாலம், சிலப்பதிகாரம் ஆகியவற்றில் உள்ள இலக்கியத் துறைகள், இலக்கியக் குறிப்புக்கள், இலக்கிய நிகழ்ச்சிகள் ஆகியவை பக்தி இலக்கிய காலத்தில் தனித்தனி இலக்கிய வகையாக உருப்பெற்று வளர்ந்தன.

### இருவகை நிலைகள்

முத்தொள்ளாயிரத்தில் அகமும் புறமும் கலந்த பாடல்கள் பல ஒன்றாய் இணைந்து ஒரு தலைவன் புகழ் பேசும் நிலையில் அமைந்துள்ள நிலை பின்னர் வந்த கலம்பகத்திற்கு அடிப்படையாயமைந்தது.

| | | |
|---|---|---|
| பதிற்றுப்பத்து | — | பத்துப்பாடல் ஒரு தலைவன் மேல். |
| களவழி நாற்பது | — | நாற்பது பாடல் ஒருபொருள் மேல். ஒரு தலைவனைப் புகழ்தல். |
| முத்தொள்ளாயிரம் | — | பல பாடல்கள் பல பொருளில் ஒரு தலைவனைப் புகழ்தல். |
| கலம்பகம் | — | பதினெட்டு உறுப்புக்களில் பல பொருளில் ஒரு தலைவனைப் புகழ்தல். |

என்று இவ்வாறு ஒருபடிமுறை வளர்ச்சி காணப்படுகிறது.

பல பாடல் இணைந்து சிற்றிலக்கியமாக உருப்பெற்ற நிலையை, சதக இலக்கியத்தில் காணலாம். ஒரு தலைவன் மேல் மட்டுமின்றி நாட்டின் மேலும் நூறு பாடலமைந்த சதகமாக உருவாகியுள்ளது.

மற்றொரு நிலையாகிய பல பாடல்கள் ஏதேனும் ஒரு அமைப்பில் இணைதல் என்பது கோவையிலிருந்து தொடங்குகிறது எனலாம். இதில் பாடலில் ஒருவகை நாடக பாவனை அமைந்திருக்கும். அந்தப் பாவனை முறையில் ஒரு தலைவனைப் புகழ்வது நோக்கமாகும்.

தலைவன் தலைவி என்ற பாவனையில் பல நிகழ்ச்சிகளைக்
கோவைப்படுத்தித் தலைவனைப் புகழ்தல் — கோவை

தலைவன் உலா வரப் பலபெண்டிர் பார்த்துக் காதல் கொள்ளும் பாவனையில் தலைவனைப் புகழ்தல் — உலா

தலைவனைக் குழந்தையாகப் பாவனை செய்து புகழ் தல் — பிள்ளைத்தமிழ்

போர்க்களத்தில் பேய்கள் கூழ் அமைத்து உண்ணும் பாவனையில் தலைவனைப் புகழ்தல் — பரணி

தலைவனுக்குத் தலைவி தூதனுப்பும் பாவனையில் தலைவனைப் புகழ்தல் — தூது

இவ்வாறே குறம், பள்ளு முதலிய பல சிற்றிலக்கியங்களும் தோன்றின. இவற்றில் நாடகப்பாங்கு இன்றியமையாத கூறுகத் திகழ்கிறது. எனவே நாடகத் திற்குரிய அமைப்பில் இவை வளரத் தொடங்கின.

இவ்வகைக்கு முன்னோடியாகச் சங்கப்பாடலில் ஆற்றுப்படை, மடல், பிற சங்க அக இலக்கியத் துறைகள் ஆகியவை அமைந்துள்ளன. ஆற்றுப்படை முன்னோடியாகத் திகழ்ந்தாலும் அது ஒரு சிற்றிலக்கியமாகச் சங்ககாலத்தில் உருப் பெற்றது என்று கூறல் இயலாது. அது தனிநிலைப்பாடலின் நீண்ட வடிவம் என்றே கொள்ளுமாறு அமைந்துள்ளது. மேலும் பல பாடல்கள் இணைதல் எனும் கூறு ஆற்றுப்படையில் அமையாமல் ஒரே நெடும் பாடலாக அமைந்துளது. எனவே பல பாடல்கள் ஒரே அமைப்பில் இணைதல் என்னும் நிலைக்கு ஆற்றுப்படை முன்னோடி என்றுதான் கொள்ளல் தகுமேயன்றி அதுவே சிற்றிலக்கியம் எனல் இயலாது.

இவ்வாறு இந்த இரண்டு வேறுவேறு நிலைகளும் (பல பாடல்கள் இணைதல், ஒரு அமைப்பில் இணைதல்) ஒன்றாய் இணைந்த நிலையைக் கலம்பகத்தில் தான் முதல் முதலில் காணுகிறோம்.

பல பாடல்களின் இணைப்பாக அமைந்த சிற்றிலக்கியங்களை விட ஒரே அமைப்பில் பல பாடல்கள் இணைந்த சிற்றிலக்கியங்களே சிறப்பும் செல்வாக்கும் பெற்றுள. அவையே இன்று சிற்றிலக்கியங்கள் என்று போற்றப்படுகின்றன. அவ்வாறு போற்றப்படும் சிற்றிலக்கியங்கள்: 1. கலம்பகம், 2. கோவை, 3.பிள்ளைத் தமிழ், 4. பரணி, 5. குறவஞ்சி, 6. பள்ளு ஆகியவை.

பல பாடல்கள் இணைந்து அந்தாதி எனும் உத்தியும் இணைந்து அமையும் சிற்றிலக்கிய வகை பிற்காலத்தில் உருவாகியது.

இவ்வாறு இன்று முழுவதும் வளர்ச்சி பெற்ற சிற்றிலக்கியங்களாகக் கூற வேண்டுமாயின் பதினொன்றினைக் கூறலாம்.

| | | |
|---|---|---|
| அ) பல பாடல்கள் இணைந்திருப்பது | — 1 | சதகம் |
| ஆ) பல பாடல்கள் ஒரு அமைப்பில் இணைந்திருப்பது | — 2 | கலம்பகம் |
| | — 3 | கோவை |
| | — 4 | உலா |
| | — 5 | தூது |
| | — 6 | பிள்ளைத்தமிழ் |
| | — 7 | பரணி |
| | — 8 | குறவஞ்சி |
| | — 9 | பள்ளு |
| | —10 | அம்மானை |
| இ) பல பாடல்கள் அந்தாதி வகையில் இணைந்திருப்பது | —11 | அந்தாதி |

இவற்றுள் சதகம் மட்டும் ஒரு குறிப்பிட்ட தலைவன் இன்றி நாட்டையும் பிற செய்திகளையும் புகழும் வகையில் அமையும். ஏனையவை ஒரு தலைவனைப் புகழும் வகையிலேயே அமைந்திருக்கும்.

# தமிழ் எழுத்தின் வரிவடிவங்கள் - மாற்று நோக்கு

கணபதிப்பிள்ளை சச்சிதானந்தன்

## அறிமுகம்

ஒலி அணுக்களின் திரட்சியே மொழி. மொழியின் முதல் தொழில் தொடர்பு. சொல்லும் எழுத்தும் மொழியின் தொடர்புக் கருவிகள். மொழிதலின் வரிவடிவம் எழுத்து. தமிழ் மொழியின் வரிவடிவத் தொகுப்பே தமிழ் நெடுங் கணக்கு. (படம் 1). உயிர் எழுத்துக்கள் 12, மெய் எழுத்துக்கள் 18, உயிர் மெய் எழுத்துக்கள் 216, ஆய்த எழுத்து 1, எல்லாமாகத் தமிழ் எழுத்துக்கள் 247.

பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் எழுத்துக்கள், எழுத்தாணியால் பனை ஓலை ஏடுகளில் எழுதப்பட்டு வந்துள்ளன. செப்புத் தகடுகளிலும் கல்லிலும் பொறிக்கப்பட்டதும் உண்டு. காலங்கட் கூடாகத் தமிழ் வரிவடிவங்களில் மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன. 200 ஆண்டுகட்கு முன்பு வரை ஏடும் எழுத்தாணியும் தான் தமிழை எழுதப் பயன்பட்டன. கடதாசியும் பேனவும் பென்சிலும், அச்சும் எந்திரமும், மையும் புழக்கத்துக்கு வர, ஏடும் எழுத்தாணி யும் படிப்படியாகப் புழக்கத்தில் இருந்து மறைந்துள்ளன.

## புதிய சூழ்நிலை

தமிழ் எழுத்துக்களை எழுதுவோர் படிப்போர் தொகையும் கடந்த 50 ஆண்டுகளில் திடீரென அதிகரித்து உள்ளது. 2000 ஆண்டுகளுக்கு முன்பு ஆகக் கூடியது 10% தமிழரே தமது மொழியை எழுதவும் படிக்கவும் தெரிந் திருந்தனர். 200 ஆண்டுகட்கு முன்புவரை இந்த நிலை நீடித்தது. இந்த நூற்றுண்டின் இறுதியிலோ 95% தமிழர்கள் தமிழை எழுதவும் படிக்கவும் தெரிந்தவர்களாக இருப்பர். (படம் 3, 4, வாய்ப்பாடு 1) 2000 ஆண்டுகட்கு முன்பு ஏறத்தாழ 500,000 தமிழர்கள் தமிழை எழுதிப் படித்தனர். இந்த நூற்றுண்டின் இறுதியில் ஏறத்தாழ 95,000,000 தமிழர்கள் தமிழை எழுதுவர், படிப்பர்.

தமிழ் எழுத்துக்கள் கையால் மட்டும் எழுதப்பட்ட நிலை மாறி, அச்சு, எந்திரம், தட்டச்சுப்பொறி ஆகியனவற்றின் துணையுடன் எழுதப்படுகின்றன. தட்டச்சுப் பொறியின் துணையுடன் ஒரு மணி நேரத்தில் 2500 சொற்களை எழுதமுடியும். அச்சகங்களில் அச்சுக் கோர்ப்பதற்கும், தொலைத் தொடர்புத் தந்திச் செய்திகள் அனுப்புவதிலும், கம்பியூட்டர் இயக்குவதிலும், வானெலித் தொடர்புக்கும் தட்டச்சு முறைமை விரவிப் பயன்படுத்தப் படுகின்றது.

## தமிழ் எழுத்துக்கள்

| ஃ | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

படம் 1. 247 எழுத்துக்களைக் கொண்ட தமிழ் நெடுங்கணக்கு




படம் 3. கி.பி. முதல் 1800 ஆண்டுகளில் உலகில் வாழ்ந்த தமிழர் தொகையும், இவர்களுள் தமிழ் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் விவரமும்.

| கி.பி. ஆண்டு | தமிழர் தொகை | குறிப்பு |
|---|---|---|
| 1 | 8,000,000 | மதிப்பீடு |
| 500 | 5,000,000 | மதிப்பீடு |
| 1000 | 8,000,000 | மதிப்பீடு |
| 1500 | 12,000,000 | மதிப்பீடு |
| 1800 | 15,000,000 | மதிப்பீடு |
| 1931 | 23,411,652 | கணிப்பு |
| 1971 | 50,169,000 | கணிப்பு |
| 2000 | 100,000,000 | மதிப்பீடு |

*வாய்ப்பாடு 1: கி.பி. இருபது நூற்றுண்டுகளில் உலகில் தமிழர் தொகை-மதிப்பீடு. (உதவி: ஐ. நா. மக்கள் தொகை நிதி நிறுவன அறிக்கைகள்).*




படம் 4. கி. பி. 1800 தொடக்கம் 2000 வரை உலகில் தமிழர் தொகையும் தமிழ் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் தொகையும்

முன்னெப்பொழுதும் எழுதப்படா வேகத்தில் தமிழ்ச் சொற்கள் பதிவாகி வருகின்றன. அச்சு எந்திரம் ஒரு மணி நேரத்தில் 20,000 – 30,000 படிகளை அச்சிடுகின்றது. கையெழுத்தால் எழுதப்பட்ட தொடர்புச் செய்திகளை விட அழகாக அச்சிடப்பட்ட தொடர்புச் செய்திகளையே பெரும்பாலான தமிழர்கள் விரும்புகின்றனர்.

வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் எழுத்து இன்றியமையாததாகி விட்டது. கூட்டங்கள், கருத்தரங்குகள், மாநாடுகள், சட்ட சபைகள், நீதி மன்றங்கள், ஆட்சிக்குழுக்கள், அலுவலகங்கள், வர்த்தக நிலையங்கள், தொழிற்சாலைகள், வங்கிகள் அனைத்திலும் மொழியப்படும் சொற்கள் கையால் எழுத்துக்களாக எழுதப்படாமல் சுருக்கெழுத்தாகப் பதியப்பட்டுத் தட்டச்சுப் பொறியில் எழுதப் பட்டுப் படி செய்யப்படுகின்றன. அச்சு எந்திரங்களிலும் படி செய்யப்படுகின்றன. இன்றைய கூட்ட நிகழ்ச்சிகள் நாளைய செய்தியாகப் பல்லாயிரம் மைல்கட்கப்பால் படிக்கப்படுவதற்குத் தட்டச்சுத் தந்தி முறைகளே காரணம். எழுத்தை அடிப் படையாகக் கொண்டு தொடர்பு வேகமாகின்றது.

எந்த மொழிக் குழுவுக்குரிய குழந்தையாயினும், தனது தாய்மொழியின் எழுத்துக்களைக் கற்றுக் கொள்கின்றது. தமிழ் எழுதத் தொடங்கும் குழந்தைகள் 247 எழுத்துகளைப் படித்துத் தெரிந்து கொள்கின்றன. ஆங்கிலத்தை எழுதத் தொடங்கும் தமிழ்க் குழந்தை 26 எழுத்துக்களையே படித்துத் தெரிந்து கொள்ள வேண்டி உள்ளது. மேலை நாட்டுக் குழந்தைகளுடன் ஒப்பிடும் பொழுது தமிழ்க் குழந்தை, தமிழ் எழுத்துக்களைத் தெரிந்து வைத்திருக்கவேண்டிப் பெரிய பாரத்தை தலைக்குள் வைத்திருக்கின்றது. இன்றைய தலைமுறையின் 40% தமிழர். 18வயதுக் குட்பட்டவராக உளர்.

இந்த நூற்றுண்டில் முன்னெப்பொழுதுமில்லாதவாறு அறிவியல் வளர்ச்சி வேகமடைந்துள்ளது. வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களில் இருந்து இன்றுவரை தோன்றிய விஞ்ஞானிகளுள், 90% இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறுர்கள். மனிதன் மேற்கொண்ட அறிவியல் தொழில் நுட்பக் கண்டுபிடிப்புகளில், 90% கடந்த 100 ஆண்டுகளுக்குள் ஏற்பட்டன. இத்தகைய விரைந்த அறிவியல் வளர்ச்சிக்கு மனிதனுக்கு எழுத்துத் துணையாக உள்ளது. கவனித்த எதையும் எழுதிவைத்து, அறிக்கை தயாரித்து, மற்றவர்கட்குத் தொடர்பு படுத்தியமையால் தான் அளப்பரிய அறிவியல் வளர்ச்சியை அடைய முடிந்தது. உலக மொழிகளில் உள்ள அறிவியற் கருவூலங்களைத் தமிழாக்கம் செய்யத் தமிழ் எழுத்தின் துணை அவசியம்.

### இடர்ப்பாடு

தமிழர் தொகை அதிகரிப்பு, தமிழ் எழுதப்படிக்கத் தெரிந்தோர் தொகை அதிகரிப்பு, கடதாசி, அச்சுப்பொறி, எழுத்துவேகம், எழுத்து அளவு, தமிழ்க் குழந்தைகளின் இடர்ப்பாடு, அறிவியல் வளர்ச்சிக்கு எழுத்தின் துணை என்பனவும் பிறவும் தமிழர் வளர்ச்சிக்குத் தமிழ் எழுத்துக்களின் அடிப்படை முக்கியத் துவத்தைக் காட்டுகின்றன. 247 எழுத்துக்களைக் கொண்ட, பல் வேறுபட்ட வரி வடிவங்களுடைய, ஏட்டில் எழுதுவதற்கென இசைவாக்கம் பெற்ற தமிழ்




படம் 5. தமிழ் எழுத்துக்களின் எழுதுவரி நீளத்தை அளப்பதற்குரிய ஓர் அலகாக, எழுத்தின் உயரத்தைக் கொள்ளல். ப — 2.8; னி — 7.9; பனி — 10.7 அலகுகள்.

எழுத்துத் தொகுப்பு, வளர்ச்சிக்குரிய தமிழரின் தொடர்பு கருவியாகத் தொடர்ந்தும் இயங்க முடியுமா?

247 வரிவடிவங்களையும் நினைவில் வைத்து, உரிய நேரத்தில் உரிய இடத்தில் பொருத்தவேண்டிய பணி தமிழர்மூளைக்கு உரியது. குறைந்த எண்ணிக்கை உடைய எழுத்துத் தொகுப்பைப் பயன் படுத்தும்போது ஏற்படும் தவறுகளின் தொகையைவிடக் கூடிய எண்ணிக்கை உடைய எழுத்துத் தொகுப்பைப் பயன்படுத்தும் பொழுது தவறுகள் மேலதிகமாக எழுதல் இயல்பு. தவறுகளைத் தவிர்ப்பதிலும் திருத்துவதிலும் கழியும் காலம் வளர்ச்சியைப் பின்னேக்கித் தள்ளுகின்றது. முன்னேற்ற முயற்சிகளைத் தடுக்கின்றது.

தமிழ் எழுத்து ஒன்றின் உயரத்தை ஓர் அலகாகக் (படம் 5) கொண்டு, எழுத்துக்களின் எழுதுவரி நீளத்தை அளக்கலாம். 247 தமிழ் எழுத்துக்களின் மொத்த எழுதுவரி நீளம் 2009.9 அலகுகளாகும் . உயிர் எழுத்துக்கள், மெய் எழுத்துக்கள், தமிழ் எழுத்துக்கள் என்பனவற்றின் சராசரி நீளம் முறையே 6.2, 4.7, 8.1 அலகுகள் ஆகும். ஆங்கிலேய எழுத்துக்கள் 26ன் எழுதுவரி நீளம் 620 அலகுகள்; ஒரு எழுத்தின் சராசரி எழுதுவரி நீளம் 2.4 அலகுகள் ஆகும். ஒப்பு நோக்கையில் தமிழ் எழுத்துக்கள் மிகையான நீளமுடையன; எழுதுவோர்க்கும் அச்சிடுவோர்க்கும் வேகத்தை விரும்புவோர்க்கும் துன்பம் தருவன.

ஏடுகளில் எழுதுவதற்காக, எழுதப்படிக்கத் தெரிந்த 5%—10% தமிழரால் எழுத்துத் தெளிவு நோக்கி இசைவாக்கம் பெற்ற எழுத்துத் தொகுப்பில் ஒழுங்கின்மை விரவியுள்ளது. திரு. ஈ. வே. ராமசாமி அவர்களின் கருத்தை ஏற்றுத் தமிழக அரசு 1979ல் எழுத்துச்சீர்திருத்தத்தை அறிவித்தது. ண, ற, ன ஆகிய 3 மெய்யெழுத்துக்களின் அகரம் நீட்டு, ஒகரம், ஒகரம் நீட்டு ஆகிய ஒலி அசைகளும், ண, ல, வ, ள, ன ஆகிய 5 மெய்யெழுத்துக்களின் ஐகரம் ஒலி அசையும் வரிவடிவத் திருத்தத்துக்குள்ளாயின. அதே ஒலிஅசைகட்குரிய ஏனைய மெய்யெழுத்துச் சார்ந்த உயிர் மெய்களின் வரி வரிவடிவங்களைப் பெற்றன.

மெய்யெழுத்து ர, கால்வரி அற்றபொழுது, உயிர் மெய்யெழுத்துக்களில் அகரம் நீட்டு, ஒகரம், ஒகரம் நீட்டு ஒலிக்குறியாகவோ, குறிகளுள் ஒன்ருகவோ, வரிவடிவம் பெறுகின்றது. மெய்யெழுத்து ள, உகரம், நீட்டு ஒலி அசையைக் குறிக்க உயிரெழுத்து உ உடன் சேர்ந்து கொள்கின்றது. ஔ கரத்துக்காக, ஒகரத்துடனும் உயிர் மெய் எழுத்துக்களிலும் இணைந்து காணப்படுகின்றது. ள, கால் அற்ற ர, ஒலிக்குறிகளாகப் பயன் படும்பொழுது எழுதுவோர்க்கும் படிப்போர்க்கும் அச்சிடுவோர்க்கும் மயக்கத்தையே தருகின்றது.

உயிர் மெய் எழுத்துக்களில் ஒலிக்குறிகள், எழுத்துக்கு முன், (கை), பின் (கா), முன்பின் (கொ) இடுநிலையில் வருகின்றன. மெய்யெழுத்தில் குற்று மேலேயும் (க்), உயிரெழுத்தில் ஒலிக்குறிமேலேயும் (ஊ) வருகின்றன. ஒலிக்குறிகளின் இடுநிலைகள் சீரற்றமுறையில் இருப்பதால் இதைப் பழகப் பயில இடையூறு உண்டு. தட்டச்சு, அச்சு பொறிமுறைகட்கும் இடர்ப்பாடு உண்டு. வேகத்துக்குத் தடையாகவும் தவறுகள் மலியவும் வழிசெய்கின்றது.

| வரிசையின் முதல் எழுத்து | முதல் எழுத்து ஒன்றின் அலகு-கள் | வரிசையின் மொத்த அலகுகள் | வரிசையின் ஒலிக்குறி மொத்த அலகுகள் |
|---|---|---|---|
| அ | 5.5 | 75.0 | 10.0 |
| க | 5.0 | 108.7 | 43.7 |
| ச | 3.5 | 90.2 | 44.7 |
| ட | 2.2 | 73.9 | 45.3 |
| த | 5.5 | 117.2 | 46.7 |
| ப | 2.8 | 80.8 | 44.4 |
| ற | 5.2 | 114.3 | 46.7 |
| ய | 4.0 | 94.7 | 42.7 |
| ர | 3.0 | 85.7 | 46.7 |
| ல | 4.5 | 107.2 | 48.7 |
| வ | 4.5 | 101.2 | 42.7 |
| ள | 4.5 | 107.2 | 48.7 |
| ழ | 5.5 | 117.2 | 45.7 |
| ங | 5.0 | 108.2 | 43.2 |
| ஞ | 7.0 | 138.3 | 47.3 |
| ண | 8.0 | 155.2 | 51.2 |
| ந | 4.5 | 104.9 | 46.4 |
| ம | 4.2 | 100.7 | 46.1 |
| ன | 6.2 | 129.3 | 48.7 |
| மொத்தம் | 90.6 | 2009.9 | 839.6 |

வாய்ப்பாடு 2: தமிழ் எழுத்துக்களின் எழுது வரி நீளம்.
(அளவு: எழுத்தின் உயரம் ஓர் அலகு. படம் 5)

உயிர் மெய் எழுத்துக்களில் உகரம், உகரம் நீட்டு ஆகிய ஒலி அசைக்குரிய குறிகளும் ஒவ்வொரு வரிசைக்கு ஒவ்வொரு வடிவத்தைப் பெறுகின்றன. (கு, கூ, சு, சூ, டு, டூ, து, தூ, பு, பூ, மு, மூ) சீரற்ற இந்த முறைமை பழகுவதற்கும் பயில்வதற்கும் அச்சுமுறையில் பயன்படுத்தவும் இடர்ப்பாடாக உளது.

வல்லின, இடையின, மெல்லின ஒலிகள் கொண்ட மெய்யெழுத்துக்கள் கலந்து வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. தமிழ் நெடுங்கணக்கின் குத்துவரிசையை நோக்கின் சீரற்ற இந்த அமைப்புத் தெரியும். *(படம் 1).*

**மாற்று நோக்கு**

தமிழ் எழுத்துக்களின் எண்ணிக்கை, எழுதுவரி நீளம், ஒலிக்குறி வேறுபாடுகள், ஒலிக்குறிஇடு நிலைகள், வரிசைச் சீர் போன்ற இயல்புகள், 2.0 ல் கூறிய புதிய சூழ்நிலையில் வளர்ச்சிக்கும் வேகத்திற்கும், பழக்கத்திற்கும் பயிற்சிக்கும் பயன்பாட்டிற்கும் உரிய தொடர்பு கருவியாகத் தமிழ்மொழி செயற்படுவதன் திறமையைக் குறைக்கின்றன. தமிழ் மொழியின் இலக்கண வரம்புகள் சீர்குலையாமல், பழமைக்கும் மொழிவளத்துக்கும் இடையூறில்லாமல், சொல்லாட்சி, சொல், பொருள், நயம் குன்றாமல், இருக்கக் கூடியதாகத் தமிழ் எழுத்துக்களின் வரிவடிவமைப்பு மாற்றியமைக்கப்பட்டால் தான் முற்றிலும் புதியதான வளர்ச்சிக்குரிய இன்றைய சூழ்நிலையில் தமிழரும் ஏனைய மக்களைப்போல் விரைந்து முன்னேறிப் பரந்து பயனுறுத்த முடியும்.

மாற்று நோக்கு ஒன்றைமுன்வைக்கும்பொழுது, தமிழ் எழுத்துக்களில் உள்ள பொதுவான இருவகை ஒலி அசைகளை அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. இருவகை ஒலி அசைகளாவன, (1) குறுகிய ஒலி அசை, (2) நெடிய ஒலி அசை. 7 உயிரெழுத்துக்கள், 18 மெய்யெழுத்துக்கள், 1 ஆய்த எழுத்து இவையாவும் குறுகிய ஒலி அசை உடையன. பிற ஒலி அசையின் உதவியின்றித் தனித்து ஒலிக்கக் கூடியன. 5 உயிரெழுத்துக்கள், 216 உயிர் மெய் எழுத்துக்கள், இவை முற்கூறிய தனித்து ஒலிக்கக் கூடிய குறுகிய ஒலி அசை எழுத்துக்களைச் சார்ந்து நிற்பன. குறுகிய ஒலி அசையும் நெடிய ஒலி அசையும் உடையன.

அ, இ, உ, எ, ஐ, ஒ, ஒள், ஃ , க, ச, ட, த, ப, ற, ய, ர, ல, வ, ள, ழ, ங, ஞ, ண, ந, ம, ன ஆகிய 26 எழுத்துக்களும் குறுகிய ஒலி உள்ள, தனித்து ஒலிக்கக் கூடிய எழுத்துக்கள் (7+ 1 + 18).

ஆ, ஈ, ஊ, ஏ, ஓ ஆகிய 5 உயிரெழுத்துக்களும், அ, இ, உ, எ, ஒ ஆகிய 5 உயிரெழுத்துக்களின் நீட்டிய ஒலி அசைகள். தனித்த ஒலி உயிரெழுத்துகள் 7ம், நேரடியாகப் 18 மெய்யெழுத்துக்களுடன் புணர்கின்றன; சார்ந்த நெடிய ஒலி அசை எழுத்துக்கள் 5ன் மூலமாகவும் தனித்து நிற்கக்கூடிய உயிரெழுத்துக்கள் 7ம் 18 மெய்யெழுத்துகளுடனும் புணர்கின்றன. இந்த 7உயிரெழுத்துக்களின் நேரடிப் புணர்ச்சியாலும் ஒன்றுவிட்ட புணர்ச்சியாலும் 216 உயிர்மெய் எழுத்துக்கள் தோன்றுகின்றன.

தமிழ் ஒலி அசைகள் 12. தனித்த குறுகிய ஒலி அசைகள் 7. சார்ந்த நெடிய ஒலி அசைகள் 5. தவிரத் தமிழ் மெய் ஒலிகள் 18. இவ் 18 உள், 6 வல்லினம், 6 இடையினம், 6 மெல்லினம். தமிழ் ஒலி அசைகள் 12 பின்வருமாறு:

| | |
|---|---|
| அகரம் நீட்டு | |
| இகரம் | |
| இகரம் நீட்டு | |
| உகரம் | |
| உகரம் நீட்டு | |
| எகரம் | |
| எகரம் நீட்டு | |
| ஐகரம் | |
| ஒகரம் | |
| ஒகரம் நீட்டு | |
| ஔகரம் | |
| மெய்க் குற்று | |

படம் 6: விவாதத்திற்கும் உரிய மாற்று ஒலிக்குறிகள்.

1. அகரம், 2. அகரம் நீட்டு, 3. இகரம், 4 இகரம் நீட்டு, 5. உகரம், 6. உகரம் நீட்டு, 7. எகரம், 8. எகரம் நீட்டு, 9. ஐகரம், 10. ஒகரம், 11. ஒகரம் நீட்டு, 12. ஔகரம். மெய்எழுத்தில் குற்றைநீக்க, உயிர்மெய் அகரத்தின் வரிவடிவம் வருகின்றது. ஏனைய 11 ஒலி அசைகளின் குறிகள் உயிர்மெய் எழுத்துக்களில் குழம்பி உள்ளன. சீரான, தெளிவான, எழுதுவரி நீளம் குறைந்த, பழமைக்குப் பாதிப்பற்ற புதிய வரி வடிவங்கள் இயற்றவேண்டும். விவாதத்துக்கும் மாற்றத் துக்கும் உரிய 11 ஒலிக்குறி வரிவடிவ முன்னோடிகள் படம் 6ல் தரப்பட்டுள்ளன.

தனித்து ஒலிக்கக் கூடிய 26 தமிழ் எழுத்துக்களையும் மெய் எழுத்துக் குற்று உட்பட்ட 12 ஒலிக்குறிகளையும் தெரிந்து கொண்டால் தமிழ் ஓசைக்கு வரிவடிவம் கொடுக்கலாம். (26 + 12) 38 வரி வடிவங்களைத் (படம் 7) தெரிந்து புணர்தல் மூலம் எல்லாத் தமிழ் எழுத்துக்களையும் எல்லாத் தமிழ்ச் சொற்களையும் கட்டமைக்கமுடியும்.

உயிரெழுத்துக்கள் 12ன் வரிவடிவங்களையும் மாற்றமின்றி வைத்துக் கொள்வதெனின், ( 12 + 1 + 18 + ) 31 எழுத்துக்களும் 12 ஒலிக்குறிகளுமாக 43 வரிவடிவங்கள் (படம் 8) தமிழுக்கு அடிப்படையாக அமையும் இப்பொழுதுள்ள 247 எழுத்துக்களின் தொகையுடன் ஒப்பிடுகையில் 43 அல்லது 38 மிகக் குறை வானதே.

எழுத்துக்களுடன் ஒலிக்குறிகளைத் தெரிந்து புணரும் பொழுது, ஒலிக் குறியின் இடுநிலை எதிலும் ஒரே சீரானதாக (பந்தி 3.6) இருக்க வேண்டும். ஒலிக்குறிகள் எழுத்துக்குப் பின்னதாக மட்டும் (படம் 9) எழுதப்படல் விதியாக வேண்டும்.

நடைமுறையில் உள்ள 247 எழுத்துக்களையும் எழுதுவதற்கு 839.6 அலகு கள் எழுதுவரி நீளமாக இருக்கும் (வாய்ப்பாடு 2). மாற்று ஒலிக்குறிகளைப் பயன் படுத்தி 247 எழுத்துக்களையும் எழுதுவதானால் எழுதுவரி நீளம் 395 அலகுகள் ஆகும். ஒலிக்குறியின் எழுதுவரி நீளம் குறைந்தாலும் எழுத்துக்களின் எழுதுவரி நீளம் குறைய மாட்டா. இ, ஐ, த, ற, ஞ, ண, ன எழுத்துக்களின் எழுதுவரி நீளம் 6 அலகுகட்கு மேற்பட்டுள்ளது. இவற்றின் எழுதுவரி நீளம் குறைக்கப் படவேண்டுமெனில், வரியைச் சுருக்கலாம்; அல்லது அந்த வரிவடிவத்தை நீக்கி விட்டு, புழக்கத்தில் இருந்து மறையக் கூடிய 5 அலகு நீளத்துக்குட்பட்ட ஈ, சு, டி போன்ற எழுத்துக்களை இடமாற்றலாம்.

மெய்யெழுத்துக்களின் வரிசையமைப்பு ஒலி அடர்த்தியின் அடிப்படையில் அமைய வேண்டும். வல்லின எழுத்துக்கள் 6 முதலில் இடையின எழுத்துக்கள் 6 பின்னர், மெல்லின எழுத்துக்கள் 6 இறுதியில் என வரிசைச்சீர் அமைய வேண்டும். நெடிய ஒலி அசை அற்ற உயிர் எழுத்துக்களான ஐ, ஔ இரண்டும், ஒ, ஓ இடைப்பட்டன. நெடிய ஒலி அசை கொண்ட உயிர் எழுத்துச் சோடிகளை எழுதி முடித்த பின்னர், நெடிய ஒலி அசை அற்ற எழுத்துக்களை எழுதலாமா?

மனித நாகரிக வளர்ச்சிக் காரணிகளான அறிவுக் கருவூலங்கள் உலக மொழிகள் பலவற்றுள் நிறைந்துள்ளன. அவற்றைக் தமிழாக்கம் செய்ய

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | அ | இ | உ | எ | |
| | ஐ | ஒ | ஒ○ | ஃ | |
| க | ச | ட | த | ப | ற |
| ய | ர | ல | வ | ள | ழ |
| ங | ஞ | ண | ந | ம | ன |
| ┌ \| | ǫ — | ⁻○ ɩ | ɓ ∧ | ＞ ∂ | 0 ° |

படம் 7. 26 எழுத்துக்கள், 12 ஒலிக்குறிகள், எல்லாமாக 38 வரிவடி வங்கள் கொண்ட தமிழ் வரிவடிவமைப்பு.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | |
| எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
| க | ச | ட | த | ப | ற | |
| ய | ர | ல | வ | ள | ழ | |
| ங | ஞ | ண | ந | ம | ன | |

படம். 8. 31 எழுத்துக்கள், 12 ஒலிக்குறிகள், எல்லாமாக 43 வரிவடிவங்கள் கொண்ட தமிழ் வரிவடிவமைப்பு.

வேண்டும் என்ற கட்டாய நிலை தமிழர்க்கு மட்டுமல்ல வளர்ச்சியை விரும்பும் மக்கள் அனைவருக்கும் உண்டு. திருக்குறள் பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதே. எனவே தமிழில் இல்லாத ஒலி அசைகளான, FA, GA போன்ற தெரிந்தெடுத்த மிகத்தேவையான ஒலிகட்கு வரி வடிவம் கொடுத்து இசைவாக்க வேண்டியவை உளது. வடமொழி ஒலிகள் முன்னர் இவ்வாறு இசைவாக்கம் பெற்றமையை நினைவுகூர்தல் வேண்டும்.

**சுருக்கம்**

ஏடும் எழுத்தாணியும் பயன் படுத்திய காலங்களில் இசைவாக்கம் பெற்ற 247 எழுத்துக்கள் தமிழில் உள. கடந்த 200 ஆண்டுகட்கு முன்புவரை, அவ்வக்காலங்களில் வாழ்ந்த தமிழர் தொகையில் 5% – 10% தமிழர் மட்டுமே தமிழை எழுதினர். படித்தனர். கி. பி. 2000 ஆண்டில் 10 கோடி தமிழர் உலகில் வாழ்வர் என்பதும் இவர்களுள் 95% தமிழை எழுதுவர் படிப்பர் என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. கையால் எழுதித் தொடர்பு ஏற்படுத்தும் வழமை அருகித் தட்டச்சும் பொறிமுறையால் அச்சிட்டும் தொலைத்தொடர்பு ஏற்படுத்தும் வழமை பெருகியுள்ளது. அறிவியல் வளர்ச்சியும் முன்னெப் பொழுதுமில்லாதவாறு முன்னேறியுள்ளது. இத்தகைய புதிய சூழ்நிலையில் எண் ணிக்கையில் பெருகிய எழுதுவரி மிக நீண்ட, ஒலிக்குறிகளும், ஒலிக்குறி இடுநிலை களும் தெளிவற்ற, வரிசைச்சீர் கலங்கிய தமிழ் நெடுங்கணக்கு மாற்றியமைக்கப்பட வேண்டும். தெரிந்து புணர்தல் மூலம் தமிழ் ஓசைகள் அனைத்தையும் பெறக் கூடிய, எழுத்துக்கள் சொற்களைக் கட்டமைக்கக் கூடிய 26 எழுத்துக்களையும் 12 ஒலிக்குறிகளையும் கொண்ட விவாதத்திற்குரிய தமிழ் வரிவடிவமைப்பு முன் மொழியப்படுகின்றது. அத்துடன் ஒலிக்குறி இடு நிலை, எழுதுவரி நீளக்குறைப்பு, மெய்யெழுத்து வரிசைச் சீர், புதிய ஒலிகட்கான வரிவடிவமைப்புத் தேவை என்பன பற்றியும் கருத்துக் கூறப்பட்டுள்ளது. மனித நாகரிக வளர்ச்சியில் தமிழர் பங்குபற்றவும் பங்களிக்கவும் இன்றைய, எதிர்காலத் தமிழர்க்குத் தமிழ் வரிவடி வமைப்பில் மாற்று நோக்கு உதவும்.

# பிராகிருதமும் தமிழ்ச் சங்க அக இலக்கியமும்

பன்மொழிப்புலவர் மு. கு. ஜகந்நாத ராஜா
தலைவர், மணிமேகலை மன்றம், இராஜபாளையம்

### பிராகிருத மொழி அமைப்பு

பாரதப் பண்பாட்டை உருவாக்கிய பழம்பெரும் மொழிகள் மூன்று. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இலக்கியச் செல்வங்களை உடையதாக இம்மூன்று மொழிகளும் திகழ்ந்தன. அவை: வடமொழி எனும் சம்ஸ்க்ருதம் — பாகதம் எனும் பிராகிருதம், திராவிடம் எனும் தமிழ் ஆகும். தமிழைக் குறிக்க திராவிடம் எனும் பெயரை பிற மொழியினர் வழங்கினும், இன்றைய மொழி நூலார் வழக்கொழிந்த மூல திராவிட மொழிக்கே அப்பெயர் சூட்டியுள்ளனர். மூல திராவிட மொழியினின்றும் கிளைத்த தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு எழுத்தும் இலக்கியமும் உடைய மொழிகளும், கோண்டு, பிராஹூய், கூயீ, துளு முதலிய எழுத்து வழக்கற்ற இந்தியப் பெருங்கண்டம் முழுவதும் பரவியுள்ள, பேச்சு மொழிகளும் திராவிட மொழிகளாகும். வேத கால வடமொழி, மூல திராவிட மொழியின் செல்வாக்கால் பிராகிருதம் எனும் மக்கள் பேச்சு மொழியாகத் திரிந்தது. ஒரு மொழியின் திரிபுக்கு காலப்பிரவாகமும் மலை, ஆறு முதலிய இடக்குறுக்கீடுகள் மட்டுமன்றி, இனக் கலப்புகளும் முக்கிய காரணமாகும். வேத மொழி ஆரியர் மொழியாகத் திகழ்ந்தது. ஆரியர் பிற மொழிகளை மிலேச்ச மொழிகள் என்ற கூறினர். அம் மிலேச்சர்கள் நாகர்களும் திராவிடர்களுமே ஆகியிருக்கவேண்டும். இந்த மூவினக் கலப்பினால் மொழிகளில் கலப்பும் திரிபுகளும் ஏற்பட்டன. அவற்றின் விளைவாக வேதமொழியை, பண்பட்ட நாகரிக மக்கள், கேள்வி வழியாகவே பாதுகாத்து வந்தனர். அம்மொழியைப் பண்படுத்தி இலக்கணங்களும் ஏற்படுத்தினர். அம்மொழியே சம்ஸ்க்ருதம். சம்ஸ்க்ருதம் என்ற சொல்லுக்கே பண்படுத்தப்பட்டது (செம்மைப்படுத்தப் பட்டது) என்பது பொருள். பிராகிருதம் என்றால் முன்பே செய்யப்பட்டது, இயல்பானது, மக்கள் மொழி என்னும் பொருள்களை உடையது. இம்மொழியின் பெயரை வைத்துக்கொண்டே ப்ராகிருதம் சம்ஸ்க்ருதத்தை விடப் பழமையானது என்றும் பிராகிருதத்திலிருந்தே சம்ஸ்க்ருதம் பிறந்தது என்றும் வாதிடுதல் பொருந்துவதன்று. மொழியின் சொல்லமைப்புகளைக்கொண்டு ஆராய்ந்தால் தெளிவாகவே சம்ஸ்கிருத மொழிச்சொற்களின் சிதைவுகளே பிராகிருதம் என்பது புலப்படும். மேலும் பிராகிருத இலக்கணப் புலவர்களும் ''பிராக்ருதஸ்ய து சர்வமேன சம்ஸ்கிருதம் யோனி'' (பிராகிருத சஞ்சீவனி) என்றுகூறுவர். ப்ரக்ருதம் என்பது சம்ஸ்கிருத வேதமொழி என்றும், அதிலிருந்து பிறந்தது பிராக்ருதம் என்றும் வாக்படாலங்கார உரைகாரர் கூறுவார்.

பிராகிருதமொழிப் பெருங்கவிஞனான ஹேமசந்திரன் ''ப்ரக்ருதி சம்ஸ்க்ருதம் தத்ர ப'லம் ப்ராக்ருதம் உச்யதே'' என்று கூறுகிறான். ஆதலில் மூல

வைதிக சம்ஸ்க்ருத மொழியிலிருந்து திரிந்ததே பிராகிருதமாகும். இத்திரிபுக்கு மூல காரணம் திராவிட மொழியின் செல்வாக்கும், திராவிட இனக்கலப்புமே யாகும். பிராகிருத மொழிச் சொற்களின் எளிமையும், சொற்புணர்ச்சி விதிகளும், இவ்வுண்மையைத் தெளிவாகக் காட்டுகின்றன. இப்பிராக்ருத மொழியே அபப்ரம்சமாகத் திரிந்தும், பாலி, அர்த்தமாகதி மொழிகளாக மலர்ந்தும், இன்றைய ஹிந்தி, மராட்டி, வங்காளி, குஜராத்தி முதலிய வட இந்திய மொழிகட்கு மூலமாகவும் அமைந்தது.

**பிராகிருதமும் திராவிட மொழிகளும்**

சம்ஸ்க்ருதம் மூல திராவிட மொழியின் செல்வாக்கால் பிராகிருதமாகத் திரிந்து வலிவும் பொலிவும் மிக்க மொழியாக மலர்ந்தது. சம்ஸ்க்ருத மொழியின் கடுமையும் வன்மையும் மெய்ப்புணர்ச்சி மிக்கதுமான இயல்பு நீங்கித் திராவிட மொழிகளைப் போலவே மென்மையும் உயிர்ப்புணர்ச்சி மிக்கதுமாக அம்மொழி அமைந்தது. சில சொற்களைக் காண்போம்.

| வடமொழி | | பிராகிருதம் |
|---|---|---|
| க்ருதி | — | கயி |
| கதா | — | கஹா |
| ஸ்படிக | — | பல்ஹ |
| தஸ்ய | — | தாஹ |
| தர்ம | — | தம்ம |
| கர்ம | — | கம்ம |
| க்ஞானம் | — | ஞணம் |
| ப’வதி | — | ஹோயி |
| த்’வி விதம் | — | துவிஹம் |
| ஏகப்ரதேஸோ | — | ஏயபதேஸோ |
| ப்ரவக்ஷ்யாமி | — | பவக்காமி |
| யஹ | — | ஜோ |
| ஆர்ய | — | அய்ய (அஜ்ஜ) |
| ஆத்மா | — | அப்ப (அத்த) |

இதுபோன்ற நூற்றுக்கணக்கான சொற்களைக் காட்டலாம். தன்னின மெய்கள் இணைதல் அன்றிப் பிற இன மெய்ப்புணர்ச்சிகளைத் தவிர்க்கும் திராவிடப் பண்பு இச்சொற்களில் மிகுந்து கான முடிகிறது. இப் பிராகிருதச் சொற்கள் ஆயிரக் கணக்கில் திராவிட மொழிகளில் கலந்திருத்தல் இயல்பே. பிராகிருத மொழிப் பயிற்சி நம் மொழி நூலாசிரியர்கட்கு மிகவும் குறைவு. ஆதலின் திராவிட மொழிகளில் பிராகிருத மொழிகளின் கலப்பையும் செல்வாக்கையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கவில்லை. நுணுகி ஆய்ந்தால் அதன் செல்வாக்கு புலப்படும். பூகோள அமைப்பின்படி வட ஆரிய மொழிகளும் இனமும், தென் திராவிட மொழிகளும் இனமும் கலக்கும் சங்கமமாகிய நடு இடத்தில் அமைந்த காரணத்தால் இரு இன மொழிகளின் கலப்பை ஆந்திர இனத்திலும் மொழியிலும் காணமுடிகிறது. தெலுங்குச் சொற்களில் பிராகிருதச் சொற்கள் மிகுதியாகக் கலந்துள்ளன. ‘தெலுங்கு மொழி திராவிட மொழிப் பிரிவன்று, பிராகிருத மொழியின் பிரிவு

தான்' என்று ஆய்வாளராகிய டாக்டர் சிலுகூரி நாராயணராவ் கூறுமளவிற்கு பிராகிருதச் சொற்கள் தெலுங்கில் மிக்குள்ளன.

பிற திராவிடச் செம்மொழிகளைப்போன்றே தமிழிலும் பிராகிருதச் சொற்கள் பல கலந்திருக்கின்றன. தமிழின் முதல் இலக்கண நூலாகிய தொல் காப்பியத்தில் 'பண்ணத்தி' முதலிய சில பிராகிருதச் சொற்களைக் காணமுடி கிறது.

தமிழிலும் சமண பவுத்த மதத்தின் செல்வாக்கு மிக்கிருந்தமையால் பிராகிருத மொழி கலந்திருத்தல் இயல்பேயாகும். இதைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, மயிலை சீனி வேங்கடசாமி, பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் முதலிய அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். நாலடியார் முதலிய அற நூல்களைச் சமண முனிவர்கள் இயற்றி யுள்ளனர். அவற்றுள் பல பிராகிருதச் சொற்களைக் காண்கிறோம். சம்ஸ்க்ருதச் சொற்களே நேரடியாகத் தமிழில் பல வந்துள்ளன. அவை பிராகிருதம் மூலமாகவும் கலந்திருக்கின்றன. இந்த வேறுபாட்டை எப்படி உணருவது என்ற கேள்வி எழலாம். ஒரு வட சொல் நேரடியாகத் திராவிட மொழிக்கு வரும் நிலை வேறு. பிராகிருதத்தின் மூலம் வரும் நிலை வேறு. இவ்வேறுபாட்டைக் காணமுடியும். தர்ம: என்ற சொல் தருமம் என்று தமிழில் வரும். அச்சொல் பிராகிருதத்தில் தம்மம் என்று ஆகும். தம்மம் தமிழிலோ பிற திராவிட மொழியிலோ இல்லை. தர்மம் என்றே வழங்கப் படுகிறது. வர்ணம் என்ற சொல் தமிழில் வருணம் என்றே வரும். ''வருணக் காப்பிலள்' என்பது மணிமேகலை. இது நேரடியாக வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்தது. வர்ணம் வண்ணம் என பிராகிருதத்தில் ஆகும். அதே வண்ணம் தமிழிலும் வருகிறது. தெலுங்கில் 'வன்னெ' என வருகிறது. இந்த வண்ணம் பிராகிருதத்தின் மூலமே இவ்வண்ணமாக வருகிறது.

வடமொழி யகரம் பிராகிருதத்தில் ஜகரமாகும். யக்ஞம் — ஜன்னம் என்று தெலுங்கில் வரும். அக்னி — அக்கினி என்று வந்தால் சம்ஸ்க்ருதத்தி லிருந்தும், அங்கி என்று வந்தால் பிராகிருதத்திலிருந்தும் வந்தது என்று புரிந்து கொள்ளமுடியும். தமிழில் எத்துணையோ பிராகிருதச் சொற்கள் வந்துள்ளன. ஒரு சில மட்டும் காண்போம்.

| | | |
|---|---|---|
| அக்கி | — | அக்னி (அக்கி) |
| அத்தம் | — | அர்த்தம் (அத்த) |
| ஐயம் | — | அய்ய |
| கப்பம் | — | கப்ப |
| கண்ணன் | — | கண்ஹ |
| கோட்டி | — | கோட்ட |
| சதுக்கம் | — | சதுக்க |
| சுண்ணம் | — | சுண்ண |
| தம்பலம் | — | தம்போல |
| அப்பா | — | அப்ப (ஆத்மா) |
| அத்தா | — | அத்த (ஆத்மா) |

தமிழின் ஒரு கிளைமொழியாகவே மலையாளம் திகழ்கின்றது. புறநானூற்றுப் பாடலில் வரும் ‘பூக்குந்து’ என்ற சொற்றொடரையும் தற்கால வினைச்சொற்கள் கால இட விகுதிகளை இழந்திருப்பதையும் கொண்டு, திராவிட மூலமொழியின் கிளையே மலையாளமும் என்று சில மலையாள நூலாசிரியர் கூற முயல்வது பொருந்து வதாகத் தோன்றவில்லை. தமிழின் கிளை மொழியாதலின் மலையாளம் தனி இலக்கியச் சிறப்புப்பெற்றது பதினைந்தாம் நூற்றாண்டுக்குப்பிறகே ஆதலானும் வைதிக சம்ஸ்க்ருதச் செல்வாக்கு மலையாளத்தில் மிகுதியாக இருந்ததாலும் பிராகிருத மொழிச் செல்வாக்கு மலையாளத்தில் இருக்கமுடியாது. மலையாள மொழி உருவாகும்போது பிராகிருதமொழி வழக்கற்றுப்போய்விட்டது. பிற வட இந்திய மொழிகள் உருவாகிவந்த காலம் அது. ஆதலின் பிராகிருதச் செல்வாக்கை அதில் தேடுவது வீண் ஆகும். எனினும் மலையாளக் கவிஞர் வடமொழிப் புலமை பெற்றதுபோலவே பிராகிருதத்திலும் புலமை பெற்றிருந்திருக் கலாம். வள்ளத்தோள் நாராயண மேனோன் ருக் வேதத்தையும், வால்மீகி ராமாயணத்தையும் மொழிபெயர்த்தது போலவே பிராகிருதப் பேரிலக்கியமான காதாசப்த சதியையும் ‘கிராம ஸௌபாக்யம்’ என்ற தலைப்பில் மொழி பெயர்த் துள்ளார். திராவிட மொழிகளில் பிராகிருதச் சொற்களும் இலக்கியமும் கணிச மான செல்வாக்கைப் பெற்றிருந்தன என்பது இதுகாறும் கூறியவற்றால் தெளி வாகலாம்.

### பிராகிருதமும் தமிழும்

பிராகிருத மொழியின் இலக்கிய இலக்கணங்களிலும் தமிழ்ப் புலவர்கள் புலமைபெற்றிருந்தனர். புறநானூற்றில் ஔவையார் பாடியதாகக் காணும்

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலவே

என்ற பாடல் தம்ம பதத்தில் காணும்

காமே வா யதி வா ரஞ்ஞே
நின்னே வா யதி வா தலே
யத் தாரஹந்தோ விஹ ரந்தி
தங் பூமிங் ராமணெய்யகங் — (தம்மபதம் 98)

பாடலின் மொழிபெயர்ப்பாகவே அமைந்துள்ளது. பிராகிருதச் செய்யுட்களை ‘காதா’ என்று அழைப்பர். ‘காதா சப்த சதி’ என்ற நூற்பெயர் ‘பாட்டுக்கள் எழுநூறு’ என்று பொருள்படும். இம்மரபுபற்றியே சிலப்பதிகார, மணிமேகலை களில் காதை என்ற சொற்காணப்படுகிறது. விழாவறை காதை, அரங்கேற்று காதை என்பனவற்றில் காதை என்பது பாட்டு என்றே பொருள்படும். ‘‘ஆறைம் பாட்டினில் அறையவைத்தனன்’’ என்ற சிலப்பதிகார பதிகச் செய்யுளடி இதை விளக்கும். பதினொன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த யாப்பருங்கலக் காரிகை உரையில் குணசாகரர் ‘‘இந்நூல் என்ன பெயர்த்தோ எனின் பாளித்தியம் என்னும் பாகத இலக்கணமும், பிங்கலம் என்னும் சந்தோ விசிதியும்போலக் காரிகை

யாப்பிற்ருய்'' என்று கூறுகிருர். அக்காலத்தில் பிராகிருத இலக்கணப் புலமை பெற்றிருந்ததற்கு இது ஒரு சிறந்த சான்ருகும். அகத்தியச் சூத்திரங்களில் பாகத மொழிபற்றிய குறிப்புள்ளது. இளம்பூரணர், பேராசிரியர், நச்சிஞர்க்கினியர், சேஞவரையர் போன்ற உரையாசிரியர்கள் பிராகிருத மொழியில் பயிற்சி பெற்றிருந்தனர். பிராகிருத மொழிப் பேரிலக்கியமாகிய குணுட்டியரின் பிருஹத்கதா' மொழியாக்கம்பெற்ற மொழிகள் இரண்டு. ஒன்று வட மொழி யாகிய சம்ஸ்க்ருதம். மற்ருென்று தென் மொழியாகிய தமிழ்.

**காதா சப்தசதி**

உலகப் பேரிலக்கியங்களில் ஒன்ருக வைத்தெண்ணப்படும் சிறப்புடையது காதா சப்தசதி என்னும் பிராகிருதமொழிப் பேரிலக்கியமாகும். பிரபல சரித்திர நூலாசிரியர் டாக்டர் கிருஷ்ணசாமி அய்யங்கார் 'இந்த நூல் இந்தி யாவில் மட்டுமன்றி உலகிலேயே காதலிலக்கிய மூல நூலாகும்' என்று பாராட்டி யுள்ளார். வடமொழிக் கவிவாணர்களும், அலங்கார சாஸ்திர விற்பன்னர்களும் தமக்கு முன்மாதிரியாகவும் உதாரணமாகவும் கொண்ட உயர்ந்த கவிச்சுவை மிக்க காதல் இலக்கியம் இது. கிராம மக்களின் காதலுணர்வுகளை இயல்பாகச் சித்திரித்து, தொனிப்பொருள்மிக்க கவிதையெழில் சிறந்த நூலாக இது திகழ்கின்றது. தலைவன், தலைவியரின் காதல், பிரிவு, புலவி முதலிய ஐந்திணை ஒழுக்கத்தினை விவரிக்கும் அகப்பொருள் சார்ந்த தனிப் பாடல்களின் தொகுப்பே இந்நூல். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த்தோன்றிய இந்த அகப்பொருள் இலக்கியம் அதே காலத்தில் தோன்றிய தமிழ்ச் சங்க அக இலக்கியத்துடன் ஒப்புமையுடையதாகத் திகழ்கின்றது. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலி போன்ற நம் அக இலக்கியத்திற்கு ஈடான நூல் இது. தமிழ் அக இலக்கியத் திற்கு ஈடான ஒரு நூல் உலகிலேயே இல்லை என்பதே நம் தமிழ்ச் சான்ருேர் பெரும்பாலோரின் கருத்தாகும். ஓரளவு உண்மையும் கூடத்தான். வடமொழியில் கூட இத்தகு இலக்கியம் இன்மையே இதற்குக் காரணம் ஆகும். ஆனுல் பிரா கிருத மொழியிலுள்ள இந்த காதா சப்தசதி நம் அக இலக்கியத்திற்கு ஒத்தது என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் பெயரே நம் சங்கத்தொகைநூல் போன்றே அமைந்துள்ளது. காதா சப்தசதி என்ருல் 'பா எழுநூறு' என்று பொருள்படும். புறநானூறு, ஐங்குறுநூறு, முத்தொள்ளாயிரம் என்று எண்ணளவு கொண்டு பெயரிடும் வழக்கப்படியே இந்நூல் அமைந்துள்ளது.

| | | |
|---|---|---|
| குறுந்தொகை | — | பூரிக்கோ வாலும், |
| அகநானூறு | — | பாண்டியன் உக்கிரப் பெருவழுதி யாலும், |
| ஐங்குறுநூறு | — | சேரன் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை யாலும், |
| நற்றிணை | — | பாண்டியன் மாறன் வழுதியாலும் |

புலவர்களைக்கொண்டு தொகுக்கப்பெற்றவை. மன்னர்கள், கவிஞர்களை ஆதரித்த அம்மரபின்படியே காதா சப்த சதியும் சாதவாஹன மன்னனுல் தொகுக்கப் பட்டது. கி.பி. முதலாம் நூற்ருண்டில் வாழ்ந்த ஹாலசாதவாஹனன் தானும்

ஒரு கவிஞனுகத் திகழ்ந்து கவிஞர்களைப் புரந்தான். கிருஷ்ணதேவராயரைப் போலவும், அதிவீரராமபாண்டியன்போலவும் கவியரசாகவும் புவியரசாகவும் திகழ்ந்த மாமன்னன் ஹாலசாதவாஹனன். சாதவாஹனரை சாலிவாஹனர் என்றும் அழைப்பர் சாதவாஹனர் ஆந்திர மன்னர். இவர்கள் பெயரால் 'சாலிவாஹன சகாப்தம்' உருவாயிற்று. சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ அடிகள் 'நூற்றுவர்கன்னர்' என்று இம்மன்னரைக் குறிப்பிடுகிறுர். ஹாலமன்னன் ஒவ்வொரு பாட்டுக்கும் லட்சம் பொன் ஈந்து தொகுத்த நூல் இது; பதிற்றுப் பத்து என்ற நூலின் புறவுரையில் காணும் மன்னர்களது வள்ளன்மையையும் கவிச் சுவை ஈடுபாட்டையும் நமக்கு நினைவூட்டுகிறது.

சங்க அக இலக்கியம் கற்பனை வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டது. காதா சப்தசதி யதார்த்த வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டது. இந்த வகையில் யதார்த்த இலக்கியம் என்ற தனிச் சிறப்பு குறுந்தொகை, அகநானூறுகளை விட காதா சப்தசதிக்கு மிகுதி என்று கூறலாம். தமிழ்ச் சங்க இலக்கியத்தில் காணும் திணை—துறைகளாகிய பகுப்பு-அக இலக்கண அமைப்பு முறை — வட மொழியில் இல்லை. புறப்பொருள் இலக்கணமும் பிற மொழிகளில் இல்லை. எனினும், அகப்பொருள் திணை துறைகட்குரிய ஒழுக்கங்கள் மற்ருெரு வகையில் வடமொழி அலங்கார சாஸ்திர நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தலைவன், தலைவியர், பாங்கன், தோழி, புணர்தல், பிரிதல் இரங்கல் முதலிய முதற்கரு உரிப்பொருள்களும் ஒழுக்கங்களும் அங்கும் பேசப்படுகின்றன. தமிழில் ஐந்து திணைக்கும் ஐந்துவிதத் தலைவியரைப் பார்த்தல் போல, வடமொழியில் எட்டு விதத் தலைவியரைப் பார்க்க முடிகிறது. நான்குவிதத் தலைவர்கள் உள்ளனர். இந்தத் தமிழ், வடமொழி இலக்கணங்கட்கு இலக்கியமாகத் திகழும் நூலாக காதா சப்த சதி திகழ்கிறது.

தொல்காப்பியர் காட்டும் திணை துறைகளுக்கேற்ப காதா சப்த சதிக் கவிதைகளை வகைப்படுத்திஞல் தமிழ்ச் சங்க அக இலக்கியமாகவே அது காட்சி தரும். இத்தகு ஒற்றுமையுடைய ஓர் இலக்கியம் இது ஒன்றேயன்றி உலகில் வேறெம்மொழியிலும் இல்லை. இதுவே பிராகிருத மொழிக்கும் பழந்தமிழுக்கும் ஓர் ஒற்றுமைப் பாலமாக அமைகின்றது.

தமிழ் இலக்கியம் இயல்போடமைந்ததும் அறத்தோடியைந்ததும் எளிமை யும் எழிலும் உடைய புனைந்துரைக் கவிதைகளாக அமைந்துள்ளது. இயற்கையில் காணும் நிகழ்ச்சிகளையும், மனித மனத்துடிப்புகளையும், உணர்ச்சிகளையும் கற்பனைப் பாங்குடன் காட்டும் நம் அக இலக்கியம் போன்றே காதா சப்தசதியும் எளிமை, இனிமை, இயல்பான வாழ்வியற் சித்திரங்கள், கற்பனை வளம் இவற்றுடன் கூடி மிளிர்கின்றது.

**சங்க அக இலக்கியமும் காதா சப்த சதியும்**

தமிழுக்குத் தனிச்சிறப்பளிக்கும் படைப்புக்கள் எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும், ஆகிய சங்க இலக்கியமாகும். அறநெறி சார்ந்த உயர்ந்த சிந்தனைகளோடு காதலும் வீரமும் கொடையும் உடைய சிறந்த கவிதைகளின் தொகை நூல்கள் அவை. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட அக்கவிதைகளைப்

பிற்காலத்தார் தொகுத்து நமக்களித்திருப்பது தமிழ் செய்த தவப்பயனேயாகும். அந்நூல்களை அச்சிற் பதித்து பாதுகாத்த தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாதையர், சி. வை. தாமோதரம் பிள்ளை ஆகிய அறிஞர்களையும் நன்றியுடன் நாம் நினைவு கூறவேண்டும். சங்க இலக்கியத்தின் பெரும் பகுதி அகப் பொருட் கவிதைகளே யாகும். தொல்காப்பியரின் இலக்கண வரையறைகளைப் பயன் படுத்தி நாம் திணை, துறை விளக்கங்களைப்பெற்றுச் சங்க அக இலக்கிய அமுதினை நுகர்ந்து இன்புகிறோம். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனும் திணைக்குறிப்பை உணர்ந்ததுமே அக்கவிதையின் வாழ்வியற்சாரம் இதுதான் என்று புரிந்துகொள்ளும் திறன் நமக்குண்டு. இத்தகு இலக்கணக் குறியீடுகள் பிற மொழிகளின் அகப் பாடல்கட்கு இல்லை.

ஒரு பாடல் யார், யாரை நோக்கி, எச்சமயத்தில் கூறியது என்ற குறிப்பும் நம் பழந்தமிழ் அகப்பாடல்களில் உண்டு. இது கவிதையை உணரப் பேருதவி புரிவதாகும். இதுபோன்றே காதா சப்தசதி உரைகாரர்களும் விளக்கியுள்ளார்கள். காதா சப்தசதியை வெபர் என்ற ஜெர்மானியர் 1881இல் தம் முதற்பதிப்பை வெளியிட்டார். அதன்பின் பல்வேறு மொழிகளில்மொழி பெயர்க்கப்பட்ட இந்நூலுக்கு பீதாம்பரர், புவனபாலர், கங்காதரர் முதலிய பத்து உரையாசிரியர் களின் விளக்க உரைகளும் உள்ளன. தமிழில் முதன்முதலில் த நா. குமார ஸ்வாமி அவர்கள் ஒருசில பாடல்களை ‘அமுதசுரபி’ பத்திரிகையில் ‘சாதவாஹனம்’ என்ற தலைப்பில் வெளியிட்டிருந்தார். எனினும் முழுமையான தமிழாக்கமாக முதன்முதலில் இக்கட்டுரை ஆசிரியர் கவிதைவடிவில் மொழிபெயர்த்துள்ளார். இரா. மதிவாணன் அண்மையில் வசனமாக மொழி பெயர்த்திருக்கும் நூல் ஒன்றும் வந்துள்ளது.

காதா சப்த சதிக்கும் சங்க அக இலக்கியத்திற்கும் உள்ள ஒற்றுமையை, கவிநய ஒப்புநோக்கில் ஆய்தல் வேண்டும். இங்கு நான் ஒருசிலவே எடுத்துக் காட்டியுள்ளேன். இன்னும் ஆழமாக, நுட்பமுடன் ஆராய்ந்து ஒப்புமைகளை வெளிப் படுத்தவேண்டும். இதனால் இருவேறு கலாசார பாரம்பரியங்கட்கு ஒற்றுமைப் பாலமாக இந்த நூல் அமையும் திறன் தெளிவாக விளக்கம்பெறும். இவ்விரு அக இலக்கியங்களில் காணும் மக்கள் பழக்கவழக்கங்கள், கற்பனைத்திறன், நாகரிகம், இயற்கை வருணனைகள் எல்லாம் நாம் எடுத்துக் காட்டுவதன்மூலம் நம் பாரத தேச ஒருமைப்பாட்டுணர்வுக்கு உரமிடமுடியும். இங்கு நான் கண்ட சில ஒப்பீட்டாய்வுகளை மட்டும் படைக்கிறேன்.

**ஒப்பீடுகள்**

காதா சப்த சதியும் சங்க அக இலக்கியமும் காட்டும் வாழ்க்கை முறை, பழக்கங்கள், பண்பாடுகள் ஒரே வகையிலேயே அமைந்திருக்கக் காணலாம். ஒரே சமகால இலக்கியங்களே இவையாகும். அக்கால மக்கள் வேத தருமத்தையும், சமண பவுத்த தருமங்களையும் பின்பற்றினர். பாரத, ராமாயணக் கதைகளை நன்கறிந்திருந்தனர். அகநானூறு, கலித்தொகைகளில் இராமாயண பாரதச் செய்திகள் காணப்படுவது போன்றே காதா சப்த சதியிலும் காணப்படுகிறது. ஒரு பெண் தன் கொழுந்தன் தன்னை காமக்குறிப்போடு பார்த்தலைக் கண்டு கற்புமிக்க அம்மடந்தை நாகரிகப் பாங்குடன் அவள் இல்லத்தில் இருந்த சீதா ராம லக்கு

மணர்களின் ஓவியத்தைக் காட்டிய செய்தி ஹாலனில் பாடலாக காதா சப்தசதி (1 — 35) தெரிவிக்கின்றது. நற்றிணை 22—வது பாடலில் ''நோன்பியர் கையூண் இருக்கையிற் தோன்றும்'' மந்தியை வருணித்து சமணத் துறவியரைப்பற்றி கூறுகின்றது. காதா சப்த சதியில் துவராடையுடுத்த புத்தபிக்குகளைப் பற்றிய செய்தி வருகிறது. காதா சப்த சதியில்

''புத்த தேவன் புனித பதங்களில்
துறவியர் வணங்கும் தோற்றம்'' — (4: 8)

வருணிக்கப்பட்டுள்ளது. காதா சப்தசதியில் கண்ணன், சிவன், கணபதி முதலிய தெய்வங்களைப்பற்றிய செய்தி வருகிறது. சங்க இலக்கிய காலத்தில் கணபதி வணக்கம் இல்லை. மற்றத் தெய்வங்கள் உண்டு.

சங்க இலக்கியத்தில் இயற்கை வருணனை மிகுதி. அம்மக்கள் இயற்கையின் மடியில் எளிமையும் இனிமையும் உடைய வாழ்வில் வாழ்ந்தனர். அதுபோன்றே காதா சப்தசதி மக்களும் எளிய இனிய கிராம வாழ்க்கையினரே. சங்க அக இலக்கியத்தில் குறிஞ்சி, (மலையும் மலைசார்ந்த இடமும்) பாலையும், நெய்தலும் (கடற்கரை வருணனைகள்) மிகுதியாக உள்ளன. காதா சப்தசதியில் முல்லையும், மருதமும் ஆகிய நில, ஆற்று வருணனைகளே மிகுதி. ஏனெனில் காதா சப்தசதி மலர்ந்த இடம் கோதாவரி நதிக் கரையாகும். கால இடச் சூழலுக்கேற்பவே காவியங்கள் உருவாகின்றன. ஆந்திர, மகாராஷ்டிர மாநிலப் பரப்பின் நடுவில் திகழ்ந்த கிராம மக்களது இலக்கியமாக காதா சப்தசதி அமைந்துள்ளதால், இங்கு மருத வருணனைகளே அதிகமாகும். குழந்தைகளை அன்புடன் வளர்த்தல், மகப்பேறு, வயாவிருப்பம், விருந்து புறந்தருதல், திலகமிடல் முதலிய பல செய்திகள் இரு இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

காதா சப்தசதிப் பாடல்கள் நான்கடியில் சுருக்கமாக கவிச்சுவை ததும்ப விவரிக்கும் பாங்கு மிக்க நயமுடையதாகவும் எளிமையும் இன்பமும் மிக்க ரசனை யுடையதாகவும் அமைந்துள்ளது. ஆயின் நம் தமிழ்ச் சங்க அக இலக்கியத்தில் இயற்கையின் நீண்ட வருணனைகள், பொருள்கோள் இடர்ப்பாடுகள் கவிச்சுவைக்குக் குறுக்கீடாக அமைந்துவிடுகின்றன. உள்ளுறை உவமமும், நிகழ்ச்சியின் பின்னணியும் இவ்வியற்கை வருணனையில் அமைந்து எழில்மிக்கதாக இருப்பினும் கூட, உணர்ச்சி களின் வெளிப்பாடான கவித்துவத்துக்கும், சொற் சாதுரியங்களை உணர்வதற்கும் சிறிது தடையாகிவிடுகிறது.

காதா சப்தசதியில் உள்ளுறை உவமத்தோடொத்த தொனிப் பொருள் ஒவ்வொரு கவிதையிலும் சுடர்விட்டுப் பிரகாசிப்பதால் அதன் ரசனை அமுது எனச் சுவை தந்து நெஞ்சில் நீங்காத இடம் பெற்றுவிடுகிறது.

காதலர்கள் தாம் களவிற் புணர்தற்குக் குறியிடம் (சங்கேதஸ்தலம்) தன்னை சொல்லும் சங்கேத மொழியே தனிதான். அதில்தான் எத்துணை சாதுரியம் வெளிப்படுகிறது. இத்தகு கவிதைகளில் மறை பொருளாக உணர்த்தும் தொனிப் பொருள் மிகுந்த சுவை பயப்பதாக அமைந்திருக்கின்றது. காதலர்கட்கு மட்டுமே அதன் மெய்ப்பொருள் தெரியுமன்றி மற்றவர்கட்கு அதன் உட்பொருள் விளங் காதவாறு பேசும் காதலரின் திறனே தனித்துவமுடையதுதான். இக்குறியிடம்

செல்லும் காலத்தை ஒட்டி பகற்குறி இரவுக்குறி என்று இரண்டு வகைப்படும். தமிழ் மரபில் தினைப்புனமோ, கடற் கானற் பூம்புதர்களோ இவர்கள் குறியிடமாகும். கோதாவரிப் பூம்புதர்களும் பாழ் மண்டபங்களும் காதா சப்தசதியில் குறியிடமாகத் திகழ்கின்றன. கொய்புனம் தன்னில் தினைக்கதிர் கவரவரும் புட்களை ஓட்டும் சாக்கில் காதலியர் அங்கு வருவர். அதேசமயம் தினை அறுவடையாகும் காலத்தில் அக்குறியிடம் பெருமையினல் வருந்துவதும் உண்டு.

அத்தை! எவரோ ஆகாயத்தை
நம்மூர்க் குளத்தில் நயனெடு வீசி
எறிந்தும் சிறிதும் ஏதுமாகாது
அசைந்தில தாமரை! அன்னமும் எழாதே!
— மிருகாங்கன் 2—10

அசைவற்ற குளத்தில் வானம் பிரதிபலிக்கும் அழகிய இயற்கைக் காட்சியை நம் கண்முன் நிறுத்தி இப்பெரும் வானம் வீழ்ந்தும் தாமரையோ அன்னமோ அசையாத அற்புதத்தைச் சொல்லும் தலைவியின் உள்நோக்கம் நான் அங்கு சென்றேன். நீ வராமல் ஏமாந்துவிட்டேன். நீ வரவே இல்லை. வந்தால் அன்னங்கள் அசையாமலிருக்குமா? குளத்தில் அலை பரவி தாமரைகள் அசையாமல் இருக்குமா? — என்று மறைமுகமாகக் கேட்கின்றாள்.

தமிழ்ச் சங்க அக இலக்கியத்திலும் காதலர் மொழிகளினூடேயே உயர்ந்த அறநூற் கருத்துக்களையும் விழுமிய சிந்தனைகளையும் விதைத்துச் செல்லும் பாங்கை காண்கிறோம்.

நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்தே
— நற்றிணை 32

இல்லோர்க் கில்லென இயைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் — அகம் 53

இரவலர் வாரா வைகல்
பல ஆகுக பொன் செலவுறு தகவே — குறுந்தொகை 137

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் — அகம் 54

பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு
காமர் பொருட்பிணி போகிய — நற்றிணை 186

இளமையிற் சிறந்த வளமையுமில்லை — நற்றிணை 136

என்பன போன்றே எத்துணையோ பொன்மொழிகள் ஒத்த சிறந்த சிந்தனைகள் விரவியிருக்கக் காணலாம். அதுபோன்றே காதாசப்த சதியிலும் பல உயர்ந்த சிந்தனைச் சுடர்கள் ஒளி வீசித் திகழ்வதைக் காணலாம்.

இயற்கையைக் கூர்ந்து கவனித்து அழகுணர்வுடன் தம் அனுபவத்தைத் தத்துவ நோக்கோடு வெளிப்படுத்தும் பல அரிய கவிதைகள் காதா சப்தசதியில் உள்ளன.

புலவி கூர்ந்த தலைவி, தலைவன் தரும் மதுவைக் கைப்பு மருந்தென மெல்ல மெல்லக் குடிப்பதும், காதலியின் கடைக்கண் வீச்சில் சொக்கி அவள் இன்மொழி யமுதங்கலந்து கைப்பு மருந்தை அமுதெனக் கடைசித் துளியும் களிப்புடன் பருகும் காதலனும், வேடன் அம்பு எய்யும்போது இரு மான்கள் ஒன்றையொன்று முந்தித் தம் உடலினை தியாகம் செய்ய வருவதும் ஆன சிறந்த கவிநயக் காட்சிகளை நாம் காண்கிறோம். இதோ ஒரு கருணை ரசம் மிக்க கவிதை.

காதற் புதல்வனைப் பாதுகாக்க
கூரைத் துளைவழி கொட்டும் மழைநீர்
தன்தலை தடையாய்த் தடுக்கும் மடந்தை
தன் கண் ணீரால் தானே நனைப்ப
தோ ரா திருந்தான் பாரா யந்தோ — ஹாலன் 7.21

கூரை வழி கொட்டும் மழைநீரைத் தடுக்க தன் தலையைத் தடையாக வைத்த தையல் தன் கண்ணீராலேயே அக்குழந்தையை நனைக்கும் சோகக் காட்சி யார் மனத்தைத்தான் உருக்காது!

இத்தகைய மிக உயர்ந்த கவிதைகளைக் கொண்ட காதா சப்தசதி எனும் பிராகிருத மொழிப் பேரிலக்கியம் நம் தமிழ்ச் சங்க அக இலக்கியத்துடன் மிக நெருங்கிய ஒப்புமையுடையதாக உள்ளது. தமிழறிஞர் இன்னும் நுணுகி ஆய்ந்தால் எத்துணையோ ஒப்புமைகள் எடுத்துக்காட்ட முடியும். நான் மொழி பெயர்த்த பாடல்கள்மூலம் மேலோட்டமாகச் சில ஒப்புமைகளையே காட்டியுள்ளேன். இன்னும் ஆழ்ந்து ஆய்வு செய்யின் சமகால இருபெரும் சமுதாயத்தின் நாகரிகமும் பண்பாடும், கவிதைத் திறனும், கலைநோக்கும் ஒருமையுணர்வோடு அமைந்த திறன் தெளிவாகக்காணப்படும்.

# தமிழ்நாட்டுக் காவல் பயிற்சியில் தமிழ்க் கட்டளைச் சொற்கள்

திரு. ச. இராசவேலு, பி.எஸ்சி.,
துணைத் தளவாய், தமிழ்நாடு சிறப்புக் காவல் 2-ஆம் அணி, டில்லி

ஏதாவதொரு செயலைத் தொடர்ந்து செய்து பழகுவது Training அல்லது பயிற்சி ஆகும். Train என்பது ஒன்றன் பின் ஒன்றாகச் செல்லும் தொடர் வண்டியையும் (புகைவண்டி) குறிக்கிறது என்பதனை இவண் உன்னுக. எனவே பயிற்சி என்று சொல்வதைவிடத் தொடர்பயிற்சி என்று கூறுவது Training க்கு நிகரானதொரு தமிழ்ச் சொல்லாகும். எனினும் பயிற்சி என்பதே வழக்கத்தில் அமைந்துவிட்டது. Drill என்பதை முறைப்படுத்தப்பட்ட படைப்பயிற்சி என அகரமுதலி கூறுகிறது. எனினும், முகம்மதியர் மூலம் தென்னாட்டில் பரவிய உருது மொழி மூலம் 'கவாயத்' என்ற சொல் கவாத்து எனத் தமிழில் மருவிக் காவல்படையினரின் முறைப்பயிற்சியினைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டு வந்தது. எனவே, கவாத்து என்ற இச்சொல்லே Drill ஐக் குறிக்க எடுத்தாளப்பட்டுள்ளது. இதைத் தவிர Course, Cadre Course என்ற சொற்களும் பயிற்சியின் தொடர்-பாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. Course என்பது ஒரு முழுப் பயிற்சியின் ஏதாவதொரு வகையை மட்டும் சிறப்பாகப் பயில்வது ஆகும். Course என்பது வழி, பாதை எனப் பொருள்படும். எனவே Course க்கு வகைப்பயிற்சி எனத் தமிழில் சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது. அதுபோலவே, Cadre என்ற சொல் தொகுதி எனப் பொருள்படும். ஒரு குறிப்பிட்ட நிரையினரைப் பயிற்றுவதற்கும், ஒரு குறிப்பிட்ட இயற்பொருள் பற்றி அதன் தொடர்பான பல்வகைப் பாடங்களைச் சேர்த்துப் பயிற்றுவதற்கும் Cadre Course என்ற சொற்றொடர் பொருத்தப் பட்டது. இது தமிழில் தொகுதிப் பயிற்சி என அமைக்கப்பட்டது. மற்றொரு சொல் Exercise என்பது. மிகுமுயற்சியுடன் ஒரு தொடரியக்கத்தைத் தொடர்ந்து முறையாகப் பயில்வது Exercise ஆகும். எனவே இச்சொல் தமிழில் பயில்முறை எனப்பட்டது. ஓர் இயக்கம் முழுமை அடையும்பொருட்டுப் பழக்கப்படுமாயின் அது Practice எனப்படுகிறது. எனவே Practice என்பதற்கு நேர்த் தமிழ்ச் சொல் இவ்விடத்தில் பழகல் எனப்பட்டது. எனவே பயிற்சி எனப் பொதுப் படையாகக் கருதப்படும் சொற்களுக்குப் பின்வருமாறு தமிழாக்கத்தினைக் காண்க.

| | | |
|---|---|---|
| பயிற்சி (தொடர் பயிற்சி) | : | Training |
| கவாத்து | : | Drill |
| வகைப்பயிற்சி | : | Course |
| தொகுதிப்பயிற்சி | : | Cadre Course |
| பயில்முறை | : | Exercise |
| பழகல் | : | Practice |

Instructor அல்லது Teacher என்ற சொல்லுக்குப் போதகர் என்ற சொல் எவ்வாறோ நுழைந்து Assistant Drill Instructor என்ற சொற்றொடருக்கு உதவிக் கவாத்துப் போதகர் என்ற சொற்றொடர் நடைமுறையில் இருந்துவந்தது. அது போல Trainee என்ற சொல்கூட மாணவர் என்று எவ்வாறோ பழக்கத்தில் வந்துள்ளது. எனினும், Instructor, Trainee என்ற இரு சொற்களுக்கும் பயிற்றுநர், பயிலுநர் என்பனவே சரியான தமிழாக்கம் ஆகும். அதைப்போன்றே Recruit, Man, Trained man என்ற சொற்களும் அமையும். Recruit என்றால் புதிய ஆள் சேர் என்று வினைச்சொல்லில் பொருள்படும். எனவே பெயர்ச்சொல்லில் புதியோர் என்பதைவிடச் சிறந்த சொல் வேறொன்றும் இல்லை. Man என்பதற்கு மனிதன் அல்லது ஆள் என்று எளிதாகக் கூறிவிடலாம். ஆனால் பயன்படுத்துவதற்கு இச்சொற்கள் பொருந்தாததோடு ஆள் என்பது சற்று மரியாதைக் குறைவாகவும் தோன்றுகிறது. ஆட்சிச் சொல் காவலர் திரு. கீ. இராமலிங்கனார் Personnel என்ற சொல்லுக்குத் தமிழில் ஆளினர் என வழங்குவார். இச்சொல்லை Person என்பதற்கும் Man என்பதற்கும் வழங்குவது நன்று என்பது நடைமுறையில் உணரப்பட்டது. இச்சொல் பன்மை குறித்ததே ஆயினும் மரியாதைப் பன்மையாக ஓர் ஆளைக் குறிக்கப் பயன்படுத்துவதில் தவறேதும் இல்லை. எனவே காவல் கவாத்து-பயிற்சி நடைமுறை நூலின் தமிழாக்கத்தில் ஆளினர், ஆளினர்கள் என்ற சொற்களை நான் பரவலாகப் பயன்படுத்தியுள்ளேன். Policeman என்பதற்குக் காவலாளினர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. Police Constable என்பதற்குக் காவலர் என்பது புழக்கத்தில் வந்துவிட்ட சொல்லாகும் காவலர் என்ற இச்சொல்லினின்று காவலாளினர் என்பது வேறுபட்டதாகும். ஒரு காவல் அதிகாரியைக் கூட சில நேரங்களில் காவலாளினர் என்று குறிக்கலாம். ஆளினரின் அடியாக Individual என்பதற்குத் தனியாளினர் என்றும், Individuality என்பதற்கு தனியாளுமை என்றும் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது. (ஆளுமை – Personality). Trained man என்பது பயின்றோர் என ஆக்கப்பட்டுள்ளது. எனவே,

| | | |
|---|---|---|
| பயிற்றுநர் | : | Instructor, Teacher |
| பயிலுநர் | : | Trainee, Pupil |
| புதியோர் | : | Recruit |
| பயின்றோர் | : | Trained man |
| காவலர் | : | Police Constable |
| ஆளினர் | : | Man |
| காவலாளினர் | : | Policeman |
| தனியாளினர் | : | Individual |
| தனியாளுமை | : | Individuality |

### காவலும் காப்பும்

Police என்பதற்குக் காவலும், Guard என்பதற்குக் காப்பும் முன்னரே புழக்கத்தில் வந்துவிட்ட சொற்களாகும். கையில் காப்பு அணிவது கூட தீய சக்திகள் அணுகாமல் காக்கும்பொருட்டும் திட்டு ஏற்படாமல் காக்கும் பொருட்டுமே முற்காலத்தில் ஏற்பட்டதாகும். தற்போது கூட உற்சவம் முதலிய நேரங்களில்

பங்கேற்போர் காப்புக் கட்டிக்கொள்ளும் வழக்கம் உள்ளது. இவ்விவரங்கள் இவண் எண்ணத் தக்கனவாகும். காவல், காப்பு என்ற இரு தொழிற்பெயர்ச் சொற்களும் 'கா' என்ற வினையினடியாகப் பிறந்தனவாம். தொழிற்பெயர் விகுதிகளான 'அல்' 'பு' ஆகியவற்றைச் சேர்த்து சற்று வேறுபட்ட இரு பொருள் களைத் தரும் இரண்டு சொற்கள் ஒரே வினைச் சொல்லிலிருந்து உருவாக்கப் பட்டுள்ளன. இவை 'அறிவி' என்ற வினைச் சொல்லிலிருந்துஉருவாக்கப்பட்டுப் புழக்கத்தில் உள்ள அறிவிப்பு – Notice, அறிவிக்கை – Notification போன்ற சொற்களை ஒத்தவையாம். எனவே பல்வகைக் காப்புப் பணிகளைக் குறிக்கும் தனித்தனிச் சொற்களுக்குத் தனித்தனிச் சொல்லாக்கம் செய்யப்பட்டது. ஒரு பகுதியில் நிலையான முனைகளில் நிறுத்தப்பட்டுள்ள காப்பினர் Pickets ஆக இருக்கும்போது நிலைக்காப்பு எனப்படுவர். அவர்களே ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் சென்று திரும்பி இயக்கத்தில் காப்புப் பணிபுரிந்து Patrol ஆக இருக்கும் போது சுற்றுக்காப்பு எனப்படுவர். நேர முறைப்படி ஓர் இடத்திலோ ஒரு பணியிலோ beat ஆகப் பணியில் ஈடுபடும்போது முறைக்காப்பு எனப்படுவர். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு, பணம் போன்ற ஏதாவதொரு பொரு ளுக்கு Escort ஆகச் செல்லும்போது வழிக்காப்பு என்றும், ஒரு மிகச் சீரிய பெருமகனாருக்கு Escort ஆகச் செல்லும்போது மெய்வழிக்காப்பு என்றும், ஒருவருக்கு Body-Guard ஆகச் செல்லும்போது மெய்க்காப்பாளர் என்றும் அழைக் கப்படுவர். உற்சவம், ஊர்வலம் போன்றவற்றுக்குப் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்படுவதற்கு ஏற்பாடு எனப் பொருள்படும் பந்தோபஸ்த் என்ற உருதுச் சொல் வழக்கில் உள்ளது. இது காப்பேற்பாடு என மொழியாக்கம் செய்யப் பட்டுள்ளது. மேலும், Police என்பதற்கு நிகராகக் காவல் என்ற சொல்லை மட்டுமே நுட்பப் பொருளில் பயன்படுத்த வேண்டும் என்பதும், Police Department, Police Force ஆகிய சொற்களைப் பயன் படுத்தவேண்டியபோது மட்டுமே முறையே காவல் துறை, காவல் படை ஆகிய சொற்களைப் பயன்படுத்த வேண்டும் என்பதும் பயனீடு மூலம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. எனவே,

| | | |
|---|---|---|
| காவல் | : | Police |
| காவல்துறை | : | Police Department |
| காவல் படை | : | Police Force |
| காப்பு | : | Guard |
| நிலைக்காப்பு | : | Picket |
| சுற்றுக்காப்பு | : | Patrol |
| முறைக்காப்பு | : | Beat |
| வழிக்காப்பு | : | Escort |
| மெய்வழிக்காப்பு | : | Escort |
| மெய்க்காப்பாளர் | : | Body-Guard |
| காப்பேற்பாடு | : | Bandobust |

**அடிமுனையும் கூடுமுனையும்**

துப்பாக்கிக்கு ஒரு butt உள்ளது. சுடுதொலைவுக்கும் (Firing Range) ஒரு butt உள்ளது. கவின்சுருட்டுக்கும் (Cigarette butt) கூட ஒரு butt உள்ளது. மேம்போக்காகப் பார்க்கும்போது இம்மூன்று butt களுக்கும் எவ்விதத்

தொடர்பும் இல்லாதது போலத் தோன்றினாலும், ஆராயுங்கால் மூன்றுக்கும் தொடர்பு உள்ளமை புலப்படும். துப்பாக்கியின் butt அடிப்பகுதியில் நிலையாக உள்ளது. ஆனால் முகவாய்ப் பகுதியில் (Muzzle) ஈட்டியைப் பொருத்துவதன் மூலம் அல்லது அகற்றுவதன் மூலம் உயரம் கூட்டப்படலாம் அல்லது குறைக்கப் படலாம். சுடுதொலைவிலும் butt நிலையாக உள்ளது. ஆனால் Firing Point 300 கசம், 200 கசம், 100 கசம், 50 கசம் என்று குறைக்கவோ கூட்டவோ படலாம். கவின்சுருட்டிலும் உதட்டில் உள்ள butt நிலையாக உள்ளது. ஆனால் நுனி எரிந்து புகைவதன் மூலம் நீளம் குறைகிறது. எனவே butt என்பதற்கு அடிமுனை எனப் பெயரிடப்பட்டது. மேற்கண்ட மூன்றிலும் அடிமுனை என்ற சொல்லைப் butt க்கு பொருத்திப் பார்ப்பின் அதன் வியக்கத்தக்க பொருத்தம் உய்த்துணரப்படலாம். அடிமுனையுடன் எதுகை அமையும்படியாக Firing pointக்கு சுடுமுனை எனச் சொல்லாக்கம் செய்யப்பட்டது. இப்போது அடிமுனையும் சுடுமுனையும் மிக்க ஓசைநயத்துடனும் பொருள் நயத்துடனும் அமைந்துவிட்டன. இவண் முனை என்பது கூர்ப்பு அல்லது கோடி என்பதைக் குறிக்காமல் போர்முனை என்றும் சொல்லில் உள்ள 'முனை' என்பது பொருள்படும் 'இடம்' என்பதையே குறிக்கிறது என்பதனை அறிக.

**சுழிப்பும் தொகுப்பும்**

சுடுதொலைவில் படைக்கலங்களைக் கொண்டு குட்டைத் தொடங்கும் போது, முன்காட்சித் தகட்டைச் சரிப்படுத்துவதற்கான Zeroing இலிருந்து சூடு தொடங்குகிறது. தவற்றினை Zeroing சுழி (பூஜ்யம்) ஆக்குவதால் இது சுழிப்பு எனப்பட்டது. Grouping இல் சுடுவோர் தம் தோட்டாக்குண்டுகளை இலக்கில் ஏதாவது ஒரே இடத்தில் படுமாறு சுடுவதால் இது தொகுப்பு எனப்பட்டது. சுடுவோர், சுடு பற்றிய தம் திறமைகளை எல்லாம் சேர்த்துச் செயல்படுத்தி Application இல் சுடுவதால் இது செயல்பாடு எனச் சொல்லாக்கம் செய்யப் பட்டது. இதுபோன்று பிற வகைச் சூடுகளும் உகரத்தில் முடிந்து சொல்நயம் அமையப்பெறுமாறு சொல்லாக்கம் செய்யப்பட்டன. எனவே,

| | | |
|---|---|---|
| சுழிப்பு | : | Zeroing |
| தொகுப்பு | : | Grouping |
| செயல்பாடு | : | Application |
| நேரவரம்பு | : | Timed |
| திடீர்ச்சூடு | : | Snap shooting |
| குபீர்ச்சூடு | : | Burst fire |
| படுவிரைவுச்சூடு | : | Rapid fire |
| கேளிக்கைச்சூடு | : | Saloon shooting |
| தாக்கு | : | Attack |
| தற்காப்பு | : | Defence |

**நிரையும், வரிசையும் அமைதியும்**

Rank என்பது வரிசை எனப் பொருள்படுகிறது. ஆனால் Line என்ற சொல்லும் கட்டளைச் சொற்களில் அடிக்கடி வருகிறது. அத்துடன் Order (Open order) என்ற சொல்லும் வரிசை என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது. இம்மூன்று சொற்களும் ஆளினர்கள் பக்கவாட்டில் வரிசையாக அமைந்துள்ள

நிலையைக் குறிக்கின்றன. இந்தியில் Rank, Order, line என்னும் மூன்று சொற்களுக்கும் Line என்ற ஒரே சொல் பயன்படுத்தப்படுகிறது. இதுபோன்று வரிசை என்ற சொல்லே மூன்றுக்கும் பொருந்துமா என்பது முதற்கண் ஆராயப் பட்டுப் பயன்படுத்திப் பார்த்ததில் இடர்ப்பாடுகள் விளைந்தன. எனவே Line என்பதற்கு மட்டும் வரிசை எனக்கொள்ளப்பட்டது. Order என்பது ஒழுங்கமைதி (ஒழுங்காக அமைந்த ஒன்று) எனவும் பொருள்படும். இதன்கண் சுருக்கம் கருதி அமைதி என்பது மட்டும் Order க்கு நேர்ச் சொல்லாகப் பொருத்தப் பட்டது. Law and Order என்பதற்குச் சட்டமும் ஒழுங்கும் என்பது போன்றே சட்டமும் அமைதியும் என்ற சொற்றொடரும் வழக்கில் இருப்பதைக் காண்க. நிரை என்னும் தமிழ்ச் சொல் வரிசை எனவும் பொருள்தரும். எனவே, Rank என்பதற்கு நிரை என்ற சொல்லாக்கம் செய்யப்பட்டது. Other Ranks என்போர் போர் பிற நிரையினர் எனப்படுவர். எனவே,

| | | |
|---|---|---|
| நிரை | : | Rank |
| அமைதி | : | Order |
| வரிசை | : | Line |

**நிரையும் நிரலும்**

Rank க்கு நிரை என்ற நேர்ச்சொல் கண்டபிறகு File என்பதற்குச் சரியான சொல் காண்போம். File என்பது கட்டு, கோப்பு என இயல்பாகப் பொருள்படும் என்பதை அனைவரும் அறிவர். எனினும் கவாத்தில் இச்சொற்கள் பொருந்தா. ஆளினர்கள் ஒருவர்பின் ஒருவராக வரிசையாக அமைந்த நிலையே File எனப்படும். இச்சொல்லுக்குத் தொடக்கப் படிநிலையில் அடுக்கு என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. பிறகு நிரல் என்ற பொருத்தமான சொல் கண்டு பிடிக்கப்பட்டது. கூட்டங்களில் நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து வருவது Minute of proceedings என்ற சொற்றொடரால் குறிக்கப்படுகிறது. இதற்கு நிகரானது 'நிகழ்ச்சி நிரல்' என்ற தமிழ்ச் சொற்றொடராகும். நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக அடுத்தடுத்து வரிசையாக வருவது நிரல் எனப்படுகிறது. அதுபோல ஆளினர்களும் ஒருவர்பின் ஒருவராக இருப்பதை நிரல் எனலாம் அன்றோ? ஆளினர் பக்கவாட்டில் வரிசையாக இருப்பது முன்னரே நிரை எனப்பட்டது. நிரையும் நிரலும் மோனையுடன் அமைந்திருப்பது சிறப்பானதாகும். எனவே,

| | | |
|---|---|---|
| நிரை | : | Rank |
| நிரல் | : | File |

**கையும் துதி்கையும்**

Arm, Hand ஆகிய இரு ஆங்கிலச் சொற்களையும் இயல்பாகக் கை என்றே தமிழில் சொல்கிறோம். எனினும் கவாத்து இயக்கங்களின்போது கையின் பல பகுதிகளுக்கும் உரிய வேலைகளைக் குறிப்பிட்டுக் கூறும் பொருட்டு இவற் றுக்குத் தனித்தனிப் பெயர்கள் இருத்தல் தேவையாகிறது. எனவே Arm என்ப தற்குக் கை என்றும், Hand என்பதற்கு துதிக்கை எனவும் கொள்ளப்பட்டது. அத்துடன் Palm, Wrist போன்ற சொற்களையும் சேர்த்துப் பின்வருமாறு வழக்கி லுள்ள சொற்கள் முறைப்படுத்தப்பட்டன.

| | | |
|---|---|---|
| கை | : | Arm |
| மேல் கை | : | Upper arm |
| முன்னங்கை | : | Fore arm |
| துதிக்கை | : | Hand |
| உள்ளங்கை | : | Palm |
| புறங்கை | : | Back of the hand |
| முழங்கை | : | Elbow |
| அஃகுள் | : | Arm-pit |
| மணிக்கட்டு | : | Wrist |
| துதிக்கையின் அடிப்பகுதி | : | Heel of the hand |
| கையின் முட்டி | : | Fist |
| முளி | : | Knuckle |

**நிறும அமைப்பாக்கங்கள்**

நிறுமக் கவாத்தில் உள்ள பின்வரும் அமைப்பாக்கங்களுக்குப் பின்வரு மாறு தமிழாக்கம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| படையணியில் நிறுமம் | : | Company in column |
| குவிப் படையணியில் நிறுமம் | : | Company in close column |
| வரிசையில் நிறுமம் | : | Company in line |
| மும்மூவர்ப் படையணியில் நிறுமம் | : | Company in column of threes |
| மும்மூவர் முப்பிரிவு வரிசையில் நிறுமம் | : | Company in line of Platoons in threes |
| தடப் படையணியில் நிறுமம் | : | Company in column of route |

**வேகம், ஊக்கம், நெறியாக்கம்**

ஓர் ஈட்டிப் போரிடுவோருக்கு வேண்டிய அடிப்படைப் பண்புகள் Speed, Spirit, Direction என ஈட்டிப் பயிற்சியின் தொடக்கப் படிநிலைகளில் பயிற்றப் படுவதை அனைவரும் அறிவர். Direction என்பதற்கு முதலில் திசை என வைக்கப்பட்டது. எனினும், ஈட்டியை நெறிப்படுத்தும் தன்மையை இது குறிப் பிடுவதால் மற்ற வேகம், ஊக்கம் என்ற சொற்களுடன் ஓசைநயம் அமைய திசை என்பது நெறியாக்கம் என மாற்றப்பட்டது. Director என்ற சொல் தற்போது இயக்குநர் எனப்படினும், முன்பு இச்சொல் நெறியாளர் எனப்பட்டதையும் அறிக. எனவே,

| | | |
|---|---|---|
| வேகம் | : | Speed |
| ஊக்கம் | : | Spirit |
| நெறியாக்கம் | : | Direction |

**முகமும் அகமும், இடையும் கடையும்**

சுடுதொலைவுச் சூட்டுப் பழகலில் நாலடிக்கு நாலடி இலக்கில் Bull, Inner, Magpie, Outer என நான்கு பகுதிகள் உள்ளன. இவற்றில் Bull என்பது Bull's eye அதாவது எருதுக் கண் என விரியும். எனவே Bull ஐ விழி என்றோ

எருதுவிழி என்றோ கொள்ளலாம். Magpie என்பது ஒருவகைப் பறவையின் பெயர் ஆகும். Magpie க்கு உள்ளே இருப்பது Inner வெளியே இருப்பது Outer முதற்கண் Inner என்பது அகம் எனத் தமிழாக்கம் செய்யப்பட்டது. அடுத்துவெளியே கடைசியில் இருக்கும் Outer 'புறம்' எனவும் பிறகு 'கடை' எனவும் ஆக்கப்பட்டது. அகத்துக்கும் கடைக்கும் இடையில் உள்ள Magpie 'இடை' எனப்பட்டது. இறுதியாக அகத்துடன் ஓசைநயம் கருதியும் பொருள்நயம் நோக்கியும் விழி (Bull) என்பது (விழியை உடைய ) 'முகம்' என மாற்றம் செய்யப்பட்டது. 'முகத்தில் குத்து' என்று முகத்தை எளிதில் புண்படத்தக்க ஓரிடமாகக் குறிப்பிடுவது வழக்கில் உள்ளது அல்லவா? எனவே இலக்குப் பகுதிகளைக் குறிக்கும் பின்வரும் சொற்கள் ஆங்கிலச் சொற்களைவிட மிக நன்றாகப் பொருந்தி விட்டன. எனவே,

| | | |
|---|---|---|
| முகம் | : | Bull |
| அகம் | : | Inner |
| இடை | : | Magpie |
| கடை | : | Outer |

### அகமும் புறமும்

Fall-in, Fall-out என்ற சொற்கள் இந்தியில் லைன் பன், லைன் தோட் என்று வழங்குகின்றன. தேவையற்ற லைன் என்ற சொல் இக்கட்டளைச் சொல் லையே ஊறுபடுத்துவிடுகிறது. ஆனால் தமிழில் அகம், புறம் ஆகிய இரு சொற் களைப் பயன்படுத்தி அகம்சேர், புறம்-போ என்ற இரு சொற்கள் உருவாக்கப் பட்டுள்ளன. இச்சொற்கள் முன்னரே அமைந்த ஓர் அமைப்பில் செயல்படும் ஒருவருக்கு மட்டுமே ஏற்றதாகவும் அமைந்துள்ளன; அதே நேரத்தில் ஒரு குழுவினர் முழுமையாகச் செயல்படுவதைக் குறிப்பனவாகவும் அமைந்துள்ளன. காப்பு Turn-out ஆவதற்கும், Turn-in ஆவதற்கும் அகத்தையும் புறத்தையும் பயன்படுத்திப் புறம்-தோன்று, அகம்-தோன்று என்ற சொற்கள் உருவமைக்கப் பட்டன. அதே போன்று In-door, Out-door என்பனவற்றுக்கு அக-வாயில், புற-வாயில் (விளையாட்டுகள் முதலியன) எனச் சொற்கள் அமைக்கப்பட்டன. எனவே,

| | | |
|---|---|---|
| அகம்-சேர் | : | Fall-in |
| புறம்-போ | : | Fall-out |
| அகம்-தோன்று | : | Turn-in |
| புறம்-தோன்று | : | Turn-out |
| அக-வாயில் | : | In-door |
| புற-வாயில் | : | Out-door |

### கலைந்து–போதலும், புறம்-போதலும் நீங்கிப் போதலும்

ஒரு வகுப்பு அல்லது பயிற்சி முடிவுற்ற பிறகு ஆளினர் செல்வதற்கு Dismiss எனக் கட்டளையிடப்படுகிறது. பயிற்சியில் இடைவேளையின்போதோ வேறு காரணங்களுக்காகவோ ஆளினர் Fall-out செய்யப்படுகின்றனர். சில வேளைகளில் பயிற்சி முடிவுற்ற பிறகு Break-off எனவும் கட்டளை இடப்படுகிறது. இம்மூன்று கட்டளைகளையும் குறிக்கப் பின்வரும் தமிழ்ச் சொற்கள் உருவாக்கப் பட்டன. இவற்றின் ஒலிநயம் நோக்கற்பாலது.

| | | |
|---|---|---|
| கலைந்(து)–போ | : | Dismiss |
| புறம்–போ | : | Fall-out |
| நீங்கிப்–போ | : | Break-off |

குறிப்பு: 'கலைந்து'வில் உள்ள 'து' ஒலிநயம் கருதியும் சுருக்கம் கருதியும் முழுமையாக உச்சரிக்கப்படாமல் குற்றியலுகரத்திற்கும் குறைவான மாத்திரையுடன் ஒலிக்கப்படவேண்டும் என்ற காரணத்தால் அடைப்பில் இடப்பட்டது. கட்டளைச் சொற்களில் உகரத்தில் முடியும் எழுத்துக்களில் இதுபோன்ற அடைப்புகள் பெரும்பாலும் வரும். இதனால் குறைவு ஏதும் இல்லை. நலமே உண்டு.

**நிமிர்ந்து-நிற்றலும், தளர்ந்து-நிற்றலும், ஒய்ந்து–நிற்றலும்**

காவல் கவாத்தில் Attention, Stand-at-ease, Stand-easy என்பன முதனிலைக் கட்டளைச் சொற்களாகும். இவற்றுக்கு நிகரான ஸாவதான், விஸ்ராம், ஆராம் ஸே என்ற இந்தி சொற்களைவிடத் தமிழில் சொற்கள் சிறப்பாக அமைந்துள்ளன. ஆங்கிலத்தில் Stand என்ற சொல் Attention இல் இல்லை. மற்ற இரண்டில் மட்டுமே உள்ளது. ஆனால் தமிழில் மூன்று கட்டளைச் சொற்களிலும் 'நில்' அமைந்துள்ளது. இத்தொகுதி ஆங்கில, இந்தித் தொகுதிகளை விட ஒலிநயத்துடன் அமைந்துள்ளதைப் பின்வருமாறு காண்க.

| | | |
|---|---|---|
| நிமிர்ந்(து)–நில் | : | Attention |
| தளர்ந்(து)–நில் | : | Stand-at-ease |
| ஒய்ந்(து)–நில் | : | Stand-easy |

**செல்லல், திரும்பல், அமைதல், சுழலல், சாய்தல்**

Marching என்பதற்குச் செல்லல் எனத் தமிழில் சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது. இந்தியில் உள்ள 'சல்' என்பது போன்று 'செல்' எனத் தமிழில் அமைந்திருக்கும் நயத்தினைக் காண்க. Turning, Forming, Wheeling, Inclining ஆகியவற்றுக்கு நேர்ச் சொற்களாகத் திரும்பல், அமைதல், சுழலல், சாய்தல் ஆகியன முறையே அமைக்கப்பட்டுள்ளன. இவண் உற்றுநோக்கக் கூடிய ஒரு நுணுக்கம் உள்ளது. மேற்கண்ட இயக்கங்களைச் செயப்படுபொருள் குன்றிய வினையிலும் குன்றா வினையிலும் குறிக்க ஆங்கிலத்தில் ஒரே சொல் இருக்கும் நிலையில் தமிழில் இரு சொற்கள் உள்ளன என்பதே அந்நுணுக்கம் ஆகும். அதாவது மேற்கண்ட நான்கு ஆங்கிலச் சொற்களும் செலுத்தல், திருப்பல் அமைத்தல், சுழற்றல், சாய்த்தல் எனவும் அமையும். இவ்வமைப்பு இதுபோன்ற வேறு பல சொற்களுக்கும் (சீரமைதல்–சீரமைத்தல்) பொருந்தும். எனவே,

| | | |
|---|---|---|
| செல் | : | March |
| திரும்(பு) | : | Turn |
| அமை | : | Form |
| சுழல் | : | Wheel |
| சாய் | : | Incline |

**சீரமைத்தலும் நேரமைத்தலும்**

வரிசையில் ஆளினர் பக்கவாட்டில் ஒழுங்குற அமைதல் Dressing எனப்படுகிறது. அதேபோன்று, ஒருவர் பின் ஒருவராக ஒழுங்குற அமைதல் Covering

(ஒருவரையொருவர் மறைத்தல்) எனப்படுகிறது. Dressing க்கும் Covering க்கும் ஆங்கிலத்தில் ஒலிநயம் அமைந்திரா நிலையில் தமிழில் இவ்விரு சொற்களும் பின்வருமாறு எதுகை நயத்துடன் அமைக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| சீர்-அமை | : | Dress |
| நேர்-அமை | : | Cover-off |

**பெருமமும் குறுமமும்**

Maximum, Minimum ஆகிய ஆங்கிலச் சொற்களைக் குறிக்க ஆட்சிச் சொல்லகராதியில் கண்டுள்ள பின்வரும் சொற்களே எடுத்தாளப்பட்டுள்ளன. சுடுதொலைவுச் சூட்டுப் பழகலில், Highest possible Score என்பதற்கு ''இயலும் பெருமக்கெலிப்பெண் (இ. பெ. கெ.)'' எனத் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| பெருமம் | : | Maximum |
| குறுமம் | : | Minimum |

**செங்குத்தும் நிமிர் நிலையும்**

கிடைநிலைக்குச் செங்குத்தாக ஒரு பொருள் அல்லது கோடு அமைந்திருந்தால் நிமிர்-நிலை என்ற சொல் கையாளப்பட்டுள்ளது. Up-right என்பதற்கு நேர் நிமிர்வு என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே

| | | |
|---|---|---|
| கிடைநிலை | : | Horizontal |
| செங்குத்து | : | Perpendicular |
| நிமிர்நிலை | : | Vertical |
| நேர்நிமிர்வு | : | Upright |

**சூட்டு நிலைகள்**

வெவ்வேறான சூட்டு நிலைகளுக்கு, ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்களும் உருவாக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| படுநிலை | : | Lying position |
| மண்டி நிலை | : | Kneeling position |
| நிற்றல் நிலை | : | Standing position |
| போக்குனிவு | : | Battle crouch |
| அணுகுநிலை | : | Walk-up position |

**சுடுபொருளும் தோட்டாவும்**

எல்லா வகையான தோட்டாக்களும் குண்டுகளும் Ammunition என வழங்கப்படுகின்றன. இதற்குச் சுடுபொருள் எனத் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. Fuel என்பது எரிபொருள் எனத் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளமை இவண் கருதற்பாலது. Cartridge, Round, blank, empties என்பனவற்றுக்கும் பின்வருமாறு சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| சுடுபொருள் | : | Ammunition |
| தோட்டா | : | Cartridge |
| குண்டு | : | Round |

| | | |
|---|---|---|
| வெற்றுத்தோட்டா | : | Blank Cartridge |
| காலிக்கூடு | : | Empties |
| உயிர்த்தோட்டா | : | Live rounds |

**தாண்டிக்குதித்தல், துள்ளிக்குதித்தல், தாவிக்குதித்தல்**

Jump என்ற ஆங்கிலச் சொல்லுக்கு தாண்டல், குதித்தல், எம்புதல், பாய்தல், எடுத்தல் முதலிய பல பொருள்கள் உள்ளன. அத்துடன் Skipping, Vaulting என்ற சொற்களும் ஆங்கிலத்தில் உள்ளன. இம்மூன்று செயல்களிலும் குதித்தல் அடங்கியுள்ளது. எனவே குதித்தலுக்கு முன்னிகழும் செயலைச் சேர்த்துப் பின்வருமாறு இச்சொற்கள் அமைக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| தாண்டிக்குதித்தல் | : | Jumping |
| துள்ளிக்குதித்தல் | : | Skipping |
| தாவிக்குதித்தல் | : | Vaulting |

**கலமா? படைக்கலமா?**

Arm என்ற சொல் கையைக் குறிக்கிறது. முற்காலத்தில் மனிதனுக்குக் கையே படைக்கலமாக (ஆயுதமாக)ப் பயன்படுத்தப்பட்டது. பிறகு கல், ஈட்டி, வாள் முதலியன arm (ஆயுதம்) ஆகப் பயன்படுத்தப்பட்டன. இறுதியில் Fire arms என்னும் சுடுபடைக்கலங்கள் பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு கையைக் குறித்த arm ஆயுதங்களுக்கும் வழங்கத்தொடங்கிற்று. படைக் கலக் கவாத்தில் சுருக்கம் கருதி Weapon என்ற சொல் பயன்படுத்தப்படாமல் arm என்ற சொல்லே பயன்படுத்தப்படுகிறது. தமிழில் ஆயுதம், படைக்கலம் என்ற சொற்கள் நீண்டமைந்துள்ளன. ஆகையால் கலம் என்ற சொல்லே படைக்கலக் கவாத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது. கலம் என்ற சொல்லுக்கு ஆயுதம் என்ற பொருளும் உண்டு.

**எச்சம்**

Remainder என்ற சொல் மீதமுள்ளது என்ற பொருளில் நடைமுறையில் உள்ளது. மீதம், மிச்சம், எச்சம், சொச்சம் என்ற பல சொற்கள் ஆராயப்பட்டு, Remainder க்கு நிகராக எச்சம் என்ற சொல் தேர்ந்தெடுக்கப்பட்டது. எஞ்சியிருப்பது எச்சம்; மிஞ்சியிருப்பது மிச்சம்; சொச்சம் தெலுங்கு. 'எச்சத் தால் காணப்படும்', 'எச்சம் அவாவுண்டேல் உண்டாம் சிறிது' என்னும் திருக் குறள் வரிகளையும் காண்க. மற்ற சொற்களைப் போல எச்சமும் அஃறிணை யிலேயே பயன்படுத்தப்படுகிறது.

**குண்டகம்**

Magazine என்பது சுடுபொருள் தேக்கிவைக்கப்பட்டுள்ள இடத்தைக் குறிப்பதாகும். இது படைக்கலத்தினுள்ளும் உள்ளது; தரையினுள்ளும் ஒரு கட்டடத்தினுள் பாதுகாப்பான இடத்தினுள்ளும் உள்ளது. அனைத்துக்கும் பொருந்துவதாகக் 'குண்டகம்' உருவாக்கப்பட்டது. (வார ஏடு முதலியவற்றில் அறிவுக்கான தகவல்கள் சேர்த்து ஒரு பண்டகம் போன்று அவ்வேடுகள் வைக்கப்பட்டுள்ளமையால் அவையும் Magazine எனப்பட்டன.)

**கட்டளைச் சொற்கள்**

ஆங்கிலக் கட்டளைச் சொற்களில் முன்னுள்ள எச்சரிக்கைச் சொல்லும் Cautionary word பின்னுள்ள செயல்படு சொல்லும் Executive word முறையே நீண்டும் குறுகியும் ஒலிப்பது போன்று தமிழிலும் கட்டளைச் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, 'விரைந்(து)-செல்' என்பதில் 'விரைந்' தை நீட்டியும் 'செல்' லைக் குறுக்கியும் கூறவேண்டும். மாறாக Right-wheel என்பதில் wheel நீட்டி ஒலிப்பது போன்று தமிழிலும் வலம்-சுழல் என்பதில் 'சுழ' லை (செயல்படுசொல்) நீட்டிக்கூறவேண்டும். தமிழில் கட்டளைச் சொற்கள் அமைக்கும்போது ஆங்கிலத்தில் உள்ளதைவிடத் தமிழில் சொற்கள் நீண்டுதான் அமைந்திருக்கமுடியும் என்று பலரும் எண்ணுவர். இது முழுக்க முழுக்கத் தவறானதொரு கருத்தாகும். தமிழில் அமைக்கப்பட்ட எந்தவொரு கட்டளைச் சொல்லிலும் அடங்கியுள்ள தனித்தனிச் சொற்களையும் எழுத்துக் களையும் கூட்டிப்பார்த்தால் தமிழில்தான் முறையே குறைவான சொற்களும் குறைவான எழுத்துக்களும் அமைந்துள்ளன என்பது புலனாகும். எழுத்துக்களும் சொற்களும் தாள்களில் அடைத்துக்கொள்ளும் இடம் கூட ஆங்கிலத்தைவிட தமிழில் குறைவே என்பதைக் கண்கூடாக அறியலாகும். கவாத்தில் தமிழ்க் கட்டளைச் சொற்களைப் பயன்படுத்திப் பார்க்கும் போது ஆங்கிலத்தில் உள்ள அதே சுருக்கம், தெளிவு, முறுக்கு, மிடுக்கு, துடிப்பு, அழுத்தம் ஆகியன தமிழிலும் உள்ளன என்பதும், சில இனங்களில் இப்பண்புக்கூறுகள் தமிழில் மேம்பட்டு உள்ளன என்பதும் அறியலாகும்.

**பல்வகைச் சொற்கள்**

கருத்தாழத்தையும் சொல்லாக்க அமைதியையும் உய்த்துணரும் பொருட்டு (முன்பக்கங்களில் குறிப்பிடப்படாத) சில சொற்கள் பின்வருமாறு தரப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| இயக்கம் | : | Movement |
| அசைவு | : | Motion |
| அடி | : | Step, Stroke |
| காலடி | : | Pace |
| பாதம் | : | Foot |
| அடிமுனைத் தகடு | : | Butt plate |
| அடிமுனை ஒடுக்கம் | : | Small of the butt |
| அடிமுனைக்கூடு | : | Butt trap |
| அடிவயிறுசார்தல் | : | Abdominal |
| புடைசார்தல் | : | Lateral |
| முதுகுசார்தல் | : | Dorsal |
| அடைப்புகள் | : | Stoppages |
| தடங்கல்கள் | : | Obstacles |
| அகமீட்சி | : | Retreat |
| பள்ளியெழுச்சி | : | Revelle |
| ஆயத்தம் | : | Preparation |
| தயார் | : | Ready |

| | | |
|---|---|---|
| ஆயத்தமின்றியாக்கப்பட்ட | : | Improvised |
| அமைத்தல் | : | Forming |
| அமைப்பு | : | Organisation |
| அமைப்பாக்கம் | : | Formation |
| ஒழுங்கமைப்பு | : | Arrangement |
| ஒழுங்கமைதி | : | Order |
| ஒழுங்காளர் | : | Orderly |
| ஒழுங்காளர் அதிகாரி | : | Orderly Officer |
| ஆராய்வு | : | Search |
| ஆய்வு | : | Inspection |
| தேர்வு | : | Examination |
| ஆழ்ந்தாராய்வு | : | Consideration |
| தேர்வாய்வு | : | Test |
| இடமாக | : | By the left |
| இடம்மேல் | : | On the left |
| இடம்நோக்கி | : | Facing left |
| இடமிருந்து | : | From the left |
| இடப்புறம் (நான்காம் வேற்றுமைத்தொகை) | : | To the left |
| இடம்-வலம்-இடம் | : | Left-right-left |
| இடைவெளி | : | Interval |
| தொலைவு | : | Distance |
| இயல்புடை | : | Mufti |
| சீருடை | : | Uniform |
| இணைப்பாக்கு | : | Compose |
| ஒருங்கிணை | : | Combine |
| ஒத்திசை | : | Correspond |
| ஒருங்கிசைவி | : | Co-ordinate |
| இரண்டு குத்து | : | Two points |
| இரண்டாம் | : | Number two point |
| இலக்கிடம் | : | Goal |
| இலக்கு | : | Target |
| குறியிலக்கு | : | Objective |
| விரைந்(து)-செல் | : | Quick-march |
| ஓடிச்-செல் | : | Double-march |
| மெதுவே-செல் | : | Slow-march |
| வலிந்தெடுப்பான் | : | Extractor |
| வெளித்தள்ளுவான் | : | Ejector |
| காப்புப் பணியேற்றம் | : | Guard Mounting |
| காப்புப் பணியிறக்கம் | : | Guard-Dismounting |
| படுபோலி | : | Lying dummy |
| நிலைபோலி | : | Standing dummy |

| | | |
|---|---|---|
| களவினை | : | Field craft |
| போர்த்திறம் | : | Tactics |

விரிவஞ்சி இப்பட்டியல் நீளாமல் விடப்படுகிறது. அடுத்து சில ஆங்கிலக்கட்டளைச் சொற்களையும் அவற்றுக்கு நேரான தமிழ்க் கட்டளைச் சொற்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் நலம் பயப்பதாம்.

**திரள் கவாத்து**

| | | |
|---|---|---|
| மூன்று நிரை அமை-இயங்(கு) | : | Form up in three ranks move |
| திரள் முன்னேறும் வலமாக விரைந்(து)-செல் | : | The squad will advance by, the right, quick-march |
| விரி அமைதி-செல் | : | Open order-march |
| குவி அமைதி-செல் | : | Close-order-march |
| இடமாக, இடம் மேல், அமை-திரள் | : | By the left, on the left, form squad |
| வலமாக, வலத்திசை மாற்(று), வலம்-அமை | : | By the right, change direction right, right-form |
| நிறுத்தத்தில், வலம் மேல், அமை-திரள் | : | At the halt, on the right, form-squad |
| இடமிருந்து அமை ஒற்றை நிரல், எச்சம், நேரம்-கடத்(து) | : | Form single file from the left, remainder, mark-time |
| இடமிருந்து ஒற்றை நிரலாய் முன்னே(று), விரைந்(து)-செல் | : | Advance in single file from the left, quick-march |
| திரள் வலம் மேல் மும்மூவர் மீண்டமைக்கும், முன்னிரை, நேரம்-கடத்(து) | : | The squad will re-form in threes on the right, front rank, mark-time |
| வலம் மேல் மும்மூவர் மீண்டமை எச்சம், முன்னாக, விரைந்து()-செல் | : | Re-form threes on the right, remainder, by the front, quick march. |
| வலமிருந்து அமை ஒற்றை நிரல், எச்சம், நேரம்-கடத்(து) | : | Form single file from the right. remainder, mark-time |
| திரள் இடம் மேல் மூன்று நிரை மீண்டமைக்கும், நிறுத்தத்தில் வலக்கோடி நிரல்- நிறுத்(து) | : | The squad will re-form three ranks on the left, at the halt, right hand file-halt |
| வலப்புறம் மும்மூவராய் இயங்(கு) வலம்-திரும்(பு) | : | Move to the right in threes, right-turn |
| மூன்று காலடி வலம் குவி-செல் | : | Three paces right close-march |
| இரண்டு காலடி முன்னே-செல் | : | Two paces forward-march |
| இரண்டு காலடி பின்னே-செல் | : | Two paces step back-march |

**வாள் கவாத்து**

| | | |
|---|---|---|
| எடு-வாள் | : | Draw sword |
| இடு-வாள் | : | Return-sword |
| சரி-வாள் | : | Slope-sword |

**படைக்கலக் கவாத்து**

| | | |
|---|---|---|
| சரி-கலம் | : | Slope-arm |
| அமைதி-கலம் | : | Order-arm |
| வணங்(கு)-கலம் | : | Present-arm |

இவண் வணங்கு-கலம் என்பதில் ஆங்கிலச்சொல் நேரடியாக மொழி பெயர்க்கப் படாமல், செய்யும் செயலுக்கேற்ப சொல் உருவாக்கப்பட்டுள்ளது. நீட்(டு)-கலம் என்பது கூட பொருத்தமாக அமையலாம். பகைவர் அல்லாதவரிடம் தம் படைக்கலத்தைக் கொடுத்தல் வணக்கம் தெரிவிக்கும் முறைகளில் ஒன்றாகக் கருதப்பட்டு வந்துள்ளது. முன்னரே கூறப்பட்டவாறு, இந்தியிலும் Present arm என்பதற்கு ஸலாமி-ஸஸ்தர் என்றே வழங்குகிறது. எனவே வணங்கு-கலம் நிகராக அமைக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| திரள் ஈட்டி பொருத்தும், திரள்-பொருத்(து) | : | The squad will fix bayonet, squad-fix |
| திரள் ஈட்டி கழற்றும், திரள்-கழற்(று) | : | The squad will unfix bayonet, squad un-fix |
| திரள்-ஈட்டி | : | Squad-bayonet |
| ஆய்வுக்காக, ஏந்(து)-கலம் | : | For inspection Port-arm |
| தேர்-கலம் | : | Examine-arm |
| தளர்த்(து)-வில் | : | Ease-spring |

மேலும் தரை, எடு, தொங்கு, பிணை, மாற்று, மாட்டு என்ற சொற்களை முறையே Ground, take-up, trail, secure, change, sling என்பனவற்றுக்கு நிகராகக் கொண்டு, கலம் சேர்த்துப் பிற கட்டளைச் சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**முப்பிரிவுக் கவாத்து**

முப்பிரிவுக் கவாத்து திரள் கவாத்து போன்றதே. ஒற்றை நிரல் அமைக்கவும் பிறகு மீட்டமைக்கவும் மட்டுமே தனித்தனிக் கட்டளைச் சொற்கள் அவற்றுள் உள்ளன. சில பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| வலமிருந்து ஒற்றை நிரலாய் முன்னே(று), எச்சம், வலம்திரும்(பு), விரைந்து-செல் | : | Advance in single file from the right, remainder, right-turn quick-march. |
| வலமிருந்து அமை ஒற்றை நிரல், எச்சம், வலம்-திரும் (பு) | : | Form single file from the right, remainder, right-turn |

| | | |
|---|---|---|
| இடம் மேல் அமை வரிசை, எச்சம், இடம்-சாய். | : | On the left form line, remainder, left-incline |
| முப்பிரிவு வரிசை அமைக்கும், இடம் மேல், அமை-வரிசை | : | Platoon will form line, on the left, form-line |

**நிறுமக் கவாத்து**

நிறுமக் கவாத்தில் உள்ள நீண்ட கட்டளைச் சொற்கள் உட்பட எல்லாக் கட்டளைச் சொற்களும் சுவையுறத் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. அவற்றை விரிக்கிற் பெருகும். சில மட்டுமே எடுத்துக்காட்டுகளாகத் தரப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| வலமிருந்து மும்மூவர்ப் படையணியாய் முன்னே(று) நிறுமம், வலம்-திரும்(பு) முப்பிரி(வு), இடம்-சுழல், விரைந்(து)-செல் | : | Advance in column of threes from the right, company, right-turn, platoons, left-wheel, quick-march |
| தொடர்வாக, வலப்புறம் மும்மூவர்ப் படையணியாய் இயங்(கு) | : | In succession, move to the right in column of threes |
| நிறுத்தத்தில் இடமாக, வரிசையாய், முப்பிரிவு இடம்-அமை, விரைந்(து)-செல் | : | At the halt, by the left into line, platoons, left form, quick-march. |
| முப்பிரிவின் வலமிருந்து மும்மூவராய் முன்னே(று), நிறுமம் வலம்-திரும்(பு) முப்பிரி(வு) இடம்-சுழல், விரைந்(து)-செல் | : | Advance in threes from the right of platoons, company, right-turn, platoons, left wheel, quick-march |
| நிறுமம் முப்பிரிவுப் படையணி அமைக்கும், இடம் மேல், அமை-முப்பிரி(வு) | : | The company will form column of platoons, on the left, form-platoons. |
| இடம் மேல் ஏழு காலடி இடைவெளியில் அமை மும்மூவர் முப்பிரிவு வரிசை, எச்சம், ஓடிச்-செல் | : | On the left form line of platoons in threes at seven paces interval, remainder, double-march |
| முதல் முப்பிரிவு முன்னுக்கு, எச்சம், வலம்-சுழல் | : | Number one platoon to the front, remainder, right-wheel. |

**மரபியல் கவாத்து**

மரபியல் கவாத்தில் பயன்படும் சிறப்புக் கட்டளைச் சொற்கள் பின்வருமாறு அமைக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| அணிவகுப்(பு), தலைமை வணக்கம் (அல்லது நாட்டு வணக்கம்) வணங்(கு)-கலம் | : | Parade, general salute (or national salute) present arm |

| | | |
|---|---|---|
| ஐயா, 5 அதிகாரிகளும் 69 பிற நிரையினரும், ஆய்வுக்குத் தயாராக உள்ளனர். | : | 5 Officers and 69 other ranks present and ready for inspection, Sir |
| அணிவகுப்(பு) படையணியாய்க் கடந்து செல்லும் | : | Parade will march past in column |
| தொடர்வாக, வலமிருந்து மும்மூவராய் முன்னேறு | : | In succession, advance in threes from the right |
| இடமாக, அணிவகுப்பு இடத் திசை மாற்றும், இடம் சுழல், | : | By the left, parade will change direction left, left-wheel |
| அணிவகுப்பு(பு) மறுபார்வை அமைதியாய் முன்னேறும், மையமாக, விரைந்(து)-செல் | : | Parade will advance in review order, by the centre, quick-march |

**பிற கட்டளைச் சொற்கள்**

இதுபோன்றே குறுந்தடிக் கவாத்து, ஈட்டிப் பயிற்சி, உடற்பயிற்சி, சுடு தொலைவுக் கவாத்து, வணக்கமுறை வேட்டு முழக்கச் சூடு, காப்புப் பணி யேற்றம் முதலியவற்றுக்கும் சிறந்த முறையில் கட்டளைச் சொற்கள் உருவாக்கப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக:

| | | |
|---|---|---|
| காப்(பு)-புறந்தோன்(று), | : | Guard-turn-out, |
| பாரா நிலைத்து நில், எச்சம் காப்பறைக்(கு), கலைந்(து) போ | : | Sentry stand fast, remainder to the guardroom, dismiss. |

**முடிவுரை**

இந்தியத் துணைக்கண்டத்தின் வடக்கு, வடமேற்கு, வடகிழக்கு மாநிலங் களிலும் இராணுவத்திலும் முறையே காவல் பயிற்சியிலும் இராணுவப் பயிற்சியி லும் ஆங்கிலம் அகற்றப்பட்டு இந்திக் கட்டளைச் சொற்களே பயன்படுத்தப் படுகின்றன. தமிழ்நாட்டு அரசின் ஆட்சிமொழிக் கொள்கைக்கு இசைய தமிழகக் காவல் பயிற்சியில் தமிழ்க் கட்டளைச் சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

# மலேசியாவில் மலாக்காச் செட்டிகள்

இர. ந. வீரப்பன்

மலேசியத் தலைநகருக்குத் தெற்கே — மேற்குக்கடற்கரை நகரமான ''மலாக்கா'' ஏறத்தாழ ஐந்துநூற்றுண்டாக அனைத்துலக கடல் வணிகச் சந்தையாக இருந்திருக்கிறது.

ஸ்ரீ விஜயப்பேரரசு என்ற சிங்கச்சின்னமான கலிங்கத்துப் புத்த சமயப் படைஎடுப்புக்கும், சோழப் பேரரசின் புலிக்கொடியின் கீழ் சைவ இந்துத் தமிழ்க் கலையின் வீரப்போருக்கும் பிறகு, இந்தத் துணிவு, மலாக்கா தோன்றியதற்குப் பின்னரே வணிகர்களுக்கு ஏற்பட்டது.

வாணிபத்திற்காகவே வந்த தமிழர்கள் இங்கு ஈயமும் (வெள்ளியும்), தங்கமும் ஆகிய நறுமணப் பொருட்களுடன், கிழக்கில் அதிகமாகக் கிடைக்கும் கலைப் பொருட்களும் பண்டமாற்றுகப் பெறுவதற்காகவே வந்தனர். இவற்றை மேற்கிலிருந்து இந்தியாவுக்கும் குறிப்பாகத் தமிழகத்திற்கும் வந்து, வணிகம் செய்யும் ரோமானியர்களும், பிறரும் விரும்பி வாங்கினர். இதனுலும் இந்தியர்கள் கீழைநாடுகளிலிருந்து இவற்றை அங்கு கொண்டுவந்தனர்.

இதன் மூலம் இந்தியப் பழக்க வழக்கம், சமயச் சகிப்புத்தன்மை, அரசியலமைப்பு முறை, உணவுத்தன்மை ஆகிய பண்புகளும் கீழைநாடுகளில் குறிப்பாக மலாயாவில் பரவின. மற்றும் சட்டம், சோதிடம், மருத்துவம், வானியல், இலக்கியம், இசை, சிற்பம் ஆகிய நெசவு, வெள்ளி, பொன் வேலைப்பாடுகளில் எல்லாம் இந்திய பண்பாட்டின் சாயல்களும் ஊடுருவி விட்டன. தமிழ் மொழியின் சொற்களும், தமிழ் மூலம் வடமொழிச் சொற்களும் (சமஸ்கிருதம்) புகுந்து விட்டன. இதனை, மலாய், தகலக் மொழிகளில் உள்ள பெரும்பாலான சொற்களால் அறியமுடியும்.

பழங்காலத்திலிருந்தே தென்கிழக்காசியப் பகுதிகள் பல்வேறு இனங்களின் — பலநாட்டுப் பண்பாடுகள் சந்திக்குமிடங்களாகவே இருந்திருக்கின்றன. கீழ்நாடுகளின் வேறுபட்ட பண்பாட்டையும், மலைநாடுகளின் மாறுபட்ட பண்பையும் இன்றும் மலேசியாவில் அரசியல் — பொருளாதார மனோபாவங்களால் உணர முடியும்.

முதலாவது இராஜேந்திர தேவன் என்ற சோழ மன்னன் கெடாவையும், சுமத்திராவின் ஒரு பகுதியையும் கி. பி. 992ல் கைப்பற்றினுன். இராசேந்திர சோழன், மலாயா (கெடாவே மய்யம்) உட்பட இந்தோநேசியப் பகுதிகளை ஆண்டிருக்கின்றுன். இவன் உட்பட இவனது சோழப்பேரரசு இப்பகுதியை 50 ஆண்டு ஆட்சி புரிந்திருக்கிறது. 'கடாரங் கொண்டான்' தமிழரசன் என சோழ

மன்னன் தமிழிலக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறுன். கடாரம் அல்லது காழகம் (கெடா — மலாயாவின் வடமேற்குப்பகுதி) என்பதும் இலக்கியத்தில் வரலாருகி யுள்ளது.

எழுநூறு ஆண்டு ஸ்ரீவிஜயப்பேரரசு தென்கிழக்காசியாவில் சோழர்படை யெடுப்புவரை அதாவது 9-ம் நூற்றுண்டுவரை கொடிகட்டி ஆட்சியும் மாட்சியும் பெற்றதுதான். சிங்கக்கொடி விழ்த்தப்பட்டு புலிக்கொடி பறக்கவிடப்பட்டது வரலாருக இருந்தாலும், இன்றும் மலேசியக் கூட்டரசு சின்னத்திலும், மாநில மலாய் அரசர்களின் சின்னத்திலும், மலேசிய காகித நோட்டுகளிலும் புலிச் சின்னமே (இலச்சினே) ஆட்சிசெய்து வருகிறது.

மலேசிய, மலேனேசிய, திராவிடமக்களுக்குமிடையே உருவ ஒற்றுமைகள் உள்ளன. மலாய் மொழியில் வழங்கும் தமிழ்ச்சொற்கள் ஏறத்தாழ ஆயிரம் இருக்கும். தமிழ், மலாயில் வழங்குவது போன்ற சொற்கள், வேறு எந்த மொழி களிலும் இத்துணே அதிகளவு இல்லே என்பது சிறப்பாகக் குறிக்கத்தக்கது.

எளிதில் மாறிய சொற்களும், எளிதில் மாருத சொற்களும், உருமாறியும், பொருள்மாறியும் வழங்கப்பட்டுவரும் ஏராளமான தமிழ்ச் சொற்கள் மலாயில் உண்டு. மலாயில் பிறமொழிச்சொற்கள் குறைவு.

சினக்கலேகளும், இந்தியக் கலாசாரமும் கலந்தும் தனித்தும் ஊடுருவிக் காண்கின்ற இயல்புகளே மலேசியமக்களிடமும், மலாய்க்காரர்களிடமும் அறியலாம்.

''மலாக்கா'' (Malacca) என்ற பெயர் எப்படி ஏற்பட்டது? மலாயில் இதன் பெயர் Melaka.

இந்தச் சொல்லுக்கு ஏதோ ஒரு மரம் எனச்சொல்லப்படுகிறது. 'மல' என்ருல் எந்தப்பொருளுமில்லே. ஏதோ ஒரு மரத்தினடியில் முதன் முதலில் இந்து அரசரான பரமேசுவரர் தங்கினுராம். அந்தமரம் 'பலாமரம்' அல்லது 'பலாக்காய்' என்ற சொல்லப்பட்டிருக்கும். அதுவே நாளடைவில் மலாக்கா ஆகிவிட்டது. கடற்கரையில் கூடாரமிட்டுத் தங்கியிருந்த ஒரு பலாமரம் 'மலாக்கா' ஆகிவிட்டது. வரலாருகவும் சமைந்துவிட்டது.

பரமேஸ்சுவரர் சுமத்திரா தீவின் பலம்பாங் என்ற இடத்திலிருந்து தனது படையுடன் சிங்கப்பூருக்கு வந்து அங்கிருந்து சில ஆண்டுக்குப்பின் புதிய இடமான மலாக்காவில் தனது அரசியலேத் தொடங்கியவர். இவர் இஸ்லாமிய இளவரசியை மணந்துகொண்டதால் இவரும் இஸ்லாமியராகி இஸ்கந்தர்ஷா எனப்பட்டார். பழைய இந்து அரசியல் அமைப்புப்படி அரசை அமைத்துக் கொண்டு (1394—1414) மலாக்காவை 20 ஆண்டு ஆட்சிசெய்திருக்கிருர்.

மலாக்கா அரசியலில் அக்காலத்தில் ஆதிக்கப் போட்டிகளும் பலபடுகொலே களும், மதமாறுதலும் சர்வசாதாரணமாக நடந்திருக்கின்றன.

''பதினேந்தாம் நூற்றுண்டின் இடைக்காலத்தே சுல்தான் முசாபஃர்ஷா (Sultan Muzhaffar Shah) என்னும் (1446)—1456) பட்டப்பெயருடன் கூடிய அவரு

டைய இளந்தம்பி (அவருடைய தாய் ஒரு தமிழ்ப் பெண்) பட்டத்துக்குக் கொண்டு வர முயற்சி செய்த மலாக்கா முஸ்லீம்களால் (தமிழர்கள் என்று சொல்லப் படுகிறது) கொலை செய்யப்பட்டார்'' என ''மலேசியா'' என்ற நூலின் ஆசிரியர் திரு. எம். சிவராமன் கூறியிருக்கிறார்.

சான்று: மலேசியா — பக்கம் 45, (Malaysia page 32)

மலாக்காவின் அரசியலாதிக்கப் பின்னணி எவ்வாறு இருந்தது என்பதற்குச் சில சான்றுகள் இவ்வாறுள்ளன:

தவறான கருத்து வேறுபாட்டாலும், வணிகப் போட்டியாலும் அடிக்கடி சச்சரவுகள் ஏற்பட்டு வந்திருக்கின்றன.

மலாக்காவில் 1510ல் இந்திய வியாபாரிகளான நைனா சூரதேவனா, இராஜமுதலியார், கிட்டுல் என்பவர்களுக்கிடையே மனக்கசப்புகள், போட்டா போட்டிகள் ஏற்பட்டன. அப்போதைய முதலமைச்சர் ஸ்ரீமகாராஜாவுக்கு இராஜா முதலியாரை அறவே பிடிக்காதாம். இதன் விளைவு கிட்டுலும் இராஜ முதலியாரும் கொலை செய்யப்பட்டனர்.

வணிகத்திலும் அதன் மூலம் அரசியலிலும் தமிழர்களும், இந்தியாவின் பிறவணிகர்களும் (மலையாளி, தெலுங்கர்) எந்தஅளவுக்கு ஆதிக்கமும் செல்வாக்கும் கொண்டு இயங்கினர் என்பதையும் இதன்மூலம் அறிய முடியும்.

இந்தியாவிலிருந்து ஏழு கப்பல்களில் மலாக்காவுக்கு வந்த மணிபுரண்டம் என்பவர் கட்டுடலும், நல்ல திறமையும் உள்ளவர். இவருடன் ஏராளமான சிப்பந்திகளும், தொழிலாளர்களும் வந்திருக்கின்றனர். இவர் சுல்தான் (அரசர்) முகமதுஷாவின் அரசவையில் அமைச்சராகவும் ஆகியிருக்கிறார். அதுமட்டுமல்ல; அரசவம்சத்தின் உறவினராகவும் ஆகிவிட்டார். மணிபுரண்டத்தின் மகன் இஸ்லா மியராகி கலப்பு மணம் செய்துகொண்டார். பெரிய அரசதந்திரியான இவர் பெயர் துன் அலி. இவர் பின்னர் நிதி அமைச்சர் ஆனது மூலம் நாராதிராஜா என்ற பட்டம் வழங்கப்பட்டது. இது 1511க்குப் பிறகு நிகழ்ந்திருக்கிறது.

இஞ்சி (INCI) செட்டியார் என்பவர் தமிழகத்திலிருந்து மலாக்காவுக்கு இயந்திர கலங்களில் (கப்பல்கள்) அதிகளவு பணியாட்களுடன் வந்து தங்கி, இந்தியாவுக்கும் மலாக்காவுக்கும் வணிகத் தொடர்பு மேற் கொண்டிருந்தார். 1488க்கு பின் முகமட்ஷா என்ற அரசர் காலத்தில் (மலாய் அரசர்) அரசியலில் முக்கியப்பதவிகளில் பங்கு வகித்திருந்ததுடன், தமிழர்கள்—இந்திய வணிகர்கள் (சில திராவிடரும், வட இந்தியரும் இதில் அடங்குவர்)இவர்கள் தூதுவர்களாக வும், அமைச்சர்களாகவும் பணியாற்றியிருக்கிறார்கள். இந்தமாதிரியான பல வரலாற்று உண்மைகள் போர்ச்சுக்கீசிய — டச்சு — ஆங்கில நூல்களில் காணக் கிடக்கின்றன.

1510ல் இந்தியாவில் மேற்குக் கரையிலுள்ள கோவாவைப் போர்ச்சுக்கீசியர் கைப்பற்றியதை மலாக்காவிலிருந்து அறிந்த நைனா (Naina chetty) என்பவர்தான். கப்பல் மூலம் இந்தியாவிற்குப் போய் வந்தபின் முதன்முதலில் மலாக்கா

விலிருந்த சில போர்ச்சுக்கீசிய வணிகர்களுக்குச் செய்தி கொடுத்திருக்கிறுர். எட்டாவது மலாய் மன்னரான சுல்தான் முகமதுஷா காலமானபோது மன்னருடன் மிகுந்த செல்வாக்குள்ள இவர் பிரபலமான தமிழ் வணிகராவார். இவருக்கு மிகவும் நெருங்கியநண்பராக அப்போதிருந்தவர் அமைச்சர் ஸ்ரீமகாராஜா.

அதனுல் இவர்களுடன் அரசியலிலும் நல்லுறவு கொண்டிருந்த நைனு செட்டியார், மலாக்காவில் போர்ச்சுக்கீசிய வணிகத் தளபதி (Ruy de Araujo) வும் இவனது ஆட்களையும் சிறையிலிருந்து மீட்கவும் உதவி புரிந்திருக்கிறுர். இதனுலும் அந்த வணிகத் தளபதி நைனு செட்டியாருடன் கூட்டாளியானுன். எனவே அரசியலிலும், வணிகத்திலும் இவர் பெரும் சிறப்புப் பெற்றுவிட்டார். இருபக்கமும் நல்லவராகவும் இருந்த இவர், இந்தியாவிலுள்ள போர்ச்சுக்கீசிய கடற்படைத் தளபதியான அல்பான் கோடி அல்புகர்க்கிற்கு கடிதம் அனுப்புவது, ஆலோசனை கூறுவது எல்லாவற்றுக்கும் உடந்தையாக இருந்ததாக இவர் கருதப்பட்டிருக்கிறுர். பிறகு 1511ல் அல்புகர்க் மலாக்காவைக் கைப்பற்றியபின் ‘கலிங்க கிராமம்’ என்ற (Kampong keling) ஊரை இந்திய வணிகர்களுக்காக அமைத்துத் தந்தான் என வரலாறு கூறுகிறது. அப்போதிருந்தே இந்த ‘கிலிஸ்த’ என்ற சொல் தமிழரைக் குறித்துவிட்டது.

மலாக்காவின் மலாய்ப் பேரரசு வீழ்ச்சிக்குமுன் பாதுகாப்பாக தமிழர் வணிகர்கள், அந்தப் போர்க்காலத்தில் தற்காப்புக்காக இடமும் கண்காணிப்பும் தேடிக்கொண்டனர். போர்ச்சுக்கீசியர்களிடம், தங்கள் கிராமப்பகுதி, வீடுகள், பாதுகாக்கப்படவேண்டும் என்றும், தாக்கப்படாமல் இருக்கும் அடையாளங் காட்ட ‘கொடிகட்டி காவல் போடும்படியும்கோரிய நைனு செட்டியாருக்கு அவர் திட்டத்திற்கு உதவியிருக்கிறுர்கள். சண்டையில் தங்கள் உடைமைகளும், வணிகர்களும் அழிக்கப்பட்டுவிடாமல் பாதுகாப்பும்கிடைத்திருக்கிறது.

அதேசமயம் மலாக்காவில் இன்னெரு பிரபலமான தமிழ் வணிகரும் வாழ்ந்திருக்கிறுர். உத்திமுத்து ராஜா என்ற இவர் அல்புகர்க்கிற்கு – கோவாவுக்கு பரிசுகளும் தந்தனுப்பினுராம். பதிலாக அவன் இவருக்கு கைமாறு செய்தான். அல்புகர்க் மலாக்காவை கைப்பற்றும்போதும் – சண்டையிலும் போர்ச்சுக்கீசியருக்கு உதவுவதாக உத்திமுத்துராஜா வாக்குறுதி தந்திருக்கிறுர்.

ஒரு சமயம் மூவார் (மலாக்காவிற்குத்தெற்கே) என்ற ஆற்றங்கரை ஊரில் தங்கியுள்ள 9வது மலாய் அரசரும் இறுதி சுல்தானுமான, சுல்தான் முகமட் என்பவரிடம் ரகசிய உறவு ஏற்பட்டிருந்தது. அப்போது பலவீனமாக உள்ள போர்ச்சுக்கீசியப்படைகளைத் தாக்கினுல் அவர்களை அழித்துவிடலாம் என அரசருக்கு உத்தி முத்துராஜா ஆலோசனை கூறினுராம்.

1511 நவம்பரில் அங்கு – மூவாரில் தந்தை அரசரான முகமட்டுடனும், மகன் அரசரான அகமட்டுடனும் ரகசியத் தொடர்புள்ள உத்திமுத்துராஜா தம்முடனும் நல்லுறவாக இருந்துவருவதை அல்புகர்க் அறிந்து கொண்டு உத்திமுத்துராஜாவைக் கைது செய்தான். பிறகு 27–12–1511ல் மன்னித்து விடுவிக்கப்பட்டார்.

இவ்வாறு 15ம், 16ம் நூற்றுண்டுகளில் மலாக்காவில் வாணிகத்திற்காகக் குடியேறிய தமிழர்கள் போர்சுக்கீசிய — டச்சு ஆட்சிகளின்போது ஏற்பட்ட கெடு பிடிகளால் தமிழகத் தொடர்பே அற்றுப்போய்விட்டனர். தங்களின் தாயகமாக இந்நாட்டையே ஏற்றுக்கொண்டனர்.

மலாக்காவில் இவ்வாறு குடிபுகுந்த 'வணிகத் தமிழர்களுக்கு' 'மலாக்கா செட்டிகள்' என்ற பெயர் நிலைத்துவிட்டது. அல்லது 'செட்டிமலாக்கா' (Chitty Malacca) என்றும், 'மலாக்கா செட்டிசமுகம்' எனவும் வரலாற்றுப் பெயராகி விட்டது.

'மலாக்காச்செட்டி' களின் வரலாறு சம்பந்தமான இருவேறு கருத்துக்கள் இருப்பதாகவும் அச்சமூகத்தின் இன்றைய தலைவர் திரு பி. எஸ். நாய்க்கர் எடுத்துக்காட்டுகிறுர்.

ஒன்று: தமிழகத்தின் சோழமண்டலக் கிழக்குக் கரையின் கலிங்கபட்டினம், மற்றும் கடற்கரைத் துறைமுகங்களிலிருந்து வணிகத்திற்காக வந்து தங்கிவிட்டனர். கம்போஸ் கிலிங், கம்பெங்பிலாண்டா (டச்சுப்பெயர்) ஆகிய கிராமங்களில் நிலை யாகத் தங்கிவிட்டனர். இவர்களின் வீடுகள் பலகை அத்தாப்பு (ஒருவகைப் பனை யோலை) வேய்ந்த வீடுகளாக இருந்தன. உள்ளூர் மலாய், சீன, சாவானியப் பெண்களைத் திருமணம் செய்துகொண்டனர். போர்ச்சுக்கீசிய — டச்சு— ஆங்கில அரசுகளின் கெடுபிடிகளால், வணிகக் கட்டுப்பாடுகளால் இவர்கள் நிலை குலைந்தனர். இந்த சமூக அமைப்புக்கு 'மலாக்கா செட்டிகள்' என்பதே பெரும்பெயராகிவிட்டது.

இரண்டு: இன்றைய சமூகத்தின் மூதாதையரான அவர்கள், அன்று ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்து தேசியவாதிகள் என்றும், அந்தமான் தீவுகளிலிருந்து கொண்டுவரப்பட்ட கைதிகள் என்றும் கூறப்படுகின்றனர். கைதிகளை கூலிகளாகப் பயன்படுத்தப்பட்டு பின்னர் தண்டனை காலமுடிந்து இங்கு குடியேறி உள்ளூர் பெண்களைத் திருமணமுடித்து நிரந்தரமாகத் தங்கிவிட்டனர்.

திரு பி. எஸ். நாய்க்கர்இந்த இரண்டாவது கருத்தைத் தம் சமூகம் ஏற்றுக் கொள்ளவில்லை எனக் குறிப்பிடுகிறுர்.

1795க்கும் 1824க்கும் இடைப்பட்ட காலத்தில் ஆங்கிலேயர்களின் காலனி ஆதிக்கத்தில் பினுங்கு, சிங்கப்பூர், மலாக்கா துறைமுகங்களில் கூலி வேலைக்குப் பல்லாயிரம் தமிழ்க்கைதிகளை இந்தியாவிலிருந்து (அனைவரும் ஆண்கள்) கொண்டு வந்திருக்கிறுர்கள் என்ற வேறெரு கருத்தும் நிலவுகிறது.

எவ்வாராயினும் இதன்படி மலாக்காவில் இதற்குச் சான்றுகள் மிகக் குறைவு. ஒரு சிலர் கட்டபொம்மன் காலத்துச் சிறைக்கைதிகளின் வழித்தோன்றல் மூலம், அந்தமான் வழியே இங்கு வந்திருக்க முடியும் என்பதை ஊகித்துக்கொண்ட பிறிதொருகருத்தும் இரண்டாவது கருத்துக்குச் சான்ருக இருக்கலாம். ஆனுல் உண்மையில் 1919ம் ஆண்டில்தான் ஆங்கிலேயரால் சிப்பாய்கள் சிங்கப்பூருக்குக் கொண்டுவரும்போது தமிழ்க் கைதிகள் சிலர் இருந்திருக்கலாம் என அறியப் படுகிறது. இதற்குச் சரியான சான்று கிடைக்கவில்லை.

மலாய்ப் பேரரசின் *(1394–1528) 134* ஆண்டு ஆட்சிக் காலத்தில் வணிகம் மற்றும் அரசியல், ஆட்சி நிருவாகம் போன்ற துறைகளில் தமிழர்களின் செல்வாக்கும், ஆதிக்கமும் அழுத்தமாக இருந்திருக்கின்றன. ஒருபக்கம் இந்துக் களாகவே இருந்து வாழ்ந்தபோது, மறுபக்கம் முஸ்லீம்களாக வாழ்ந்து சிறந்த வேறு தமிழர்களும் உண்டு. தமிழ் முஸ்லீம் அரசு அல்லது மலாய்க்காரர்களுடன் இரத்தக்கலப்பால் கலந்து விட்ட கலப்பின அரசியல்வாதிகளாக போராடியிருக் கிறார்கள். ஓரளவு வெற்றியும் கண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீமகாராஜா *(1424–1444)* என்ற முகமது ஷா ஒரு தமிழ்வணிகர் மகளைத் திருமணம் செய்ததன் மூலம் பிறந்தவனை இராஜாகாசிம் பட்டத்துக்கு வரமுடியாததால் இவனுடைய மாமன் துன் அலியால் அரசராகி முப்பது ஆண்டு ஆட்சிசெய்தானும். இவ்வாறு துன் அலி, துன்பேராக் போன்றவர்கள் (மலாக்கா வின் பிரதமராக இருந்தவர் துன் பேராக்) செல்வாக்கடைந்ததன் மூலம் இந்திய- மலாய் ரத்தக்கலப்பு ஒரு பக்கம் வேரூன்றிவிட்டது. இவர்கள் மலாய் மக்களுடன் இரண்டறக் கலந்துவிட்டனர்.

மறுபக்கம் இந்துக்களாகவே, போர்ச்சுக் கீசியர் ஆட்சிக்காலமான *(1528- 1641) 112* ஆண்டு வரலாற்றிலும் வாழ்ந்து கலப்பினமாக மாறினாலும் இந்துக் களாக — வணிகர்களாக உரிமைபெற்றிருக்கிறார்கள்.

பின்னர் டச்சுக்காலமான *154* ஆண்டு *(1641–1795)* கொடூரமான ஆட்சியிலும் ''மலாக்காச் செட்டிகள்'' என்ற இந்த இந்து சமயச் சமுகம் கலப்பின மாகவே, தொடர்ந்து பல தொல்லைகளிடையே உயிர்வாழ்ந்து பல்வேறு வணிகம் மற்றும் தொழில் துறைகளில் ஓரினச் சமுகப் பிணைப்புடன் வாழ்ந்திருக்கின்றனர்.

இந்த சமுதாயம் என்னென்ன தொழில்களை எவ்வாறெல்லாம் செய்து உயிர்வாழ்ந்திருக்கின்றன என்பதையும் நாம் எண்ணிப்பார்த்தால், அதற்கும் வர லாறு ஓரளவு உண்டு.

நல்லெண்ணெய் போன்ற எண்ணெய் வகைகளைத் தயாரித்து விற்றிருக் கிறார்கள். அரிசி, தானியங்கள், நெய், வாசனைப் பொருட்கள், கறிப்பொருட் (மணப்பொருள்) களையும் இறக்குமதி செய்தனர். இவ்வர்த்தகர்களில் பிரபல மானவர்கள்; சிதம்பரம் பிள்ளை (Sembrong chaye) என்பது சீனர் குறித்த பெயர்), தம்பு நாய்க்கர், தெய்வநாயகஞ் செட்டியார். இவர்கள் வெட்டு மரங்கள், செங்கற்கள், ஓடுகள், பளிங்குக்கற்கள் ஆகியவற்றைத் தயாரித்தும், வாங்கியும் விற்றார்கள். இவர்களில் அதிகம் பிரபலமானவராகவும் ''மலாக்கா செட்டிகளின்'' தலைவராகவும் இருந்தவர் தெய்வநாயகம் செட்டி. இவர் இஞ்சி செட்டி பரம்பரையாக இருக்கக் கூடும் என்பதை இஞ்சி செட்டி பெயரில் பெரிய வணிக நிறுவனத்தை இவரே நடத்தியிருக்கிறார் என்பதிலிருந்து உணரலாம்.

போர்ச்சுகீசிய — டச்சு ஆட்சிக்காலங்களில் இவர்களும், இவர்கள் பரம்பரையும் தமிழகத்தொடர்போ, தமிழக வணிகத் தொடர்போ கொள்வதி லிருந்து தடை செய்யப்பட்டிருக்கின்றனர். இவ்வாறு 16ம் நூற்றாண்டு முதல் சுமார் 250 ஆண்டுகளாகவும், ஆங்கிலேய ஆட்சிக்குப் பின்னரும் இவ்வணிகத் தொடர்பு அறவே அற்றுப் போய்விட்டது.

சிப்பந்திகளாகவும், வேலைக்காரர்களாகவும் இருந்த பலரும், அவர்கள் (மலாக்காச் செட்டிகள்) பரம்பரையினரும், மலாக்காவின் உட்பகுதிகளுக்கு வேளாண்மைத் தொழில் செய்யத் தலைப்பட்டனர். கால்நடை வளர்த்தல், பயிரிடுதல், செங்கல் தயாரிப்பு முதலிய தொழில்களில் ஈடுபடவேண்டியதாயிற்று.

மலாக்காச் செட்டிகள் வசிக்கும் பெரிய கிராமப் பகுதிக்குப் பெயர் கஜபெராங் (gajah Berang) இது 'கஜபுரத்தின்' திரிபு என்றும், 'காஞ்சபீடம்', பின்னர் காஞ்சிபுரம் என்றும் சரியாக நம்பப்பட்டு வருவதாக சொல்கிறார்கள். தமிழ்நாட்டில் ஒரு முக்கிய நகரமான காஞ்சிபுரத்திலிருந்தும் ஆதியில் இங்கு வந்தவர்களின் சந்ததியாக இருக்கும் என்பதற்கு வேறு சான்று தேவையில்லை. மலாயில் 'கஜபெராங்' என்பதற்கு 'மதங்கொண்ட யானை' என்பது பொருள். இவ்வாறு பல தமிழ்ப் பெயர்கள் திரிந்தும், பொருள்மாறியும் வழங்கப்பட்டு, மலாய் வடிவங்களாகி விட்டன. மலாக்காவின் வடகிழக்குப் பகுதியில் 'அலோர் காஜா' என்ற (யானைக்கால்வாய்) ஊர்உள்ளது. எனினும் இப்பகுதி யானைகள் வாழ்ந்த விவரமேதும் இல்லை.

ஆரம்பத்தில் திண்ணைவைத்துக் கட்டப்பட்ட வீடுகள் போலும், உள்ளூர் நாகரிக வீடுகளாகவும் இவர்கள் அமைத்துக் கொண்டனர். புறநகரான மலாக்கா மூதூராக இருப்பினும் விவசாயத்திலீடுபடாதவர்களில் சிலர், நவீன வணிகக் கம்பெனியிலும், அரசாங்கத் துணை வேலைகளிலும், மாதச் சம்பளத்திற்கு வேலை செய்தனர். இவர்களின் நிலப்பட்டாக்கள் டச்சு மொழியில் அப்போது வழங்கப் பட்டிருக்கின்றன. முக்கியமாக கோயில் நிலப்பட்டா தனியார் ஆலயம் என்ற பெயரோடு பட்டா வழங்கப்பட்டது.

இந்தச் சமூக அமைப்பின் அடிப்படை எப்படி இருந்திருக்க முடியும்? சைவசமய இந்துக்களாக — தமிழர்களாக — தமிழர் என்று தம்மை அடையாளங் காட்டிக் கொள்ள முடியாத — நிலை அப்போது இருந்தது. ஆனால் வணிகம், சமுகத்தின் பெரிய அந்தஸ்து, சாதிமனப்பான்மை, செல்வாக்கு, பிரபலம் ஆகிய வற்றில் உயர்ந்து நின்றவர்களாக மிகச் சிலரே செட்டியார்களாக இருந்ததால் இவர்கள் அனைவருக்கும் ''மலாக்காச் செட்டிகள்'' என்ற பெயரே நீடித்து நிலைத்து விட்டது. வரலாற்றில் இடம் பெற்றது.

சாதிவாரியாக — சாதிப் பெயர்களும் இவ்வாறு உள்ளன: வைசிய செட்டியார் (வணிகப் பெருமக்கள்), கோமுட்டி செட்டியார், வன்னியச்செட்டி (எண்ணெய் வணிகர்), பிள்ளை, நாயக்கர், முதலியார், படையாட்சி, இராஜா, பத்தர், கோனார், கள்ளர், பண்டாரம் ஆகிய வகுப்புப் பிரிவினராக உள்ளனர். இம்மாதிரி அடைமொழியுடன் தங்கள் இந்துப்பெயரை இட்டுக்கொண்டனர். ஆங்கிலேய ஆதிக்கம் வரும் (பெண்களுக்கும் இந்துப் பெயர்தான். ஆனால் ஆண்களுக்கே சாதிப் பெயர் அடையாளமாகும்)வரை இதுவே பழக்கவழக்கமாக இருந்தது. 1795க்குப்பின் நகரத்தார் பெருமக்களாகிய நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகம் மலாக்காவிற்கும் வந்தபின் — அவர்கள், (மலாக்காச் செட்டிகளின்) சட்டரீதியில் அங்கீகாரமான பெயராக மலாக்காச் செட்டி அல்லது 'செட்டிமலாக்கா' என்றாகிவிட்டது. நகரத்தார் தங்கள் பாரம்பரிய வட்டித் தொழில் மரபினரோடு குழப்பமில்லாமலிருக்க அவ்வாறு செய்யப்பட்டதாம்.

டச்சு அரசு இவர்களுக்கான இந்துக்கோயில் கட்ட, 15,879 சதுர அடி நிலம் தந்தது. 1781ல் கட்டப்பட்ட இதன் பெயர் ''ஸ்ரீபொய்யாத விநாயக மூர்த்தி கோயில்''. இதன் முதல் தலைவராக இருந்தவர் தெய்வநாயகம் செட்டி. மலாயாவில் முதன்முதலாக கட்டப்பட்ட இந்துக்கோவில் இன்று வரை பாது காப்பாக உள்ளது. இது வரலாற்றுப் புகழுடன் விளங்கிவருகிறது. தெய்வ நாயகம் செட்டியின் பெரிய புகைப்படம் மலாக்கா தேசிய அரும்பொருட்கலைக் கூடத்தின் முகப்பில் தொங்குகிறது. இவருடைய கொள்ளுப்பேரர்கள் இன்னும் இருக்கிறார்கள்.

மலாக்காச்செட்டிகளின் சந்ததியினர் தாய்மொழியாகிய தமிழை மறந்து விட்டனர். உள்ளூர் மலாய், சீனம், சாவானியப் பெண்களை மணந்து கொண்ட தால், வீட்டில் மலாய்தான் குடும்ப மொழி. நாட்டிலும் சமூகப் புழக்கத்தின் மொழியும் இதுவே.

டச்சுக்காலத்தில் சிலர் இஸ்லாம் சமயத்தைத் தழுவியதால், தட்டாரத் தெருவில் (Goldsmith Street) பள்ளிவாசலும் கட்டப்பட்டது. இதற்கு மஸ்ஜிட் கம்போஸ் கிலிங் (கலிங்க கிராமப் பள்ளிவாசல்). இதைப் போலவே, மலாக்கா பாபா(மலாக்கா சீனர் – தாய்மொழி மலாய்)க்களுக்கும் கோயில் நிலம் வழங் கப்பட்டது.

ஆரம்பத்தில் மலாக்காச் செட்டித் தமிழர்கள் அனைவரும் ஆண்களாக இருந்ததால், தாங்கள் தத்தம் குடும்பத்தில் தாய்மொழியில் பேச, தாய்மார்கள் தம் குழந்தைகளுடன் மலாய் மொழியில் பேசவும், படிப்படியாக மலாய் நின்று நிலைத்துவிட்டது. தாய்மொழி மறக்கப்பட்டுவிட்டது. தமிழ்ப்பள்ளியும் அப் போது இல்லை. பிறகு குடும்பங்கள் அனைத்தும் சைவசமயக் கலாசாரங்களைப் பேணி வளர்த்துக்கொண்டனர்; ஆனால் தாய்மொழியை இழந்து ஒதுக்கப்பட்டு விட்டார்கள்.

இதே போல தமிழ் முஸ்லீம்களும் ஆகிவிட்டனர். தாய்மொழியை அறவே மறந்துவிட்டனர். ஆனால் ஸ்ரீ லானங் (Sri Lanang) போன்ற (1612) வரும், முன்சி அப்துல்லா (முன்சி என்றால் புலவர்) (1854) என்றவரும் மலாய் இலக்கியத் தந்தைகளாக இன்றும் போற்றப்பட்டு வருகின்றனர். இவர்கள் முஸ்லிம்களானாலும் மலாய்க்காரர்களல்ல; இந்திய வழித்தோன்றல்களாவர்.

பல துன்பங்களை அனுபவித்தும் தமது இந்து ஐதிகங்களைக் கடைப்பிடிப் பதிலும், கோவில் கட்டி வணங்கி வருவதிலும் கடுமையான விதிமுறைகளைப் பேணுவதில் அதிக அக்கறை காட்டியவர்கள் ''மலாக்காச் செட்டிகள்''.

இவர்களின் சமூக உடைமைகளாக பத்துக் கோயில்கள் இருந்துவரு கின்றன:

1. பொய்யாத விநாயக மூர்த்தி கோயில். இதன் உரிமை மலாக்காச் செட்டிகளுக்கும், மேற்பார்வை மலாக்கா நகரத்தார் சமூகத்திற்கும் பொறுப்பாக உள்ளது. இருதரப்புக்கும் சரியான உடன்படிக்கை உண்டு. 80 ஆண்டுகளுக்கு

மேல் இதில் நகரத்தார் பொறுப்பு வகிக்கிறார்கள். இது 1781ல் கட்டப்பட்டது. 200 ஆண்டுக்கு முன் கட்டப்பட்ட இருதேர்களும் உள்ளன.

2. கைலாசநாதர் கோயில் என்ற சிவன் ஆலயம் 1804ல் கட்டப் பட்டது. இது கஜபுரம் — காஞ்சிபுரக்கிராமத்திலுண்டு.

3. இதுவும் அங்குள்ள ஸ்ரீமுத்துமாரியம்மன் ஆலயமே. இது 1822ல் கட்டப்பட்டது. சித்திரை மாதவிழாவில் நாட்டிலுள்ள மலாக்காச் செட்டியாகிய இந்த இனத்தினர் இங்கு ஒன்றாகக் கூடுவர்.

4. அங்காளம்மன் பரமேசுவரி கோயில் 1888ல் கட்டப்பட்டது.

5. லிங்காதரியம்மன் கோயில்; 6. தருமராஜா கேயில், 7. அம்மன் கோயில்; 8. கட்டையம்மன் கோயில். 9. ஐயனார் கோயில்; 10. பாலசுப்பிர மணியர் கோயில். மேலும் சில கோயில்கள் உண்டு. இவற்றில் முக்கியமானது ஸ்ரீ காளியம்மன் கோயில்.முதலைந்தும் காஞ்சிபுரப்பகுதியிலும், மற்றவை உட் பகுதியில் அவர்கள் வாழும் பகுதியிலும் உள்ளன. இந்தகிராமப் பகுதிக் கோவில் களை ''கிராமக்கோயில்கள்'' என்றே (Grammargal Kovils) வழங்கப்படுகின்றன.

இன்று அவர்களின் வீடுகளும், குடும்பச்சூழலும் மலாய்ச்சாயலிலும், கிராமக்கோயில்கள் தமிழகச் சூழலிலான சாயலும் தோன்றுகின்றன. முரண் படாத நிலை இது.

காலஞ்சென்ற என்.சோமசுந்தரம் என்பவர் காலத்திலிருந்து முத்துமாரியம் மன் கோயிலில் 'பாடசாலை' (Padasalai) என்ற பெயரில் சமயக்கல்வி வகுப்பு வாரந்தோறும் கட்டாயம் நடந்துவருகிறது. இதுவும் மலாய் — ஆங்கிலப் பயிற்சி மூலமே நடந்துவருகிறது. தற்போது தமிழிலும் ஆரம்பிக்க விரும்புகிறார்கள்.

தமிழிலும் ஓலையில் அந்தக்காலத்தில் எழுதப்பட்ட ஓலைச்சுவடிகளையும் கோயிலில் பாதுகாத்து வருகின்றனர். பட்டயங்கள், ஒப்பந்தங்கள் தமிழுடன் ஆங்கில மொழியில் வைக்கப்பட்டுள்ளன.

சமயப்பள்ளியில் சிறுவர்கள் மாலையில் படித்து வருவதுடன், விழாக் காலங்களில் சமய நாடகங்களையும், கலை நிகழ்ச்சிகளையும் மாணவர்களைக் கொண்டு நடத்துகின்றனர்.

மாதந்தோறும் சமய விழாக்களையும் திருநாட்களையும் அந்தந்த கோயில் களில் நடத்துகின்றனர்.

1. தைப்பொங்கல் பண்டிகை, மாட்டுப்பொங்கல், கன்னிப்பொங்கல், தைப்பூசம். 2. மாசிமகம் சன்யாசி மலை ஆண்டவர் கோயில். 3. பங்குனி உத்தரம் சித்திவிநாயகர், சுப்பிரமணியர் கோவில்களில் நடக்கும். 4. தமிழ் (இந்து) வருடப்பிறப்பு முத்துமாரியம்மன் முதலிய கோயில்களில் நடக்கிறது. சித்திரை விழா பிரபலம். 5. வைகாசித்திருவிழா. 6. ஆனியிலும் இப்படியே. 7. ஆடியில் சூரசம்கார விழா, தீமிதி உற்சவம், விநாயகசதுர்த்தி ஆகியன. 8. ஆவணி 9. புரட்டாசியிலும்; 10. ஐப்பசியிலும் தீபாவளி, சரசுவதி ஆய்த

பூசை, நவராத்திரி உண்டு. 11. கார்த்திகைத்தீப விழா, 12. மார்கழி திருப்பள்ளி எழுச்சி விழாவும் நடப்பதுண்டு.

காவடி ஆட்டம், சூரசம்கார வேடம் போட்டு ஆடுதல், ரதஊர்வலம் ஆகியனவும் உண்டு. திருமணம், மரணம் போன்றவற்றை நடத்த ஐயர், குருக்கள் பண்டாரம் ஆகியோரை இவர்கள் அமர்த்தியுள்ளனர்.

திருமணம், சமயவிழா நிகழ்ச்சிகளில் தற்போது ஆண்கள் வேட்டி, துண்டுடனும், பெண்கள் சேலை ரவிக்கையுடனும் காட்சியளிக்கின்றனர். மற்ற காலங்களில் லுங்கியான கைலியை எல்லாரும் உடுத்துகின்றனர். ஆடை அணி வகைத்தோற்றம் மலாய் சீன நாகரிகம் போலிருக்கும். இன்னமும் பல முதி யோர்கள் பழைமையை விரும்பி மறந்து விடாமல் கைலி (லுங்கி)யும் மலாய் சட்டையும் அணிகிறார்கள்.

செவ்வாய், வெள்ளிக்கிழமைகளின் மாலையில் சிறுவர்களும், பெரியவர் களும் கோயிலுக்குப் போய் தேவாரம், திருப்புகழ், சிவபுராணம் ஓதுகின்றனர்; பாராயணம் செய்யப்படுகின்றன. ஞாயிற்றுக் கிழமை விடுமுறையில் தமிழும் மலாயும் பயில்கின்றனர். சைவ சமய வழிபாட்டு முறைகள் கட்டாயமாக்கப் பட்டுள்ளன.

இவர்கள் அனைவரும் ஒரே இந்து சமுதாயக் கலப்பினத் தமிழர்களாக இருந்தாலும் பலரின் முகச்சாயல் சீனரைப்போலவும், மலாய்க்காரரைப் போல வும் (ஆணும் பெண்ணும்) அமைந்திருக்கிறது. செட்டி என்றே தங்களை வர்ணித்துக் கொள்கிறார்கள். ஒரு சிலரைத்தவிர மற்றவர்கள் தங்களை இந்தியர்கள் என்றோ, தமிழர்கள் என்றோ ஒப்புக்கொள்வதில்லை.

19ம் நூற்றாண்டுக்குப்பிறகு இவர்கள் தத்தம் சாதியில் தான் 'கொள்வினை கொடுப்பினை' வைத்துக் கொள்கின்றனர். இதனை எந்தக்காரணத்தினாலும் மாற்றுவதுமில்லை; விட்டு விடுவதுமில்லை. இந்த நவநாகரிகத்திலும் அந்தப் பழக்க வழக்கத்தை விட்டு மீறுவதில்லை. தந்தையின் குலத்திலேயே மகனோ, மகளோ மணம் செய்விக்கப்படுகின்றனர். சாதி அல்லது குல ஏற்றத்தாழ்வுமட்டும் மலாக்காச் செட்டிகளிடம் அறவேயில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சிலர் படித்து, தொழில் துறைகளிலும், அரசாங்கத்திலும் பெரிய பெரிய நிபுணர்களாக உள்ளனர். சிங்கப்பூர், ஈப்போ, கோலாலும்பூர் போன்ற நகரங் களில் அந்தச்சிலர் வாழ்கின்றனர். இன்று ஆயிரம் பேர் மட்டுமே இச்சமூ கத்தில் மலாக்காவில் 355 பேரே உள்ளனர்.

பழந்தமிழர்களான இவர்களின் மொழி, பண்பாடு, கலை ஆகியவை இவர்கள் மூலமாக 500 ஆண்டுக்கு மேலாகவே மலாய்க்காரர்களிடமும், மலாய் மொழியிலும் பரவி வேரூன்றிவிட்டன. மலாய்க்காரர்களின் சிறந்த பண்பாட்டுக் கூறுகள் பல தமிழர் பண்பாட்டின் அடிப்படையாகும். மலாயினத்தின் கலா சாரத்திற்கும். நாகரிகத்திற்கும் வேராக — நீராக உள்ளது திராவிட நாகரிகம் என்பது வரலாற்றாசிரியர்களின் தீர்ப்பு.

சமயரீதியில் கட்டுப்பாடும், ஒழுங்கும், பண்பாடும் கொண்ட 'இச்சமூகம்' (மலாக்காச்செட்டிகள்) கலப்பினமாகவே வாழ்ந்தும் இவர்களின் சமயமனத்தில் இன்னமும் குழப்பம் நிலவியே வருகிறது. இவர்கள் இஸ்லாமியர்களான மலாய்க் காரர்களிடம் சேர இவர்களின் சமயம் தடைக்கல்லாகவுள்ளது; அது போலவே, இந்துத் தமிழர்களிடம் (19ம், 20ம் நூற்றுண்டில் குடியேறிய இந்தியா மற்றும் இலங்கைத் தமிழர் வம்சாவளியினர்) சேரவும், மொழி ஒரு தடையாகவுள்ளது. அதனுல் இவர்கள் ஒதுக்கப்பட்டுவிடுகின்றனர். புறக்கணிக்கப்பட்டுவரும் இவர் களின் தேசியப் பிரச்சினேகள் உட்பட சமூக மொழித் தேவைகள், சிக்கல்கள் இன்னமும் தீரவில்லே. குறையும் கறையும் உள்ளவர்களாக இவர்களே ஒதுக்கப் பட்டு விடாமல் எட்டுலட்சம் தமிழர்களும், அரசாங்கமும் இவர்களுக்குப் பல துறைகளில் உதவவேண்டும் என இவர்கள் இப்போது உணர்ந்துவிட்டனர். இவர் களேப் பற்றித் தவருகத் திரித்தும் பழித்தும் கூறிவரும் போக்கைக் கைவிட்டு, இவர்கள்பால் அன்பும் மதிப்பும் கொண்டு உதவி செய்ய தமிழர் — இந்தியர்கள் முன்வரவேண்டும் என இப்போது ஆராய்ச்சியாளரும் ஆசிரியருமான திரு க. நாராயணசாமி போன்றவர்கள் 1967 முதல் இன்றுவரை பேராடியும், எழுதியும் வருகிருர்கள். மலாய்க்காரரும், நம்மவர்களும், இவர்களேப்பற்றி கொண்டுள்ள மதிப்பீடு தவறு என்றும் இப்போது உணரப்படுகிறது.

மலாக்காவில் மூன்று வகை இனங்கள் இவ்வாறு தனித்தனியாக — தனித் தன்மையுடன் வாழ்ந்து வருகின்றன. 1. மலாக்காச் செட்டிகள்; 2. மலாக்கா பாபாக்கள் (மலாய்மொழிபேசும் சீனர்கள்) இவர்களுக்கும் தாய் மொழியே மலாய்தான். சீனசமயக் கலாச்சாரத்தைப் பேணுகின்றனர். 3. மலாக்காப் போர்ச்சுக்கீசிய மரபினர். இவர்களுக்கு முக்கியமாகத் தாய்மொழி ஆங்கிலம்; சமயம் கிறிஸ்துவர். வீட்டில் மலாயும் பேசுவார்கள். மற்ற இரு இனங்களேப் பற்றிய பெரிய அறிமுகமும் வளர்ச்சியும் மலாக்காச் செட்டிகளுக்கு இல்லாதது பெரிய குறை. இவர்கள் அனேவரும் கலப்பினத்தால் உருவான மூன்று பெரிய சமூகம் என்பது மிகமுக்கியமான குறிப்பு. மலாக்காச் செட்டிகள் விளம்பர மிலாதவர்கள். படித்த சிலரைத் தவிர, பலருக்கும் இவர்கள் அறிமுகப்படுத்தப் படவில்லே.

சென்ற நூற்றுண்டு முதல் இங்கு குடியேற்றப்பட்டவர்கள் போல் குடும் பத்துடனே, அல்லது மனேவி மக்களுடனே 15ம், 16ம் நூற்றுண்டுகளில் குடியேற வில்லே என்பதும், 500 ஆண்டுகளாக மலாக்காவின் பொதுமொழியாக மலாய் மொழியே பேசப்பட்டும், எழுதப்பட்டும் வந்தது மிக மிகக் குறிக்கத்தக்கவை ஆகும். தங்கள் மனேவி மக்கள் குடும்பமாக இங்கு தோன்றியபின் அவர்களே விட்டுத் தமிழகப் பயணமோ, அங்கு உறவுத்தொடர்போ கொள்ளவில்லே. இதுவும் கலப்பின மலாக்காச் செட்டிகளின் தனித்தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்ருகும்.

அக்காலத்தில் மேலேநாட்டார் ஆண்டபோது மலாக்காவில் மதமாற்றம் செய்து, இந்து சைவசமய ஆசாரப்படி இந்துத் தமிழர்களேத் திருமணம் செய்து கொள்ள முன்வந்த மலாய் — சீன — சாவானியப் பெண்களின் பண்பாட்டுச் சகிப்புத் தன்மைக்கும் ஆதரவு இருந்திருக்கிறது.

ஒரு காலத்தில் தமிழ்நாட்டு வயலில் வேளாண்மை செய்துவந்த இவர்கள் இப்போது அதனை விட்டுவிட்டு கூலி வேலையும் பிறதொழில்களும் செய்து வருகின்றனர். கோவில் நிலங்களைத் தவிர, மற்ற நிலபுலன்களை இழந்தும், ஏமாற்றப்பட்டுவிட்டனர். சிங்கப்பூரில் அதிகம்பேர் ஓரளவு நல்ல முறையில் உழைத்துப் பிழைக்கின்றனர். 1962ல் ஏற்பட்ட சட்டப்படி ஸ்ரீபொய்யாத விநாயக மூர்த்தி என்ற ஆலயத்தின் பெயரால் தரும்கர்த்தா முறை ஏற்பட்டு பாது காப்பான கொஞ்சநிலம் உண்டு.

இச்சமூக மக்கள் அனைவரும் சரளமாகப் பேசும் — படிக்கும் மொழியே மலாய்தான். பெரும்பாலோர் ஆங்கிலத்தில் பேசத் தெரிந்திருக்கின்றனர். அரை குறைத் தமிழில் பேசத் தெரிந்தவர்கள் 35 விழுக்காடாகும். சிலர் சீனமொழி யிலும் பேசவல்லவர்கள்.

மலாக்காவின் தனித்தன்மையான சமூகமாகவும், மலாக்காவுக்கே சொந்தமான மரபில் சிறப்புமிக்க இனமாகவும், வரலாற்றுச் சீர்மை பொருந்திய சமுதாயமாகவும் இருந்தும் மொழியை — தாய்மொழியைப் பேச எழுத இயலாத வர்களாக இருக்கிறார்களே என்ற அவலமும் வெறுப்பும் ஏற்படுவதும் இயல்பாக உள்ளது. உண்மையான மலேசியக்குடிமக்களாக, இந்நாட்டைத் தாயக மாகவே கொண்டுவிட்ட இவர்களின் பிரச்சினைகள் சிறுபான்மையினப் பிரச்சினைகள் என்று பொறுப்போடும் அக்கறையோடும் சீர்தூக்கிப்பார்த்து ஆவன செய்யவேண்டும் என்ற கோரிக்கை இப்போது எழுந்து வருகிறது. எனினும் இவர்கள் தங்கள் சொந்தப் பலவீனத்தைப் போக்கிக் கொள்ளவும், அதே சமயம் தங்களுக்கு சிறப்புச்சலுகை பெறவும் துணிவாகப் போராடக்கூடிய தலைமைத்து வம் தேவை என்பது மறுக்க முடியாதது. இந்திய அரசியல் கட்சிகளும், இந்துச் சங்கங்களும் இவர்களின் பொருளாதார, சமயப் பாதுகாப்புக்கு வழிகாண வேண்டும்.

அருகிவரும் இந்த இனம் பாதுகாக்கப்பட வேண்டும். காலமும், சூழலும், விஞ்ஞானமும் துணை கொண்டு இன்றைய அந்த சமூகத்தின் இளஞ்சந்ததியினரின் மாறுபாடான போக்கிலிருந்து திருப்பம்காணப்படவேண்டும்.

# சங்க இலக்கியம்: ஒரு புள் நோக்கு

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
பேராசிரியர், தலைவர், தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று தமிழ்நாட்டின் தொன்மையும், 'கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்த குடி' என்று தமிழ்க் குடியின் பழமையும்' 'என்று பிறந்தவள் என்று உணர முடியாத இயல்பினள்' என்று தமிழ்மொழியின் நீண்ட நெடும் வரலாறு சுட்டப்படக் காணலாம் என்பதற்கிணங்கத் தொல்காப்பியம் எனும் இலக்கண நூல் எண்ணற்ற இலக்கியங்கள் கண்டு எழுதப்பட்ட இலக்கண நூல் எனலாம். மேலும் தொல்காப்பியனரே பலவிடங்களில் 'என்ப', 'என்மனர் புலவர்' 'நுவல்ப நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே', 'மொழிப' என்று தமக்கு முற்பட்ட வழக்கைச் சுட்டுவதனல் தொல்காப்பியத்திற்கு முன்பே தமிழில் இலக்கண நூல்களும் இருந்திருக்கவேண்டும் எனலாம். ''வடிவேலெறிந்த வான் பகை பொருது பஃறுளி யாற்றுடன் பன்மலே யடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையு மிமயமும் கொண்டு தென்திசை யாண்ட தென்னவன் வாழி' என வரும் சிலப்பதிகார அடிகளும், சிலப்பதி காரத்திற்கு முன்னர் எழுந்த கற்ருர் ஏத்துங் கலித்தொகையில், அதிலும் முல்லேக்கலியில்

''மலிதிரை யூர்த்து தன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம் படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினன் வணங்கிய வாடாச்சீர்த் தென்னவன்.''

என வரும் அடிகளும், டாக்டர் உ.வே.சாமிநாத ஐயரவர்களின் என் சரி தமும் கொண்டு கடல் கோளால், புனலால் கொள்ளப்பட்ட நூல்கள் பல என உணரலாம்.

இன்று கிடைக்கும் நூல்களில் பழமையான இலக்கணநூல் தொல் காப்பியம் ஆவது போல, சங்க இலக்கியங்கள் பழமையான இலக்கிய நூல்கள் ஆகின்றன. எட்டுத் தொகையும் சங்க இலக்கியம் என்பர். 'முத்தோர்கள் பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் என்பதற்கேற்பத் திருமுருகாற் றுப்படை முதலாக மலேபடுகடாம் ஈருக அமைத பத்துப்பாடல்களும் பத்துப் பாட்டாகும். நற்றிணே முதலாகப் புறநானூறு இறுதியாக அமைந்துள்ள எட்டு நூல்களும் எட்டுத்தொகை நூல்களாகும்.

மூன்று அடிகள் கொண்ட ஐங்குறுநூறு தொடங்கி 782 அடிகள் கொண்ட மதுரைக்காஞ்சி வரை இவற்றின் அடிவரை அமைகின்றன. 473 சங்கச் சான்ருேர்கள் பாடிய இத்தொகுதியுள் 102 பாடல்களைப் பாடிய புலவர்

இயற் பெயர் அறியப்படவில்லை. காரணப்பெயரால் இவர்கள் அழைக்கப்படுவதனைக் காணலாம். பெண்பாற் புலவர்கள் முப்பதின்மரும், 25 அரசப் பெருமக்களும் இத்தொகுப்பில் காணப்பெறுகின்றனர். 2381 பாடல்கள் கொண்ட சங்கத்தொகை நூல்களில் 1863 பாடல்கள் அகம் பற்றியனவாகும். 473 சங்கச் சான்றோர்களில் 378 புலவர்கள் அகத்திணை பற்றிய புலவர் பெருமக்களாவர்.

சங்க இலக்கியம் ஒரு வாழைத்தோட்டம் எனலாம். வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்து மரபினர் சங்கச் சான்றோர் ஆவர். தமிழின் பொற்காலம் எனச் சங்க காலத்தைச்சொல்லலாம். காரணம் சங்ககாலத்தே தான் செறிந்த உயர்ந்த தமிழ் வழக்கில் இருந்தது. உயரிய உணர்வுகள், செறிவான கற்பனை, பொருத்தமான வடிவம், விழுமிய கருத்துகள் இவற்றிற்கு இருப்பிடமாய்ச் சங்கப் பாடல்கள் துலக்கமுறக் காணலாம்.

எளிய சொற்கள் கொண்டு உயரிய பொருள்களை உணர்த்தி நிற்றல் சங்கச் சான்றோர் கவிதைகளின் சாரம் எனலாம். இதனாலன்றோ கவிச் சக்கரவர்த்தியாம் கம்ப நாட்டாழ்வான் கோதாவரி ஆற்றை வருணிக்கப் புகுங்கால் ''ஐந்திணை நெறியளாவிச் சவியுறத் தெளிந்து தண்ணென்றொழுக்கமும் தழுவிச் சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரியினை'' வீரர் கண்டார் என விளம்பலுற்றார்.

மலைநாட்டு மங்கையொருத்தி, தன்மாட்டுத் தலைமகன் கொண்ட காதலின் எல்லையினைப் பின்வருமாறு குறிப்பிடுவாள்:

''நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே'' (குறுந்தொகை 3)

என்றாள். எவ்வளவு எளிய சித்திரம்!

''பத்துப்பாட் டாதிமனம் பற்றினர் பற்றுவரோ எத்துணையும்
பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே''

என்பார் மனோன்மணீயம் சுந்தரம்பிள்ளை. அதற்கேற்ப ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஊர் என்றால் உறையூர் போலப் பட்டினம் என்றால் அச்சொல் காவிரிப் பூம்பட்டினத்தையே குறிக்கும்.

''முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே'' .. (பட்டினப்பாலை)

என்று கூறிச் செலவழுங்க முற்படுமுகத்தான் தன்காதற் பெற்றியைக் கட்டுரைத்த தலைமகனைப் பட்டினப்பாலை பகரும். ''ஒருநாள் புணரப் புணரின் அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே'' என்று காதல் மாட்சியைக் கட்டவிழ்த்து நிற்கும் குறுந்தொகை காட்டும் தலைவனைக் காண்க.

''பூவொடு புரையுங் கண்ணும், வேயென
விறல்வனப் பெய்திய தோளும், அறையென
மதிமயக் குறூஉ நுதலும்''
(குறுந்தொகை 225)

என்ற வருணனை காண்க. ஆற்றுப்படை நூல்களில் விறலியரைப் பற்றி முடிமுதல் அடிவரை வருணனை அமைந்திருந்தால்கூடப் பெரிதும் வெறுக்கத்தக்க அளவிற்கு அவ்வருணனை இல்லை. மேலும் கற்பனையில் இயல்பு கற்பனையென்றும், கருத்துவிளக்கக் கற்பனை என்றும் காணும் கற்பனைகளுக்கும் ஏற்பக் கற்பனைகளைச் சங்க இலக்கியங்களில் காணலாம். புறத்தே ஒரு காட்சி வழங்கினும் ஆழ்ந்து நோக்கினல் ஓர் உட்பொருள் அமையும் உவமை கொண்டு உயர்பொருளை விளக்கும் திறனையும் சங்கச் சான்றோர் வாக்கிற் காணலாம்.

''கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளைக் கதூஉ மூரன்
எம்மில பெருமொழி கூறித் தம்மில்
கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப்பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே'' (குறுந்தொகை 8)

ஈண்டுக் கழனி தலைமகள் வாழும் ஊராகவும், மாமரம் தலைமகளாகவும், தீம் பழம் தலைமகனுகவும், பழனம் பத்தையர் சேரியாகவும், வாளைமீன் பரத்தையாகவும் கொள்ளுமிடத்து விளையும் உட்பொருள் உற்றுணரற்பாற்று.

கதிரவனைக் கண்டு தாமரை மலர்கள் தலையவிழ்வதும், நிலவுகண்டு மலர் அலர்வதும் இயற்கை. கதிரொளியில் அலரும் தண்டாமரை நிலவுக் கதிர் கண்டு கூம்பிவிடும். நிலவுத் திங்கள் கண்டு நெகிழும் அல்லி மலர் ஆதவன் வரவு கண்டு அகம் மூடிவிடும். உலகில் இயல்பாக நிகழும் இக்காட்சியைக் கண்டார் 'பொய்யா நாவிற் கபிலர்'. அவர் கண்ட அரண்மனைக் காட்சி அவர் கருத்தில் வந்து நின்றது. அந்தப்புரத்தில் இளவரசி ஒருத்தி தன் தோழியரைப் பார்த்துச் சீற்றங் கொண்டாள். அவள் முகம் சிவந்தது. அதனைக் கண்ட தோழியர் தலைகளைத் தாழப்போட்டு முகங்கவிழ்ந்து நின்றனர். இந்தக் காட்சி 'புலனழுக் கற்ற அந்தணாளனும்' கபிலர் கருத்திற்பட்டதும்

''சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்
மடந்தகை ஆயம் கைதொழு தாஅங்கு'' (நற்றிணை 300)

என்று கவிதை பிறந்தது. இணையென எழும் இனிய கற்பனை இது.

பதினைந்து நாள்கள் நிலவு தேய்வதும் பின் பதினைந்து நாள்கள் வளர்வதும் இயற்கை. ஆயினும் சங்கச் சான்றோர் ஒருவருக்கு இக்காட்சி இந் நியமம் குலையா நிகழ்முறை ஓர் அரிய உண்மையினை உணர்த்துகின்றதாம்.

''தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்

அறியா தோரையும அறியக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகம்'' (புறநானூறு 27)

எனக் கவிதை பிறக்கின்றது. துன்பம் வரும்போது துவண்டு விடாமலும் இன்பம் வரும்போது இறுமாந்து விடாமலும் இருக்க வேண்டும் என்ற உயர் பேரறத்தை இக்கவிதையடிகள் விளக்கி நிற்கின்றனவன்றே.

இனித் திணைகளுக்குப் பெயரமைந்த காரணத்தினைச் சுட்டி மேற்செல்வோம். பன்னிரண்டாண்டிற்கு ஒருமுறை பூக்கும் குறிஞ்சிப் பூக்கொண்டு மலையும் மலையைச் சார்ந்த குறிஞ்சி நிலத்திற்கு 'குறிஞ்சி' என்றும், கார் காலத்தே மாலை நேரத்தே மலரும் முல்லை மலர்கொண்டு காடும் காடுசார்ந்த முல்லை நிலத்திற்கு 'முல்லை' என்றும், வளஞ்சார்ந்த வயற்புறங்களில் வளரும் மருதப்பூக்கள் காரணமாக வயலும் வயல்சார்ந்த மருதநிலத்திற்கு 'மருதம்' என்றும், நெய்தலுங்கானலில் நெகிழ மலர்ந்திருக்கும் நெய்தல் பூக்கள் கொண்டு கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலத்திற்கு 'நெய்தல்' என்றும் பெயரிட்டுச் சங்கச்சான்றோர் கவிதை புனைந்திருப்பது தமிழர்தம் மலர்ப் பண்பாட்டினை உணர்த்தி நிற்பதாகும். பிறப்புத் தொடங்கி இறப்புவரை தமிழர் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும், நிகழ்ச்சியிலும் இன்றியமையாப் பங்கு பற்றும் திராவிட நாகரிகத்தின் தனிக்கூறுகளுக்கு விளக்கங்காட்டி நிற்பதாக அறிஞர் தனி நாயக அடிகளாரும், அறிஞர் சுநீதகுமார சாட்டர்ஜியும் அறைவர்.

அகம் புறம் எனும் பொருள்கள் சங்க இலக்கியம் உணர்த்தும் சால்புகள் எனலாம். காதலும் போரும் சங்க இலக்கியங்களின் சாரம் என்பர் பேராசிரியர் பூரணலிங்கம் பிள்ளை அவர்கள். காதலைப் பேசாத மொழியும் இலக்கியமும் இருக்க முடியாதுதான். ஆயினும் சங்க இலக்கியத்தின் தனித் தன்மை யாது? எனக் கேட்பின் ''மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன் செவ்வி தலைப்படுவர்'' என்று திருவள்ளுவர் கூறியுள்ளபடி பெண்மையின் மென்மை போற்றி, பெண்ணின் பெருந்தக்கனவான பண்புகளைப் பலபடப்பாராட்டிப் பேசும் உளப்பாங்கு உணர்த்தவல்ல உயர் பேரிலக்கியங்களாகச் சங்க இலக்கியங்கள் துலங்குகின்றன எனலாம். காட்டொன்று காண்போம்.

பெண்மகவு பிறந்த ஞான்றே பின்னாளிற் தரப்போகும் சீர்வரிசையை எண்ணிக் கலக்கமுறும் பெற்றோர்கள் இன்று பலர். ஆனால் அந்நாளில் பெண் மகவு வேண்டும் என்று ஒரு குன்றக் குறவன் தவமிருந்து ஒரு பெண்மகவுக்குத் தந்தையாகின்றானும். அவ்வரிய உயரிய செய்தியை ஐங்குறுநூறு உணர்த்தும்

''குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்'' (257)

இதுபோன்ற நல்கூர்ந்தார் செல்வமகளான ஒரு பெண்ணிற்கு, அவளைக் கண்ணின் இமையெனக் காத்தோம்பி வளர்க்கும் முதுமையும் வாழ்க்கையின் அனுபவ முதிர்ச்சியும் ஒருங்கே கூடிய செவிலித்தாயர், தம் ஒரு கையில் பொற் கலமும் அப்பொற்கலத்தில் தேன்கலந்த பாற்சோறும், மறுகையில் விளையாட்டாக அச்சுறுத்தி அடிபணிய வைக்கும் சிறுகோலும் கொண்டு, உணவூட்ட முற்படுகின்றனர். பசியறியாது விளையாட்டயர்ந்து நிற்கும் அச்சிறு

பெண் தன் கால்களில் அணிந்திருக்கும் முத்துக்கள் பதித்த பொற்சிலம்பு 'கலிர் கலிர்' என ஒலிக்க மல்லிகைப் பந்தர்க் கீழ் ஓடிஓடி ஒளிந்து, அத்தாயர் நடை தரள, முயற்சி மெலிய ஏவல் மறுக்கிருள். ஆனுல் அந்த நாள்கள் கழிந்து போயின. சிறுமி வளர்ந்தாள். வயது நிறைந்தாள்; மணச்செவ்வி பெறும் மங்கல மடந்தையானுள். திருமணமும் நடந்தேறியது. ஆறிடு மடுவும் மேடும் போல் ஆம் செல்மன்றே கொண்ட கொழுநன் குடி வறுமைவாய்ப்பட்டது. பசியறியா வாழ்கையில் பசியே நிறைந்தது. அன்பாற் பிணேந்த வாழ்க்கை யில் அவலம் தலே தூக்கிற்று. உணர்ந்தான் தந்தை. அன்பாற் பிணேந்த மகள் விரும்பியுண்ணும் கொழுத்த சோற்றினேக் கொடுத்து அனுப்பினுன். ஆனுல் மகளோ உண்ணவில்லே. தன் காதற்கொழுநன் முயற்சியால் பெறும் புற்கை உணவாயினும் அதுவே இந்திரர் அமிழ்தத்திலும் இனிது எனக் கருதினுள். தந்தை அன்பால், மகள் மாட்டுக்கொண்ட பரிவால் கொடுத்த சோற்றினே மறுத்து, சியோடும் வாழக்கற்று, ஒருவேளே விட்டு ஒருவேளே உண்ணும் நெஞ்சுரம் பெற்ருள். இத்தகைய அறிவும் ஒழுக்கமும் இவளிடத்து எவ்வாறு வாய்த்தன? வழிவழியாக இந்நாட்டில் வளர்ந்துவரும் மாண்பே, மகளிர் பண்பாடே அவளுக்கு இவ்வறிவினேயும் ஒழுக்கத்தினேயும் உள்ளுணர்த்தி நின்றது.

''பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பின் சுற்றும் பூந்தலேச் சிறுகோல்
உண்ணென்று ஒக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொன் லம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
சிரீஇமெலிந் தொலியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்குஞ் சிறுவிளேயாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்
கொண்ட கொழுநன் குடிவரன் உற்றெனக்
கொடுத்த தந்தை கொழுச்சோறு உளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத்து உண்ணுஞ் சிறுமதுகையளே''

இவ் வழிவழிவந்த பண்பாடு காரணமாகத்தான் அறிவிற் சிறந்த ஔவையாரும் பெண் என்ருல் பண்பாடு என்பதுபட, ஒரு நாடு நாடாக இருந்தாலும் காடாக இருந்தாலும், ஒரு நிலம் பள்ளமாக இருந்தாலும் மேடாக இருந்தாலும் கவலே இல்லே; அந்நிலத்தில் வாழும் ஆடவர்கள் நல் லவர்களாக இருத்தல் வேண்டும் எனக் குறிப்பிட்டார்.

''நாடா கொன்ருே காடா கொன்ருே
அவலா கொன்ருே மிசையா கொன்ருே
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லே வாழிய நிலனே'' (புறநானூறு 107)

நெருப்பு ஆற்றல் மிக்கதுதான்; ஆனால் அந்த நெருப்பைத் தன்மை மிகுந்த தண்ணீர் அணைத்து அவித்து விடுகிறது. அதுபோல நீரோ ரன்ன சாயலாள் தியோரன்ன ஆடவனின் உரத்தினை அவித்து விடுகின்றாள். ஆயினும் தன்னை மணக்கும் ஆடவன் வீரத்தின் விளைநிலமாக வீறுடன் விளங்க வேண்டும் என்றே விரும்பினாள் நங்கை. கொம்பாற் குத்திக் கொல்லவரும் காளைக்கு அஞ்சும் கட்டிளங்காளையை முல்லைநிலப்பெண் கருத்திற் கொள்வதே இல்லை.

''கொல்லேற்றுக் கோடஞ்சு வா மறுமையும்
புல்லாளே ஆய மகள்'' (முல்லைக்கலி 3)

என்றபடி மறுபிறவியிலும் காளையை அடக்க இயலாத காளைக்குத் கடிமணம் கூடுதல் இல்லை என்பதோடு ''நலஞ்சான் விழும்பொருள் கலநிறை கொடுப் பினும் பெறலருங் குறையள்'' என்றும்

''முழுங்குகடன் முழுவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரையர் அல்லோர் வரையலன் இவளெனத்
தந்தையுங் கொடாஅன்'' (புறம் 343)

என்றும் அகமும் புறமும் காட்டும் அருந்தொடர்கள் பெண்ணின் உரிமையைப் பெரிதும் பேசும். தலைமகன் ஒருவன் தலைமகளைச் சுழீ, அவளுக்குக் கணவன் யான் எனக் கூறிக் கொள்வதில் ஒரு சிறிதும் நாணவில்லை; மாறாகப் பெருமிதம் கொள்கிறேன் என்று குறிப்பிட்டுள்ள செய்தியினை உளங்கொளல் தகும்.

''நல்லோள் கணவன் இவன்எனப்
பல்லோர் கூறயாம் நாணுகம் சிறிதே'' (குறுந்தொகை 14)

இது குறித்தன்றோ நக்கீரர் பெருமானும், திருப்பரங்குன்றத்தில் தெய்வயானைப் பிராட்டியாரைத் திருமணம் முடித்துத் திகழ்தரும் திருமுருகனைக் குறிப்பிட வந்தவிடத்து, ''மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்'' எனத் தெய்வயானைக் குச் சிறப்புத்தந்து தெய்வயானையின் கணவனே என முருகனை விளித்தார். சேரநாட்டுப் பெருவேந்தர்களைப் பலபடப் பாராட்டிப்பேசும் பைந்தமிழ்ப் புலவர் களெல்லாம் அவ்வேந்தர்கள்.

''பெண்மை சான்று பெருமட நிலைஇக்
கற்பிறை கொண்ட கமஞ் சுடர்நுதல்
புரையோள் கணவ (பதிற்றுப்பத்து 7;10)

என்றும் ''சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ'' என்றும் அவர்தம் மனைவியொடு சார்த்தியே பாராட்டப் பெற்றுள்ளனர். பின்னாளில் நாளும் இன்னி சையால் தமிழ் பரப்பிய முத்தமிழ் வித்தகராம் திருஞானசம்பந்தப் பெருமானும் திருமறைக் காட்டுச் சிவபெருமானைப் பாடப்புகுங்கால், அச்சிவனார், வள்ளியின் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்ற செந்தில் மேய வள்ளிமணாளனாம் முருகனுக் குத் தந்தை என்றே குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

''நம் செந்தில்மேய
வள்ளிமணாளர்க்குத் தாதை கண்டாய்'' (திருமறைக்காடுப் பதிகம்)

இனிப் புறம் பற்றிய இரு செய்திகளைக் காண்போம். புறத்துறையினும் அறத்துறை பற்றிய நாடு தமிழ்நாடு. மறப்போரேயாயினும் அறம் வழுவா அறப்போர் ஆற்றிய அரசர் திறனைப் புறநானூறு புகலும். ஒரு நாட்டின் மீது படையெடுப்பதற்கு முன்னல் அந்நாட்டிலுள்ள பசுக்களும், அந்தணர்களும் பெண்களும், நோயாளிகளும், கடிமணம் முடிந்தும் மக்கட்பேறு வாய்க்காத நிலையிலுள்ள மணமக்களும் பாதுகாப்பான இடங்கட்குச் சென்று விடுங்கள் என அறிவித்துவிட்டே போர் தொடங்கப் பெற்றதாக அறியவருகிறோம்.

''ஆவும் ஆநிகர்ப் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறுஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என
அறந்தாறு நுவலும் பூட்கை மறம்'' (புறம் 9)

பசுக்கள் அன்று செல்வத்தை அளக்கும் அளவுகோலாகத் திகழ்ந்தன. ஒரு பசுவால் வரும் வருவாய் கொண்டு வாழும் வாழ்க்கை சிறப்பற்ற வாழ்க்கையாக 'ஓரான் வல்கிச் சீரில் வாழ்க்கை' எனப்பட்டது எனவே பகைநாட்டு மன்னனின் பசுக்களைக் கவர்ந்து வந்துவிடுதல் வெட்சி எனப்பட்டது. அப்பசுக்கள் தன்நாட்டுக்கு வந்துவிட்டால் பகைவன் நாட்டுச் செல்வம் தன்நாட்டிற்கு வந்துவிட்டதோடு அல்லாமல், பொது நலம் நோக்கிக் காக்கப் பட வேண்டிய பசுக்களைக் காத்தவாறும் ஆயிற்று. சாலையோரத்தில் வழிச் செல்வோர் நீர்விடாய் தணிக்கும் பொருட்டு நடப்பட்ட நெல்லிமர நெல்லிக்காய் 'அறந் தலைப்பட்ட நெல்லியம் பசுங்காய்' எனப்பட்டது ஈண்டுக் கருதத்தக்கது.

அடுத்து, தமிழர் வீரம் விளங்கி நின்ற மரபினர் என்பதற்கு ஒரு காட்டுத் தருவம். பகைநாட்டு அரணைச் சுற்றி முற்றுகை; பலநாள் அம்முற்றுகை நீடித்தது. எயில் காத்தனர் நொச்சியார். அம்மதில் வளைத்து நின்றனர் உழிஞையார். உழிஞையர்க்கு ஒருநாள் பொறுமை எல்லை கடந்தது. சினம் மூண்டது; ஊக்கம் மிகுந்தது. அடுத்த வேளைக்குரிய சமையலை நிறுத்தினர். சமையலுக்குப் பயன்படும் அனைத்துப் பொருள்களையும் கருவிகளையும் மூட்டையாகக் கட்டி இந்தப் பக்கத்திலிருந்து கோட்டையின் உட்பக்கம் எறிந்தனர். அடுத்த வேளை உணவு மதில் முற்றுகையை முடித்து, மதில் காக்கும் நொச்சியாரை வென்று, கோட்டையின் உட்புகுந்த பின்னரே உண்டனர்.

''மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்லது
உண்குவ மல்லேம் புகாவென'' (பதிற்றுப்பத்து 6 )

உள உரத்தோடு நின்ற உயர் மறவர்களைப் பதிற்றுப்பத்து காட்டும்.

இனி இயற்கையின் பின்னணியில் துலங்கிய பழந்தமிழர் வாழ்வினை இரண்டு எடுத்துக்காட்டுகளால் காண்போம்.

வரையாது வந்து ஒழுகுகின்றான் தலைமகன் ஒருவன். தலைமகள் பேதுற்றாள்; மெலிந்தாள்; மேனி பசந்தாள்; நெற்றி ஒளி இழந்தாள். ஆயினும்

அவளுக்கு ஓர் ஆறுதல். தலைமகன் நாட்டில் எழிலும் ஏற்றமும் உயர்தோற்ற மும் கொண்டு விளங்கிய மலையைப் பார்த்தாள்; தலைமகனைப் பார்த்தது போன்ற ஆறுதலைப் பெற்றாள். வரியும் வனப்பும் வாடிய அவள் மேனி பண்டுபோல் துலக்கமுற்றது; நெற்றி ஒளி நிறைந்தது.

> ''.......................... அவர்நாட்டுக்
> குன்றம் நோக்கினேன் தோழி
> பண்டையற்றே கண்டிசின் நுதலே''

என்றாள். இது சிறுபிள்ளைத்தனமும் அன்று; வேடிக்கையும் அன்று. இறைவன் படைத்த இயற்கையில் மனித இனம் அமைதி பெற முடியும் என்பது மேனாட் டினரும் இன்று தெளிந்து போற்றும் உண்மையாகும்.

ஈட்டலும் இழுத்தலுமாயமைந்திருக்கும் வாழ்க்கையில் இயற்கை யொன்றே என்றும் அமைதி நல்குவது என இயற்கைநெறி பரவு ஆங்கிலக் கவிஞர் வோர்ட்ஸ்வொர்த் கிளத்திப் போந்தார். இம்முறையில் தான் நற் றிணைத் தலைமகள் ஒருத்தி, தான் ஒருஞான்று புன்னைமரத்தடியில் நின்று கொண்டிருக்கவும் தன்னோடு காதற்பேச்சினைக் கட்டவிழ்த்துவிட வந்த தலைமகனிடமிருந்தும் பிரிந்து போய் பிறிதோரிடம் நிற்கவும், அதற்குரிய காரணம் வினவிய தலைமகனுக்குத் தன் தமக்கை முன் காதற்பேச்சினைக் கேட்க நாணம் மேலிடுமன்றோ என்று கூறிப் புன்னைமரத்தின் சிறப்பினைப் புகன்றதாகவும் ஒரு செய்தி உள்ளது. சிறுவயதில் தலைமகனின் தாய் மணலில் புன்னைக் கொட் டையை அழுத்தித் தோழியருடன் விளையாட நிற்க, அவளைப் பெற்ற தாய் உணவுண்ண அழைக்க, அதுகாறும் விளையாட்டிற்குப் பயன்பட்ட புன்னைக் கொட்டையை மறதியாக மணலிலேயே மறந்து வைத்துவிட்டுப் போய்விட, பின்னர்ப் பெய்த பெருமழையாற் புன்னை தழைக்க, அதுகண்ட மகள் எருவிட்டு நீர்பாய்ச்சி, காவல் அமைத்துப் புன்னையை வளர்க்க அது வளரவும், தான் பருவம் வந்து திருமணம் கண்டு மகள் பிறக்கவும், அம்மகளை ஒருநாள் அழைத்து வளர்ந்திருந்த புன்னைமரத்தைக் காட்டி, அப்புன்னைமரம் தலைமகளைப் பெற் றெடுத்துப் பேணி வளர்ப்பதற்கு முன் வளர்க்கப்பட்ட காரணத்தால் அப்புன்னை இன்றைய தலைமகளுக்குத் தமக்கை முறை ஆக வேண்டும் எனக் குறிப்பிட்ட செய்தியை நினைவூட்டினாள்.

> ''நும்மிற் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
> அன்னை கூறினாள் புன்னையதுசிறப்பே''. *(நற்றிணை 172)*

''முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமை யாய்' விளங்குவது தமிழ். 'வளவன் ஏவா வானவூர்தி' முதலிய தொடர்கள் நம் முந்தையோரின் அறிவியல் அறிவைக் காட்டும். 'சேமச் செப்பு' இன்றைய தெர்மாஸ்பிளாஸ்க் போன்றது. இவையெல்லாம் அறிவியல் திறம் உணர்த்தும்.

> ''அற்சிரக் காலத்து வெப்பத் தண்ணீர்
> சேமச் செப்பிற் பெறீயரோ''

சின்னஞ்சிறுவயதில் விளயாட்டை வினையாக்கிக் கொண்டு சிறுபூசல் விளைவித்த தலைமகனும் தலைமகளும் வாழ்வில் இணைகின்றனர். இவர்களை இணைத்து வைத்தது பாலே ஊழே என்பர் ஒரு புலவர்.

''இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்
காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிரார்
ஏதற் சிறுசெரு வுறுப மன்னே
நல்லைமன்றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணையல் அன்ன இவர்
மணமகிழ் இயற்கை காட்டியோயே'' *(குறுந்தொகை 229)*

தங்களையே கூட அறிந்திராதவர்கள் இன்று செம்மண் பூமியிற் பெய்த மழைநீர் அந்நிலத்தோடு ஒன்று கலப்பதுபோல மனதால் இணைகின்றனர்.

''யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சத் தாங்கலந் தனவே''.
*(குறுந்தொகை 40)*

ஒருவரையொருவர் விரும்பினாலே அவர்கள் பின் வாழ்வில் ஒன்றுபட்டனர்.

''நின்வெய்யன் அவனாயின் அவன்வெய்யை நீயாயின்
நின்னை நோதக்கதோ இல்லைமன்
நின்நெஞ்சே அன்னைநெஞ்சாகப் பெறின்'' *(முல்லைக்கலி 7)*

இவ்வாறு வாழ்வில் இணைந்த இவர்தம் இல்லற வாழ்க்கை பிறர் பாராட்டத் தகுவதாய் உளது. தன்மகள் கெட்டித் தயிரைத் தன் பிஞ்சு விரல்களால் பிசைந்து புளிக்குழம்பு செய்தாள். தாளிப்பு மணம்வரக் கண்களில் புகை சூழ்ந்தும் தானே நின்று தாளிதம் செய்தாள். தயிர்க்கறை படிந்த தன் சேலையை மாற்றி உடுத்தக்கூட நேரமில்லாமல் தலைமகன் உணவிற்கு வந்துவிட அவன் இனிது இனிது என்று கூறி மகிழுமாறு உணவு படைத்தாள். அவன் பாராட்டால் அவள் முகம் சிறிதளவு மலர்ந்தது.

''முளிதயிர்ப் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தழீட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே'' *(குறுந்தொகை 167)*

இவ்வாறு பீடுசான்ற தமிழர் வாழ்வியல் கூறும் நூல்களில் தலையாய பண்பாடாக வற்புறுத்தப் பெறுவது பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பலாகும். வறுமையின் எல்லைக்கோடைத் தொட்டுத் துயருழந்த புலவர் பெருஞ்சித்தரனர்

பழந்தூங்கு முதிரமலைத் தலைவன் குமண வள்ளலிடமிருந்து பெரும்பொருள் பெற்றுவந்த நிலையிலும் தன் மனைவியை அழைத்து, ''முன்னால் கடன்பெற்ற அளவே பொருளைத் தராமலும் வளமாக, எஞ்ஞான்றும் வாழலாம் என்று எதிர்காலச் சிந்தனையில் அமிழ்ந்துவிடாமலும், எல்லோருக்கும் வாரி வழங்கு வாயாக'' என ஆணையிட்டதனை எண்ணிப் பார்ப்பின் தமிழர்தம் தலையாய அறப்பண்பு விளங்கிடக் காணலாம்.

''நின்னயத் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மான் கற்பின் கிளைமுதலோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கியோர்க்கும்
வல்லாங்கு வாழ்தும் என்றெண்ணாது
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே''

இனிச் சங்க இலக்கியம் காட்டும் மணியான தொடர்கள்வழி வாழ்வியல் உண்மைகளைக் கண்டு தெளியலாம்.

''வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்
மனையுரை மகளிர்க்கு ஆடவர் உயிர்''.

(குறுந்தொகை 135)

''எத்திசைச் செலினும் அடுதிசைக் சோறே'' (புறம் 206)

''அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்''.

''கற்பினின் வழாஅல் நற்பல வுதவி
பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென'' (அகம் 86)

''ஒன்றன் கூறுடை உடுப்பவரே ஆயினும்
ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை அதரோ
சென்ற இளமை தரற்கு''.

''..............................யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல, நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ராயே'' (பரிபாடல் 5)

நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க''.

''உண்டாலம்மவிவ் வுலகம்........
தமக்கென முயலா நோன்தாள்,
பிறர்க்கென முயலுநர் உண்மையானே'' (புறம் 182)

சங்க இலக்கியத்தின் முடிமணியாக உலக மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கத்தக்க பாடலாக அமைந்துள்ள பாடல் கணியன்பூங்குன்றன் பாடியுள்ள புறநானூற்றுப் பாடலாகும்.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே முனிவில்
இன்னு தென்றலும் இலமே
நீர்வழி படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆதலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'' *(புறம் 192)*

இத்தகு கீர்த்தி வாய்ந்த சங்க இலக்கியம் காருள்ள அளவும், கடல் நீருள்ள அளவும், வானுள்ள அளவும், வானின் வான்கருணை உள்ள அளவும் நின்று நிலவுதல் உறுதி. சங்ககாலம் தமிழகத்தின் பொற்காலம் எனக் கூறி அமைவல்.

# மூன்றும் தொகுதி

# கட்டுரையாளர்கள் அகரவரிசை

